கண்ணியத்திற்குரிய

# காயிதே மில்லத்

# நினைவு மலர்

1990




வெளியீடு :

காயிதே மில்லத் நினைவு மலர்க் குழு

முஸ்லிம் அனாதை நிலையம்

காதிர் நகர்

பாளையங்கோட்டை-627 011.

## கண்ணியத்திற்குரிய
## காயிதே மில்லத் நினைவு மலர் தயாரிப்பு:



ஆசிரியர் :

**A. K. ரிபாயி**



ஒத்துழைப்பு:

வீரவநல்லூர் கவிஞர் M. அப்துர் ரகுமான்,
பேராசிரியர் K. P. பீர்முஹம்மது சாகிப், M.A.,M.Phil.
கலீல் அஹமது மீரூன், B.B.A.
ரபியுத்தீன், M.A.
முஹம்மது ஹில்மி, M.A.
ராஜா முஹம்மது, B.A.
M. உபையதுல்லா சாகிப், M.A.
ஆசிரியர் M. பீர் முஹம்மது, M.Sc.,M.Ed.,M.Phil.



ஹாஜி P.S.M. செய்யது அப்துல் காதர், M.A.B.L.,
தலைவர்
காயிதே மில்லத் மலர்க் குழு



ஹாஜி M. ஜமால் முஹம்மது சாஹிப்
செயலாளர்
காயிதே மில்லத் மலர்க் குழு

# கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர் - 1990

## பொருளடக்கம்

பக்கம்

# ஓர் அறிமுகம்

இறையருட்கவிமணி பேராசிரியர் கா. அப்துல் கபூர் சாஹிப் அவர்கள் சிலகாலம் பாளையங் கோட்டையிலுள்ள M. O. C. வளாகத்தில் ஒரு வாடகை வீட்டில் குடியிருந்தார். 1985ம் ஆண்டு மத்திவாக்கில் அவர்கள் ஒருநாள் தங்களது கனவில், கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத்தைப் பார்த்திருக்கிறார். இக் கனவின் மூலம் புலப்படும் சமிக்ஞை என்னவென்று பேரா சிரியர் அவர்கள் சிந்தித்துக் கொண்டிருந்த பொழுது, அவர்களது கரங்களில், ''அறிஞர் அண்ணா பவள மலர்'' என ஒரு தொகுப்பு கிடைக் கப் பெற்றது. அம்மலரை அவர்கள் புரட்டிக் கொண்டிருக்கும் பொழுது, காயிதே மில்லத்தைப் பற்றியும் இப்படி விரிவானதொரு மலர் வெளி வந்தால் நலமாக இருக்குமே என்ற எண்ணம் பளிச்சிடலாயிற்று.

பாளையங்கோட்டை முஸ்லிம் அனாதை நிலை யத்தின் தலைவர் அல்ஹாஜ் எம். ஜமால் முஹம்மது சாஹிபிடம் இது குறித்து இறை யருட் கவிமணி பேசலானார். இருவரும் ஒருநாள் மாலையில் வாவா நகரம் வந்து என்னைச் சந்தித் தார்கள். கவ்மின் காவலரைப் பற்றி முழுவிவ ரங்களடங்கிய மலர் ஒன்று தயாரிக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும், வளர்ந்து வரும் தலைமுறையினருக்கு இது குறித்து ஒன்றுமே தெரி யாதிருக்கிறது என்பதையும் கூறினார்கள். இக் கருத்து எனக்கு உடன்பாடானதல்ல என்று என்னால் கூற இயலுமா? பழம் நழுவிப் பாலில் விழுந்த மாதிரி அது அமைந்தது.

ஏற்கனவே என்வசம் காயிதே மில்லத் அவர் களது பாராளுமன்ற உரைகளும், அரசியல் நிர்ணய சபை உரைகளும் இருந்தன; ராஜ்ய சபை உறுப்பினராக நான் பணியாற்றியபொழுது சேகரித்து வைத்திருந்தவை அவை. அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட வேண்டு மென கடந்த பத்து ஆண்டுகளாக நானும் முயற் சித்துக் கொண்டுதான் இருந்தேன். என் எண்ணங் களுக்குச் செயல்வடிவம் கொடுக்க முடியவில்லை; காலம் கனிந்து வரவில்லை. அதற்குரிய நேரம் இப்பொழுது வந்துவிட்டதுபோலிருக்கிறது என்று அக்கணம் எனக்குத் தோன்றியது.

1946 முதல் 1951ம் ஆண்டு வரை காயிதே மில்லத் அவர்கள், மதராஸ் மாகாண சட்டசபை எதிர்க்கட்சித் தலைவராகப் பணியாற்றியபொழுது, ஆற்றிய சொற்பொழிவுகளைக் கடையநல்லூர் சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றிய தென் காசி A. சாகுல் ஹமீது சாஹிப் சேகரித்து வைத் திருந்தார். அவற்றையும் இம் மலருக்குப் பயன் படுத்திக் கொள்ளலாம் என்ற பேச்சும் வந்தது. அத்துடன் தமிழ் நாட்டிலுள்ள எல்லா மாவட் டங்களிலும் சுற்றுப் பயணம் செய்து முஸ்லிம் லீக் தொண்டர்களையும், தலைவர்களையும் மற்றும் சமுதாயப் பிரமுகர்களையும் நேரில் சந்தித்து உரை யாடி அவர்கள் வாயிலாகத் தலைவரைப் பற்றி தெரியவரும் செய்திகளையும் திரட்ட வேண்டு மெனவும் தீர்மானிக்கப்பட்டது.

பூர்வாங்கப் பேச்சு வார்த்தைகளுக்குப் பின்னர், பாளையங்கோட்டை முஸ்லிம் அனாதை நிலையத்தை அலுவலகமாகக் கொண்ட ''கண்ணி யத்திற்குரிய காயிதே மில்லத் மலர்க்குழு'' ஒன்று 6—8—85 அன்று அமைக்கப்பட்டது. இந்த ஆலோசனைக் கூட்டம் சென்னை நாராயண சிராங் கார்டன் தெருவிலுள்ள மரைக்கா இன்டஸ்டிரீஸ் கட்டிடத்தில் நடைபெற்றது. மலர்க்குழு தலைவ ராக ஜமாலியா அரபிக் கல்லூரி முத்தவல்லி அல்ஹாஜ் அஹமது ஜமால் சாஹிபும், செயலா ளராக அல்ஹாஜ் எம். ஜமால் முஹம்மது சாஹிபும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

நிதி, விளம்பரம் மற்றும் அலுவலகப் பணி களை இக் குழுவினால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர் வாகிகள் கவனிக்கலானார்கள். பல மாவட்டங் களிலும் சுற்றுப் பயணம் செய்யும் பணிக்காக நெல்லை மாவட்டம் வீரவநல்லூர்பிறைமரிமுஸ்லிம் லீக் தலைவரும் கவிஞருமான ஜனாப் எம். அப்துர் ரஹ்மான் நியமனம் செய்யப்பட்டார். கடந்த நான்கைந்து ஆண்டுகளாகப் பல மாவட்டங்களி லும் அவர் சுற்றுப் பயணம் செய்து, தம்மாலி யன்றளவு செய்திகளையும் போட்டோக்களையும் சேகரம் செய்துள்ளார்.

1986ம் ஆண்டு ஆரம்பத்திலிருந்தே இம் மலருக்கான பூர்வாங்கப் பணிகள் ஆரம்பிக்கப் பட்டு விட்டன என்ற போதிலும் 1989 ஜுலை மாதத்திலிருந்து தான் இப்பணியில் நான் தீவிர மாக ஈடுபடலானேன். மலர்ப் பணிகள் வேகம் பெறலாயிற்று; முழு நேர கவனம் அது வகைக்குச் செலவிடப் பட்டது. தலைவர் அவர்களின் சட்ட மன்ற, பாராளுமன்ற பேச்சுக்களை ஆங்கிலத் தி

லிருந்தும் தமிழில் மொழி பெயர்க்கும் பணியை ரபீயுத்தீன் M.A., முஹம்மது ஹில்மி M.A., ராஜா முஹம்மது B.A, கலீல் அஹமது மீரூன் B.B.A. ஆகியோர் சென்ற சில ஆண்டுகளாகவே செய்து வைத்திருந்தனர். அவற்றைச் செம்மைப் படுத்திச் சீர்படுத்தி அமைக்கும் பணியினை நான் செய்து முடித்தேன்.

காயிதே மில்லத் அவர்களுடைய கடிதங்களை யும் மற்றும் குறிப்புக்களையும் குரோம்பேட்டை தயா மன்ஸிலிலுள்ள அவர்களது இல்லத்தில் படித்துப் பார்த்து, மலருக்கான ''விஷயங்களை''ச் சேகரித்துக் கொள்வதற்கு ஹாஜி J.M. மியாகான் அனுமதி வழங்கினார். ஹாஜி தாவூது மியாகா னும் இதில் ஆர்வம் காட்டினார். அதுமட்டு மல்லாமல், உர்தூ பத்திரிகைகளின் நிருபரான ஜனாப் முஹம்மது பிலாலை அழைத்துக் கொண்டு வட இந்தியாவின் பல பகுதிகளிலும் ஜனாப் மியாக்கான் சுற்றுப் பயணம் செய்து, முஸ்லிம் லீக் இயக்கத்தைச் சார்ந்தவர்கள் பலரையும் பேட்டி கண்டு, செய்திகளைச் சேகரம் செய்யவும் உதவி புரிந்தார். அதற்காகவெல்லாம் மலர்க்குழு அவருக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளது.

பாளையங்கோட்டை சதக்கத்துல்லா அப்பா கல்லூரியின் வரலாற்றுத் துறைத் தலைவர் பேரா சிரியர் K.P பீர்முஹமது சாஹிப், காயிதேமில்லத் குறித்து M. Phil.க்கான ஆராய்ச்சிக் கட்டுரை தயாரித்த சமயமும், இப்பொழுது அதே பொருளில் Ph.d. வகைக்கு ஆய்வுகள் நடத்திக் கொண்டிருக்கும் சமயமும், எனக்கு முழு ஒத்துழைப்பு நல்கினார்கள். அரசாங்க ஆவணக் காப்பகங்களிலிருந்து பல தகவல்களையும் திரட்டித் தருவதற்கு அவர்களது உதவி மிகவும் உபயோக மானதாக இருந்தது. அவருக்கும் நான் நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இறையருட் கவிமணி கா. அப்துல் கபூர் சாஹிபும், 'பிறை' ஆசிரியர் மௌலவி M. அப்துல் வஹாப் சாஹிப் M A.B.Th. அவர்களும் கேரளா வில் பல நகரங்களுக்கும் சென்று முஸ்லிம் லீக் பிரமுகர்களைப் பேட்டி கண்டு இம் மலருக்கான ''விஷயதானங்களை''த் திரட்டித் தந்துள்ளார் கள். மலையாள மொழியிலுள்ள பல பிரசுரங் களையும் மலர்களையும் சேகரித்துக் கொண்டும் வந் திருந்தனர். இவற்றிலிருந்தெல்லாம் இம்மலருக் கான தகவல்கள் தயாரிக்கப்பட்டுள்ளன. அவ் விரு அறிஞர்களும் காட்டிய ஆர்வத்திற்கும் ஒத் துழைப்பிற்கும் ஆலோசனைகளுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

''நுஸ்ரத்'' உர்தூ வார இதழிலிருந்தும் மற்றும் அம்மொழியிலுள்ள பல பிரசுரங்களி லிருந்தும் மதராஸ் ராயப்பேட்டை ஜனாப் உபை துல்லா சாஹிப் M.A., மலருக்காக மொழியாக்கம் செய்து தருவதில் முழுமனதுடன் ஒத்துழைத்தார். உர்தூ மொழி மூலங்களிலிருந்து இம்மலரில் இடம் பெற்றுள்ள தகவல்கள் அனைத்தும் அன்னார் மூல மாகப் பெறப்பட்டவையே. நமது நன்றிகள் அவருக்கும் உரித்தாகுக.

மலர் வெளிவரவிருக்கின்ற தகவல் தெரிந்த தும் சமுதாயப் பற்றுள்ள பலரும் நெடுங்காலமாக மிகவும் பூணிப்பாகச் சேகரம் செய்து வைத்திருந்த துண்டுப் பிரசுரங்கள், பத்திரிகை ''கட்டிங்'' குகள், ஆண்டு மலர்கள், நூல்கள் போன்றவற்றை எங்களுக்கு அனுப்பி வைத்தனர்; அவற்றிலிருந்து ஏதேனும் விபரங்கள் திரட்ட முடிந்தால் எடுத்துக் கொள்ளலாமென்றும் சமுதாய ஆர்வம் மேலோங் கக் கூறியிருந்தார்கள். பலர் நேரில் வந்து சில தகவல்களைச் சொல்லவும் செய்தார்கள். இத் தகையோரது பட்டியல் மிக நீளமானது என்ற போதிலும் அவர்களை நாம் விட்டுவிடுவதற்கில்லை. கூடுமானவரை அனைவரையும் நினைவு கூரவே ஆசைப்படுகிறோம். சமுதாயத்திற்கு அவர்களை அறிமுகப் படுத்தி வைப்பது மலர்க் குழுவினரின் கடமை ஆகும்.

மௌலானா மௌலவி ஹாஜி M.E.M. அபுல் ஹஸன் ஷாதலி ஹஜரத், பன்னூலாசிரியர் P. M ஜமால் (இளையாங்குடி புதூர்), காயல் பட்டணம் K.M.K. காதர் சுலைமான், அதிராம் பட்டணம் ஷேக் அப்துல் ரஹ்மான், திருநெல்வேலி பேட்டை வீ. ம. மு. தி. பீ. திவான் மைதீன் இராவுத்தர், காயல் ஹம்ஸா, அபிராமம் கனி சிஷ்தி, மதராஸ் இஸ்மாயில் கனி சாஹிப், தென் காசி A. ஜலால், சேர்மாதேவி டாக்டர் ஜமா லுத்தீன், கும்பகோணம் ஜனாப் A.C. ஜாமியாலம் ஈரோடு ஹாஜி K.K. அப்துல் ஸமது ஸாஹிப் B.Sc, ஆகியோர் நமது நன்றிக் குரியவர்கள்.

மலருக்குக் கட்டுரைகளை வழங்கிய அறிஞர் பெருமக்களுக்கும் ஆங்காங்கேயுள்ள கட்சி ஊழியர் கள் தங்களிடமுள்ள போட்டோக்களைக் கொடுத்து உதவியதற்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். காரைக்கால் ஜனாப் A.H. அஹமது இப்ராஹிம் சாஹிப் நீண்ட காலமாகச் சேகரித்து வைத்திருந்த போட்டோக்களில் இருந்து நகல்களை எடுத்துக் கொள்ள ஒத்துழைத்தார். அவர்களுக்கும் நமது நன்றி உரித்தாகுக. மதராஸில் வைத்து மலர்ப்பணி களுக்கு நல்ல பல ஆக்க பூர்வமான ஒத்துழைப்பு

களை ஆசிரியர் எம். பீர்முஹம்மது M.Sc., M.Ed., M.Phil. நல்கினர். அவருக்கும் நமது நன்றிகள்.

மதராஸ் மில்லத் பிரிண்டர்ஸ் அதிபரும், முதுபெரும் எழுத்தாளருமான ஜனப் செய்யது முஹம்மது ''ஹஸன்'' அவர்கள் மலருக்காகத் தயாரிக்கப்பட்ட கையெழுத்துப் பிரதிகள் பலவற்றையும் படித்துப் பார்த்து மேலான ஆலோசனைகளை வழங்கினர். அத்துடன் புரூப் பார்த்துக் கொடுப்பதிலும் ஒத்துழைத்தார்கள். திரீயெம் பிரிண்டர்ஸ் அதிபர் ஹாஜி மீரா சாஹிபும் தக்க ஆலோசனைகளை கூறி மலர் சிறப்பாக அமைவதற்குப் பாடுபட்டார்கள். இவ்விருவருக்கும் எங்களது நன்றி உரித்தானது. அவ்விருவரது அச்சகங்களிலுமே இம்மலர் தயாரானது.

இம் மலருக்கான அட்டைப் படத்தையும் மற்றும் ஆர்ட்டிஸ்ட் பணிகளையும் ஜனப் நஜீம் அவர்கள் சிறப்பாகச் செய்து தந்துள்ளார்கள். பிளாக் தயாரிப்பாளர்களான ''மாடர்ன் புராஸஸ்'' இம்மலருக்கான பணியில் தங்களை முழு மூச்சுடன் ஈடுபடுத்தியிருந்தார்கள். அவ்விருவருக்கும் எங்களது நன்றி உரித்தாகுக !

மூன்று ஆண்டுகளாகத் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து தகவல்கள் திரட்டியதுடன், கடந்த ஓராண்டு காலமாக என்னுடனேயே தங்கியிருந்து, மலர் சம்பந்தப்பட்ட சகல பணிகளையும் பொறுப்புடன் கவனித்து வந்த வீரவநல்லூர் கவிஞர் M. அப்துர் ரஹ்மான் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். மலர்ப் பணிக்குப் பொருத்தமான நபரையே மலர்க்குழு செயலாளர் ஆரம்பத்திலேயே தேர்ந்தெடுத்து விட்டார் என்றே கூறலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக, மலருக்கான விஷயதானம் குறித்துப் பல தலைவர்களையும், அமைச்சர்களையும், நீதிபதிகளையும், பிரமுகர்களையும், பேராசிரியர்களையும் மற்றும் அரசியல்வாதிகளையும் அணுகியபொழுது, அவர்கள் எல்லாம் இன்முகத்துடன் எங்களுடன் ஒத்துழைத்ததற்காக அச்சான்றோர் அனைவருக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தலைவர் மஹ்பூபே மில்லத் ஹாஜி இப்ராஹிம் சுலைமான் சேட் சாஹிப் M.P. அவர்களிடம் மலருக்கான ''செய்தி''யைக் கோரியபொழுது அவர்களும் தாராளமாக அதைக் கொடுத்து உதவினார்கள். அவர்களுக்கும் எங்களது நன்றி உரித்தாகுக.

காயிதே மில்லத் அவர்களுடைய டயரியில் இருந்தும் இம் மலருக்காக நல்ல பல வரலாற்றுப் பொக்கிஷங்களைத் திரட்ட முடிந்திருந்தால் நலமாக இருந்திருக்கும். ஆனால், துரதிருஷ்டவசமாக தலைவர் அவர்களது நாட்குறிப்புகளை நம்மால் பார்க்கவே முடியவில்லை. அங்கிருக்கிறது, இங்கிருக்கிறது என சால்ஜாப்புகள் சொல்லப்பட்டனவே தவிர மலருக்கு அவற்றையும் பயன்படுத்த சந்தர்ப்பமே தரப்படவில்லை. இது உண்மையிலேயே எனக்குப் பெருத்த ஏமாற்றமே! ஆம். உண்மையைச் சொல்லித்தான் ஆகவேண்டும்.

கடந்த ஓராண்டு காலமாக மலர்க்குழுவினர் எனக்கு எல்லாவிதமான வசதிகளையும் செய்து கொடுத்து இப்பணியில் என்னை ஊக்குவித்தனர்; உற்சாகப் படுத்தினர். எல்லோரது நல்லாதரவும் ஒத்துழைப்பும் தட்டில்லாது இருக்கப் போய்த்தான் இவ்வளவு தூரமாவது இம்மலரை வெளிக்கொண்டு வர முடிந்தது என எண்ணும்பொழுது எனது உள்ளம் பூரிப்படைகிறது. எல்லாம் வல்ல இறைவனுக்கு எனது நன்றிகளைக் காணிக்கையாக்கிக் கொள்கிறேன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே !

**A. K. ரிபாயி**
(பதிப்பாசிரியர்)

2, இரண்டாவது தெரு,
சேட்காலனி,
சென்னை-8.
22—4—90






EBRAHIM SULAIMAN SAIT, M. P.
(LOK SABHA)

ابراھیم سلیمان سیت

President : INDIAN UNION MUSLIM LEAGUE
Chairman : Muslim Orphanage, Tirurangadi (Kerala)
Gen. Sec. : All India Palestine Conference
Director : Muslim Printing & Publishing Co., Calicut
Member : Central Haj Advisory Board
: Aligarh Muslim University Court
: Central Wakf Council

Phone : 360468
'AL-HILAL'
Krishnaswamy Road
Ernakulam
COCHIN-682035 Kerala
Phone : 386738
16, Dr. Rajender Prasad Road
NEW DELHI - 110001


بسم اللہ الرحمن الرحیم

I am extremely happy that my dear colleague Janab A.K.Rifai, Ex.M.P. is bringing out a souvenir about the life and work of Qaide Millat Mohamed Ismail Sahib, founder President of Indian Union Muslim League. This souvenir, I understand, will also have the speeches delivered by Qaidemillat in the Madras Assembly, the Constituent Assembly, the Rajya Sabha and Lok Sabha. I deeply appreciate the hard work Mr. Rifai has put in. It is really great service to the Indian Union Muslim League and the musalmans of the country.

Qaidemillat was the saint of the century intensely religious with complete commitment to Islam. He was a symbol of sacrifice, a man of lofty principles and a person with unblemished character. His courage and conviction was second to none. He stood like a rock when might of the rulers made repeated declarations that the Muslim League, will not be tolerated in India. It is his determination and sacrifice alone, that has kept the green crescent flag flying high in our country. I say all this as I had the opportunity to be with him under one roof at Western Court at New Delhi for 11 continuous years when both of us were in Parliament. He was my friend philosopher and guide when I worked with him then as General Secretary of Indian Union Muslim League, with complete unity and understanding.

The life of Qaidemillat was an ideal life for all, particularly for the Muslims to follow. Qaidemillat, after independence and creation of Pakistan, took a historic and far reaching decision with full faith in Allah, to have Indian Union Muslim League, as the political and national organisation primarily of the Muslim Ummah of India. It was not for any political gain or greed of power. It was with the lofty objective of moulding the Muslims of India, into a well knit political force, with complete solidarity, for honourable existence, protecting the cultural identity, working for the integrity and unity of the country and implementation of the rights guaranteed in the Constitution.

.....2

It is a tragedy today that there is slow erosion in the ideals and objectives with a gradual fall in character and integrity, at a time when the fascist militant forces are conspiring to destroy the cultural identity of Ummah with a design to demoralise them and annihilate them economically with an ever recurring well planned communal killings sometimes with a ferocity of genocide.

The situation is of deep distress. The magnitude of the challenges to the survival and intensity of the problems, in cultural, political, economic and social field can never be minimised. There can never be any question of running away from challenges and problems. We will have to face all the challenges and work for the solution of problems with faith in Allah, complete solidarity and with a spirit of sacrifice. The only way-out is a single representative political organisation - that is Indian Union Muslim League and this is the sacred trust passed on to us by Qaide Millat. Qaidemillat is no more with us. May Allah grant him maghfirat. But he has laft footprints on sand of time for us to follow. His principles and work is before us. Let us follow the same and march ahead with complete solidarity towards our goal.

The publication of Souvenir at such a distressing period, will, I hope give a new hope and new direction to behaviour of the Muslims in India and guide them towards adopting proper policy with a lofty objective of peaceful co-existence with other sister communities, with dignity, identity, equality and security.

May Allah guide us to the right path and bless us with success.

اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم غير المغضوب عليهم ولا الضالين آمين

New Delhi
23rd March 1990

(Ebrahim Sulaiman Sait)

# இப்ருஹீம் சுலைமான் சேட், எம். பி.

தலைவர் : இந்திய யூனியன் முஸ்லிம் லீக்
சேர்மன் : முஸ்லிம் அனாதை நிலையம், திரூரங்காடி (கேரளா)
பொதுச் செயலாளர் : அகில இந்திய பலஸ்தீன் கான்பரன்ஸ்
டைரக்டர் : முஸ்லிம் பிரிண்டிங் & பப்ளிஷிங் கம்பெனி (கள்ளிக்கோட்டை)

16, டாக்டர் ராஜேந்திரப்
பிரசாத் ரோடு
புதுடில்லி
23, மார்ச் 1990

உறுப்பினர் : 1. மத்திய ஹஜ் ஆலோசனை போர்டு
2. அலிகர் முஸ்லிம் சர்வகலாசாலை கோர்ட்
3. மத்திய வக்பு கவுன்ஸில்


*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மானிர் ரஹீம்*

இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தலைவரும் அதன் ஸ்தாபகருமான காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாகிப் அவர்களது வாழ்க்கையைப் பற்றியும் சேவைகளைக் குறித்தும் ஒரு நினைவு மலரை, [கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர் குழுவிற்காக] என தருமை சகாவும் முன்னாள் எம். பி. யுமான ஜனாப் A. K. ரிபாயி சாகிப் தயாரித்துக் கொண்டிருப்பதை அறிய நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

தலைவரவர்களுடைய அரசியல் நிர்ணய சபை பேச்சுக்கள், ராஜ்யசபா, லோக்சபா உரைகள், தமிழக சட்ட மன்றத்தில் எழுப்பிய சங்கநாதங்கள் போன்றவை அந்த மலரில் இடம் பெறுகின்றன எனவும் நான் அறிய வருகிறேன். இச் சொற்பொழிவுகள் அனைத்தையும் சேகரித்து ஒன்று திரட்டுவதில் ரிபாயி சாகிப் எவ்வளவு கடும் பிரயாசைகளை மேற்கொண்டார் என்பதனை நான் அறிவேன்; அதை நான் பாராட்டுகிறேன். இந் நாட்டினுடைய முஸ்லிம்களுக்கும் இந்திய யூனியன் முஸ்லிம் லீகிற்கும் ஆற்றப்பட்ட அரியதொரு சேவையாகும் இது என்பதில் சந்தேகமில்லை.

இந்த நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு 'வலி' என காயிதே மில்லத்தைக் குறிப்பிடலாம். இஸ்லாத்தின் மீது அவர்கள் வைத்திருந்த பற்றுதல் பரிபூரணமானது; மிகவும் ஆழமானது, தியாகத்தின் சின்னமாக அவர்கள் திகழ்ந்தார்கள்; உயரிய லட்சியங்களைக் கடைப் பிடித்த ஓர் சிறந்த மனிதர்; அவர்களுடைய ஒழுக்கத்தில் ஓர் இம்மி அளவாவது குறைகாண முடியாதவர். அழுத்தமான, அசைக்க முடியாத, கருத்துக்களுக்குச் சொந்தக்காரார் அவர்; அவர்களது தைரியத்திற்கும் மனோதிடத்திற்கும் நிகரே கிடையாது. அவர்களுக்கு இரண்டாவது பட்சமாகக்கூட, ஒரு உதாரணத்திற்காக குறிப்பிடுவதென்றாலும் வேறு நபர்களே இல்லை.

இந் நாட்டில் முஸ்லிம் லீக் இயங்குவதை அனுமதிக்க முடியாது என்றும் சகித்துக் கொள்ள இயலாது என்றும் இந் நாட்டின் ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் பகிரங்கமாக, திரும்பத் திரும்ப, பிரகடனங்களை பறை சாற்றியவண்ணம் இருந்தனர். இதைக் கண்டெல்லாம் காயிதே மில்லத் சற்றும் அஞ்சவில்லை; அசையவில்லை; மலை போல நின்றார்கள்; தன்னந் தனியாக, தலை நிமிர்ந்து நின்று கொள்கை முழக்கம் செய்தார்கள். இன்று இந் நாட்டில் பச்சிளம் பிறைக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கிறதென்றால், அதற்கெல்லாம் ஒரே காரணம் காயிதே மில்லத்தினுடைய உறுதியும், தன்னம்பிக்கையும், பெரும் தியாகமும்தான். இது குறித்து இரண்டு விதமான கருத்துக்கள் இருக்க முடியாது.

இப்படியெல்லாம் நான் அழுத்தந் திருத்தமாக ஏன் சொல்கிறேன் என்றால் அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவர்களும் நானும் பாராளு மன்றத்தில் ஏக காலத்தில் உறுப்பினர்களாக இருந்தோம்; பதினொரு ஆண்டுக்காலம் வெஸ்டர்ன் கோர்ட் விடுதியில் தலைவரவர்களுடன் ஒன்றாகத் தங்கும் வாய்ப்பினைப் பெற்றவன் நான். காயிதே மில்லத் அவர்கள் என்னுடைய நண்பர்; ஆலோசகர்; வழிகாட்டி. அவர்களுடைய தலைமையின் கீழ் இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் பொதுச் செயலாளராகவும் நான் பணியாற்றியுள்ளேன். இவ்வளவு நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருந்ததால்தான் மேலே சொன்ன உண்மைகளை நான் நேரில் கண்டறிந்தவன் என்ற முறையில் கூறுகிறேன்.

**முஸ்லிம்கள் அனைவரும் பின்பற்றத்தக்க** ஒரு இலட்சிய வாழ்க்கையை காயிதே மில்லத் வாழ்ந்து காட்டிச் சென்றிருக்கிறார்கள். இந்திய உபகண்டம் விடுதலை பெற்று பாரதம், பாகிஸ்தான் 'என இரு சுதந்திர நாடுகளாக உருவான சமயம், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த முடிவு ஒன்றினை காயிதே மில்லத் மேற் கொண்டார்கள். பாரதூர மான முடிவாகும் அது. அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கை வைத்து, அவர்கள் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் என்ற அமைப்பைத் தொடருவது எனத் தீர்மானித்தார்கள். இந்தியாவில் வாழும் முஸ்லிம் 'உம்மா' விற்கு ஒரு அரசியல் அமைப்பு தேசீய ஸ்தாபனம் மிக மிக இன்றியமையாதது என்பதை உணர்ந்த தலைவரவர்கள் மிகுந்த முன் ஆலோசனையுடன் இம் முடிவுக்கு வந்தார்கள். அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்ற நோக்கத்துடனோ அல்லது அரசியல் ஆதாயம் தேடியோ, அவர்கள் இக் கட்சியை ஆரம்பிக்க வில்லை.

இந் நாட்டின் கௌரவமான பிரஜைகளாக வாழ வேண்டுமென்றால், மதிப்பும் மரியாதையுமுள்ள குடிமக்களாகப் பணியாற்ற வேண்டுமென்றால், இஸ்லாமிய சமுதாயம் ஒரு கட்டுக் கோப்பின் கீழ், ஸ்தாபன ரீதியாக, செயலாற்றினால்தான் அது சாத்தியப்படும் என்ற பேருண்மையை அவர்கள் முழுமையாக உணர்ந்திருந்தார்கள். இந் நாட்டின் ஐக்கியத்தையும் ஒற்றுமையையும் பேணிக் காப்பதற்கும் அரசியல் சாசனம் கோடிட்டுக் காட்டியிருக்கும் உரிமைகளை சட்ட பூர்வமான வழிகளில் கோரிப் பெற்று சுமுக வாழ்வு வாழ்வதற்கும், அரசியல் ரீதியான அமைப்பு ஒன்று இந்திய முஸ்லிம்களுக்கு மிகவும் இன்றியமையாதது என்ற உன்னத குறிக்கோளுடனேயே முஸ்லிம் லீகை அவர்கள் தொடர்ந்து நடத்த முடிவு செய்தார்கள்.

ஆனால் இன்றைய தினம், நாட்டின் நிலவரம் சிறுகச் சிறுக சீர்கெட்டுக் கொண்டே செல்கிறது. இந்த துரதிருஷ்டத்தை என்னவென்பது! நாட்டில் நாணயமும் கெட்டுவிட்டது; ஒழுக்கமும் மறைந்துவிட்டது. ஒரு சோக வரலாற்றுக்கு இந்நாட்டில் அடிப்படைகள் போடப்பட்டு வருகின்றன.

வன்முறைகள் தலைதூக்க வாரம்பித்து விட்டன. பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்ட பயங்கரவாதிகள், முஸ்லிம் சமுதாயத்தின் தனித்தன்மையை அழித்தொழிப்பதிலும் சின்னா பின்னப்படுத்துவதிலும் முழுமூச்சுடன் இறங்கி இருக்கிறார்கள்; பொருளாதார ரீதியாக முஸ்லிம்களை பின்னடையச் செய்ய வேண்டும் என்றும் அவர்களைச் சோர்வடையச் செய்து தன்னம்பிக்கை அற்றவர்களாக மாற்றிவிட வேண்டுமென நீண்ட காலத்திட்டங்களை வகுத்துக் கொண்டு ஒரு சதிகாரக்கும்பல் இந்நாட்டில் பரவலாக செயல் பட்டுவருகிறது. ஆங்காங்கே வகுப்புக் கலவரங்களைத் தோற்றுவித்து சிறுபான்மை மக்களை ஒட்டு மொத்தமாகக் கொன்று குவித்துவரும் காட்சிகள் இதற்கு சாட்சி பகர்ந்து கொண்டிருக்கின்றன. ஒரு ஜன சமூகத்தையே நிர்மூலமாக்கும் திட்டம் இது என்பதில் சந்தேகமில்லை.

ஆம்! மிகவும் இக்கட்டானதொரு சூழ்நிலையில் நாம் வாழ்ந்து வருகிறோம்; இருப்பதா? மடிவதா! என்ற சவாலை எதிர்நோக்கியவர்களாக நாம் இருந்து வருகிறோம். சமூகரீதியில், பொருளாதாரத் துறையில், கலாச்சாரப் பெருவெளியில், அரசியல் அரங்கில், நமக்குக் கொடுக்கப்படும் நெருக்கடிகளை நாம் குறைத்து மதிப்பிடுவதற்கில்லை. இப்பிரச்னைகளை நாம் கண்டு கொள்ளாமல் இருக்க முடியாது; அவற்றை விட்டு நாம் ஓடிவிடவும் முடியாது; நாம் அதனை சமாளித்தேயாக வேண்டும்; எதிர்த்து நின்றே தீர வேண்டும். பின் வாங்குவது என்ற பேச்சிற்கே இடமில்லை.

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கை வைத்த வண்ணம், இப்பிரச்னைகளையும் நெருக்கடிகளையும் நாம் எதிர்நோக்கத் தயாராகிக் கொள்ள வேண்டும். ஒரே அணியாக நாம் ஒன்றிணைந்து நிற்கவேண்டும்; ஒற்றுமையே நமது தாரக மந்திரம்; தியாகம் செய்யவும் தயாராகிக் கொள்ள வேண்டும்; தியாகம் செய்யத் துணியாமல் காரிய சித்தி என்பது இல்லை.

இதற்கெல்லாம் ஒரேவழி தான் உண்டு. அதைவிடுத்தால் நமக்கு வேறு பாதை கிடையாது. நம்முடைய ஒரே அரசியல் ஸ்தாபனமாக இந்திய யூனியன் முஸ்லிம் லீகை பலப்படுத்தி அதன் கொடியின் கீழ் நாமனைவரும் ஐக்கியமாக செயல்படுவது ஒன்று தான், இன்று நமக்குள்ள ஒரே வழி. காயிதே மில்லத் அவர்கள் நம்மிடம் விட்டுச் சென்ற ''அமானிதத்தை''ப் பாது காத்து பயன்படுத்துவதில்தான் நமது விமோச்சனமும் நல்வாழ்வும் இருக்கிறது.

வரலாற்றில் நமது தலைவர் தங்களது அடிச் சுவடுகளை நன்கு பதியவைத்துவிட்டுச் சென்றுள் ளார்கள். அந்த சுவடுகளைப் பின்பற்றி செயல் படுவதன் மூலமாக நமது இன்னல்களை நாம் சமாளித்துக் கொள்ள முடியும்; வெற்றி பெற இயலும். அவர்களது முன்மாதிரிகள் நம் கண் முன்பு இருக்கின்றன. அவர்களது நடைமுறை களும் செயல் திட்டங்களும் நமக்கு வழிகாட்டி களாக அமைந்துள்ளன. இன்று நாம் செய்ய வேண்டியது, காயிதே மில்லத்தின் நடைமுறை களை நோக்கி நடைபோட வேண்டியதே. ஒற்றுமையாகவும் நம்பிக்கையுடனும் அந்த லட்சியத்தை நோக்கி வீறுநடை போட நாம் திட சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும்.

சோதனை மிக்க காலக் கட்டத்தில், இந்த நினைவு மலரை வெளியிட முன்வந்திருப்பது ஒரு உருப்படியான செயலாகும். இந்தியாவில் வாழும் முஸ்லிம்களுக்கு ஒரு புதிய நம்பிக்கையை யும் சரியான வழியையும் இது காட்டும் என நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். இந்நாட்டில் சகோதர சமுதாயங்களுடன் நேசபூர்வமாகவும், ஒற்றுமையாகவும், சமத்துவமாகவும், மான மரியாதையுடனும், கண்ணியமும் கௌரவத் துடனும் நாம் வாழ்வதற்குச் சரியான பாதையை இம்மலர் காட்டும்; அக்குறிக்கோளை நோக்கி மக்களை நடத்திச் செல்லும்; அத்திசையை நோக்கி இஸ்லாமிய மக்களைத் திருப்பி விடுவது தான் இம்மலரின் பிரதான குறிக்கோள் என நான் நம்புகிறேன்.

நம்மனைவரையும் நேரான பாதையில் அல்லாஹ் வழி நடத்திச் செல்வானாக! வெற்றி யை நமக்களித்து அருள்பாலிப்பானாக!

*[''இறைவா!] நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!*

*எவர்களுக்கு நீ அருள்புரிந்தாயோ அவர் களுடைய வழியில் [நடத்துவாயாக]*

*[அவ்வழி, உன்] கோபத்துக்குள்ளானவர் களுடையதும் அல்ல; வழிதவறிப்போனவர் களுடையதும் அல்ல''.*

*[அல்ஹம்து சூரா 5, 6, 7]*

புதுடில்லி

*23-மார்ச் 1990* இப்ருஹீம் சுலைமான்

*[ஒப்பம்]*



# கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் நினைவு மலர்-1990 வெளியீட்டு விழாவில் வரவேற்புரை

*(நெல்லை நகர் பாளையங்கோட்டையிலுள்ள முஸ்லிம் அனாதை நிலைய வளாகத்தில் 1990, ஜூன் மாதம் 1ம் தேதி வெள்ளிக்கிழமை, 2ம் தேதி சனிக்கிழமை, 3ம் தேதி ஞாயிற்றுக் கிழமை ஆகிய மூன்று நாட்கள் நடந்த ஆறாவது முஸ்லிம் கல்வி மாநாட்டில் முதல் நாள் அன்று நிகழ்ந்த ''கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் நினைவு மலர்-1990'' வெளியீட்டு விழாவில் ''கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் நினைவு மலர்க் குழு''வின் தலைவர் அல்ஹாஜ் ஜனாப், P. S. M. செய்யிது அப்துல் காதிர் அவர்கள் ஆற்றிய வரவேற்புரையின் சுருக்கம்)*

உலகின் பல பாகங்களிலும் அவ்வப்போது பல பெரியவர்கள், தலைவர்கள் தோன்றி, தம் நாட்டிற்கும், நாட்டவர்க்கும், சமுதாயத்தவருக்கும் அரிய பல சேவைகளை ஆற்றி, சரித்திரத்தில் நீங்காத இடத்தைப் பெற்றிருக்கிறார்கள். அந்த முறையில் நமது காலத்தில், நமது நாட்டில் தோன்றியவர்களில் ஒருவர்தான் கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அல்ஹாஜ் M. முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள்.

காயிதே மில்லத் அவர்களை நேரில் கண்டும், அவர்களைச் சந்தித்தும், அவர்களோடு பழகியும் அவர்களைப் பற்றியும், அவர்களுடைய கொள்கைகள், கோட்பாடுகளைப் பற்றியும் அறிந்தவர்கள் பலர் இருந்தனர். ஆனால், காலப்போக்கில் காயிதே மில்லத் அவர்களை அறிந்தவர்களின் எண்ணிக்கை குறைந்து வருவதாலும், வருங்கால நமது சந்ததியினர் காயிதே மில்லத் அவர்களைப் பற்றி அறிய வேண்டியது அவசியமாதலாலும் காயிதே மில்லத் அவர்களைப் பற்றியும், அவர்களது கொள்கை—கோட்பாடுகளைப் பற்றியும், அவர்கள் நம் நாட்டிற்கும், சமுதாயத்திற்கும் ஆற்றிய தொண்டினைப் பற்றியும் வரிவடிவில் வடித்து, என்றென்றும் அழியாத சரித்திரப் பொக்கிஷமாக உருவாக்க வேண்டியது இன்றைய நம் சமுதாயத்தின் கடமையாகும். இதை உணர்ந்த பலர் ஒருங்கிணைந்து கலந்தாலோசித்ததின் விளைவாகத்தான் ''கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்-1990'' உருவாகியிருக்கிறது. இந்தச் சரித்திர மலரைப் படைப்பது தனிமனித சக்திக்கு அப்பாற்பட்டது.

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களின் நினைவாக வரலாற்றுச் சிறப்புமிக்க ஓர் உன்னத மலரை உருவாக்க வேண்டுமென்று எண்ணியவர்கள் 6-8-1985ம் தேதியன்று சென்னை, நாராயண சராங் தோட்டத் தெருவிலுள்ள M/s. மரைக்கா தொழில் நிறுவனத்தாரின் இல்லத்தில் ஆலிஜனாப். அல்ஹாஜ் அப்ஸலுல் உலமா K.T.M.S. அப்துல் காதிர் ஜமாலி சாஹிப் (தைக்கா வாப்பா) அவர்கள் தலைமையில் கூடி காயிதே மில்லத் நினைவு மலர் சம்பந்தமாகக் கலந்தாலோசித்து, காயிதே மில்லத் அவர்களின் வாழ்க்கை, சேவை, இந்திய நாட்டின் பாராளுமன்றம், அரசியல் நிர்ணய சபை, தமிழக சட்டமன்றம் முதலிய அரங்குகளில் அவர்கள் ஆற்றிய பேச்சுக்கள், காயிதே மில்லத் அவர்களைப் பற்றி அறிந்தவர்கள் அன்னார் குறித்துத் தரும் பேட்டிகள், கட்டுரைகள், கவிதைகள் முதலிய பல அம்சங்களை அடக்கி, மிக விரிவான ஒரு மலரை விரைவில் கொணரவேண்டும் என்று தீர்மானித்ததோடு இப்பணியைச் செயல்படுத்த ''கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்க்குழு'' என்ற குழுவை அமைத்தனர்.

இக்குழுவில் முக்கிய பங்கேற்றவர்கள் வருமாறு :

1. ஜனாப், ஹாஜி M.J. அஹ்மது ஜமால் சாஹிப்
2. ,, ,, P.S.M. செய்யிது அப்துல் காதிர் சாஹிப் M.A., B.L.,
3. ,, A. K. ரிபாயி சாஹிப் B.A., Ex. M.P.,
4. ,, Prof. K. அப்துல் கபூர் சாஹிப் M.A.
5. ,, ஹாஜி J. M. மியாகான் சாஹிப் B.A., Ex. M.L.C.,
6. ,, Prof. S. பீர் முஹம்மது சாஹிப் B.E..
7. ,, ஹாஜி M.S.M. பாதுல் அஸ்ஹாப் சாஹிப்
8. ,, மௌலவி M. அப்துல் வஹாப் சாஹிப் M.A., B.Th.,
9. ,, ஹாஜி S.M. முஸ்தபா சாஹிப் B.A.,
10. ,, ,, கேப்டன் N. A. அமீர் அலி சாஹிப்
11. ,, ,, M. ஜமால் முஹம்மது சாஹிப்
12. ,, ,, M. பக்கீர் முஹ்யித்தீன் சாஹிப்
13. ,, ,, A. S. M. ஷேக் முஹ்யித்தீன் சாஹிப்
14. ,, ,, M. B. A. ஜமால் முஹம்மது சாஹிப்

இந்த மலர்க்குழு சுமார் 3 ஆண்டுகளுக்கு மேலாக அயராது உழைத்ததின் காரணமாகத் தான் காயிதே மில்லத் நினைவு மலர் உருப்பெற்றிருக்கிறது. இந்திய நாட்டின் பல பகுதிகளுக்கும் மலர்க்குழுவினரும், குழுவின் பிரதிநிதிகளும் சுற்றுப் பயணம் செய்து, காயிதே மில்லத் அவர்களைப்பற்றி அறிந்த பலரையும் சந்தித்துப் பேட்டி கண்டும், கட்டுரைகள், கவிதைகள், புகைப்படங்கள் முதலியன பெற்றும் மலருக்கு வேண்டிய செய்திகளும், புகைப்படங்களும் சேர்க்கப்பட்டன. இதைப் போன்று, காயிதே மில்லத் அவர்களின் அரசியல் நிர்ணய சபை, பாராளுமன்ற, சட்ட மன்ற பேச்சுக்களைச் சேகரித்து, அவை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. காயிதே மில்லத் அவர்களின் செல்வக்குமாரர் ஹாஜி ஜனாப், மியாகான் சாஹிப் அவர்களிடமிருந்து காயிதே மில்லத் அவர்களின் குறிப்பேடுகளை (Diaries)ப் பெற்று அவற்றிலிருந்து பல அரிய நிகழ்ச்சிகள் தொகுக்கப் பட்டன. அடுத்து, மலரை வெளியிட அவசியமான நிதி சேர்க்கும் பணியிலும் மலர்க் குழுவினர் முயன்று, தேவையான நிதியைத் திரட்டினார்கள். விளம்பரத்திற்காக என்றில்லாமல், மலர் வெளியீட்டுக்காக என்று மட்டும் கணிசமான நிதி வழங்கப்பட்டிருப்பது காயிதே மில்லத் அவர்கள் மீது மக்கள் கொண்டுள்ள மரியாதையையும், மதிப்பையுமே காட்டுகிறது.

மலர் உருவானபின், அதை உரிய முறையில் வெளியிட வேண்டுமென்ற நிலை ஏற்பட்டபோது, திருநெல்வேலி முஸ்லிம் அநாதை நிலையத்தினர் நடத்தத் தீர்மானித்திருந்த ஆறாவது முஸ்லிம் கல்வி மாநாட்டுடன் இணைத்துச் சிறப்பான முறையில் மலரை வெளியிடுவது பொருத்தம் எனத் தீர்மானிக்கப்பட்டது. இத்தீர்மானத்தினை முஸ்லிம் அநாதை நிலையத் தலைவரும், காயிதே மில்லத் நினைவு மலர்க் குழுவின் செயலாளருமாகிய ஹாஜி ஜனாப், M. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தபோது, அவர்கள் இதை மெத்த மகிழ்ச்சியுடன் வரவேற்றதோடு, மலர் வெளியீட்டுக்கான அனைத்து ஏற்பாடுகளையும் சிறப்பாகச் செய்து தந்தார்கள்.

மலர் வெளியீட்டு விழா, கீழ்க்கண்ட நான்கு அடிப்படையில் மிகச் சிறப்பாகவும், பொருத்தமாகவும் அமைந்திருக்கிறது.

முதலாவதாக, வெளியீட்டு விழா நிகழும் ஆறாவது முஸ்லிம் கல்வி மாநாட்டுப் பந்தல், காயிதே மில்லத் அவர்கள் தோன்றிய திருநெல்வேலி பேட்டை மாநகர் சார்ந்த பாளையங்கோட்டை நகரம். காயிதே மில்லத் அவர்களின் பிறப்பிடமான திருநெல்வேலி பேட்டைக்கு அருகிலுள்ள பாளையங்கோட்டை நகரில் மலர் வெளியிடப்படுவது மிக்க பொருத்தமாகும்.

இரண்டாவதாக, காயிதே மில்லத் அவர்கள் பிறந்த மாதமாகிய ஜூன் மாதத்தின் முதல் நாளன்று மலர் வெளியிடப்படுவது சாலச் சிறப்புடையது.

மூன்றாவதாக, மலர் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை தாங்குவதற்காக நிர்ணயிக்கப்பட்ட ஜனாப், A. K. ரிபாயி சாஹிப் B.A., Ex. M.P., அவர்கள், அந்தப் பொறுப்புக்கு மிகவும் பொருத்தமானவர்கள். ஜனாப், ரிபாயி சாஹிப் அவர்கள் காயிதே மில்லத் அவர்கள் தோன்றிய அம்மாவட்டத்தைச் சார்ந்தவர்கள் மாத்திரமின்றி, காயிதே மில்லத் அவர்களின் குடும்பத்தையும் சார்ந்தவர்கள். இது தவிரவும் அரசியல் மற்றும் சமுதாயத்துறைகளில் ஜனாப், ரிபாயி சாஹிப் அவர்கள் காயிதே மில்லத் அவர்களோடு தோளோடு தோள் நின்று உழைத்தவர்கள். இப்படிப்பட்டவர்கள் காயிதே மில்லத் நினைவு மலர் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை தாங்குவது மிகப் பொருத்தமாகும்.

அதைப்போன்று, காயிதே மில்லத் நினைவு மலரை வெளியிடுவதற்காக மலர்க்குழு தீர்மானித்திருக்கும் மஹ்பூபே மில்லத் அல்ஹாஜ் ஜனாப், இப்ராஹிம் சுலைமான் சேட் சாஹிப், M. P., அவர்களைவிட இப்பொறுப்புக்குப் பொருத்தமானவர்கள் வேறு யாரும் இருக்கமுடியாது. காயிதே மில்லத் அவர்களின் மறைவுக்குப் பிறகு, அவர்கள் ஆற்றிய சேவைகளை, அவர்கள்தம் வழி நின்று ஆற்றிவரும் மஹ்பூபே மில்லத் அவர்கள், காயிதே மில்லத் நினைவு மலரை வெளியிடுவது மிக்க பொருத்தமும், சிறப்புமுடையது.

இவ்வாறு பல வகைகளிலும் சிறப்புற்று விளங்கக்கூடிய காயிதே மில்லத் நினைவு மலர் வெளியீட்டு விழாவுக்கு அணிசேர்க்கும் வகையில் திரளாக மக்கள் குழுமியிருப்பது காயிதே மில்லத் அவர்கள்பால் சமுதாயம் கொண்டுள்ள அசைக்க முடியாத பற்றினையும், மரியாதையையும் காட்டுகிறது.

காயிதே மில்லத் அவர்களின் நினைவை என்றென்றும் பசுமையாக இருக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் ''காயிதே மில்லத் அகடமி''

என்ற நிறுவனம் அமைக்கப்பட்டு, தமிழ்நாடு சங்கங்கள் பதிவுச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்க்குழு விட்டுச் செல்லும் பணியோடு மேலும் பல சிறந்த பணிகளை இணைத்துக் கொண்டு 'காயிதே மில்லத் அகடமி' செயல்பட்டு வரும். காயிதே மில்லத் அகடமியின் நிர்வாகிகள் வருமாறு :

தலைவர் :

ஜனாப், ஹாஜி P. S. M. செய்யிது அப்துல் காதிர் சாஹிப், M.A., B.L

துணைத் தலைவர் :

ஜனாப், A. K. ரிபாயி சாஹிப், B.A., Ex. M.P.

செயலாளர் :

ஜனாப், ஹாஜி M. ஜமால் முஹம்மது சாஹிப்

துணைச் செயலாளர்கள் :

ஜனாப், ஹாஜி Prof. S. பீர் முஹம்மது சாஹிப், B.E.

ஜனாப், ஹாஜி J. M. மியாகான் சாஹிப்,B.A.

பொருளாளர் :

ஜனாப்,ஹாஜி M. பக்கீர் முஹ்யித்தீன்சாஹிப்

உறுப்பினர்கள் :

ஜனாப், ஹாஜி Er. H. அப்துஸ் ஸமது சாஹிப் B.E.

,, ,, M. B. A. ஜமால் முஹம்மது சாஹிப்

ஜனாப், ஹாஜி A. J. அப்துர் ரஸாக் சாஹிப் B.A., B.L.

,, ,, தாஜுத்தீன் சாஹிப்

,, ,, A. K. அப்துல் ஹலீம் சாஹிப்

இம்மலர் வெளிவர பெரிதும் பாடுபட்ட பாளையங்கோட்டை முஸ்லிம் அநாதை நிலையத் தலைவர் ஜனாப், அல்ஹாஜ் M. ஜமால் முகம்மது சாஹிப் அவர்கள், ஜனாப் A. K. ரிபாயி சாஹிப், Ex. M.P. அவர்கள், ஜனாப் ஹாஜி A. S. M. ஷேக் முஹ்யித்தீன் சாஹிப் அவர்கள் (திருநெல்வேலி) ஜனாப், ஹாஜி மெக்கோ M. பக்கீர் முஹ்யித்தீன் சாஹிப் அவர்கள்,ஜனாப், Prof. S. பீர் முஹம்மது சாஹிப். B.E. அவர்கள், ஜனாப், ஹாஜி Er. H. அப்துஸ்ஸமது சாஹிப் அவர்கள், ஜனாப், ஹாஜி M. S. M. பாதுல் அஸ்ஹாப் சாஹிப் அவர்கள், ஜனாப், மௌலவி M. அப்துல் வஹாப் சாஹிப் அவர்கள், பேராசிரியர் இறையருட் கவிமணி ஜனாப், கா. அப்துல் கபூர் சாஹிப், M.A. அவர்கள், வீரை ஜனாப், M. அப்துல் ரஹ்மான் சாஹிப் அவர்கள், சென்னை ஹாஜி அப்துல் மஜீது சாஹிப் அவர்கள், ஜனாப், A. M. புஹாரி சாஹிப் அவர்கள், மற்றும் எல்லா வகையிலும் ஒத்துழைப்புகள், உதவிகள் செய்த வணிகப் பெருமக்கள், தொழில் அதிபர்கள், துபை 'ஈமானை'ச் சேர்ந்தவர்கள், அபுதாபி 'ஐமானை'ச் சேர்ந்தவர்கள், அல்ஹாஜ் மௌலவி முஹம்மது முஹ்யித்தீன் மதனி அவர்கள், மற்றும் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இறுதியாக, இன்று வெளியிடப்படும் 'காயிதே மில்லத் நினைவு மலர்-1990' பிரதிகளை நம் சமுதாயத்தவர் கையில் தவழச் செய்யுமாறும், சமுதாய மக்கள் அதைப் படித்து காயிதே மில்லத் அவர்களைப் பற்றி தெரிந்து கொள்ளச் செய்யுமாறும், இம்மலரின் மறுபதிப்புக்களும், பிற மொழிப் பதிப்புக்களும் அடுத்தடுத்து வெளிவர உதவவேண்டும் என்றும் அனைத்து மக்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

---

# தேசிய ஒருமைப்பாடு

# எது ஒருமைப்பாடு? காயிதேமில்லத் வினா

[1980 ல் நெல்லை இந்துக் கல்லூரி வளாகத்தில் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. ஆறுமுகம் அவர்கள் தலைமையில் நடைபெற்ற தேசிய ஒருமைப்பாட்டுக் கூட்டத்தில் உரை யாற்றிய 'சொல்லின் செல்வர்' அல்-ஹாஜ், M. M. பீர் முஹம்மது சாஹிப் அவர்கள் (மர்ஹூம்) குறிப்பிட்டது.]

இந்த மண்ணிலே பிறந்து, அகில இந்திய முஸ்லிம்களுக்குத் தலைமை வகித்து, இந்திய முஸ்லிம்களுடைய அரசியல் சகாப்தமாக அஜாத சத்ரு தேசிய விடுதலைப் போராட்டத்திலே ஈடு பட்டு, 'ரைட்ஹானரபிள்' சீனிவாச சாஸ்திரி அவர்களுடைய தலைமையில் பொருணை நதிக் கரையின் மணல் வெளியில் நடைபெற்ற தேசிய காங்கிரஸ் மாநாட்டில், இந்தியாவுக்கு 'டொமி னியன் அந்தஸ்து' தேவை என்ற தீர்மானத்தை எதிர்த்து, இந்த நாட்டிற்குப் பரிபூரண சுதந்திரம் தேவை என்ற தீர்மானத்தை முன்மொழிந்து, மூதறிஞர் ராஜாஜி அவர்கள் வழிமொழிய, மாநாட்டிலே தீர்மானம் நிறைவேற்றிய எங்களது ஆருயிர் தலைவர் **அல்ஹாஜ் காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப்** அவர்கள் தேசிய ஒருமைப்பாட்டின் கூட்டத்தில், சென்னை யிலே ஒரு கேள்வியைக் கேட்டார்கள். எது ஒருமைப்பாடு? ஒரு கதையை அடிப்படையாக வைத்துக் கேட்டார்கள். எது ஒருமைப்பாடு?

நாட்டு மனிதனும், காட்டுப் புலியும் தோழமை கொண்டனர். காட்டுப் புலி நாட்டுக்கு வந்தது. புலிக்கு வேண்டிய உணவை விருந்தாக மனிதன் கொடுத்தான். "நீ என்னுடைய நண்பன். உன்னுடைய நாட்டுக்கு நான் வந்தேன். விருந்தாளியாக வீட்டிற்கும் வந்தேன். என்னுடைய காட்டிற்கும், வீட்டிற்கும் நீ வர வேண்டும். உன்னை நான் நேசிக்கிறேன்; உனக்கு விருந்து தரவும் விரும்புகிறேன். நீ வரவேண்டும்" என்று புலி கூறியது. காட்டுப் புலியினுடைய தோழன் இந்த நாட்டு மனிதன் புலியோடு சேர்ந்து போனான். அந்த கல்லும், முள்ளும் நிறைந்த பாதையில் இவன் நடமாடுவதற்குத் தடுமாறி னான். "நீ என்னுடைய நண்பன். நடப்பதற்கு உனக்கு இயலாது. என்னுடைய வீட்டிற்கு உன்னை நான் கொண்டு செல்கிறேன்" என்று புலி சொன்னது. அதனுடைய தியாகச்சித்தத்தை ஏற்று மனிதன் அதனுடைய முதுகிலே ஏறி அமர்ந் தான். புலி, அதனுடைய குகைக்குள்ளே போன உடனே "நண்பா, நீயும் நானும் வேறுபட்டவர் கள் அல்ல, மாறுபட்டவர்கள் அல்ல. உனக்குத் தனியாக விருந்து தருவதற்கு விரும்பவில்லை. நான் உன்னையே விருந்தாக்கிக் கொள்கிறேன். என்னில் நீ ஒன்றுபட்டுவிடு. நாம் இரண்டறக் கலந்து விட்டோம்" என்று கூறி அந்த நாட்டு மனிதனை அடித்துச் சாப்பிட்டு விட்டது. இந்த நாட்டிலே இருக்கிற ஒருமைப்பாட்டுத் திட்டங்கள் இப்படியா என்று காயிதே மில்லத் அவர்கள் கேட்டார்கள். அதற்குப் பதில் அன்று கிடைக்க வில்லை. பத்து ஆண்டுகளுக்கு முன் கேட்டார் கள். பதில் கிடைக்கவில்லை. இன்னும் (1980ம் ஆண்டு வரை) கிடைக்கவில்லை. இனி என்று கிடைக்குமோ?

நன்றி :

"சொல்லின் செல்வர்"

அல்ஹாஜ் பீர் முகம்மது சாகிப் (மர்ஹூம்)

நினைவு மலர்

# மியான்பள்ளி மகாத்மியம்!

காயிதே மில்லத் அவர்களுடைய குடும்பத்தில் ''மியாக்கான்'' என்ற பெயர் பலருக்குச் சூட்டப்பட்டுள்ளது. தலைவரவர்களுடைய மகனின் பெயர் ஜமால் முஹம்மது மியாக்கான். தலைவரவர்களுடைய மூத்த சகோதரர் ஜனுப் அப்துல் லத்தீப் சாஹிப். அவர்களுடைய மூத்த மகன் பெயர் மஹ்மூது மியாக்கான். காயிதே மில்லத்துடைய கடைசி சகோதரர் பெயர் ஹாமீது மியாக்கான். ஏன்? தலைவரவர்களுடைய தந்தையின் பெயரே மியாக்கான் ராவுத்தர்தான்!

இது குறித்து அக்குடும்பத்தினரிடம் விசாரித்த பொழுது, சுவையான பல தகவல்கள் தெரிய வந்தன.

காயிதே மில்லத் அவர்களது பாட்டனுர் பெயர் தம்பி மீருன் என்பதாகும். இவருக்கு ஆரம்பத்தில் பெண் குழந்தைகளே பிறந்திருக்கின்றன. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று, பெண் குழந்தைகளே அத் தம்பதியினருக்கு பிறந்தார்கள். தம்பி மீருனுக்கு பல சகோதரிகள் போலும்! அவர்கள் அனைவரும் தங்களது நாத்தனுரை (சகோதரர் மனைவியைப்) பார்த்து ''உனக்கு எங்கே ஆண் குழந்தை பிறக்கப் போகிறது! நீ பெறுவதெல்லாம் பெட்டைகளாகத் தான் இருக்கும்'' என கேலி பேசுவார்களாம். நாத்தனுர்களின் நையாண்டிப் பேச்சுக்களினுல் தாக்குண்ட தம்பி மீருனின் மனைவி பாத்திமாபீவி மனம் தளர்ந்தார் இல்லை. ஆண் பிள்ளையை நாடி, மேலும் குழந்தைகளைப் பெற சித்தமாகவே இருந்தார். நாத்தனுர்களின் கேலிகளுக்கும் அவச் சொல்களுக்கும் தாக்குப் பிடிக்க முடியாதவாறு அந்த அம்மையார் திணறினுர் என்ருலும், ஆண் மகன் ஒருவன் தனக்கு வேண்டும் என்ற அபிலாஷையை பாத்திமா பீவி கைவிட்டார் இல்லை.

திருநெல்வேலி தாலுகாவில் தூத்துக்குடிக்குச் செல்லும் பாதையில் வல்லநாடு என்ற ஊருக்கு அடுத்தாற் போல மியான் பள்ளி என்ற சிற்றூர் உள்ளது. முஸ்லிம்கள் வாழும் கிராமம் அது. அங்கு ஒரு தர்காவும் உண்டு. அதில் அடக்கமாகியிருக்கும் இறை நேசரைப்பற்றி அக்கம் பக்கத்து கிராமத்துக்காரர்கள் வெகுவாக சிலாகித்துப் பேசிக் கொண்டிருக்கிருர்கள்.

கீழ்க்கரை ஏர்வாடியில் அடங்கியிருக்கும் சுல்தான் செய்யது இப்ருஹீம் வலியுல்லாஹ் அவர்களுடன் வந்த தோழர்களில் ஒருவர் செய்யது அப்துல்கரீம் என்பவர்களாகும். தென் மாவட்டங்களில் மார்க்கப் பிரச்சாரம் செய்து கொண்டு வரும் சமயம், இப் பெரியார் வல்ல நாட்டிற்கு அருகிலுள்ள குன்றுப் பகுதியில் வைத்து மரணமடைந்து விட்டார்கள். செய்யது அப்துல்கரீம் அவர்கள் அந்த இடத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டும் விட்டார்கள்.

நாளாவட்டத்தில் அந்த அடக்கத் தலத்திற்கு அருகாமையிலுள்ள கிராமங்களில் வசிக்கும் ஹிந்துப் பெருங்குடி மக்கள் பல அதிசயங்களைக் காணலுற்றுர்கள்; அற்புத நிகழ்ச்சிகள் ஒரு சிலருடைய வாழ்க்கையில் நிகழவாரம்பித்துள்ளன. இந்த ''கராமாத்துகள்'' குறித்துக் கேள்வியுற்ற முஸ்லிம்கள் பலரும், அப்பெரியார் அடங்கியுள்ள இடத்தைச் சுற்றிலும் குடியேறலானுர்கள்.

செய்யது அப்துல்கரீம் என்ற பெரியார் அப்பகுதியினரால் ''மியான்'' என்றே அழைக்கப்பட்டார்கள். மகான் மியான் அடக்கத் தலத்தைச் சுற்றிலும் உருவான ஊர், நாளடைவில் மியான் பள்ளி என்றே பெயர் பெறலாயிற்று. இவ்வூருக்கு ஜியாரத் வருவோரது எண்ணிக்கையும் அதிகரிக்கலாயிற்று. மதுரையிலிருந்து ராணி மங்கம்மா ஆட்சி புரிந்த காலத்தில், இத்தர்காவுக்கு கல்மண்டபம் ஒன்று கட்டிக் கொடுக்கப்பட்டது. சில மானியங்களும் இதற்காக ஒதுக்கப்பட்டிருக்

கின்றன. கீழக்கரையைச் சேர்ந்த முஹம்மது இஸ்மாயில் என்ற பெரியார் கி. பி 1845ம் ஆண்டு இங்கு அடக்கமாகியுள்ள மார்க்கப் பிரச்சாரகரைப் புகழ்ந்து அரபி மொழியில் பாக்களை (மௌலூது கிதாபு) இயற்றியுள்ளார். ஆண்டு தோறும் கந்தூரி சமயம் இப்பாக்கள் இன்றும் பாடப்பட்டு வருகின்றன.

மியான் பள்ளியின் மகத்துவத்தைப் பற்றியும் அங்கு அடக்கமாகியுள்ள பெரியாரின் கராமாத்துகளைப் பற்றியும் கேள்வியுற்ற, பேட்டை தம்பி மீருனின் மனைவி, பாத்திமா பீவி அந்த தர்காவுக்குப் போய் தமது விருப்பத்தை தெரிவித்து அதற்காக சிபாரிசு செய்யும்படி கேட்டுக் கொள்வது எனத் தீர்மானித்து விட்டார். பேட்டையிலிருந்து மியான் பள்ளிக்கு சுமார் 20 கிலோ மீட்டர் தூரம் இருக்கலாம். அந்தக் காலத்தில் பஸ் போக்குவரத்தும் கிடையாது. மாட்டு வண்டியில் போய் வரக் கூடிய பொருளாதார வசதியும் அந்த அம்மையாருக்கு இல்லை. எனவே, கிழக்கே வெள்ளை கீறுவதற்கு முன்னரே புறப்பட்டு, திருநெல்வேலி டவுன், ஜங்ஷன், பாளையங்கோட்டை, வல்ல நாடு போன்ற ஊர்களை கால்நடையாகவே கடந்து, மியான் பள்ளிக்குப் போய் அங்கு சில மணி நேரம் தங்கி இருந்து வணக்கங்களில் ஈடுபட்டும், இறைவனிடம் துஆக்களைச் செய்தும், அப்பெரியாரின் சிபாரிசுகளை வேண்டியும் பிரார்த்தனைகளை முடித்துவிட்டு வீடு திரும்புவதற்குள் மாலைப் பொழுது வந்து விடுமாம்! இவ்வாறு அந்த அம்மையார் தமது நேத்திக் கடனை ஒரு தடவையல்ல, இரண்டு தடவைகள் அல்ல, பல முறைகள் நிறைவேற்றியுள்ளார். பல வெள்ளிக்கிழமைகளில் இந்த நடைப்பயணம் மேற்கொள்ளப்பட்டது. ஆண் குழந்தை வேண்டுமென்ற நிய்யத்துடன் ஒரு முறை, அதிகாலையில் குளித்து முடித்த ஈரத்துணியுடனேயே மியான் பள்ளிக்குச் சென்று திரும்பியுள்ளார். 'முப்பெயர்'' (அதாவது மூன்று குழந்தைகள் பிறந்தாலும் அனைவருக்கும் மியான்கான் என்ற பெயர் வரும்படி பெயர் சூட்டுவேன்) வைப்பேன் சங்கற்பத்தையும் அந்த அம்மையார் மேற் கொண்டிருந்தார்,

அந்த அம்மையாரின் பிடிவாதமான முயற்சி வீண் போகவில்லை. அவருக்குப் பிறந்த ஐந்தாவது குழந்தை ஆண் மகவாகவே அமைந்தது! அம் மகனுக்கு 'மியாக்கண்ணு'' என அந்த வீரத் தாய் பெயரிட்டழைத்தார். இவர்தான் காயிதே மில்லத்தின் தந்தையாகும். ''மியாக் கண்ணு'' நாளடைவில் ''மியாக்கானுக'' மாறிவிட்டது!

மியாக்கான் பிறந்த பிறகு மேலும் ஒரு பெண் குழந்தை அவருக்குப் பிறந்தது. அதற்கு ''மியாப் பிள்ளை'' என்று பெயர் சூட்டப்பட்டது. முப்பேர் வைப்பது என்ற நிய்யத்து இருந்தபோதிலும் இரண்டு குழந்தைகள்தான் (ஒரு ஆணும் ஒரு பெண்ணும்) பிறந்தன. இரண்டிற்கும் மியான் பள்ளி நாதரின் ஞாபகார்த்தமாக பெயர்கள் சூட்டப்பட்டன.

மாமியார் எடுத்துக் கொண்ட சபதத்தை மருமகள் (அதாவது காயிதேமில்லத்தின் தாயார்) நிறைவேற்றி வைத்துவிட்டார்! தங்களுக்குப் பிறந்த கடைசி ஆண் குழந்தைக்கு ஹாமீது மியாக்கான் எனப் பெயர் சூட்டி ''முப்பெயர்'' வைக்கும் பொறுப்பினை நிறைவேற்றி விட்டார்.

## பொன் மொழி

''எந்த அரசியல் ஞானியும் மேதையும் இதுவரை ''வகுப்புவாதம்'' என்ற பதத்திற்கு சரியானதும் திருப்தி அளிக்கக் கூடியதுமான விளக்கத்தைத் தரவில்லை''

—காயிதே மில்லத்

# காயிதே மில்லத் குடும்ப வரலாறு

மியாக்கண் இராவுத்தர் அவர்களுக்கும் முகையத்தீன் பாத்திமா அம்மையாருக்கும் இரண்டாவது மகனாக காயிதே மில்லத் அவர்கள் திருநெல்வேலி பேட்டையில் பிறந்தார்கள். அவர்களுடன் பிறந்தவர்கள் மூன்று ஆண்களும் ஒரு பெண்ணும் ஆவார்கள்.

காயிதே மில்லத் அவர்களின் மூத்த சகோதரர் பெயர் ஜனுப் அப்துல் லத்தீப் சாஹிப்; இரண்டாவது காயிதே மில்லத்; மூன்றாவது ஜனுப் கே. டி. எம். அஹமது இப்ராஹீம் சாஹிப்; நான்காவது ஜனுப் ஹாமீது மியாக்கான் சாஹிபு.

அப்துல் லத்தீப் சாஹிப் அவர்களுக்கு சுமார் பன்னிரெண்டு வயதாக இருக்கும் பொழுது அவர்களது தந்தை இறந்து விட்டார்கள். அப்பொழுது காயிதே மில்லத் அவர்களுக்கு வயது ஏழு. கே. டி. எம். அவர்கள் இரண்டரை வயதுக் குழந்தை. ஹாமீது மியாக்கான் தாய் வயிற்றில் கர்ப்பமாக இருந்தார். குழந்தைகள் அனைவரும் தாயார் அவர்கள்பராமரிப்பிலும்தாய்மாமன்மார்கள் ஆதரவிலும் வளர்ந்தார்கள். ''வாப்பம்மா'' அவர்கள் தங்களது 25 வயதிற்குள்ளாக கணவனை இழந்து விட்டார்கள். அதற்குள்ளாக ஐந்து குழந்தைகளுக்கும் தாயாகி விட்டார்கள்; என்றாலும் சுமார் எண்பத்தைந்து வயதுவரை அவர்களை வாழ்ந்திருக்கும்படி அல்லாஹ் பணித்து விட்டிருந்தான்.

அது மட்டுமல்ல 'வாப்பம்மா' அவர்களது தாயும் தந்தையும் நூறு அல்லது நூற்றிப் பத்து வயதுவரை வாழ்ந்திருந்தார்கள். கான்முஹம்மது இராவுத்தர் என்பது அவர்களது தந்தையின் பெயர்; பாத்திமா என்பது அவர்களின் தாயார் பெயர். 'அத்திப் பெத்தா' என்று பேரப் பிள்ளைகளாலும் கொள்ளுப் பேரப் பிள்ளைகளாலும் இம் மூதாட்டி அழைக்கப்பட்டார். வாப்பம்மாவின் பெற்றோர்களான அத்தி பெத்தாவையும் அவரது கணவரையும் கொள்ளுப் பேரப் பிள்ளைகள், நேரில் கண்டு அளவளாவியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மியாக்கண் இராவுத்தர் அவர்களின் தந்தையின் பெயர் தம்பி மீரான் இராவுத்தர். இவர்கள்தான் காயிதேமில்லத்அவர்களின்பாட்டனார். தம்பிமீரான் அவர்களது தந்தையின் பெயர் காட்டுபாவாராவுத்தர். அவர்களது தந்தையின் பெயர் முஹம்மது இராவுத்தர். முஹம்மது இராவுத்தர் அவர்களின் முன்னோர்கள் கோவில்பட்டி விளாத்திகுளம் பகுதிகளில் இருந்து குடிபெயர்ந்து வந்து திருநெல்வேலிப் பேட்டையில் குடியேறி இருக்கலாம் எனத் தெரிகிறது. கர்ணபரம்பரைச் செய்தியாக இப் பேச்சு அக்குடும்பத்தினரிடம் இன்றும் நிலவி வருகிறது.

காட்டு பாவா இராவுத்தருக்கும் அவர் குடும்பத்தினருக்கும் பூர்வீகமான தொழில், கைத்தறி ஜவுளி வியாபாரம். அக் காலத்தில், திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் தலைநகரமான திருவனந்தபுரம், அதைச் சுற்றிலுமுள்ள இடங்களில்தான் காட்டுபாவா இராவுத்தர் ஜவுளி வியாபாரம் செய்திருக்கிறார். அக் காலத்தில் பொதி மாடுகளில் சரக்குகளை ஏற்றி நாகர்கோவில் பாதை வழியாக திருவனந்தபுரம் செல்வதுண்டாம். சரக்குகளுடன் அதன் சொந்தக்காரர்களும்நடந்துதான் செல்ல வேண்டும். திருவிதாங்கூர் அரச குடும்பங்கள் வாழும் அந்தப்புரப் பகுதிகளுக்கெல்லாம், கைத்தறி ஜவுளிகளைக் கொண்டு சென்று வியாபாரம் செய்யும் வாய்ப்புக்கள் காட்டுபாவா இராவுத்தருக்கும்விசேஷமாகக் கிட்டி இருக்கின்றன. அவரது நாணயத்தையும், நேர்மையையும் பார்த்து, அரச குடும்பங்களும் மற்றும் செல்வந்தர்களும் இவரிடம் தான் ஜவுளிகளை வாங்கிக் கொள்வார்களாம். இம் மாதிரி சம்பவங்களை, காட்டுபாவா இராவுத்தரும் அவர் மகன் தம்பி மீரான் அவர்களும் தங்

ளது இல்லம் திரும்பியதும் வீட்டுப் பெண்களிடம் பெருமையாகக் கூறி இருக்கிறார்கள். எனவே இவ் வீட்டுப் பெண்களிடம் இத்தகைய செய்திகள் கர்ண பரம்பரையாக பேச்சு வழக்கில் இருந்து கொண்டே வருகின்றன.

ஒரு சமயம் திருவனந்தபுரம் மஹாராஜா அரண்மனைக்குத் தங்களது சரக்குகளைக் காட்ட வியாபாரிகள் பலரும் சென்றிருந்தார்கள். மியாக்கண்ணும் தமது சரக்குகளுடன் போயிருந்தார். அரண்மனை சிப்பந்திகள் மூலம் அச் சரக்குகளை அனுப்பும்படியும், வியாபாரிகளை அரண்மனைக்குள் அனுமதிக்க வேண்டாம் என்றும் அதிகாரிகளிடமிருந்து உத்திரவு வந்தது. எல்லா வியாபாரிகளும் தங்களது சரக்குகளை அரண்மனைக்குள் கொடுத்து விட்டார்கள். ஆனால், மியாக்கண் மட்டும் தனது சரக்குகளை கொடுத்து விட மறுத்து விட்டார். ''தான் போகக் கூடாத இடத்திற்கு தனது சரக்குகளும் போகாது!'' என்று தைரியமாகச் சொல்லி விட்டார்.

இந்த விஷயம் மஹாராஜா காதுவரை எட்டி விட்டது. அப்படிச் சொல்கிறவரை தன்முன் கொண்டு வரும்படி மஹாராஜாவிடமிருந்து தாக்கீது வந்தது. மியாக்கண் அழைத்துச் செல்லப்பட்டு மஹாராஜா முன் நிறுத்தப்பட்டார். அரண்மனை தலைவாயிலில், தான் கூறியதை மஹாராஜா முன்னிலையிலும் அவர் தைரியமாகக்கூறினார். மியாக்கண்ணின் தோற்றத்தையும், அவரது துணிவையும் கண்டதும் மஹாராஜாவுக்கு அவர் மீது ஒருவித மரியாதையும் பரிவும் ஏற்பட்டு விட்டது; பாராட்டினார். அத்துடன் ''உனக்கு என்ன வேண்டும்?'' எனவும் மஹாராஜா கனிவுடன் வினவினார்.

> திருவனந்தபுரம் சாலை பஜாரில் காயிதே மில்லத் குடும்பத்திற்குச் சொந்தமாக இருந்த இடத்தின் விபரம்:-
> மொத்த பரப்பளவு ஒரு சென்ட்; திருவனந்தபுரம் நகரில் செங்கஷாசேரி பகுதியில் சர்வே எண் 2444/32ல் ஒரு சென்டு நிலமும் அதிலுள்ள கட்டிடமும், அக்கடையின் கதவு இலக்கம் 1373/1374. செஞ்சித்தா வார்டில் உள்ளது. சாலை வார்டில் கதவிலக்கம் 192/193 நகை வியாபாரி பகவதியப்பன் செட்டியாருக்கு இந்த இடம் அண்மைக் காலத்தில் விற்கப்பட்டு விட்டது.

திருவனந்தபுரம் சாலை பஜாரில் உயர் ஜாதிக்காரர்கள் மட்டுமே நிலச் சொந்தக்காரர்களாக இருந்தனர்.

அதுநாள்வரை அரிஜனங்களும், முஸ்லிம்களும், சொந்தமாக இடம் வாங்கக் கூடாது என கட்டுப்பாடு இருந்தது. அந்த பஜாரிலுள்ள கடைகள் அனைத்தும் மேல் ஜாதிக்காரர்களுக்குச் சொந்தமாகவே இருந்தன. இதை மனதில் வைத்துக் கொண்டு, மியாக்கண் ராவுத்தர், சாலை பஜாரில் ஒரு இடம் சொந்தமாக வாங்கிக் கொள்ளத் தமக்கு அனுமதி வேண்டும் என்று கேட்டார். மஹாராஜாவும் அதற்கு ஒத்துக் கொண்டார். சாலை பஜாரில் முதன் முதலாகச் சொந்தமாக இடம் கிரையம் வாங்கி வியாபாரம் நடத்திய முஸ்லிம் வர்த்தகர் மியாக்கண் தான்!

தம்பி மீரானும் அவரது குமாரர் மியாக்கண்ணும் ஓரளவு மார்க்க அறிவு பெற்ற ஆலிம்களாக இருந்ததுடன், தமிழிலும் அவர்களுக்கு நல்ல தேர்ச்சி இருந்தது. குறிப்பாக மியாக்கண் இராவுத்தருக்கும் ''மனோன்மணீயம்'' நாடகம் எழுதிய, நாஞ்சில் நாட்டைச் சார்ந்த சுந்தரம் பிள்ளைக்கும் நெருங்கிய நட்பு இருந்திருக்கிறது. சுந்தரம்பிள்ளை அவர்கள் 1880-90ம் ஆண்டுகளுக்கிடையில் திருநெல்வேலியில் வாழ்ந்திருக்கிறார். அங்குள்ள ஆங்கிலோ வெர்னகுலர் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகவும், பின்னர் அதே கல்விக் கூடம் இரண்டாவது கிரேட் கல்லூரியாக உயர்த்தப்பட்ட பொழுது அதன் பிரின்ஸிபாலாகவும் சுந்தரம் பிள்ளை பணிபுரிந்துள்ளார். இக்கல்விக்கூடம் தான் பின் காலத்தில் M. D. T. இந்துக் கல்லூரியென பெயர் பெறலாயிற்று. சுந்தரம்பிள்ளை தமது கடைசி காலத்தில் திருவனந்தபுரத்திலுள்ள மஹாராஜாஸ் காலேஜின் பேராசிரியராகவும் பணிபுரிந்துள்ளார்.

எனவே மியாக்கண் ராவுத்தருக்கும் சுந்தரம் பிள்ளைக்கும் நெல்லையில் ஆரம்பித்த அறிமுகமும் பழக்கமும் திருவனந்தபுரத்திலும் தொடர்ந்திருந்தது எனக் கொள்ளலாம். அவ்விருவருக்கிடையில் கடிதப் போக்குவரத்தும் இருந்துள்ளது. பேட்டை மல்லிமால் தெரு வீட்டில் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையின் கடிதங்கள் சிலவற்றைப் பார்த்ததாகக் குடும்பப் பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள். ஆனால் இன்று அக்கடிதங்கள் ஒன்றும் கைக்குக் கிடைக்கவில்லை.

# லோக் சபா Who is Who 1971

*[ஐந்தாவது லோக் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் பற்றிய விபரங்களை லோக் சபா செக்ரடேரியேட் 1971 ம் ஆண்டு நூல் வடிவில் (Who is Who) வெளியிட்டுள்ளது. காயிதே மில்லத்தைப்பற்றிய விபரங்கள் 386, 387ம் பக்கங்களில் காணப்படுகின்றன. அவை இங்கே தரப்பட்டுள்ளன.]*

(Who is Who of 1971 Lok Sabha
*பக்கங்கள் 386, 387)*

கேரள மாநிலம் மஞ்சேரி பாராளுமன்றத் தொகுதியிலிருந்து ஸ்ரீ எம். முஹம்மது இஸ்மாயில் 1971 ம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

வாக்கு விபரங்கள்

| | |
|---|---|
| எம். முஹம்மது இஸ்மாயில் | 1,71,496 |
| E. P. M. அலி | 51,659 |
| K. K. ராதாகிருஷ்ணன் | 30,535 |

தந்தையின் பெயர் K. T. மியாக்கான் ராவுத்தர். பிறந்த ஊர். திருநெல்வேலி பேட்டை.

பிறந்த தேதி: 1896 ம் ஆண்டு ஜூன் மாதம் 5ம் தேதி. கல்வி கற்ற பள்ளிக் கூடங்கள் (1) C. M. S. பள்ளிக்கூடம் திருநெல்வேலி டவுன். (2) செயின்ட் ஜோசப் கல்லூரி திருச்சிராப்பள்ளி (3) கிருஸ்துவக் கல்லூரி மதருஸ்.

மனைவியின் பெயர்; ஜுபைா ஜமால் ஹமீதா பீவி. 1923 ம் ஆண்டு நவம்பரில் திருமணம். தொழில்: வியாபாரம்.

கீழ்க்கண்ட ஸ்தாபனங்களில் உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார்.

1. மதருஸ் துறைமுக டிரஸ்டு போர்டு
2. மதருஸ் போர்டு ஆப் இண்டஸ்ட்ரீஸ்
3. மதருஸ் மாகாண மார்க்கெட்டிங்போர்டு
4. மதருஸ் எக்சைஸ் லைசன்சிங் போர்டு
5. தென்னிந்திய ரயில்வே அட்வைசரிகமிட்டி
6. இந்தியன் கவுன்ஸில் ஆப் அக்ரிகல்சுரல் கமிட்டி (தோல் பிரிவு)
7. தோல் செஸ் இன்குயரி கமிட்டி
8. மைக்கா என்குயரி கமிட்டி.
9. இண்டஸ்ட்ரியல் பிளானிங் கமிட்டி (மதருஸ் சர்க்கார்)
10. சௌத் இந்தியா சேம்பர் ஆப் காமர்ஸ் & இண்டஸ்ட்ரி(இதன் துணைத்தலைவராகஒரு முறை செயலாற்றியுள்ளார்கள்)
11. பெடரேஷன் ஆப் இந்தியன் சேம்பர் ஆப் காமர்ஸ் அண்டு இன்டஸ்ட்ரி
12. அலிகர் முஸ்லிம் சர்வ கலாசாலை கோர்ட்

மதருஸ் மாகாண சர்க்கார் நியமித்த தோல் மற்றும் தோல் பொருட்கள் கமிட்டியின் சேர்மனாகப் பணியாற்றியுள்ளார்கள். சதர்ன் இந்தியா ஸ்கின் அண்டு ஹைட்ஸ் மெர்சண்ட் அசோசியேஷன் செயலாளராக ஒரு முறையும் துணைத் தலைவராக மற்றொரு முறையும் பணியாற்றியுள்ளார். மதருஸ் மாகாண மட்டன் வியாபாரிகள் சங்கத்தின் தலைவராக 1946முதல் பணிபுரிந்து வருகிறார். இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவராக 1948 ம் ஆண்டு முதலும், தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் தலைவராக 1945ம் ஆண்டு முதலும் பணி புரிந்து வருகிறார். 1946-52 வரை மதருஸ் சட்டசபை உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார். அக்கால கட்டத்தில் எதிர்க்கட்சித் தலைவராகவும் செயலாற்றியுள்ளார். மதருஸ் சட்டசபை பொது கணக்குக் குழு தலைவராகவும் செயலாற்றியுள்ளார். அதன் உறுப்பினராகவும் பல முறை செயல்பட்டுள்ளார். 1948 முதல் 1950 வரை அரசியல் நிர்ணய சபை உறுப்பினராகவும் இருந்துள்ளார். 1952 முதல் 1958 வரை ராஜ்ய சபா உறுப்பினராகவும் செயல்பட்டுள்ளார். மூன்றாவது லோக் சபா (1962-67) நான்காவது லோக் சபா (1967-70)விலும் உறுப்பினராக இருந்துள்ளார். ஐந்தாவது லோக் சபாவுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சமுதாய நடவடிக்கைகள் :-1909ம் ஆண்டு திருநெல்வேலி பேட்டையில் ''பால்ய முஸ்லிம் சங்கத்தை'' த் துவக்கி அதில் தீவிரப் பங்காற்றியுள்ளார்.

1918ம் ஆண்டு தமிழ்நாட்டில் மஜ்லிசுல் உலமா ஸ்தாபனம் அமைக்கப்படுவதற்கு உறுதுணையாக இருந்துள்ளார். தென் இந்திய முஸ்லிம் கல்விச் சங்கத்தில் தொடர்ந்து இருபது ஆண்டுகள் துணைத் தலைவராகப் பணி புரிந்துள்ளார். மதருஸ் அஞ்ஜுமன் ஹிமாயத்தே இஸ்லாம் (மதருஸ் எத்தீம்கானா) ஸ்தாபனத்தின் துணைத் தலைவராகவும் இருந்துள்ளார். மதருஸ் தமிழ் வளர்ச்சி கழகத்தின் ஸ்தாபக உறுப்பினராகவும் இருந்துள்ளார்.

ஹாபி (பொழுது போக்கு): வீட்டைச் சுற்றி தோட்டம் போடுதலும் தோட்டக் கலைப் பணிகளும்.

இதர பொழுது போக்கு அம்சங்கள் :— தத்துவம், வரலாறு, வான சாஸ்திரம் சம்பந்தமான நூற்களை வாசித்தல், மக்களைப் பற்றியும் நாடுகளைப் பற்றியுமுள்ள நூல்களைப் படித்தலும்.

விசேஷ கவனம் செலுத்தும் காரியங்கள் :— கல்வி, கல்வி நிலையங்கள், அனாதை நிலையங்கள்.

விளையாட்டு :—கால்பந்து.

வெளிநாட்டுப் பயணம்:- பர்மா, மலேஷியா, சிலோன், சவூதி அரேபியா ஆகிய நாடுகளில் பயணம் செய்துள்ளார்.

நிரந்தர முகவரி:-தயா மன்ஸில், குரோம் பேட்டை, மதருஸ்-44.

# நிகழ்ச்சிகள் கோர்வையாக...

**தொகுப்பு "A. K. R."**

| | |
|---|---|
| 5-6-1896 | —பிறந்த தேதி |
| 1898 | —தங்கை பாத்திமா பீவி பிறப்பு |
| 15-6-1900 | —K. T. M. அஹமது இப்ருஹீம் சாஹிப் பிறந்த ஆண்டு |
| 1903 | —தந்தை மியாக்கான் இராவுத்தர் மரணம் |
| ,, | —கடைசி சகோதரர் ஹாமீத் மியாக்கான் பிறப்பு |
| 1909 | —பாலிய முஸ்லிம் சங்கம் ஆரம்பித்தல் |
| 20, 21 ஜுலை 1920 | —நெல்லையில் நடைபெற்ற மாகாண காங்கிரஸ் மாநாட்டில் இராஜாஜியுடன் ஒத்துழைத்து, பூர்ண சுதந்திரம் கோரும் தீர்மானத்தை நிறைவேற்றுதல் |
| 1920 | —மஜ்லிஸுல் உலமா மூன்ருவது மாநாடு ஈரோட்டில் நடைபெற்ற பொழுது மௌலானா முஹம்மதலி, மௌலானா சௌக்கத் அலி ஆகியோரின் சந்திப்பு |
| 1920-21 | —கிலாபத், ஒத்துழையாமை [இயக்கங்களில் தீவிர பங்கு கொண்டு கல்லூரியைவிட்டு வெளியேறுதல். |
| 1921-1922 | —மதருஸ் ஜமால் முஹைதீன் கம்பெனியில் பணியில் சேர்தல். |
| 19-11-1923 | —ஜமால் ஹமீதா பீவியை திருமணம் முடித்தல். |
| 1924 பிற்பகுதி | —ஜமால் தோல் கம்பெனி ஸ்தாபகர் ஹாஜி ஜமால் மொகிதீன் சாகிபு நெல்லை மாவட்டம் குற்ருலத்தில் வைத்து மரணம், |
| 10-10-1925 | —மகன் ஜமால் முஹம்மது மியாக் கான் பிறப்பு. |
| 1927 | —முஹம்மது மர்மடியூக் பிக்தால் மதருஸ் வருகை. |
| 1927 | —மகள் பஹ்மீதா பிறப்பு-மரணம். |
| 1928 | —அல்லாமா இக்பால் மதருஸ் வருகை. |
| 1929 | —டில்லி ஜாமியா-மில்லியா - இஸ்லாமியா கல்வி கூடத்திற்கு விஜயம் செய்து டாக்டர் ஜாகீர் உசேன், மௌலானா முஹம்மதலி ஆகியோரை சந்தித்தல். |
| 1930 | —முதலாவது வட்டமேஜை மாநாட்டிற்கு மௌலானா முஹம்மதலி புறப்பட்ட பொழுது, கராச்சி துறைமுகத்தில் ஹாஜி M. ஜமால் முஹம்மது சாகிபும், காயிதே மில்லத்தும்,மௌலானாவை வழியனுப்பி வைத்தல். |
| 1932 | —சகோதரி பாத்திமாவின் கணவர் OCPSE முஹம்மது இப்ருஹீம் மரணம். |

1927-1935 —இக்கால கட்டத்தில் இஸ்லாமிய சமுதாய, கலாச்சார, கல்வி நடவடிக்கைகளில் தீவிர ஈடுபாடு கொள்ளுதல், முஹம்மது மர்மடியூக் பிக்தாலை மதருஸுக்கு வரவழைத்து சொற்பொழிகளுக்கு ஏற்பாடு செய்தல். அல்லாமா முஹம்மது இக்பாலை மதருஸுக்கு அழைத்து சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்தல். ஆண்டு தோறும் மீலாது சொற்பொழிகளுக்கு ஏற்பாடு செய்தது மௌலானா சுலைமான் நத்வி, மௌலானா அப்துல் அலீம் சித்தீக்கி போன்ற மார்க்க அறிஞர்களை அழைத்து பேச வைத்தல்.

,, —தென்னிந்திய முஸ்லிம் கல்வி சங்கத்தின் துணைத்தலைவராகவும் மதருஸ் அஞ்சுமனே—ஹிமாயத்தே இஸ்லாம் (எத்தீம் கானா) சபையின் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு சுமார் 20 ஆண்டு காலம் அப்பொறுப்பில் இருத்தல்.

1936 —மதருஸ் சட்டசபைக்கு நடைபெற்ற தேர்தலில், பொது தொகுதியில் இருந்து போட்டியிட்ட ஹாஜி M. ஜமால் முஹம்மது சாகிபு வெற்றி வாய்ப்பை இழந்து விடுதல், ''பெரும்பான்மை வகுப்பு வாதம்'' தலைதூக்கி நின்றதை நேரில் அனுபவித்தல்.

1937 —அகில இந்திய முஸ்லிம் லீக்கில் உறுப்பினராக சேர்தல்.

1937 —ஹைதராபாத் ஸூபி ஹஜ்ரத் மரணம்.

1938 —மதருஸ் ஜில்லா முஸ்லிம் லீக் தலைவராக தேர்ந்தெடுக்கப்படுதல்.

3-2-1939 —மதனியாரும், தென்காசி மு.ந. அப்துர் ரகுமான் சாகிபின் மனைவியுமான ஜமால் பாத்திமா பீவி மரணம்.

15-2-1939 —தலைவரின் ஞானாசிரியர் நாகூர் செய்யது அப்துல்லா மௌலானா மரணம். அப்போது அவர்களது வயது 82.

1939 —மதருஸ் ஜமால் முஹைதீன் கம்பெனி நஷ்டமடைந்து வியாபாரத்தை நிறுத்திக் கொண்டது.

14-9-1939 —அதுவரை எக்மோர் ''டிவோனியா ஹவுஸ்'' பங்களாவில் வசித்து வந்த தலைவரவர்கள் பெரம்பூருக்கு ஜாகையை மாற்றிக் கொள்ளல்.

12-15 ஏப்ரல் 1941 —அகில இந்திய முஸ்லிம் லீக் மாநாடு காயிதே ஆஜம் முஹம்மதலி ஜின்னா சாஹிப் தலைமையில் மதருஸில் நடைபெறுதல்

1940-42 —பெரம்பூர் நெடுஞ்சாலையில் வாடகை வீட்டில் தங்கியிருத்தல்.

1942-43 —குடும்பம் பேட்டைக்கு அனுப்பப்படுதல்.

1944 —தங்கை பாத்திமா பீவி மரணம்.

1945 —மதருஸ் சட்டசபைக்கு, மதருஸ் நகர தனித் தொகுதியிலிருந்து போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்படுதல்.

ஆகஸ்ட் 1945 —மதருஸ் சட்டசபை முஸ்லிம் லீக் கட்சி தலைவராக தேர்ந்தெடுக்கப்படுதல். சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவராக அங்கீகரிக்கப்படுதல்.

,, —மதருஸ் மாகாண முஸ்லிம் லீக் தலைவராக தேர்ந்தெடுக்கப்படுதல்.

1944-1949 —சாந்தோம் நெடுஞ்சாலையில் வாடகைவீட்டில் குடியிருத்தல்.

ஏப்ரல் 1946 —டில்லியில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீக் கன்வென்ஷன் கூட்டத்தில் (மத்திய, மாநிலங்களில் உள்ள முஸ்லிம் லீக் சட்டசபை உறுப்பினர்கள் கூட்டம்) ஒரு சந்தர்ப்பத்தில் காயிதே மில்லத்தை அக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கும்படி காயிதே ஆஜம் ஜின்னா சாஹிப் பணித்தல்.

24-5-1946 —மதருஸ் சட்டசபையின் தொடக்க நாள்.

9-6-1947 —அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுக்குழுவில் கலந்து கொண்டது மௌண்ட் பேட்டன் பிரபு திட்டம் இப்பொதுக் குழுவில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஜுலை 1947 —சென்னையில் ''முஸ்லிம்'' என்ற பெயரில் தமிழ் தினசரியை ஆரம்பித்தல்

15-8-1947 —நாடு சுதந்திரம் பெற்றது. சென்னை கோட்டையில் நடைபெற்ற சுதந்திர தின விழாவில் கலந்து கொள்ளுதல்.

13,14 டிசம்பர் 1947—கராச்சியில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுக் குழுவில் கலந்து கொள்ளுதல், இந்தியாவில் செயல்படவிருக்கும் முஸ்லிம் லீக்கின் கன்வீனராகத் தேர்ந்தெடுக்கப்படுதல்.

30-1-1948 —காந்திஜி, ஆர். எஸ். எஸ். தீவிரவாதி கோட்சேயினல் சுட்டுக் கொல்லப்படுதல்.

1-2-1948 —''முஸ்லிம் நேஷனல் கார்டு'' என்ற தொண்டர் படைக்கு தடை விதிக்கப்படுதல், அத்தொண்டர் படையை காயிதே மில்லத் கலைத்து விடுதல்.

10-3-1948 —மதருஸ் இராஜாஜி ஹாலில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுக்குழு கூட்டத்தில் ''இந்திய யூனியன் முஸ்லிம் லீக்'' என்ற பெயரில் கட்சியை தொடர்ந்து நடத்த முடிவெடுத்தல். அதன் தலைவராக காயிதே மில்லத் தேர்ந்தெடுக்கப்படுதல்.

20-7-1948 —அரசியல் நிர்ணய சபைக்கு தேர்ந்தெடுக்கப்படுதல். 5-11-48 முதல் 26-11-49 வரை அச்சபையில் அங்கம் வகித்தல்.

11-9-1948 —காயிதே ஆஜம் ஜின்னு சாஹிப் மரணம்.

செப்டம்பர் 1948 —ஹைதராபாத் சமஸ்தானத்தின் மீது போலீஸ் நடவடிக்கை எடுக்கப்பட்டு அப்பகுதி இந்தியாவுடன் இணைக்கப்பட்டதை ஆதரித்தும் பாராட்டியும் பேசியது.

1948 —கள்ளிக்கோட்டை அருகில் பெரோக்கில் பாரூக் கல்லூரி ஆரம்பிக்கப் படுதல்.

11-5-1949 —பிரைமரி அமைப்புகளும், ஜில்லா அமைப்புகளும் செயல்பட வேண்டிய விதம் குறித்தும், ஆக்கபூர்வமான செயல்திட்டங்களை அமல் படுத்துவது குறித்தும் காயிதேமில்லத் சுற்றறிக்கை அனுப்புதல்.

7-11-1949 —மதருஸ் மாகாண முஸ்லிம் லீக்கின் முதலாவது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஹாஜி M. ஜமால் முஹம்மது சாகிப் மரணம்.

1949 முதல் 1956 வரை —ராயப்பேட்டையில் புதுப்பேட்டை கார்டன் தெருவில் வாடகை வீட்டில் குடியிருத்தல்.

5-6-1950 —ஆடுதுறையில் மாமனர் M. J. அப்துல்லா சாஹிப் மரணம்.

1950-1951 —சென்னையில் புதுக்கல்லூரி ஆரம்பிக்கப்படுதல்.

21-6-1951 —சென்னை ராயப்பேட்டை இல்லத்தில் வைத்து மகன் மியாக்கான் திருமணம்.

ஜூலை 1951 —திருச்சியில் ஜமால் முஹம்மது கல்லூரி ஆரம்பிக்கப்படுதல்.

1-9-1951 —இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் பொதுக்குழு மதருஸில் கூடி, சப் கமிட்டியினால் தயாரிக்கப்பட்ட கட்சியின் நோக்கங்களையும் சட்ட திட்டங்களையும் அங்கீகரித்தல்.

5-9-1951 —கொழுந்தியாரும்,ஹாஜி மு.ந. முஹம்மது சாஹிபின் மனைவியுமான ஜமால் மரியம் பீவி மரணம்.

27-10-1951 —மதருஸ் சட்டசபையின் கடைசி அலுவல் நாள்.

பிப்ரவரி-1952 —பாரத நாட்டில் முதலாவது பொதுத்தேர்தல் நடைபெறுதல்.

ஏப்ரல் 1952 —மதருஸ் மாகாண சட்டசபையிலிருந்து டில்லி ராஜ்யசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு 1958 மார்ச்சு முடிய அச்சபையில் அங்கம் வகித்தல்.

1952 —நாட்டு விடுதலைக்குப் பின்னர் முதன் முதலாக முஸ்லிம் லீக் போட்டியிட்ட சென்னை மாநகராட்சி தேர்தலில் துறைமுகம் வட்டத்தில் இருந்து டாக்டர் அலீஸுத்தீன் கடும் போட்டியையும் எதிர்த்து வெற்றி வாகை சூடினார்.

25-7-1953 —இராஜாஜி மந்திரி சபைக்கு முஸ்லிம் லீக் ஆதரவளித்து அதைக் காப்பாற்றுதல். ஆந்திர மாநிலத்தின் தலைநகராக கர்னூல் நகர் தற்காலிமாக இருக்க வேண்டும் என்ற தீர்மானம் முஸ்லிம் லீக் உறுப்பினர்களின் ஆதரவினால்தான் நிறைவேறியது.

1-10-1953 —மதருஸ் மாகாணத்திலிருந்து ஆந்திரா மாநிலம் தனியாகப் பிரிந்து செல்லுதல்.

1953-1954 —சென்னை, திருச்சி கல்லூரிகள் வகைக்காக மலேயா, சிங்கப்பூர், பர்மா ஆகிய தூர கிழக்கு நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தல்.

1-8-1954 —குடியாத்தம் உபதேர்தலில் முதலமைச்சர் காமராஜை முஸ்லிம் லீக் ஆதரித்து வெற்றி பெறச் செய்தல்.

1954 —கள்ளிக்கோட்டையில் நடைபெற்ற கேரள மாநில முஸ்லிம் லீக் மாநாட்டிற்கு தலைமை வகித்தல்.

25-4-1955 —குரோம்பேட்டையில் ஐந்து கிரவுண்டு நிலத்தை ரூபாய் இரண்டாயிரத்திற்கு கிரயம் வாங்குதல். [பத்திரம் நம்பர்கள் 638 of 55&639 of 55]

24-12-1955 —மொழிவாரியாக மாகாணங்கள் பிரிக்கப்படுவதை எதிர்த்து ராஜ்ய சபையில் கருத்து தெரிவித்தல்.

9-2-1957 —தாயார் முஹைதீன் பாத்திமா பீவி தங்களது 85வது வயதில் மரணம்.

1957 —அப்துல் மஜீத், ரஸாக்கான் ஆகியோர் முஸ்லிம் லீக்கை விட்டு விலகி ''அகில இந்திய முஸ்லிம் லீக்'' என போட்டியமைப்பு ஒன்றைஏற்படுத்துதல்.

26-5-1957 —குரோம்பேட்டை வீட்டிற்கு குடிபுகுதல்.

11,12 ஜனவரி 1958—திருச்சியில் முஸ்லிம் லீக் ஊழியர் மாநாடு காயிதே மில்லத் தலைமையில் சீரும் சிறப்புமாக நடைபெறுதல்.

4-2-1958 —மூத்த சகோதரர் முஹம்மது அப்துல் லத்தீப் சாஹிப் மரணம்.

4-4-1959 —சென்னை மாநகராட்சிக்கு நடந்த தேர்தலில் துறைமுகம் வட்டத்திலிருந்து ஜனாப் A. K. A. அப்துஸ்ஸமது சாகிப் அவர்கள் முஸ்லிம் லீக் சார்பாக தேர்ந்தெடுக்கப்படுதல்.

1959 ஆரம்பத்தில் —சிராஜுல் மில்லத் அப்துஸ் ஸமது சாகிப் மூலமாக அறிஞர் அண்ணா அறிமுகமாதலும் அவ்வுறவு வலுப்படுதலும்.

17,18 செப்டம்பர் 1960 — மதுரையில் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் மாநாடு சீரும் சிறப்புமாக நடைபெறுதல். புதிதாக உறுப்பினர் சேர்த்து மாநில அமைப்பை உருவாக்கத் தீர்மானித்தல்.

செப்டம்பர் 1960 —தி. மு. க. மேயராக அப்துல் காதர் இருந்தபோது காயிதே மில்லத்துக்கு மாநகராட்சி சார்பாக வரவேற்பளித்தல்.

நவம்பர் கடைசி வாரம் 1961 தயா மன்ஸில் வீட்டில் வைத்து, கலைஞர் கருணாநிதியை காயிதே மில்லத்திற்கு அறிஞர் அண்ணா அறிமுகப்படுத்துதல்.

22-11-1961 —சென்னை மரைக்காயர் லெப்பைத் தெரு 8-ம் நம்பர் கட்டிடம் கட்சிக்காக நீதிமன்ற ஏலம் மூலம் கிரையம் வாங்கப்படுதல்.

11-12-1961 —அதிகாரப் பூர்வமான வார ஏடாக ''உரிமைக் குரல்'' ஆரம்பித்தல்.

மார்ச் 1962 —கேரளா மாநிலம் மஞ்சேரி தொகுதியிலிருந்து லோக்சபாவிற்கு முதல் முறையாக தேர்ந்தெடுக்கப்படுதல்.

27-7-1962 —மனைவி ஜமால் ஹமீதா பீவி மரணம்.

22-8-1962 —டில்லியில் அசோக் மேத்தா விசாரணை கமிட்டி முன்பு''வகுப்பு வாதம்'' என்ற விஷயம் குறித்து சாட்சியம் அளித்தல்.

21-10-1962 —குரோம்பேட்டையில் தொழுகைப் பள்ளி வகைக்கு காயிதே மில்லத் அவர்களால் அடிக்கல் நாட்டப்படுதல்.

அக்டோபர் 1962—இந்தியாவின் வட எல்லையில் செஞ்சீனா தாக்குதல், அதை எதிர்த்து காயிதே மில்லத் கண்டனம் தெரிவித்தல். தமது மகனை போருக்கு அனுப்ப தயாரானதுடன் தங்களது பாராளுமன்ற சம்பளத்திலும் ஒரு பகுதியை யுத்த நிதிக்காக தொடர்ந்து அளித்து வர முடிவு செய்தல்

4-11-1962 —திருச்சி காட்டூரில் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் பொதுக்குழு கூடி புதிய நிர்வாகிகளை தேர்ந்தெடுத்தல். காயிதே மில்லத் மீண்டும் மாநில தலைவராக தேர்ந்தெடுக்கப்படுதல்.

1962 —திராவிட முன்னேற்றக் கழகம் திராவிட நாடு பிரிவினைக் கொள்கையை கைவிடுவதாகக் கூறித் தீர்மானம் நிறைவேற்றுதல்.

மே 1963 —பிரிவினை கோருவது தேசத்துரோகம் என்ற அரசியல் சட்டதிருத்தம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படுதல்.

6—5—1963 —நீதிமன்ற அதிகாரிகளினால்மரைக்காயர் லெப்பை தெருவிலுள்ள 8 ம் நிர் கட்டிடம், முஸ்லிம் லீக் நிர்வாகிகளிடம் ஒப்புவிக்கப்படுதல்.

டிசம்பர் 1963 —சென்னையில் நடைபெற்ற தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் பொதுக்குழு கூட்டத்தில், தி. மு. க. பிரிவினைக் கொள்கையை கைவிட்டதை வரவேற்று தீர்மானம் நிறைவேற்றுதல்.

1962 —திராவிட முன்னேற்றக் கழகமும், முஸ்லிம் லீக்கும் முதல் தடவையாக தேர்தலில் கூட்டு அமைத்து சட்டசபை தேர்தலில் போட்டியிட்டது. இத்தேர்தலில் 50 இடங்களில் தி. மு. க. வெல்லுதல்.

ஜனவரி 1963 —வேலூரில் நடைபெற்ற வட ஆற்காடு மாவட்டம் முஸ்லிம் லீக் மாநாட்டில் காயிதேமில்லத்தோடு அறிஞர் அண்ணாவும் ராஜாஜியும் ஒரே மேடையில் காட்சியளித்தல்.

8-5-1963 —மரைக்காயர் லெப்பைத் தெரு கட்டிடத்திலிருந்து தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் தலைமை செயலகம் செயல்படத் துவங்குதல்.

1963 —சென்னை மாநகராட்சிக்கு நடைபெற்ற தேர்தலில் முஸ்லிம் லீக் சார்பாக 4 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுதல்.

6-4-1964 —கடைசி சகோதரர் ஹாமீத் மியாக்கான் மரணம்.

ஏப்ரல் 1964 —இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் பொதுச்செயலாளராக இப்ராஹீம் சுலைமான் சேட் M. P. தேர்ந்தெடுக்கப்படுதல்.

24-5-1964 —பாரத பிரதமர் பண்டித நேரு மரணம்.

8-9-1964 —லக்னோ நகரில் டாக்டர் செய்யது மஹ்மூத் தலைமையில் கூடிய மஜ்லிஸே-முஷாவிராத் அமைப்புகூட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளுதல். அதை தொடர்ந்து வட மாநிலங்களில் சுற்றுப் பயணம் செய்தல்.

1964 —தமிழ்நாட்டில் 60 நகரசபைகளுக்கு நடைபெற்ற தேர்தலில் முஸ்லிம்லீக் சார்பாக 64 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுதல்.

3-1-1965 —ஹிந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கைது செய்யப்பட்ட மாணவர்களை விடுதலை செய்யும்படியும் இப்பிரச்சினை குறித்து அனைத்துக் கட்சி ஆலோசனைக் கூட்டத்தை கூட்டும் படியும் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரிக்கு தந்தி அனுப்புதல்

ஜனவரி 1965 —திருமதி இந்திரா காந்தி பாரத பிரதமராக பதவியேற்றல்.

20-3-1965 —ஹஜ் கடமையை நிறைவேற்றச் செல்லும் காயிதே மில்லத்திற்கு மதறாஸ் மாவட்ட முஸ்லிம் லீக் சார்பாக மரைக்காயர் லெப்பை தெரு அலுவலகத்தில் வைத்து விருந்துபசாரம்; அறிஞர் அண்ணாவும் கலந்து கொள்ளுதல்.

21-3-65 —மதறாஸில் இருந்து விமானம் மூலமும் ஹஜ் கடமையை நிறைவேற்ற பம்பாய் பயணம்.

27-3-65 —பம்பாயிலிருந்து ஜித்தாவுக்கு விமானப் பயணம்.

6-5-65 —ஹஜ் கடமையை நிறைவேற்றியபின் விமானம் மூலம் பம்பாய் திரும்புதல்.

11-5-65 —ரயில் மூலம் மதறாஸ் வருகை.

செப்டம்பர் 1965 —பாரதத்தின் மீது பாகிஸ்தான் போர் தொடுத்தல். காயிதே மில்லத் கண்டனம் தெரிவித்தல்.

1965-66 —சென்னை மாநகராட்சியில் துணை மேயர் பதவி முஸ்லிம் லீக்குக்கு அளிக்கப்படுதல்.

பிப்ரவரி 1967 —மஞ்சேரி தொகுதியிலிருந்து இரண்டாவது முறையாக லோக்சபாவிற்கு காயிதே மில்லத் தேர்ந்தெடுக்கப்படுதல்.

பிப்ரவரி 1967 —தமிழ்நாடு சட்டசபை தேர்தலில் தி. மு. க-முஸ்லிம் லீக் கூட்டணி வெற்றி பெறுதல். அறிஞர் அண்ணா முதலமைச்சர் ஆகுதல். முஸ்லிம் லீக் சார்பாக மூன்று எம். எல். ஏ. க்கள் தேர்ந்தெடுக்கப்படுதல்.

1967-1968 —சென்னை மாநகராட்சி மேயர் பதவி முஸ்லிம் லீக்கிற்கு அளிக்கப்படுதல்.

ஜனவரி 1968 —மதறாஸில் நடைபெற்ற ''உலகதமிழ் மாநாட்டில்'' கலந்துகொள்ளுதல். அம் மாநாட்டின் ஒரு பகுதியாக 9-1-68 அன்று நடைபெற்ற ''அரபு நாடுகளுடன் தமிழர்களின் தொடர்பு'' என்ற கருத்தரங்கத்திற்கு காயிதே மில்லத் தலைமை வகித்தல்.

26-1-1968 —சென்னை மவுண்ட்ரோட்டில் தலைவரவர்கள் சென்ற கார் விபத்துக் குள்ளாகுதல். இராயப்பேட்டை மருத்துவமனையில் காயிதே மில்லத் 20 நாட்கள் சிகிச்சை பெறுதல்.

1968 —சென்னை மாநகராட்சிக்கு நடைபெற்ற தேர்தலில் முஸ்லிம் லீக் சார்பாக 7 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுதல்

3-2-1969 —அறிஞர்அண்ணா மரணம்.

| | |
|---|---|
| செப்டம்பர் 1969 | —வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டதை முஸ்லிம்லீக் ஆதரித்தல் |
| 1969 | —ஜனாதிபதி தேர்தலில் வி. வி. கிரியை ஆதரித்து முஸ்லிம் லீக் வாக்களித்ததினால் அவர் வெற்றி பெறுதல். |
| 1969 | —தமிழ்நாட்டில் 100 நகராட்சிகளுக்கு நடைபெற்ற தேர்தலில் 114 பேர் முஸ்லிம் லீக் சார்பாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேலப்பாளையம், தென்காசி, வாணியம்பாடி ஆகிய மூன்று நகரசபைகளின் தலைவர் பதவிகளும் முஸ்லிம் லீக்கர்களுக்கு கிடைத்தல். |
| 31-1-1970 | —K. T. M. அஹமது இப்ராஹீம் சாகிப் மரணம். |
| 20-9-1970 | —திரு பாலசுந்தரம் திமுக மேயராக சென்னை மாநகராட்சியில் செயலாற்றிய பொழுது காயிதே மில்லத்திற்கு மாநகராட்சி சார்பாக வரவேற்பு நல்கப்படுதல். |
| 22-10-1970 | —நெல்லை மாவட்டம் குற்றாலத்தில் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் பொதுக்குழு கூடுதல் புதிய மாநில நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்படுதல். காயிதே மில்லத் மீண்டும் தலைவராகுதல். |
| 1970 | —மன்னர் மானிய ஒழிப்பை திருமதி. இந்திரா காந்தி கொண்டு வந்த பொழுது முஸ்லிம் லீக் அதை ஆதரித்தல். |
| 1971 மார்ச் | —மேற்கு வங்காளத்தில் முஸ்லிம் லீக் உடன் கூட்டு சேர்ந்து காங்கிரஸ் போட்டியிட்டதனால் அம்மாநிலத்தில் ஆட்சியைக் கைப்பற்றியது. மார்க்ஸிஸ்ட்கள் தோற்கடிக்கப்பட்டனர். S.S. ரே தலைமையில் அமைக்கப்பட்ட காங்கிரஸ் மந்திரி சபையில் 2 முஸ்லிம் லீக் அமைச்சர்கள் அங்கம் வகித்தல், ஏழு எம்.எல்.ஏக்கள் முஸ்லிம் லீக் சார்பாகத் தேர்ந்தெடுக்கப்படுதல். |
| 1970-71 | —சென்னை மாநகராட்சியில் துணை மேயர் பதவி முஸ்லிம் லீக்குக்கு அளிக்கப்படுதல். |
| 23-3-1971 | —டில்லி பிரதேச முஸ்லிம் லீக் அமைப்பாளராக ஹக்கீம் மஹ்மூது அஹமது கான் நியமனம் செய்யப்பட்டார். (காங்கிரஸ் மகாசபையின் தலைவராகப் பணியாற்றிய காலஞ்சென்ற ஹக்கீம் அஜ்மல்கான் அவர்களது பேரர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது.) |
| 8-1-1971 | —தலைவரவர்களின் உற்ற நேசரும் சஹாவும் ஆன காயல்பட்டணம் M.K.S. முஹைதீன் இப்ராஹீம் சாகிபு (B. A. காக்கா) மரணம் |
| பிப்ரவரி 1971 | —மஞ்சேரி தொகுதியிலிருந்து 3 வது முறையாக லோக் சபாவிற்கு தேர்ந்தெடுக்கப்படுதல். |
| 10-8-1971 | —லோக்சபையில் காயிதே மில்லத் கடைசியாக பேசிய நாள். இந்திய-சோவியத் நட்புறவு உடன்படிக்கையை வாழ்த்திப் பேசினார்கள். |
| 12-11-71 | —தலைவரவர்கள் கலந்து கொண்ட கடைசி பொது நிகழ்ச்சி: சென்னை வியாசர்பாடி பர்மா முஸ்லிம் பள்ளி வாசல் & மதரஸாவுக்கு அடிக்கல் நாட்டுதல். இன்று அப்பள்ளிவாசல் ''காயிதே மில்லத் ஜும்மா பள்ளி'' என அழைக்கப்படுகிறது. |
| ,, | —அன்று மாலையே விமானம் மூலம் டில்லி பயணம். |
| 12-11-71 (நடுநிசி) | டில்லியில் வைத்து நோய்வாய்ப்பட்டு விலிங்டன் மருத்துவமனையில் 13ம் தேதி காலையில் அனுமதிக்கப்படுதல். |
| 12-12-1971 | —பேத்தி ஹிபத்துல் கரீம் பாத்திமாவின் திருமணம். |
| டிசம்பர் 1971 | —பங்களாதேஷ் வகைக்காக இந்திய அரசாங்கம் மேற்கொண்ட யுத்தத்திற்கு ஆதரவளித்தல். |
| ஜனவரி 1972 | —டில்லி மெட்ரோபாலிட்டன் சபைக்கு நடைபெற்ற தேர்தலில் முஸ்லிம் லீக் சார்பாக போட்டியிட்ட டாக்டர் அஹ்மது முஹம்மது வெற்றி பெறுதல். |
| 5-4-1972 (0. 55 a.m) | —இறைவனின் நாட்டப்படி அவனது அளவில் சென்றடைந்த நாள். |

# தலைவரின் நினைவைப் பசுமையாக்கிக் கொண்டிருக்கும் நடைமுறைத் திட்டங்களும் ஞாபகார்த்தங்களும்

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களது மறைவுக்குப் பின்னர், அன்னாரது நினைவை நிரந்தரமாக்கும் வகையில் தமிழ்நாடு அரசு பல நடவடிக்கைகளை கடந்த பல ஆண்டுகளாக எடுத்து வந்துள்ளது. மற்றும் பல தனிப்பட்ட ஸ்தாபனங்களும், அநேக நிறுவனங்களை தலைவரது பெயரில் அமைத்துள்ளன, அவற்றையெல்லாம் இச்சந்தர்ப்பத்தில் நினைவு கூருவது பொருத்தமான ஒன்றாக இருக்கும் என்பதில் சந்தேகமேயில்லை.

(1) கலைஞர் கருணாநிதி ஆட்சிக் காலத்தில் சென்னை அண்ணா சாலை கன்னிமாரா ஹோட்டல் சந்திப்பில் இயங்கி வந்த அரசு பெண்கள் கல்லூரிக்கு, 5-6-74 முதல் ''காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரி'' எனப் பெயர் சூட்டப்பட்டது.

(2) செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்குப் பின்புறம் அண்ணா சாலையை நோக்கிச் செல்லும் பாதையின் ஆரம்பத்தில் ஒரு பாலம் இருக்கிறது. கி. பி. 1715-ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களால் கட்டப்பட்ட இப்பாலம் ''வாலாஜா பாலம்'' என அழைக்கப்பட்டு வந்தது. கலைஞர் கருணாநிதி அவர்கள் தமிழக முதல்வராக இருந்தபொழுது 1974 ஆம் ஆண்டில் இப்பாலத்திற்கு ''காயிதே மில்லத் பாலம்'' எனப் பெயர் சூட்டப்பட்டது.

[24-8-74- ஆம் தேதியிட்ட P.W.D. துறை ஆணை நிர் 1213.]

(3) மதராஸ் நகரை அலுவலகமாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட ''முஸ்லிம் கல்வி, கலாச்சார டிரஸ்ட்'' சென்னை மேடவாக்கத்தில் ''காயிதே மில்லத் (ஆண்கள்) கல்லூரி'' ஒன்றினை 1975 ஆம் ஆண்டு முதல் நடத்தி வருகிறது. இக்கல்லூரிக்கென டாக்டர் கலைஞர் அரசு 40ஏக்கர் நிலத்தை வழங்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

(4) வாலாஜா சாலையிலிருந்து டாக்டர் பெஸன்ட் ரோடு வரையிலான நெடுஞ்சாலை ''திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை'' என அழைக்கப்பட்டு வந்தது. கவர்னர் ஆட்சிக் காலத்தின் போது மதராஸ் மாநகராட்சி ஆணையாளர் 22-1-1976ஆம் தேதி இச்சாலையின் பெயரை ''காயிதே மில்லத் சாலை'' என இனி அழைக்க வேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றினார். அத்தீர்மானத்திற்கு தமிழ்நாடு உள்ளாட்சித் துறை 29-1-76ஆம் தேதி G.O. Ms No. 157 ஆம் நம்பர் ஆணைப்படி அங்கீகாரம் அளித்தது. அன்று முதல் ''காயிதே மில்லத் சாலை'' என இது அழைக்கப்பட்டு வருகிறது.

(5) புரட்சித் தலைவர் M. G. R. அவர்கள் மாநில முதலமைச்சராக இருந்த பொழுது 1977 ஆம் ஆண்டு முதல் காயிதே மில்லத் பிறந்த நாளான ஜூன் 5-ஆம் தேதியை ''அரசு விழாவாக''க் கொண்டாட வேண்டுமென உத்தரவு பிறப்பித்தார். அவ்வாறே ஆண்டுதோறும் இன்றளவும் அந்த நடைமுறை பின்பற்றப்பட்டு வருகிறது.

(6) M. G. R. அவர்கள் முதலமைச்சராக இருந்தபொழுது, ஐந்தாவது வகுப்பிற்கான தமிழ் பாட நூலில் காயிதே மில்லத் அவர்களது வாழ்க்கை வரலாறும் ஒரு பாடமாக...1983ம்ஆம் ஆண்டு ஜூன் முதல் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

(7) ''காயிதே மில்லத்'' என்ற பெயரில் மாத இதழ் ஒன்று கா. மு. ஆதத்தினால் 1978 ஜூலை முதல் ஆரம்பிக்கப்பட்டு நடந்துவருகிறது.

(8) பாளையங்கோட்டை முஸ்லிம் அனாதை நிலையம் சார்பாக நடத்தப்படும் தொழிற்பயிற்சி நிலையம்''முஹம்மது இஸ்மாயீல் தொழிற்பயிற்சி நிலையம்'' எனப் பெயர் சூட்டப்பட்டு 1979ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் முதல் இயங்கி வருகிறது.

(9) M.G.R. அவர்கள் முதலமைச்சராக இருந்த சமயம், தமிழ்நாடு சட்டப் பேரவையில் காயிதே மில்லத் அவர்களின் உருவப்படம் 9-8-1980 அன்று திறந்து வைக்கப்பட்டது.

(10) M.G.R. அவர்கள் முதலமைச்சராக இருந்தபொழுது காயிதே மில்லத் பெயரால் ஒரு மாவட்டம் அமைக்கப்படும் என தமிழக சட்டப் பேரவையில் 1986-1987 ஆம் ஆண்டு வாக்கில் அறிவிப்புச் செய்தார்.

(11) கோவை சர்வ கலாசாலையில் 1987 ஆம் ஆண்டில் ஜனுபா மரியமுல் ஆசியா என்ற முதுகலைப் பட்டதாரி, காயிதே மில்லத் அவர்கள் குறித்து ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றினை சமர்ப் பித்து "M.Phil" என்ற பட்டத்தினைப் பெற்ருர்.

மதுரை சர்வ கலாசாலையில் 1989-ஆம் ஆண்டில் காயிதே மில்லத் குறித்து ஆராய்ச்சித் தொகுப்பினை சமர்ப்பித்து பேராசிரியர் K. P. பீர் முஹம்மது (தலைவர், வரலாற்றுத் துறை, சதக்கத்துல்லா அப்பா கல்லூரி, பாளையங் கோட்டை) "M.Phil" முதுகலைப் பட்டத்தினைப் பெற்ருர். மேலும், ''காயிதே மில்லத் பாராளு மன்றத்தினராகவும் தேசீயவாதியாகவும் ஆற்றிய பங்கும் தொண்டுகளும்'' என்ற தலைப்பில் "Ph.D" பட்டம் பெறவும் தமது பெயரைப் பதிவு செய்து கட்டுரை தயாரித்துக் கொண்டிருக்கிருர். இன்ஷா அல்லாஹ், 1991ம் ஆண்டு வாக்கில் அந்த ஆராய்ச்சிப் பட்டத்தை அவர் பெறலாம்.

(12) டாக்டர் கலைஞர் தமிழக முதல்வராக மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டதும் 1989ஆம் ஆண்டு ஜூன் மாதம் 11ஆம் தேதி முதல், திண்டுக்கல்லைத் தலைநகராகக் கொண்ட ''காயிதே மில்லத் மாவட்டம்'' செயல்படத் துவங்கியது. இதற்கான அறிவிப்பை தமிழக சட்டமன்றத்தில் ... 25-3-1989 அன்றே அவர் வெளியிட்டார்.

(13) திருச்சி நகர் பாலக்கரை பகுதியிலுள்ள பிரதான சாலைக்கு காயிதே மில்லத்தின் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

(14) காயிதே மில்லத் மேற் கொண்டிருந்த சமுதாய நலப்பணித் திட்டங்களை' தொடர்ந்து நடத்தும் பொருட்டும் அவர்களது நினைவை பசுமையாக வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணத்துடனும் ''காயிதே மில்லத் அகாடமி'' என்ற பெயரில் ஒரு தொண்டு ஸ்தாபனம் 1990 பிப்ரவரி முதல் செயல்படத் துவங்கியுள்ளது.

(15) நகராட்சி அலுவலகங்கள் பஞ்சாயத்து அலுவலகங்கள் பலவற்றிலும் காயிதே மில்லத்தின் போட்டோக்கள் மாட்டப்பட்டுள்ளன. பூங்காக் கள், பள்ளிக்கூட கட்டிடங்கள், புறநகர்கள் போன்றவற்றிற்கும் பல ஊராட்சி மன்றங்களினல் காயிதே மில்லத்தின் பெயர் சூட்டப்பட்டிருக் கின்றன. லால்பேட்டை பஞ்சாயத்து அலுவலகத் திற்கே''காயிதே மில்லத் கட்டிடம்''என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. குரோம்பேட்டையிலும் வியாசர்பாடியிலும் மற்றும் பல ஊர்களிலும் ஐங் கால தொழுகை பள்ளிவாசல்கள் சிலவற்றிற்கும் காயிதே மில்லத்தின் பெயர் சூட்டப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. காயிதே மில்லத் பெயரால் ஊருக்கு ஊர் நற்பணி மன்றங்களும் சமூக சேவை சங்கங்களும் தமிழ்நாட்டில் மட்டு மல்லாது அண்டை மாநிலங்களிலும் வெற்றிகர மாகச் செயல்பட்டு வருகின்றன என்பதும் பெரு மிதம் தரும் செய்தியாகும்.

(16) ''காயிதே மில்லத் நற்பணி மன்றம்'' என்ற பெயரில், மாநிலம் தழுவிய அளவில், ஒரு சமூக சேவா அமைப்பினே, ஜனுப் கா. மு. ஆதம் நடத்தி வருகிருர். மதருஸை தலைமையகமாகக் கொண்ட அந்த தொண்டு நிறுவனத்திற்கு 92 கிளைகள் தமிழ்நாட்டில் பரவலாக இருந்து வருகின்றது.

---

## மன நோயாளிகளின் கூற்று

''சிறுபான்மையினர் பிரச்சனை என்பது உலகளாவியதொரு விவகாரம். எந்த நாட்டை எடுத்துக் கொண்டாலும், ஏதாவது ஒரு வகையில் சிறுபான்மையினர் என முத்திரை இடப்பட்டு ஒரு கூட்டம் இருக்கத்தான் செய்யும். மதம், மொழி, இனம், நாகரிகம், கலாச்சாரம் பொருளா தார ஏற்றத் தாழ்வுகள் என ஏதாவது ஒரு அம்சத்தில் மக்களுக்கிடையில் வித்தியாசங்கள், வேறு பாடுகள் இல்லாமல் இருக்காது; இருக்க முடியாது.

ஒரு நாட்டில் சிறுபான்மையினரே இல்லாது பூண்டோடு ஒழித்து விடுவோம் எனக் குரல் எழுப்புவது சிறுபிள்ளைத்தனம்; பைத்தியக்காரத் தனம்; மனநோயால் பாதிக்கப்பட்டவர்கள்தான் இப்படி சிந்திப்பார்கள்.

இதற்கு ஓர் உதாரணத்தைக் கூற விரும்புகிறேன், உலக வெளியில் சூரிய மண்டலம் இருக் கிறது. இந்த சூரிய மண்டலத்தில், சந்திரன், செவ்வாய், புதன், நெப்டியூன், சனி, வியாழன் என பல கோள்கள் இருக்கின்றன; ஒவ்வொன்றும் அவரவர்களுக்குள்ள எல்லைக்குள் நின்று சதா இயங்கிக் கொண்டிருக்கின்றன. எல்லா கிரகங்களும் கோள்களும் ஏக காலத்தில் செயல்படுவதைத்தான் சூரிய மண்டலம் என அழைக்கிறோம்.

சூரிய மண்டலத்தில் இருந்து சந்திரனைப் பிரித்து வேருக்கி விடுவேன் என யாராவது கூறினல்' நாம் என்ன சொல்வோம்? பைத்தியக்காரத்தனமான பேச்சு என அலட்சியமாகப் பார்ப்போம். அதே போன்றுதான், இந்நாட்டில் சிறுபான்மையினரே இல்லாது ஒழித்துக் கட்டி விடுவோம் என்ற கூப்பாடும்.'' பீஹார் தலைநகர் பாட்னவில் 21-1-70 அன்று நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் காயிதே மில்லத் கூறிய கருத்து.

நன்றி:–G.M. பனுத்வாலா எழுதிய ''சுதந்திரத்திற்குப் பின்னர் முஸ்லீம் லீக் என்ற நூலில் இருந்து

# வெற்றியின் இரகசியம்

அல்ஹாஜ் ஸையது அப்துர் ரஹ்மான் பாபக்கி தங்ஙள்

காயிதே மில்லத் அவர்கள் இந்தியாவிலேயே ஒரு ஒப்பற்ற தலைவராக—ஈடிணையற்ற தலைவராக-விளங்குவதற்கு காரணம் தங்களது பெயருக்கேற்ற பண்பு அவர்களிடத்திலே பொருந்தியிருப்பதுதான். உண்மையும், உறுதியும் அவர்களிடத்திலே நிறைந்திருப்பதினால் தான், இந்தியாவிலுள்ள இஸ்லாமிய சமுதாயம் அனைத்தும் அவர்களுடைய சொல்லுக்கு ஆடிக் கொண்டிருந்தது. அல்லாஹ்வும் தன்னுடைய அருளை அவர்கள் பால் சுரந்து கொண்டிருக்கிறான்.

அல்லாஹ் ஒருவனைத் தவிர, அவர்கள் உலகில் வேறு யாருக்குமே பயப்படுவது கிடையாது. அந்த உறுதியும் திட மனமும்தான், அவர்களைக் கண்டதும் எவ்வளவு பெரிய இந்தியத் தலைவரையும், அஞ்சச் செய்தது. அவர்களிடத்திலே சொல் வேறு, செயல்வேறு என்பது எந்தக் காலத்திலுமே இருந்ததில்லை. சொன்னதைச் செய்தே தீருவார்கள். அந்த சொல்லிலே உண்மையும், உறுதியும், நேர்மையும், இறை நம்பிக்கையும் இருப்பதால் தான் இறைவன் அவர்களுக்கு வெற்றியைக் கொடுத்தான். இந்தியாவிலுள்ள முஸ்லிம் சமுதாயத்தைக் காப்பாற்ற வேண்டும். அதற்குரிய உரிமைகளைப் பெற்றே தீர வேண்டும் என்பதற்காக அல்லும் பகலும் அவர்கள் உழைப்பதனால் தான் இஸ்லாமிய சமுதாயம் அனைத்தும் அவர்கள் பின்னே திரண்டு நின்றது.

''ஆண்டவன் ஒருவனைத் தவிர வேறு யாருக்குமே நாம் பயப்படக் கூடாது. உண்மை மூமினாக இருந்தோமேயானால் நிச்சயம் நமக்கு வெற்றியுண்டு. இறைவனுடைய அருளும் நம் பக்கம் இருக்கும்'' என்றுதான் அவர்கள் அடிக்கடி சொல்வார்கள். அப்படியே நடப்பார்கள்.

கேரளாவிலே முஸ்லிம்கள் சிறுபான்மையினர் தான். ஐந்தாறு இடங்களில்தான் முஸ்லிம்கள் சேகரமாக இருக்கின்றனர். மற்ற நூற்றி ஐம்பதுக்கு மேற்பட்ட இடங்களிலும் முஸ்லிம்கள் மிக மிகக் குறைவாக இருக்கின்றனர், என்றாலும் அவர்கள் அனைவரும் ஒற்றுமையோடு, தலைவருக்குக் கட்டுப்பட்டு நடப்பதனால் தான் இன்று அரசாங்கம் அவர்கள் கையை எதிர்பார்க்கிறது. முஸ்லிம் லீக் என்றதும், இந்தியாவின் ஆட்சியாளர்களுக்கெல்லாம் மனதில் பெரும் பீதி கிளம்புகிறது. காரணம் நாங்கள் அனைவரும் காயிதே மில்லத் என்ன சொல்கிறார்களோ அதை உடனே செய்வோம். எதிர்த்துப் பேசுவது என்பதோ, மறுத்துப் பேசுவது என்பதோ கிடையவே கிடையாது. அவர்கள் என்ன சொன்னாலும் அதற்கு முற்றிலும் கட்டுப்படுகிறோம்.

அதுவே எங்களின் வெற்றி வழி! அதுவே எங்களின் வெற்றியின் இரகசியம்!

x x x

[1963-ம் ஆண்டில் பர்மா தலைநகர் ரங்கூனில் பாபக்கிதங்ஙள் ஆற்றிய உரையின் ஒரு பகுதி: ரங்கூன் காயிதே மில்லத் மன்றம் (பர்ம்) 1963ல் வெளியிட்ட காயிதே மில்லத் மலரில் இருந்து எடுக்கப்பட்டது.]

கட்சிப் பணியில் ஈடுபடும் கேரளத்து முஸ்லிம் லீகர்களுக்கிடையே எப்போதாவது கருத்து வேறுபாடுகள் எழுவது உண்டு. கருத்துக்களை விவாதித்து ஒத்துப் போக முடியாத தருணங்களில், தனது கருத்தே சிறந்தது என்று யாரும் வற்புறுத்துவதில்லை, வாதிடுவதில்லை. இந்த பிரச்சினையில் காயிதே மில்லத் அவர்களின் அபிப்பிராயம் என்னவென்று அறிந்து நமது எண்ணங்களுக்கு மாறாகத் தலைவர் அவர்கள் எது கூறினாலும் நமது சொந்தக் கருத்துக்களைக் குர்பானீ கொடுத்து விட்டு தலைவரின் கருத்தை ஏற்போம்

என முடிவெடுத்து, தலைவரைத் தந்தி மூலமாக வரவழைத்து தெளிவு பெறுவோம். அவர்கள் காட்டும் தெளிவில் ஒளி பெறுவோம்; வழி தெரிவோம்!.

இவ்வாறு தலைவர் காயிதே மில்லத் அவர்களின் வாய் மொழிக்கும் விரல் அசைவுக்கும் ஏற்ப செயல்பட்டு வருவதால்தான் கேரள முஸ்லிம் லீக் புகழ்க் கொடி நாட்டி வருகிறது. புதிய வரலாறு படைத்து வருகிறது.

கேரளத்தில் முஸ்லிம் லீக்குக்கு இவ்வளவு செல்வாக்கு எப்படி வந்ததென்று சிலர் ஆராய்கிறார்கள். இந்த வெற்றியின் இரகசியம் என்னவாக இருக்கும் என அதிசயப்படுகிறார்கள்.

நாங்கள் ஒற்றுமையாக இருக்கிறோம். முஸ்லிம் லீகின் அணியிலே அதன் கொடியின் நிழலிலே—கட்டுப்பாடாகத் திரண்டு நிற்கிறோம். தலைவர் காயிதே மில்லத் அவர்களின் ஆணைக்கு எங்களை அர்ப்பணித்திருக்கிறோம்.

இந்த ஐக்கியம் தான் இன்று கேரளத்தில் முஸ்லிம் லீகின் சார்பாக 14 சட்ட மன்ற உறுப்பினர்களைத் தந்திருக்கிறது. அவர்களிலே இருவர் அமைச்சர்களாக—மாசுமருவற்றவர்களாக—மாற்றாரால் குற்றம் குறை காண முடியாதவர்களாகத் திகழ்கிறார்கள். நகர மன்றத் தேர்தலில், 65 இடங்களுக்குப் போட்டியிட்ட முஸ்லிம் லீகர்கள் 61 இடங்களில் மகத்தான பெரும் வெற்றியும் பெற்றிருக்கிறார்கள்.

இந்த ஒற்றுமையை மகத்தான ஐக்கியத்தை தலைவர் காயிதே மில்லத்தின் வழி காட்டுதலை தமிழகத்தில் இருப்போரும் கடைப் பிடித்து வெற்றியாளர்களாகத் திகழுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு. எல்லாம் வல்ல அல்லாஹ் உங்களைச் சிறப்பாக்கி வைப்பான்.

[ஜனாப் P. N. I. அபுதாலிபையும் M.A. அக்பரையும் ஆசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்ட ''அல்ஹாஜ் காயிதே மில்லத் பிறந்த நாள் விழாப் பெருமலர்'' (1974) இருந்து எடுக்கப் பட்டது.]

## காலம் தலைவர்களைத் தோற்றுவிக்கிறது!

**கலைமாமணி கா. மு. ஷரீப்,** மதராஸ்

காலம் தலைவர்களை தோற்றுவிக்கிறது; அல்லது காலத்தைப் பயன்படுத்தித் தலைவர்கள் தோன்றுகிறார்கள். 1947-க்கு பிறகு இந்திய முஸ்லிம்களை வழி நடத்தி செல்லக் கூடிய தலைவராக ''காயிதேமில்லத்'' உருவாகி விட்டார்கள். இந்திய முஸ்லிம் சமுதாயத்திற்கு இதற்கு முன்பும் பல தலைவர்கள் இருந்திருக்கிறார்கள்; சீரும் சிறப்புடன் அவர்கள் செயலாற்றியும் இருக்கிறார்கள், இருந்த போதிலும், காயிதே மில்லத்திற்கு இன்று அவர்களது பெயருக்குப் பின்னால் ''ரஹ்மத்துல்லாஹி அலைஹி'' என்ற அடைமொழியிட்டு நமது மக்கள் அழைக்கிறார்கள். இது போன்று முந்திய தலைவர்களை அழைக்கவில்லை. இது ஒரு சிறப்பாகும். இஸ்லாமிய நெறியிலிருந்து பிறழாமலும், நாயகத் திருமேனி [ஸல்] அவர்களது அடியொற்றியும், இத்தலைவர் வாழ்ந்ததினால் தான் இச் சிறப்புப் பட்டத்தை மக்கள் இவர்களுக்குக் கொடுத்துள்ளார்கள் என்பது சொல்லாமலேயே விளங்கும்.



# தெற்கில் தோன்றிய ஒளி வடக்கில் பிரகாசித்தது

**குலாம் முஹம்மது பனத்வாலா, M. P.**
(பொதுச் செயலாளர், இந்திய யூனியன் முஸ்லிம் லீக்)

''சுதந்திரத்திற்குப் பின்னர் முஸ்லிம் லீக்'' (முஸ்லிம் லீக் ஆஸாதிகே பாத்) என்ற தலைப்பில் 1971-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில், ஜனாப் ஜி. எம். பனத்வாலா அவர்கள் உர்து மொழியில் நூல் ஒன்றை எழுதி வெளியிட்டார். 123 பக்கங்களைக் கொண்ட அந் நூல், எட்டு அத்தியாயங்களையும் முஸ்லிம் லீகின் சட்ட திட்டங்களையும் தேர்தல் விஞ்ஞா பனத்தையும் கொண்டதாகும். அதன் விலை ரூ. 7-50. அந்நூலில் இருந்து பல தகவல்களையும் திரட்டி சுருக்கமாக இங்கு தரப்பட்டுள்ளது'']

நாடு விடுதலை பெற்றதும், முஸ்லிம் லீக் கட்சியின் எதிர்காலம் ஒரு கேள்விக் குறியாக அமைந்து விட்டது. சுதந்திரம் பெற்ற பாரதத்தில் இக் கட்சி நீடித்திருக்கலாமா என்ற பிரச்சினை, முஸ்லிம் லீகை சதா சாடி வந்த எதிர்தரப்பாளர்களினால், பொதுமக்கள் முன்பு பூதாகாரமான அளவில் எடுத்து வைக்கப்பட்டது, விவாதிக்கப்படலாயிற்று.

அன்றைய மதராஸ் ராஜதானியில் வாழ்ந்தவர்கள் முஸ்லிம் லீக் குறித்துத் தெளிவான கருத்துடையவர்களாகவே இருந்தார்கள்; இந்தியாவில் இக் கட்சி தொடர்ந்து செயலாற்ற வேண்டுமென்பதில் அங்குள்ள சிறுபான்மையினருக்கு சந்தேகம் எழவில்லை. ஆனால் துரதிருஷ்டவசமாக நாட்டின் வடபகுதிகளில் வாழ்ந்த முஸ்லிம்களின் நிலைமை வேறுவிதமாக இருந்தது. வகுப்புக் கலவரங்களினாலும்அதிரடி நடவடிக்கைகளினாலும்,லட்சக் கணக்கான அகதிகளின் வருகையினாலும் அச்சுறுத்தப்பட்ட வட இந்திய முஸ்லிம்கள், ஆட்சியாளர்களின் சொற்படி முஸ்லிம் லீகைக் கலைத்து விட்டாலாவது தங்களது எதிர்காலம் நல்லபடியாக அமைந்து விடாதா என எண்ணி, தாய்ச்சபையை பல மாநிலங்களிலும் கலைத்து விட்டனர். முஸ்லிம் லீகிற்கும் தங்களுக்கும் சம்பந்தமில்லை, தொடர்பில்லை என பகிரங்கப் படுத்திக் கொண்டனர். ஆனால், அன்றைய பம்பாய் மாகாண முஸ்லிம் லீக் ஸ்தம்பித்து இருந்தாலும் அது கலைக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

யார் என்னதான் சொன்னாலும், அச்சுறுத்தினாலும், இந் நாட்டில் முஸ்லிம் லீக் என்ற பெயரால் ஓர் அரசியல் கட்சி இயங்கிக் கொண்டுதான் இருக்கும் என மதராஸிலிருந்து காயிதே மில்லத் வீர முழக்கம் செய்து கொண்டிருந்தார்கள். 1947-ம் ஆண்டு டிசம்பரில் கராச்சி நகரில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸில் கூட்டத்தில் அவர்களும் அவர்களது தோழர்களும் கலந்து கொண்டார்கள். பாரதத்திலுள்ள முஸ்லிம் லீகின் கன்வீனர் பொறுப்பைத் தாங்கிய வண்ணம் காயிதே மில்லத் அவர்கள் தாயகம் திரும்பினார்கள்.

மலை அசைந்தாலும் நிலைகுலையாத காயிதே மில்லத்தின் துணிச்சலையும் தைரியத்தையும் கண்டு இந்திய அரசாங்கம் பலப் பல சூழ்ச்சிகளிலும் மறைமுக நடவடிக்கைகளிலும் இறங்கியது. இந் நாட்டில் முஸ்லிம் லீக் இருக்க வேண்டுமென ஒரு சிலர்கூறுவது, ''அரசியல் ஆதாயம்'' கருதியே என்ற பொய்ப் பிரச்சாரத்தை ஆட்சியாளர்கள் அவிழ்த்து விட்டார்கள். அன்றையதினம் ''அகில இந்தியமுஸ்லிம் லீகிற்கு'' ஹபீப் வங்கியில் நாற்பது லட்ச ரூபாய் ரொக்கமாக இருப்பு இருந்தது. இந்தியாவிலுள்ள முஸ்லிம் லீகிற்கு அந் நிதியில் இருந்து 17 லட்ச ரூபாயை அளிக்க பாகிஸ்தான் தலைவர்கள் சம்மதம் தெரிவித்திருந்தார்கள். அத் தொகையைப் பெறுவதற்காகத்தான் இந் நாட்டிலும் முஸ்லிம் லீக் அமைப்பதில் சிலர் தீவிரம் காட்டுகிறார்கள் என குற்றஞ் சாட்டப் பட்டது. சர்தார் படேல் அவர்கள் அரசியல் நிர்ணய சபையிலேயே இப் பேச்சை பகிரங்கமாகக் கூறி குற்றஞ் சாட்டினார்.

அச்சமயம் டில்லியில் கவர்னர் ஜெனரலாகப் பதவி வகித்த திரு ராஜகோபாலாச்சாரி வைஸ்

ராய் மாளிகைக்கு காயிதேமில்லத்தை அழைத்து உரையாடிக் கொண்டிருக்கும் சாக்கில், பேச்சு வாக்கிலேயே, கராச்சியிலிருந்து முஸ்லிம் லீகிற்கு வர வேண்டிய பணத்தைப் பெருவதற்கு எனது உதவிகள் ஏதேனும் தேவைப்படுமா என்று பிரஸ்தாபித்தார்!

முஸ்லிம் லீகிற்காக எந்த வெளிநாட்டில் இருந்தும் ஒரு நயாபைஸாக்கூட வாங்கும் உத்தேசம் அக்கட்சிக்குக் கிடையாது என காயிதே மில்லத் கவர்னர் ஜெனரலிடம் முகத்தில் அறைந்தாற் போல பதிலளித்துவிட்டார்கள்.

அத்துடன் ஆட்சியாளர்கள் நிற்கவில்லை. முன்னாள் வங்க முதலமைச்சர் சுஹ்ரவர்த்தியைத் தூண்டிவிட்டு கல்கத்தா நகரில் 1947 இறுதியில் ஒரு கன்வென்ஷனைக் கூட்டச்செய்தனர். முஸ்லிம் லீக் கலைக்கப்படுகிறது என்ற தீர்மானத்தை நிறைவேற்றத்தான் அக்கன்வென்ஷன் கூட்டப்பட்டது. ஆனால் காயிதே மில்லத்தும் அவரது தோழர்களும் அக்கூட்டத்திலும் கலந்துகொண்டு, முஸ்லிம் லீகை கலைக்கும் அதிகாரம் இக்கன்வென்ஷனுக்குக் கிடையாது என்றும் தாய்ச்சபை குறித்து யாதொரு முடிவு எடுக்க வேண்டுமென்றாலும் அதை அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸில் தான் செய்ய முடியும் என்றும் கருத்துத் தெரிவித்தார்கள். அக்கூட்டத்திலுள்ள பலரும் இக்கருத்தை ஆதரித்தார்கள். யாதொரு முடிவும் எடுக்கப்படாமலேயே கல்கத்தா கன்வென்ஷன் கலைந்தது.

அடுத்து, அரசியல் நிர்ணய சபையிலுள்ள முஸ்லிம் உறுப்பினர்கள் கூட்டத்தை மீரட்டைச் சேர்ந்த நவாப் முஹம்மது இஸ்மாயில்கான் தலைமையில் கூட்ட, அரசு தூண்டுதலாக இருந்தது. டில்லியில் நவாப் இஸ்மாயில் கான் சாகிப் தலைமையில் நடைபெற்ற அ. நி. முஸ்லிம் உறுப்பினர்கள் கூட்டத்திலும் காயிதே மில்லத் கலந்து கொண்டார்கள். மதறாஸ் மாகாணத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு முஸ்லிம் உறுப்பினர்கள் நீங்கலாக மற்றவர்கள் எல்லாம் நவாப் இஸ்மாயில்கான் கூற்றை ஆதரிக்கலானார்கள்! முஸ்லிம் லீக் கலைக்கப்படுகிறது என அந்த உறுப்பினர்கள் தீர்மானம் நிறைவேற்றிக் கொண்டார்கள். காயிதே மில்லத் அவர்கள் அக்கூட்டத்தில் இருந்து வெளியேறி விட்டார்கள். அரசின் போக்கை அனுசரித்து நடந்து கொண்டதற்காக, அலிகர் முஸ்லிம் சர்வ கலாசாலையின் துணைவேந்தர் பதவி நவாப் இஸ்மாயில் கானுக்கு அளிக்கப்பட்டது.

1948ம் ஆண்டு ஜனவரி மாதம் இறுதியில் கவர்னர் ஜெனரல் மவுண்ட்பேட்டன் பிரபு மதராஸுக்குச் சென்றார். காயிதே மில்லத்தைக் கூப்பிடவிட்டு கவர்னர் மாளிகையில் வைத்துப் பேசினார். முஸ்லிம்லீக்கை இந்நாட்டில் தொடர்ந்து நடத்துவதை பாரதப் பிரதமர் பண்டித நெஹ்ரூ விரும்பவில்லை என்ற தகவலை, தலைவரவர்களிடம் வைஸ்ராய் தெரிவித்தார். தாய்ச்சபையை கலைக்கும் அதிகாரம் தமக்கு இல்லை என்பதை காயிதே மில்லத் விளக்கிக் கூறினார்கள். டில்லி சென்று பண்டித நெஹ்ரூவுடன் இது குறித்து விவாதிக்குமாறு காயிதே மில்லத்தை மவுண்ட்பேட்டன் பிரபு கேட்டுக் கொண்டார்.

அதன் பிரகாரம் காயிதே மில்லத் 1948 பிப்ரவரி மாத இறுதியில் டில்லி சென்று பாரதப் பிரதமரைச் சந்தித்தார்கள். உரையாடலின் போது; மத்திய அமைச்சர் ரபீ அஹமது கித்வாயும் உடன் இருந்தார். சுமார் ஒரு மணி நேரம் விவாதம் தொடர்ந்தது. இந்நாட்டில் முஸ்லிம் லீக் தொடர்ந்து இயங்க வேண்டியதன் அவசியத்தையும் அதற்கான காரண காரியங்களையும்காயிதேமில்லத் எடுத்து விளக்கினார்கள். பண்டித நெஹ்ரூவின் சந்தேகங்களுக்கெல்லாம் பதில் சொன்னார்கள். இப் பிரச்சினை குறித்துத் தாம் ஆழமாக இன்னும் சிந்திக்கவில்லையென்றும் மற்றொரு சமயம் பேசிக் கொள்ளலாம் என்றும் பாரதப் பிரதமர் கூறினார்.

ஒரு முடிவுக்கும் வராமலேயே இச்சந்திப்பு பூர்த்தி பெற்றது. அதன்பிறகு இப்பிரச்சினை குறித்துப்பேச காயிதே மில்லத் அழைக்கப்படவேயில்லை.

கராச்சி கவுன்ஸில் தீர்மானத்திற்கு ஒப்ப, இந்தியாவில் வாழும் அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுக்குழு உறுப்பினர்களின் கூட்டத்தைக் கூட்ட வேண்டிய காலக்கெடு நெருங்கிக் கொண்டிருந்தது. இந்திய ஆட்சியாளர்களும் முஸ்லிம் லீக் கட்சியை இல்லாமல் ஆக்கிவிடலாமா என பல்வேறு வழிகளிலும் முயன்று கொண்டிருந்தார்கள். அச்சமயம் தான் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த, அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸில் கூட்டம் 1948ம் ஆண்டு மார்ச்சு மாதம் பத்தாம் தேதியன்று மதறாஸில் கூடியது. அக் கூட்டத்திற்கு பம்பாய் மாகாண முஸ்லிம் லீக் கட்சித் தலைவர்கள் பலரும் வந்திருந்தார்கள்; பம்பாய் சட்ட சபை முஸ்லிம் லீக் கட்சியின் தலைவர் A. A. கானும் வந்திருந்தார். இத் தலைவர்கள் எல்லாம் அதுநாள் வரை, இக்

கட்சி கலைக்கப்பட வேண்டும் என அறிக்கை ஏதும் விடவில்லை; கட்சிக்கு முரணான நடவடிக்கைகளில் அவர்கள் ஈடு படவும் இல்லை.

மதராஸ் கவுன்ஸில் கூட்டத்தில் காயிதே மில்லத் தெரிவித்த கருத்துக்களை பம்பாய் முஸ்லிம் லீக் தலைவர்கள் ஏற்றுக் கொள்ளத்தான்செய்தார்கள். ''இந்திய யூனியன் முஸ்லிம் லீக்'' என்ற பெயரில் தாய்ச் சபை தொடர்ந்து நீடித்திருக்க வேண்டுமென வாக்களித்தவர்களில் பம்பாய் லீக் பிரமுகர்களும் அடங்குவார்கள். இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் முதலாவது பொருளாளராக ஹஸனலி P. இப்ருஹீம் M.L.A. த் தேர்ந்தெடுக்கப்பட்டார். இக்கட்சியின் சட்ட திட்டங்களையும் நோக்கங்களையும்உருவாக்கும் சப் கமிட்டியில் பம்பாயைச் சேர்ந்த அப்துல் காதர் ஹாபிஸ்கா. A. A. கான் ஆகியோரும் அங்கம் பெற்றிருந்தார்கள்.

1948 மத்திவரையில் பம்பாய் லீக் தலைவர்கள் சரியாகத்தான் இருந்தார்கள். ஆனால் நாள் செல்லச் செல்ல, பம்பாய் காங்கிரஸ் தலைவர்களின் கிடுக்கிப்பிடிக்குள் அவர்கள் அகப்பட்டுக் கொள்ளலானார்கள். ஆட்சியாளர்கள் விரித்த மாய வலையில் அவர்கள் சிக்கிக் கொண்டார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. பம்பாய் மாகாண சட்டசபையில் செயலாற்றி வந்த முஸ்லிம்லீக் கட்சி தனது பெயரை ''நான்காவது கட்சி'' (Fourth Party) என மாற்றிக் கொண்டது. பம்பாய் மாநில முஸ்லிம் லீக் கட்சி அரசியலில் ஈடுபடாது என்றும் ''நான்காவது கட்சிதான்'' அரசியலில் விவகாரங்களில் பங்கெடுத்துக்கொள்ளும் என்றும் அத்தலைவர்கள் கூறத் தலைப்பட்டார்கள். பம்பாயிலுள்ள அன்றைய முஸ்லிம் லீக் தலைவர்கள், ஒவ்வொரு கூட்டத்திலும் ஆளுக்கொரு அபிப்பிராயத்தைக் கூற முற்பட்டார்கள்.

இந் நிலைமையில் நாட்டின் முதலாவது பொதுத் தேர்தல் 1952ம் ஆண்டு வந்தது. காங்கிரஸ் கட்சியை தேர்தலில் எதிர்ப்பது என காயிதே மில்லத் தலைமையில் இயங்கும் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் முடிவு செய்தது. ஆனால் பம்பாயிலுள்ள லீக் தலைவர்களுக்கு இத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியை ஆதரிக்க வேண்டும் என தணியாத ஆசை. ஹஸனலி P. இப்ருஹீம் மதராஸ் சென்று காயிதே மில்லத்திடம் இது குறித்துப் பேசினார். வெளிப்படையாக இல்லா விட்டாலும் மறைமுகமாகவாவது காங்கிரசை ஆதரிக்க பம்பாய் லீகர்களுக்கு அனுமதி தரும்படி தலைவரவர்களிடம் அவர் கேட்டுப் பார்த்தார். இதற்கு காயிதே மில்லத் ஒத்துக் கொள்ளவில்லை. ஏமாற்றத்துடன் ஹஸனலி பம்பாய் திரும்பினார்.

கட்சி கட்டளைகளின்படி இவர்கள் நடந்து கொள்ளவில்லை. காங்கிரஸின் அனுதாபிகளாகவே இவர்கள் நாளுக்கு நாள் மாறிக் கொண்டிருந்தார்கள். அவர்களது திரைமறைவு நாடகங்கள் அதிக நாட்கள் நீடிக்கவில்லை. ''நான்காவதுகட்சியினர்'' 1955ம் ஆண்டு செப்டம்பர் மாதம் பத்தாம் தேதியன்று பம்பாயிலுள்ள ''கைஸர் பாக்கில்'' ஒரு மாநாட்டைக் கூட்டினார்கள். அக்கூட்டத்தில் நான்காவது கட்சியைக் கலைத்துவிடுவதென்றும் இக்கட்சியினர் அனைவரும் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்துவிடுவதென்றும் முடிவு செய்தார்கள். ஹாபிஸ்காவும் அவரைப்போன்றவர்களும் காங்கிரஸ் கட்சியில் உடனடியாகச் சேர்ந்துவிட்டார்கள். ஹஸனலி P. இப்ருஹிம் பாகிஸ்தானுக்குச் சென்று குடியேறி விட்டார். பம்பாய் மாகாணத்தில் முஸ்லிம் லீக் தலைவர்கள் எனச் சொல்லிக் கொண்டிருந்தவர்களின் அத்தியாயம் இம்மாதிரி பரிதாபகரமாக முடிந்தது!

முஸ்லிம் லீக் இயக்கத்தின் மீது பற்றும் பாசமும் உள்ள திருக்கூட்டம் பம்பாயில் இல்லாமல் இல்லை. அப்துல் கதீர்கான், ஹாஜி நூர்முஹம்மது அஹமது சேட், முஹம்மது உமர் ரஜப், முஹம்மது. ஹஸன் பாய்ஜீ போன்றவர்கள் காங்கிரஸ் கட்சியில் தங்களை இணைத்துக் கொள்ளவில்லை. முஸ்லிம்களுக்கென ஒரு அரசியல் ஸ்தாபனம் அவசியமே என்ற கருத்தினையுடையவர்களாகவே அவர்கள் இருந்தார்கள். சிறிது காலம் பொறுமையாக இருப்பது என்ற தீர்மானத்தில் இருந்தனர்.

இக்காலகட்டத்தில்தான் 1959ம் ஆண்டு கேரளாவைச் சேர்ந்த சி. ஹெச். முஹம்மது கோயா, ஹஜ் கடமையை நிறைவேற்றச் சென்றார். திரும்பிவரும் வழியில் அவருக்கு, பம்பாய் வாழ் மலையாள நண்பர்கள் மேமன் ஜமாஅத் கானா கட்டிடத்தில் வரவேற்பு ஒன்றிற்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

1959 ஆண்டு ஜூலை மாதம் எட்டாம் தேதி புதன்கிழமை அன்று நடைபெற்ற இப் பெரிய வரவேற்புக்கு பம்பாய் வாழ் முஸ்லிம் பிரமுகர்கள் பலரும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அக்கூட்டத்தில் உரையாற்றும் சமயம் கோயா சாகிப் நாட்டு

அரசியல் நிலைமையை விளக்கினர். கேரளாவில் தாங்கள் எப்படி செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதையும் மனதில் படும்படி எடுத்துச் சொன்னர். இக் கருத்துக்கள், பம்பாய் முஸ்லிம்களிடம் நீறு பூத்த நெருப்பாக இருந்த முஸ்லிம் லீக் உணர்வுகளைத் தூண்டி விடுவதாக அமைந்தன.

அன்றிலிருந்து முஸ்லிம் லீகை புதுப்பிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. 1959-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஒன்பதாம் தேதியன்று பேக் முஹம்மது பாகில் முஸ்லிம் லீக் அபிமானிகள் பலரும் ஒன்றுகூடி மஹாராஷ்டிர மாநில முஸ்லிம் லீகை அமைப்பது எனத் தீர்மானித்தனர். இக் கூட்டத்திற்கு ஹாஜி நூர்முஹம்மது அஹமது சேட் தலைமை வகித்தார். காயிதே மில்லத்தை பம்பாய்க்கு வரவழைப்பது என முடிவு செய்யப் பட்டதும் ஒரு சில மாதங்களில் காயிதே மில்லத்தும் ஜனுப் ஜானி சாகிபும் பம்பாய் வந்தார்கள். பொதுக் கூட்டங்கள் பல நடத்தப் பட்டன. ஊர்வலங்கள் சிறப்பாக நடத்தப்பட்டன. முஸ்லிக் லீக் ஸ்தாபனம் மஹாராஷ்டிராவில் மீண்டும் புத்துயிர் பெறலாயிற்று.

1961-ம் ஆண்டு பம்பாய் மாநகராட்சித் தேர்தல் நடைபெற்றது. அத் தேர்தலில் கட்சி அடிப்படையில் முஸ்லிம் லீக் கலந்து கொண்டது. நான்கு பேர் பம்பாய் மாநகராட்சிக்கு முஸ்லிம் லீக் சார்பாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அதே ஆண்டு ஜூன் மாதம் ஷோலாப்பூர் மாநகராட்சித் தேர்தல்வந்தது அதிலும்முஸ்லிம் லீக்சார்பாக ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1962-ம் ஆண்டு பொதுத் தேர்தலின் போது மாநில சட்ட சபைக்கு முஸ்லிம் லீக் சார்பாக மூன்று வேட்பாளர்கள் நிறுத்தப் பட்டார்கள். ''கல்யாண்'' தொகுதியில் நமது கட்சி சார்பாக பிராமணர் ஒருவர் போட்டியிட்டார். இத் தேர்தலில் லீக் வெற்றி பெறவில்லையென்றாலும், முஸ்லிம்களின் வாக்குகள் தாய்ச்சபை ஆணைப்படியே போடப்படுகின்றன என்ற உண்மை உலகினர் முன்பு உறுதி செய்யப்பட்டது. ''நாக்பாடா'' தொகுதி இதற்கு ஓர் உதாரணம். முஸ்லிம்களின் ஒற்றுமையைக் கண்டு காங்கிரஸ்காரர்களே அசந்து விட்டார்கள்.

மஹாராஷ்டிர மாநில முஸ்லிம் லீகின் முதலாவது கவுன்ஸில் கூட்டம் 1963-ம் ஆண்டு மே மாதம் 12-ம் தேதி பம்பாயில் நடைபெற்றது. அக் கூட்டத்திற்கு காயிதே மில்லத், சி. ஹெச். கோயா, சுலைமான் சேட் ஆகியோர் வருகை தந்திருந்தனர். மாநில முஸ்லிம் லீகின் தலைவராக ஹாஜி நூர் முஹம்மது அஹமது சேட்டும் பொதுச் செயலாளராக குலாம் முஹம்மது பனுத்வாலாவும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

1967-ம் ஆண்டு பொதுத் தேர்தலின்போது காங்கிரஸை எதிர்த்து மஹாராஷ்டிராவில் ஒரு கூட்டணி அமைக்கப் பட்டது ''சம்பூரண் மஹா ராஷ்டிர சமிதி'' என்ற அந்த கூட்டணியில் கிஸான் கட்சி, கம்யூனிஸ்டு கட்சிகள் எஸ். எஸ். பி. ஆகியவற்றுடன் முஸ்லிம் லீகும் அங்கம் வகித்தது. ''உமர்காடி தொகுதியில் பனுத்வாலா முஸ்லிம் லீக் சார்பில் போட்டியிட்டார். ஆறுயிரம் வாக்கு வித்தியாசத்தில் அவர் வெற்றி பெற்றார். 1968-ம் ஆண்டில் பம்பாய் மாநகராட்சி தேர்தல் நடைபெற்றது. அதிலும் முஸ்லிம் லீக் உறுப்பினர்கள் பலர் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

பம்பாய் நகரிலும், பீவண்டி தாணு, ஜல்காவூன், மஹாட், மலேகாவூன் ஆகிய ஊர்களிலும் வகுப்புக் கலவரங்கள் திட்டமிட்டு ஆரம்பிக்கப் பட்டன. பாதிக்கப்பட்ட சிறுபான்மை மக்களுக்கு முஸ்லிம் லீக் தம்மாலான உதவி ஒத்தாசைகளைச் செய்தது. 1962ம் ஆண்டு மே மாதம் காயிதேமில்லத் சுலைமான் சேட், அப்துல் ஸமது சாகிப் ஆகியோர் பாதிக்கப்பட்ட ஊர்களுக்கெல்லாம் சென்று மக்களுக்கு ஆறுதல் கூறினர்கள்; அச்சுற்றுப் பயணம் வெற்றிகரமாக அமைந்தது.

1971-ம் ஆண்டு பொதுத் தேர்தலின் போது முஸ்லிம் லீகின் ஆதரவை காங்கிரஸ் கட்சி நாடியது. பம்பாய் பெருநகரில் முஸ்லிம் லீகின் ஆதரவினுல் நான்கு பாராளு மன்றத் தொகுதியிலும் காங்கிரஸ் வெற்றி பெற்றது. பம்பாய் தென் பாராளு மன்றத் தொகுதியில் காங்கிரஸ் உறுப்பினர் திருகுலாப் ராவ் அமோக வெற்றி பெற்றார். பம்பாய்மத்திய தொகுதியில் வெற்றி பெற்ற டாக்டர்கைலாஷ் 1971 மார்ச் 15ம்தேதியன்று நடைபெற்ற நன்றியறிவிப்புக் கூட்டத்தில் முஸ்லிம் லீக் கட்சிக்கு விசேஷமாக நன்றிகளைத் தெரிவித்தார். மாநிலத் தலைவர் ஹாஜி நூர் முஹம்மது அஹமது சேட்டை கௌரவித்து அவர் மரியாதை செய்தார். இந்நாட்டில் முஸ்லிம் லீக் கட்சி செயல்படுவதற்கு முழு உரிமை பெற்றிருக்கிறது என்று காங்கிரஸ் மேடையிலிருந்து முழக்கமிட்டார்!

1959-ம் ஆண்டையும் 1971-ம் ஆண்டையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அன்றைய தினம் காங்கிரஸ் தலைவர்களுள் ஒருவரான K.K ஷா இந்நாட்டில் முஸ்லிம் லீகிற்கு இடமே இல்லை என்றும் அதற்கு இங்கு என்ன வேலை என்றும் வீர வசனம் பேசினர். அதே கட்சியைச் சேர்ந்த காங்கிரஸ் எம். பி. டாக்டர் கைலாஷ் இன்று இந்நாட்டில் முஸ்லிம் லீக் செயல்பட முழு உரிமை பெற்றிருக்கிறது என்றும் அதைத் தட்டிக் கேட்க யாருக்கும் அதிகாரம் கிடையாது என்றும் காங்கிரஸ் மேடையிலிருந்தே கர்ஜித்தார்.

நீதி, நியாயம், உண்மை ஆகியவை வெற்றி பெற்றே தீரும் என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்? சிறுபான்மை மக்களின் பொறுமைக்கும் சகிப்புத் தன்மைக்கும் கூலிகிடைக்கத்தான் செய்தது. வரலாற்றில் இதை நாம் நிரூபித்துக் காட்டி விட்டோம்.

# இந்திய முஸ்லிம்களின் தன்னிகரில்லாத் தலைவர்

"சிராஜுல் மில்லத்" A. K .A. அப்துஸ் ஸமது சாகிப், M.P.
தலைவர், தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக்

*1964ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ஆம் தேதி!*

வரலாற்றிலே முக்கிய திருப்பங்களைத் தோற்றுவித்த லக்னவ் நகரில், தாருன்னத்வா என்னும் இஸ்லாமிய கலைக் கூடத்தில்; இந்திய முஸ்லிம்களிடையே, ஏதாவது ஒரு வகையில் செல் வாக்குப் பெற்றிருந்த முஸ்லிம் தலைவர்களில் சுமார் நாற்பது பேர் கூடியிருந்தனர்.

இந்தியாவின் கிழக்கு மாநிலங்களில் எழுந்த வகுப்பு வெறியின் காரணமாக ஆயிரக்கணக்கான முஸ்லிம்கள், கல்கத்தாவிலும், ஜம்ஷெட்பூர், ரூர் கலா முதலிய இடங்களிலும் படுகொலை செய்யப் பட்டபோது முஸ்லிம் இந்தியாவின் இதயமே நடுங்கி நிலை குலைந்த நிலையில், இறந்தவர்கள் ஆத்மாக்கள் செய்த பிரார்த்தனையின் பயனாக, ''இந்திய முஸ்லிம்கள் மானத்தோடு வாழும் வழியைக் காட்டாவிடினும் அவர்கள் மானத் தோடு மடிவதற்குள்ள வழியையாவது காட்ட வேண்டாமா''? என்ற அவமானமிக்க வீர உணர் வோடு, அது வரை தங்களுக்கிடையே பிரிந்து பட்டிருந்த முஸ்லிம் தலைவர்கள்-ஒன்றுபட்டு அகில இந்திய முஸ்லிம் ஆலோசனைக் குழுவை (முஸ்லிம் மஜ்லிஸெ முஷாவரத்தை) உருவாக்கிக் கொண்டிருந்த வேளை அது.

காங்கிரஸ் முஸ்லிம் தலைவர் டாக்டர் ஸய்யித் மஹ்மூத், ஜம்இய்யத்துல் உலமா தலைவர்களான, முப்தி அதீகுர்ரஹ்மான் மவ்லானா அஸ்அத் மதனீ; ஜமாஅதெ இஸ்லாமியின் தலைவர் மவ்லானா அபூலைஸ் இஸ்லாஹீ, தப்லீக் தலைவர்களான மவ்லானா அபுல்ஹஸன் அலீ நத்வீ, மவ்லானா மன்ஸுர் நுஃமானீ; கிலாபத் இயக்கச் செய லாளர், மவ்லானா முல்லா ஜான் முஹம்மத்; அலீகர் பழைய மாணவர் தலைவர் பாரிஸ்டர் நூரீ, உ. பி. முஸ்லிம் மஜ்லிஸ் தலைவர் டாக்டர் ஏ.ஜே.பரீதி மற்றும் பிரபல பத்திரிகையாளர்கள், பாராளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள், ஆகியோர் அங்கே கூடியிருந்தனர்.

## அதோ அவர்தான்

மிக முக்கியத்துவம் வாய்ந்த இந்தக் கூட்டத் திற்கு உலக பத்திரிகையாளர் பலரும் வந்திருந் தனர். நியூ யார்க் டைம்ஸ் பத்திரிகையின் டெல்லி நிருபர், வெளிநாட்டு நிருபர்களுக்கு அங்கே உட்கார்ந்திருந்த தலைவர்களைப் பற்றி அறிமுகப்படுத்திக் கொண்டே வரும்போது, நரை தாடியும், குஞ்சம் அசைந்தாடும் துருக்கித் தொப்பியும் அணிந்திருந்த அந்த முது பெரியாரின் தோற்றத்தைக் கண்ட உடனே இதுவரை பேசி வந்த அவர் தொனி உயர்ந்து, சப்தமிடவே தலைப்பட்டார். 'அதோ அவர்தான், அவரே தான் இந்திய முஸ்லிம்களின் தலைவர்' எல்லா நிருபர்களும் அவரை இனங்கண்டு கொண் டார்கள். 'ஏதாவது ஒரு நாள் நாம், அவரை தனியே பேட்டி காணுவோம்!' என்று சில நிருபர்கள் பேசிக் கொண்டார்கள்.

நியூயார்க் டைம்ஸ் நிருபர் இனங்காட்டிப் பேசியவரை நான் ஏறெடுத்துப் பார்த்தேன். அங்கே இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் ஒப்பற்ற தலைவர் கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் அவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

'ஆமாம்! அவர்தான் இந்திய முஸ்லிம்களின் தலைவர்' என்ற வார்த்தைகள் இப்போது என் உள்ளத்திலிருந்து எதிரொலித்தன; எதிரொ லித்துக் கொண்டேயிருந்தன!

முஸ்லிம் தலைவர்கள் என்ற பெயரில் எத்தனையோ பேர் உலவி வந்தாலும், எட்டு கோடி இந்திய முஸ்லிம்களின் ஒரே ஒப்பற்ற தலைவராக அகில உலகிலும் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளவர் காயிதெ மில்லத் அவர்கள் தாம்.

இந்த தலைமைத் தனம் அவர்களைத் தேடி வந்தடைந்த ஒன்றே தவிர, அவர்கள் தேடிச் சென்ற ஒன்றல்ல.

—உரிமைக்குரல் 20-9-64

# சிறுபான்மை சமுதாயத்தின் சேம்பியன்


**ஹாஜி செய்யது முஹம்மதலி ஷிஹாப் தங்ஙள்**

*(தலைவர், கேரள மாநில முஸ்லிம் லீக்)*


இந்தியாவில் இன்று நாம் இருந்து வரும் நிலைக்கு உண்மையிலேயே, நாம் அனைவரும் காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்களுக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளோம். பொதுவாக இந்நாட்டிற்கும், குறிப்பாக சிறு பான்மை சமுதாயத்தினருக்கும் அவர்கள் ஆற்றி உள்ள சேவை மகத்தானது; புனிதமானது; வரலாற்று சிறப்பு மிக்கது.

இந்நாட்டில் முஸ்லிம் சமுதாயத்திற்கு விடுக்கப்பட்டுள்ள சவால்களை காயிதே மில்லத் மிக தைரியமாக எதிர்நோக்கினார்கள். இந்திய யூனியன் முஸ்லிம்லீக்கின் ஸ்தாபகராகவும், அதன் தலைவராகவும் இருக்க அவர்கள் முன் வந்தது மிக துணிச்சலான செயலாகும். ஒவ்வொருவரும் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள இயலாது தத்தளித்துக் கொண்டிருந்த கால கட்டத்தில், இந்த சமுதாயத்தை பாதுகாக்க வேண்டும் என்ற அசாதாரணமான தைரியம் காயிதே மில்லத் அவர்களுக்கு ஏற்பட்டது இறைவன் கொடுத்த அருளாகும். அக்கால கட்டத்தில் ஏற்பட்ட கஷ்டங்களையும், எதிர்ப்புக்களையும், சவால்களையும் அவர்கள் சமாளித்த விதத்தை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது. வரலாற்றில் பொன் எழுத்துக்களில் பொறிக்கப்படவேண்டிய செய்தியாகும் அது.

குறை காண முடியாத தலைவர், காயிதே மில்லத். அப்பழுக்கற்ற வாழ்க்கையை நடத்தி எல்லோரும் மெச்சும்படியாக நடந்து கொண்டார்கள். அவர்களது தனிப்பட்ட வாழ்க்கையும், பொது வாழ்க்கையும் ஒரே விதமாக அமைந்திருந்தன.

தங்களது மனசாட்சிபடியே அவர்கள் நடந்தார்கள். இஸ்லாமிய தலைவர் ஒருவர் எப்படி வாழ்ந்து காட்டவேண்டுமோ அப்படியே அவர்கள் வாழ்ந்து காட்டினார்கள்; எதிர்காலத்திற்கு ஒரு முன் மாதிரியாக இருந்தார்கள்.

முஸ்லிம்களுக்காக மட்டும் அவர்கள் பாடுபடவில்லை. தாழ்த்தப்பட்ட மக்களுக்காகவும், பின் தங்கிய நிலையிலுள்ள மக்களுக்காகவும் அவர்கள் பரிந்து பேசினார்கள், வாதாடினார்கள். அக்கிரமத்திற்கும், அநீதிக்கும் ஆளாக்கப்பட்ட மக்கள் எங்கெல்லாம் காணப்பட்டார்களோ, அவர்களுடைய ''சேம்பியனாக'' காயிதேமில்லத் விளங்கினார்கள். அரசியலை அவர்கள் ஒரு லட்சியமாக கொண்டிருந்தார்கள். இன்று பலர் எண்ணி இருப்பதை போல அதை பொழுது போக்காக அவர்கள் கருதவில்லை. அரசியல் நிர்ணய சபை, ராஜ்ஜிய சபை, லோக்சபை, மதராஸ் சட்டசபை ஆகிய மன்றங்களில் அவர்கள் ஆற்றிய உரைகளை உற்று நோக்கும் பொழுது எவ்வளவு உயர்தரமான, உன்னதமான அரசியல் வாதியாக அவர்கள் திகழ்ந்தார்கள் என்பதை புரிந்து கொள்ளலாம்.

நாட்டுப் பற்றில் அவர்கள் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல. வெளித்தோற்றத்திற்காக அல்லாமல் அதை அவர்கள் தங்களது உயிர் மூச்சாகவே கொண்டிருந்தார்கள். ஒரு முஸ்லிம் தான் வாழும் நாட்டிற்கு விசுவாசமுள்ளவனாக வாழ்வான் என்பதை உலகிற்கு நிரூபித்துக் காட்டிய உத்தமர் அவர். நாட்டிற்கு சவால்களும், நெருக்கடிகளும் ஏற்பட்ட சமயங்களில் எல்லாம், தாய்நாட்டிற்காக முதன் முதலில் குரல் கொடுத்தவர்கள் அவர்களே.

கஷ்மீர் பிரச்சினையை எடுத்துக் கொள்ளுங்கள். இந்திய முஸ்லிம்களின் ஆதரவு இந்த சர்க்காருக்கு முழுக்க, முழுக்க உண்டு என்பதை சொல்லில் மட்டுமல்லாது செயலிலும் செய்து காட்டினார்கள். இந்தியாவின் ஒரு பகுதியே காஷ்மீர் என்ற, அவர்களது வாசகம் ஐக்கிய நாடுகள் சபையில் மேற்கோள்காட்டப்பட்டது. சீன-இந்திய சண்டையின்போது தங்களது ஒரே மகனை யுத்த சேவைக்கு பயன்படுத்த தயாராக யிருப்பதாக பாரத பிரதமர் பண்டித நேருவுக்கு கடிதம் எழுதினார்கள். 1965 ம் ஆண்டு பாகிஸ்தானுடன் நடந்த சண்டையில் யுத்த நிதிக்கு பணம் திரட்டிக் கொடுத்தார்கள். பொதுஜன அபிப்பிராயத்தை அரசாங்கத்திற்கு ஆதரவாக திரட்டினார்கள்.

முஸ்லிம் சமுதாயம் காயிதே மில்லத்துக்கு மிகவும் கடமை பட்டுள்ளது. நமது உள்ளங்களில் அவர்களைப் பற்றிய நினைவுகள் பசுமையானதாக என்றென்றும் இருக்கவேண்டும். அவர்களுடைய தலைமை இல்லாதிருக்கும் பட்சத்தில் நாம் விலாசமற்றவர்களாக என்றோ ஆகி இருப்போம். நமக்கு ஒரு கொள்கையையும், ஒரு லட்சியத்தையும் உருவாக்கி கொடுத்தவர்கள் அவர்களே. நமக்கு ஒரு மேடை அமைத்து கொடுத்தது அவர்களே. ஒரு கொடியையும் நமது கையில் தந்து கோஷம் எழுப்ப செய்தவர்களும் அவர்களே. நம்மிடம் இந்த ஸ்தாபனத்தை அவர்கள் அமானிதமாக ஒப்படைத்துள்ளார்கள். ஒரு கௌரவமான, கண்ணியமான வாழ்க்கை நடத்துவதற்கு, நமது கையில் கொடுக்கப் பட்டிருக்கும் ஆயுதம் முஸ்லிம் லீக் ஆகும். எல்லாம் வல்ல இறைவன் நம்மை நடத்தி செல்வானாக ஆமீன்.

---

## ஆறு பக்கக் கடிதத்திற்கு பத்துப் பக்கத்தில் பதில்

திருநெல்வேலி பேட்டையில் காயிதே மில்லத் அவர்கள் படித்துக் கொண்டிருக்கும் காலத்தில், அவர்களது வயதொத்த இளைஞர் பலரும் சேர்ந்து, ''பால்ய முஸ்லிம் சங்கம்'' என்ற ஒரு அமைப்பை, முகம்மது நயினார் பள்ளிவாசல் தெருவில் 1909 ம் ஆண்டில் ஆரம்பித்து நடத்திக் கொண்டிருந்தார்கள். இளைஞர்களுக்கு சொற்பயிற்சி கொடுப்பது, உலக அறிவுகளைப் பெருக்கிக் கொள்வது, அன்றாட அரசியல் குறித்து விவாதங்கள் நடத்துவது, மார்க்க சம்பந்தமான விஷயங்களைத் தெரிந்து கொள்வது போன்ற பல நடவடிக்கைகளிலும் இந்த ''பால்ய முஸ்லிம் சங்கம்'' தீவிரமாக ஈடுபட்டிருந்தது.

பத்திரிகைகள் பலவற்றையும் சங்கம் சார்பாக வாங்கி உறுப்பினர்கள் படித்தார்கள். உலக விவகாரங்களை புரிந்து கொண்டார்கள். அச்சமயம் கல்கத்தாவிலிருந்து மௌலானா ''முஹம்மதலி ஜவஹர்'' அவர்கள் ''காம்ரேட்'' என்ற ஆங்கில வார இதழ் ஒன்றை நடத்தி வந்தார்கள். அப்பத்திரிக்கையையும் படித்து விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என பேட்டை ''பால்ய முஸ்லிம் சங்க'' உறுப்பினர்களுக்கு கொள்ளை ஆசை. பண வசதிக் குறைவால் சந்தா செலுத்தி அதை வரவழைக்க முடியாத நிலையில் இளைஞர்கள் இருந்தார்கள்.

சங்கத்தின் நிதி நிலையை விளக்கி மௌலானா அவர்களுக்கே ஒரு கடிதம் எழுதுவதுடன் தங்களுக்கு ஒரு பிரதியை இனாமாக தபாலில் அனுப்பித் தரும்படியும் அவர்களிடம் விண்ணப்பித்தால் என்ன என்று உறுப்பினர்கள் ஆலோசித்து, இறுதியில் விரிவான கடிதம் ஒன்றை எழுத முற்பட்டனர்.

பேட்டை முஸ்லிம் வாலிபர்கள் நடத்தும் ''பால்ய முஸ்லிம் சங்கம்'' குறித்தும், அதன் நடவடிக்கைகள் பற்றியும் ''காம்ரேட்'' பத்திரிகையைப் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் இருப்பது பற்றியும் ஆனால் நிதி நிலைமை இடம் கொடாது இருப்பது குறித்தும் ஆறு பக்கங்களில் ஆங்கிலத்தில் நீண்ட கடிதமொன்றை எழுதி கல்கத்தாவுக்கு தபாலில் அனுப்பி வைத்தனர்.

சுமார் 10 தினங்கள் கழித்து கல்கத்தாவிலிருந்து மௌலானா முஹம்மதலியின் பதில் கடிதம் வந்தது. பேட்டை வாலிபர்களின் சமூக ஆர்வத்தைப் பாராட்டியிருந்ததுடன், பத்திரிகை நடத்துவதிலுள்ள கஷ்டங்களையும், சிரமங்களையும் மௌலானா அவர்கள் விளக்கியிருந்தார்கள். மிகுந்த சோதனையான காலகட்டத்தில் நஷ்டத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் ''காம்ரேட்'' வார இதழின் தற்போதைய நிலைமையில் மேலும் ஒரு சந்தாவை இனாமாக அனுப்பி வைப்பது என்பது இயலாத காரியம் என்றும் சவிஸ்தாரமாக பத்து பக்கங்களில் பதில் எழுதி இருந்தார்கள்!

காயிதே மில்லத் அவர்களே இவ்விபரத்தை பின் காலங்களில் நேரில் கூறியுள்ளார்கள்.

*[''சிராஜுல்மில்லத்'' அப்துஸ் ஸமது சாகிப் 05-06-89 அன்று பேட்டை ''பால்ய முஸ்லிம் சங்கத்தின் முன்பு நடத்தப்பட்ட காயிதே மில்லத் பிறந்த தின விழாவில் கூறியது.]*

# காயிதே மில்லத்தின் தொண்டன் என்ற பெருமையே எனக்குப்போதுமானது

(கேரள சிங்கம் C. H. கோயா)

''அமைச்சரவையை வழி மறிக்கும் பழக்கம் எங்களுக்கு இல்லை. பாரம்பரியம் எங்களுக்கு இல்லை. அவ்வாறு வழி மறிக்கும் பழக்கம் உடையவர்கள் இன்று வழி தப்பி எங்கோ விழி பிதுங்கிக் கிடக்கின்றனர்!

பதவி மீது என்றும் எங்களுக்கு ஆசை கிடையாது. முதல் அமைச்சர் பதவியையோ, எம். பி. பதவியையோ எம். எல். ஏ. பதவியையோ நாங்கள் விரும்பவில்லை. ஆசிக்கவில்லை. பணப் பெட்டிகள் மீதும் எங்களுக்கு நாட்டம் இல்லை. நாங்கள் விரும்புவது ஒன்றே ஒன்றைத்தான்.

எதிலும் பற்றற்று துறவியுள்ளம் கொண்டு-தூயவற்றில் மட்டுமே நாட்டம் கொண்டு மகரிஷி போன்று மாண்புமிகு வாழ்க்கை நடத்துகின்ற எங்கள் பரிசுத்த தலைவர்-எழுபத்தி நான்காம் ஆண்டை எட்டியுள்ள ஏந்தல்-அல்ஹாஜ் காயிதே மில்லத் இஸ்மாயில் சாஹிப் அவர்களின் தொண்டன் என்ற பெருமை-பதவி-அந்தஸ்து ஒன்றே எங்களுக்குப் போதும். அதற்கு அல்லாஹ் அருள் பாலித்திட வேண்டும்.

உங்கள் தலைநகரிலுள்ள செயின்ட் ஜார்ஜ் கோட்டையில்-இந்திய ராணுவத்தின் சேனாதிபதியாக இருந்து அண்மையில் ஒய்வு பெற்றாரே மேஜர் ஜெனரல் குமாரமங்கலம், அன்னாரது தகப்பனார் டாக்டர் சுப்பராயன்-அன்றையத் தினம் ஆட்சி செய்து கொண்டிருந்தார். எங்கள் தலைவர் காயிதே மில்லத்தைப் பார்த்து அவர் சொன்னார்; நான் உயிரோடு இருக்கிற வரையில் முஸ்லிம் லீக்கை வாழ விடமாட்டேன் என்று. அன்று செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் நமது தலைவரவர்களுடன் போக்கர் சாஹிபும், சீத்தி சாஹிபும் உடன் இருந்தார்கள்; லீக்கைப் பற்றி அவ்வளவு இறுமாந்து பேசிய சுப்பராயன் இன்று இல்லை; ஆனால் முஸ்லிம் லீக் இருக்கிறது. அது மட்டுமல்ல; இன்று அது நல்ல வளத்தோடும் பொலிவோடும் பீடு நடை போடுகிறது. சீத்தி சாஹிப் அவர்கள் மரணமான போது போலீஸ் மரியாதைகளுடன் அவர் நல்லடக்கம் செய்யப்பட்டார். எங்களது மந்திரி சபையில் அங்கம் வகித்த அஹமது குரிக்கள் மரணமான போது அவருக்கும் அதே மரியாதை கிடைத்தது. போலீஸ் துப்பாக்கிகள் பூமியைப் பார்த்து பிடிக்கப்பட்டு வீரர்கள் கம்பீரமாக அணிவகுத்து நிற்க குரிக்கள் அவர்களுடைய ஜனாஸா நல்லடக்கம் செய்யப்பட்டது.

டாக்டர் சுப்பராயன் முஸ்லிம் லீக்கை ஒழித்துக் கட்டுவேன் என்று சொன்னார். போலீஸ் துப்பாக்கிகளை நம்பித்தான் அவர் நம்மை இப்படி மிரட்டினார். ஆனால் அதே போலீஸ் துப்பாக்கிகள் நமக்கு மரியாதை வழங்கும் சாதனங்களாக மாறி இருக்கின்றன.

பண்டித நேரு நமது இயக்கத்தைப் பார்த்து செத்த குதிரை என்றார். ஆனால் அந்தக் குதிரை என்ன செய்தது தெரியுமா? சங்கர் மந்திரி சபையை கவிழ்த்து விட்டது. வேரோடும் வேரடி மண்ணோடும் பிடுங்கி எறிந்து விட்டது.

அமைச்சர் பதவி எங்களுக்கு பெரிதல்ல; அதை நாங்கள் துச்சமாக மதிக்கிறோம். காயிதே மில்லத் அவர்கள் ஒரு வார்த்தை சொன்னால் போதும் இப்பட்டம் பதவிகளை தூக்கி எறிந்து விட்டு வந்து விடுவோம்.''

[சென்னை சீதக்காதி நகர் பிரைமரி லீக் சார்பாக 29-6-69 அன்று மண்ணடி மூர் தெரு சந்திப்பில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் கேரள அமைச்சர் C. H. கோயா அவர்கள் செய்த வீரமுழக்கம்]

—நன்றி : 7-7-69 உரிமைக்குரல்

# கறைபடியாத கரங்களுக்குச் சொந்தக்காரர்

[B. V. அப்துல்லா கோயா M.P. கேரள மாநில முஸ்லிம் லீகின் பொதுச்செயலாளராகப் பணியாற்றி வருகிறார். 1967-ம் ஆண்டு முதல் டில்லி ராஜ்ய சபை உறுப்பினராகவும் இருந்து வருகிறார். இன்றையத் தினம் ராஜ்ய சபையில் அங்கம் வகிக்கும் ஒரே முஸ்லிம் லீக் உறுப்பினரும் அவரே. கள்ளிக்கோட்டை நகரில் பிரபல வியாபாரியாகத் திகழும் அப்துல்லா கோயா தமது இளமைக் காலம் தொடுத்தே முஸ்லிம் லீக் உறுப்பினர் என்பது பெருமைக்குரிய செய்தியாகும். இன்று அவருக்கு வயது 75க்கு மேலாகிறது. கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத்தை நினைவுகூர்ந்து அவர் உதிர்த்த கருத்துக்கள் இவை:-]

மதருஸிலுள்ள ''முஹமடன் கல்லூரி''யில் நான் 1937ம் ஆண்டுவாக்கில் படித்துக் கொண்டிருந்தேன், அப்பொழுது ஓரிருமுறை மாணவன் என்ற முறையில் காயிதே மில்லத்தை சந்தித்துள்ளேன். 1941ம் ஆண்டில் சென்னையில் அகில இந்திய முஸ்லிம் லீக் மாநாடு காயிதே ஆஜம் ஜின்னு சாகிப் தலைமையில் நடைபெற்றது. அந்த மாநாடு சம்பந்தமான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்த சமயங்களிலும் இஸ்மாயில் சாகிபை சந்தித்துள்ளேன்.

1947க்குப் பிறகுதான் தலைவரவர்களுடன் எனக்கு அதிக நெருக்கம் ஏற்பட்டது. சீதி சாகிப், உப்பி சாகிப், போக்கர் சாகிப், சத்தார் சேட் ஆகியோருடன் காயிதே மில்லத் உரையாடும் நேரங்களில் நானும் உடன் இருந்திருக்கிறேன்.

இன்று மலபாரில் பரூக் கல்லூரி மிகவும் பிரபலமாகவுள்ளது. அது ஆரம்பமாவதற்கு முக்கிய காரணமே இஸ்மாயில் சாகிப்தான். மலபார் மாவட்ட முஸ்லிம் லீக் சார்பாக ஒரு அரபிக் கல்லூரியை பரூக்கில் ஆரம்பிக்க வேண்டும் என நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். காயிதேமில்லத் அவர்கள் அழுத்தந் திருத்தமாக முதல்தர கல்லூரியை ஆரம்பியுங்கள் என யோசனை கூறினுர்கள். அதற்கு நாங்கள் ''பணத்திற்கு எங்கே போவது?'' என்று கேட்டோம்.

''முதலில் பணத்தை தயாராக வைத்துக் கொண்டு முஸ்லிம் சமுதாயம் எதிலும் ஈடுபடுவதில்லை. தைரியமாக நல்ல காரியத்தை ஆரம்பியுங்கள்'' என்று உற்சாகப்படுத்தினுர்கள்.

சென்னை பல்கலைக் கழகத்திற்கு விண்ணப்பம் எழுதப்பட்டது, அன்று துணைவேந்தராக இருந்த டாக்டர் லட்சுமணசாமி முதலியார் பரிவுடன் எங்கள் மனுவை கவனித்தார்; காயிதே மில்லத்தும் சிபாரிசு செய்தார்கள். மலபார் முஸ்லிம் லீகில் அன்று எஞ்சியிருந்த தொகையான 28,000 ரூபாயும் கல்லூரி வகைக்குக் கொடுக்கப்பட்டது. மாவட்ட லீகிற்குச் சொந்தமான காரும் கல்லூரிக்காக அளிக்கப் பட்டது. இன்று சீரும் சிறப்புமாக இயங்கிக் கொண்டிருக்கும் பரூக் கல்லூரி, காயிதே மில்லத், சீதி சாகிப், போக்கர் சாகிப் போன்ற பெருந் தலைவர்களின் தியாகத்தின் சின்னம் என்பதை இன்றைய தலைமுறையினர் மறந்துவிடக் கூடாது.

மலபார் மாவட்டத்தில் முதலாவது முஸ்லிம் லீக் மாநாடு பரப்பனங்காடி என்னுமிடத்தில் 1949ம் ஆண்டு, டாக்டர் சுப்பராயன் உள்துறை அமைச்சராக இருந்த காலகட்டத்தில் நடந்தது. மாநாடு ஆரம்பமாகும் முன் தேசீய கீதம் பாட வேண்டும் என காயிதே மில்லத் கூறினுர்கள். சீதி சாகிப் இதை ஆதரித்தார். ஆனுல் பாபக்கிதங்களுக்கு இது உடன்பாடாக இல்லை; காயிதே மில்லத்திடம் ஏதோ சமாதானம் சொல்ல முற்பட்டார். இது முதல் மாநாடாக இருப்பதினுல் கண்டிப்பாக தேசீய கீதம் பாடத்தான் வேண்டும் என இஸ்மாயில் சாகிப் உரத்த குரலில் கூறிவிட்டார்கள்.

அதற்குப்பின் மறுப்பேது? மலபாரில் நடைபெற்ற முதலாவது முஸ்லிம் லீக் மாநாடு தேசீய கீதத்துடன்தான் துவங்கியது.

பாராளுமன்ற உறுப்பினராக காயிதேமில்லத் அவர்கள் இருந்த சமயம், நாங்களெல்லாம் அவர்களிடம் ''தற்பாதுகாப்பிற்காக நீங்கள் ஒரு ரிவால்வர் வைத்துக் கொள்ள வேண்டும். அதற்காக மனுச் செய்யுங்கள்'' என்று கூறியபொழுது ''ரிவால்வர் இருந்தால் தான் ஆபத்து..,'' என்று சிரித்துக் கொண்டே பதிலளித்து விட்டார்கள்.

பாராளுமன்ற உறுப்பினர் என்ற ஹோதாவில், இந்திய அரசு ஆண்டு தோறும் ஹஜ்ஜுக்குச் செல்லும் குழுவில், காயிதே மில்லத் விரும்பினுல் செல்லலாம் என அரசாங்கத் தரப்பில் சொல்லப்பட்ட சமயம், அதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லே. முதல் ஹஜ்ஜை சொந்தமாக சம்பாதித்த பணத்தில் இருந்தே நிறைவேற்ற விரும்புவதாகக் கூறி விட்டார்கள்.

1962 பொதுத் தேர்தலில் மஞ்சேரி தொகுதியில் இருந்து காயிதே மில்லத்தை போட்டியிடச் செய்ய அவர்கள் சம்மதத்தை பெறுவதற்கு நாங்கள் பட்டபாட்டை இன்றும் என்னுல் மறக்கமுடியவில்லே! அன்று எர்ணுகுளத்தில் கேரள மாநில முஸ்லிம்லீக் பொதுக்குழுக் கூட்டம் நடந்துகொண்டிருந்தது. மஞ்சேரியில் தலைவரவர்கள் தான் போட்டியிட வேண்டும் என பொதுக் குழுக் கூட்டத்தில் பேசிய அனைவரும் கூறினுர்கள். காலையில் பத்து மணிக்கு ஆரம்பித்த கூட்டம் மாலே ஐந்து மணிவரை தொடர்ந்து நடைபெற்றது. எங்களது கோரிக்கையை இஸ்மாயில் சாகிப் ஒற்றுக் கொள்ளவேயில்லே. ''பாராளுமன்ற உறுப்பினராக வேண்டும் என்பதற்காகத்தான் முஸ்லிம் லீக் இருக்க வேண்டுமென நான் கூறி வருகிறேன் என்று நமது எதிரிகள் பிரச்சாரம் செய்வார்கள்; அதற்கு இடம் கொடுப்பது சரியல்ல'' என்று திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டேயிருந்தார்கள்.

''பாராளு மன்றத்தில் எல்லாக் கட்சிகளுடைய பிரதான தலைவர்களும் இடம் பெற்றிருக்கிறுர்கள். கட்சியின் குரலே உலகிற்கு அறிவிப்பதற்கு ஏற்ற இடம் பாராளு மன்றமே. நமது கட்சி சார்பாக இப் பணியைச் சிறப்பாகச் செய்ய நீங்களே தகுதியுள்ளவர்கள். இது ஒரு மானப் பிரச்சினை எங்களுக்கு'' என்று தங்ஙளும் மற்ற பெருந் தலைவர்களும் பிடிவாதமாக இருக்கவே, மாலே அஸர் தொழச் சென்ற காயிதேமில்லத் அவர்கள் தொழுகையை முடித்து விட்டுத் திரும்பி வந்ததும், நாங்கள் தயாராக வைத்திருந்த வேட்பு மனுவில் கையெழுத்திடச் சம்மதித்தார்கள். அதன் பிறகே நாங்களனைவரும் பெருமூச்சு விட்டோம்.

பாராளுமன்ற உறுப்பினர்கள் கார் வாங்க விரும்பினுல் அதற்கென 'கோட்டா' உண்டு. நானும் முஸ்லிம் லீக் பாராளுமன்ற உறுப்பினர்களுமாகச் சேர்ந்து கலந்தாலோசித்தோம். நமது கோட்டாவில் ஒரு கார் வாங்கி தலைவரவர்களின் உபயோகத்திற்காக மதருஸில் விட்டு வைப்பதென பேசிக் கொண்டோம்; தலைவரிடம் கேட்காமலேயே காருக்காக ஆர்டரும் கொடுத்தோம். காயிதே மில்லத் பெயருக்கு ஒரு சில தினங்களில் அதற்கான ஆர்டரும் தபாலில் வந்து விட்டது! எங்களேக் கூப்பிட்டுக் கேட்டார்கள்; நாங்கள் நடந்ததைச் சொன்னேம். தங்களது மக்களேயும் பேரன் பேத்திமார்களேயும் அழைத்து பக்கத்தில் நிறுத்திக் கொண்டு காயிதேமில்லத் ''கார் வாங்க ஆர்டர் வந்திருக்கிறது; முஸ்லிம் லீக் பணம் தருவதாகச் சொல்கிறது. நம் கையில் பணம் இல்லே. நமக்கு பணம் வந்த பின்பு கார் வாங்கினுல் போதுமா? எப்படிச் செய்யலாம்'' என்று கேட்டார்கள். ''நம்மிடம் பணம் வந்த பின்பு கார் வாங்கிக் கொள்ளலாம் என குடும்பத்லுள்ள அனைவருமே கூறிவிட்டார்கள். கார் வாங்கிக் கொள்ள கிடைத்த ஆர்டர் கிடப்பில் போடப் பட்டது,

கார் என்றதும் மற்றொரு ஞாபகமும் வருகிறது. ஒரு கல்லூரியின் நிதிக்காக மலேஷியா சென்றிருந்த பொழுது காயிதே மில்லத்திடம் சிங்கப்பூரிலுள்ள ஒரு செல்வந்தர் ''என்னிடமுள்ள வெளிநாட்டுக் காரை சென்னைக்கு கொண்டு வந்து விடலாம் என நினைக்கிறேன். இந்தக் காரை தங்களது இல்லத்திலேயே விட்டு வைக்கலாம் எனவும் நினைக்கிறேன். நான் தாயகம் வரும் சமயங்களில் உபயோகப்படுத்திக் கொள்கிறேன். மற்ற சமயங்களில் தங்களது வீட்டிலே அது நிற்கட்டும்'' என்று கூறினுராம். செல்வந்தர் கூறிய தன் அர்த்தத்தை காயிதே மில்லத் புரிந்து கொண்டார்கள். கார் வாங்கித் தருகிறேன் என்றுல் சம்மதிக்க மாட்டார்கள். இப்படியாவது ஒரு சாக்கில் அந்த வீட்டில் கார் நிற்கட்டுமே என்ற எண்ணத்

தில் இவ்வாறு சொல்லப்படுகிறது என்பதை யூகித்துக்கொண்ட தலைவரவர்கள்'' கார் நிற்பாட்டுவதற்கு என் வீட்டில் ''ஷெட்'' இல்லையே என்று கூற அப்படியானால் ஒரு ஷெட்டை கட்டிக் கொள்ளலாமே என அவர் மறுமொழி சொல்ல, அதன்பின்னர் சிரித்துக்கொண்டே அப்பேச்சை தட்டிக்கழித்து விட்டார்கள். சிங்கப்பூரிலிருந்து வந்த எனது நண்பர் ஒருவர் இவ்விபரத்தை என்னிடம் கூறினார்.

பொன்னானி பக்கம் ஒரு முஸ்லிம் லீக் மாநாட்டிற்காக நாங்கள் சென்றிருந்தோம். ஒரு திருமணத்திலும் கலந்து கொள்வதாக ஏற்பாடு. அப்பணக்காரர் இரவு தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்.

காயிதேமில்லத் படுப்பதற்கு ஒதுக்கப்பட்ட அறையில் ''வெல்வெட்'' மெத்தை போடப்பட்டிருந்தது. அதைப்பார்த்ததும், ''கப்ருக்குப் போகும் பொழுது இதுபோன்ற வெல்வட் மெத்தையை உங்களால் தரமுடியுமா!'' என்று வீட்டுக்காரரைப் பார்த்துக் கேட்டார்கள். அவர் அப்படியே அசந்து போனார். அந்த மெத்தையை அகற்றிவிட்டு சாதாரணமெத்தை ஒன்று கொண்டு வரப்பட்டது.

பாரதப்பிரதமராக திருமதி இந்திராகாந்தி பணிபுரியும் பொழுது, வங்கி தேசிய மயமாக்கும் பிரச்சினையும் மன்னர் மானிய ஒழிப்பு பேச்சும் வந்தது. இப்பிரச்சினைகள் குறித்து முஸ்லிம் லீகின் நிலைமை என்னவென்று காயிதே மில்லத்திடம் கேட்டபொழுது, ''நாட்டிற்கு ஒட்டு மொத்தமான நன்மை எதுவோ, நாட்டு மக்களுக்கு அதிகமாகப் பலன்தரக் கூடியது எதுவோ அதையே ஆதரிக்க வேண்டும் என்று பதில் சொன்னார்கள். சில தனிப்பட்ட நபர்களின் பாதிப்புகளை விட, மக்களின் பொதுச் சொத்தாக உருவாகும் அமைப்புகளையும் சக்திகளையும் ஆதரிப்பது நமது கடமை என்றார்கள். இதுவே உண்மையான சோஷலிசம் என்றும் கலீபா உமரே பாரூக் (ரலி) அவர்கள் தான் முதலாவது சோஷலிசவாதி என்றும் சுட்டிக்காட்டினார்கள். ஒருவர் ஏக காலத்தில் இரண்டு வீடுகளை வைத்துக் கொள்ள கலீபா உமர் பாரூக் அனுமதிக்கவில்லை. எல்லோருக்கும் ஒரு வீடு என்ற திட்டம் அமல் படுத்தப்பட்ட பின்னர், அதிகப்படியான வீடு குறித்து ஆலோசிக்கலாம் என கலீபா கூறிவிட்டார்கள். இதுதான் உண்மையான சோஷலிசம். சோஷலிச தத்துவங்களை யார் அமல்செய்ய முன்வந்தாலும் நாம் அதை ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்று எங்களுக்கு விளக்கம் கொடுத்தார்கள்.

1967ம் ஆண்டு கேரளாவில் கம்யூனிஸ்டுகள் தலைமையில் 7 கட்சி கூட்டணி ஆட்சி நடைபெற்றது. அதில் முஸ்லிம் லீகும் பங்கு பெற்றிருந்தது. நம்மைத்தவிர ஏனைய கட்சிக்காரர்கள் அனைவரும் மதுவிலக்கை அகற்றிவிட வேண்டுமென வரிந்து கட்டிக்கொண்டு நின்ற பொழுது, எங்களுக்கு என்ன செய்வதென்று ஒன்றும் ஓடவில்லை. காயிதே மில்லத்தை அணுகி ஆலோசனை கேட்டோம். அவர்கள் சொன்ன விளக்கத்தில் எங்களது கேள்விக்கான விடை இருந்தது.

அவர்கள் சொன்னார்கள்: ஹிந்துக்கள் பெரும்பான்மையினராக வசிக்கும் நாடு இது, இங்கு இஸ்லாமிய ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கவில்லை. நமக்கு என ஏவல் விலக்கல் உண்டு. அதைக் கடைப்பிடிக்க நாம் கடமைப் பட்டிருக்கிறோம். ஆனால் இதை மற்றவர்கள் மீது திணிக்க நமக்கு உரிமையில்லை. அதேசமயம் மற்றவர்களும் நம்மைப்பார்த்து உங்களது சட்ட திட்டங்களை விட்டுவிடுங்கள் அல்லது மாற்றிக் கொள்ளுங்கள் எனக் கூறவும் முடியாது. அதற்கு நாம் இடம் கொடுக்கமாட்டோம்! மதுவிலக்கை ரத்துச் செய்வது நமக்கு உடன்பாடானதல்ல. நமது எதிர்ப்பை நாம் காட்டித்தானாக வேண்டும். அதை பகிரங்கமாகவே செய்ய வேண்டும். இந்த அமைச்சரவையில் இருப்பதினால் பல நன்மைகளை நமது சமுதாயத்திற்கும் செய்ய முடிகிறது. அந்த வாய்ப்பை இப்போது வீணடித்துவிடக்கூடாது.

இந்த அடிப்படையில்தான் கூட்டு மந்திரி சபையில் முஸ்லிம் லீக் இடம் பெற்றிருந்தாலும் தனது எதிர்ப்பை சட்டசபைக்குள்ளும் வெளியிலும் பகிரங்கமாகவே காட்டிக் கொண்டது.

மதுவிலக்கு ரத்து நடவடிக்கையில் முஸ்லிம் லீகிற்கு எவ்வித பங்கும் கிடையாது என்பது நிரூபிக்கப்பட்டது.

கேரளா முஸ்லிம் லீக் ஒரு மாநாட்டின் போது காயிதே மில்லத்திற்கு ரூ. பத்தாயிரம் ரொக்கத்தையும் ஒரு காரையும் அன்பளிப்பாக வழங்கியது. அவ்விரண்டையுமே அம்மேடையி லேயே பரூக் கல்லூரிக்கு அவர்கள் அன்பளிப்புச் செய்து விட்டார்கள்.

காயிதே மில்லத் ஒரு சிறந்த இறை நேசச் செல்வர். அனுஷ்டானங்களை நிறைவேற்றுவதில் பிடிவாதமானவர். தம்மை ஒரு பெரிய பக்தர் என்பதை கொஞ்சங்கூட வெளிக்காட்டிக் கொள்ள மாட்டார்கள். ''ஷோ காட்டுவது'' என்பது அவர் களுக்கு அறவே பிடிக்காது,

என் போன்ற அவர்களது சீடர்களுக்கு, இஸ் மாயில் சாகிப் ஒரு சுமைதாங்கியாக விளங்கினார் கள். அறவுரையை நாடிச் செல்வோருக்கு அதை வாரி வாரி வழங்கினார்கள். கறைபடியாத தனித் தன்மைக்கு அவர்கள் சொந்தக்காரர். இந்திய முஸ்லிம்களின் இணையற்ற தலைவர் என்று வரலாறு அவர்களைப் பாராட்டும் என்பது நிச்சயம் அவர் களுக்கு அல்லாஹ் மஃபிரத்தை அளிப்பானாக! ஆமீன்.



# அமானிதத்தை உங்கள் கரங்களில் ஒப்புவிப்பது எனது பணி

''முஸ்லிம்களின் வரலாற்றை நீங்கள் தொடர விரும்பினால், முஸ்லிம் லீகை வளர்ப் பது ஒன்றுதான் வழி. அதைத் தவிர வேறு வழி யில்லை. அது இன்றியமையாத ஒன்று.

நமது வரலாறு கீர்த்தி பெற்றது; பெருமைக் குரியது; எண்ணி எண்ணி மகிழத் தக்கது. அந்த வரலாற்றின் தொடர்ச்சி, முஸ்லிம் லீகை நீங்கள் பற்றிப் பிடித்துக் கொள்வதில் தான் இருக்கிறது. முஸ்லிம் லீக் ஒரு அமானிதம்; அதை உங்கள் கரங் களில் ஒப்புவிப்பது எனது பணி.

புதிதாக நீங்கள் ஒரு கட்சியை ஆரம்பித்தால், உங்களால் ஒன்றையும் சாதிக்க இயலாது. ஏற் கனவேயுள்ள கட்சியைத் தொடர்வதன் மூலமா கவே நாம் நன்மைகளைப் பெறமுடியும்; ஒவ் வொரு மாநிலத்திற்கென்று தனித் தனியாக நாம் கட்சிகளை அமைத்துக் கொண்டாலும் அது சரிபட்டு வராது. நாடு முழுவதற்குமாக நமக்கென ஓர் அரசியல் கட்சி மிக மிக அவசியமானது; அது தான் முஸ்லிம் லீக். அக் கட்சியின் வரலாறு மகோன்னதமானது.''

டில்லி ஜும்மா மஸ்ஜித் முன்பு 3-8-70 அன்று நடைபெற்ற முஸ்லிம் லீக் பொதுக் கூட்டத் தில் காயிதே மில்லத் கூறியது.

G. M. பனாத்வால எழுதிய ''சுதந்திரத்திற் குப்பின்னர் முஸ்லிம் லீக்'' என்ற நூலில் இருந்து.



நீதி மன்றத்தில் நீதிபதியாக இருந்த குன் அஹமது குட்டி அவர்கள் காலமாகி விட்டார்கள். திடீரென்ற இந்த நிகழ்ச்சிக்குப் பிறகுஎன்னுடைய எண்ணத்தைத் தெரிந்திருந்த சில நண்பர்கள், என்னிடம் வந்து, ''நீங்கள் டில்லியில் நீதிபதியாக இருப்பதால் உங்களுக்கு அங்கே இருப்பது பிடிக் காமல் வேலையை விட்டுவிடவேண்டுமென்ற எண்ணம் உண்டாகியிருக்கிறது; மாறாக இப் பொழுது காலியாகி இருக்கும் இடத்திற்கு டெல்லியிலிருந்து மாற்றுதல் வாங்கிக் கொண்டு சென்னைக்கே வந்து விட்டால் நீதிபதி பதவியை விட்டுவிடவேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு வராது'' என்று எனக்கு ஆலோசனை சொன்னார்கள். மீண்டும் என்னுடைய மனத்தில் நீதிபதி குன் அஹமது குட்டி அவர்களுடைய திடீர் மரணம் இந்த விளைவை உண்டாக்க வேண்டு மென்ற இறைவனுடைய நாட்டத்தின் காரண மாகவே நேர்ந்திருக்கிறது; ஆகையால் சென்னை உயர்நீதி மன்றத்திற்கு மாற்றுதல் வாங்கிக் கொண்டு ஏன் வந்து விடக்கூடாது என்ற எண்ண மும் உதித்தது. ஆனால் அப்படி மாற்றுதல் வாங்கிக்கொண்டு வருவது என்பது அவ்வளவு இலகுவான காரியம் அல்ல. இந்தியாவினுடைய தலைமை நீதிபதி சம்மதிக்கவேண்டும்; இந்திய சர்க்கார் சம்மதிக்க வேண்டும்; டெல்லி உயர் நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி சம்மதிக்க வேண்டும்; சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி சம்மதிக்கவேண்டும்; தமிழக அரசு சம்மதிக்கவேண்டும். தலைமை நீதிபதிகள் சம்பந்தப்பட்ட வகையில் நான் அவர்களுடன் பேசி அவர்களுடைய சம்மதத்தைப் பெறமுடியும். அரசுகள் சம்பந்தப்பட்ட வரையில் பதவியில் இருப்பவர்கள் யாரையும் எனக்குத் தெரியாது. ஆகவே அவர்களை அணுகுவதற்கு எனக்கு வழி யில்லை. அதே சமயத்தில் அவர்களை அணுகி அவர்களுடைய சம்மதத்தைக் கேட்டுப் பெறு வேனேயானால் அவர்களுக்கு கடமைப்பட்டவனாக ஆகிவிடுவேன். அந்த நிலை எந்த நீதிபதிக்கும் உண்டாகக் கூடாது. ஆகையால் அவர்களை அணுக நான் விரும்பவுமில்லை. எனவே டில்லியி லிருந்து மாற்றுதல் வாங்கிக் கொண்டு நான் சென்னைக்கு வருவதென்பது முடியாத காரியம் என்ற எண்ணமே என் மனதில் இடம் பெற்று விட்டது.

இந்த நிலையில்தான் எனக்கும் காயிதே மில்லத் அவர்களுக்கும் இடையே உண்டான உறவுக்கு தொடக்கம் கிட்டியது.

அந்த சமயத்தில் தமிழ்நாட்டில் காலஞ் சென்ற திரு C. N. அண்ணாதுரை அவர்களை முதல் அமைச்சராகக் கொண்ட தி. மு. க. அரசாங்கம் நடந்து வந்தது. முஸ்லிம் லீக் தி. மு. க. வின் தோழமைக் கட்சி. காயல்பட்டினத்தைச் சேர்ந்த B. A. காக்கா என்று எல்லோராலும் அழைக்கப் பட்ட பரோபகாரி காயிதே மில்லத் அவர்களிடம் அளவு கடந்த ஈடுபாடும் மரியாதையும் கொண்ட வர்கள். அதுபோலவே என்னிடமும் அளவு கடந்த அன்பும் பண்பும் பாசமும் கொண்ட வர்கள். அவர்கள் காயிதே மில்லத் அவர்களிடம் இது பற்றிச் சொன்னால் தமிழக முதலமைச்சர் நிச்சயமாக அவர்களுடைய பரிந்துரையை ஏற்றுக் கொள்வார் என்று சொன்னார்கள். எனக்கோ இதில் ஒரு பெரிய தர்மசங்கடம் இருந்தது. அரசியலில் ஈடுபட்டிருந்த காலத்தில் ஒன்றுக் கொன்று முற்றிலும் முரண்பட்டிருந்த இந்திய தேசிய காங்கிரசை சேர்ந்தவன் நான், முஸ்லிம் லீக்கின் தலைவர்களில் ஒருவர் காயிதே மில்லத், என்ற முறையில் எங்களிருவருக்கும் இடையே எந்தவிதமான தொடர்பும் இல்லாததோடு பின்னரும் எந்தவிதமான தொடர்பும் இல்லாத நிலையில், இப்பொழுது ஒரு சிபாரிசுக்காக அவர் களை அணுகுவதற்கு என்மனம் சிறிதும் ஒப்ப வில்லை. இந்த இடத்தில்தான் B. A. காக்கா அவர்களுடைய பெருமையையும், காயிதே மில்லத் அவர்களுடைய பெருமையையும் ஒருங்கே உணர்ந்து கொள்வதற்கு என்னால் முடிந்தது. B. A. காக்கா அவர்கள் காயிதே மில்லத் அவர் களுடைய உயர்ந்த குணங்களையும் பெருந் தன்மையையும் பல படப் பாராட்டி என்னிடம் பேசியதோடல்லாமல் காயிதே மில்லத் அவர்களை அணுகுவதில் நான் எந்த விதத்திலும் சங்கோஜப் படவேண்டிய அவசியம் இல்லை என உறுதி கூறி விட்டு தாமே முதலில் காயிதே மில்லத் அவர்களைச் சந்தித்து இது பற்றிப் பேசுவதாகக் கூறிவிட்டு சென்றார்கள். சென்று பேசி விட்டு வந்தவர்கள் என் விஷயமாக முதலமைச்சரிடம் தாம் மிக்க மகிழ்ச்சியுடன் பேசுவதற்கு காயிதே மில்லத் அவர்கள் ஒப்புக் கொண்டு விட்டதாக என்னிடம் வந்து தெரிவித்தார்கள். இதற்குப்பிறகும் காயிதே மில்லத் அவர்களை நான் நேரில் பார்க்காம லிருப்பது முறையல்ல என்று கருதியதால் ஒரு நாளையும் நேரத்தையும் முன் கூட்டியே குறிப் பிட்டு அவர்களைச் சந்திக்கச் சென்றேன். பல் லாண்டுகளாக நெருங்கிப் பழகிய ஓர் உடன்பிறப் பினை வரவேற்பதுபோல மிக்க அன்புடனும் பாசத் துடனும் அவர்கள் என்னை வரவேற்று நீண்ட

நேரம் தனிமையில் என்னிடம் பேசிக் கொண்டிருந் தார்கள். அப்படி பேசிக் கொண்டிருக்கும் போது குறிப்பிட்ட என் சொந்த விஷயத்தைப் பற்றி எதுவும் பேசவில்லை. மாறாக அவர்களுடைய நீண்ட கால பொது வாழ்விலிருந்து பிறந்த பல அனுபவங்களையும், அது கற்பித்த பல பாடங் களையும், நாடு, சமூகம், ஆகியவற்றின் நிலை பற்றியும் பேசினார்கள். இப்படி எங்கள் இரு வருக்குமிடையே உண்டான தொடர்பு எனக்கு ஒரு புதிய அனுபவமாகவே இருந்தது.

பின்னர் கோடை விடுமுறைக்குப் பிறகு நான் டெல்லிக்குத் திரும்பிவிட்டேன். அந்தக் காலத் தில் அவர்கள் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்தார்கள். பார்லிமெண்ட் கூட்டங்களுக்காக அவர்கள் அடிக்கடி டில்லி வருவார்கள். அப்பொழு தெல்லாம் அவர்கள் தங்கியிருந்த Western Courtக்கு சென்று அவர்களைச் சந்தித்து நீண்ட நேரம் அவர் களோடு பேசிக்கொண்டிருப்பேன். நானும் என்னுடைய ஒன்பதாவது வயதில் தாயை இழந்தவன்; பதின்மூன்றுவது வயதில் தந்தையை இழந்தவன். இந்த பதின்மூன்று வயது காலத்தில் கூட தந்தையின் அருகில் அதிகமாக இருந்தவன் அல்ல. காரணம் வாணிபத்தின் பொருட்டு என் தந்தை சிங்கப்பூருக்குச் சென்று பல ஆண்டுகள் அங்கே தங்கிவிடுவதுதான். எனவே பெற்றோர் களுடைய அன்பையும் பாசத்தையும் அதிகமாக அனுபவிக்காதவன். அத்தகைய எனக்கு காயிதே மில்லத் அவர்கள் நடந்து கொண்ட முறையும் என்னுடன் பேசிய முறையும் எங்களிருவருக்கு மிடையே ஓர் அழுத்தமான மகன்-தந்தை உறவையே உண்டாக்கி விட்டன. அத்தகைய உறவு ஒன்று உண்டாகிவிட்ட பிறகு என் சொந்த பிரச்சினையைப் பற்றி நான் அவர்களிடம் அதிக மாகப் பேசும் அவசியமில்லாமல் போயிற்று; ஏனெனில் அவர்களே அதனைக் கவனித்துக் கொண் டார்கள்.

சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதிபதி குன் அஹமது குட்டி அவர்கள் மரணத்தின் காரண மாக காலியான இடத்தை நிரப்புவதில் பல முஸ்லிம்கள் தங்களை சிபாரிசு செய்யும்படி காயிதே மில்லத்தை அணுகியிருக்கிறார்கள். ஆனால் காயிதே மில்லத் அவர்கள் அவர்களுடைய வேண்டு கோளுக்கு இசையவில்லை. நான் சென்னை உயர் நீதி மன்றத்திற்கு வந்தால் என் திறமையின் காரணமாக முஸ்லிம் சமுதாயத்திற்கே பெருமை யும் கௌரவமும் கிடைக்குமென்று அவர்கள் உறுதியாக நம்பினார்கள்.

காயிதே மில்லத் அவர்களை அணுகியதைப் போல முதலமைச்சர் திரு C. N. அண்ணாதுரை யையும் பலர் அணுகியிருக்கிறார்கள். ஆனால் இந்த விஷயத்தில், தான் காயிதேமில்லத் யோசனைப்படி தான் நடப்பேன் என்று அவர் உறுதியாகச் சொல்லிவிட்டார்.

நான் சென்னைக்கு மாற்றலாகி வருவதற்கு வேறு சில சிக்கல்களும் இருந்தன. அப்பொழுது தமிழகத்தில் சட்ட அமைச்சராக இருந்தவர் திரு. S. மாதவன் அவர்கள். இந்த சிக்கல்களை யெல்லாம் தீர்க்கும் பொறுப்பை முதலமைச்சர் சட்ட அமைச்சரிடம் விட்டு விட்டார். இந்த சிக்கல்களை தீர்ப்பதற்கான ஒரு வழியையும் நான் சிந்தித்து வைத்திருந்தேன். அதை நான் எப்படி சட்ட அமைச்சரிடம் சொல்வதென்பது பிரச்சினை யாக இருந்தது.

இந்த நிலையில் ஒரு நாள் சட்ட அமைச்சர் திரு S. மாதவன் அவர்கள் டில்லிக்கு வந்திருந் தார்கள். காயிதே மில்லத் அவர்களும் டில்லி யிலேயே இருந்தார்கள். திரு S. மாதவன் அவர்கள் சென்னை சட்டக் கல்லூரியில் என்னு டைய மாணாக்கனாக இருந்தவர். அதனாலும் அவர் மந்திரியாக இருந்ததாலும் அவருடைய இடத்திற்கு நான் சென்று என்னுடைய யோசனை யைச் சொல்வது என்னுடைய தகுதிக்கு எவ்விதத் திலும் பொருந்தாது என்று காயிதே மில்லத் அவர்கள் நினைத்தார்கள்; நானும் நினைத்தேன். அதே சமயத்தில் அவர் சம்பந்தப்பட்ட மந்திரி யாக இருப்பதாலும், பேச்சு என் விஷயமாக இருப் பதாலும் நான் தங்கியிருந்த இடத்திற்கு அவரை வரச்சொல்வது முறையாகாது என்றும் நாங்கள் இருவருமே நினைத்தோம். இந்தக் கட்டத்தில் தான் காயிதே மில்லத் அவர்களின் அனுபவமும் காரியசித்திக்கான வழிமுறையும் ஒரு பெரும் சாதகமாக அமைந்தன. அவர்களுடைய யோசனை என்னவென்றால் முன்னர் குறிப்பிட்ட ஒரு நாளி லும் நேரத்திலும் பார்லிமெண்ட் அங்கத்தினர் என்ற முறையில் அவர்கள் தங்கியிருந்த அறைக்கு நானும் வருவது, திரு S. மாதவன் அவர்களும் வருவது, இருவரும் அங்கே பேசிச் சிக்கலைத்தீர்த்து வைப்பது என்பதாகும். அவ்வாறே நாங்களிரு வரும் பேசி, இருந்த சிக்கல்களைத் தீர்த்து ஒரு முடிவுக்கு வந்தோம். அதன் அடிப்படையில் 1967ல் நவம்பர் மாதத்தில் நான் டில்லியிலிருந்து மாற்றப்பட்டு சென்னை உயர்நீதி மன்றத்தின் நீதி பதியாகப் பதவி ஏற்றுக் கொண்டேன்.

நான் இங்கே வந்த பிறகும் அவர்களிடத்தில் நான் கொண்டிருந்த மரியாதை காரணமாகவும், அவர்கள் என்னிடத்தில் வைத்திருந்த அன்பின் காரணமாகவும் அவர்களை அடிக்கடி சந்திக்கவே விரும்பினேன். அப்படிச் சந்திப்பதில் வேறொரு நன்மையும் இருந்தது. அவர்கள் நேரம் போவது தெரியாமல் பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் நீண்ட காலமாக பொது வாழ்வில் ஈடுபட்டிருந்த தனால் என் போன்றோர் அவர்களிடமிருந்து பல புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியும். உண்மையில் அவர்களோடு பேசிக் கொண்டிருப்பது என் போன்றோருக்கு பாடம் கற்றுக் கொள்வது போன்றே அமையும். இருந் தாலும் ''நீங்கள் இப்பொழுது சென்னைக்கே நீதிபதியாக வந்து விட்டீர்கள்; நீங்களும் நானும் அடிக்கடி சந்திக்கக் கூடாது; அப்படி சந்தித்தா லும் நீங்கள் என்னுடைய இடத்திற்கு வரக் கூடாது; நான் தான் உங்கள் இடத்திற்கு வரு வேன்'' என்று உறுதியாகக் கூறி விட்டார்கள். இது ஒன்றிலிருந்தே அவர்கள் எவ்வளவு பெரிய வர்கள் என்று உணர்ந்து கொள்ள முடியும்.

1968ஆம் ஆண்டு சென்னையில் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு ஒன்று நடந்தது. இந்தியக் குடியரசின் தலைவர் ஜாகிர் ஹுசைன் அவர்கள் வந்து அதைத் தொடங்கி வைத்தார்கள். மாநாட் டின் முடிவில் அந்த மாநாட்டில் கலந்து கொண்ட வெளிநாடுகளிலிருந்து வந்த முஸ்லிம் பிரதிநிதி களுக்கு ஹோட்டல் இம்பீரியலில் இங்குள்ள முஸ்லிம்கள் ஒரு விருந்துபசாரம் கொடுத்தார்கள். அதற்கு எனக்கும் ஓர் அழைப்பு வந்திருந்தது. அதில் காயிதே மில்லத் அவர்களும் கலந்து கொண் டார்கள். என்னை அங்கே கண்ட சில முஸ்லிம்கள் காயிதே மில்லத் அவர்களிடம் அந்த உபசாரத்தில் கலந்து கொள்வதற்கு எனக்கு தகுதி இல்லை என்பது போல் பேசியிருக்கிறார்கள். அதற்குக் காரணம் இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களல் லாத பிற சமய இலக்கியங்களில், குறிப்பாக கம்ப னுடைய ராமாயணத்தில் நான் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்ததாகும். காயிதே மில்லத் அவர் களோ, தன்னிடத்தில் அவ்வாறு கூறியவர்களிடம் என்னை அவர்கள் தவறாக புரிந்து கொண்டிருக் கிறார்கள் என்றும், இஸ்லாத்திலும் இஸ்லாமிய இலக்கியங்களிலும் எனக்குள்ள அறிவும் ஈடுபாடும் பரிச்சயமும் வேறு யாருடையவைக்கும் சற்றும் குறைந்ததல்ல, என்றும் மிக அழுத்தமாகக் கூறி யிருக்கிறார்கள். இந்த பேச்சு நடந்த இடத்தில் நான் இல்லை. ஆனால் அங்கே இருந்த சிலர் என் னிடம் வந்து ''வெகு காலமாக உங்களிருவருக்கு மிடையே எந்த விதமான தொடர்பும் இல்லாம லிருந்தும் கூட உங்களிடத்தில் இவ்வளவு பெரிய மதிப்பும் மரியாதையும் காயிதே மில்லத் அவர்கள் வைத்திருப்பது எங்களுக்கெல்லாம் பெரிய ஆச்சரியமாக இருந்தது,'' என்று என்னிடம் சொன்ன போது தான் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரிய வந்தது. என்னிடம் சொன்ன வர்களும் என்னையும் காயிதேமில்லத் அவர்களையும் நீண்ட காலமாக தெரிந்தவர்கள் என்பதோடல் லாமல் நான் பிற மதங்களைப் பற்றிய நூல்களில் பெற்றிருந்த பரிச்சயத்தின் காரணமாக என்னைப் பற்றி ஒரு மாதிரியாக எண்ணியிருந்தவர்கள்தாம்.

1970-ல் முஸ்லிம் கலாச்சாரக் கழகம் என்ற கழகத்தின் பெயரில் 'திருக்குர்ஆன் 1400-வது ஆண்டு நிறைவு மலர்' என்ற ஒரு அருமையான நூல் வெளியாயிற்று. அதைத் தொகுத்தவர்கள் நான் முன்னர் குறிப்பிட்ட B. A. காக்கா அவர் களும் மௌலவி M. அப்துல் வஹ்ஹாப் சாஹிப் M. A., B. Th. ஆகியவர்களுமே ஆவர். அதற்குக் கட்டுரைகள் சேகரிப்பதற்காக யார் யாரிடமெல் லாம் எவ்வளவு நாட்களுக்கு எந்த நேரத்திலெல் லாம் B. A. காக்கா அவர்கள் ஓடி அலைந்தார்கள் என்பதை நான் நேரிலேயே அறிவேன். அந்த மலரில் ''திருக்குர்ஆனைப் பற்றித் திருக்குர்ஆன்'' என்ற தலைப்பில் என்னுடைய கட்டுரை ஒன்றும் இடம்பெற்றிருக்கிறது. அந்த மலருக்கு காயிதே மில்லத் அவர்கள் ஒரு வாழ்த்துரை வழங்கிய தோடல்லாமல் அந்த மலரையும் அவர்கள் தாம் புதுக்கல்லூரி வளாகத்தில் நடந்த ஒரு விழாவில் வெளியிட்டார்கள். அப்படி வெளியிடும் பொழுது என்னுடைய கட்டுரையைப் பற்றிக் குறிப்பிட்டு, அதனைப் பாராட்டி அதை எழுதியதற் காகவே என்னை ஓர் ஆலிம், மௌலவி என்றே கூறலாம் என்று சொன்னார்கள்.

நான் மேற் குறிப்பிட்டவற்றையெல்லாம் எழுதுவதற்கு ஒரே காரணம் காயிதே மில்லத் அவர்கள் எவ்வளவு பரந்த மனப்பான்மை உள்ள வர்கள், பண்பில் எவ்வளவு உயர்ந்த நிலையில் நின்றார்கள், பிறரோடு பழகுவதிலும் அவர்களை நடத்துவதிலும் எவ்வளவு தாராளத் தன்மையும் விசால உள்ளமும் கொண்டிருந்தார்கள், அனை வரையும் அணைத்துக்கொண்டு அவர்களிடம் உள்ள குறைகளைப் பெரிதுபடுத்தாமல் அவர்களை தம்மு டைய அன்பாலும் பாசத்தாலும் தம்பால் ஈர்த்துக்கொண்டு தலைமைத் தனத்துக்கு ஒரு சிறந்த வழிகாட்டியாக இருந்தார்கள் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகத்தான்.

பிற்காலத்தில் நோய்வாய்ப்பட்டு அவர்கள் மருத்துவமனையில் இருந்தார்கள். அப்போது அவர்களை பல முறை அவர்களின் உடல் நலம் பற்றி விசாரிப்பதற்காகப் பார்க்கச் சென்றிருக்கிறேன். ஒவ்வொரு முறையும் அறைக்குள் நுழைந்தவுடன் அவர்களே முதலில் ஸலாம் சொல்லி ''சௌக்கியமாக இருக்கிறீர்களா'' என்று என்னைக் கேட்பார்கள். பின்னர் பேசிக் கொண்டிருக்கும்போது கூட அவர்களுடைய உடல் நோயையோ அதனால் அவர்கள் படும் துன்பத்தையோ பற்றி எதுவும் சொல்லாமல் பொது விஷயங்களைப் பற்றியே பேசி விடை கொடுத்தனுப்புவார்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக இன்றைய பொது வாழ்வைப் பார்ப்பவர்கள் காயிதே மில்லத் அவர்கள் வாழ்ந்த முறையைப் பார்த்தால், சமீப காலத்தில் இப்படியும் ஒரு அரசியல் தலைவர் இருந்தார் என்பதை நம்பவே மாட்டார்கள். குரோம்பேட்டையில் இருந்த அவர்களுடைய இல்லத்தை ஒரு அரசியல் தலைவருடைய இல்லம் என சொல்லவே மாட்டார்கள். அது ஓர் ஏழையனுடைய எளிய இல்லமாகவே இருந்து வந்தது. ஓர் அரசியல் தலைவர் என்பதற்காக அவர்களைக் காண்பதற்கு இந்நாட்டிலுள்ள அரசியல் தலைவர்களோ, வெளிநாட்டுப் பிரமுகர்களோ வந்தால் அவர்களுடைய அந்தஸ்துக்கு ஏற்ப அவர்களை இருக்கச் சொல்வதற்குத் தகுந்த நாற்காலிகளோ, சோபாக்களோ அங்கே இல்லை. இறுதிவரையில் அவர்களுடைய வாழ்வும் அவர்கள் வாழ்ந்த இல்லமும் எளிமைக்கு எடுத்துக் காட்டாகவே இருந்தன. அரசியலில் தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு எந்தசுகத்தையுமோ சொத்தையுமோ அவர்கள் தேடிக்கொள்ளவில்லை.

தம்முடைய நாணயத்திற்காகவும், நேர்மைக்காகவும், சேவை மனப்பான்மைக்காகவும், தொண்டுக்காகவும், பிறருக்கு உதவும் ஆர்வத்திற்காகவும் பொது மக்களிடமிருந்து அவர்கள் பெற்றிருந்த மதிப்பும் மரியாதையும் நன்றியுணர்வுமே அவர்கள் தேடி விட்டுச் சென்ற செல்வமாகும். சுருங்கச் சொன்னால் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களும் அவர்களுக்குப் பின்னர் வந்த நான்கு கலீபாக்களும் முஸ்லிம் சமுதாயத்திற்குத் தலைவர்களாக இருந்த போதிலும் தங்களுடைய சொந்த வாழ்க்கையை பிறருக்கு முன் மாதிரியாக அமைத்துக் கொண்டிருந்ததைப் பின்பற்றி வாழவே காயிதேமில்லத் அவர்களும் முயன்றார்கள் என்று சொல்வது மிகையாகாது.

XXXXXXXXXXXXXX:XXXXXXXXXXXXXXX:XXXXXXXXXXXX XXXX

## "இவரைப் போன்ற தலைவர் கிடைப்பது கஷ்டம்"

### பெரியார் ஈ. வே. ரா.

காயிதே மில்லத் அவர்கள் மரணமடைந்தவுடன் அவர்களது சடலம் சென்னை நியூ காலேஜில் பொது மக்கள் பார்வைக்காக வைக்கப் பட்டிருந்தது. பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் தங்களது மரியாதையைச் செலுத்துவதற்காக அங்கே வந்தார்கள். கடுமையான கூட்டம். நான் அங்கு நின்று கொண்டிருந்தேன். பெரியார் அவர்களை எனக்கு நேரில் நெடுநாளைய அறிமுகம் உண்டு. உடனே நான் கூட்டத்தினரை விலக்கி விட்டு ஈ.வே.ரா. வை ஜனாஸாவின் அருகில் அழைத்துச் சென்றேன். அப்பொழுது பெரியார் அவர்கள் என்னிடமும் சுற்றி நின்றவர்களிடமும் ''இப்படிப் பட்ட தலைவர் கிடைப்பது அரிது; நல்ல உத்தமமான மனிதர்; முஸ்லிம் சமுதாயத்திற்கு இவரைப் போன்ற தலைவர் கிடைப்பது கஷ்டம்'' என்று சொன்னார்.

என் காதுகளால் கேட்ட பொன்மொழிகள் இவை.

**ஈரோடு K. A. S. அலாவுத்தீன் சாகிப்**

XXXXXXX XXXXXXXXX:XXXXXXXXXXX:XX XXXXXXXXXXXXX

# தூய்மையின் சின்னம்

முன்னாள் அமைச்சர். க. இராசாராம்.

காயிதே மில்லத் முகமது இஸ்மாயில் அவர்களின் நினைவையொட்டி மலர் ஒன்றினை நண்பர்கள் வெளியிட இருப்பது அறிந்து நான் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். இந்திய அரசியலில் அந்தக் காலத்தில் அடியெடுத்து வைத்தவர்கள் தங்களையே தியாகம் செய்தவர்கள் என்பது வரலாற்று உண்மையாகும். அகில இந்திய முஸ்லிம் லீக் கட்சியின் தலைவராக அவரைத் தேர்ந்தெடுத்தபோதே முகமது இஸ்மாயில் அவர்கள் ஒரு தனித்தன்மை வாய்ந்த தலைவர் என்று நிரூபித்துக் காட்டினார்கள். முகமது இஸ்மாயில் அவர்கள் சென்னையில் ஒரு மிகப் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். இன்றைக்கு சென்னை எழும்பூர் இரயில் நிலையத்திற்கு எதிரே உள்ள நிலங்கள் அனைத்தும் அவரது குடும்பத்திற்கு ஒரு காலத்தில் சொந்தம். அவர் பொதுவாழ்வில் அடியெடுத்து வைப்பதற்கு முன்னால் சென்னையில் அவர் ஒரு சிறந்த வணிகராக விளங்கினார். அப்போது அவருடைய பொருளாதார அறிவைக் கண்டு வியக்காதவர்கள் இல்லை என்றே சொல்லலாம். தான் மட்டும் வணிகத்துறையில் பொருள் ஈட்டுவதோடு மட்டுமல்லாமல் தன்னிடம் வந்து ஆலோசனை கேட்கும் அனைவருக்கும் அறிவுரை வழங்கி அவர்களுக்கெல்லாம் தன்னால் இயன்ற உதவியினைச் செய்து அவர்களும் சிறப்புடன் வாழ ஊன்றுகோலாக அந்தக் காலத்தில் விளங்கினார்கள்.

இந்தியா பிரிந்தபோது, இந்திய முஸ்லிம் லீக்கிற்கு ஒரு தலைவரை தேர்ந்தெடுக்கவேண்டிய பெரும் பொறுப்பு ஜனாப் ஜின்னா அவர்களுக்கு ஏற்பட்டது. அகில இந்தியாவில் எத்தனையோ தலைவர்கள் இருந்தாலும் முகமது அலி ஜின்னா அவர்கள் மதிப்பிற்குரிய காயிதே மில்லத் அவர்களையே தலைவராக தேர்ந்தெடுத்தார்கள். காயிதே மில்லத் அவர்கள் என்றைக்கு அந்த பொறுப்பை ஏற்றார்களோ அன்று முதல் இந்தியாவிலே வாழுகின்ற சிறுபான்மை இனத்தவரான முஸ்லிம்களின் நலனை பாதுகாக்கவும் அதே நேரத்தில் இந்து - முஸ்லிம் ஆகியோருடைய மனக்கசப்புகளை நீக்கி ஒற்றுமை ஏற்படுத்த மிகவும் பாடுபட்ட தலைவர் அவர். காயிதே மில்லத் அவர்கள் நல்லதொரு பொருளாதார மேதையாக இருந்தாலும், பொது வாழ்வில் அடியெடுத்து வைத்தவுடன், தனது வியாபாரத் தொடர்புகள் அனைத்தையும் அப்படியே நிறுத்திக் கொண்டார்கள். பொதுவாழ்வில் ஒரு தூய்மையான வழிகாட்டியாக விளங்கவேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டார்கள். சென்னை மாகாண சட்டமன்றத்திலே எதிர்க்கட்சித் தலைவராக பணியாற்றியிருக்கிறார்கள். அப்பொழுதெல்லாம் துணிச்சலோடு தமிழ் மக்களின் நன்மைக்காக அவர்கள் பலகருத்துக்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். மூதறிஞர் இராஜாஜி, பெருந்தலைவர் காமராஜர், அறிஞர் அண்ணா, தந்தை பெரியார் ஆகியோர் மதிப்பிற்குரிய காயிதே மில்லத் அவர்களிடம் பெருமதிப்பு கொண்டிருந்தார்கள் என்பதை நாம் நன்கு அறிவோம். தமிழகத்தின் பொதுப் பிரச்சினைகளில் தந்தை பெரியாரும், ராஜாஜியும் சேர்ந்து பல பொதுக் கூட்டங்களை சென்னை கடற்கரையில் நடத்தி இருக்கிறார்கள். அதிலெல்லாம் காயிதே மில்லத் அவர்களை அழைக்கத் தவறியது கிடையாது.

காயிதே மில்லத் அவர்கள் தனது வியாபாரத்தை நிறுத்தி விட்டதன் காரணமாக, எழும்பூர் இரயில் நிலையத்திற்கு எதிரிலே இருந்த இடங்களை விற்றுவிட்டு சென்னைக்கு ஒதுக்குப்புறமான குரோம்பேட்டையில் ஒரு இடத்தினை வாங்கி வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்தார்கள்.

அவர் அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராக இருந்தார்கள். அப்போது மொழிப் பிரச்சினை தலைதூக்கி இருந்தது. அகில இந்தியாவுக்கு இந்தி மொழிதான் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று சொன்னபோது, அந்தச் சபையிலே யாரும் சொல்லாத கருத்துக்களை காயிதே மில்லத் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். தமிழின் பழமையை எடுத்துச் சொல்லி அதன் இலக்கண இலக்கிய மேம்பாட்டினை விளக்கி அகில இந்திய அளவில் தமிழ் மொழிதான் ஆட்சி மொழியாக இருக்கவேண்டிய மொழி என்று தக்க ஆதாரங்களோடு பேசியவர்தான் நமது காயிதே மில்லத் அவர்கள்.

1962-ம் ஆண்டு நான் இந்திய நாடாளுமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டபோது அவருக்கு அருகிலே உட்காருகிற ஒரு பெரிய வாய்ப்பை நான் பெற்றேன். டெல்லியிலே இருந்து சென்னைக்கு வரும்போதும், சென்னையிலிருந்து டெல்லி போகும் போதும், தான் புறப்படுகிற தேதியை என்னிடத்திலே சொல்லி என்னையும் அழைத்துச் செல்வது அவரது வழக்கம். அப்பொழுதெல்லாம் சென்னையிலிருந்து டெல்லிக்கு இரயிலில் செல்ல 48 மணி நேரம் பயணமாகும். பிரயாணத்தின் போது இந்திய அரசியலில் ஏற்பட்ட திருப்பு முனைகளையெல்லாம் அவர்கள் எங்களுக்கு எடுத்துச் சொல்வார்கள். ரயிலிலே பயணம் செய்யும்போது எங்களையெல்லாம் அவரது செலவிலேதான் சாப்பிடச் செய்வார்கள். சில நேரங்களில் திடுக்கிடக்கூடிய காரியங்களைக்கூட செய்துவிடுவார்கள். இரயில்வே பிளாட்பாரத்திற்கு இறங்கிச் சென்று அங்கே இருக்கிற டீக்கடைகளில் நாலைந்து டீ வாங்கி, தான் இரண்டும் கடைக்காரர் இரண்டுமாக தூக்கி வந்து எங்களுக்கு கொடுப்பார். நாங்கள், ஐயா நீங்கள் இப்படிச் செய்யக்கூடாது என்றால் அவர்கள் ''நீங்கள் எல்லாம் இளைஞர்கள், நன்றாக இருக்கவேண்டும். அதற்காகத்தான் நான் இப்படிச் செய்கிறேன்'' என்று புன்னகையோடு சொல்வார். வாழ்க்கையில் அவர் மிக மிக எளிமையானவர்.

பாராளுமன்றத்தில் ஒருநாள் நானும் காயிதே மில்லத் அவர்களும் மூன்றாவது மாடியில் சில அலுவல்களை முடித்துவிட்டு லிப்டில் கீழே இறங்கிக் கொண்டிருந்தோம். அப்போது இரண்டாவது மாடியில், மிகவும் பலம் வாய்ந்தவர் என்று பேசப்பட்ட அப்போதைய உள்துறை அமைச்சர் திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்களும் அந்த லிப்டில் வந்து ஏறினார். அப்போது ஆக்ரா போன்ற இடங்களில் இந்து முஸ்லிம் கலவரம் ஏற்பட்டு பல முஸ்லிம் குடும்பங்கள் பாதிக்கப்பட்டு இருந்த நேரம். திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் காயிதே மில்லத் அவர்களை நீங்கள் என்னை நேரிலே வந்து பார்க்கலாமே, எனது அறைக்கு வாருங்கள் என்று கேட்டார்கள். அதற்கு காயிதே மில்லத் அவர்கள் தற்பொழுது உங்களிடத்திலே வருவதற்கு வேலை ஒன்றும் இல்லை என்பதை அன்போடு ஆனால் உறுதியோடு மறுமொழி அளித்து விட்டார்கள். என்னிடத்திலே அவர்கள் கொண்டிருந்த நட்பினை நான் எண்ணி எண்ணி பார்க்கிறேன். என்னை அவர் அன்புடன் ''இராஜாஜி'' என்றுதான் அழைப்பது வழக்கம். அறிஞர் அண்ணா அவர்கள் மறைந்தபோது, திராவிட முன்னேற்றக் கழகத்தை எப்படி கட்டிக் காப்பாற்றவேண்டும் என்பதை அவர்கள் எனக்கு எடுத்துச் சொன்னார்கள். அந்த அறிவுரைகளை நான் இன்றைக்கும் மறக்க முடியாது. அவர்கள் முஸ்லிம் லீக் கட்சியின் தலைவராக இருந்த போதிலும் இந்தியாவிலே உள்ள எல்லா சமூகத்தினருக்கும் அவர் ஒரு ஒப்பற்ற தலைவராக திகழ்ந்தார். அவர் தேர்தலிலே நின்றபோதெல்லாம் அவரை மக்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களது உள்ளம் உயர்ந்த உள்ளம். தமிழ் உள்ளம்.

அவர்களது நினைவினை நாம் என்றென்றும் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என்பதே என் அவா.

---

## நிறைவு தரும் செய்தி

1990 ம் ஆண்டு மார்ச் மாதத்தில் மஹாராஷ்டிர மாநில சட்டசபைக்கு நடைபெற்ற பொதுத் தேர்தலில், உமர்காடி தொகுதியில் முஸ்லிம்லீக் சார்பாகப் போட்டியிட்ட, யூசுப் பட்டேல் என்பவர் வெற்றி வாகை சூடினார் என்பது மன நிறைவு தரும் செய்தியாகும்.

# தந்தைக் கொப்பான தனிப்பெரும் தலைமகன்

**வருவாய்த்துறை அமைச்சர் நாஞ்சில் மனோகரன்**

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் இஸ்மாயில் சாகிப் அவர்கள் அதோ என் கண்ணெதிரே காட்சியளித்துக் கொண்டிருக்கிறார்!

பண்பின் பெட்டகமாக, பாசத்தின் பரிமள கந்தமாக-அடக்கத்தின் உயிர்த்துடிப்பாக அமைதியின் அற்புத உருவமாக, எளிமையின் எடுத்துக் காட்டாக, ஆர்ப்பாட்டமின்மையின் அடையாளமாக, ஆரவாரமற்ற அரசியலின் அதிகாரப் பூர்வமான அணிந்துரையாக,

என் கண் முன்னே காட்சி தந்து கொண்டிருக் கிறார்.

விந்தை மகன், என் சிந்தையைக் கவர்ந்த மகன், தந்தைக்கு ஒப்பான தனிப் பெரும் தலை மகன்!

மத மாச்சரியங்களுக்கு அப்பாற்பட்டு மனிதாபிமானம் என்ற மாபெரும் நிலப்பரப்பில் தனி நடை போடுகிறார்.

கோபதாபங்களுக்கு அப்பாற்பட்ட கோமகன் ஒளி சிந்தும் விழிகளில் கவர்ந்திழுக்கும் காந்த சக்தி படைத்த கண்ணிய மிக்க கருத்து வேந்தன்.

கண்ணியத்தின் திருவிளக்காய் இருள்நிறைந்த இதயங்களில் ஒளி பாய்ச்சினார்!

பேரறிஞர் அண்ணாவின் அறிவாற்றலால் காயிதே மில்லத் ஈர்க்கப்பட்டார்!

இஸ்லாமிய சமுதாய மக்களுக்கும், தி. மு. கழக உடன் பிறப்புகளுக்கும் இடையே இணைப்புப் பாலமாக தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் காயிதே மில்லத்!

அரசியல் சட்டத்தை இந்தியத் துணைக் கண்டத்திற்கு இயற்றிய அரசியல் நிர்ணய அவையில் இடம் பெற்றார்! நாட்டுப்பற்று மிக்கவராகவும் உயர்ந்தார்! தான் பேசிடும் தாய்மொழி தமிழுக்காகவும் வாழ்ந்தார்! மொழிக்கு தனிப் பெரும் சிறப்பினையும் பெற்றுத் தந்தார்!

நாடாளு மன்றத்தில், அவரோடு இணைந்து பணியாற்றும் பேற்றினைப் பெற்றவன் நான்!

நாடாளுமன்றத்தில் அவர் பேசஎழும்போது, அமைதி அரசோச்சும்! ஆற்றல் அலை மோதும்! உணர்ச்சி வயப்படாத, எதையும் ஆழமாகச் சிந்தித்து கருத்துக்களை வழங்கிடும் அவரது போக்கே அலாதியானது.

பெரும்பாலும் அவரது பேச்சில் குறுக்கீடுகள் வந்ததில்லை! தரமான ஒரு அரசியல் மேதை என்றே அனைவரும் அவரைப் பாராட்டினர்!

பண்டித நேரு அவர்களின் உணர்ச்சிக் கள மான காட்சியைக் கண்டவன் நான்.

உணர்ச்சிக்கு ஆட்படாத 'களத்தில்' கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களைக் கண்டவன் நான்.

1967-ம் ஆண்டு நடைபெற்ற நாடாளு மன்றத் தேர்தலில் வடசென்னையில் அண்ணா அவர்களால் நான் நிறுத்தி வைக்கப்பட்டேன்!

ஆறு பேர் சட்டப் பேரவை வேட்பாளர்கள், ஆனால் இரண்டு பேர்களில் ஒருவர் முஸ்லிம் லீக் கட்சியின் சார்பிலும், இனியொருவர் சுதந்திராக் கட்சி சார்பிலும் போட்டியிட்டனர்.

பேரறிஞர் அண்ணு அவர்கள், என்னை அழைத்து அனைத்து வேட்பாளர்களும் ''உதய சூரியன்'' சின்னத்தில் போட்டியிட்டால், மக்கள் மத்தியில் குழப்பம் ஏற்படாது! காயிதே மில்லத் அவர்களைச் சென்று பார்—இராஜாஜியிடம் போ—சேதியைச் சொல்—நாடாளுமன்றத் தேர்தலுக்கு உதவியாக இருக்கும் என்று நான் கூறியதாக விளக்கு என்றுர்.

முதலில் நான் காயிதே மில்லத் அவர்களைச் சந்தித்தேன் அண்ணுவின் கருத்தைச் சொன்னேன்.

மனேகரன், எனக்கு ஆட்சேபணையில்லை. நீ வெற்றிபெற வேண்டுமென்பதில் எனக்கு அளவு கடந்த ஆசை எனக் கூறி தட்டிக் கொடுத்தார்.

அடுத்து ராஜாஜி அவர்களிடம் போனேன். ''சின்னத்தை மாற்றவேண்டாம்! உனது வெற்றிக்காக நானே வந்து பேசுகிறேன்'' என்றுர்.

மொத்தத்தில் இரண்டு பேரும் எனது வெற்றிக்கு தங்களது பெருமித ஆதரவைத் தந்தனர். மகத்தான வெற்றிபெற்றேன்! இங்கொன்றை நினைவு கூருவது சாலப் பொருத்தமாக இருக்கும்! உலகில் தேர்தலில் போட்டியிட்ட ஒரு சில தலைவர்களுக்காவது நான் கூறப்போகின்ற வாய்ப்பு கிட்டியிருக்குமா? என எண்ணிப் பார்க்க கேட்டுக் கொள்கிறேன்.

இஸ்மாயில் சாகிப் அவர்கள், ஒவ்வொரு முறையும் நாடாளுமன்றத்திற்குத் தேர்தலில் போட்டியிடும்போது கேரளத்தில், மலையாளிகளை பெருமளவிற்கு உள்ளடக்கிய 'மஞ்சேரி' தொகுதியில் மனு தாக்கல் செய்வார்!

தாக்கல் செய்து முடிந்த மறுநாள் தமிழகத் தேர்தலில் தோழமைக் கட்சிகளுக்காக ஆதரவைத் திரட்ட, வெற்றி பெறவைக்க பாடுபடுவார்!

கேரளத்தில் அவரது தொகுதிக்குச் செல்வதில்லை! ஆச்சரியம், எனினும் உண்மை. தேர்தல் முடிந்ததற்குப் பிறகு லட்சக்கணக்கான வித்தியாசத்தில் கேரள மக்கள் அவரைத் தேர்ந்தெடுப்பர்! இது உலகப் புதுமைகளில் ஒன்றே அன்றே?

நாடாளுமன்றம் முடிந்த பிறகு, சில சந்தர்ப்பங்களில் புகைவண்டியில் அவரோடு பயணம் செய்யும் பாக்கியத்தைப் பெற்றிருந்தேன். இன்றைய இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் சுலைமான் சேட் மதிப்பிற்குரிய முஹமத் கோயா, நண்பர் அப்துஸ் ஸமது ஆக நாங்கள் நான்கு பேரும் பேசிக்கொண்டே வருவோம்!

நாங்கள் பேசுவதைவிட, அவரது சீரிய கருத்துக்களை கேட்டுக் கொண்டே வருவோம்!

ஏறத்தாழ ஒன்றரை நாள் பயணத்தில் காலை தேநீர், சிற்றுண்டி, நண்பகல் உணவு இரவு நேரச் சாப்பாடு—எங்கள் அனைவருக்கும் சேர்ந்து பணம் தருபவர் காயிதே மில்லத் அவர்கள். நாங்கள் வற்புறுத்தித் தந்தாலும் வாங்க மாட்டார்.

குறும்புத்தனத்திற்கு, மறைபொருளில் கூறி, கருத்துக்களைப் புரியவைக்கும் கலையில் தேர்ச்சி மிக்க அண்ணு அவர்கள், ஒரு முறை மைய மண்டபத்தில் உட்கார்ந்திருக்கிறுர் கழக உடன் பிறப்புகள் புடைசூழ!

**நான் நூலகத்திற்குச் சென்றுவிட்டு அண்ணு அவர்களைப் பார்த்து 'எனக்கு இஸ்ரேல் அரசின் அழைப்பு வந்திருக்கிறது போக அனுமதிக்கிறீர்களா' என்று கேட்டபோது.**

**நீ இஸ்ரேலுக்குப் போவாயோ, ஈஜிப்ட் நாட்டுக்குச் செல்வாயோ, உன் இஷ்டம். ஆனல் நான் இஸ்மாயில் சாகிப் அவர்களோடு தான் இருப்பேன்'' என்றுர்.**

எவ்வளவு சாமர்த்தியமாக அரபு நாடுகளின் பக்கம்-பலஸ்தீனிய விடுதலை இயக்கத்தின் பக்கம் நானிருப்பேன் என்பதை, எப்படி இரத்தினச் சுருக்கமாக வெளியிட்டார்! நானும் உங்களோடு, என்றேன்-அண்ணு சிரித்துக் கொண்டார்.

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களின் பெயரில் திண்டுக்கல் மாவட்டத்திற்கு, திண்டுக்கல் காயிதே மில்லத் என்ற பெயரை கலைஞர் சூட்டினுர்!

வாழ்க காயிதே மில்லத்! வளர்க அவர்தம் புகழ்!

நன்றி: மணிச்சுடர்

1970 ஆண்டிலேயே முஸ்லிம் லீக் கொடி டில்லி ஜும்மா மஸ்ஜித் முன்புள்ள முஸ்லிம் லீக் அலுவலகத்தில் பறக்க வாரம்பித்துவிட்டது. 1972ல் நடைபெற்ற டில்லி மெட்ரோபாலிடன் கட்சி ரீதியாகவே முஸ்லிம் லீக் மூன்று வேட்பாளர் களைதேர்தலில் நிறுத்தியது. நான்மட்டுமே வெற்றி பெற்ருலும் மற்றொரு முஸ்லிம் லீக் வேட்பாளர் சுமார் இருநூறு வாக்கு வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தார் என்பதையும் நினைவு கூர வேண்டும். அல்லாஹ் அருளினுல் காயிதே மில்லத் கண்ணுள்ள போதே டில்லி நகரில் முஸ்லிம் லீக் கொடிகட்டிப் பறக்கவாரம்பித்து விட்டது என்பது என் போன்ருேருக்கு பெருமிதம் அளிக்கும் செய்தி யாகும்.

## 2 முஹம்மது இக்பால அல் ஜாபர்

பிஹார் ஷரீப்; நலந்தா. [பிஹார் மாநில முஸ்லிம்லீக் பொதுச் செயலாளராகப் பணியாற்றி வருகிருர்.]

''எனது தந்தை 1965-ம் ஆண்டில் ஹஜ் கடமையை நிறைவேற்றப் புறப்பட்டார்கள். அவர்களை வழி அனுப்பி வைக்க அவர்களுடன் பம்பாய்வரை நானும் சென்றிருந்தேன். பம்பா யில் தங்கி இருக்கும் நாட்களில் காயிதே மில்லத் தைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அந்த ஆண்டு அவர்களும் ஹஜ்ஜுக்குச் சென்ருர்கள். பம்பாயில் அவர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக் கூட்டங்களிலும் நானும் கலந்துகொண்டேன். அவர்களது உரையைக் கேட்ட பின்பு, முஸ்லிம் லீக் கட்சி இந்நாட்டில் அவசியமானதே என்ற முடி வுக்கு நான் வந்து விட்டேன். பம்பாயில் வைத்து காயிதே மில்லத்திடம் ''ஆடோகிராபும்'' பெற் றுக் கொண்டேன்.

ஒரு சில ஆண்டுகள் கழித்து முஸ்லிம் லீக் அமைப்பு விஷயமாக காயிதே மில்லத் பாட்ன வுக்கு வந்தார்கள். அவர்களுடன் நானும் சுற் றுப் பயணத்தில் கலந்து கொண்டேன். இப் பொழுது நான் மாநில முஸ்லிம் லீகின் பொதுச் செயலாளராகப் பணி புரிந்து வருகிறேன்.

## 3) செய்யது ஷஹீத் ஹுசைன்

கான்பூர் முஸ்லிம் லீக் தலைவர்

காயிதே மில்லத்தைப் போன்ற தலைவரைப் பார்ப்பது அரிது. அவர்கள் ஒரு தைரியசாலி யாருக்கும் பயப்படாமல் உண்மையைச் சொன் ஞர்கள்; மனதில் பட்டதைக் கூறினுர்கள். அவர் களை ஒரு ''ஒலியுல்லாவாக'' நான் மதிக்கிறேன். அவர்களுடைய நாணயத்தைப் பற்றியும் ஒழுக்கத் தைப்பற்றியும் ஒருவராலும் குறை சொல்ல முடிய வில்லை. எனக்கு அரசியலில் பல நண்பர்கள் இருக்கிருர்கள். காங்கிரஸ்காரர்கள், கம்யூனிஸ்டு கள், சோஷலிஸ்டுகள் பலர் எனது தோழர்கள். அவர்களாலும் கூட காயிதே மில்லத் பாராட் டப்படுகிருர்கள். அவரது கொள்கைகள் எங்க ளுக்கு ஏற்புடையதாக இல்லை என்பது ஒருபுறம் இருக்க, அவர் ஒரு அப்பழுக்கற்ற, நாணயமான அரசியல்வாதி என்பதை நாங்களும் ஒத்துக் கொள்கிருேம் என்று அவர்கள் கூறுவதுண்டு. அப்படிப்பட்ட தலைவரை நான் பின்பற்றுகிறேன் என எண்ணும்போது நான் அடையும் புளகாங் கிதத்திற்கு அளவே கிடையாது.

## 4) ஜமீல் முஹம்மது கான்

போபால் முஸ்லிம் லீக் தலைவர்

மத்திய பிரதேசத்தில் இனித்தான் முஸ்லிம் லீக் வேரூன்ற வேண்டியுள்ளது. போபால் நகரில் முஸ்லிம் லீக் குறித்து அனைவரும் தெரிந்து வைத் திருக்கிருர்கள்; மக்கள் ஆதரவு இருக்கிறது. அதை உருவாக்கி ஸ்தாபனத்தை இனித்தான் வளர்க்கவேண்டிய சூழ்நிலையில் நாங்கள் இருக் கிருேம்.

காயிதே மில்லத் என்ற ஒரு தலைவர் இந்திய அரசியல் வானில் தோன்ருது போயிருப்பாராளுல், நமது சமுதாயத்தின் எதிர்காலம் எப்படியோ போயிருக்கும். அல்லாஹ் அருளால், அவர் கள் தங்களது கடமையை தைரியமாகவும் துணிச்சலாகவும் செய்து முடித்தார்கள். இப் பொழுது நாம் அவர்களது அடிச்சுவட்டைப் பின் பற்றி கட்சியை வளர்த்து சிறுபான்மையினரின் மேம்பாட்டிற்காகப் பாடுபட வேண்டும்.

## 5) வழக்கறிஞர் அஹமது பக்ஷ்

கோட்டா: ராஜஸ்தான்; ராஜஸ்தான் மா நில முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர்.

முதன் முதலாக காயிதே மில்லத்தைச் சந் திக்க நேர்ந்த பொழுதே, அவர்கள் ஒரு பெரிய மனிதர் என்ற முடிவுக்கு வந்து விட்டேன். அவர் களது தோற்றம், எளிமை, பழகும் சுபாவம், இனிய பண்புகள் முதலியவை என்னை மிகவும் கவர்ந்து விட்டன. இந்த நூற்ருண்டில் அவர்கள் ஒரு ''குதுப்'' என்பது எனது திட நம்பிக்கை

லக்னோவைச் சேர்ந்த ஹாபீஸ் முஹம்மது அக்ரம் சாகிபும் காயிதே மில்லத் குறித்து இதே அபிப்பி ராயத்தைக் கொண்டிருந்தார். தலைவரவர் களுக்கு என்ன பணியை அல்லாஹ் ஒதுக்கி இருந் தானோ அதைப் பூரணமாக நிறைவேற்றிய பின் னரே அவர்கள் மௌத்தானார்கள். இது ஒரு அரிய ''தரஜா'' வாகும்.

முஸ்லிம்லீக் என்ற வார்த்தையையே உச்சரிக்க மக்கள் பயந்து நடு நடுங்கிக் கொண்டிருந்த கால கட்டத்தில், இந் நாட்டில் முஸ்லிம் லீக் அமைப்பை நாடு முழுவதும் அமைத்தே தீரு வேன் என அவர்கள் முழங்கினார்கள் என்றால், அது ஒரு சாதாரண காரியமல்ல. இஸ்லாத்தை விட்டு ஒரு அணுக்கூட பிசகாத முறையிலும், ஷரீஅத் வழியை விட்டு ஒரு அங்குலம் கூட அக லாத ரீதியிலும், அவர்கள் இந் நாட்டில் அரசியல் நடத்தினார்கள். அதில் வெற்றியும் கண்டார்கள். அவரை அரசியல் ரீதியில் எதிர்த்தவர்கள் அனை வருமே அவர்களது அந்தரங்கத்தை மதித்தார்கள்; நாணயத்தைப் போற்றுகிறார்கள்; ஒழுக்கசீலத்தை சிலாகித்துப் பேசினார்கள். அவர்களுக்கு எதிராக ஒரு சுண்டு விரலைக் கூட அவர்களால் மடக்க முடியவில்லை.

## 6) சி. அப்துல் ஹமீது

*மங்களூர், கர்நாடகா.*

காஸர் கோட்டில் வைத்து 1967ம் ஆண்டு முதன் முதலாக காயிதேமில்லத்தை சந்தித்தேன். அன்று முதலே அவர்களது சிஷ்யன் ஆகிவிட் டேன். மங்களூரில் முஸ்லிம் லீக் பொதுக் கூட்டத் திற்கு ஏற்பாடு செய்தேன். மக்கள் பிரமிக்கும் வகையில் ஊர்வலத்தையும் பொதுக் கூட்டத் தையும் நாங்கள் நடத்திக் காட்டினோம். காயிதே மில்லத் இது குறித்து மகிழ்ச்சி தெரிவித்தார்கள்; பாராட்டினார்கள். கடுமையான மழை பெய்த போதிலும் கூட ஊர்வலம் அமைதியாக கோஷங் களை முழங்கிய வண்ணம் கம்பீரமாக நடை போட்டது. நமது எதிரிகள் கூட அதைப் பார்த்து அசந்துவிட்டார்கள்.

ஒரு தடவை மங்களூரில் கடுமையான வகுப் புக் கலவரம் மூண்டுவிட்டது. முஸ்லிம்களுக்கு பெருத்தசேதம்; நஷ்டம். பாதிக்கப்பட்ட மக் களுக்கு நிதிவசூலித்துக் கொடுக்க முஸ்லிம் லீக் முடிவு செய்து களத்தில் இறங்கியது. காயிதே மில்லத்திடமிருந்து நிதி வகைக்கு ஓர் வேண்டு கோள் அறிக்கை கேட்பது என முடிவு செய்து அவர்களிடம் சென்றோம். அப்பீலை எழுதிக் கொடுத்ததுடன் தங்களது ஜேபியிலிருந்து பத்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து எங்களிடம் கொடுத்து, இதை எனது காணிக்கையாக வைத்துக் கொள்ளுங்கள் எனக் கூறினார்கள். மற்றவர்களை நிதிவழங்கும்படி கேட்பதற்கு முன்பு தம்மால் இயன்றதை நாமும் கொடுத்துவிட வேண்டும் என சிரித்துக் கொண்டே சொன்னார் கள். இந்த முன்மாதிரியைக் கண்டு நாங்கள் பூரித்துப் போனோம்.

## 7) முஹம்மது சுலைமான்

*கான்பூர் உ.பி. மாநில முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர்*

1970ம் ஆண்டு பிப்ரவரி மாதம் காயிதே மில்லத்தை வெஸ்டர்ன் கோர்ட் 5 நிர் அறை யில் முதன்முதலாக சந்தித்தேன். என்னைக் கட்டித்தழுவி ஆலிங்கனம் செய்தார்கள். அன்று முதல் நான் முஸ்லிம் லீகன்தான்.

கான்பூருக்கு காயிதே மில்லத் விஜயம் செய் தார்கள். ''குர்ஷித் மன்ஸிலில்'' தங்கினார்கள். ஊர்வலத்திற்கும் பொதுக்கூட்டத்திற்கும் ஏற் பாடு செய்திருந்தோம். ஏராளமான மக்கள் கலந்து கொண்டார்கள். முஸ்லிம் லீகைப்பற்றியும் தலைவர் பேசினார்கள்; இஸ்லாத்தைப் பற்றியும் பேசினார்கள். அவர்களது ஆங்கில உரையை சுலை மான் சேட் சாகிப் உர்தூவில் மொழி பெயர்த் தார்.

ஊர்வலம் சென்று கொண்டிருக்கும்பொழுது மஃரிப் தொழுகை நேரம் வந்து விட்டது. ஊர் வலத்தை அப்படியே நிறுத்திவிட்டு தலைவர் அவர்கள் அருகிலுள்ள பள்ளிவாசலுக்குத் தொழச் சென்றுவிட்டார்கள். ஊர்வலம் அப் படியே நின்றது. தொழக்கூடியவர்கள் தொழுகை யில் கலந்து கொண்டார்கள்; மற்றவர்கள் அப்படியே தெருவில் நின்றார்கள். தொழுகை முடிந்தபின் காயிதே மில்லத் ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். ஊர்வலத்திலுள்ள கூட்டம் கொஞ்சங்கூட குறையவில்லை. திட்டமிட்டபடி ஊர்வலம் முழு தூரத்தையும் கடந்து சென்று பொதுக் கூட்ட மைதானத்தை அடைந்தது.

## 8) வழக்கறிஞர் இக்பால் அஹமது மீரட்

*(துணைத்தலைவர் உ.பி.மாநிலம் முஸ்லிம் லீக்)*

வட மாநிலங்களில் முஸ்லிம் லீக் ஸ்தாபனத் தை ஆரம்பிக்க வேண்டும் என காயிதே மில்லத் முயற்சித்த பொழுது, அவர்களுக்கு முதன் முதல்

கை கொடுத்த ஊர்களில் மீரட்டும் ஒன்று. இந் நகரிலுள்ள முஸ்லிம் வாலிபர்கள் காயிதே மில்லத் தின் கரங்களை வலுப்படுத்த திரண்டு வந்தனர். உத்திரபிரதேச மாநிலத்தில் ஆரம்பகட்டத்தில் துவக்கப்பட்ட பிரைமரி முஸ்லிம் லீக்குகளில் மீரட் நகர் லீகும் ஒன்று. இந்நகரில் காயிதே மில்லத் கரங்களிலேயே முஸ்லிம் லீக்கின் பச்சிளம் பிறைக்கொடி 1970ம் ஆண்டு வாக்கில் ஏற்றி வைக்கப்பட்டது. பெரிய அளவில் பொதுக் கூட்டமும் நடத்தப்பட்டது.

பல முறை மீரட் நகருக்கு கட்சி விஷயமாக காயிதே மில்லத் வந்துள்ளார்கள். அப்பொழு தெல்லாம் பஷீர் அஹமதுகான் வீட்டில் தான் தங்கினார்கள். அந்த இல்லம்தான் முஸ்லிம் லீக் அலுவலகமாகப் பயன்பட்டது.

ஒரு தடவை பெருநாள் தொழுகைக்கே மீரட் நகருக்கு தலைவரவர்கள் வந்தார்கள். அச் சமயம் நடைபெற்ற நிகழ்ச்சிகள் சுவையானவை; பிரமிப்பூட்டக் கூடியவை. வழக்கமாக மீரட் நகரில் இந்நகர முஸ்லிம்கள் அனைவரும் ஈத்காவில்தான் ஒன்றாகத் திரண்டு பெருநாள் தொழுகையை நிறைவேற்றுவார்கள். பெருநாள் அன்று காலை யில் தான் டில்லி நகரிலிருந்து அதிகாலையில் மீரட்டிற்கு காயிதே மில்லத் காரில் புறப்பட்டார் கள். தலைநகரிலிருந்து சுமார் நூறு மைல் தொலைவிலுள்ள மீரட் நகரை குறித்த நேரத்தில் அடைந்து விடலாமென எண்ணியே தலைவர வர்கள் புறப்பட்டார்கள், வழியில் ஏதோ கால தாமதமாகிவிட்டது.

மீரட் நகருக்குள் நுழைந்து ஈத்காவை காயிதே மில்லத்தின் கார் அடையவும், இமாம் சாகிப் வாஜிபான இரண்டு ரக்கஅத் பெருநாள் தொழு கையை நிறைவேற்றி முடிக்கவும் சரியாக இருந் தது! பெருநாள் தொழுகை காயிதே மில்லத்திற் குக் கிடைக்கவில்லை! மீரட்டிலிருந்து அவர்களைக் கூட்டி வரச் சென்ற நண்பர்களுக்கெல்லாம் பெருத்த ஏமாற்றம்; மன வருத்தம்.

இமாம் சாகிப் மிம்பர் மீது ஏறி நின்று குத்பா பிரசங்கத்தை நடத்தவாரம்பித்தார். ஒரு சில நிமிடங்கள் பிரசங்கம் செய்திருப்பார். திடீரென இமாம் சாகிப் ஓர் அறிவிப்புச் செய்தார். அவர் கூறியதாவது:— ''எனது காலில் ஒரு கட்டி இருந்தது. அது உடையாமலும் இருந்தது. ஒரு கட்டுப் போட்டுக் கொண்டு இமாமத் செய்வதற்காக இங்கு வந்தேன். இப்பொழுது எனது காலைப் பார்க்கும் பொழுது அக் கட்டி உடைந்து ரத்தம் வந்திருப்பது தெரிந்தது. நான் தொழுகை நடத்திக் கொண்டிருக்கும் பொழுது அக் கட்டி உடைந்து ரத்தம் கசிய ஆரம்பித்திருக்க வேண்டும். எனவே அந்த நிலைமையில் நான் இமாமத் செய்ததினால், தொழுகை கூடாததாகி விடுகிறது. எனவே மீண்டும் நாமனைவரும் பெரு நாள் தொழுகையைத் தொழ வேண்டியவர் களாக இருக்கிறோம். அதற்கான ஏற்பாடு இப் பொழுது செய்யப்படும்; நாமனைவரும் வாஜி பான இரண்டு ரக்அத்களையும் மீண்டும் தொழ வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம்.''

மேற்கூறிய அறிவிப்பு இமாம் சாகிப் தாமா கச் செய்தது. காயிதே மில்லத் இங்கு தொழ வந்திருக்கிறார்கள் என்பதோ அவர்களுக்குத் தொழுகை கிடைக்கவில்லை என்பதோ அவருக்குத் தெரியாது. சுயமாக அவர் மேற்கூறியபடி அறி விப்புச் செய்கிறார். அகஸ்மாத்தாக கிடைத்த இந்த அரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு காயிதே மில்லத்திற்கு மீரட் நகரில் பெருநாள் தொழுகை கிடைத்து விட்டது!

இந் நிகழ்ச்சி ஒரு அதிசயமாகவே எங்களுக் கெல்லாம் தோன்றியது. மீரட் நகர வரலாற் றில் ஒரே நாளில் இருமுறை பெருநாள் தொழுகை நடந்ததாகவேயில்லை. காயிதே மில்லத்திற்காக இம்மாதிரி ஒரு ஏற்பாட்டை இறைவன் நடத்திக் காட்டி விட்டான் போலும்!

# நாட்டின் காவலர் காயிதே மில்லத்

ஹாஜி P.S.M. செய்யது அப்துல் காதிர், M.A.,B.L.

(தலைவர், காயிதே மில்லத் அகாடமி, சென்னை)

இந்தியத் திருநாடு ஆங்கிலேயர்களின் ஆட்சியில் இருந்து ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தி ஏழாம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் பதினைந்தாம் நாள் (ஆகஸ்ட் 15,1947) விடுதலை பெற்றதற்கு முன்னும், பின்னும் அரை நூற்றூண்டுக்கும் மேலாகத் தாய் நாட்டின் திருப்பணிக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள் கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அல்-ஹாஜ் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள்.

இந்தியத் துணைக் கண்டத்தின் விடுதலைக்காக நாடு தழுவிய அளவிலே ஆங்கில ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்துப் போராட்டம் நடந்துகொண்டிருந்தபோது, மாணக்கர்கள் கல்லூரிகளைத் துறந்து விடுதலைப் போராட்டத்தில் குதிக்க வேண்டும் என்ற காந்திஜியின் அறிவிப்பிற்கிணங்க 1920-ம் ஆண்டு சென்னை கிருத்துவக் கல்லூரியிலே பயின்ற பி. ஏ. பட்டப் படிப்பைத் துறந்து விடுதலைப் போராட்டத்தில் குதித்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

அதே சமயத்தில் ஆங்கில வல்லரசின் பிரித்தாளும் போக்கை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்து சிம்மக் குரல் எழுப்பிய இரட்டையர்கள் மௌலானா முஹம்மது அலி அவர்களும், மௌலானா ஷௌகத் அலி அவர்களும் பிரகடனப்படுத்திய கிலாபத் இயக்கத்தில் தங்களை இணைத்துக் கொண்டு அரும்பணி ஆற்றியவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

இந்திய நாடு வேண்டுவது முழு விடுதலையா, குறை விடுதலையா என்று அகில இந்திய காங்கிரஸ் தலைவர்கள் பிளவுபட்டிருந்த நிலையில் ''பூரண சுதந்திரமே நாட்டின் தேவை'' என்று குரல் கொடுத்த தீவிரவாதத் தலைவர்களின் கரங்களைப் பலப்படுத்தி நெல்லை காங்கிரஸ் மாநாட்டில் முழு விடுதலைக்கான தீர்மானம் வெற்றி பெறத் துணை நின்றவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

காலப் போக்கில் காங்கிரஸ் கட்சியின் போக்கில் கருத்து வேறுபாடு கொண்டு அகில இந்திய முஸ்லிம் லீகில் தங்களை ஐக்கியப்படுத்திக்கொண்டு நாட்டு விடுதலைக்காகவும், சிறுபான்மைச் சமுதாயத்தவரின் பாதுகாப்புக்காகவும் அரும்பாடுபட்டவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

விடுதலைப் போராட்ட காலத்தில், காங்கிரஸ் கட்சியில் பல முக்கிய பொறுப்புக்களை வகித்து அரிய சேவை ஆற்றியதோடு, அகில இந்திய முஸ்லிம் லீகில் தங்களை இணைத்துக் கொண்ட பிறகு அகண்ட மதராஸ் மாகாணத்து முஸ்லிம் லீகின் தலைமையை ஏற்றுக் கட்சியைத் திறம்பட நடத்தி வெற்றி வாகை சூடியவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

காங்கிரஸ் கட்சியும், முஸ்லிம் லீகும் மேற்கொண்ட விடுதலைப் போராட்டம் வெற்றி பெற்று இந்தியத் துணைக் கண்டத்தில் ஆங்கில ஆட்சி அஸ்தமித்துச் சுதந்திரப் பேரொளி பரவத் தொடங்கிய போது, துணைக் கண்டம் இரு தனி நாடுகளாக ஆக்கப்பட்டதன் எதிரொலியாக மக்கள் பரிவர்த்தனை அவசியமாகி குழப்பமும், கொந்தளிப்பும், இனக் கலவரமும், இரத்தக் களரியும் ஏற்பட்டு இந்திய நாடும், மக்களும் பேரிழப்புக்குள்ளாகி இருந்தபோது குன்றென நிமிர்ந்து நின்று அபயக் குரல் கொடுத்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

பிறந்த நாடும், சார்ந்த சமுதாயமும் உரிமையுடனும், உயரிய அந்தஸ்துடனும், உரிய பாதுகாப்புடனும் உயர்ந்து நிற்க அயராது பாடு பட்டதோடு தாய் மொழியாம் தமிழும், தமிழ் நாடும், தமிழ் இனமும் தழைத்தோங்க, தலை நிமிர்ந்து நிற்கத் தொண்டாற்றியவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

அன்னிய ஆதிக்கத்தில் இருந்து மீட்கப்பட்டு விடுதலை பெற்ற இந்தியா, முழுஉரிமை பெற்ற மக்களாட்சி நாடாக மலர அவசியமான அரசியல் சட்டத்தை வகுப்பதற்காக அமைக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபையில் தமிழர் பிரதிநிதிகளாக நாற்பது உறுப்பினர்கள் இருந்தும்கூட, இந்திய நாட்டின் தனிப் பெரும் ஆட்சி மொழியாக இருக்கத் தகுதி பெற்ற ஒரே மொழி தமிழ் மொழிதான் என்று முழங்கியவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

காங்கிரஸ் கட்சியின் போக்கிலும், காங்கிரஸ் ஆட்சியின் செயலிலும் அதிருப்தி கொண்டிருந்த போதிலும், திரு. சி. இராஜகோபாலாச்சாரியார் (இராஜாஜி) அவர்கள் தமிழக முதல்வர் பொறுப்பில் இருந்து விலகியதைத் தொடர்ந்து தமிழக அரசில் ஏற்பட்ட நிச்சயமற்ற தன்மையினால் தமிழ் நாட்டின் நலன் பாதிக்கப்படுகிறது என்பதை உணர்ந்து தமிழக அரசை நிலைபெறச் செய்யும் பொருட்டுக் குடியாத்தத்தில் நடந்த இடைத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளராகப் போட்டியிட்ட திரு. கே. காமராஜருக்கு முஸ்லிம்லீகின் ஆதரவை அளித்து அவரை வெற்றி பெறச் செய்து கவிழ இருந்த காங்கிரஸ் ஆட்சியைத் தூக்கி நிறுத்தித் தமிழ் நாட்டில் நிலையான அரசு அமையச் செய்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

காங்கிரஸ் ஆட்சி தமிழ் நாட்டுக்கு நன்மை பயக்காது என்ற நிலை ஏற்பட்டபோது மூதறிஞர் இராஜாஜி அவர்களையும், பேரறிஞர் அண்ணா (திரு. சி. என். அண்ணாத்துரை) அவர்களையும் ஒன்றிணைத்து முக்கூட்டு அமைத்துத் தேர்தல் களத்தில் குதித்து 1967-ம் ஆண்டுக்குப் பிறகு தமிழ் நாட்டில் காங்கிரஸ் கட்சி தலை தூக்க முடியாதவாறு செய்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

தமிழ் நாட்டின் நெய்வேலிப் பகுதியில் பூமிக்கடியில் படிந்திருக்கும் பழுப்பு நிலக்கரியை வெளிக் கொணர்ந்து அதன் மூலம் மின் உற்பத்தியும், அதன் வழித் தொழில் அபிவிருத்தியும் ஏற்படச் செய்தால் இவற்றின் வாயிலாகக் கொழிக்கும் செல்வச் செழிப்பு தமிழ் நாட்டில் பல தலைமுறையினர் வளமுடன் வாழ வழிகோலும் என்பதை மத்திய, மாநில அரசுகளின் கவனத்திற்கு முதன் முதல் கொண்டு வந்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

இஸ்லாமிய நெறியைத் தங்களது வாழ்வின் நியதியாக ஆக்கிக் கொண்டதன் காரணமாக ''இஸ்மாயில் குழு என்றால் இஸ்லாமிய குழு'' என்ற காயிதே அஃலம் ஜனாப், முஹம்மது அலி ஜின்னா அவர்களின் புகழாரத்தைத் தாங்கியதோடு அண்ணல் நம் பெருமானார் முஹம்மது நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் ''நாட்டுப்பற்று மத நம்பிக்கை (ஈமான்) யின்பாற்பட்டது'' என்ற வாக்குக்கேற்ப இந்தியத் திருநாட்டை இதயப் பூர்வமாக நேசித்தவர்கள் காயிதே மில்லத் அவர்கள்.

மத நம்பிக்கையின்பாற்பட்ட தேசப்பற்றின் காரணமாகத் தாய் நாடு, தாய் மொழி, தாயக மக்கள் முதலியோரின் முன்னேற்றத்திற்காகவும், நலனுக்காகவும் அரை நூற்றாண்டுக்கும் மேலாக அயராது பணி ஆற்றி 'இன்னுயிர் நீத்த தியாகச் செம்மல் அல்-ஹாஜ் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள், இஸ்லாமிய சமுதாயத்தின் (கௌமின்) காவலர் மட்டும்தாமா? அவர்கள் நாட்டின் காவலரும்தாமே.



# கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்

**ஹாஜி. M. ஜமால் முஹம்மது,**
(செயலாளர், காயிதே மில்லத் அகாடமி)

அல்லாஹ்வின் கிருபையாலும், பெரியோர்களின் துஆ பரக்கத்தினாலும், 1985-ம் வருடம் மத்தியில் ஒருநாள் நான் பாளையங்கோட்டை முஸ்லிம் அநாதை நிலையத்திற்குச் சென்றபோது, இறையருட் கவிமணி பேராசிரியர் சகோதரர் ஜனாப் கா. அப்துல் கபூர் சாஹிப் M.A., அவர்கள், கையில் ஒரு பெரிய புத்தகத்துடன் என்னைச் சந்தித்தார்கள். அது என்ன புத்தகம்? என நான் வினவிய போது, காலஞ் சென்ற பேரறிஞர் அண்ணா அவர்கள் நினைவாகத் தமிழ்நாடு அரசு வெளியிட்டுள்ள 'பவள மலர்' எனத் தெரிவித்து அதை என்னிடம் தந்தார்கள். நான் அதைச் சிறிது நேரம் வாங்கிப் படித்துப் பார்த்தேன். அப்போது அவர்கள் என்னை நோக்கி, ''இம்மலரைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' எனக் கேட்டார்கள். நானும் அவர்களிடம், ''உங்கள் மனதில் நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதைத் தான் நானும் நினைக்கிறேன்'' என்றேன். ''அப்படியானால் நீங்கள் என்ன நினைத்தீர்கள்?'' எனக் கேட்டார்கள். நமது தலைவர் கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களுக்கும் இதுபோல் நாம் ஒரு சரித்திர மலர் தயார் செய்ய வேண்டுமென்று சொன்னேன். அவர்களும், ''நமது தலைவர் அவர்கள், நமது சமுதாயத்திற்கும், தாய்மொழிக்கும், தாய்நாட்டிற்கும் ஆற்றிய சேவைகளை அவசியம் கூடிய சீக்கிரமாகச் சேகரிக்க வேண்டுமென்றும், காலம் கடந்தால் பல முக்கிய விஷயங்கள் சேரிக்க முடியாமல் போய் விடலாமென்றும், உடனடியாக இக்காரியத்தில் என்னை ஈடுபடும்படி உற்சாகப் படுத்தினார்கள். அதன் மேல், நானும், அவர்களும் சென்னைக்குச் சென்று, அங்குள்ள முக்கியஸ்தர்களிடம் இது விஷயமாக ஆலோசனை செய்தோம். சென்ற 6—8—85ம் தேதி சென்னை-34. நாராயண சிராங் கார்டன் தெரு M/s மரைக்கா இன்டஸ்ட்ரீஸ் கட்டிட மாடியில் வைத்து, அதன் பார்ட்னர் ஜனாப் ஹாஜி M.B.A. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்கள் தலைமையில், ''கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்'' ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. அதனையடுத்து கனம் A. K. ரிபாயி சாஹிப் B.A,Ex,M.P. அவர்களின் ஆலோசனையின் பேரில் ஜனாப் வீரை M. அப்துர் ரஹ்மான் சாஹிப் அவர்கள், இம் மாநிலத்தின் பல்வேறு பகுதிகளுக்கும், கேரள மாநிலத்தில் பல பகுதிகளுக்கும் சென்று, கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களுடன் தொடர்புள்ள பல பெரியார்களைச் சந்தித்துப் பல விஷயங்களை நேரடிப் பேட்டிகள், கட்டுரைகள், கவிதைகள் வாயிலாகவும், போட்டோக்களும் சேகரித்து வந்துள்ளார்கள்.

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களின் குமாரர் கனம் ஹாஜி J. M. மியாகான் சாஹிப் B.A.Ex.M.L.C அவர்கள், வடமாநிலங்களுக்கும் சென்று, கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களுடன் தொடர்புள்ள பல பெரியார்களைச் சந்தித்து, முக்கிய விஷயங்களைச் சேகரித்து வந்துள்ளார்கள்.

கனம் A. K. ரிபாயி சாஹிப் அவர்கள், இதுவரை சேகரித்த பேட்டிகள், கட்டுரைகள், கவிதைகள், போட்டோக்கள், மற்றும் கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்கள் சட்ட மன்றம், நாடாளு மன்றங்களில் ஆற்றிய உரைகள் ஆகியவற்றையெல்லாம் பரிசீலித்து, அதிலிருந்து முக்கிய விஷயங்களையெல்லாம் தொகுப்பதற்கு மிகவும் சிரமம் எடுத்துக் கொண்டார்கள்.

இம் மலர் வெளியிடுவதற்கு வசூலில் எங்களுடன் ஒத்துழைத்தவர்களில் கீழ்க்கண்டவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

1. நமது கமிட்டியின் தலைவர் ஜனாப் ஹாஜி P.S.M. செய்யிது அப்துல்காதிர் M.A,B.L. அவர்கள், சென்னை.

2. ஜனாப் ஹாஜி A S.M. ஷேக் முஹைதீன் சாஹிப் அவர்கள், தாஜ் ஹோட்டல் திருநெல்வேலி.

3. ஜனாப் ஹாஜி 'மெக்கோ' M. பக்கீர் மைதீன் சாஹிப் அவர்கள் சென்னை.

4. ஜனாப் ஹாஜி அப்துல் மஜீது 'சாஹிப் அவர்கள் சென்னை, Madras Hard Ware's, மாம்பலம்.

5. ஜனாப் ஹாஜி Er. H. அப்துல் ஸமது சாஹிப் B.E. அவர்கள் சென்னை.

6. நமது மலர்க்குழுவின் கூட்டம் நடைபெறுவதற்கு அவ்வப்போது இடம் தந்துதவி, வந்தவர்களை மரியாதையுடன் வரவேற்று உபசரித்து உதவிய ஜனாப் ஹாஜி M. B. A. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்கள், சென்னை இம்பீரியல் ஹோட்டல் அதிபர் கனம் ஹாஜி A. M. புஹாரி சாஹிப் அவர்கள் ஆகியோருக்கும்,

இந்த அரிய மலரைத் தயாரிப்பதில் மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்ட ஜனாப் A.K. ரிபாயி சாஹிப் B. A. Ex, M P. அவர்களுக்கும், வீரை M. அப்துர் ரஹ்மான் சாஹிப் அவர்களுக்கும், கேரளாவில் பல முக்கியஸ்தர்களை சந்திக்க எங்களுடன் சிரமத்தைப் பொருட்படுத்தாமல் வந்த இறையருட் கவிமணி பேராசிரியர் ஜனாப் கா. அப்துல் காபூர் சாஹிப் அவர்கள், ஜனாப் மௌலவி M. அப்துல் வஹாப்சாஹிப் M.A.B.Th. சென்னை அவர்களுக்கும் மற்றும் இதற்காகப் பொருளுதவி செய்த அனைவருக்கும் இன்னும் பல வழிகளில் எங்களுடன் ஒத்துழைப்புகள் உதவிகள் செய்த அனைவருக்கும் நமது மலர்க்குழுவின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இம் மலரை நமது சந்ததியினரும், வருங்கால மக்களும் படித்துப் பலனடைவார்கள் என்று நம்புகிறேன்.

எல்லாம் வல்ல அல்லாஹ், நமது இந்த நல்ல முயற்சிக்குத் தகுந்த பலனைத் தந்து, நமது நல்லெண்ணங்களை பூர்த்தி செய்து, நமக்குள் ஒற்றுமையும் கட்டுப்பாடும் ஏற்படச் செய்து, அவனது நல்லடியார்களின் கூட்டத்தில் நம் அனைவர்களையும் சேர்த்தருள்வானாகவும்! ஆமீன்.

## தந்தையின் புத்திமதி!

ஒரு சமயம் காயிதே மில்லத் அவர்கள் பேட்டைக்கு வந்திருந்தபோது, நான் அவர்களைக் காணச் சென்றிருந்தேன். காரில் வெளியில் எங்கோ புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். என்னையும் காரில் ஏற்றிக் கொண்டார்கள். திருநெல்வேலி டவுனை நோக்கிச் சென்று கொண்டிருந்த கார், போக்குவரத்து நெரிசல் காரணமாக பேட்டை நவாப்பள்ளி பக்கத்தில் ஊர்ந்து கொண்டு செல்ல வேண்டிய நிலையில் நகர்ந்து கொண்டிருந்தது.

அப்பொழுது காயிதே மில்லத் அவர்கள் என்னைப் பார்த்து ''இப் பள்ளியின் பெயரென்ன தெரியுமா?'' என்று கேட்டார்கள். தெரியாது என்று சொன்னேன். ''இதற்குத் தான் நவாப் பள்ளி என்று பெயர் சிறு பையனாக இருக்கும்பொழுது எந்நிலைமையில் அது இருந்ததோ அப்படியே இன்றும் அது இருக்கிறது; ஒரு மாற்றத்தையும் காணவில்லை'' என்று கைசேதப்பட்டார்கள்.

அத்துடன் அவர்கள் நிற்கவில்லை. மேலும் கூறலானார்கள்;—''இந்தக் காலத்தில் பள்ளிவாசல் நிர்வாகத்தை நடத்த கடும் போட்டி இருக்கிறது; நான், நீ என்று முந்திக்கொண்டு பலரும் ஓடி வருகிறார்கள். ஆனால் அந்தக் காலத்தில் இந்த நவாப் பள்ளி நிர்வாகத்தை ஏற்று நடத்தும்படி எனது தகப்பனாரிடம் பலரும் வந்து சொன்னார்கள். எல்லோருமே ஏகோபித்து என் தந்தையிடம் ஒப்புவிக்கத் தயாராக இருந்தார்கள். ஆனால் எனது தகப்பனார் அப் பொறுப்பை ஏற்க மறுத்து விட்டார்கள். அத்துடன் அவர்கள் நிற்கவில்லை. பிள்ளைகளையெல்லாம் கூட்டி வைத்து கீழ்க்கண்ட புத்திமதியையும் கூறினார்கள்:

''எந்த நிர்வாகத்தை ஏற்றாலும் பள்ளிவாசல் நிர்வாகத்தை ஏற்கக் கூடாது. ஏனென்றால், நாம் எவ்வளவு கவனமாகவும் நியாயமாகவும் நடந்தாலும் நம்மையும் அறியாமல் ஒரு சில காசுகளாவது நமது காசில் பள்ளிக் காசு கலந்து விடும்; விடலாம். பள்ளிவாசல் பணம் நமது சொந்தப் பணத்தில் கலக்கவே கூடாது: கூடவே கூடாது. எனவே நீங்கள் இது விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.''

ஒருகணம் மௌனம் நிலவியது. பின்னர் ''இந்தக் காலத்தில் இப்படியா நடக்கிறது?'' என்று ஒரு பெருமூச்சு அவர்களிடமிருந்துவந்தது.

வீரவ நல்லூர் M. அப்துல் ரகுமான

# ஒற்றுமை

மௌலானு எம். அப்துல் வஹ்ஹாப், M.A. B.Th

காயிதே மில்லத் (ரஹ்) அவர்கள் நம்முடன் உரையாடும் போதும், பொதுக் கூட்டங்களில் உரை நிகழ்த்தும் போதும் திருக்குர் ஆனி லிருந்தும், நாயகம் (ஸல்) அவர்களின் ஹதீது ஷரீபிலிருந்தும் நிறைய மேற்கோள்கள் காண்பிப் பார்கள். பள்ளிப் பருவத்திலிருந்தே அரசியலில் ஈடுபாடு கொண்டு, கிலாபத் இயக்க காலத்தி லிருந்து அத்துறையில் நேரடியாக ஈடுபட்டிருந்த ஒருவருக்கு, சமயத் துறையில் இத்துணை பற்றும், ஆர்வமும் எப்படி வந்தது என்று நான் எண்ணிப் பார்த்ததுண்டு.

ஜனுப் அ. க. ரிபாயீ ஸாஹிப் அவர்கள் தம் தந்தையாரின் வாழ்க்கை வரலாற்றை, ''சமுதாய நீரோட்டத்தில் சங்கமம்'' என்ற பெயரில் அருமையாக நமக்கு ஒரு நூல் எழுதி வழங்கியிருக்கிறுர்கள். அதிலிருந்து மார்க்க ஞான மும், மார்க்கப் பணியில் ஆர்வமும் பரம்பரை யாகவே காயிதே மில்லத் அவர்கள் குடும்ப அம்ச மாகத் திகழ்ந்து வந்திருக்கிறது என்று அறிய முடிகிறது.

இஷா அத்துல் இஸ்லாம் சபை நெல்லை மாவட்டத்தில் எண்பது ஆண்டுகளுக்கு முன்னரே நிறுவப் பெற்றது.

''இந்த வேலைகளில் பேட்டையில் நம் இந்தியன் முஸ்லிம் லீக் தலைவர் ஜனுப் ஹாஜி முஹம்மது இஸ்மாயீல் சாகிப் அவர்களின் பிதா அவர்களும், தென்காசியில் நமது சபைத் தலைவர் மு. ந. அப்துர் ரகுமான் சாகிப் அவர்களின் பிதா அவர்களும் முக்கிய பங்குகள் எடுத்திருக்கின்றனர். மேலும், காயல்பட்டணத்திலும் மேற்படி இஷாஅத்வேலைகள் நடை பெற்று வந்தன''.

[சமுதாய நீரோட்டத்தில் சங்கமம் தென் காசி மு. ந. அ. அவர்களின் வாழ்க்கை வரலாறு பக் : 129. பிரசுரம் 1987].

எனவே மார்க்கப் பணியில் பற்றும், தீவிர ஈடுபாடும் தந்தையாரிடமிருந்து மகனுருக்கு வந்ததில் வியப்பில்லை.

இது மட்டுமல்ல:

''காயிதே மில்லத் அவர்களும், அவர்கள் வயதை ஒத்த தோழர்களும், தங்களது இளமைப் பருவத்திலேயே, சமுதாய சேவையில் ஈடுபட்டிருக் கிறுர்கள். ''பால்ய முஸ்லிம் சங்கம்'' என்ற பெயரால் ஓர் அமைப்பை வைத்துக் கொண்டு பற்பல நல்ல காரியங்களை அவர்கள் சமுதாயத்திற்கு ஆற்றி இருக்கிறுர்கள்.

''அந்தக் காலத்தில் நெல்லை மாவட்டத்தில் பேட்டையில் தான், மார்க்கக் கல்வி கற்றுக் கொடுக்கும் உயர்தர மதரஸா இயங்கி வந்தது. தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், மாண வர்கள் இங்குள்ள அரபிக் கல்லூரியில் மார்க்கக் கல்வியில் தேர்ச்சி பெற வருவதுண்டு. அம்மாதிரி கல்வி பயில வரும் மாணவர்களுடனும், அவர் களுக்குப் பயிற்சி அளிக்கும் ஆசிரியர்களுடனும் பால்ய முஸ்லிம் சங்கத்தினர் நெருங்கிப் பழகி, உறவாடி மார்க்க விஷயங்களை நன்கு தெரிந்து இருக்கிறுர்கள்''.

[கவ்மின் காவலர் : பக்; 151.
காயிதே மில்லத் வாழ்க்கை வரலாறு,
நூலாசிரியர் A. K. ரிபாயீ, பிரசுரம் 1983]

ஆக, செல்வத்துளெல்லாம் தலையாய செவிச் செல்வம்; பாரம்பரியமாகக் கிட்டிய மார்க்கப் பற்று; தாங்களே முயன்று நூல்கள் வாயிலாகப் பெற்ற சமய ஞானம் ஆகிய எல்லாம் காயிதே மில்லத் அவர்களிடம் சங்கமமாகி, பிற்காலத்தில் அவர்கள் ஆலிம்களுக்கு ஒப்பப் பேசியும் எழுதியும் வந்ததில் ஆச்சரியமில்லை.

எனவே தான் அரசியல் பேராழியில் எப்படி ஒரு கலங்கரை விளக்கமாக ஒளி வீசினுர்களோ அதே போல் மார்க்கத் துறையிலும் மங்காத தீபமாக அவர்கள் விளங்கினுர்கள்.

தித்திக்கும் திருமறையிலிருந்து அவர்கள் அடிக்கடி மேற்கோள் காட்டும் ஒரு திருவசனம் ஆலு இம்ரான் ஸூராவின் 103 ம் ஆயத்து ஆகும். ''வஃதஸிமூ பி ஹப்லில்லாஹி ஜமீஅவ் வ லா தஃபர்ரகூ......'' என்று துவங்கும் அந்த ஆயத்தில் இறைவன் கூறுகின்முன்:

''மேலும், நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் கயிற்றை வலுவாகப் பற்றிப் பிடித்துக் கொள் ளுங்கள்; (மாறுபாடுகள் கொண்டோராய்) நீங்கள் பிரிந்து விடாதீர்கள்; உங்கள் மீதிலான அல்லாஹ் வின் நிஃமத்களை—அருள் கொடைகளை—நினைவு கூர் வீர்களாக: நீங்கள் பகைவர்களாக இருந்தீர்கள் —உங்கள் இதயங்களை அவன் அன்பினுல்இணைத்து, தன்னுடைய நிஃமத்தைக் கொண்டு, உங்களைச் சகோதரர்களாக்கினுன்; (அன்றியும்) நீங்கள் நெருப்புக் கிடங்கின் விளிம்பில் இருந்தீர்கள்; (அதில் நீங்கள் விழுந்து விடாதவாறு) அதனின் றும் உங்களை அவன் காப்பாற்றினுன்: நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு இவ்வாறு அல்லாஹ் தன் திருவசனங்களை உங்களுக்கு விவரித்துக் காண்பிக்கின்முன்.''(3:103)

திருக்குர்ஆனின் ஆயத்துகள் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் இறைவனுல் அருளப்பட்டவை யெனினும், அவற்றில் பொதிந்து நிற்கும் பேருண்மைகள் எக்காலத்துக்கும் பொருத்த மானவை. அவை எந்தச் சூழ்நிலையில் அருளப் பட்டவை என்னும் ஆய்வு தப்ஸீரின்-திருமறை விரிவுரையின்—ஓர் முக்கிய அம்சமாகும். இதற்கு ஸபபு நுஸூல்''—(திருவசனம்) இறங்குவதற் கான காரணம் என்று பொதுவே சொல்லப் பெறும். திருமறை விரிவுரையின் இப்பிரிவுக்கு முன்னேடியாக விளங்கியவர்கள் ஸய்யிதுல் முஜத்திதீன் இமாம் ஷாபியீ (ரஹ்) ஆவார்கள்.

அப்பாஸிய வம்சத்துக்கு எதிராக இமாம் ஷாபியீ (ரஹ்) அவர்கள் பிரச்சாரம் செய்வதாகக் குற்றம் சாட்டப்பட்டு, அப்பாஸிய கலீபா ஹாரூனுர் ரஷீது முன் அவர்கள் நிறுத்தப் பட்டார்கள்.

கனத்த விலங்கு பூட்டப்பட்டவர்களாய்த் தம் முன்னே நிற்கும் இமாம் அவர்களைப் பார்த்து:

''உம்மைப் பற்றி வெகுவாகக் கேள்விப் பட்டிருக்கின்றேன். ஹஸ்ரத் அலீ அவர்களுடைய குடும்பத்தாருடன் சேர்ந்து நீர் நமக்கு எதிராகக் கிளர்ச்சி செய்வதாகத் தகவல்கள் கிடைத்திருக் கின்றன. எல்லோரும் வாள்களை ஆயுதங்களாக உபயோகித்தால், உம் நாவே (உம்முடைய பேச்சே) உமக்கு ஆயுதமாகப் பயன்படுவ தாகத் தெரிகிறது. உம்மைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.'' என்று பேச்சைத் துவங்கினுர் கலீபா ஹாரூனுர் ரஷீது!

''நம்முடைய பேச்சுக்கு இந்த விலங்கு பெரும் தடையாக அல்லவா இருக்கிறது!'' என்று ஷாபி (ரஹ்) அவர்கள் பதிலிறுத்தார்கள்.

கலீபாவுடைய கட்டளையின் பேரில் விலங்கு அகற்றப்பட்டது.

''கலாமுல்லாஹ்வை (இறைவனின் வேத நூலை)ப் பற்றி உமக்கென்ன தெரியும்?'' என்று கலீபா வினவுகிறுர்............

''குர்ஆனிலே எதைப் பற்றிக் கேட்கின்றீர்? குர்ஆனின் அறிவுப் பரப்பு அளவிடற்கரியது!அதில் எதைப் பற்றித் தெரிய வேண்டும்? அதிலுள்ள கட்டளைகளா, உவமானங்களா, அல்லது ஆகமங் களா, உறுதிப்பாடுகளா? மக்காவில் அருளப்பட்ட திருவாக்கியங்களா, அல்லது மதீனுவில் இறங்கிய வையா? அல்லது பகலில் இறங்கிய ஆயத்துகளா, அல்லது இரவில் அருளப் பெற்ற திருவாக்கி யங்களா!...... என்று எழுபத்து மூன்று வகை களாகப் பிரித்துக் காண்பித்து, இமாம் அவர்கள் கேட்டார்கள்.

''ஒரு மனிதன் இவ்வளவு அறிவையும் பெற இயலுமா?'' என்று ஆச்சரியத்துடன் வினவினுர் ஹாரூனுர் ரஷீது.

(இக்கட்டுரையாசிரியரின், ''நன் மணிகள் நால்வர்'' நான்கு இமாம்கள் வரலாறு—எனும் நூலிலிருந்து இரண்டாம்பதிப்பு.

பக் : 103—104)

திருக்குர் ஆன் விளக்கத்தின் எழுபத்து மூன்று அம்சங்களில் ஒன்றுதான் ஸபபு நுஸூல். இந்த அடிப்படையில், காயிதே மில்லத் அவர்கள் அடிக்கடிஓதிக்காட்டும் வஃதஸிமூபி ஹப்லில்லாஹி ஜமீஆ... என்னும் ஆயத்தை ஆய்ந்தோமானுல் சுவையான தகவல்கள் கிடைக்கும்.

இமாம் பஃகவீ (ரஹ்) ஹஸ்ரத் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிப்பதாகக் கூறுகிருர்கள்:

பெருமானார் (ஸல்) திருவாய் மொழிந்தார்கள்; ''அல்லாஹு தஆலா உங்களில் மூன்று அம்சங்கள் இருப்பதைப் பற்றி திருப்தி கொள்கிறான். மூன்று தன்மைகள் இருப்பது பற்றி வெறுப்படைகிறான்.

அல்லாஹ் திருப்தியடையும் மூன்று அம்சங்களாவன :

(1) அல்லாஹ்வுக்கு எதனையும், எவரையும் இணை வைக்காது அவனை மட்டுமே வணங்க வேண்டும்.

(2) ஹப்லுல்லாஹ்-அல்லாஹ்வின் கயிற்றை நீங்கள் ஒருமித்து பற்றிப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

(3) உங்கள் மீது அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஆட்சிப் பொறுப்பேற்றிருப்போருடன் இணக்கமாக இருக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா உங்களில் வெறுக்கும் மூன்று தன்மைகள்.

(1) வீண் வதந்திகளைப் பரப்புதல்.

(2) பொருளை வீண் விரையம் செய்தல்.

(3) துருவித் துருவி வீண் கேள்விகள் கேட்பதில் மிகைத்திருத்தல்.

[மீக் கூறிய ஆயத்தின் விளக்கவுரையாக ''தப்ஸீர் காஸினில்'' இடம் பெற்றிருப்பது பக்கம் 343-பாகம் 1]

இங்கும் ''ஹப்லுல்லாஹ்''—அல்லாஹ்வின் கயிறு—என்றே பெருமானார் (ஸல்) கூறுகிறார்கள். முற்காலங்களில் கட்டியான கயிறுகளினால் கப்பல்களைப் பிணைப்பார்கள். அதற்கு CABLE (கேபிள்) என்று சொல்லப்பெறும். ஆங்கிலப் பேரகராதிகளில் CABLE என்னும் சொல்லும் ''ஹப்லு'' என்னும் அரபிச் சொல்லிலிருந்து வந்ததாகவே குறிக்கப்பட்டிருக்கும்.

இங்கு ''ஹப்லுல்லாஹ்'' என்னும் சொற்றொடருக்குப் பெரும்பான்மையான விரிவுரையாளர்கள் திருக்குர்ஆனும், அதன் போதனைகளும் என்றே பொருள் கொண்டிருக்கின்றனர்.

உயரமான,சிரமமான ஒருபாதையில் ஒருவன் ஏறும்போது, தன்னுடைய கால்கள் சருகி விடாமல் இருப்பதற்காகத் தக்க இடங்களில் கயிறுகளைக் கட்டி அவற்றைப் பிடித்துக் கொண்டு அவன் மேலே ஏறினால், தான் நாடிய இடத்தை அவன் அடைவான். அது போன்று, உயரிய இலட்சிய வாழ்க்கையை அடைய விரும்பும் ஒரு முஃமின் திருக்குர்ஆனையும், அதன் அடிப்படையில் வகுக்கப் பெற்ற சட்டங்களையும் பற்றிப் பிடித்தவனாக முன்னேறினால் நிச்சயம் வெற்றி பெறுவான்.

இந்த ஆயத் அருளப்பெற்ற பின்னணியையும் தெரிந்து கொள்வோம்.

பெருமானார் (ஸல்) அவர்களின் ஹிஜ்ரத்துக்கு முன்னர் மதீனாவுக்கு யத்ரிப் என்ற பெயர் இருந்தது. அந்நகரில் அவ்ஸ், கஸ்ரஜ் என்ற இரு கோத்திரங்கள் இருந்தன. இந்த அவ்ஸும் கஸ்ரஜும் பூர்வீகத்தில் உடன்பிறந்த சோதரர்களாவர். ஆனால் அவர்கள் பெயரில் தோன்றிய இரு கோத்திரங்களும், தத்தமக்குள் மாறுபட்டு, கடும் பகைவர்களாகி நூற்று இருபதாண்டுகள் தொடர்ந்து போரிட்டு வந்தனர்.

இக்கால கட்டத்தில்தான் நாயகம் (ஸல்) நுபுவ்வத் அருளப் பெற்றவர்களாய் தங்களுடைய பிரச்சாரத்தை மக்காவில் துவங்கினார்கள். அப்போது அறுவர் மக்காவுக்கு வந்தனர். ரஸூலுல் அக்ரம் (ஸல்) அவ்வறுவரையும் இஸ்லாத்தின் பால் அன்புடன் அழைத்தார்கள். அவர்களும் விரும்பி இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர்.

''இறைவன் என் மீது அருளியிருக்கும் இந்த ரிஸாலத்தை - தூதுத்துவத்தை - மனிதர்களுக்கு எத்தி வைப்பதில், நீங்கள் எனக்கு உதவியாக இருப்பீர்களா?'' என்று அவ்வறுவரிடமும் பெருமானார் (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

''எங்கள் கூட்டத்தாரையும் இம்மார்க்கத்தின் பால் அழைப்போம். அவர்களும் நம்முடன் சேர்ந்து விட்டால், உங்கள் சிறப்பு வேறொருவருக்குமில்லை என்று!'' அவர்கள் பதிலிறுத்தார்கள். பின்னர் யத்ரிபிலிருந்து பன்னிருவர் மக்காவுக்கு வந்து இஸ்லாமாகித் திரும்பினார்கள். அங்கும் இஸ்லாம் பரவலாயிற்று. அங்குள்ளவர்களுக்குத் திருக்குர்ஆனை ஓதிக்கொடுக்க முஸ்அபு (ரலி) என்ற தோழரை நாயகம் (ஸல்) அனுப்பி வைத்தார்கள். அவர்கள் வாயிலாகவும் பலர் இஸ்லாத்தைத் தழுவினர்.

இறுதியாக அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு கோத்திரங்களிலிருந்தும் எழுபது பேர் மக்காவுக்கு வந்து, ''தாங்கள் எங்கள் ஊருக்கு வந்து விடுங்கள், உங்களுக்கு உறுதுணையாக இருக்கிறோம் என்று அழைத்தனர். நாயகம் (ஸல்) அவர்களும் அவ்வழைப்பினை ஏற்று அல்லாஹ்வின் கட்டளைப்படி ஹிஜ்ரத் செய்தார்கள். 'யத்ரிபும்' மதீனத்துந் நபி—நபியுடைய பட்டணம் என்ற புதுப் பெயர் பெற்றது. அதுவே நாளடைவில் மதீனா என்று அழைக்கப் பெற்றது.

அவ்ஸும், கஸ்ரஜும் இஸ்லாமானதன் மூலம் தத்தம் பகையை மறந்து, மாறுபாடுகளை மறந்து சோதரர்களாயினர்.

அப்போது தான் இந்த ஆயத்து அருளப் பெற்றது. எனவே மாறுபாடுகளை மறந்து, அல்லாஹ்வின் கயிற்றைப் பற்றிப் பிடித்து, இணைந்து, இசைந்து வாழும் சகோதரர்களாகி விடுங்கள் என்று அல்லாஹு ஸுப்ஹானஹு வ தஆலா அறிவுறுத்துகின்றான்.

இங்கு ஒரு கேள்வி எழும்? மத்ஹபுகளுக்குள் மாறுபாடுகள் இல்லையா என்று. ஆனால் மத்ஹபுகளுக்குள் இருப்பவை வேறுபாடுகள்; அவை மாறுபாடுகள் அல்ல. இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு எவ்விதத்திலும் முரண்படாமல் மேலும் இபாதத்தை ஊக்குவித்து நலம் பயப்பவை. அவை ரஹ்மத்துக்குரியவை.

உதாரணமாக: தொழுகையில் ருகூவை யொட்டி, ஷாபிகள் தம் கைகளை உயர்த்துவார்கள். இதற்கு ''ரஃபவுல் யதைன்'' இரு கைகளை உயர்த்தல் என்று சொல்லப் பெறும். ஹனபிகள் அவ்வாறு செய்வதில்லை 'ஏன் இந்த வேறுபாடு?' என்று நியாயமான ஐயப்பாடு எழலாம். நாயகம் (ஸல்) இரு முறைகளையும் கையாண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு மத்ஹபிலும் ஒன்றை நிலை நிறுத்தியது கொண்டு அவர்களுடைய ஸுன்னத்து-நடை முறை-முழுவதுமே இன்று வரை வாழ்கிறது. இதுதான் இத்தகைய வேறுபாடுகளுக்கு காரண மாகும்.

மௌலானா முப்தீ முஹம்மது ஷபீஃ (ரஹ்) அவர்கள் இந்த ஆயத்தின் தப்ஸீரில் வேறுபாடு மாறுபாடு இரண்டைப் பற்றியும் மற்றும் அழகாக விளக்கியிருக்கின்றார்கள். (மஆரிபுல் குர்ஆன்— பாகம் இரண்டு—பக்: 125 முதல் 134 வரை)

ஆனால் வேறுபாடுகளைப் பற்றி விவாதித்துக் காலங்கழித்தவர்களாய்-மாறுபாடுகள் நம் சமு தாயத்தை எவ்வாறு அரித்து வருகின்றன என்பதை நாம் மறந்துவிடுகிறோம். அப்படி மாறுபாடுகள் எத்தகைய வேதனையான, அவல மான நிலைகளை உண்டாக்கிவிடுகின்றன என்பதை அறிய கீழ்க்கண்ட நிகழ்ச்சியை ஊன்றிப்படி யுங்கள்.

(1940 ம் ஆண்டு வாக்கில்) ''கல்லிடைக் குறிச்சியில் ஒரு மீலாது விழாவிற்கு மு. ந. அ. அவர்கள் சென்றிருந்தார்கள். கூட்டம் முடிந்ததும் தொழுவதற்காகப் பள்ளிவாசலுக்குப் போக வேண்டுமென்று மு. ந. அ. சொன்னார்கள். கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தவர்கள் முழித் தார்கள். ஒரு வீட்டில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்திருப்பதாகவும், அங்கேயே தொழுது கொள்ளலாம் என்றும் சமாளித்துப் பார்த்தார் கள். பள்ளிவாசலுக்குத்தான் போகவேண்டும் என மு. ந. அ. அவர்கள் வற்புறுத்தவே, அப் பொழுதுதான் உண்மை வெளிப்பட்டது.

''அந்த ஜமாஅத்தில் பள்ளிவாசல் நிர்வாகம் சம்பந்தமாக இரு கட்சிகளாம். இருவரும் சண்டை பிடித்துக் கொண்டு, கோர்ட்டுக்குப் போய், 144 தடை உத்தரவு வாங்கிவிட்டிருந்தார்கள். **பள்ளிவாசல் பூட்டப்பட்டிருந்தது; நீதிமன்றம் 144 தடை விதித்ததிலிருந்து, எவரும் பள்ளிக்கும் செல்லமுடியாது. வழக்குத் தீர்ந்த பிறகு தான் பள்ளிவாசலில் தொழமுடியும் என்ற நிலைமை.**

''பள்ளி வாசலுக்குள் நுழைவதற்கு 144 தடை உத்திரவு என்றதும், மு. ந. அ. அவர் களுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. இரு தரப் பினரையும் கூட்டி வரச் செய்து பேசினார்கள். இரு தரப்பினரும் பிடிவாதமாக இருந்தார்கள். விடிய விடியப் பஞ்சாயத்து நடந்தது; ஒருவரும் விட்டுக் கொடுப்பதாக இல்லை. மு. ந. அ. அவர் களும் விடுவதாக இல்லை. கல்லிடைக் குறிச்சி நிகழ்ச்சி முடிந்ததும், அவர்களுக்கு மற்றொரு முக்கிய வேலை இருந்தது; ஊர் திரும்பியாக வேண்டும். அதையெல்லாம் ஒத்தி போட்டு விட்டு ''பள்ளிவாசல் விவகாரத்தைப் பேசிமுடித்தால் தான் இவ்வூரை விட்டுக் கிளம்புவேன்'' எனப் பள்ளி வாசல் முன்பே அமர்ந்து விட்டார்கள். மூன்று நாள் தொடர்ந்து விவகாரம் நடந்தது. மூன்றாவது நாள் இரு தரப்பாரும் 144 தடை உத்திரவை நீக்கிக் கொள்ளச் சம்மதித்தனர்.........அதற்குப் பிறகு தான் மு. ந. அ. அவர்கள் கல்லிடைக் குறிச்சியை விட்டு நகர்ந்தார்கள்''

[ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ள, ''சமுதாய நீரோட்டத்தில் சங்கமம்'' என்ற நூலின் 136—137 பக்கங்கள்]

இத்தகைய மாறுபாடுகளை ஒழித்து, அல் லாஹ்வின் கயிற்றைப் பற்றிப் பிடிக்க வேண்டும்; அதுதான் அல்லாஹ்வுக்கு உகந்தது—என்றே கால மெல்லாம் காயிதே மில்லத் (ரஹ்) அவர்கள் கண்ணீர் வடிக்காத குறையாய் வேண்டி னார்கள். அவர்களுடைய அரும்பணிகளை நினைவு கூரும் இப்பொன்னான நேரத்தில், ஒவ்வோர் ஊரி லும், ஒவ்வொரு முஹல்லாவிலும், நம்மிடம் மாறு பாடுகள் உள்ளனவா? பூசல்கள் ஏன் எழுந்தன? அல்லாஹ்வின் திருமறையையும் அதை விளக்கிய பெருமானாரின் வழி முறையையும் முன் வைத்து மனக் கசப்புகளை மாற்றி உட்பூசல்களை ஒழித்து, ''உம்மத்து மர்ஹூமா''-அருள்பெற்ற சமுதாயம் —என்ற அழகிய பெயரை நிலைநிறுத்த வேண் டாமா? என்பன போன்ற பிரச்சனைகள் ஆய்வு செய்யப் பெற்று, தீர்வு காணப்பெற்றால்—அதுவே காயிதே மில்லத் (ரஹ்) அவர்கள் நமக்குச் செய்த அளப்பெரும் சேவைகளுக்கு ஓரளவேனும் நன்றி செலுத்தியதாக அமையும்.

**வ ஆகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.**

# கோயில் பேஷ் இமாமைக் கூப்பிடு!

காயிதே மில்லத் அவர்கள் ஹஜ் கடமையை நிறைவேற்றச் சென்றிருந்தபோது, மக்கா நகரில் வைத்து ஒரு சமயம் அவர்களுக்கு காய்ச்சல் வந்து விட்டது. மயக்கமுறும் அளவுக்கு பயங்கரக் காய்ச்சலினுல் காயிதே மில்லத் அவர்கள் தாக்குண்ட பொழுது, அவர்களைச் சுற்றிலும் இருந்தவர்கள், மிகச் சிறந்த ஆஸ்பத்திரியில் தலைவரைச் சேர்க்க வேண்டும் எனப் பேசிக் கொண்டிருந்தனர். சவூதி அரசு ஆஸ்பத்திரியில் நவீன மருந்துகளெல்லாம் இருக்கின்றன என்றும் வெளிநாட்டு ஸ்பெஷலிஸ்டுகள் இருக்கிறார்கள் என்றும் எனவே அங்கு கொண்டு போய்ச் சேர்ப்பது தான் நல்லது என்றும் ஒருவர் கூறினாராம்.

மற்றொருவர், பாக்கிஸ்தான் அரசு மக்காவில் நடத்தும் ஆஸ்பத்திரியில் சிறந்த மருத்துவ நிபுணர்கள் இருக்கிறார்கள் என்றும் எனவே அங்கு கொண்டுபோய்ச் சேர்ப்பதே சிறந்தது என்றும் அபிப்பிராயம் சொன்னாராம். இப்படி இவர்களுக்குள் தர்க்கித்துக் கொண்டிருந்தார்கள்; காயிதே மில்லத்துக்கு சிறிது மயக்கம் தெளிந்ததும், தம்மை இந்திய அரசு நடத்தும் ஆஸ்பத்திரியில் சேர்த்து விடும்படி சுற்றிலும் இருந்தவர்களிடம் சொல்லியிருக்கிறார்கள்.

இவ்விஷயத்தை அறிந்ததும் மக்காவிலுள்ள இந்திய தூதர் ஜனுப் கித்வாய் தாமே நேரடியாக காயிதே மில்லத் தங்கி இருந்த இடத்திற்கு வந்து அவர்களைத் தமது இல்லத்திற்கே அழைத்துச் சென்றுவிட்டார். சிறப்பான முறையில் மருத்துவம் செய்யப்பட்டது. ஒரு சில தினங்களில் தலைவரவர்கள் பூரணகுணமடைந்து பழைய ஜாகைக்கே திரும்பி விட்டார்கள்.

அந்த ஆண்டு ஹஜ்ஜுக்குச் சென்ற சங்கரன் கோவில் அஜீஸ் டிரான்ஸ்போர்ட் ஹாஜி சாகுல் அமீது ராவுத்தர் என்னிடம் மேற்கூறிய தகவலைச் சொன்னதுடன், வெளிநாட்டில் தங்கியிருந்த சமயமும் இந்திய டாக்டர்களிடம்தான் வைத்தியம் செய்து கொள்வேன் என்று தலைவரவர்கள் சொல்லி விட்டதை அவர் மிகவும் சிலாகித்துப் பேசினுர். காயிதே மில்லத்தின் தேசப்பற்று மாசு மருவற்றது எனப் புகழ்ந்தார்.

காயிதே மில்லத் அவர்கள் ஹஜ் கடமையை எல்லாம் பரிபூரணமாக நிறைவேற்றிவிட்டு தாயகம் திரும்பிய பின்னர், சில நாட்கள் கழித்து சொந்த ஊரான பேட்டைக்கு வந்திருந்தார்கள். அப்பொழுது அவர்களைப் பார்க்க நான் சென்றிருந்தேன். பல பேச்சுகளுக்கிடையில் மக்காவில் வைத்து நடந்த வைத்தியம் பற்றியும் கேட்டேன்.

அதற்கு தலைவரவர்கள் சொன்னார்கள்: ''ஒரு வேளை, அந்நிய மண்ணில் தங்கி இருந்தபொழுது, நோயுற்றிருந்த நான் மரணமடைய நேரிட்டுவிட்டால், அப்பொழுது எனது மரணம் அந்நிய நாடுகள் நடத்தும் ஆஸ்பத்திரிகளில் (அவைகளில் எவ்வளவுதான் நவீன மருத்துவ சாதனங்கள் இருந்தபோதிலும்) அமைந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் இந்திய ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டுமென்று கூறினேன். ஸ்தானிகர் வீட்டிலேயே என்னை அவர் வைத்துக் கொண்டார். ஒரு வேளை அங்கு எனது மரணம் சம்பவித்திருந்தால், அது இந்திய மண்ணிலேயே நடந்தது மாதிரி அமைந்து விட்டிருக்கும். ஏனெனில் வெளிநாடுகளில் பணிபுரியும் ஸ்தானிகர் அலுவலகங்கள் அந்தந்த நாட்டு மண்ணில் நடைபெறும் காரியங்களுக்கு ஒப்பானதாகும். இது தான் உலக நாடுகள் கடைப்பிடிக்கும் சம்பிரதாயம்.''

இவ்விளக்கத்தைக் கேட்டதும் எனது உடல் புல்லரித்து விட்டது! வெளிநாட்டில் தங்கி இருந்த போதும், எவ்வளவு பேணுதலாக காயிதே மில்லத் இருந்திருக்கிறார்கள் என்பதை அறிந்து மனம் நெகிழ்ந்து போனேன்!

1970 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் நெல்லை மாவட்டம் குற்றாலத்தில் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் பொதுக்குழு கூட்டம் நடைபெற்றது. ஏதோ ஒரு விஷயம் பற்றி பொதுக் குழுவில் விவாதம் நடந்து கொண்டிருந்தபொழுது காயிதே மில்லத் அவர்கள் தங்கள் முன்பு இருந்தவர்களிடம் ''கோயில் பேஷ் இமாமைக் கூப்பிடுங்கள்'' என்று சொல்லி இருக்கிறார்கள். அச்சமயம் நான் அவையில் இல்லை. கட்டிடத்திற்கு வெளியே யாருடனே பேசிக்கொண்டிருந்தேன்: பொதுக்குழுவிற்கு வந்திருந்த வெளி மாவட்டத்தைச் சேர்ந்த இருவர் அங்குமிங்கும் ஓடி ''கோயில் பேஷ் இமாம் யார்?'' என்று விசாரித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவருக்கும் ஒன்றும் விளங்கவில்லை. வெளியூர்க்காரர்கள் தலைவரிடம் திரும்பச் சென்று அப்படி ஒருவரையும் காணவில்லையே என்று பதில் அளித்தார்கள். அப்பொழுது காயிதே மில்லத் ''அதுதான் சங்கரன் கோயில் பேஷ்இமாம் நூரி ஹஜ்ரத்தைக் கூப்பிடுங்கள் என்றேன்'' என்று சற்று விரிவாகச் சொன்னர்களாம்! உடனே என் இருப்பிடம் நோக்கி சிலர் விரைந்து வந்து என்னை அழைத்துச் சென்றனர். நான் பொதுக்குழு கூட்டத்திற்குள் நுழைந்ததும் அங்கு ஒரே சிரிப்பொலியாக எழுந்தது. பின்னர் என்னவென்று விசாரித்தபோது, காயிதே மில்லத் என்னை அழைத்த விதம் பற்றித் தெரிய வந்தது.

—மௌலவி ஹாஜி எம். எஸ். செய்யது அப்துர் ரகுமான் (நூரிய்யி) சங்கரன் கோயில்.

# பட்டம் தாணுப்பிள்ளை கடிதத்தின் பின்னணி



1947 ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ம் தேதி யன்று பாரதத் திருநாடு பூரண சுதந்திரம் பெற்ற சமயம், இந்நாட்டில் ஐநூறுக்கும் மேற்பட்ட சுதேச சமஸ்தானங்கள் இருந்தன. சுதேச மன்னர்களுடைய அதிகார வரம்பு குறித்துத் திட்டவட்டமான முடிவுகள் எதையும் அறிவிக்காமலேயே, ஆங்கிலேயர்கள் இந்நாட்டை விட்டு வெளியேறி விட்டனர்.

அன்றையத் தினம் துணைப் பிரதமராகவும் உள்துறை அமைச்சராகவும் பணிபுரிந்த சர்தார் வல்லபாய் பட்டேலின் ராஜதந்திரத்தின் விளைவாகவே, சுதேச சமஸ்தானங்கள் அனைத்தும் மத்திய ஆட்சியின் ஏகக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்பட்டன. ஹைதராபாத் நிஜாம் சற்று திமிரிப் பார்த்தார். அவரது சூழ்ச்சிகள் ஒன்றும் வெற்றிபெற வில்லை. அந்த சமஸ்தானமும் இந்திய அரசின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்பட்டது. நாட்டின் இதர பகுதிகளுடன் ஒன்றிணைக்கப்பட்டு விட்டு விட்டது என்பது அனைவரும் அறிந்ததே. அதே போல, கஷ்மீர் சமஸ்தானம் குறித்தும் விவகாரம் எழுந்தது; வியாஜ்ஜியம் ஐக்கிய நாடுகள் வரை தொடர்ந்தது. ஆனால் அதையும் இந்திய அரசு வெற்றிகரமாக சமாளித்து, அப்பகுதியை இந்தியாவுடன் இணைக்கும் ஒப்பந்தத்தில் கஷ்மீர் மன்னரை கையெழுத்திடச் செய்தது.

சுதேச சமஸ்தானங்கள் அனைத்தும் மத்திய அரசின் ''இறையாண்மை'' ஆதிபத்தியத்தை ஏற்றுக் கொண்டதும், இந்நாட்டிலேயே முதன் முதலாக இரு சமஸ்தானங்கள் ஒன்றாக இணைந்த காட்சியை திருவிதாங்கூரிலும் கொச்சியிலும் கண்டோம். அந்நிய ஆட்சியின்போது வெவ்வேறு சமஸ்தானங்களாக, இரு மன்னர்களால் நிர்வகிக்கப்பட்ட கொச்சியும் திருவிதாங்கூரும் ஒன்றாக இணைந்து ஒரே அங்கமாகச் செயல்பட முன் வந்ததை அன்றையத் தினம் பாராட்டாதவர்களே கிடையாது.

மொழி வழி மாநிலங்களாக இந்நாடு 1958-ம் ஆண்டில் திருத்தியமைக்கப்பட்டபோது, திருவிதாங்கூர் கொச்சி இணைப்பு சமஸ்தானத்துடன், அதுவரை மதராஸ் மாகாணத்தின் ஒரு பகுதியாக இருந்த மலபார், மொழி அடிப்படையில் மேற்கூறிய இரு சமஸ்தானங்களுடனும் இணைக்கப்பட்டது. 'கேரளா' என்ற பெயரில் புதிய மாநிலம் அந்த ஆண்டு உருவாகியது.

காஸர் கோட்டிலிருந்து திருவனந்தபுரம் வரையிலுள்ள, மலையாள மொழி பேசும் அப்புதிய மாநிலத்தின் முதன் முறையாக 1958 ம் ஆண்டில் பொதுத்தேர்தல்கள் நடத்தப்பட்டதும், கம்யூனிஸ்டுகள் அம்மாநில ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அது வரை ஆட்சிப் பொறுப்பில் இருந்த காங்கிரஸ்காரர்கள் இதை எதிர்பார்க்கவில்லை; அவர்கள் பெருத்த ஏமாற்றமடைந்தனர்.

E. M. S. நம்பூதிரிபாடு தலைமையில் நடைபெற்ற முதலாவது கம்யூனிஸ்டு ஆட்சியின்போது, அக்கட்சியினர் வலது இடது என பிளவுபட்டு இருக்கவில்லை. ஒரே அமைப்பாகத்தான் இருந்தார்கள்; கேரளாவைப் பொறுத்தவரை, பொதுவுடைமை வாதிகள் ஒரு பெரும் சக்தியாகவே திகழ்ந்தார்கள் என்பதை ஒப்புக்கொண்டுதானாக வேண்டும். சுமார் இரண்டாண்டு காலம் கேரளத்தில் நடைபெற்ற கம்யூனிஸ்டு ஆட்சியை எதிர்த்து ''விமோச்சன சமரம்'' என்ற பெயரில் மன்னத் பத்மநாபன் தலைமையில் ஒரு பெரிய போராட்டத்தையே ஆரம்பிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டதையும் நாட்டு மக்கள் நன்கு அறிவார்கள்.

அந்த விமோச்சன சமரத்தில், காங்கிரஸ் கட்சி ஈடுபட்டிருந்தது. P. S. P. கட்சி, பிரஜா சோஷலிஸ்டுகள், புரட்சி சோஷலிஸ்டுகள், போன்ற கட்சிகளும் கலந்து கொண்டன. மலபாரில் ஒரு சக்தியாக விளங்கிய முஸ்லிம் லீக்கும் அப் போராட்டத்தில் பங்கேற்றுக் கொண்டது.

பொதுவுடைமை வாதிகளுக்கெதிரான விடுதலைப் போராட்டத்தில் பெருமளவில் கிருஸ்தவர்களும் கலந்து கொண்டார்கள்! சுருக்கமாகச் சொன்னால், கம்யூனிஸ்டுகள் அல்லாத ஏனைய கட்சிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து, ஒரே அணியாக நின்று, முழுமூச்சுடன் பாடுபடப் போய்த்தான், விமோச்சன சமரம் வெற்றி பெற்றது. E. M. S. நம்பூதிரிபாடு பதவியிலிருந்து இறக்கப்பட்டார். அம்மாநிலத்தில் மீண்டும் ஒரு பொதுத் தேர்தலுக்கு வழி வகுக்கப்பட்டது; அடிப்படை போடப்பட்டது.

ஒரு சில மாதங்கள் ஜனாதிபதி ஆட்சியின் கீழ் கேரளா வைக்கப்பட்ட பின்பு, அம்மாநிலத்தில் சட்டசபைக்கான பொதுத்தேர்தல் அறிவிக்கப்பட்டது. விமோச்சன சமரத்தின் போது கூட்டுச் சேர்ந்த கட்சிகள் பலவும் ஒன்றாகச் சேர்ந்தே இத்தேர்தலை சந்தித்தன. தேர்தல் முடிவுகள் கூட்டணிக்குச் சாதகமாக இருந்தன என்ற போதிலும் கம்யூனிஸ்டுகளே தனிப்பெரும் கட்சியாக வந்துவிட்டார்கள். ஆனால் அவர்களால் ஆட்சி அமைக்க முடியவில்லை. எதிர் தரப்பினர் கூட்டுச் சேர்ந்தால் மந்திரிசபை அமைக்க முடியும் என்ற நிலைமையிருந்தது. ஆனால் காங்கிரஸ் கட்சியைப் பொறுத்தவரை அதற்கு இது ஒரு ஏமாற்றமே. சட்டமன்றத்தில் தனிப்பெரும் மெஜாரிட்டியான கட்சியாகத் தாம் உருப்பெற முடியவில்லையே என்ற ஏக்கம் காங்கிரஸ்காரர்களை வாட்டி எடுத்தது. அத்தேர்தலில் 44 காங்கிரஸ்காரர்களும் 19 P. S. P. கட்சியினரும், 12 முஸ்லிம் லீக்கர்களும் வெற்றி பெற்றிருந்தனர். சுமார் 60 கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்று தனிப் பெரும் கட்சியாக இருந்தனர். பல கட்சிகளும் சேர்ந்து கூட்டு அமைச்சரவையை அமைக்கலாமென்றால், அதற்கும் காங்கிரசுக்கு முழு சம்மதம் இல்லை. தனக்குள்ள வயிற்றெரிச்சலை அது எப்படியெல்லாமோ வெளிக்காட்டிக் கொண்டது.

கம்யூனிஸ்டு ஆட்சியை எதிர்த்து புரட்சி செய்துஅதை வீழ்த்திவிட்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில், ஒரு மாற்று அரசாங்கத்தை அமைக்க கம்யூனிஸ்டு அல்லாதவர்களினால் முடியவில்லை என்ற உண்மை ஊர்ஜிதப்படுமானால் பொது மக்கள் என்ன நினைப்பார்கள்? எதிர் அணியைப் பற்றி அவர்களது மதிப்பு குறைந்துபோய் விடாதா? மக்கள் மன்றம் என்ன பேசும்? இதெல்லாம் காங்கிரஸ்காரர்களுக்கு மனதில் படவில்லை. தங்களால் ஆட்சி அமைக்க முடியவில்லை என்றதும், கூட்டணியைச் சேர்ந்த மற்றவர்களோடு கூட்டு மந்திரிசபையை ஏற்படுத்த அவர்கள் முன்வரலாம் அல்லவா? கூட்டு மந்திரி சபையில் அங்கம் பெற அவர்களை பிற கட்சிகள் அழைக்கத்தான் செய்தன. ஆனால் காங்கிரஸ்காரர்கள் அதற்கு சம்மதிக்கவில்லை. கூட்டு மந்திரி சபையில் சேர அவர்கள் மறுத்து விட்டார்கள். வேறு வழியில்லாத காரணத்தினால் வேண்டா வெறுப்பாக கூட்டு மந்திரிசபைக்கு ஆதரவு தர காங்கிரஸார் முன்வந்தனர். காங்கிரஸ் அல்லாத மந்திரிசபை ஒன்று கேரளாவில் அமைக்க ஆதரவு தருவதாக காங்கிரஸ் மேலிடம் இறுதியில் முடிவுஎடுத்தது. கம்யூனிஸ்டுகளை ஒடுக்குவதற்கு இதர கட்சிகளுடன் சேர்ந்து போராட்டம் நடத்திய காங்கிரஸ், மந்திரிசபை அமைப்பிலும் கூட்டுச் சேர மறுத்து விட்டது விந்தையே. நாட்டு நலனில் அக்கறை காட்டாது சொந்த கட்சி நலனே பெரிது என அக்கட்சி நினைத்ததைத் தான் இது சொல்லாமல் சொல்லிக் காட்டுகின்றது.

வேறு வழியின்றி இதர கட்சிகளும் இந் நிபந்தனைகளுக்கு இணங்கி, அமைச்சரவை அமைப்பதில் முனைந்தன. 19 சட்டமன்ற உறுப்பினர்களைக் கொண்ட P. S. P.கட்சித் தலைவர் திரு. பட்டம் தாணுப் பிள்ளையை முதலமைச்சராக்கி அவரது தலைமையில் ஒரு கூட்டு மந்திரி சபையை அமைப்பது என முடிவு எடுக்கப்பட்டது. அப்பொழுதும் கூட காங்கிரஸ் கட்சி வேண்டாத பல நிபந்தனைகளை போட முற்பட்டது.

குறிப்பாக, முஸ்லிம் லீக் குறித்து காங்கிரசிற்குள்ள காழ்ப்புணர்ச்சி கொஞ்சமும் நீங்கிய பாடில்லை. அத்தேர்தலில் முஸ்லிம் லீக்கின் ஆதரவினால்தான் அக்கட்சி 44 இடங்களில் வெற்றிபெற முடிந்தது என்ற உண்மையை அது நன்கு அறிந்திருந்த போதிலும், முஸ்லிம் லீக்கின் வளர்ச்சியையும் ஏற்றத்தையும் அது சகித்துக் கொள்வதாகயில்லை, அதனால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

மாநில முதலமைச்சராக ஒப்புக் கொள்ளப்பட்ட பட்டம் தாணுப் பிள்ளை முஸ்லிம் லீக்கிற்கும் அமைச்சரவையில் இடமளிக்க வேண்டும் என்று சொன்னார். டில்லி வரை சென்று காங்கிரஸ் மேலிடத்திடம் வாதாடினார். முஸ்லிம் லீக் அமைச்சர்களும் கூட்டு மந்திரிசபையில் இருப்பார்கள் என்றதும் டில்லி தலைவர்களுக்கு ''ஷாக்'' அடித்த மாதிரியாகி விட்டது. மந்திரி சபைக்கான காங்கிரஸின் தார்மீக ஆதரவை நாங்கள் வாபஸ் வாங்கிக் கொள்வோம் என காங்கிரஸ் கட்சி மிரட்டவாரம்பித்தது. பட்டம்

தாணுப் பிள்ளை மிகவும் இக்கட்டான நிலைக்குத் தள்ளப்பட்டார். முஸ்லிம் லீக்கின் உதவி அத் தேர்தலில் எவ்வளவு பயன்பட்டது என்பது அவருக்குத் தெரியும். முஸ்லிம் லீக்கின் நல் லாதரவு இல்லையென்றால் கம்யூனிஸ்டுகளைத் தோற்கடித்திருக்க முடியாது என்ற உண்மையை நன்கு புரிந்து கொண்ட தாணுப் பிள்ளை, ஒரு கட்டத்தில் தாம் மந்திரிசபை அமைக்க முடியாது என்று கூட கூறி விட்டார்! அவ்வளவு தூரம் அவர் மனச் சஞ்சலங்களுக்குள்ளாக்கப்பட்டார்.

காங்கிரசின் போக்கைப் பார்த்து இதர கூட்டணி கட்சிகளுக்கும் கூட கடுங்கோபம். முஸ்லிம் லீக் கட்சியிலேயே ஒரு சாரார், நமக்கு ஆட்சியில் பங்கில்லையென்றால், இந்த மந்திரி சபையை ஆதரிக்கக் கூடாது என்று கருத்துடைய வர்களாக இருந்தனர். குரோம்பேட்டையிலுள்ள தயாமன்ஸிலுக்கு பல படையெடுப்புக்கள் நடை பெற்றன. காயிதே மில்லத் அவர்கள் பல முறை கேரளா சென்று வரவேண்டியதாயிற்று. கம்யூ னிஸ்டுகளைப் பொறுத்தவரை, இந்நிலவரம் அவர் களுக்கு மிகவும் கொண்டாட்டமாக இருந்தது. தங்களை ஆட்சியைவிட்டு கீழே இறக்கினவர்களால் ஒரு மாற்று அரசாங்கத்தை அமைக்க இயலாது திண்டாடுகிறார்கள் என அந்த முகாமில் ஏகப்பட்ட குஷி! மக்களிடம் இக்கருத்தை வலியுறுத்தி அது தீவிரப் பிரச்சாரத்தில் ஈடுபடலாயிற்று.

கேரளாவில் கம்யூனிஸ்டு அல்லாத ஒரு கூட்டு மந்திரிசபை அமையுமா அல்லது அமையாதா என்பதனை முடிவு செய்யும் பொறுப்பு முஸ்லிம் லீக்கின் கையில் இருந்தது. பட்டம் தாணுப் பிள்ளை அரசை முஸ்லிம் லீக் ஆதரித்தால்தான் அதற்கு சட்டசபையில் பெரும்பான்மை கிடைக்கும். முஸ்லிம் லீக் ஆதரவு இல்லை யென்றால், காங்கிரஸ்காரர்களும் மற்ற கட்சிகளும் எவ்வளவுதான் முயற்சித்தாலும் அமைச்சர வையை உருவாக்க முடியாது. அதுதான் அன்றைய நிலவரம்.

இந்த லட்சணத்தில், முஸ்லிம் லீக்கை ஒரு தீண்டத்தகாத கட்சியாக நடத்த காங்கிரஸ் காரர்கள் செய்த செப்படி வித்தைகள்பலப்பல. சபாநாயகர் பதவியாவது முஸ்லிம் லீக்கிற்குக் கிடைக்குமா என்று பத்திரிக்கைகளில் பல ஹேஷ் யங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. முஸ்லிம் லீக்கர்களிலேயே சிலருக்கு இம்மாதிரி கூட்டணி வேண்டியதில்லை என்று ஒருவிரக்தி நிலைமை. தனித் திருந்து செயல்பட்டால் என்ன என்று ஒரு குரல் கட்சிக்குள்ளேயே எழுந்து நின்றது.

இம்மாதிரியான இக்கட்டான சூழ்நிலையில் தான் காயிதேமில்லத் அவர்கள் துணிவான முடிவு ஒன்றினை எடுத்தார்கள். கட்சி நலன் பெரிதா? நாட்டின் நலன் பெரிதா? கட்சிக்கு இழைக்கப் படும் அவமானங்களைப் பொறுத்துக் கொள்வதா? அல்லது கூடாதா? கேரளாவில் ஒரு மாற்று அரசு அமைய முஸ்லிம் லீக் துணை நின்றது என்று பெயர் வாங்குவது சிறந்ததா? அல்லது முஸ்லிம் லீக்கும் கோபித்துக்கொண்டு போய்விட்டது என்ற பெயர் எடுப்பது நல்லதா? எதற்காக விமோச்சன சமரம் ஆரம்பிக்கப்பட்டதோ அக்குறிக்கோள் நிறை வேறும் தருவாயில், நாம் பின்வாங்கிக் கொள்ள லாமா? வெண்ணெய் திரண்டு வரும் தருவாயில் தாழியை உடைப்பது முறையா? சரியா? குறிப் பாக, காங்கிரஸ் கட்சி அதன் கட்சி நலன்களை மட்டுமே கருத்தில் கொண்டு செயல்பட்டு வரும் சமயம், ஏன் முஸ்லிம் லீக், நாட்டு நலனை உத் தேசித்து கட்சிக்குக் காட்டப்பட்ட மரியாதைக் குறைச்சல்களையும் மென்று விழுங்கிக் கொண்டு, ஒரு முன் மாதிரியாக நடந்துகொள்ளக்கூடாது? மற்றவர்கள் பார்த்து மெச்சும் வண்ணம் நாம் ஏன் செயல்படக் கூடாது?

இப்படிப் பல சிந்தனைகளும் எண்ணங்களும் காயிதே மில்லத்திற்கு ஏற்பட்டிருக்க வேண்டும். அதனால்தான், இறுதியாக, பட்டம் தாணுப் பிள்ளை அமைச்சரவையை எவ்வித நிபந்தனையும் இன்றி ஆதரிப்பது என முடிவு எடுத்தார்கள். கேரளாவில்ஒரு நிலையான அரசு ஏற்படவேண்டும் அரசியலில் ஒரு ஸ்திரத்தன்மை உருவாக வேண்டும், கட்சி நலனை விட 'நாட்டின் நலனே பெரிது என்பதை நிலைநிறுத்த வேண்டும் என்பன போன்ற காரணங்களுக்காகவே முஸ்லிம் லீக் அச்சமயம் அந்த முடிவுக்கு வந்தது.

1960ம் ஆண்டு கேரளாவில் பட்டம் தாணுப் பிள்ளை அமைச்சரவையில் முஸ்லிம் லீக்கிற்கு இடம் கிடைக்கவில்லை என்ற போதிலும் ஜனுப் சீதி சாகிப் சட்டப்பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். E. M. S. நம்பூதிரிபாடு எதிர்க்கட்சித் தலைவர் பதவியில் அமரவேண்டிய பரிதாபம் ஏற்பட்டது. அம்மன்றத்தில் அவரது கட்சிதான் தனிப்பெரும் கட்சி என்றபோதிலும், முஸ்லிம் லீக்கின் ராஜதந்திர நடவடிக்கை காரண மாக எதிர்கட்சித் தலைவர் பதவியில் அவர் அமர வேண்டியதாயிற்று.

இந்த நிலவரத்தை நேரில் கண்ணுற்ற பட்டம் தாணுப் பிள்ளை 27-2-60 அன்று காயிதே மில்லத் திற்கு ஒரு நன்றிக் கடிதத்தைத் தீட்டினார்.



**PATTOM A. THANU PILLAI**
**CHIEF MINISTER**

Trivandrum,
27th February 1960.

My dear Ismail Sahib,

Heartiest thanks for your telegram and letter. I realise how helpful and patriotic you have been in helping to resolve the political tangle in Kerala. I fully hope that your goodwill and co-operation will continue.

With best regards,

Yours sincerely,

A Thanu Pillai

Shri M. Mohamed Ismail,
President, Indian Union Muslim League,
"Daya Manzil",
Chromepet,
via Madras.

''கேரளாவினுடைய அரசியல் சிக்கலைத் தீர்ப்பதற்குத் தாங்கள் எவ்வளவு உதவியாக இருந்தீர்கள் என்பதையும் அது தேசப் பற்று மிக்கதொரு நடவடிக்கை என்பதையும் நான் உணருகிறேன்'' என கேரள முதலமைச்சர் பாராட்டுரை வழங்கியுள்ளார்.

இதுதான் முஸ்லிம் லீக்கின் வரலாறு.

<u>கடிதம்</u>

பட்டம் A. தாணுப்பிள்ளை
முதலமைச்சர்

திருவனந்தபுரம்
27-2-60

எனது அன்புக்குரிய இஸ்மாயில் சாகிபுக்கு,

தாங்கள் அனுப்பிய கடிதத்திற்கும் தந்திக்கும் எனது இதயபூர்வமான நன்றிகள். கேரளாவினுடைய அரசியல் சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தாங்கள் எவ்வளவு தூரம் ஒத்துழைப்பு நல்கினீர்கள் என்பதையும் அது ஒரு தேசப்பற்று மிக்க நடவடிக்கை என்பதையும் நான் முற்றிலும் உணருகிறேன். உங்களது நல்லெண்ணமும் ஒத்துழைப்பும் இனியும் நீடித்து இருக்கும் எனவும் நான் முழுமையாக நம்புகிறேன்.

எனது மரியாதைகள்

தங்கள் உண்மையுள்ள
A. தாணுப் பிள்ளை

# காட்சிகள் மாறின: கூட்டும் விலகியது!

1960ம் ஆண்டு வாக்கில் கேரளாவில் கம்யூனிஸ்டுகளை ஆட்சிப் பொறுப்பை ஏற்க முடியாது தடுப்பதே பொருத்தமான அரசியல் நடவடிக்கையாக இருந்தது. அப்பணியில் தனது பங்கை முஸ்லிம் லீக் செவ்வனே செய்து முடித்தது.

ஆனால் நாள் செல்லச் செல்ல, காங்கிரஸ் கட்சியின் சுயநலப் போக்கின் காரணமாக, இந்நாட்டில் இயங்கிக்கொண்டிருந்த இதர கட்சிகள் அனைத்தும் பாதிக்கப்படலாயின; நாட்டின் நலன் என்பதை இரண்டாவது பட்சமாகவும், கட்சியின் நலனே பிரதானமானது என்றும் காங்கிரஸ் மேலிடம் அகில இந்திய அளவில் செயலாற்ற முற்பட்டதை அனைவரும் அறிவர்.

நாடு விடுதலை பெற்று, முதல் இருபது அல்லது இருபத்தைந்து ஆண்டுகள் மத்தியிலும் மாநிலங்கள் அனைத்திலும் ஆட்சிக் கட்டிலில் அமர்ந்து சுகம் கண்ட கட்சி காங்கிரஸ் அல்லவா? அதனால் அந்த சுகபோகங்களை இழக்க அது தயாராகயில்லை. அதைவிடப் பெரிய தர்ம சங்கடம், பிற கட்சிகள் ஆட்சிக்கு வந்து அந்த சுகபோகங்களைத் தாங்களும் அனுபவிப்பதைக் கண்ணுறும் போது, காங்கிரஸ்காரர்களுக்கு ஏற்படும் வயிற்றெரிச்சல்.இதை அதனால் சகித்துக்கொள்ள முடியவில்லை. இப்பொருமையின் விளைவாகத்தான் அக்கட்சி, நாட்டு நலன்களைக்கூட அப்புறப்படுத்தி விட்டு, கட்சியை வளர்ப்பதிலும், ஆட்சியில் எப்படியும் அமர்ந்துகொண்டே இருக்க வேண்டும் என்ற எண்ணத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டது.

நாட்டில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் இதர கட்சிகள், தங்களது கைகளைக் கட்டிக் கொண்டு சும்மாவா இருக்கும்? அவைகளும் தங்களது எதிர்காலம் குறித்தும் சிந்திக்கலாயின; செயல் திட்டங்களைத் தீட்டலாயின. தனிக்கட்சிகளாக எதிர்த்து நின்று காங்கிரசை வீழ்த்த முடியாது என்ற நிலைமை உருவானபோது, காங்கிரஸ் அல்லாத கட்சிகள், தங்களுக்குள் கூட்டணி அமைத்து அக்கட்சியை எதிர்த்தால் என்ன என்ற நிலைமை தானாகவே உதயமானது இதை பல கட்சிகளும் வரவேற்கவே செய்தன.

இம்மாதிரி எதிர்க்கட்சிகளின் கூட்டணிக்கு, தமிழ்நாட்டிலும் கேரளாவிலும் வித்திட்டதே முஸ்லிம் லீக் தான். நாடு சுதந்திரத்திற்குப் பின் நடைபெற்ற முதலாவது பொதுத்தேர்தலிலும் (1952) இரண்டாவது பொதுத்தேர்தலிலும் (1957) காங்கிரஸ் கட்சிதான் மத்தியிலும் மாநிலங்களிலும் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது என்ற போதிலும், மொத்தவாக்குகளில் ஐம்பது சதவிகித வாக்குகளுக்குக் குறைவாகவே அது பெற்றது. பெரும்பான்மை வாக்குகளை அது பெறவில்லை. எதிர்க்கட்சிகள் தனித்தனியாகப் போட்டியிட்டு வாக்குகளைப் பிரித்துக் கொண்ட நிலையில், சுமார் 40 அல்லது 45 சதவிகித வாக்குகளைப் பெற்ற காங்கிரஸ். பார்லிமெண்டிலும் சட்டசபைகளிலும் 80 சதவிகித இடங்களைப் பிடித்துக் கொண்டது. இவ்வுண்மையை பார்லிமெண்டிலேயே காயிதே மில்லத் அவர்கள் புள்ளி விபரங்களுடன் எடுத்துக் கூறி இருக்கிறார்கள்.

முதன் முதலாக தமிழ்நாட்டில் தேர்தலுக்காகக் கூட்டு அமைத்து களத்தில் இறங்கியது முஸ்லிம் லீக்கும் திராவிட முன்னேற்றக் கழகமும் தான். இது 1962 ல் நடந்தது. 1967 க்குள்ளாக இக்கூட்டணியில் மற்றும் பல கட்சிகளும் தங்களை இணைத்துக் கொள்ள ஆர்வம் காட்டின. சுதந்திரா கட்சி இக்கூட்டில் சேர ஆர்வமாக இருப்பதை மூதறிஞர் ராஜாஜி பகிரங்கமாகவே அறிவித்தார். மற்றும் சில சில்லறை கட்சிகளும் இதே எண்ணத்தைக் கொண்டிருந்தன.

ஆனால் கம்யூனிஸ்டுகளைப் பொறுத்தவரை, 1966 வரை முஸ்லிம் லீக் ஒரு பிடிவாதமான போக்கையே அனுஷ்டித்து வந்தது. கம்யூனிஸ்டுகளுடன் எந்த ஒரு கூட்டும் உறவும் வைத்துக் கொள்வதில்லை என்பதில் முஸ்லிம் லீக் கடும் பத்தியமாகவே இருந்து வந்தது. இது நாளடைவில் காங்கிரஸ்காரர்களுக்கு சாதகமானதாக அமைந்திருந்ததை தேர்தல் புள்ளி விவரங்கள் வெளிப்படுத்தின. மேலும்ஒரு கட்சியின்கொள்கை அப்படியிருக்க வேண்டும், இப்படி இருக்கவேண்டும் என மற்றொரு கட்சி நிபந்தனைகளை விதித்துக் கொண்டிருக்க முடியாது. ஜனநாயக நாட்டில் இது சாத்தியமும் அல்ல. எனவேதான் ''குறைந்த பட்ச செயல்திட்டம்'' ஒன்றை வகுத்து, அத்திட்டங்களை ஏற்றுக்கொள்ளக்கூடிய கட்சிகள் எல்லாம் ஒரு கூட்டணியாக அமைத்து தேர்தல் களத்தை சந்திப்பது என்ற நிலவரம் உருவானது. ஒவ்வொரு கட்சிக்கும் தனித்தனி கொள்கைகள், சித்தாந்தங்கள், செயல் முறைகள் இருக்கலாம்.

ஆனால் எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய ஒரு செயல் திட்டத்தின் அடிப்படையில் அவைகள் கூட்டுச் சேர்ந்து, தேர்தலில் போட்டியிடவும் செய்யலாம்; வெற்றிபெற்றால் ஆட்சி அமைக்கவும் செய்யலாம் என்ற கோட்பாடு எழுந்தது. இத்துறையில் காரியங்கள் வேகமாக நடைபெற லாயின.

**1966** ம் ஆண்டு இறுதியில் சென்னை மரைக் காயர் லெப்பை தெரு முஸ்லிம் லீக் அலுவலகத் தில் கூடிய இந்திய யூனியன் முஸ்லிம் லீக் ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த முடிவினை எடுத்தது. அதுதான் தேர்தலில் கம்யூனிஸ்டு களுடனும் கூட்டு வைத்துக் கொள்ளலாம் என்ப தாகும். முஸ்லிம் லீக்கிலேயே சிலர் அப்பொழுது இம்முடிவு குறித்து தங்களது சந்தேகங்களை வெளி யிட்டனர். என்ற போதிலும் மிக தூர நோக் குடன் காயிதே மில்லத் அவர்கள் இந்தத் தீர்மானத்திற்கு வந்தார்கள்.

சென்னைத் தீர்மானத்தின் அடிப்படையில் **1967**ம் ஆண்டில் கேரளாவில் முஸ்லிம் லீக்கும் கம்யூனிஸ்டுகளும் சேர்ந்த ஏழு கட்சி கூட்டணி தேர்தலில் கலந்து கொண்டது; வெற்றிவாகை சூடியது. முதலமைச்சர் பதவியிலிருந்து எந்த E. M. S. யை முஸ்லிம் லீக் இறக்கியதோ அதே நபர் **1967** ம் ஆண்டில் முஸ்லிம் லீக்கின் கூட்டின் காரணமாக மீண்டும் அம் மாநில முதலமைச்ச ரானார். **1960** ஆண்டு நடைபெற்ற தேர்தலில், முஸ்லிம் லீக்கர்களுக்கு அமைச்சர் பதவி தர முடியாது என காங்கிரஸ் கூறியது. ஆனால் **1967** ம் ஆண்டில் கம்யூனிஸ்டுகள் அமைத்த அமைச்சரவையில் முஸ்லிம்லீக்கர்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஒருவர் அல்ல; இருவர். C. H. முஹம்மது கோயாவும், அஹமது குரிக்கலும் கேரளாவின் அமைச்சர்களானார்கள். இப்படியும் ஒரு வரலாற்றை அம்மாநிலத்தில் முஸ்லிம் லீக் காட்டியது.

அமைச்சர் பொறுப்பு ஏற்கவிருந்த C.H. கோயா அச்சமயம் காயிதே மில்லத்திற்கு ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதம் அடியில் பிரசுரிக்கப் பட்டுள்ளது. மேலே கூறப்பட்ட உண்மையை அதிலிருந்து அனைவரும் புரிந்து கொள்ளலாம்.

Phone: 4431

C. H. MOHAMMED KOYA, M. P.

CHIEF EDITOR, CHANDRIKA DAILY & WEEKLY

P. B No 64 CALICUT.

Camp Calicut.,

2nd March, 1967.

Dear Quide Millath, السلام عليكم ورحمة الله وبركاته

By the grace of Allah Almighty everything is going on well. Under your able leadership this community will get back its lost prestiege and fame. As far as I am concerned I am indebted to you for all my positions in life and I do not know how to thank you.

I hope you will be at Trivandrum on the day of the swearing in ceremony. After that Mr. Assan-Kutty Kurikkal wants you to tour your constituency from 8 to 11th March. After that you can return to reach New Delhi in time to attend the speakers election.

I hope yourself and Miya are doing well. My salams to all friends there especially to Nusrath. Fouzia conveys her salams to Dada, Akka, Dawood and Nusrath.

Wassalam.

Yours Sincerely,

C.H.Mohammed Koya.M.P.

C. H. முஹம்மது கோயா M.P. 2-3-67
பிரதான ஆசிரியர்
''சந்திரிகா தினசரி வார இதழ்
கள்ளிக்கோட்டை.

அன்புள்ள காயிதே மில்லத்திற்கு,

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வ பரகாத்துஹு.

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் அருளால், சகல காரியங்களும் செவ்வனே நடந்து கொண்டிருக்கின்றன. தங்களுடைய திறமையான தலைமையின் கீழ், இந்த சமுதாயம் ஏற்கனவே இழந்துவிட்ட மரியாதையையும் புகழையும் மீண்டும் பெறும் என்பதில் ஐயமில்லை. ஆனால் என்னைப் பொறுத்தவரை, என் வாழ்க்கையில் நான் பெற்ற எல்லாப் பதவிகளுக்காகவும் உங்களுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன். இதற்காக எப்படி நன்றி சொல்வதென்றே எனக்குத் தெரியவில்லை.

பதவிப் பிரமாணம் எடுக்கவிருக்கும் நாளன்று தாங்கள் திருவனந்தபுரத்தில் இருப்பீர்கள் என நான் நம்புகிறேன். அதற்குப் பிறகு, தங்களுடைய தொகுதியில் மார்ச் 11ம் தேதி வரை நீங்கள் சுற்றுப்பயணம் செய்யவேண்டும் என அசன் குட்டி குரிக்கல் விரும்புகிறார். அதன் பிறகு சபாநாயகர் தேர்தலில் கலந்து கொள்ளும் நீங்கள் டில்லி திரும்பி விடலாம்.

நீங்களும் மியானும் சுகமாக இருக்கிறீர்கள் என நம்புகிறேன். அங்கு நமது நண்பர்கள் அனைவருக்கும் எனது சலாம் உரித்தாவதாக; குறிப்பாக நுஸ்ரத்திற்கு.

தாதா, அக்கா, தாவூது, நுஸ்ரத்திற்கு பௌஸியா தனது சலாத்தைத் தெரிவிக்கிறாள்.

தங்கள் உண்மையுள்ள

(ஒப்பம்)

---

## கேம்பலாபாத் என்ற பெயர் எப்படி வந்தது?


**ஏ. எம். புஹாரி சாகிப்**
*(மதராஸ் புகாரி ஹோட்டல் அதிபர்)*


இன்றைய சிதம்பரனார் மாவட்டத்திலுள்ள கேம்பலாபாத் எங்களது ஊர். இன்றுள்ள இடத்தில் இவ்வூர் அமைவதற்கு காயிதே மில்லத் அவர்களே காரணமாகும். இந்த நிலத்தில் ஊர் உருவாகுமுன்பு நாங்கள் சிவராமன் குளம், கங்கநாத புரம் என்ற சிற்றூர்களில் குடியிருந்தோம். குடியிருப்பு வசதிகள் இல்லாத ஊர். அவ்விடத்தை மாற்றி வேறு இடத்திற்கு குடியேற வேண்டும் என 1937-ம் ஆண்டில் அவ்வூர் பெரியவர்கள் தீர்மானித்தனர். எங்களது ஊருக்குத் தெற்கு பக்கமுள்ள இடம் அதற்குப் பொருத்தமாக இருந்தது. அது சர்க்கார் புறம்போக்கு நிலம். அந்தப் பகுதியில் வீடுகள் கட்டி குடியேறுவது என்ற முடிவுக்கு வந்ததும் எங்கள் மாமா M. M. முத்துவாப்பா சாகிபு அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டார்கள். அட்வகேட் பிஜிலி சாகிபை கலந்தாலோசித்தார்கள். அவரைக் கூட்டிக் கொண்டு மதராஸ் சென்று காயிதே மில்லத்தை சந்தித்து விபரங்களைக் கூறினார்கள்.

ரெவினியூ போர்டு உறுப்பினராக இருந்த மிஸ்டர் காம்ப்பெல் என்பவர் அச்சமயம் ஆக்டிங் கவர்னராக இருந்தார். காயிதே மில்லத் மிஸ்டர் கேம்ப்பெலிடம் சென்று விஷயத்தை விளக்கிக் கூறினார்கள். அவர்கள் சொன்ன விஷயத்திலுள்ள நியாயத்தை உணர்ந்த அந்த வெள்ளைக்கார அதிகாரி எண்பது ஏக்கர் புறம்போக்கு நிலத்தை எங்களுக்கு பட்டா செய்து கொடுத்துவிட்டார். உடனே நாங்கள் அதில் வீடுகள் கட்டி புதிய ஊரை உருவாக்கினோம். ஊர் உருவாகிக் கொண்டிருக்கும்போது காயிதே மில்லத் எங்களிடம் அந்த ஊருக்கு காம்பெல் துரையின் பெயரையே வைக்கும்படி ஆலோசனை கூறினார்கள். அதை நாங்களும் ஏற்று எங்கள் ஊருக்கு கேம்பலாபாத் என்று பெயர் சூட்டினோம். இவ்வூர் உள்ளவரை காயிதே மில்லத்தை நாங்கள் மறக்கவே முடியாது. எங்கள் ஊரில் புதிய பள்ளிவாசல் கட்டியபோது அதை காயிதே மில்லத் வந்துதான் திறந்துவைத்தார்கள்.

மதராஸில் நாங்கள் ஹோட்டல் தொழிலில் இறங்கிய சமயமும் காயிதே மில்லத் அவர்களது உதவி மிகவும் பயன்பட்டது. அச்சமயம் உணவு அமைச்சராக இருந்த ரோச்விக்டோரியாவிடம் சொல்லி காயிதே மில்லத் அவர்கள்தான் எங்களுக்கு மவுண்ட் ரோடு பகுதியில் ஹோட்டல் நடத்த அனுமதி வாங்கித் தந்தார்கள்.

சென்னை எக்மூரில் இப்பொழுது இருக்கும் இம்பீரியல் ஹோட்டல் இருக்கிற இடத்தில்தான் காயிதே மில்லத் வெகுகாலம் குடியிருந்திருக்கிறார்கள். 'திவோனியா ஹவுஸ்' என்ற அந்த பங்களா ஜமால் கம்பெனிக்குச் சொந்தமானது. 1940-ம் ஆண்டு வாக்கில் அதை ஒரு போரா முஸ்லிமுக்கு விற்று விட்டார்கள். அந்த போராவிடமிருந்து இந்த இடத்தை நாங்கள் விலைக்கு வாங்கினோம். சுமார் இருபது ஆண்டுகள் காயிதே மில்லத் வாழ்ந்த இடத்திலும் அதைச் சுற்றிலும் தான் எங்களது இம்பீரியல் ஹோட்டல் உள்ளது.

# விஞ்ஞான உண்மையை வெளிப்படுத்தும் இஸ்லாமிய நடைமுறை

## மதருஸ் டாக்டர் யூ. முஹம்மது

காயிதே மில்லத்திற்கு நான் வைத்தியம் செய்தேன் என்பது எனக்குப் பெருமைக்குரிய விஷயமாகும். அவர்களிடம் உடல் நலம் குறித்து தான் பேசுவேன் என்பதல்ல. உலகிலுள்ள பல விஷயங்கள் குறித்தும் நாங்கள் பேசுவோம்; கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வோம்.

ஒருநாள் எங்கள் விவாதம் எங்கோ போய் விட்டது. விஞ்ஞானத்திற்கு இஸ்லாம் இணைப் பானதுதானு? அல்லது முரண்பட்டு நிற்கிறதா என்ற பிரச்சனையில் இறங்கி விட்டோம். "டாக்டர் என்ற முறையில் விஞ்ஞானத்தையும், இஸ்லாத்தையும் ஒப்பிட்டுச் சொல்லுங்கள்" என்று காயிதே மில்லத் கூறினுர்கள். உதாரணத் திற்கு ஆடு அறுக்கும் முறையைச் சொன்னேன். ஆட்டை இப்படித்தான் அறுத்துச் சாப்பிட வேண்டும் என நமது மார்க்கம் கட்டளையிட் டுள்ளது. இதுவே விஞ்ஞான முறையும் கூட. மருத்துவமும் இந்த முறையைத் தான் வலி யுறுத்துகிறது.

நமது முறைப்படி ஆட்டை அறுக்கும்போது அதன் உடம்பிலுள்ள ரத்தம் முழுவதும் வெளிப் பட்டு விடுகிறது. உடம்பிற்குள் தேங்கி விடுவ தில்லை. ஒரே வெட்டாக வெட்டினுலோ அல்லது சித்திரவதை செய்தாலோ, அந்த மிருகத் திற்கு அதிர்ச்சி ஏற்பட்டு ரத்தப் போக்கு தடைப் பட்டு விடலாம், ரத்தம் உடலினுள்ளேயே தேங்கி விடலாம். ரத்தம் மிருகத்தின் உடலி னுள் உறைந்து விட்டால், அது ஒரு சுகாதாரக் கேடு ஆகும். அந்த இறைச்சியை சுத்தமான உணவு என்று ஏற்றுக் கொள்ளமுடியாது. மருத்துவ ரீதியில் இதுவே உண்மையாகும்: நமது மார்க்கமும், நமக்கு விஷயத்தை விளக்கமாகச் சொல்லாமல், இப்படி அறுத்துச் சாப்பிடுங்கள் என்று சொல்லி விட்டது. விஞ்ஞானத்திற்கு உடன்பாடானதாகவே இஸ்லாம் இருக்கிறது. இப்படி மருத்துவ ரீதியில் பல உதாரணங்களைக் காட்டலாம்."

இவ்வாறு நான் கூறியதைக் கேட்டு காயிதே மில்லத் மகிழ்ச்சியடைந்தார்கள்: இப்படித்தான் நமது மக்களுக்கு விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும் என என்னை ஊக்கப்படுத்தினுர்கள்.

1971-ம் ஆண்டு நவம்பர் மாதம் டில்லி சென்ற தலைவரவர்கள் ரத்த வாந்தி எடுத் தார்கள் என்று கேள்விப் பட்டதும் அன்று மாலையே மியாக்கானுடன் நானும் டில்லிக்கு விமானத்தில் சென்று விட்டேன். இரவு 11 மணி அளவில் நாங்கள் ஆஸ்பத்திரி சென்று தலைவ ரைப் பார்த்தோம். உணர்வு இல்லாத நிலையி லேயே அவர்கள் படுத்திருந்தார்கள். டில்லி டாக்டர் கரோலிடம் பேசி நிலவரத்தை நான் உணர்ந்து கொண்டேன். எட்டு பாட்டில் ரத்தம் அவர்களுக்குச் செலுத்தப்பட்டது.

துரிதமாக அவர்களது உடல்நிலை முன் னேறியது. நிலைமை சீரானதும் டில்லியிலிருந்து சென்னைக்கு அழைத்து வந்து ஸ்டான்லி மருத்துவ மனையில் சேர்த்தோம். நோய் குணமாகி வீடு திரும்பினுர்கள்.

ஆனுல் ஒரிரு மாதங்களிலேயே அவர்களுக்கு மஞ்சள் காமாலை வந்து விட்டது. நிலைமை அபி விருத்தி அடையாததால் மீண்டும் ஸ்டான்லி மருத்துவ மனையில் சேர்த்தோம். ஜெனரல் ஆஸ் பத்திரி டாக்டர்களும் ஸ்டான்லி ஆஸ்பத்திரி டாக் டர்களும் ஒன்ருகக் கூடி கலந்தாலோசித்து தலைவ ரவர்களுக்கு வைத்தியம் செய்தோம்.

தங்களுக்கு இயலாத நிலை இருந்தபோதிலும், வேளா வேளைக்கு அவர்கள் தொழுது கொள் வார்கள்.

வெள்ளிக் கிழமையன்று ஜும்மாத் தொழ பள்ளிவாசலுக்குப் போக வேண்டுமென்பார்கள். நான் அதற்கு அனுமதிக்கவில்லை. மெதுவாக புன்முறுவல் செய்தபடி "அப்படியா, சரி இங்கேயே லுஹர் தொழுது கொள்கிறேன்" என்று கேட்டுக் கொள்வார்கள்.

கடைசி ஒரு சில நாட்கள் நானும் எனது மனைவியும்(அவளும் M. D. படிப்பு படித்த டாக்டர் தான்) ஆஸ்பத்திரியிலேயே புரபஸர் அறையி லேயே தங்கி விட்டோம். இரவு இரண்டு மணி வரை அவர்கள் அருகில் இருப்பேன். புரபஸர் அறையில் சில மணி நேரம் ஓய்வு எடுத்து விட்டு காலை 'சுபுஹ்' தொழுதவுடன் தலைவர் அருகில் வந்து அமர்ந்து கொள்வேன்.

காயிதே மில்லத்திற்காக மக்கள் செய்த துஆ கொஞ்ச நஞ்சமல்ல. அவர்களுக்காகச் செய்யப் பட்ட துஆவில் அவர்களுக்கு வைத்தியம் பார்த்த எங்களுக்கும் ஓரளவு கிடைத்திருக்கும் என்ற நம்பிக்கையும், ஆறுதலும் எனக்கும், எனது மனைவிக்கும், உண்டு. அந்தப் பெருமையே எங்களுக்குப் போதுமானது.

# லைலத்துல் கத்ரு இரவில் கேட்கப்பட்ட துஆ

திருச்சி கே. எஸ். அப்துல் வஹ்ஹாப் ஜானி சாகிப், Ex. M.L.C.

1971-ம் ஆண்டு நவம்பர் மாதம் பாராளு மன்றத் தொடரில் கலந்து கொள்வதற்காக டில்லிக்கு விமானத்தில் சென்ற காயிதே மில்லத் அவர்கள் தலைநகர் போய்ச் சேர்ந்த இரவே உடல் நலம் குன்றி ரத்த வாந்தி எடுத்தார்கள் என்ற தகவல் அறிந்ததும் ஜனாப் மியாகானுடனும் டாக்டர் யூ. முஹம்மதுடனும் நான் புது டில்லிக்கு விமானம் மூலம் விரைந்து சென்றேன்.

புதுடில்லி விலிங்டன் மருத்துவ மனையில் (இந்த சர்க்கார் ஆஸ்பத்திரியின் அன்றைய பெயர்) தீவிர சிகிச்சை பெற்று வந்த தலைவர் அவர்களை நாங்கள் மூவரும் விமான நிலையத்திலிருந்து இறங்கியதும் நேராக ஆஸ்பத்திரிக்குச் சென்று பார்த்தோம். அப்போது அவர்கள் மயக்கமுற்ற நிலையில் இருந்தார்கள். முறையான சிகிச்சைகள் டாக்டர்களால் அளிக்கப்பட்டு வந்தது. அது வரை நடந்த சிகிச்சைகளை டாக்டர் முஹம்மது கேட்டுத் தெரிந்து கொண்டார்.

சிறிது நேரம் நாங்கள் ஆஸ்பத்திரியிலேயே அமர்ந்திருந்தோம். திடீரென காயிதே மில்லத் அவர்கள் கண் விழித்துப் பார்த்தார்கள். மியாகான் அருகில் போய் நின்றார். கண்களைத் திறந்து பார்த்ததும் ஆளை அடையாளம் தெரிந்து கொண்டார்கள். 'மியான் வந்துட்டாயா?!' என்று மெல்லிய குரலில் வாயசைத்தார்கள். நான் போய் பக்கத்தில் நின்றேன். 'என்ன ஜானி பாயா' என்று சொல்லி என்னையும் புரிந்து கொண்டார்கள். டாக்டர் முஹம்மது பக்கத்தில் நின்றதைப் பார்த்து 'டாக்டர் சாப்! நீங்களும் வந்துட்டீங்களா?' என்றார்கள். நாங்கள் மூவரும் பக்கத்திலேயே சிறிது நேரம் நின்றோம். கொஞ்ச நேரத்தில் தலைவரவர்களின் கண்கள் மூடிக் கொண்டன. மீண்டும் மயக்க நிலை. நாங்களும் வெகு நேரம் வரை ஆஸ்பத்திரியில் இருந்துவிட்டு தங்கும் அறைக்குச் சென்று சிறிது ஓய்வெடுத்து விட்டு வரலாம் எனப் போய் விட்டோம்.

காலையில் போய்ப் பார்த்தால் ஒருவருமே எதிர்பாராத அதிசயம் விலிங்டன் ஆஸ்பத்திரியில் நடந்து கொண்டிருந்தது. காலையில் தலைவரவர்கள் கண்விழித்ததும் எழுந்து படுக்கையில் அமர்ந்து கொண்டார்களாம். நர்ஸ்களிடம் நன்றாகப் பேசி இருக்கிறார்கள். டீ கேட்டு வாங்கி குடித்திருக்கிறார்கள். இரவில் இருந்த நிலைமைக்கும் காலையில் இருந்த நிலைமைக்கும் பெருத்த வித்தியாசம். அவர்களுக்கு சிகிச்சை அளித்து வந்த ஆஸ்பத்திரி பெரிய டாக்டர் கரோலிக்கு பெரிய ஆச்சரியமாகப் போய்விட்டது. 'எனக்கே ஒன்றும் விளங்கவில்லை' என்று அந்த டாக்டர் எங்களிடம் பின்னர் கூறினார்.

டீ குடித்த சிறிது நேரத்தில் பசிக்கிறது என்று காயிதே மில்லத் அவர்கள் கூறி இருக்கிறார்கள். என்ன சாப்பிடுகிறீர்கள் என்று வினவியதற்கு இடியாப்பம் வேண்டுமென்று கூறி இருக்கிறார்கள். அது தருவிக்கப்பட்டு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை சாப்பிட்டார்கள். பின்னர் நன்றாக எழுந்து அமர்ந்து கொண்டு நர்ஸ்களிடம் ஜோக் அடித்து பேச ஆரம்பித்து விட்டார்கள்.

நாங்கள் மூவரும் காலையில் ஆஸ்பத்திரிக்குச் சென்று தலைவர் அவர்களைப் பார்த்தால் நன்கு சிரித்து பேசிக் கொண்டிருந்தார்கள். எங்களுக்குப் பெரிய வியப்பாகப் போய்விட்டது. டாக்டர்களுக்கே புரியவில்லை. எங்களுக்கு என்ன தெரிய முடியும்?

என்னுடைய அபிப்ராயத்தில் காயிதேமில்லத் அவர்களின் உடல் நிலையில் திடீர் முன்னேற்றம் ஏற்படக் காரணம் ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க முடியும். அதுவே எனது அசைக்க முடியாத நம்பிக்கை.

தலைவரவர்களுக்கு சுகக் குறைவு ஏற்பட்ட செய்தி பத்திரிக்கைகளில் வெளிவந்ததுமே இந்திய முஸ்லிம் சமுதாயமே சஞ்சலமடைந்து இருந்தது. அன்றிரவு 'லைலத்துல் கத்ரு' இரவாகும். முஸ்லிம்கள் அனைவருமே உருக்கமாக இறைவனிடம் காயிதே மில்லத்திற்காக துஆக் கேட்டார்கள். இறைவன் அதை ஏற்றுக் கொண்டான் போலும். ஒரு நொடியில் தலைவர் அவர்களுடைய உடல் நிலையில் மாற்றம் ஏற்பட்டு விட்டது. எனக்குத் தெரிந்த உண்மை இதுதான்.

# ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் சம்பளம் பெற்றவர்

**ஹாஜி. எம். ஜமால் முஹம்மது சாகிப்**

*தலைவர் : முஸ்லிம் அனாதை நிலையம்*

**1920-25**ம் ஆண்டுகளில் நாட்டு விடுதலைப் போராட்டம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. அத்துடன் ''கிலாபத் இயக்க போராட்டமும்'' இணைந்திருந்தது. மதராஸ் ஹாஜி ஜமால் முஹம்மது சாகிப் அவர்களும், காயிதே மில்லத் அவர்களும் சுதந்திரப் போராட்டங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்கள். காங்கிரஸ் தலைவர்கள் பலருக்கும் இவ்விருவருடன் நேரடியாகத் தொடர்பு உண்டு என்பது அக்கால அரசியல்வாதிகள் அனைவருக்கும் தெரியும். ஹாஜி ஜமால் முஹம்மது அவர்களுக்கு காந்திஜீயுடன் நேரடித் தொடர்பு உண்டு. அடிக்கடி வார்தா நகர் சென்று பல நாட்கள் அங்கு தங்கி காந்திஜீயுடன் உரையாடல்கள் நடத்துவதும் உண்டு.

காங்கிரஸ் தலைவர்களின் நடமாட்டங்களையும், அவர்களது ஆலோசனைகளையும் முன் கூட்டித் தெரிந்து கொள்ள, அன்றைய வெள்ளைக்கார அரசாங்கம் ஒரு சூழ்ச்சியில் இறங்கியது. திருச்சியைச் சேர்ந்த முஸ்லிம் ஒருவர் அச்சமயம் சென்னை மாகாண போலீஸ் இலாக்கா உளவுத் துறையில் உயர் பதவியில் இருந்தார். அவரைப் பயன் படுத்தி ஹாஜி ஜமால் முஹம்மது சாகிபினுடையவும், காயிதே மில்லத்தினுடையவும் நடமாட்டங்களை அறிந்து கொள்வது என போலீஸ் உளவுத்துறை திட்டமிட்டு செயலில் இறங்கியது.

மதராஸ் தம்பு செட்டித் தெரு 16 ம் இல்லத்தில் ஜமால் மொகிதீன் அன்கோ என்ற பெயரில் பிரபலமான தோல் கம்பெனி செயல் பட்டுக் கொண்டிருந்தது. ஹாஜி ஜமால் முஹம்மது சாகிப் இக் கம்பெனியில் பிரதான பங்காளி, காயிதே மில்லத் அவர்களும் ஒரு பார்ட்னர். ஒரு நாள் அந்த போலீஸ் அதிகாரி இக் கம்பெனிக்கு வந்தார். ஏற்கனவே கம்பெனி முதலாளிமார்களை அவருக்கு நன்கு தெரியும். போலீஸ் துறையிலிருந்து தாம் விலகி விட்டதாகவும், அரசாங்கத்தின் போக்குத் தமக்குப் பிடிக்காததே இதற்குக் காரணம் என்றும் கூறினார். வேலையில்லாதிருப்பதால் குடும்பத்தை நடத்துவதற்கு சிரமப்படுவதாகவும் ஏதாவது வேலை கிடைத்தால் அதைத் தாம் பார்ப்பதற்குச் சித்தமாக இருப்பதாகவும் தெரிவித்தார்.

அந்த நபர் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் கூறியதை உண்மை என நம்பி ஜமால் முஹம்மது சாகிப் மிகவும் வருத்தப்பட்டார்கள், வேண்டுமானால் தங்களுக்குப் பொருத்தமான வேலை அமையும் வரையில், எங்கள் கம்பெனியிலேயே பணியாற்றலாம், என்று ஜமால் முஹம்மது சாகிப் தாராள மனதுடன் கூறினார்கள். அதைத் தானே அந்த ஆசாமியும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பழம் நழுவி பாலில் விழுந்த மாதிரி இருந்தது. அந்த போலீஸ் அதிகாரி இப்பணியை ஒப்புக்கொண்டு விட்டார்.

மறு நாளிலிருந்து ஜமால் மொகிதீன் கம்பெனியில் காயிதே மில்லத்திற்குப் பக்கத்திலேயே அவருக்கு இருப்பிடம் ஒதுக்கப்பட்டு சில பொறுப்புகளும் கொடுக்கப்பட்டன. தினசரி ஆபீஸ் வருவதும் வேலைகளைச் செய்வதுமாக இருந்தார். காயிதே மில்லத் அவர்களுடனும் மற்றும் கம்பெனி பங்காளிகளுடனும், சமூக, அரசியல் விஷயங்கள் குறித்தும் அவ்வப்பொழுது பேசிக் கொள்ளவும் செய்தார்.

நாள் செல்லச் செல்ல அந்த நபரைப் பற்றி காயிதே மில்லத்திற்கு மனத்தில் ஒரு சந்தேகம் எழலாயிற்று. அவருடைய நடவடிக்கைகளை உன்னிப்பாகக் கவனிக்கலானார்கள். காங்கிரஸ் தலைவர்களுக்கும் ஜமால் முஹம்மது சாகிபுக்குமிடையில் நடைபெறும் பேச்சுக்கள், அவர்களது கடிதப் போக்குவரத்துக்கள், எந்தெந்த ஊர்களுக்கு அவர்கள் போகிறார்கள். யாரை யாரை சந்திக்கிறார்கள் என்பன போன்ற விஷயங்களை அறிவதிலேயே அந்த ஆசாமி கவனமாக இருந்தார்! அந்த குறிக்கோளுடனேயே அவரது நடமாட்டங்களும் பேச்சு வார்த்தைகளும் இருந்தன என்பதை காயிதே மில்லத் புரிந்து கொண்டார்கள்; உஷாராகிக் கொண்டார்கள். இது குறித்து ஜமால் முஹம்மது சாகிபுடனும் தனியாகக் கலந்தாலோசனை நடத்தவும் செய்தார்கள்.

அரசாங்கத்திற்கு எதிரான நடவடிக்கைகளில் காங்கிரஸ் இயக்கத்தினரும் கிலாபத் இயக்கத்தினரும் ஈடுபடும் சமாச்சாரங்கள் ஒன்று கூட இந்த ஆசாமி மூலம் போலீஸ் உளவுத் துறைக்குக்

கிடைக்கவில்லை, என்ன நோக்கத்திற்காக அந்த ஆசாமி இந்தக் கம்பெனியில் வேலையில் சேர்ந் தாரோ அது கை கூடவில்லை. காயிதே மில்லத் அவர்கள் உஷாராகி இருந்து கொண்டதே இதற்குக் காரணம்.

கிட்டத் தட்ட ஓராண்டு காலம் இக் கம் பெனியில் பணிபுரிய அவரை பிரிட்டிஷ் அரசாங்கம் அனுமதித்தது. நோக்கம் கை கூடாத தால் மீண்டும் போலீஸ் இலாக்காவிற்கே வந்து விடும்படி அவர் பணிக்கப்பட்டார். தமக்கு சம்பளம் கட்டவில்லை, எனவே வேலையிலிருந்து விலகிக் கொள்வதாக அந்த ஆசாமி ஒரு நாள் கூறினர். அப்பொழுது காயிதே மில்லத் அவர்கள் ''நாசூக்காக'' என்ன? இரண்டு இடங்களில் சம்பளம் வாங்கியுமா உங்களுக்குச் செலவுக்குப் போதவில்லை'' என்று ஆச்சரியத்துடன் கூறி னர்கள். அவரின் முகம் செத்து விட்டது.

ஒரு சில மாதங்களிலேயே அவர் மீண்டும் போலீஸ் உயர்பதவியில் அமர்த்தப்பட்டார். பின் காலங்களில் திருவிதாங்கூர் சமஸ்தானத் திலும் சி. பி. இராமசாமி அய்யர் திவானக இருந்த காலத்தில் அவர் மிகப் பெரிய போலீஸ் பதவியில் இருந்து செயல் பட்டார்.

ஒருவருடைய நடை உடை பாவனைகளி லிருந்தும் பேச்சுக்களில் இருந்தும் அவரை சரியாக எடை போடுவதில் காயிதே மில்லத் அவர்கள் மிகவும் கெட்டிக்காரர்கள். ஒரு உயர்தர போலீஸ் அதிகாரியினல் கூட, தமது அந்தரங்கத் தை அவர்களிடமிருந்து மறைத்து வைக்க முடிய வில்லை என்பதற்கு இது ஒரு சரியான எடுத்துக் காட்டாகும்.

---

# நான் பேசவாரம்பித்த கதை

## ஆடுதுறை ஜமால் முஹையத்தீன் பாப்பா

*தலைவர் : கிழக்குத் தஞ்சை மாவட்ட முஸ்லிம் லீக்*

காயிதே மில்லத் அவர்கள் எனக்கு மச்சான். எங்களுடைய இரண்டாவது அக்காவை அவர்கள் திருமணம் முடித்துள்ளார்கள். எக்மூர் திவோ னியா பங்களாவில்தான் நான் பிறந்தேன். சுமார் ஏழெட்டு வயது வரை மச்சான் வீட்டில்தான் வளர்ந்தேன்.

நான் சிறுவனக இருக்கும்போது எனக்கு பேச்சு அவ்வளவாக வராது. எவ்வளவோ வைத்தியம் செய்து பார்த்தும் சரளமாகப் பேச என்னல் இயலவில்லை. எனது பெற்றோர்களுக்கு அது மிகுந்த வருத்தமாக இருந்தது. ஏதோ மந்திரித்து ஒரு தாயத்தை என் கழுத்தில் கட்டி யிருந்தார்கள். அச்சமயம் நான் காயிதேமில்லத் வீட்டில்தான் தங்கியிருந்தேன். வைத்தியமும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஒரு நாள் பிள்ளைகளுடன் மச்சான் வீட்டில் விளையாடிக் கொண்டிருந்தபொழுது மாடிப் படியில் இருந்து வழுக்கி கீழே விழுந்து விட்டேன். படிகளில் உருண்டு, உருண்டு அடித்தளத்திற்கே வந்து சேர்ந்து விட்டேன். அப்படி உருண்டு புரண்டதில் எனது கழுத்தில் கட்டப்பட்டிருந்த தாயத்து—(அது ஒரு வெள்ளி கூட்டிற்குள் அடைக்கப்பட்டிருந்தது)—எனது நாக்கை நன்ருக அறுத்து விட்டது. நாக்கிலிருந்து ரத்தம் ஒழுக லாயிற்று. கீழே விழுந்த அதிர்ச்சியினலும் நாக்கு காயம்பட்ட வலியினலும் நான் ஒரேயடி யாகக் கூச்சல் போட்டு விட்டேன். சப்தமிட்டு அழுதேன்.

சப்தமிட்டு எதையோ சொல்லிக் கொண்டு நான் அழுவதைக் கண்டதும் வீட்டிலுள்ளவர் களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. வாய் பேசாதவன் எதையோ சொல்லிக் கொண்டு அழுகிருனே என்று என்னைக் கட்டி அணைத்துக் கொண்டார்கள். நாக்கு அறுந்து ரத்தம் வருவதைக் கூட அவர்கள் பொருட்படுத்தவில்லை. நான் பேசவாரம்பித்து விட்டது பெரியவர்களுக்கெல்லாம் ஒரே கொண் டாட்டமாகப் போய்விட்டது. இந்த அதிசயம் காயிதே மில்லத் அவர்கள் வீட்டில் வைத்துதான் நிகழ்ந்தது.

எனது நாக்கு நரம்பில் ஏதோ பிடிப்பு இருந் திருக்கிறது. அதனல்தான் என்னல் பேச முடிய வில்லை. தாயத்து நாக்கில் குத்தி விட்டதும் அந்த பிடிப்பு அறுந்து விட்டது. பேசும் ஆற்றல் வந்து விட்டது. இவ்வாறு டாக்டர்கள் விளக்கம் அளித்ததாக வீட்டிலுள்ளவர்கள் சொல்லிக் கொள்வார்கள்.

1950-ம் ஆண்டில் எனது தந்தையார் இறந்து விட்டார்கள். நாங்களெல்லாம் அப் போது மைனர்கள். மச்சான் அவர்களும் கும்ப கோணம் கந்தசாமி மூப்பனரும் எங்களுக்கு கார்டியன்களாக இருந்து மேற்பார்த்து வந் தார்கள்.

விவசாயத்தில் மச்சான் அவர்களுக்கு ஆர்வம் மிக அதிகம். எக்மூர் பங்களாவிலும் சரி, குரோம்பேட்டை வீட்டிலும் சரி நிறைய செடி, கொடிகளை வைத்து வளர்ப்பார்கள். வேப்பமரம் என்றால் அவர்களுக்கு மிகப் பிரியம். குரோம் பேட்டையில் வீடு கட்டும்பொழுது அவர்கள் அருமையாக வளர்த்த வேப்ப மரத்தின் சில கொப்புகளை வெட்டவேண்டும் என்ற நிலை வந்த பொழுது அதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை. வீட்டை சில அடி தூரம் தள்ளித்தான் கட்ட வேண்டி வந்தது. மரத்தை மட்டுமல்ல, அதன் கிளைகளையும் வெட்டக் கூடாது என்று சொல்லி விட்டார்கள்.

தஞ்சை மாவட்டத்திலுள்ளவர்களுக்கு நெல் விவசாயத்தைத் தவிர வேறொன்றும் தெரியாது. ஒரே மகசூலை நம்பி இருக்கக் கூடாது. பல தரப் பட்ட விளை பொருட்களையும் உற்பத்தி செய்ய வேண்டுமென்று எங்களுக்கு யோசனை சொன்னவர் களே காயிதே மில்லத் தான். அது மட்டுமல்ல ஆடுதுறையில் சில மேடான இடங்களில் தென்னங் கன்றுகளை அவர்கள் வற்புறுத்தல் பேரில்தான் நாங்கள் வைத்தோம். சில வருடங்களில் அது காய்ப்புக்கு வந்து பலன் தர ஆரம்பித்த பின்பு தான் நெல்லை விட இதில் வருமானம் அதிகம் கிடைக்கிறதென்பதை புரிந்து கொண்டோம். பின்னர் எங்களைப் பார்த்துதான் தஞ்சை மாவட் டத்தின் மேற்குப் பகுதியில் பல பண்ணையார் களும் தென்னை சாகுபடியில் இறங்கினார்கள்.

## பணமா? ஒற்றுமையா?

''பணம் இருந்தால் மட்டும் எதையும் சாதித்து விடலாம் என்று இறுமாப்புக்கொள்வது தவறு. ஒற்றுமைதான் மிக முக்கியம், ஒற்றுமை போய்விட்டால் ஆட்சிமட்டுமல்ல, மரியாதையும், உரிமைகளும் கூடப் பறிபோய் விடும்.

உர மூட்டைகள் இருக்கின்றன. அவற்றை தக்க தருணத்தில் வயலில் போட்டு பயிர்களை வளர்த்து வந்தால் நல்ல மகசூல் கிடைக்கும். அவ்வாறு செய்யாமல் உரமூட்டைகளை வெறுமனே அறையில் அடுக்கி வைத்திருந்தால், அதனால் பயனுண்டா? இதே போலத்தான் பணமும். உரத்தை உபயோகப்படுத்துகிற மாதிரி பயன்படுத்தினால்தான் பணத்திற்கு பலனுண்டு.

பணம் மட்டும் இருந்தால் வெற்றி கிட்டி விடாது. வெற்றிக்கு அடிப்படை தூய்மை, உறுதி. நாயகம் (ஸல்) அவர்களை ஆரம்பத்தில் பணக்காரர்களும், செல்வாக்கு உள்ளவர்களும் மூர்க்கமாக எதிர்த்தனர். ஆனால் இறுதியில் அரேபியா முழுவதற்கும் மட்டுமல்ல உலகத்திற்கு பூராவிற்கும் அவர்கள் லௌகீகத்திற்கும் ஆன்மீகத்திற்கும் சேர்ந்து ஏக தலைவர் ஆனார்கள். பணத்தினால் மட்டுமா இப்பெரிய சாதனையைச் சாதிக்க முடிந்தது?

கலீபா உமரே பாரூக் அவர்கள் பத்து ஆண்டு காலத்தில் பனிரெண்டாயிரம் குறுநில மன்னர்களைப் பணிய வைத்தார்கள். பணத்தினால் மட்டுமா இது நடந்தது? இந்த உமர் (ரலி) அவர்களைப் பின்பற்றும்படி காந்திஜி தனது ஹரிஜன் பத்திரிக்கையில் எழுதினார். எழுபத்திரண்டு ஒட்டுகளை உடைய சட்டையை அணிந்திருந்த கலீபா உமர் (ரலி) அவர்கள் அந்தக் காலத்தில் அதுவரை உலகமே கண்டிராத ஆதிபத்தியத்திற்கு அதிபரானார்கள். அவர்களது இதயம் மிருது வானது. எளியவர்களுக்கு அது மென்மையானது; எதிரிகளுக்கு அது எஃகு போன்றது.

இங்குள்ள மக்கள் ஏழைகள் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஏழ்மை கேவலமானதல்ல. எளியவர்களாகிய நீங்கள்தான் உலகம் வியக்கும் வெற்றியைத் தேடித்தந்தீர்கள். எதிரிகளின் மினுமினுப்பும் படா-டோபமும் உங்கள் முன் நிற்கவில்லை. கொள்கை பலத்தினால் ஜெயசீலர் ஆனீர்கள்.

உலகம் எந்தக் காலத்திலும் பகைமையினால் வெற்றி கொள்ளப்பட்டதில்லை. எதிரி களுக்கும் நாம் நல்ல முன்மாதிரியாக இருப்போமாக!''

அல்ஹாஜ் காயிதே மில்லத் பிறந்தநாள் விழாப் பெருமலர் **1974**.

ஆசிரியர்கள் : P. N. I. அபுதாலிப்; M. A. அக்பர்

## உங்களுக்குரிய சன்மானங்கள் அல்லாஹ்விடத்தில் காத்திருக்கின்றன!

தமிழ் நாடு மாநில செயற்குழு உறுப்பினர்களில் பெயர் சொல்ல விரும்பாத ஒருவர்

சுதந்திர இந்தியாவின் புதிய அரசியலமைப்புச் சட்டம் 1952-ம் ஆண்டு அமலுக்கு வந்ததி லிருந்து 1962-ம் ஆண்டு வரை தமிழ்நாடு சட்ட சபைக்கு மலபார் நீங்கலாக முஸ்லிம் லீக் காரர் கள் யாரும் பொதுத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக் கப்படவில்லை. 1962-ம் ஆண்டுதான் முதன் முதலாக முஸ்லிம் லீக்கிற்கு ஒரு எம். எல். சி. பதவி கிடைத்தது. அதற்குப் பிறகு ஒரு எம். பி. அல்லது எம். எல். சி. என்று சிற்சில கட்டங்களில் கிடைத்து வந்தது.

அபூர்வமாகக் கிடைக்கும் இவ்வாய்ப்புக் களுக்கு கட்சி சார்பாகத் தாங்கள் நிறுத்தப்பட வேண்டும் என பழுத்த முஸ்லிம் லீக் ஊழியர்கள் எதிர்பார்ப்பதில் வியப்பொன்றுமில்லை. சம்பந் தப்பட்ட இடங்களுக்குத் தாங்கள் வேட்பாளராக அறிவிக்கப்பட வேண்டும் என பலரும் காயிதே மில்லத் அவர்களிடம் கோரிக்கைகள் வைத்த துண்டு. நண்பர்களிடம் சொல்லி தலைவரவர் களிடம் சிபாரிசு செய்யச் சொன்னதும் உண்டு. உண்மையிலேயே தகுதி வாய்ந்த பலரும் அப்பதவி களுக்கு ஆசைப்பட்டனர்.

ஆனால் துரதிருஷ்டவசமாக முஸ்லிம் லீகிற்கு ஒதுக்கப் பட்டிருப்பதோ ஓர்இடம் அல்லது இரண்டு இடங்களாக இருந்தன. அந்த இடத்தைக் கேட்டுப் பெற நினைப்பதோ பத்து பதினைந்து மூத்த தலைவர்கள்; கியூ வரிசையில் அவர்கள் நின்றார்கள். இதில் பலருக்கும் போதிய தகுதிகள் இருந்தன என்றாலும் ஒருவருக்குத்தானே அந்த இடத்தை அளிக்க முடியும்? சமயங்களில் அந்த இடத்திற்காகக் கட்சியினால் தேர்ந்தெடுக்கப் பட்டவர் மற்றவர்களை விட சில அம்சங்களில் தகுதி குறைந்தவராக இருக்கவும் செய்யலாம்.

செயற்குழுக் கூட்டங்களில் இப்பேச்சு எழும் சமயங்களில் தலைவரவர்கள் பலதடவைகள் சில உதாரணங்களைக் கூறிக் காட்டுவார்கள். பொறுமையாக இருக்கும்படியும் அவர்களது சேவைக்கான கூலியை இறைவனுல்தான் கொடுக்க முடியுமே தவிர மனிதர்களால் முழுமை யாகக் கொடுத்து விட இயலாது என்றும் சொல்லிக் காட்டுவார்கள். பதவி ஆசை ஏற்பட்ட பிறகு இந்த சமாதானம் எல்லாம் காதில் எங்கே ஏறப் போகிறது?

வயதில் மூத்தவரும் ஒரு மாவட்டத்தில் தலைமைப் பொறுப்பில் இருந்தவருமான ஒருவர் தாம் எதிர்பார்த்த எம். எல். சி. பதவி தமக்குக் கிட்டவில்லை என்றதும், செயற்குழுக் கூட்டத்தில் மிகவும் மன வருத்தத்துடன் தமக்கு மிகவும் வயதாகி விட்டதாகவும், மாவட்ட பொறுப்பு களிலிருந்து விலகிக் கொள்ள விரும்புவதாகவும் வேறொருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் படியாகவும் தலைவரவர்களைக் கேட்டுக் கொண டார். காயிதே மில்லத் அவர்களுக்கு மிகவும் கஷ்டமாகப் போய்விட்டது. அச் செயற்குழு வில் இறுதியாக அவர்கள் பேசும்போது கூறி னார்கள்.

''இந்தியா சுதந்திரம் பெறப் பாடுபட்டவர் களில் காந்திஜியைப் போல முதன்மையானவர் யாரும் இருக்க முடியாது. தேசப் பிதா என அவர் எல்லோராலும் மரியாதையாக அழைக்கப் படுகின்றார். நாட்டு விடுதலைக்காக நான்தான் பாடுபட்டேன். எனவே இந்திய ராணுவத்தின் பிரதான தளபதியாக நானேதான் இருப்பேன் என்றோ அல்லது நாட்டின் பிரதம மந்திரியாக நானே வரவேண்டும் என்றோ அவர் கோரிக்கை வைக்கவில்லை. இந்நாட்டின் ஜனாதிபதியாக அவர் தேர்ந்தெடுக்கப்படாததால் அவரது சேவை சற்றுக் குறைவானது என்றும் அர்த்தமல்ல.

காமராஜர் இந்நாட்டின் முதலமைச்சராக இருந்தார். நல்ல பல தொண்டுகளைச் செய்தார். நான் முதலமைச்சராக இருப்பதினால் இங்குள்ள பெரிய ஆஸ்பத்திரியிலும் நான்தான் தலைமை டாக்டராக இருக்கவேண்டும் என்று காமராஜர் சொல்லவில்லை.

அல்லாஹ் ஒவ்வொருவருக்கும் தனித்தனி திறமைகளைக் கொடுத்திருக்கின்றான். அந்தந்த திறமைகளுக் கேற்ப நாம் செயலாற்ற வேண்டும். சில சமயங்களில் சந்தர்ப்பம் கிடைக்கலாம். சில சமயங்களில் சந்தர்ப்பங்கள் கிடைக்காமலும் போகலாம். அதற்காக யாரையும் குறைத்து அல்லது தரம் தாழ்த்தி மதிப்பிட முடியாது அது கூடாது.

யார் கூலி கொடுத்தாலும் கொடுக்காவிட் டாலும் ஒவ்வொருவருக்கும் அவரவர் கூலி அல்லாஹ்விடத்தில் நிச்சயம் உண்டு. அதை நம்புகிற கூட்டம் நம்முடையது. எனவே பதவி களை எதிர்பார்த்து அது கிட்டாது போனவர்கள் பொறுத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ்விட மிருந்து உங்களது சன்மானங்கள்—உங்களுக்காக காத்திருக்கின்றன.''

இவ்வார்த்தைகள் தலைவரவர்கள் வாயி லிருந்து வெளி வந்ததும் எல்லோருடைய மனக் குறைகளும் பனிப்போல அகன்று விட்டன.

# காயிதே மில்லத்தின் ஆலோசனையைப் பெற்றார் இந்திரா காந்தி

இந்தியதேசீய காங்கிரசுக்கும் இந்தியயூனியன் முஸ்லிம் லீக்கிற்கு மிடையில் ஆயிரம் கருத்துவேறு பாடுகள் உண்டு; மனஸ்தாபங்கள் உண்டு; கோப தாபங்கள் உண்டு. பெரும்பாலான தேர்தல்களில் அக்கட்சியை எதிர்த்தே முஸ்லிம் லீக் தனதுவாக்கு பலத்தைப் பிரயோகித்தது. ஒரு சில சந்தர்ப்பங் களில்தான் ஆளுங்கட்சியான காங்கிரக்கு முஸ்லிம் லீக் ஆதரவு நல்கியதுண்டு.

ஆனால் நாட்டிற்கு நன்மை பயக்கும் பிரச்சினை களும் காரியங்களும் அவ்வப்போது தலை தூக்கிய சமயம், தமக்குப் பிடித்தமில்லாத காங்கிரஸ் கட்சி ஆட்சியில் இருக்கிறதே என்றுகூடப்பாராது, நாட்டின் நலன் ஒன்றை மட்டுமே பிரதானமாகக் கருதி, முஸ்லிம் லீக் கண்ணை மூடிக்கொண்டு அரசு க்கு ஆதரவு நல்கி வந்திருப்பதை அனைவரும் அறி வார்கள். சீனஆக்கிரமிப்பாகட்டும், பாக்கிஸ்தான் படையெடுப்பாகட்டும், இந்தியாவுக்கு எதிரான மேற்கத்திய நாடுகளில் பொருளாதார நடவடிக் கைகள் ஆகட்டும், அந்நியக்குறுக்கீடுகள் சம்பந்தப் பட்ட அனைத்து விஷயங்களிலும் ஆட்சியாளர்களை முழுபலத்துடன் முஸ்லிம் லீக் ஆதரித்தே வந்துள் ளது. இதுதான் நமது வரலாறு.

திருமதி இந்திரா காந்தி அம்மையார் 1966ம் ஆண்டில் பாரதப் பிரதமராகப் பதவிப் பொறுப் பேற்றதும், நாட்டின்பொருளாதாரச்சிக்கல்களைச் சமாளிப்பதற்காகத் தீவிரமானதொரு நடவடிக் கையை மேற்கொள்ளுவதென முடிவு செய்தார். அதாவது நமது ரூபாயின் மதிப்பைக் குறைத்து நாணயமாற்று விகிதத்தில் மாறுதல் செய்வது (devaluation) என மத்திய அரசு தீர்மானித்தது. அச்சமயம் திரு சி. சுப்பிரமணியம் மத்திய நிதி அமைச்சராக இருந்தார். 1966 ம் ஆண்டு ஜூன் மாதம் ஆறும் நாள் இம்முடிவை அமல் படுத்தும் தினமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. பரம ரகசியமாக வைக்கப்பட்டிருந்த இம்முடிவு, குறிப்பிட்ட தினத்தில் அமல்படுத்தப்பட்டது.

நாணய மாற்று விகிதத்தில் செய்யப்பட்ட முடிவு பற்றிய பாரதூரமான விளைவுகள் குறித்து திருமதி இந்திரா காந்தி அன்றையத் தினம் சில பல அரசியல் தலைவர்களிடம் கலந்தாலோசனை செய்தார். ஆலோசனைக்குஅழைக்கப்பட்டமிகவும் நெருக்கமான தலைவர்களுள் காயிதேமில்லத்தும் ஒருவராவார்கள். எடுக்கப்பட்ட முடிவின் பின் னணி குறித்தும் அதன் முழுமையான விளைவுகள் குறித்தும் (to discuss full implication and background of decision) பேச வரும்படி புதுடில்லியிலிருந்து பாரதப் பிரதமர் அவசரத் தந்தி ஒன்றினை குரோம் பேட்டைக்கு அனுப்பிய சமயம், தலைவரவர்கள் கேரளாவில் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருந் தார்கள். தமிழ்நாடு மாநில முஸ்லிம்லீக் தலைமை நிலையத்திலிருந்து காயிதே மில்லத்திற்கு இவ் விபரங்கள் துரிதமாகத் தெரிவிக்கப்பட்டதும், அவர்கள் அங்கிருந்தபடியே புதுடில்லிக்குப் புறப் பட்டுச் சென்றார்கள்.

ரூபாயின் மதிப்பைக் குறைத்து நாணய மாற்று விகிதத்தில் மாற்றம் செய்யப் பட்ட சமயம் காயிதே மில்லத் அவர்களை கலந்தாலோ சிக்கப்பட்டது போல, 1969 செப்டம்பரில் வங்கி கள் தேசிய மயமாக்கப்பட்ட பொழுதும் 1970ம் ஆண்டில் மன்னர் மானிய ஒழிப்பு மசோதா நிறை வேற்றப்பட்ட பொழுதும், முஸ்லிம் லீக் தலைவர வர்கள் கலந்தாலோசிக்கப் பட்டிருக்கிறார்கள் என்றே சொல்லலாம். ஏனெனில், பொதுமக்களு க்கு நன்மை பயக்கும் இவ்விரு முடிவுகளையும் காயிதே மில்லத் அவர்கள் முழு மனதுடன் ஆதரித் தார்கள் என்பது அனைவரும் அறிந்த செய் தியாகும்.

# தலைவரின் எளிமை

இறையருட் கவிமணி பேராசிரியர்
கா. அப்துல் கபூர் எம். ஏ.

கண்ணியமிக்க ஒரு தலைவர்
காயிதே மில்லத் இஸ்மாயீல்
நுண்ணிய நெல்லை மாவட்டம்
நாட்டுக் களித்த பரிசெனலாம்,

உறுதி படைத்த நெஞ்சமுடன்
உயரிய பண்புகள் பூண்டவராம்
இறுதி வரையில் நன்னெறியை
இறுகப் பிடித்த நல்லவராம்

தேன்போல் சுவைக்கும் தாய்மொழியாம்
தெவிட்டா வளமார் தமிழ்மொழியை,
மாண்பார் நாட்டின் மொழியாக்க
மக்கள் அவையில் மொழிந்தவராம்,

கூட்டம் ஒன்றில் உரையாற்றக்
கோழிக் கோடு நகருக்கு
நாட்டம் கொண்டு சென்றாராம்
நண்பர் பலரைக் கண்டாராம்

மாசறு தலைவரை வரவேற்க
மாளிகை பலவும் காத்திருக்க
பாசமுட னொரு விடுதிக்குப்
பணிவாய்ச் சென்றே உறைந்தாராம்,

தனியறை யொன்றில் தான்மட்டும்
தங்கி யிருந்தார் இராப்போது;
கனியும் தொண்டர் இரண்டொருவர்
காத்தே இருந்தனர் வெளியினிலே,

இரவில் நடுநிசி நேரத்தில்
யாரோ அறையில் நடமாடும்
அரவம் கேட்ட ஒருதொண்டர்
ஆர்வத்துடனே பார்த்தாராம்

தன்னுடை ஆடையைத் தன்கையால்
துவைத்துக் கழுவிய பெருந்தலைவர்,
மின்னுறு விசிறி அடியினிலே
மெதுவாய் உலர்த்தி நின்றாராம்

மாண்புறு கூட்ட நிகழ்ச்சிக்கு
மாற்றும் ஆடை இல்லாமல்,
தான்பெறு எளிய ஆடையினைத்
தானே துவைத்ததை அணிந்தாராம்

திண்டுக்கல் நகர் மாவட்டம்
சென்னை சாலை கல்லூரி
என்றும் காயிதே மில்லத்தின்
எளிய வாழ்வை எடுத்துரைக்கும்.

—''அரும்பூ'' என்ற கவிதைத் தொகுப்பு நூலிலிருந்து.

# “உன்னைத்தான் அழைக்கிறேன்!”

சமுதாயக்கவிக்குயில் தா. காசிம்

முல்லைப்பூ நிறம்வெள்ளை; கள்ளிக் கில்லை!
முருங்கைப்பூ வெள்ளைதான்; மணப்ப தில்லை !!
மல்லிகையின் நிறம்பெற்ற அரளிப் பூவோ,
மணமேடை ஏறுது; பிணத்தில் சேரும்!
புள்ளிமயில் தோகைபோல் வான்கோ ழிக்குப்
புகழ்மிக்க நற்றோகை இருப்ப தில்லை!!
முல்லைபோல், மல்லிகைபோல், மயிலைப் போன்றே
முஸ்லிம்லீக்-முஸ்லிம்கள் கட்சி யன்றோ !!!

விண்ணளந்து மண்ணளந்து அலைகள் மோதும்
விரிகடலின் பரப்பெல்லாம் சேர்த்த ளந்தே
உன்னினத்து முன்னோர்கள் வாழ்ந்த வாழ்வை
உலகத்து வரலாறு சுமந்து நிற்க;
என்னஇல்லை இங்கென்றே ஒதுங்கிச் சென்றாய்?
எத்தரிடும் பிச்சைக்காய் ஏங்கு கின்றாய்?
உன்னைநீ உணர்தற்கே மறுத்து வீணாய்
ஓடியோடி மாற்றாரின் அடிமை யானாய்!

விண்தடவும் குத்புமினார், யமுனை நீரில்
விளையாடும் தாஜ்மஹால் தந்த உன்னை
அந்நியர்தம் நாட்டுடனே இணைத்துக் கூறும்
அறிவிலிகள் இருக்கின்ற இந்த நாளில்
உன்னைப்போல் ஓரிருவர் அங்கி ணைந்தே
உறவாடல் ஏன்தானோ அறிகி லேனே?
தென்னையொன்று பனந்தோப்பில் இருந்தே அங்கு
தேங்காயைத் தந்தாலும் பனந்தோப் புத்தான்!

உன்னைத்தான் அழைக்கின்றேன்; முஸ்லிம் என்ற
உரிமையுடன் கடமைதனை ஆற்று தற்கே!
உன்னைத்தான் அழைக்கின்றேன்; முஸ்லிம் லீகின்
உறுதிமிக்க ஊழியனாய்ப் பணிக ளாற்ற!
உன்னைத்தான் அழைக்கின்றேன்; மாற்றுக் கட்சி
ஒப்பனையைக் கலைத்திங்கு வருவா யென்றே!
உன்னைத்தான் அழைக்கின்றேன்; காயிதெ மில்லத்
உள்ளத்துப் பசுங்கொடியின் நிழலில் வாராய்!!

(31-7-86 தக்கலையில் பேராசிரியர் கபூர் சாஹிப் மூலம் பெற்றது)

# சட்டம் சமைத்தவர் காயிதேமில்லத்

கவிஞர். இஜட். ஜபருல்லா பி.ஏ., பி.ஜி.எல்

அருமகனே பெருமகனே
ஆற்றல்சேர் திருமகனே
தளர்ச்சியுற்ற நேரத்தில்
தட்டிவிட்ட தளபதியை
எழுச்சிகொள்ள வைத்தவரை
ஏந்தலரை சமுதாய
விழிப்புணர்ச்சி தந்தவரை
வியந்திங்கே பாடுகிறேன்..!

சட்டம்படிக்கின்ற காரணத்தால்
நான் அவரை
சட்டம் சமைத்தவராய்க்
காணுகிறேன் பாடுகிறேன்..!

இன்று-

அரசியல் தலைவரெனில்
அழகான கார்வேண்டும்!
படுத்துறங்கப் பஞ்சுமெத்தை
பணிசெய்யப் பலர்வேண்டும்..!
வழிவழியாய் வந்தவர்கள்
வகுத்துவைத்த சட்டமிதை
மாற்றியொரு தனிச்சட்டம்
தீட்டியவர் என்தலைவர்..!

இவரிடத்தில்

காருண்டா..? மாடிமனை
வீடுண்டா..? மகனுக்குச்
சோற்றுக்காய் ஒருகாணி
நிலமுண்டா..? நீட்டியகால்
பற்றிப் பிடித்துவிடும்
ஆளுண்டா..? இல்லை
அடுத்தடுத்து அன்பளிப்பு
தருகின்ற பேருண்டா..?
எது உண்டு!

இவர்-

சொத்தில்லாமல் இருந்த
சமுதாய பொதுச்சொத்து

நாட்டின்-

சொத்தைகள் மத்தியிலே
விளைந்துவந்த நன்முத்து..!

இவர்-

காரில்லா தலைவர்தான்
என்றாலும் இவருக்கு
ஊர்ஏசாப் பேருண்டு..!
எவருக்கு இது உண்டு..?

பரிசுப்பொருள் நல்கப்
பலபேர்கள் வந்தாலும்
எடுத்தாளும் எண்ணமில்லா
இதயசுத்தி இவர்க்குண்டு..!
தன்நெஞ்சு பொய்க்காது
தனிவாழ்வு வாழ்ந்தஒரு
தகைவுண்டு..!
கண்ணியத்தின் தந்தையெனப்
பார்போற்றும் புகழுண்டு..!
இட்டவழி ஏகிடவும்
விட்டபணி செய்திடவும்
பணிவுகொண்ட நெஞ்சங்கள்
பலகோடி இங்குண்டு..!
இன்னும் கேட்பேன்..!
யாருண்டு இவர்போலே
இந்நாட்டில் வாழ்ந்தவர்கள்..?
பேரிருந்தால் சொல்லுங்கள்
கவியியற்றிப் பாடுகின்றேன்.

—மாநில மாநாட்டில் ''சட்டம் சமைத்தவர் காயிதே மில்லத்'' என்ற தலைப்பில் பாடிய கவிதையில் ஒரு பகுதி.



# மனிதருள் மாண்பாளர்

**— கவிஞர் சீர்காழி இறையன்பன் —**

வான் பொய்த்தும் தான் பொய்க்கா வளத்தின் பூமி
வாஞ்சை வளர் அருவி கொஞ்சும் நெல்லைச் சீமை,
தேன்சிந்தும் தமிழ்த் தென்றல் வீசிக்காட்டும்
திருநோக்கின் பொது நோக்கோர் வாழ்ந்த காடு!
பான்கூட தன்பகட்டை மறைத்துக் கொள்ளும்
பாங்கு நிகர் குற்றாலம் குலவி வாழும்
தீன் மறையின் தேசுதனை பேசும் கோட்டை
திரு மாண்பின் பெருமானாய் பிறந்தார் 'மில்லத்'!

கண்விழியாய்; கலைவடிவாய்; கருணையின் பேரொளியாய்;
கண்ணியத்தின் இருப்பிடமாய்; காவியத்தின் தலைமகனாய்;
மண்ணகத்தின் மணிச்சுடராய்; மாண்பு நெறி தனிச்சுடராய்;
மலர்சிரிப்பின் அன்புருவாய்; மாதவத்தின் மணி முடியாய்;
பொன்னிதியாய் — புகழொளியாய் — பொதுமை நலத்தின்
புண்ணியராய்; பொறை காக்கும் குணத்தின் குன்றாய்;
விண்மதியாய் — விரிகதிராய் — வெற்றியின் பேருருவாய்
வையத்தில் வாழ்ந்திட்ட 'காயிதே மில்லத்' அண்ணல்!

திருமறையே தானென்றும் தானே அம்மறை யென்றும்
திருநபிகள் வாழ்ந்திட்டார் — தீனோர்க்கு தந்திட்டார்;
உருவான இக்கொள்கை உவப்பாகக் கொண்டிட்டார்
உலகத்தில் பலகோடி — ஓங்கு புகழ் கண்டிட்டார்!
பெருமனத்தில் இம்மொழியில் பிறழாமல் வாழ்ந்திட்ட
நேர் நெறியின் சீர்குடியில் பார்புகழ பிறந்திட்ட
கருமத்தின் காவலராம் — பொறுமையின் பெட்டகமாம்
நற்குணத்தின் நம் அண்ணல் 'இஸ்மாயில்' மாண்பாளர்!

அமைதிக்கு அரண்கட்ட அவர் பெயரே அடிக்கல்லாம்
ஆற்றலுக்கு ஏற்றங்காட்ட அவர் பெயரே முன்னோடியாம்;
ஆத்மீக பக்திக்கோ — மிக்க பெயர் தக்க வைக்கும்
அரசியல் சிரசினிலே — அவரே தனிச்சுடராம்!
சாத்வீக சாயலிலே சன்மார்க்கச் சுடர் கொளுத்தி
சரித்திரத்தின் நாயகனாய் பெருத்த புகழ் கண்டவராம்;
வித்தகத்தில் சத்தியத்தின் முத்திரையை பதிய வைத்து
விடிவெள்ளி மாண்புக்கு படியமைத்த பண்பாளர்!

வலம்புரி முத்துவுக்கு வெண்மை வேண்டும்
வைரத்துக்கு கோஹினூர் சான்று சொல்லும்;
பலத்துக்கு சிங்கம்தான்—பார் உணரும்
பரிசுத்த பக்தியால் முக்தி காட்டும்;
குலமக்கள் முன்னேற்ற வழியே காட்ட
கோமானே—மில்லத் உந்தன் பேரே சான்று!!
நிலம் விட்டு மூச்சடையும் நேரத்தும்—நாட்டு
நலங் கேட்ட நன் மகனே உன்மாண்பே என்னே?

கல்லினுள் சிலை வடிக்கும் கைத்திறன் புதுமைதானே!
    வில்லினுள் வீரங்காட்டி வெல்வதும் பெருமைதானே!
கல்லினுள் தேரை வாழ – காண்பது இறைமைதானே—உந்தன்
    மெல்லிய குரலின் மாண்பில் மிளிர்ந்திட்ட மேன்மைக்கீடு
சொல்லினுள் வடிக்க வொண்ணா சுந்தர மாண்பை எண்ணி
    சுடர்விடும் உலகம் யாவும் வியப்பினிலாழுதிங்கே!
பொல்லாங்கை பொசுக்கிட்ட பூமானே உந்தன்
    சொல்பாங்கை இதயமாக்கி சுடர்வாழ்வை காணுகின்றோம்!

நாடாளு மன்றத்தில் அவர் நாவாளும்
    நயமான கருத்துக்கள் அங்கு போராடும்;
காடாளும் கெடு மதியோர் மனம்மாறும்—உயர்
    கலை ஞானம் அவை முழுதும் அரசாளும்!
உடலாலும் உழைப்பாலும் உருவாகும்—பொது!
    உடமைக்கே அவர் தோற்றம் கருவாகும்;
சுடராளும் சுவையூறும் சொல்லமுதம் – தினம்
    சுந்தரத்தின் எழிலாகும் அவர் வதனம்!

தெள்ளறிவால் உலகமைதி காணும் நெஞ்சில்
    தேனடையாய் நிறைந்திருக்கும் மாண்புதானே!
கள்ளமில்லா உள்ளத்தில் கனிந்து வாழும்
    கருணையின் மறுபிறப்பும் மாண்புதானே!
நல்லறிவில் நடனமாடும் நட்பின் ஊஞ்சல்
    நனி எழிலாய் நாட்டில் எழுந்த மாண்புதானே!
வெள்ளி நிலா வெடிசிரிப்பில் வாழும் மாண்பு
    வெற்றியாளர் பெற்றுதந்த பரிசுதானே!

கனிவு மிகு அவர் வதனம் காலத்தின் கலை வாசல்!
    கருணை நிறை அவர் தோற்றம் மாண்பின் மலர்ச் சோலை!
காட்டிய நேர் பாதை கலங்கரை ஒளி விளக்கு!
    கட்டிய பெருங் கோட்டை முஸ்லிம்லீக் பேரியக்கம்!
முத்தமிழ் பெருமைக்கு அவருரையே முத்தாரம்!
    முழு உரிமை பெறுவதற்கு அவருரையே பீரங்கி!
சித்திரை நிலவுக்கு அவர் முகமே அத்தாட்சி!
    சீர்மிகு சிந்தனைக்கு அவர் கருத்தே கண்காட்சி!

மாமறையோன் கூறும் நோன்பு மருவிலா மாண்புதானே!
    மாதவத்தின் நற்றொழுகை மகிழ்வூட்டும் மாண்புதானே!
மாசகற்றும் ஏழை தர்மம் ஈடிலா மாண்புதானே!
    மாமக்கா நகர் செல்லல் மணியான மாண்புதானே!
தீன் நெறியில் தினம் வாழ்தல் திருமிகு மாண்புதானே!
    தெளிவான உண்மை நன்மை தேடிதரும் மாண்புதானே!
வான்மறை காட்டும் நல்ல வழுவிலா மாண்பில் நாளும்
    வாழ்ந்திட்ட ஒருவர்தானே காயிதெமில்லத் அண்ணல்!

*—1973 ஜூன் 9, 10 தேதிகளில் சென்னையில் நடைபெற்ற மாநில முஸ்லிம் லீக் மாநாட்டுக் கவியரங்கில் பாடப்பட்டது.*

# வாழ்க எம் தலைவா!

புலவர் ஆபிதீன்

(அகவற்பா)

பேட்டை பிறந்து பேட்டில் வதிந்து
நாட்டைப் புரக்கு நெஞ்சம் சுமந்து
பின்னால் விளையும் பெருமை சிறுமை
முன்ன லறிந்து முற்றத் தெளிந்து
நலியா தென்றும் சமுதாயத்தை
சலியா துவந்து சிரமேற் ருங்கி
தன்னே ரில்லாத் தலைமை யேற்றுப்
பொன்னே போலப் போற்ற நடந்து
அரசிய லுலகி லருநெறி காட்டி
முரசொலி யன்ன மூதுரை முழங்கி
தேனாய் மொழியுந் திறனுர் நாவால்
ஓனாய் சுமத்தும் பழிகள் ஒறுத்துக்
கோட்டைக் குள்ளே குமுறும் பகைமைக்
கேட்டை வென்று கண்ணிய மூக்கி
அறுபத் தெட்டா மாண்டிற் செல்லும்
அறிவிற் சிறந்த எங்கள் தலைவர்
காயிதே மில்லத் முஹமதிஸ் மாயீல்
ஆயுத மில்லா அறப்போ ராற்ற
இறைவன் றிருமுன் இருகர மேந்திக்
குறைவில் வாழ்வு குவியக் கோரி
ஆழிய அன்பால் வாயால் நெஞ்சால்
வாழிய வென்று வாழ்த்துவ மாதே !

10—6—1963 உரிமைக்குரல்

11

# தீன்குலத் தலைவா வாழி!

கே. ஏ. வஹாப்
மன்னூர் எம்.எல்.ஏ.

தீன் குலத்தை பயமென்னும் இருள்கப்பி
தீராதபெருந் துன்பப்பழி படர்ந்து
தன் நிழலைத் தான் கண்டு அச்சமுறும்
தள்ளாடும் உள்ளத்துள் கோழைத்தனம்
தான் கொண்டு தீன் குலத்து மக்களெல்லாம்
தவித்திருந்த போது இருள் நீக்க வந்து
வான் முகட்டில் விடிவிளக்காய் வந்த எம்
வள்ளலே காயிதே மில்லத் வாழ்க!

நாட்டிற்குத் தன்னுயிரை தந்து தியாக
நல்வாழ்வை நாம் செய்த போதும் நீங்கள்
நாட்டிற்கு துரோகியென்று நாட்டை யாண்ட
நஞ்சதனை நெஞ்சமதில் கொண்டோர் கூற
கேட்டுவிட்ட போது சீறி எழுந்து எம்மை
கூட்டி விட்டார் ஓர் அணியில் அவரே எங்கள்
மீட்டிவிட்ட இதயத்தின் நாதத் தலைவர்
மில்லத்தே பல்லாண்டு வாழ்க! வாழ்க!

தோட்டத்து மல்லிகையாய் மணம் பரப்பி
தொடுவான விடி விளக்காய் ஒளிபரப்பி
வாட்டத்து பயிர் வாழ மழையாய் வந்து
வானத்துத் தாரகையாய் வழியும் காட்டி
காட்டில் வாழ் புலி வாயில் மானும் தீனைக்
காத்திடவே வந்திங்கு தீன்குலத்தார்
ஈட்டிக்கும் அஞ்சாத நெஞ்சுரத்தைத்
தந்தவரே சமுதாயத் தந்தை மில்லத்!

உரிமைக்குக் குரல் மறந்து தீன் குலத்தார்
ஓய்ந்திருந்த போது அவர் நெஞ்சமதில்
உரிமைக்குக் குரல்எழுப்ப மறந்திருந்த
பெருமைக்கு எமை செய்த பெருந் தலைவா!
மறுமைக்கும் வேண்டுகிறோம் எம் தலைமை
மாசற்ற உம் வாழ்வில் பெருமைகொண்டோம்
சிறுமைக்கு எட்டாத அறிவே எங்கள்
சிறுபான்மை தீன் குலத்தின் தலைவா வாழி!

*''காயிதே மில்லத் பிறந்தநாள் விழாப் பெருமலர்''*
*ஜூன் (1971)*

# காயிதே மில்லத் வாழ்க

பகை நாணும் வகை காணும் பண்பு மிக்கப்
படை கூட்டிப் புகழ் நாட்டும் வெற்றிவீரர்
நகைப்பாரை நகைப்பாலே வீழ்த்துகின்ற
நல்லாற்றல் படைத்திட்ட அமைதியாளர்
தகைமேவும் அறிஞர்க்கும் அறிஞராவார்
சமுதாய நிலைகாக்கும் தனித் தலைவர்
புகழ்மேவும் காயிதே மில்லத் என்றே
புவிபோற்றும் எந்தலைவர் இனிதே வாழ்க!

நெஞ்சத்தை அகந்தையினால் நிரப்பி நின்றோர்
நிலைகுலையச் செய்கின்ற வித்தை செய்து
வஞ்சத்தின் துணையாலே ஏய்த்து நின்ற
வல்லரக்கர் ஆதிக்கம் சாய்த்து வென்று
அஞ்சியஞ்சி அடிமையென வாழ்ந்த மக்கள்
ஆர்ப்பரித்து எழவைத்து உரிமை காத்து
துஞ்சிநின்ற சமுதாயம் விழிக்க வைக்கும்
தொண்டாற்றும் எந்தலைவர் இனிதே வாழ்க!

உள்ளொன்று புறமொன்று உதட்டில் ஒன்றாய்
உறவாடி கெடுக்கின்ற உலுத்தர் நட்பை
தள்ளென்ற சமுதாயத் தலைமை ஏற்று
சத்தியமே வெல்லுமெனச் சான்றுகாட்டி
கள்ளுண்டு தள்ளாடும் நிலையிலாகிக்
கருத்தழிந்தோர் திருந்தவைத்து கடமையாற்றும்
கள்ளமற்ற எந்தலைவர் இந்த நாட்டின்
கடல்மலையாய் கதிர்மதியாய் நிலைத்து வாழ்க!

*—உரிமைக்குரல் 5-6-67*

பெற்றெடுத்த தந்தையரே எதிர்த்த போதும்
பிறர் வணங்கும் சிலைவடிக்கும் தொழில் மறுத்து
கொற்றவனின் பகைவரினும் கொள்கை காத்து
கொழுந்துவிடும் தீயினிலே விழவும் ஒப்பி
முற்றினிலும் இறைவனுக்கே தனைப் பணித்த
முஹம்மதுஇபுராஹீம் நபியின் மைந்தர்
குற்றமற்ற இஸ்மாயீல் பெயரைக் கொண்ட
குலத் தலைவா காயிதே மில்லத் வாழ்க!

**—கவிஞர் திலகம் சாரண பாஸ்கரன்**

*மணிச்சுடர் 4-6-89*

# மன்னர் மன்னு!

## கவிஞர் தா. காசிம்

கண்ணியமே! கார்முகிலே! கருணைவேந்தரே!
கனிவிருக்கும் பனிச்சுடரே அருளின்மன்னு
புண்ணியரே! பூமானே! புகழின் ஊற்றே!
பொன்ருநற் றிருவிருக்கும் புனிதக் கோவே!
மண்ணகத்தில் என்னதவம் செய்து விட்டேன்?
மன்னுநின் தொண்டனெனப் பெயரெடுக்க!
கண்காக்கும் இமைபோன்ற கௌமின் காப்பே!
காயிதேமில் லத்தென்றும் மன்னர் மன்னு!!

என்னகத்துச் சுனைபூத்த குமுதப்பூவே!
எண்கோடி வடிவெடுத்த தனிமைக்கோவே!
பொன்முகத்துப் பொலிவேற்ற நெல்லை நாட்டின்
புகழ்பாடும் பொருனையாற்றுப் பேட்டைதந்த
நன்மகனே! நாயகனே! நின்னைக் கண்டு
நலம்கண்டேன். வலம்வந்தேன், உரிமைபெற்றேன்!
தென்பாண்டித் தமிழ்தந்த கவிதைக்குள்ளே
தேக்கியுன்னைப் பாக்களாகப் பூக்கவைப்பேன்!!

ஏழ்மைக்குள் நிறைவுற்ற பொதுமை வாழ்வும்
இறைமுன்னே கையேந்தும் ஒற்றை நோன்பும்
தாழ்வுற்ருேர் வாழ்வுக்காய்ப் பணித்த நெஞ்சும்
தாக்கிஞரில் தகவுரைக்கும் தனிமைநோக்கும்
வீழ்ந்தாரை உயர்த்துகின்ற வெற்றிப் போக்கும்
வீம்பரிலும் சாம்பாத இனியசொல்லும்
பால் பார்க்கும் முகம்பெற்ற தலைவ! நின்னை
பார்த்துத்தான் பைந்தமிழில் கவிதைகற்றேன்!

மலைதொடுத்த விளைவெல்லாம் மனம்கொடுக்கும்
மதிகொடுத்த நிதியெல்லாம் விழிகொடுக்கும்,
இலைகொடுத்த நிறமெடுத்த கொடிபிடித்தே
இனம்கொடுத்த பணியெடுத்து நடைவகுத்து
கொலை படித்த பகை எதிர்த்து அறமு ரைத்து
கொடிருடைத்து வினைமுடித்து முரசொலித்து
அலைதொடுத்த அணிவகுப்பாம் முஸ்லிம்லீகின்
அமைப்பாளர் அதன் தலைவர் காயிதே மில்லத்!

சமுதாயக் கவிஞர் தா. காசிம்

# தேடிய நல் தலைவராக காயிதே மில்லத் வந்தார்!

வீரையார் எம். அப்துர் ரகுமான்

வாடிய பயிர் தழைக்க
வான் மழை கிடைத்ததே போல்.
மூடிய இருள்கள் நீங்க
முழுமதி உதித்ததே போல்,

சாடிய பகையை நீக்கி
சீரிய வழியைக் காட்ட
தேடிய தலைவ ராக
காயிதே மில்லத் வந்தார்.

புண்ணிய தீனைப் பேணி
நன்னபி வழியில் நின்று,
தன்னலம் கருதா தென்றும்
கண்ணெனக் ''கவ்மை''க் காக்க,
நன்மனப் பொறுமையோடு
எண்ணரும் தியாகம் செய்ய,
கண்ணியத் தலைவராய் நம்
காயிதே மில்லத் வந்தார்

ஈகைக் கொடுப்பதில் ஈர நெஞ்சாய்,
பகையை எதிர்ப்பதில் வீர நெஞ்சாய்,
கொள்கை காப்பதில் தீர நெஞ்சாய்,
செய்யும் செயல்களில் தூய நெஞ்சாய்
தொண்டரை இணைப்பதில் பாச நெஞ்சாய்,
கொண்டதீன் மார்க்கத்தில் வைர நெஞ்சாய்,
அல்லாஹ் ஒருவனையே அஞ்சும் நெஞ்சாய்,
நல்லார் காயிதே மில்லத் வந்தார்.

'வீரையார்'—அப்துர் ரஹ்மான் வீரவநல்லூர்

# அருமைபாரு!

புலவர் ஆபிதீன்

ஒருமைப் பாடு ... என்ன
அருமைபாரு அடடா! (ஒரு)

[ச.அ.ப—க்கள்]

கருப்புடன் வெள்ளை மஞ்சள் சிவப்புக்
கலர்கள் ஒருநிற மாகுமா?
பருப்புடன் கோழிகீரை மீனும்
பிசைந்து புது உண வூட்டுமா?—இந்தப்
பேதங்கள் செய்து காட்டுமா?...... [ஒரு]

அல்லா பகவன் கடவுள் மைகாட்
அனைத்தும் ஒரு நெறி பேணுமா?
குல்லாய் சாரி தாவணி சொக்காய்
கோட்டும் ஒருமை காணுமா?—மக்கள்
கொள்கை ஒன்றாய் மாறுமா?...... [ஒரு]

ஆங்கிலம் நந்தமிழ் கன்னடம் தெலுங்கை
அழித்தே ஹிந்தி வாழுமா?
பாங்குடன் ஹிந்து முஸ்லிம் கிருஸ்து
புத்தமும் ஒரு மதமாகுமா? —சுவை
புளிப்பும் இனிப்பும் போகுமா? [ஒரு]

நெட்டை குட்டை நடுத்தர மெல்லாம்
நீக்கியே சமநிலை யாக்குமா?
குட்டைச்சம்பா கோதுமை சோளம்
கூழாய்ச் சமைத்து உண்ணுமா?
களைக் கூத்தாய் முடியப் பண்ணுமா......! [ஒரு]

புலவர் ஆபிதீன் 9—7—1962 உரிமைக்குரல்

# மறக்குமோ எங்கள் நெஞ்சம்!

## இளையான்குடி கவிஞர் மு. சண்முகம்

இறையச்ச மூமினே ; எங்கட்காக
எழுந்திட்ட அரிமாவே; இதயவேந்தே!
நரை மூப்பு கண்டாலும் நலிந்தோர்க்காக
நாவுயர்த்த அஞ்சாத நட்பே, நீங்கள்
தரை வாழ்ந்த தண்மதியே! ஞாலம் போற்றும்
தமிழாய்ந்த பெருமகன் நீர்; உங்கள் வாழ்வு
நிறைவான திருவாழ்வு; நேர்மை மின்னும்
நெறியான புகழ்வாழ்வு என்பேன் நானும்!

கண்ணியத்தை கற்பாகப் பேணி வாழ்ந்த
காயிதே மில்லத்; நாங்களென்ன
புண்ணியம் செய்தோமோ புரியவில்லை!
பூம் புனலாய் ஓடிவந்து வளங்கள் சேர்த்தீர்!
கண்ணிமைகள் விழியோடு யுத்தம் செய்து
காயங்கள் சேதங்கள் ஆகா வண்ணம்
ஒன்ருக்கி எமையன்பாய் முஸ்லிம் லீக்கில்
உறவாட வைத்தீர்கள்; உள்ளம் வாழ்க!

அரசியலில் தூய்மை நலம் காத்த உங்கள்
அறவாழ்வு உலகிற்கோர் பாட நூலே!
எரிகின்ற விளக்கிற்கு எண்ணெய் தானே
எஜமானன்; அதுபோல எங்கள் வாழ்க்கை
திரியிங்கே தீபமாய் சுடர்வதற்கு
சேவைபல செய்தீர்கள்; சிந்தை யெல்லாம்
கரும்பாக இனிக்கிறது; எண்ணும் போதே
காவியமாய் நீள்கிறது; உங்கள் மாண்பு!

இந்திமொழித் திணிப்புக்காய் குரலுயர்த்தி
எழுந்தீர்கள் அந்நாளில்; அஞ்சவில்லை!
செந்தமிழின் தீன் சுவையை ஆட்சி மன்றச்
செவிகளிலே பாய்ச்சித்தான் சேவை செய்தீர்!
இந்தியா சுதந்திர மகுடம் சூட
ஏந்தலர் காந்தியோடு பாடு பட்டீர்!
சந்தனமே! மறக்குமா? எங்கள் நெஞ்சம்!
சந்தோஷ மாலையிட நாளும் கெஞ்சும்

இளையான்குடி
கவிஞர் மு. சண்முகம்
—மணிச்சுடர் 4—6—89

# சங்கநாதம்

கவிஞர் தா. காசிம்

தாரகைகள் மின்னுகின்ற நீல வானில்
தங்க நிலா தவழ்ந்தொளியைச் சிந்தல்போல
சீராளர் எம் தலைவர் எழுந்து நின்று
சிறுபான்மை இனத்தோரின் உரிமைகேட்டு
பாராளுமன்றத்தே முழங்கும் போது
பார்த்தவிழி அத்தனையும் பூத்ததன்றி,
ஊராளும் காங்கிரசுக் கட்சியோரின்
உடலெல்லாம் சில்லிட்டு வியர்த்த தங்கே

''சிறுபான்மை இனத்தோரைத் தீர்த்துக்கட்டத்
திட்டமிடும் கொடுமைதான் 'ஒருமைப்பாடா?
'வரும்நாளின் வாழ்வெங்கே' என்று கேட்டால்
'வகுப்புவாதி' என்கின்ற குற்றச்சாட்டா?
உருவான பழிச் செயலை மறைத்துவிட்டே
ஊமையென வீற்றிருக்கும் ஆளுவோரே!
சிறுபான்மை இனத்தோரை ஒழிக்கப் பார்த்தோர்
சென்றடைந்த முடிவுகளை நினைவில்கொள்வீர்!

வாக்குறுதி கொடுக்கின்றீர்; மறந்து விட்டு,
வழக்கம் போல் மறுபடியும் இயங்கு கின்றீர்;
சீக்கியரைச் சிறையிட்டு வாட்டுகின்றீர்;
தீயிட்டே எம்மவரைகொளுத்துகின்றீர்;
ஏக்கமதைப் பரிசாக உங்களாட்சி
எங்களுக்குத் தந்து விட்ட கொடுமை பாரீர்!
சாக்காடு சிறுபான்மை இனத்தின் வீடா?
சாந்தமிகும் காந்தி வழி இதற்குப் பேரா?

என்றங்கே நம் தலைவர் முழக்கமிட்டார்
இடியேறுல் தாக்குண்ட அரவம் போல
மன்றத்தின் பெரும் பான்மைக் கட்சி யோரும்
மாஸ்கோவின் கொள்கை வழிக் கூட்டத் தாரும்
குன்றிருக்கும் கல்லடித்த சிலையாய் வீற்று
கூர்விழியால் தலைவரையே பார்த்திருக்க
மன்றத்தின் மதிப்புமிகும் தலைவராரும்
மணிக்கணக்கைக் கணிப்பதற்கு மறக்கலானர்!

# கட்டளை இடுவார் யாரோ?

கவிஞர் ப.மு. அன்வர்

முயலுவார் கற்பனைக்கும் பிடிபடா முழுமை நாட்டின்
பயணியே! முதுநி லத்தில் முக்காலும் சுற்றி வந்தோய்?
அயலொரு கூட்டம் நின்று வாய்மூடி அழுது தீர்க்கும்
செயலினை அறியாய் ஐயா, செம்மலே! யாது ரைப்பேன்?

தந்தையாய் இறந்த போதும் தான்பெற்ற மக்கட் செல்வம்
முந்துற மடிந்த போதும் முகமலர் கருகல் இல்லா
விந்தையை நிகழ்த்திக் காட்டும் வீரர் தாம் ஐயா, நிற்கு
வந்தஇந் நிலையைக் கண்டு மருட்சியால் கலங்குகின்றார்!

தவணையை நீட்டு கில்லாத் தலைவனுக் கடிமை பூண்ட
உவகையில் ஊறிப் போன உள்ளந்தான் ஐயா, நின்றன்
குவிமலர் முகத்தை நோக்கிக் குறிப்பிழந் துருகு
கின்றோம்
கவலையை யார் பாற் சொல்வோம்? கட்டளை இடுவார்
யாரோ?

முற்றெமை யடிமை கொண்ட
முழுமுதல் இறைவ, நீயாம்
உற்றபே ரிடர்க ளைதற்
குதவிய திருவிளக்கை
மற்றுன்பால் மீட்டுக் கொண்டாய்
மறித்ததை தடுத்து வைக்கக்
கற்றிலேம்; பேதை மையால்
கலங்குதல் பொறுத்தி அல்லா(ஹ்)!

*(காயிதெ மில்லத் மரணச் செய்தி கேட்டுப் பாடிய கையறுநிலைப் பாட்டு)*

—முஸ்லிம் முரசு (1972 ஏப்ரல்)

# அருள்வாய்! அல்லாஹ்!!

## கவிஞர் தா. காசிம்

மலைகொடுத்த விளைவெல்லாம் மனம்கொடுக்கும்
மதிகொடுத்த நிதியெல்லாம் விழிகொடுக்கும்
இலைகொடுத்த நிறமெடுத்த கொடிபிடித்தே
இனம்கொடுத்த பணியெடுத்து நடைவகுத்து
கொலைபடிந்த பகைஎதிர்த்து அறமுரைத்து
கொடிநுடைத்து வினைமுடித்து முரசெடுத்து
அலைதொடுத்த அணிவகுத்து தலைமைஏற்ற
அண்ணலெங்கள் காயிதெமில்லத் நீடுவாழ்க!

என்னகத்துச் சுனைபூத்த குமுதப்பூவே!
எண்கோடி வடிவெடுத்த தனிமைக்கோவே!
பொன்முகத்துப் பொலிவேற்றாய்; நெல்லை நாட்டின்
புகழ்பாடும் பொருனையாற்றுப் பேட்டை தந்த
நன்மகனே! நாயகனே! எழுபதோடு,
நாலாண்டு நல்லாண்டாய் வாய்க்கப்பெற்றீர்!
இன்னுமொரு நூறாண்டு நீரிருக்க
இறைமுன்னே கையேந்தி யாசிக்கின்றேன் !

கண்ணியமே ! கார்முகிலே ! கருணைவேந்தே !
கனிவிருக்கும் பனிச்சுடரே! அருளின்மன்னா!
புண்ணியரே ! பூமானே ! புகழின் ஊற்றே!
பொன்றாநற் றிருவிருக்கும் புனிதக்கோவே!
மண்ணகத்தில் என்ன தவம் செய்துவிட்டேன்
மன்னாநின் தொண்டனெனப்பேரெ டுக்க!
கண்காக்கும் இமையான கௌமின் காப்பாம்
காயிதெமில் லத்தெங்கள் தலைவா வாழி !

ஏழ்மைக்குள் நிறைவுற்ற பொதுமை வாழ்வும்
இறைமுன்னே கையேந்தும் ஒற்றை நோன்பும்
தாழ்வுற்ருேர் வாழ்வுக்காய் பணித்த நெஞ்சும்
தாக்கினுர்க்கும் தகவுரைக்கும் தனிமை நோக்கும்
வீழ்ந்தாரை உயர்த்துகின்ற வெற்றிப் போக்கும்
வீம்பரிலும் சாம்பாத இனிய சொல்லும்
பால்பார்க்கும் முகம்பெற்ற தலைவா! நும்மைப்
பல்லாண்டு பாடியிங்கே வாழ்த்துகின்றேன்!

சீறிவரும் புயலெனவே பகைவர் சூழ
சிற்றறிவின் கொற்றமங்கே கொடி பிடிக்க
ஆறிவரும் எம்நெஞ்சப் புண்ணில் மீண்டும்
அம்புமழை பொழிந்திட்டார் அந்நாளில்
வீறிட்டே அலறுவதும் குற்ற மென்ருர்
விம்மலுடன் எம்மவரோ துடிதுடித்தார்;
யாரிருந்தார் அன்றிந்த இனத்தைக் காக்க
அண்ணலெங்கள் காய்தெமில்லத் லீகைக் கண்டார்!

தனக்கென்றே உருவொன்றும் இல்லாதிந்தத்
தாரணியைச் செங்கதிரை உடுக்கஞேடு
கணக்கற்ற உயிரினமும் படைத்துக்காக்கும்
கருணை தவழ்இறையோனே! முதல்வா!! இங்கே
எனக்கென்றே நீ தந்த இம்மையாண்டில்
எண்ணியொரு புத்தாண்டைத் தலைவர் வாழ்வின்
கணக்குடனே சேர்த்துவிட வேண்டி யுன்னில்
கையேந்தி நிற்கின்றேன் அருள்வாய்! அல்லாஹ்!!!

7 - 7 - 1969 உரிமைக்குரல்

# தவமேற்று யாம் பெற்ற தலைவ!

கவிஞர் தா. காசிம்

திருவிருக்கும் சமுதாயத் தலைவராகி
திக்கெல்லாம் அதன் புகழைப் பரப்புகின்ற
பெரும் பணியில் தனித் தலைமை தாங்குகின்ற
பெம்மானே! எம்தலைவ! நுமக்கு நானை
அறுபதுடன் ஏழாண்டு தொடங்கல்கண்டு
அக மலர, முகமலர வாழ்த்துகின்றோம்,
வரும் நாளில் நூறாண்டு மேலும் வாழ
வல்லோனை இறைஞ்சிறைஞ்சி வாழ்த்துகின்றோம்.

∴ ∴ ∴

கடந்துவிட்ட கவின்மிக்க காலமெல்லாம்
கண்விழித்தே எம்மினத்தைக் காத்துநின்றீர்;
மடை திறந்த வெள்ளமென சொற்கள் சிந்தி
மாமன்றில் எம்மினத்தின் உரிமை காத்தீர்;
கடமைக்கோர் இலக்கணமாய் நும்மைப் பெற்றோம்;
கனிவிலங்கும் நும்முரைக்கே கட்டுப்பட்டோம்;
தடந்தோளர் குலவிளக்கே வாழ்க! வாழ்க!
தண்பிறையின் கொடித்தலைவ வாழ்க! வாழ்க!
தொண்டரது நெஞ்சமெலாம் கொலுவிருக்கும்
தூமணியே! மாமணியே! வாழ்க! வாழ்க!
மண்டலத்தில் நேர்மைக்கோர் எடுத்துக்காட்டாய்
மறைவழியில் போராடும் முஸ்லிம் லீக்கோர்
கண்டெடுத்த ஒருதலைவ! காயிதே மில்லத்
கரம் தூக்கி, பிறைக்கொடியை உயர்த்துகின்றோம்!
செண்டிருக்கும் மலரழகை முகத்தில் தேக்கி
செந்தமிழில் கவிபாடி வாழ்த்துகின்றோம்!

4-6-62 உரிமைக்குரல்

# உதித்ததுண்டோ

மௌலவி பாஜில்
ஜி. எம். எஸ். சிராஜ் பாகவி

இந்திய நாட்டின் கண்ணே
இணைத்திலாத் தலைவனாகி
முந்திய பிரிவை மற்றும்
முரண்களைப் போக்கி வைத்து
சுந்திர பணிக ளாற்றும்
சீர்காயி தேமில் லத்தின்
சிந்தையின் விரிவை இங்கு
செப்பிட முடியுமாமோ ?

உரிமையும் மானந்தானும்
உயிரெனக் கொண்டு வாழும்
நெறியினில் நம்மை யெல்லாம்
இணைத்ததும் ஒன்றோ மற்றும்
சரிநிகர் என்று வாழும்
உரிமைக்குக் குரல்கொடுத்த
பெரியஅத் தலைவர் மாண்பைப்
பேசவே இன்ப மாகும்.

தாம்வாழும் நாளிலே தன்
கொள்கையில் நின்றுழைக்கும்
மேம்படு மக்கள் தம்மைப்
படைத்ததும் பெருமை அன்றோ?
வீம்புடைக் குழுக்க ளாக
விரவிய நம்மி னத்தை
தேம்படு கனிப்பேச் சாலே
சேர்த்ததும் அவரே யன்றோ?

காயிதே மில்லத் தின்முன்
கணக்கதற் குள்அ டங்கா
காயிதே மில்லத் வாழும்
பெருமையைக் காணுகின்றோம்
ஆயிரம் தலைவர் கள்தாம்
வாழினும் இதனைப்போன்ற
தாயகப் பணிபுரிந்த
தலைவர்கள் உதித்த துண்டோ?

8—1—1962 உரிமைக்குரல்

# தலைமைக்கு மாறு செய்யோம்

அருள் தங்கும் இருவிழியும் பொறுமை சொல்லும்;
அரசியலில் கண்ணியத்தை இதழ்கள் விள்ளும்;
கருங்குஞ்சம் சிவப்பணியில் கவிதை பாடும்;
கார்முகிலும் வெண்முகிலும் உறவு கொண்ட

திருமுகத்துச் சிகையழகு நெஞ்சை ஈர்க்கும்;
சிதறாத கருத்துரைகள் உரிமை காக்கும்;
வரும் பகைக்குப் புன்சிரிப்பே வரவு கூறும்;
வந்த பகை தஞ்சமெனத் தாழில் வீழும்.

எந்தலைவ! நும்புகழை எழுதிக் காட்ட
ஏடெடுத்தால் எவராலும் இயலப்போமோ?
அம்புலியை மின் மினியால் அறிதல் சாலா,
அதுபோல நுமையாங்கள் அஞ்சி நோக்கி

இம்மட்டில் இயலாத நிலையைக்கூறி
இதயத்தை நும் பணிக்கே அர்ப்பணித்தோம்
நும் இனமும் பிறஇனமும் நட்பில்வாழ
நாளெல்லாம் நும் வழியில் பயணம் கொள்வோம்!

மலைபெயர்ந்தே ஆழியுள்ளே மிதக்கக்கூடும்,
மடுவெல்லாம் இமயமென மாறக்கூடும்,
அலைகடலும் கற்பாறை யாகக் கூடும்,
அனற்கங்கு பனியெனவே குளிரக்கூடும்.

விழுங்கதிரும் மேற்றிசையில் உதிக்கக்கூடும்
விண்கோலம் துகளாகிச் சிதறக்கூடும்
தலைமைக்கு மாறுசெய்யும் கேடுமட்டும்
சற்றுமிங்கே நிகழாமல் காத்து நிற்போம்!

**—கவிஞர் தா. காசிம்**

*2—4—1962* உரிமைக்குரல்

# கலங்கரை விளக்கம்!

**சமுதாயக் கவிஞர் தா. காசிம்**

ஒன்று பட்டோம்; கூடிவிட்டோம் ; முஸ்லிம்லீகின்
ஓரமைப்பே தாய்ச் சபையென் றெடுத்துக் காட்ட!
வென்றுவிட்டோம்; பிளவுகளே! நம்மைச் சூழ்ந்த
வேற்றுமையைக் கொன்று விட்டோம்; இந்தநாளில்!

குன்றுயர்ந்த பிறைக் கொடியைக் கையி லேந்தி
கொள்கை வழிப் பயணத்தில் விரைந்து செல்வோம்!
இன்றெடுத்த மாநாட்டின் முடிவை யெல்லாம்
இயக்கத்தின் அறுவடையாய்ச் செயலில் காண்போம்!

அலைகடலும் மலைமுகடும் நம்மைக் கண்டே
அதிர்கின்ற அளவுக்கோர் ஊர்வ லத்தை
நிலைநிறுத்தி வழி நடத்திக்காட்டி விட்டோம்!
நீள்வானும் நடுநடுங்க முழக்கமிட்டோம்!!

கிளைகளெனும் பிறைமரிகள் இல்லா ஊரே
கிடையாதிந் கென்கிற பணிமு டிப்போம்!
வலைவிரிக்கும் பிறகட்சிச் சிறையுள் வீழ்ந்து
வழிதப்பிச் சென்றோரைத் திருத்திக் காண்போம்!

அரசியலில் சிறு கதையாய் முடிந்து போகும்
அன்முடக் கொள்கைகளோ நம்மில் இல்லை!
வரலாற்றை உருவாக்கும் படைக ளாவோம்!
வாழ்வியலை அதற்கென்றே அர்ப்பணித்தோம்!!

நிறம்மாறி இடம்மாறி மானம் விட்டு
நிலைகெட்டே அலைந்திட்ட பேர்களெல்லாம்
சிரம் நாணிப் பொது வாழ்வில் திரிந்த போது,
சிங்க நடை போட்டதிந்த முஸ்லிம் லீகே!

ஆற்றல் சேர் ஸ்தாபகராம் காயிதே மில்லத்
அண்ணல் நம் தலைவர் தம் அன்புப்பாதை
ஏற்றமுயர் இஸ்லாத்தின் இணைப்புப் பாதை
என்பதையே மீண்டுமிங்கே உறுதிசெய்வோம்!

தூற்றுகின்ற எவரும்நம் காலின் தூசு!
துடித்தெழுந்து வீறுகொள்வோம் கொள்கை பேசி!!
காற்றடித்துக் கொந்தளிக்கும் நாட்டின் வாழ்வில்
கலங்கரையின் விளக்கமிந்த முஸ்லிம்லீகே!

தமிழ்நாடு முஸ்லிம் லீக் மாநாடு
ஜூன் 1973. சிறப்பு மலர்

# முழங்க வாராய்!

## பொதிகை ஹமீது

அஞ்சுதல் கோழைச் செயலாம்
அச்சமே தவிர்த்தல் வேண்டும்
கெஞ்சாதே உரிமை கேட்டே
கேளடா தட்டிக் கேள் நீ
மிஞ்சுவார் தயவாய்க் கேட்டால்
மிரட்டலே தொழிலாய்க் கொண்டோர்
துஞ்சாதே துயிலைக் களைநீ
தோள் தட்டி துணிந்து நிற்பாய்!

உணர்வுகொள் விழியைத் தூக்கி
உறுதிகொள் பழியைப் போக்க
கனவினை விடுத்தே உண்மை
காட்சியில் உறுதிகொள்வாய்
பணப்பே ராசை விட்டே
பணிசெயும் எண்ணம் கொள்வாய்
வணங்கிடு ஒருவன் என்றே
வரித்திடு நெஞ்சில் ஈமான்

இறையின்மே லாணை சொல்லி
இன்றுள இனத்தார் நெஞ்சை
குறை வழி நீக்கக் குமுறும்
குன்றுயர் கவிதை சொல்வாய்
மறைமொழி மெய்யன் பாதை
மாசறத் தூய்மை காண
பறையொலி கொட்டிப் பாவின்
பண்ணிசை முழங்க வாராய்!

ஏறுநீ ஏறு என்றே
எக்காளக் குரலில் திண்மை
கூறியே, இனத்தார் கூட
கொட்டிவா முரசப் பாட்டை
பாருநீ பாராய் என்றே
பாட்டினில் உணர்வைப் பாய்ச்சி
கூறுநீ குரல் எழுப்பி
கூனிமிர்ந்த வேங்கை யென்றே

1-10-62, உரிமைக்குரல்

# தொண்டர்களுடன் தலைவர்



மேலப்பாளையம் ஊழியர்களுடன்



தலைமை நிலையத்தில் பிறந்த நாள் வாழ்த்து



கன்னியாகுமரி மாவட்ட ஊழியர்களுடன் (1971)



முஸ்லிம் லீக் வாலண்டியர்களுடன்







திருச்சி மாநாடு (1958)



நெல்லிக்குப்பம் சயீது சாகிப்





சேலம் ஊழியர்களுடன் (1961)



தஞ்சையில்



ரங்கூனில்



திருச்சி நண்பர்களுடன்



திருச்சி மீலாத் மாநாடு (1958)





ஹஜ் பயணத்தின் போது பம்பாய் விமான நிலையத்தில் 1965



பண்டாரவாடை திருமணத்தில் (1966)



தென்காசி தொண்டர்களுடன்



நெல்லை மாவட்டத்தில்



காயல்பட்டணத்தில்





மதருஸ் 1960 மாநாட்டில்



தயா மன்ஸிலில் உ.பி. கவர்னர் அக்பர் அலி கானுடன்





கோவை ஊழியர்களுடன்



டாக்டர் U. முஹம்மதுடன்



பாஃஸ எத்தீம்கானா நிர்வாகிகளுடன்





கோவையில் நடைபெற்ற விழாவில் (1956)



சேலம் பொதுக்கூட்டம்



திருச்சி ஊழியர்களுடன் (1958)



இளையான்குடி மாநாட்டில் (1959)



தென்காசி ஊழியர் மாநாட்டில்,



கொழும்புவில் (1966)



சேலம் நகரசபைத் தலைவருடன்







குளச்சலில்



இசை முரசு நாகூர் ஹனீபா இல்லத்தில் (1968)



பாளையங்கோட்டை முஸ்லீம் அனாதை நிலைய வரவேற்பு



P.N.I. அபூதாலிப்-மதறஸ் மாநாட்டில்



# ஒரு சூட்கேஸின் சுவையான பயணம்



கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் 1964ம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் வாரத்தில் ஆந்திரப்பிரதேச மாநிலத்திலும் மஹாராஷ்டிரா மாநிலத்திலும் சுற்றுப்பயணத்தை மேற்கொண்டிருந்தார்கள். முதலில் ஹைதராபாத் நகருக்குச் சென்று அங்குள்ள நிகழ்ச்சிகளில் கலந்து விட்டு, நவம்பர் மாதம் 4-ம் தேதி இரவு ரயிலில் அவர்கள் பம்பாய்க்குப் புறப்பட்டார்கள்.

சிக்கந்தராபாத்—பம்பாய் எக்ஸ்பிரஸில் நவம்பர் 4-ம் தேதி இரவு, சிக்கந்தராபாத் ரயில் நிலையத்திலிருந்து தலைவரவர்கள் புறப்பட்டார்கள். அந்த ரயில் சாதாரணமாக 32 நம்பர் பம்பாய் எக்ஸ்பிரஸ் என அழைக்கப்படும். அவர்கள் பிரயாணம் செய்த முதல் வகுப்புப் பெட்டியின் நம்பர் 2983 ஆகும். அதில் ''D'' பிரிவில் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தார்கள். அது ஒரு ''கூபே'' (Coupe) கம்பார்ட்மெண்ட். இருவர் மட்டுமே பயணம் செய்யக் கூடிய பெட்டி. கீழ் படுக்கை காயிதேமில்லத் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. மேல் படுக்கை யாரோ ஒருவருக்கு ஒதுக்கப்பட்டு அவரும் அந்த வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்.

பம்பாயை நோக்கி அந்த எக்ஸ்பிரஸ் ரயில் வேகமாகப் பயணம் செய்து கொண்டிருந்தது. பிரயாணிகள் பலரும் அயர்ந்து தூங்கிய வண்ணம் தங்களது பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தார்கள். பொழுது புலரும் நேரம் நெருங்கி விட்டதும், சுபுஹ் தொழுகைக்காக எழுந்த காயிதேமில்லத், பல் துலக்குவதற்கான உபகரணங்களை எடுக்கும் பொருட்டுத் தங்களது சூட் கேஸைத் தேடினார்கள். பழுப்பு நிறத் தோலினாலான, நடுத்தர அளவுள்ள ஒரு பெட்டியைத்தான் தலைவரவர்கள் தங்களது பிரயாணத்தின் போது கொண்டு செல்வது வழக்கம். வைத்திருந்த இடத்தில் அந்த தோல் பெட்டியைக் காணவில்லை. சுற்றுமுற்றும் தேடினார்கள்; அது காணவேயில்லைதான்.

சட்டென எழுந்து, கொக்கியில் மாட்டியிருந்த ஷேர்வானியைப் பார்த்தார்கள். அது தொங்கிக்கொண்டிருந்தது. அதில் கையை விட்டுப் பையைத் துழாவினார்கள். அவர்கள் வைத்திருந்த பணம் அப்படியே இருந்தது. அவர்களது அடையாள அட்டை மற்றும் துண்டு கடிதங்கள் எல்லாம் அப்படியே இருந்தன. ஷேர்வானியிலிருந்து ஒன்றும் களவு போகவில்லை. வைத்தது வைத்தபடியே இருந்தது.

அப் பெட்டியில் மேல் படுக்கையில் தூங்கிக் கொண்டிருந்தவரை ஏறிட்டுப் பார்த்தார்கள். அவர் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார். அவர் தூக்கத்தைக் கலைத்து அவரிடம் விசாரிக்க காயிதேமில்லத் பிரியப்படவில்லை. கைப் பெட்டி மட்டும் காணாமல் போன மர்மம் என்ன என்பது தலைவரவர்களுக்கு விளங்கவில்லை. அப்படி ஒன்றும் விலை உயர்ந்த பொருட்களோ அல்லது பணமோ அதனுள் இல்லை.

அவர்கள் கைவசம் வைத்திருந்த சிறு தொகையும் ஷேர்வானி பாக்கட்டிலேயே வைக்கப்பட்டிருந்தன. அதை திருடன் தொடவில்லை. பணத்திற்காக களவாடவந்தவன் என்று சொல்ல முடியாது. பின் பெட்டியை மட்டும் ஏன் எடுத்துச் செல்ல வேண்டும்? சில துணிமணிகளையும் அன்றாட உபயோகத்திற்குத் தேவையான பிரஷ், சோப்பு, மூக்குப் பொடி பொட்டலம், கைக்குட்டைகள் போன்ற சில சாதனங்களையும் தவிர அப்பெட்டியில் வேறொன்றும் இல்லை.

பெட்டி காணாமலாகி விட்டதை குறித்து தலைவரவர்களுக்கு ஓரளவு வருத்தம்தான் என்றாலும், அதனால் குடிமுழுகிப் போவது ஒன்றுமில்லைதான். ஆனால் ஒன்று; அவர்கள் அன்றாடம் எழுதி வந்த ''டைரி'' அதனுள் இருந்தது. நாட்குறிப்பு தவறியதுதான் தலைவரவர்களுக்கு பெருத்த வேதனைதரும் செய்தியாக இருந்தது. தங்களது அன்றாட நிகழ்ச்சிகளை அந்த டயரியில் அவர்கள் குறித்து வைத்திருந்தார்கள். அது தவறிப் போய்விட்டது அவர்களுக்கு ஏமாற்றத்தைத் தந்தது, மன வேதனையைக் கொடுத்தது.

டோண்ட் (Dond) என்ற ரயில் நிலையத்தில் அந்த எக்ஸ்பிரஸ் ரயில் நின்றது. காயிதே

மில்லத் கீழே இறங்கி ஸ்டேஷன் மாஸ்டரிடம் சென்று தமது சூட்கேஸ் காணுமல் போனது குறித்து புகார் செய்தார்கள். அதற்கான மனு ஒன்றையும் கைப்பட எழுதிக் கொடுத்தார்கள். நவம்பர் 5-ம் தேதி அதிகாலையில் எழுதப்பட்ட அப்புகார் மனுவை ஸ்டேஷன் மாஸ்டர் ஜகத்சிங் பெற்றுக் கொண்டதுடன் ஆவன செய்வதாகவும் சொன்னுர். பின்னர் அதே ரயிலில் காயிதே மில்லத் அவர்கள் தங்களது பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள்.

டோண்ட் ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து, நவம்பர் 6-ம் தேதியிட்டு தலைவரவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது. சம்பந்தப்பட்ட பெட்டியை கண்டு பிடிக்க முடியவில்லை என்றும், காணுமல் போன சாமான்கள் வைக்கப்பட்டிருக்கும் பகுதியையும் விசாரித்தாகி விட்டதென்றும் அப்பதிலில் கூறப் பட்டிருந்தது. டோண்ட் என்ற ரயில் நிலையம் மன்மாடு (Manmad) என்ற பெரிய ரயில் நிலையத்தின் அதிகார வரம்பிற்குள் பட்டது போலிருக்கிறது. மத்திய ரயில்வேயின் ஷோலாப்பூர் டிவிஷனில் இவை உள்ளன.

ஷோலாப்பூர் டிவிஷன் சூப்பிரண்டெண்ட் A. R. சுந்தரராஜன் அலுவலகத்தில் இருந்து நவம்பர் 11ம் தேதியிட்ட கடிதம் ஒன்று காயிதே மில்லத்திற்கு வந்து சேர்ந்தது. இதுவரை சூட்கேஸ் பற்றிய தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை யென்றும் பூனுவிலும் பம்பாயிலும் இது குறித்து விசாரிக்கப்பட்டதில் யாதொரு வெற்றியும் கிடைக்கவில்லை என்றும் அப்பதில் தெரிவித்தது.

அதை அடுத்து மன்மாடு ரயில்வே பார்சல் ஆபீஸிலிருந்து நவம்பர் 26ம் தேதியிட்டு ஒரு கடிதம் தலைவரவர்களுக்கு அனுப்பப்பட்டது. டோண்ட் ரயில் நிலைய அதிகாரியிடம் தலைவரவர்கள் கொடுத்த புகார் மனு மீது விசாரணைகள் நடத்தப்பட்டதாகவும், மன்மாடு ரயில்வே போலீஸார் இது குறித்துத் தீவிர விசாரணைகள் நடத்தியதாகவும் ஆனுல் களவு போன பெட்டி குறித்து ஒரு துப்பும் துலங்கவில்லை என்று போலீஸ் தரப்பில் கூறப்பட்டு விட்டதென்றும், மேலும் காணுமல் போன சாமான் இருக்கும் பகுதியிலும் தங்களது சூட்கேஸ் கிடைக்கவில்லை என்றும் மன்மாடு ரயில்வே பார்சல் ஆபீஸ் கடிதம் அறிவித்தது. காயிதேமில்லத் அவர்கள் கொடுத்த புகாரின் மீது மத்திய ரயில்வேயிலுள்ள ஷோலாப்பூர் டிவிஷனைச் சேர்ந்த ரயில் அதிகாரிகள், நவம்பர் மாதம் முழுவதும் சூட்கேஸ் குறித்து ஒரு துப்பும் கிடைக்கவில்லை என்றே சாதித்து வந்தார்கள்.

ஆனுல் டிசம்பர் மாதம் 5 தேதியிட்டு ஷோலாப்பூர் டிவிஷன் சூப்பிரண்ட் ஆபீஸிலிருந்து ஒரு கடிதம் காயிதே மில்லத் டில்லி விலாசத்திற்கு வந்து சேர்ந்தது: காயிதேமில்லத் தங்களது புகாரில் வருணித்துள்ளது போன்ற தொரு சூட்கேஸ் பம்பாய் விக்டோரியா டெர்மினஸிலுள்ள "காணுமல்போன சாமான்கள்பகுதியில்" இருப்பது தெரிய வந்துள்ளதாகவும் அப் பெட்டியின் நிறம் மண் கலரில் உள்ளதாகவும் அது பூட்டப்பட்டிருப்பதாகவும், அக் கடிதம் வருணித்திருந்தது.

மேலும் அக்கடிதத்தில் 4-11-64 அன்று அந்த ரயிலில் பிரயாணம் செய்த கண்டக்டரினுல் அது கண்டெடுக்கப்பட்டு பம்பாய் ரயில் நிலையத்தில் ஒப்புவிக்கப்பட்டதாகவும் தெரிவிக்கப்பட்டிருந்தது.

இங்கு நினைவு கூரவேண்டிய விஷயம் என்னவென்றுல், தங்களது பெட்டியை ஞாபக மறதியாக ரயிலில் வைத்துவிட்டு காயிதே மில்லத் இறங்கிவிடவில்லை. ஓடும் ரயிலில் தான் பெட்டி களவு போனதை காயிதே மில்லத் அவர்கள் கவனித்தார்கள். அடுத்த ரயில் நிலையத்திலேயே அதுகுறித்து புகாரும் செய்துள்ளார்கள். மீண்டும் அதே எக்ஸ்பிரசில் பிரயாணத்தை தொடரவும் செய்தார்கள். ஆனுல் ஷோலாப்பூர் டிவிஷன் சூப்பிரண்ட் ஆபீஸிலிருந்து வந்த கடிதத்தில் அந்த ரயிலில் பிரயாணம் செய்த கண்டக்டரினுல், யாரும் அதை எடுத்துப் போகாத நிலையில் அகஸ்மாத்தாகக் கண்டெடுக்கப்பட்டதாக கூறப்பட்டிருந்தது வேடிக்கைதான்!

இக்கடிதம் டில்லி சேர்ந்தபோது தலை நகரில் ஜனுப் அப்துஸ்ஸமது சாகிப் தங்கி இருந்திருந்தார்கள். டில்லி ராஜ்ய சபை உறுப்பினராகப் பணியாற்றிய அவர்கள் வெஸ்டர்ன் கோர்ட் விடுதியில் 43 நம்பர் அறையில் தங்கியிருந்தார்கள். காயிதே மில்லத் அவர்கள் அதே இடத்தில் 5 நம்பர் அறையில் தங்கி இருந்தார்கள்.

பெட்டி கண்டெடுக்கப்பட்ட செய்தி தெரிந்ததும், ஜனுப் சமத்சாகிப் 10-12-64 அன்று "ஒரு நல்ல செய்தி. தங்களது பெட்டி கிடைத்துவிட்டதாக ஷோலாப்பூரிலிருந்து கடிகம் வந்திருக்கிறது; பம்பாயில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறதாம்" என்று காயிதே மில்லத்திற்குக் கடிதம் எழுதியுள்ளார்கள். தகவலறிந்ததும் தங்களது பெட்டி திரும்பக் கிடைக்க ஆவன செய்ததற்காக, ஷோலாப்பூர் டிவிஷன் சூப்பிரண்டெண்டிற்கு நன்றி தெரிவித்து 14-12-64 அன்று காயிதே மில்லத் பதில் எழுதினுர்கள்.

ரயிலில் பிரயாணம் செய்தபொழுது காணுமல் போன சூட்கேஸ் திரும்பக் கிடைத்து விட்டது உண்மையே என்ருலும், இதற்கிடையில் நடந்தது என்ன என்பதுதான் கேள்வியாகும்? பணத்திற்காக அது திருடப்படவில்லை என்பது தெளிவு. அப்படியானுல், ஷேர்வானியிலுள்ள பணத்தை

கையைவிட்டு எடுத்துக் கொள்ள அவனுக்கு அதிக நேரம் தேவையில்லை தானே! சூட்கேசை குறியாக வைத்துத்தான் அது திருடப்பட்டதே தவிர வேறு நோக்கம் ஒன்றும் இருக்க முடியாது. அப்படி அந்தப் பெட்டியில் என்னதான் இருந்தது? ஒருசில துணிமணிகளையும் அன்றாட உபயோகத்திற்கான - சாதாரண பொருட்களைத் தவிரவும் அதில் விலை மதிப்புள்ளது வேறொன்று மில்லை. ஆம்! டயரியைத் தவிர.

காயிதே மில்லத்தின் டயரியைப் புரட்டிப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற எண்ணமும் ஆசையும் யாருக்கு எழுந்திருக்க வேண்டும்? நிச்சயமாக திருடனுக்கு அந்த ஆசை எழ நியாயமில்லை. முஸ்லிம் லீக் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் அப்படியொரு எண்ணம் எழுந்திருக்கத் தேவையில்லை; அப்படி அவர்கள் ஆசைப் பட்டிருக்கவும் மாட்டார்கள். அரசியலில் எதிரிகள் பலர் முஸ்லிம்லீக்கிற்கு இருந்தாலும், இப்படிப் பட்ட ஆசை அவர்களுக்குத் தோன்றியிருக்குமா என்பதுசந்தேகமே. அப்படியே ஒரு திட்டம் இருந்தாலும், பெட்டியை களவாடி டயரியைப்புரட்டிப் பார்த்தாலும் அதை அவர்கள் தூக்கி எறிந்து விட்டிருப்பார்கள்: அல்லது அதில் காணப்பட்டுள்ள விஷயங்களை அம்பலப்படுத்தி இருப்பார்கள். எனவே எதிர்க் கட்சியினரின் கைவரிசையாகவும் அது இருப்பதற்கில்லை.

காயிதே மில்லத் அவர்கள் டயரி எழுதிவரும் பழக்கமுடையவர்கள் என்பது காவல்துறையினருக்குத் தெரியும். ஒருநாளில் 24 மணி நேரமும் உளவுத்துறை கண்காணிப்பில் இருந்துவரும் தலைவரவர்கள், அப்படி என்னதான் தங்களது டயரியில் எழுதியிருப்பார்கள், அதையும் பார்த்து விடுவோமே என்ற எண்ணம், யாருக்கு எழுந்திருக்க வேண்டுமோ அவர்களுக்கு எழுந்திருக்கிறது. அதற்கான திட்டம் வகுக்கப்பட்டது: வியூகம் அமைக்கப்பட்டது.

டயரியை களவாடிக் கொண்டு போய் படித்துப் பார்த்து விட்ட பின்பு அதை அதற்கு உரியவரிடமே ஒப்புவித்து விடலாம் என்ற எண்ணம் சம்பந்தப்பட்டவர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம்! அதனால்தான் '' பூட்டை உடைக்காமலேயே பெட்டி கண்டெடுக்கப்பட்டு '' பம்பாய் ரயில் நிலயத்தில் உள்ளது என்று ரயில்வே இலாகாவிலிருந்து அனுப்பப்பட்ட பதிலில் காணமுடிகிறது. எங்கப்பன் குதிருக்குள் இல்லை என்பது போல அந்த பதிலும் அமைந்திருப்பதில் ஆச்சரியமில்லை தான்.

எப்படியோ, தலைவரவர்களது பெட்டி திரும்பக் கிடைத்து விட்டது. அதிலுள்ள பொருட்கள் ஒன்றும் களவு போகவுமில்லை. டயரியை படித்துத் தெரிந்துகொள்ள வேண்டியவர்கள், அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம்; அவ்வளவு தான்!

இத் திருவிளையாடலை நடத்தியவர்கள், தங்களது எண்ணத்தை தலைவரவர்களிடம் வெளியிட்டிருந்தால் ஒருவேளை அவர்களாகவே தங்களது டயரியை காண்பித்திருக்கவும் செய்யலாம்! அப்படி என்ன இரகசியத்தை தங்களது நாட்குறிப்பில் அவர்கள் எழுதி வைத்திருக்கப் போகிறார்கள். அதைவிடுத்து சுமார் ஒரு மாத காலம் காயிதேமில்லத் அவர்களை மன வேதனைக்குள்ளாக்கி விட்டார்களே என்பதுதான் நமக்குள்ள ஆதங்கமெல்லாம்!

## நிற்கவிருந்த திருமணத்தை நிறைவேற்றிய பால்யர்கள்

*''எங்கள் வாப்பாவுக்கு புட்டு கருப்பட்டி என்றால் மிகவும் பிரியம். கூழ்ப்பதனியும் விரும்பிச் சாப்பிடுவார்கள். சிறு வயதினராக இருக்கும் பொழுது அவர்களது வீட்டில் புட்டுக் கருப்பட்டியை மிகவும் உயரமான இடத்தில் தான் பந்தோபஸ்தாக வைப்பார்களாம். அப்படியிருந்தும் தங்களது விளையாட்டுத் தோழர்களின் உதவியுடன் அந்த இடத்தையும் தடம் பிடித்து காயிதேமில்லத் அவர்கள் அப்பண்டங்களை எடுத்துத்தின்றுவிடுவதுண்டாம். எங்களது வாப்பம்மா சொல்லக் கேட்டிருக்கிறேன்.*

*எங்களது தாத்தா மியாக்கான் ஆலிம் ஒரு வியாபாரி. தங்களது கணக்குச் சிட்டையில் தமது இரண்டாவது மகன் பிறந்ததற்கு பழம், மிட்டாய் வாங்கி அன்பளிப்புச் செய்த செலவு பத்து அணா என்று தங்களது கைப்பட எழுதிவைத்துள்ளார்கள்.*

*பேட்டையில் பால்ய முஸ்லிம் சங்கம் 1909-ம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. அப்பொழுது எங்கள் தந்தையின் வயது 14க்கு தான். பகருத்தீன் ராவுத்தர் என்ற பெரியார் அச்சங்கத்தின் தலைவர். சமூகப் பணி செய்வது இதன் நடைமுறையாக இருந்தது. விதவைகளின் திருமணங்களை நடத்தி வைப்பது, வரதட்சணை ஒழிப்பு, சிக்கன சீர்திருத்தத் திருமணங்களை முன்னின்று நடத்துதல் போன்ற காரியங்களை இச்சங்கம் பெரிய எதிர்ப்புகளுக்கிடையில் நிறைவேற்றியுள்ளன.*

*ஒரு சமயம் திருமண வீட்டில் ஒரு சிறிய விஷயத்திற்காக திருமணமே நின்றுவிடும் போலிருந்தது. ''மடக்கு பணியாரம்'' இத்தனை எண்ணிக்கை இருக்கவேண்டும் என ஒரு கணக்கு உண்டு. பெண் வீட்டார் கொடுத்த பணி யாரத்தில் அந்த எண்ணிக்கையில்லை. இது குறித்து வாய்ப் பேச்சு முற்றி திருமணமே நின்றுவிடும் போலிருந்ததாம். பால்ய முஸ்லிம் சங்கத்தினர் தலையிட்டு இருதரப்பினரையும் சமரசம் செய்து வைத்ததை கனம் வாப்பா அவர்கள் சுவைபட கூறுவார்கள்.*

*இச் சங்க உறுப்பினர்கள் அனைவரும் மணமகன் வீட்டுமுன்பு போய் தெருவில் உட்கார்ந்து கொண்டார்களாம். திருமணம் நிறைவேறினால் தான் அந்த இடத்தைவிட்டு அகலுவோம் என பிடிவாதமாக இருந்துவிட்டார்கள். சங்கத்தினர்களின் சத்தியாகிரகம் காரணமாக இருவீட்டாரும் எப்படியாவது சமரசத்திற்கு வரவேண்டியதாயிற்றாம்!*

*[ஹாஜி J.M. மியாக்கான் Ex-MLC.]*

MEMBER OF PARLIAMENT
(RAJYA SABHA)

[illegible]

## நிதி வசூலில் ஓர் அதிசயம்

எனது தந்தைக்கும் காயிதேமில்லத் அவர்களுக்கும் நெருங்கிய பழக்கம் உண்டு. என் தகப்பனாருடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். தலைவரவர்கள் மீது எனது தந்தைக்கு ரொம்ப மதிப்பு, மரியாதை.

காயிதேமில்லத் அவர்கள் ஏதாவது பொதுக் காரியங்களுக்கு நிதி கேட்டு வந்தால், அவர்கள் எவ்வளவு கேட்டாலும் அதை அப்படியே கொடுத்துவிட வேண்டும் என எனது தந்தை என்னிடம் ஒஸியத்துச் செய்து விட்டுச் சென்றிருந்தார்கள்.

எனது தந்தை மறைவுக்குப் பிறகு பல ஆண்டுகள் கழித்து காயிதேமில்லத் அவர்கள் ஏதோ ஒரு நிதி வசூலுக்காக எங்கள் இல்லத்திற்கு வந்தார்கள். அவர்களிடம் நான் எவ்வளவு தரவேண்டும் எனக் கேட்டேன். அதற்கு தலைவரவர்கள் ''உங்களது விருப்பம் போலச் செய்யுங்கள்'' என்று பதிலளித்தார்கள். மீண்டும் நான் ''தாங்கள் கேட்டதைத் தருகிறேன். நீங்கள் சொல்லுங்கள்'' என்றேன். அதற்கு காயிதேமில்லத் ''அதெப்படி தம்பி! உங்கள் வசதிபோலச் செய்யுங்கள்'' என்று சொன்னார்கள்.

அப்பொழுது நான் எனது தந்தை சொல்லிச் சென்ற விஷயத்தை அவர்களிடம் நேரில் கூறினேன், காயிதேமில்லத் அவர்களுக்கு அச் செய்தி வியப்பாக இருந்தது. ''அப்படியா'' என ஆச்சரியப்பட்டார்கள். சற்று யோசித்துவிட்டு ''ஆயிரம் ரூபாய் கொடுங்கள்'' என்று சொன்னார்கள். அவ்வாறே செய்தேன்.

நான் சென்னையில் கிருஸ்தியன் உயர்நிலைப் பள்ளியில்தான் படித்தேன். என்னை அப் பள்ளிக்கூடத்தில் கொண்டு சேர்த்ததே காயிதேமில்லத் தான்.

ஒரு சமயம் காயிதேமில்லத்திடம் நான் ''நாம் லட்சக் கணக்கில் பணத்தை முதலீடு செய்து கல்லூரிகளை ஆரம்பிக்கிறோம். 85 சதவிகித மாணவர்கள் பிற சமுதாயங்களைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள். நமது பிள்ளைகள் 15 சதவிகிதம்கூட நமது கல்லூரிகளில் சேர்ந்து படிக்க வரமாட்டேன் என்கிறார்களே'' என்று குறைபட்டுக் கொண்டேன். அதற்கு தலைவரவர்கள் ''அதனால் ஒன்றும் நஷ்டமில்லை. இந்த 15 சதவிகித மாணவர்களை இதர கல்லூரிகளில் யார் சேர்த்துக் கொள்கிறார்கள்! நமக்கென ஒரு கல்லூரி இருக்கப் போய்த்தான் இந்த 15 சதவிகிதமும் படிக்க முன் வந்துள்ளது. இதுவும் செய்து கொடுக்காவிட்டால், இவர்களது உயர் கல்வியும் வீணாகப் போய் விடலாம் அல்லவா?'' என்று விளக்கமாகப் பதில் கூறினார்கள்.

**ஈரோடு ஹாஜி E. K. M. அஹமது இப்ராஹீம்-(ஹாஜியண்ணா)**



# சமுதாயக்கப்பலை வழிநடத்திய சிறந்த மாலுமி

**சிராஜுல் மில்லத் A. K. A. அப்துஸ் ஸமது சாகிப் M.P.**

பிறந்த பொன்னாடு,
பேசும் மொழி,
பின்பற்றும் வழி
பெற்றெடுத்த சமுதாயம்-

இவற்றில் ஏதாவது ஒரு துறையில் சேவை யாற்றிய மேதைகள் உலகில் நினைக்கப்படுவதை யும், போற்றிப் புகழப்படுவதையும் பார்க்கிறோம்.

நன்றி உணர்வுமிக்க தமிழக மக்கள் இன்று யாருடைய 92-வது பிறந்த நாளுக்கு விழா எடுத் திருக்கிறார்களோ - அந்த காயிதேமில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் (ரஹ்) அவர்கள், பேசிய மொழிக்கும், பேணிய வழிக்கும், பிறந்த நாட்டுக்கும், பெற்றெடுத்த சமுதாயத்திற்கும் சேவையாற்றிய பெருமகனாவார்கள்.

அவர்கள் பிறந்த நாளில் (1896) இந்த நாடு அந்நியருக்கு ஆட்பட்டிருந்தது.

காயிதேமில்லத் அவர்கள், கல்லூரியிலே படித்துக் கொண்டிருந்தபோது, தேச விடுதலைப் போராட்டத்தில் மாணவர்கள் தம் கல்லூரி களைத் துறந்துவிட்டு ஈடுபட வேண்டும் என்ற வேண்டுகோளை, காந்திஜீ வெளியிட்டார். அதற் கேற்ப பி. ஏ. பட்ட வகுப்பில் தேர்வு எழுத இருந்த காயிதேமில்லத் அவர்கள் அதைத் துறந்து விடுதலைப் போராட்டத்திலே தம்மை யும் இணைத்துக் கொண்டார்கள்.

திருநெல்வேலியில் (1920) நடந்த தமிழ் நாடு காங்கிரஸ் மகா சபையில் இந்தியாவுக்குப் பூரண சுதந்தரம் வேண்டும் என்ற தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு, ராஜாஜி அவர்களுக்கு பக்க பலமாக இருந்தார்கள்.

தம்முடைய தாய்மொழியாகிய தமிழை இந்தியாவின் அரசாங்க மொழியாக ஆக்க வேண்டுமென்று இன்று நேற்றல்ல - அரசியல் நிர்ணய சபை கூடியிருந்த அந்த 1948-ஆம் ஆண்டிலேயே அந்தப் பெருமைக்குரிய சபையின் உறுப்பினர் என்ற முறையில் பேசிய ஒரே தமிழ ராக - தலைவராக - காயிதேமில்லத் அவர்கள் விளங்கினார்கள்.

இஸ்லாமியத் திருநெறியை வழுவறப் பின்பற் றும் மனிதப் புனிதராக அவர்கள் வாழ்க்கை நடத் தினார்கள்.

தனி வாழ்விலும் பொதுவாழ்விலும் அவர் கள் கடைப்பிடித்த தூய்மை பெருமைக்குரியது ஆகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வுலகை நீத்தபோது, ''தோலால் ஆன நீர் துருத்தி, ஈச்ச ஓலைகளால் நிரப்பப்பட்ட தலையணை, உடைந்த கேடயம், சில முரட்டு ஆடைகள் - இவைதான்'' அவர்கள் உடமைகளாக விட்டுச் சென்றவை என வரலாற்றில் படித்தோம்.

காயிதேமில்லத் அவர்கள் மறைந்தபோது ''அவர்கள் அணிந்திருந்த துருக்கித் தொப்பி, கண்ணாடி, ஓதிவந்த தஸ்பீஹ் மணிமாலை, தொழுது வந்த முஸல்லா, உடுத்தியிருந்த துணி கள்'' இவைதாம் அவர்களுக்கு உடமைகளாக இருந்தன என்பதை நேரடியாகக் கண்டோம்.

அவர்களைப் பெற்றெடுத்த சமுதாயத்திற்கு அவர்களைப் போல் சேவை செய்தவர் ஒருசிலரே யாவர்.

சிதைந்து சின்னாபின்னமாகி விட்டதோ எனக் கருதப்பட்ட இந்திய இஸ்லாமிய சமுதா யத்திற்கென ஒரு கொடி தந்து, அவர்கள் கூடிக் கொள்ளவும் கொள்கை முழக்கம் செய்யவும் முஸ்லிம் லீக் என்ற கூடாரம் அமைத்து, அருமையான கட்டுக் கோப்பிலே அவர்களை அணி வகுத்த தளபதியாக அவர்கள் விளங்கினார்கள்.

கேரள கேசரி மர்ஹூம் ஸி. ஹெச். முஹம்மதுகோயா குறிப்பிடுவது போல ''பயங் கரப் பாறைகளும், திமிங்கிலங்களும் நிறைந்த இந்திய அரசியல் என்ற கடலில், முஸ்லிம் லீக் என்ற கப்பலைத் தட்டாமல் முட்டாமல் செலுத் திச் சென்ற மாலுமியாக'' அவர்கள் இருந்தார் கள்.

அவர்கள் இயக்கத்தின் தலைமை ஏற்றபோது பயங்கர வகுப்புவாதியாகத் தூற்றப்பட்டார். ஆனால் அவர்கள் கண் மூடியபோது, தமிழக சட்ட

மன்றத்தின் இரு அவைகளும் நடவடிக்கைகளை ஒத்தி வைத்து தீர்மானம் நிறைவேற்றின.

பாராளுமன்றத்தின் இரு அவையினரும் எழுந்து நின்று - ஜனாதிபதி கிரி குறிப்பிட்டது போல - இந்தியாவின்தலை சிறந்த தேசியவாதி யின் - பிரிவுக்கு தீர்மானம் நிறைவேற்றின.

மூதறிஞர் ராஜாஜி - ''நாணயம் செத்து விட்டது'' என இரண்டே சொற்களில் தம் உணர் வைக் காட்டினர்.

94வயதைத் தாண்டிய பெரியார் ஈ.வெ.ரா. ''நான் போயிருக்கக் கூடாதா. அவர் இருந்திருக் கக்கூடாதா'' என கண்ணீர் வழிந்தோட உருகி நின்ருர்.

ஆமாம்,

எண்ணத்திலே புனிதமும்,
செயலிலே தூய்மையும்,
நோக்கிலே தெளிவும்,
முயற்சியிலே தெம்பும்,
வெற்றியிலே உறுதியும்,

எல்லாவற்றிற்கும் மேலாக அல்லாஹ்வின் மீது அசைக்க முடியாத நம்பிக்கையும் உடையவ ராக அவர்கள் விளங்கினர்கள்.

அரசியலில் தலைமையேற்று நடத்திய ஆத்ம ஞானியாக அவர்கள் வாழ்ந்தார்கள்.

கண்ணியத்தின் மறு உருவாக அவர்கள் நட மாடினர்கள்.

நன்றிமிக்க தமிழகம் - தமிழக அரசு - அவர் களுக்கு விழா எடுத்து சிறப்பித்திருக்கிறது.

கண்ணியம் போற்றப்படும் காலமெல்லாம் காயிதேமில்லத் புகழும் நிலைத்திருக்கும்.

[நன்றி 'மணிச்சுடர்' 4-6-87]

## ''அழகாக இருக்கிறது என்றுல்...''

1964 அல்லது 1965ம் ஆண்டு என்று ஞாபகம். கீழ் தஞ்சை மாவட்டத்தில் காயிதே மில்லத் சுற்றுப் பயணம் செய்தார்கள், நாகப்பட்டணத்தை மையமாக வைத்து, ஒவ்வொரு நாளும் தலைவரவர்கள் பல கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் போய் வந்தார்கள்.

தஞ்சை மாவட்ட முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர் ஜனுப் யூசுப் மரைக்கார் வீட்டில் தான் அச்சமயம் காயிதே மில்லத் ஜாகை அமைந்திருந்தார்கள். அந்த இல்லத்திலுள்ள வசதிகளே போதுமானதென்றும், வேறு எந்தப் பணக்காரர் வீடுகளிலும் தங்க வேண்டியதில்லை என்றும்கூறி விட்டார்கள்.

யூசுப் நானு தமது வீட்டில் தம்மால் இயன்ற அளவு வசதிகளைச் செய்திருந்தார். அவர் களது வீட்டில் ''சீலிங் பேன்'' தான் இருந்தது. தலைவரவர்களது உபயோகத்திற்காக மேஜை மின்விசிறி ஒன்றையும் தமது நண்பர் ஒருவர் வீட்டிலிருந்து எடுத்து வந்து அந்த அறையில் வைத்திருந்தார்.

அச்சமயம், சிங்கப்பூரிலிருந்து கே.டி.கே மின் விசிறிகள் இந்தியாவிற்குள் அறிமுகமாகி யிருந்த நேரம். புதிய அமைப்பில், கவர்ச்சிகரமாக, அந்த மின் விசிறிகள் வடிவு அமைக்கப்பட் டிருந்தன. அதில் பல நவீன இணைப்புகளும் பொருத்தப்பட்டிருந்தன. அந்த விசிறி முழுக்க முழுக்க பச்சைநிறத்தில் வர்ணம் பூசப்பட்டிருந்தது. பார்ப்பதற்கே, அந்த கே.டி.கே. விசிறிகள் எடுப்பா இருக்கும்.

காயிதே மில்லத் அவர்களும் இந்த புதிய சிங்கப்பூர் விசிறியைப் பார்த்ததும் நன்ருக இருக் கிறதே என்று பாராட்டினர்கள். ''முஸ்லீம் லீக் விசிறி எப்பொழுது தயாரிக்கப்பட்டது'' என்றும் (அதன் நிறத்தை அடிப்படையாக வைத்து) நகைச்சுவையாகவும் கமெண்ட் அடித்தார்கள். நடந்தது அவ்வளவுதான். அத்துடன் விஷயம் முடிந்தது.

ஒரு வார சுற்றுப்பயணத்திற்குப் பின் காயிதே மில்லத் அவர்கள் நாகப்பட்டினத்திலிருந்து ரயிலில் மதருஸ் புறப்பட்டார்கள். முஸ்லிம் லீக் ஊழியர்கள் பலரும் வழியனுப்பச் சென்றிருந் தோம். தலைவரவர்களது பெட்டி படுக்கை போன்ற சாமான்கள் ரயில் பெட்டியில் ஏற்றப் பட்டன. அத்துடன் ஒரு அட்டை பெட்டியில் பார்சல் ஒன்றும் ஏற்றப்பட்டது. பெட்டிக்குள் ஏறியதும் தங்களது சாமான்களை காயிதே மில்லத் சரி பார்த்தார்கள். புதிதாக ஒரு அட்டை பெட்டி தங்களுடைய சாமான்களுடன் இருப்பதைக் கண்ணுற்றதும் காயிதே மில்லத், யூசுப் நானுவைப் பார்த்து ''இது என்ன பார்சல்? மதருஸில் இதை யாரிடம் கொடுக்க வேண்டும்?'' என்று வினவினர்கள்.

யூசுப் நானு தலையைச் சொறிந்தார். பதில் கூறத் திணறினர்கள். பின்னர் ஒருவாறு சமாளித்துக் கொண்டு ''வேறென்றுமில்லை. அந்த கே.டி.கே. பேன்தான். தங்களுக்கு இருக்கட்டும் என சித்தீக் மரைக்கார் ரொம்பவும் பிரியப்படுகிறர்'' என்று ஒருவாறு சொல்லி முடித்தார். உடனே காயிதே மில்லத் ரயில் பெட்டியிலிருந்து கீழே இறங்கி விட்டார்கள்.

''அந்த மரைக்காயரைக் கூப்பிடுங்கள்'' என்றுர்கள் காயிதே மில்லத். H. J. சித்தீக் மரைக்காயர் தலைவரவர்கள் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டார். அவரைப்பார்த்து ''என்ன தம்பி! பேன் நன்ருக இருக்கிறது என்று நான் கூறியதற்காக அதை எனக்கே கொடுத்து விட முடிவு செய்து விட்டீர்களே! உங்கள் வீட்டிற்கு நான் வருகிறேன். உங்கள் மக்களையோ அல்லது பேத்தியையோ பார்த்து, குழந்தை நன்ருக இருக்கிறது என்று நான் சொன்னல் அதை யும் எனக்கே அன்பளிப்புச் செய்து விடுவீர்களா!...'' என்று சற்று கடுமையாகவே கேட்டார்கள்.

சித்தீக் மரைக்காயருக்கு ஒன்றும் ஓடவில்லை; பதில் கூருமல் நின்ருர். யூசுப் நானு சட்டென பிளாட்பாரத்தில் நின்றுகொண்டிருந்த முஸ்லிம் லீக்தொண்டன் ஒருவனை அழைத்து, ''இந்தாப்பா அந்த அட்டை பெட்டியை கீழே இறக்கு'' என்று அதிகாரத் தொனியில் உத்தரவிட்டார். அத் தொண்டனும் அப்பணியை ஒரு நொடியில் நிறைவேற்றினன். அதற்குப் பின்னரே, காயிதே மில்லத் ரயில் பெட்டிக்குள் நுழைந்தார்கள்.

**நாகூர் கவிஞர் Z. ஜபருல்லா, B.A. B.G.L.**



# காயிதே மில்லத்தின் இளமை வாழ்க்கை

**J. M. மியாகான்,** Ex. M.L.C
*தலைவர், செங்கை-அண்ணா மாவட்ட முஸ்லிம் லீக்*

ஒரு நாள் காலையில் எனது பேத்தி ஷாபியா ஜலால் என்னிடம் வந்து புகார் ஒன்றைக்கொடுத்தாள். எனது மூத்த மகள் டாக்டர் ஹிப்பத்துல் கரீம் பாத்திமா, M.B., B.S., D. G. O. M. D. (Gynaecology)வுடைய இரண்டாவது மகள் ஷாபியா. அவள் கொடுத்த குற்றச்சாட்டு இதுதான். தமிழ்நாடு அரசு வெளியிட்ட பாடப் புத்தகத்தில் ஐந்தாவது வகுப்பு தமிழ் பாடப் புத்தகத்தில் எனது தந்தை காயிதே மில்லத்தைப் பற்றி ஒரு கட்டுரை வெளியாகியுள்ளது. அக் கட்டுரையை நான் எழுதிக் கொடுத்திருந்தேன். அக்கட்டுரையை நான் சரிவர எழுதவில்லை யென்றும், போதிய தகவல்கள் அதில் இல்லை என்றும் எனது பேத்தி குற்றம் சுமத்தினாள்.

அவள் 5-ம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தாள். தமிழ்நாடு அரசு வெளியிட்ட நூலில் இருந்து அவளது தமிழாசிரியர் இப்பாடத்தை நடத்திக் கொண்டிருக்கும்பொழுது அவளுக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்ததாம்! காயிதே மில்லத் அவர்களுடைய குடும்பத்தைப் பற்றியோ அல்லது பேரன் பேத்திகளைப் பற்றியோ அதில் ஒன்றும் குறிப்பிடாதது அவளுக்குப் பெரிய ஏமாற்றம். வருத்தம். தமிழாசிரியர் தமது வகுப்பில் காயிதே மில்லத்தைப் புகழ்ந்து பேசும் பொழுது, அவர்களுடைய பேத்தியாகத் தன்னைப் பற்றிக் கூட அந்த ஆசிரியர் அறிந்திருக்கவில்லை என்பதை உணர்ந்த சமயம் அவளுக்கு மனதிற்குள் கஷ்டமாக இருந்ததாம்.

அவளுடைய எண்ணத்தை நான் புரிந்து கொண்டேன், உணர்ந்து கொண்டேன். அச் சமயம் ''காயிதே மில்லத்'' பத்திரிக்கையின் ஆசிரியர் ஜனாப் K. M. ஆதம் என்னிடம் வந்து காயிதே மில்லத்தின் நினைவாக ஒரு மலர் வெளியிடப்போவதாகவும் நான் ஒரு கட்டுரை எழுதித் தரவேண்டுமென்றும் கேட்டார். எனது பேத்தி கூறியது எனது நெஞ்சை விட்டு அகலாதிருந்ததினால், அந்த அடிப்படையில் இக்கட்டுரையை வரைகிறேன்.

காயிதே மில்லத் அவர்கள் ஒரு பிரபலமான வியாபாரி என்றும், சமுதாய ஊழியர் என்றும், அரசியல்வாதி என்றும், சிறந்த பாராளுமன்ற உறுப்பினர் என்றும், மற்றும் இந்திய முஸ்லிம்களின் ஒப்பற்ற தலைவர் என்றும் தான் அநேகர் அறிந்திருக்கிறார்கள். மேலே கூறிய கோணத்தோடு தான் பலரும் அவர்களுடன் நெருங்கிப் பழகியிருக்கிறார்கள். ஆனால், ஒரு சிலருக்கே அவர்களுடைய இளமை காலத்தைப் பற்றியும் அவர்களின் பெற்றோர்கள் மற்றும் குடும்ப அங்கத்தினர்களைப் பற்றியும் தெரியும்.

திருநெல்வேலி பேட்டையில் மௌலவி மியாக்கான் ஆலிம் அவர்களுக்கும் ஜனாபா மைதீன் பாத்திமா அவர்களுக்கும் 1896ம் ஆண்டில் இரண்டாவது மகனாக காயிதே மில்லத் பிறந்தார்கள். அவர்களுடைய மூத்த சகோதரரான ஜனாப் முஹம்மது அப்துல் லத்தீப் எனது தந்தையை விட ஐந்து வயது மூத்தவர்கள். அவர்களுடைய ஒரே சகோதரியான ஜனாபா பாத்திமா, மதராஸில் அங்கப்ப நாயக்கன் தெருவிலே வியாபார அலுவலகத்தை நடத்தி மிகப் பெரிய ஏற்றுமதி மற்றும் இறக்குமதியாளராக விளங்கிய ஜனாப் O.C.P.S.E. முஹம்மது இப்ராஹீம் அவர்களுக்கு திருமணம் செய்து கொடுக்கப்பட்டிருந்தார். ஆனால், அந்த சகோதரிக்கு குழந்தைகள் பிறக்கவில்லை. அவர்களும் 1932 ம் ஆண்டில் மௌத்தாகி விட்டார்கள்.

காயிதே மில்லத்துடைய இளைய சகோதரர், வழக்கறிஞர் ஜனுப். K. T. M. அஹமத் இப்ருஹீம் பி.ஏ.பி.எல். அவர்களைப் பற்றி அறியாதவர்கள் இருக்க முடியாது. அரசியல் நிர்ணய சபை உறுப்பினராகவும், மற்றும் சட்ட மேலவையின் உறுப்பினராகவும் அதோடு சென்னை மாகாண முஸ்லிம் லீகின் செயலாளராகவும், சுதந்தரத்திற்கு பின் தமிழ்நாடு பிரிவு இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் செயலாளராகவும் பணியாற்றியுள்ளார்கள்.

எனது தகப்பனருடைய மற்றொரு இளைய சகோதரரான ஜனுப் எம். ஹமீத் மியாக்கான் அவர்கள் தங்களுடைய மூத்த சகோதரருடன் பங்காளியாக சேர்ந்து "ஹிலால் அச்சகம்" என்ற அச்சகத்தை நெல்லை டவுனில் நடத்தி வந்தார்கள். தற்பொழுது அது திருநெல்வேலியில் அவர்களுடைய மருமகன் ஜனுப். அல்ஹாஜ் எம். அஹமது யூசுப், பி.இ. அவர்களாலும் அவர்களது வாரிசுகளாலும் நடத்தப்படுகிறது,

எனது சிறிய தந்தை ஜனுப் ஹமீது மியாக்கான் அவர்கள் 6 மாதக் குழந்தையாக இருக்கும் பொழுது எனது பாட்டனர் தங்களது 35வது வயதில் மௌத்தாகி விட்டார்கள். மிக குறுகிய காலமே வாழ்ந்த என்னுடைய பாட்டனர் அக்கால கட்டத்திற்குள்ளாகவே தாம் ஒரு பெரிய ஆலிம் என்பதை நிரூபித்துக் காட்டி விட்டார்கள். திருவனந்தபுரத்திலே சாலை பஜாரிலே அவர்கள் துணி வியாபாரம் செய்து வந்தார்கள். அங்கு அவர்களுக்கு கடை ஒன்றும் இருந்தது.

அந்த நாட்களிலே நம்பூதிரிகள் மட்டுமே திருவனந்தபுரம் சாலை பஜாரிலே சொந்தமாக சொத்துக்களை வைத்திருக்க முடியும். அப்படி ஒரு சம்பிரதாயமாக திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் இருந்தது. இதர ஜாதியினரும் மற்ற மதத்தவர்களும் நம்பூதிரிகளுக்குச் சொந்தமான கடைகளை வாடகைக்கோ, அல்லது குத்தகைக்கோ எடுத்து வியாபாரம் செய்து கொள்ளலாம். பிற மதத்தினர் அம்மாதிரியிலும் கூட கடை நடத்துவது என்பது அந்த நாட்களிலே மிகவும் கடினமாயிருந்தது. ஆனுல், மியாக்கான் ராவுத்தர் எப்படி சாலை பஜாரில் இடம் பிடித்து சொந்தமாகக் கடை நடத்திஞர் என்பது தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமே.

அந்த நாட்களிலே திருவிதாங்கூர் சமஸ்தான மன்னர் குடும்பத்திற்கு ஏதாவது பொருள் தேவைப்பட்டால், சாலை பஜாரிலுள்ள வியாபாரிகளுக்கு தகவல் சொல்லி விடுவார்கள். வியாபாரிகள் பலரும் தங்களது பொருட்களை அனுப்பிவைப்பார்கள். இவைகளை பார்த்து தேவைப்படும் பொருட்களை ராஜ குடும்பத்தினர் எடுத்துக் கொண்டு அதற்குரிய கிரயத்தைக் கொடுத்தனுப்பி விடுவார்கள், இதுதான் பழக்கம்.

ஒரு சமயம் துணிமணிகள் வாங்க ராஜகுடும்பத்தினர் விரும்பினர். தகவல் அனுப்பிஞர்கள். மியாக்கான் ராவுத்தர் மூன்று பொட்டலங்களில் துணிமணிகளை வைத்து மூன்று ஆட்கள் மூலம் அரண்மனைக்கு கொடுத்தனுப்பிஞர். அரண்மனையின் வாயிலில் நின்ற காவலர்கள் இதர வியாபாரிகளின் பொருட்களையும், அவற்றுடன் வந்த வேலையாட்களையும் அரண்மனைக்குள் அனுமதித்து விட்டனர். ஆனுல் மியாக்கான் வேலையாட்களை உள்ளே விட மறுத்து விட்டனர். துணிமணி பொட்டலங்களை மட்டும் அனுமதிப்பதாகவும் கூறி அவர்களை நிறுத்தி விட்டனர். ஆனுல், அந்த வேலையாட்கள் இதற்கு இணங்க மறுத்து விட்டனர். இது காவலர்களுக்கு பெரிய அவமதிப்பாகப் போய்விட்டது. மகாராஜாவிடம் சென்று மியாக்கானின் வேலையாட்கள் அரசாங்க உத்திரவை மீறிவிட்டதாகப் புகார் சொன்ஞர்கள். மியாக்கானைக் கூட்டி வரும் படி மகாராஜா உத்தரவிட்டார்.

திருவிதாங்கூர் மகாராஜாவை நேரில் சந்தித்தபொழுது மியாக்கான் ராவுத்தர் நடந்த விபரங்களை கூறியதுடன், "எங்கே என்னுடைய ஆட்களை நுழைய அனுமதிக்கவில்லையோ, அங்கே என்னுடைய பொருட்களும் வராது" என்று தைரியமாக கூறிஞர். அவர்கள் கூறிய பதிலைக் கேட்ட மகாராஜா ஒரு கணம் திகைப்படைந்தாலும் பின்னர் அவர்களைப் பாராட்டிஞர். தெளிவான மனிதராக இந்த வியாபாரி இருப்பதைக் கண்டார். அன்று முதல் மியாக்கான் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்கள் வந்தால், அவர்களை தாராளமாக அரண்மனைக்குள்ளே அனுமதிக்க வேண்டும் என மகாராஜா உத்திரவிட்டார்.

இது நடந்து பல ஆண்டுகளுக்கு மேலாகி விட்டன. திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் திவானகப் பணி புரிந்த சர். சி. பி. ராமசுவாமி ஐயரை என் தகப்பனர் சந்திக்க நேரிட்ட பொழுது இந்த நிகழ்ச்சியை அவர்கள் நினைவு கூர்ந்தார்கள். அப்பொழுது திவான் அவர்கள் அந்த உத்திரவு இன்றும் கூட அமலில் இருப்பதை நினைவு கூர்ந்தார்.

மியாக்கான் ஆலிம் அரபியிலும், தமிழிலும் அதிகப் பாண்டித்தியமுடையவராக விளங்கினர். என்றாலும் தம்முடைய குழந்தைகளுக்கு ஆங்கில கல்வியை கற்றுக் கொடுக்க வேண்டுமென அவர்கள் விரும்பினர்கள். ஆகவே என்னுடைய தகப்பனரையும், என்னுடைய சிறிய தகப்பனரையும் திருநெல்வேலியில் உள்ள பிரபலமான ஒரு மிஷினரி பள்ளியிலே பயிற்றுவித்தார்கள். அந்த பள்ளி இன்றும் இருக்கிறது.

நெல்லையில் எனது தந்தை F.A. (First in Arts) முடித்த பிறகு மதருஸில் உள்ள மதருஸ் கிறிஸ்துவ கல்லூரியில் 1919ல் சேர்ந்தார்கள். மௌலானா முஹம்மத் அலி, மற்றும் மௌலானா ஷௌகத் அலி ஆகியோரின் கிலாபத் போராட்ட காலத்தில் ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தபோது என்னுடைய தந்தை தங்களது படிப்பை அப்படியே நிறுத்தி விட்டார்கள். பட்டப் படிப்பை பூர்த்தி செய்யவில்லை.

சில காலம் கழித்து M/s. ஜமால் முஹைதீன் சாஹிப் அன் கம்பெனியில் ஒரு பங்குதாரராக சேர்ந்தார்கள். 1947ம் ஆண்டில் அவர்கள் வியாபாரத்தை முழுவதுமாகத் துறந்து விட்டு அரசியலில் முழுக்க முழுக்க ஈடுபடலானர்கள்.

நான் தான் அவர்களின் ஒரே மகன். நான் பிறக்கும் பொழுது, என் தாயாருக்கு 14 வயது தான். எனக்குப் பின்னர் பஹ்மீஸா என்ற தங்கை பிறந்தாள் ஆனல், அவள் பிறந்த உடனே மௌத்தாகி விட்டாள்.

மேலே நான் கொடுத்திருப்பது காயிதே மில்லத் அவர்களின் குடும்பத்தின் சுருக்கமான வரலாறு. அவர்கள் குடும்பத்தைப்பற்றி தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறவர்களை இது திருப்தி படுத்தும் என நான் நம்புகிறேன்.

["காயிதே மில்லத்" எட்டாம் ஆண்டு சிறப்பு மலர் 1986]

## குறிப்பில்லாமல் கொடுத்த காலம்!

காயிதே மில்லத் அவர்கள் என்னுடைய ரசிகர். அவர்களே ஒப்புக் கொண்ட செய்தி இது. எனது கவிதைகளை ரசித்துப் படித்து மகிழ்ந்துள்ளதை அவர்களது வீட்டில் அனைவரும் அறிவார்கள். மற்றவர்கள் பலரும் இதைப் பற்றிக் கூறியதுடன், அவர்களே என்னிடம் நேரில் எனது கவிதைகளைப் பாராட்டி பல தடவைகள் சொல்லி இருக்கிறர்கள்,

நான் அவர்களை மரியாதைக்காக அடிக்கடி பார்க்கப் போவேன். ஆனல் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் என்னை தனியாக அழைத்து பணம் கொடுப்பார்கள். வேண்டாம் என நான் மறுத்த போதிலும் சும்மா வைத்துக் கொள்ளுங்கள் என எனது "ஜேபில்" திணித்து விடுவார்கள். ஒரு தடவை ரூ. 250/- கொடுத்துள்ளார்கள், மற்ருெரு முறை 75 ரூபாய் கொடுத்தார்கள். ரூபாய் 100/- என பல தடவைகள் வாங்கி இருக்கிறேன். வேறு சில சந்தர்ப்பங்களில் பத்து, இருபத்தைந்து என அவர்கள் எனக்கு அன்பளிப்புச் செய்ததும் உண்டு.

காயிதே மில்லத் எனக்கு அடிக்கடி பணம் கொடுத்தது கூட எனது மனதைத் தொடவில்லை. அவர்கள் ஒருசமயம் உதிர்த்த வார்த்தைகள் எனது மனதில் நீங்காத இடத்தைப் பெற்றுவிட்டன. ஒரு தடவை என்னை பார்த்து "கவிஞரே! நான் "குறிப்பில்லாமல்" கொடுத்த காலத்தில் நீர் வராமல் போய் விட்டீரே" எனமனமுருகிக் கூறினர்கள். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை "குறிப்பில்லாமல்" என்றல் விளங்கவில்லையே எனக்கு என்றேன். நான் வளமோடு வாழ்ந்த காலத்தில் கணக்கில்லாமல் அள்ளிக் கொடுத்திருக்கிறேன். என்ன கொடுக்கிறேன் என்றே யோசிப்பதில்லை. குறிப்பு எழுதி வைத்து கொள்வதில்லை. அதை நினைவில் வைத்துக்கொள்வதில்லை அந்த காலத்தைதான் குறிப்பில்லாமல் கொடுத்த காலம் என நான் கூறினேன், என்றர்கள். எனக்கு நிறையப்பணம் கொடுக்க வேண்டும் என்ற "தங்க மனது" காயிதே மில்லத்திற்கு இருந்ததே அதுவே எனக்குப் பெரிய பொக்கிஷமாகும்; புதையல் ஆகும் என நான் மதிக்கிறேன்.

ஒரு சமயம் மதுரை ஷரீப் சாகிப் எம்,பி எனக்கு ரூபாய் ஐம்பது தருவதாகச் சொல்லிவிட்டு டில்லிக்குப் போனர். அவர் டில்லியில் இருந்து திரும்பிவருவதற்குள் பார்லிமெண்டை கலைத்து விட்டார்கள். அவரது M.P. பதவி பறி போய் விட்டது, இதை காயிதே மில்லத்திடம் தமாஷாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். அதற்கு அவர்கள் "அப்படியா உமது கடன் தீர்ந்து போகும் பயப்படாதேயும். உமக்கு அந்த பணம் வந்துவிடும்" என்று சொன்னர்கள். மீண்டும் ஷரீபுக்கு M, P. தொகுதி கொடுக்கப்படும் என்பதையும் அவர் வெற்றி பெறுவார் என்பதையும் சூசகமாக அவர்கள் அறிவித்தார்கள். அதன்படித்தான் நடந்தது. எனக்கு வாக்களித்த தொகையும் கிடைத்தது.

**கவிஞர் தா. காசிம்**

# தந்தையை நிகர்த்த தலைவர்

**ஹாஜி S. A. காஜா மைதீன் சாகிப் Ex, M. P.**
(தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் தலைமை நிலையச் செயலாளர்)

கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்களைநான் ஒரு ஒலியுல்லாஹ்வாகக்கண்டேன். அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பை நான் பெற்றிருந்தேன்.

ஜனப் அப்துல் மஜீத் சாகிப் அவர்களின் அலுவலகத்திற்கு வருவார்கள். அப்போது அவர் களை நான் சந்திக்க வாய்ப்பு ஏற்பட்டது. ''தம்பி, தம்பி'' என அன்போடு அழைப்பார்கள்.

நாட்டுக்கு சுதந்திரம் கிடைத்த பிறகு நம் நடவடிக்கைகள் சற்று மந்தப்பட்ட நேரத்தில் அடிக்கடி அவர்களை நான் சந்திக்க வாய்ப்பு இல்லாதிருந்தது.

1952-ல், முதல் சுதந்திர இந்தியாவின் பொதுத் தேர்தல் நடந்தபோது, சென்னை திருவல்லிக்கேணித் தொகுதியில் ஜனப் எம். எஸ், அப்துல் மஜீத் சாஹிப் அவர்களுக்கும் ஆயிரம் விளக்குத் தொகுதியில் டாக்டர் நியாமத்துல்லா அவர்களுக்கும், சூளைத் தொகுதியில் ஜனப் அஹ்மது முஹைய்யதீன் பீஜாப்பூரி அவர்களுக்கும் முஸ்லிம் லீக் சார்பாக போட்டியிட வாய்ப்பளிக்கப் பட்டது. இதுசமயம், கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர் களுடன் மீண்டும் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

1957-ல் மறு பொதுத்தேர்தலில் முஸ்லிம் லீக் பல சுயேட்சை வேட்பாளர்களுக்கு ஆதரவு தந்தது. குறிப்பாக, சென்னையைப் பொறுத்த வரை சென்னை திருவல்லிக்கேணித் தொகுதியில் போட்டியிட்ட திரு. சின்ன அண்ணாமலை அவர் களுக்கும், பாராளுமன்றத்திற்குப் போட்டியிட்ட திரு. எச். டி. ராஜா அவர்களுக்கும் ஆதரவு தந்தது.

அது சமயம் கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்கள் சென்னை இராயப் பேட்டையில் புதுப்பேட்டை கார்டன் தெரு என்ற இடத்தில் வசித்து வந்தார்கள்.

''சென்னையைப் பொறுத்தும் இவ்விரு வேட்பாளர்களும் சிறுபான்மை சமுதாயத்தினர் களுக்கு அனுகூலமானவர்களாகத் தெரியவில்லை. மேலும், நமது ஆதரவினுல் நம் வாக்குகள் சிதறி காங்கிரஸ் வெற்றி பெற வாய்ப்பு ஏற் படக்கூடும்'' என்பதாக என்னுடைய அச்ச உணர்ச்சியை அவர்களிடம் தெரிவித்தேன்.

ஏன் இந்த முடிவு எடுக்கப்பட்டது என்ப தற்கான காரண காரியங்களை கண்ணியத்திற் குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்கள் எனக்கு விளக்கமாகவும், பொறுமையாகவும் எடுத்து ரைத்தார்கள். இரவு 9 மணியளவில் அவர்களிடம் சென்ற நான் நள்ளிரவு 1 மணியளவில் எனது இல்லம் திரும்பினேன். அதுசமயம் எவ்வித பதவிப் பொறுப்பும் லீகில் இல்லாது இருந்த எனக்கு, பழக்கத்தின் காரணமாக என் வினுக் களுக்கு அவர்கள் தந்த விரிவான பதில் என் மனதை மிகவும் கவர்ந்தது.

கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்கள் எந்தவொரு முடிவு எடுப்பதாக இருந் தாலும், இந்த முடிவினுல் வருங்காலத்தில் இந்த சமுதாயத்திற்கு - இந்த நாட்டிற்கு எந்தவித மான நன்மைகள் ஏற்பட வாய்ப்பு இருக்கிறது என்பதையெல்லாம் கருத்தில் கொண்டு தீர யோசித்து, பிறரின் கருத்துக்களையும் கேட்ட றிந்து முடிவு எடுப்பார்கள்.

கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்கள் குரோம்பேட்டைக்கு தம் இருப்பிடத்தை மாற்றிய பிறகும் எங்களின் சந்திப்பு அடிக்கடி இல்லாவிடினும், சந்திக்கும் சமயமெல்லாம் அவர்கள் எனக்குப் போதித்த உபதேசங்களெல் லாம் இக் காலத்தில் என் வாழ்வுக்கு எவ்வளவு பயனுள்ளதாக இருக்கிறது என்பதை நான் அனுபவ பூர்வமாக உணருகிறேன்.

கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்கள் அல்லாஹ்வின் மீது அசைக்க முடியாத நம்பிக்கையுடன் எந்தவொரு காரியத்தையும்

செய்து வருவார்கள். எப் பிரச்சினையிலும் முடிவு எடுக்க சிரமம் ஏற்படுமானால், உடனே ''நபில்'' தொழுகையை நிறைவேற்றிவிட்டு தம் முடிவினை அறிவிப்பார்கள். அவ்வாறு முடிவு எடுத்து விட்டால் அதை அமுல் படுத்துவதில் மிக உறுதியாக இருப்பார்கள், எக்காரணத்தைக் கொண்டும் அதிலிருந்து பிறழ்வதில்லை.

சிறு குழந்தைகளிடம் கூட அன்போடு பழகுவார்கள். அவர்களுக்கு தகுந்தாற்போல் விளையாடியும் அவர்களை மகிழ்விப்பார்கள்; தாமும் மகிழ்வு கொள்வார்கள்.

கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்கள் யாரிடமும் எந்தவித சலுகையையும் எதிர்பார்த்தவர்களல்ல; எவ்வித சலுகையையும் வேண்டி நின்றவர்களுமல்லர்.

பாராளுமன்ற உறுப்பினர்களாக நாங்கள் இருந்தபோது உணவு விடுதிக்குச் சென்று உணவு அருந்தியதும் அவர்களுக்கான பில் பணத்தை வேறு யாராவது கொடுத்து விட்டால், அதனை கவனத்தில் வைத்திருந்து மறுமுறை அவர்களை அழைத்து சாப்பிட வைத்து முன்னதாகவே பில்லுக்குரிய பணத்தைக் கொடுத்து விடுவார்கள்.

பாராளு மன்ற கூட்டத் தொடர் முடிந்து ஊர் திரும்பும் சமயம் கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் (ரஹ்) அவர்களுடன் மற்ற லீக் உறுப்பினர்களும் வரும் சமயம், டில்லியை விட்டும் ரயில் புறப்பட்டதும் தன் பணத்தை எடுத்துக் கொடுத்தும், அதைப் போல அவர்களுடன் புறப்பட்ட எங்களிடமும் பணத்தை வாங்கி பொதுவாக ஒருவரிடம் கொடுத்தும், வழியில் ஏற்படும் செலவினங்களுக்காக வைத்துக் கொள்ளச் சொல்வார்கள். அதைப் போல, சென்னையில் இறங்கியதும் அதிக பணம் செலவாகி இருந்தால், ஈவு வைத்து வசூலித்து அந்த நண்பரிடம் சேர்ப்பித்து விடுவார்கள்.

ரயில் பிரயாணத்தின் போது தன்னால் மற்றவர்களுக்கு சிரமம் ஏற்படாதவாறு நடந்து கொள்வார்கள். எந்த ஒரு ''வக்தை''யும் உரிய நேரத்தில் தொழாமல் அவர்கள் விட்டது இல்லை, ரயில் பிரயாணமானாலும் ''சுப்ஹு'' தொழுகையின்போது மற்றவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் காலைக் கடன்களை முடித்து விட்டு ''ஒளு'' செய்து தொழுகையை நிறைவேற்றுவார்கள்.

யார் எந்தக் குறையைச் சொன்னாலும், அல்லது யாரைப் பற்றி குறை சொன்னாலும் அமைதியாக முழுமையாகக் கேட்டறிந்து, பின்பு யோசித்து பதில் தருவதாக அவர்களிடம் சொல்லுவார்கள். பிறர் சொன்னதை அப்படியே உடனே நம்பி ஒரு முடிவுக்கும் வர மாட்டார்கள். யார் மனதையும் புண்படுத்தும் விதத்தில் அவர்களின் பேச்சு அமைந்திராது. தாங்கள் நினைப்பதைச் சொல்லுவார்கள்; நடப்பார்கள்; பிறரையும் அவ்வாறே நடக்க வேண்டும் என்று வற்புறுத்துவார்கள்.

சிலர் சொல்வது ஒன்று; செய்வது ஒன்று என்பதை நாம் காண்கிறோம். ஆனால், கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் (ரஹ்) அவர்களிடத்திலே நான் நெருங்கி பழகி பார்க்கிறபோது, சொல் ஒன்று, செயல் ஒன்று என்பதை நான் பார்த்ததில்லை.

கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் (ரஹ்) அவர்களிடத்திலே கேட்டு விபரம் தெரிய வேண்டும் என்று எண்ணி அவர்களிடத்திலே போய் அமர்ந்தவுடனே அவர்களாகவே என் ஐயப்பாட்டை போக்கும் விதத்தில் பேச்சை ஆரம்பித்து விளக்கம் தந்த பின்னர், வந்த நோக்கம் பற்றி கேட்பார்கள். இது பலமுறை என் வாழ்வில் நடந்திருக்கிறது.

''வருங்காலத்தில் சிறுபான்மை முஸ்லிம் சமுதாயத்தில் பொருளாதார வசதியோ அல்லது அதிகாரமோ இருக்காது. அல்லாஹ்வின் மீது பூரண நம்பிக்கை வைத்து நீங்கள் ஒற்றுமையாக ஒன்றுபட்டு செயல் பட்டால் நிச்சயமாக நீங்கள் மதிக்கப்படுவீர்கள்; உயர்வு பெறுவீர்கள். அதற்கு அல்லாஹுத் தஆலா உதவி செய்வான்'' என்பதாக அடிக்கடி வற்புறுத்துவார்கள்.

கல்விக்காகவும் அவர்கள் மிகவும் சிரமம் எடுத்து இருக்கிறார்கள். எந்த ஒரு சமுதாயம் கல்வியில் பின் தங்கி இருக்கிறதோ, அந்தச் சமுதாயம் பொருளாதாரத்திலும், மற்ற துறைகளிலும் முன்னேற முடியாது என்பதை உணர்ந்த அவர்கள், அரசின் சார்பாக நடத்தப்பட்ட 'முஸ்லிம் கல்லூரி'யினுடைய பெயரை மட்டுமல்லாமல், அதன் சட்ட திட்டங்களையும் அரசு மாற்றி அமைத்ததின் விளைவாக, சிறுபான்மை மக்களுக்கு அக் கல்லூரியில் இடம் கிடைக்காது என்பதை உணர்ந்து, நாம் நமது சொந்த கால்களிலேயே நிற்க வேண்டும் என்று சூளுரைத்து சமுதாயத்தின் துணைகொண்டு சென்னை ''புதுக் கல்லூரி''யை உருவாக்கினார்கள். இதைப்போல கேரளத்திலும் ஆரம்பிக்க முயற்சி எடுத்துக் கொண்டார்கள்.

இன்று ஏறக்குறைய தமிழ்நாட்டிலே 14 கல்லூரிகளும், கேரளத்திலே 15 கல்லூரிகளும் நம் சிறுபான்மை சமுதாயத்தவர்களால் நடத்தப் படுகின்றன என்றால் அந்தப் பெருமையெல்லாம் கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்களையே சாரும்.

கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்களை ஒரு தந்தையாக உடன்பிறப்பாக - அறிவைப் போதிக்கும் ஆசானாக - அரசியல் குருவாக - ஞானபோதகராக நான் கண்டேன்.

அவர்கள் எண்ணப்படி இந்த சமுதாயம் என்றென்றும் ஒற்றுமையுடன் கட்டுப்பாடுடன் அமைதியாக வாழ எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆலா கிருபை செய்வானாக!

---

## ''ஷைத்தான் என்னை கலைக்காமல் இருக்க துஆச் செய்யுங்கள்''

ரவுலா ஷரீபில் காயிதேமில்லத்

காயிதேமில்லத் அவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்றிருந்த சமயம், நானும் அவர்களுடன் மக்காவில் சேர்ந்து கொண்டேன். எல்லோரும் சேர்ந்து சமையல் வேலைகளை கவனிப்போம். காயிதேமில்லத் காய்கறி நறுக்கித் தருவார்கள். சோற்றிலே புளியை ஊற்றி காய்கறிகளையும் போட்டு ஒரே ''தம்மிலே'' உணவை சமைத்து விடுவோம்.

டில்லியிலுள்ள சவூதி அரேபியாவின் தூதர் ஒரு அறிமுகக் கடிதத்தை தலைவரவர்கள் கேட்காமலேயே அவர்களிடம் கொடுத்து விட்டார். தூதரே நேரில் கடிதத்தைக் கொடுக்கும் பொழுது அதை மறுக்கக் கூடாதே என்று காயிதேமில்லத் அவர்களும் அதை வாங்கி வைத்துக் கொண்டார்கள். ''இந்திய முஸ்லிம்களின் அமீர்'' என்று அந்த அறிமுகக் கடிதத்தில் சவூதி தூதர் வருணித்திருந்தார். ஆனால் அக் கடிதத்தை தலைவரவர்கள் யாரிடமும் காட்டவும் இல்லை; பயன்படுத்தவும் இல்லை, ஒருவரிடமும் சொல்லவுமில்லை. அறிமுகக் கடிதம் கொடுத்ததுடன் டில்லியிலுள்ள சவூதி தூதர் நின்றுவிட வில்லை. சவூதி அரசாங்கத்திற்கும் அவர் கடிதம் எழுதி காயிதேமில்லத்தை நன்கு கவனித்துக் கொள்ளும்படி வேண்டியிருந்தார். அம் மாதிரி கடிதத்துடன் சவூதி அதிகாரிகளை யாரும் அணுகாததால், அந்த நபரைத் தேடிப் பிடிப்பதில் சவூதி போலீஸ்காரர்கள் முனையலானார்கள்.

மதரஸ் முஅல்லிம் அப்துர் ரகுமான் ஷில்லியை அழைத்துக் கொண்டு நாலைந்து சவூதி போலீஸார், நாங்கள் தங்கி இருந்த இடத்திற்கு எதிர்பாராது வந்தார்கள். உருவிய வாளுடன் ஒரு போலீஸார் நின்றார். மற்றொருவர் துப்பாக்கியை கையில் வைத்து இருந்தார். எங்களுக்கு ஒரு வித பயம் உண்டாகி விட்டது. ஆனால் காயிதேமில்லத் தைரியமாகவும், அமைதியாகவும் இருந்தார்கள்.

போலீஸ்களுடன் வந்த ஆபீஸர், காயிதேமில்லத்தைப் பார்த்து ''நீர்தானா இஸ்மாயில்?'' என்று கேட்டார். ஆம் என்று தலைவரவர்கள் பதில் கூறினார்கள். பாஸ்போர்ட் மற்றும் பயணச் சீட்டுக்களைப் பார்க்க வேண்டுமென்றார். தலைவரவர்கள் அவற்றை எடுத்து வந்து காட்டினார்கள். ''டில்லியிலுள்ள சவூதி தூதர் கொடுத்த கடிதம் எங்கே'' என்று ஆபீஸர் மேலும் கேட்டார். தலைவரவர்கள் தங்கள் பெட்டியைத் திறந்து அதை எடுத்து வந்து காட்டினார்கள். அதைப் பார்த்து விட்டு ஆபீஸர் திரும்பக் கொடுத்து விட்டார். பிறகு ஷில்லியிடம் அரபியில் ஏதோ கூறினார். ஷில்லி முகத்தில் ஒருவித மகிழ்ச்சி பொங்கியதைக் காணலானேன்.

இந்த கெடுபிடிகள் எல்லாம் முடிந்த பின் அந்த ஆபீஸர் ''நீங்கள் இங்கே தங்கக்கூடாது. மன்னர் பைஸலின் விருந்தாளியாகத்தான் தங்க வேண்டும். உடனே எங்களுடன் புறப்பட்டு வாருங்கள்'' என்று சொன்னார். அதற்கு தலைவரவர்கள் மறுத்து விட்டார்கள். கிட்டத்தட்ட அரை மணி நேரத்திற்கு மேலாக இந்த வாக்குவாதம் நடைபெற்றது. ''நான் ஒரு கூட்டத்தினருடன் வந்திருக்கிறேன். அவர்களுடன் தான் தங்குவேன் இதுவே எனக்குப் போதுமானது'' என்று முடிவாகச் சொல்லி விட்டார்கள்.

போலீஸார் திரும்பப் போய் விட்டார்கள். ஆனால் சில மணி நேரம் கழித்து அவர்கள் திரும்ப வந்து காயிதேமில்லத்திடம் ''உங்கள் கூட்டத்தினர் அனைவருமே எங்களது மன்னர் விருந்தினர் மாளிகையில் தங்கிக் கொள்ளலாம், வாருங்கள்'' என அழைத்தனர். அதற்கும் தலை

வரவர்கள் சம்மதிக்கவில்லை. வசதிக் குறைவுகள் இருந்த போதிலும் ஷில்லியின் வீட்டிலேயே தங்கிக் கொண்டார்கள். அரசாங்க உபசரிப்புக்களை திட்டவட்டமாக நிராகரித்து விட்டார்கள்.''

இச் சம்பவம் நடைபெற்று இரண்டு நாள் கழித்து அரசு அதிகாரிகள் வந்து ''மன்னர் பைஸல் தங்களை விருந்துக்கு அழைக்கிறார்'' என்று தெரிவித்தார்கள். அந்த அழைப்பை காயிதே மில்லத் ஏற்றுக் கொண்டார்கள்; போய் வந்தார்கள்.

ஒவ்வொரு ஆண்டும் ஹஜ் காலங்களில் ஒவ்வொரு நாட்டிலிருந்துவரும் அரசு பிரதிநிதிகளுக்கு மன்னர் பைஸல் விருந்து ஒன்று வைப்பார். அரசாங்க பிரதிநிதியாக காயிதேமில்லத் செல்லாவிட்டாலும் அவர்களும் அந்த விருந்திற்கு அழைக்கப்பட்டார்கள்; போயிருந்தார்கள். அந்த ஆண்டு காஷ்மீர் முதலமைச்சர் ஷெய்க் அப்துல்லா இந்திய தூதுக் குழுவின் தலைவராக வந்திருந்தார்.

அந்த ஆண்டு பாக்கிஸ்தானில் இருந்து நவாப் சித்தீக் அலிகான் தமது குடும்பத்துடன் ஹஜ்ஜுக்கு வந்திருந்தார் தற்செயலாக மக்கா வீதியில் தலைவரவர்களும் சித்தீக் அலிகானும் சந்தித்துக் கொண்டனர். 1947 முன்பு அகில இந்திய முஸ்லிம் லீக்கில் பெரும் பதவியில் இருந்தவர் அவர். பிரிவினைக்குப் பிறகு பாகிஸ்தானுக்குச் சென்று விட்டார். இருவரும் மக்கா வீதிகளில் குசலம் விசாரித்துக்கொண்டனர். இரு தினங்கள் கழித்து நவாப் சித்தீக் அலி நாங்கள் தங்கி இருந்த இடத்திற்கு வந்து வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார். காயிதேமில்லத்தின் கரங்களை நவாப் சாஹிப் பற்றிப் பிடித்துக் கொண்டு ''அல்லாஹ் உங்கள் கையில் இந்திய முஸ்லிம்களை ஒப்புவித்திருக்கிறான்'' என்று அவர் கூறியபொழுது தேம்பித் தேம்பி அழுது விட்டார். காயிதே மில்லத்தும் கண் கலங்கி விட்டார்கள். இக் காட்சியை நான் என் கண்ணால் பார்த்தேன்.

மதீனாவில் இருந்து புறப்படும் முன்பு ரௌலாஷரீபில் நின்று அனைவரும் துவாச் செய்தோம். எங்கள் குழுவினர் போக, தஞ்சை, சிங்கப்பூர், பிரமுகர்கள் பலரும்கூட இருந்தார்கள். அப்பொழுது காயிதே மில்லத் அவர்கள் எங்களைப் பார்த்து கண் கலங்கிய படி ''என் மீது மிகப் பெரிய பொறுப்பு சாட்டப்பட்டிருக்கிறது. இதில் ஷைத்தான் என்னை கலக்காமல் இருக்க நீங்கள் எல்லோரும் துஆச் செய்யுங்கள்'' என்று நாவு தழுதழுக்கக் கூறினார்கள். இதைக் கேட்டு அனைவரும் கண்ணீர்விட்டுக் கதறினோம்.

மக்காவில் தங்கி இருந்த சமயம் காயிதே மில்லத்திற்கு காய்ச்சல் வந்துவிட்டது. மருத்துவ மனையில் ஓரிரு நாட்கள் தங்க வேண்டிய கட்டாயம் எழுந்து விட்டது. இந்தியத் தூதர் கித்வாயின் மனைவி தலைவரவர்கள் அருகிலேயே இருந்து நல்லபடி கவனித்துக் கொண்டார்.

1962ம் ஆண்டு பம்பாய் கார்ப்பரேஷன் தேர்தல் நடைபெற்றது. அச் சமயம் முஸ்லிம் லீக் கட்சியும் போட்டியிட்டது. தேர்தல் பிரசாரத்திற்கு காயிதே மில்லத் அவர்கள் பம்பாய் வந்திருந்தார்கள். நமது வேட்பாளர்கள் போட்டியிட்ட தொகுதிகளில் எல்லாம் பொது கூட்டங்களில் பேசினார்கள். உச்சகட்ட நாளன்று 24 மணி நேரத்தில் 35 கூட்டங்களில் சொற்பொழிவாற்றினார்கள். அச்சமயம் முஸ்லிம் லீக் 16 வேட்பாளர்களை பம்பாய் கார்ப்பரேஷனுக்குப் போட்டியிடச் செய்தது. அதில் 13 பேர் வெற்றி வாகை சூடினார்கள். தேர்தல் சமயம் காயிதே மில்லத் தலைமையில் பம்பாயில் மிகப் பிரமாண்டமான ஊர்வலம் நடத்தப்பட்டது. பம்பாயிலிருந்து வெளிவரும் ஆங்கில தினசரியான ''டைம்ஸ் ஆப் இந்தியா'' இந்த முஸ்லிம் லீக் ஊர்வலத்தை பிரிவினைக்கு பிறகு பம்பாய் முஸ்லிம்கள் நடத்திக் காட்டிய இரண்டாவது பெரிய ஊர்வலம் என வர்ணித்தது. பம்பாய் முஸ்லிம்கள் நடத்திய முதலாவது பெரிய பேரணி சவூதி மன்னர் ''இப்னு சவூத்'' பம்பாய் வந்திருந்த சமயம் என்பது நினைவு கூரத்தக்கது.

**(கீழக்கரை ஹமீது துரை)**



# "புத்ர தான்" செய்த புண்ணியத் தலைவர்

இந்தியாவின் வட எல்லையில், லடாக்கை ஒட்டியுள்ள அக்காய்சின் பகுதியை பல ஆண்டுகளாகவே செஞ்சீன சர்க்கார் தனது வசப்படுத்திக் கொண்டிருந்த போதிலும், 1962ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் சீன ராணுவம் மக்மோகன் எல்லைக் கோட்டையும் தாண்டி இந்தியப் பகுதிக்குள் அத்துமீறி புகுந்துவிட்ட பின்னரே இந்திய சர்க்கார் விழித்தெழுந்தது. சீன ஆக்கிரமிப்பை எதிர்த்து இந்தியத் திருநாடே சிலிர்த்து எழுந்தது எனலாம். மத, இன, மொழி, கட்சி பேதங்கள் இன்றி ஒவ்வொரு இந்தியனும் தாய்நாட்டிற்காகத் தமது கடமையை நிறைவேற்ற வரிந்து கட்டிக் கொண்டு முன் வந்த காட்சிகளை அப்பொழுது நாமனைவரும் கண்கூடாகக் கண்டோம்.

இந்திய யூனியன் முஸ்லிம் லீகைப் பொறுத்தவரை நெஹ்ரு அரசாங்கத்திற்கு நாம் முழுஆதரவு நல்கினோம்; யுத்த முயற்சிகளுக்கு இந்திய முஸ்லிம்கள் அனைவரும் தங்களால் இயன்ற அளவு சகல விதங்களிலும் ஆதரவும் ஒத்துழைப்பும் நல்க வேண்டுமென முஸ்லிம் லீக் கேட்டுக் கொண்டது. காயிதே மில்லத் அவர்கள் தங்களது எம்.பி. சம்பளத்திலேயே ஒரு பகுதியை ''யுத்த நிதிக்காக''ப் பிடித்துக் கொள்ளும்படிக் கூறி விட்டார்கள். அவ்வாறே பல ஆண்டுகள் யுத்த நிதிக்கு தலைவரவர்களது பணம் ஒழுங்காகச் செலுத்தப்பட்டு வந்தது என்பதை ஆட்சியாளர்கள் நன்கு அறிவார்கள்.

யுத்த முயற்சிகளுக்கு பொதுமக்களை எப்படியெப்படி எல்லாம் தயார்படுத்த முடியுமோ அல்லது பக்குவப்படுத்த இயலுமோ அவ்வாறெல்லாம் அனைவரையும் இந்திய அரசு முடுக்கிவிட்டுக் கொண்டிருந்தது. பாராளுமன்ற உறுப்பினர்களுக்குக் கூட துப்பாக்கி சுடும் பயிற்சி அளிக்கப்பட்டது என்றால் எத்தகைய யுத்த முஸ்தீபுகள் நாட்டில் நடைபெற்றுக் கொண்டிருக்க வேண்டும் என்பதை யூகித்துக் கொள்ளலாம். பாராளுமன்ற உறுப்பினர்களுக்காக அளிக்கப்பட்ட துப்பாக்கி சுடும் பயிற்சியில், காயிதேமில்லத் அவர்களும், தங்களது வயதையும் பொருட்படுத்தாது, கலந்து கொண்டார்கள் என்பதையும், குறிதவறாது துப்பாக்கி சுடும் போட்டியில் அவர்கள் முதன்மையாகத் தேறினார்கள் என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் நினைவு கூராமல் இருப்பதற்கில்லை.

அக்காலகட்டத்தில் நடைபெற்ற மற்றொரு நிகழ்ச்சியையும் இங்கு நினைவுபடுத்திக் கொள்வது அவசியமாகும். வட எல்லையில் சீன ஆக்கிரமிப்பு ஆரம்பமாகி சுமார் ஒரு மாதம் இருக்கலாம். மதராஸ் புறநகரில் குரோம்பேட்டையில் வசித்து வந்த ஜனாப் மியாக்கான், 1962ம் ஆண்டு நவம்பர் மாதம் 13ம் தேதியன்று, ஆங்கில மொழியில் அன்றையத்தினம் வெளிவந்து கொண்டிருந்த மாதப் பத்திரிகையான ''மெயிலை''ப் படித்துக் கொண்டிருந்தார். அன்றைய ''மெயில்'' தினசரியில் வெளிவந்த செய்தி ஒன்று அவரின் கவனத்தைக் கவர்ந்தது.

டில்லி தலைநகரில் ''புத்ர தான் தினம்'' என ஒன்று நடைபெற்றதாகவும் அதில் கலந்து கொண்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் ஏழு பேர் பாரதப் பிரதமரிடம் அளித்த மகஜர் ஒன்றில் தங்களது புதல்வர்களை நாட்டு நலனுக்காகப் பாரதப் பிரதமரிடம் ஒப்புவித்து விட முன் வந்துள்ளதாக அறிவித்திருந்தனர். இச்செய்தி மெயில் பத்திரிகையில் வெளியாகி இருந்தது. அந்த ஆறு எம்பிக்களில் காயிதே மில்லத் அவர்களும் ஒருவர் என்ற வாசகத்தைப் படித்ததும் ஜனாப் மியாக்கானுக்கு உண்மையிலேயே உள்ளம் பூரித்துவிட்டது. தம்மீது தமது தந்தை எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதனை எண்ணி மகிழ்ச்சிக்கடலில் மூழ்கிப் போனார். அந்த நம்பிக்கை வீண்போகக்கூடாது என்ற முடிவுக்கு வந்து நவம்பர் மாதம் 14ம் தேதியன்று இது குறித்து டில்லியிலுள்ள தந்தைக்குக் கடிதம் ஒன்றை எழுதினார்.

அக் கடிதத்தில், நபி இஸ்மாயில் (அலை) அவர்கள் தங்களது தந்தையான நபி இப்ராஹீம் (அலை) அவர்களைப் பார்த்து ''என்னருமைத்

தந்தையே! நீங்கள் ஏவப்பட்டபடியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளர்களில் நின்றுமுள்ளவனாகவே காண்பீர்கள்'' என்ற திருக் குர்ஆன்(37:102) வசனத்தை மேற்கோள் காட்டி, தாய்நாட்டின் சேவையில் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளத் தாம் தயாராக இருப்பதாகவும் அதற்காக யாதொரு வெகுமதியையோ, அல்லது நிபந்தனையையோ போடவில்லை என்றும் எந்தவித முணு முணுப்பும் இன்றி இதை எழுதுவதாகவும் குறிப்பிட்டிருந்தார்.'' இந்நாட்டின் எந்த ஒரு இடத்திலும் எந்த விதமான தொரு பணியையும் யாதொரு நிபந்தனையுமின்றித் தாம் செய்யத்தயாராக இருப்பதாக பாரதப் பிரதமரிடம் தாங்கள் தைரியமாக வாக்குறுதி அளிக்கலாம் என்றும் அக்கடிதத்தில் சுட்டிக் காட்டப்பட்டிருந்தது.

**J. M. MIAKHAN,**

DEALER IN ALL KINDS OF LEATHER &
MANUFACTURER OF INDUSTRIAL LEATHERS

"DAYA MANZIL"
CHROMEPET P.O.

Date 14th Nov 1962

Respected Father,

Assalamu alikum..

In yesterdays 'Mail' I saw a news which said that you with six others have pledged to place my service at the disposal of the Prime Minister on "Putra Dan Day".

I am greatly elated and honoured at the trust you have in me. I shall say even as 'Prophet Ismail hath said "O my father! Do as thou art commanded. Thou will find me, if God so wills, one practicing Patience and Constancy to the utmost. (Sura Saffat, Verse 102).

I do hereby vouchsafe, that I, your trusted son will gladly undertake to do any service and sacrifice without demur and without putting any conditions or expecting any reward, for the sake of our beloved motherland.

You can assure the Prime Minister that I am willing to work unconditionally in any capacity - big or small - in any place as he deems fit and that I am prepared to leave at a moment's notice.

Your obedient and loving son

J. M. Miakhan

Phone 69377

**M. MUHAMMAD ISMAIL, M. P.**
PRESIDENT :
INDIAN UNION MUSLIM LEAGUE

"DAYA MANZIL"
CHROMEPET
(VIA) MADRAS

........................ 196

5, Western Court
New Delhi. 16/11/62

My dear Miakhan,
Va alaikumus Salaam va
Rahmathullahi va barakathuhu!
I received today your letter
of the 14th instant and was overwhelmed
with devout feelings of gratitude to Allah
the Almighty and with an exhilarating sense
of pride at what you have written. Alhamdulillah
I have forwarded your letter to
the Hon'ble Prime Minister, placing your
beautiful offer at his disposal. Your spontaneous
letter itself is a noble action.
May the Almighty Allah shower
His Choicest blessings upon you and yours! Ameen

Yours affectionately,
M. Md. Ismail

To J. M. Miakhan
Chromepet.

மகனின் மடலைப் பார்த்ததும் காயிதேமில்லத் அவர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே யில்லை; மிகவும் புளகாங்கிதமடைந்து போனார் கள். மகனைப் பாராட்டியும் தட்டிக் கொடுத்தும் 16ம் தேதியன்று புதுடில்லியிலிருந்து பதில் கடிதம் எழுதினார்கள். இப்படி ஒரு புதல்வனை ஈன்றதற் காக அல்லாஹ்வுக்கு நன்றி சொல்வதாக அவர்கள் குறிப்பிட்டிருந்ததுடன், அக் கடிதத்தின் நகல் ஒன்றை பாரதப் பிரதமர் பண்டித நெஹ்ருவுக்கு அனுப்பி இருப்பதாகவும், தக்க நடவடிக்கையை மேற்கொள்ளும்படி அவரைக் கேட்டிருப்பதாக வும் தெரிவித்திருந்தார்கள். தன்னிச்சையாக நீ எழுதிய கடிதம் ஒரு பரந்த, பெருந்தன்மையான செயல்'' என்றும் மெச்சி எழுதி இருந்தார்கள்,

அன்றைய தினமே (நவம்பர் 16-ம் தேதி) பண்டித நெஹ்ருவுக்கும் காயிதேமில்லத் மற்றொரு கடிதத்தையும் எழுதினார்கள். அதன் வாசகம் வருமாறு : சில தினங்களுக்கு முன்பு, நானும் மற்றும் சில எம். பி.களும் தங்களிடம் சமர்ப் பித்த '' புத்திர தான்'' மகஜரின் அடிப்படையில், இன்று எனது மகனிடமிருந்து வந்த கடிதத்தை இத்துடன் தங்களுக்கு அனுப்பி இருக்கிறேன் **J. M.** மியாகான் **B, A.** எனது ஒரே மகன். அவ னுக்கு வயது 37 ஆகிறது நம் நாட்டிற்கு நெருக் கடி ஏற்பட்டிருக்கும் இத் தருணத்தில் தனது சேவையை தாய் நாட்டிற்கு அர்ப்பணிக்க அவன் முன்வந்துள்ளான். தங்களிடம் அவனது சேவை சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. தாங்கள் எப்படி விரும்புகிறீர்களோ அவ்விதமே அவனை எந்தப்

प्रधान मंत्री भवन
PRIME MINISTER'S HOUSE
NEW DELHI

No. 1990-PMH/62

November 17, 1962

Dear Mr. Muhammad Ismail,

Thank you for your letter of the 16th November. I have read the copy of your son's letter with pleasure. It does him credit and I congratulate you on having such a gallant son.

I think that it will be far better if he finds some work connected with the war effort in Madras. The crisis we are facing is likely to last for a considerable time and everyone of us will have to give our best to it.

I am returning your son's letter.

Yours sincerely,

Jawaharlal Nehru

Shri M. Muhammad Ismail, M.P.,
5D Western Court,
New Delhi.

பணியிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். இக் கடிதத்தின் நகலை எனக்கு திருப்பி அனுப்பி வைத்தால் மிகவும் நலமாக இருக்கும். விலைமதிப்புள்ளதொரு பொக்கிஷமாக அதை நான் கருதுகிறேன். அக் கடிதத்தில் நகல் ஒன்றும் தங்களது உபயோகத்திற்காக இத்துடன் அனுப்பி இருக்கிறேன்.''

பாரதப் பிரதமரிடமிருந்து நவம்பர் 17-ம் தேதியன்றே காயிதேமில்லத்திற்கு பதில் வந்து விட்டது. அக் கடிதத்தில் பண்டித நெஹ்ரு எழுதியிருந்ததாவது :- ''தங்களது 16ம் தேதி கடிதம் கிடைத்தது. உங்களது மகனின் கடிதத்தை மகிழ்ச்சி பெருக்கெடுக்கப் படித்தேன், இது அவருக்கு பெருமை சேர்க்கிறது. இப்படிப்பட்ட வீரமிக்க மகனைத் தாங்கள் பெற்றிருப்பதற்காக நான் உங்களைப்பாராட்டுகிறேன், மதராஸிலேயே யுத்த சம்பந்தமான ஏதாவது ஒரு நடவடிக்கையில் அவர் ஈடுபடமுடியுமானால் அதுவே நலமாக இருக்கும் எனநான் கருதுகிறேன்.., உங்களது மகன் கடிதத்தையும் திருப்பி அனுப்பி இருக்கிறேன்.''

பாரதப் பிரதமரின் கடித நகலை ஜனுப்மியாகானுக்கு தலைவரவர்கள் அனுப்பி வைத்தார்கள். சென்னையிலுள்ள, ராணுவத்திற்கு ஆள் சேர்க்கும் கேந்திரத்திற்குச் சென்று மியாக்கான் யுத்த முயற்சிகளில் தமக்கு ஒரு பணியைத் தருமாறு கேட்டுக் கொண்டார், ஆனால் அங்குள்ள அதிகாரிகள், மியாக்கான் முப்பது வயதைத் தாண்டி விட்டதால், மதருஸ்கேந்திரத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள பணிகளில் ஒன்றிலும் அவரைச் சேர்த்துக் கொள்வதற்கில்லை என்று கையை விரித்து விட்டனர். எனவே, ஏமாற்றத்துடனேயே மியாக்கான் திரும்ப வேண்டியதாயிற்று.

## ரங்கூன் வீதிகளில் நிதி வழங்க போட்டா போட்டி!

முஸ்லிம் கல்லூரிகள் நிதிக்காக காயிதேமில்லத் ரங்கூன் வந்த சமயம் நான் பர்மா தலைநகரில் சிறு வியாபாரம் செய்து வந்தேன். அன்றிருந்த அரசியல் சூழ்நிலைகள் காரணமாக, நிதி வசூலுக்காக தலைவர்கள் ரங்கூன் வருவதை செல்வாக்குப் படைத்த பணக்காரர்கள் விரும்பவில்லை. தலைவர்களை வரவேற்பதற்குக்கூட அவர்கள் தயாராக யில்லை.

சாதாரண நபர்களாக இருந்த எங்களைப் போன்றவர்கள்தான் காயிதேமில்லத்திற்கு பர்மா தலைநகரில் சிறப்பான வரவேற்புக் கொடுக்க வேண்டும் என முனைப்புடன் செயல்பட்டோம். பொது மக்கள் ஆதரவு எங்களுக்கு இருந்தது. பச்சிளம் பிறைக் கொடியுடன் ஆயிரக் கணக்காக தமிழ் முஸ்லிம்கள் ரங்கூன் விமான நிலையத்தில் திரண்டு விட்டார்கள். தக்பீர் முழங்க காயிதே மில்லத்திற்கு மகத்தான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. அன்றைய தினம் பர்மாவில் வாழ்ந்த வெளிநாட்டுக்காரர்கள் எல்லோரும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். எந்தத் தலைவருக்கும் இவ்வளவு பெரிய வரவேற்பை விமான நிலையத்தில் யாரும் பார்த்ததில்லை.

பணக்கார முஸ்லிம்களுக்கு இது ஒரு பலத்த அடியாகப் போயிற்று. தாங்கள் ஒதுங்கிக் கொண்டால் தலைவர்களை வரவேற்க ஆள் இல்லாது போய்விடும் என அவர்கள் எண்ணிக் கொண்டிருந்தார்கள். அது பகற் கனவாகப் போய் விட்டது அவர்களுக்கு ஒரு ஏமாற்றமே. தலைவரவர்களை சந்திக்க வந்த ஒரு சில பணக்காரர்களும் ''பர்மாவின் பொருளாதார நிலைமை சீர்கெட்டு இருக்கும் சமயம் நீங்கள் இங்கு வசூலுக்கு வரலாமா?'' என்று வினா தொடுத்தனர். அதற்கு காயிதேமில்லத் ஒரே வரியில் பதில் சொன்னார்கள்.

''அல்லாஹ்வை நம்பி வந்திருக்கிறேன்'' என்ற பதில், செல்வந்தர்களுக்கு சாட்டையடி மாதிரி அமைந்தது.

பர்மா வாழ் தமிழ் முஸ்லிம்கள் மட்டுமின்றி தமிழ் நாட்டைச் சேர்ந்த ஹிந்து பிரமுகர்கள் பலரும் காயிதேமில்லத்தை வரவேற்க ரங்கூன் விமான நிலையத்திற்கு வந்திருந்தனர். பர்மா தமிழ் சங்கத் தலைவர் திரு. ஏகாம்பரத் தேவர், திரு. A. K. லட்சுமணன், தேவர் சிற்றுண்டி அதிபர் சண்முகம் ஆகியோர் காயிதேமில்லத்திற்கு பொன்னாடை போர்த்தினார்கள். மலபார் முஸ்லிம்களும் ஏராளமாக வந்து இந்த நிகழ்ச்சியை சிறப்பித்தனர்.

அன்றையத் தினம் பர்மா அரசாங்கத்தில் நிதியமைச்சராக இருந்த ஜனாப் அப்துல் லத்தீப்கானும் வர்த்தக அமைச்சராக இருந்த ஜனாப் ரஷீதும் காயிதேமில்லத் தங்கி இருந்த ஹோட்டலுக்கு வந்து குசலம் விசாரித்து மரியாதை செய்தனர்.

ஒரு பொதுக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது, காயிதேமில்லத் தாங்கள் வந்த நோக்கத்தை விளக்கிக் கூறினார்கள், கல்வியின் அவசியத்தை வலியுறுத்திப் பேசினார்கள். இதற்குப் பிறகு ஒதுங்கி நின்ற பணக்காரர்களும் எங்களுடன் சேர்ந்துகொண்டனர். நாங்கள் நிதிவசூலில் இறங்கினோம். எதிர் பார்த்ததைவிட அதிகமாகவே மக்கள் அள்ளி அள்ளிக் கொடுத்தனர். ரங்கூன் நகர வீதிகளில் இறங்கி கடை கடையாகவும் வசூலித்தோம். அப்பொழுது காயிதேமில்லத்தும் எங்களுடன் நடந்தே வந்தார்கள்.

அச்சமயம் நான் நேரில் கண்ட சில காட்சிகள் எனது மனத்தை விட்டு இன்றும் அகலாமலேயே இருக்கின்றன. அவை மற்றவர்களுக்கும் தெரிந்து இருக்க வேண்டும்.

முதல் தெருவில் கூட்டமாக இறங்கி கடை கடையாக வசூலித்துக் கொண்டு நடந்து சென்றோம். தேவர் சிற்றுண்டிச் சாலைக்கு செல்லாமல் அதை கடந்து அருகிலுள்ள இந்தியர் கடையைப் பார்க்க நாங்கள் நடந்தோம். சிற்றுண்டிச்சாலை அதிபர் என்னை கூப்பிட்டார், என்ன விபரம் என்று கேட்டார்; நிதி வசூல் பற்றிச் சொன்னேன். ''அப்படியானால் என்னிடம் ஏன் வாங்காமல் போகிறீர்கள்?'' என்று கேட்டார்; உரிமையோடு என்னை கடிந்து கொண்டார். இதைப் பார்த்ததும் காயிதேமில்லத், தேவர் சிற்றுண்டி கடைக்குச் சென்றார்கள். அதன் அதிபர் தலைவரை எதிர்கொண்டு அழைத்து மரியாதை செய்தார்; நன்கொடையும் கொடுத்தார். அந்நிய மண்ணில், முஸ்லிம் கல்லூரிக்காக முஸ்லிமல்லாத ஒருவர் நன்கொடை வழங்கிய காட்சியைப் பார்த்ததும் என் உடல் புல்லரித்து போயிற்று.

25-வது கல்லியில் வசூலுக்காகப் போய்க் கொண்டு இருந்தோம். ஒரு பர்மிய மூதாட்டியின் கடையைத் தாண்டி சென்றோம்.

அவளிடம் ஒன்றும் கேட்கவில்லை. எங்களைப்பார்த்ததும் அம் மூதாட்டி ''ஏ! இஸ்ஹாக் இங்கே வா! என்ன கூட்டமாகப் போய்க் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள். விவரத்தைச் சொன்னேன். ''அப்படியானல் என்னிடம் ஏன் நிதி கேட்கவில்லை'' என்று அவளும் கோபித்துக் கொண்டாள். அவளிடம் காயிதேமில்லத்தை அழைத்துச் சென்றேன், சோடா, பிஸ்கெட் எல்லாம் கொடுத்தாள். ஒரு வெள்ளித் தட்டில் நாங்கள் எதிர்பார்த்ததை விட பெரிய தொகையை முக மலர்ச்சியுடனும் பய பக்தியுடனும் கொடுத்தாள்.

ப்ரேஸர் ஸ்ட்ரீட்டில் பர்மிய முஸ்லிம் பெண் ரெடிமேட் கடை வைத்திருந்தாள். அக் கடைப் பக்கத்தில் சென்றதும் அவளிடம் விபரத்தை சொன்னேன். உடனே அவள் ''நான் நிதி தருகிறேன். ஆனல் ஒரு நிபந்தனை; தலைவர் என் வீட்டிற்கு வந்து விருந்து சாப்பிடவேண்டும்'' என்றாள். நாங்கள் ஒத்துக் கொண்டோம். மறுநாள் எங்களுக்கு தடபுடலாக விருந்து. நூறு பேருக்கு விருந்து கொடுத்தாள். ஆடு, மாடு, கோழி, மீன், முட்டை, பழவகைகள், பாயாசங்கள் இந்திய உணவு, பர்மிய உணவு வகைகள் என்று பெரிய ஏற்பாடு செய்திருந்தாள். சாப்பிடவே நாங்கள் ''திக்குமுக்காடிப்'' போனோம். காயிதே மில்லத் பிரமித்துவிட்டார்கள். ''முகலாய மன்னர்கள் கொடுக்கும் விருந்து மாதிரி இருக்கிறதே'' என்று வியந்து பாராட்டினார்கள். அப் பெண் நல்ல தொகையை கல்லூரி நிதிக்குக் கொடுக்கவும் செய்தாள்.

அடுத்த தெருவில் மலபார் முஸ்லிம் ஒருவர் கடை வைத்திருந்தார். அவர் கடைக்கு தலைவரை அழைத்துச் சென்றேன். பத்தாயிரம் ரூபாயை சர்வ சாதாரணமாக எடுத்துக் கொடுத்தார். காயிதே மில்லத் அவருக்கு ரொம்ப நன்றி கூறினார்கள். அன்றிரவு அவர் கடையில் களவு போய்விட்டது. சுமார் நாற்பதாயிரம் ரூபாயை திருடர்கள் களவாடிச் சென்றுவிட்டார்கள். இதைக் கேட்டதும் எனக்கு வருத்தம் அதிகம். அவருக்கு ஆறுதல் சொல்ல நான் சென்றேன். அப்பொழுது அந்த மலபார் காக்கா ''என்ன இஸ்ஹாக் நேற்று பணம் கேட்டதே கேட்டாய்! ஐம்பதினயிரம் ரூபாய் தா என்று கேட்டிருக்க வேண்டாமா? கொடுத்திருப்பேனே! அன்று என்னிடம் மீதமுள்ள 40 ஆயிரத்தையும் கொள்ளைக்காரன் அல்லவா எடுத்துக் கொண்டு போய்விட்டான். அப்பணம் ஒரு நல்ல காரியத்துக்காவது பயன்பட்டிருக்குமே?'' என்று மிகச் சாதாரணமாகக் கூறினர்.

காயிதே மில்லத்திடம் வந்து நான் விபரத்தைக் கூறினேன். தலைவரவர்கள் அவருக்காக இரக்கப்பட்டார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு பரக்கத் செய் என்று அல்லாஹ்விடம் கையேந்தினார்கள். சில தினங்களில் போலீசார் அக்கடையில் களவு போன தொகை முழுவதையும் மீட்டி விட்டனர் என்று பின்னர்தான் கேள்விப் பட்டேன்.

என்னைப்பற்றி மற்ற நண்பர்களிடம் காயிதே மில்லத் விசாரித்திருக்கிறார்கள். ஏதோ சிறு வியாபாரம் செய்கிறார் என்றும், அவர் குடும்பச் செலவுகளுக்குத்தான் அது போதும் என்றும் அவரது மகள் இந்தியாவில் படித்து வருகிறாள், அதற்குக் கூட படிப்புச் செலவுகளுக்குப் பணம் அனுப்பச் சிரமப்படுகின்றார் என்றும் சொல்லி இருக்கிறார்கள். ஊருக்குத் திரும்பும் பொழுது காயிதேமில்லத் என்னைத் தனியாக அழைத்து, ''தமிழ்நாட்டில் படிக்கும் உமது மகளுக்கு இனி பணம் அனுப்ப வேண்டாம் என்றும் அதை தாம் கவனித்துக் கொள்வதாகவும் சொன்னார்கள். அதன் பிரகாரம் எனது மகள் படிப்புச் செலவை காயிதே மில்லத்தே கொடுத்தார்கள். ஓராண்டு கொடுத்திருப்பார்கள். அதற்குள்ளாக எனக்கு சிறிது வசதி ஏற்பட்டுவிட்டது. இனி அச் செலவுகளை நான் கவனித்துக் கொள்கிறேன், என்று காயிதேமில்லத்திடம் நான் கூறி நானகவே அவர்கள் பணம் கொடுப்பதை நிறுத்தி விட்டேன்.

கல்லூரி நிதிக்காக பர்மாவில் சில லட்சங்கள் வசூலாகியது. அப்பணம் முழுவதையும் அந்நாட்டு சட்டவிதிகளின்படியே பெர்மிட் எடுத்துத்தான் காயிதே மில்லத் அவர்கள் இந்தியாவுக்கு எடுத்துச் சென்றார்கள். கடுமையான அந்நியச் செலாவணி சட்டம் அப்பொழுது பர்மாவில் இருந்தபோதிலும், காயிதேமில்லத் விஷயத்தில் அந்த அரசாங்கம் தாராளமனதுடன் நடந்து கொண்டது.

**(பர்மா பஜார் S. K. M. இஸ்ஹாக் சாகிப்)**

—•:•—

# 1947 கராச்சி கவுன்ஸில் கூட்டமும்

# 1948 மதுராஸ் கவுன்ஸில் கூட்டமும்

**ஹாஜி A. K. ஜமாலி Ex M. L. A.**

*(துணைத் தலைவர், தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக்)*

காயிதேமில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் சென்னை மாகாண முஸ்லிம் லீக் தலைவராக 1945ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 1946ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலின் போது காயிதேமில்லத் அவர்கள் சென்னை நகர முஸ்லிம் தொகுதியிலிருந்து சென்னை சட்டப் பேரவைக்குப் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சென்னை சட்டப் பேரவையில் முஸ்லிம் லீக் கட்சிதனது தலைவராக காயிதேமில்லத் அவர்களைத்தேர்ந்தெடுத்தது. சட்டப்பேரவையில் முஸ்லிம் லீக் பிரதான எதிர்க்கட்சியாக இருந்து வந்ததால் அக்கட்சியின் தலைவராகிய காயிதேமில்லத் அவர்கள் எதிர்க் கட்சித் தலைவராக வரும் வாய்ப்பைப் பெற்ருர்கள்.

சென்னை மாகாணத்தில், சுதந்திரம் பெற்ற சில மாதங்களுக்குப் பிறகு, மாவட்ட, பிரைமரி முஸ்லிம் லீக் அமைப்புகள் செயல்படுவது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது. மாகாண அமைப்பு மட்டும் தேவைப்படும் போது செயலாற்றி வந்தது. ஆனால், சென்னை சட்ட மன்ற முஸ்லிம் லீக் கட்சி சட்ட மன்றத்தில் மாத்திரம் அல்லாமல் சட்டமன்றத்திற்கு வெளியிலும், முழு நேரமும் செயலாற்றி வரக் கூடிய ஒரு அமைப்பாக இருந்து வந்தது.

சென்னை சட்டமன்ற முஸ்லிம் லீக் கட்சியின் அயராத சேவை, நாடு தழுவிய முறையில் ஒரு பிரச்சினையாகக் கருதப்பட்டு வந்தது. முஸ்லிம் லீக்கிலிருந்த, தற்போது கட்சி மாறிவிட்ட, அல்லது பதவியைத் துறந்துவிட்ட, பல முன்னாள் முஸ்லிம் லீக்கினர்களும், இதரர்களும் முஸ்லிம் லீக்கை கலைத்து விடுவதற்கு ஆலோசனைகள் தபால் மூலமாகவும் தந்திகள் மூலமாகவும் காயிதே மில்லத் அவர்களுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் காயிதேமில்லத் அவர்களை நேரில் சந்தித்து முஸ்லிம் லீக்கை கலைத்து விடும்படி எடுத்துச் சொல்லி வந்தார்கள். மேலும் இந்தியாவிலுள்ள அனைத்து தேசிய நாளேடுகளும் முஸ்லிம் லீக்கைக் கலைத்து விடும்படி தலையங்கங்கள் எழுதிக் கொண்டிருந்தன. முஸ்லிம் லீக் சென்னை மாகாணத்தில் நீடித்து இருந்துவருவது பலருக்கு ஒரு பிரச்சினையாக இருந்து வந்தது.

''எனக்கு முஸ்லிம் லீக்கை கலைத்துவிட எவ்வித அதிகாரமும் இல்லை. முஸ்லிம் லீக் சட்டசபைக் கட்சி தொடர்ந்து இயங்கி வருவதன் காரணமாக இக்கட்சியின் தலைவராகிய நானும் இயங்கிக் கொண்டிருக்கிறேன். ''முஸ்லிம் லீக் கலைக்கப்பட வேண்டும்'' என்ற முடிவை அகில இந்திய முஸ்லிம் லீக்கின் கவுன்சில்தான் எடுக்க முடியும். அதற்குத்தான் அந்த உரிமையும் இருக்கிறது.'' என எல்லோருக்கும் காயிதே மில்லத் அவர்கள் ஒரே பதிலைச் சொல்லி வந்தார்கள். இதன் காரணமாக இதுவரை காயிதே மில்லத் அவர்களுக்கு முஸ்லிம் லீக்கை கலைக்கும் படி தபாலும், தந்தியும் அனுப்பிக் கொண்டிருந்தவர்கள், நேரே வந்து முறையிட்டுக் கொண்டிருந்தவர்கள் எல்லாம், பாகிஸ்தானின் தலைநகரான கராச்சியில் இருந்து வந்த காயிதே

ஆஜம் அவர்களுக்கு ''அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சிலை சீக்கிரமாகக் கூட்டி முஸ்லிம் லீக்கைக் கலைத்துவிடும் முடிவை உடனடியாக எடுக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என தந்திகள் அனுப்ப ஆரம்பித்தார்கள். இந்திய தேசீய தினசரிகளும் இந்த கைங்கரியத்தை விடாமல் தொடர்ந்து செய்து கொண்டு வந்தன.

தேசப் பிரிவினையின் காலத்தில் மக்கள் இரு தரப்பிலும் குடி பெயர்ந்தபோது ஏற்பட்ட பெரும் நஷ்டத்தின் காரணமாகவும்; காஷ்மீர் பிரச்சனை காரணமாக இந்தியாவுடன் ஏற்பட்ட யுத்தத்தின் காரணமாகவும், பாக்கிஸ்தானில் ஏற்பட்ட மிகப் பெரிய பொருளாதார நெருக்கடி காரணமாகவும் காயிதே ஆஜம் அவர்கள் மிகவும் பாதிக்கப்பட்ட நிலையில் நோய்வாய்ப் பட்டு டாக்டர்களின் ஆலோசனைப் படி மலைப் பிரதேசமான குவட்டா நகரில் தங்கி ஓய்வு பெற்று வந்தார்கள். காயிதே ஆஜம் அவர்கள் ''தன்னுடைய இறுதி காலம் நெருங்கி விட்டது என உணர்ந்தவர்களாக'' அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சிலின் கடைசிக் கூட்டத்தை 1947 டிசம்பர் மாதம் 13 மற்றும் 14ந் தேதி ஆகிய இருநாட்களில் கராச்சியில் கூடும்படி ஏற்பாடு செய்ய வேண்டுமாய் அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுச் செயலாளரும், பாகிஸ் தானின் பிரதம மந்திரியுமான நவாப் ஜாதா லியாகத் அலிகானுக்கு ஆணையிட்டார்கள். மேற் படி தேதியில் நடக்கவிருக்கும் அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டத்திற்கு கராச்சிக்கு வரும்படி இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் வாழ்ந்து வந்த அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சிலின் அங்கத்தினர்களுக்குத் தனித்தனியே அழைப்பு அனுப்ப முடியாமல் இந்தியா மற்றும் பாக்கிஸ்தானிலிருந்து வெளிவரும் நாளேடுகளில் வெளியிட்ட அறிக்கைகள் மூலம் அழைப்பு விடுத்தார்கள்.

அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் அங்கத் தினர்களின் மொத்த எண்ணிக்கை 500 ஆகும். இவர்கள் அல்லாமல் ஒவ்வொரு மாகாண முஸ்லிம் லீக் அமைப்புகளின் தலைவரும் அதன் செயலா ளரும் மற்றும் மத்திய சட்ட மன்றப் பேரவை மற்றும் மேலவை முஸ்லிம் லீக் கட்சியின் உறுப்பினர்களாக இருந்து வந்தவர்களும், அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் அங்கத்தினர்களாக இருக்கும் தகுதியைப் பெற்றிருந்தார்கள். இந்த வகையில் அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சிலில் அங்கம் வகிக்க சென்னை மாகாணத்திலிருந்து 20 பேர் மட்டுமே தகுதியுடையவர்களாக இருந்தனர்.

அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுச் செயலா ளரால் அறிவிக்கப்பட்ட தேதிக்குள் இந்தியாவி லிருந்து தரை மார்க்கமாக கராச்சிக்கு போய்ச் சேர்வது என்பது இயலாத ஒரு காரியமாக இருந்து வந்தது. நாடு சுதந்திரம் பெற்று ஐந்து மாதங்க ளாகியும் கூட இந்தியா, பாகிஸ்தான் எல்லையோ ரங்களில் இன்னும் கொலை, கொள்ளைகள் நடந்து கொண்டுதான் இருந்தன. பம்பாய்க்கும், கராச் சிக்கும் இடையே நடைபெற்று வந்த கப்பல் போக்குவரத்தும் சுதந்திரத்திற்குப் பிறகு நிறுத் தப்பட்டு விட்டது. கராச்சிக்கு ஆகாய மார்க்க மாகத்தான் போய்ச் சேர முடியும் என்ற சூழ் நிலை இருந்தது. அது சமயம் இந்தியாவில் ஏர்-இன்டியா என்ற ஒரு விமானக் கம்பெனி மட்டும் விமான போக்குவரத்தை நடத்திக் கொண்டு இருந்தது. அக் கம்பெனி வசமிருந்த விமானங்கள் மிக சிறியவை. 22 பிரயாணிகளே செல்லக்கூடிய டக்கோட்டா விமானங்கள் ஆகும். ஆகவே சென் னையிலிருந்து கராச்சிக்கு செல்ல 5 பேர்களுக்கு மட்டுமே இடம் தரமுடியும் என விமான கம்பெனி யார் சொல்லி விட்டார்கள்.

காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள், சென்னை மாகாண முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர் ஜனுப் K.T.M. அஹமது இப்ருஹீம் சாஹிப் M.L.C., அவர்கள், மலபார் முஸ்லிம்களின் தலைவரான ஜனுப் சீதி சாஹிப் M. L. A., அவர்கள், ஜனுப் N. M. அன்வர் சாஹிப் M. L. A. அவர்கள், மற்றும் நான் ஆகிய ஐவரும் 1947 டிசம்பர் மாதம் 11 தேதி காலை 7 மணிக்கு சென்னை விமான நிலையத்திலிருந்து கராச்சிக்குப் புறப்பட்டோம். எங்களின் விமானம் ஹைதராபாத், பம்பாய் வழியாக இரவு 11 மணிக்கு கராச்சி விமான நிலையம் போய்ச் சேர்ந்தது.

எங்கள் வருகையைப் பற்றி அகில இந்திய முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர் ஜனுப் லியாகத் அலிகான் அவர்களுக்கு சென்னையிலிருந்து புறப் படுவதற்கு 2 நாட்களுக்கு முன்பே தந்தி மூலம் செய்தி அனுப்பி இருந்தோம். ஆகவே எங்கள் வருகையைப் பற்றி கராச்சியிலிருந்து வெளிவரும் ஆங்கிலம் மற்றும் உர்தூ தினசரிகள் முக்கியச் செய்திகளாகத் தங்கள் பத்திரிக்கைகளில் பிரசுரித் திருந்தன.

டிசம்பர் குளிர் வட நாட்டில் மிகப் பிரசித் திப் பெற்றது - அந்தக் கடும் குளிரில், நடுநிசியில் எங்களை வரவேற்க கராச்சி விமான நிலையத்தில் 500க்கும் அதிகமான சகோதரர்கள் கூடி இருந்

தார்கள். நவாப் சித்தீக் அலிகான் அவர்கள் பாகிஸ்தான் பிரதமர் அவர்களின் சார்பாக எங்களை வரவேற்றிட விமான நிலையம் வந்திருந் தார். நவாப் சித்தீக் அலிகான் அவர்கள் பாகிஸ் தான் பிரதமரின் அரசியல் செயலாளராக இருந்து வந்தார்கள், மற்றும் ஹானரபுள் மஹ்மூது பாஷா சாஹிப் அவர்களும் விமான நிலையம் வந் திருந்தார்கள். காயிதே மில்லத் அவர்களுக்கு முன்பு, இவர் சென்னை மாகாண முஸ்லிம் லீக் தலைவராக 1941 முதல் 1945 வரை இருந்து வந்ததோடு சுதந்திரத்தின் போது இவர் மத்திய மேலவையில் ஒரு உறுப்பினராகவும், இருந்து வந்தார். மற்றும் ஹாஜி சத்தார் ஹாஜி இஸ்ஹாக் சேட் சாஹிப் அவர்களும் வந்திருந்தார் கள். இவர் மலபார் முஸ்லிம்களின் ஒப்பற்ற தலைவர். அகில இந்திய முஸ்லிம் லீக்கின் செயற் குழுவின் அங்கத்தினராக நீண்ட நாட்களாக இருந்து வந்தவர். பிற்காலத்தில் பாகிஸ்தானின் தூதராக பல நாடுகளில் இருந்து வந்தவர்.

அறிவித்தபடி கராச்சியில் அகில இந்திய முஸ் லிம் லீக் கவுன்சிலின் கடைசிக் கூட்டம் 1947 டிசம்பர் மாதம் 13, 14-ம் தேதிகளில் நடை பெற்றது. இந்தக் கூட்டம் கராச்சியில் உள்ள மிகப் பெரிய சாலையான பந்தர் ரோட்டில் அமைந்திருந்த காலிக்தினா ஹாலில் நடைபெற்றது. இந்த ஹாலில்தான் 1928ஆம் ஆண்டு மௌலானா முஹம்மதலி, மௌலானா சௌகத் அலி மற்றும் சிலர் மீது சுமத்தப்பட்ட சதி வழக்கு விசாரணை நடந்தது. ஆகவே இந்திய சுதந்திரப் போராட்ட சரித்திரத்தில் இந்த காலிக்தினா ஹால் ஒரு முக்கிய இடம் பெற்றிருந்தது. இந்த ஹாலில் சதி குற் றத்திற்காக நடந்த விசாரணையின் போது மௌ லானா முஹம்மதலி அவர்கள் அளித்த வாக்கு மூலம் மிகப் பிரசித்தமானது.

13-ஆம் தேதி காலை 10 மணிக்கு ஆரம்ப மாகிய முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டம் பிற்பகல் 2-00 மணியோடு முடிவடைந்தது. 14-ஆம் தேதி காலை 10-00 மணிக்கு ஆரம்பமா கிய கூட்டம் பிற்பகல் 3 மணியோடு முடிவ டைந்தது. இந்தக் கூட்டத்தில் காயிதே ஆஜம் அவர்கள் 13-ஆம் தேதி துவக்க உரையாக அரை மணி நேரமும் 14-ம் தேதி முடிவுரையின் போது இரண்டு மணி நேரமும் பேசினார்கள். காயிதே ஆஜம் அவர்களின் இந்த முடிவுரை இந்தியா மற்றும் பாகிஸ்தானில் உள்ள அனைவருக்கும் ஒரு தத்துவ விளக்கமாக அமைந்திருந்தது. இந்தக் கூட்டத்திற்குப்பிறகு 8 மாதங்கள் கழித்து காயிதே ஆஜம் அவர்கள் இறக்கும் வரை வேறு எந்தக் கூட்டத்திலும் பேசியதில்லை.

கவுன்சில் கூட்டத்திற்கு ஓரளவு அங்கத்தினர் கள் அதிகமான அளவில் வருகை தந்திருந்தனர் என்றே சொல்ல வேண்டும். இந்தியாவிலிருந்து வந்திருந்த அங்கத்தினர்களே அதிகமான அளவில் கவுன்சிலில் பேசினார்கள் என்று சொல்ல வேண்டும். அவர்களில் ஒருவர் ஜனாப் ஹசன் இமாம் அவர்கள். இவர் நாடு சுதந்திரம் அடையும் பொழுது இப் பொழுது நாடாளு மன்றத்தில், ராஜ்ய சபை என்று சொல்லப்படும் சபை. சுதந்திரத்திற்கு முன்பு கவுன்சில் ஆப் ஸ்டேட் (Council of State) என்று சொல்லப்பட்ட சபையின் தலைவராக இருந் தவர். இவரது பேச்சு மிகவும் உணர்ச்சி வசப் பட்டதாகவும், ஆவேசமுடையதாகவும் இருந் தது. பேச்சினிடையே பல சமயங்களில் தேம்பித் தேம்பி அழவும் செய்தார். இவர் பேசும்போது ''இந்தியாவில் தங்கிவிட்ட 4 கோடி முஸ்லிம் களை தலைமை தாங்கி நடத்திச் செல்லவும், வழி காட்டவும் ஒரு தலைவரும் இல்லை. எல்லோரும் பாக்கிஸ்தானுக்கு குடியேறி விட்டீர்கள். இந்தி யாவிலுள்ள முஸ்லிம்கள் மிகவும் ஆபத்துக்கள் சூழ்ந்த நிலையில் வாழ்ந்து வருகிறார்கள். ஆகவே காயிதே ஆஜம் அவர்களே! தாங்கள் இந்தியா விற்கே மீண்டும் வந்து அவர்களுக்குத் தலைமை தாங்கி நடத்தினால்தான் அவர்கள் மனதிலுள்ள அச்சம் நீங்கும்.'' எனச் சொன்னார். இந்தப் பேச்சைப் பின்பற்றியே இந்தியாவிலிருந்து வந்த பிரதிநிதிகள் பலர் பேசும் போது இதே கருத்தை வலியுறுத்தினார்கள்.

காயிதே ஆஜம் அவர்கள் தனது முடிவுரையில் ''டில்லியில் கூடிய கவுன்சில் என்னை கவர்னர் ஜெனரல் பதவியை ஏற்றுக் கொள்ள வேண்டும் என வலியுறுத்தியது. அதை நிறைவேற்றவே இங்கு வந்து அந்தப் பதவியை ஏற்றுக் கொண் டேன். இந்தக் கவுன்சில் மீண்டும் என்னை இந்தி யாவுக்கே வந்துவிட வேண்டுமென ஆணையிட் டால், இந்தியாவுக்கு வந்து விட மிக மகிழ்ச்சி யோடு தயாராக இருக்கிறேன்.'' என சொன்ன போது பாக்கிஸ்தானை சேர்ந்த அனைத்து அங்கத் தினர்களும் ''போகக்கூடாது. போகக் கூடாது இங்கேயேதான் இருக்க வேண்டும்'' என ஒரு மித்த குரலில் எழுந்து கூச்சலிட ஆரம்பித்து விட்டார்கள்.

முஸ்லிம் லீக் கவுன்சில் தனது இரண்டு நாள் கூட்டத்தில் மிகவும் ஆலோசனை செய்து பின்வரு மாறு முடிவுகளை எடுத்தது :—

1. 1906-ஆம் ஆண்டு ஆரம்பிக்கப் கப்பட்ட முஸ்லிம் லீக் இந்தக் கூட்டத்துடன் நிறைவு பெறுகிறது. முஸ்லிம் லீக்கை வரும் காலத்தில் வைத்துக் கொள்வதா? அல்லது வேண்டாமா? என்பதைப் பற்றி பாக்கிஸ்தான் மற்றும் இந்தியாவைச் சார்ந்த முஸ்லிம் லீக் கவுன்சில் அங்கத்தினர்கள் தனித் தனியாகக் கூடி அவர்களுக்குள் ஒரு முடிவு எடுத்துக் கொள்ள வேண்டும்.

2. பாக்கிஸ்தான் மற்றும் இந்தியாவிலுள்ள முஸ்லிம் லீக் கவுன்சிலின் அங்கத்தினர்களை ஓரிடத்தில் கூட்டி ஆலோசனை செய்ய பாக்கிஸ்தானுக்கென ஒன்றும் இந்தியாவிற்கென ஒன்றும் என இரண்டு கன்வீனர்களை இந்தக் கூட்டம் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட இரு கன்வீனர்கள் இன்று முதல் மூன்று மாதத்திற்குள் தங்கள், தங்கள் நாட்டில் உள்ள கவுன்சில் அங்கத்தினர்களைக் கொண்ட கூட்டத்தைக் கட்டாயமாகக் கூட்ட முன் வர வேண்டும்.

3. அகில இந்திய முஸ்லிம் லீக்கின் சொத்துக்கள் மற்றும் ''டான்'' தினசரி பத்திரிக்கையின் ஆஸ்திகள் மற்றும் கையிருப்புகளைத் தேர்ந்தெடுக்கப்படும் இரண்டு நாட்டுக் கன்வீனர்களும் ஒன்று கூடிப் பேசி அந்தந்த நாட்டின் முஸ்லிம் ஜனத்தொகைக் கேற்ப சுமுகமாக பேசி பிரித்துக் கொள்ள வேண்டும்.

முஸ்லிம் லீக் கவுன்சிலின் இந்த முடிவுப்படி அந்தக் கூட்டத்திலேயே பாக்கிஸ்தான் மற்றும் இந்தியாவுக்கென இரண்டு கன்வீனர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பாக்கிஸ்தான் கன்வீனராக, இதுவரை அகில இந்திய முஸ்லிம் லீக்கின் பொதுச் செயலாளராக இருந்து வருபவரும், பாக்கிஸ்தானின் பிரதம மந்திரியாக இருந்து வருபவருமான ஜனுப். லியாகத் அலிகான் அவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்தியாவுக்கென கன்வீனர் பதவிக்கு முதலில் ஜனுப் ரிஸ்வான் சாஹிப் பெயர் முன் மொழியப்பட்டு வழிமொழியப்பட்டது. இவர் உத்திர பிரதேசத்தின் சட்டப் பேரவை முஸ்லிம் லீக் கட்சியின் தலைவராக இருந்தவர். அடுத்து காயிதே மில்லத் ஜனுப் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் பெயர் முன் மொழியப்பட்டு வழிமொழியப்பட்டது. இந்திய கன்வீனர் பதவிக்கு போட்டி ஏற்பட்டுவிட்டதால் காயிதே ஆஜம் அவர்கள் ஓட்டெடுப்பின் மூலம் முடிவுகாண விரும்பி அதற்கான நடவடிக்கையை எடுத்தார்கள். காயிதே மில்லத் அவர்கள் 413 வாக்குகள் பெற்று இந்தியாவின் கன்வீனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஜனுப் ரிஜ்வான் சாஹிப் அவர்களுக்கு கிடைத்த வாக்குகள் 28 மட்டுமே.

கராச்சியில் நாங்கள் 15 நாட்கள் தங்கியிருந்தோம். கராச்சியிலிருந்து இந்தியாவிற்கு 26ம் தேதி மாலை புறப்பட்டோம். புறப்படுவதற்கு ஒருநாள் முன்பு பாக்கிஸ்தானின் பிரதமர் எங்கள் ஐவரையும் தன் வீட்டிற்கு வந்து பகலுணவு அருந்த வேண்டும் என்று அழைத்திருந்தார்கள். உணவு அருந்துவதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே வரும்படியும் எங்களை கேட்டுக் கொண்டார்கள். அதன்படி டிசம்பர் 25ஆம் தேதி பகல் 12 மணிக்கெல்லாம் பிரதமர் அவர்கள் இல்லத்திற்குச் சென்றிருந்தோம். அவரோடு பகல் 12 மணி முதல் பிற்பகல் 2 மணிவரை பேசிக்கொண்டு இருந்தோம். பிற்பகல் 2 மணிக்கு மேல் உணவு அருந்த ஆரம்பித்து 3 மணி அளவில் பிரதமர் இல்லத்தை விட்டு வந்தோம். விருந்தின்போதும், பேச்சின்போதும் பிரதமரின் அரசியல் செயலாளர் நவாப் சித்தீக் அலிகான் உடன் இருந்தார்.

பேச்சின் போது முதலில் இடம் பெற்றது முஸ்லிம் லீக்கின் சொத்து, ''டான்'' பத்திரிக்கையின் ஆஸ்திகள் மற்றும் கையிருப்புகளைப் பிரித்துக்கொள்வது பற்றிய அபிப்பிராயமாகும். காயிதேமில்லத் அவர்கள் பாக்கிஸ்தான் பிரதமர் அவர்களை நோக்கி ''முஸ்லிம் லீக்குடைய சொத்துக்களிலிருந்து அது எவ்வளவு அதிகமாயிருந்தாலும் சரியே, அதிலிருந்து ஒரு பைசாகூட எங்களுக்கு தேவையில்லை'' என மிக உறுதியாகவும் அழுத்தமாகவும் சொன்னார்கள். பேச்சின் ஊடே ஒரு கட்டத்தில் பாக்கிஸ்தான் பிரதமர் அவர்கள் ''இந்திய முஸ்லிம்களுக்கு எந்தஒரு ஆபத்து நேர்ந்தாலும் அல்லது சிரமங்கள், கஷ்ட, நஷ்டங்கள் ஏற்பட்டாலும் எனக்கு உடனடியாக தகவல் அனுப்புங்கள். அந்தத் தகவலை என் பெயருக்கு தந்தி மூலம் அனுப்புங்கள். உடனடியாக வேண்டிய நடவக்கைகளை எடுத்துக் கொள்ளுகிறோம்'' எனச் சொன்னபோது; காயிதேமில்லத் அவர்கள் பாக்கிஸ்தானின் பிரதமரை நோக்கி ''நவாப்

ஜாதா சர்ஹிப் அவர்களே! இந்திய முஸ்லிம்கள் சிரமத்திற்கோ, துன்பத்திற்கோ ஆளாக நேர்ந்தாலும் அதை இந்திய முஸ்லிம்களாகிய நாங்களே எதிர்நோக்கிக் கொள்வோம். சமாளித்துக் கொள்வோம். அந்த உதவி மிகப் பெரியதாகவோ, அல்லது மிகவும் சிறியதாகவோ இருந்தாலும் கூட அந்த உதவியை ஒரு அன்னிய நாட்டிலிருந்து பெற நாங்கள் விரும்பவில்லை. எக்காலமும் விரும்பவும் மாட்டோம். எங்களை மறந்துவிடுங்கள்; நாங்கள் வேறு, நீங்கள் வேறு. இருவருக்குமிடையில் இனி எவ்வித தொடர்பும் இருக்கப்போவதில்லை. எங்களுக்கு உதவி செய்வதைவிட உங்கள் நாட்டில் வாழ்ந்து வரக்கூடிய சிறுபான்மை மக்களுக்கு எல்லா வகையிலும் உதவி செய்யுங்கள். அவர்கள் கண் கலங்கி நிற்காமல் அவர்களுடைய சந்தோஷத்திற்கு பக்கத்துணையாக இருந்து எல்லா வகையிலும் பாதுகாவலர்களாக இருந்து வாருங்கள். அவர்களுக்கு நீங்கள் செய்யும் உதவியே இந்திய முஸ்லிம்களுக்கு நீங்கள் செய்ய விரும்பும் பேருதவியாக இருக்கும்.'' எனச்சொல்லி முடிக்கும் போது பாக்கிஸ்தான் பிரதமர் அவர்களின் கண்கள் கண்ணீரை வடித்தன. காயிதேமில்லத் அவர்களின் இருகரங்களையும் பிடித்து பாக்கிஸ்தான் பிரதமர் முத்தமிட்ட போது அங்கிருந்த நாங்கள் அனைவரும் காயிதேமில்லத் அவர்கள் உட்பட உணர்ச்சிவசப்பட்டோம்.

கராச்சியில் கூடிய முஸ்லிம் லீக் கவுன்சிலின் முடிவு இந்தியாவிலுள்ள காங்கிரஸ் தலைவர்களுக்கு குறிப்பாக ஆட்சிப் பொறுப்பிலிருக்கும் மூத்த தலைவர்களால் பண்டித ஜவஹர்லால் நேரு, சர்தார் வல்லபாய்பட்டேல் போன்றவர்களுக்கு சிறிதும் பிடித்தமுடையதாக இருக்கவில்லை. தேசத் தந்தையான காந்திஜி அவர்கள் கூட கராச்சியின் முடிவு தமக்கு ஒரு பெரிய ஏமாற்றத்தை அளித்துவிட்டதாகக் கருதினர். முஸ்லிம் லீக்கைக் கலைப்பதற்குப் பதிலாக, முஸ்லிம் லீக்கை வளர்ப்பதற்காக இரு கன்வீனர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதாகக் கூறி கராச்சி கவுன்சில் முடிவை இந்திய தேசியப் பத்திரிக்கைகள் எல்லாம் கண்டிக்க ஆரம்பித்தன.

இந்தியா முழுவதும் கராச்சி கவுன்சிலின் முடிவுகளைப்பற்றி வாதப் பிரதிவாதங்கள் நடந்து கொண்டிருந்தன. இந்துமஹா சபையின் தலைவர் வீர் சவர்க்கார்கூட ''கராச்சியிலிருந்து இந்தியாவுக்கு திரும்பி வரும் முஹம்மது இஸ்மாயில் அவர்களையும் அவரது கூட்டாளிகளையும் கைது செய்து சிறையில் அடைக்க வேண்டும் அதனால், முஸ்லிம் லீக் மீண்டும் உயிர்ப்பிக்கப்படுவது தடை பட்டுப் போகும்'' என பத்திரிக்கைகள் மூலமாக அறிக்கை வெளியிட்டிருந்தார். இதே கருத்தை காங்கிரசிலுள்ள பல மூத்த தலைவர்கள் பல மாகாண முதல்வர்கள் தெரிவித்த வண்ணம் இருந்தார்கள். மற்றும் சில பிரமுகர்களும் இதே கருத்தை அரசிடம் வலியுறுத்தி வந்தனர்.

கராச்சி கவுன்சில் கூட்டத்தில் கலந்து கொள்ளச் சென்றிருந்த நாங்கள் 1947 டிசம்பர் மாதம் 27ம் தேதி காலை சென்னை விமான நிலையத்திற்கு வந்து சேர்ந்தோம். விமான நிலையத்திலே நாங்கள் கைது செய்யப்படுவோம் என்று எதிர்பார்த்தோம். அவ்வித சம்பவம் ஒன்றும் விமான நிலையத்தில் நிகழவில்லை. அதன் பிறகும் நிகழவில்லை.

நாட்கள் கடந்து கொண்டிருந்தன, ஆனால் முஸ்லிம் லீக் பற்றிய பிரச்சினை நாட்டில் அன்றாடம் நடந்து வந்தது. தேசியப் பத்திரிக்கைகளெல்லாம் ''முஸ்லிம் லீக் இந்த நாட்டை இரண்டாகப் பிளக்க காரணமாய் இருந்த கட்சி. ஆகவே அந்தக் கட்சி இந்த நாட்டில் இருக்கக்கூடாது, இருப்பதற்கு அரசு தடைவிதிக்க வேண்டும்'' என ஓலமிட்டுக் கொண்டிருந்தன. மேலும் இந்திய வானொலியும் இடைவிடாது முஸ்லிம் லீக்கைப் பற்றிய நச்சுப் பிரச்சாரம் செய்து நாட்டில் மக்களிடையே மனக்கசப்பையும், மனமாச்சரியத்தையும் விளைவித்துக் கொண்டிருந்தது.

சமுதாயத்தைச் சார்ந்த சில சுயநலமிகள், சில பதவி மோகிகள் முஸ்லிம் லீக்கை கண்டபடி ஏசியும், பேசியும் பத்திரிக்கைகளிலே அறிக்கைகள் விட்டும் கொண்டிருந்தார்கள். இப்படிப் பட்டவர்களின் அறிக்கைகளை இந்திய தேசியப் பத்திரிக்கைகள் மிக முக்கியத்துவம் அளித்து இடைவிடாது பிரசுரித்துக் கொண்டிருந்தன. என்றாலும் சமுதாயம் இந்த நடவடிக்கைகளை எல்லாம் மிக உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டு எந்தவித பதட்டத்துக்கும் ஆளாகாமல் மிக அமைதியாக இருந்தது.

கராச்சி கவுன்சிலில் அளிக்கப்பட்ட அவகாச நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. நாட்டிலுள்ள பத்திரிகைகளும் மற்றுமுள்ள தலைவர்களும்,

இந்த அவகாச நாளை ஞாபகப்படுத்தி ''சீக்கிரமே முஸ்லிம் லீக் கவுன்சிலைக் கூட்டி கலைத்துவிட்ட தாக அறிவியுங்கள்'' என இந்தியாவின் கன்வீனருக்கு வேண்டுகோள் விடுத்துக் கொண் டிருந்தார்கள்.

இந்தியாவில் வாழக்கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக்கின் கவுன்சில் அங்கத்தினர்களைக் கொண்ட கூட்டம், சென்னையில் 1948ம் ஆண்டு மார்ச் 10ஆம் தேதி கூடுமென அறிவிக்கப்பட்டு அதற்கான அழைப்பிதழ்கள் அங்கத்தினர்களுக்கு அனுப்பப்பட்டு வந்தன. சென்னையில் மேற்படி கவுன்சிலைக் கூட்டுவதற்கான ஒரு ஹால் கூடக் கிடைக்கவில்லை. ஹாலை உடையவர்கள் எல்லாம் முஸ்லிம் லீக் கவுன்சிலை நடத்த, ஹாலைக்கொடுக்க மறுத்துவிட்டார்கள். முஸ்லிம் லீக் கூட்டத் திற்கு ஹாலைக்கொடுத்தால் அரசு ஏதாவது நட வடிக்கை எடுக்குமோ? என அஞ்சியே கொடுக்க மறுத்து விட்டார்கள். ஒரு ஹாலும் கிடைக்காத காரணத்தினல் அரசுக்குச் சொந்தமான ராஜாஜி ஹாலையே அரசிடம் கேட்டுப் பெறுவது என முடிவு செய்து கேட்கப்பட்ட போது, அரசு கொடுத்து உதவியது. அதுசமயம் சென்னை உள்துறை அமைச்சராக இருந்த டாக்டர் P. சுப்பாராயன் அவர்கள் ''முஸ்லிம் லீக் கூட்டத்தை நடத்த அரசு ராஜாஜி ஹாலைக் கொடுத்து உதவி இருக்கிறது. மேற்படிக் கூட்டத்தில் முஸ்லிம் லீக்கை கலைத்துவிட்டோம் என்கிற ஒரு நல்ல முடிவை முஸ்லிம் லீக்கினர் எடுப்பார்கள் என்ற நம்பிக்கையின் பேரில் ஹாலைக் கொடுத்திருக்கிறோம்'' எனச் சொன்னர்.

எல்லோரும் எதிர்பார்த்தபடி இந்தியாவி லுள்ள முஸ்லிம் லீக் கவுன்சிலர்களைக் கொண்ட கூட்டம் 1948ம் ஆண்டு மார்ச் 10ம் தேதி காலை 10-00 மணிக்கு சென்னை ராஜாஜி ஹாலில் என்னுடைய 'கிராஅத்'-துடன் ஆரம்பமாகியது.

இந்தக் கூட்டத்தில் சென்னை, பம்பாய், உத்திர பிரதேசம், மத்திய பிரதேசம், கூர்க் முதலிய மாநிலத்தைச் சார்ந்த அங்கத்தினர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தின் நடவடிக்கை கள் ரகசியமாக பாதுகாக்கப்பட ராஜாஜி ஹாலின் எல்லா கதவுகளும் மூடப்பட்ட நிலையில் கூட்டம் நடத்தப்பட்டது. அங்கத்தினர் அல்லாத எவரும் கூட்டத்தில் அனுமதிக்கப்படவில்லை, கூட்டத்தின் கன்வீனரான காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் கூட்டத் திற்கு தலைமை வகித்தார்கள்.

கூட்டத்தின் தலைவர் தமது தலைமை உரை யில் கராச்சிக் கூட்டத்தில் நடந்த நடவடிக்கை களையும், முடிவுகளையும் பற்றிய விளக்கம் அளித்த பின் தம்முடைய உரையை முடித்துக் கொண்டு மற்றவர்களைப் பேச அழைத்தார்கள். முதலில் பேசியவர் மௌலான ஹஸ்ரத் மோஹானி அவர்கள். இவர் உத்திரப்பிரதேசத்தைச் சேர்ந் தவர். சுதந்திரப் போராட்டத்தில் தம் வாழ் நாட்களை எல்லாம் சிறையில் கழித்தவர். மிகவும் தீவிரமான எண்ணங்களைக் கொண்டவர். 1945க் குப் பிறகு முஸ்லிம் லீகில் சேர்ந்தவர். 1946 ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் உத்திர பிரதேச சட்டமன்றப் பேரவைக்கு முஸ்லிம் லீக் வேட்பாள ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் கராச்சி கூட் டத்திற்கு இவர் வரவில்லை. மௌலான அவர்கள் ''பிரிவினைக்கு பின்பு நாட்டில் நடந்த வன்முறைகளை மிக உணர்ச்சி வசப்பட்டு எடுத்துச் சொன்ன போது அந்த வன்முறையின் காரண மாக முஸ்லிம்கள் பாதிக்கப்பட்டதை எடுத்துச் சொன்னதோடு, முஸ்லிம் லீக் இனி இந்த நாட்டிற்குத் தேவையில்லை, கலைத்துவிடுங்கள். முஸ்லிம்கள் அவரவர் விருப்பப்படி எந்தக் கட்சியி லாவது சேர்ந்து கொள்ள வழிவகை செய்யுங் கள்'' என திருப்பித் திருப்பி இதே கருத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். மௌலான அவர்களுக்குப் பிறகு மற்றும் சில பிரபல தலைவர்கள் பேசிய பிறகு கூட்டத்தின் தலைவர் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரின் அபிப்பிராயத் தையும் கேட்டுப் பதிவு செய்து கொண்டார்கள். அந்த வகையில் என்னுடைய அபிப்பிராயத்தை யும் சொல்லும் சந்தர்ப்பம் கிடைத்தது.

சற்றேறக் குறைய 10 மணி நேர ஆலோசனைக்கும் விவாதத்திற்கும் பிறகு இந்தியா வில் முஸ்லிம் லீக்கை நிலைக்கச் செய்வது என்ற முடிவுக்கு பெரும்பான்மையான அங்கத்தினர்கள் ஆதரவு தெரிவித்ததன் காரணமாக இந்தியாவில் முஸ்லிம் லீக்கை நிலைநிறுத்தி வைப்பது என முடிவு செய்யப்பட்டது. முடிவுக்கு ஆதரவாக 21 அங்கத் தினர்களும் முடிவுக்கு எதிராக அதாவது முஸ்லிம் லீக்கை கலைத்துவிட வேண்டும் என்கிற கருத்துடைய மௌலான ஹஸ்ரத் மோஹானி உட்பட 8 அங்கத்தினர்கள் எதிர்ப்பும் தெரிவித் தனர்.

இந்த முடிவுக்குப் பிறகு அகில இந்திய முஸ்லிம் லீக் என்ற பெயரை மாற்றி ''இந்திய யூனியன் முஸ்லிம் லீக்'' என புதிய பெயர்

சூட்டப்பட்டது. காயிதேமில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் தலைவராகவும், ஜனப். மஹபூப் அலிபேக் சாஹிப் M.A., B.L. M.L.A. அவர்கள் பொதுச்செயலாளராகவும், பம்பாயைச் சார்ந்த ஜனப் ஹாஜி ஹசன் அலி ஹாஜி P. இப்ருஹீம் சேட் சாஹிப் அவர்கள் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்த மூவரைத்தவிர அங்கத்தினர்களாக 22 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.



## மனதைத் தொட்ட மனிதாபிமான மிக்க சம்பவம்

1947-ம் ஆண்டிற்கு முன்னர் நடைபெற்ற நிகழ்ச்சி இது. ராமநாதபுரம் மாவட்டத்தில் காயிதே மில்லத் அவர்கள் சுற்றுப் பயணம் செய்தார்கள். நானும் அவர்களுடன் கலந்து கொண்டேன். அப்போது எனக்கு வயது பத்தொன்பது; தினசரி இரண்டு மூன்று கூட்டங்களில் தலைவரவர்கள் பேசினார்கள்.

ஒவ்வொரு கூட்டத்திலும் நானும் இரண்டு மூன்று பாட்டுக்களைப் பாடிவந்தேன். ஒரு வாரமாக கடுமையான அலைச்சல். ஒய்வு ஒழிவே இல்லை. சுற்றுப்பயணத்திற்கு முத்தாய்ப்பு வைத்தது மாதிரி கடைசிக் கூட்டம் ராமநாதபுரம் நகரில் வைக்கப்பட்டிருந்தது.

அந்நிகழ்ச்சியையும் முடித்துக் கொண்டு முகவை முஸாபரி பங்களாவுக்கு நடுநிசி ஒன்றரை மணிக்கு நாங்கள் அழைத்து வரப்பட்டோம். எங்களுக்காக இயக்கத் தோழர்கள் பிரமாதமான விருந்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். சுமார் 150 பேர்களுக்கு சாப்பாடு தயாராக இருந்தது. உள்ளான், குயில் போன்ற பல பறவைகளின் இறைச்சியும் ருசிகரமாகத் தயாரிக்கப்பட்டிருந்தது.

எல்லோரும் உணவருந்தத் தயாரானோம். கை கழுவுவதில் அனைவரும் ஈடுபட்டிருந்தார்கள். நான் கைகழுவிக் கொண்டிருந்த போது எனக்கு வயிற்றில் ஒரு குமட்டல் ஏற்பட்டது. வாந்தி எடுத்து விட்டேன். ரத்தமாக வாந்தி இருந்தது. எனக்கு அருகில் காயிதே மில்லத் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் மிகவும் பயந்துவிட்டார்கள். நானும் மயக்கமுற்று விழுந்துவிட்டேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். அடிவயிற்றிலிருந்து சப்தத்தை வரவழைத்துக கொண்டு உரத்த குரலில் ஒருவார காலமாகப் பாடிவந்ததினால் ஏற்பட்ட அசதிதான் இதற்குக் காரணம்.

உடனேயே டாக்டருக்கு ஆள் அனுப்பப் பட்டது. அவர் வந்து என்னை சோதித்துப் பார்த்துவிட்டு ஊசி போட்டிருக்கிறார். மற்றும் சிகிச்சைகளும் நடைபெற்றிருக்கின்றன. கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் கழித்து நான் கண்விழித்துப் பார்த்தேன். என் அருகில் காயிதே மில்லத் அவர்கள் சோகமாக அமர்ந்திருப்பதைக் கண்டேன். நான் கண்விழித்ததும் "என்ன ஹனீபா சாப்! எப்படி இருக்கிறது?' என்று அவர்கள் அன்பொழுகக் கேட்டார்கள். நன்றாக இருக்கிறேன் ஒன்றுமில்லை" என்று நான் பதில் கூறினேன். "அல்ஹம்துலில்லாஹ்" என்ற வார்த்தை அவர்களது வாயிலிருந்து வெளிவந்தது.

சுற்றிலும் எல்லோரும் நின்று கொண்டிருந்தார்கள். நான் சிறிது தெளிவு பெற்றவுடன் எழுந்து உட்கார்ந்து கொண்டு சுற்றும்முற்றும் பார்த்தேன். அப்போது உள்ளூர்பிரமுகர் ஒருவர் "ஹனீபா அண்ணே நீங்கள் ரத்த வாந்தி எடுத்ததிலிருந்து உங்கள் பக்கத்திலேயே தலைவர் அவர்கள் உட்கார்ந்தபடியிருக்கிறார்கள். எவ்வளவோ வற்புறுத்திக் கூப்பிட்டும் சாப்பிடவில்லை "ஹனீபா சாகிப் சாப்பிடாமல் நான் சாப்பிடுவதற்கில்லை" என்று சொல்லிவிட்டார்கள். அவர்கள் சாப்பிடாததால் எல்லோரும் உணவருந்தாமல் இருக்கிறோம்" என்று கூறினார். எனக்கு மனதிற்கு மிகவும் சங்கடமாகப் போய் விட்டது. எனக்காக காயிதேமில்லத் அவர்களும் உணவருந்தாமல் இருக்கிறார்களே என்று எண்ணியதுதான் தாமதம்; ஒருவாறு சமாளித்துக் கொண்டு நான் எழுந்து தயாரானேன். அப்போது மணி இரவு இரண்டரை.

ஊரெல்லாம் சுற்றி அலைந்து நன்கு களைத்துப் போய் இரவு ஒரு மணிக்கு மேல் சாப்பிட உட்காரப் போகும் நேரத்தில் எனக்காக மேலும் ஒரு மணி நேரம் தலைவரவர்கள் தங்களது உடல் நலனையும் பாராமல் கட்சித் தொண்டனின் நலனில் அக்கறை காட்டியதை நினைத்து நான் பூரிப்படைந்து போனேன். இப்பொழுது கூட அந்நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்தால் எனது உடல் சிலிர்த்துவிடும். என்னால் அந்த காட்சியை மறக்கவே முடியவில்லையே!

**இசைமுரசு நாகூர் E. M. ஹனீபா Ex. MLC**

# ஒரு கடிதம் செய்த சாதனை!

''மதத் தலைவர்கள்'' என்ற பெயரில், அமெரிக்க நாட்டில் 1940ம் ஆண்டு வாக்கில், ஹென்றி தாமஸ், லீ தாமஸ் என்ற இருவர், ஒரு நூலை வெளியிட்டிருந்தனர். அந் நூலில் இஸ்லாத்தின் இறுதி நபியான முஹம்மது (ஸல்) அவர்கள் குறித்து ஆட்சேபகரமான வாசகங்கள் இடம் பெற்றிருந்தன. தரக் குறைவாகவும் துவேஷத்தைக் கக்கும் முறையிலும் அந் நூல் எழுதப்பட்டிருந்தது என்பதில் கொஞ்சமும் சந்தேகமேயில்லை. அரை குறையான தகவல்களும் ஆதாரமில்லாத செய்திகளும், திரித்தும் இட்டுக்கட்டியும் கூறப்பட்ட சந்தேகத்திற்கிடமான சம்பவங்களும் அந்நூலில் அதிகமதிகம் இடம் பெற்றிருந்தன. சுருக்கமாகச் சொல்வதானால், இஸ்லாத்தையும் அதனுடைய இறுதி நபியையும் வேண்டுமென்றே குறை சொல்லும் வகையில் அதன் ஆசிரியர்கள் ''மதத் தலைவர்கள்'' என்ற நூலைத் தயாரித்திருந்தார்கள்.

''பாரதீய வித்தியா பவன்'' என்ற அமைப்பு, பம்பாயைத் தலைநகராகக் கொண்டு, மிகப் பெரிய அளவில் நூல் வெளியீட்டுத் துறையில் செயலாற்றி வருகிறது. ஹிந்து மதத்தைப் பற்றியும் அந்நிய கலாச்சாரங்களைப் பற்றியும் இந்த பவனம் ஏராளமான நூல்களை வெளியிட்டு பெரும்பான்மை சமுதாயத்தைச் சேர்ந்த இளம் தலைமுறையினரின் சிந்தனையோட்டத்தை செப்பனிட்டுக் கொண்டிருக்கிறது. இப் பவனத்தின் பிரதான குறிக்கோள் இதுவேயாகும். அதனுடைய ஸ்தாபகர் திரு. கே. எம். முன்ஷி என்பவராவார். இந்திய அரசாங்கத்தில் அமைச்சராகப் பணியாற்றிய இவர், அச் சமயம் (1956 ஆண்டில்) உத்திரப் பிரதேச கவர்னராக செயலாற்றிக் கொண்டிருந்தார்.

திரு. கே. எம். முன்ஷியை பிரதான நிர்வாக ஆசிரியராகக் கொண்டு இயங்கி வந்த பாரதீய வித்தியா பவன், எப்பொழுதோ அமெரிக்காவில் பிரசுரிக்கப்பட்ட ''மதத் தலைவர்கள்'' என்ற நூலை, இந்தியாவில் வெளியிடும் உரிமையைப் பெற்று 1956ம் ஆண்டுவாக்கில் அந்நூலை இந் நாட்டில் அச்சிட்டு விற்பனைக்கு விட்டது.

உலகங்களுக்கெல்லாம் அருட்கொடையாக அனுப்பப்பட்ட இஸ்லாத்தின் இறுதி நபி குறித்து இழித்தும் பழித்தும் எழுதப்பட்ட அந் நூல் இந் நாட்டில் பிரசுரமான தகவல் தெரிய வந்ததும், காயிதேமில்லத் அவர்கள் இது குறித்துபாரதப் பிரதமர் பண்டித நெஹ்ருவுக்கு ஒரு கடிதம் எழுதினர்கள். 1956ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ம் தேதியன்று தலைவரவர்கள் எழுதிய கடிதத்தில், ''மதத் தலைவர்கள்'' என்ற அமெரிக்க நூலில், நாயகத்திருமேனியைக் குறித்து ஆபாசமான வார்த்தைகளில் விமரிசனம்செய்யப்பட்டிருப்பதை சுட்டிக் காட்டியதுமல்லாமல், திரு. கே. எம். முன்ஷி போன்ற தேசீயத் தலைவர்கள் பெயரும் அந்நூலுடன் சம்பந்தப் படுத்தப் பட்டிருப்பது தமக்குப் பெருத்த ஆச்சரியத்தையும் அதிர்ச்சியையும் அளித்துள்ளதாக குறிப்பிட்டிருந்தார்கள். பாரதீய வித்யா பவன் வெளியிட்ட அந்நூலுக்கு கே. எம். முன்ஷி மதிப்புரை வழங்கி இருந்தார் என்பது நினைவு கூரத் தக்கது.

இந்த இருபதாம் நூற்றுண்டிலுமா, நாயகத் திருமேனியின் வாழ்க்கை வரலாற்றை சரிவரப் புரிந்து கொள்ளாத பெருந் தலைவர்கள் இந் நாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறுர்கள் என்ற வினவையும் காயிதேமில்லத் அவர்கள் தங்களது கடிதத்தில் எழுதி இருந்தார்கள். அதே சமயம் பண்டித நெஹ்ரு போன்றவர்கள், அம் மாதிரியான அக்கிரமங்களையும் கீழ்த்தரமான நடவடிக்கைகளையும் அனுமதிக்க மாட்டார்கள் என்றும் அங்கீகரிக்க மாட்டார்கள் என்றும் தலைவரவர்கள்

நம்பிக்கை தெரிவித்திருந்தார்கள். இந்திய அரசு இது குறித்து உடனடியாக நடவடிக்கை எடுத்து அந்நூலின் விற்பனையைத் தடை செய்ய வேண்டும் என்றும் அவர்கள் கோரியிருந்தார்கள். முஸ்லிம்களின் மனதைப் புண்படுத்திவிட்ட இந்நூலை தடை செய்வதில் தயக்கமோ அல்லது காலதாமதமோ காட்டக் கூடாது எனவும் அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

The Hon'ble Prima Minister of India,
New Delhi.

Dear Sir,

Subject: A book entitled "Religious Leaders" written by Henry Thomas and Lee Thomas and published by Bharatiya Vidya Bhavan, Chowpathy, Bombay - Preface written by Shri K.M. Munshi, Governor, U.P.

Please allow me to bring to your kind notice and attention that the above publication containing certain historical untruths, most scurrilous, obscene and offensive passages about the Holy Prophet of Islam, his followers and the religion of Islam has naturally and rightly roused the resentment and anger of the Muslims throughout the country. Now in the twentieth century when atleast the knowing people in the world are conversant with the historical facts and truths of Islam and its Holy Prophet, it is amazing, to say the least, that even such a responsible and eminent person as Shri K.M.Munshi who is a pillar of the state in the country should have written an approving preface to the publication and should thus have deliberately associated himself with such wanton perversion of facts and truths and with base scurrility and aided in cruelly wounding the most deep-seated feelings of a whole community.

In the face of this outrage on decency and on things held most sacred by the followers of a big religion, the Muslims wonder why, and are deeply pained to see that, the Government are still keeping silent over the matter and have not even made known that they are considering what action to take.

..../Page 2.

(2)

I know and am sure that you, the Prime Minister and leader of the Country, would not tolerate such happenings and I implore you to be pleased to take steps to have the publication immediately withdrawn from circulation in our country and to take necessary action against the parties concerned and thereby bring about some assuage of the outraged feelings of the Muslim Community.

Thanking you,

Yours Sincerely,

(M.Muhammad Ismail).,
M.P.

செப்டம்பர் மாதம் 4-ம் தேதியன்று புது டில்லியிலிருந்து காயிதே மில்லத் அவர்கள் பாரதப் பிரதமருக்குக் கடிதம் எழுதினர்கள். அன்றைய தினமே—அதாவது நான்காம் தேதியன்றே - பண்டித நெஹ்ரு தமது பதிலை காயிதே மில்லத்திற்கு அனுப்பி வைத்தார். இடைப்பட்ட சில மணி நேரங்களுக்குள்ளாகவே, உ. பி. கவர்னராக இருந்த கே. எம். முன்ஷியுடன் தொடர்பு கொண்டு அவரது வாக்கு மூலத்தையும் கேட்டுத் தெரிந்த பின்னர், பாரதப் பிரதமர் தமது பதிலை எழுதியிருந்தார்.

''மதத் தலைவர்கள்'' என்ற நூலை திரு. முன்ஷி பார்க்கவோ அல்லது படிக்கவோ இல்லையாம்! அந் நூலில் நாயகத் திருமேனி குறித்து அவதூருக எழுதப்பட்டிருக்கும் விஷயமும் அவருக்குத் தெரியாதாம்! பாரதீய வித்தியா பவன் பிரதம ஆசிரியர் என்ற ஹோதாவில் அவரது பெயரில் அந்நூலுக்கு மதிப்புரை எழுதப்பட்டு விட்டதாம்! பண்டித நெஹ்ரு விடமிருந்து தகவல் வந்த பிறகுதான். உ. பி. கவர்னருக்கு விஷயம் தெரிய வந்ததாம்! அந்நூலின் விற்பனையை உடனடியாக நிறுத்திவிடும்படி அந்த ஸ்தாபனத்திற்கு அவர் உத்தரவு பிறப்பித்துவிட்டதாவும், போதிய திருத்தங்கள் செய்யப்பட்ட பிறகே இனி அந்த நூல் அந்த ஸ்தாபனத்திலை வெளியிடப்படும் என்றும் திரு. முன்ஷி பாரதப் பிரதமருக்கு உறுதிமொழி அளித்துமிருந்தார். மேற் கூறிய தகவல்கள் அனைத்தும் பண்டித நெஹ்ருவின் பதில் கடிதத்தில் இருந்து நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

சில மணி நேரங்களுக்குள்ளாகவே துரித நடவடிக்கைகளை மேற்கொண்டதுடன், அன்றையத் தினமே காயிதே மில்லத்திற்கும் பண்டித நெஹ்ரு பதில் எழுதி விட்டதும், அவரது பரந்த மனப் பான்மையைக் காட்டுகிறது; பெரிய மனிதத் தன்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகவும் விளங்குகிறது.

1989-ம் ஆண்டிலும், பண்டித நெஹ்ருவின் பேரன் திரு. ராஜீவ் காந்தியும் அதே பாணியில் செயல் பட்டிருப்பது இங்கு நினைவு கூரத் தக்கது. கிறுக்கன் சல்மான் ருஷ்தி எழுதிய நூலுக்கு இந் நாட்டில் தாதமதமில்லாமல் தடை விதித்தது ஞாபகமிருக்கலாம். ''ஷைத்தானிய வசனங்கள்'' என்ற நூலுக்கு முதன் முதலாகத் தடைவிதித்தது இந்தியா என்ற பெருமையையும் சிறப்பையும் உலகநாடுகளுக்கு பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தி தட்டிக் கொண்டு சென்று விட்டார் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லைதான்!



No. 171-1110/56

New Delhi,
September 4, 1956.

Dear Mr Muhammad Ismail,

Your letter of the 4th September.

My attention has been drawn to the book you mention and I entirely agree with you that some passages in this book are very objectionable. I enquired from Shri K.M. Munshi, Governor of the UP. He told me that he had not himself seen the book. This book was published in America about fifteen years ago and some kind of an arrangement was made with the publishers of this series of books - they are several books on topical subjects etc - for their republication in India. Shri Munshi is only a General Editor of the series and he is not responsible for each book that is published nor does he see it. When he saw this particular book and more particularly the passages to which objection has been taken, he was greatly distressed. He issued orders immediately to stop the sale of this book and to have the necessary corrections made.

Yours sincerely,

Jawaharlal Nehru

Shri M. Muhammad Ismail, MP,
57, We.tern Court,
New Delhi.

---

## தேவர் அய்யாவே சொன்னது!

''காலம் சென்ற பத்தரைமாற்றுத் தங்கம் பசும்பொன் தேவர் அய்யா அவர்கள் முஸ்லிம்களுடன் ரத்த பாசத்துடன் பழகி வாழ்ந்தார்கள். இன்று அப்பெருந்தகையாளர் நம்முடன் இல்லாதது பெருங்குறை!

தமக்கும் முஸ்லிம் சமுதாயத்திற்கும் ரத்தத் தொடர்பு உள்ளதை அவர்களே ஒருநாள் கமுதியில் பெருமிதத்துடன் எடுத்துக் கூறினார்கள்.

நானும் அந்தக் கூட்டத்தில் கலந்துக் கொண்டேன். தேவர் அய்யா சொன்னார்கள்:

''நான் பிறந்தவுடன் தாயை இழந்தேன். எனக்குப் பாலூட்ட பல தாய்மார்கள் ஏந்தினார்கள்! அதில் ஆயிஷா பீவி என்ற தாயும் ஒருவர். இறந்து போன எனது தாயின் சாயல் ஆயிஷா பீவி அவர்களிடம் நான் கண்டதால், அன்று முதல் ஒரு முஸ்லிம் தாயிடம் நான் பாலுண்டு வளர்ந்தவன்'' என்று கூறினார்கள்.

[மதுரை மாவட்ட முஸ்லிம் லீக் மாநாடு கம்பம் நகரில் 1982 ஜுலை 28ம் தேதி நடைபெற்ற பொழுது சிராஜுல் மில்லத் கூறியது,]

நன்றி : **ஜனாப் P. H. M. அப்துல்காதர்**

வெளியிட்ட ''முஸ்லிம் லீக் மலர்'' 1982 டிசம்பர்

# இளமையிலேயே ஊற்றெடுத்துவிட்ட நாட்டுப்பற்று!

(பேராசிரியர் K. பீர்முஹம்மது M.A.,M. Phil. அவர்கள், அரசு ஆவணங்களில் இருந்து சேகரித்த தகவல்கள் அடிப்படையில் தயாரிக்கப்பட்ட கட்டுரை.)

1920-ம் ஆண்டு ஜுலை மாதம் 21, 22 ஆகிய தேதிகளில் திருநெல்வேலி நகரில், தமிழ் நாடு காங்கிரஸ் கட்சியினுல் நடத்தப்பட்ட மாநில அரசியல் மாநாடு நடைபெற்றது. முன்னுள் அட்வகேட் ஜெனரலான திரு. எஸ். சீனிவாச அய்யங்கர் அம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினுர். ஒத்துழையாமை இயக்கமும் கிலாபத் போராட்டமும் உச்ச கட்டத்தில் இருந்த நேரம் அது.

திருநெல்வேலியில் நடைபெற்ற மாநில அரசியல் மாநாட்டிலும், காந்திஜியினுல் ஆரம்பிக்கப்பட்ட ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்ற வேண்டுமென தேசீயப் போராட்டத்தில் தீவிரப் பற்றுக் கொண்டவர்களும் இளைஞர்களும் விரும்பினுர்கள். ஆனுல் அக் கால கட்டத்தில் மிதவாதிகள் எனக் கருதப்பட்டவர்கள், பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஒரேயடியாகப் பகைத்துக் கொள்ள வேண்டியதில்லை என்றும் அரசியல் சீர்திருத்தங்கள் தேவை என்ற அம்சத்தை வலியுறுத்தி தீர்மானம் நிறைவேற்றினுல் போதும் என்றும் நினைக்கலானுர்கள்.

அம்மாநாட்டிற்குத் தலைமை வகித்த சீனிவாச அய்யங்கார் ஒரு மிதவாதியே. இதே கருத்தைத் தான் அன்னி பெஸண்ட் அம்மையாரும் சர். சி.பி. ராமசாமி அய்யரும் கொண்டிருந்தனர். மிதவாதப் போக்கை ஆதரித்த எஸ். கஸ்தூரிரங்க அய்யங்கார், சேலம் சி. விஜயராகவாச்சாரியார், எம். கே. ஆச்சாரியா, எஸ். சத்தியமூர்த்தி, வி.கே. ராமானுஜாச்சாரி போன்றவர்கள் திருநெல்வேலி அரசியல் மாநாட்டில் கலந்து கொண்டார்கள். ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரிக்கும் தீர்மானத்தை இம்மாநாட்டில் நிறைவேற்றுவதை இவர்களும் எதிர்த்தார்கள்.

ஆனுல் அம் மாநாட்டில் கலந்து கொண்ட சி. ராஜகோபாலாச்சாரியார், டி. ஆதிநாராயண செட்டியார், எஸ். கிருஷ்ணசாமி சர்மா போன்றவர்கள் காந்திஜியால் நடத்தப்பட்ட ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரித்து இம் மாநாட்டில் கண்டிப்பாக தீர்மானம் நிறைவேற்ற வேண்டுமென வலியுறுத்தினுர்கள்; வாதாடினுர்கள்.

கிலாபத் போராட்டம் முஸ்லிம்கள் சம்பந்தப்பட்டதென்றும் அதையும் ஒத்துழையாமை இயக்கத்துடன் சேர்த்து இந் நாட்டின் அரசியல் பிரச்சினையாக்கி விட வேண்டாம் என்றும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஹிந்துத் தலைவர்கள் பலரும் கருதினுர்கள். எனவேதான் காந்திஜீயின் ஒத்துழையாமை இயக்கம் குறித்து திருநெல்வேலி மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்ற வேண்டியதில்லை என்பது அத்தகையோர் வாதமாகும். இக் கருத்தை ராஜாஜியும் மற்றவர்களும் ஏற்றுக்கொள்ளவில்லை. நெல்லை மாநில மாநாட்டில் ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்ற வேண்டுமென்பதில் முழு மூச்சுடன் அவர்கள் வேலை செய்யலானுர்கள்.

மாநாட்டிற்கு வருகை தந்தவர்களில் பெரும்பான்மையினரின் ஆதரவு தங்களுக்கு இருக்குமாறு பார்த்துக் கொள்வதென்றும் இதன் மூலமாகத் தங்களது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதென்றும் ராஜாஜியும் அவரைச் சார்ந்தவர்களும் முடிவு செய்து அதற்காக செயல் திட்டத்தில் இறங்கினுர்கள். திருநெல்வேலி நகரை ஒட்டியுள்ள பேட்டை, மேலப்பாளையம் போன்ற இடங்களுக்கு காங்கிரஸ் தீவிரவாதிகள் விஜயம் செய்து மறுநாள் நெல்லையில் நடக்கவிருக்கும் அரசியல் மாநாட்டில் பெரும் அளவில் பொது மக்கள் கலந்து கொள்ள வேண்டும் எனக் கேட்டுக்கொண்

டார்கள். அப்பொழுது பள்ளிக்கூட மாணவர்களாக இருந்த காயிதேமில்லத் அவர்களும் அவர்களது சகோதரர் **K. T. M.** அஹமது இப்ராஹீம் அவர்கள் மற்றும் பல இளைஞர்களும் ராஜாஜியின் இம் முயற்சிக்கு ஆதரவாக இருந்தார்கள். காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்திற்கு முழு ஆதரவு நல்க முன் வந்தார்கள்.

சீனிவாச அய்யங்கார் தலைமையில் நடைபெற்ற மாகாண அரசியல் மாநாட்டின் இறுதி நாள் கூட்டத்தில், யாகூப் ஹஸன் சேட் அரசியல் தீர்மானம் ஒன்றை வழிமொழிந்தார். காந்திஜி அவர்களாலும் மௌலானா ஷவுக்கத்தலி அவர்களாலும் நடத்தப்படும் கிலாபத் போராட்டத்தையும் ஒத்துழையாமை இயக்கத்தையும் இம் மாநாடு முழு மனதுடன் ஆதரிப்பதாகவும் அது வகைக்கு சகல விதமான ஒத்துழைப்புக்களையும் நல்கத் தயாராக இருப்பதாகவும் கூறும் தீர்மானம் வாக்கெடுப்பிற்கு விடப்பட்டதும், அம் மாநாட்டில் கலந்து கொண்டவர்களில் மிகப் பெரும்பான்மையினர் அதற்கு ஆதரவு நல்கி கைகளை உயர்த்தினர். எனவே அத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்க வேண்டிய கட்டாயம் மாநாட்டுத் தலைவருக்கு ஏற்பட்டு விட்டது! ராஜாஜியும் அவரது நண்பர்களும் எடுத்துக்கொண்ட முயற்சி நெல்லை மாநாட்டில் வெற்றி பெற்றது. இந்த அரசியல் நடவடிக்கைக்கு காயிதே மில்லத்தைப் போன்ற இளைஞர்கள் அச்சமயம் பக்கபலமாக இருந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

நெல்லைமாநாடு தங்களுக்கு திருப்தி அளிக்கவில்லை என்றதும் மிதவாதிகள், அடுத்த சில தினங்களில், கல்லிடை குறிச்சியில் மற்றொரு அரசியல் மாநாட்டைக் கூட்டினார்கள். அக்கூட்டத்தில் சீனிவாச அய்யங்கார், கஸ்தூரிரங்க அய்யங்கார். சத்தியமூர்த்தி போன்றவர்கள் கலந்து கொண்டனர். ஒத்துழையாமை இயக்கம் குறித்து அம் மாநாடு தீவிரம் காட்டவில்லை. ஏனோ தானோ என ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியதுடன், சட்டசபைகளுக்குள் நுழைவதா அல்லது வேண்டாமா என வாதிடும் அனைவரும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களே என்று கூறும் தீர்மானத்தை அமர்க்களமாக நிறைவேற்றிக் கொண்டது.

[மேற்கூறிய நிகழ்ச்சிகளை காயிதேமில்லத் அவர்கள் வாயிலாகவும் K. T. M. அவர்கள் வாயிலாகவும் கேட்டறிந்திருப்பதுடன், தமிழ்நாடு அரசு ஆவணக்காப்பகத்தில் பத்திரப்படுத்தப் பட்டுள்ள போலீஸ் அறிக்கைகளிலிருந்தும் மேற்கூறிய நிகழ்ச்சிகள் உறுதிப்படுத்தப் பட்டுள்ளன.

*(1) 21-6-1920 அன்று சமர்ப்பிக்கப் பட்ட போலீஸ் அறிக்கை (713 C. S. A. 235/4* Special Branch C. I. D.)

*(2) 1920ம் ஆண்டு ஜூலை மாதம் சமர்ப் பிக்கப்பட்ட* Ist Fortnightly Reports

"Mr. Rajagopalachari is busily engaged for the last 3 or 4 days in visiting Muhamadans and inducing them to attend the Provincial Conference in large body.

x x x

"The President refused to commit himself to Non-Co-operation and most of the Hindu leaders are understood to be against it, favour of the logical results with regard to themselves and though a resolution in favour of the policy of Gandhi and Shaukat Ali, proposed by Mr. Yakoob Hasan was carried, this result is regarded as due to the exertions of C. Rajagopalachariar in bringing in a lot of Muhamadans to vote....)

## காயிதே மில்லத் பெயரில் கல்லூரிகள்

சென்னை மவுண்ட் ரோட்டில் (இன்றைய அண்ணாசாலை) ஆங்கில ஆட்சியினரால் ஆரம்பித்து நடத்தப்பட்ட "சர்க்கார் முஹம்மடன் காலேஜ்" என்பது 1950-ம் ஆண்டு வாக்கில் "அரசு கலைக் கல்லூரி" எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. ஆண்கள் மட்டுமே கல்விபயின்று வந்த அக் கல்லூரி, ஒரு சில ஆண்டுகளிலேயே பெண்கள் கல்லூரியாக மாற்றப்பட்டு "அரசு மகளிர் கல்லூரி" என பெயர் வழங்கலாயிற்று.

காயிதேமில்லத் அவர்களது மறைவுக்குப் பின்னர், அன்றையத் தினம் ஆட்சியிலிருந்த திராவிட முன்னேற்றக் கழக அரசு 1974-ம் ஆண்டு, ஜூன் மாதம் அக்கல்லூரிக்கு "காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி" எனப் பெயர் சூட்டியது. இன்றளவும் அப்பெயர் இருந்து வருகிறது.

சென்னையில் 1974-ம் ஆண்டில் அமைக்கப்பட்ட "முஸ்லிம் கல்வி கலாச்சார டிரஸ்ட்" என்ற அமைப்பு, "காயிதேமில்லத் (ஆண்கள்) கல்லூரி" என்ற பெயரில் சென்னை புறநகர் மேடவாக்கத்தில் ஒரு கல்விக் கூடத்தை ஆரம்பித்து நடத்தி வருகிறது,

தமிழ் நாட்டில் பெண்கள் கல்லூரி ஒன்றும் ஆண்கள் கல்லூரி ஒன்றும் கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் பெயரிலேயே இயங்கி வருவது குறிப்பிடத் தக்கதாகும். ஒன்று அரசினரால் நடத்தப்படுகிறது; மற்றையது தனியார் ஸ்தாபனத்தால் நடத்தப்படுகிறது.

# கப்பலை கரை சேர்த்த காவலர்

**மு. ந அப்துர்ரகுமான் சாகிப் Ex. M.L.A.**

நெல்லை மாவட்ட முஸ்லிம் லீக் முன்னாள் தலைவர்

[காயிதேமில்லத்தின் 70-வது பிறந்த தின விழா 26-6-65 அன்று சென்னை S. I. A. A. மைதானத்தில் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் சார்பாக நடத்தப்பட்டது. அக்கூட்டத்தில் அறிஞர் அண்ணா, ம. பொ. சி, திரு. S. S. மாரிசாமி, N. V. நடராஜன் ஆகியோரும் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார்கள். அக்கூட்டத்திற்கு நெல்லை மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் மு. ந. அப்துர்ரகுமான் சாகிபு தலைமை வகித்தார்கள். தங்களது தலைமையுரையில் அவர்கள் கூறியதாவது: ]

''காயிதேமில்லத் அவர்களுடைய முன்னேற்றத்திற்கு முக்கிய காரணம், அவர்களது அசையாத இறை நம்பிக்கையாகும். இந்த உண்மையை பண்டித நெஹ்ரு அவர்கள் கூட தெரிந்து வைத்திருந்தார்கள். இது சம்பந்தமாக டெல்லியில் நடந்த ஒரு சம்பவத்தினை உங்கள் அனைவருக்கும் தெரிவிக்கின்றேன். ஒரு சந்தர்ப்பத்தில், நோன்புக் காலத்தில், மாலை நேரத்தில், பண்டித நெஹ்ருஜி அவர்கள் பார்லிமெண்ட் மெம்பர்களைத் தேனீர் விருந்துக்கு அழைத்திருந்தார்கள். அந்நேரமானது நோன்பு திறப்பதற்கு சற்று முன்னதாக இருந்தது. நம் தலைவரவர்களும், அவர்களுடன் சென்றிருந்த ஜனாப் போக்கர் சாஹிப் அவர்களும் அந்த விருந்துக்குப் போக வேண்டும் என்பதற்காக சற்று கால தாமதமாக அந்தக் கட்டிடத்திற்குள் நுழைந்தார்கள். அவ்விதம் நுழையவே நெஹ்ருஜி அவர்கள் தன்னுடைய ஆசனத்திலிருந்து எழுந்து வந்து நம் தலைவரவர்களைக் கூட்டிக் கொண்டு ஓர் அறைக்கு அழைத்துச் சென்றார்கள். அந்த அறையில் தொழுவதற்கான விரிப்பு விரிக்கப் பட்டிருந்தது. கை, கால், முகம் இவைகளைச் சுத்தம் செய்வதற்காக தண்ணீரும் வைக்கப் பட்டிருந்தது. நெஹ்ருஜி அவர்கள் தலைவர் அவர்களைப் பார்த்து ''தொழுகைக்காக இந்த இடத்தைத் தங்களுக்கு ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன் இது போதுமா? வேறு ஏதாவது செய்யவேண்டுமா?'' என்று கேட்டார்கள்.

''நெஹ்ருஜி அவர்களே, தாங்கள் செய்திருக்கும் ஏற்பாடு மிகவும் திருப்திகரமாகவே இருக்கிறது. தங்களுக்கு மிகவும் நன்றி செலுத்துகிறேன்'' என நம் தலைவரவர்கள் கூறி, நோன்பு திறக்கும் சமயம் விருந்தில் கலந்துகொண்டு தொழுகையையும் நிறைவேற்றினார்கள்.

மற்றும் அந்த விருந்துக்கு முன்னதாகவே வந்திருந்த காங்கிரஸ் முஸ்லிம் எம். பி. களுக்கு நெஹ்ருஜி அவர்கள் எந்தவிதமான ஏற்பாடுகளும் செய்யவுமில்லை; அவர்களை அழைத்துச் செல்லவுமில்லை.

இதிலிருந்து என்ன உண்மை தெரிகிறது என்றால் காயிதேமில்லத் அவர்கள் தனது மதக் கடமைகளை நிறைவேற்றுவதில் மிக உறுதியானவர் என்பதை பண்டித நெஹ்ரு அவர்களே தெரிந்து வைத்திருக்கும்போது, வேறு சான்று தேவையில்லை. காயிதேமில்லத் அவர்களை ஒரு வகுப்புவாதி என்பதாகக் காங்கிரஸ்காரர்கள் குற்றம் சாட்டுகிறார்கள். ஆனால் அவர்களே உண்மையான தேசீயவாதி.

மௌலானா ஹாலி அவர்கள் உருது மொழியில், ஒரு கவிதையில் எழுதியிருப்பதாவது :

''முஸ்லிம்கள் ஏறிச்செல்லும் கப்பலானது கடலில், சுழலில் அகப்பட்டுக் கொண்டது. அந்தச்

சமயத்தில் பலமான புயல் வீச ஆரம்பித்து விட்டது. கடலில் மூழ்கும் நிலையில் கப்பல் இருந்தது. ஆனால் கப்பல் செல்ல வேண்டிய இடமோ வெகு தூரத்தில் இருக்கிறது'' என்று கூறியிருக்கிறார்கள்.

நமது காயிதேமில்லத் அவர்கள் முஸ்லீம் லீக் பதவியை ஏற்ற சமயம் முஸ்லிம்கள் ஏறிச் சென்ற கப்பல் இதே நிலையில்தான் இருந்துவந்தது.

ஆனால் காயிதேமில்லத் அவர்கள் தன்னுடைய அசையாத நம்பிக்கையினாலும், தளராத மன உறுதியினாலும், பூரணமான, உண்மையான, தியாகத்தினாலும், அயராத உழைப்பினாலும் மேற்படி கப்பலை சகல ஆபத்துகளிலிருந்தும் விடுவித்து இன்று கரை சேர்த்து விட்டார்கள் கப்பல் கரை சேர்ந்துவிட்டது.

**(உரிமைக்குரல் 28-6-65)**

## ''பொடி' விஷயம் !

காயிதே மில்லத் அவர்கள் 1962 முதல் 67 வரை டில்லி லோக்சபை உறுப்பினராகப் பணியாற்றினார்கள். அறிஞர் அண்ணா அவர்கள் 1962 முதல் 67 வரை டில்லி ராஜ்ய சபை உறுப்பினராகப் பணியாற்றினார்கள். 1964ம் ஆண்டில் A.K.A. அப்துஸ்ஸமது சாகிப் டில்லி ராஜ்ஜிய சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டு ஆறு ஆண்டுகள் அங்கு உறுப்பினராக இருந்தார்.

ஒரு சமயம் காயிதேமில்லத் அவர்களும் சமத் சாகிபும் டில்லிக்கு ரயிலில் புறப்பட்டுச் சென்றனர். அதே ரயிலில் மற்றொரு பெட்டியில் அறிஞர் அண்ணா டில்லிக்கு பயணம் செய்து கொண்டிருந்தார். மதராஸ் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் அண்ணாவை வழியனுப்ப வந்த இரா. செழியன் சமத் சாகிபிடம் ''அண்ணாவை அடிக்கடிப் போய் கவனித்துக் கொள்ளுங்கள்'' என ஞாபகப்படுத்தி வைத்தார்.

அக்காலகட்டத்தில், டில்லிக்குச் செல்வதற்கு 40 முதல் 45 மணி நேரம் பயணம் செய்தாக வேண்டும். காயிதேமில்லத் அவர்களது பெட்டியில் பயணம் செய்த சமத் சாகிப் அடிக்கடி அண்ணா பயணம் செய்த பெட்டிக்கும் போய் குசலம் விசாரித்துக் கொண்டார்.

வார்தா ரயில் நிலையத்தில் நிலக்கடலை விற்பனை பிரபலமானது. வேர்க்கடலை வாங்கிவரும்படி அண்ணா சொன்னதும், சமத் சாகிப் அதை வாங்கிக் கொண்டுவந்து கொடுத்தார். அடுத்து தமது பொடி டப்பியை அண்ணா தடவி எடுத்தார். என்ன ஆச்சரியம்! பொடி டப்பா காலியாக இருந்தது, டில்லி போய்ச் சேரும் வரை பொடி வேண்டுமே!

காயிதேமில்லத் அவர்களுக்கும் பொடிப் போடும் பழக்கம் உண்டு என்பதை அறிந்திருந்த அண்ணா அவர்கள், சமத் சாகிபிடம் ''காயிதேமில்லத்திற்கு இடையூறு இல்லாதவகையிலும் அவருக்குத் தெரியாமலும் கொஞ்சம் பொடி எடுத்துவரும்படிச்'' சொன்னார். சமத் சாகிப் தமது பெட்டிக்குத் திரும்பி காயிதேமில்லத்தின் சாமான்களைத் தடம் பிடித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் தலைவரவர்கள் படுத்திருந்தார்கள். அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள் என சமத் சாகிப் நினைத்துக் கொண்டு, பொடி டப்பாவை துழாவிக் கொண்டிருந்தார்.

திடீரென கண் விழித்துக் கொண்ட காயிதேமில்லத் அவர்கள் சமது சாகிபைப் பார்த்து ''எதைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள், அதற்கு சமத் சாகிப் ''பொடி டப்பாவைத் தேடுகிறேன்'' என்று பதிலளித்தார்.

''உங்களுக்கு எதற்கு பொடி டப்பா? நீங்கள் தான் பொடிப் போடுவதில்லையே!'' என்று காயிதேமில்லத் கேட்டார்கள்.

''அண்ணாவுக்கு பொடி வேண்டுமாம்'' என்றார் சமத் சாகிப்.

அவ்வளவுதான்! காயிதேமில்லத் அவர்கள் படுக்கையை விட்டு எழுந்து சட்டையை மாட்டிக் கொண்டு பொடி டப்பாவுடன் அண்ணா இருந்த பெட்டிக்கு விரைந்து சென்றார்கள். ''இந்த டப்பாவை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். என்னிடம் வேறு டின் இருக்கிறது'' என்று அன்புடன் சொல்லிவிட்டுத் தமது இருக்கைக்குத் திரும்பினார்கள்.

காயிதேமில்லத் அவர்கள் தம்மை நாடி வந்ததைக் கண்டு அண்ணா துடித்துப் போய் விட்டார். நேரிலேயே வந்து பொடியைக் கொடுத்துவிட்டுப் போவார்கள் என அண்ணா எதிர்பார்க்கவேயில்லை!

தகவல் : **ஜனாப் அப்துஸ்ஸமது சாகிப்**

ஆதாரம் : (1)முத்தாரம் (2) குங்குமம் 7—7—82

# சமத்துவத்தை செயலில் காட்டிய தலைவர்

கட்சி ஊழியர்களை நல்ல விதமாக நடத்துவதிலும் சமமாக நடத்துவதிலும் காயிதே மில்லத்திற்கு நிகரே கிடையாது. இதர அரசியல் கட்சித் தலைவர்கள் வெளிப்படையாகப் பேசும் பொழுது தொண்டர்களை அணைத்து அழைத்துக் கொண்டு போவது போல் தோன்றும். ஆனால் அவர்களது அந்தரங்க வாழ்க்கையைப் பார்த்தால் வேறு விதமாக இருக்கும். இதற்கு ஒரே விதிவிலக்கு முஸ்லிம் லீக் தலைவர்தான்.

சில சமயங்களில் ஊழியர்கள் தவறு செய்வதுண்டு, காயிதே மில்லத்திற்கு இவ்விபரம் தெரிய வந்தாலும் காட்டிக் கொள்ள மாட்டார்கள். மற்றவர் அவர்களிடம் போய் ஊழியர்கள் பற்றி கோள் சொன்னாலும் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஏதாவது வேளைகளில் ஊழியர்களைக் கண்டிக்க வேண்டுமானால் அவர்களைத் தனியாக அழைத்து புத்திமதி கூறுவது போலச் சொல்வார்களே தவிர கோபப்பட மாட்டார்கள். பிறர் முன்னிலையில் எந்த ஒரு ஊழியனையும் கண்டிக்க மாட்டார்கள்.

கட்சி ஊழியர்களிடமும், பிரமுகர்களிடமும் தமாஷ் பேசுவார்கள். நகைச் சுவையாக இருக்கச் சொல்வார்கள், குட்டிக் கதைகள் சொல்வார்கள்.

ஒரு சமயம் வாணியம்பாடிக்கு தலைவர் அவர்களுடன் ஒரு மாநாட்டிற்குச் சென்றிருந்தோம். ஆ. பா. அப்துல் மஜீத் வீட்டில் தங்கல், சாப்பாடு. திருப்பூர் மைதீன் அண்ணன், நான் மற்றும் பல பேச்சாளர்களும் போயிருந்தோம். மதியம் பிரியாணி விருந்து; நன்றாக இருந்ததால் எல்லோரும் ஒரு பிடி பிடித்து விட்டோம்.

காயிதேமில்லத் அவர்கள் ஆப்பா. மஜீதை அழைத்து ''மதிய சாப்பாடு கூடுதலாகி விட்டது. இரவு இலேசாக ஏதாவது சமைத்து விடவும்; ரசமும் சோறும் போதும். கனமாகச் சாப்பிட்டால் வயிறு கெட்டுவிடும்'' எனக் கூறி விட்டார்கள். அதன் பிரகாரம் வீட்டுக்காரரும் நடந்து கொண்டார். இரவு சாப்பிட உட்கார்ந்தோம். ரசமும், சோறும் மட்டும் எங்கள் முன்பு வைக்கப் பட்டதை பார்த்து தளபதி மைதீன் அண்ணனுக்கு கோபம் வந்து விட்டது. கறி மற்றும் விசேஷ அயிட்டங்கள் வரும் என தளபதியும் மற்றும் சிலரும் எதிர்பார்த்து சில நிமிடங்கள் இருந்தனர். ஒன்றையும் காணவில்லை. தளபதிக்கு கோபம் வந்து விட்டது. ஆப்பா மஜீதைக் கூப்பிட்டு, ''என்ன, இதுதான் சாப்பாடா?'' என்று கடிந்து கொண்டார். உடனே காயிதேமில்லத் தலையிட்டு நான்தான் ''இரவுக்கு இது மட்டும் போதும் என்றேன். மற்றவர்கள் உடம்பையும் கவனிக்க வேண்டாமா? எல்லோரும் மைதீன் அண்ணன் மாதிரி இருக்க முடியுமா?'' என்று சொன்ன பிறகுதான் தளபதியின் முணுமுணுப்பு சற்று அடங்கியது.

தஞ்சை வடகரையில் ஒரு நிகழ்ச்சி. காயிதே மில்லத்துடன் பல பேச்சாளர்களும் சென்றிருந்தோம். பகலில் தரங்கம்பாடி கோட்டையைச் சுற்றிப் பார்க்கச் சென்றிருந்தோம். தஞ்சை மாவட்டத்துக் காரர்களுடையவும், நெல்லை மாவட்டத்துக் காரர்களுடையவும் நகைச் சுவை ரசனை பற்றிய பேச்சு வந்து விட்டது. எங்கள் காரிலேயே ரஜாக் ஷா காதிரியும் இருந்தார். எம். எம். பீர் முஹம்மதுவும் இருந்தார். இவ்விருவர்களையும் காயிதேமில்லத் சுட்டிக் காட்டி ''ரஜாக் ஷா காதிரி சிரித்து யாராவது பார்த்ததுண்டா? நம்ம எம். எம். பி. நகைச்சுவை பேசியதுண்டா?'' என்றார்கள். தலைவர் அவர்களுடன் சென்ற அனைவரும் சிரித்து விட்டோம்.

ஒரு சமயம் மல்லிப் பட்டணத்திற்கு ஒரு கூட்டத்திற்கு காயிதேமில்லத்துடன் சென்றிருந்தேன். ரோடு மிகவும் மோசம். மழை வேறு. சகதியில் சிக்கிக் கொண்டு கார் மக்கர் செய்தது, நாங்களெல்லாம் கீழே இறங்கி, காரைத் தள்ள வேண்டி வந்தது. தலைவர் அவர்கள் மட்டும் காரில் இருக்கட்டும் மற்றவர்கள் எல்லாம் கீழே இறங்கி காரைத் தள்ளுவோம் என்று நாங்கள் புறப் பட்டோம். இதற்கு காயிதேமில்லத் சம்மதிக்கவில்லை, அவர்களும் இறங்கி காரைத் தள்ள முற்பட்டனர்.

இதற்குள்ளாக ஊர்க்காரர்கள் பலர் வந்து விட்டார்கள். காரை அவர்கள் பார்த்துக் கொண்டார்கள். நாங்கள் ஒரு மைல் தூரம் நடந்தோம். காயிதேமில்லத் தான் எங்கள் நடைப் பயணத்தை முன் நின்று நடத்திச் சென்றார்கள்.

**ஹாஜி A. M. யூசுப் சாகிப்**

ஆசிரியர், மறுமலர்ச்சி

# நடமாடும் கலைக் களஞ்சியம்

[கேரள பொது தேர்வாணைக் குழுவின் தலைவராகப் பணிபுரிந்த

**T. M. சாவன் குட்டி** B.A., B.L., அவர்கள்

நமது நிருபருக்களித்த பேட்டியின் சுருக்கம் கட்டுரையாகத் தரப்பட்டுள்ளது.]

காயிதேமில்லத் அவர்களை நான் முதன் முதலாக 1959ம் ஆண்டில்தான் சந்தித்தேன். என்னை சீதிசாகிப் அறிமுகப் படுத்தி வைத்தார். அன்று தலைச்சேரியில் மிகப் பெரிய ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது. கம்யூனிஸ்டுகளை எதிர்த்து காங்கிரசும் முஸ்லிம் லீகும் கூட்டாக இதற்கு ஏற்பாடு செய்திருந்தன. மன்னத் பத்மநாப பிள்ளையும் காயிதேமில்லத்தும் அக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள்; நானும் போயிருந்தேன். அன்றுதான் அவர்களது அறிமுகம் எனக்கு நேரடியாக ஏற்பட்டது.

அவர்களின் எளிமையும் தாராளமாகப் பழகும் சுபாவமும் என்னை வெகுவாகக் கவர்ந்து விட்டன, மிகவும் சாதாரணமாகப் பழகினுர்கள். உணவு, உடை விஷயங்களில் அவர்களது எளிமையைக் கண்டு என்னுல் வியக்காமல் இருக்க முடியவில்லை. ஒரு பெரிய தலைவரிடம் இவ்வளவு தூரம் எளிய பழக்க வழக்கங்களைக் காண்பது அபூர்வம். நானும் எத்தனையோ பெரிய தலைவர்களிடம் மிகவும் நெருக்கமாக இருந்து பார்த்திருக்கிறேன். காயிதேமில்லத்தைப் போன்று உள்ளத்தைத் தொடும் இனிமையாளரைக் காண்பது மிகவும் அபூர்வம்.

காயிதேமில்லத் ஒரு பெரிய சோஷலிஸ்ட் என்பதை அவர்களிடம் நெருங்கிப் பழகிய பிறகே என்னுல் தெரிந்து கொள்ள முடிந்தது. பாங்கு தேசியமயமாக்குதல், மன்னர் மானிய ஒழிப்பு ஆகிய பிரச்சினைகள் முஸ்லிம் லீக் பொதுக் குழுவில் விவாதிக்கப் பட்ட சமயம், கம்யூனிஸம் என்றுல் என்ன என்பதைஅனைவரும்விளங்கும்படியாகஅபூர்வமானதொருஉரையை நிகழ்த்தினுர்கள். இஸ்லாமிய சட்ட திட்டங்களை மேற்கோள் காட்டினுர்கள். கலீபாக்களை உதாரணம் காட்டினுர்கள், முன்மாதிரியாக பல நிகழ்ச்சிகளை வரலாற்றிலிருந்து அடுக்கிக்கொண்டே போனுர்கள். எல்லோருமே அசந்து விட்டோம்.

தலைச்சேரியில் தலைமை நீதிபதியாக கே. கோபால் என்பவர் இருந்தார். கேரளா தேர்வாணைக் குழுவில் எம். கே. குமரன் என்பவர் இருந்தார். சில சந்தர்ப்பங்களில் காயிதேமில்லத்தைக்காணும் சந்தர்ப்பங்கள் இவர்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன. தலைவரவர்களை சந்தித்த பின்னர், சில நாட்கழித்து, நான் அவ்விருவரையும் பார்க்க நேரிட்ட பொழுது காயிதேமில்லத் குறித்து இவர்கள் சொன்னது இன்றும் என் மனதில் நிழலாடிக் கொண்டிருக்கிறது. ''நடமாடும் கலைக் களஞ்சியம்'' (Walking Encyclopaedia) என்று காயிதேமில்லத்தை அவ்விருவரும் பாராட்டினுர்கள்.

சென்னை செல்லும் பொழுதெல்லாம் காயிதேமில்லத்தை அவர்களது இல்லத்திற்குச் சென்று பார்த்து உரையாடிக் கொண்டிருப்பேன். ஒரு பொழுதும் அவர்கள் உணர்ச்சிவசப் படுவதில்லை. அறிவு பூர்வமாக சிந்தித்து ஆர அமர முடிவுகள் எடுப்பார்கள். (Never guided by emotion, only by reason).

நிறைய புத்தகங்களை படித்திருப்பார்கள் போலிருக்கிறது. அவர்கள் மேற்கோள் காட்டுவதிலிருந்து இதனைப் புரிந்து கொள்ளலாம். நகைச்சுவையாகவும் பேசுவார்கள். சிரித்துச் சிரித்து வயிறெல்லாம் புண்ணுகிவிடும். குட்டிக் கதைகளையும் சொல்லுவார்கள். குழந்தைகளுக்கு விளக்கிச் சொல்வது போல, நமக்கும் நமது மனதில் தைக்கும்படியாக விஷயத்தை விளக்க வேண்டும் என்பதில் அவர்கள் சளைப்பதேயில்லை.

மத்திய உள்துறை அமைச்சராக திரு. குல்ஜாரிலால் நந்தா இருந்த போது அவரை நேரில் சந்தித்து கேரள உயர்நீதிமன்றத்திற்கு முஸ்லிம் நீதிபதி ஒருவரை நியமிக்க வேண்டிய அவசியத்தை காயிதே மில்லத் வலியுறுத்தினுர்கள். அப்பொழுது அவர் ''எல்லா நீதிபதிகளும் நீதியைத் தானே வழங்குகிறுர்கள். முஸ்லிம் நீதிபதியை நியமிக்கும்படி விசேஷமாக நீங்கள் ஏன் வற்புறுத்துகிறீர்கள்'' எனக் கேட்டாராம். அதற்கு காயிதேமில்லத் ''நீதி வழங்குவதற்கு முஸ்லிம்களுக்கும் ஏன் நீங்கள் வாய்ப்பளிக்கக்

கூடாது'' என்று திருப்பிக் கேட்டார்களாம். சமுதாயத்திற்காக வாதாடுவதில் கொஞ்சமும் பின்வாங்க மாட்டார்கள்; சளைக்கமாட்டார்கள்.

காயிதேமில்லத் ஒரு சிறந்த மனிதர்; மனிதாபிமானம் மிக்கவர்; அவர் ஒரு நல்ல முஸ்லிம்; முஸ்லிம்களுக்கு முன்மாதிரியாக இருக்கக் கூடியவர். தைரியமாக அவரைப் பின் பற்றலாம். அவர் ஒரு அரசியல்வாதி, அப்பழுக் கற்ற அரசியல்வாதி. எதிரிகளால் கூட குறை காண முடியாத அரசியல்வாதி, எல்லாவற் றிற்கும் மேலாக அவர் ஒரு பெருந்தலைவர். இந்தச் சமுதாயத்தை வழி நடத்திச் செல்லக் கூடிய சகல ஆற்றலையும் அவர் பெற்றிருந்தார். இதில் கொஞ்சங்கூட சந்தேகமில்லை. அப்படிப் பட்ட தன்னேரில்லாத தலைவரின் நினைவாக வெளி வரும் மலருக்கு எனது வாழ்த்துக்கள்!

## கோவைநகர் கீரைக்கார வீதியில் பள்ளிவாசல் உருவான கதை

நாட்டு விடுதலைக்கு முன்பிருந்தே காயிதேமில்லத்திடம் எனக்கு பழக்கம் உண்டு. அப் பொழுது நான் பள்ளி மாணவன் காயிதேமில்லத்திற்கு பணிவிடை செய்யும் நபர்களில் ஒருவ னாக நான் அந்த வயதில் இருந்திருக்கிறேன்.

1948 ஜனவரியில் பாலக்காடு மாவட்டத்தில் உள்ள புதுநகரம் என்ற ஊரில் நடை பெற்ற முஸ்லிம் லீக் மாநாட்டிற்கு காயிதேமில்லத் அவர்கள் கோவை வழியாக ரயிலில் சென்ற பொழுது கோவை ரயில் நிலையத்தில் நாங்கள் பெரியதொரு வரவேற்புக் கொடுத்ததுடன், அம் மாநாட்டிலும் கலந்து கொண்டோம்.

தளபதி மைதீன் அண்ணன் இம் மாவட்டத் தலைவராக இருந்த சமயம் காயிதேமில்லத் அவர்கள் எங்கள் மாவட்டத்தில் 7 நாட்கள் சுற்றுப்பயணம் செய்தார்கள். அந்த நாட்களில் நானும் தலைவரைவிட்டும் பிரியாமல் கூடவே இருந்தேன். தலைவரவர்கள் முன்பு உட்காராமல் மரியாதைக்காக நான் நின்று கொண்டேயிருப்பேன். என்னை பார்த்து உட்காரும்படி கூறுவார்கள். ஆனால் நான் உட்காராது நின்று கொண்டே இருப்பேன். மேலும் ஒரு தடவை என்னை அமரும்படி சொல்லுவார்கள். அப்பொழுதும் நான் நின்று கொண்டுதான் இருப்பேன், அவர்களுக்குக் கோபம் வந்து இப்பொழுது உட்காரப் போகிறாயா இல்லையா என்று சற்று மிரட்டியபடிச் சொல் வார்கள். உடனே உட்கார்ந்து விடுவேன்.

ஒரு சமயம் நான் சற்று ஒதுங்கி நின்றேன். அதாவது காயிதேமில்லத் அருகில் நெருங்கி யடித்துக் கொண்டிராது மரியாதைக்காக சற்று விலகி நின்றேன், ''இது என்ன ஹரிஜன் காலனியா? ஒதுக்குப்புறமாக நிற்கிறீர்களே'' என்று என்னைப் பார்த்து காயிதேமில்லத் தமாஷ் பண்ணினார்கள்.

மற்றுமொரு தடவை பொதுக்கூட்ட மேடையில் தலைவரவர்கள் அமர்ந்திருந்த நாற்காலிக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தேன். வேறு சில நாற்காலிகள் காலியாக இருந்த பொழுதும் அதை விரும்பாமல் தலைவர் பின்னாலேயே நின்றேன். இதை பார்த்து காயிதேமில்லத் தமது அருகில் இருந்த தளபதி மைதீன் அண்ணனிடம் ''என்ன உங்கள் பிள்ளையாண்டான் மேடை யில் நிற்கிறாரா ? அல்லது கோர்ட்டில் நிற்கிறதாக நினைப்பா?'' என்று சொன்னார்கள். அதற்குப் பிறகுதான் நான் ஒரு நாற்காலியில் போய் உட்கார்ந்தேன்.

கோவை நகரில் கீரைக்கார வீதியில் லிங்க கவுண்டர் தோட்டத்தில் நூருல் இஸ்லாம் மதரஸா ஒன்று இயங்கிக் கொண்டிருந்தது. அந்த இடத்தை தொழுகை பள்ளியாகவும் உபயோகப்படுத்தப்பட்டு வந்தது, ஆனால் அந்த கூரை அமைப்பை ''என்குரோச்மெண்ட்'' என்று கூறி வீட்டு வசதி வாரிய ஊழியர்கள் அப்புறப்படுத்திவிட்டனர். அப்பகுதி மக்கள் தொழுவதற்கு இடமில்லாது தவியாகத் தவித்தனர். அச்சமயம் கோவை வந்த காயிதேமில்லத் சம்பந்தப்பட்ட இடத்தை நேரில் பார்க்க வேண்டுமென விரும்பினார்கள். நானும் மற்றும் சில லீக் ஊழியர்களும் தலைவரவர்களை அழைத்து கொண்டு போய் அந்த இடத்தைக் காட்டினோம். எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்த காயிதேமில்லத் ஓரிடத்திற்குப் போனதும் நின்றார்கள். அந்த இடத்தை சுட்டிக் காட்டி இந்த இடத்தில் பள்ளி அமைந்தால் நன்றாக இருக்குமல்லவா என்று வினவினார்கள். போக்குவரத்திற்கு இதுவே நல்லது என்று சொன்னார்கள்.

காயிதேமில்லத் சுட்டிக் காட்டிய இடம் மிகவும் பொருத்தமானதாக இருந்தது. அப்பொழுது தான் எங்களுக்கு அந்த இடம் பளிச்செனப்பட்டது.

சரி! இந்த இடத்தில் பள்ளிவாசல் கட்ட அரசுக்கு மனுச் செய்யச் சொல்லுங்கள் மற்றவைகளுக்கு அல்லாஹ் இருக்கிறான் என்று கூறிச் சென்றார்கள். அதன்படி ஜமாஅத்தார் களும் மனுச் செய்தார்கள். இன்று அந்த இடத்தில்தான் மதரஸாவும் இருக்கிறது. பள்ளி வாசலும் இருக்கிறது. மேல் மட்டத்தில் அந்த இடத்தை எங்களுக்கு வாங்கி கொடுப்பதற்காக தலைவரவர்கள் பாடுபட்டு இருக்கிறார்கள் என்பது பின்னர்தான் எங்களுக்கு தெரியவந்தது.

கோவை C. I. அலலாப்பிச்சை

## இப்படி ஒரு தலைவரை இனிப் பார்கக முடியுமா?

1960ம் ஆண்டில் சென்னை நகரில் மாநில முஸ்லிம் லீக் மாநாடு நடைபெற்றது. அதன் கணக்குகளை நான்தான் நிர்வகித்து வந்தேன். நானும் இரவணசமுத்திரம் குலாம் மைதீனும், அம் மாநாடு கணக்குகளை ஆடிட் செய்து கொடுத்தோம். எங்களைப் பற்றி காயிதே மில்லத்திற்கு ரொம்ப திருப்தி.

1961ம் ஆண்டில் சென்னை மாவட்ட முஸ்லிம் லீக் அமைப்பு உருவாக்கப்பட்டது. சென்னை மாவட்ட துணைச் செயலாளராக நான் தேர்ந்து எடுக்கப்பட்டேன். மரைக்காயர் லெப்பை தெரு வில் 8ம் எண் கட்டிடம் 1964ம் ஆண்டு முதல் மாநில முஸ்லிம் லீக் அலுவலகமாகச் செயல்பட ஆரம்பித்தது, அன்று முதல் 1974ம் ஆண்டு வரை மாநில அலுவலகத்தின் நிர்வாகப் பொறுப்பை காயிதேமில்லத் என்னிடம் தான் தந்திருந்தார்கள். எல்லாக் கடிதங்களையும் நான் தான் படித்துப்பார்த்து பதில்களை தயாரித்துவைப் பேன். பொதுச் செயலாளர் K.T.M.அஹ்மது இப் ராகீம் சாகிபு அவர்கள் கையெழுத்துப் போட வேண்டிய கடிதங்கள் அவர்கள் பார்வையில் வைக் கப்படும். காயிதேமில்லத் படித்துப் பார்க்க வேண் டிய கடிதங்கள் அவர்களுக்கு அனுப்பி வைக்கப் படும். நான் தயாரித்த பதில்களும் அவர்கள் பார்வைக்குச் செல்லும்.

சில சமயங்களில் அவர்கள் பாராளுமன்றக் கூட்டத்திற்குச் சென்றிருந்தால் அவர்கள் சார் பாக பதில் எழுதி போடும் பொறுப்பையும் காயிதேமில்லத் என்னிடம் ஒப்புவித்திருந்தார் கள். அவர்களது சொந்த லெட்டர் பேடின் அடியில் கையெழுத்திட்டு என்னிடம் கொடுத் திருந்தார்கள். அவர்கள் சார்பாக யாருக்கும் அவசரமாகப் பதில் போட வேண்டியிருந்தால் அதை நானே பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற அதிகாரத்தையும் எனக்கு அளித்திருந்தார்கள். அந்த லெட்டர் தாளை உபயோகப்படுத்தும் சந்தர்ப்பம் எழவேயில்லை. அவ்வளவு தூரம் காயிதேமில்லத் என் மீது நம்பிக்கை வைத்திருந் தார்கள். இது கூட பெரிதல்ல. அவர்களது சகோதரர் K. T .M. A. அவர்களும் கூட தங்களது லெட்டர் பேடில் கையெழுத்திட்டு என்னிடம் கொடுத்து வைத்திருந்தார்கள். சாதாரணமாக K. T. M. A. யாரையும் நம்பி வெறும் தாளில் கையெழுத்திட்டு யாரிடமும் கொடுத்ததில்லை. என்னிடமுள்ள இந்த கையெழுத்தைப் பார்த்த முஸ்லிம் லீக் நண்பர்களே பெரிதும் ஆச்சரியப் பட்டுப் போனார்கள். காயிதேமில்லத் அவர்களும் K. T. M. A. அவர்களும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்த அவர்களது வெற்று லெட்டர் பேடு தாள் என் வீட்டில் இன்றும் பத்திரமாக உள்ளது. பிரேம் போட்டு அவற்றை மாட்டி வைத்திருக்கிறேன். கிடைத்தற்கரிய பொக்கிஷங் களாகும் அவை.

காயிதேமில்லத் அவர்களின் நாணயத்தைப் பற்றிச் சொல்வதானால் பலநூறு சம்பவங்களை என்னால் சுட்டிக்காட்டமுடியும். அவை அனைத் தும் என் கண் முன் நடந்தவை. ஒரேயொரு சம்பவத்தை மட்டும் இங்கு நான் கோடிட்டுக் காட்டுகிறேன்.

ஒருநாள் நான் முஸ்லிம் லீக் அலுவலகத்தில் இருந்து கொண்டிருந்தேன். காயிதேமில்லத் தலைமையகத்திற்கு வந்தார்கள். என்னிடம் ஒரு கவரைக் கொடுத்து இதை தபாலில் சேர்த்து விடுங்கள் என்று கூறினார்கள். கவரைக் கொடுத்த துடன் நின்றுவிடவில்லை. ''ஜேப்பில்'' இருந்து இரண்டரை அணா நாணயத்தை எடுத்து என் கையில் கொடுத்து அந்த கவருக்கு ஸ்டாம்பு ஒட்டிப் போடுங்கள் என்றும் சொன்னார்கள். கவரிலுள்ள விலாசத்தைப் பார்த்தேன். K. T. M. அஹமது இப்ராகீம் சாகிப் விலாசம் இருந்தது. திருநெல்வேலிபேட்டையில் அச்சமயம் இருந்த தங் களது தம்பிக்கு தலைவரவர்களால் அனுப்பப்படும் கடிதம் அது.

அப்பொழுது நான் சொன்னேன். நீங்கள் கட்சியின் தலைவர். K. T. M. அவர்கள் நமது பொது செயலாளர். எனவே பொதுச் செயலா ளருக்கு எழுதப்படும் கடிதத்திற்கு தபால் செலவு களை நமது ஆபிஸிலிருந்தே செய்து விடலாமே! இதற்கு நீங்கள் ஏன் உங்கள் கையிலிருந்து காசு கொடுக்க வேண்டும் என்று கேட்டேன்.

அதற்கு காயிதேமில்லத் கட்சி சம்பந்தமான விஷயங்கள் இருந்தால், ஆபீஸில் அச் செலவை ஏற்றுக் கொள்ளலாம். இது ஒரு ''பெர்சனல்'' கடிதம். இது அபீஷியல் கடிதம் அல்ல என்றார் கள். அதற்கு நான், நீங்கள் குடும்ப விஷயமாக எழுதியிருந்தாலும் கட்சித் தலைவர், பொதுச் செயலாளருக்கு எழுதும் கடிதங்களைக் கட்சி செலவிலேயே அனுப்புவதில் தவறில்லை'' என்று சொன்னேன். எனது கூற்றை காயிதேமில்லத் ஏற்றுக்கொள்ளவில்லை. அந்தக் காசுக்கு ஸ்டாம்பு ஒட்டிப் போடுங்கள் எனக் கூறிவிட்டு அவர்களது ஆசனத்தை நோக்கிச் சென்றுவிட்டார்கள்.

இப்படி ஒரு தலைவரை இந்த 20ம் நூற் றாண்டில் இனி எங்கு பார்க்கப் போகிறோம்!

**இஸ்மாயில் கனி (சென்னை)**

# காயிதே மில்லத் சில நினைவுகள்

**பேராசிரியர் M M. கனி**

[பேராசிரியர் எம். எம். கனி கல்வித் துறையில் சிறந்து விளங்கியவர். மதரூஸ் முஹமடன் கல்லூரி பிரின்ஸிபாலாகவும், கள்ளிக் கோட்டை சர்வகலாசாலையில் முதலாவது துணைவேந்தராகவும், பங்களூர் பிரிட்டிஷ் அகடெமி டைரக்டராகவும் நல்ல முறையில் பணி புரிந்து புகழடைந்தவர்.]

நார்வே நாட்டைச் சேர்ந்த புகழ்பெற்ற எழுத்தாளர் இப்ஸன் (Ibsen) என்பவர், ஒரு கருத்தை சொல்லி வைத்து விட்டு சென்று விட்டார். அவர் சொன்னது என்னவோ பெருமளவு உண்மைதான். அதிலும் இன்றைய சர்வதேச சூழ்நிலையில் அவர் கூற்று அப்பழுக்கற்ற உண்மை என்பது நிரூபணமானாலும், அதற்கு விதிவிலக்குகள் இல்லாமல் இல்லை. எல்லோரையும் ஒரே மாதிரி எடைபோட்டுவிட முடியுமா? அது தகுமா ?

''ஒருவன் அரசியல் வாதியாகவும் மனிதனுகவும் இருக்க முடியாது'' (One cannot be a politician and a man) இதுதான் இப்ஸனின் பொன்மொழி. இன்றைய அரசியல் வானில் இது என்னவோ ஓரளவு உண்மை என்றாலும், காயிதே மில்லத் போன்ற விதிவிலக்கானவர்களும் இருக்கத் தான் செய்கிறார்கள் ! இன்று அரசியல் ''ஒரே சாக்கடையாகப்'' போய் விட்டது என்றால் அதற்காக அரசியலைத் தவிர்த்து விட்டு தேசாந்திரம் போய்விட முடியுமா ? மனிதனால் இன்று அரசியல் கலக்காமல் வாழ முடியுமா ? அது நடக்கக் கூடிய காரியமா ? சாக்கடையாகப் போய்க் கொண்டிருக்கும் ஒன்றைக்கூட, பரிசுத்தமான தாக்கி அதன் வாயிலாகவும் சமுதாயத்திற்குப் பல நன்மைகளையும் அபிவிருத்திகளையும் செய்து காட்ட முடியும் என்பதை நிரூபித்தவர் காயிதே மில்லத் அவர்கள்.

மதரூஸ் முஹம்மடன் கல்லூரியில் ஒரு சாதாரண ஆசிரியராக நான் பணியாற்றிய காலத்தில் இருந்தே, இஸ்மாயில் சாகிப் அவர்களை நான் அறிவேன். ஜார்ஜ் டவுன் தம்புச் செட்டி தெருவிலுள்ள ஜமால் மொகிதீன் கம்பெனியில்தான் எங்களது முதல் சந்திப்பு நடைபெற்றது. திருநெல்வேலி மாவட்டம் மேலப்பாளையத்தில் பிறந்தவன் நான் என்றதும், என்னைப் பற்றி ஆவலுடன் விசாரிக்கவாரம்பித்தார்கள். நாகர்கோயிலிலும் திருவனந்தபுரத்திலுமே எனது படிப்பு நடந்தது என்றபோது ''அந்தக் காலத்திலேயே எம். ஏ. வகுப்பில் ஆங்கில பாடத்தை எடுத்து முதன்மையாகத் தேறி இருப்பதற்கான காரணம் இப்பொழுதுதான் புரிகிறது'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார்கள்.

அடுத்து எனது குடும்பத்தைப் பற்றி விசாரித்தார்கள். ''அப்படியானால் உங்கள் குடும்பத்திற்கும் பேட்டைக்கும் தொடர்பு இருக்க வேண்டுமே'' என்று சட்டெனக் கேட்டார்கள். ''பேட்டையில் மேலத் தெரு பாசி ராவுத்தரின் முதல் மனைவி என்னுடைய பெரிய தாயார்'' என்றேன். ''அடடே ! மிகவும் நெருங்கி வந்து விட்டீர்களே ! பாசி ராவுத்தர் எனக்கு சாச்சா வேண்டும்'' என்றார்கள். எங்களது முதல் சந்திப்பிலேயே நாங்கள் சொந்தக்காரர்களாகி விட்டோம்.

வியாபாரத்திலும் அரசியலிலும் ஏக காலத்தில் ஈடுபட்டிருந்த இஸ்மாயில் சாகிப் அவர்கள் தங்களது பிந்திய காலத்தில் முழுக்க முழுக்க அரசியலிலேயே கவனம் செலுத்தலானார்கள். இக்கால கட்டத்தில் அவர்களுடன் எனக்கு நெருக்கமான தொடர்பு இருக்கவில்லை. பல இடங்களுக்கும் மாற்றலாகிக் கொண்டே போனதால், அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புகள் அரிதாகவே இருந்தன. என்றாலும் தூரத்தில் இருந்தவாறே அவர்களது அரசியல் நடவடிக்கைகளை கவனித்த வண்ணம் இருந்தேன். அவர்கள் சிறந்த அறிஞர் மட்டுமல்ல, உளத் தூய்மையுடன் செயல்படக் கூடியவர் என்பதால், விடாப்பிடியாக அரசியலில் இருந்தாலும், தங்களது மனச் சாட்சிப் பிர

காரம் அவர்கள் நடந்து கொள்கிறார்கள் என்பதை மட்டும் என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

ஒருநாள் எனது நண்பர் மாதவன் நம்பியாரை சந்திக்க நேர்ந்தது. அவரும் நானும் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் சுமார் நான்கு ஆண்டுகள் ஒன்றாகப் பணியாற்றினோம். அதிலிருந்து அறிமுகம், நெருங்கிய நண்பர்களாகி விட்டோம். அப்பொழுது அவர் சென்னை அடையாறு A. C. காலேஜ் ஆப் டெக்னாலஜியில், கெமிஸ்ட்ரி பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். இஸ்மாயில் சாகிப் அவர்கள் எனக்கு அறிமுகமானவர் என்றோ அல்லது உறவுக்காரர் என்றோ அவருக்குத் தெரியாது. ஒருநாள் அவர் சொன்ன விஷயம் என்னைத் திகைப்பில் ஆழ்த்தியது.

A. C. காலேஜ் ஆப் டெக்னாலஜியின் முதல்வர், அக்கல்லூரி மாணவர் பேரவை துவக்க விழாவில் உரையாற்றுமாறு இஸ்மாயில் சாகிபை அழைத்திருந்தார். அதன் பிரகாரம் குறிப்பிட்ட தினத்தில் அக் கல்லூரிக்கு காயிதேமில்லத் சென்றார்கள். கல்லூரி மாணவர்கள் அனைவரும் ஆடிடோரியத்தில் கூடி இருந்தார்கள். பேராசிரியர் பெருமக்களும் குழுமி இருந்தனர். மேடையில் வந்து பிரமுகர்கள் பலரும் அமர்ந்தனர். அதில் துருக்கி தொப்பி ஷேர்வானியுடனும் நரைத்த தாடியுடனும் காட்சி அளித்த முதியவர் ஒருவரைக் காண எல்லோருக்கும் ஒன்றுமே விளங்கவில்லை. அவர்களது கோலத்தைப் பார்த்ததும், மாணவர்களுக்கு, இவர் என்ன சொல்லப் போகிறார் என்று பலரும் திகைத்தனர்.

இது ஒரு சாதாரண கலை கல்லூரி அல்ல; தொழில் நுட்பக் கல்லூரி. உயர்தர விஞ்ஞான அறிவு பெறும் மாணவர் பேரவையில் பத்தாம் பசலி ஆள் மாதிரித் தோற்றமளிக்கும் இவர் என்ன சொல்லப் போகிறார் என பலரும் ஏளனமாகவே கருதினார்கள். குறைந்த பட்சம் ஆங்கிலத்திலாவது பேசுவாரா? அல்லது தமிழில் தான் பேசுவாரோ என்று கூட ஒருவருக்கொருவர் கிசு கிசுத்துக்கொண்டனர். மதராஸ் கடைத் தெருவில் சில சமயம் சாயபுமார்கள் பேசிக் கொள்ளும் கொச்சைத் தமிழில், இந்த முதியவர் ''போர்'' அடிக்கப் போகிறார் என்று கூட பலரும் எதிர்பார்த்தனர்.

காயிதேமில்லத் அவர்களைப் பேச அழைத்ததும், அவர்கள் கம்பீரமாக எழுந்து மைக் முன் சென்றார்கள், கணீரென ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தார்கள். அவர்களது ஆங்கில மொழி உச்சரிப்பையும் பதப் பிரயோகங்களையும் பார்த்ததுமே, மாணவர்கள் அசந்து விட்டார்கள். அவர்கள் மட்டுமா! பேராசிரியர்களும் கூட, ''இந்த கிழவர்'' இவ்வளவு நளினமாக ஆங்கிலம் பேசக் கூடியவரா என வியப்பில் மூழ்கிப் போனார்கள். கூட்டத்தினரை இஸ்மாயில் சாகிப் பிரமிக்க வைத்தது மட்டுமல்ல, அவர்கள் மெய்மறந்து போகும் விதத்தில் அவர்களது உரையும் பாணியும் விஷயமும் அமைந்திருந்தன.

விஞ்ஞான அறிவும் தொழில் நுட்பக்கலையில் உயர்கல்வியும் பெறும் மாணவர்களுக்கு இந்த ''துருக்கித் தொப்பி'' என்ன அறிவுரை கூறப் போகிறது என சந்தேகப்பட்டவர்கள், அதிசயிக்கும் வண்ணம், தொழில் கல்வி சம்பந்தப்பட்ட பிரச்னைகளையும் இன்றைய விஞ்ஞான வளர்ச்சிப் பற்றியும் ஆழமான பல கருத்துக்களை இஸ்மாயில் சாகிப் சரளமான நடையில் ஆங்கில மொழியில் அள்ளித் தெளித்தார்கள்''. இன்று தொழில் துறையை எதிர்நோக்கி இருக்கும் சிக்கல்களை எவ்வாறு தீர்க்கலாம் என்பதற்கு அவர்கள் பல வழிமுறைகளை எடுத்துச் சொன்னார்கள். தொழில் வல்லுனர்களை மேற்கோள் காட்டினார்கள். பேராசிரியர்கள் உபயோகப்படுத்தும் தொழில் நுட்பசொற்களை அவர்கள் தாராளமாகவும் லாகவமாகவும் பயன்படுத்தினார்கள். அத்துறையில் ஆழமான அறிவு இருந்தால்தான், இம்மாதிரிப் பதப் பிரயோகங்கள் ஒருவரது பேச்சில் வரும்.

எனது நண்பர் மாதவன் நம்பியார் என்னிடம் இந்நிகழ்ச்சியை விவரிக்கும் பொழுது, இவ்வளவு பரந்த அறிவு இவர்களுக்கு இருக்குமா என்பதை அவர்களது தோற்றத்தைப் பார்த்ததும் என்னால் நம்பமுடியவில்லை என்று கூறினார்.

A. C. கல்லூரி மாணவர்கள் பேராசிரியர்கள் அனைவரையுமே வியப்பிலும் மகிழ்ச்சி கடலிலும் இஸ்மாயில் சாகிப் ஆழ்த்திவிட்டார்கள். எந்தப் பிரச்னையைத் தொட்டாலும் நுணுக்கமாக ஆராயும் இயல்புடையவர் அவர்கள் என்பது இவர்களுக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது?

இஸ்மாயில் சாகிபின் சிறப்பு இதில்தான் இருக்கிறது, எந்த ஒரு விஷயத்தைத் தொட்டாலும் அதை ஆழமாகவும் விரிவாகவும் தூர நோக்குடனும்தான் அவர்கள் நோட்டமிடுவார்கள்! அலசி ஆராய்வார்கள்; உள்ளத்தில் தெளிவு உண்டான பிறகே அதன்பின் செயல்படுவார்கள்.

அரசியலில் அவர்கள் விடாப்பிடியாக இருக்கிருர்கள் என்ருல், அதன் மூலமாகத்தான், தமது நாட்டிற்கும் சமுதாயத்தினருக்கும் சேவை செய்ய முடியும் என்றும் அத்துறை தவிர்க்க முடியாதது என்றும், தம்மைவிட்டால் வேறு நபர் இப்பொறுப்புக்குப் பொருத்தமான ஆளாகத் தமது கண்களுக்குத் தெரியவில்லை என்றும் அவர்கள் உண்மையிலேயே நம்பி இருக்கவேண்டும். அதனால்தான் எந்த ஒரு விளைவையும் அவதூறையும் அவர்கள் பொருட்படுத்தாது தங்களது குறிக்கோளிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தார்கள். இதுவே அவர்களது அரசியலின் ரகசியம் என நான் மதிப்பிடுகிறேன்.

அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது என்பது முதுமொழி. இதனிலும் அரிது, காயிதே மில்லத் போன்ற இலட்சியப் புருஷர்களாகப் பிறத்தல் என்று நாம் அச்சொல் வழக்கில் சேர்த்துக் கொள்ளலாம். ஆம்! அவர்களது வாழ்க்கை நமக்கெல்லாம் ஒரு சிறந்த வழிகாட்டி.



# தமிழ்நாடு சட்டப்பேரவையில் காயிதேமில்லத் படம்

1946 முதல் 1951ம் ஆண்டு வரை, அன்றைய மதருஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் அவர்கள் எதிர்க்கட்சித் தலைவராகப் பணிபுரிந்துள்ளார்கள். அக் காலக்கட்டத்தில் திரு பிரகாசம் அவர்கள், திரு. ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள், திரு. குமாரசாமி ராஜா ஆகியோர் இம்மாகாணத்தின் முதலமைச்சர்களாகப் பணியாற்றினர்கள்.

இந்நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன்னர் வரை, சட்டசபையின் சுவர்களில் ஆங்கில கவர்னர்களின் வரைபடங்கள்தான் மாட்டப்பட்டிருந்தன. விடுதலைக்கு பிறகு, 1948ம் ஆண்டில் மகாத்மா காந்தியின் படம் இச்சட்டமன்றத்தில் வைக்கப்பட்டது அடுத்து ராஜாஜியின் படம் அம்மன்றத்தில் மாட்டப்பட்டது. 1964ம் ஆண்டில் திருவள்ளுவரின் படம் இம்மன்றத்தை அலங்கரிக்க ஆரம்பித்தது. 1969ம் ஆண்டில் அறிஞர் அண்ணாவின் படம் இடம் பெறலாயிற்று. 1977ம் ஆண்டில் திரு. காமராஜ் அவர்களது படம் மாட்டப்பட்டது.

புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்கள் இம்மாநிலத்தின் முதலமைச்சராக இருந்த சமயம் 1980ம் ஆண்டில் சட்டப்பேரவையில் நான்கு தலைவர்களின் படங்கள் ஏக காலத்தில் வைக்கப்பட்டன. பெரியார் ஈ. வே. ரா., டாக்டர் அம்பேத்கார், காயிதேமில்லத், பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆகியோர்களே அவர்கள். இத்தலைவர்களின் படங்களை 9-8-80 அன்று பேரவையில், அன்றையத்தினம் கேரள மாநில கவர்னராக இருந்த திருமதி. ஜோதிவெங்கடாச்சலம் அவர்கள் திறந்து வைத்துள்ளார். முந்திய ஆங்கில கவர்னர்களின் படங்கள் அனைத்தும் பேரவையிலிருந்து அகற்றப்பட்டுவிட்டன. இன்று அம்மன்றத்தில் மேலே குறிப்பிடப்பட்ட ஒன்பது தலைவர்களின் வரை படங்களே வைக்கப்பட்டிருக்கின்றன.

# விலிங்டன் ஆஸ்பத்திரி




காயிதேமில்லத் அவர்கள் 1971-ம் ஆண்டு நவம்பர் மாதம் பிற்பகுதியில் நடைபெறும் குளிர் கால பாராளு மன்றக் கூட்டத் தொடரில் கலந்து கொள்வதற்காக, நவம்பர் மாதம் 12-ம் தேதி மாலையில் சென்னையிலிருந்து புதுடில்லிக்கு விமானத்தில் புறப்பட்டார்கள். இரவு சுமார் பத்து மணி அளவில் அந்த விமானம் பாலம் விமான நிலயத்தை சென்றடைந்தது. அதே விமானத்தில் தமிழ் நாட்டைச் சேர்ந்த எம். பி. யான திரு. செழியன் சென்றார். அவரைக் கூட்டிச் செல்லுவதற்காக வந்திருந்த காரில், காயிதேமில்லத்தை அழைத்துக் கொண்டு போய் அவர்கள் தங்குமிடமான ''வெஸ்டர்ன் கோர்டில்'' இறக்கிவிட்டு விட்டு, திரு. செழியன் அவரது இருப்பிடத்திற்குச் சென்று விட்டார்.

ஐந்தாம் நம்பர் அறைக்குச் சென்ற தலைவரவர்கள், தங்களது ஷேர்வானியை கழற்றி இருக்கிறார்கள். அவ்வளவு தான் அவர்களுக்கு நினைவிருந்தது. மயக்கமுற்று கீழே விழப் போனவர்கள், தங்களது கட்டிலிலேயே சாய்ந்து விட்டார்கள்; ரத்தமாக வாந்தி எடுக்கவும் செய்தார்கள். படுக்கையிலும் தரையிலுமாக ரத்தம் கொட்டி சிதறிக் கிடந்தது. இதை ஒன்றும் அவர்கள் அறியமாட்டார்கள்.

இரவு சுமார் பதினொரு மணி அளவில் இந் நிகழ்ச்சி நடந்திருக்கலாம், அறைக் கதவு சரியாகப் பூட்டப்பட வில்லை. ஷேர்வானியைக் கழற்றியும் கழற்றாததுமாக தங்களது படுக்கையிலேயே ரத்த வெள்ளத்தில் சுய நினைவு இழந்தவர்களாக வீழ்ந்து கிடந்த காயிதேமில்லத்தை, 13-ம் தேதி காலையில் அந்த அறைக்கு தேநீர் தட்டை ஏந்தியவாறு அறைக்குள் நுழைந்த விடுதி சிப்பந்தி தான் முதன் முதலாகப் பார்த்தான். டில்லியில் கடுங்குளிர் காலமானதால், காலை ஏழு மணிக்குத் தான் அந்த அறைக்குள் அவன் நுழைந்திருப்பான். நல்ல வேளையாக, உள்பக்க மிருந்து அறை தாழ்ப்பாள் போடப்படாதிருந்தது.

ஐந்தாம் நம்பர் அறைக்குள் நுழைந்ததும் அச் சிப்பந்தி கண்ட காட்சி அவனைத் தூக்கி வாரிப் போட்டு விட்டது. ரத்த வெள்ளத்தில் காயிதேமில்லத் தங்களது படுக்கையில் அலங்கோலமாகக் கிடந்ததைக் கண்டதும், அவன் கூக்குரல் எழுப்பி இருக்கிறான். இரவு நேரத்தில் அறைக்குள் யாரோ புகுந்து தலைவரவர்களை ஆயுதங்களால் தாக்கிவிட்டுச் சென்றிருக்கிறான் என அச்சிப்பந்தி அனுமானித்துத் தான் அபயக்குரல் எழுப்பியிருந்தான்.

அவன் போட்ட சப்தத்தில் அக்கம்பக்கத்திலிருந்தவர்கள் ஓடோடி வந்தனர். பக்கத்து அறையில் தங்கியுள்ள எம். பி. களும் விரைந்து வந்திருக்கிறார்கள். படுக்கையில் ரத்த வெள்ளத்தில் காயிதேமில்லத் அவர்கள் நினைவு இழந்த நிலையில் கிடப்பதைப் பார்த்து அனைவருமே அதிர்ச்சியுற்றனர்; திகிலடைந்து விட்டனர். ஒருவருக்கும்ஒன்றுமே விளங்கவில்லை; ஓடவில்லை.

அடுத்து, ஆகவேண்டிய காரியங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஆஸ்பத்திரிக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. போலீஸ் இலாக்காவிற்கும் செய்தி விரைந்து சென்றது. துரிதமாகக் காரியங்கள் நடைபெற்றிருக்கின்றன. நவம்பர் 13ம் தேதி பகல் 12 மணி அளவில் தலைவரவர்கள் விலிங்டன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்கள். சென்னைக்குத் தகவல் கொடுக்கப்பட்டு அன்று மாலையிலேயே ஜனுப் மியாக்கானும் டாக்டர் யூ. முஹம்மதும் டில்லி போய்ச் சேர்ந்தனர். திருச்சி ஜானி சாகிபும் தலைநகருக்கு விரைந்தார்.

13, 14 தேதிகளில் காயிதேமில்லத்திற்கு நினைவு திரும்பவில்லை, என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் அறியவில்லை. உடம்பிலிருந்து நிறைய ரத்தம் வெளியாகிவிட்டபடியால் அவர்களுக்கு ரத்தம் செலுத்தப்பட்டது.

முஸ்லிம் லீக் கட்சியைச் சேர்ந்த பாராளுமன்ற உறுப்பினர்களும் நெருங்கிய உறவினர்களும் ஆஸ்பத்திரியில் அவர்கள் அருகிலேயே அமர்ந்து ஆக வேண்டியதை கவனித்துக் கொண்டிருந்தார்கள். இவை ஒன்றையும் அவர்கள் அறிந்திருக்கவில்லை.

நவம்பர் 15ந்தேதி மாலையில் சில ஊர்களிலும் 16ம் தேதி மாலையில் சில ஊர்களிலும் லைலத்துல் கத்ரு இரவு கொண்டாடப்பட்டுள்ளது. அப்புனித இரவில் பாரதத்திலும் வெளிநாடுகளிலும் வாழும் இந்திய முஸ்லிம்கள் அனைவரும் தலைவரவர்கள் துரிதமாகக் குணமடைய வேண்டும் என மனமுருகி எல்லாம் வல்ல இறைவனிடம் துஆக் கேட்டனர். லட்சோப லட்சம் உள்ளங்களில் இருந்து ''இக்லாசுடன்'' வெளிப்பட்ட பிரார்த்தனையை ஆண்டவன் ஏற்றுக் கொண்டான் போலும்! நவம்பர் 16ம் தேதியே காயிதே மில்லத் அவர்கள் இலேசாகக் கண்விழித்துப் பார்த்தார்கள்.

அருகில் நிற்பவர்களை அடையாளம் கண்டு கொள்ள அன்றுதான் முடிந்தது. அதன்பிறகே அனைவரும் நிம்மதி பெருமூச்சு விட்டனர். இறைவனுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார்கள்! நவம்பர் 16ம் தேதி அன்று தங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதை தலைவரவர்கள் கவனிக்கத் தொடங்கினார்கள். டாக்டர் பரீதி ஆஸ்பத்திரி வந்து பார்த்துச் சென்றார். அவர் வந்தது 16ம் தேதியா அல்லது வேறு தினத்திலா என காயிதேமில்லத்திற்கு சரியாக நினைவில்லை.

தினசரி டயரி எழுதிப் பழகப்பட்ட அவர்களால் வாளாவிருக்க முடியவில்லை. ஆஸ்பத்திரியில் கிடைத்த தாள்களில் தங்களது குறிப்புக்களை எழுதத் தொடங்குகிறார்கள். அவர்களை கண்காணித்து வந்த திருமதி கிருஷ்ணன் என்ற நர்சிடம்விசாரித்து விவரங்களைத் தெரிந்துகொள்கிறார்கள். 23ம்தேதி வரையிலும் தனித்தனி தாள்களிலேயே குறிப்புக்களை எழுதியுள்ளார்கள். நவம்பர் 24ம் தேதியும் தாளிலேயே எழுத வாரம்பித்திருக்கிறார்கள். பின்னர் தங்களது டயரியில் அவர்கள் அக்குறிப்புக்களை எழுதவாரம்பித்திருக்க வேண்டும்.

எனவேதான் தனித்தாளில் 24ம் தேதி எழுத வாரம்பித்த குறிப்புகளைத் தங்களது கரத்தினாலேயே அடித்தும் உள்ளார்கள்.

இனி, அவர்கள் கைப்பட எழுதிய குறிப்புக்களில் என்ன வரைந்துள்ளார்கள் என்பதைக் காணலாம்.

New Delhi

According to the Nurse Mrs. Krishnan I was brought to the Wellington Hospital at about 12 noon on 13-11-71 and the nurse took charge of at 3.0 PM - in the Hospital

16 – 18 Nov.

I. Dr. Trilok Singh MP } 16th ?
Dr. Faridi

II Osman bin Saleh's letter – Express 18th

III Telegram C.M. & Mr. Mahmood 17th
"Many thanks myself father"
"Devoutly wish you speedy complete recovery"

IV M/s. E.S.S., B.V.A. Koya, Mohammad left Delhi 18th morning. M/s Khaja AKAAS Dr. U. Mohamed, Mahmood Mian Khan the same evening

CIPN—S4—33 DGHS/ND/67—30-1-68—10,000

தாள் ஒன்று

## புதுடெல்லி

நர்ஸ் திருமதி. கிருஷ்ணன் கூறியதிலிருந்து, 13-11-71 அன்று பகல் 12 மணி அளவில் விலிங்டன் ஆஸ்பத்திரிக்கு நான் கொண்டுவரப் பட்டேன் என்பது தெரிந்தது. அன்று பிற்பகல் 3-30 மணியிலிருந்து இந்த நர்ஸ் என்னை கவனித்து வருகிறார்.

நவம்பர் 16, 17, 18ம் தேதிகள் ஆகிய மூன்றையும் சேர்த்து மொத்தமாகக் குறிப்பு எழுதியுள்ளார்கள். திருலோக்சிங் எம்.பி.யும் டாக்டர் பரீதியும் ஆஸ்பத்திரிக்கு வந்து பார்த்துச் சென்றுள்ளார்கள். டாக்டர் பரீதி வந்தது 16ம் தேதிதானா அல்லது ஒருநாள் முன்பின்னா என அவர்களுக்கு ஒரு சந்தேகம் எழுந்திருக்கிறது. ஒரு கேள்விக் குறியை போட்டு வைத்திருக்கிறார்கள்.

18ம் தேதியன்று உஸ்மான் பின் சாலேஹ் இடமிருந்து ஒரு எக்ஸ்பிரஸ் தபால் வந்தது,

17ம் தேதியன்று ''மு. க'' (தமிழக முதலமைச்சர்) க்கு மஹ்மூது மூலம் தந்தி அனுப்பினார்கள்.

(தலைவரவர்களது அண்ணனுடைய குமாரரான இன்ஜினியர் மஹ்மூது மியாக்கானிடம் தந்தி வாசகத்தைக் கொடுத்து அனுப்பச் சொல்லி இருக்கலாம்)

''நீங்கள் துரிதமாகவும் பூரணமாகவும் குணமடைய வேண்டும் என பக்தி சிரத்தையுடன் விரும்புகிறேன்'' (Devoutly wishyou speedy complete Recovery) என கலைஞரிடமிருந்து தந்தி வந்திருக்கலாம். அதற்கு ''அநேக வந்தனங்கள் நானும் தந்தையும்'' என மியாக்கான் பெயரில் டில்லியிலிருந்து பதில் தந்தி கொடுத்திருக்கலாம். (Many Thanks myself father) முதல் பக்கக் குறிப்புக்களில் இருந்து இவ்வாறுதான் யூகிக்க முடிகிறது.)

18ம் தேதி காலையில் இப்ருஹீம் சுலைமான் சேட், B. V.A. கோயா, ஷம்னாத் மூவரும் டில்லியிலிருந்து ஊருக்குப் புறப்பட்டார்கள். அன்று மாலையில் காஜா (காஜா மொகிதீன்) A K A A S (சமத் சாகிப்) டாக்டர். யூ. முஹம்மது, மஃமூது மியாக்கான் ஆகியோர் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

தாள்: இரண்டு

19-11-71 வெள்ளிக்கிழமை

16ம் தேதி டாக்டர் பரீதி வந்தாரா என்ற சந்தேகம் அவர்களுக்குத் தீரவில்லை. ஒரு கேள்விக் குறியுடன் அன்றைய குறிப்பு ஆரம்பமாகிறது. காலை 10 மணி மிஸ்டர் காலிபுடன் மிஸ்டர் ஷரீப் (M. P.) பாஸ்போர்ட் ஆபீஸ் சென்றார்.

10-30 :- மஃமூது காலை 10 மணிக்கு வந்து 10-30 மணிக்குச் சென்றான்.

10-30 காமராஜ். பர. ராமச்சந்திரன் (பழைய காங்கிரஸ்) மாரிசாமி மூவரும் சேர்ந்து வந்தனர். இன்று காலை தான் டில்லி வந்ததாக காமராஜ் கூறினர். எனக்கு தொண்டையில் அடைப்பு மாதிரி இருந்து பேசுவதற்கு நான் சிரமப்பட்டதால், மீண்டும் திரும்ப வந்து பார்ப்பதாகக் கூறிவிட்டு அவர்கள் புறப்பட்டார்கள்.

இரவு 7-30 சேலம் E. R. கிருஷ்ணன் **M.P.,** திருமதி. நாயிடு **M. P.,** மிஸ்டர் ஹமீது மூவரும் வந்தனர்.

இரவு 8-00 குமாரி சர்துலா மீராபாய், பஷீர் அஹமதுகான் ஆகியோர் வந்திருந்தனர்.

(114) 20-11-71 Month — New Delhi Id Day (Cont'd)

(3) 9AM - "Malaya Manorama" photographer came [illegible] and took my photo while sitting up in bed

(4) 10 A.M. - Visitors

(a) Wellington Room No 7 - Arab Teacher, ~~[illegible]~~ Embassy Arabic Section

b Mashood - Delhi League

c H.E. Saudi Arabian Ambassador - [illegible]

(d) Mr Goel, Dy. Secretary, Rajya Sabha

(e) Mr. Raju, [illegible] Court

(f) Hamad Saheb - R. Bhavan

(g) Moulana Muslim with children

(h) Mastan Shariff & others ([illegible])

& went to Vinai Marg (Jamal) for Id-lunch.

(i) Shariff - Secret

(j) Mr Abdul Ghani Dharwath

(k) Sardar Pratap Singh Sethi

(l) Shaik Dawood of Adlworan who is going home today.

(m) Ansar Wasif of All India Radio came at about 4pm

(n) Along him came two Delhi League youngmen with presents of fruits and sweets from Delhi President & [illegible] Road Shareef Saheb

(o) Sirdar [illegible] Gomeha Singh "Pukhdoon" Delhi and

(p) H.H. Maharani of Nabha

(4) Inspection - 11 AM [illegible]

(5) Blood taken again at noon [illegible]

Condition

2 20-11-71 - Ideal Crisis

I Not [illegible]

II Slight abdominal ache [illegible] when I got up at 3 pm after 2 hrs of sleep after lunch -

"Doctor nothing to worry about"

இரவு 9-00 ''மலையாள மனோரமா'' பத்திரிகையைச் சேர்ந்த T. V. R. ஷெனாய் வந்தார்; பேசிக் கொண்டிருந்தார். நாளை காலையில் எனது போட்டோ ஒன்று வேண்டுமென்றார்.

இரவு 10-00 முதலாவது ஈத் வாழ்த்துத் தந்தி மதராஸ் பக்கீரிடமிருந்து (மெக்கோ பக்கீர் மைதீன்) வந்தது.

சனிக்கிழமை 20-11-71

டில்லியில் இன்று நோன்புப் பெருநாள். நேற்றுத்தான் இங்கு நோன்பு 29 கடைப்பிடிக்கப் பட்டது. ஹைதராபாத்தில் பிறை பார்த்து விட்டதாக நேற்றிரவு இங்கு தகவல் கிடைத்துள்ளது.

மியாக்கானும் ஷரீபும் (MP) இங்கு இருக்கிறார்கள்.

நாள் மூன்று புதுடெல்லி ஈத் பெருநாள்

காலை 9-00மணி மலையாள மனோரமா புகைப்படக்காரர் வந்து, படுக்கையில் நான் உட்கார்ந்திருந்தபடி, போட்டோ எடுத்தார்.

காலை 10-00 பார்க்க வந்தவர்கள்.

(1) தூதரக அரபிக் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த அரபி ஆசிரியர்
(2) டில்லி முஸ்லிம் லீகைச் சேர்ந்த மஸ்ரூர்
(3) சவூதி அரேபிய தூதர் அனஸ் யாசீன்
(4) ராஜ்யசபை துணை செயலாளர் மிஸ்டர் கோயல்
(5) மிஸ்டர் ராஜூ M.P.
(6) ராஷ்டிரபதி பவனிலிருந்து ஹமீது சாகிபு.
(7) மௌலானா முஸ்லிம் குழந்தைகளுடன் (தாவத் உர்தூ தினசரி ஆசிரியர்)
(8) மியானும், ஷரீபும் பகல் ஒன்றரை மணிக்கு விஜய் மார்க்கிலுள்ள இன்ஜினியர் ஜமால் முகையத்தீன் வீட்டிற்கு பெருநாள் விருந்து சாப்பிடச் சென்றனர்.
(9) வெஸ்டர்ன் கோர்ட் சர்வர் ஷரீப் வந்திருந்தார்.
(10) மிஸ்டர் அப்துல்கனி தாரும் சர்தார் பிரதாப் சிங் சேதியும் வந்திருந்தனர்.
(11) ஆடுதுறை ஷேக்தாவூது (ஜமால் மொகிதீன் பாப்பாவின் சகோதரர்) வந்தான். மாலை ஊருக்குப் புறப்படுகிறான்.
(12) அகில இந்திய வானொலியைச் சேர்ந்த அவுஸாப் வாஸ்பி மாலை 4 மணிக்குவந்தார்.
(13) அதற்கு முன்னதாக டில்லி முஸ்லிம் லீகைச் சேர்ந்த இரண்டு வாலிபர்கள் டில்லி பிரதேச முஸ்லிம் லீக் தலைவர் ஹக்கீம் அஹமது ஷரீப் சாகிப் கொடுத்தனுப்பியதாகக் கூறி பழங்களையும் இனிப்புக்களையும் கொண்டு வந்தனர்.
(14) டில்லியைச் சேர்ந்த சர்தார் கனேஷா சிங் ''புக்தூன்'' வந்தார்.
(15) நாபா மகாராணி வந்திருந்தார்

பரிசோதனைக்காக மத்தியானம் ரத்தம் எடுக்கப்பட்டது.

காலை 11 மணிக்கு இன்ஜெக்ஷன் போடப் பட்டது. கையிலும் வீக்கத்திற்கு மருந்து தடவப் பட்டது.

மற்றொரு நாள் பக்கம் குறிக்கப்படவில்லை.

## நிலவரம்

20—11—71 ஈதுல் பித்ரு

(1) நேற்றிரவு தூக்கமில்லை.
(2) மதிய உணவிற்குப் பிறகு இரண்டு மணி நேரம் தூக்கம்; பிற்பகல் 3 மணி எழுந்த பொழுது அடிவயிற்றில் இலேசாக வலி. இது குறித்து கவலைப் படத் தேவையில்லை என டாக்டர் கூறினார்.

தாள் நான்கு 21-11-71

(1) சமத் சாகிபும் காஜாவும் மதராஸிலிருந்து விமானம் மூலம் இரவு 10 மணிக்கு வந்து சேர்ந்தனர்.

(2) காலை 8-30க்கு மிஸ்டர் காலிப் வந்தார்.

(3) ஹக்கீம் அஹமதுகானும் அவரது நண்பர் சர்தாரும் வந்திருந்தனர்.

(4) மிஸ்டர் கங்காசரண் பாபு வந்து ஒரு மணி நேரம் இருந்தார்.

(5) உ. பி. முஸ்லிம் லீக் தலைவர் டாக்டர் ஷமீம் அஹமதுகான் 12-30க்கு வந்து 1-30 வரை தங்கினர்.

(6) ஜமாஅத்தே இஸ்லாமி ''தாயிம்'' மௌலானு யூசுப் பிற்பகல் 2-30க்கு வந்தார்.

(7) காலையில் ஒரு கமிட்டி கூட்டத்திற்குப் போய் விட்டு சமத் சாகிப் பிற்பகல் மூன்று மணிக்கு வந்தார். மணி விளக்கு பெருநாள் மலர் குறித்து அவருடன் பேசினேன். மிஸ்டர் காஜாவுடனும் இது குறித்து முன்னர் பேசினேன்.

(8) திருச்சி கரீம் பாய் மகன் அப்துல் ஸத்தார் (டில்லி அருகில் பணிபுரிபவர்) மாலை 4 மணிக்கு வந்தார்.

(9) மிஸ்டர் ஷரீப் (MP) காலையில் காஜியாபாத் சென்ருர்,

(10) உடல் நலம் விசாரித்து, 16-11-71 அன்று மிஸ்டர் சாதிக் பாட்சா எழுதிய கடிதத்தை மிஸ்டர் தண்டபாணி M.P. இன்று கொண்டு வந்து கொடுத்தார்.

தாள் ஐந்து 22-11-71

திங்கள்கிழமை

(1) நான்கு முறை ''பேரியம்'' போட்டோக்கள் எடுக்கப் பட்டன.

(2) மீரட்டிலிருந்து பஷீர் அஹமதுகான் இருவர் மூலமாக ''கீர்'' (இனிப்பு சேமியா) பகல் 2-00க்குக் கொடுத்தனுப்பினர்.

(3) மிஸ்டர் அக்பர் அலிகான் M.P. மாலை 4-15 மணிக்கு வந்தார்.

(4) மீரட்டிலிருந்து மிஸ்டர் ஷபீகுர் ரகுமான் தலைமையில் வாலிபர்கள் அடங்கிய தூதுக் குழு ஒன்று மாலையில் வந்தது. பஸல்முஹம் மது, தன்வீர் ஆலம், ஜபர் அஹமது, நூர் முஹம்மது, ஷபீக்குடைய குமாரர் அதீகுர் ரகுமான் ஆகியோர் அக் குழுவில் இருந்தனர்.

பிரதம மருத்துவர் டாக்டர் கரோலி, ஒரு நாற்காலியில் நான் அமர்ந்திருக்கலாம் என காலையில் கூறினர். மாலையில் நான் பாத்ரூமிற்கு நடந்து செல்லலாம் எனக் கூறினர். வழக்கமாக நான் உட்கொள்ளும் ஆகாரத்தை இனி நான் சாப்பிடலாம் என்றும் அவர் கூறினர்.

தாள் ஆறு 23-11-71

செவ்வாய்க்கிழமை

(1) காலையில் 9-30 மணிக்கு டாக்டர் கரோலி வந்து என்னைப் பார்த்தார். பொரித்த முட்டை, ரொட்டித் துண்டு, கஞ்சி ஆகிய வற்றை காலை உணவாகச் சாப்பிடலாம் என்ருர். இரண்டு நாட்களுக்குப் போட வேண்டிய ஊசி மருந்தையும் எழுதிக் கொடுத்தார்.

(2) மதராஸ் திருவல்லிக்கேணியில் இருந்து யூசுப், பார்த்தசாரதி என இரண்டு சாரணர்கள் காலை 11 மணிக்கு வந்திருந்தனர். இந்திய குடியரசுத் தலைவரிடமிருந்து பாராட்டுப் பத்திரம் பெறுவதற்காக வந்திருந்த குழுவில் இவர்களும் வந்திருக்கிருர்கள். [முஸ்லிம் குரல் ஆசிரியர் கனி சிஷ்தியின் சகோதரர் இந்த யூசுப் என்பது குறிப்பிடத் தக்கது-ஆர்]

(3) தமிழ்நாடு மின்வாரிய பிரதம இன்ஜினியர் மிஸ்டர் ரஷீத், அரசு அலுவலாக டில்லி வந்தவர் பகல் 12 மணி அளவில் என்னை வந்து பார்த்தார்.

(4) மேலப்பாளையம் இப்ருஹீம் (இப் பெயர் ஹனீபா என இருக்க வேண்டும். ஏதோ ஞாபகத்தில் பெயரை மேற் கூறியவாறு எழுதி இருக்கிருர்கள்) அவர்களின் தந்தை

वि० स०-51
W.H.-51

विलिंग्डन अस्पताल, नई दिल्ली

# Willingdon Hospital, New Delhi

बहिरंग रोगी पर्चा

TICKET FOR OUT-DOOR PATIENTS

क्रम सं०
Sl. No.

टोकन सं०
Token No.

नाम
Name — V

आयु
Age

रोग
Disease

तारीख
Date 22-11-71 ...19

जाति पुरुष/स्त्री
Caste and Sex Monday

V Dr. Karoli, the Chief Dr., told in the morning that I might sit up on a chair and in the evening that I may go to the bathroom; he had thereafter I may take my usual meals.

| दोबारा आने की तारीख Return Visits | चिकित्सा Treatment |
|---|---|
| I | Four Barium photos were taken today<br>The first at 9 AM<br>2nd " 11.15 AM<br>3rd " 1 PM-<br>4th " 4 PM- |
| II | From Meerut Baseet Ahmed Khan sent<br>sent Hashmat Ali + Abdul Basit<br>with Gheer (Sweet server) - 2 pm - |
| III | Mr Akbar Ali Khan MP came - 4.15 PM- |
| IV | In the evening a deputation of Young men led by<br>Mr Hafizur Rahman came from Meerut-<br>viz M/s Fazal Mohd, Tanvir Aleem (3) Zafar Ahmed<br>(4) Noor Mohd. (5) Azizur Rahman B Oshifser |

MGIPRND, I W4/71 21 4 71 5,000 Pads

மிஸ்டர் அப்துல் கரீமும், டில்லி கல்லூரியில் ஆசிரியராக இருக்கும் எர்ணாகுளத்தைச் சேர்ந்த ஜானும் வந்திருந்தனர்.

(5) இன்ஜினியர் ஜமால் மொஹிதீன் வந்திருந் தார்.

(ஆறுவது தாளின் அடியில் 24-11-71 என குறிப்பிட்டு குறிப்புகள் எழுதவாரம்பித்திருக் கிறார்கள். ஆனால் 'டிக்' மார்க் செய்துவிட்டு ஒரு கோடு இழுத்து எழுதியவற்றை அடித்திருப்ப 'தால் இவ்விபரங்களை தங்களது டயரியில்

எழுதவாரம்பித்து விட்டிருக்கலாம் என யூகிக்க வேண்டியிருக்கிறது.)

24-11-71ம் தேதியிட்டு அவர்கள் குறித்த விஷயங்களாவன :

(1) குணமடைந்து வருவதாக இன்று நான் உணர்ந்தேன் அல்ஹம்துலில்லாஹ்.

(2) ஹாஜி, எம். எம். பி. (ரவணசமுத்திரத் திற்கும்) (குரோம்பேட்டையில், ஹிப்பத், தாவூது, நுஸ்ரத், அம்மாஜி (மியாகான் மனைவி சாபிரா) ஆகியோருக்கும் கடிதங்கள் எழுதினேன்.

(3) மிஸ்டர் ஷகீல் காலையில் வந்தார். நான் உடல்நலக்குறைவாகிவிட்ட சமயம், ஆரம்பத் தில் என்னைக் கவனித்துக் கொண்டவர்களில் இவரும் ஒருவர். பெருநாளைக்காக ஊருக்கு (சஹாரன்பூர்)ச் சென்றிருந்தவர் நேற்றிரவு திரும்பியுள்ளார்.

(4) இன்று மாலை மிஸ்டர் காஜாவுடன், எனது புரோக்கிராம் பற்றியும் எனது சொந்த விஷயம் ஒன்றினைப் பற்றியும் பேசினேன்.

அத்தாளின் பின் பக்கத்தில், 25-11-71 அன்று ரூபாய் 1261/25க்கு எடுக்கப்பட்ட வங்கி டிராப்ட் பற்றிய விபரங்கள் குறிக்கப் பட்டிருக்கின்றன.

பாராளுமன்ற கூட்டத்தில் கலந்து கொள்வ தற்காக டில்லி சென்ற காயிதேமில்லத், தலைநகர் போய்ச் சேர்ந்த அன்றே நோய்வாய்ப்பட்டு விட்டதால், அதன் பிறகுஅவர்கள் பாராளுமன்றத் திற்குச் செல்லவேயில்லை. 1971ம் ஆண்டு ஆரம்பத்தில்தான் மஞ்சேரி தொகுதியிலிருந்து அவர்கள் மூன்றுவது முறையாக லோக் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சுமார் ஓராண்டு காலமே ஐந்தாவது லோக் சபை உறுப்பினராக இருந்துள்ளார்கள்.

1971ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 10ம்தேதி யன்று லோக்சபையில் காயிதேமில்லத், இந்திய சோவியத் ஒப்பந்தத்தை வரவேற்றுப் பேசினர் கள். இதுவே அவர்களது கடைசி பாராளுமன்றப் பேச்சு.

விலிங்டன் ஆஸ்பத்திரியில் உடல்நிலை ஓரளவு தேறியதும் 1971ஆம் ஆண்டு நவம்பர் இறுதியில் காயிதேமில்லத் அவர்கள் சென்னைக்குத் திரும்பி னூர்கள்.

இவ்வளவு தூரம் உடல்நிலை பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வந்த போதிலும், குரோம் பேட்டை திரும்பிய பின்னரும், காயிதேமில்லத் அவர்கள் வாளாவிருக்கவில்லை; வாளாவிருக்க முடியவில்லை. நாட்டு நடப்புக்கள் குறித்தும் சிறுபான்மையினர் பிரச்சனைகள் பற்றியுமே அவர் களது சிந்தனை சுற்றிக் கொண்டிருந்தது.

1971ம் ஆண்டு நவம்பர் டிசம்பர் மாதங்களில் நடைபெற்ற பாராளுமன்றத் தொடரில், 25வது அரசியல் சட்டத்திருத்த மசோதா விவாதிக்கப் படுவதாகயிருந்தது, (பிரஜைகளுக்குச் சொந்த மான சொத்துக்களை, கட்டாயமாக ஆர்ஜிதம் செய்து அரசாங்க உபயோகத்திற்கு எடுத்துக் கொள்வதற்கான அதிகாரங்கள் (விதி 31) பற்றிய ஷரத்தில், ஒரு சில நிபந்தனைகளை விதிக் கும் சட்டத் திருத்தம் இது.)

சிறுபான்மை மக்களின் நலன்களை முன்னிட்டு, இத்திருத்த மசோதாவை ஆதரிக்க வேண்டும் என்பது காயிதேமில்லத் அபிப்பிராயமாகும். ஆனல் பாராளுமன்றத்திலுள்ள தி.மு.க கட்சி, இம் மசோதா குறித்து வேறுவிதமான கருத்துக் கொண்டிருந்தது. எனவே 1-12-71ம் தேதி இரவு நாஞ்சில் K. மனோகரன் M. P. க்கு ஒரு தந்தி எழுதி, அன்றைய தினம் ராஜ்ஜிய சபை உறுப்பின ராகப் பணியாற்றிய ஜனுப் சமத் சாகிப் வசம் கொடுத்து, அனுப்பச் சொன்னார்கள். சர்க்கார் கொண்டுவரும் திருத்தத்தை எதிர்க்க வேண்டாம் என அத்தந்தியில் அவரைக் கேட்டுக் கொண டார்கள். அத்துடன் மதுரை ஷரீப் சாகிப் M. P. க்கும் மற்றொரு தந்தி கொடுத்தார்கள், உடனடியாக நாஞ்சில் மனோகரனை சந்தித்து, சிறுபான்மையினர் நலன்களை உத்தேசித்து, 25வது திருத்த மசோதாவை ஆதரிக்கும்படி, வேண்டிக் கொள்ளவும் என ஷரீப் சாகிபுக்குக் கொடுக்கப்பட்ட தந்தி வாசகம் தெரிவிக்கிறது. தங்களது இறுதி மூச்சுவரை இந்திய இஸ்லாமிய சமுதாயம் பற்றிய சிந்தனையே அவர்களிடம் மிகைத்து நின்றது என்பதற்கு இம்முயற்சியும் ஓர் எடுத்துக் காட்டாகும்.

1971ஆம் ஆண்டு டிசம்பர் முதல் வாரமே, சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் காயிதே

VI Tuesday 23-11-71.

I Dr Caroli came at 9.30 AM, saw me and ~~[illegible]~~ today prescribed fried egg bread porridge etc & also injections for two days.

II Yusuf & Parthasarathy two scouts from Triplicane, Madras called. They had come to Delhi with a group for receiving awards from President of India (11 AM)

III Mr Rasheed ~~[illegible]~~ Chief Engineer Of Electricity Board ~~who~~ Tamilnadu who has come on business to Delhi called at about 12.30 pm.

IV Mr Abdul Karim father of Ibrahim ~~[illegible]~~ of Melapalayam and John of Ernakulam, Lecturers of Delhi College came –
Jamal Mohideen, Ex-Finist Same.

Wednesday. 24-11-71:

I I felt ~~[illegible]~~ well today - Alhamdulillah

II Letters to (1) Haji M.M.P Ramanasamudram.
(2) Habbath, Dawood, Nagoorath (of AMmaji) Chromepet

III Mr Shakeel who was one of the first to attend to me during my present illness was away for the Id and returned last night - He again came this morning

IV This evening I had a talk with Mr Khaja re: my programme - and re. [illegible] of my own affairs.

மில்லத் பரிசோதனைகளுக்காக அனுமதிக்கப்பட்டு, 1972ம் ஆண்டு ஜனவரி மாதம் பத்தாம் தேதி தான் வீடு திரும்பினார்கள்.

என்றாலும், துரதிருஷ்டவசமாக தலைவரவர்கள் மார்ச் மாதம் மீண்டும் நோய்வாய்ப்பட்டு மறுபடியும் ஸ்டான்லி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்கள், ஏப்ரல் மாதம் ஐந்தாம் தேதி அதிகாலையில் இறைவனின் நாட்டப்படி அவனது அளவில் சென்றடைந்தார்கள். இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்,

सिस्टर इन्चार्ज के हस्ताक्षर
Signature of Sister I C

डाक्टर इन्चार्ज के हस्ताक्षर
Signature of M.O.I.C

GIPNLK—27/WHND (Paying)/69—22-7-69—50,000

I 1-12-71

hroonehet, L-12-71 MyM
(Laro MrAKAAS)

K. Manoharan M.P.

10, Dr. Bishombher Das Road

Delhi

Your opposition to Govt amendment to Twenfifth Amendment Bill while not much affecting countrys interests will seriously harm minorities interests Stop Appeal Please reconsider and Support Government amendment

Mohomedismail

8-120
34 510
6-90

---

CMP. 1-12-71

II

Mohomedsheriff MP

7 Western Court

New Delhi

Have wired Shri Manoharan appealing Support Governments amendment benefiting minorities. Please meet him try persuade

Mohomedismail

# ஜாஹிர் ஹுசைன் கல்லூரியும் காயிதே மில்லத்தும்

**கேப்டன் N.A. அமீர் அலி**

1970ம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஒருநாள், சென்னை ஸ்டான்லி மருத்துவ மனையின் விசேஷ பிரிவு ஒன்றினுள் நுழையலாமா அல்லது கூடாதா என்று தயங்கியவண்ணம் நாங்கள் சிலர் நின்று கொண்டிருந்தோம். அந்த அறைக் கதவில் ஒரு அட்டை தொங்க விடப் பட்டிருந்தது. அதில் ''பார்வையாளர்கள் தவிர்க்கவும்'' (No Visitors) என்ற வாசகம் பொறிக்கப்பட்டிருந் தது.

கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் மருத்துவப் பரிசோதனைகளுக்காக ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டிருந்தார்கள். கடந்த ஒருவார காலமாக விசேஷ பிரிவு ஒன்றில் அனுமதிக்கப்பட்டிருந்த தலைவரவர்கள் பற்பல ''டெஸ்டுகளுக்கு'' உள்ளாக்கப் பட்ட துடன் சிறந்த ஸ்பெஷலிஸ்ட் மருத்துவர்களின் நேரடிப் பார்வையிலும் வைக்கப் பட்டிருந்தார்கள். எனவே பார்வையாளர் வரிசையாக வந்து அவர்களுக்குத் தொந்திரவும் நோவினையும் கொடுக்கக் கூடாது என்பதற்காகவே டாக்டர்களின் ஆணையில் பேரில் மேலே சொன்ன அட்டை அறை முகப்பில் தொங்க விடப் பட்டிருந்தது.

(அன்றைய முகவை மாவட்டம்) இன்றைய தேவர் திருமகன் மாவட்டத்தைச் சேர்ந்த இளையான் குடியில் கல்லூரி ஒன்றை ஆரம்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தால் உந்தப்பட்ட சில பிரமுகர்கள், அதற்காக முதன் முதலில் காயிதேமில்லத் அவர்களுடைய நல்லாசியையும் ஆலோசனைகளையும் பெற வேண்டும் என்ற புனித நோக்கத்துடன் சென்னை வந்திருந்தார்கள். அச்சமயம் தான் தலைவரவர்கள் மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டிருக்கும் விஷயம் அக் குழுவினருக்குத் தெரிய வந்தது.

நாங்கள் அனைவரும் விசேஷ பிரிவு அறைக்கு வெளியில் தயங்கியபடி நின்று கொண்டிருந் தோம். நாங்கள் வந்திருக்கும் விபரம் அவர்களுக்கு அறிவிக்கப் பட்டதும், எங்களை அறைக் குள் வரும்படி அழைத்தார்கள். நாங்களும் உள்ளே சென்று இருக்கையில் அமர்ந்தோம். சலாத்தைப் பரிமாறிக் கொண்டதுடன் சிறிது நேரம் மௌனம் நிலவியது. எப்பொழுதும் கல கலப்பாகவும் சதா பேசிக் கொண்டுமிருக்கும் தலைவரவர்கள் அன்றைய தினம் பல நிமிடங்கள் மௌனமாகவே அமர்ந்திருந்தது எங்களுக்கு ஆச்சரியமாகவும் இருந்தது; வேதனையாகவும் இருந்தது. உடல் நலக் குறைவின் காரண மாகவே அவர்கள் சோர்ந்தவண்ணம் இருக்கிறார்களோ என நாங்கள் அச்ச முற்றோம்.

சுமார் பத்துப் பதினைந்து நிமிடங்கள் இவ்வாறு சென்றிருக்கும். எங்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை பேச்சை ஆரம்பிக்கலாமா அல்லது வேண்டாமா என்று ஒரு பக்கம் தயக்கம். மற்றொரு பக்கமோ, சூழ்நிலை சரியில்லாததினால், மற்றொரு நாள் வந்து பார்த்துக் கொள்ளலாம் என்ற மயக்கம். எங்களுக்கு ஒன்றும் ஓடவில்லை, தலைவரவர்கள் முன்பு அமைதியாக அமர்ந்திருந் தோம். ஒரு ஞானியின்முன்பு, மகானின்முன்பு, ஒரு மனிதப் புனிதரின் முன்பு அமர்ந்திருப்பது போன்று உணர்ச்சி எங்கள் அனைவரது உள்ளங்களலும் ஊடாடியது. ஒருவித அச்ச உணர்ச்சியையும் மீறி, மன அமைதியும் நிம்மதியும் அவர்கள் முன்பு பேசாமல் இருந்தபொழுது எங்களுக்கு ஏற் பட்டது. எங்கள் அனைவருக்குமே இதே அனுப வும் உண்டானதை பின்னர் நாங்கள் எங்களுக்குள் பேசிக் கொண்ட சமயம் தெரிந்து கொண்டோம்.

தலைவரவர்கள் அப்பொழுதும் வாய் திறக்கு வில்லை. மௌனமாகவே எங்களைப் பார்த்த வண்

ணம் அமர்ந்திருந்தார்கள். அருகிலிருந்த லெட்டர் பேடை எடுத்தார்கள். ஏதோ எழுதவாரம்பித் தார்கள். என்ன எழுதுகிறார்கள் என்பதை ஆரம்பத்தில் எங்களால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. எழுதிமுடித்த தாளை எங்களிடம் நீட்டிய பின்புதான் அதில் என்ன எழுதப்பட்டிருந் தது என்பதைப் புரிந்து கொண்டோம்.

இளையான்குடியிலிருந்து நாங்கள் எதற் காக வந்திருக்கிறோம் என்பதை அவர்கள் தெரிந்து வைத்திருந்தார்கள். எங்களது நோக்கத்தைப் புரிந்து கொண்ட தலைவரவர்கள் இக் கல்லூரி குறித்து சமுதாய மக்களுக்கு ஒரு வேண்டுகோளைத் தங்களது கைப்பட எழுதி எங்கள் முன்பு வைத்து விட்டார்கள்!

சென்னையிலுள்ள புதுக் கல்லூரிக்காகவும் திருச்சியிலுள்ள ஜமால் முஹம்மது கல்லூரிக்கா கவும் மலாயா, பர்மா, சிங்கப்பூர் ஆகிய நாடு களுக்கு அவர்கள் தலைமையில் ஒரு தூதுக் குழு சென்று வந்ததை அந்த வேண்டுகோளில் அவர் கள் நினைவுகூர்ந்திருந்தார்கள். மலபாரிலுள்ள பெர்ரோக் கல்லூரிக்கு சமுதாயம் அள்ளிக் கொடுத்ததை சுட்டிக் காட்டியிருந்தார்கள். அது போல, இப்பொழுது ஆரம்பிக்கப் பட விருக்கும் ஜாகிர் ஹுசைன் கல்லூரிக்கும் தாராள மாக நிதியை நன்கொடையாக அளிக்கும்படி தங்களது வேண்டுகோளில் தலைவரவர்கள் அழுத் தந்திருத்தமாகக் குறிப்பிட்டிருந்தார்கள்.

இறைவன் அருளாலும் காயிதேமில்லத் போன்ற நல்லுள்ளம் படைத்த பெரியோர்கள் துஆ பரக்கத்தாலும் இளையான்குடி நகரில் ஜாஹிர் ஹுசைன் கல்லூரி சீரும் சிறப்புமாக ஆரம்பமாகியது. அது ஆரம்பிக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குள்ளாக காயிதேமில்லத் அவர்கள் மூன்று முறைஅக்கல்லூரிக்கு விஜயம் செய்து சிறப் பித்தார்கள். அக் கல்லூரிக்கான முதல் கட்டிடத் தையே 1970ம்ஆண்டு ஜுலை மாதம் 5ம்தேதியன்று அவர்கள் தான் திறந்து வைத்தார்கள். அவர் களது கரம்பட்டதிலிருந்து இக்கல்லூரி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டே சென்றது. காயிதேமில்லத் தொட்ட தெல்லாம் பொன்னாயிற்று; அதற்கு இக்கல்லூரி யும் விதிவிலக்கல்ல.

கல்வி என்றால் காயிதேமில்லத்திற்கு உயிர் மூச்சு. சமுதாய மக்கள் கல்விக்கேள்விகளில் சிறந்து விளங்கவேண்டும் என தங்களது வாழ் நாள் முழுவதும் அவர்கள் அயராது பாடுபட் டார்கள். அதிலும் குறிப்பாக பின்தங்கிய பிரதேசமான முகவை பகுதியில் இப்படி ஒரு கல்லூரி உருவாகிறது என்றவுடன் அவர் களுக்கு ஏற்பட்ட பூரிப்புக்கு அளவேயில்லை. இந்த ஸ்தாபனத்தின் முன்னேற்றத்திற்காகவும் வளர்ச்சிக்காகவும் தங்களது உடல்நலம் குன்றி யிருந்த போதிலும், தங்களால் இயன்றதையெல் லாம் அவர்கள் செய்தார்கள்.

ஒருவகையில், ஜாஹிர் ஹுசைன் கல்லூரி காயிதேமில்லத்துடைய கடைசிப் பிள்ளை. ஆம்! அவர்களது முயற்சியால் தமிழ் நாட்டிலும் கேரளாவிலும் சுமார் 20 அல்லது 25 கல்லூரி கள் உதயமாயின. அவற்றுள் இளையான்குடி கல்லூரி தான் அவர்களால் இறுதியில் துவக்கி வைக்கப்பட்டது. அதனால்தான் இதை நான் அவர்களது கடைசிக் குழந்தை என்று கூறு கிறேன்.

[பதிப்பாசிரியர் குறிப்பு;-பாளையங்கோட்டையி லுள்ள சதகத்துல்லாஅப்பா கல்லூரியே தலைவரவர் களினால் ஆரம்பித்து வைக்கப்பட்ட கடைசி கல்லூரியாகும்]

காயிதேமில்லத் அவர்களது மறைவுக்காக இரங்கல் தீர்மானம் நிறைவேற்ற ஜாஹிர் ஹுசைன் கல்லூரி ஆசிரியர்களும், மாணவர் களும், சிப்பந்திகளும் கல்லூரி வளாகத்தில் ஒரு முகமாகக் கூடி நின்றோம். பிரின்சிபால் என்ற முறையில் தீர்மானத்தை நான் முன் மொழிந்து பேசினேன். அப்பொழுது ''மறைந்த தலைவரின் குடும்பத்தினருக்கு எங்களது ஆழ்ந்த அனுதாபங்களை காணிக்கையாக்கிக் கொள் கிறோம்'' என்ற வாசகத்தைப் படித்தவுடன் என்னுள் பளிச்சென ஒரு எண்ணம் எழுந்தது.

''தலைவரின் குடும்பத்திற்கு'' என்னும் போது நாமும் அதில் ஒரு அங்கமாகத் தானே இருக்கிறோம் என்ற சிந்தனை என்னுள் எழுந்தது. தலைவரின் குடும்பம் என்றால் யார்! நாமும்தான் அக்குடும்பத்தில் ஒருவராயிற்றே! பின் யாருக்கு யார் ஆறுதல் சொல்லிக் கொள்வது! தேற்றிக் கொள்வது? இந்திய இஸ்லாமிய சமுதாயமே தலைவரின் குடும்பம்தான். இக் குடும்பத்திற்கு அவர்கள் தான் தலைவர்; குடும்பத்தின் ஆணிவேர்.

காய்ந்துவிடும் பொழுது அது யாரை பாதிக்கிறது? யாரை பாதிக்காமல் விடுகிறது? எல்லோரையுமே ஆட்டி அசைத்துவிட்டது என்பதில் சந்தேகமேயில்லை. எனவே, தலைவர் மறைவுக்கு அனுதாபம் தெரிவிப்பது என்பது நமக்கு நாமே ஆறுதல் சொல்லிக் கொள்வது போலாகும். இதில் என்ன சந்தேகம்?

[Crescent ஆங்கில வார இதழ் 14-5-72]

## ஆட்டிற்கு 'கோட்' மாட்டலாமா என்ற ஆராய்ச்சி!

1935ம் ஆண்டு கோவை விவசாயக் கல்லூரியில் நான் சேர்ந்து படித்தேன். நான் படிப்பதற்கும் அதை தொடர்வதற்கும் காயிதேமில்லத் துணை நின்றார்கள். நான் சென்னை செல்லும் சமயமெல்லாம் அவர்களை சந்தித்து உரையாடாமல் வர மாட்டேன்.

ஒரு சமயம் அவர்களுடன் நான் பேசிக் கொண்டிருந்த பொழுது ஆட்டுக்கு கோட் மாட்டுவது என்ற ஆராய்ச்சி பற்றி தெரியுமா என்று கேட்டார்கள். பின்னர் பாராளுமன்ற உறுப்பினர்களிடையே நடைபெற்ற சுவையான நிகழ்ச்சி ஒன்றினைக் கூறினார்கள்.

ஒரு விவசாய கருத்தரங்கில் பாராளுமன்ற உறுப்பினர்கள் பலரும் கலந்து கொண்டார்கள். லால்பகதூர் சாஸ்திரியும் அதில் பங்கு பெற்றாராம். வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் ஆட்டு தோலின் தரம் பற்றி விவாதம் நடைபெற்றது. நமது கிராமப்புற ஆடுகள் புல் வெளியில் மேய்ந்து கொண்டிருக்கும் பொழுது, ஒருவகை பூச்சிகள் ஆடுகளின் மீது தொற்றிக் கொண்டு கடித்து விடுகின்றன. இதன் விளைவாக ஆட்டின் தோலில் ஓட்டை ஏற்பட்டுவிடுகின்றது. ஓட்டை இருக்கும் ஆட்டு தோல் வெளி நாடுகளில் விலை போகாது தேங்கி விடுகின்றது. இதற்காக என்ன செய்யலாம் என்பது தான் அந்த கருத்தரங்கத்தின் முக்கிய நோக்கமாகும்.

சில பாராளுமன்ற உறுப்பினர்கள் ஆட்டின் தோலைப் பாதுகாப்பதற்காக அதன் மீது ஒரு கவசத்தை மாட்ட வேண்டும் என யோசனை சொன்னார்களாம். இராணுவ முகாம்களில் ஏராளமான துணிகள் மிச்சமாகி விடுகின்றன. தேங்கி விடுகின்றன. இவற்றை ''கோட்டாக'. தைத்து ஆடுகளுக்கு மாட்டலாம் என்று சிலர் கருத்து தெரிவித்தார்களாம். பூச்சிகளில் இருந்து ஆடுகளைக் காப்பாற்ற வேண்டுமானால் பாதுகாப்பு கவசம் அவசியமே என்ற முடிவுக்கு அநேகமாக எல்லோருமே வந்து விட்டார்களாம்.

அப்பொழுது காயிதேமில்லத் எழுந்து ''நீங்கள் கூறும் யோசனை நல்லது தான். ஆனால் இன்று நமது நாட்டில் ஆடுகளை மேய்க்கும் சிறுவன் கோவணத்துடன் நின்று கொண்டிருக்கிறான். அவனுக்கு உடுத்துவதற்கும் போதிய துணியில்லை. ஆனால் நாம் இன்று ஆடுகளுக்கு ''கோட்'' மாட்டி விட்டால் நல்லது என்று ஆராய்ச்சி செய்துக் கொண்டிருக்கிறோம் என்று கூறியதும் எல்லோரும் ''கொல்'' எனச்சிரித்து விட்டார்களாம்! இந்த யோசனை எவ்வளவு தூரம் அனுபவசாத்திய மற்றது என்பதை அப்பொழுதுதான் அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

மற்றொரு சமயம் நான் சென்னை சென்றிருந்த போது அவர்களைப் போய்ப் பார்த்தேன். பேசிக் கொண்டிருக்கும் பொழுது ''மதராஸுக்கு எதற்காக வந்தாய்? என்று கேட்டார்கள். ''சும்மாதான்'' என்று பதில் சொன்னேன். யாரும் சும்மா மதராஸுக்கு வரமாட்டார்கள் என்று காயிதேமில்லத் பதில் கூறினார்கள். ''எனக்கு ஒரு புரமோஷன் கிடைக்க வேண்டும், அது வேலையாகத்தான் வந்தேன்'' என்று கூறினேன். விபரம் என்ன என்று விசாரித்தார்கள். விளக்கமாகக் கூறினேன். ''சரி சம்பந்தப்பட்ட ஆபீஸுக்கு போய் அப்ளிகேஷன் கொடுத்து விட்டுப் போ'' என்றார்கள். ஏதோ என்னை வாழ்த்திச் சொல்லுகிறார்கள் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

அன்று மாலை நான்கு மணி அளவில் சம்பந்தப்பட்ட அரசாங்க அலுவலகத்திற்குச் சென்று எனது விஷயமாக அதிகாரியை சந்தித்த பொழுது, காயிதேமில்லத் அவர்கள் எனக்காக பகல் இரண்டு மணிக்கே தங்களது சொந்த செலவில் காரில் வந்து அந்த அதிகாரியை சந்தித்து விட்டு போன விபரம் தெரிய வந்தது. அவர்களின் பெருந்தன்மைதான் என்னே! சொல்லிக் காட்டாமல் செய்யும் பரோபகாரங்கள் தான் என்னே!

[டாக்டர் வருசை முஹம்மது M.Sc., (Ag) Ph.D.]

# பாம்பன் தோணிப் பயணம்
# மறக்க முடியாத நிகழ்ச்சி

மண்டபத்திலிருந்து பாம்பனுக்கு தோணியில் சென்ற சம்பவத்தை நினைத்தால் எனக்குப் புல்லரிக்கிறது. இரவு எவ்வளவு நேரமானாலும் பாம்பனுக்கு வந்துதான் தீர வேண்டும் என அவ் வூர் மக்கள் பிடிவாதமாக இருந்தார்கள். தலைவ ரவர்களை வரவேற்க எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தார்கள். பாம்பனுக்கு இரவு ரயில் கிடையாது. இதற்கிடையில் அன்றைய தினம் கடல் கொந்தளிப்பாக இருந்தது. இச் சமயம் தோணியில் செல்வது அபாயகரமானது என அனுபவமுள்ளவர்கள் பலரும் சொன்னார் கள். மண்டபத்திலிருந்து பார்த்தால் கடலுக்கு அப்பால் மூன்றாவது மைலில் பாம்பன் தெரியும்; இரவு விளக்குகளுடன் பாம்பன் கரையில் காயிதே மில்லத்தை வரவேற்பதற்காக மக்கள் காத்து நின்றதை இக் கரையிலிருந்து பார்க்க முடிந்தது.

நாம் அங்கு போகவில்லை என்றால் மக்கள் ஏமாந்து போவார்கள் என்றும் கண் டிப்பாக பாம்பன் போகத்தான் வேண்டுமென்றும் காயிதே மில்லத்தும் சொல்லி விட்டார்கள், கடல் கொந்தளிப்பாக இருந்தும்கூட 22 தோணிகளில் நாங்கள் கடல் பயணத்தை மேற் கொண்டோம். படகில் ஆட்டம் அதிகமாக இருந்தது. ஒருவாறு அக்கரையை அடைந்தோம். மகத்தான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

அதை முடித்துக் கொண்டு மண்டபம் திரும் பும் வழியில் காயிதேமில்லத் அமர்ந்திருந்த படகு கவிழ்ந்து விட்டது. தண்ணீரில் அவர்கள் நன்கு நனைந்து விட்டார்கள். பக்கத்துப் படகுக்காரர் கள் தலைவரவர்களை தூக்கி பக்கத்திலிருந்த தோணிக்கு மாற்றி விட்டார்கள். தோணி கவிழ்ந்த செய்தி ''வயர்லஸ்'' மூலம் மண்டபம் கரையை எட்டி விட்டது. மக்களெல்லாம் கொதித்துப் போயிருந்தார்கள். ஏதோ சதிவேலை நடப்பதாக மக்கள் சந்தேகப் பட்டார்கள். ஒரு வாறு தோணி கரை சேர்ந்தது. தோணி ஓட்டியை கரையிலுள்ளவர்களும்கூட வந்தவர்களும் கோபத் தோடு ஏச முற்பட்டனர். காயிதே மில்லத் அவர் கள் உடனே தலையிட்டு தோணி ஓட்டியைத் திட்ட வேண்டாம் என்றும் அவர் மீது தவறு இல்லை என்றும் சொன்னார்கள், அதன் பிறகுதான் அவ ரால் தப்ப முடிந்தது. பெரிய ஆபத்திலிருந்து தப்பிய மகிழ்ச்சியில் மக்கள் நிம்மதிப் பெரு மூச்சு விட்டார்கள். ஆனால் காயிதேமில்லத் அவர் களோ இதை பெரிது படுத்திக் கொள்ளவேயில்லை.

ஆர். எஸ். மங்கலத்தில் சாகுல் ஹமீது என்ற இளைஞர் ஒருவர் இருந்தார். முஸ்லிம் லீக் மீது தீவிரமான காதல் கொண்டவர். காயிதே மில் லத் மீதும் உயிரையே வைத்திருந்தார். அவர் ஒரு டீ கடையில் வேலை செய்து கொண்டிருந் தார், மிகவும் ஏழை. அவருக்கு ஒரு ஆசை. அவரது திருமண நிகழ்ச்சியில் காயிதேமில்லத் அவர்கள் கலந்து கொள்ள வேண்டும், என்பதா கும். ஒரு டீ கடையில் வேலை செய்பவன் கல்யா ணத்திற்கு அகில இந்தியத் தலைவரை எப்படி அழைப்பது என்று தெரியாமல் அவர் திண்டாடிக் கொண்டிருந்தார். ஆனால் அதே சமயம் தலைவ ரவர்கள் எப்பொழுது வருகிறார்களோ, அப் பொழுதுதான் கல்யாணம் என்று தமது திரும ணத்தை அவர் ஒத்தி வைத்து விட்டார். இது விபரம் எனக்கு தெரிய வந்தது. நான் மதரூஸ் சென்று தலைவரவர்களிடம் இவ் விவரங்களைக் கூறினேன். அவர்கள் மகிழ்ச்சி பொங்க எங்கள் அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள். அதற் கென ஒரு தேதியையும் தந்தார்கள்.

டீக் கடை சாகுல் ஹமீது திருமணத்திற் காக காயிதேமில்லத் ஆர். எஸ். மங்கலத்திற்கு வருகிறார்கள் என்ற செய்தி கிடைத்ததும் அவ் வூர் பணக்காரர்கள் சிலருக்குப் பொறுக்கவில்லை. வர வேண்டாம் என பலரை விட்டும் கடிதங்கள் எழுதச் சொன்னார்கள், தந்தியும் கொடுக்கப் பட்டன. அதையும் மீறி அவர்கள் வருகிறார் கள் என்றதும் வேறு பல நிகழ்ச்சிகளை அன்றைய தினம் வைத்துக் கொண்டு அதிலும் காயிதே மில்லத் கலந்து கொள்ளும் வகையில் பல சூழ்ச்சி களை செய்தார்கள் வேறு பல நிகழ்ச்சி சிகளில் காயிதே மில்லத் கலந்து கொண்டாலும், முஸ்லிம் லீக் ஊழியன் திருமணத்திலும் கலந்து கொண்டார்கள். அவரை வாழ்த்திப் பேசினார் கள். ஏழைப் பங்காளன் என்பது காயிதேமில்லத் அவர்களுக்கு பொருந்தும்.

x x x

தேவி பட்டணத்தில் ஒரு நாள் பகல் நேரத் தில் தேர்தல் கூட்டம். காயிதேமில்லத் அவர்கள் நல்ல வெயிலில் மேடையில் பேசிக் கொண்டிருந் தார்கள். அது நோன்பு காலம். தலைவரவர்கள் வேர்க்க விருவிருக்க பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் சட்டென நான் என்னையும் அறியா மல் ஒரு சோடாவை உடைத்து கையில் ஏந்திய படி தலைவரவர்களிடம் நீட்டினேன். என்னை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார்கள். ''நீங்களே குடியுங்கள்'' என்று ஒரு மாதிரியாக என்னை பார்த்துச் சொல்லிவிட்டு தமது பேச்சைத் தொடர்ந்தார்கள், அதுபொழுதுதான் எனக்கு ஞாபகம் வந்தது. ''அடடா நோன்பு நேரத்தில் என்ன தப்புச் செய்து விட்டோம்'' என்பது.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு நாங்கள் அன்றை யத் தினம் பல ஊர்களுக்கும் சென்று கூட்டங் களில் கலந்து கொண்டோம். ஆனால் தலைவரவர் கள் முன்பு செல்லவே எனக்கு வெட்கமாக இருந் தது. இரவுவரை அவர்கள் கண்ணில் படாம லேயே தப்பித்துக் கொண்டு வந்தேன். இரவு படுக்கப் போகும் முன்பு, ''பெரிய குளத்தாரை எங்கே காணவில்லை'' என்று விசாரித்து இருக் கிறார்கள். என்னை சிலர் அழைத்துச் சென்றார் கள். தலைவரவர்கள் முகத்தில் எப்படி முழிப்பது என்று நான் வெட்கப்பட்டவனாக அவர்கள் முன்பு போய் நின்றேன். அவர்கள் கண்டிப்பார் கள், கோபப்படுவார்கள் என்று எதிர்பார்த்தேன். அவர்கள் வேறொன்றும் சொல்லவில்லை. கீழ்கண்ட வார்த்தைகளை மட்டும் உதிர்த்தார்கள். ''சமுதாய ஊழியர்கள் இப்படித் தவறு செய்தால் சமுதாயம் மன்னிக்காதே''.

அந்த வார்த்தைகள் என் மனக்கண் முன்பு என்றும் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது!

*[பெரியகுளம் M. அப்துல் ரகுமான் சாகிபு]*

---

## மருத்துவரின் அதிகப் பிரசங்கித்தனம்!

''நாட்டில் வகுப்புவாத சக்திகள் மிகைத்து விட்டன, ஜாதி வெறியையும் மதத்தின் பெய ரால் கலகங்களையும் குழப்பங்களையும் உருவாக்க முயற்சிக்கும் தீய சக்திகளைக் கட்டுப் படுத்தி வைக்க வேண்டும். ஒடுக்க வேண்டும் என குரல் எழுப்பும் பொழுது, ஒரு சிலர் உடனே முஸ்லிம் லீகை கலைத்துவிட வேண்டும் என அறிக்கைகள் விடுவது இந் நாட்டில் வாடிக்கையாகி விட்டது.

இது எப்படி இருக்கிற தென்றால், நோயாளி ஒருவன் சிகிச்சைக்காக மருத்துவரிடம் சென்ற சமயம், உடம்பு இருந்தால், எல்லாவிதமான நோய்கிருமிகளும் ஏதாவது தொல்லை கொடுத்துக் கொண்டுதான் இருக்கும்,உடலைத் தீர்த்துக் கட்டி விட்டால், நோயே இல்லாது அகற்றி விடலாம் என்று அவர் புத்திமதி கூறினாராம். அது போல ஒரு சிலரின் அதிகப் பிரசங்கித் தனமான அறிக்கை களும் வாதங்களும் இருக்கின்றன.

*[1962ம் ஆண்டு ஆரம்பத்தில் காயிதேமில் லத் அவர்கள் விடுத்த அறிக்கை ஒன்றில் மேற் கூறிய உதாரணம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.]*

## கோயங்காவிற்கு வந்த கோபம்!

ஒருமுறை பத்திரிகை உலக மன்னன் ராம் நாத் கோயங்கா, அரசியல் நிர்ணய சபையில் தலைவர் அவர்கள் பேசிவிட்டு உட்கார்ந்தவுடன், அவர்கள் அருகில் வந்தமர்ந்து, ''இஸ்மாயில் சாஹிப்! உங்களை பேச விடக் கூடாது என நாங்கள் நினைக்கின்றோம். ஆனால் நீங்கள் சொல்ல வேண்டியதை சொல்லிவிட்டுத் தான் உங்கள் இடத்தில் அமருகிறீர்கள்.

எங்களை ஒப்புக் கொள்ளச் செய்து விடலாம் என்றோ அல்லது மனதை மாற்றி விடலாம் என்றோ எண்ணி நீங்கள் பேசவில்லை. அவ்வளவு தூரத் திற்கு நீங்கள் விஷயம் தெரியாதவர்கள் அல்ல. நீங்கள் ஏன் பேசுகிறீர்கள் என்பதையும் நாங்கள் தெரிந்தே வைத்திருக்கிறோம். நீங்கள் ஒவ்வொன்றையும் இங்கே பதிவு (ரெக்கார்டு) செய்து விடுகிறீர்கள் என்பதையும் நாங்கள் அறிவோம்.'' என்று ஆத்திரத்தோடு கூறினார். அப்போது தலைவர் அவர்கள் வெற்றிப் புன் னகை புரிந்தார்கள். அவர்கள் உள்ளம் எல்லாம் வல்ல இறைவனை வாழ்த்திற்று.

**துபாஷ் C. S. தாஜுத்தீன்**

*[25—08—69 உரிமைக்குரல்]*

# இந்திய முஸ்லிம் சமுதாயத்தின் வழிகாட்டும் ஒளி விளக்கு!



**M. P. அஹமது குரிக்கல்**
*(கேரள முன்னாள் அமைச்சர்)*

சமுதாயப் பெருந்தலைவரான காயிதேமில்லத் அவர்கள் எடுக்கும் முடிவுகள் பல, உணர்ச்சிப் பெருக்கிலும், வாலிப முறுக்கிலும் உள்ள என் போன்றோருக்கு சில சமயங்களில் மிக மிகக் கசப்பானதாக இருக்கும். அவற்றை ஏற்றுக் கொள்ளவே இதயம் இடம் தராது. என்ரு லும் தலைவரின் ஆணைக்கு கீழ்ப்படிந்தே ஆக வேண்டும் என்ற கடமையுணர்வில் அவற்றை நாங்கள் ஏற்றுக் கொள்வோம். பல மாதங்கள் கடந்த பிறகுதான் தலைவர் காயிதேமில்லத் அவர்கள் எடுத்த அந்த முடிவுகள் எவ்வளவு பொருத்தமானவை - சிறப்பானவை, தூர திருஷ்டி நிறைந்தவை - என்பது எங்களுக்குப் புரியும். அப்போது தலைவரவர்கள் அத்தகைய முடிவை எடுத்திருக்காவிட்டால் நிச்சயம் பேரழி வும், சீர்குலைவுமே ஏற்பட்டிருக்கும் என்பது விளங்கும். எனவே, காயிதேமில்லத் அவர்களின் முடிவு எதுவாக இருந்தாலும் அதனை கண்ணை மூடிக் கொண்டு ஏற்றுக் கொள்வோம். எங் களுடைய வெற்றிக்கு நாங்கள் அவ்வாறு நடந்து கொள்வதுதான் காரணம்.

தமிழ்நாடு முஸ்லிம் லீக் தலைமையகமான **எண்.** 8 மரைக்காயர் லெப்பை தெரு கட்டிடத் தில் வைத்து இந்திய யூனியன் முஸ்லிம் லீக் செயற்குழு எடுத்த முடிவு இந்திய அரசியலின் போக்கையே திசைத் திருப்பி விட்டது.

அன்றைக்கு இந்தியா முழுவதிலும் மத்தியி லிருந்து மாநிலங்கள் ஈருக காங்கிரஸ் எதேச் சாதிகார ஆட்சி நீக்கமற நிறைந்திருந்தது. அந்த ஆட்சியை அரசியல் ரீதியாக எதிர்த்து முறி யடிக்க வழியொன்றும் புரியாமல், தெரியாமல்- நாட்டிலுள்ள எதிர்க்கட்சிகள் எல்லாம் திணறிக் கொண்டிருந்தன. அத்தகைய நெருக்கடியான வேளையில்தான் காயிதேமில்லத் அவர்கள் ஒப்பற்ற ஒரு அரசியல் தீர்மானத்தை அந்த ஹாலில் வெளியிட்டார்கள்.

கொள்கை, கோட்பாடுகள் எத்தகையவை களாக இருந்தாலும் அவற்றையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டு, பொதுவாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு குறைந்தபட்சத் திட்டத்தின் கீழ் எல்லா எதிர்க் கட்சிகளும் ஒன்றுபட்டு காங்கிரஸை எதிர்த்து முறியடிக்க வேண்டும் என்பதுதான் காயிதே மில்லத் அன்று வெளியிட்ட முடிவு. அவசிய மானல் இந்த அடிப்படையில் கம்யூனிஸ்டு ளுடனும் கூட்டுச் சேரலாம் என தலைவர் காயிதேமில்லத் அவர்கள் விளக்கம் தந்தார்கள்.

காயிதேமில்லத் அவர்களின் அந்த முடிவு என் போன்ற வாலிபர்களுக்கு உவப்பானதாக இல்லை, கசப்பானதாக இருந்தது. கம்யூனிஸ்டு களோடு உறவு கொள்வது கொஞ்சமும் பிடித்த மில்லாததாக இருந்தது என்ருலும் தலைமையின் ஆணைக்கு அடிபணிந்தாக வேண்டும் என்ற கடமையுணர்வில் அந்த முடிவை சிரமேற் கொண்டு செயல்பட்டோம்.

பல மாதங்கள் கழித்து, பொதுத் தேர்தல் முடிவடைந்த பின்புதான் காயிதேமில்லத் அவர் களின் முடிவு எத்தகைய அரசியல் தூர நோக்குப் படைத்தது என்பது எங்களுக்கெல்லாம் புரிந் தது.

காயிதேமில்லத் அவர்கள் எடுத்த முடிவின் காரணமாக இந்தியாவின் அரசியல் சித்திரமே புரட்சிகரமான முறையில் - யாரும் அதற்கு முன்

கனவு கூடக்கண்டிராத வகையில் - உருமாறி விட்டது! கேரளத்தில் புத்தாட்சி மலர்ந்தது. தமிழகத்தில் தி.மு.க. அரசு உதயமாயிற்று. மற்றும் பல்வேறு மாநிலங்களில் புதிய, புதிய அரசுகள் முகம் காட்டின. காங்கிரஸின் முதுகெலும்பு பல்வேறு மாநிலங்களில் முறித்தெறியப் பட்டது. இந்த அமைதியான ஓட்டுப்புரட்சிக்கு வித்திட்ட அரசியல் வித்தகர் காயிதேமில்லத் அவர்கள் தான்.

அதுமட்டுமல்ல, கேரளத்தில் முஸ்லிம் லீக்கர்களாகிய எங்களுக்கு இன்று இத்தகைய அமைச்சர் அந்தஸ்துகளும், நாட்டு மக்களுக்கும், முஸ்லிம் சமுதாயத்திற்கும் சேவை செய்யக் கூடிய நல்வாய்ப்பும் கிடைத்து இருக்கிறது என்றால், அதற்கு காரணம் காயிதேமில்லத் அவர்களின் அந்த சென்னைத் தீர்மானந்தான்.

கம்யூனிஸ்டுகளுடன் உறவு கொள்ள காயிதேமில்லத் அவர்கள் அனுமதி நல்கியபோது, வாலிப முஸ்லிம் சமுதாயம் கம்யூனிஸத்திற்கு இரையாகிவிடும், கம்யூனிஸ்டுகள் முஸ்லிம்களை விழுங்கி ஏப்பமிட்டுவிடுவார்கள் என்றெல்லாம் பிறர் எச்சரித்தனர். நாங்களும் கூட அச்சமடைந்தோம். ஆனால், அது தவறு என்பது தற்போது நிரூபணமாகியுள்ளது. முஸ்லிம் லீக் எடுத்த முடிவினால் கம்யூனிஸ்டுகளின் வலிமை கட்டுப்படுத்தப் பட்டுள்ளது. அதன் சக்தி பலஹீனமாக்கப் பட்டுள்ளது. முஸ்லிம்லீக் அன்று அந்த கூட்டில் சேரவில்லையென்றால் இன்று கேரளத்தில் கம்யூனிஸ்டுகளின் தட்டிக் கேட்பாரில்லாத தனியாட்சி தான் நடைபெற்றுக் கொண்டிருக்கும், ஆகவே கம்யூனிஸ்டுகளின் தனிப்பட்ட பிடியிலிருந்து முஸ்லிம்களை மட்டுமல்ல, கேரளத்தையும் சேர்த்துக் காப்பாற்றியுள்ளது முஸ்லிம் லீக்.

இது போன்று தலைவர் காயிதேமில்லத் அவர்கள் எடுக்கும் முடிவுகளிலுள்ள நன்மைகளும், சிறப்புகளும் நமக்குத் தெரியப் பல மாதங்கள் பிடிக்கின்றன. ஆகவே, நான் உங்களைக் கேட்டுக் கொள்வதெல்லாம், தலைவர் காயிதேமில்லத் அவர்கள் எடுக்கின்ற முடிவுகள் உங்களுக்குப் பிடித்தமானதாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் அதனை கண்ணை மூடிக் கொண்டு ஏற்றுக் கொள்ளுங்கள். விளைவை அல்லாஹ்விடம் விட்டுவிடுங்கள். நிச்சயம் அதனால் சமுதாயத்திற்கு நன்மையே கிடைக்கும், அதுதான் இஸ்லாமியப் பண்பாடும் ஆகும்.

நமது பயணம் இன்னும் இறுதிக் கட்டத்தை அடைந்துவிடவில்லை. இன்னும் நாம் நடுவழியில் தான்இருக்கிறோம். கேரளத்திலும்தமிழகத்திலும் நமக்கு ஓரளவு சாதகமான சூழ்நிலை தோன்றினாலும், பிற மாநிலங்களிலுள்ளமுஸ்லிம்களுக்கு இன்னும் விடிவு ஏற்படவில்லை. அவர்களின் துன்பம் தீரவில்லை. துயரம் மறையவில்லை. அவர்களுக்காகவும் நாம் அதிக வலிவோடு, தியாக உணர்வோடு போராட வேண்டியுள்ளது. அதற்கு தலைமைக்கு அடிபணியும் கட்டுப்பாடும் செயல் முறையும் தான் வேண்டும்.

நமது மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரிய தலைவர் காயிதேமில்லத் அவர்களின் அரும் தலைமையின் கீழ், அவர்களின் வழி காட்டுதலின் கீழ் நாம் தொடர்ந்து வெற்றி நடைபோட வல்ல நாயன் அருள் பாலிப்பானாக!

நன்றி:- ஜனாப் P. N. I. அபூதாலிப் ஜனாப் M. A. அக்பர் ஆகியோரை ஆசிரியர்களாக கொண்டு வெளிவந்த ''அல்ஹாஜ் காயிதேமில்லத் பிறந்தநாள் விழாப் பெருமலர்'' 1974)

## வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்ட விநோதம்!

முஸ்லிம் லீக்கின் மாநில செயற்குழுவில் கண்ணியத்திற்குரிய தலைவர் அவர்கள், அனைவரின் கருத்தையும் கேட்டார்கள். ஆலை அரசர்களையும், எஸ்டேட் முதலாளிகளையும், பஸ் அதிபர்களையும் இனம் காட்டி பலர் ஆலோசனைகள் சொன்னார்கள். மேலும் சிலர் தலைவருடன் உடன் இருந்து கொண்டே தங்களுக்கு சீட் கிடைக்காதா என்ற உள்நோக்கத்தில் பத்திரிகைகளிலெல்லாம் இவர் போட்டியிடுவாரா? அவர் போட்டியிடுவாரா? என்று செய்திகளை பரப்பி குழப்பங்களை விளைவித்துக் கொண்டிருந்தனர்.

இரண்டு நாள் செயற்குழு விவாதம் முடியும் நிலையில் கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் (ரஹ்) அவர்கள், ஏற்கனவே பாராளுமன்ற உறுப்பினராக இருந்த S. M. ஷரீப் அவர்களை அழைத்து ''நீங்கள் போட்டியிட விரும்பவில்லையா?'' என்று கூட்டத்தில் வைத்து கேட்டார்கள். ஆனால் S. M. ஷரிப் அவர்களோ நாமினேஷன் தாக்கல் செய்ய ஜாமீன் தொகை கூட என்னிடம் தற்போது இல்லை; இந்நிலையில் போட்டியிட எனக்கு எந்த வசதியுமில்லை'' என்று சொல்லிவிட்டு அமர்ந்து விட்டார்.

கூட்ட முடிவில் இரவு 11 மணி அளவில் தலைவர் காயிதேமில்லத் அவர்கள் ''5 ஆண்டு காலம் டெல்லி பாராளுமன்ற உறுப்பினராக இருந்தும் தனக்கு தற்போது ஜாமீன் தொகை கட்டக் கூட வசதி இல்லை என்று கூறிய S. M. ஷரீப் அவர்கள் தான் பெரியகுளம் பாராளுமன்ற தொகுதிக்கு தகுதி மிக்க வேட்பாளர்'' என்று அனைவரும் வியக்கும் வண்ணம் அறிவிப்பு செய்தார்கள். தலைவரின் அறிவிப்பு யாரும் எதிர்பாராத வண்ணம் இருந்தது. இந்நிலையில் S. M. ஷரீப் அவர்கள் மீண்டும் விளக்கமளிக்க முற்பட்டபோது தலைவர் அவர்கள் அவரை எதுவும் பேச அனுமதிக்கவில்லை.

**மதுரை அலி அக்பர்**

நன்றி : ''இஸ்லாமியர் இதயக்குரல்'' 1-6-87

# நமது நன்றிக் கடன்

ஹாஜி **E. அஹமது** B.A., B., L. M. L. A.
முன்னாள் கேரள அமைச்சர்

*[1982ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 13 முதல்14ம் தேதி வரை கள்ளிக்கோட்டையில் நடைபெற்ற கேரள மாநில முஸ்லிம் லீக் மாநாட்டின்போது வெளியிடப்பட்ட மலரில், E. அஹமது அவர்கள் தீட்டிய கட்டுரையின் சுருக்கம் இங்கே தரப்பட்டுள்ளது.]*

நான் வெளிநாடுகளுக்கு சென்றிருந்த பொழுது, ஹாங்காங்கில் முஸ்லிம் நண்பர் ஒருவரை சந்திக்க நேர்ந்தது. அவரிடம் பேசிக் கொண்டிருந்த சமயம், இந்திய அரசியல் நிலவரம் பற்றி விவாதம் திரும்பியது. பாரதத்தில் வாழும் முஸ்லிம்கள் தங்களுக்கென ஒரு அரசியல் கட்சியை வைத்துக் கொண்டிருப்பதை அந் நாட்டிலுள்ள பெரும்பான்மை சமுதாயத்தினர் விரும்பமாட்டார்களே?'' என்று அவர் கேட்டார்.

அதற்கு நான் இவ்வாறு பதில் சொன்னேன் :- ''பாரதம் ஒரு மதச்சார்பற்ற நாடு. அங்கு முஸ்லிம்கள் மிகப்பெரிய சிறுபான்மை சமூகத்தவர். அவர்களது நலன்களையும் உரிமைகளையும் பாதுகாக்கவும் எடுத்துச் சொல்லவும் ஒரு கட்சி வேண்டுமா? இல்லையா? மற்றவர்களுக்கு அது பிடித்திருக்கிறதா? அல்லது அவர்களுக்கு அது விருப்பமில்லாததாக இருக்குமோ என்று யோசித்துக் கொண்டிருக்க முடியாது. எங்களுக்கென ஒரு அரசியல் கட்சி இந்தியாவில் இருப்பது காலத்தின் கட்டாயம்.''

''முஸ்லிம் லீக் என்ற பெயரில் ஒரு அரசியல் கட்சியை இந்தியாவில் வைத்துக் கொண்டு செயல்படுவது மிகவும் சிரமமான காரியமாயிற்றே'' என்று அந்த நண்பர் மீண்டும் ஆச்சரியத்துடன் வினவினர். அவரைப் பற்றி மேலும் விசாரித்த பொழுது, இந்தியா விடுதலை பெற்ற பின்னர், இங்கிருந்து குடிபெயர்ந்து பாக்கிஸ்தான் சென்று அங்கு அவர் வாழ்ந்து வருகிறார் என்ற விஷயங்கள் தெரியவந்தன,

இந்நாட்டிலேயே தங்கி தங்களது உரிமைகளைப் பெற்று வாழ வேண்டும் என்ற திராணியும் நம்பிக்கையும் இல்லாதவர்கள் தான், நம்மைப் பார்த்து முஸ்லிம் லீக் என்ற பெயரில் இங்கு அரசியல் கட்சியை வைத்துக் கொண்டு எப்படி நடத்துகிறீர்கள் என ஆச்சரியப்படுகிறார்கள்!

1947ம் ஆண்டில், தங்களது எதிர்காலம் எப்படி அமையும் என அன்றையத்தினம் இந்நாட்டில் வாழ்ந்த நாலரைகோடி இந்திய முஸ்லிம்கள் கண் கலங்கி நின்ற நேரத்தில்; மனதிற்கு ஆறுதல் அளிக்கும் குரல் தெற்கேயிருந்து ஒலித்தது; ஆம்! ஒளி தெற்கே இருந்துதான் தோன்றியது. கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் அந்த சோதனையான காலகட்டத்தில் இந்திய முஸ்லிம்களை வழி நடத்த முன்வந்தார்கள். வேதனைகளையும் சோதனைகளையும் தாங்களே மேற்கொள்ள சித்தமாகிவிட்டார்கள்.

அந்த மனிதருடைய வழிகாட்டுதலை மலபார் முஸ்லிம்களும்ஏற்றுக்கொண்டார்கள்; தமிழ்நாட்டு முஸ்லிம்களும் ஏற்றுக் கொண்டார்கள். அதற்குப் பல ஆண்டுகளுக்குப் பிறகுதான் பாரதத் திருநாட்டின் ஏனைய பகுதிகளில் வாழும் இஸ்லாமியர்கள் தங்களது தன்னம்பிக்கையை மீண்டும் பெற்றார்கள்; தைரியத்தை அடைந்தார்கள். முஸ்லிம் லீகின் கொடியைத் தூக்கிப் பிடிக்க முன் வந்தனர். என்றாலும், ஹாங்காங்கில் நான் சந்தித்த நண்பர்களைப் போன்றவர்கள், நாட்டை விட்டே ஓடிவிட்டனர்!

இந்தியாவில் முஸ்லிம் லீக் என்றதொரு அரசியல் அமைப்பு இங்கு வாழும் முஸ்லிம் களுக்கு இருக்கவேண்டுமென காயிதேமில்லத் கூறினர்களே அதனல் அவர்களுக்கு ஏதேனும் ஆதாயம் உண்டா? அரசியல் லாபம் கருதி அவ்வாறு கூறினர்களா, இது குறித்து ஒரு மனிதன் மனத்தூய்மையுடன் சிந்திப்பானே யானல், அப்பொழுதுதான் அவனுக்கு, காயிதே மில்லத்தின் தூரதரிசனமும், நம்பிக்கையும், தைரியமும் புலப்படும்.

முஸ்லிம் லீக் இந்நாட்டில் இருந்துதான் ஆக வேண்டும் என அவர்கள் கூறியதற்காக அவர்கள் எவ்வளவு கஷ்ட நஷ்டங்களை அடைந் தார்கள் என்பது பலருக்குத் தெரியாது இருக்க லாம். அவர்களை நெருங்கி இருந்தவர்களுக்கு இந்த உண்மை அனைத்தும் நன்கு தெரியும்.

ஆட்சியாளர்களை எதிர்த்துக் கொண்டும், எதிர் வரிசையில் அமர்ந்தவாறும், காயிதேமில்லத் எத்துணை இன்னல்களுக்கு ஆளானர்கள் என்பது சொல்லந்தரத்ததன்று. நண்பர்கள் பலரும் அவர் களை விட்டு ஒடிவிட்டார்கள். பணக்காரர்கள் பக்கத் தில் வரப்பயப்பட்டார்கள்; அவர்களை இழித்தும் பழித்தும் பேச ஒரு கூட்டமே தயாரிக்கப்பட்டது, சொல்லம்புகளால் அவர்கள் கடுமையாகத் தாக்கப்பட்டார்கள். அப்பொழுதும் அவர்கள் தைரியத்தை இழக்கவில்லை; நம்பிக்கையை விட்டு விடவில்லை. தங்களது கொள்கையில் இருந்து சிறிதும் பின்வாங்கவில்லை; பிறழவில்லை; தடுமாற வில்லை.

தங்களை தியாகம் செய்து இந்த இஸ்லாமிய சமுதாயத்தை காயிதேமில்லத் வளர்த்தார்கள் என்று சொன்னல், அது மிகையாகாது; உயர்வு நவிற்சியாகிவிடாது; ஓர் உண்மை பகிரங்கப் படுத்தப்படுகிறது என்றுதான் பொருள். இன்றைய தினம் இந்திய முஸ்லிம்கள் தங்களது உரிமை களுக்காகக் குரல் கொடுக்க முடிகிறதென்றல், தங்களது கஷ்டநஷ்டங்களை ஆட்சியாளர்களிடம் தைரியமாகச் சொல்லமுடிகிறதென்றல், இதற் கெல்லாம் அடிப்படை வகுத்துக் கொடுத்தவர் கள் காயிதேமில்லத் ஆகும்.

அவர்கள் தான் நமக்கென ஒரு மேடையை அமைத்துக் கொடுத்தார்கள்; ஒரு கொடியை நம் கையில் ஒப்புவித்தார்கள்; ஒரு ஸ்தாபனத்தின் கீழ் ஐக்கியமாக இருந்து செயல்பட கற்றுக் கொடுத்தார்கள். சோதனையான காலகட் டத்தில் அவர்கள் அவ்வாறு செய்து காட்டவில்லை யென்றல் இந்த சமுதாயமே சிதறுண்டு போயிருக் கும்; மூலைக்கு ஒருவராகப் பிரிக்கப்பட்டுப் போயிருப்பார்கள்; ஏனைய கட்சியினர்களும் சமுதாயத்தலைவர்களும் இந்த ''மில்லத்தையே'' சாப்பிட்டு ஜீரணித்துவிட்டிருப்பார்கள். இதில் யாருக்கும் எந்தவித சந்தேகமும் இருக்கத் தேவையில்லை.

மௌலான அபுல்கலாம் ஆஸாத் காங்கிரஸ் கட்சியில் தான் இருந்தார். அக்கட்சியின் தலைவ ராக நெடுங்காலம் பதவி வகித்தார். பண்டித நெஹ்ரு அமைச்சரவையில் மௌலான ஆஸாத் தமது உயிருள்ளவரை அமைச்சராகப் பணிபுரிந் தார். ஆளுங்கட்சிக்கும் பெரும்பான்மை சமு தாயத்திற்கும் ''ததாஸ்து'' பாடத்தான் செய் தார். தமது சுயமரியாதையை விட்டுக்கொடுத்து ஆளுங்கட்சியில் அக்கிராசனராக வீற்றிருந் தார். ஆனல் இறுதியில் அவருக்குக் கிடைத்த பட்டம் என்ன? வெகுமதி என்ன? ''வகுப்பு வாதி'' என்ற பட்டம் அவருக்கும் சூட்டப் பட்டது. உர்தூ மொழிக்காகவும் அலிகர் முஸ்லிம் பல்கலைக் கழகத்திற்காகவும் சர்க்கார் பணத்தை வாரிக் கொடுத்துவிட்டார் என்ற குற்றச்சாட்டிற்கு மௌலான ஆஸாதும் ஆளா னர்! இதுதான் அவரது சேவைக்குக் கிடைத்த பரிசு.

ஆனல் காயிதேமில்லத் ஆரம்பத்தில் இருந்தே மிகவும் தெளிவாக இருந்தார்கள். தங்களது சமுதாயத்திற்கு சேவை செய்வதை அவர்கள் நிறுத்தவேயில்லை. யார் தம்மை என்ன பட்டம் சூட்டி அழைத்தாலும் அல்லது அவ மானப்படுத்தினலும் தங்களது மனச்சாட்சிப் படி அவர்கள் நடந்தார்கள். சமுதாயத்தின் பக்கமே அவர்கள் சார்ந்து நின்றர்கள். இறுதி யில் தங்களது லட்சியத்தில் அவர்கள் வெற்றியும் பெற்றர்கள். ஆனல் மௌலான ஆஸாத் போன்றவர்களோ தங்களது மனச்சாட்சியை யும் மானமரியாதையையும் பிறந்த சமுதாயத்தை யும் புறக்கணித்து விட்டு பிறரின் மெச்சுதலுக்கு ஆசைப் பட்டு தங்களது வாழ்நாள் முழுவதும் நடந்து கொண்டார்கள். இறுதியில் அவர் களுக்குக் கிடைத்த பரிசு, 'வகுப்புவாதி' என்ற நற்சான்றிதழ்தான்.

இம்மாதிரி ஆசாமிகளைப்பற்றித் தெரிந்து கொள்ளும்பொழுதுதான், காயிதேமில்லத்தின் மேன்மையும் மகத்துவமும் நமக்குப்புரிகின்றது; புலப்படுகின்றது. அப்படிப்பட்டவரின் நினைவை நாம் என்றென்றும் பசுமையாக வைத்துக் கொள்வது ஒன்றே, நாம் அவர்களுக்குச் செய் யும் நன்றிக்கடனகும்; கைமாறகும். 0

# 1947 முதல் 1962 வரை

# ஓர் அரசியல் பார்வை

1947ம் ஆண்டிற்கு முன்பு இந்தியத் திரு நாட்டில் அரசியலில் இரண்டு கட்சிகளே இயங்கி வந்தன. இந்திய தேசீய காங்கிரஸும் அகில இந்திய முஸ்லிம் லீகுமே அவையாகும். இன்று நமது நாட்டில் செயலாற்றிக் கொண்டிருக்கும் எந்த ஒரு அரசியல் கட்சியும் அன்றையத் தினம் கிடையாது. ஏன்? அவை பிறக்கவேயில்லை. கம்யூனிஸ்டு கட்சி என ஒன்று அன்று பெயரளவுக்கு இருந்தது உண்மைதான். அது இன்று இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து நின்று இயங்கி வருகின்றன.

அன்றையத் தினம் ஆட்சியாளர்களாக இருந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசாங்கத்திடமிருந்து பாரத நாட்டிற்கு பூரண சுதந்திரம் வேண்டுமென காங்கிரஸ் கட்சியும் முஸ்லிம் லீக்கும் கோரின. அதற்கான பல முயற்சிகளில் இரு கட்சிகளுமே 1920 முதல் பாடுபட்டு வந்தன; இவ்விரு கட்சிகளாலும் ஒரு உடன் பாட்டிற்கு வரமுடியவில்லை. இத்துறையில் எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சிகள் அனைத்துமே தோல்வியிலும் ஏமாற்றத்திலும் தான் முடிந்தன.

இறுதியாக, 1947ம் ஆண்டு மே மாதம் இந்திய வைஸ்ராயாக மவுண்ட் பேட்டன் பிரபு பதவி ஏற்றதும், 1947ம் ஆண்டு ஜூன் மாதம் மூன்றும் தேதியன்று ஒரு சமரச உடன்பாடு காணப்பட்டது. அதாவது, அன்றையத் தினம் இந் நாட்டின் எதிர்காலத்தை தீர்மானிக்கக்கூடிய வல்லமை பெற்றிருந்த மூன்று தரப்பினர்களும் (பிரிட்டிஷ் அரசாங்கம், இந்திய தேசீய காங்கிரஸ், அகில இந்திய முஸ்லிம் லீக்) ஜூன் மூன்றும் தேதி திட்டத்தை ஏற்றுக் கொண்டார்கள். அதன்படி நடக்க இந்தியாவிலுள்ள இரண்டு அரசியல் கட்சிகளுமே ஸ்தாபன ரீதியாக முடிவுகள் எடுத்தன.

இந்திய தேசிய காங்கிரஸின் அகில இந்திய கவுன்ஸில் (AICC) 1947 ஜூன் 14, 15 தேதிகளில் டில்லியில்கூடி, மவுண்ட்பேட்டன் திட்டத்தை பெரும்பான்மை வாக்குகள் மூலமாக ஏற்றுக் கொண்டது. இத்திட்டத்திற்கு ஆதரவாக 157 வாக்குகளும் எதிராக 29 வாக்குகளும் கிடைத்தன. 32 உறுப்பினர்கள் நடுநிலைமை வகித்தனர்.

அதேபோல, அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸிலும் புது டில்லியில் 1947 ஜூன் 9ம்தேதி கூடி, மவுண்ட்பேட்டன் திட்டத்தை பெரும்பான்மை வாக்குகள் மூலமாக ஏற்றுக்கொண்டது. இத்தீர்மானத்திற்கு ஆதரவாக 400 வாக்குகளும் எதிராக 8 வாக்குகளும் கிடைத்தன.

எனவே, இந்திய தேசீய காங்கிரஸ் கட்சியும் அகில இந்திய முஸ்லிம் லீகும் கையெழுத்திட்டு ஒப்புக் கொண்ட உடன்படிக்கை பிரகாரமே, 1947ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 15ம் தேதியன்று இந்தியா, பாக்கிஸ்தான் என இரு சுதந்திரமான நாடுகள் இந்தியத் துணைக் கண்டத்தில் உதயமாயின. மௌலானா அபுல் கலாம் ஆஸாத் கூறியதுபோல, ''இந்தியாவின் பிரிவினைக்கு முஸ்லிம் லீகைப் போலவே காங்கிரசும் சம அளவில் பொறுப்பாளி என்று தான் சரித்திரம் கூறும்'' என்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமேயில்லை('இந்தியா விடுதலை வெற்றி' பக்கம் 231)

அகில இந்திய முஸ்லிம் லீகின் கவுன்ஸில் கூட்டம் டில்லியில் 1947 ஜூன் 9ம் தேதியன்று நடைபெற்ற பிறகு, அதே ஆண்டு, டிசம்பர் 13, 14ம் தேதியில் கராச்சி நகரில் கூடியது. அகில இந்திய முஸ்லிம் லீகின் கடைசி கூட்டமே இது தான். முஸ்லிம் லீக் கட்சி இரண்டு பிரிவுகளாகத் தனித்தனியாகச் செயல்பட கராச்சி கவுன்ஸில் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. பாக்கிஸ்தான் முஸ்லிம் லீக் என்றும் இந்திய யூனியன் முஸ்

லிம் லீக் என்றும் வெவ்வேறுகப் பிரித்துக் கொள்ளும் தீர்மானம் கராச்சி கவுன்ஸில் கூட்டத்தில் தான் நிறைவேற்றப்பட்டது.

கராச்சி கவுன்ஸில் கூட்டத்திற்கு காயிதேமில்லத் அவர்கள் தலைமையில் ஐந்து உறுப்பினர்கள் சென்றிருந்தார்கள். ஜனுப் K. T. M. அஹமது இப்ருஹீம் சாஹிப், சீதி சாஹிப், அன்வர் சாஹிப், A.K. ஜமாலி சாஹிப் ஆகியோர் மற்ற நான்கு பேர்களாவார்கள்.

உத்திரப் பிரதேசத்தில் இருந்தும் சில முஸ்லிம் லீக் தலைவர்களும் பீஹாரிலிருந்து ஹுசைன் இமாமும் கராச்சி கவுன்ஸில் கூட்டத்திற்குப் போயிருந்தார்கள். இந்திய நாட்டில் செயல்பட விருக்கும் முஸ்லிம் லீக் கட்சியை முறையாக உருவாக்கி ஸ்தாபன ரீதியாக இயங்கச் செய்ய கன்வீனர் ஒருவரை நியமிக்கும் பிரச்சினை அப்பொழுது எழுந்தது.

டிசம்பர் 14ம் தேதி கூட்டத்தில் இந்தியாவில் செயல்பட விருக்கும் முஸ்லிம் லீகின் கன்வீனராக உத்திரப் பிரதேச மாநிலம் லக்னேவைச் சேர்ந்த ரிஸ்வான் என்ற M.L.A. பெயரை லியாகத் அலிகான் சிபாரிசு செய்தார். இந்தியாவில் முஸ்லிம் லீகை சரிவரச் செயல்படுத்த வேண்டுமானுல் அது மதருசைச் சேர்ந்த முஹம்மது இஸ்மாயில் சாஹிபு அவர்களால் தான் சாத்தியப்படும் என பிரோஸ்கான் நூனும் அப்துர் ரப் நிஷ்தரும் வாதாடினுர்கள். அந்த கவுன்ஸில் கூட்டத்தில் காயிதேமில்லத் அவர்களுக்குத் தான் பெரும்பாலான ஆதரவு இருந்தது. சுமார் 413 பேர் காயிதேமில்லத் அவர்களை ஆதரித்தனர். லக்னேவைச் சேர்ந்த ரிஸ்வானை 28 பேர்களே ஆதரித்தார்கள். இம் முடிவு ஏற்படுவதற்கு. மதருசைச் சேர்ந்தவரும் அன்றையத் தினம் ''டான்'' ஆங்கில தினசரியின் துணை ஆசிரியராகவும் பணியாற்றிய மஹ்மூது ஹஸன் அவர்களின் பங்கு கணிசமானது என்பது நினைவுகூரத் தக்கது. பாக்கிஸ்தான் முஸ்லிம் லீகின் கன்வீனராக லியாகத் அலிகான் நியமனம் செய்யப்பட்டார். பாக்கிஸ்தான் முஸ்லிம் லீக் கவுன்ஸிலின் அடுத்த கூட்டம் கராச்சியிலும் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கவுன்ஸிலின் அடுத்த கூட்டம் மதருஸிலும் கூடுவது என்றும் அப்பொழுது தீர்மானிக்கப்பட்டது.

1947ம் ஆண்டு டிசம்பர் 14ம் தேதி மாலையில் முஸ்லிம் லீக் கவுன்ஸில் உறுப்பினர்களுக்கு, அன்றையத் தினம் பாக்கிஸ்தான் கவர்னர் ஜெனரலாக இருந்த காயிதே ஆஜம் ஜின்னு சாஹிப் தேநீர் விருந்து ஒன்று அளித்தார். அதற்கு காயிதேமில்லத் அவர்களும் மதருஸிலிருந்து சென்றவர்களும் போயிருந்தார்கள். அப்பொழுது சிறிது நேரம் ஜின்னு சாஹிப் காயிதேமில்லத்துடன் அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கராச்சியிலிருந்து பம்பாய் திரும்புவதற்காக காயிதேமில்லத் கோஷ்டியினருக்கு டிசம்பர் 22ம் தேதிக்கு விமான டிக்கட் வாங்கும்படி ஏற்பாடாகியிருந்தது. ஆனுல் அன்றைய தினம் டிக்கட் கிடைக்கவில்லை. எனவே டிசம்பர் 24ம் தேதிக்கு விமான டிக்கட் உறுதி செய்யப்பட்டது. 22ம் தேதி கராச்சியிலிருந்து பம்பாய்க்குப் புறப்பட்ட டகோடா விமானம் அன்று விபத்திற்குள்ளாகி அதில் பிரயாணம் செய்த 25 பேர்களும் இறந்து விட்டார்கள். அந்த விமானத்தில் காயிதேமில்லத் அவர்கள் பிரயாணத்தை மேற்கொள்ளாதபடி இறைவன் தடுத்து விட்டான்! டிசம்பர் 24ம் தேதியன்று லியாகத் அலிகான் தமது இல்லத்தில் காயிதேமில்லத்திற்கும் அவருடன் சென்ற குழுவினருக்கும் விருந்து அளித்து கௌரவித்தார்.

கராச்சி கவுன்ஸில் கூட்டத்தில் காயிதேமில்லத் அவர்கள் மீது சுமத்தப்பட்ட பொறுப்புக்களின் பிரகாரம், 1948ம் ஆண்டு மார்ச் மாதம் 10ம் தேதியன்று சென்னை நகர் மவுன்ட் ரோட்டிலுள்ள ''அரசாங்க விருந்தினர் மாளிகையில்'' (இன்றைய ராஜாஜி மண்டபம்) அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸில் கூட்டம் நடந்தது. அன்றைய மதருஸ் மாகாணத்தில் ஆந்திர ஜில்லாக்களும் மலபார் ஜில்லாவும் சேர்ந்து இருந்தன. தமிழ்நாடு, ஆந்திரா, மலபார் ஆகிய மூன்று பகுதிகளுக்கும் சேர்த்து அன்றையத் தினம் 20 பேர்கள்தான் அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்ஸில் உறுப்பினர்களாக இருந்தார்கள்.

(12-3-48ம் தேதி ''முஸ்லிம்'' தினசரி பிரகாரம் ராஜாஜி ஹால் கூட்டத்தில் கலந்து கொண்ட முக்கியஸ்தர்கள் வருமாறு :—

## பங்கு பெற்றவர்கள்

1. மௌலானு ஹஸ்ரத் மோஹானி (ஐக்கிய மாகாணம்)

2. ஜனுப் A.A. ரவூப்ஷா சாஹிப் M.L.A. (மத்திய மாகாணம்)பீரார்மாநிலமுஸ்லிம் லீக் தலைவர்)

3. ஜனுப் ஹஸன் அலி P. இபுராஹிம் சாஹிப் M.L.A.(பம்பாய் மாநில முஸ்லிம் லீக் தலைவர்)

4. ஜனுப் அப்துல் காதர் ஹாபீஸ்கா B. A. (பம்பாய் மாநில முஸ்லிம்லீக் காரியதரிசி)

5. ஜனுப் A. A. கான் சாஹிப் M.L.A. (பம் பாய் சட்ட சபை எதிர்க் கட்சித் தலைவர்)

6. ஜனுப் A. A. உமர் சாஹிப் (பூனு)

7. ஜனுப் M,A. மஜீத்கான் சாஹிப் (பெங்க ளூர்) (கூர்க் மாகாண லீக் தலைவர்)

8. ஜனுப் H.M.இஸ்மாயில் சாஹிப் தாபிஷ் (பெங்களூர்) (கூர்க்மாகாண லீக் காரிய தரிசி)

9. ஜனுப் அப்துல் ரஹ்மான் சாஹிப் (பெங் களூர்)

## சென்னை பிரதிநிதிகளில் முக்கியமானவர்கள்

1. ஜனுப் மஹ்பூப் அலி பேக் சாஹிப் B. A., B. L. M.L.A.

2. ஜனுப் K. M. சீதி சாஹிப் B.A.,B.L.. M. L. A.

3. ஜனுப் B. போக்கர் சாஹிப் B.A,, B.L. M, L. A.

4. ஜனுப் ஹாஜி அப்துல் ஸத்தார் ஹாஜி ஈஸாக் சேட்.

5. ஜனுப் P.K. மொஹிதீன் குட்டி சாஹிப் M.A., B.L., M.L.A.

6. ஜனுப் N. M. அன்வர் சாஹிப் M.A.,L.T, M.L.A.

7. ஜனுப் K. T, M. அஹமது இபுராஹீம் சாஹிப் B.A., B.L. M.L.C.

8. ஜனுப் A.K. ஜமாலி சாஹிப் M. L. A.

9. ஜனுப் M. அஹமது மொஹிதீன், பீஜாப் பூரி

அகில இந்திய முஸ்லிம் லீகின் பொதுக்குழு உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 1947ம் ஆண்டில் 500 ஆகும். நாட்டுப் பிரிவினைக்குப் பின்னர் பாரதத்துடன் சேர்ந்திருந்த மாகாணங் களில் சுமார் 150 உறுப்பினர்கள் வாழ்வதா கக் கணக்கிடப் பட்டிருந்தது. இவர்களில் சிலர் பாக்கிஸ்தானுக்கே சென்றுவிட்டனர். மற்றும்பலர் முஸ்லிம் லீக் கட்சியிலிருந்து ராஜினுமாச் செய்து விட்டு வெளியேறி விட்டனர். எனவே இந்தி யாவில் வாழ்வதாக எதிர்பார்க்கப்பட்ட 150 உறுப்பினர்களில் 29 உறுப்பினர்களே இக் கூட் டத்திற்கு வந்திருந்தார்கள்.

வழக்கமாக பொதுக் குழுக் கூட்டங்களுக்கு கோரம் 50 உறுப்பினர்களாகும். 500 பேர் கொண்ட பொதுக் குழுவிற்கு இவ்வாறு கோரம் நிர்ணயிக்கப்பட்டிருந்தது. தற்போது 150 பேர் கொண்ட புதிய பொதுக் குழுவாக இருப்பதினல் 25 உறுப்பினர் கோரம் போதுமானது என இக் கூட்டத்தில் முடிவு செய்த பின்னர் 29 உறுப்பினர் கள் அடங்கிய பொதுக்குழு கூட்டம் துவங்கியது.

கவுன்ஸில் உறுப்பினர்கள் நீங்கலாக, இக் கட்சி நீடித்து நடத்தப்பட வேண்டும் என ஆர் வம் கொண்ட பலரும் அந்த இடத்தில் கூடியிருந் தார்கள். அவர்கள் அனைவரும் ராஜாஜி ஹாலின் வெளி வராந்தாக்களிலும் படிக்கட்டுகளிலும்குழுமி யிருந்தனர். 1948 மார்ச் 10ம் தேதி கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில் தமிழ் நாட்டையும் மலபாரையும் சேர்ந்தவர்கள் வருமாறு 1. செய்யது அப்துல் ரகுமான் பாபக்கி தங்கள் 2. K T ஷரீப் (மதராஸ்) 3. பெல்லாரி ஹாஜி முஹம்மது இஸ்மாயில் 4. திருச்சி VS முஹம் மது இப்ருஹீம் சாஹிப் 5. தென்காசி மு. ந. அப்துர் ரகுமான் சாஹிப் 6. கடைய நல்லூர் வெ கா.உ. அப்துர் ரகுமான் சாஹிபு 7. மதுரை சின்ன காஜியார் எம். எல். ஏ. 8. தஞ்சை ரஜாக்ஷா காதிரி, 9. நெல்லிக்குப்பம் சயீது சாஹிப் 10. தளபதி திருப்பூர் மைதீன் 11. மதராஸ் பி. என். ஐ. அபூதாலிப் சாஹிபு 12. J. M. மியாக்கான் சாஹிப் 13. சி. எச். கோயா (மலபார்) 14. பி. வி. அப்துல்லா கோயா (மல பார்) 15. சாமல் கோட் முஹம்மது இஸ்மாயில்

(ஆந்திரா) 16. ஆம்பூர் எம். ஆர். அப்துல் வாஹித் சாஹிப்.

காயிதேமில்லத் அவர்களது தலைமையில் கூடிய இக் கவுன்ஸில் கூட்டத்தில் ''இந்திய யூனியன் முஸ்லிம் லீக்'' என்ற பெயரில் இந்திய முஸ்லிம் லீக் அமைப்பைத் தொடர்ந்து நடத்துவது என முடிவுசெய்யப்பட்டது. வட மாநிலங்களில்இருந்து வருகை தந்த ஒரு சில உறுப்பினர்கள் இந் நாட்டில் முஸ்லிம் லீக் இனி மேலும் நீடிப்பதை விரும்பவில்லை என்று கருத்துத் தெரிவித்திருந்த போதிலும், மிகப் பெரும்பான்மையினர் தாய்ச் சபை தொடர்ந்து செயலாற்றுவதற்கே ஆதரவு நல்கினார்கள்.

அக்கூட்டத்தில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர் : காயிதேமில்லத் அவர்கள்

பொதுச்செயலாளர் ;

(1) மஹபூப் அலி பேக் M. L. A.

(2) பொருளாளர் ; ஹஸனலி P. இப்ருஹீம்

இரண்டு துணைத்தலைவர்களும் இரண்டு துணைச் செயலாளர்களும் பின்னர் தேர்ந்தெடுத்துக் கொள்ளப்படலாம் என முடிவு செய்யப்பட்டது.

இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் நோக்கங் களையும் சட்டதிட்டங்களையும் உருவாக்குவதற்கு சப் கமிட்டி ஒன்றும் இக்கூட்டத்தில் நியமனம் செய்யப்பட்டது. அக்குழுவில் கீழ்கண்டவர்கள் இடம் பெற்றிருந்தார்கள்.

(1) காயிதேமில்லத்

(2) A. A. கான் M. L. A. பம்பாய்

(3) ஹாஜி ஹஸனலி P. இப்ருஹீம், பம்பாய்

(4) S. A. ரஊப் சாகிப், (மத்திய மாகாணம்)

(5) அப்துல்காதர் ஹபீஸ்கா, பம்பாய்

(6) B. போக்கர் சாகிப், மலபார்

(7) மஹபூப் அலி பேக் சாஹிப், விஜயவாடா

(8) K. T. M. அஹமது இப்ருஹீம்

(9) முகம்மது ரஸாக்கான் M L A

10) இஸ்மாயில் தாபிஷ் பங்களூர்

(11) P. K. மொகிதீன் குட்டி M L A

(12) K. M. சீதி சாகிப் M L A

(13) யூசுப் ஷரீப் சாகிப், பார்-அட்லா

(14) அப்துல்காதர் ஷெய்க் சாகிப் M L A

(15) ஹாஜி அப்துல் சத்தார் ஹாஜி இஸ்ஹாக் சேட் சாகிப்

இச்சட்டக்குழு பல தடவைகள் கூடி நகல் சட்டதிட்டம் ஒன்றை உருவாக்கியது, அச்சடிக்கப் பட்ட இதன் நகல் சட்டம் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் காயிதேமில்லத்திடம் 1948ம் ஆண்டு மே மாதம் 31ம் தேதியன்று முறைப்படி சமர்ப்பிக்கப்பட்டது,

இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கவுன்ஸில் உறுப்பினர்களுக்கும் விசேஷ அழைப்பாளர்களுக் கும் அச்சடிக்கப்பட்ட சட்ட நகலை 1-6-48அன்று ''சர்குலேஷனுக்காக'' காயிதேமில்லத் அவர்கள் அனுப்பி வைத்தார்கள். சம்பந்தப்பட்ட பலரின் கருத்துக்களையும் கேட்டறிந்த பின்னர் இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் கவுன்ஸில் கூட்டம் 1951ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி யன்று மதராஸ் நகரில் காயிதேமில்லத் அவர்கள் தலைமையில் கூடியது. இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் நகல் சட்டதிட்டங்கள் ஒரு சில திருத்தங்களுடன் இக்கவுன்ஸில் கூட்டத்தில் ஏக மனதாக நிறைவேற்றப்பட்டது. தாய்ச் சபையின் அகில இந்திய அமைப்பு சென்னை ராயப்பேட்டை யிலுள்ள ''தலைவர் இல்லத்தில்'' இருந்து செய லாற்றும் என்றும் இக்கூட்டத்தில் முடிவு செய்யப் பட்டது.

இதற்கிடையில் 1949ம் ஆண்டு மே மாதம் 11ம் தேதியன்று காயிதேமில்லத் அவர்கள் சுற்றறிக்கை ஒன்றை இந்நாட்டிலுள்ள எல்லா முஸ்லிம் லீக் அமைப்புகளுக்கும் அதன் நிர்வாகி களுக்கும் அனுப்பி இருந்தார்கள். அம்மாதிரி சுற்றறிக்கை அனுப்ப வேண்டிய அவசியம் அப் பொழுது இருக்கத்தான் செய்தது.

சுதந்திர இந்தியாவில் இனிமேல் முஸ்லிம் லீக் அவசியமில்லை என்றும் அந்த ஸ்தாபனத் தைக் கலைத்துவிட வேண்டும் என்றும் ஒரு பேச்சு முஸ்லிம்கள் மத்தியில் பரப்பப்பட்டது; ஏன்? பலர் இது குறித்து அச்சுறுத்தப்பட்டனர்.

எனவும் அந்த சுற்றறிக்கையில் சவிஸ்தாரமாக விளக்கப்பட்டிருந்தது. முஸ்லிம் லீக் அமைப்பில் இருந்து செயலாற்ற விரும்புகிறவர்கள் அனைவரும் தைரியமாக அவ்வாறே நடந்து கொள்ளலாம் என்பதையும் அதற்காகப் பயப்படத் தேவை இல்லை என்பதையும் தலைவரவர்கள் தெளிவா கவே சொல்லியிருந்தார்கள்.

1948 முதல் 1952 வரை, தமிழ்நாட்டிலும் மலபாரிலும் ஒரு சில ஊர்களில் முஸ்லிம் லீக் பொதுக்கூட்டங்கள் நடத்தப்பட்டன, காயிதே மில்லத் அவர்களும் அவர்களது நண்பர்களும் தோழர்களும் அக் கூட்டங்களுக்குச் சென்று முஸ்லிம் லீகின் கொள்கையை விளக்கிக் கூறி னார்கள். திருச்சியிலிருந்து வெளிவரும் ''மறு மலர்ச்சி'' வார இதழும் முஸ்லிம் லீகின் அவசியத் தை விளக்கி செய்திகளையும் கட்டுரைகளையும் பிரசுரித்து வந்தது.

1952ம் ஆண்டு இந்நாட்டில் நடைபெற்ற முதலாவது பொதுத்தேர்தலின் போது முஸ்லிம் லீகின் ஆதரவைக் கோரி பலரும் அணுகினர், இக்கட்சி ஆதரித்த சுயேட்சை உறுப்பினர்கள் பலரும் வெற்றி வாகை சூடினர் என்பது குறிப் பிடத்தக்கது. இதன் விளைவாக 1952ம் ஆண்டு காயிதேமில்லத் அவர்கள் டில்லி ராஜ்ஜிய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

மலபார் ஜில்லாவிலிருந்து சட்டமன்ற உறுப் பினர்களாக 5 பேர்கள் அத்தேர்தலில் தேர்ந் தெடுக்கப்பட்டார்கள் என்பதும் தைரியமளிக்கக் கூடிய செய்தியாக அமைந்தது.

1954ம் ஆண்டில் கள்ளிக் கோட்டையில் மாநில அளவில் பெரியதொரு முஸ்லிம் லீக் மாநாடு நடத்தப்பட்டது. அதைத்தொடர்ந்து மலபார் மாவட்ட முஸ்லிம் லீகை ஸ்தாபன ரீதி யாக அமைக்கும் பணியும் ஆரம்பமானது.

1957ம் ஆண்டு நடைபெற்ற இரண்டாவது பொதுத் தேர்தலிலும் முஸ்லிம் லீக் நேரடியாகப் பங்கு கொண்டது. பலருக்கும் ஆதரவு நல்கவும் செய்தது. தமிழ் நாட்டைப் பொறுத்தவரை, 1958ம் ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 11, 12 தேதிகளில் திருச்சி நகரில் முஸ்லிம் லீக் ஊழியர் கள் மாநாடு சீரும் சிறப்புமாக நடந்தேறியது. அதைத் தொடர்ந்து 1960ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17, 18 தேதிகளில் சென்னை நகரில் மாநில முஸ்லிம் லீக் மாநாடு நடைபெற்றது. கட்சியில் புதிய உறுப்பினர்களைச் சேர்த்து பிரைமரி, மாவட்ட லீகுகளை அமைப்பது என்ற முடிவு இம் மாநாட்டில் எடுக்கப்பட்டது. இம் மாநாட்டில் மிச்சப்பட்ட பணத்திலிருந்து ''உரிமைக்குரல்'' என்ற வார இதழ் ஆரம்பிக்கப் பட்டது. மரைக்காயர் லெப்பை தெருவிலுள்ள 8 நம்பர் கட்டிடமும் மாநில முஸ்லிம் லீகிற்காக வாங்கப்பட்டது.

அதன் பிரகாரம் தமிழ்நாடெங்கும் பிரைமரி லீகுகள் அமைக்கப்பட்டன. ஜில்லா லீகுகள் உரு வாயின. மாநில பொதுக்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள், இந்நாடு விடுதலை பெற்ற பிறகு, தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீகின் புதிய நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்க பொதுக்குழு 1962ம் ஆண்டு நவம்பர் மாதம் நான்காம் தேதி யன்று திருச்சியை அடுத்த காட்டூரில் கூடியது. கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீகின் தலைவராகவும் ஜனாப் K. T. M. அஹமது இப்ராஹீம் சாகிப் மாநில பொதுச் செயலாளராகவும் ஏகமன தாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அன்று முதல் தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக், ஸ்தாபன ரீதியாகவும் முறையாகவும் இந்நாட்டில் செயல் பட்டுவருகிறது என்பது அனைவரும் அறிந்த விஷயமே.



## பொன் மொழி

''நாம் எந்தக்கட்சியை ஆதரித்தாலும் சரி, எதனுடனாவது கூட்டுச் சேர்ந்தாலும் சரி, இந்த நாட்டிற்கு அது நன்மை பயக்குமா என்று யோசித்தே முஸ்லிம் லீக் கட்சி முடிவுகளை எடுக்கின்றது''

**காயிதே மில்லத்**

# நான் கண்ட காயிதெ மில்லத்

இந்திய அரசியல் வானில் ஒளிவீசிய மாபெரும் தலைவர் அல்ஹாஜ் காயிதேமில்லத் முஹம்மத் இஸ்மாயில் சாஹிப் பெருந்தகையை நேரில் கண்டவன் மட்டுமல்ல, அவர்களைப்பற்றி முதன் முதலாக 'Meet Mr. Mohamed Ismail' என ஆங்கிலத்திலும் ''காயிதேமில்லத்தை காணுங்கள், என்று தமிழிலும் இரு சிறு நூல்களை எழுதியவன் அடியேன்.

அவை 1960-ம் ஆண்டில் மதிப்புக்குரிய அல்ஹாஜ் ஆ.கா.அ அப்துஸ்ஸமத் சாஹிப் அவர்களால் மணி விளக்கு நூலகம் மூலம் அச்சிடப்பட்டு சென்னையில் நடைபெற்ற முஸ்லிம் லீக் மாநாட்டில் வெளியிடப்பட்டன.

காயிதேமில்லத் அவர்கள் 1920ல் காந்திஜியின் வேண்டுகோளுக்கிணங்கி கல்லூரியை விட்டு வெளியேறிய நாள் முதல் அந்தி காலம் 1972 வரையில் நாட்டுக்காகவும் முஸ்லிம் மக்களுக்காகவும் அல்லும் பகலும் ஓயாது உழைத்தவர் ஆவார்.

காயிதேமில்லத் அவர்களுடன் அவர்கள் புதுப்பேட்டை இல்லத்தில் நானும் எனது ஆப்த நண்பர் ஏ. ஏ. ரவூப் சாஹிபும் (மர்ஹூம்) பன்முறை சந்தித்து பல தேசிய விஷயங்களைக் குறித்து விவாதித்துள்ளோம். எங்களை ரவூப்சாப் ஜகரிய்யாசாப் என்று அன்புடன் அழைப்பார்கள்.

## நகைச்சுவை

காயிதேமில்லத் அவர்களின் நகைச்சுவை அலாதியானது.

ஒருசமயம் பத்திரிகையாளர் ஒருவர். ''நீங்கள் லீகில் 'ஏன் சேர்ந்தீர்கள்?' என நேரடியாய் கேட்டதற்கு 'நீர் ஏன் உம் மனைவியை மணந்தீர்?' என்று கேட்பது போலல்லவா உங்கள் கேள்வியிருக்கிறது' என்று தமக்கே உரிய பாணியில் நகைச்சுவையுடன் பதில் அளித்தார்கள்.

ஒரு மாநாட்டில் தலைமை வகித்து பேச்சாளர்களை ஒவ்வொருவராக அழைத்துப் பேசச் செய்தார்கள் காயிதேமில்லத். அதில் ஒரு பிரபல எழுத்தாளரை அழைத்தபோது அவர் இஸ்மாயில் சாஹிபின் காதுக்குள் ஏதோ ஒரு விஷயத்தைச் சொல்ல அதனை தலைவர் அவர்கள் ஒலி பெருக்கியில் இவ்வாறு சொன்னார்கள்:-

நமது பிரபல எழுத்தாளர் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறார், தன்னால் எழுத முடியுமே தவிர மேடையில் பேச இயலாதாம்! அதற்காக நீங்கள் ஏமாற்றமடைய வேண்டியதில்லை. அவர் சொல்ல வேண்டியதை எல்லாம் ஒரு புத்தகமாக எழுதி வெளியிடுவதாக என்னிடம் சொல்லி இருக்கிறார். எனவே அதை நீங்கள் வாங்கிப் படித்துத் தெரிந்து கொள்ளுங்கள். இதைக்கேட்டதும் பெருத்த சிரிப்பொலி எழுந்தது.

காயிதெமில்லத் அவர்கள் சென்னையில் நாங்கள் (ஏ. ஏ. ரவூப் சாஹிப் ஆசிரியராகவும், நான் துணை ஆசிரியராகவும்) நடத்தி வந்த ''Deccan Times'' ஆங்கில வாரப் பத்திரிகையின் நிறுவனத்தில் ஒரு டைரக்டராக இருந்தார்கள். ஒரு (டைரக்டர்களின்) கூட்டத்தில் அவர்கள் ஓர் பெஞ்சுமீதும், அப்துல் ஹமீத்கான் சாஹிப் நாற்காலியிலும் அமர்ந்திருந்தார்கள். இஸ்மாயில் சாஹிபை தலைவர் ஸ்தானத்திற்கு ஹமீத்கான் பிரேரேபித்தார். உடனே இஸ்மாயில் சாஹிப் 'கான் ஸாஹிப், நீங்கள்தான் சேர்மனாக இருக்க முடியும். ஏனெனில் பெஞ்சின் மீது அமர்ந்துள்ள நான் 'சேர்'மனாக முடியாது என நகைச்சுவை ததும்பக் கூறி அனைவரையும் சிரிக்க வைத்தார்கள்.

## உடல் நிலை

காயிதெமில்லத் அவர்கள் உடலில் பல சிக்கல்கள் ஏற்பட்டு 1972 மார்ச் மாதம் சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வந்தார்கள். ஆயினும் ஏப்ரல் 4ந்தேதி உடல்நிலை மிகவும் மோசமாகிவிட்டது.

இத்தனைச் செவியுற்ற மக்கள் எங்கள் 'அறமுரசு-கிரெசன்ட்' ஆபீசுக்கு அன்றைய நாள் முழுவதும் நேரில் வந்தும் தொலைப் பேசி மூலமாகவும் விசாரித்தனர். அவ்வப்பொழுது ஆஸ்பத்திரியிலிருந்து எனக்குக் கிடைத்து வந்த தகவலை நான் சொல்லிவர, இறுதியில் நள்ளிரவில் அவர்களின் வபாத் செய்தி வந்து அனைவரையும் துக்கக் கடலில் மூழ்கச் செய்து விட்டது.

உடனே நான் செய்தி நிறுவனத்துக்கு தொலை பேசி மூலம் அந்த துக்க செய்தியை அளித்து அதன் செய்தி ஆசிரியருக்குக் கொடுத்தேன். காயிதேமில்லத் பற்றி எனது ஆங்கிலப் புத்தகத்தையும் கொடுத்தேன்.அடுத்த 20நிமிடங்களுக்குள் காயிதெமில்லத் அவர்களின் வாழ்க்கை வரலாறு டெலிபிரிண்டில், வெளியிடப்பட்டதை நானும் ஆபீஸ் டெலிபிரிண்டரில் வாசித்தேன்; விசனித்தேன்.

காயிதெமில்லத் அவர்கள் இப்பூவுலகிலிருந்து மறைந்து 15 ஆண்டுகள் ஓடிவிட்டன. ஆயினும் அப்பெரியாரின் நினைவு மனத்தின்கண் பசுமையாய் நிலைத்துவிட்டது.

-ஜலால் ஜகரிய்யா
(பத்திரிகையாளர்)
ஆம்பூர் அம்பேத்கார் மாவட்டம்

மணிச்சுடர் 14-6-89

# தியாகச்சுடர்

(செய்துங்க நல்லூர் ''மகனீ'' அவர்கள்)

[ஏழு கோடி இந்திய முஸ்லிம்களின் இணையற்ற தலைவர் காயிதேமில்லத் அவர்களது பிறந்த நாளையொட்டி ஜூன் 1957 'முஸ்லிம் முரசு' இதழில் வெளியான கட்டுரை]

1947 டிசம்பர், பதினான்காம் தேதி அன்றுதான் பத்தரைக் கோடி இந்திய முஸ்லிம்களின் சார்பிலே உரிமைக் குரலெழுப்பி, உலகமே கண்டறியரத விந்தையாய், தனியொரு நாட்டையே பெற்றுத் தந்த அகில இந்திய முஸ்லிம் லீக்கின் கடைசிக் கவுன்ஸில் கூட்டம் நடந்தது. பல்லாண்டுகளாய் காங்கிரஸோடு தோளோடு தோள் நின்று உரிமைச் சமர் நடத்திய அந்தத் தாய் ஸ்தாபனம் நாட்டுப் பிரிவினை காரணமாக, இரண்டாகப் பிரிக்கப்பட்டதும் அன்றுதான். வெற்றிப் பெருமிதத்தில் முக்குளித்த ஆறு கோடி மக்களின் சார்பாக ஒரு அமைப்பாளரும், சிறுபான்மையினரான நாலரைக் கோடி இந்திய முஸ்லிம்களின் சார்பாக ஒரு அமைப்பாளரும் அன்றுதான் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

கராச்சி நகரின் இனிய கடற்காற்று, கூடி இருந்தோர் உடலைத் தொட்டு விளையாடிக் கொண்டிருந்தது. எனினும் அங்கிருந்தோர் உள்ளங்களிலே தாங்க முடியாத சூருவளி சுழன்று சுழன்று அடித்தது. நேரம் செல்லச் செல்ல நெஞ்சிலே பொங்கிக் கிடந்த பிரிவினை உணர்வு வழிந்தோட ஆரம்பித்தது.

''சகோதரர்களே! உங்களின் எதிர்காலத்தை எண்ணும்போது துக்கத்தால் என் இதயம் விம்முகிறது. எங்களுக்காக இந்திய முஸ்லிம்கள் செய்துள்ள தியாகம் எங்கள் இதயங்களில் எப்போதும் பசுமையாக இருக்கும். பாரதத்தில் வாழும் நாலரைக் கோடி இஸ்லாமியரின் நினைவைப் பாக்கிஸ்தான் என்றென்றும் மறவாது.''

குரல் தழு தழுத்தது, வார்த்தைகள் தடுமாறின. கண்கள் குளமாயின. ஆம்! அரசியல் துறவு பூண்டிருந்த மாமனிதர் ஜின்னாஹ்வை, மீண்டும் சமூக வாழ்வுக்குத் தூண்டிவிட்டு இறுதி வரை அவரது வலக்கரமாய் செயலாற்றி, புத்தம் புதிய பாக்கிஸ்தானின் தலைமை அமைச்சராய் விளங்கிய, நிலை கலங்கா மனிதர் லியாகத் ஒரு கணம் அழத்தான் செய்தார்.

''நவாப் சாகிப்! என்ன சொன்னீர்கள்? முன் கதைகளை மறந்து விடுங்கள். நாம் அந்நியராகி ஆறு மாதங்களாகி விட்டன. எங்கள் சர்க்கார் எங்களை நியாயமாக நடத்தும் என்பதில் எங்களுக்குப் பூரண நம்பிக்கையிருக்கிறது. அவசியப்பட்டால், எங்கள் உரிமைகளை சத்தியப் பாதையில் போராடிப் பெற்றுக் கொள்ள எங்களுக்கு உறுதி உண்டு. அல்லாஹ் போதுமானவன். எங்கள் நிலைக்காக நீங்கள் இரங்க வேண்டாம்.''

நிதானமாக சங்கிலித் தொடர்போல் வார்த்தைகள் வெளி வந்தன. கூடியிருந்தோர் அவர் முகத்தைக் கூர்ந்து கவனித்தனர். அவரோ, எதையும் லட்சியம் செய்யாமல் தொடர்ந்து ஒரு கேள்வியை வீசினார்.

எங்களுக்காக ஒன்றே ஒன்று நீங்கள் செய்வீர்களா?

''என்ன வேண்டும்? சொல்லுங்கள். எது வேண்டுமானாலும் செய்கிறேன்.'' ஆவலே உருவாய், பாக்கிஸ்தான் முஸ்லிம் லீக் அமைப்பாள

ராய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட லியாகத் அலிகான் கேட்டார்.

''ஒன்றுமில்லை. எங்கள் நாட்டில் எது நடந்தாலும் எங்களுக்காகக் கவலைப் படாமல் உங்கள் நாட்டில் வாழும் சிறுபான்மை ஹிந்து மக்களின் நலனுக்கு ஆவன செய்ய வேண்டும். எக் காரணம் கொண்டும் எத்தகைய இடையூறும் அவர்களுக்கு இழைக்கக் கூடாது. இது ஒன்றே நீங்கள் எங்களுக்காகச் செய்ய வேண்டிய உதவி.

அலைகடலில் திண்டாடும் மனிதன், சிறிய பலகை கிடைத்தாலும், கரைசேர்ந்து வாழவே ஆசைப்படுவான். எதிர்காலம் இருண்டு கிடக்கும் நேரத்தில் வாழ்வை வளப்படுத்திக் கொள்ளும் அரிய சந்தர்ப்பம் தன் காலடியிலே கிடந்தும், தன்னைப் பற்றி எண்ணாது பிறருக்காகக் குறை இரந்த அந்த மனிதர் யார்?

அவர்தான், அகில இந்திய முஸ்லிம் லீகின் அமைப்பாளராய் தேர்ந்தெடுக்கப்பட்ட - ஆளும் வர்க்கத்தால் 'வகுப்புவாதி' என்று தூற்றப் பட்டும், தன் சமூக மக்களால் ''காயிதேமில்லத்'' என்று சிறப்போடும் கௌரவத்தோடும் போற்றப்பெறும் — ஜனாப் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப். ஆம்! அவர்தான் இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தனிப்பெரும் தலைவர்.

இந்திய நாட்டுச் சுதந்திர வரலாற்றிலே திருநெல்வேலி மாவட்டத்துக்கு எப்போதும் தனி இடம் உண்டு. பரங்கியரை எதிர்த்து வீர முழக்கம் செய்த கட்டபொம்மனையும் செக்கிழுத்த வீர சிதம்பரனாரையும், கவிதைக் கனல் மூலம் விடுதலை வேட்கையை வளர்த்த பாரதியாரையும் பெற்றெடுத்த திருநெல்வேலி மாவட்டத்திலே, பேட்டை என்ற ஊரில் இன்றைக்கு 62 ஆண்டுகளுக்கு முன் மியாக்கான் இராவுத்தர் - முஹைதீன் பீவி தம்பதிகளுக்கு இரண்டாவது குமாரராகப் பிறந்தார் இஸ்மாயில். திருவனந்தபுரத்திலே துணி வியாபாரம் செய்து வந்த மியாக்கான் இராவுத்தர் சாதாரண வணிகர் மட்டுமல்ல. மனோன்மணீயம் இயற்றிய சுந்தரம் பிள்ளை அவர்களின் தோழராய் விளங்கிய அவர், தமிழ், உர்தூ அரபி, சமஸ்கிருதம், முதலிய மொழிகளை நன்கு பயின்றவர். துவைத, அத்வைத சித்தாந்தங்களை தெளிந்து உணர்ந்த அவரை 'மியான் ஆலிம் சாஹிப்' என்று மக்கள் அழைத்தனர். தந்தையிடம் செறிந்திருந்த ஆன்மீக உணர்வு, இன்று தனயரிடம் காணப்படுவதில் வியப்பில்லைதானே! மியாக்கான் இராவுத்தரின் மக்களிலே இன்று உயிரோடிருப்பவர்கள் மூன்று ஆண்களாவர். ஆண்களிலே ஒருவர் வாணிபத்திலும், மற்றிருவர் பொதுப் பணியிலும் ஈடுபட்டுள்ளனர். பொதுப்பணி செய்பவர்களில் ஒருவர் நம் சரித்திர நாயகர். மற்றவர் முன்னாள் ''முஸ்லிம்'' பத்திரிகையின் ஆசிரியரும் தமிழ்நாடு முஸ்லிம் லீகின் பொதுச் செயலாளருமான ஜனாப் கே. டி. எம். அஹமது இபுறாஹீம் சாஹிப், பி.ஏ., பி.எல்.

''மத்ரஸே முஹம்மதியா'' என்ற ஆரம்பப் பள்ளியில் தொடங்கிய கல்வி, படிப்படியாக திருநெல்வேலி ஸி.எம்.எஸ். கல்லூரி, இந்துக் கல்லூரி ஆகியவற்றில் தொடர்ந்து, இறுதியாக சென்னை கிறிஸ்துவக் கல்லூரியிலே முடிந்தது. 1920-21ல் இந்திய நாட்டுச் சரித்திரத்திலே முக்கியமான தொரு திருப்பம், நாடெங்கும் ஒத்துழையாமை இயக்கம் பரவியதன் காரணமாக ஒவ்வொருவர் இதயத்திலும் உணர்ச்சி பிரவாகமாக வியாபித்தது. ஒத்துழையாமை இயக்கத்தின் உணர்வு மாணவர் இஸ்மாயிலையும் ஈர்த்தது. கிலாபத், ஒத்துழையாமை இயக்கங்களின் எதிரொலியாக, தமது பி.ஏ. படிப்பை நட்ட நடுவிலே விட்டு விட்ட இஸ்மாயில், போராட்ட இயக்கத்திலே கலந்தார்.

அல்லும் பகலும் அறுபது நாழிகையும், சொல்லால், செயலால், சிந்தையால் தம் நாட்டுக்கும் குறிப்பாக முஸ்லிம்களுக்கும் தொண்டு செய்யும் அவரின் பொது வாழ்வு, இளம் பிராயத்திலேயே தொடங்கி விட்டது. 1909ல் மூன்றாவது படிவம் வாசிக்கையிலே அவர் தொடங்கி சிறப்போடு பணி ஆற்றிய ''பால்ய முஸ்லிம் சங்கம்'' சமூக முன்னேற்றத்திற்காக அக் காலத்தில் பெரும் பணி செய்த சங்கங்களிலே ஒன்று. சிறுகச் சிறுகத் துவங்கிய பொதுப் பணி வேட்கை நாளா வட்டத்தில் உதிரத்திலே கலந்து ஒத்துழையாமை இயக்க காலத்திலே வீரிட்டெழுந்தது. அவர் தமது திருமணத்தின் போது கூட, கதரே அணிந்து மணமகனாய் நின்ற காட்சி அவரது நாட்டுப் பற்றுக்கு நல்ல எடுத்துக் காட்டு.

வணிகப் பெரு வள்ளல் ஜமால் முஹம்மது அவர்களின் வர்த்தக ஸ்தாபனத்தில் உதவியாளராய் வாழ்க்கையைத் தொடங்கிய இளைஞர் இஸ்மாயில், வர்த்தகத்தையும் நன்கு உணர்ந்து, இறுதியில் அம்மாபெரும் ஸ்தா

பனத்தில் பங்காளி நிலையை அடைந்தார். அந்தக் குடும்பத்திலேயே ஜமால் ஹமீதா பீவி என்பாரை மணமும் செய்து கொண்டார். குறிப்பாக தோல் வியாபாரத்தில் அவருக்கிருந்த அனுபவம் அந்தத் தொழிலிலேயே காலத்தை யெல்லாம் கழித்தவர்களைக் கூடத் திகைக்க வைத்தது. தென்னிந்திய தோல் வியாபாரிகள் சங்கத்தின் செயலாளராகப் பணியாற்றிய அவர் அங்கம் வகிக்காத கமிட்டியோ, சங்கமோ இல்லை என்று கூறலாம். உதாரணமாக மத்திய சர்க்கார் நியமித்த ''தோல் காப்புக்குழு'' ''மைக்கா விசாரணைக் கமிட்டி'', சென்னை சர்க்கார் நியமித்த ''கைத் தொழில் போர்டு'', ''சென்னைத்துறைமுக டிரஸ்ட்'' முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

வட்டமேஜை மாநாடு லண்டனில் கூட்டப் பட்ட போது, அதையொட்டி சென்னை, கீழக் கரை போன்ற இடங்களிலே கலவரம் ஏற் பட்டது. அப்போது சமாதானக் கமிட்டியிலே அங்கம் வகித்து அவர் ஆற்றிய சேவை குறிப்பிடத் தக்கது. நாட்டுப் பிரிவினையை யொட்டி ஆங் காங்கே வகுப்புக் கலவரங்கள் நிகழ்ந்த போது சமாதானத்தை நிலை நிறுத்துவதற்காக, அப்போ தைய முதலமைச்சர் காலஞ்சென்றதிரு. பிரகாசம் அவர்களோடு அவர் வெளியிட்ட கூட்டறிக் கையைப் பின்பற்றி ஒவ்வொரு மாகாணங் களிலும் கூட்டறிக்கைகள் வெளியிடப்பட்டன.

இரண்டாவது காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட போது இந்திய நாட்டிலேயே சிறந்த எதிர்க்கட்சி என்று போற்றப்பட்ட முஸ்லிம் லீக் சட்டசபைக் கட்சியின் தலைவராக விளங்கிய 'காயிதேமில்லத்' யாருடைய விருப்புக்கும், வெறுப்புக்கும் அஞ்சாதவர் என்பதை 1946ல் காங்கிரஸ் மந்திரிகள் மீது திரு பிரகாசம் குற்றச் சாட்டுகளை சுமத்திய போது, நிகழ்ந்த சம்பவங் கள் உறுதிப்படுத்தின. ''குற்றச்சாட்டுக்களை விசாரிக்க எதிர்க்கட்சித் தலைவரைக் கொண்ட குழுவை அமையுங்கள்'' என்று திரு. பிரகாசம் கூறியது 'இஸ்மாயில் சாஹிபின் நேர்மைக்குச் சரியான அத்தாட்சியாகும்'.

அரசியல் மட்டுமின்றி, சமூகக் கலாச்சார கல்விதுறைகளில் அவர் செய்யும் தொண்டு நாடறிந்த விஷயம். இந்திய முஸ்லிம்களின் அரசியல் வாழ்வில் கடந்த பத்தாண்டுகளாக ஸ்தம்பிப்பு இருந்தாலும் இன்றும் அவர் மக்களின் மகத்தான தலைவராகவே விளங்கு கிறார். உணர்ச்சி வெறிகொண்டு செயலாற்றத் துடிதுடித்து ஓடிவரும் எண்ணற்ற இளைஞர் களுக்கு அவர் அறிவுரை கூறும் அழகும், பொதுக் கூட்டங்களிலே அவர் கையாளும் ஆற்றொழுக்குப் போன்ற நடையும் நெஞ்சத்திலே நிற்பவை. இடையிடையே நகைச்சுவையும், உவமானங்களும் குட்டிக் கதைகளும் அவர் சொற்பொழிவுகளில் பளிச்சிடும். சாதாரணப் பாமரனும் புரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகத் தம் கருத்தை விளக்குவதில் எவ்வளவு நேரமானாலும் அவர் கவலைப்படுவதில்லை.

அன்றைய அரசியல் நிர்ணய சபையிலிருந்து இன்று அங்கம் வகிக்கும் ராஜ்யசபா வரையிலே, மொழி முதல் சகல விவாதங்களிலும் அவர் கலந்து கொள்வதை எல்லாம் எடுத்து வைத்து ஆராய்பவர்களுக்கு ஓர் உண்மை விளங்கும். ஆம்! அவர் லட்சியவாதி என்பதுதான் அது. சந்தர்ப்பவாதிகளுக்கு பொதுப்பணி மலர்ப் படுக்கை. ஆனால் கொள்கையிலே உரம் கொண்ட லட்சியவாதிக்கோ அது நெருஞ்சிக் கட்டில். எனவேதான் ''இங்கே வாருங்கள்'' என்று ஆட்சியாளர்கள் அழைப்பொலி விடுக்கும் போதெல்லாம், ''பதவியை விட சமூக ஊழியமே பெரிதெனக் கருதி அவர் அசைந்து கொடுப்ப தில்லை. தம் சொந்த வாழ்வுக்கெதிராக சமு தாயத்தைக் சட்டிக் காக்கும் அவரை, வேந்த னுக்கு வெஞ்சாமரம் வீசும் வர்க்கத்தைச் சேர்ந்தோர், 'பதவிப் பித்தர்' எனக் கூறி தங்களையே வெளிப்படுத்திக் கொள்கின்றனர்.

எதிரிகளின் ஏச்சுக்கும், பேச்சுக்கும் மத்தி யிலே, பக்கத்தில் உறுதுணையாய் இருந்தோ ரெல்லாம் பதவி ஆசை கொண்டு பாய்ந்தோடும் போதும் கூட, துளியும் கவலைப்படாது, தூய வனையே துணையாகக் கொண்டு, அவர் அமைதி யாகத் தொண்டு செய்கிறார். எனவேதான் கடந்த இரு தேர்தல்களிலும், பணபலத்துக்கும் அஞ்சாமல் இஸ்லாமியர், அவர் குறிப்பிட்ட நபருக்கு ஆதரவு அளித்தனர். வாய்மையும், தூய்மையும் நிறைந்த அவரை, தியாகச் சுட ராகப் போற்றிப் புகழ்கின்றனர். தங்கள் இருண்ட வாழ்வின் கலங்கரை விளக்காக - எதிர் கால வாழ்வின் ஒரே நம்பிக்கையாக மாசு மறு வற்ற தலைவராக மக்கள் கருதுகின்றனர்.

[உரிமைக்குரல் வார ஏட்டில் இக்கட்டுரை 4-6-62ம் தேதியன்று மீண்டும் பிரசுரிக்கப் பட்டது.]

℅

# சமுதாயத்தின் உயிர்த்துடிப்பு இளைஞர்களே!

(தளபதி திருப்பூர் மைதீன் சாகிப், Ex M. L. A.)

''நான் சில காலம் உடல் நலம் குன்றியிருந்தேன். பொதுக் கூட்டங்களில் பல மாதங்களாகக் கலந்து கொள்ளவில்லை. அப்பொழுது விருது நகரிலிருந்து அழைப்பு வந்த சமயம், நான் சற்று தயங்கத்தான் செய்தேன்.

இக் கூட்டத்திலும் நான் கலந்துகொள்ள முடியுமா என சந்தேக நிலையில் தானிருந்தேன். ஆனால், நமது அருமைத் தலைவர் காயிதேமில்லத் அவர்களின் அன்புக் கட்டளையால் தான் நான் உங்களைச் சந்திக்க முடிந்தது.

நான் மேடைக்கு வரும்போது, ஏறி வரும் என் முதுமையையும் உடல்நிலை ஒத்து வராத தேக்க நிலையைப் பற்றியுமே நோட்டமிட்டுக் கொண்டிருந்தேன். சற்று முன்பு பேசியவர் எனது சமுதாயத் தொண்டைப் பற்றியும், எனது மெலிந்து போன இளைத்த தேகத்தைப் பற்றியும் உருக்கமாகப் பேசினார். அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த இளைஞன் ஒருவன் கண்ணீர் விட்டுத் தேம்பி அழுதான். அவ் விளைஞன் என்னைப் பார்ப்பதற்காக 100 மைல்களுக்கு அப்பால் சிக்கல் என்னும் சிற்றூரிலிருந்து வந்திருப்பதை நான் அறிந்ததும், நான் இந்த சமுதாயத்தின்பால் வைத்துள்ள நம்பிக்கை அதிகமாகி விட்டது.

நான் கடந்த காலங்களில் பட்டபாட்டிற்கெல்லாம் பலன் கிடைத்த உணர்ச்சியை அடைந்தேன். அவன் யார்? நான் யார்? எங்களைப் பிரிக்கும் தூரம் மிக மிக அதிகம், இருந்த போதிலும் ஸ்தாபனம் பொலிவுடன் திகழ நாங்கள் யாரை அதிகமாக நம்பியிருக்கிறோமோ அப்படிப்பட்ட இளைஞர் சமுதாயம் உணர்ச்சிப் பெருக்காலும் நன்றிப் பெருக்காலும் உருவாகி வருகிறது என்று உணர்ந்தவுடன் என் அசதியும், தளர்ச்சியும் பறந்து விட்டது. 25 வயது இளைஞனின் துடிப்புடன் நான் இப்பொழுது உங்கள் முன் நிற்கிறேன். இனிமேல் தொடர்ந்து கூட்டங்களில் பேசுவேன், என் இறுதி மூச்சு நிற்கும்வரை நான் தொடர்ந்து முழங்குவேன்.

''இஸ்லாமிய சமுதாயத்தின் கலாச்சாரத்தைப் பேணிக் காக்கவும் அதன் உரிமைகளைக் கோரிப் பெறவுமே முஸ்லிம் லீக் பாடுபட்டு வருகிறது. நமது புனிதமான லட்சியங்கள் சித்தியாவதற்கு 20 ஆண்டு காலம் கூடப்பிடிக்கலாம், நாம் பெரும் சோதனைக் காலத்தில் வாழ்ந்து வருகிறோம். நமது சந்ததியினருக்கு நாம் விட்டுச் செல்லும் சொத்து நமது கலாச்சாரம் தான்.

சமீபத்தில் நடந்த நிகழ்ச்சி ஒன்று, நமது உப ஜனாதிபதி ஜனாப் ஜாஹிர் ஹுஸைன் அவர்கள் கரம்கூப்பி வணக்கம் தெரிவிப்பதாக உள்ள படம் ஒன்று கண்டேன். அதைப் பார்த்ததும் எனது சிந்தனை நமது வருங்கால இளைஞர்களைச் சுற்றி ஓடியது. உப ஜனாதிபதியவர்கள் இஸ்லாத்தை நன்கு தெரிந்தவர். அதில் சந்தேகமில்லை. அவரின் கூப்பிய கரத்தைப் பார்த்து நான் அவரின் உள்ளத்தைச் சந்தேகிக்கவும் இல்லை. ஆனால், நமது சந்ததிகள் கரத்தாலும்மனத்தாலும் கை கூப்பும் நிலையை அடைந்து விடக் கூடாதே என்பது தான் எனது கவலை. அந்த நிலைக்கு இஸ்லாமியக் கலாச்சாரம் இழிந்து விடக் கூடாதென்பதற்குத்தான் முஸ்லிம் லீக் பாடுபட்டு வருகிறது.

ஊழியர்களின் பொறுப்பு மகத்தானது. அவர்களுக்கு எதிர்ப்பும் இடைஞ்சல்களும் வரலாம். அவற்றையெல்லாம் அவர்கள் பொருட்படுத்தாது இறை நம்பிக்கை என்ற ஆயுதத்தை ஏந்தி கலங்காது பணி புரிதல் வேண்டும்.''

[தளபதி திருப்பூர் மைதீன் அவர்கள் 7-7-63 அன்று விருது நகரில் முஸ்லிம் லீக் கூட்டத்தில் உரையாற்றிய பொழுது கூறியவை.]

நன்றி : 22-7-1963 உரிமைக்குரல்

# மனிதப் புனிதர்!

1947-ஆம் ஆண்டு.

அப்பொழுது நான் திருச்சி ஜில்லா முஸ்லிம் லீக் ஆர்கனைஸராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அத்தோடு தீவிர லீகனாகவுமிருந்தேன். நாடு பிளவுண்டதும், துப்பறியும் இலாகாவின் கண்காணிப்பு என் மீது அதிகம் ஏற்பட்டது. வரும் கடிதங்களெல்லாம் பரிசீலனைக்கு உட்பட்டே வந்தன, சில காலம் தலைமறைவாகவும் வாழ நேர்ந்தது.

நாடு பிளவுண்டதும், இந்திய முஸ்லிம் லீக்கிற்கு 'இந்தியன் யூனியன் முஸ்லிம் லீக்' என்ற பெயர் ஏற்பட்டது. இதற்கு யாரைத் தலைவராக நியமிப்பது என்ற கேள்வி எழுந்தது. சவுத்ரி கலீக் குஜ்ஜமான்தான் பொருத்தமானவர் என்ற அபிப்பிராயம் நிலவியது. ஆனல், அவர் பாக்கிஸ்தானுக்குச் சென்று விட்டதால், மீண்டும் தலைமைப் பதவிக்கு இந்திய யூனியன் முஸ்லிம் லீகிற்கு யாரைத் தலைவராக போடுவது என்ற பிரச்சினை எழுந்தது.

கராச்சியில் நடந்த முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டத்திற்கு காயிதெ அஃஜம் முஹம்மத் அலி ஜின்னாஹ் தலைமை வகித்திருந்தார். எல்லா முக்கியத் தலைவர்களும் அச்சமயம் அங்குக் கூடியிருந்தனர். 'யாரைத் தலைவராகப் போடுவது என்ற கேள்வி எழுந்தது. எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, காயிதெ அஃஜம் எழுந்து நின்று, கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் இஸ்மாயில் சாஹிப் பக்கம் திரும்பி (அச்சமயம் அவர்களுக்கு இந்தப் பட்டம் இல்லை) மிஸ்டர் இஸ்மாயில் சாஹிப்! இஸ் உஹ்தே ஆப் சம்பாலியே!'' (மிஸ்டர் இஸ்மாயில் சாஹிப் இந்த பதவியைத் தாங்கள் சமாளியுங்கள்!) என்று உர்தூவில் சொன்னார். ஒரே கை தட்டல்! ஆரவாரத்துடன் இதனை எல்லோரும் ஏற்றுக் கொண்டனர். இந்தியன் யூனியன் முஸ்லிம் லீக் தலைவராகக் கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அந்தத் தேர்வு எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லே; காரணம், அவர்களை அதுவரை நான் சந்திக்கவில்லை. பழகிப் பார்க்கவில்லை. '

அப்பொழுது இலங்கையிலிருந்து ''இஸ்லாமிய தாரகை'' என்ற பெயருடன் ஒரு வார இதழ் வெளி வந்து கொண்டிருந்தது. அது மிகவும் தீவிரமானப் போக்குடையதாக இருந்தது. கொழும்புவிலிருந்து அது வெளி வந்து கொண்டிருந்தாலும், அதன் ''மார்க்கெட் இந்திய தமிழ் முஸ்லிம்களிடம் தான் இருந்தது. மாஸ்டர் கொட்டாப்புளி'' என்ற புனைப் பெயருடன் மிகத் தீவிரமான பாணியில் அதில் எழுதி வந்தேன்.

காயிதே மில்லத்தின் தேர்வு எனக்கு அச்சமயம் பிடித்தமாயில்லாதிருந்ததால், ''சிங்கம் வீற்றிருந்த பீடத்திலே இன்று ஒரு சுண்டெலி'' என்ற தலைப்பிட்டு அந்தப் புனைப் பெயருடன் காயிதேமில்லத் அவர்களைப் பற்றி மிகவும் கடுமையாக விமர்சித்து எழுதியிருந்தேன்.

பத்திரிகை வெளி வந்த அடுத்த வாரம், திருச்சி ஜில்லா முஸ்லிம் லீக் தலைவராயிருந்த பி. ஹெச். முஹம்மத் நஸ்ருத்தீன் சாஹிப் (மர்ஹூம்) அவர்களது இரும்புக் கடைக்கு காயிதேமில்லத் அவர்கள் வந்திருந்தார்கள். அவர்களைச் சந்தித்துப் பேசும் நோக்கத்துடன், நான், ஏ. கே. பாஷா, அப்துஸ் ஸத்தார் சாஹிப் (மர்ஹூம்) ஜானிபாய் முன்னாள் எம். எல். ஸி. [மர்ஹூம்] உட்பட பலர் சென்று அவர்களைச் சந்தித்து பேசிக் கொண்டிருந்தோம்.

பேச்சு வார்த்தைகளினூடே ஏ. கே. பாஷா சாஹிப் அவர்கள், காயிதேமில்லத் அவர்களை விமர்சித்திருந்த 'இஸ்லாமிய தாரகை' இதழை அவர்களிடம் நீட்டி, 'லீடர் சாஹிப்! உங்களைப் பற்றி வந்த இந்தக் கட்டுரையைப் படித்துப் பார்த்தீர்களா?'' என்று பத்திரிகையை அவர்களிடம் கொடுத்து விட்டார். எனது முகத்தில் 'குப்' பென்று வியர்க்க ஆரம்பித்தது. நெஞ்சு 'படபட' வென்று அடிக்க ஆரம்பித்தது.

காயிதேமில்லத் அவர்கள் அதனை வாங்கிப் புன்னகை பூத்தவாறு சிறிது படித்துவிட்டு, 'எழுத்துச் சுதந்திரம் எல்லோருக்கும் உண்டு! இது அவரது கருத்து; அல்லாஹ்வின் பார்வையில் யார் எப்படியோ?'' என்று கூறியவாறு பத்திரிகையைத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

அதன் பிறகு பல தடவை காயிதேமில்லத்துடைய சென்னை இல்லத்திலும், திருச்சியிலும் மற்றும் பல இடங்களிலும் அவர்களோடு நெருங்கிப் பழகி அவர்களது பெருந் தன்மையையும், உயர்ந்த பண்புகளையும் கண்டறிந்து, வியந்து

போனேன். 'ரசூல் சாஹிப்!' என்று அவர்கள் என்னை அன்போடு அழைத்தபொழுதெல்லாம் எனக்கு அந்தப் பழைய ஞாபகம் வந்து, இத் தகைய ஒரு மனிதப் புனிதரைப் பற்றி இவ்வளவு தவறான எண்ணங் கொண்டிருந்தோமே என்று எனதுள்ளம் உருகத் தொடங்கிவிடும். ஒரு பயங்கர சூழலில், அல்லாஹ்தான் இத்தகைய ஒரு மனிதப் புனிதரை இந்திய முஸ்லிம்களுக்காக அனுப்பி னான் என்பதில் யாருக்கும் எள்ளளவும் கருத்து வேறுபாடு இல்லை.

**திருச்சி ரசூல்,**
திருச்சி.

''மணிச்சுடர்'' 7-7-89

## தேடிவந்து நிதி கொடுத்த தலைவர்

எம்.எம். பீர் முஹம்மது சாஹிப் மேலப்பாளையம் தொகுதியில் இருந்து 1967ம் ஆண்டு முஸ்லிம் லீக் சார்பில் தமிழ்நாடு சட்டமன்றத்திற்குப் போட்டியிட்ட சமயம், தேர்தல் பொறுப்புக்களை நான் மேற் பார்த்து வந்தேன். அச்சமயம் முஸ்லிம் லீக் கட்சியிலிருந்து ஐயாயிரம் ரூபாய்தான் ஒவ்வொரு வேட்பாளருக்கும் கொடுக்கப்பட்டது. தேர்தல் செலவுகள் அதிகமாக இருந்ததினால், தேர்தல் வேலைகளை பெரிய அளவில் முடுக்கிவிட முடியாது நாங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தோம்.

அச்சமயம் காயிதே மில்லத் அவர்கள் பேட்டைக்கு வந்திருந்தார்கள். இதைக் கேட்டு நானும்சில நண்பர்களும் பேட்டைக்குச் சென்று தேர்தல் நிலவரங்களை எடுத்துச் சொல்லி மேலும் பணம் தேவைப்படுகிறது என்றோம். அதற்கு தலைவரவர்கள் ''தேர்தல் நிதியாக 30,000 ரூபாய் தான் சேர்ந்தது. ஆறு வேட்பாளர்கள் நமது கட்சி சார்பாகப் போட்டியிடுகிறார்கள். அத் தொகையை சமமாகப் பங்கிட்டு அளித்து விட்டேன். தற்போது என்னிடம் வேறு பணமில்லை. அல்லாஹ் உதவி செய்வான். உங்கள் பணியை தொடர்ந்து செய்யுங்கள்'' என புத்திமதி கூறி அனுப்பி விட்டார்கள்.

ஒருநாள் அதிகாலை எனது ஹோட்டலில் நான் அமர்ந்து கொண்டிருந்தேன். தேர்தல் பணிக்குப் புறப்படுவதற்கு தயார் செய்து கொண்டிருந்தேன். எதிர்பாராத விதமாக காயிதே மில்லத் என் ஹோட்டலுக்கு தன்னந் தனியாக வந்தார்கள்; கூட ஒருவரும் இல்லை. அவர் களை நான் அந்த காலை வேளையில் எதிர் பார்க்கவேயில்லை.

என்னிடம் அதிகம் ஒன்றும் பேசவில்லை. என்னிடம் ஒரு கவரை நீட்டி இதில் 2222 ரூபாய் இருக்கிறது. இதை தேர்தல் நிதிக்கு வைத்துக்கொள்ளுங்கள். அன்று நீங்கள் என்னிடம் பணம் கேட்டபொழுது என் கையில் காசில்லை. பக்கீர்ஸாவாக இருந்தேன். இப்பொழுது கொஞ்சம் பணம் வந்தது, உடனே அதை எடுத்துக் கொண்டு உங்களைப் பார்க்க வந்து விட் டேன்'' என்று சொன்னார்கள். ஆச்சரியம் தாளாமல் என்ன சொல்வதென்று தெரியாமல் நான் முழித்தேன்.

''சொல்லி விட்டிருந்தால் நானே வந்திருப்பேனே'' என்று நான் சொன்னதற்கு ''என்னைத் தேடி வந்தீர்கள். இன்று உங்களைத் தேடி நான் வரவேண்டுமென அல்லாஹ் நாடி விட்டான்'' என்று முகத்தில் ஒருவித சலனமும் இல்லாதவாறு புன்முறுவல் பூத்த வண்ணம் பதிலளித்தார்கள்.

**ஹாஜி ஏ. எஸ். எம். ஷேக் மைதீன சாகிபு**
தாஜ் ஹோட்டல், நெல்லை சந்திப்பு

# இந்திய முஸ்லிம்களின் ஒரே நம்பிக்கை நட்சத்திரம்

வடகரை M. M. பக்கர், Ex. M.L.C.

1941ஆம் ஆண்டு மார்ச் மாதம் 21ம் தேதி, அகில இந்திய முஸ்லிம் லீகின் வருடாந்திர மாநாடு சென்னையிலே நடைபெற்றது. இந்திய நாட்டின் அரசியலில் சூறாவளி வீசிக் கொண்டிருந்த காலம். நாடு முழுவதும் உணர்ச்சி அலைகள் கொந்தளித்தெழுந்த நேரம். அன்றிருந்த தமிழகம், கேரளா, ஆந்திரா, மைசூர் ஆகியவை யடங்கிய சென்னை மாநிலத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஆர்த்தெழுந்து வந்த ஆயிர மாயிரம் மக்கள் சென்னை நகரத்திலே குழுமி யிருந்தனர். காயிதே ஆஜம் ஜின்னா உள்ளிட்ட அகில இந்திய முஸ்லிம் தலைவர்களில் பெரும் பாலோர் மாநாட்டுக்கு வந்திருந்ததால், மக்களின் ஆர்வமும் ஆர்ப்பாட்டமும் எல்லை கடந்து நின்றன.

ஆனால், அன்று நடைபெறுவதாக அறிவிக்கப் பட்டிருந்த காயிதே ஆஜத்தின் தலைமைப் பேருரை அவரது உடல்நலக்குறைவின் காரண மாக மறுநாள் ஒத்திவைக்கப்பட்டதால், மக்கள் கூட்டம் ஏமாற்றம் அடைந்தது. இந்த ஏமாற்றத் தில் பங்கேற்ற நானும் எனது நண்பர்கள் சிலரும் பொழுதைக் கழிப்பதற்காக கடற் கரைக்குச் சென்றபோது, பம்பாயிலிருந்து மாநாட்டிற்கு வந்திருந்த சில பிரமுகர்கள் ஓரிடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் எங்களை அருகில் அழைத்தனர், நாங் களும் சென்று அமர்ந்தோம்.

எங்களது உரையாடல் இந்த நேரத்தில் அரசியலுக்குத் திரும்பியது. தென்னகத்தில் சிறந்த தலைவர் யார் என்று மேனாட்டு உடை யும், ஜின்னா தொப்பியும் அணிந்திருந்த பெரிய மனிதர் ஒருவர் கேட்டார்.

நான் ஒருவரைச் சொன்னேன். எனது நண்பர்களில் சிலர் என்னை ஆதரித்தனர். சிலர் மறுத்து வேறு ஒருவரைச் சொன்னார்கள். இதைக் கேட்டு அந்தப்பெரியவர் சிரித்தார். ஏமாற்ற மடைந்த நாங்கள் ஒருகணம் திகைத்து நின்றோம்.

அக்காலகட்டத்தில் மதராஸ் முஸ்லிம் லீக் அரசியலில் நாங்கள் ''ஜமால் குரூப்'' அணிக்கு எதிராகச் செயல்பட்டுவந்தோம் என்பதைச் சொல்லித்தான் ஆக வேண்டும்.

அப்பெரியாரைப் பார்த்து நாங்கள் ''உங்கள் கேள்விக்கு நீங்களே பதில் சொல்லுங்கள்' என்று திருப்பிக் கேட்டோம். அப்பொழுது அவர் கூறினார்.

''நீங்களெல்லாம் படித்த உணர்ச்சியுள்ள இளைஞர்கள். ஆகவே, யாரைப் பற்றியும் குறை வாக நான் பேசுவதாக நினைக்கக்கூடாது. உங்கள் மாநிலத்தில் மிஸ்டர் முஹம்மது இஸ்மாயில் ஒருவரைத்தவிர அரசியலை சரியாகக் கணிக்கும் எந்தத் தலைவரையும் எனக்குத் தெரியவில்லை.''

இவ்வாறு அவர் கூறியதும் நாங்கள் அயர்ந்து போனோம். ஏனெனில், நாங்கள் அடுக்கிய தலைவர்கள் பட்டியலில் அந்த ''மிஸ்டர் இஸ் மாயில்'' இடம் பெற்றிருக்கவில்லை! அது மட்டு மல்ல. எனது நண்பர்களிலே பலர் அந்த ''மிஸ்டரை'' பார்த்ததுகூட இல்லை! நான் ஓரிரு முறை ''மிஸ்டரை'' தூரத்திலிருந்து பார்த்த துண்டே தவிர நெருங்கியதில்லை. காரணம் என் தலைவர்களில் சிலர், அவர் நெருங்க முடியாதவ ரென்றும் - வளைந்து கொடுக்காதவர் என்றும் கூறி, என்னை பயமுறுத்தி வைத்திருந்தனர்.

அப்படிப்பட்ட ஒருவரை ''இவர் தான் தென்னகத்தின் சிறந்த தலைவர்' என்று அடித்துப் பேசும் பம்பாய் பிரமுகரை ஏற இறங்க பார்த்து விட்டு அவர் யார் என்று அருகிலிருந்த மற்றொரு வரைக் கேட்டேன். அவர் பெயர் ''சுந்த்ரீகர்'' என்றார். அவர் இந்திய இடைக்கால சர்க்காரின் வர்த்தக மந்திரியாயும், பிற்காலத்தில் பாக்கிஸ் தான் நாட்டின் பிரதம மந்திரியாகவும் விளங்கி காலஞ்சென்ற ஜனாப் இப்ராஹீம் இஸ்மாயில்

சுந்தரீகர் அவர்களே அந்தப் பம்பாய்ப் பிரமுகர். அப்போது அவர் பம்பாய் மாநில முஸ்லிம் லீகின் தலைவராக இருந்தார்.

ஆனல், மாநாட்டின் ஆர்ப்பாட்டத்திலும், அதில் அடிக்கடி தோன்றி ஆர்ப்பரித்த ''தலைவர்'' களிடத்தும் மயங்கிக் கிடந்த என் உள்ளத்திற்கு சுந்தரீகர் அவர்களின் கருத்து உடன்பாடாக இருக்கவில்லை. அதற்குப் பிறகு இயக்கப் பணி களில் தீவிரமாக இறங்கி மாநில முஸ்லிம் லீகுடன் ஓரளவு தொடர்பு ஏற்பட்ட காலத்திலும், எனது உறவு மாநில முஸ்லிம் லீக் காரியாலயத் துடனும் கே. டி. எம் அவர்களுடனும் முடிந்து விட்டது.

நாள் ஓடிற்று. 1944ஆம் ஆண்டு மே மாதம் தஞ்சை மாவட்ட முஸ்லிம் லீக் மாநாடு தஞ் சாவூரில் சவுத்ரி கலிகுஸ்ஸமானின் தலைமையில் கோலாகலமாக நடைபெற்றது. தலைவர்களுக் கென்று ஒதுக்கப்பட்டிருந்த பங்களாவொன்றில் தலைவர் காயிதேமில்லத் அவர்களும் [மிஸ்டர் இஸ்மாயில் என்று சுந்தரீகார் கூறிய அதே தலைவர்தான்] கே. டி. எம் அவர்கள் கனம் சையது மஹமூத் பாஷா ஆகியோரும் தங்கி யிருந்தனர். என்னைக் கண்டவுடன் கே. டி. எம். அவர்கள் அவரது சுபாவப்படி கடுமையாக கண்டிக்கத் தொடங்கினர். காரணம், அப் போது காரைக்காலிலிருந்து வெளியாகிக் கொண் டிருந்த 'பால்யன்'' என்ற வார ஏட்டில் மாநில முஸ்லிம் லீக் நிர்வாகத்தின் 'மிதவாதத் தன்மை யை'க் கடுமையாகச் சாடி தொடர்ச்சி யாக கட்டுரைகள் எழுதியிருந்தேன். என் னுடைய இளந்துடுக்கே கே. டி. எம்.மின் கோபத் திற்குக் காரணம். நான் ஏதோ சமாதானம் சொல்லி தப்பினேன். இத்தனைக்கும் அருகி லிருந்த காயிதேமில்லத் அவர்களிடமிருந்து ஒரு வார்த்தை வர வேண்டுமே? கிடையாது.

அன்று இரவு நடந்த மாநாட்டின் விஷயா லோசனைக் கமிட்டியில் எதிர்பாராததொரு வாக்குவாதம் ஏற்பட்டது. தமிழ்நாடு, ஆந்திரா, மைசூர், கேரளா ஆகியவை இணைந்திருந்த அன்றைய சென்னை மாகாணத்திற்கு ஒரே மாநில முஸ்லிம் லீக் அமைப்புத்தான் இருந்தது. அதில் நிர்வாக மொழி வசதிகளை முன்னிட்டும் 'காங் கிரஸில் இருப்பதைப் போன்றும்' தமிழக லீகைத் தனியாகப் பிரிக்க வேண்டும் என ஒரு தீர்மானம் கொடுத்திருந்தேன். இந்த தீர்மானம் விவாதத் திற்கு எடுத்துக் , கொள்ளப்பட்டபோது ஜனுப் அப்துல் ஸத்தார் ஈசாக் சேட் அவர்கள் தீர்மானத்தை பலமாக எதிர்த்தார். அப்போது அவர் அகில இந்திய முஸ்லிம் லீகின் காரியக் கமிட்டி உறுப்பினர்.

அவர் எதிர்த்ததில் தவறென்றுமில்லை. முஸ்லிம்களுக்குள் மொழிப் பிரிவினையைக் கொணர்ந்து முஸ்லிம்களைப் பிரித்து குழப்பம் செய்ய முயலுவதாக என்மீது குற்றஞ்சாட்டி சத்தம் போட்டார். அவ்வளவு பெரிய மனிதர். சாதாரணமாக எனக்கு விளக்கியிருக்கலாம். அதைவிட்டு, ஏதோ தமக்குச் சமமான பெரிய எதிரியுடன் மோதுவது போல அவர் ஆர்ப்பரித்த போது இளைஞர்களுக்கு உரித்தான ஆவேச உணர்ச்சியுடன், சர்வாதிகாரத்தனமாகப் பேச வேண்டாம் என்று நானும் கத்தினேன்.

''தீர்மானத்தை மாநாட்டில் முன்மொழியத் தான் போகிறேன், முடிந்தால் எதிர்த்து தோற் கடித்துக் கொள்ளுங்கள்'' என்று சவால் விடத் தொடங்கினேன். பலரும் ஒரே சமயத்தில் பேச முயன்றனர். சில நிமிடங்கள் குழப்ப நிலை நிலவிற்று, நிலைமை ரசாபாசமாகி விடுமோ வென்றநிலைதான். இந்த நேரத்தில் 'தம்பி' என்று அமைதியான குரலொன்று கேட்டது; திரும்பினேன். தலைவரவர்கள் எழுந்து நின்றுர் கள். அடுத்து சத்தார் சேட் சாகிபை நோக்கி கையமர்த்தினுர்கள். அவரும் உட்கார்ந்தார். ஒரு நிமிடத்தில் அமைதி நிலவியது.

நளினமாக எழுந்தன தலைவரது சொற்கள் : 'தம்பி உங்கள் உணர்ச்சியை நான் உணரு கிறேன். நல்லெண்ணத்துடன் தான் இந்தத் தீர்மானம் கொணர்ந்திருக்கிறீர்கள் என்பதும் எனக்குத் தெரிகிறது. ஆனல் ஒன்றை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும், இன்று அதிகார வர்க்கத்திலுள்ளோர், நமது எண்ணிக்கைக் குறைவைப் பார்த்து இப்போதே அலட் சியம் செய்ய நினைக்கிறுர்கள். இந்த நிலை யில் மொழிவாரியாகவும் நாம் நிறுவனத்தைப் பிரித்துவிட்டால் நமது குரலுக்கு இன்றுள்ள மதிப்புக்கூட இருக்காதே. அதை நீங்கள் சிந்தித் தீர்களா? ஆகவே, உங்கள் தீர்மானத்தை வாபஸ் வாங்கிக் கொள்வது நல்லதென நினைக்கிறேன்.''

அடுத்த கணம் தீர்மானத்தை வாபஸ் பெற் றேன், உடனே என் நண்பர்கள் என்னைச் சுற்றிக் கொண்டனர். 'தலைவரென்றுல் இவரல்லவா தலைவர்? கோட்டும் சூட்டும் அணிந்து கொண்டு இத்தனை பேர் வந்திருக்கிறுர்களே, ஒவ்வொரு

வரும் நம்மை எதிரியாக எண்ணி கச்சை கட்டு கிறார்களே தவிர, விஷயத்தை கச்சிதமாக இப்படி விளக்கி உணர வைக்கவோ, அமைதி யான முறையில் பக்குவப்படுத்தவோ தெரிய வில்லையே' என்று விமர்சனம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள்! அவர்களை ஒருவாறு அமைதிப் படுத்தி வெளிக் கொணர்ந்தேன்.

ஆனால் அன்றிரவு எனது உள்ளத்தில் ஒரு விஷயம் அழுத்தமாகப் பதிந்தது. ''இன்றுள்ள நிலையில் அமைதியும், ஆழமான அறிவும் கொண்ட இந்தத் தலைவரால்தான் தமிழக முஸ்லிம்களுக்கு ஏதும் நன்மை ஏற்பட முடியுமே தவிர, அலங்கார மாகப் பேசி, ஆர்ப்பாட்டம் செய்து, நெருக்கடி வந்த போது பதுங்கிவிடும் தலைவர்களால் அல்ல'' என்ற எண்ணந்தான் அது.

சென்னை மாநில முஸ்லிம் லீகின் தலைவராக காயிதேமில்லத் தேர்ந்தெடுக்கப்பட்டதும், அவர் களது தலைமையில், 1946 பொதுத் தேர்தலில் மாநில சட்ட மன்றத்திலிருந்த முஸ்லிம்களுக்கான 29 இடங்களையும் முஸ்லிம் லீக் கைப்பற்றியதும் சரித்திரமுக்கியத்துவம் பெற்ற சம்பவங்களாகும்.

எதிர்க்கட்சித்தலைவராக எப்படி இருக்க வேண்டும், உருவான எதிர்க்கட்சியென்றால் எப்படி இயங்க வேண்டும் என்பதற்கு தலைவர் காயிதேமில்லத்தும், அன்றிருந்த சென்னை சட்டமன்ற முஸ்லிம் லீக் கட்சியினரும் இந்தியா முழுவதற்குமே ஒரு எடுத்துக் காட்டாக விளங் கினர். இதற்கு அன்று சென்னை மாநில கவர்ன ராக விளங்கிய சர். ஆர்ச்சிபால்ட் நை அவர் களும், முதலமைச்சராக விளங்கிய திரு. டி. பிர காசம் காரு அவர்களும் தலைவரவர்களுக்களித்த பாராட்டையும், புகழாரத்தையும் உதாரண மாகக் கொள்ளலாம்.

தலைவரவர்களின் இந்த ஆற்றலையும், நேர்மை யையும் பாராட்டு முகத்தான் இந்திய நாட்டில் யாருக்கும் அளிக்காத ஒரு கண்ணியத்தை காயிதெ ஆஜம் ஜின்னா அவர்கள், காயிதேமில்லத் அவர்களுக்கு அளித்தார்கள்.

டில்லியில் நடைபெற்ற அகில இந்திய நாடாளு மன்ற, சட்ட மன்ற உறுப்பினர்கள். தலைவர்கள், பிரமுகர்களின் மாபெரும் ''கன்வென்ஷன்'' நடந்த சமயம் ஒரு கட்டத் தில் தமக்குப் பதிலாக, தலைவர் காயிதேமில்லத் அவர்களைத் தலைமை வகிக்குமாறு காயிதெ ஆஜம் அவர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

இப்படித் தனித் தன்மையுடன் காயிதெ ஆஜத்தால் பெருமைப் படுத்தப்பட்ட தலைவர் இந்தியாவிலேயே காயிதேமில்லத் அவர்கள்தான் என்று நான் நினைக்கிறேன். ஒரு வேளை பிற்காலத் தில் இந்திய முஸ்லிம்களை வழி நடத்திச் செல்லும் மகத்தான பொறுப்பு காயிதே மில்லத்தின் தோளிலேதான் சுமத்தப்படும் என்பதை காயிதெ ஆஜம் அன்றே அறிந்திருந்தாரோ?

காலம் சுழன்றது. இந்தியத் துணைக் கண் டம், இந்தியா—பாகிஸ்தான் என இரண்டு நாடு களாக சுதந்திரம் பெற்றன. அப்போது நான் சிங்கப்பூரிலே இருந்தேன். நமது இந்தியத் திரு நாடு சுதந்திரம் பெற்றதிலே எல்லோரையும் போல் நானடைந்த பூரிப்பு இன்னமும் எனது நினைவில் நிற்கிறது.

சுதந்திர தினத்தன்று சிங்கப்பூர் நகரத்தில் இந்திய சர்க்கார் பிரதிநிதியாக விளங்கிய திரு. திவி அவர்களின் தலைமையில் நடந்த மலாயா வாழ் இந்தியர்களின் பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் இந்திய முஸ்லிம்களின் சார்பில் பங் கேற்று சொற்பொழிவாற்றும் பாக்கியமும் எனக் குக் கிடைத்தது.

ஆனால், சுதந்திரத்தின் மகிழ்ச்சியைப் பூரண மாக அனுபவிக்க முடியாமல், இந்தியாவிலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகள் வேதனை யளிக் கத் தொடங்கின.

இந்தியா—பாக்கிஸ்தான் பிரிவினை சுமுகமாக நடைபெறுமென்று எல்லோரும்எதிர்பார்த்ததற்கு மாறாக, இருநாடுகளிலும் ஏற்பட்ட பயங்கரமான வகுப்புக் கலவரங்களும் அதைத் தொடர்ந்து வரலாறு காணாத விதத்தில், லட்சக் கணக்கான மக்கள் அகதிகளாக அலங்கோலத்துடன் குடிபெய ரத் தொடங்கிய செய்திகளும் தினமும் வந்து குவியத் தொடங்கின. மனித உள்ளம் படைத்த அனைவருமே வெட்கித் தலைகுனிய வேண்டிய அளவுக்கு இந்தக் கொடுமைகளும் பயங்கர நிகழ்ச் சிகளும் செய்தி நிறுவனங்களால் தரப்பட்டன, இதைத் தொடர்ந்து, காஷ்மீரில் இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கும் இடையில் போரே ஏற்படுமோ வென்ற நிலையும் உருவாகி வந்தது. இவற்றை எல்லாம் கண்டு எனக்கு வருத்தமும் குழப்பமும் ஏற்பட்டது. இந்த நிலையில் இந்திய முஸ்லிம் களின் எதிர்காலம் என்ன என்ற சிந்தனை இரவும் பகலும் என்னை வதைக்கலாயிற்று.

பிரபல இஸ்லாமிய சிந்தனையாளரான அறிஞர் கரீம் கனி அவர்கள் அப்போது சிங்கப்பூரிலே இருந்தார். அங்கு வெளி வந்து கொண்டிருந்த ''மலாயா நண்பன்'' என்ற தமிழ் தினசரியின் ஆசிரியராகவும், ''காம்ரேட்'' என்ற ஆங்கில வார ஏட்டின் ஆசிரியராகவும் அவர் பணியாற்றி வந்தார். மூன்று ஆண்டு காலம் அவருடன் எனக்கு ஏற்பட்ட நெருங்கிய தொடர்புதான் எனது இஸ்லாமிய அறிவு வளர்ச்சியின் பொற்காலம் என்று கருதுகிறேன். அறிஞர் கரீம் கனியும் நானும் இந்திய முஸ்லிம்களின் வருங்காலம் பற்றி தினமும் விவாதிப்போம்.

அகில இந்திய முஸ்லிம் தலைவர்களில் பெரும்பாலோர் காயிதெ ஆஜம் ஜின்னா, லியாகத் அலிகான் உட்பட பாக்கிஸ்தானுக்குப் போய்விட்டனர். இந்தியாவிலேயே எஞ்சிநின்ற சிலர் நம்பிக்கை இழந்துதடுமாற்றத்திலே உழன்றுக்கொண்டிருந்ததாகத் தோன்றிற்று. இந்திய முஸ்லிம்கள் இனி யார் சொல்லைக் கேட்டு என்னசெய்வது—எப்படி நடந்து கொள்வது என்பதே புரியாத புதிராக இருந்தது. 5 கோடி இந்திய முஸ்லிம்களின் சார்பில் இந்திய அரசுக்கு எனது விசுவாசத்தை அளிக்கிறேன் என்று அரசியல் நிர்ணய சபையில் உறுதியளித்த சவுத்ரி கலீகுஸ்ஸமான் அடுத்த மாதத்தில் குடும்பத்தினருடன் பாகிஸ்தானில் குடியேறிவிட்டார்! மற்றும் சில ''தலைவர்கள்'' பாகிஸ்தானில் போய் அமர்ந்து கொண்டு இந்திய முஸ்லிம்களைப் பற்றி வாய்கிழிய முழங்குகிறார்கள். இவற்றையெல்லாம் கண்டு வேதனையும், ஆத்திரமும் அடைந்த நான் அறிஞர் கரீம் கனி அவர்களிடம் முறையிடுவேன், அவர் ''நடந்தது'' பற்றி ஆத்திரப்படாதீர்கள். இறைவன் ஒருவழி காட்டுவான் என்று கூறுவரார்.

இப்படியிருந்த நிலையில், அகில இந்திய முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டம் கராச்சியில் நடக்கப் போவதாய் இந்தியாவிலிருந்து செய்திகள் வந்தன. இந்த செய்தியும் எனக்கு நம்பிக்கை யூட்டுவதாக இல்லை. காரணம், இந்தியாவில் எஞ்சி இருந்த தலைவர்களிலே பலர் நவாபுகளும், சர்க்கார் பட்டம் பெற்றவர்களும் ஆவர். இந்திய முஸ்லிம்களுக்கு வழி காட்ட இவர்களால் முடியாது என்று நான் கருதினேன்.

ஒருநாள் இரவு, மணி ஒன்று. அறிஞர் கரீம் கனியும் நானும் மலாயா நண்பன், அலுவலகத்தில் தனியே பேசிக் கொண்டிருந்தோம். அந்த நேரத்தில் ராய்ட்டர் செய்தியொன்று டெலிபிரிண்டரில் வந்தது. கராச்சியிலிருந்து வந்த அந்தச் செய்தியில் ''அகில இந்திய முஸ்லிம் லீக் என்ற தாய்ச்சபை பாக்கிஸ்தான் முஸ்லிம் லீக் என்றும், இந்திய முஸ்லிம் லீக் என்றும் இரண்டாகப்பிரிக்கப்பட்டன என்றும் பாகிஸ்தான் முஸ்லிம் லீகின் கன்வீனராக பாக். பிரதம மந்திரி நவாப் ஜாதா லியாகத் அலி கானும், இந்திய முஸ்லிம் லீகின் கன்வீனராக ஜனாப் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்றும் அந்த செய்தி கூறியது. நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன். பல நாட்களாக ஏற்படாத மகிழ்ச்சியும் நிம்மதியும் ஏனோ என் உள்ளத்தில் ஏற்பட்டது. நான் பயந்து வந்தது போல் இந்திய முஸ்லிம்களின் எதிர்காலம் முழுவதும் இருண்டுவிடவில்லை. அதிலே ஓர் ஒளி ஏற்படத்தான் போகிறது. அதனாலே தான் நிதானமும் நாணயமும் உள்ள தலைவர் இந்திய முஸ்லிம்களுக்குக் கிடைத்திருக்கிறார் என்று எனது உள்ளுணர்வு கூறியது.

இந்த உணர்விலேயே பல நிமிடங்கள் நான் மவுனமாக இருந்திருக்க வேண்டும். திடீரென் ''என்ன மவுனம்சாதிக்கிறீர்கள்?'' என்று கரீம் கனி அவர்கள் சிரித்துக் கொண்டே கேட்டவுடன் தான், நானும் சிரித்துக் கொண்டு ராய்ட்டர் செய்தியை அவரிடம் கொடுத்து ''இறைவன் அருள் செய்வான்'' என்று கூறுவீர்களல்லவா? அது கிடைத்துவிட்டதாக நினைக்கிறேன்'' என்று சொன்னேன்.

செய்தியை வாங்கிப் படித்த கரீம்கனி அவர்கள் ''இஸ்மாயில் சாஹிபைப் பற்றிகேள்விப்பட்டிருக்கிறேன். அதிகமாக எதுவும் தெரியாது நீங்கள் சொல்லுங்கள்'' என்றார். எனக்குத் தெரிந்ததைச் சொல்லி ''இன்றுள்ள நிலையில் இதைவிட சிறந்த தேர்வு இருக்க முடியாது'' என்று கூறினேன்!

சிறிது நேரம் மவுனம் சாதித்த அறிஞர் கரீம்கனி பேசத் தொடங்கினார். ஆன்மீகத் துறையில் பெரும் ஈடுபாடும் பக்குவமும் பெற்ற அவர் பேசத்தொடங்கிவிட்டால் அவரை நிறுத்துவது கடினம்.

நீரூற்றெனப் பெருக்கெடுத்தோடியது அவரது பேச்சு. அவர் சொன்னார்.

''இந்திய முஸ்லிம்களை வழி நடத்திச் செல்வது என்பது சாதாரண விஷயமல்ல. ஏனென்றால், இறைவனது அருள் பெற்ற மூன்று நாடுகளிலே

இந்தியாவும் ஒன்று. இறைவனின் திருவருட் பெற்ற மூன்று கூட்டங்களிலே இந்திய முஸ்லிம் சமுதாயமும் ஒன்று என நமது வள்ளல் பெருமானுர் (ஸல்) அருளி இருக்கின்ருர்கள். இறைவனது அருட்பெற்ற மூன்று நாடுகள் யாவை என தோழர்கள் வினவியபோது, மேற்குத் திசையை நோக்கி கையை உயர்த்திக் காட்டிய பெருமானுர் ''கடல்களால் சூழப்பட்டுள்ள ஒருநாடு'' என்று கூறினுர்கள்.

இங்கே நான் குறுக்கிட்டேன் ''எந்த நாடுகள் அவை.''

''பூகோள வல்லுநர்களின் கணக்குப்படி, பெருமானுர் அவர்கள் இன்றுள்ள முஸ்லிம் நாடுகளை மட்டும் குறிப்பிட்டிருந்தால் அது துருக்கியாகவோ, மொராக்கோவாகவோ இருக்கக்கூடும். முஸ்லிம் அல்லாத நாடுகளையும் குறித்திருந்தால் அது ஹாலந்தாகவோ, இங்கிலாந்தாகவோ இருந்திருக்கலாம்'' என்ருர் அறிஞர்.

''இரண்டாவது நாடு.''

''இரண்டு மலைகளிடையே பரந்து விரிந்து கிடக்கும் ஒரு நாடு'' என்று பெருமானுர் கூறினுர்கள். இதில் சந்தேகத்துக்கு இடம் கிடையாது. இந்தியாவைத் தவிர வேறு எந்த நாடும் அப்படி அமைந்து கிடக்கவில்லை.''

''மூன்ருவது நாடு''

''சூரியன் உதிக்கும் நாடு. ஆனுல் அதன் வெப்பத்திலிருந்து தப்பாத நாடு'' என்று பெருமானுர் அருளினுர்கள். முஸ்லிம் நாடு என்ருல் இந்தோனேஷியாவாகவோ, அல்லாத நாடு என்ருல் ஜப்பானுகவோ அது இருக்கக் கூடும்.'' என்ருர் அறிஞர்.

அடுத்து, இறைவனின் அருள்பெற்ற கூட்டத்தைப் பற்றி பெருமானுர் என்ன கூறியுள்ளார்கள் என்று கேட்டேன்.

அறிஞர் விளக்கினுர் :

''இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமான கூட்டங்கள் மூன்று என பெருமானுர் அருளினுர்கள். எந்தக் கூட்டங்கள் எனத் தோழர்கள் வினவியபோது பெருமானுர் கூறினுர்கள்;

''இதோ! இறைவனின் பாதையிலே தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தத்தம் செய்யத் தயாராக என்னைச் சுற்றி நிற்கிறதே இந்தக் கூட்டம்.

அடுத்து, முஸ்லிம்களென்போர் இறை வழியான சத்திய வாழ்வை மறந்து மனம் போன போக்கில் வாழத் தொடங்கி இஸ்லாத்தின் பெருமையே மங்கி மறைந்து விட்டதாகத் தோன்றியபோது இஸ்லாத்திற்கு மீண்டும் புத்துயிரூட்டி ஏகத்துவ நாதத்தை உலகெலாம் ஒலிக்கச் செய்யுமே அந்தக் கூட்டம்.



மூன்ருவது, உலகத்திலே சத்தியம் நேர்மை என்பதெல்லாம் மறைந்து, மக்கள் மிருக வாழ்வில் ஆழ்ந்துவிடும் நேரம் ஒன்று வரும். இந்த அசத்திய மாயங்களையெல்லாம் வேரறுத்து சத்தியப் பாதையைக் காட்டுவதற்காக உலகத்தில் 'மஹதி' தோன்றுவார். அவருடன் ஒன்றித்து நின்று போராடப் போகிறதே அந்தக் கூட்டம் என்று பெருமானுர் விளக்கினுர்கள்.'' என்று நீண்ட விளக்கத்தைத் தந்த அறிஞர் கரீம் கனி மேலும் சொன்னுர் :—

பெருமானுர் அவர்கள் இந்தியாவும், இந்திய முஸ்லிம்களும் இறையருள் பெற்றவர்கள் என்று கூறியபோது, 'ஹிந்த்' என்ற அரபிச் -சொல்லைத்தான் கையாண்டிருக்கிருர்கள். அன்றிருந்த அரபி பூகோளப்படி இந்தியத் துணைக்கண்டம் முழுவதுமே அந்த வார்த்தையில் அடங்கும். ஆகவே, பெருமானுர் அவர்கள் கூறிய இறையருள் பெற்ற கூட்டம் ஜின்னுஹ் சாகிபின் தலைமையிலே பாக்கிஸ்தானில் இருக்கும் கூட்டமா அல்லது இஸ்மாயில் சாஹிபின் தலைமையிலே இந்தியாவிலுள்ள உங்கள் கூட்டமா வென்பதை சரித்திரம் தான் நிருபிக்க வேண்டும்'' என்று கூறினுர்.

''அது இஸ்மாயில் சாகிப் தலைமையிலுள்ள எங்கள் கூட்டமாகவே இருக்க வேண்டும் என 'துஆ' செய்யுங்கள்'' என்று நான் கூறினேன்.

புன்முறுவல் பூத்த கரீம் கனீ ''உங்கள் ஆசை நியாயமானது. அதற்கு ஒரு ஆதாரம் உண்டு. ஆரம்ப காலத்தில் ஏழைகளினுலும் திக்கற்றவர்களாலும் எப்படி இஸ்லாம் உருவாயிற்ருே, அதே போல் ஏழைகளினுலும் வறியவர்களினுலும் தான் இஸ்லாம் மீண்டும் புத்துயிர் பெரும் என்று பெருமானுரே கூறியுள்ளார்கள். ஆகவே, இன்று அதிகாரத்திலும், படாடோபத்திலும், ஆழ்ந்து விட்ட பாக்கிஸ்தானியரை விட ஏழைகளாயும் திக்கற்றவராயும் இன்று தோன்றும் இந்திய முஸ்லிம்களான உங்களுக்கே இந்த நல்லதிர்ஷ்டம் கிடைக்கக் கூடும்'' என்ருர்.

'ஆகவே, இஸ்மாயில் சாகிபுக்கும், அவரது தலைமையிலே நிற்கும் எங்களுக்கும் அந்தப் பாக்கியத்தையளிக்க துஆ செய்யுங்கள்'' என்றேன். நிசப்தமான அந்த நள்ளிரவில் தனித்திருந்த நாங்கள் இருவரும் இறைவனிடத்திலே 'துஆ' செய்தோம்.

இரண்டு நாளைக்குப் பிறகு தலைவர் காயிதே மில்லத் அவர்கள் கராச்சியை விட்டு புறப்படுவதற்கு முன்னுல் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியை 'டான்' பத்திரிகையிலே படித்த போது எனது கண்கள் கலங்கின.

''இந்திய முஸ்லிம்களான எங்களைப்பற்றி இனி நீங்கள் [பாகிஸ்தான்] கவலைப்படாதீர்கள், எங்களது பிரச்சினைகளை நாங்களே தீர்த்துக் கொள்வோம். நான் உங்களிடம் எதிர் பார்ப்ப தெல்லாம் இங்குள்ள சிறுபான்மை மக்களை (ஹிந்துக்களை) இஸ்லாத்தின் போதனைகளை யொட்டி கண்ணியத்துடனும் மரியாதையுடனும் நடத்தி உங்கள் பரந்த மனப்பான்மையை உலகத் திற்கு எண்பிப்பதுதான்'' எவ்வளவு உயர்தர மான பேச்சு! உறுதியும், நெடு நோக்கும் கொண்ட விசாலமான உள்ளத்தில் இருந்து மட்டும்தான் இந்த சொற்கள் வரமுடியும் என் பதை அறிஞர் கரீம் கனியும் ஒப்புக்கொண்டு பாராட்டினர்.

சுதந்திரத்தை யொட்டி இந்தியாவின் அர சியல் அமைப்புப் பணி தொடங்கியது. அரசியல் நிர்ணய சபையில், இந்தியாவிலிருந்த சிறந்த அறிவாளிகள் இடம் பெற்றிருந்தனர். அதில் மைனரிடிகளின் உரிமைக்காகவும், மாநில அரசு களுக்கு அதிக அதிகாரம் வேண்டுமென்பதற்காக வும் காயிதேமில்லத் அவர்கள் நடத்திய நீண்ட போராட்டங்களை நாடு அறியும். தலைவரவர் களின் நேரடியான வாதங்களுக்கு பதில் சொல்ல முடியாதவர்கள் வகுப்புவாதம் கூடாது என்ற கிளிப்பிள்ளை பாடத்தை அடிக்கடி அங்கே எழுப்பி னர்கள்.

''வகுப்பு வாதம், வகுப்பு வாதம் என்கிறீர் களே, அது என்னவென்று உங்களால் சொல்ல முடியுமா?'' என்று நேரடியாகவே ஒருமுறை தலை வர் கேட்ட போது, அப்போது உள்துறை அமைச் சராக விளங்கிய இரும்பு மனிதர் சர்தார் வல்ல பாய் பட்டேல் அவர்கள் ''அதை வரையிட்டுக் கூற முடியாது'' என்று மழுப்ப வேண்டியதா யிற்று.

புகழ்பெற்ற எழுத்தாளரான ராமானந்த சட்டர்ஜியை ஆசிரியராகக் கொண்டு கல்கத்தா விலிருந்து வெளிவந்து கொண்டிருந்த ''மார்டன் றெவியூ'' (Modern Review) பத்திரிகை அரசியல் நிர்ணய சபையின் பணிகளை விமர்சித்த போது ''இதன் ஆக்க பூர்வமான பணி யில் பெரும் பங்கேற்ற தலைவர்களில் மிஸ்டர் இஸ்மாயில் மிகவும் முக்கியமானவர்'' என எழுதியிருந்தது.

1950 ஆம் ஆண்டில் தாயகம் திரும்பினேன். முஸ்லிம் லீகின் சீரமைப்புப் பணி மெதுவாகத் தொடங்கி இருந்த நேரம். சென்னை வந்து தலைவரவர்களை சந்தித்த போது 'முஸ்லிம் லீகின் இன்றையத் திட்டம் என்ன?' என்று எல்லோ ரையும் போல் நானும் கேட்டேன். தலைவரவர் களின் பதில் சிறிது சூடாகவே இருந்தது. ''இன்று முஸ்லிம் லீகின் முன்னுள்ள ஒரே திட்டம் முஸ்லிம் லீக் பலம் பெற வேண்டியதன் அவசியத்தை முஸ்லிம்களுக்கும்—முஸ்லிம் அல்லாதாருக்கும் விளக்குவது தான்'' என்று பதிலளித்தார்கள்.

உண்மைதானே! சுவரை வைத்துக் கொண் டல்லவா சித்திரம் எழுத வேண்டும்? சுவரை சீர்படுத்தாமல் சித்திரக்கலைகளைப் பற்றிப் பேசி என்ன பலன்? பலமான நிறுவன அமைப்பு இல்லாமல் எத்தனை திட்டங்களைத் தீட்டித்தான் என்ன செய்வது? அதை யார் நிறைவேற்றுவது?

ஆகவே தமிழகத்தில் தோன்றிய முஸ்லிம் லீகின் சீரமைப்புப்பணி மெதுவாக வளர்ந்து - கேரளத்தில் கிளைவிட்டு - உத்தரப் பிரதேசத் திலே - வங்கத்திலே - பீகாரிலே - ஆந்திராவிலே - மைசூரிலே இலைவிடத் தொடங்கியுள்ள காட்சி யையும், இந்தியத் திருநாட்டின் எதிர்காலத்தில் அது வகிக்கப் போகும் பெரும் பங்கின் மாட்சி யையும் எதிர்நோக்கி பூரிப்படைய முடிகிறது.

நாடு சுதந்திரமடைந்து இருபத்தைந்து ஆண்டுகளாகின்றன. இந்திய முஸ்லிம் சமுதாயத் தின் ஆயிரமாண்டு வரலாற்றிலேயே, மிகவும் நெருக்கடியும், சிக்கலும் வாய்ந்த இந்த இருபத் தைந்து ஆண்டுகளில், இந்திய முஸ்லிம்களின் ஒரே அரசியல் நிறுவனமான முஸ்லிம் லீகின் தலைமையை ஏற்று, பயங்கரமாக வெடித்த அரசியல் பூகம்பங்களையும். சுழன்றடித்த எதிர்ப்புச் சூருவளிகளையும் தாண்டி சமுதாயத் திற்கு எந்தத் துன்பமும் இழிவும் நேர்ந்து விடாமல், அதே சமயத்தில் கொள்கை என்ற நேர்ப்பாதையிலிருந்து திசை திரும்பியும் விடாமல் நடத்திச் செல்வதென்பது சாதாரண காரிய மல்ல.

தன்னலமற்ற பொறுமையும், திடமும் நிதானமுமுள்ள காயிதேமில்லத்தின் தலைமையை இந்திய முஸ்லிம் சமுதாயத்திற்கு அருட்கொடை யாக அளித்துள்ள இறைவன் அதனை பூரண மாக்கி அவர்கள் தலைமையில் பெருமானார் (ஸல்) திருவுளம் புகன்ற இறைவன் அருள் பெற்ற கூட்டத்தினராய் நம்மை ஆக்கிவைக்க வேண்டு மாய் வல்ல இறைவனை பிரார்த்திப்போமாக!

நன்றி :- P. N. I. அபூதாலிபையும்
M. A. அக்பரையும் ஆசிரியராகக் கொண்டு
வெளிவந்த ''காயிதெமில்லத் பிறந்த நாள்
விழா பெருமலர்'' (1974)

# வரலாறு சமைத்த வாய்மையாளர்

**எம். செய்யிது முஹம்மது ''ஹஸன்''**

இந்திய முஸ்லிம் சமுதாயத்தை கால் நூற்றுண்டு காலம் வழி நடத்திச் சென்ற வாய்மையாளர் காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் ஸாஹிப் அவர்களின் மறைவு சமூகத்திற்கும் நாட்டிற்கும் ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

இந்தியத் துணைக்கண்டம் இரு சுதந்திர தேசங்களாகப் பிரிந்ததை அடுத்து இரு நாடுகளிலும் நடந்த கொடிய வகுப்புக் கலவரங்களின் விளைவாக இந்திய முஸ்லிம்களின் எதிர்காலம் என்றும் இருள் சூழ்ந்ததாகவே இருந்து விடுமோ என்னும் அச்சம் எங்கும் நிலவியது.

அந்த சூழ்நிலையில், அப்பின்னணியில், இந்திய முஸ்லிம் சமுதாயத்தின் தலைமைப் பதவியைத் துணிச்சலோடு ஏற்றுக் கொண்டு, கடைசி மூச்சு வரை அந்த சமுதாயத்தின் நலன் ஒன்றையே தமது பேச்சும் மூச்சுமாகக் கொண்டு, அது, தன்னம்பிக்கையோடும் தன்மானத்தோடும், கொள்கைப்பற்று குன்றாமலும் தலைநிமிர்ந்து வாழக் கற்றுத் தந்தார்கள், காயிதே மில்லத் அவர்கள்.

அவர்களின் தலைமையின் கீழ், இந்திய முஸ்லிம்கள் நாட்டுப் பற்றில் எவருக்கும் சளைக்காதவர்களாக, நேர்மையிலும் நாணயத்திலும், நீதியுணர்விலும், ஒழுக்க நெறிகளிலும், கண்ணியத்திலும், கட்டுப்பாட்டிலும், கடமை யுணர்வுகளிலும் இணையற்றவர்களாகத் திகழ்வது கண்டு நாட்டிலுள்ள மற்றவர்கள் அனைவரும் முஸ்லிம் சமுதாயத்தின் மீது நட்புறவு கொள்ள போட்டி போட்டுக்கொண்டு முன் வந்ததைக் கண்டு வந்துள்ளோம். நாட்டுப் பிரிவினையைத் தொடர்ந்து இந்திய முஸ்லிம்களின் மீது பிற சமுதாயத்தினர் கொண்டிருந்த, கொள்ளும்படி செய்யப்பட்டிருந்த அவநம்பிக்கை, பகைமை, துவேஷம் அனைத்தையும் மறையச் செய்து, முஸ்லிம் லீக் என்பது ஒரு வகுப்பு வாத ஸ்தாபனம் என்னும் எண்ணம் அகலும்படி செய்து, அது இந்திய முஸ்லிம்களின் தேசீய நிறுவனம் என்னும் உண்மையை உலகறியச் செய்த பெருமை காயிதே மில்லத் அவர்களுக்கு உரியது!

தாங்கள் ஏற்றுக் கொண்டிருந்த தலைமைப் பதவியின் பொறுப்புக்களை காயிதே மில்லத் அவர்கள் மார்க்கக் கடமைகளாகவே கருதி அப்படியே அவற்றை நிறைவேற்றி வந்தார்கள். தலைமைப் பதவி இறைவன் தனக்கு அளித்துள்ள ''அமானத்'' என உறுதியாக அவர்கள் நம்பி, பொதுவாக எந்த நேரமும், குறிப்பாக சோதனையான கட்டங்கள் எதிர்ப்படும் வேளைகளிலும் தனக்கு சரியான வழியைக் காட்டும்படி இறைவனிடம் இறைஞ்சி வந்தார்கள். இவ்வாறாக ஆன்மீக அடிப்படையில் அரசியலை அமைத்து இஸ்லாமிய வழியான சத்திய நெறி நின்று அவர்கள் நடத்தி வந்ததனால் தான் அவர்களுடைய இயக்கத்திற்கு இன்று இவ்வளவு மதிப்பும் உயர்வும் இருந்து வருகின்றன என்னும் பேருண்மையை மாற்றுக் கட்சியினரும்கூட மறுக்க மாட்டார்கள்.

நாடு விடுதலை பெறுவதற்கு முன்பு செயல்பட்டுக் கொண்டிருந்த அகில இந்திய முஸ்லிம் லீகுக்கும் சுதந்திர இந்தியாவில் காயிதே மில்லத் அவர்கள் தோற்றுவித்த இந்திய யூனியன் முஸ்லிம் லீகிற்கும் உள்ள வேறுபாடுகளைப் புதிய தலைமுறையினர் சரிவர ஆராய்ந்து பார்த்தால்தான், ''வரலாறு சமைத்தவர்'' காயிதே மில்லத் அவர்கள் என்னும் உண்மை புலனாகும். ஒரு சமுதாயத்தின் மீது மற்றொரு சமுதாயத்தின் கை மிகவும் ஓங்கி விடாதபடி அப்போது அந்நிய ஆட்சி காத்து வந்தது. தனித் தொகுதி பிரதிநிதித்துவ முறையானது சட்டமன்றங்களில் முஸ்லிம்களின் உரிமைக் குரல் தவறாமல் ஒலிக்க வாய்ப்பளித்து வந்

தது. நாட்டின் சில மாநிலங்கள் முஸ்லிம்களைப் பெரும்பான்மையினராகக் கொண்ட பகுதிகளாக இருந்ததும் சிறுபான்மையினராக மற்றப் பகுதி களில் வாழ்ந்த முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பு அளிப் பதாக அமைந்திருந்தது.

ஆனால் சுதந்திரம் கிடைத்தவுடன், நாட்டுப் பிரிவினை விதைத்த வினை வித்துக்கள் விரைவில் விஷ விருட்சங்களாக வளர்ந்து விட்டன. அச்ச மும் அவநம்பிக்கையும் தலை விரித்தாடிய அந்த வேளையில்தான் காயிதெமில்லத் அவர்கள் தமது அறப்பணியை விடுபட்ட இடத்திலிருந்து மீண்டும் துவக்கினார்கள். காந்திஜியைப் பற்றி கவிஞர் ஒருவர், "அச்சம்மிக்க இருட்டறையில் அடைபட் டாங்கே, அழுவதற்கும் சிவனற்றுக் கிடந்த உன்னை மிச்சமுள்ள மூச்சும் அற்றுப்போகு முன்னால், மீட்டணைத்து மேனி செய்துவிட் டான்..." என்று பாடியுள்ளது காயிதெமில்லத் அவர்களுக்கும் பொருந்தும். அதன் நற்பயனை நாம் இன்று அனுபவித்து வருகின்றோம். அவர் களின் அரசியல் வழி நின்று பிறழாமல் அறத்தின் அடிப்படையிலேயே இந்திய யூனியன் முஸ்லிம் லீகும் அதன் மாநில அங்கங்களும் தொடர்ந்து செயல்படுமாறு பார்த்துக் கொள் வதே மறைந்த நம் மாபெரும் தலைவருக்குச் செய்யும் நன்றியாகும்!

நன்றி : முஸ்லிம் முரசு
ஏப்ரல் 1972

# அறிமுகம் இல்லை என்றாலும் கூட

1965ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2-ம் தேதி யில்நான்டெல்லிக்குச் சென்றபோதுஅன்று மாலை சுமார் 4-30 மணிக்கு அப்போது எம். பி. ஆக இருந்த கே. ராஜாராமை சந்திப்பதற்காக (முன் ஏற்பாட்டின்படி) பாராளுமன்ற வாசலில் காத் திருந்தேன்.

திடீரென்று, 'அங்கே யார் நிற்பது' என்ற தமிழ்க் குரலை கேட்டு திரும்பிப் பார்த்த போது கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் அவர்கள் என்னைக் கூப்பிட்டுக் கொண்டு நின்று கொண் டிருந்தார்கள்.

உடனே அவர்கள் அருகில் சென்று என்னை ஒரு தமிழ் பேசுபவனாக எப்படிக்கண்டீர்கள் என்று வினவியபோது "மலாயாத் தொப்பியையும் கட்டம் போட்ட கைலி உடுத்தி இருப்பதையும் பார்த்தாலே தஞ்சாவூர் காரர் என்பது தெரி கிறதே" என்று அவர்கள் கூறினார்கள்.

எனது ஊர் அய்யம்பேட்டை என்று சொன்னதும் டாக்டர் ஜியாவுதீன் நல்லபடியாக இருக்கிறாரா? என்று விசாரித்துவிட்டு நான் யாருக்காக காத்திருக்கிறேன் எப்போது டில்லி வந்தேன். எங்கு செல்கிறேன் என்று பல கேள்விகள் கேட்டு நான் விரும்பினால், தன் னுடன் கூட வரலாம் என்று அன்பு கட்டளை, இட்டார்கள்.

நான் இன்னாருக்காக காத்திருக்கிறேன். இரண்டொரு நாளில் அஜ்மீர் சென்று ஜியாரத் முடித்துக் கொண்டு பின்பு ஹஜ்ஜுக்கும் செல்ல பம்பாய் செல்ல இருக்கிறேன் என்று கூறியதும் உடனே காயிதெமில்லத் அவர்கள் தன்னுடன் இருந்த அப்துல் வாஹித் எம்.பி.யிடம் என்னைப் பற்றிச் சொல்லி ஹஜ்ஜுக்குச் செல்ல இருக்கிறேன் என்பதால் அவர்கள் இருவரும் என்னை முஸா பஹா செய்து விடைபெற்றுச் சென்றார்கள்.

யாரோ ஒருவன் நிற்கின்றான் - அவனை எதற்கு கூப்பிட்டு விசாரித்து நமது நேரத்தை வீணாக்க வேண்டும் என்று அவர்கள் தங்கள் வழி யில் சென்றிருக்கலாம். ஆனால் அந்த எளிமையின் சின்னம் உத்தம சஹாபாக்களின் அடிச்சுவட் டைப் பின்பற்றி வாழ்ந்துகாட்டிய சமுதாயத் தின் மாபெரும் தலைவர், என்னிடத்தில் அன்று அக்கறையோடு விசாரித்து நடந்து கொண்டது இன்றளவும் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும். இன்று நினைத்தாலும் மெய்சிலிர்க்கக் கூடியதாக நினைவு கூர்கிறேன்.

**-ஹாஜி எம். ஏ. ரஹீம் பி ஏ.**
(ரஹீம் டிரஸ்ட் நிறுவனர்)
அய்யம்பேட்டை,
சக்கராப்பள்ளி.

## விண்வெளிப் பயணமும் முஸ்லிம் லீக் செயற் குழு கூட்டமும்

குரோம்பேட்டை தயா மன்ஸிலில் வைத்து மாநில முஸ்லிம் லீக் செயற்குழு கூட்டம் நடைபெற்றது. கூட்டம் ஆரம்பித்து பலரும் உரையாற்றிக் கொண்டிருக்கும் பொழுதும் கூட, காயிதேமில்லத் தங்களது அருகில் வைத்திருந்த டிரான்சிஸ்டர் ரேடியோவைத் திருப்பி எதையோ காதருகில் வைத்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். செயற்குழு நடந்து கொண்டிருக்கும் பொழுது கூட, அவ்வளவு சுவாரசியமாக தலைவரவர்கள் எதைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று எங்கள் ஒருவருக்கும் விளங்கவில்லை.

பக்கரண்ணன் எழுந்து தலைவரைப் பார்த்து துணிந்து ''ஒரு காலமும் இல்லாமல் இன்று டிரான்சிஸ்டரை பக்கத்திலேயே வைத்து கேட்டு கொண்டிருக்கிறீர்களே என்ன விசேஷம்? ''என்று கேட்டு விட்டார். ரேடியோவை நிறுத்தி கீழே வைத்து விட்டு பொடியை எடுத்து உறிஞ்சிவிட்டு காயிதே மில்லத் அமைதியாக ஆரம்பித்தார்கள். ''இன்று உலகத்திலேயே ஒரு பெரிய விஷயம், அதிசயம், நடந்து கொண்டிருக்கிறது. வான வெளியில் மூன்று நபர்களை அமெரிக்கா சுற்றி வரச் செய்து கொண்டிருக்கிறது. விண்வெளியில் பயணம் செய்யும் அம்மூவரும் கீழே தரையில் இறங்கப் போகிறார்கள். பூமியினுடைய காற்று மண்டலத்தை அந்த விண்வெளி கலம் கடக்கும் பொழுது, அது தீப்பற்றி எரிந்து விடக்கூடிய் அபாயம் இருக்கிறது. அப்படிப்பட்ட அசம்பாவிதம் நிகழாத வண்ணம் அந்த கலமும் அதிலுள்ள மூவரும் உயிருடன் தரையிறங்க வேண்டும் என்பது நமது விருப்பம் இல்லையா! இன்று அந்த நிகழ்ச்சி வானத்தில் எங்கேயோ நடந்து கொண்டிருக்கிறது, உலக ரேடியோக்கள் பலவும் அந்தக் காட்சியை ஒலி பரப்பிக் கொண்டிருக்கின்றன. காற்று மண்டலத்தை அவர்கள் வெற்றிகரமாகக் கடந்து விட்டார்களா? இல்லையா? என்ற ஆர்வம் எனக்கும் இருக்கிறது. அதைத் தெரிந்து கொள்ளத்தான் டிரான்சிஸ்டரை அடிக்கடி திருப்பிக் கொண்டிருக்கிறேன். மனித இனம் நமது காலத்தில் நமது கண் முன்பு எவ்வளவு முன்னேறி இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வது மனிதர்கள் ஒவ்வொருவர் மீதும் குறிப்பாக முஸ்லிம்கள் ஒவ்வொருவர் மீதும் கடமையாகும். அவர்கள் பத்திரமாக இறங்க வேண்டும் என துஆ செய்தவனாக ரேடியோவை நானும் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.''

இப்படிச் சொல்லி விட்டு காயிதே மில்லத் அவர்கள் குர்ஆன் ஆயத் ஒன்றை ஓதிக் காட்டினார்கள். அதற்கு அர்த்தத்தையும் அவர்களே கூறினார்கள்.

ஒரு மனிதன் ஒரு இக்கட்டான கட்டத்தில் மாட்டிக் கொள்கிறான். தன்னுடைய கெட்டிக்காரத்தனத்தினால் அதிலிருந்து தப்பமுடியாது என்ற நிலை எழும்பொழுது அவன் என்ன நினைக்கிறான். 'அந்த ஆபத்திலிருந்து இறைவா என்னை காப்பாற்ற மாட்டாயா, நான் தப்பி பிழைத்தால் உன்னை ஒருக் காலமும் மறக்க மாட்டேன், என சத்தியம் செய்கிறான்.'' அந்த ஆபத்திலிருந்து தப்பியதை அவன் மறந்து விடுகிறான். வழக்கம் போல அவன் செயல்பட வாரம்பித்து விடுகிறான். இந்த காட்சியை மேற்கூறிய ஆயத்தில் அல்லாஹ் விளக்கியுள்ளான்.

இன்று வான வெளியில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மூவருக்கும் ஓர் உண்மை நன்றாகத் தெரியும். காற்று மண்டலத்தை அடையும் பொழுது ஒரு பேராபத்துத் தங்களை எதிர் நோக்கி இருக்கிறது என்பதை நம்மைவிட அவர்கள் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். அந்த அபாயத்தை ஒழுங்காகக் கடந்தால்தான் உயிருடன் பூமியைத் தொட முடியும் என்ற பேருண்மையை உணர்ந்திருக்கும் அவர்களின், உள்ளங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கும்'' ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். இறை நம்பிக்கை அவர்களுக்கு இருக்கிறதோ இல்லையோ அது வேறு விஷயம். இந்த அபாயத்தைக் கடக்க வேண்டும் என்ற ஒரே சிந்தனையில், நம்பிக்கையில், அவர்கள் பரிபூரணமாக லயித்திருப்பார்கள். அதில் சந்தேகமேயில்லை. பூமிக்குத் திரும்பியதும், அவர்கள் அது பற்றி நினைத்தும் பார்க்கிறார்களா இல்லையா என்பதும் அடுத்த கேள்வி. ஆனால் அவர்கள் தங்களது வாழ்க்கையில் ஒரு கணம் ஏதோ ஒன்றின் மீது பரிபூரணமான நம்பிக்கையில் திளைத்துக் கொண்டிருப்பார்கள். இப்படி திளைத்தவர்கள் உயிருடன் பூமிக்கு வந்து விட்டால், அவர்களை நாம் நேருக்கு நேர் சந்திக்கும் பொழுது,

இறை நம்பிக்கையில் பூரணமாக ஒன்றியிருந்த ஒருவரைப் பார்க்கிறோம் என்ற நினைப்பு உருவாகிறது. அல்லவா! இது எவ்வளவு பெரிய விஷயம்! நம் கண் முன்னே நடந்துகொண்டிருக்கும் அதிசயத்தைத் தெரிந்து கொள்வதற்குத்தான், நமது செயற்குழு நடந்து கொண்டிருக்கிறது என்றாலும் கூட, அந்த உந்துதல் என்னை சும்மா இருக்க விடமாட்டேன் என்கிறது. டிரான்சிஸ்டரைத் திருப்பிக் கொண்டிருக்கிறேன்.

இவ்வாறு தலைவரவர்கள் கூறினார்கள்.

உலக விஷயங்களையும், நுட்பங்களையும், தெரிந்து கொள்வதில் அவர்கள் எவ்வளவு ஆர்வமாகவும் இளமைத் துடிப்புடனும் இருக்கிறார்கள் என்பன மாநில செயற்குழு உறுப்பினர்களால் தெரிந்துகொள்ள முடிந்தது. வயோதிகம் அடைந்து விட்டாலும், ஒரு இளைஞனுக்குள்ள உள்ளத் துடிப்பு தலைவரவர்களுக்கு இருந்தது என்பதை எல்லோருமா தெரிந்திருக்கப் போகிறார்கள்!

**M. K. E. மௌலானா**
ஆசிரியர் ''பசுங்கதிர்''

## கஃபாவில் காயிதெ மில்லத்

கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் அவர்களுடன் 1965-ம் ஆண்டு புனித ஹஜ்ஜுக்கு நாங்கள் சென்ற சமயம் அரிய நிகழ்ச்சி ஒன்று நடந்தது.

அன்றைய 'சுப்ஹு' தொழுகைக்கு கஃபாவை நோக்கி விரைந்து சென்றோம். நாங்கள் செல்வதற்குள் சுப்ஹு தொழுகையை இமாம் முடித்து விட்டார். கஃபாவின் ஒரு பக்கமாக நின்று நாங்கள் தனித்து தொழுகையை நிறைவேற்ற முயலும் போது, எங்களில் உள்ள ஆலிம் ஒருவரை பார்த்து துரிதமாக இமாமத் செய்வீராக என்று தலைவர் உரைக்க - இன்று நாம் தலைவர் அவர்களைப் பின் தழுவி தொழ வேண்டும்; அந்தப் பாக்கியத்தை நழுவவிடக்கூடாது என்று உடனுக்குடன் முடிவெடுத்து தலைவரிடம் அதனைச் சொல்ல அவர்களோ அடியேனைக் கேட்டுக் கொண்டார்கள்.

நான் சொன்னேன்:- ''எங்களுக்கொரு நல் வாய்ப்பை அல்லாஹ் தந்தான். தாய் நாட்டில் தங்களைப் பின் தழுவி நிற்கும் நாங்கள் இப் புனித கஃபாவிலும் தாங்கள் இமாமத் செய்ய - அதனைப் பின் தொடர்ந்து தொழும் வாய்ப்பும் எங்களுக்குக் கிடைக்க வேண்டும்'' என்றேன்.

தலைவர் அவர்கள் புன்முறுவல் பூத்த வண்ணம் இமாமாக நின்று தொழ வைத்தார்கள். நாங்கள் அவர்களைப் பின் தழுவி தொழுது முடித்தோம். அன்று சுப்ஹு தொழுகைக்குப் பின் தலைவர் ஓதிய அரபி 'துஆ' இன்றும் அடியேனின் செவிகளில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது. அல்ஹம்து லில்லாஹ்.

(தகவல்; **மவ்லவி பாஜில் அல்ஹாஜ்**
**ஜி. எம். எஸ். ஸிராஜ் பாகவி**
மணிச்சுடர் 8-6-89

## வாக்குப் பலித்தது

காயிதேமில்லத் அவர்கள் 1965ம் ஆண்டு தங்களது ஹஜ் கடமையை நிறைவேற்றிவிட்டு பம்பாய் திரும்பியதும் தாராவி முஸ்லிம்கள் சார்பாக மிகப் பெரிய வரவேற்பு ஒன்றை நாங்கள் கொடுத்தோம். இங்குள்ள தி. மு. க. நண்பர்கள் பெரும் அளவில் வந்து கூட்டத்தை சிறப்பித்தார்கள்.

வரவேற்புக்குப் பதிலளித்து பேசும்பொழுது, காயிதே மில்லத், தமிழ் நாட்டின் அடுத்த முதலமைச்சர் அறிஞர் அண்ணா தான் என்று குறிப்பிட்டார்கள். அவர்கள் வாக்கு பலித்தது. பம்பாயிலுள்ள தி.மு.க. நண்பர்கள் ''காயிதே மில்லத் வாக்குப் பலித்தது; அண்ணா முதல்வரானார்'' என்று பெரிய தட்டிகளில் எழுதி பம்பாய் நகர் முழுவதும் வைத்தனர்.

**[எம். காதர் (சேர்மாதேவி)** பம்பாய் தாராவி பிரைமரி லீக் தலைவர்]

# காயிதே மில்லத் நீங்காத நினைவுகள்

சங்கு அல்ஹாஜ் செய்யிது அப்துல் காதிர்

எங்கள் வாப்பா மர்ஹூம் கொ. இ. முஹம்மது அபூபக்கர் அவர்கள் அந்த நாட்களில் முஸ்லிம் லீகில் முக்கிய அங்கம் வகித்தார்கள்.

இராமநாதபுர மாவட்ட முஸ்லிம் லீக் தலைமையகம் அபிராமத்தில்தான் இருந்தது. அதன் நடவடிக்கைகளுக்குப் புரவலராக விளங்கினார்கள்,

கண்ணியத்திற் குரிய காயிதே மில்லத் அவர்களின் தொழில் அலுவலகம் சென்னை தம்புச் செட்டித் தெரு 16-ம் எண் கட்டிடத்தில் இருந்தது. எங்கள் 'சங்கு' நிறுவனத்தின் தலைமை அகம் அதே தெருவில் தான் இன்றும் இருக்கிறது.

நான் 9-வது வகுப்பில் படித்துக் கொண்டிருந்த காலம். ஒருநாள் இரவு சாப்பிட்டுவிட்டு மாடியில் படுக்கச் சென்று விட்டேன்.

இரவு 10 மணி அளவில் காயிதே மில்லத் அவர்கள் ஒரு ரிக்ஷாவில் வந்து இறங்கி எங்கள் வாப்பாவிடம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு முக்கிய ஆலோசனைக்காக திருச்சி சென்று வர நேரிட்டிருந்தது போலும், எல்லா ரயில்களும் புறப்பட்டு விட்டன, எனவே எங்கள் வாப்பாவிடம் உரிமையோடு கார் கேட்டிருக்கிறார்கள்.

வாப்பா என்னை அழைத்து நூறு ரூபாயை கையில் பெட்ரோலுக்காக கொடுத்து கனம் தலைவர் அவர்கள் எங்கு போக வேண்டுமென்று சொல்லுகிறார்களோ, அங்கு அழைத்துச் சென்று வா என்று கட்டளையிட்டு அனுப்பினார்கள்.

அந்த நாட்களில் சாலைப் போக்குவரத்து இரவு நேரங்களில் சந்தடி இல்லாமல் இருக்கும், இப்போதுள்ளபடி லாரி பயங்கரம் கிடையாது. எங்கள் காரும் வெளி நாட்டு 'நாட்ஜ்' கார், வேகமாக ஓட்டுவதை காயிதெ மில்லத் அவர்களும் ஆட்சேபிக்கவில்லை. சுவைபட அவர்கள் பேசிக் கொண்டே இருந்தார்கள். 4 மணி நேரத்திற் குள்ளாகவே திருச்சி சென்றடைந்தோம்.

மர்ஹூம் வி. எஸ். முஹம்மது இப்ராஹீம் எம். எல். ஏ. அவர்கள் இல்லம் சென்று அவர்களிடம் உரையாடிவிட்டு, ''என்ன தம்பி, களைத்திருக்கிறீர்களா? மீண்டும் மதராஸ் போகலாமா?'' என்று கேட்டார்கள்.

அந்த இளமைப் பருவத்தில் களைப்பு ஏது? அலுப்பு ஏது? உடனே சரி என்று கூறி, அவர்களை காலையில் கொண்டு வந்து சென்னையில் சேர்த்து விட்டேன்.

அந்த நிகழ்ச்சி என் வாழ்க்கையில் நான் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

திருநெல்வேலியில் நடந்த மாநாட்டிற்கு பாகிஸ்தான் பிரதமராக விளங்கிய நவாப் ஜாதா லியாகத் அலிகான் அவர்கள் வந்தபோது மதுரையில் எங்கள் நிறுவனத்தில் தான் தங்கி இருந்தார்கள்.

அவர்கள் உருவம் பெரிய உருவம். அந்த நாளில் எங்கள் நிறுவனத்தின் மாடியில் உள்ள பாத்ருமில் 'கம்மோடு' இருந்தது. எங்கள் இடத்தில் தங்க வைத்ததற்கு அந்த வசதி இருந்தது ஒரு காரணம்.

மதுரை சின்ன காஜியார் அந்த நாளில் முஸ்லிம் லீகில் எம். எல். ஏ, வாக இருந்தார். அவருடைய கடிதங்களை எல்லாம் நான்தான் டைப் செய்து கொடுப்பேன். அப்துல் காதர் எஃப். டி. என்றுதான் அழைப்பார். எஃப்.டி என்றால் ஃபாஸ்ட் டைப்பிஸ்ட் என்று கூறுவார்.

இவை எல்லாம் அந்த நாட்களின் நினைவுகளில் சிலவாகும்.

நன்றி ;—மணிச்சுடர் 4-6-89



# இதயத்தில் நிற்கும் இஸ்மாயில் அவர்கள்

**டாக்டர் சாலை இளந்திரையன்**

பிறந்தார் யாவரும் இறப்பது உறுதி என்னும் உண்மையை நாம் நன்ருக உணர்ந்திருக்கிருேம். ஆனுலும், சிலருடைய இறப்பு மட்டும் நம் நெஞ்சில் அழுத்தமான வேதனைக் கோடு ஒன்றைக் கீறி விடுகிறது. அண்மையில் காலஞ் சென்ற மதிப்புயர் முகம்மது இஸ்மாயில் அவர்களின் பிரிவு அத்தகையதொரு கீறலை என் நெஞ்சில் ஏற்படுத்திவிட்டது.

இப்பெருமகனுருடன் நான் நெருங்கிப் பழகியவனல்ல; அவருடைய சமூகத்தையோ இயக்கத்தையோ சேர்ந்தவனே என்ருல், அதுவும் இல்லை. இருந்தும் அவர் இறந்தார் என்று கேட்டதிலிருந்து, எனக்கு மிக நெருக்கமான ஏதோ ஒன்றை இழந்து விட்டது போன்ற ஓர் உணர்ச்சி என் நெஞ்சில் நிழலாடிக்கொண்டே இருக்கிறது.

இதற்குக் காரணம் என்ன என்று சிந்தித்துப் பார்க்கிறேன். சங்கிலித் தொடர் போன்ற பல மாறுதல்களை என் வாழ்வில் உண்டாக்கிய ஒரு நிகழ்ச்சியில் போய் என் நினைவு குவிகிறது.

அண்மையில் என் புத்தகம் ஒன்றுக்கு மதிப்புரை எழுதிய ஒருவர் 'சமுதாயக்கேடுகளுக்கு எதிராகக் கண்சிவந்து நிற்கும் ஒருவரை இப்புத்தகத்தில் சந்தியுங்கள். (Meet an angry man)' என்றே அதைத் தொடங்கியிருந்தார். இளமைப் பிராயத்திலோ படிப்புக் காலத்திலோ நான் முன் கோபி என்று பெயரெடுத்ததில்லை; என் புத்தகங்களில் பலவற்றைப் படித்த நண்பர்கள், 'இன்னும் காரமாக எழுத வேண்டும்' என்றே எனக்கு ஆலோசனை சொல்லி வந்துள்ளார்கள். 'அப்படிப்பட்ட என்னுடைய எழுத்துக்களில், இப்போது மட்டும், நான் கோபக்காரனுகத் தோற்றமளிப்பது எப்படி? இந்தச் சிந்தனைதான் எனது போக்கில் ஆழமான ஒரு மாறுதலை ஏற்படுத்திய முகம்மது இஸ்மாயில் அவர்களின் சந்திப்பை என் நினைவரங்கில் எழுப்பி நிறுத்துகிறது.

தமிழ் இலக்கண இலக்கியங்களையும் தமிழர் வரலாற்றையும் நான் ஓரளவு தெரிந்து வைத்திருக்கிறேன்; கல்தோன்றி மண் தோன்ருக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்த குடி' என்று பேசப்படும் தமிழ்ப் பெருமையையும் கேட்டிருக்கிறேன். அதைக் கேட்டதாலேயே 'அத்தகைய தமிழனின் பரம்பரை இன்றைக்கு ஏன் முறிந்து சரிந்து சப்பாணியாகிக் கிடக்கிறது'' என்ற கேள்வி என் நெஞ்சில் அடிக்கடி எழுந்துள்ளது. அதன் தவிர்க்க முடியாத நேர்விளைவாகவே பெரியார் இராமசாமி, பாரதிதாசன், அறிஞர் அண்ணு, குத்தூசி குருசாமி போன்ருேரின் கொள்கைகளில் பலவற்றை விரும்பி ஏற்றுக் கடைப்பிடித்தும் பரப்பியும் வருகிறேன். ஆனுலும், முகம்மது இஸ்மாயில் அவர்களை நான் சந்திக்கும் வரை, என் பணிகளில் எனக்கு ஒருவிதமான மகிழ்ச்சி இருந்து வந்தாலும், முழுமையான மன நிறைவு இருந்ததில்லை.

1959 அல்லது 60 என்று நினைவு; நண்பர் ஏ. எம். மீரான் ஏதோ ஓர் அலுவலாக தில்லிக்கு வந்தார். அவரைச் சந்திப்பதற்காக நான் ரெயில் நிலையத்திற்குப் போயிருந்தேன். அங்கே சாதாரண பைஜாமா, சிமெண்டு கலர் மேல் கோட்டு, உயரமான துருக்கித் தொப்பி ஆகியவற்றுடன் ஒல்லியான மனிதர் ஒருவர் இங்கும் அங்கும் உலவிக்கொண்டிருந்தார். எளிய அந்தத் தோற்றம், நான் மிக விரும்பி நிற்கும் கெம்பீர நடையில் உலவிக் கொண்டிருந்தது. அவரைப்

பார்த்த உடனேயே இவர்தான் ஒரு வேளை இந்திய முஸ்லிம் லீகின் தலைவராக இருப்பாரோ?' என்ற சிறிய ஐயம் எழுந்தது. உடனேயே அந்த எண்ணம் மாறிவிட்டது. அந்தப் பெரிய தலைவர் இப்போது இங்கே ஏன் வரப்போகிறார்? வந்தாலும் இந்த மாதிரி எளிய கோலத்தில் பிளாட்பாரத்தில் தன்னந்தனியாக உலவிக்கொண்டிருப்பதாவது?' (அரசியல் தலைவர் என்றால் அவர் ஆடம்பரமாக நாலு பேர் புடை சூழத் திரிய வேண்டும் என்ற எண்ணம் தானே நமது மூளையில் திணிக்கப்பட்டிருக்கிறது!) இந்த விதமான முடிவோடு, நான் நண்பரின் நினைவில் ஆழ்ந்தேன்.

வண்டி வந்து நின்றதும் ஓடிச் சென்று நண்பரைக் கண்டேன். என்ன வியப்பு! அந்த எளிய மனிதரும் என் பின்னாலேயே விரைந்து வந்து நண்பர் மீரானைப் பார்த்து முகம் மலர்ந்து நின்றார். அப்போது நண்பர் மீரானின் முகத்திலே படர்ந்தஒருபக்தி ஈடுபாடு கலந்த மகிழ்ச்சிப்பெருக்கைக் கவனித்ததும், என்முகம்,என்னையும் அறியாமல் அந்தப் புதிய மனிதர் பக்கம் திரும்பியது, நண்பர் உடனேயே, 'இவங்களைத் தெரியுமில்லெ. காயிதெ மில்லத்...மேலே அவர் சொன்னது ஒன்றும் என் காதில் விழவில்லை; நெஞ்சில் ஏதோ எழுந்து அடைத்துக் கொண்டது. கண்களில் உப்பு நீர் முட்டிக் கசிந்தது. 'அந்தப் பெரிய தலைவர், இந்தக் கோலத்தில்? ..ஏதோ, கைகுவித்தேன்: பேசவே நா எழவில்லை.

'சில உபதேசமும் எளிமை உபதேசங்களும் மேடை அளவாகவே நிற்கும் ஒரு நாட்டில் இப்படியும் ஒரு மனிதரா?' கேள்விகள் கேள்விகளாக என் அனுபவம் குரல் கொடுத்துக் கொண்டே வர, மூவருமாக 'வெஸ்ட்டர்ன் கோர்ட்' என்னும் பகுதியில் அப்பெரு மகன் தங்கியிருந்த அறைக்கு வந்தோம். (நாடாளு மன்ற உறுப்பினர் பலர் தங்கியிருந்த விடுதி அது. இவரும் நாடாளு மன்ற உறுப்பினரே. ஆனால் அவருடைய அறை வெறும் சாதாரண அறையாகவே இருந்தது; ஆடம்பரப் பொருளோ அமைப்போ எதுவும் இல்லை.)

தேனீர் அருந்தியவாறே மூவரும் பேசிக் கொண்டிருந்தோம். அப்போதுதான். ''பாராளு மன்றத்தில் இருப்பதால் நாட்டின் பல்வேறு பகுதி மக்களைப் பற்றி நேரில் அறிந்திருப்பீர்களே, அதைப்பற்றிக் கொஞ்சம் தெரிவியுங்களேன்'' என்று கேட்டுக் கொண்டேன். அவர் அமைதியாக ஆனால் உறுதி வாய்ந்த குரலில் சொன்னார் : ''நாட்டின் பல பகுதி மக்கள் சுறு சுறுப்பாக இருக்கிறார்கள் தமிழன்தான் கிழடு தட்டிப் போனான்; அவனுக்கு இளம் ரத்தம் ஊட்ட வேண்டும்...''

இந்த வாக்கியங்களைக் கேட்டதும் நான் முன்பு கேட்டிருந்த ''கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தை'' நினைத்துக் கொண்டேன். மிகப் பணிவாக, 'தமிழ் இனம் பழமையானது என்பதில் தமிழர்களாகிய நாம் பெருமைப்படுவது சரியில்லையா?' என்றேன். பெருமைப்படுவது தப்பு என்று நான் சொல்லவில்லை, ஆனால் அது மட்டும் நமக்குப் போதாதே பாருங்கள். ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் இந்திய சர்க்கார் திட்டங்களை ஒதுக்குகிறது. பஞ்சாபியரும், உ பி. காரர்களும் :- முடிகிறதோ - இல்லையோ - எட்டுப் பத்துத் திட்டங்களை மேற்கொள்ளுகிறார்கள். நமது சென்னை ராச்சியம், 'அது முடியுமா? இது முடியுமா? பணம் கிடைக்குமா! முடிந்தாலும் லாபத்தில் ஓடுமா? என்றெல்லாம் பலவாறாக யோசனை பண்ணி இரண்டு திட்டங்களை மட்டும் எடுத்துக்கொள்ளுகிறது. நாம் இரண்டு திட்டங்களையும் நிறைவேற்றியதாகவே வைத்துக் கொள்வோம்; மற்றவர்கள் ஏற்றுக்கொண்ட எட்டில் நாலு திட்டங்களை மட்டுமே நிறைவேற்றுவதாகவும் கொள்வோம். புள்ளி விவரத்துக்கு நமது நூற்றுக்கு நூறு அழகாகத்தான் இருக்கிறது ஆனால். அவர்கள் ஐம்பது சதவீதமே நிறைவேற்றியிருந்தாலும், அவர்களின் ராச்சியத்தில் நாலு திட்டம் உருவாகி விட்டதே. நமது பகுதியில் இரண்டு திட்டம்தானே செயல்பட்டிருக்கிறது!'' இப்படி அவர் சொன்னதும்தான் சிந்தித்தல், தெளிதல், திட்டமிடுதல் என்பவற்றின் பெயரால் நம்மவர்கள் சுத்தப் பயந்தாங் கொள்ளியாகப் போயுள்ளார்கள் என்பது புரிந்தது.

எதிலும் ஓர் அச்சம், தயக்கம், அவநம்பிக்கை - இவை கிழட்டுத் தனத்தின் அறிகுறிகள் துணிந்து செயலாற்றுதல் தோல்வியைப் பற்றியே நினைத்துக் கொண்டிராமல் முயற்சியில் ஈடுபடுதல் 'இவை இளமைத் துடிப்பின் அடையாளங்கள் இந்தத் துடிப்பு நம்மிடமிருந்து பல காலமாகக் குடியோடிப் போய்விட்டதாலே தான், தமிழர்கள் அளவில்லாத மூடத்தனங்களுக்கும் ஆளாகிப் போனார்கள் என்னும் பெரிய உண்மை என் மூளையில் பளிச்சிட்டது.

என் முகத்தில் தொங்கிக் கொண்டிருந்த புதிய கேள்விக் குறியை விளங்கிக் கொண்டவராக அவர் தொடர்ந்தார். 'இன்றைக்கும்

பாருங்கள்; நமது கிராமத்தில் உள்ள பத்துப் பெரியவர்கள் ஏதோ கிராமப் பொதுக்காரிய மாக ஒரு திண்ணையில் கூடுவார்கள்; இரண்டு மணி நேரம் காரசாரமாக ஏதேதோ பேசுவார் கள், அவர்கள் பேசும் வேகத்தைப் பார்த்தால் 'இன்றைக்கு இரண்டில் ஒன்று முடிவு செய்து விடப் போகிருர்கள்'என்று நினைப்போம். இரண்டு மணி நேரம் போனதும் ஒருவர் மெதுவாக எழுந்து, 'எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கு; நான் வர்ரேன். நீங்க பேசி முடிவு பண்ணுங்க' என்று எழுந்துப் போவார். அவரைத் தொடர்ந்து வேறு சிலர் அப்படி போவார்கள். மீதி உள்ளவர்கள், துண்டை உதறித்தோளில் போட்டுக் கொண்டே, ''அப்போ நாளைக்குப் பேசி முடிவு பண்ணுவோம்'' என்று சொல்லிக் கொண்டே கலைந்து போய்விடுவார்கள்.

இதே காட்சியை நானும் பல தடவை என் னுடைய கிராமத்தில் பார்த்திருக்கிறேன். அப் பெருமகன் எடுத்துக்காட்டிய பிறகு தான், ''கிழடு தட்டிப் போனதால் நம் சமுதாயத்தில் ஊடுருவியுள்ள நழுவல்தனம் இது' என்பது புரிந்தது. அப்போதே இந்த நீட்டல் தனங் களுக்கும் கிழட்டுத் தனத்துக்கும் எதிரான எழுச்சி (இளரத்தம்) ஒன்று தேவை என்ற எண்ணம் எனக்குள் எழுந்தது. நம் இனப்பண்பில் படர்ந்து மூடியுள்ள இந்த உறவை உடைத்துத் தள்ளக் 'கோபத் தமிழர்கள் தேவை' என்றும் அங்கேயே முடிவு செய்து கொண்டேன்.

அந்தச் சந்திப்பின் பிறகு, நான் செல்லும் இடங்களிலெல்லாம், சந்திக்கும் நண்பர்களுக்கெல் லாம் அந்த அரிய 'இஸ்மாயில்' செய்தியை எடுத்துவைத்து வருகிறேன்; தமிழகத்தில் பலர் வெறுத்துக் கோபப்பட்டாலும், 'தம்பி உன் பழங்கடையை மூடு, புதிய எழுச்சியுடன் உனது வாழ்வை மறு பரிசீலனை செய்!, என்று பேசியும் எழுதியும் வருகிறேன். தமிழ் இளைஞர்கள், தங்களுக்கு ஊட்டப்பட்டுவரும் பழமைமோகத்தை விட்டு முழுமையாக இந்தப் பக்கம் திரும்பிவிடா விட்டாலும், சிறிது சிந்தனை தோய்ந்த முகத் துடன் நின்று கேட்கிருர்கள்.

'எங்கோ இருந்த எனக்கு இப்படி ஒரு செய்தியை வழங்கிய இப்பெருமகன், அருகிலே இருந்தவர்களுக்கு எத்தனை இனிய செய்திகளைத் தந்திருப்பார்!' என்று நினைக்கிறேன்; செத்துப் போன எந்தனையோ பேரின் பொதுப் பட்டியலில் அவருடைய நினைவையும் சேர்த்து இணைக்க என்ஞல் முடியவில்லை. எனவேதான் அவர் ஊட்டிய வேகத்தால் இரும்பாக உறுதி பெற் றுள்ள என் இதயமும் அவர் பிரிவை நினைத்து கலங்குகிறது.

நன்றி : முஸ்லிம் முரசு ஏப்ரல் 1972

---

## கர்ஸன் பிரபு வரவேற்பில் காயிதேமில்லத்

பேட்டையைச் சார்ந்த வீ. ம. குடும்பத்தினர் இந்த நூற்ருண்டின் ஆரம்பத்திலேயே கோவில்பட்டியில் ஒரு நூற்பு ஆலையையும், தச்ச நல்லூரில் மற்ருெரு சர்க்கரை ஆலையையும் நிறுவி தொழில் செய்திருக்கிருர்கள்.

வீ. ம. முஹம்மது கனி இராவுத்தர் அதிகம் படிக்கவில்லை. ஆனுல் நிர்வாகத் திறமையும், தொழில் செய்யும் ஆர்வமும் இருந்திருந்தது. அப்பொழுது ''கர்ஸன் பிரபு'' இந்தியாவின் வைஸ்ராயாக இருந்தார். அவர் திருவனந்தபுரம் செல்லும் வழியில் திருநெல்வேலி வழியாகச் சென்ருர். அச்சமயம் வைஸ்ராய்க்கு தச்சநல்லூர் வீ. ம. வின் சீனி ஆலை முன்பு பிரமாதமான வரவேற்பு அளிக்கப்பட்டது. அச்சமயம் காயிதே மில்லத்திற்கு வயது பத்து இருக்குமாம். வைஸ்ராய் வருவதைப் பார்ப்பதற்காக அவர்களும் தச்சநல்லூருக்குப் போயிருந்தார்களாம். குதிரை சாரட்டில் வைஸ்ராய் பயணம் செய்தாராம். சீனி ஆலை முன்பு போடப்பட்டிருந்த அலங்காரமான பந்தல் முன்பு வைஸ்ராயின் சாரட்டு வந்து நின்றது. பந்தல் முகட்டிலிருந்து ''பூ'' மாரி பொழிந்ததாம். தங்கரேக்குகளையும் சேர்த்து பூ மழை பெய்யச் செய்திருந்தா ராம், வீ. ம. அவர்கள். அந்த நிகழ்ச்சியை எங்களது பெரிய வாப்பா வாயினுல் சொல்ல நான் கேள்விப்பட்டிருக்கிறேன். வீ. ம. அவர்கள் எனது பாட்டஞராகும்.

ஊருக்கு வந்தால் முக்கு கடை பகோடா வாங்கி வரச் செய்து பிரியமாகச் சாப்பிடுவார் கள்; எங்களுக்கும் கொடுப்பார்கள்.

**பேட்டை இஹ்சானுர் ரகீம்**
[K. T. M. அவர்களின் புதல்வர்]

---

# காயிதேமில்லத்தின் ஞானாசிரியர்

எனது தந்தை செய்யது அப்துல்லாஹ் அல்ஹாதி மௌலானா அவர்கள் 1933-ம் ஆண்டில் ஜமால் முஹம்மது குடும்பத்தினருக்கு அறிமுகமானார்கள். அதன் பின்னர் ஜமாலியா அரபிக் கல்லூரியிலேயே சில காலம் தங்கினார்கள். ஹாஜி ஜமால் முஹம்மது சாகிபும் மற்றும் அவர்களது குடும்பத்தினரும் என்னுடைய தந்தையின் சீடர்கள்.

அப்போது சென்னை தம்புச் செட்டித் தெரு 16-ம் நம்பரில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஜமால் மொகிதீன் அன் கம்பெனியில் காயிதே மில்லத் அவர்களும் ஒரு பார்ட்னர். ஜெனரல் மானேஜரும் கூட. என் தந்தையைப் பார்க்க அவர்களும் வருவார்கள். காயிதேமில்லத் அவர்களுக்கும் எனது தந்தைக்கும் வரவர நெருக்கம் அதிகமாகிவிட்டது. பின்னர் தலைவர் அவர்கள் குடியிருந்த எக்மூர் பங்களாவுக்கு நாங்கள் ஜாகையை மாற்றிக் கொண்டு விட்டோம். எக்மூர் ரயில் நிலையத்திற்கு எதிர்வரிசையில் ''திவோனியா ஹவுஸ்'' என்ற பெரிய பங்களா இருந்தது. ஒன்றிரண்டு ஏக்கர் பரப்பளவுள்ள பெரிய மைதானத்தின் மத்தியில் அந்த பங்களா இருந்தது. வெள்ளைக்காரர் ஒருவரால் கட்டப்பட்டு அவர் குடியிருந்த இல்லம் அது. அதில் தான்காயிதேமில்லத் அவர்கள் 1940 வரை குடியிருந்தார்கள்.

ஜமாலியா மதரஸாவில் நான் ஓதிக் கொண்டிருந்தேன். அப்போது எனக்கு வயது பன்னிரண்டு. எக்மூர் பங்களாவுக்கு ஜாகையை மாற்றிக் கொண்ட பிறகு நானும் தலைவர் அவர்களின் ஒரே மகனான மியாகானும் பாரீஸ் முனையிலிருந்த கிறிஸ்துவக் கல்லூரியின் உயர்நிலைப் பள்ளியில் ஒன்றாகப் படித்தோம். அப்போது மியாகானுக்கு எட்டு வயது, என்னைவிட நான்கு வயது குறைவு. எங்கள் இருவரையும் ஒன்றாகவே படிக்க வைத்தார்கள். காயிதே மில்லத் அவர்கள். மியாகானுக்கு எப்படி டிரஸ் எடுக்கப்பட்டிருக்கிறதோ அப்படித்தான் எனக்கும் எடுத்துக் கொடுப்பார்கள். அடிக்கடி எங்கள் இருவரையும் கடற்கரைக்கு கூட்டிச் செல்வார்கள். குட்டிக்கதைகள் நிறைய சொல்வார்கள்

சுமார் பத்தாண்டுகளுக்கு மேலாக எக்மூர் பங்களாவில் எனது தந்தை தங்கினார்கள். எனதுதந்தைக்கென ஒருசிறுகுடிலை 'திவோனியா ஹவுஸ்' காம்பவுண்டிற்குள்ளேயே அமைத்துக் கொடுத்திருந்தார்கள். தென்னங் கீற்றுகளால் வேயப்பட்ட அக்குடிலில் தரையில் பூமணல் பரப்பி இருக்கும். ஒரு வேப்ப மரத்தின் அடியில் அந்த குடில் அமைக்கப்பட்டிருந்தது. வெப்பமே தெரியாது. நன்கு குளிர்ந்திருக்கும். நல்ல காற்றோட்டமாகவும் இருக்கும். அதில்தான் எனது தந்தை அமர்ந்திருப்பார்கள். காயிதே மில்லத் இரவு பத்து மணிக்கு மேல் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வருவார்கள்.

தம்புச் செட்டித் தெரு ஆபீஸ் அலுவல்களை முடித்துவிட்டு, சமுதாயக் காரியங்கள் பலவற்றையும் கவனித்துவிட்டு இரவு வெகு நேரங்கழித்துத்தான் வீடு திரும்புவார்கள். அது வரை அவர்களது இல்லத்தரசி ஜமால் ஹமீதா பீவி அவர்கள் காத்திருப்பார்கள். கணவனார் உணவருந்திய பிறகுதான் அவர்கள் சாப்பிடுவது பழக்கம். தங்களது கணவரை ''எஜமான்' என்றுதான் அழைப்பார்கள். என்னையும் மியாக் கானையும் ஒரே மாதிரிதான் நடத்துவார்கள். கொஞ்சம் கூட வித்தியாசம் காண முடியாது.

இரவு பத்துப் பதினோரு மணிக்குப் பிறகு தான் காயிதேமில்லத் அவர்களும் எனது தந்தையும் ஆன்மீக சம்பந்தமான பேச்சுகளை ஆரம்பிப்பார்கள். இரவு இரண்டு மணி வரை இருவரும் பேசிக் கொண்டேயிருப்பார்கள். அந்த அகால வேளையில் கூட அவ்விருவருக்கும் காப்பி, டீ, பலகாரங்கள் என்று எதையாவது அனுப்பி வைத்துக் கொண்டேயிருப்பார்கள் ஹமீதா அம்மாள். அந்த உபசரிப்புக்கு நிகரே கிடையாது.

1939-ம் ஆண்டு எனது தந்தை நோய்வாய்ப் பட்டார்கள். நாகூருக்கு திரும்பிவிட வேண்டியது தான் என்ற முடிவுக்கு வந்தார்கள். பிரியா விடை பெற்று நாங்கள் நாகூர் திரும்பினோம். ஒரு சில மாதங்களில் எனது தந்தையார் அப்துல்லா மௌலானா காலமாகி விட்டார்கள். சென்னையிலிருந்து காயிதேமில்லத் அவர்களும் ஜமால் குடும்பப் பிரமுகர்களும் எனது தந்தையின் இறுதிச் சடங்குகளில் கலந்து கொண்டார்கள். காயிதேமில்லத அவர்களின் யோசனைப் படியே எங்களது சொந்தத் தோட்டத்தில் மௌலானா அவர்கள் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள். கப்ருக்குள் காயிதேமில்லத் இறங்கி தங்களது கரத்தாலேயே ஜனாஸாவை வாங்கி வைத்தார்கள்.''

நாகூர் பக்கம் சுற்றுப்பயணம் வரும் பொழுதெல்லாம் தங்களது குருநாதர் கப்ரை ஜியாரத் செய்யாமல் தலைவர் அவர்கள் செல்லமாட்டார்கள். இறுதிவரை இந்த சம்பிரதாயத்தை அவர்கள் கடைப்பிடித்தார்கள்.

**நாகூர் செய்யது அல் பதஹ் மௌலானா**

# தலைவரின் நிபந்தனை

இந்நாடு சுதந்திரம் பெற்ற பின்பு, மேலப்பாளையம் நகரில் முஸ்லிம் லீக் செயல்படாமல் இருந்தது. தாய்ச்சபை ஊழியர்களுக்கு மீண்டும் நகர முஸ்லிம் லீக்கை ஆரம்பித்து நடத்த வேண்டும் என்ற அவா இருந்தாலும், ஊரின் சூழ்நிலை காரணமாகவும் செல்வாக்குப் படைத்த சிலர் இதற்கு எதிராக இருந்ததாலும் இம்முயற்சி பின்னடைந்த நிலையிலேயே இருந்தது.

1957ம் ஆண்டில் காயிதே மில்லத் அவர்கள் குடும்ப விஷயமாக பேட்டைக்கு வந்திருந்தார்கள். அது சமயம், மேலப்பாளையத்தைச் சேர்ந்த வாலிபர்கள் சிலர் தங்களது ஊரில் மீலாது விழாவில் பேச வர வேண்டும் என பேட்டை சென்று காயிதேமில்லத்திடம் கேட்டுக் கொண்டார்கள். அப்பொழுது தலைவரவர்கள் ''தமிழ் நாட்டிலேயே முஸ்லிம்கள் அதிகமாக வாழும் ஊர்களில் மேலப்பாளையமும் ஒன்று. அவ்வூரில் முஸ்லிம் லீக் செயல்படவில்லையென்றால், முஸ்லிம் லீகின் தலைவனாக இருக்கும் நான் எப்படி அந்த ஊருக்கு பேச வருவது? உங்கள் ஊரில் முஸ்லிம் லீகை ஆரம்பித்து விட்டு வாருங்கள். அதன் பிறகு நான் உங்கள் ஊருக்கு வருகிறேன்'' என்று பதில்சொல்லி அனுப்பி விட்டார்கள்.

காயிதே மில்லத்திற்கும் எனக்கும் நன்கு அறிமுகம் என்ற விபரம் தெரிந்த அந்த இளைஞர்கள் என்னிடம் வந்து விஷயத்தைக் கூறி எப்படியும் மீலாது விழாவிற்கு தலைவரவர்களை அழைத்து வந்து விட வேண்டும் என என்னை நச்சரிக்கலானார்கள்.

வாலிபர்களின் ஆர்வத்தைக் கண்டு நானும் பேட்டை சென்று காயிதே மில்லத்தைப் பார்த்துப் பேசினேன், இளைஞர்களிடம் கூறியதையே என்னிடமும்சொன்னார்கள். ''மேலப்பாளையத்தில் முஸ்லிம் லீகை ஆரம்பிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஒரு சில மாதங்களில் அதை நிறைவேற்றிக் காட்டுகிறேன்'' என்று நான் உறுதி கூறினேன், ''அப்படியா'' எனச் சொன்ன காயிதே மில்லத் அவர்கள் என்னிடம் கையடித்து அதை உறுதி செய்து கொண்டார்கள். ''உங்கள் வாக்கைக் காப்பாற்றா விட்டால், பாபக்கி தங்களிடம் ஆவலாதி சொல்வேன்'' என்றும் என்னைப் பார்த்துக் கூறினார்கள். அந்த சவாலை நான் ஏற்றுக் கொண்டேன்,

உடனேயே மேலப்பாளையம் மீலாத் விழாவிற்கு வர ஒத்துக் கொண்டார்கள். காயிதே மில்லத் அவர்களும் மு.'ந. அப்துர் ரகுமான் சாகிபு அவர்களும் மீலாது விழாவில் கலந்து கொண்டார்கள். பெரிய குத்துபா பள்ளியிலிருந்து பிரமாண்டமான ஊர்வலம் புறப்பட்டது. மீலாது கூட்டத்தில் மார்க்க சம்பந்தமான விஷயங்களை எடுத்துச் சொன்னதுடன், நாட்டு நடப்புக்களையும் தலைவரவர்கள் விவரமாகக் கூறினார்கள்.

நான் வாக்களித்தபடி, மேலப்பாளையம் நகர முஸ்லிம் லீக் ஊழியர்களை ஒன்று சேர்த்து அமைப்புக் கூட்டத்தைக் கூட்டினேன். ஜனாப் M. O. அப்துல் லத்தீப் தலைமையில் ''ஆர்கனைஸிங் கமிட்டி'' ஒன்று காயிதே மில்லத் அவர்கள் அனுமதியின் பேரில் அமைக்கப்பட்டது. 1957 முதல் மேலப்பாளையம் பிரைமரி லீக் செயல்படத் துவங்கி விட்டது.

**(முஹம்மது மூஸல் காழிம் தங்ஙள், மேலப்பாளையம்)**

# தொழிற்சங்கவாதி
# காயிதே மில்லத்

சென்னை மாகாண கசாய் வர்த்தகர்கள் சங்கம் 1944ம் ஆண்டு சென்னை நகரில் நிறுவப்பட்டது. அச்சங்கத்தின் முதலாவது தலைவராக J. சிவசண்முகம் பிள்ளை (மதராஸ் மாகாண சட்டப்பேரவையின் (முன்னாள் தலைவர்) செயலாற்றினார். அவரது பதவி காலத்தில், இச் சங்கம் வளர்ச்சி கண்டதுடன், அரசாங்கத்தின் கவனத்தையும் பெற்று, கசாய் வர்த்தகர்களுக்கு பல நிவாரணங்கள் கிடைக்கவும் செய்தன.

திரு. சிவசண்முகம் பிள்ளை அவர்களுக்குப் பிறகு இச் சங்கத்தின் தலைவராக, அன்றைய மதராஸ் சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவராகப் பணிபுரிந்த காயிதேமில்லத் அவர்கள் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவர்களுடைய பதவி காலத்திலும் கசாய் வர்த்தகர்கள் சங்கம் அரசாங்கத்திடமிருந்து பல சலுகைகளையும் அனுகூலங்களையும் பெற்று வளர்ச்சியடைந்தது. விற்பனை வரியிலிருந்து இத்தொழில் செய்வோர் விதிவிலக்குப் பெற்றார்கள்; ஷாப் சட்டத்தின் கெடுபிடிகளில் இருந்தும் அவர்கள் பாதுகாக்கப்பட்டனர். இதையெல்லாம் காயிதேமில்லத் அவர்கள்தான் இச்சங்கத்தினர்களுக்குச் செய்து கொடுத்தார்கள்.

இவ்வுண்மையை அவர்கள் மூலமாகவே தெரிந்து கொள்வது சாலப் பொருத்தமானதாகும். 1955ம் ஆண்டு பிப்ரவரி மாதம், நான்காம் தேதி மதுரையில் நடைபெற்ற அவர்களது இரண்டாவது மாநில மாநாடு சமயம், மலர் ஒன்றினை அவர்கள் வெளியிட்டிருந்தார்கள். அம்மலரில் இருந்து கீழ்க்காணும் வாசகங்கள் எடுக்கப்பட்டுள்ளன.

''நமக்கென்று சங்கம் ஒன்று இல்லாத நேரத்தில் 1944ல் கசாய் வர்த்தகர் சங்கம் சென்னையிலே நிறுவி, அதற்கு சிந்தனை சிற்பி, ஜே. சிவஷண்முகம் பிள்ளை அவர்கள் தலைவராயிருந்த ஓராண்டிற்குள், அன்னார் தலைமையில் 1945 செப்டம்பர் 6ம் தேதியில் சென்னை அட்வைஸரி கமிட்டி, சர். S. V. ராமமூர்த்தி, சர். ராதாகிருஷ்ணன் ஆகியோரிடம் ஓர் தூதுக் குழு சென்றோம்.

பின்னர், 12-1-46ல் ஈரோட்டில் ஜில்லா மாநாடு கூட்டி, அதில் தீர்மானம் நிறைவேற்றியதன் பேரில், ''ஒரு ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவிற்கு ஆடுகள் செல்ல விதித்திருந்த தடை''யை 25-4-46ல் சர்க்கார் ரத்து செய்தது.

விற்பனை வரியில் விதிவிலக்கு அளிக்க வேண்டுமெனக் கோரி 19-6-51ல் உயர்திரு. கனம் நிதி மந்திரி கோபால் ரெட்டியாரிடம், ஜனப். தலைவர் M. முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் தலைமையில் ஒரு தூது கோஷ்டி சென்றோம்.

மேலும் நமது வர்த்தகத்தை தீண்டவிருந்த ஷாப் சட்டத்தினின்றும் விதிவிலக்குக்கோரி தொழில் மந்திரி கனம் யூ. கிருஷ்ண ராவ் அவர்களிடம், ஜனப். எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப். M. P. அவர்கள் தலைமையில் தூது சென்று பின் 23-3-52ல் அதன் வெற்றி கண்டும், அவ்வப்பொழுது இன்ன பிற குறைகளையும், கோரிக்கைகளையும் எடுத்தியம்பி நிறைவு பெறச் செய்ததும் சங்கங்கள் தொடர்ந்து அணியணியாக சேவை செய்த அரும்பெரும் காரணத்தினாலேதான். ஆகவே இனி தொடர்ந்து நாம் நமது சங்கங்களை செவ்வனுற பலப்படுத்த வேண்டும்.''

அந்த மதுரை மாநாட்டில் வரவேற்புக் குழுத்தலைவர் ஈரோடு அ. மைதீன் பாட்சா

அவர்கள் தமது உஸ்ரியாற்றும் பொழுது கூறியதாவது:-

''அண்மையில், கண்ட்ரோலுக்காக நாட்டிலே பல வியாபார சங்கங்கள் உதயமாயின. அந்த சங்கங்களில் பல அரசியலிலே பங்கு கொண்டது. ஆனால் கசாய் வர்த்தக சங்கம் அன்று முதல் இன்று வரை அரசியலைத் தீண்டாதது - அரசியலை எட்டிப்பார்க்காதது - அரசியலிலேயே ஆசைக் கொள்ளாதது. அன்றியும் எந்த ஒரு கட்சிக்கும் ஆதரவு காட்டாமல் நடுநிலைமையிலேயே, ''எங்கள் வியாபாரமே எங்கள் குறிக்கோளாகக் கொண்டும், எங்கள் வர்த்தக சமூகம் முன்னேறவும் தான்'' சங்கத்தை பயன்படுத்தி வந்தோமே தவிர, வேறு எந்த வழியிலும் நாங்கள் சென்றது மில்லை! செல்லப்போவதுமில்லை! ஆகவே, அவ்விதமாக நாங்கள் அரசியலைத் தீண்டாததற்கு அடிப்படைக் காரணகர்த்தர்களை நாங்கள் என்றென்றும் மறக்க முடியாது. நாங்கள் இன்று ஓர் உன்னத நிலைமை எட்டிப்பார்க்கும் வாய்ப்பை ஏற்படுத்தியவர்களான, சென்னை கசாய் வர்த்தக சங்க முன்னாள் தலைவரும் ஏழை பங்காளரும், சட்டசபை சபாநாயகருமான சிந்தனை சிற்பி ஜே. சிவஷண்முகம் பிள்ளை M. A. M. L. A அவர்களும், மனிதருள் மாணிக்கம் மக்களின் மனங்கவர்ந்த மாபெரும் தலைவரும், மாகாண சங்க தலைவருமாகிய, ஆலி ஜனாப். எம். முகம்மது இஸ்மாயில் சாஹிப் B. A., M. P. அவர்களும் தான் என்றால் அது மிகையாகாது. அவர்களே எங்களுக்கு நல்வழி காட்டியவர்களாவார்கள். அவர்கள் நீடுழி நெடுநாள் வாழ ஆண்டவன் அன்னாருக்கு நீண்ட ஆயுளையும் நிறைந்த பாக்கியத்தையும் கொடுத்தருள் புரிவானாக!''



## முதல் அறிமுகம் கஃபாவில் வைத்து

1965ம் ஆண்டு நான் ஹஜ்ஜுக்குச் சென்றேன். அப்போது எனக்கு வயது முப்பதுதான். அந்த ஆண்டு காயிதே மில்லத் அவர்களும் ஹஜ் செய்ய ஒரு குழுவுடன் வந்திருந்தார்கள். நான் தனியாகச் சென்றிருந்த போதிலும், முஸ்லிம் லீக் இயக்கத்தில் சிறு வயது முதலே எனக்கு ஈடுபாடு இருந்ததாலும், மக்காவில் தலைவர் அவர்கள் செல்லுமிடங்களுக் கெல்லாம் கூடவே செல்ல வேண்டும் என்ற ஆசையினாலும், அவர்களுடன் செல்லும் நண்பர்களுடன் நானும் ஒட்டிக் கொள்வேன்.

காலையில் சுபுஹ் தொழுகை முடித்த கையுடன் காயிதெ மில்லத் அவர்கள் உம்ரா செய்வார்கள். அதை முடித்ததும் மிகவும் களைப்புடன் இருப்பார்கள். இதை நான் கவனித்ததும், ஒரு சில பிஸ்கட்களையும், தேனீரையும் முன்கூட்டியே எடுத்துச் சென்று தயாராக வைத்துக் கொண்டேன். காயிதே மில்லத் உம்ராவை முடித்து திரும்பிய வேளையில் அவர்களிடம் பிஸ்கட்டையும், தேநீரையும் நீட்டி 'அருந்துங்கள்' என்றேன். கஃபா வளாகத்திற்குள்ளேயே இந்த உபசரிப்பை அவர்கள் எதிர் பார்க்கவில்லை. ஆச்சரியப்பட்டவர்களாக என்னை உற்றுப் பார்த்துவிட்டு ஒரு பிஸ்கட்டையும் சாப்பிட்டார்கள். தேனீரையும் அருந்தினார்கள்.

மதராஸ் மாநிலத்திலிருந்து செல்பவர்களுக்குரிய தபால்கள் முஅல்லிம் ஷில்லி வீட்டிற்குத் தான் வரும். தினசரி தபால் கட்டுகளை பார்ப்பதற்காக ஷில்லி வீட்டிற்குச் செல்லும் நான், அன்றைய கட்டில் காயிதே மில்லத்திற்கு ஏதாவது தபால் இருந்தால் அதை எடுத்துக்கொண்டு அவர்களிடம் ஓடோடிச் சென்று கொடுப்பேன்.

முன்பின் அறிமுகமில்லாத சிறுவன் ஒருவன் நம்மைச் சுற்றிக் கொண்டே வருகிறானே என்று ஒரு சந்தேகம் காயிதே மில்லத்திற்கும் ஏற்பட்டு விட்டது. ஒருநாள் என்னைத் தனியாகக் கூப்பிட்டு ''நீ யார்? யாருடன் வந்திருக்கிறாய்?'' என்று அதட்டும் குரலில் கேட்டார்கள். தமிழ்நாடு போலீஸ் உளவுத்துறை சார்பாக நான் அனுப்பப்பட்டிருக்கலாமோ என்று அவர்களுக்கு சந்தேகம் ஏற்பட்டு விட்டது. உண்மையிலேயே நான் பயந்து போனேன். அந்த அதிர்ச்சியிலிருந்து மீளவே எனக்கு சிறிது நேரம் பிடித்தது. நான் ஹஜ்ஜுக்கு வந்த விபரங்களைக் கூறினேன். தமிழகத்தில் இன்னின்னார் எல்லாம் எனக்குத் தெரியும். நான் இன்ன ஊர்க்காரன் போன்ற விஷயங்களையும் எடுத்துச் சொன்னேன். என்னைப் பற்றிய சந்தேகம் அவர்களை விட்டு அகன்றதைக் கண்டேன். 'அப்படியா?' என்று அன்பாகக் கூறினார்கள்.

காயிதே மில்லத்துடன் எனக்குள் அறிமுகம் புனித மக்கா நகரில் இப்படித்தான் ஆரம்பமானது!

**சேலம் ஹாஜி M. M. A. அப்துல் மன்னான் சாகிப்.**

ஜெய்ஹிந்த் ! | காந்தீயம் வாழ்க.
---|---



*செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்*
*தேன்வந்து பாயுது காதினிலே* — *பாரதியார்.*

20—10—51 சென்னை மாகாண கசாய் வர்த்தகர்கள்

# முதலாவது மாகாண மகாநாடு

*(கோவை ஜில்லா)* **திருப்பூர்.**

*சென்னை மாகாண உணவு மந்திரி*

## கனம் ஜே. எல். பி. ரோச்விக்டோரியா அவர்களுக்கும்

*சென்னை கசாய் வர்த்தக சங்கத் தலைவரும் சட்டசபை (கட்சித் தலைவருமான)*

## ஜனாப் M. முகம்மது இஸ்மாயில் சாஹெப் எம். எல். ஏ. அவர்களுக்கும்

*சென்னை மாகாண கசாய் வர்த்தகர்கள் மாகாண முதல் மகாநாட்டின்*
*வரவேற்புக் கமிட்டித் தலைவர்*

## ஜனாப் A. மைதீன்பாஷா சாஹெப் அவர்களுக்கும்

*மதுரை இறைச்சி வர்த்தகர் சங்கத்தார்கள் சார்பாக வாசித்தளித்த*

# வரவேற்பு இதழ்.

நமது நாட்டின் இணையற்ற தலைவர்களே வணக்கம் !

*நாட்டிலே நமது இறைச்சி வர்த்தகர்கள் வியாபாரத்துறையிலே உள்ள இணைப்பு சக்தியின் பலத்தை உணராமல் "கண்டதே காக்ஷி கொண்டதே கோலம்" என்றிருந்தபோது நம்மை ஒன்றுதிரட்டி சங்க அமைப்பிலே ஐக்யப்படுத்தினீர்கள். அதன்மூலம ஸ்தாபன பலத்தை கசாய் வர்த்தகர்களை உணரும்படி செய்த பெருமை தங்களையே சாருமென்று உள்ளன்புடன் ஒப்புக்கொண்டு தங்களது ஆற்றலையும் ஆர்வததையும அஞ்சாநெஞ்சங்கொண்ட துணிச்சலையும் மிகவும் கண்ணியப்படுத்தி பாராட்டி மனமுவந்து வாழ்த்துகிறோம்.*

மங்கிக்கிடந்த மாநில கசாயி வர்த்தகர்களை பொங்கி எழச்செய்த ஏந்தல்களே !

*நம் நாட்டின் சூழ்நிலையின் சாகரத்திலே சிக்கி சிந்தனை குழம்பிப்போய் எங்கும் ஆர்வங்குன்றி மகத்தான மகாநாடு நடத்துவதற்கு எவரும் மனந்துணிந்திடாத நேரத்திலே "பொருப்பைத் தாருங்கள் நடத்திக் காட்டுகிறோம்" என்று குளுரைத்து சிங்கநாதம் செய்து சிரமத்தை பொருட்படுத்தாமல், அயர்ச்சியோ சஞ்சலமோ அடையாமல் ஆவேசத்தோடு இப்பெரு மகாநாட்டினைக் கட்டிமுடித்த பெருமைமிக்க தங்களை மன, மொழி, மெய்யன்புடன் வாழ்த்துகிறோம். வரவேற்கிறோம்.*

*தங்களது உள்ளன்புகொண்ட,*

**மதுரை ஆட்டு இறைச்சி வர்த்தகர் சங்கத்தார்கள்,**

*வடக்குமாசி வீதி, மதுரை.*

மதுரை:-5..

சென்னை மாகாண கசாப் வர்த்தக சங்கத்தலைவரும்,
இந்திய ராஜாங்கசபை அங்கத்தினரும்

## சென்னை மாகாண கசாப் வர்த்தகர்கள்
## இரண்டாவது மாகாண மகாநாடு

வைபவத்தின் மாபெரும் தலைவருமான காயிதேமில்லத் ஆலிஜனாப்

**M. முஹம்மது இஸ்மாயில் சாஹிப் B. A.** அவர்களுக்கு

மகாநாடு வரவேற்புக்கமிட்டியார் வாசித்தளித்த

# வரவேற்பு இதழ்

சமரசநோக்கமும் சன்மார்க்கநெறியும் சத்வகுணசீலமும்
மிகு உத்தம தலைவர் அவர்களே வருக! வருக!!

வர்த்தக சமுதாய வானின் முழுமதியே !

ஓங்கும் புகழ் எய்தியுள்ள தங்களை நாங்கள் தலைவராகப் பெற்றதே எங்களின் ஒரு பாக்கியம். அதிலும் திருப்பூரில் முதலாவது மாகாண மகாநாட்டிற்கு தலைவராக தங்களை நாங்கள் தலைமை தாங்கப்பெற்றதும் எங்களின் மறு பாக்கியமாவதுடன், இம்மதுரையில் இவ் இரண்டாவது மாகாண மகாநாட்டிற்கும் தலைவராகப் பெற்றோமென்றால் அது மிகப்பெரிய பாக்கியமேயன்றி வேறெதுவாக இருக்க முடியும். ஆகவே இத்தலைமைப் பதவியில் எங்களுக்கு சகித்துத்தந்த பெருபகாரங்களை இம்மகாநாட்டின் சார்பாகவும் எங்கள் சார்பாகவும் வியந்து போற்றுகிறோம்.

தன்னலமற்ற தனிப்பெருந்தகையாளரே !!

வற்றா ஊற்றெனப் பெருக்கெடுத்தோடுகிற உங்களின் வாசா மகோச்சாரமான பேச்சுக்களை சிந்தைமகிழக் கேட்டு எதிர்கால முற்போக்கிற்கு திட்டங்களிட்டு செயலாற்றலாம் என்பது எங்கள் இறைச்சி வர்த்தக சமூகத்தாராகிய எங்களின் எளிய எண்ணம். ஆர்வம் குன்றாது மேலும் நாங்கள் உரமும் உறுதியும் கொண்டு உழைக்க இறைவன் துணைபுரிவானாக!

கருணைக்கடலான காயிதேமில்லத் அவர்களே !!!

சன்னெறிக்குறி நல்வழி காட்டி தந்து, கருணையே கண்ணாயிருந்து மக்கள் குலத்திற்கு பொதுவாகவும், கசாப் வர்த்தகர்களுக்கு குறிப்பாகவும் சேவையாற்றும் நீங்கள் சர்வசுகத்துடன் நீண்டகாலம் வாழ்ந்து வளமையும் வாகையும் அடைந்து வளமோடு விளங்க வேண்டுமென்று இறைவனை இறைஞ்சிக்கொண்டு மீண்டும் உங்களை வாழ்த்துகிறோம்.

இங்ஙனம்
வரவேற்புக்கமிட்டி

4—2—55
மதுரை

தலைவர்:— அ. மைதீன்பாஷா (ஈரோடு)
செயலாளர்கள்:— பெ. முத்தையாக்கோன்
ம. க. பண்டரிநாதக்கோன்
மதுரை.

# காயிதே மில்லத் இஸ்மாயில் சாகிபும் இந்திய தேசீய இயக்கமும்

பேராசிரியர் K. பீர்முஹம்மது M.A., M. Phil.

[1988ஆம் ஆண்டு ஏப்ரல் 15ந்தேதி முதல் 29-ந்தேதி வரை இந்திய வரலாற்றுக் கழகமும் பாண்டிச்சேரி கத்திய பல்கலைக் கழகமும் இணைந்து 'மத்திய மூர்த்தி நினைவு தேசிய இயக்கக் கருத்தரங்கு' ஒன்றை ஏற்பாடு செய்திருந்தார்கள். கருத்தரங்கில் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்ற நான் காயிதே மில்லத் இஸ்மாயில் சாகிப் தேசிய இயக்கத்திற்கு ஆற்றிய பங்கைப் பற்றி ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை வடித்து வழங்கினேன், கலந்து கொண்ட வரலாற்று அறிஞர்கள் காயிதே மில்லத் பற்றிய செய்திகள் அறிந்து மிகவும் மகிழ்ச்சி தெரிவித்த னர். மேலும் அதிகமாக அவர் பற்றி அறிய ஆர்வம் காட்டினர்கள். நிறைவு நாள் விழாவில் கலந்து கொண்ட வரலாற்று அறிஞர்களுள் ஒருவ ரான டாக்டர் எஸ். கோபால் அவர்கள் (இந்தியா வின் இரண்டாவது ஜனதிபதி டாக்டர் S. ராதா கிருஷ்ணன் அவர்களின் மைந்தர்) ஆர்வத்தோடு காயிதேமில்லத் பற்றிய ஆவணங்கள் கிடைப்பது பற்றி விசாரித்தார்கள். டாக்டர் பட்டம் பெற ''காயிதேமில்லத் - பாராளுமன்றராகவும் தேசிய வாதியாகவும் ஆற்றிய பங்கும் தொண்டுகளும்'' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்வதை அறிந்து என்னை ஊக்கப்படுத்தினார்கள். கருத்தரங்கில் சமர்ப்பிக்கப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரையின் சுருக்கம் தரப்பட்டுள்ளது.]

இந்திய விடுதலை இயக்கத்தில் இஸ்லாமியர் களும் பெரும் அளவில் பங்கேற்றுள்ளனர். ''எல்லையற்ற வளங்களையும் அதிகாரங்களையும் கொண்ட ஆதிக்க சக்திகளைப் பலம் கொண்டு எதிர்க்கின்ற நாட்டுப்பற்று முஸ்லிம்களிடம் காணப்பட்டதாக'' வரலாற்று அறிஞர் P. N. சோப்ரா அவர்கள் குறிப்பிடுகிறார். முஸ்லிம் களின் மக்கள் தொகை அடிப்படையில் பார்க்கும் போது தேசியப் போராட்டத்தில் உயிரிழந்த முஸ்லிம்களின் எண்ணிக்கை மற்றெவரையும் விட அதிகமானது என பிரபல ஆங்கில வார ஏடான ''இல்லஸ்டிரேட் வீக்லி ஆப் இந்தியா'' அழுத்தமாகத் தெரிவிக்கிறது. இஸ்லாமியப் பெண்களும் கூடத் தங்கள் கணவர்களோடு சிறை ஏகித் தேசவிடுதலைக்காகபாடுபட்டுள்ளனர். திருச்சியைச் சார்ந்த அப்துல்கரீம் - மரியம் பீவி, கரூரைச் சேர்ந்த நானு சாகிப் -பியாரி பீவி ஆகி யோர் 1940-42ல் சிறை சென்றதாக எல். சபாபதி அவர்கள் ''இந்திய சுதந்திரப் போர்'' என்ற நூலில் குறிப்பிடுகிறார். நேதாஜியின் நண்பர் கலீலுர் ரஹ்மான் என்ற மணிமொழி மௌ லானு விடுதலை இயக்கத்தில் ஆற்றிய பங்கு யாவரும் அறிந்த ஒன்றாகும், சென்னையில் வணிக இளவரசராக விளங்கிய ஜமால் முகைதீன் அவர்களும் அவர்களது மகன் ஜமால் முஹம்மது அவர்களும் கிலாபத் ஒத்துழையாமை இயக்கத் தில் பெரும் பங்கு வகித்தனர்.

காயிதேமில்லத் மாணவராக இருந்த போதே தன்னுடைய இளைய சகோதரர் கே. டி. எம். அகமது இபுராகிம் சாகிபு அவர்களின் ஒத்துழைப் போடு முஸ்லிம் இளைஞர் அமைப்பு ஒன்றைத் துவக்கி முஸ்லிம்களிடையே தேசிய உணர் வை ஊட்டினர். மௌலானு சவுக்கத்தலி - 'பீ'யம்மாள் போன்றோரை அழைத்து உறுப் பினர்களிடையே உரையாற்றச் செய்திருக்கிறார் கள்.

1920-ஆம் ஆண்டு ஜூன் மாதம் சென்னை மாகாண 26-வது காங்கிரஸ் மாநாடு திருநெல் வேலியில் எஸ். ஸ்ரீனிவாச அய்யங்கார் தலைமை யில் நடந்த போது காயிதேமில்லத்தும் கே. டி

எம். அகமது இப்ராஹிம் சாகிபும் இணைந்து சிறப்பு மிக்க முறையில் பணியாற்றினர்கள். ஸ்ரீனிவாச சாஸ்திரி போன்றவர்களெல்லாம் ஒத்துழை யாமை இயக்கத் திட்டத்திற்கு தீவிர எதிர்ப்பு தெரிவித்த போதிலும் காயிதேமில்லத்தும் அவரது சகோதரரும் இணைந்து ஒத்துழையாமை இயக்கத் திட்டத்தை அனைவரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அனைத்து முயற்சிகளும் எடுத்தனர். ''இந்த இளைஞர்கள் காட்டிய ஆர்வத்தினாலேயே அரசுக்கு எதிரான ஒத்துழையாமை இயக்கத் தீர்மானம் மாநாட்டில் நிறைவேறியதாக ''தேசிய வரலாறு, சென்னை'' (National Biography) என்ற நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் போது தேசிய இயக்கத்தின்பால் கொண்ட ஈடுபாட்டால் காயிதேமில்லத்தின் கல்வி தடைபட்டது. தேசபந்து சி. ஆர். தாஸ், இராஜாஜி போன்றோர்கள் ஆற்றிய உரைகளால் கவரப்பட்டு காந்திஜியின் ''பள்ளிப் புறக்கணிப்புத் திட்ட'' கோரிக்கையின் போது காயிதேமில்லத் கல்லூரிப் படிப்பை விட்டுத் தேசிய போராட்டத்தில் ஈடுபட்டார்,

தேசிய விடுதலையில் அவர் காட்டிய ஆர்வத்தின் காரணமாக காயிதேமில்லத் தன்னுடைய திருமண நாளில் கதர் அணிவதைப் பிடிவாதமாகக் கொண்டார். பல கோடிகளுக்கு அதிபதியானவரின் மகளை மணமுடிக்கும் முஸ்லிம் மணமகன் எளிய கதர் ஆடை அணிந்திருந்தார் என்பது, பொதுவாகவே விலையுயர்ந்த வண்ண ஆடைகள் அணிவதை வழக்கமாகக் கொண்டிருந்த முஸ்லிம்களின் மத்தியில் ஓர் அரிய காட்சியாயிற்று, (கருத்தரங்கு விவாத நேரத்தில், இந்த விபரம் பற்றி குறிப்பாக மகளிர் தங்கள் வியப்பையும் மகிழ்ச்சியையும் தெரிவித்தார்கள்.)

திருநெல்வேலி பேட்டை பள்ளிவாயிலின் முன்பு காயிதேமில்லத்தும் அவருடைய நண்பர்களும் ''வெளிநாட்டு பொருட்கள் புறக்கணிப்பு'' போராட்டத்தில் கலந்து கொண்டு வெளிநாட்டுத் துணிமணிகளை எரித்தனர். அவரைத் தொடர்ந்து அவரது சகலர் மு. ந. அப்துல் ரஹ்மான் சாகிபு தென்காசியில் வெளிநாட்டுத் துணிகளை எரித்தார். 1936 - ல் காங்கிரஸிலிருந்து தேசியவாதியான M. ஜமால் முஹம்மது சாகிப் அவர்களைத் தொடர்ந்து 1936ம் ஆண்டில் காயிதே மில்லத் அவர்களும் அக் கட்சியைவிட்டு வெளியேறியதற்கான காரணங்கள் யாவரும் அறிந்த ஒன்று. முஸ்லிம் லீகராக விடுதலைக்கு தொடர்ந்து பாடுபட்டார். நாடு விடுதலை அடைந்தவுடன் அவர் அடைந்த மகிழ்ச்சியும் ஆற்றிய உரைகளும் தேச விடுதலையில் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டையும் ஆழிய விருப்பினையும் உணர்த்துவதாக இருந்தன. அகில இந்திய முஸ்லிம் லீகின் பெருந்தலைவர்கள் பலரும் நாட்டைவிட்டு வெளியேறிப் பாகிஸ்தானில் குடியேறத் தயாராகிக் கொண்டு இருந்த போது, பாகிஸ்தானில் பல பதவிகள் தரப்படுவதாக இருந்த போதிலும் காயிதேமில்லத் இஸ்மாயில் சாகிபு இந்தியாவிலேயே தொடர்ந்து இருக்க விரும்பினர். இந்தியாவின் முதல் சுதந்திரதின விழாவில், முஸ்லிம்களை ஆர்வத்தோடு பங்கேற்க வேண்டுகோள் விடுத்ததோடு தானும் சிறிய தேசக் கொடியை சட்டையில் அணிந்து முக்கிய விழா நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார். இதுவே ''வரலாற்றுச் சிறப்பு மிக்க தேச விடுதலை விழாக்களில் முழு மனத்தோடு இந்திய முஸ்லிம் மக்கள் கலந்து கொண்டு வெளிப்படுத்திய மகிழ்ச்சியும் நன்றியும் எந்த சமூகத்திற்கும் குறைந்ததல்ல என்பதற்கான சாட்சி'' என அரசுப் பதிவேடுகளில் குறிப்பிடக் காரணமாயிற்று.

இந்திய சுதந்திரத்திற்காக அயராது உழைத்த காந்தியடிகளை வாழ்த்திய தீர்மானத்தை வழிமொழிந்து எதிர்க்கட்சித் தலைவராக காயிதே மில்லத் சென்னை சட்டசபையில் ஆற்றிய உரை என்றும் நினைவு கூரத்தக்கது.

காயிதேமில்லத் இஸ்மாயில் சாகிப் தேசிய விடுதலைக்காக முக்கிய பங்கேற்றதோடு இறுதி வரை ஒரு தேசியவாதியாகவும் தேசபக்தராகவும் தனது வாழ்வை நடத்தினார். ''நாட்டுப்பற்றுஎன்பது ''ஈமானில் பாதி'' என்பது நபிமொழியாகும். அவ்வாக்கிற்கு தகுதியானவர் என்பதை உணர்த்தி விட்டார். இன்றைய இளைய தலை முறையினர் காயிதேமில்லத் இஸ்மாயில் சாகிப் போன்ற போற்றற்குரிய விடுதலை இயக்கப் பேரொளிகளின் நினைவு, இளைய தலைமுறையினருக்கு பலமாகவும் பாடமாகவும் அமையட்டும்.



# நான் கண்ட காயிதே மில்லத்

டாக்டர் (ஜனுபா) M. நுஸ்ரத் ஹபீபா M.B., B.S.
[காயிதே மில்லத்தின் பேத்தி]

எனது பாட்டனுரான காயிதே மில்லத் M. முஹம்மது இஸ்மாயில் (ரஹ்) அவர்களின் அரசியல் வாழ்க்கையைப் பற்றி நம் சமுதாயத்தினர் நன்கு அறிவர். அவர்கள் எல்லோரிடமும் அவரவர்களின் வயது, தகுதிக்கேற்றவாறு உரையாடி அவர்களுக்கு அறிவுரை கூறுவதில் தேர்ச்சிபெற்றிருந்தார்கள். என்ன கூறினுலும் மனதில் நன்கு பதியும்படி கூறுவது அவர்கள் வழக்கம். நான் சிறுமியாக இருக்கும்பொழுது அவர்கள் எனக்கு கூறிய அறிவுரைகளேயும், சம்பவங்களேயும் இங்கு நான் குறிப்பிடுகின்றேன்.

## ஒற்றுமை

எனக்கு அப்பொழுது ஆறுவயது இருக்கலாம். நான் என் வயதொத்த இன்னும் மூன்று சிறுமிகளுடன் குரோம்பேட்டையில் எங்கள் வீட்டுத் தோட்டத்தில் விளேயாடுவது வழக்கம். ஒருநாள் நானும் இரண்டு சிறுமிகள் மட்டுமே விளேயாடிக் கொண்டிருந்தோம். அதைக் கவனித்த எங்கள் தாத்தா (பாட்டனுர்) நான்காவது சிறுமியைப் பற்றி விசாரித்தார்கள். நாங்கள் அச்சிறுமியுடன் சண்டையிட்டுக் கொண்டதாகவும், எனவேதான் அவளே எங்களுடைய வீளேயாட்டில் சேர்த்துக் கொள்ளவில்லே என்றும் கூறினேம். எங்கள் வீட்டின் முன்புறம் ஒரு கொட்டகை உண்டு. அங்கு உடைந்து போன உதவாத பொருட்களே போட்டு வைப்பார்கள். எங்கள் பாட்டனுர் எங்கள் மூவரையும் அங்கு அழைத்துச் சென்ருர்கள், அங்கு ஒரு கால் உடைந்த மூன்று கால் நாற்காலி இருந்தது. பாட்டனுர் அதில் எங்களில் ஒருவரை உட்காரச் சொன்னுர்கள். நாங்கள் அதில் உட்கார்ந்தால் விழுந்து விடுவோம் என்று சொன்னேம். உடனே அவர்கள் ''நான்கு கால்கள் இருப்பதால் தானே நாற்காலி என்று பெயர் வந்தது. மூன்று கால் நாற்காலி ஒன்றுக்கும் உதவாதது. எனவே தான் இங்கு கொட்டகையில் போட்டிருக்கிருேம். அதைப் போலவே நீங்கள் நால்வரும் சேர்ந்து விளேயாடினுல்தான் அது விளேயாட்டு, அதில் ஒருவர் குறைந்தாலும் அது விளேயாட்டல்ல. இப்பொழுது ஓடிப்போய் அந்த சிறுமியை அழைத்து வாருங்கள். இனிமேல் உங்களுக்கிடையே சண்டை வரக்கூடாது'' என்ருர்கள். இதன் பின்னர் இருபது ஆண்டுகள் கடந்த பின்னும் எங்களிடையே சண்டையோ சிறு மன வருத்தமோ கூட ஏற்பட்டது கிடையாது. இன்ஷா அல்லாஹ் ஏற்படாது.

## இறை நம்பிக்கை :

தாத்தாவிற்கு ஆண்டவன் மேல் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. எந்த காரியத்தை செய்வதற்கு முன்னும் அல்லது முடிவு எடுப்பதற்கு முன்னும் இறைவனே தொழுத பின்னே அவர்கள் செய்வார்கள். அந்த நம்பிக்கையை எங்கள் இளமனதில் வேரூன்றி இருக்கச் செய்தார்கள். ஆண்டவனேப் பற்றி அவர்கள் ஒருமுறை என்னிடம் கூறியதை இங்கு குறிப்பிடுகிறேன்.

அவர்கள் கூறியதாவது: ''ஒரு மனிதன் மற்ருெருவனுக்கு மிகுந்த உதவிகள் செய்திருக்கிருன் என்று வைத்துக் கொள்வோம். சில நாட்கள் சென்றபின் உதவி செய்தவன் உதவி பெற்றவனிடம் சென்று உதவி கேட்டால் மகிழ்ச்சியுடன் உதவி செய்வான். இரண்டாவது முறை கேட்டால் மனதில் சினந்து கொண்டே அதை வெளிக்காட்டாமல் உதவி செய்வான். மூன்ருவது முறை இதுவே கடைசி முறை என்று சினந்து கூறி உதவி செய்வான். நான்காவது முறையோ கடிந்து கூறி

உதவாமலேயே அனுப்பி விடுவான். உதவி செய்த ஒருவனுக்கே மனிதன் உதவிசெய்யும் விதம் இது.

இது மனிதனின் சுபாவம். ஆனால் நாம் ஆண்டவனிடம் கேட்டாலோ அவன் மகிழ்ந்து உதவி செய்வான். இரண்டாவது முறை கேட்டால் இன்னும் மகிழ்வுடன் உதவுவான். ஆயிரம் முறை கேட்டாலும் இன்னும் இன்னும் மகிழ்வுடன் உதவுவான். சலிப்படையவே மாட்டான்.

### நம்முடைய அடியான் :

நம்மிடம் உதவி கேட்கிறான் என்று ஆண்டவன் மிகவும் சந்தோஷத்துடன் மேலும், மேலும் உதவுவான். எனவே எதுவாக இருந்தாலும் சிறியதோ, பெரியதோ ஆண்டவனிடம் தான் கேட்க வேண்டும். அவன் மிக மிக அன்பானவன்'' என்று கூறினார்கள். இதைச் சொல்லும் போது எனக்கு எட்டு வயது இருக்கும். அப்பொழுது அவர்கள் கூறியது என்னுடைய மனதில் ஆழப்பதிந்து விட்டது.

### தன் கையே தனக்குதவி:

காயிதே மில்லத் அவர்கள் தன்னுடைய வேலைகளை முடிந்த அளவு தாங்களே செய்து கொள்வார்கள். தினமும் நிறைய கடிதங்கள் வரும். அவற்றைப் படித்துப் பார்த்து தானே தான் உடனுக்குடன் பதில் எழுதுவார்கள். உடல்நிலை மிகவும் குன்றிய சமயத்தில் கூட நீங்கள் கூறுங்கள் நாங்கள் எழுதுகிறோம் என்று கூறினாலும் கேட்க மாட்டார்கள்; வீட்டு வேலை செய்யும் ஆயாவிடம் கூட மிகவும் சாந்தமாகத் தான் பேசுவார்கள். ஏதாவது வேலை கொடுக்க வேண்டும் என்றால் முதலில் வேறு ஏதாவது வேலை செய்து கொண்டிருக்கிறாளா என்று அறிந்து கொண்டபின்தான் ஏவுவார்கள். அவர்கள் அடிக்கடி டில்லிக்கும் மற்ற ஊர்களுக்கும் பிரயாணம் செய்வார்கள். அவர்களிடம் எப்பொழுதும் ஒரு சிறிய பெட்டியில் ஊசி, நூல், பொத்தான்கள் போன்றவை இருக்கும். ஏதாவது கிழிந்து விட்டால் அல்லது பொத்தான் விழுந்து விட்டால் தானே தைத்துக் கொள்வார்கள்.

ஒருமுறை நாங்கள் காயிதே மில்லத்துடன் டில்லிக்குச் சென்றிருந்தோம். வெஸ்டர்ன் கோர்ட்டில் அவர்களுடன் தங்கி இருந்தோம். அப்பொழுது ஒருநாள் அவர்களுடைய சக பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் பாராளுமன்றத்திற்கு செல்வதற்காக டாக்ஸியில் ஏறும்பொழுது கதவில் மாட்டி ஷேர்வானி கிழிந்து விட்டது. உடனே அவர் எங்கள் தாத்தாவின் அறைக்கு வந்து தமது ஷேர்வானி கிழிந்து விட்டது என்றும் ஏதாவது தையற்காரனைப் பார்த்து இதை சரி செய்ய வேண்டுமே என்றும் அங்கலாய்த்துக் கொண்டிருந்தார். ஷேர்வானியைகழற்றுமாறு எங்கள் தாத்தா அவரிடம் கூறினார்கள், இதற்கெல்லாம் பிறர் உதவியையோ அல்லது தயவையோ எதிர் பார்த்துக் கொண்டிருக்கக்கூடாது என்று அறிவுரை புகன்றார்கள். எங்கள் தாத்தாவும் என் தமக்கையாரும் சேர்ந்து ஷேர்வானி கிழிசலை தைத்துக்கொடுத்தார்கள். அதன் பின்னர் அவர் அதை உடுத்திக் கொண்டு பாராளுமன்றம் சென்றார். காலதாமதம் தவிர்க்கப் பட்டது.

காயிதே மில்லத் அவர்களை ஒருமுறை பார்த்தவர் கூட அவர்களை தங்கள் வாழ்நாள் முழுவதும் ஒருக்காலமும் மறக்க முடியாது. அவர்களுடன் இருந்தபொழுது நடக்கும் சிறு சம்பவமே அவர்கள் எவ்வளவு மென்மையானவர்கள், உயர்ந்தவர்கள் என்பதை நமக்குப் புரிய வைக்கும்.

[''காயிதே மில்லத்'' எட்டாம் ஆண்டுச் சிறப்பு மலர்—1986]

## பொன் மொழி

'' ஆங்கில மொழியின் வாயிலாகவே நமது அரசியல் சுதந்திரத்தை நாம் பெற்றோம். அம் மொழியை இப்பொழுது நாம் கைவிட்டு விட முடிவு செய்தால், நமது உரிமைகளும் பறிபோய்விடும்; முன்னேற்றமும் தடைப்பட்டு விடும்.''

**காயிதே மில்லத்**

# வரலாற்றிலிருந்து ஒரு பாடம்

**P. N. I. அபூ தாலிப்**

''உரிமைக்குரல்'' வெளியிட்டாளர்

ஒரு சமயம், திருச்சியை அடுத்த காட்டூரில் 1961ம் ஆண்டு இறுதியில் தமிழ்நாடு மா நில முஸ்லிம் லீகின் பொதுக்குழுக் கூட்டம் நடைபெற்றது. அதுசமயம் முஸ்லிம் லீகில் இருபிரிவுகள் கோஷ்டி மனப்பான்மையுடன் செயல்பட்டுக் கொண்டிருந்தன. இப்படிப்பட்ட கோஷ்டி மனப்பான்மை இறுதியில் மாபெரும் விபரீதத்தில் முடிந்துவிடக்கூடிய அபாயத்தை எங்கே உண்டாக்கிவிடுமோ என்று நல்ல உள்ளங்கள் பல அஞ்சின. அசாதாரணமான ஒரு பரபரப்பு நிலவியது.

காயிதெமில்லத் அவர்கள் பேச எழுந்தார்கள். ஒற்றுமையின் அவசியம் பற்றியும், சமுதாயத்தின் நன்மைக்காக நாம் மேற்கொள்ள வேண்டிய வழி முறைகளையும், விளக்கமான முறையில் எடுத்துக் கூறி, உருக்கமாகப் பேசினார்கள். அவர்கள் தமது உரையின் இறுதியாக, ஒரு சிறு அபிப்பிராயபேதம் - ஒரு சிறு பூசல், எப்படி இஸ்லாமிய - சரித்திரத்தையே தலை கீழாக மாற்றி அமைத்துவிட்டது என்பதற்கு சரித்திரத்திலிருந்து ஒரு மேற்கோள் காட்டினார்கள்.

''துருக்கிய சாம்ராஜ்யம் கொடி கட்டிப் பறந்த நேரம். மேற்கு ஐரோப்பாவின் ஒரு பகுதியையும் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ் அது வைத்துக் கொண்டிருந்தது. துருக்கியைக் கண்டு எல்லா நாடுகளும் அஞ்சின. துருக்கி இராணுவத்தின் புகழ் உலகெங்கும் பரவத் தொடங்கியது. அவர்கள் ஆட்சியின் மாட்சியைப் பற்றிக் கேள்விப்பட்ட அண்டை நாடுகளிலுள்ள பாதுகாப்பற்ற சிறுபான்மை மக்கள் கூட துருக்கியில் தஞ்சம் புகுந்தனர். கிருஸ்துவ நாடுகளிலிருந்து விரட்டப்பட்ட யூதர்களும் துருக்கிய சாம்ராஜ்யத்தில்தஞ்சம் புகுந்தனர். அனைவருக்கும் தஞ்சமளித்ததுடன், அவர்களுக்கு துருக்கிப் பிரஜைகளைப் போன்றே சம அந்தஸ்தையும் துருக்கிய கலீபாவின் ஆட்சி அவர்களுக்களித்தது. உலக முஸ்லிம் நாடுகளுக்கெல்லாம் கலீபா என்ற உயரிய தலைமை ஸ்தானத்தை துருக்கிய கலீபா பெற்றிருந்தார். அரபு நாடுகள் அனைத்தும் கலீபாவுக்கு அடங்கியிருந்தன. இவ்வளவு சிறப்புகளும், பெருமையும் பெற்று துருக்கிய சாம்ராஜ்யம் இஸ்லாமிய அடிப்படையில் ஆட்சி நடத்தி தலை நிமிர்ந்திருந்த நேரம். துருக்கி படைகள் மிகவும் வலிமை வாய்ந்தவை. அவர்கள் படை எடுத்து விட்டார்கள் என்றால் வழியிலுள்ள நாடுகள் எல்லாம் சரணடையத் தயாராக இருக்கும். துருக்கியசாம்ராஜ்யத்தின் புகழ் கண்டு பொறாமை கொண்ட ஆஸ்டிரிய மன்னன் மற்றும் சில சிற்றரசர்களின் துணையுடன் துருக்கியை முறியடிக்க திட்டம் தீட்டினான். இதை அறிந்த கலீபா, ஆஸ்டிரியாவைக் கைப்பற்ற ஆணையிட்டு பிரதம தளகர்த்தர் தலைமையில் படைகளை அனுப்பி வைத்தார். ஆஸ்டிரியாவை நோக்கி துருக்கி படைகள் முன்னேறின. இடையிலிருந்த நாடுகளெல்லாம் துருக்கி படையின் மாபெரும் வலிமை கண்டு சரணடைந்தன. படைகள் தலைநகரை நெருங்கிக் கொண்டிருந்தன. படையை நடத்தும் தளகர்த்தருக்கும் பிரதமருக்கும் அபிப்பிராய பேதம் இருந்து வந்தது. அதனால் அந்த தளபதி வெற்றிக்கனியை கைப்பற்றிக்கொள்வாரோ என்று பிரதம மந்திரி உடனடியாக படையை முன்னேற விடாமல் பின் வாங்கி விடும்படி உத்திர விட்டார். அன்று பின் வாங்கியவர்கள் தான் துருக்கியர்கள். அதன்பின் அவர்கள் என்றுமே முன்னேறியதாக சரித்திரம் இல்லை. அன்றிலிருந்து இன்று வரை ஒரு அடிகூட முன்னேறாமல்

பின் தங்கிய நிலையில் இருந்து வருகிறது. இருவருக்கும் இடையில் ஏற்பட்ட விரோதம் ஒரு சாம்ராஜ்யத்தையே சிதைவு பெறச் செய்து விட்டது.'' என்று கூறி ''ஆகவே இதன் பிறகாவது உங்களுக்குள் உள்ள மனமாச்சரியங்களை விட்டு விட்டு ஒற்றுமை என்னும் கயிற்றைப் பற்றி பிடியுங்கள். சொந்த நலத்திற்காக சமுதாயத்தை சீரழிக்காதீர்கள், ஆண்டவன் பேரால் கேட்கிறேன், உங்களுடைய சொந்த நலத்தையும், குரோதத்தையும் ஒதுக்கி வைத்து விட்டு உண்மையாக உழையுங்கள். பட்டம் பதவிகள் தானுகவரும், பிறரும் நம்மை மதிப்பார்கள்'' என்று உருக்கமாக சொன்னர்கள்.

தலைவர் அவர்கள் கூறியவை அனைவரின் மனதையும் கலங்க வைத்துவிட்டது. எல்லோர் கண்களும் குளமாயின. அன்று வரை கீரியும் பாம்புமாக கோஷ்டி மனப்பான்மையுடன் செயல்பட்டு கொண்டிருந்தவர்கள் தங்கள் மனக்கசப்பை மறந்து ஒருவரை ஒருவர் கட்டிப்பிடித்து அழுதனர். உள்ளங்களில் தெளிவு ஏற்பட்டதும் பகைமை உணர்ச்சிகள் சூரியனைக் கண்ட பனிப் போலக் கரைந்துவிட்டன. மாநில முஸ்லிம் லீக் நிர்வாகிகள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

[நன்றி ; காயிதேமில்லத் பிறந்த நாள் பெருவிழா மலர் 1974]

## 1947க்குப் பிறகு முஸ்லிம் லீகின் முதல் பொதுக்கூட்டம்

முஸ்லிம் லீக் ஸ்தாபனத்தை தொடர்ந்து வைத்துக் கொள்வதா அல்லது கலைத்து விடுவதா என்ற விவாதம் 1947-ம் ஆண்டு நாடு சுதந்திரம் பெற்றதும் ஆரம்பமானது. அப்பொழுது காணப்பட்டமிகவும் சோதனையான வேளையில் முஸ்லிம் லீக் தேவையில்லை என்ற எண்ணமே பலரிடமும் மேலோங்கி நின்றது. ஆட்சியாளர்கள் செய்த அதிரடி நடவடிக்கைகளும், பாமர முஸ்லிம்கள் மத்தியில் ஒரு அச்ச உணர்ச்சியைக் கிளப்பி விட்டிருந்தது.

ஆனால் காயிதெமில்லத் அவர்கள் இந்த விஷயத்தில் மிகவும் உறுதியாக இருந்தார்கள். முஸ்லிம் லீகில் இருந்து விலகிச் செல்பவர்கள் எல்லாம் அவ்வாறே செய்து கொள்ளலாம். எல்லோருமே அந்த ஸ்தாபனத்தை விட்டு வெளியேறி விட்டாலும் நான் ஒருவன் மட்டுமாவது தன்னந் தனியாக இருந்து முஸ்லிம் லீக் எனக் கூறிக் கொண்டிருப்பதுடன் எனது வீட்டிலும் அந்த பெயர் பலகையை எனது உயிருள்ளவரை மாட்டி வைத்திருப்பேன் என்று தைரியமாகக் கூறிக் கொண்டிருந்தார்கள்.

நாட்டு விடுதலைக்குப் பின் இந்தியாவில் தங்கி விட்ட முஸ்லிம் லீக் தலைவர்கள் பலரும் கல்கத்தா நகரில் கூடி முஸ்லிம் லீகை கலைத்து விடலாம் என திட்டம் போட்ட பொழுது அதை நிறைவேற்ற விடாமல் தடுத்து நிறுத்தியது காயிதே மில்லத் அவர்களே. அதன் பின்னர் மௌலானா அபுல்கலாம் ஆஸாத்தும் கல்கத்தா நகரில் ஒரு மாநாட்டை கூட்டி முஸ்லிம் லீகை கலைத்து விடும்படி ஆலோசனை கூறினார். இதற்கு சில தினங்கள் கழித்து திருச்சியிலுள்ள முஸ்லிம் லீக் அன்பர்கள் பலரும் கூடி, இந்நாட்டில் முஸ்லிம் லீக் இருக்கத்தான் வேண்டும் என ஒரு தீர்மானம் நிறைவேற்றினோம். தமிழ்நாட்டிலேயே திருச்சியில்தான் முதன் முதலாக முஸ்லிம் லீக் நீடித்திருக்கவேண்டும் என தீர்மானம் போடப்பட்டது.

இந்த தகவல் எட்டியதும் காயிதே மில்லத் திருச்சிக்கு வந்து எங்களை நேரில் பாராட்டினார்கள். அதன் பின்னர் அடிக்கடி திருச்சிக்கு வருகை தந்து தாய்ச்சபையை செயல்படுத்துவது குறித்து திருச்சி லீக் நண்பர்களுடன் மணிக் கணக்கில் உரையாடல்கள் நடத்தியுள்ளார்கள்.

பொதுமக்கள் மத்தியில் முஸ்லிம் லீகின் அவசியத்தை எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் திருச்சியில் லீக் ஊழியர் கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அதில் பேசுவதற்காக திருச்சி V. S. முஹம்மது இபுராஹிம் சாகிப் M. L. A. அவர்களும் நானும் காயிதெ மில்லத்துடன் கூட்டம் நடக்கும் இடத்திற்கு சென்றோம். அப்பொழுது நாங்கள் மூவரும் ஹோல்டாலுடன்தான் சென்றோம். நாங்கள் கைது செய்யப்படுவோம் என்று எதிர்பார்த்து அதற்கு ஆயத்தமாகவே அக்கூட்டத்திற்குச் சென்றோம், ஆனால் நாங்கள் கைது செய்யப்படவில்லை. நண்பர்கள் மத்தியில் கொள்கை விளக்கப் பிரசங்கம் செய்துவிட்டுத் திரும்பினோம். சுதந்திரத்திற்குப் பிறகு முஸ்லிம் லீக் சார்பில் நடத்தப்பட்ட முதல் பொதுக் கூட்டமே அதுதான் என்று நான் கருதுகிறேன்.

**திருச்சி ஜனப் A. K. பாஷா சாகிப்**

# முதல் எம். பி.

சீன ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்துவதில் அரசாங்கத்திற்கு ஒத்தாசையாக இருக்கும் பொருட்டு தங்களின் மாதச் சம்பளத்தில் ஒருபங்கை காணிக்கையாகக் கொடுக்க முன்வந்துள்ள பாராளுமன்ற உறுப்பினர்களுள் நமது காயிதேமில்லத் அவர்கள்தான் முதன்மையானவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. யுத்த நிதிக்கு மாதம் 100 ரூ.பிடித்துக் கொள்ளும்படி 27—10—1962 அன்றே லோக்சபை சபாநாயகருக்கு தலைவரவர்கள் கடிதம் அனுப்பி விட்டார்கள்.

5-11-1962 உரிமைக்குரல்.

---

SARDAR HUKAM SINGH
SPEAKER, LOK SABHA



TELEPHONES
RESIDENCE 40307,46768
OFFICE 31824
20, AKBAR ROAD.

NEW DELHI Oct. 30, 1962.

Dear Mr. Mohd. Ismail

I have received your letter dated 27th of October, 1962, offering to have a cut of Rs.100/- from your monthly salary, as your contribution to the National war effort. I have noted your earnestness in this respect and congratulate you for the same.

Yours sincerely,

(Hukam Singh)

M. Muhammad Isail, M.P.
'Daya Manzil', Chromepet
Madras.

# நடுநிசியிலும் ஊழியருக்காகக் காத்திருந்த தலைவர்

காயிதே மில்லத் அவர்களை 1935 லிருந்து எனக்கு நன்கு தெரியும். 1936ம் ஆண்டு தஞ்சையில் முஸ்லிம் லீக் மாநாடு நடந்த பொழுது நான் அதில் பங்கு பெற்றேன். முதன் முதலாக மதராஸ் மாகாணத்தில் 1938ம் ஆண்டு முஸ்லிம் லீக் அமைக்கப்பட்டது. மஹ்மூது பாஷா சாகிப் மாகாணத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பொழுதும் மாகாண அளவில் கட்சியில் நான் அறிமுகமானவனே,

ஒரு நாள் ஊரில் இருந்து கொண்டிருந்தேன். நாகப்பட்டணம் யூசுப் சாகிப் மரைக்காயர் திடீரென வீட்டிற்கு வந்தார், பேசிக் கொண்டிருந்தோம். ''சரி கூட வா, டீ சாப்பிட்டு விட்டு வரலாம்'' என என்னை அழைத்துக் கொண்டு தெருவில் இறங்கினார். தெரு முனையில் ஒரு கார் நின்று கொண்டிருந்தது. அதில் ஏறும்படி கூறினார். நாகப்பட்டணம் மரைக்கானுக்கு முஸ்லிம் லீக் ஊழியர்களிடம் அவ்வளவு பிடிப்பு உண்டு, மரியாதை உண்டு, உரிமையுண்டு. அவர் சொன்னால் யாரும் தட்டமாட்டோம்.

கார் புறப்பட்டு விட்டது. நாகப்பட்டணத்துக்குத்தான் அழைத்துச் செல்கிறாரோ என்று நான் நினைத்துக் கொண்டேன். கார் எங்கேயோ போய்க் கொண்டிருந்தது. திருச்சி நோக்கி கார் சென்றது, 'என்ன மரைக்கான்? என்ன சமாச்சாரம்?' என்று அப்பொழுதுதான் கேட்டேன். அவரும் விஷயத்தை அப்பொழுதுதான் சொன்னார்.

''திருச்சி ஜமால் முஹம்மது கல்லூரியில் ஒரு பையனைச் சேர்க்க வேண்டும். அதற்காகத்தான் உன்னைக் கூட்டிச் செல்கிறேன்'' என்றார். கல்லூரிக்குச் சென்று பிரின்சிபாலைப் பார்த்தேன். மற்றும் நிர்வாகிகளையும் எனக்கு அறிமுகம் உண்டு. இடங்கள் அனைத்தும் பூர்த்தியாகி விட்டன. இடமே காலி இல்லையென்று எல்லோரும் கையை விரித்து விட்டார்கள். நான் அதிகமாக வற்புறுத்தவே உங்கள் தலைவர் காயிதே மில்லத்திற்காக இரண்டு இடங்கள் ஒதுக்கி வைத்திருந்தோம். அவர்களிடமிருந்து ஒரு சிபாரிசும் வரவில்லை. அந்த இடம் இருக்கிறது. வேண்டுமானால் தலைவர் அவர்களிடமிருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கி வந்தால் அந்த இடத்தைத் தர முடியும் என்று கூறினார்கள்.

உடனே நாங்கள் மதராஸுக்கு போன் செய்து காயிதே மில்லத்துடன் பேசினோம். விபரத்தைச் சொல்லவில்லை. திருச்சியில் இருந்து காரில் புறப்பட்டு உங்களைப் பார்ப்பதற்காக வருகிறோம் என்று மட்டும் கூறி விட்டுக் கிளம்பினோம். வழி நெடுக சரியான மழை. மதராஸிலும் மழை கொட்டிக் கொண்டிருந்தது, குரோம்பேட்டைக்கு நாங்கள் போய்ச் சேரும் பொழுது இரவு மணி ஒன்றரை. கார் சப்தம் கேட்டதும் அக்கடும் குளிரிலும், மழையிலும் ஒரு கம்பளியைப் போர்த்திக் கொண்டு காயிதே மில்லத் அவர்கள் கதவைத் திறந்தார்கள். அதாவது நாங்கள் வந்து கொண்டிருக்கிறோம் என்பதை எதிர்பார்த்து அந்த நடுநிசியிலும் மழையிலும் வராந்தாவில் ஒரு நாற்காலியில் அமர்ந்த வண்ணம் அவர்கள் தயாராகக் காத்திருந்தார்கள். இதை அறிந்ததும் எங்களது மனம் மிகவும் நெகிழ்ந்து விட்டது. சந்தர்ப்பம் தெரியாமல் அகால வேளையில் நாங்கள் போய்ச் சேருகிறோம். தொண்டனுக்காகத் தலைவர் எதிர்பார்த்து காத்திருக்கும் காட்சியை எங்களால் தயா மன்ஸிலில் காண முடிந்தது. இதைக் கண்டு நான் கண் கலங்கி விட்டேன்,

பின்னர், வந்த விபரத்தைக் கூறினோம். 'அப்படியா? அதற்கு ஏற்பாடு செய்து விடுவோமே' என்று ஆறுதல் மொழி புகன்றார்கள். தைரியம் கொடுத்தார்கள். உடனடியாக சிபாரிசு கடிதம் எழுத முற்பட்டார்கள். ஜமால் முஹம்மது கல்லூரியில் படிக்கவிரும்பிய மாணவனின் பெயரை அச்சமயம் கேட்டார்கள். நாகை யூசுப் மரைக்கான் அப்பொழுது ஒரு ஹிந்துப் பெயரைச் சொன்னார். எனக்கும் அப்பொழுதுதான் ஒரு முஸ்லிம் அல்லாத மாணவனுக்காக தலைவரவர்களுக்கு இவ்வளவு தொந்தரவுகள் கொடுக்கிறோம் என்ற விஷயம் தெரிய வந்தது,

காயிதே மில்லத் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை, சிபாரிசு கடிதம் எழுதிக் கொடுத்தார்கள். அதை எடுத்துக்கொண்டு உடனடியாகவே திருச்சி திரும்பினோம். அப்பையனுக்கு நமது கல்லூரியில் இடம் கிடைத்தது. அவன் கேட்ட குரூப்பும் கொடுக்கப்பட்டது.

சாதாரணத் தொண்டர்களாகிய நாங்கள் போன் மூலம் தங்களைப் பார்க்க வருகிறோம் என்று சொன்னதற்காக தலைவரவர்கள் எவ்வளவு தூரம் சிரமம் பாராது எங்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள் என்பதை எண்ணும் பொழுதெல்லாம் எங்களது மனம் பூரிப்பால் விம்மி விடுகிறது. அப்படிப்பட்ட தலைவரை இனி எங்கே காணப் போகிறோம்.

**(அடியக்கமங்கலம் ஹாஜி அப்துர் ரஜாக்ஷா காதிரி)**

# காயிதே மில்லத்தின்
# அரசியல் நிர்ணய சபை சொற்பொழிவுகள்



## 1

[இந்திய அரசியல் நிர்ணய சபை 9-12-1946-ம் தேதி முதல் 26-11-49-ம் தேதி வரை செயல்பட்டது. இச்சபைக்கு காயிதே மில்லத் அவர்கள், 20-7-48 அன்று, காலியான ஒரு இடத்தை நிரப்பும் பொருட்டு, தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 5-11-48 அன்று காயிதே மில்லத் தங்களது பதவிப் பிரமாணத்தை எடுத்துக் கொண்டார்கள். சுமார் ஓராண்டு காலம் இச்சபையில் அவர்கள் உறுப்பினராகப் பணியாற்றினுர்கள்.]

08-11-48 அன்று அரசியல் நிர்ணய சபையில் காயிதே மில்லத் பேசியதின் சுருக்கம் :

இந்த அரசியல் சாசனத்தை, அரசியல் உள்நோக்கு உடையது என சில நண்பர்கள் கூறுகிறுர்கள். நான் அப்படிக் கருதவில்லை. தீண்டாமை, ஆலயப்பிரவேசம் பள்ளிக்கூடங்களில் மதக் கல்வியை போதித்தல் போன்ற விஷயங்கள் குறித்து இந்த அரசியல் சாசனம் விதிகளை செய்துள்ளது என்பது வாஸ்தவமே. அதற்காக இந்த சாசனத்தை தயாரித்தவர்களை குற்றம் சொல்ல நான் தயாராக இல்லை.

### பள்ளிக்கூடங்களில் மதக்கல்வி

என்றுலும் மத போதனைகள் குறித்து எனது நிலையை தெளிவாக்கி விடுகிறேன். அரசு நடத்தும் பள்ளிக் கூடங்களில் மார்க்கக் கல்வி கற்றுக் கொடுக்க கூடாதென அரசியல் அமைப்பு விதி கூறுகிறது. கட்டாய ஆரம்ப கல்வித் திட்டத்தை அமல்படுத்தும் பொழுது நிலைமை என்னவாகும்? அரசாங்கம் நடத்தும் பள்ளிக்கூடங்களில் பயிலும் மாணவன் தனது பதினைந்தாம் வயது வரை மதக்கல்வி பெறுமலேயே வளர்ந்து விடுவான். அதாவது தனது பெற்றோர்கள் பின்பற்றும் மத சம்பிரதாயங்கள் என்னென்ன என்பதைக் கற்று கொள்ளாமலேயே அவன் தனது இளமையைக் கழித்து விட்டிருப்பான்.

இந்த நாட்டில் வாழும் குடிமகனுக்கு அவனது மதத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளும் உரிமையை மறுப்பது சரிதானு? மதச் சார்பற்ற நாடென நாம் பிரகடனப் படுத்தியுள்ளோம். அப்படி இருக்கும் பொழுது மதக் கல்வி கற்கக்கூடாது என அரசு ஏன் தடை விதிக்க வேண்டும்? தங்கள் குழந்தைகளுக்கு மதக் கல்வி கற்றுக் கொடுக்க விரும்பும் பெற்றோர்களின் உரிமையைப் பறிக்கலாமா? மக்கள் விரும்பாத வரையிலும் அரசாங்கம் மக்கள் மீது எந்த மதபோதனையையும் திணித்து விடமுடியாது. மக்கள் விரும்பினுல் மட்டுமே அவர்களுடைய மதத்தைப் பற்றிய போதனைகளை அவர்களது சிறுவர்களுக்கு கற்றுக் கொடுப்பதற்கு வசதிகள் செய்து கொடுக்க முடியும்.

### இட ஒதுக்கீடு வேண்டும்

சிறு பான்மையினர் பற்றி இங்கு விவாதம் நடந்த பொழுது அவர்களுக்கு இட ஒதுக்கீடு *(Reservation)* கூடாதென சிலர் கூறினுர்கள். இட ஒதுக்கீடு செய்வதனுல் பிரயோஜனம் ஒன்றுமில்லை என்றும் மக்களின்

நல்லெண்ணத்தை நம்பியே செயல் பட வேண்டும் என்றும் அவர்கள் சுட்டிக் காட்டினர்கள். நல்லெண்ணம் அவசியம் தான்; அது இல்லாவிட்டால் ஒன்றுமே நடக்காது தான். ஆனல், கற்பனையில் வாழ்ந்து பிரயோஜன மில்லை. அதற்கு எல்லாம் சில அடிப்படை வேண்டும்; ஆதாரம் வேண்டும்; ஜீவாதாரமான அடிப் படை உரிமைகள் மீதும், பாதுகாப்புகளின் மீதுமே, சிறு பான்மையினருக்கான சட்டத்தை உருவாக்க வேண்டும். வெறும் காற்றில் பறந்து கொண்டிருக்க முடியாது; முயற்சிக்கக் கூடாது.

இட ஒதுக்கீடு வேண்டுமென எனது சமுதாயம் கோருகிறது. எங்களது அபிலாஷைகளை இது முற்றிலும் திருப்திப் படுத்தவில்லை என்ற பொழுதிலும், குறைந்த பட்சம் இதுவேனும் இருத்தல் அவசியம். சட்டசபைக்குள் நுழைவது மட்டும் பிரச்சனை அல்ல, சட்டசபைகளுக்குச் செல்பவர்கள் எங்களது சமுதாயத்தின் உண்மையான பிரதிநிதிகளாக இருத்தல் அவசியம். தனித் தொகுதிகள் மூலம் தேர்தல் நடத்தப் பட்டாலேயே இம்மாதிரியான உண்மையான பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட முடியும்; சிறு பான்மையினரின் உண்மையான குரல் சட்ட மன்றங்களில் ஒலிக்க வேண்டுமானல் இதற்கு வேறு மாற்று வழி இல்லை. என்னுடைய அபிப்பிராயத்தில் மக்கள் மன்றங்களில் இடஒதுக்கீடு செய்வது நீடிக்கட்டும். ஆனல் இந்த இடங்களை தனித்தொகுதி தேர்தல் மூலமே நிரப்ப வேண்டும். தனித்தொகுதி என்றாலே சிலர் வகுப்பு வாதம் என்று நினைக்கிறார்கள். ஆனல் இந்நாட்டு மக்கள் பல சமுதாயங்களாகவும் பல ஜாதிகளாகவும் வாழ்ந்து வருகிறார்கள் என்ற உண்மையை நாம் மறைப்பதற்கில்லை.

### காங்கிரஸ் அமைச்சரின் பேச்சு

இங்கு ஒரு உதாரணத்தை குறிப்பிட விரும்புகிறேன். மதராஸ் சட்டசபையில் காங்கிரஸ் அமைச்சர் ஒருவர், பத்து தினங்களுக்கு முன்பு கூறிய ஒன்றை நினைவுப் படுத்தலாம் என நினைக்கிறேன். கல்லூரிகளில் மாணவர்களை வகுப்புவாரி பிரதிநிதித்துவ அடிப்படையில் சேர்ப்பது பற்றி சென்னை சட்டசபையில் ஒரு கேள்வி எழுப்பப்பட்டது.

''ஹிந்துக்களுக்குள்ளே வகுப்பு வாதத்தையும், பிரிவினையையும் ஏற்படுத்தும் வகையில் இந்த இடஒதுக்கீடுஇருக்கிறதே, இது நியாயமானது என்று அமைச்சர் கருதுகிறாரா'' என்று ஒரு உறுப்பினர் கேட்டார்.

அதற்கு கல்வி அமைச்சர் அளித்த பதிலாவது, ''இந்த அரசு இப்படி ஒரு திட்டத்தைக் கொண்டு வரவில்லை. ஏற்கனவே இது அமலில் இருக்கிறது. இந்நாட்டில் பல ஜாதிகளும், பிரிவுகளும் இருந்துதான் வருகின்றன. இந்நாட்டில் நிலவி வரும் யதார்த்தமான, உண்மையான நிலவரங்களை கவனத்தில் எடுத்துக்கொள்ளாதவனை ஒரு புத்திசாலி என்று கூற முடியாது. இங்கு மக்கள் பல ஜாதிகளில்தான் பிறக்கிறார்கள். அச் ஜாதிகளிலேதான் மரிக்கிறார்கள்.''

அத்துடன் அந்த அமைச்சர் நிறுத்திக் கொள்ளவில்லை. ''வகுப்பு வாதத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்று தான் அரசாங்கம் விரும்பியது. ஆனல் பல்வேறு சமுதாயத்தினரிடையே சம வாய்ப்புகளையும் சமசந்தர்ப்பங்களையும் உருவாக்கிக் கொடுக்காத வரையில், இந்த வகுப்புவாரி ஒதுக்கீடுகளை தடை செய்ய முடியாது.'' பெரும்பான்மை சமுதாயத்தை சார்ந்த காங்கிரஸ் தலைவர் ஒருவர், முக்கியமான இலாக்கா பொறுப்பினை வகிப்பவர், மேற்கண்டவாறு சட்டசபையில் கூறியுள்ளார்.

இதுதான் இன்று நாட்டில் உண்மையான நிலவரம். இந்நாட்டில் பல்வேறு சமுதாயங்களும், ஜாதிகளும் இருக்கின்றன என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அதில் ஒன்றும் தவறில்லை. அது நமது நாட்டிற்கு மட்டும் பிரத்யேகமாக ஏற்பட்ட ஒன்றல்ல. பல நாடுகளிலும் சிறுபான்மை, பெரும்பான்மை என்ற பிரச்சினை இருக்கத்தான் செய்கிறது.

### எகிப்து நாட்டின் உதாரணம்

நான் வாலிபனக இருந்த பொழுது, எகிப்து நாட்டில் உள்ள தேசிய இயக்கத்தைப் பற்றிய செய்திகளைப் பத்திரிகைகளில் படிப்பதுண்டு. அந்நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டு இருந்தது. அம்மக்கள் சுதந்திரம் வேண்டுமெனப் போராட்டம் நடத்தினர்கள். அரபு மக்கள் தான் அந்நாட்டில் பெரும்பான்மையினர். இவர்கள் அனைவரும் முஸ்லிம்கள். ஆனல் அந்நாட்டில் ''காப்திக்'' (Coptic) என்றொரு சிறு பான்மை சமுதாயம் வாழ்கிறது, இவர்கள் அனைவரும் கிறிஸ்தவர்கள்.

எகிப்து நாட்டின் தேசிய தலைவரான ஜக்லுல் பாஷா தலைமையில் அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்து மக்கள் போரரட்டம் நடத்தி வந்தார்கள். ஆட்சி செய்த அந்நியர்கள், மக்களுக்குள் பிரிவினையை ஏற்படுத்தும் எண்ணத்துடன் ''காப்திக்'' கிறிஸ்தவர்களைத் தூண்டி விடலானர்கள்.

எகிப்து மக்களை பிளவுபடுத்தும் தந்திரத்தைப் புரிந்து கொண்ட ஜக்லுல் பாஷா, ''காப்திக்'' கிறிஸ்தவத் தலைவர்களை அழைத்துப் பேசினர். உங்களுடைய கோரிக்கைகள் என்ன என்று கேட்டார். அவற்றை எழுதித் தருமாறு சொன்னர். அத்தலைவர்கள் தங்களுக்குள் கலந்து ஆலோசனை செய்து தங்களுடைய தேவைகளை எழுத்து வடிவத்தில் கொடுத்தார்கள்.

அதை வாசித்துப் பார்த்த எகிப்தின் தேசியத் தலைவர், சிறுபான்மைக்கு போதிய பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டுமென்றும், ஆனல் நீங்கள் சமர்ப்பித்துள்ள மகஜரில் அவை முழுவதுமாகக் காணப்படவில்லையே என்றும் குறைபட்டுக் கொண்டார். நீங்கள் கேட்டதைவிட அதிகமான உரிமைகளையும், பாதுகாப்புகளையும் தர நான் தயாராக இருக்கிறேன் என்று சொன்னர். எகிப்து நாட்டில் சிறுபான்மையினர் பிரச்சினை இவ்வாறாகத் தீர்க்கப்பட்டது. அது வரை ''காப்திக்'' கிறிஸ்தவர்களைத் தூண்டிவிட்டு வந்த-

அந்நியர்கள் வாய்அடைத்து போனார்கள். அந்நாட்டிற்கு சுதந்திரம் வழங்காமல் தீராது என்ற முடிவுக்கு வந்து விட்டார்கள். இன்று அந்நாட்டில் இவ்விரு பிரிவினர் களும் ஒரே மக்கள் போல வாழ்ந்து வருகிறார்கள்.

எனவே நமது நாட்டிலும் சிறுபான்மையினர் பிரச்சினையை நேர்மையாகவும் நிதானமாகவும் உணர்ச்சி வசப்படாமலும், குரோத எண்ணங்களுக்கு இடம் கொடுக்காத முறையிலும் அணுக வேண்டும் என்று இச்சபையை நான் கேட்டுக் கொள்கிறேன்.

## 2

*[அரசியல் நிர்ணய சபையில் நகல் அரசியல் அமைப்பு பற்றி விவாதங்கள் நடைபெற்ற பொழுது 19-11-48 அன்று காயிதே மில்லத் தெரிவித்த கருத்து.]*

நமது அரசியல் சட்டத்தில் மது விலக்கைக் குறித்து பிரஸ்தாபிக்கப்பட வேண்டும்; மது விலக்கை அமல் செய்வதை சட்டத்தில் விதியாக்க வேண்டும்; இது குறித்து மக்களுக்கிடையில் எந்த விதமான அபிப்பிராய பேதமும் இல்லை. மக்கள் அனைவரும் இதை பரிபூர்ண மாக ஆதரிக்கிறார்கள். மதுவிலக்கு காரணமாக வருவாய் குறையலாம் என்று சொல்லக் கூடும். இதை மக்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். அரசாங்க வருவாயை அதிகரிக்க வேறு உபாயங்களை தேடிக் கொள்ள வேண்டுமே தவிர மக்களின் நல் வாழ்க்கையில் கைவைக்கும் மதுவின் மூலம் அதைப் பெற நினைக்கக் கூடாது. மக்கள் அத்தகைய தியாகத்தை செய்ய சித்தமாகவே இருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சி பல வருடங்களாக மது விலக்குக் கொள்கையை தமது லட்சியமாகக் கொண்டு இந் நாட்டில் பிரச்சாரம் செய்து வந்துள்ளது. இதர கட்சிகளும் அதே கொள் கையை ஏற்று பிரச்சாரம் செய்து இருக்கின்றன.

## 3

### தனியார் சட்டம்

*[அரசியல் நிர்ணய சபையில் அரசியல் அமைப்பு நகல் குறித்து விவாதங்கள் நடைபெற்றபொழுது 23-11-48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :]*

ஒவ்வொரு சமுதாயத்தினரும் தங்களது தனியார் சட்டங்களை பின்பற்றும் உரிமையை பெற்றிருக்கிறார்கள். இது அவர்களுடைய அடிப்படையான, ஜீவாதாரமான உரிமையாகும். தனியார் சட்டத்தைப் பின்பற்றுவதை ''அடிப்படை உரிமைகள்'' பிரிவில் *(Fundamental Rights)* சேர்க்க வேண்டும். அது அவ்வளவு முக்கிய மான ஒன்றாகும். இந்தக் கருத்தில் தான் எனது திருத்தங்கள் இருக்கின்றன.

ஒவ்வொரு மக்கள் கூட்டமும் தங்களுக்கென ஒரு வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டுள்ளனர். சில நடைமுறைகள், பழக்க வழக்கங்கள், சில சம்பிர தாயங்கள் ஒவ்வொரு சமுதாயத்தினர்க்கும் தனித் தனியாக இருக்கலாம். இது அவர்களது கலாச்சாரத் தைப் பொறுத்தது. அவர்கள் பின்பற்றும் மார்க் கத்தைப் பொறுத்தது. எனவே தனியார் சட்டத்தை திருத்துவது என்பது ஒரு சமுதாயத்தினுடைய வாழ்க்கை நெறியில் குறுக்கிடுவதாகும். தலைமுறை, தலைமுறையாக ஆண்டாண்டு காலமாக ஒரு கூட்டத் தினர் பின்பற்றி வரும் பழக்க வழக்கங்களை மாற்றச் சொல்வது சரியல்ல.

தனியார் சட்டத்தை ஒவ்வொரு கூட்டத்தினரும் பின்பற்றிக் கொள்ளலாம் என்பது புதுமையானது அல்ல. பல நாடுகளிலும் அமல்படுத்தப்படும் ஒன்று தான் இது. ஐரோப்பிய நாடுகளில் கூட தனியார் சட்டங்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக யுகோஸ்லோவியா நாட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அந்நாட்டில் ''ஸர்வு''கள் *(Servs)*; குரோட்ஸ் *(Croats)*; சுலோவன்ஸ் *(Slovans)* என பல இனத்தவர்கள் ஒன்றாக சேர்ந்து வாழ்ந்து வருகிறார்கள். அவர்களுக் குள் சிறுபான்மையினரும் இருக்கிறார்கள். அந்நாட்டில் முஸ்லிம்களும் ஒரு சிறுபான்மையினராக! வாழ்ந்து வருகிறார்கள். முஸ்லிம்கள் தங்கள்' தனியார் சட்டத் தைப் பின்பற்றலாம் என்று யுகோஸ்லோவியா அரசாங்கம் அனுமதித்துள்ளது.

பொது சிவில் சட்டம் கொண்டு வர வேண்டுமென ஏன் அவ்வளவு அவசரப்படுகிறீர்கள்? எல்லோரும் ஒரே மாதிரியான நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டும் என எதிர்பார்ப்பது, நடைபெறக் கூடிய காரியமா?

இம்மாதிரி கட்டாயப்படுத்தப்பட்டால் நாட்டில் அதிருப்தியும் குழப்பமும் தான் ஏற்படும். அவரவர் சட்டங்களை அவரவர் பின்பற்றிக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டால் யாதொரு பிரச்சினையும் இல்லை. ஆவலாதியும் கிடையாது. ஒருவர் சட்டத்துடன் மற்றொரு சட்டம் மோதிக் கொண்டு நிற்காது. எனவே நாட்டில் ஒற்றுமையையும், சிநேக மனப்பான்மையை யும் பார்க்கும் நோக்கத்தில், மக்கள் விரும்பாத சட்டங் களை அவர்கள் கைகொள்ள வேண்டுமென்று வற்புறுத் தாமல் இருப்பது சாலச் சிறந்ததாகும். எனது திருத் தத்தை ஏற்றுக் கொள்ளும்படி அவையைக் கேட்டுக் கொள்கிறேன்.

# 4

*[நகல் அரசியல் அமைப்பு குறித்து விவாதம் 30-11-48 அன்று நடைபெற்றபொழுது காயிதே மில்லத் கூறியதாவது:]*

ஷரத்து 10ல் ''பின்தங்கிய'' *(Backward)* என்ற பதம் உபயோகப்படுத்தப் பட்டுள்ளது. இவ் வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்பது குறித்து அரசியல் சாசனத்தில் எந்த ஒரு இடத்திலும் விளக்கப் படவில்லை. பின் தங்கிய என்ற வார்த்தைக்குப் பலரும் பல விதமான அர்த்தங்கள் கொள்ளலாம். திட்டவட்டமாக அதற்கு இதுதான் அர்த்தம் என்று விளக்கப் படாத வரையில், இப்பதப் பிரயோகத்தினுல் எதிர் பார்க்கும் பலன் கிட்டாது என நான் நினைக்கிறேன்.

''பின்தங்கிய'' என்ற வார்த்தைக்குமதருஸ் மகாணத்தில் தனியான அர்த்தமே உண்டு. சில ஜாதிகளும், உபஜாதிகளும் பின்தங்கிய பிரிவை சார்ந்தவர்கள் என அம் மாகாணத்தில் அரசாங்கமே தீர்மானித்துள்ளது. சுமார் நூற்றி ஐம்பது ஜாதிகள் இந்த விதமாக பின் தங்கிய வகுப்பை சார்ந்தவைகளென முத்திரை குத்தப் பட்டுள்ளனர். இவர்கள் அனைவருமே ஹிந்து மதத்தைச் சார்ந்தவர்களே. பின் தங்கிய ஜாதியினரே அந்த மாகாணத்தில் பெரும்பான்மையினராகவும் உள்ளனர். ஷெட்யூல்டு வகுப்பினர் இப்பட்டியலில் சேர்க்கப்பட வில்லை. அவர்கள் ஜாபிதா தனியாக உள்ளது.

அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கும் ''பின் தங்கிய'' என்ற வார்த்தைக்கு மதருஸ் மாகாணத்தில் நடைமுறையில் உள்ள அர்த்தத்தை இங்கு கொள்வதா இல்லையா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்பு கிறேன். மதருஸ் மாகாணத்தில் 'பின்தங்கிய' என்ற பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள ஜாதிகள் அனைத்தையும் அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டுள்ள இந்த வார்த்தை குறிப்பிடுமா? குறிப்பாக முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், ஷெட்யூல்ட் ஜாதியினர் போன்றவர் களும் அரசியல் சாசனத்தில் காணப்படும் 'பின்தங்கிய' என்ற வார்த்தைக்கு லாயக்கானவர்கள் ஆவார்களா?

முஸ்லிம்களும் பின்தங்கிய நிலையிலே உள்ளனர். கிறிஸ்தவர்கள் நிலையும் அப்படித்தான், ஷெட்யூல்டு வகுப்பிரைப்பற்றி சொல்லவேண்டியதேயில்லை. இத் தகைய மக்களுக்கும் உத்தியோகங்கங்களில் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்காமலே இருக்கின்றன. எனவே உண்மையிலேயே பின்தங்கிய நிலையில் உள்ள முஸ்லிம் கள், கிறிஸ்தவர்கள், ஷெட்யூல்டு ஜாதியினருக்கு உரிய பிரதிநிதித்துவம் எல்லாத் துறைகளிலும் கிடைக்க வேண்டும் என்ற விதியை அடிப்படை உரிமைகள் பிரி விலேயே சேர்த்தால் நலமாக இருக்கும்.

பண்டிட் குன்ஸ்ரு ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்துள்ளார். இட ஒதுக்கீடு செய்வது பத்து ஆண்டு களுக்குமேல் நீடிக்கக் கூடாது, என அவரது திருத்தம் கூறுகிறது. பின்தங்கிய மக்கள் கடந்த பல நூற்ருண்டு களாகவே அந்த அவல நிலையில் உள்ளனர். அப்படிப் பட்டவர்களுடைய பிற்போக்கு நிலையை பத்து ஆண்டு களுக்குள் அகற்றிவிட முடியுமா? இதற்கென ஒரு குறுகிய கால வரம்பை நிர்ணயிப்பதன் மூலம் அந்த லட்சியத்தை அடைய முடியாது. எனவே இதற்கு ஒரு விதமான கால வரையறையும் நிர்ணயிக்கக் கூடாது. ''இட ஒதுக்கீடு'', ''பின்தங்கிய நிலை'' போன்ற பதங்கள் அரசியல் சாசனத்தில் பயன்படுத்தப்படும் பொழுது அதில் முஸ்லிம்களும் அடங்குவார்கள் என்பது சந்தேகத்திற்கு இடமில்லாதவாறு தெளிவுபடுத்தப் பட வேண்டும்.

இட ஒதுக்கீடு, விசேஷ உரிமைகள் போன்ற வார்த்தைகளை உபயோகப்படுத்தியதுமே இது வகுப்பு வாதமென கூக்குரல் எழுப்பப்படுகிறது. மக்கள் தங்கள் உரிமையைக்கோரும் போது அதை வகுப்பு வாதமென தட்டிக் கழிக்கக்கூடாது. உத்தியோகங்களில் அவர் களுக்கு போதிய இடம் கிடைப்பதில்லை. பொருளா தாரத்தில் முன்னேற முடிவதில்லை. சட்டமன்றங்களி லும் பிரதிநிதித்துவம் கிடைக்கவில்லை. இதுபோன்ற அவலநிலை நீடிக்கும்பொழுது, அவர்கள் அதிருப்தி அடையத் தானே செய்வார்கள்; உள்ளக் குமுறல் அவர்களுக்கு ஏற்படத்தானே செய்யும். ஐக்கியம், ஒற்றுமை என்று பேசும்போது அது உள்ளப் பூர்வமான தாக இருக்க வேண்டும். வெளித் தோற்றத்தில் மட்டும் ஒற்றுமையாக இருப்பது போலக் காட்டிக் கொள்வது நாட்டிற்கும் நல்லதல்ல, மக்களுக்கும் நல்லதல்ல.

மக்களுக்கு திருப்தி ஏற்பட வேண்டுமானுல், அவர்கள் மனநிறைவுடன் வாழ வேண்டுமானுல், இட ஒதுக்கீடு செய்வது மிக அவசியமாகும். உத்தியோகங் களிலும், சட்ட மன்றங்களிலும் அவர்களுக்கு போதிய அளவு பிரதிநிதித்துவம் கிடைக்கும் பொழுது மக்கள் மகிழ்ச்சியாகத்தான் வாழ்வார்கள். ஒற்றுமையும், ஐக்கியமும் தானுகவே மலர்ந்துவிடும்; வகுப்பு வாத பூச்சாண்டியைக் காட்டி இத்தகைய நல்ல சூழ்நிலைகளைக் கெடுத்து விட வேண்டாம்.

இட ஒதுக்கீடு என்பது ஏதோ நமது நாட்டில் மட்டும் தான் என்று எண்ண வேண்டாம். உலகில் பல நாடுகளும் இம்முறையைப் பின்பற்றுகின்றன. இம்முறையைப் பின் பற்றுவதன் வாயிலாக, அந் நாடுகளில் ஏற்றத் தாழ்வுகள் நீக்கப்பட்டிருக் கின்றன. அதே போல நமது நாட்டிலும் மக்கள் மத்தியில் மகிழ்ச்சியும், மன நிறைவும் ஏற்பட வேண்டு மானுல், அவர்களுக்குச் சேர வேண்டிய உரிய பிரதி நிதித்துவங்கள், அவர்களைச் சென்று அடைய வேண்டும்.

# 5

*[நகல் அரசியல் சாசனம் பற்றி விவாதங்கள் 1-12-48 அன்று நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது : ]*

ஒரு சமுதாயம் பின்பற்றும் மதத்தின் அடிப்படையில் எழுந்ததே தனியார் சட்டமாகும். தனியார் சட்டத்தை மாற்றுவது என்பது அச்சமுதாயம் பின்பற்றும் மதத்தில் குறுக்கிடுவதாகும். மத விவகாரங்களில் தலையிடாமல் தனியார் சட்டத்தை மாற்ற முடியாது.

திரு. முன்ஷி இந்த அவையில் பேசும்பொழுது முழுக்க, முழுக்க மதத்தை சார்ந்தவையே தனியார் சட்டங்கள் என்பதை ஒப்புக் கொண்டுள்ளார். ஆனால் அதே சமயம் எல்லா விவகாரங்களிலும் மதம் குறுக்கிடக்கூடாது என்றும் கூறுகிறார். மதம் என்றால் என்ன? அது எந்த அளவுக்கு மனித வாழ்க்கையில் அங்கம் வகிக்கலாம் என்ற விஷயங்கள் குறித்து கருத்து வேறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். ஏகோபித்த முடிவுக்கு ஒருவராலும் வரமுடியாது. மத விஷயங்களில் மக்கள் பல வகையான கருத்துக்களைக் கொண்டு இருக்கிறார்கள். இந்த விஷயத்தில் தேவைப்படுவது சகிப்புத் தன்மைதான். ஒருவருடைய கருத்துக்களை மற்றொருவர் ஏற்றுக்கொள்ளா விட்டாலும் அதை அவர் மதிக்க வேண்டும்; சகித்துக் கொள்ளவேண்டும். அவரவர் இஷ்டப்படி நடந்துகொள்ள அனுமதிக்க வேண்டும்.

உலகத்தில் பல மதங்கள் இருக்கின்றன. அவைகளுக்கு தனியார் சட்டம் கிடையாது. ஆனால் இந்து மதத்திற்கும், இஸ்லாத்திற்கும் தனியார் சட்டங்கள் இருக்கின்றன.

மத அடிப்படையில் உருவானதே இந்த தனியார் சட்டம். அவரவர் தனியார் சட்டங்களை அவர்களது விருப்பப்படி பின்பற்றிக் கொள்ள அனுமதிப்பதுதான் சிறந்ததாகும்.

டாக்டர் அம்பேத்கார் இந்த அவையில் பேசும் பொழுது ஒன்றை குறிப்பிட்டார். முஸ்லிம்களில் சிலர், இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தைப் பின்பற்றுவதில்லை என்று சொன்னார். முஸ்லிம்களில் ஒரு சில பிரிவினர் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு சில விஷயங்களில் தங்களது தனியார் சட்டத்தை விட்டு விட்டு, வேறு சில சம்பிரதாயங்களை நடைமுறைப் படுத்திக்கொண்டு இருக்கிறார்கள். இது உண்மை தான். ஆனால் யாரோ ஒரு சிலர் தங்களது தனியார் சட்டத்தை முழுவதுமாக பின்பற்றுவதில்லை என்று கூறி அதே நடைமுறையை முஸ்லிம்கள் அனைவரும் கடைபிடிக்க வேண்டும் என வற்புறுத்துவது நியாயம் தானா? சிலர் தங்களது தனியார் சட்டத்தை ஒத்துக் கொள்ளவில்லையானால், அவர்கள் இஷ்டம் போல் நடந்து கொள்ளட்டும். மற்றவர்களும் அவர்களைப் போலவே நடக்க வேண்டும் என எதிர்பார்ப்பது தவறு. அப்படித்தான் செய்ய வேண்டும் என அரசாங்கமும் சட்டம் வாயிலாக வற்புறுத்துவது அதிலும் கொடுமையானது.

**மாற்ற முடியாதவை**

ஒரு மதமும் அது விதிக்கும் சட்டதிட்டங்களும் மாற்ற முடியாதவை, மாற்றக் கூடாதவை. ஒரு மதம் பிடிக்கவில்லை என்றால் அதில் இருந்து விலகிக் கொள்ளலாம். ஆனால் அவர்களுக்காக மார்க்கத்தை மாற்றி அமைக்க முடியாது, திருத்தி அமைக்கமுடியாது. தங்களைப் போல மற்றவர்களும் குறிப்பிட்ட சில மத சம்பிரதாயங்களை கைவிட்டு விட வேண்டுமென வற்புறுத்தவும் முடியாது.

பசு அறுப்புத் தடை சட்டம் இருக்கிறது. இது மத சம்பந்தமுடையதா, இல்லையா என்ற கேள்வி எழுகிறது. ஒரு மதம் பசு அறுப்பது கூடாது எனக் கருதுவதால் அவர்களது தனியார் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறதா? அல்லது இந் நாட்டில் நடைமுறையில் இருக்கின்ற ஒன்றை அந்த தனியார் சட்டத்தில் சேர்த்து இருக்கிறார்களா? என்ற கேள்வி எழுகிறது. எந்த அடிப்படையில் பசுவதை தடுப்பு என்பது உருவாக்கப்பட்டிருந்த போதிலும் நாட்டில் உள்ள எல்லோருமே அந்த சம்பிரதாயத்தை பின்பற்ற வேண்டுமென சொல்கிறார்கள்; எதிர் பார்க்கிறார்கள்.

ஒரு சாராருடைய தனியார் சட்டம் அவர்களைதான் கட்டுப்படுத்தும், மற்றவர்கள்மீது அதைத் திணிக்க முற்படக் கூடாது.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:-** பாக்கிஸ்தான், ஆப்கானிஸ்தான் மற்றும் உள்ள நாடுகளில் பசுக்களை அறுக்கக் கூடாது என தடை விதிக்கப்பட்டு இருப்பது கனம் உறுப்பினருக்கு தெரியுமா?

**காயிதே மில்லத்:-** அப்படியொரு விதி அந்நாடுகளில் இருக்கவும் செய்யலாம், இல்லாமலும் இருக்கலாம். ஆனால் நான் இப்போது சொல்ல வருவது என்னவென்றால் இந்த பிரச்சனை குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தை பாதிக்கிறது என்பதாகும். அது மட்டுமல்ல, பசு அறுப்பதை தடை செய்யாத ஒரு சமுதாயத்தினரிடம் அவர்கள் அவ்வாறு செய்யக் கூடாதென, மற்றொரு சமுதாயத்தினர் தடுப்பது போன்றும் இது அமைகிறது. தங்களுடைய மார்க்கம் தடைசெய்யவில்லையாயினும் அவ்வாறு செய்வதில்லை என ஒரு சமுதாயத்தினர் ஒத்துக் கொண்டு இருக்கிறார்கள் என்பது வேறு விஷயம்.

ஆனால் தனியார் சட்டம் என்பது ஒரு சமுதாயத்தைப் பற்றியது மட்டுமாகும். மற்றொரு சமுதாயத்தினுடைய உரிமைகளில் அது குறுக்கிடாது. இந்த வித்தியாசத்தை புரிந்து கொள்ள வேண்டும். பெரும்பான்மை சமுதாயமும், சிறுபான்மை சமுதாயமும்

எந்த அளவுக்கு அவரவர் தனியார் சட்டங்களை கடை பிடிக்க முடிகிறது என்பதே கேள்வி.

ஹிந்துக்களில்கூட பலர், அவர்களது தனியார் சட்டங்களில் அரசாங்கம் குறுக்கிடு செய்வதை வர வேற்கவில்லை. இது குறித்து அவர்கள் அதிகாரிகளிடம் ஒரு மகஜரை சமர்ப்பித்தார்கள். எனவே மதத்தில் குறுக்கிடுவது என்பது முஸ்லிம்களை மட்டும் பொறுத்த தல்ல, ஹிந்துக்களையும் பொறுத்த விஷயமாகும். அவர் களும்கூட இந்த அரசாங்க குறுக்கீட்டை விரும்ப வில்லை. ஒரு சமுதாயத்தினருடைய தனியார் சட்டம் மற்றொரு சமுதாயத்தினுடைய விவகாரங்களில் தலையிடு வது இல்லை. எனவேதான் ஒவ்வொரு சமுதாயத் தினரும் அவரவர் தனியார் சட்டங்களைப் பின்பற்றிக் கொள்ள அரசாங்கம் அனுமதித்துவிட வேண்டும். இத்துறையில் யாதொரு குறுக்கீடும் கூடாது.

ஒவ்வொரு பிரஜையின் உரிமையும் முக்கியமானது; புனிதமானது. ஒரு சுதந்திர நாட்டின் ஆணி வேரே ''தனி மனித உரிமை''யில் தான் இருக்கிறது. ஆனால் நம்முடைய அரசியல் சாசனத்தில் தனி மனித உரிமை குறித்து ஒரே ஒரு இடத்தில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது. ஷரத்து 15-ல் மட்டுமே இந்த வாசகம் காணப்படு கிறது. நமது அரசியல் சாசனம் மிகவும் விரிவானது. ஏராளமான விதிகள் அடங்கியுள்ளது. அது ஒரு கன மான நூலைப் போல இருக்கிறது. வேறு எந்த ஒரு நாட்டி னுடையவும் அரசியல் சாசனமும், நம்முடைய அரசிய லமைப்பின் அளவிற்கு அவ்வளவு அதிக பக்கங்கள் உடையதாகயில்லை. ஆனால் இவ்வளவு பெரிய அளவு உள்ள நமது சட்டதிட்டங்களில் ஒரே ஒரு இடத்தில் மட்டுமே, ஜனநாயகத்தின் ஜீவநாடியான தனி மனித உரிமை குறித்து பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

## 6

### அரசியல் நிர்ணய சபையில் விவாதங்கள்
### 7-12-1948
### மதக்கல்வி

அரசாங்கம் நடத்தும் பள்ளிக்கூடங்களிலோ அல்லது அரசாங்க மானியம் பெறும் பள்ளிக் கூடங் களிலோ மார்க்க சம்பந்தமான பாட திட்டங்களை கற்றுக் கொடுக்கக்கூடாது என ஷரத்து 22 கூறுகிறது.

மத சார்பற்ற அரசாங்கம் மதக்கல்வி விஷயங்களில் தலையிட வேண்டியதில்லை, இது அனுவசியமானது என நான் கருதுகிறேன். இந்த விஷயத்தில் அரசு நடு நிலைமை வகித்து விட்டுப் போகலாம்.

ஒரு மதத்தைச் சேர்ந்த மாணவனை மற்றொரு மதத்தைப்பற்றிய கல்வியை கற்கும் படி யாராவது கட்டாயப் படுத்தினால், இவ்விஷயத்தில் தலையிட அரசாங்கத்திற்கு உரிமை இருக்கிறது. மதச்சார்பற்ற அரசாங்கத்தின் பணியே இதுதான். ஆனால் ஒரு மதத்தைச் சார்ந்த மாணவனுக்கு அவனுடைய மதத்தைப் பற்றிய பாடங்கள் கற்றுக் கொடுப்பதை அரசாங்கம் தடை செய்யுமானால் இதை என்ன என்பது? மத சார்பற்ற அரசுக்கு இது அழகாகுமா? நான் கொடுத்து இருக்கும் திருத்தம் இக்குறையை நீக்கும் வகையில் அமைந்துள்ளது. எந்த ஒரு மாணவ னும் அவன் சாராத மதத்தைப் பற்றி கல்வி கற்கும் படி கட்டாயப்படுத்தக் கூடாது என்பது எனது திருத் தத்தின் குறிக்கோளாகும்.

உலகில் பல நாடுகளிலும் மதக் கல்வி கற்றுக் கொடுக்கப்படுகின்றது. மதச்சார்பற்ற மேலை நாடு களில்கூட மதக் கல்வி போதிப்பது தடுக்கப்படவில்லை. மதக் கல்வி போதிப்பதை கட்டாய விதியாக்கியுள்ள நாடுகளும் பல இருக்கின்றன. எனவே மதக்கல்வி போதிக்கும் விஷயத்தில் அரசாங்கம் நடுநிலை வகித்து விடலாம் என்பதே எனது கருத்தாகும்.

## 7

### அரசியல் நிர்ணய சபையில் விவாதங்கள்
### 7-12-1948
### ஐரோப்பாவை பாரீர்!

கல்விக் கூடங்களில் பள்ளி சிறுவர்களுக்கு மதக் கல்வியை கற்றுக் கொடுக்கக் கூடாதென சட்டம் இயற்ற, முயன்று கொண்டு இருக்கிறீர்கள். இது சரி யல்ல. ஒரு சமுதாயத்தினர் தங்களது குழந்தைகளுக்கு தாங்கள் பின்பற்றும் மார்க்கம் பற்றிய அறிவை பள்ளிக் கூட நேரங்களில் சொல்லிக் கொடுக்க உரிமை வேண்டும்; பள்ளிக்கூட நேரங்கள் அல்லாத காலத்திலும் மதக் கல்வி கற்றுக் கொடுக்க உரிமை வேண்டும். அந்தந்த இடங்களுக்கும், சூழ்நிலைகளுக்கும் தகுந்தவாறு, கல்வித் துறை அதிகாரிகளை கலந்தாலோசனை செய்து மதக் கல்வியை கற்றுக் கொடுக்கும் நேரத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம். அவ்வாறு செய்ய ஒவ்வொரு சமுதாயத் தினருக்கும் உரிமை வேண்டும்.

ஆரம்பப் பள்ளிக் கூடங்கள் அனைத்துமே சர்க்காரே நடத்த வேண்டும் என ஒரு திட்டம் உள்ளது. சர்க்கார் நடத்தும் பள்ளிகளில் மதக் கல்வியை போதிக்க கூடா தென்றும் சொல்கிறீர்கள். அப்படியானால் பதினான்கு அல்லது பதினைந்து வயதுவரையுள்ள ஒரு மாணவனுக்கு, தான் பின்பற்றும் மார்க்கத்தைப் பற்றிய அறிவு அறவே இல்லாது போகக்கூடும்! தங்களது குழந்தை களுக்கு அவர்களது பெற்றோர்கள் தங்களின் இல்லங் களில் வைத்தே மதக் கல்வியைச் சொல்லிக் கொடுக்க லாம் அல்லது பள்ளி நேரங்கள் அல்லாத வேளைகளில் அப்படி செய்யலாம் என்று நீங்கள் இதற்கு சமாதானம் கூற முற்படலாம்.

ஒரு மணி நேரமோ அல்லது இரண்டு மணி நேரமோ இப்படிக் கற்றுக் கொடுப்பதன் வாயிலாக அம்மாணவர் களுக்கு போதிய அளவு மார்க்கக் கல்வியை புகட்டி விட

முடியாது. இதெல்லாம் நடைமுறை சாத்தியமானவை அல்ல. பள்ளி நேரங்களுக்கு வெளியில், இளம் பாலகர்களுக்கு அதிகப்படியான பாடங்களை கற்றுக் கொடுப்பது நல்லதல்ல; அதிக சுமையை ஏற்றக் கூடாது; அக் குழந்தைகள் அவற்றைத் தாங்க மாட்டார்கள்.

மதக் கல்வி போதிப்பது குறித்து பாரா முகமாக இருக்காதீர்கள். மாற்றுந்தாய் மனப்பான்மையுடன் நடந்து கொள்ளாதீர்கள். மதக் கல்வியை சொல்லிக் கொடுப்பதன் வாயிலாக வகுப்பு வாதம் வளர்ந்து விடுமோ என்று கற்பனை செய்து கொள்ளாதீர்கள். நாட்டில் நடக்கும் கலவரங்களுக்கு மதம் காரணம் அல்ல. அதற்குள்ள காரணங்கள் வேறு. அவற்றை கண்டு பிடித்து அவற்றை நீக்க முயற்சிக்க வேண்டுமே தவிர, இல்லாத ஒன்றைப் பற்றி கற்பனை செய்து கொண்டு இருக்காதீர்கள்.

ஐரோப்பியர்கள் மதக் கல்வியை கற்றுக் கொடுப்பதில், சிறிது மெத்தனம் காட்டினார்கள். ஆனால் இரண்டாம் உலகப் போருக்கு பின்னர் நிலைமை என்ன தெரியுமா? மதத்தின் பக்கமாக மக்களைத் திருப்பிவிட வேண்டும் என ஐரோப்பிய அறிஞர்கள் இன்று எழுதி வருகிறார்கள். தங்களது குழந்தைகளுக்கு மதக்கல்வி போதிக்காததினாலேயே இந்த குழப்பங்கள், எல்லாம் ஏற்பட்டன என்று அங்கு உள்ள சிந்தனையாளர்கள் கண்டு பிடித்துள்ளனர். இப்பொழுது ஆரம்பப் பள்ளிக் கூடங்களில் மதக் கல்வியை கட்டாய பாடமாக போதிக்க வேண்டும் என ஐரோப்பிய நாடுகள் திட்டங்கள் தீட்டி வருகின்றன.

ஒரு சாரார் மதக் கல்வி போதிக்க வேண்டாம் என சொல்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். அது அவர்கள் இஷ்டம். அதற்காக மற்றவர்களும் தங்கள் குழந்தைகளுக்கு மதக்கல்வி கற்றுக் கொடுக்கக் கூடாதென தடை செய்யலாமா? மற்றவர்களுடைய உரிமைகளில் குறுக்கிடலாமா? இது ஜன நாயகம் ஆகுமா?

ஒரு சமுதாயம் சீராகவும், நிலையாகவும் வாழ வேண்டுமானால் அதற்கு ஒரு நல்ல பின்னணி இருக்க வேண்டும். நல்லொழுக்கம் பேணப்பட வேண்டும், நல்ல பழக்க வழக்கங்களை மக்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். மதத்தின் வாயிலாக மட்டுமே இவற்றையெல்லாம் செய்ய முடியும். மதத்தை உதறித் தள்ளி விட்டு வேறு முறைகளின் வாயிலாக நல்லொழுக்கத்தையும், நற்பண்புகளையும் வளர்த்து விடலாமென இந்த உலகம் முயற்சிக்கத்தான் செய்தது. அதனால் மாற்று வழியைக் கண்டு பிடிக்க முடியவில்லை. மதத்திற்கு 'பகரமாக' வேறு வழிகளையும் அவர்களால் சிருஷ்டிக்க முடியவில்லை. மக்களின் வாழ்க்கையோடு ஒன்றிப் போனது மார்க்கம் என்பதை மேலை நாட்டினர் இன்று கண்டு கொண்டார்கள். எனவே நமது சிறுவர்களுக்கு மார்க்கக் கல்வியை பள்ளிக்கூட நேரத்திலோ, அதை ஒட்டிய நேரங்களிலோ கற்றுக் கொடுக்க அரசாங்கம் அனுமதிக்க வேண்டும், அதற்கு வழிமுறைகள் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## 8

### அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் 3-1-49 விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை

பாராளுமன்ற மேலவைக்கு நான்கு நபர்களை நியமனம் செய்து கொள்ளலாம் என விதி செய்துள்ளீர்கள். பொது ஜன வாக்கெடுப்பு மூலம் தேர்ந்தெடுக்க முடியாமல் போகும் சிலருக்கு அந்த அவையில் பிரதிநிதித்துவம் கிடைக்க வேண்டும் என்பதற்காகத்தானே இப்படி செய்யப்பட்டுள்ளது. இந்த நேரத்தில் மற்றொரு யோசனையையும் நான் கூற விரும்புகிறேன். விகிதாச்சார பிரதிநிதித்துவ தேர்தல் முறை மூலமாகவும் சில உறுப்பினர்கள் அந்த அவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஏன் என்றால் சில சமுதாயங்களினால் தேர்தல் மூலமாக அவைக்குள் நுழையவே முடியாது. மிகச்சிறு பான்மையினராக உள்ளவர்கள், வயது வந்தோர் வாக்கெடுப்புமுறை மூலமாக, வெற்றி பெற முடியாது. எனவே விகிதாச்சார பிரதிநிதித்துவ தேர்தல் முறை அனுஷ்டிக்கப் படுமானால் சிறுபான்மை சமுதாயத்தைச் சார்ந்தவர்களும், ஓரிரு ஸ்தானங்களைப் பெற்றுக் கொள்ள முடியும்.

பலதரப்பட்ட வகுப்பினர் இருக்கும் இந்நாட்டில் ஒருவரையொருவர் தழுவியும் ஆதரித்தும் வாழ வேண்டுமானால் இத்தேர்தல் முறையே சிறந்ததாகும். இத் தேர்தல் முறை மக்களை ஒன்றுபடுத்தும்; பிளவு படுத்தாது. எனவே நகல் அரசியலமைப்புக் குழுவின் தலைவர் இதற்கான திருத்தத்தை தமது சிபாரிசில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

## 9

### காமன் வெல்த் கூட்டமைப்பில் இணைந்து இருப்பது பற்றிய விவாதம் 17-5-49

பாரதப் பிரதமர் முன்மொழிந்த தீர்மானத்தை நான் முழு மனத்துடன் ஆதரிக்கிறேன். பழமையானவை பற்றியும் கசப்பான அனுபவங்களையும் பற்றியும், வீணாக நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. இப்பொழுது நாம் ஒரு சுதந்திர நாடு. இதை ஒரு குடியரசாக விரைவில் அறிவிக்க இருக்கிறோம்.

நம்முடைய புதிய நிலைமையைப் புரிந்து கொண்டு காமன்வெல்த் கூட்டமைப்பில் இந்நாட்டையும் சேர்த்துக் கொள்ள, அதனுடைய இதர உறுப்பினர்கள் தயாராக இருக்கும் பொழுது, நாம் ஏன் தயக்கம் காட்டவேண்டும், பின்வாங்க வேண்டும்? நமது பிரதமர் கூறியது போல முழு சுதந்திரம் பெற்ற சுதந்திர நாடு என்ற ஹோதாவில்தான் அந்த கூட்டவையில் நாம் அங்கம் வகிக்கப் போகிறோம்.

காமன் வெல்த்தில் இந்தியா இருக்கக் கூடாதென சில நண்பர்கள் இங்கு கூறுகிறார்கள்.

நம்மை அடிமைப்படுத்திய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தலைவரான அந்நாட்டு மன்னர், காமன் வெல்த் கூட்டமைப்பின் தலைவராகவும் இருக்கிறார். பழைய வரலாற்றை மனதில் கொண்டு நாம் அதில் இருக்கலாமா என சில நண்பர்கள் கேட்கிறார்கள். பிரிட்டிஷ் மன்னர் ''மன்னர்'' என்ற ஹோதாவில் அந்த கூட்டமைப்பில் இல்லை. கூட்டமைப்பின் தலைவர் என்ற முறையில் தான் அவர் இருக்கிறார். அது ஒரு பொம்மைப் பதவி; எனவே இந்த விஷயத்தைப் பெரிது படுத்திக் கொண்டு நாம் அதில் சேராதிருப்பது நல்லதல்ல.

இன்றைய உலகில் எந்த ஒரு நாடும் தனித்து இருப்பதற்கு இல்லை. பல நாடுகளுடனும் சேர்ந்து கூட்டாகவே செயல்பட வேண்டிய கால கட்டத்தில் உலகம் இருக்கிறது; நாமும் இருக்கிறோம். காமன் வெல்த் கூட்டமைப்பில் நாம் அங்கம் வகிப்பது பல வழிகளிலும், நமக்கு அனுகூலமானதாகவே அமையும். நாம் ஒரு சுதந்திர நாடு. நரம் ஒன்றையும் இழந்து விடப்போவது இல்லை. அக்கூட்டமைப்பு முறையாக செயல்பட்டால் அதில் தொடர்ந்து இருக்கலாம்; எப்பொழுது பிடிக்கவில்லையோ அன்று விலகிக் கொள்ளலாம். இதில் எந்த ஒரு ஆட்சேபனையும் இல்லை. எனவே காமன் வெல்த் கூட்டமைப்பில் இந்தியா இருப்பதை நான் வரவேற்கிறேன்.

# 10

## துணைக்குழு தயாரித்த சிறுபான்மையினர் பற்றிய அறிக்கை மீது நடந்த விவாதம் :- 25-5-49

## தனித் தொகுதி அவசியம்

தனித்தொகுதி தேர்தல் முறை இனி தங்களுக்கு தேவையில்லை என சிறுபான்மை மக்களே உணர்ந்து கொண்டார்கள் என்று துணைக்குழு அறிக்கை கூறுகிறது. இக்கூற்றை நான் மறுக்கிறேன். இந்த அவையில் உள்ள முஸ்லிம் உறுப்பினர்கள் சிலர் அந்தக் கருத்துக்கு உடன்பாடு உடையவர்களாக இருக்கலாம். ஆனால் இந்நாட்டில் வாழும் முஸ்லிம்களின் கருத்து அது என சொல்லமுடியாது.

இந்த உறுப்பினர்கள் தனித் தொகுதி மூலமே இந்த அவைக்கு தேர்ந்து எடுக்கப்பட்டார்கள். முஸ்லிம் வாக்காளர்கள் அவர்கள் மீது வைத்து இருந்த நம்பிக்கைக்கு பாத்திரமானவர்களாக அவர்கள் நடந்து கொள்ளவில்லை. சிறுபான்மை மக்களின் உண்மையான பிரதிநிதிகளாக இன்று அவர்கள் இல்லை. எனவே துணைக்குழுவின் கூற்று சரியானதல்ல.

முஸ்லிம் சமுதாயம் தங்களுக்கு ''ரிசர்வேசன்'' (*Reservation*) இருக்க வேண்டும் என்றே விரும்புகின்றது. தனித்தொகுதி தேர்தல் முறை மூலமாக மட்டுமே தங்களது உண்மையான பிரதிநிதிகள் சட்ட மன்றங்களிலும், பாராளுமன்றத்திலும் இடம் பெற முடியும் என அவர்கள் நம்புகிறார்கள். முஸ்லிம் சமுதாயத்தின் ஒரே பிரதி நிதித்துவ சபை முஸ்லிம்லீக் மட்டுமே. கடந்த ஓராண்டிற்குள்ளாக இந்த அவையில் முஸ்லிம்களுக்கு தனித்தொகுதி முறையே வேண்டும் என முஸ்லிம்லீக் உறுப்பினர்கள் பல தடவை வாதாடி இருக்கிறார்கள். உண்மை நிலவரம் இதுதான். ஆனால் முஸ்லிம்களே தங்களுக்கு தனித்தொகுதி வேண்டாமெனக் கருதுகிறார்கள் என்று இங்கு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை கூறுவது விந்தையாக உள்ளது!

ஐரோப்பிய நாடுகளிலும் சிறுபான்மையினர் இருக்கிறார்கள். பெரும்பாலும் அவர்கள் மொழி அடிப்படையிலும், இன அடிப்படையிலும் உள்ள சிறு பான்மையினரே. ஆனால் நமது நாட்டில்தான் மத அடிப்படையிலான சிறுபான்மையினர் கணிசமாக உள்ளார்கள். நம் நாட்டு மக்களுடைய வாழ்வு மத அடிப்படையில் அமைந்ததாக உள்ளது. ஒரு மனிதனின் வாழ்க்கையில் எல்லா அம்சங்களிலும் மதம் பிரதிபலிக்கிறது. மதத்தை அளவுகோலாக வைத்தே இங்கு மனிதன் கணக்கிடப்படுகிறான். ஷெட்யூல்டு வகுப்பினர் கூட மத அடிப்படையில்தான் தனிக் கூட்டமாகக் கருதப்படுகிறார்கள். ஒருவர் முஸ்லிமாக இருக்கலாம்; மற்றவர் ஹிந்துவாக இருக்கலாம். அவர்களைப் பார்த்து மக்கள் அப்படித்தான் அழைக்கிறார்கள். ஆனால் அதற்காக ஒருவர் கழுத்தை மற்றொருவர் பிடித்துக் கொண்டு சண்டை பிடித்துக் கொண்டு நிற்பதில்லை. மத வித்தியாசம் இருந்தபோதிலும் அவர்கள் சௌஜன்னியமாகவே வாழ்கிறார்கள்.

ஒரு நாட்டில் ஒரு மதத்தைப் பின்பற்றுகிறவர்களே வாழ வேண்டும் என்று சொல்லமுடியாது, ஒரே கலாச்சாரத்தை பின்பற்றுகிறவர்கள்தான் வாழ வேண்டும் என்றும் சொல்லமுடியாது. பல தரப்பட்டவர்களும் ஒரு நாட்டில் வாழத்தான் செய்வார்கள்.

உலக நாடுகளிலெல்லாம் அப்படித்தான் இருக் கின்றது. இன்று தேவைப்படுவது என்னவென்றல் ஒருவர் மற்றெருவரைப் புரிந்து ஒற்றுமையாகவும், ஐக்கியமாகவும் வாழ வேண்டும் என்பதே.

தனித்தொகுதி இதுவரை நாட்டில் இருந்ததினுல் தான் குழப்பங்கள் உண்டாயின எனக் கூறுகிருர்கள். அது உண்மையல்ல. இந்நாட்டில் நீண்ட நெடுங்கால மாக தனித்தொகுதி முறை அமலில் இருந்து வந்திருக் கிறது. தனித்தொகுதி மூலம் பல தடவை தேர்தல்கள் நடத்தப்பட்டு மக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள். தேர்தல் காலங்களில் எவ்விதமான குழப்பங்களும் ஏற் படவில்லையே. குழப்பங்களுக்கு தேர்தல் முறைதான் காரணம் என்றல் தேர்தல்கள் நடைபெறும் சமயங் களில் அல்லவா கலாட்டாக்கள் எழுந்திருக்க வேண்டும். அத்தேர்தல் மூலமாகத்தான் சிறுபான்மை சமுதாயத் தினரின் உண்மையான பிரதிநிதிகள் தேர்ந்து எடுக்கப் பட்டார்கள். போலந்து யூகோஸ்லாவியா பல்கேரியா, அல்பேனியா, கிரீஸ், துருக்கி போன்ற நாடு களில் சிறுபான்மையினருக்கென விசேஷ பாதுகாப்புக்கள் அளிக்கப்பட்டு உள்ளன.

**அனந்தசயனம் அய்யங்கார்**

அந்த நாடுகளில் எங்காவது தனித்தொகுதி தேர் தல் முறை உள்ளதா?

**காயிதேமில்லத்**

அல்பேனியாவில் இம்முறை கொள்கையளவில் ஒப்புக் கொள்ளப்பட்டு இருந்தது. அந்நாட்டில் உள்ள மொத்த ஜனத்தொகையே பத்து இலட்சம் தான். தங்களுக்குப் போதிய பாதுகாப்புக்கள் இருக்கின்றன எனக்கூறி அம்மக்களே இந்த முறையை வற்புறுத்த வில்லை. இதர நாடுகளிலும் சிறு பான்மையினர் என்னென்ன பாதுகாப்புகளைக் கேட்டார்களோ அவற்றையெல்லாம் அந்த அரசாங்கங்கள் அளித் துள்ளன.

இன்று நமது நாடு சுதந்திரநாடு, அந்நிய ஆதிக் கத்திலும் இல்லை. அடிமைப்பட்ட நிலையிலும் இல்லை. வெளி நாட்டினர் தங்களது சௌகரியத்திற்காகவே இந்த தேர்தல் முறையைப் புகுத்தினுர்கள் என்று சொல்லப்பட்டது. இத்தேர்தல் மூலம் சமுதாயத்தின் உண்மையான பிரதிநிதிகள் மக்கள் மன்றங்களில் இடம் பெற்றுர்கள் என்பதை மறுக்க முடியாது. எனவே இம் முறை சிறுபான்மையினருக்கு நன்மையைத் தான் தந்துள்ளது. பலதரப்பட்ட மக்களையும் ஒன்று படுத்து வதற்கு இத்தேர்தல் முறை வழி வகுத்துக் கொடுத் துள்ளது.

ஷெட்ல்யூல்டு வகுப்பினருக்கு ரிசர்வேசன் வழங்கப் பட்டுள்ளது. பாதுகாப்பு அவர்களுக்கு வேண்டியது தான். பன்னெடும் காலமாகவே அவர்கள் அடக்கி ஒடுக்கப்பட்டு இருக்கிருர்கள். அவர்களுடைய பிரதி நிதிகள் மக்கள் மன்றங்களில் இடம் பெற வேண்டும் என்பதற்காக அவர்களுக்கு இந்தப் பாதுகாப்பு வழங்கப் பட்டுள்ளது.

அதே பாதுகாப்பு தான் முஸ்லிம்களுக்கு வேண்டு மென நாங்கள் கேட்கிருேம். இந்நாட்டில் நாங்கள் மகிழ்ச்சியாகவும், ஒற்றுமையுடனும், சுபிட்சமுடனும் வாழ இந்த முறை அடிகோலும் என்பதற்காகவே கேட்கிருேம். சில சமயங்களில் பெரும்பான்மை சமு தாயத்தினருக்கும், சிறுபான்மை சமுதாயத்தினருக்கு மிடையிலும் அபிப்பிராய பேதங்கள் எழலாம். அவற் றைப் பேசி தீர்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

முஸ்லிம் உறுப்பினர்களை முஸ்லிம் மக்களே தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம் என்றல் இது வகுப்பு வாதம் இல்லையா என்கிருர்கள். வகுப்பு வாதம் என்றல் என்ன? அப்பதத்திற்கு நீங்கள் என்ன அர்த்தம் கொள் கிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. வகுப்பு வாதம் என்ற வார்த்தைக்கு அர்த்தம் சொல்வது மிக கஷ்டம் என இங்கு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையே சொல்கிறது. அர்த்தம் சொல்ல முடியாத ஒரு வார்த் தையை முஸ்லிம்கள் மீது சுமத்தி பழி தீர்த்துக் கொள் வதா?

நான் ஒரு முஸ்லிம் என்று சொன்னுல் அதை வகுப்பு வாதம் என்கிறீர்கள். நான் ஒரு கிறிஸ்தவர் என்று சொன்னுல் அது வகுப்பு வாதமா? இல்லையா? இந்நாட்டில் பல வகையான சிறுபான்மையினர் வாழத் தான் செய்கிருர்கள். இந்நாட்டில் எந்த வகையான தேர்தல் முறை கையாளப்பட்டாலும் அது வகுப்புவாத அடிப்படையில் தான் செயல்படும். ஒவ்வொரு சமு தாயத்தினரும் தங்களது சமுதாயத்தை சேர்ந்தவர் களுக்கே வாக்கு அளிக்கிருர்கள். இது தான் நடந்து கொண்டு இருக்கிறது. எனவே முஸ்லிம்கள் நெடுங் காலமாக அனுபவித்து வரும் தனித் தொகுதி தேர்தல் முறை மேலும் நீடிக்க வேண்டும் என கேட்டுக் கொள் கிறேன்.

**திரு $D$ தாஸ்:** உறுப்பினர் பேசிக் கொண்டே இருக்கிருரே...இதற்கு ஒரு அளவில்லையா? விவாதங் களை நாம் சீக்கிரமாக முடிக்க வேண்டும்.

**சபாநாயகர் :-** இது முக்கியமான திருத்தமாக இருந் ததினுல் உறுப்பினருடைய பேச்சில் நான் குறுக்கிட வில்லை. என்றலும் கடிகாரத்தை அனுசரித்து அவர் தமது பேச்சை முடித்துக் கொள்ள வேண்டும்.

**காயிதே மில்லத் :-** இந்த முக்கியமான பிரச்சினை குறித்து சிறு பான்மையினர் சார்பாக இந்த அவையில் வாதாட எனக்கு கிடைத்துள்ள கடைசி சந்தர்ப்பம் இதுதான். எனவே......

*R. K.* **சித்வா :** இன்னும் பல உறுப்பினர்கள் பேச வேண்டியது இருக்கிறது. ஏற்கனவே இந்த உறுப்பினர் அதிக நேரம் பேசி விட்டார்.

**மற்றெரு உறுப்பினர் :** தமது நிலைமையை விளக்க அவருக்கு மேலும் சிறிது அவகாசம் கொடுங்கள்.

**சபாநாயகர் :-** அதனுல் தான் நான் இவ்வளவு தூரம் அனுமதித்திருக்கிறேன்.

**காயிதே மில்லத் :** எனக்கு கொடுக்கப்பட்ட வாய்ப்புக்காக நான் தங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இரண்டு மணி நேரம் பேசினுல் கூட இந்த முக்கியமான விஷயத்தை பேசித் தீராது.

இங்கு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையில், இந்திய அரசியலில் ''விஷத்தை'' புகுத்திக் கொண்டிருந்த தனித்தொகுதி முறை அகற்றப்படுகிறது என்று சொல்லப்பட்டுள்ளது. தனித்தொகுதி ''விஷம்'' என வர்ணிக்கப்பட்டுள்ளது. தடித்த வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. வசை மொழிகளை அவிழ்த்து விட்டால் அது சரியான வாதங்களாக முடியாது. தனித்தொகுதி அகற்றப்பட்டு விடும் என மக்கள் தெரிந்து தான் இருக்கிறார்கள். என்றாலும் அமைதியாக இருக்கிறார்கள். ஏன்? இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் தங்களுக்கு நியாயம் கிடைக்குமென அவர்கள் நம்பிக்கை வைத்துள்ளார்கள். இந் நாட்டு மக்களின் மீதுள்ள நல்லெண்ணத்தின் காரணமாக அவர்கள் தங்களது உணர்ச்சிகளையும், கருத்துக்களையும், அடக்கி வைத்துகொண்டிருக்கிறார்கள்.

நான் எப்பொழுதும், சமாதானத்தையும், அமைதியையும் விரும்புகிறேன். விவகாரங்களை வளர்த்துக் கொண்டிருப்பவன் அல்ல. இங்கு உள்ள பலருக்கும் இது தெரிந்த விஷயமே என்றாலும், இந்த அவையில் நான் கூறியதெல்லாம் என் சமுதாயத்தினுடைய கருத்துக்களாகும். சிறுபான்மை மக்களுடைய அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப்படவேண்டும் என்பதற்காகவும் அவர்களின் உண்மையான பிரதிநிதிகள் மக்கள் மன்றங்களில் இடம் பெற வேண்டும் என்பதற்காகவுமே எனது திருத்தத்தை இங்கு சமர்ப்பித்துள்ளேன். இந் நாடு வளம் பொருந்தியதாக இருக்கவேண்டும், சுபிட்சமாக இருக்க வேண்டும், மரியாதையோடு வாழ வேண்டும், அதற்கு சிறுபான்மையினராகிய நாங்களும் எங்களது பங்கை செயலில் காட்டத் தயாராக இருக்கிறோம் என்று கூறி எனது திருத்தத்தை இந்த அவையின் முன் வைக்கிறேன்.

## 11

**அரசியல் நிர்ணய சபையில் தேசீய மொழி பிரச்சினை குறித்த விவாதம் 14-9-49 அன்று நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-**

இத்திருத்தங்களின் மீது நான் பேச விரும்புகிறேன். இப்பிரச்சினை மீது விவாதம் மீண்டும் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது; விவாதம் முடியவில்லை என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. எனவே, எனது திருத்தங்களைப் பற்றி நான் குறிப்பிடலாம் என நினைக்கிறேன். இத்திருத்தங்கள் ஏற்கனவே என்னால் சமர்ப்பிக்கப்பட்டவை; அவை சபை முன்பு இருக்கிறது.

**ஒரு உறுப்பினர் :-** அப்படியானல் மற்ற திருத்தங்கள்?...

**காயிதே மில்லத் :** ஏற்கனவே, நான் நோட்டீஸ் கொடுத்துள்ள திருத்தங்கள் சபை முன்பு இருப்பதாலும், அது பற்றிய விவாதங்கள் இன்னும் முடிவுக்குக் கொண்டு வரப்படாததாலும், விவாதம் மீண்டும் தொடங்கப்பட்டுவிட்டதாலும், எனது திருத்தங்கள் மீது பேச எனக்கு உரிமை இருக்கிறது என நான் நினைக்கிறேன்.

**சபா நாயகர் :-** உறுப்பினர் கூறுவது சட்டப்படி சரிதான்.

**காயிதே மில்லத் :-** எனது கருத்தைத் தெரிவிக்கும் முன் முதலாவதாக, திரு. *K.M.* முன்ஷி சமர்ப்பித்துள்ள திருத்தங்களை நான் எதிர்க்கிறேன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். தேவநாகரி லிபியிலும் உர்தூ லிபியிலும் எழுதப்படும் ஹிந்துஸ்தானி என்ற மொழியே தேசிய மொழியாக இருக்க வேண்டும் என்றும் சர்வதேச ''எண்''கள் தான் (*Numerals*) அரசாங்க பழக்கத்தில் இருந்துவர வேண்டும் என்றும் எனது திருத்தங்கள் கோருகின்றன. அத்துடன் மத்திய ஆட்சி மொழியாக ஆங்கிலமே பதினைந்து ஆண்டுகளுக்கு இருந்து வருவது என்ற விதியை, பாராளுமன்றத்தின் இரு சபைகளும் தங்களது பெரும்பான்மை மூலம் வேறு விதமாகக் கருத்துத் தெரிவிக்காத வரையில், ஆங்கிலமே இந் நாட்டின் தேசிய மொழியாக நீடிக்க வேண்டும் என்றும் அந்த விதியை மாற்ற வேண்டும் என்றும் எனது திருத்தங்கள் கோருகின்றன. இவை தான் எனது திருத்தங்களின் சாரம்.

**சபா நாயகர் :-** அவற்றின் நம்பர் என்ன?

**காயிதே மில்லத் :** நேற்று இச்சபையில் பிரதம மந்திரி அவர்கள் மிக முக்கியமானதொரு உரையை நிகழ்த்தினர். அச்சமயம் மூன்று அம்சங்களை அவர் வலியுறுத்தினர். முதலாவதாக இப்பிரச்சினை குறித்து மஹாத்மா காந்தியின் கருத்துக்களை அவர் மேற்கோள் காட்டினர்; அவரை ஆதாரமாக எடுத்துச் சொன்னர். இரண்டாவதாக, நாம் பின்நோக்கிச் செல்லக்கூடாது என்றார். வெகுதூரம் பின்நோக்கிப் பார்ப்பது நமது எதிர்கால முன்னேற்றத்தைப்பாதிக்கும் என்று எடுத்துச் சொன்னர். மூன்றாவதாக, உலகம் இன்று மிகவும் சுருங்கிக் கொண்டு வருகிறது என்பதை நாம் உணர வேண்டும் என்று சொன்னர். மணிக்கு மணி நம்மை எப்படி உலகம் சுற்றி வளைத்துக் கொண்டு வருகிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும் என அறிவுரை கூறினர். மேற்கூறிய மூன்று அம்சங்களையும் மனதில் கொண்டு இப்பிரச்சினையை நாம் ஆராய முற்பட்டால், பிரச்சினையை இலகுவில் தீர்த்துவிட இயலும் என்பது தான் எனது கருத்தாகும்.

நாட்டின் தேசிய மொழியாகத் தேர்ந்தெடுக்கப்படக் கூடிய மொழி ஒரு இந்திய மொழியாகத்தான்

இருக்கவேண்டும் என்பது ஏற்கனவே ஒப்புக்கொள்ளப் பட்ட விஷயம். அத்துடன் நாட்டிலுள்ள மக்களில் அதி கப்படியானவர்கள் பேசக்கூடியமொழியாகவும் அது இருக்க வேண்டும் என்பதும் ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிறது. நமது தேசிய வாழ்வில் தற்கால போக்குகளையும் நவீன கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ளும் விதத்திலும் அவற்றை நன்கு பிரதிபலிக்கும் வகையிலும் அந்த மொழி இருக்க வேண்டும் என்பதும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த அம்சங்களைக் குறித்து கருத்து முரண்பாடு இல்லை என்று தான் நான் கருதுகிறேன்.

அப்படியானால், அப்படிப்பட்ட மொழி எது? எல்லா அம்சங்களிலும் திருப்திதரும் மொழி எது? இது தான் இன்றைய பிரச்சினை; விவாதம். இது குறித்து, மஹாத்மா காந்தியை நான் மேற்கோள் காட்டுவதை விட வேறு எதுவும் சிறப்பாகக் கூறி விடமுடியாது. 1947ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 10ம் தேதி அவர் எழுதி யுள்ள கட்டுரை ஒன்றில் அவர் இவ்வாறு கூறியிருக் கிறார்.

''டில்லியில் என்னை தினசரி ஹிந்துக்களும் சந்திக் கிறார்கள். முஸ்லிம்களும் சந்திக்கிறார்கள். ஹிந்துக்கள் அதிக எண்ணிக்கையில் வருகிறார்கள். இவர்கள் பேசுகிற மொழியில் ஒரு சில சமஸ்கிருத வார்த்தை களும் இருக்கின்றன. அரபி, பார்ஸி வார்த்தைகளும் அதிக அளவில் இல்லை. இந்த மக்களுக்கு அல்லது அவர் களில் பெரும்பான்மையினருக்கு, தேவநாகரி லிபி தெரி யாது. அவர்கள் எனக்கு எழுதும் பொழுது, அவர் களுக்குத் தெரிந்த ஆங்கிலத்தில்தான் எழுதுகிறார்கள்; ஒரு அந்நிய மொழியில் எழுதுவதற்காக அவர்களை நான் கடிந்து கொள்ளும் பொழுது, அவர்கள் உர்தூ லிபியில்தான் எழுதுகிறார்கள். நமது நாட்டின் தேசிய மொழியாக ஹிந்திதான் இருக்க வேண்டும் என்றும் அது தேவநாகரி லிபியில்தான் எழுதப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டால், மேலே நான் குறிப் பிட்ட ஹிந்துக்களுடைய நிலை என்ன? கதி என்ன?''

இது மஹாத்மா காந்தி எழுப்பிய கேள்வி; அதிக நாட்களுக்கு முன்பல்ல; 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் எழுப்பிய வினா. டில்லியையும் அதை சுற்றிலு முள்ள பகுதிகளைத்தான் அவர் இங்கு குறிப்பிட்டுக் காட்டியிருக்கிறார். அதே கட்டுரையில் அவர் மேலும் குறிப்பிடுகிறார்; அவர் வார்த்தைகளை அப்படியே நான் இங்கு படிக்கிறேன்.

''இந்தியாவிலுள்ள கிராமங்களில் வாழும் கோடிக் கணக்கான மக்களுக்கு புத்தகங்களை வாசிக்கத் தெரி யாது. ஆனால், அவர்கள் பேசுகிற மொழி ஹிந்துஸ் தானி, இதை முஸ்லிம்கள் உர்தூ லிபியில் எழுதுகி றார்கள். ஹிந்துக்கள் தேவ நாகரி லிபியில் எழுது கிறார்கள். எனவே, என்னையும் உங்களையும் போன்ற மக்களின் கடமை என்னவென்றால், அந்த இரண்டு லிபி களையும் கற்றுக் கொள்வது தான்.''

மஹாத்மா காந்தியின் கருத்து இதுதான். பெரும் பாலான மக்கள் பேசுகிறமொழி ஹிந்துஸ்தானி என்று அவர் மிகவும் தெளிவாக கூறியிருக்கிறார்; அதற்காக மக்கள் பயன்படுத்தும் லிபிகள் தேவநாகரியும் உர்தூ வும் என்றும் அவர் வலியுறுத்தியிருக்கிறார். எனவே, இந்தியாவினுடைய தேசிய மொழிக்கு உர்தூவையும், தேவநாகரியையும் லிபிகளாக ஏற்றுக்கொள்ளும்படி எனது நண்பர்களுடன் சேர்ந்து நானும் இச்சபையை வேண்டிக் கொள்கிறேன்.

ஹிந்துஸ்தானி ஒரு அந்நிய மொழியல்ல; இது நீங்கள் எல்லோரும் அறிந்தது தான். இதுமுழுக்க, முழுக்க ஒரு சுதேச மொழி. இந்நாட்டில்தான் இது பிறந்து வளர்ந்தது; இம்மொழியைப் பற்றிய மற்றொரு சிறப்பான அம்சம் என்னவென்றால் நவீன கால தேவைகளுக்கேற்ற தருணத்தில் இது பிறந்தது; சூழ்நிலைகளுக்கு ஏற்ப இது தன்னை வளர்த்துக் கொண்டது. தற்காலத் தேவைகளைப் பூர்த்தி செய்ய வும் ஏற்றமொழி இதுதான் என்று நான் கூறுகிறேன். ஏற்கனவே நான் சுட்டிக்காட்டியபடி, இந்நாட்டிலுள்ள பெரும்பான்மையான மக்கள் பேசக் கூடிய மொழியும் இந்த ஹிந்துஸ்தானிதான்.

முன் காலங்களில் வழக்கில் இருந்த விஷயங்கள் பற்றிப் பேசப்பட்டது. மிகப் பழமையான காலங்களி லுள்ள நடைமுறைகள்தான் பின்பற்றப்பட வேண்டும் என வலியுறுத்தப்பட்டால், அது குறித்து தர்க்க ரீதி யான ஒழுங்குமுறையைக் கையாள வேண்டும் என நான் சொல்ல விரும்புகிறேன். பழமையை ஏற்றுக் கொள்ள நாம் ஏன் விரும்புகிறோம்? நமது நண்பர்களில் சிலர், ஒரு மொழி இந்திய மொழியாக மட்டும் இருந் தால் போதாது, இந்நாட்டினுடைய மிகவும் பழமை யான மொழியாகவும் அது இருக்க வேண்டும். அப் படிப்பட்ட மொழியைத்தான் நமது தேசிய மொழியாக ஏற்றுக் கொள்ள முடியும் எனக் கூறினார்கள்.

இந்த வாதம் ஏற்றுக் கொள்ளப்படுமானால் நான் ஒரு உண்மையை இச்சபை முன்பு தைரியமாகக் கூற விரும்புகிறேன்.

**''இந்த நாட்டு மண்ணில் பேசப்பட்ட மொழிகளில் மிகவும் பழமையானதும். ஆரம்ப காலத்தில் இருந்து பேசப்பட்டு வரும் மொழியாக இருப்பதும் தமிழ் தான்; அதாவது திராவிட மொழிகளே இந் நாட்டின் புராதன மொழி என நான் துணிந்து கூறுகிறேன். இந்நாட்டு மண்ணில் பேசப்பட்ட முதல் மொழி திராவிட மொழியே என்ற எனது கூற்றை எந்த வரலாற்றாசிரியராலும் மறுக்க முடியாது. எந்த புதை பொருள் ஆராய்ச்சியாளராலும் எதிர்க்க முடியாது. உயர்தரமான இலக்கிய வளங்களும், நயங்களும் நிறைந்த மொழி தமிழ். இது மிகவும் புராதன மானமொழி. இது எனது தாய் மொழி என்பதையும் தெரி வித்துக் கொள்கிறேன். அம்மொழியை நான் நேசிக் கிறேன் அம்மொழியைப் பற்றி நான் பெருமைப் படு கிறேன்.''**

என்றுலும் ஒரு உண்மையை நானே அல்லது இதர தமிழர்களோ மறந்துவிடவில்லை. சந்தேகத்திற்கு இட மில்லாத வகையில் இந் நாட்டின் புராதன மொழியாக தமிழ் இருந்தபோதிலும் இந்நாட்டிலுள்ள பெரும் பான்மை மக்களால் இது பேசப்பட வில்லையாதலால், இம் மொழியைத்தான் நமது தேசிய மொழியாக்க வேண்டும் என நாங்கள் வற்புறுத்திக் கொண்டிருக்க வில்லை; நாங்கள் நிலைமையைப் புரிந்து கொண்டுதான் இருக்கிறேம். **ஆனுல், பழமைக்குத்தான் செல்ல வேண்டு மென்றுல், புராதனமானதைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றுல், இந்நாட்டின் தேசிய மொழியாகத் தமிழைத்தான் ஏற்றுக் கொள்ளவேண்டும்** ஆனுல், அம்மொழியைப் பேசுபவர்கள் அக் கோரிக்கையை வலி யுறுத்திக் கொண்டிருக்கவில்லை.

பழமையை நாம் மறந்து விடுவதற்கில்லை தான்; அதன் செல்வாக்கிற்குள்பட்டுத் தான் நாம் இருந்து வருகிறேம். தாண்டன்ஜீ அவர்கள் விளக்கிக் கூறி யதைப் போல, பழமையிலிருந்து நாம் முழுவதுமாக விடுப்பட்டு விட முடியாது தான். பழமைச் சங்கிலியால் நாம் பிணைக்கப்பட்டிருந்தாலும், அந்த பிணைப்பு அசை வற்றதாக, உயிரற்றதாக இருக்கக் கூடாது; அது விட்டுக்கொடுக்கக் கூடியதாக இருக்க வேண்டும்; நெளிவு சுழிவுகளுக்கு இடமளிப்பதாக இருக்க வேண்டும்; இதைத்தான் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன், எல்லாமே வேர் பாகமாக அமைந்து விட்டால், மரம் முழுமை பெறுமா? வேர்களும் இருக்க வேண்டும், கிளைகளும் இருக்க வேண்டும்; மலர்களும் இருக்க வேண்டும்; கனிகளும் இருக்க வேண்டும். எனவே தற்கால சூழ்நிலைகளைக் கருத்தில் கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

**திரு ராமநாத் கோயங்கா (மதருஸ்: பொது)**:- இந்த விவாதத்தை முடிவுக்கு கொண்டு வர வேண்டும் என ஏற்கனவே நான் பிரரேபித்துள்ளேன். கனம் உறுப் பினரும் தமது பேச்சை முடித்துக் கொள்ள வேண்டும் என்றும் பிரேரேபணை செய்கிறேன்.

**சபாநாயகர்** :-கனம் உறுப்பினர் தமது பேச்சை முடித்துக் கொள்ள நான் அனுமதிக்கிறேன்.

**காயிதே மில்லத்** : விவாதத்தை முடிக்க வேண்டும் எனப் பிரேரேபணை செய்யப்பட்டு அது ஏற்றுக் கொள் ளப்படுமானுல், அதன் பிறகு இங்கு என்னுல் எதுவும் கூற இயலாது. அது அவ்வாறு செய்யப்படவில்லை. விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. எனக்குள்ள உரிமையின் படி நான் பேசிக் கொண்டிருக்கிறேன்.

**திரு. ராமநாத் கோயங்கா**:- உறுப்பினர் சொன்ன தையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிருர்.

**சபாா நாயகர்** :-கனம் உறுப்பினர் சீக்கிரம் முடித்துக் கொள்ளலாம்.

**காயிதே மில்லத்** ;-எண்கள் *(Numerals)* குறித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். சர்வ தேச வழக் கில் பழக்கத்தில் இருக்கும் எண்களையே நாமும் ஏற்றுக் கொள்ள வேண்டும், என நான் வலியுறுத்துகிறேன். இந்தியாவிலுள்ள பல மொழிகளும் இந்த எண்களையே கடைப்பிடித்து வருகின்றன.

தேசியமொழி பிரச்சினை போல எண்கள் பிரச்சினை யும் நெடுங்காலமாக இருந்து வரவில்லை என்று சொல் லப்படுகிறது. தேசிய மொழி பிரச்சினை வேறு; எண்கள் பிரச்சினை வேறு என்பதை மக்கள் புரிந்துதான் வைத் திருக்கிருர்கள். இ ந் ந ா ட் டி ன் ஆட்சிமொழியாக ஆங்கிலம் இப்பொழுது இருந்து வருகிறது. என்றுலும் பொது மக்கள் மத்தியில் அம்மொழி அவ்வளவாக ஊடுருவவில்லை; எல்லோரிடமும் பழக்கத்தில் இல்லை. ஆனுல் எண்கள் பிரச்சினை அப்படி அல்ல; பாமர மக் களும் கூட ''ஆங்கில'' எண்களையே கடைபிடித்து வரு கிருர்கள்; உபயோகித்து வருகிருர்கள். அவர்களது அன்றுட வாழ்க்கையில் இந்த எண்கள் பழக்கத்தில் இருந்து வருகின்றன. கை வண்டி இழுப்பவர்கள், தினக்கூலிகள் எல்லோருமே இந்த எண்களையே உப யோகிக்கிருர்கள். லட்சக்கணக்கானவர்கள் இந்த எண்களை அன்றுட வாழ்க்கையில் பயன்படுத்தி வரு கிருர்கள். எனவே இந்த எண்களையே நமது தேசிய மொழியிலும் நிரந்தரமானதாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதுவே மக்களின் எண்ணத்தைப் பிரதி பலிப்பதாக இருக்கும். இந்நாட்டில் எது நடைமுறை யில் இருக்கிறதோ அதையே நாமும் ஏற்றுக் கொண்ட தாகவும் பிரதிபலிப்பதாகவும் அமையும்.

எண்கள் விஷயத்தில் ஏதாவது மாற்றங்கள் செய்ய நாம் முற்பட்டால், நிறைய குழப்பங்கள் உண்டாகும்; பணச் செலவாகும்; உழைப்புகள் வீணடிக்கப்படும். அடிக்கடி சுட்டிக் காட்டப்பட்டது போல், இந்த ''எண்கள்'' அந்நிய நாட்டைச் சார்ந்தவையல்ல; நமக்கு சொந்தமானவைதான். எனவே நமது தேசிய மொழியில் இந்த எண்கள்தான் நிரந்தர அம்சமாக ஏற்றுக் கொள்ளப்படவேண்டும் என நான் மீண்டும் வேண்டுகோள் விடுக்கிறேன். சில ஆண்டுகளுக்குப் பிறகு இந்த எண்களைக் கைவிட்டு விட்டு புதிய எண் களைத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்பதையும் தெளிவு படுத்த விரும்புகிறேன்.

அதாவது, தேவநாகரிலிபியிலும் உர்தூலிபியிலு முள்ள ஹிந்துஸ்தானி மொழியே தேசிய மொழியாக ஏற்றுக் கொள்ளப்படவேண்டும் என்பதும் 'சர்வதேச ரீதியில் வழக்கில் இருக்கும் ''இந்திய எண்களே'' நமது தேசிய மொழியின் நிரந்தர அம்சமாக இருக்கவேண்டும் என்பதும் எனது கோரிக்கைகளாகும்.



# ராஜ்ய சபாவில் ஆற்றிய உரைகள்

**1952 TO 1958.**

## 1

(விசேஷ திருமண மசோதாவுக்கு பல திருத்தங்களை காயிதே மில்லத் அவர்கள் பிரேரேபித்திருந்தார்கள். அந்த விவாதம் 8-5-1952 அன்று நடை பெற்றது. அது சமயம் தலைவரவர்கள் கூறியதாவது :-

முஸ்லிம்களில் மிகப் பெரும்பாலானவர்கள் இம் மசோதாவுக்குத் தங்களது பலமான எதிர்ப்புகளைத் தெரிவித்துள்ளார்கள். இவ்வுண்மையை சட்ட அமைச்சரே இந்த அவையில் ஒப்புக் கொண்டுள்ளார். எனவே தான் இந்த மசோதாவிலிருந்து முஸ்லிம்களுக்கு விதி விலக்கு அளிக்கப்பட வேண்டும் என எனது திருத்தம் கோருகிறது. இதற்கு முன்உதாரணமும் இருக்கிறது 1872-ம் ஆண்டு சட்டத்தில் இருந்து முஸ்லிம்களுக்கு விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. அதைத்தான் இப்பொழுது கோருகிறேன்.

**துணை சபாநாயகர்:-** உறுப்பினர் ஏற்கனவே இம் மசோதா குறித்து நிறைய பேசி விட்டார். எனவே அதையெல்லாம் அவர் மீண்டும் சொல்ல வேண்டியதில்லை.

**காயிதே மில்லத் :-** ஒரு முக்கியமான அம்சத்தை நான் சொல்ல மறந்து விட்டேன். அதை மட்டும் சொல்லி முடித்துக் கொள்கிறேன். இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தில் ''பால் குடி முறை'' என ஒரு உறவு முறை உண்டு. திருமண உறவு கொள்ளும்போது இந்த பால் குடி முறை முக்கியமாகக் கவனிக்கப்படும். அதாவது ஒரு பெண்ணிடம் ஒரு குழந்தை பால் குடித்து வளர்க்கப்பட்டால், அக்குழந்தை அவளது குழந்தையாகவே கருதப்படும். அவள் அதை பெற்றெடுக்காவிட்டாலும் அது அவளது குழந்தை என ஷரீஅத் சட்டம் சொல்கிறது. எனவே அவளுக்குப் பிறந்த குழந்தைகளுடனே அல்லது அவளிடம் பால் குடித்து வளர்ந்த பிற குழந்தைகளுடனே முந்திய குழந்தை திருமண உறவு வைத்துக் கொள்ளக் கூடாது. இது ஒரு முக்கியமான அம்சம். இதைத்தான் ''பால் குடி முறை'' என ஷரீஅத் வருணிக்கிறது. இதை புதிய மசோதா கணக்கில் எடுத்துக் கொள்ளவேயில்லை. இதை இந்த அவையின் கவனத்திற்கு நான் கொண்டு வருகிறேன். எனது திருத்தத்தையும் ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகிறேன்.

## 2

[குடியரசுத் தலைவரின் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானம் 20-5-52 அன்று ராஜ்ய சபையில் விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-)

நம் நாட்டில் கனிவளங்கள் ஏராளமாக உள்ளன. இந்திய பூமி இயல் சர்வே இலாக்கா இதுவரை இந்த நாட்டினுடைய கனிவளங்களை முழுமையாக மதிப்பீடு செய்யவில்லை. அதே போல், கோடிக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள இயற்கை வளங்கள் இன்னும் மண்ணிற்குள் புதைந்து கிடக்கின்றன. இதை அரசின் கவனத்திற்குக் கொண்டு வந்த பின்னுங்கூட, எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

எதிர் பாராத விதமாக, அகஸ்மாத்தான முறையில் மதராஸ் மாநிலத்தில் பழுப்பு நிலக்கரி படிவுகளை இந்த இலாக்காவினர் கண்டு பிடித்திருக்கிறார்கள். மைக்கா, இரும்புத்தாது போன்றவைகளையும் இவர்கள் கண்டு பிடித்துள்ளனர். ஒரு இடத்தில் மட்டும் (நெய்வேலியில்) 200 கோடி டன் நிலக்கரி படிவுகள் உள்ளன என்று அவர்கள் மதிப்பிட்டிருக்கிறார்கள். அதனுடைய மதிப்பு சுமார் 400 கோடி ரூபாயாகும். கண்டு பிடிக்கப்பட்ட வளங்கள் பயன்படுத்தப் படுமேயானால், உண்மையிலேயே அது மக்களுடைய பொருளாதார நிலையில் பெரிய புரட்சியை ஏற்படுத்தும். இது போன்ற வளங்களை அவர்களால் தோண்டி எடுக்க இயலாமல் சிரமப்படுகிறார்கள் எனத் தெரிகிறது. (நிலத்தடி நீரை அப்புறப்படுத்தும் பிரச்சினை தீர்க்கப்படாத போது சொன்னது) இன்னல்கள் இருந்தாலும் அதில் வெற்றி காண்பது அரசாங்கத்தின் கடமை.

# 3

*(விசேஷத் திருமண மசோதா 28-7-52 அன்று ராஜ்ய சபையில் சமர்ப்பிக்கப்பட்டபொழுது காயிதே மில்லத் கூறியதாவது :)*

விசேஷத் திருமண மசோதா, அரசியல் சாசனம் உத்திரவாதம் அளித்துள்ள அடிப்படை உரிமைகளில் தலையிடுவதாக உள்ளது. அரசியல் அமைப்புச் சட்டப் பிரிவு 25 (1), குடிமக்கள், தங்களுடைய மதங்களை தாராளமாக எடுத்துரைக்கவும், அனுஷ்டிக்கவும் உரிமை வழங்குகிறது. நம் நாட்டிலே, திருமணம், விவாகரத்து, பரம்பரைச் சொத்துரிமை, தத்தெடுத்தல் அது போன்ற விஷயங்கள், மத விஷயங்களாக இருக்கின்றன. இந்த விஷயங்களில், ஒவ்வொரு மதத்தாலும் சொல்லப்பட்டுள்ள சட்டங்களை அந்தந்த மதத்தைச் சார்ந்தவர்கள் பின்பற்றுகிறார்கள். இந்தச் சட்டங்களில் தலையிடுவது அரசியல் அமைப்புச் சட்டத்தில் உத்திரவாதம் அளிக்கப்பட்டுள்ள எந்த ஒரு மதத்தையும் சர்வ சுதந்திரமாக பின்பற்றுவதும், போதிப்பதுமான உரிமையை மீறுவதாகும். இந்த மசோதாவினுடைய நோக்கமே கலப்புத் திருமணங்களைச் சட்ட பூர்வமாக்குவதாகும். ஆனால், நம் நாட்டில் பின்பற்றப் படுகிற எந்த ஒரு மதத்திலும், இதற்கு ஆதரவோ, அனுமதியோ தரப்படவில்லை.

இந்த மசோதா சட்டமாக்கப்பட்டால், அரசியல் அமைப்புச் சட்டப் பிரிவு 25 (1) (a)ல் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள மத உரிமையை இது மீறுவதாகும். நடைமுறை திருமணச் சட்டத்தை மாற்றுவதோடு அல்லாமல், இந்த நாடு பெற்றுள்ள பரம்பரைச் சொத்துச் சட்டத்தையும் மாற்றுவதாக இது உள்ளது.

தனிப்பட்டவருடைய விருப்பம் மட்டுமே பிரச்சினையானல் 1872ம் ஆண்டு விசேஷத் திருமணச்சட்டம் இருக்கிறது. ஆனால் அற்பசொற்பமானவர்களே இச் சட்டத்தை பயன்படுத்தியிருக்கிறார்கள். இந்த மாதிரியான (கலப்புத்) திருமணங்கள் பிரபல்யமடைந்தால், இந்த மாதிரியான திருமணங்களை மக்கள் விரும்பினால், பின்னர் இந்த (1872ஆம் ஆண்டு) விசேஷத் திருமணச் சட்டத்தையே அவர்கள் தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். சமூகங்களிடையே ஒற்றுமையை உருவாக்குவதற்குப் பதிலாக, அவர்கள் மத்தியில் தப்பபிப்பிராயங்களையே இந்த மசோதா அதிகமாக்கும். சமூக ஒற்றுமையை அவைகள் (கலப்புத் திருமணங்கள்) உருவாக்காததோடு, எக்கச்சக்கமான விரோதங்களையும் விளைவிக்கும்.

கலப்புத் (சமூகத்) திருமணங்கள் சமூக ஒற்றுமைக்குத் தேவையில்லாதது. இதே கருத்து, தேசபிதா மகாத்மா காந்தி அவர்களாலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

# 4

*[ஜம்மு கஷ்மீர் நிலவரம் குறித்து ராஜ்ய சபையில் 1952ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 5ம் தேதியன்று விவாதம் நடைபெற்றது. காயிதே மில்லத் அவர்கள் கலந்து கொண்டு உரையாற்றிய பொழுது கூறியதாவது:-]*

பிரதமர் அவர்கள் குறிப்பிட்டதைப் போல் இந்தியாவின் ஒரு அங்கமாக கஷ்மீர் இணைந்துவிட்டது, தீர்க்கமான, முடிவான விஷயமாகும் இது. இந்திய அரசு பிரதிநிதிகளும் கஷ்மீர் மாநில பிரதிநிதிகளும் அண்மையில் கலந்து உரையாடியது இப்பிரச்சினை குறித்து அல்ல. இந்திய அரசியலமைப்பில் கஷ்மீரும் ஒரு அங்கம் என்பதையும், சட்டபூர்வமாக இவ் விஷயம் தீர்க்கப்பட்டு விட்டதென்பதையும் இந்திய பிரதமர் தெளிவாகவே விளக்கி விட்டிருக்கிறார்.

இந்திய யூனியனிலே கஷ்மீர் இணைக்கப்பட்டு, இந்திய அரசியல் அமைப்புப்படி அம்மாநிலம் நிர்வகிக்கப்படுகிறது. இப்பொழுது நடைபெறும் பேச்சு வார்த்தைகள் இந்திய அரசியல் சட்டத்திற்கு செயல் வடிவம் கொடுப்பது பற்றியதாகும். எப்படி அமல் படுத்துவது என்பதாகும். அவ்வளவுதான். இப்பொழுது நிகழ்ந்திருப்பது எற்கனவே உள்ள உறவைப் பலப்படுத்துவதோடு, நெருங்கிய பிணைப்பை மென்மேலும் வளர்ப்பது பற்றியதாகும். வரும் காலத்தில் இந்த உறவுகள் இன்னும் பலமானதாகவும், நெருக்கமானதாகவும் வளரும் என நான் நிச்சயமாக நம்புகிறேன்.

நமது கஷ்மீர் சகோதரர்கள் அங்குள்ள மன்னராட்சியை அகற்றுவது குறித்து வலியுறுத்தி வருகிறார்கள். பழங்காலத்தில் மன்னராட்சி என்பது சர்வாதிகார கொடுங்கோலாட்சியாக இருந்தது; இருந்திருக்கலாம். ஆனால் இன்று சுதந்திர இந்தியாவில் ஜனநாயக முறை முழுக்க, முழுக்கப் பின்பற்றப்பட்டு வரும் காலகட்டத்தில் நிலைமை முற்றிலும் வேறு விதமாக இருக்கிறது. மாநிலத்தின் தலைவர் ''ராஜ் பிரமுக்'' என அழைக்கப்படுகிறார். இப்படி அழைப்பதினால் அது மன்னராட்சி என்பதல்ல; அப்பதம் ஒரு ''நிழல்'' தான். இந்த பொய்த் தோற்றத்தைப் பற்றி கஷ்மீர் சகோதரர்கள் இவ்வளவு சந்தடி செய்திருக்க வேண்டியதில்லை. நாட்டின் ஏனையப் பகுதிகளில் நடைமுறையில் இருப்பது போலவே இந்த நிழல் விஷயத்திலும் அவர்கள் நடந்திருக்கலாம் என்றே நான் கருதுகிறேன்.

கஷ்மீர் உண்மையிலேயே, ஒரு ஏழை மாநிலம் ஆகும். நாட்டின் ஏனைய பகுதிகளில் உள்ள நடைமுறைகளோடு ஒத்துவர அவர்கள் முடிந்த அளவிற்கு முன் வரவேண்டும். இந்திய அரசு இந்தச் சூழ்நிலைகளையெல்லாம் புரிந்து கொண்டு அனுதாப உணர்வோடு நிலைமைகளைக் கையாண்டிருக்கிறது. மத்திய அரசு செய்திருப்பதை நாம் பாராட்ட வேண்டும்.

கஷ்மீர் பிரச்சினை குறித்து பேச்சுவார்த்தைகள் நடத்த இப்பொழுது நமது பிரதமமந்திரி ஜெனிவாவிற்குச் செல்லவிருக்கிறார். அவரது பணி வெற்றி பெற வாழ்த்துகிறேன். அவர் சொல்வன்மையுள்ளவர்; இப்பிரச்சினையை அவரால் வெற்றிகரமாக சமாளிக்க முடியும்; காரியத்தை சமாளிக்கும் திறன் அவருக்குண்டு; நம்முடைய நல்வாழ்த்துக்கள் அவருக்கு என்றென்றும் உண்டு. நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அவர் பணியாற்றி வெற்றி பெற்றுத் திரும்புவார் என்று நம்புவோமாக.

## 5

*[1952ம் ஆண்டு ஆகஸ்டுமாதம் 7ம் தேதியன்று ராஜ்ய சபையில் விசேஷ திருமண மசோதா விவாதிக்கப்பட்டபொழுது காயிதே மில்லத் அவர்கள் தெரிவித்த கருத்துக்கள் :-]*

எந்த ஒரு மதத்தைச் சேர்ந்தவனுக இருந்தாலும், எந்த ஒரு இந்திய பிரஜையும், இந்த விசேஷத் திருமணச் சட்டத்தின் கீழ் கல்யாணம் செய்து கொள்ள முடியும். இந்த சட்டத்தின் பிரகாரம் கல்யாணம் செய்து கொள்பவர்களுக்கு இந்திய வாரிசுரிமைச் சட்டம் பொருந்தும் எனக் கூறப்பட்டுள்ளது. இதுவரை அந்த தம்பதிகள் பின்பற்றி வந்த தனியார் சட்டங்களை அவர்கள் பின்பற்ற தேவையில்லை என்றும் கொள்ளப்படுகிறது.

உதாரணமாக ஹிந்து சட்டப் பிரகாரம் உடன் பிறந்த சகோதரியின் மகளை (தாய் மாமன்) ஒருவர் திருமணம் முடித்துக் கொள்ளலாம். ஷரீயத் சட்டப் பிரகாரம் ஒன்று விட்ட சகோதரிகளை ஒரு முஸ்லிம் (சித்தப்பா பெரியப்பா மக்களை) திருமணம் செய்து கொள்ளலாம். இப் புதிய மசோதா இந்த உறவு முறைகளை தடுக்கிறது. ஆனுல் சட்ட அமைச்சர் அவையில் பேசும் பொழுது இந்த ஷரத்துக்கள் கட்டாயமில்லை என்றும் அவரவர் இஷ்டத்திற்கு விடப்படும் என்றும் கூறினர். இந்த விளக்கம் தெளிவானதாகயில்லை.

இந்த மசோதா பிரகாரம் ஒருவர் தனது மதத்தைத் துறந்து விடலாம். புதிய சட்டத்தின் கீழ் திருமணம் செய்து கொள்ளலாம். அந்த சட்டத்தில் சுட்டிக் காட்டப்பட்டுள்ள உறவு முறைகள் பிரகாரம் திருமணங்களை முடித்துக் கொள்ளலாம் என்று இருக்கிறது. ஆனுல் அதே சமயம் அவன் தனது மார்க்கத்தில் இருந்து பூரணமாக விடுபட்டு விடுகிறுனு என்றுல் அது தான் இல்லை. புதிய சட்டத்தையும், பயன்படுத்திக் கொள்ளலாம்; தனக்குரிய தனியார் சட்டத்தையும் அவன் பயன்படுத்திக் கொள்ளலாம் என இந்த மசோதா குழப்பத்தை உருவாக்கியுள்ளது; ஒன்றும் தெளிவாக இல்லை.

ஒரு முஸ்லிமை எடுத்துக் கொள்வோம்; அவன் புதிய சட்டப்பிரகாரம் திருமணம் செய்து கொள்கிறுன் என வைத்துக் கொள்வோம். புதிய சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாரிசுரிமை ஷர்த்துக்கள் அவனது குழந்தைகளுக்கும் பொருந்தும் என்று வைத்துக் கொள்வோம். அவனுக்கு சொந்தக்காரர்கள் இருக்கிறுர்கள் என்றும் வைத்துக் கொள்வோம். அவர்களது சொத்துகளில் இருந்து இவனுக்கு அந்தந்த தனியார் சட்டத்தின் பிரகாரம் பாத்தியதை உண்டா? அல்லது இல்லையா? என்பது விளக்கப்படவில்லை. தனியார் சட்டத்தின் பிரகாரமும் பலாபலன்களை அனுபவித்துக் கொண்டு விசேஷ திருமண சட்டத்தையும் உபயோகப்படுத்திக் கொண்டால் அது முன்னுக்குப் பின் முரணுகையில்லையா? குடும்பச் சொத்துக்களை இவனுக்குக் கொடுக்காமல் மற்ற உறவினர்கள் தங்களுக்குள் தனியார் சட்டப்பிரகாரம் பங்கு வைத்துக்கொள்ளலாம், அல்லது அனுபவித்துக் கொள்ளலாம் அல்லவா? இந்த அம்சம் குறித்து அம்மசோதா ஒன்றுமே கூறவில்லை. ஒருவன் புதிய சட்டத்தையும் பின்பற்றிக்கொண்டு ஷரீஅத் சட்ட பிரகாரம் கிடைக்கக் கூடிய லாபத்தையும் அனுபவிக்க அனுமதிப்பதென்றுல் அது சரியாகுமா?

---

### காயிதே மில்லத் மாவட்டம் உதயமானது

திண்டுக்கல்லை தலைநகரமாகக் கொண்டு இயங்கும் காயிதே மில்லத் மாவட்டம் 1989ம் ஆண்டு ஜூன் மாதம் 11ம் தேதி, ஞாயிற்றுக்கிழமை உதயமானது.

முதல் அமைச்சர் கலைஞர் கருணாநிதி புதிய மாவட்டத்தைத் தொடங்கி வைத்தார். இம்மாவட்டம் குறித்து தமிழக முதல்வர் ஏற்கனவே தமிழ்நாடு சட்டசபையில் அறிவிப்புச் செய்திருந்தார்.

கண்ணியமிக்க தலைவர் காயிதே மில்லத் அவர்களின் நினைவாக தொடங்கப்பட்ட இம்மாவட்டம் அன்று முதல் செயல்படத் துவங்கியது. அரசு ரிக்கார்டுகளில் எல்லாம் இதற்கான மாற்றங்கள் ஏற்கனவே செய்யப்பட்டு விட்டன.

புதிய மாவட்டத் தொடக்கவிழா 11-6-89 அன்று திண்டுக்கல்லில் நடைபெற்றது.

செய்தி-மக்கள் தொடர்புத் துறை அமைச்சர் பொன். முத்துராமலிங்கம் தலைமை வகித்தார், தமிழக சட்ட அமைச்சர் எஸ். ஜே சாதிக் பாஷா முன்னிலை வகித்தார்.

விழாவின்போது முதல் அமைச்சர் டாக்டர் கருணாநிதி காயிதே மில்லத் மாவட்டத்தை அதிகாரபூர்வமாக அறிவித்தார்.

புதிய மாவட்ட மக்களுக்கான பல்வேறு நலத் திட்டங்களையும் அவர் தொடங்கி வைத்தார்.

ஏழை-எளிய மக்களுக்கு அரசின் பல்வேறு உதவிகளையும் முதல்வர் வழங்கினார்.

கண்ணியமிக்க தலைவர் காயிதே மில்லத் அவர்களின் அரசியல் பணிகள், சிறந்த சேவைகள் பற்றி முதல்வர் கருணாநிதி விழாவில் நெகிழ்ச்சியுடன் பேசினார்.

திண்டுக்கல் முஸ்லிம் சமுதாய மக்கள் சார்பில் முன்னதாக, முதல்வர் கருணாநிதிக்கு பிரமாண்டமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

'மணிச்சுடர் 11-6-89/ஞாயிறு''

முஸ்லிம்களைப் பொறுத்தவரை வெகுமதிகள் இருக்கின்றன; வக்புகள் இருக்கின்றன; தர்ம சொத்துகள், உயில்கள் இருக்கின்றன; சொந்தக்காரர்கள் சொத்துக்களிலும் பல சந்தர்ப்பங்களில் ஒருவனுக்கு பாகம் கிடைக்கின்றன. ஷரீஅத் சட்டப் பிரகாரம் இப்பலா பலன்களை புதிய சட்டத்தைப் பின்பற்றும் முஸ்லிம் அனுடவிக்கலாமா? அப்படி அனுபவிக்கலாம் என்றால், அவனது உறவினர்களின் உரிமைகளில் இது குறுக்கிடுவதாகுமா இல்லையா? ஒருவன் தனது மார்க்கத்தை துறந்து விட்ட பிறகு அம்மார்க்கப் பிரகாரம் கிடைக்கும் அனுகூலங்களை அவன் அனுபவிக்க சட்டம் சம்மதம் அளிப்பது நீதிதானா? சமநீதி வழங்குவதாக இதைச் சொல்ல முடியுமா?

எனவேதான் அவன் இஷ்டத்திற்கு தனியார் சட்டத்தை அவன் பின்பற்றிக் கொள்ளலாம் என்று விட்டு விடுவது சரியில்லை என்று நான் சொல்கிறேன். அவனுடைய இதர உறவினர்களின் உரிமைகளில் இது கை வைப்பதாகும்.

இச்சட்டத்தின் மூலம் பிறக்கும் குழந்தைகளுடைய நிலைமை என்ன? ஒரு ஹிந்து ஒரு கிறிஸ்துவப் பெண்ணை மணமுடிக்கும்முன், இவ்உறவின் மூலம் பிறக்கும் குழந்தையின் கதி என்ன? எந்த தனியார் சட்டம் இவர்களுக்குப் பொருந்தும்? இந்திய வாரிசுரிமைச் சட்டம் முழுமையானதல்ல; வாழ்க்கையின் சகல அம்சங்களையும் அது தொட்டு நிற்கவில்லை; அதில் ஏகப்பட்ட குறைபாடுகள் உள்ளன. இந்த நிலைமையில் ஏதாவது ஒரு பிரச்சினை எழுந்தால், இப் பிள்ளைகளின் கதி என்ன? நிலைமை என்ன?

இந்த சந்தர்ப்பத்தில் நான் ஒரு கேள்வியை எழுப்ப விரும்புகிறேன். இப்படி ஒரு சட்டம் அவசியம் என நமது நாட்டு மக்களிடமிருந்து கூக்குரல் கிளம்பியதா? மக்களாக இதைக் கேட்டார்களா? இதற்கு இப்பொழுது என்ன அவசியம் வந்தது? ஒருவனுக்கு தனது மார்க்கம் பிடிக்கவில்லையென்றால் அவன் அதை விட்டு வெளியேறி விடலாம். 1872ம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் அதற்கு வழி செய்கிறது. அது அமுலில் இருக்கவும் செய்கிறது. ஒருவன் தனது மதத்தை துறந்துவிட்டு அதன் பின்னரும் அம்மதச்சட்டங்கள் மூலம் கிடைக்கும் பலன்களையும் அனுபவிப்பதென்றால் அது எப்படி சரியாகும்? முறையாகும்?

புதிய சட்டத்தின் பிரகாரம் எத்தனை பேர் திருமணம் முடித்திருக்கிறார்கள்? இப்படி திருமணம் செய்ய முன் வருபவர்கள் அதிகம் இருக்கவில்லை என்பதே எனது கருத்து. மக்களே விரும்பாதபொழுது அவர்கள் மீது புதிய சட்டத்தை ஏன் திணிக்க முற்படுகிறீர்கள்? இப்பொழுது இதற்கென்ன அவசியம் வந்து விட்டது?

இச்சந்தர்ப்பத்தில் நான் ஒரு விஷயத்தை இம் மன்றத்தில் தெளிவுபடுத்த விரும்புகிறேன் இஸ்லாமிய ஷரீஅத் சட்டம் தனி மனிதர் யாராலும் உருவாக்கப் பட்டதல்ல. ஏன், எங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால்கூட உருவாக்கப்படவில்லை. இறை வேதத்தின் பிரகாரம் உருவாக்கப்பட்டது ஷரீஅத் சட்டம். இறைவனுடைய வார்த்தைகளின் தொகுப்பு இது.

''கலாமுல்லாஹ்'' தான் இஸ்லாமிய சட்டம். இச்சட்டம் குறித்து யாருக்கும் எந்த திருத்தமும் செய்ய உரிமையில்லை. வேண்டுமானால் இதை பின்பற்றலாம், விருப்பமில்லை என்றால் இச்சட்டத்தைத் துறந்து விட்டு அவன் வெளியேறி விடலாம். இதுதான் சாத்தியமானது; அதில் கொஞ்சத்தை ஏற்றுக் கொண்டு மிச்சத்தை ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்று கூற அவனுக்கு உரிமை இல்லை. இதுவே எங்களுடைய நம்பிக்கை; கோட்பாடு. இஸ்லாத்தின் அடிப்படை தத்துவம் இது. எனவே இவ்வித நம்பிக்கையுடையவனை அந்த கோட்பாட்டை விட்டு விலகும்படியும், புதிய சட்டதிட்டங்களை ஏற்றுக் கொள்ளும்படியும் வற்புறுத்துவது சரிதானா? ஆண்டவனால் இயற்றப்பட்ட சட்டத்தை திருத்துவதற்கு இவர்கள் யார்?

மதச் சார்பற்ற சர்க்காரின் வேலையல்ல இது. மதச்சார்பற்ற அரசு என்றால் என்ன? எந்த ஒரு மதத்திற்கும் எதிரானதல்ல மதச் சார்பற்ற தன்மை; எந்த ஒரு மதத்தையும் இந்த அரசு பின்பற்றவில்லை என்பது தான் அதன் பொருள், அர்த்தம். இத்தகைய அரசு எந்த ஒரு மதத்தையும் ஆதரிக்கவில்லை, அல்லது எதிர்க்கவில்லை என்று தான் அதற்கு பொருள். எந்த ஒரு மத விவகாரங்களிலும் தலையிடுவது, மதச்சார்பற்ற அரசின் வேலையல்ல. எல்லா மத விவகாரங்களிலும் அது நடுநிலைமை வகிக்க வேண்டும்.

இந்த மசோதா ஒரு வகையில் மக்களை கட்டாயப் படுத்துகிறது. இச்சட்டத்தை ஏற்காத ஒருவனுடைய உறவினர்கள் ஏதாவது ஒரு வகையில் கட்டாயத்திற்கு ஆளாகிறார்கள், பலவந்தப்படுத்தப்படுகிறார்கள். இச் சட்டத்தின் நோக்கம் என்ன? ஒரே மாதிரியான சிவில் சட்டம் வேண்டும் என்பதாகும். இந்த நாட்டில் ஒற்றுமை இருக்க வேண்டும், சௌஜன்யம் நிலவ வேண்டும் என்பது வாஸ்தவமே. அதற்காக கட்டாயத்தின் மூலம், வெளித்தோற்றத்தின் மூலமாக ஒற்றுமையை வரவழைக்க முடியாது. அது நிலைக்கவும் செய்யாது. எல்லோரும் ஒரே மாதிரியான குல்லாய் அணிய வேண்டும்; கோட் போட வேண்டும், சட்டை போட வேண்டும் என சட்டம் இயற்றி விடலாம்; அது நிலைக்காது. அது நல்லதும் அல்ல. முன் காலங்களில் அப்படி நடக்கவில்லை. இன்று அப்படி நடக்கவும் முடியாது.

சகிப்புத்தன்மை மூலமே காரியங்களை சாதிக்க இயலும். பல மதங்களைப் பின்பற்றுகிறவர்கள் இந்த நாட்டில் வாழ்கிறார்கள், உலக வரலாற்றை பாருங்கள். கட்டாயத்தின் மூலமாக காரியங்களை சாதித்தவர்களே கிடையாது. மனிதர்களின் உள்ளங்களை நாம் தொட வேண்டும். மற்றவர்களின் நம்பிக்கைகளை மதிக்க வேண்டும். சகிப்பு தன்மை வேண்டும், அப்பொழுது தான் இந்த நாட்டை முன்னேற்றப் பாதையில் நாம் இட்டுச் செல்ல இயலும். எனவே இந்த மசோதாவை அரசு கைவிட வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

# 6

*[தொகுதி பிரிவினை மசோதா ராஜ்ய சபையில் 22-12-1952 அன்று விவாதிக்கப்பட்டபொழுது காயிதே மில்லத் அவர்கள் கூறியதாவது :-]*

ஒற்றை உறுப்பினர் அல்லது இரண்டு உறுப்பினர் தொகுதிகளாக சட்டசபை, பாராளுமன்றத் தொகுதிகளைப் பிரிக்கலாம் என இந்த மசோதா கூறுகிறது. இரு உறுப்பினர் தொகுதிகளில் ஒன்று ஷெட்யூல் வகுப்பினருக்காக ரிசர்வ் செய்யப்பட வேண்டும் என்கிறது மசோதா. சிறுபான்மை மக்களுக்கும் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் மசோதா வகுக்கப்பட வேண்டும் என நான் கேட்டுக் கொள்கிறேன்.

சென்ற பொதுத் தேர்தலின் போது காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் பலர் இத்துறையைச் சுட்டிக் காட்டியுள்ளனர். சிறுபான்மை மக்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கவில்லை. அந்த முறையில் தேர்தல் முறை இல்லையென காங்கிரஸ் காரர்களே முன்னர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இன்றைய தேர்தல் முறை எல்லாத் தரப்பு மக்களுக்குமிடையில் சம வாய்ப்புகளை உண்டாக்கிக் கொடுக்கவில்லை என்பது உண்மையாகும். சிறுபான்மை மக்களுக்கு கிடைக்க வேண்டிய உரிமைகள் கிடைக்கவில்லை. இது மிகவும் வருந்தத்தக்கது.

அஸ்ஸாம் சட்டசபையில் 15 இடங்கள்தான் முஸ்லிம்களுக்குக் கிடைத்திருக்கின்றன. நியாயமாகப் பார்த்தால் அவர்களுக்கு 36 இடங்கள் அந்த சட்ட சபையில் ஒதுக்கியிருக்க வேண்டும். அஸ்ஸாமில் மொத்தம் 108 சட்டசபை தொகுதிகளில் முஸ்லிம்களுக்கு 36 ஸ்தானங்களை வழங்கப்பட்டிருக்க வேண்டும். அதே போல் பீஹார் மாநிலத்தில் மக்கள் தொகை அடிப்படையில் 45 இடங்கள் சிறுபான்மையினர் பெற்றிருக்க வேண்டும். ஆனால் 15 இடங்களே அவர்களுக்குக் கிடைத்துள்ளன.

தேர்தல் தொகுதிகள் பிரிக்கப்பட்ட முறை சரியில்லை. பல தரப்பட்ட சிறுபான்மை மக்கள் வெற்றி பெற வாய்ப்பில்லாமல் உள்ளது. ஒற்றை மெம்பர் தொகுதியிலும் அவர்கள் வெற்றி பெற முடியவில்லை. இரண்டு உறுப்பினர் தொகுதியிலும் அவர்கள் ஜெயிக்க முடியவில்லை. சுழற்சி முறையில் (Rotation) பல மதத்தவர்களுக்கும் கிடைக்கக் கூடிய முறையில் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்களானால் பலருக்கும் வாய்ப்புகள் கிடைக்கலாம் என உறுப்பினர்களில் சிலர் கருத்து தெரிவித்தார்கள்.

## பல உறுப்பினர் தொகுதிகள்

என்னைப் பொறுத்தவரையில் நான் ஒரு யோசனையைத் தெரிவிக்க விரும்புகிறேன். இரட்டை உறுப்பினர் தொகுதி பலப்பல இருக்க வேண்டும். ஷெட்யூல் வகுப்பினருக்கு ஒரு சில இரட்டை உறுப்பினர் தொகுதிகளை ஒதுக்கியது போல, மேலும் சில இரட்டை தொகுதிகளை சிறுபான்மையினர் போன்ற பல தரப்பட்டவர்களுக்கும் ஒதுக்க வேண்டும். இன்றைய அரசியலமைப்பு அதற்கு இடம் அளிக்கவில்லை என்பது தெரிந்ததே.

இருப்பினும் என்னுடைய யோசனை என்னவென்றால் பெரிய தொகுதியாகப் பல இருக்க வேண்டும். இரண்டிற்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட தொகுதிகள் பல இருக்க வேண்டும். ஷெட்யூல் வகுப்பினர் போக மற்றவர்களுக்கும் இடம் கிடைக்கும் வகையில் பலஉறுப்பினர் தொகுதிகள் உருவாக்கப்பட வேண்டும். பலஉறுப்பினர் தொகுதிதான் சரியான பரிகாரம் ஆகும். முன் காலங்களில் ஒரு மாவட்டமே ஒரு தொகுதியாக இருந்திருக்கின்றன. எனவே இது ஒன்றும் புதிதல்ல. தொகுதி மிகவும் பெரிய அளவுள்ளதாகிவிடும் என சிலர் வாதிடலாம். இன்று அரசியல் கட்சிகள்தானே தேர்தல்களில் போட்டியிடுகின்றன. தொகுதி பெரிதாக இருந்தாலும் அரசியல் கட்சிகளால் அதை சமாளிக்க முடியும். இப்படி செய்வதன்மூலம் பல தரப்பினருக்கும் நீதி கிடைக்கிறது. நியாயம் வழங்கப்படுகின்றது.

# 7

*[ஸ்பெஷல் திருமண மசோதா 1954ம் ஆண்டு மே மாதம் 3ம் தேதியன்று ராஜ்ஜிய சபையில் மீண்டும் விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் கூறியதாவது:-]*

இந்த மசோதாவை நான் எதிர்க்கிறேன். பொது மக்களில் பெரும்பாலோர் இம் மசோதாவை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. குறிப்பாக முஸ்லிம்கள் அனைவருமே இத்திட்டத்தை எதிர்க்கிறார்கள் என சட்ட மந்திரியே ஒப்புக் கொண்டுள்ளார். இந்த அவை ஒரு மதப் பிரச்சாரம் செய்யும் கருவியல்ல; அல்லது சீர்திருத்தங்களை வலுக்கட்டாயமாக நிறைவேற்றியே தீரவேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் சபையுமல்ல, மக்களின் பிரதிநிதிகளாக நாம் இங்கு இருக்கிறோம். எனவே மக்களின் அபிலாஷைகளை நிறைவேற்றி வைக்க இச்சபை முன்வரவேண்டுமே தவிர, கைகூடாத காரியங்களில் தலையிட்டுக் கொண்டிருக்கக் கூடாது.

சிறுபான்மையினர் நலன்கள் பாதுகாக்கப்பட வேண்டும். அவர்களது சுதந்திரமும் நடைமுறைகளும் காக்கப்பட வேண்டும். பெரும்பான்மையினரின் திட்டங்களை அவர்கள் மீது திணிக்கக்கூடாது. ஒரு ஹிந்து ஒரு முஸ்லிமை திருமணம் செய்து கொள்கிறான் என்று

வைத்துக் கொள்வோம். அப்படி செய்ய அவனுக்கு உரிமை இருக்கிறது. சமுதாயத்தைச் சேர்ந்த மற்றவர்கள் இதை தடுக்கக் கூடாது என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட சூழ்நிலை உருவாகக் கூடாது என்பதற்குத்தான் இச்சட்டம் என்று சுட்டிக் காட்டப்படுகிறது. இவ்வாதம் சரியில்லை. 1872ம் ஆண்டு சட்டப்பிரகாரமே இத்தகைய திருமணங்களை நிறைவேற்றிக் கொள்ள முடியும்; அதற்கு வழி இருக்கிறது. இதை யாரும் தடுக்க முடியாது;

## சமுதாயப் பிரச்சினை

திருமணம் என்பது ஒருவனுடைய வாழ்க்கையில் மிக முக்கியமான கட்டமாகும். உற்றார்-உறவினர்களின் ஒத்தாசையும் நட்பும் இல்லாமல் தீராது. சமுதாயத்தையும் மதத்தையும் மதிப்பது என்ற விஷயம் இருக்கிறது. இதையெல்லாம் உதறிவிட்டு ஒருவன் தனது இஷ்டப்படி திருமணம் செய்து கொள்ள முன் வருகிறான் என்றால், அவன் அவ்விதமே செய்து கொள்ளட்டும். சமுதாயத்தை அவன் மதிக்க வேண்டியதில்லை. மார்க்கத்தை தூக்கி எறிந்து விடட்டும். அதை அவன் பகிரங்கமாகவே செய்து கொள்ளட்டும். எனக்கு இந்த மார்க்கம் தேவையில்லை என்று பகிரங்கமாக சொல்லி விட்டு 1872ம் ஆண்டு சட்டப்பிரகாரம் திருமணம் முடித்துக் கொள்ளலாம்.

**திரு கோவிந்த ரெட்டி:-** முஸ்லிம்கள் இம் மசோதாவை எதிர்ப்பதாகக் கூறுகிறார்கள். ஆனால் இந்த மசோதாவே இஸ்லாமியத் திட்டத்தின் அடிப்படையில்தான் உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த யோசனையே இஸ்லாத்தில் இருந்துதான் கடன் வாங்கப்பட்டிருக்கிறது. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் மனம் ஒப்பி திருமணம் செய்து கொள்ள விரும்பினால் மூன்று சாட்சிகளுடன் பதிவாளர் முன்பு சென்று தங்களது விருப்பத்தை தெரிவித்துப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்றுதான் இம்மசோதா கூறுகிறது. இது ஒரு சிவில் காண்ட்ராக்ட்தான். இஸ்லாமும் இதைத்தான் சொல்கிறது. இந்த மசோதா திருமணத்தை மார்க்க சம்பந்தமானதாகக் கருதவில்லை. புனிதமானதாகக் கருதவில்லை. ''சன்ஸ்கார்'' என பிரகடனப்படுத்தவில்லை. பின் எதற்காக முஸ்லிம்கள் இதை எதிர்க்கிறார்கள்?

**காயிதே மில்லத்:-** இந்த மசோதாவின்படி திருமணம் செய்து கொள்ளும் முஸ்லிம் தன்னை முஸ்லிம் என்றும் சொல்லிக்கொள்ள முடிகிறது. ஷரீஅத் சட்டப்பிரகாரம் கிடைக்கக் கூடிய அனுகூலங்களையும் அவன் பெறுகின்றான். நான் சொல்ல வருவது என்னவென்றால், இத் திருமணத்தில் சம்பந்தப்படாதவர்களின் உரிமைகளும், நலன்களும் பாதிக்கப்படுகின்றன என்பதைத் தான் அவனது சொத்துக்கள் இந்திய வாரிசுரிமை சட்டப் பிரகாரம் நிர்வகிக்கப்படுகின்றன. அதே சமயம் அவனது தனியார் சட்டப் பிரகாரமும் (ஷரீஅத் சட்டம் மூலமும்) லாபத்தை அடைகிறான்.

சட்ட அமைச்சர் குறுக்கிட்டு ஏதோ விளக்கம் சொல்கிறார். மீண்டும் காயிதே மில்லத் தொடர்கிறார்கள்.

## வாரிசுகளை கட்டுப் படுத்துவதா?

இச்சட்டத்தின் மூலம் திருமணம் செய்து கொள்ளும் தம்பதிகளின் வாரிசுகளுக்கு இந்திய வாரிசுரிமைச் சட்டம் பொருந்தும் எனக் கூறப்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் தங்களது தனியார் சட்டமூலம் பெறக்கூடிய உரிமைகளை மட்டும் பெறமாட்டார்கள் எனத் தடுக்கப்பட்டுள்ளதா? இதுவே எனது கேள்வி. இது குறித்து இம்மசோதா மௌனம் சாதிக்கிறது. எனவேதான் இதில் சம்பந்தப்படாதவர்களை இச்சட்டம் பாதிக்கிறது என நான் கூறுகிறேன்.

இம் மசோதா மற்றொரு பிரச்சினையையும் எழுப்புகிறது. இச்சட்டத்தின் மூலம் பிறக்கும் வாரிசுகளின் மதம் எது என்ற கேள்வி எழுகிறது. திருமணத்திற்கு முன்பே கணவனும் மனைவியும் இது குறித்துப் பேசி முடிவு செய்து கொள்ளலாம் என விளக்கம் கொடுக்கப்படுகிறது. இந்நாட்டு குடிமகன் ஒருவனை இந்த மதத்தை தான் நீ பின்பற்றவேண்டும் என கட்டாயப் படுத்தலாமா? இதற்கு சட்டம் அனுமதியளித்துள்ளதா? இது தான் என் கேள்வி. மதசார்பற்ற நமது நாட்டில் ஒரு மதத்தைப் பின் பற்றும்படி சட்டம் இயற்ற நமது அரசியல் சாசனம் இடமளிக்கிறதா?

நமது அரசியலமைப்பு பல ஜீவாதார உரிமைகளை குடிமக்களுக்கு வழங்கியுள்ளது. ஒரு மதத்தைப் பின் பற்ற, அதன்படி நடக்க அதை பிரச்சாரம் செய்ய ஒருவனுக்கு உரிமை வழங்கப்பட்டுள்ளது; இது ஒரு அடிப்படை உரிமையாகும். இதை மீறும் வகையில் இப் புதிய மசோதா அமைகிறது, ஒருவனுடைய மார்க்கத்தை அவனுக்காகக் கட்டாயமாகத் தீர்மானிக்கும் சூழ்நிலை இம்மசோதாவின் மூலம் உண்டாகிறது.

ஏற்கனவே சட்ட அமைச்சர் முன்பு ஒரு தடவை மக்களை அவரவர் மதங்களை விட்டு வெளியேற்றும் முயற்சியில் இது ஒரு முதல் நடவடிக்கை என்று சொல்லி இருக்கிறார். நமது அரசியலமைப்பில் பின்பற்ற வேண்டிய கோட்பாடுகள் *(Directive Principles)* என ஒரு பகுதி இருக்கிறது, பொது சிவில் சட்டம் அனைவருக்குமாகக் கொண்டு வர வேண்டும் என்பது இந்த தாக்கீதில் அடங்கும். அதை அமல் செய்யும் விதமாக முதல் படியாக, இந்த மசோதா கொண்டு வரப்படுகிறது என நான் அஞ்சுகிறேன். இத்தகைய தாக்கீது நமது ஜீவாதார உரிமை ஷர்த்துக்கு முற்றிலும் முரண் பட்டது.

**திரு. கே. எஸ். ஹெக்டே:-** திருமணம் என்பது மார்க்கத்தில் ஒரு பகுதியா?

**காயிதே மில்லத்:-** ஒருவன் முஸ்லிமாக இருக்கட்டும் அல்லது ஹிந்துவாக இருக்கட்டும். அவன் பின்பற்றும் தனியார் சட்டங்கள் அந்தந்த மார்க்கங்களின் அடிப்படையில் தான்உருவாக்கப்பட்டிருக்கின்றன. பின்னர் வேறு எப்படி இந்த தனியார் சட்டங்கள் உருவாகியுள்ளன?

இஸ்லாமிய சட்டத்தைப் பொறுத்தவரையில் விஷயம் மிகவும் தெளிவாகவேயுள்ளது. இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படையில் தான் ஷரீஅத் சட்டம் வகுக்கப்பட்டுள்ளது. எனவே இச்சட்டத்தின் படி நடக்க முஸ்லிம்களுக்கு உரிமை உண்டு. ஆனால் இம் மசோதாவைக் கொண்டு வருகிறவர்கள், மக்கள் மத்தியில் ஒருமைப்பாட்டை வளர்க்க வேண்டும் என்பதற்காக இப்படியெல்லாம் செய்கிறோம் எனக் கூறுகிறார்கள். இத்தகைய நடவடிக்கைகளால் ஒருமித்த சகஜநிலை உருவாகுமா? புதிய ஜாதி ஒன்றைத்தான் இச் சட்டம் உருவாக்கும். இருக்கிற குழப்பங்கள் போதாது என புதிய சமுதாயங்களை உருவாக்க நீங்கள் முயலுகிறீர்கள். சமுதாயங்களுக்குள் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் உருவாகவே வேண்டுமானால் அது இதயபூர்வமாக நிகழ வேண்டும். மனமொப்பி காரியங்கள் நடைபெறவேண்டும். மற்றவர்களின் உரிமைகளில் குறுக்கிடக்கூடாது; அவர்களைக் கட்டாயப் படுத்தக் கூடாது, சகிப்பு தன்மையை கடைபிடிப்பதின் மூலமே மற்றவர்களுடைய உள்ளங்களைக் கவர முடியும்; காரியங்களை சாதிக்க இயலும்.

## 8

*[ஹிந்து திருமணம் மற்றும் விவாக விலக்கு சம்பந்தமான மசோதா ஒன்று 1954ம் ஆண்டில் ராஜ்ய சபையில் கொண்டு வரப்பட்டது. அப்பொழுது திரு. கிஷன் சந்த் என்ற உறுப்பினர் ஒரு திருத்தப் பிரேரணை கொண்டு வந்தார். அது குறித்து 11-12-54 அன்று காயிதே மில்லத் பேசிய பொழுது கூறியதாவது :-]*

திரு. கிஷன்சந்த் திருத்தம் குறித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். அவரது திருத்தத்தில் முஸ்லிம்களைச் சேர்க்கவில்லை. முஸ்லிம்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவைக் கொண்டு வந்தவரும் முஸ்லிம்களை இந்த சட்ட ஆதிக்கத்திற்குள் கொண்டு வரவில்லை. இந்த மசோதாவைக் கொண்டு வந்தவருக்கும் அதற்குத் திருத்தம் கொண்டு வந்த கிஷன்சந்திதிக்கும் நான் முஸ்லிம்கள் சார்பாக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த திருத்தத்தில் கனம் உறுப்பினர், கிருஸ்தவர்களையும், சமணர்களையும், பார்ஸிகளையும். யூதர்களையும் சேர்த்திருக்கிறார். அதாவது இச்சட்டம் மேற்கூறிய மதத்தினர்களையும் கட்டுப்படுத்தும் என்கிறார். இந்த மசோதாவே ஹிந்து தனியார் சட்டத்தில் இருந்து வகுக்கப்பட்டது. இச்சட்டம் ஹிந்து மதக்கோட்பாடுகள் மீது அமைக்கப்பட்டது. இதில் பிற மதத்தவர்களையும் இணைத்திருப்பது சரிதானா? சம்பந்தப்பட்ட மதங்களை சேர்ந்த உறுப்பினர்கள் சிலர் இதை வரவேற்றுப் பேசியுள்ளார்கள். இது அவர்களது கருத்தாக இருக்கலாம். ஆனால் பூரா சமுதாயத்தையுமே இதற்குக் கட்டுப்படச் செய்வது முறைதானா? என்பதை யோசிக்க வேண்டும்.

என்னைப் பொறுத்த வரையில் திருத்தம் கொண்டு வந்தவர்க்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். முஸ்லிம்களை அவர்கள் விட்டு விட்டார்கள். முஸ்லிம்களுக்கென தனியார் சட்டம் இருக்கிறது. அது முழுமையானதாகவும் உள்ளது. இஸ்லாமிய மார்க்கத்தில் அது ஒரு அங்கம் ஆகும். முஸ்லிம்கள் தங்களது வாழ்க்கையில் மதத்தை மிகவும் புனிதமானதாகவும், பிரதானமான அம்சமாகவும் கருதுகிறார்கள்; மதிக்கிறார்கள். இதை கருத்தில் கொண்டு செயலாற்றியதற்காக மாண்புமிகு அமைச்சருக்கும் கனம் உறுப்பினருக்கும் எனது நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்

## 9

*[ராஜ்ய சபையில் 1-3-55 அன்று ரயில்வே வரவு-செலவு திட்டம் விவாதிக்கபபட்டபொழுது காயிதே மில்லத் அவர்கள் தெரிவித்த யோசனைகளாவன :-]*

### ரயில் பட்ஜெட்

மலபாரிலுள்ள நிலாம்பூரையும் கர்நாடகாவிலுள்ள ஹஸ்ஸானையும் இணைத்து ரயில் பாதை அமைக்க வேண்டும். அதே போல நிலாம்பூரையும் பெர்ரோக்கையும் இணைத்து மற்றொரு பாதை அமைக்க வேண்டும். கள்ளிக்கோட்டை ரயில் நிலையத்தை சீர்திருத்தி பெரிதுபடுத்த வேண்டும்.

திருச்சி-காரைக்குடி ரயில் பாதையை பயன்படுத்தி துரித ரயில் போக்குவரத்திற்கு வழி செய்ய வேண்டும். மாயவரம்-திருச்சி ரயில் பாதையில் போக்குவரத்து மிக அதிகம். இப்பகுதியில் இரு வழி பாதை அமைப்பது குறித்து ரயில்வே நிர்வாகம் துரிதமாக சிந்திக்க வேண்டும். இப்பகுதியில் கும்பகோணம் ஒரு முக்கியமான நகரம். இந்த ரயில் நிலையத்தை மூவாயிரம் பேருக்கு அதிகமானவர்கள் தினசரி உபயோகப்படுத்தி வரலாம் என நினைக்கிறேன். இந்த ரயில் நிலையத்தை விரிவுபடுத்த வேண்டும்; நவீனமானதாக்க வேண்டும். மானாமதுரை-மணியாச்சியையும் இணைத்து ரயில் பாதை அமைக்க வேண்டும். இரண்டாவது உலக யுத்தத்திற்கு முன்னரே இப்படி ஒரு திட்டம் இருந்தது. நிர்வாகிகள் இது குறித்து அசட்டையாக இருக்கிறார்கள். [1955-ம் ஆண்டே தலைவரவர்கள் சொன்ன யோசனை பின்னர் நிறைவேற்றப்பட்டு விட்டது குறிப்பிடத்தக்கது.]

கன்னியாகுமரியையும் ரயில் பாதை மூலம் இணைக்க வேண்டும். அது ஒரு யாத்திரை தலம். கன்னியா குமரியை திருவனந்தபுரத்துடனும், திருநெல்வேலியுடனும் இணைக்க வேண்டும். [இத்திட்டமும் பின்னர் நிறைவேற்றப்பட்டு விட்டது.]

ரயில்வேயில் மேம்பாலங்கள் நிறைய கட்ட வேண்டியதிருக்கிறது. கும்பகோணத்தில் ஒரு ரயில்வே மேம்பாலம் மிகவும் அவசியம். மதறாஸ் பெரியமெட் அருகில் ஒரு மேம்பாலம் அத்தியாவசியமாகும்.

காட்பாடியிலிருந்து காஞ்சிபுரத்திற்கு, மேல் விஷாரம் ராணிப்பேட்டை, ஆர்க்காடு வழியாக ஒரு ரயில் இணைப்பு மிகவும் அவசியம். இதனால் இப்பகுதியில் வர்த்தகமும், தொழிலும் பெருகும், உணவுப் பொருட்களுக்கு ரயில்வே கட்டணத்தை குறைக்க வேண்டும்.

# 10

*[மாநில எல்லைகள் சீரமைப்பு கமிஷன் அறிக்கை மீது நடைபெற்ற விவாதத்தின்போது 24-12-55 அன்று ராஜ்ஜிய சபையில் காயிதே மில்லத் கூறியதாவது :-]*

## மாநிலங்கள் சீரமைப்பு

இன்று நமது நாட்டில் நிலவிவரும் சூழ்நிலைகளைக் கவனிக்கும்பொழுது. மொழிவாரி அடிப்படையில் மாநிலங்களைப் பிரிக்கக்கூடாது என்ற கருத்துடையவன் நான். மொழியின் முக்கியத்துவத்தை நான் உணர்ந்துள்ளேன். ஒருவனுடைய சிந்தனையில் மொழி எவ்வளவு பிரதான ஸ்தானத்தை வகிக்கிறது என்பதையும் நான் அறியாதவன் அல்ல. மொழிப்பற்று ஒருவனுக்கு ஜீவாதாரமானது; அடிப்படை போன்றது. தங்களது மொழியைப் பற்றி பெருமைப்பட்டுக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. அது இயற்கையானதே. ஒவ்வொருவருடைய மொழியையும், கலாச்சாரத்தையும் வளர்க்கவும், பேணிக் காத்திடவும் வழி வகைகள் செய்து கொடுக்கப்பட வேண்டியதே.

ஒரு மொழியை வளர்க்க வேண்டியதுதான், அதைப் பாதுகாக்க வேண்டியதுதான் என்று கூறும்பொழுது மொழி அடிப்படையிலே மாநிலங்களைப் பிரித்தாக வேண்டும் என்று வலியுறுத்துவது உசிதமானதா என்பதை யோசிக்க வேண்டும். இந்த நாட்டின் நலன்களுக்கு இத்தகைய பிரிவினை உகந்தது அல்ல. உலகில் பல நாடுகள் மொழி அடிப்படையில் உருவாக்கப்பட்டிருக்கின்றன என்பது வாஸ்தவமே. ஆனால் இன்று நமது நாட்டில் நிலவும் சூழ்நிலையில் மொழியை அளவுக்கு அதிகமாக வலியுறுத்துவது உகந்ததல்ல என்பது எனது அபிப்பிராயமாகும்.

## ஆங்கிலேயர் செய்த நல்ல காரியம்

ஆங்கில ஆட்சி இந்த நாட்டில் ஒரு நல்ல காரியத்தைச் செய்து விட்டு போயிருக்கிறது. அதை நமது அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். இந்த நாட்டை அவர்கள் பல மாகாணங்களாக பிரித்தார்கள். அவர்களது நிர்வாக வசதிக்காக அப்படி பிரித்தார்கள் என்றாலும், பல மொழி மாகாணங்களையே அவர்கள் உருவாக்கினார்கள். இந்தியா ஒன்று என்ற எண்ணத்தைத் தான் பிரிட்டிஷார் உருவாக்கினார்கள். தவிர மொழியைக் காட்டி மக்களை பிரித்து வைக்கவில்லை. பல மொழி பேசுபவர்கள் ஒரு மாகாணத்தில் கட்டாயமாகச் சேர்ந்து வாழ வேண்டிய சூழ்நிலை உருவாக்கப்பட்டது.

ஆனால் இன்று மாநில எல்லை சீரமைப்புக் கமிஷன் இந்நாட்டை மொழி அடிப்படையில் பிரித்துவிடும்படி சிபாரிசு செய்துள்ளது. இது வருந்ததக்கது. நிர்வாக வசதி, நிதி நிலைமை, வர்த்தக நலன்கள் என பலப்பல அடிப்படையில் மாநிலங்கள் பிரிக்கப்படலாம் என அக்கமிஷனே ஒத்துக்கொண்டிருந்தாலும், அது மொழி வாரி மாநிலங்களையே சிபாரிசு செய்துள்ளது.

மாநில வாரியாக நாட்டைப் பிரிக்க சிபாரிசு செய்தவர்கள் தென்னிந்தியாவைப் பொருத்தவரையில் ''தட்சிணப் பிரதேசம்'' என ஒன்றை சிபாரிசு செய்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் அதை நான் வரவேற்றிருப்பேன். தமிழ், மலையாளம். கன்னடம் ஆகிய பகுதிகள் அடங்கிய தக்கணப்பிரதேசம், பல மொழிகளை கொண்ட ஒரு பெரியதொரு மாநிலமாக உருவாகியிருக்கும். தெலுங்கு மொழி பேசுபவர்கள் இதில் சேர முன் வந்தால் நான் வரவேற்கவே செய்வேன். ஆனால் அண்மையில்தான் அவர்கள் மதராஸிலிருந்து பிரிந்து தனி மாநிலமாக அமைத்துள்ளார்கள். இப்பொழுது அவர்கள் மதராஸுடன் சேருவார்களோ என்னவோ நானறியேன். தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய மூன்று மொழிகள் உள்ளிட்ட ''தட்சிணப் பிரதேசம்'' உருவாக்கப்பட்டிருந்தால் ஒரு நல்ல பரிகாரமாக அமைந்திருக்கும்.

நான் ஒரு தமிழன்; எனது தாய்மொழி தமிழ். தமிழ்நாட்டிற்கும், ஆந்திராவுக்குமிடையில் எல்லை தகராறு. அதே போல கேரளாவுக்கும் தமிழ் நாட்டிற்குமிடையில் எல்லை தாவா. இப்படி பலப்பல. இப்பிரச்சினைகள் அனைத்தும் தட்சிணப்பிரதேசம் அமைக்கப்பட்டிருக்குமானால் அகன்று போயிருக்கும்.

இப்பொழுது அது நடக்கக்கூடிய காரியமல்ல, இந்த யோசனையை ஏற்கக் கூடிய நிலையில் மக்கள் இல்லை. அனைவருமே மொழிப் பற்றில் ஊறிப் போய் இருக்கிறார்கள். நாமும் நடக்க வேண்டியதை கவனிக்க வேண்டியதே. தமிழ் நாட்டின் தென் எல்லையில் நான்கு தாலுக்காக்களைத்தான் (குமரி மாவட்டத்தில்) எல்லை கமிஷன் மாற்றிக் கொடுத்திருக்கிறது. அன்றையத் தினம் திருவாங்கூர், கொச்சி, சமஸ்தானத்திலுள்ள இதர பகுதிகளை கேரள மாநிலத்துடன் இணைத்து விட்டார்கள்.

### காயிதே மில்லத்திற்கு முதல் மார்க்!

நாட்டில் எழுந்துள்ள அவசர காலநிலையை முன்னிட்டு டில்லி பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு துப்பாக்கி பயிற்சி அளிக்கவேண்டுமென காயிதேமில்லத் அவர்கள் பாராளுமன்றத்தில் கூறியது நினைவிருக்கலாம். அதைத் தொடர்ந்து நவம்பர் மாத மத்தியிலிருந்து எம் பிகளுக்கு துப்பாக்கி சுடும் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. இப்பயிற்சியின் முதற் குழுவிலேயே காயிதே மில்லத் அவர்களும் பங்கெடுத்துக் கொண்டார்கள்.

முதன் முறையாகக் குறி பார்த்துச் சுடும் பொழுதே தங்களுடைய இலக்கை *(Bull's Eye)* காயிதெ மில்லத் அவர்கள் சுட்டு விட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

*31-12-62* —உரிமைக்குரல்

## தேவிகுளம், பீர்மேடு

தேவிகுளம், பீர்மேடு பிரச்சினை இருந்து வருகிறது. இப்பகுதியில் தமிழ் மொழி பேசுபவர்களே பெரும் பான்மை. ஆனால் சமஸ்தான அரசாங்கம் வேறு விதமாகக் கூறுகிறது. தமிழ் பேசுபவர்கள் நிரந்தர மாகக் குடியிருப்பவர்கள் இல்லை என்றும் வந்து போகக் கூடியவர்கள் என்றும் அடுத்த தரப்பினர் கூறுகிறார்கள். கடந்த தேர்தலின் போது தமிழ் பேசுபவர்களும் வாக்களித்திருக்கிறார்கள். அன்றாடம் வந்து போகிறவர்கள் என்றால் எப்படி வாக்களிக்க முடியும்? திருவாங்கூர் காங்கிரஸ் கட்சியே தமிழ்நாடு காங்கிரசுடன் கலந்தாலோசித்துத்துத்தான் அந்தத் தேர்தலில் வேட்பாளரை நிற்கச் செய்து வெற்றியும் பெற்றது. நிலைமை இப்படி இருக்கும் பொழுது, தமிழர்கள் நிரந்தரமாகக் குடியிருப்பவர்கள் இல்லை என்று சொன்னால் அது பொருத்தமானதுதானா?

தேவி குளம், பீர்மேடும் தமிழ் நாட்டின் ஒரு பகுதியே. தமிழ் நாட்டை ஒட்டியே அது இருக்கிறது. தமிழர்களே அங்கு பெரும்பான்மையாக வாழவும் செய்கிறார்கள். எனவே இப்பகுதியை தமிழ் நாட்டுடன் இணைக்க வேண்டும். அதுதான் நியாயம்.

திருவாங்கூர், கொச்சி பகுதிகளில் ஏராளமாகத் தண்ணீர் கிடைக்கிறது. இதனால் அவர்களுக்கு பெரும் கஷ்டமாக இருக்கிறது, என்பதை கனம் உறுப்பினர் அப்துல் ரஜாக் எடுத்துக் கூறினார். அம்மக்களுக்கு மிகுந்த சிரமத்தைக் கொடுக்கும் தண்ணீரை கிழக்கு நோக்கி தமிழ் நாட்டின் பக்கம் திருப்பி விட்டால் அவர்களுக்கு கஷ்டமும் நீங்கும், தமிழ்நாட்டிற்கும் அதற்கு தேவையான தண்ணீரும் கிடைக்கும். பொருளாதாரத் துறையில் இரு மாநிலங்களுக்குமே இது அனுகூலமாகும்.

லட்சத் தீவு கூட்டங்களை கேரள மாநிலத்துடன் இணைக்கும்படி எல்லை கமிஷன் சரியாகவே சிபாரிசு செய்துள்ளது. ஆனால் மத்திய அரசு அத்தீவுகளை நேரடி நிர்வாகத்தில் வைத்துக் கொள்ள விரும்புகிறது. மலபாரிலும் லட்சத் தீவுகளிலும் உள்ள மக்கள் ஒரே மொழியே பேசுகிறார்கள். பழக்க வழக்கங்கள் ஒத்து இருக்கின்றன. மருமக்கத் தாயம் முறை மலபாரிலும் இருக்கிறது, லட்சத் தீவுகளிலும் இருக்கின்றது. லட்சத் தீவு மக்களில் பெரும்பாலோர் மலையாள மொழியே பேசுகிறார்கள். மற்றவர்கள் பேசும் ''மஹல்'' மொழியும் மலையாளத்தை ஒத்தே இருக் கின்றது. எனவே இத்தீவுகளை கேரள மாநிலத்துடன் இணைத்தாக வேண்டும்.

## மலபாரின் விருப்பம்

கேரளா என்ற மாநிலம் உருவாக்கப்படும் பொழுது திருவாங்கூர் கொச்சின் பகுதிகளுடன் மலபாரையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அங்குள்ள முஸ்லிம் லீக் அதை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. ஆனால் ஒரு சில பொறுப்பு வாய்ந்த தலைவர்கள் கேரளத்துடன் மலபார் சேர விரும்பவில்லை என்று சொல்கிறார்கள். இது ஆச்சரியமாகவேயுள்ளது. அவர்களுக்கு இத்தகவல் எங்கிருந்து கிடைத்தது என்பதை நான் அறியமாட்டேன். சி. ராஜகோபாலாச் சாரி, திரு. கிருபலானி போன்றவர்கள் இப்படிக் கூறி இருப்பது ஆச்சரியமே. மலபார் மக்கள் கேரளத்துடன் சேருவதையே விரும்புகிறார்கள். இது எனக்கு நன்கு தெரியும். இதில் யாருக்கும் சந்தேகம் இருக்கத் தேவையில்லை.

# 11

*[மாநில எல்லை கமிஷன் மசோதா குறித்து ராஜ்ய சபையில் 22-3-56 அன்று விவாதம் நடந்தபொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-]*

மாநிலங்களின் எல்லைகள் மாற்றியமைக்கப்படும் சமயம் ஒரு மாநிலத்திற்குள்ளேயே பல மொழிகளை பேசும் மக்கள் வாழும் நிர்பந்தங்கள் ஏற்படுத்தப்பட் டுள்ளன. சிறுபான்மை மொழியினரின் எதிர்காலம் குறித்து ஆட்சியாளர்களிடம் வினவப்பட்டால், சிறு பான்மை மொழி பேசுபவர்களுக்கு போதிய பாதுகாப்பு கொடுக்கப்படும் என சொல்கிறார்கள். வழக்கமாக அமைச்சர்களுடைய பதில்கள் இப்படிதான் இருக் கின்றன,

## யானையா? பூனையா?

பாதுகாப்புகள் எவ்வாறு அமுல் படுத்தப்படும் என்பது குறித்து விளக்கங்கள் தரப்படவில்லை. சிறு பான்மையினரின் விவகாரங்களை கவனித்து கொள்ள தனி அமைச்சர் நியமிக்கப்படுவாரா? அதிகார பூர்வ மான ஆணைக்குழுக்கள் நிறுவப்படுமா? அல்லது சிறு பான்மையினர்களுக்கு என தனி கமிஷனர் நியமிக்கப் படுவாரா? என்பன போன்ற விஷயங்கள் தெளிவாக்கப் படவில்லை. மேற்படி நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படமாட்டாது என அமைச்சர்கள் கூறி வருகிறார்கள். அப்படியானால் பாதுகாப்புகளை மேற்பார்வையிடுவது யார்? அதை அமுல் படுத்துவது யார்? ஜனாதிபதியிடம் முறையிடும் அதிகாரம் கூட சிறுபான்மையினருக்கு வழங்கப்படவில்லை, மாநில கவர்னரே இதையெல்லாம் பார்த்துக் கொள்வார் என மசோதா அறிவிக்கிறது.

பாதுகாப்பு என்றால் உருப்படியானதாக இருக்க வேண்டும். அதற்கு ஒரு செயல் திட்டம் வேண்டும். யார் அதை அமுல் படுத்துகிறார் என்று தெளிவாகத் தெரிய வேண்டும், வெறும் வாய்ப்பந்தல்தான் போடப் படுகிறது. பெரிய யானை வருகின்றது என்று சொல் கிறார்கள்; ஆனால் உற்றுப் பார்த்தால், சுவர் மீது ஒரு

பூனைதான் அமர்ந்து இருக்கிறது! அரசியல் சாசனத்திலும் கூட சிறுபான்மையினருக்கு சில பாதுகாப்புகள் வழங்கப்பட்டிருக்கின்றன. ஆனால் கடந்த காலத்தில் அது எவ்வாறு அமல் செய்யப்பட்டது என்பதை நீங்களே அறிவீர்கள். வரலாறு அதை சொல்லிக் காட்டிக் கொண்டிருக்கிறது.

உதாரணத்திற்கு உர்தூ மொழியை எடுத்துக் கொள்ளுங்கள். இது இந்த நாட்டிலே பிறந்து வளர்ந்தது. வளமிக்க மொழி அது. ஏராளமான இலக்கியங்கள் அதில் மல்கிக் கிடக்கின்றன, மிகவும் மென்மையான, நளினமான, சொல்லமுதுடைய மொழி அது. அம்மொழியை பேசுகின்றவர்கள் நாட்டின் எல்லா பகுதியிலும் வாழ்ந்து வருகிறார்கள். உர்தூவை தாய் மொழியாகக் கொண்ட மக்கள் வாழாத மாவட்டங்களே இந்நாட்டில் கிடையாது, இருப்பினும் அம்மொழி பேசும் மக்களுக்கு இதுவரை என்ன பாதுகாப்புக்கள் வழங்கப்பட்டுள்ளன? உத்திரபிரதேசத்தில் தான் உர்தூவை தாய்மொழியாகக் கொண்டவர்கள் அதிகமாக வாழ்ந்து வருகிறார்கள். தங்கள் தாய் மொழிக்காக அவர்கள் என்னென்ன நடவடிக்கையோ, மேற்கொண்டு பார்த்து விட்டார்கள். கூட்டங்கள் கூட்டினார்கள், மாநாடுகள் நடத்தினார்கள், கருத்தரங்கம் நடத்திப் பார்த்தார்கள். இருபது இலட்சத்திற்கும் அதிகமானவர்கள் கையெழுத்திட்ட மகஜரை ராஷ்ட்ர பதியிடம் சமர்ப்பித்தார்கள். அரசியல் சாஸனம் விதி 347ன் கீழ் நடவடிக்கை எடுக்கும் படி ஜனாதிபதியிடம் கோரினார்கள்.

## ஆணைக்குழு அவசியம்

நாளைய தினம் கூட, லக்னோ நகரில் மாநில சட்ட சபை வளாகத்தை நோக்கி, அகில இந்திய முஃத்த மரேயே உர்தூ என்ற ஸ்தாபனத்தின் சார்பாக இதற்காக ஒரு ஊர்வலமே நடக்க இருக்கிறது. எல்லா அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களும் இந்த ஊர்வலத்தில் கலந்து கொள்ளுகிறார்கள். இவ்வளவு எல்லாம் செய்த பின்னரும் அம்மொழிக்காக ஒன்றும் நடந்ததாக இல்லை. அரசியல் சாஸனத்தில் கூறப்பட்டுள்ள பாதுகாப்பிற்கே இந்த கதி என்றால் இந்த மசோதாவில் வாக்களிக்கப்பட்ட பாதுகாப்புகள் என்ன கதி அடையும் என்று சொல்ல தேவையில்லை. குறைந்த பட்சம் அதிகாரப்பூர்வமான சிறுபான்மையினர் ஆணைக்குழு அமைக்கப்பட வேண்டும். இக்குழுவிடம் முறையிடும் பிரச்சினைகள் குறித்து தக்க நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் அதற்கு இருக்க வேண்டும். பிரச்சினையை மத்திய அரசின் கவனத்திற்கு கொண்டுவரும் அதிகாரமும் அதற்கு இருக்க வேண்டும்.

இப்படி சொல்லும் போது மாநில அரசு அதிகார வரம்பை இது பாதிக்காதா என்ற வினா எழுப்பப்படுகிறது. மாநில அரசின் அதிகாரங்களை பாதிக்கும் நடவடிக்கைகள் அண்மையில் பல எடுக்கப்பட்டுள்ளனவே அதற்கு என்ன சொல்கிறீர்கள்? அரசியல் சாஸனம் 7வது ஷெட்யூலில் ஜாபிதா ஒன்றிலும், மூன்றிலும் பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளனவே; மாநிலங்களுக்கு இடையிலான விற்பனைவரிச் சட்டம் இருக்கிறதே; அத்தியாவசியப் பொருட்கள் சட்டம் இருக்கிறதே? இவையெல்லாம் மாநில அதிகாரங்களில் கைவைப்பது ஆகாதா? சிறுபான்மையினர் பிரச்சினை வரும்போது மட்டும் மாநில அதிகார பறிப்பு என்ற கூக்குரல் எழுப்பப்படுகிறது.

மாநிலங்களுக்கு இடையிலான எல்லை தாவாக்களை தீர்ப்பதற்கு கமிஷன்கள் அமைக்கப்பட இருக்கின்றது. லட்சத்தீவு கூட்டங்களை கேரள மாநிலத்துடன் இணைக்க வேண்டும், மத்திய ஆட்சியின் கீழ்தான் அது இருந்து வரவேண்டும் என்றால் பாராளுமன்றத்தில் அம் மக்களுக்கு பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும். காஸர்கோடு தாலுகா முழுவதையும் கேரள மாநிலத்தோடு தான் இணைக்க வேண்டும். இந்த அவையில் பேசிய உறுப்பினர் ஒருவர், காஸர்கோடு தாலுகாவின் வட பகுதியில் வாழும் ''மாப்பிள்ளாக்கள்'' முஸ்லிம் லீக் கட்சியை பலப்படுத்துவதற்காக இந்தத் தாலுகாவை கேரள மாநிலத்துடன் இணைக்கவேண்டும் என திட்டம் திட்டுகிறார்கள் என்று கூறினார். அந்தத் தாலுகாவில் உள்ள பெரும் பகுதி மக்கள் அப்படி விரும்பும் பொழுது இதில் என்ன தவறு இருக்கிறது? முஸ்லிம் லீக்கை ஏன் பலப்படுத்தக் கூடாது? அந்தத் தாலுகாவில் உள்ள ஏனைய மக்களும் இதை விரும்புகிறார்கள்; மாப்பிள்ளை முஸ்லிம்களும் விரும்புகிறார்கள். இதில் ஒன்றும் குறை காண்பதற்கு இல்லையே! இந்த மசோதாவில் காஸர்கோடு தாலுகா கேரளாவுடன் இணைக்கப்பட்டு இருக்கிறது; அப்படியே இருந்து விட்டு போகட்டும்.

### முஸ்லிம் லீக் பற்றி முப்தி அதீகுர் ரஹ்மான

முஸ்லிம் லீகோடு சேர்ந்து இந்த அறப் பணியில் ஈடுபட்டிருப்பது பற்றி சிலர் நம்மை குறை கூறுகிறார்கள். நாம் எல்லாம் ஒன்று பட்டிருந்தால், நாம் எல்லாம் ஒன்றுபட்டிருப்பதால், நாம் நம் கொள்கைகளை விட்டுவிட்டோம் என்பது அல்ல. முஸ்லிம்லீகின் கொள்கை தான் என்ன! மார்க்க விஷயமாக வாதிடுவதில் அவர்கள் நம்மை(ஜம்இய்யத்துல் உலமாயே ஹிந்த்)மிஞ்சி நிற்கிறார்கள். தேசீய விஷயமாக அவர்கள் எடுக்கும் நடவடிக்கைகளும் பாராட்டத்தக்கதாகத்தானே இருக்கின்றன. இதை பிரதமர் லால்பஹதூர் சாஸ்திரிகூட எங்களிடம் பாராட்டினர்.

அவர்கள் ஒரு அரசியல் சக்தியாகத் திகழ்கிறார்கள். அவர்கள் பின்னே இலட்சோப லட்சம் மக்கள் நிற்கிறார்கள். ஆகவே தான் அரசாங்கமும் அவர்களை மதிக்கிறது. அதை எப்படி நாம் குறைத்துக் கூற முடியும். முஸ்லிம்களுடைய நன்மையை விரும்பாதவர்களை தவிர, மற்றெவரும், நாமெல்லாம் ஒன்று பட்டிருப்பதைக் குறை கூற மாட்டார்கள்.

[போபால் பொதுக்கூட்டத்தில் முப்தி அதீகுர் ரஹ்மான் ஜமியத்துல்உலமாயெ ஹிந்த் ஸ்தாபனத்தின் தலைவர்]

9-11-64 உரிமைக்குரல்

## 12

*[மாநிலங்களின் எல்லைகள் திருத்தி அமைக்கப்பட்ட சமயம், லட்ச தீவுகள் பற்றிய பிரச்சினையும் எழுந்தது. அரசு இதற்கென மசோதா ஒன்றை பாராளுமன்றத்தில் தாக்கல் செய்தது. அதன் மீது 25-7-56 அன்று ராஜ்ஜிய சபையில் காயிதே மில்லத் பேசியதாவது:-]*

### லட்சத்தீவுகளுக்குப் பிரதிநிதித்துவம்

லட்சத்தீவு, மினிக்காய்தீவு, அமீன்தீவு ஆகியவைகளுக்கு பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் வேண்டும். அம்மக்கள் கேரள மாநிலத்துடன் இணைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் தற்போது மதருஸ் மாகாணத்தின் வரம்பிற்கு உட்பட்டவர்களாக இருக்கிறார்கள்.

இப்பொழுது கொண்டுவரப் பட்டிருக்கும் மசோதா அத்தீவுகளுக்கான அதிகாரங்களை ஜனாதிபதியிடம் ஒப்புவித்திருக்கிறது, பாராளுமன்றத்திடம் அத்தீவுகளின் பொறுப்பு ஒப்புவிக்கப்பட வில்லை. ஜனாதிபதியே சட்டங்களை இயற்றிக்கொள்வார் என்று கூறப்பட்டுள்ளது. 1912ம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டப் பிரகாரம் அத்தீவுகள் நிர்வகிக்கப்படுகின்றன இப்பொழுது அந்த அதிகாரங்கள் ராஷ்டிரபதியிடம் ஒப்புவிக்கப்படுகின்றன.

அத்தீவு மக்கள் விண்ணப்பம் ஒன்றை சமர்ப்பித்துள்ளார்கள். அதன் நகலை சபை முன்பு நான் சமர்ப்பிக்கிறேன். பாராளுமன்றத்தில் தங்களுக்கு பிரதிநிதித்துவம் வேண்டும் என அம்மக்கள் கோருகிறார்கள். இன்று அவர்களுக்கு யாதொரு பிரதிநிதித்துவமும் இல்லை. நாட்டின் இதர பகுதிகளில் இருப்பது போல அம் மக்களுக்கும் ஜனநாயக உரிமைகள் வழங்கப்பட வேண்டும். அண்மையில் ராஷ்ட்ரபதியும் மதருஸ் கவர்னரும் அத்தீவுகளுக்கு விஜயம் செய்திருந்தனர். இது ஒரு நல்ல சமிக்ஞையே. அதைத் தொடர்ந்து ஜனநாயக நடைமுறைகள் தங்களுக்கு அமலுக்கு வரலாம் என அவர்கள் ஆவலுடன் எதிர்பார்க்கிறார்கள்.

அத்தீவுகளின் மக்கள் தொகை எட்டாயிரம் என மசோதா கூறுகிறது. அது தவறு. அவர்களது எண்ணிக்கை 21,000 ஆகும். 1951ம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்புப்படி இது உள்ளது. ஆனால் இன்று அத்தொகை அதிகமாக இருக்கலாம். அம் மக்களுக்கு பாராளு மன்றத்தில் இடம் கொடுக்க வேண்டும் என நானும் வலியுறுத்திக் கூறுகிறேன். அவர்களது கோரிக்கை கஷ்டமான ஒன்று அல்ல. அதை நிறைவேற்றிக் கொடுப்பதில் அரசுக்கு சிரமம் ஒன்றுமில்லை. இந்நாட்டு மக்களின் குரல் பாராளு மன்றத்தில் ஒலிப்பது போல, அவர்களது குரலும் ஒலிக்க வகை செய்யப்பட வேண்டும். எனவே எனது திருத்தத்தை அரசு ஏற்றுக் கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.

## 13

*[இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் பற்றிய விவாதம் 6-9-56 அன்று ராஜ்ய சபையில் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் தெரிவித்த கருத்துக்களாவன :]*

நாட்டின் பொருளாதார வளர்ச்சியை திட்டமிடும் பொழுது, நாட்டின் அனைத்து பகுதிகளும் சமமாக நடத்தப்பட வேண்டும். ஆனால் அப்படி நடத்தப்பட வில்லை. பிராந்தியத்திற்கு பிராந்தியம் வித்தியாசங்கள் காணப்படுகின்றன. குறிப்பாக தென் இந்தியா, நாட்டின் இதரப் பகுதிகளிலிருந்து பின் தங்கி நிற்கின்றது. வாழ்க்கைத் தரம். தனி நபர் வருமானம், தொழில் மயமாக்குதல் ஆகியவை நாட்டின் சில பகுதிகளில் புறக்கணிக்கப்பட்டுள்ளன திட்டக்கமிஷன் இன்றும்கூட அந்த புறக்கணிப்பு வேலையை விட்டபாடில்லை.

நாட்டின் தென் பகுதியில் புதிய ரயில் பாதைகள் அமைக்கும் பணிகள் மிக மந்தமாகவே இருக்கின்றன. பூமிக்கடியிலிருக்கும் கனிம வளங்களை கண்டுபிடிப்பதிலும், பராமுகம் நீடிக்கிறது. நாட்டில் கைத்தறி நெசவாளர்கள் லட்சக்கணக்கில் இருக்கிறார்கள் அவர்களையெல்லாம் கூட்டுறவு சங்கங்களில் இணைக்கும் பணி இன்னும் பூர்த்தி பெறவில்லை. 1935ம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட இம்முயற்சிகளில் இன்று வரை சுமார் 25 சதவிகித கைத்தறி நெசவாளர்களே கூட்டுறவு சங்கங்களில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். இந்நாட்டில் 25 லட்சத்திற்கும் அதிகமான கைத்தறி நெசவாளர்கள். இருக்கிறார்கள். இவர்களில் 75 சதவித பேர் கூட்டுறவு இயக்கங்களுக்கு வெளியில்தான் இருக்கிறார்கள். இவர்களுக்கும் கூட்டுறவு இயக்கத்தின் நன்மைகள் கிடைக்க திட்டக்கமிஷன் என்ன முயற்சிகளை எடுத்துள்ளது ?

## 14

*[மாநில எல்லைகள் நிர்ணய மசோதா பாராளுமன்றத்தில் விவாதிக்கப்பட்ட பொழுது, லட்சத்தீவுகளை குறித்து காயிதே மில்லத் 23-8-56 அன்று ராஜ்ய சபையில் பேசியதாவது:-]*

### கேரளாவுடன் இணையுங்கள்

லட்சத்தீவு, மினிக்காய் தீவு. அமீன் தீவு மக்கள், கேரள மக்களைப் போன்றவர்களே. இயற்கையாகவே இத்தீவுகள் கேரளாவின் ஒரு பகுதியே. மொழியும் பழக்க வழக்கங்களும் ஒன்றாக இருக்கின்றன. எனவே இத்தீவுகள் கேரளாவுடன் இணைக்கப்பட வேண்டும். மத்திய அரசின் நேரடி நிர்வாகத்தில் இத்தீவுகள் இருக்க வேண்டும் என்பது சரியல்ல, பாதுகாப்பை உத்தேசித்து இப்படிச் செய்யப்படுகின்றது என்ற வாதமும் சரியில்லை. கேரள மாநிலத்தில் அவை இருந்தாலும் மத்திய அரசு வேண்டுமென்றால் எந்தப்

பாதுகாப்பையும் அங்கு செய்து கொள்ளலாமே. இதற்கு என்ன தடை இருக்கிறது ?

அத்தீவுகளுடைய வரலாறு பரிதாபகரமானது. நூற்றுண்டு கணக்காக அவர்கள் வெளி உலகத் தொடர்புகள் இல்லாதவாறு வாழ்ந்து] வருகிருர்கள். பழமைக்கால வாழ்வு வாழ்ந்து வருகிருர்கள். ஒருவித முன்னேற்றமும் இல்லே. ''அமீன்கள்'' எனப்படும் ஸ்தல தலேவர்களின் சர்வாதிகாரத்திற்குக் கட்டுப் பட்டவர்களாக அம்மக்கள் வாழ்ந்து வருகிருர்கள். இன்று நமது நாடு சுதந்திரம் பெற்று அதை அனுபவித்து வருகின்றது. அத்தீவு மக்களும் அந்த சுதந்திரக் காற்றை சுவாசிக்கட்டுமே. இது அவர் களுடைய இயற்கையான அபிலாஷையாகும். இது நியாயமும் கூட, எனவே இலட்சத் தீவு கூட்டங்களே கேரள மாநிலத்துடன் சேர்த்து விடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

# 15

[மாநில எல்லேகள் சீரமைப்பு மசோதா ராஜ்ய சபையில் விவாதிக்கப்பட்டபொழுது காஸர்கோடு தாலுகாவின் எதிர்காலம் குறித்த பிரச்சினை எழுந்தது. அப்பொழுது 23-8-56 அன்று காயிதே மில்லத் தெரி வித்த கருத்தாவது :-]

## காஸர்கோடு தாலுகா

காஸர்கோடு தாலுகாவை கர்நாடகா மாநிலத்தில் இணைக்க வேண்டும் என எனக்கு முன்பு பேசிய சிலர் கூறினுர்கள். அக்கூற்றில் நியாயம் இல்லே என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன். அந்தத் தாலுகா முழுவதும் மலபார் மாவட்டத்தில் தான் இருக்க வேண்டும். கேரளா மாநிலத்தில் தான் அப்பகுதி இணைந்திருக்க வேண்டும். வரலாற்று அடிப்படையில் பார்த்தாலும்சரி. பெரும்பாலானமக்களின் பிரதிபலிப்பு கள் படி பார்த்தாலும்சரி, நிர்வாக சௌகரியம் என்ற ரீதியில் பார்த்தாலும் சரி, அந்தத் தாலுகா கேரளா வுடன் தான் சேர்ந்திருக்க வேண்டும்; முடியும்.

காஸர் கோடு மக்களே நான் நன்கறிவேன். மதம், மொழி, ஜாதிப்பாகுபாடுகள் பாராமல் அவர்கள் அனே வரும் மலபாருடன் சேர்ந்திருப்பதைத்தான் விரும்பு கிருர்கள். சந்திரகிரி ஆற்றுக்கு வடக்கேயுள்ள மக்கள் கர்நாடகாவில் இணைவதை விரும்புகிருர்கள் என ஒரு வாதம் எடுத்து வைக்கப்படுகிறது. அந்த ஆற்றுக்கு வடக்கேயும் மலேயாள மொழி பேசும் மக்களே பெரும் பான்மையாக இருக்கிருர்கள். 55 அல்லது 56 சதவிகித சதவிகித மக்கள் மலேயாளமே பேசுகிருர்கள். இது அந்த ஆற்றுக்கு வடக்கேயுள்ள நிலவரம். ஆற்றுக்குத் தெற்கே உள்ள பகுதியில் மலேயாள மொழி பேசுபவர்கள் 90 சதவிகிதமாகும். அந்தத் தாலுகாவை இரண்டாகப் பிரிக்கக் கூடாது. முழு தாலுகாவையுமே மலபாருடன் சேர்ந்துதான் இருக்கிறது. அந்த நிலேமை மேலும் நீடிக்க வேண்டும். காஸர் கோடு தாலுகா ஒரு சீரான அமைப்பாக செயலாற்றி வருகிறது. அந்த தாலுகா நிர்வாகத்தை பிரித்து விடக் கூடாது.

மொழியையும் கருத்தில் கொள்ளவேண்டும் என்றாலும், அது மட்டுமே ஒரே அம்சமாக இருந்து விடக்கூடாது. வியாபார உறவுகள் இருக்கின்றன, கொடுக்கல் வாங்கல் விவகாரங்கள் இருக்கின்றன, சம்பந்தங்கள் இருக்கின்றன. இவை எல்லாவற்றையும் உற்று நோக்க வேண்டும். எல்லாவற்றையும் கண்ணேட்டம் இடும்பொழுது அந்த தாலுகா ஒரே அமைப்பாக இருப்பதே சாலச் சிறந்தது.

நாம் இன்று ஒரு நாட்டின் எல்லேயை நிர்ணயம் செய்து கொண்டிருக்கவில்லே. இந்த நாட்டிலுள்ள மாநிலங்களின் எல்லே பற்றிப் பேசிக் கொண்டிருக் கிறேம். ஒரு பகுதி இந்த மாநிலத்தில் இருந்தாலும் அண்டை மாநிலத்தில் இருந்தாலும், அது இந்த் நாட்டில்தான் இருக்கப் போகிறது. இயற்கையான எல்லேயாக ஆறு இருந்தால் நல்லது என்ற வாதம் இப்பொழுது தேவையில்லே. ஆறே மலேயோ எது குறுக்கிட்டாலும் காஸர் கோடு தாலுகா கேரள மாநிலத்தில் இருந்து வருவதை மாற்றக் கூடாது.

---

### ''தேவி'' வார இதழுக்கு அளித்த பேட்டியில் ஜே. எம். மியாக்கான் கூறியது. மே 1989

நான் பி.ஏ. முடித்ததும் என்ஜினீயரிங் கல்லூரி ஒன்றுக்கு விண்ணப்பம் அனுப்பியிருந்தேன். அப்போது காயிதேமில்லத் அவர்கள் சென்னை சட்டசபையில் எதிர்க் கட்சித் தலைவராக இருந்தார்கள். காங்கிரஸ் ஆட்சி நடத்திய காலம்.

என்ஜினீயரிங் கல்லூரிக்கு நான் மனு அனுப்பியிருந்த விஷயம் பற்றி அவர்கள் யாரிடமும் சொல்லவும் இல்லை. எந்த சலுகைகளையும் எதிர்பார்க்கவுமில்லை. ஆனால் எவரும் எதிர்பாராதபடி ஒருநாள் என்ஜினீயரிங் கல்லூரியில் சேருமாறு எனக்கு அனுமதி கடிதம் வந்து விட்டது. அதன்படி ஆறாவது மாதம் பயிற்சி எடுத்துக் கொண்டிருந் தேன்.

அப்போதுதான் என் தந்தையாருக்கு ஓர் உண்மை தெரிய வந்தது. ஒரு அமைச்சரின் சிபாரிசின் பேரில் தான் எனக்கு என்ஜினீயரிங் கல்லூரியில் இடம் கிடைத்திருக்கிறது என்ற உண்மை.

உடனடியாக அவர்கள் எனக்குப் போட்ட உத்தரவு, ''நாளையிலிருந்து நீ கல்லூரிக்குப் போக வேண்டாம்.''

நானும் என் தந்தையாரின் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்தேன். ஒரு அமைச்சரின் சிபாரிசினால் தனது மகனுக்கு என்ஜினீயரிங் கல்லூரியில் இடம் கிடைத்தது என்ற சொல்லுக்கு இடம் வைக்க அவர்கள் விரும்பவில்லை. அப்படியே கடைசிவரை எந்த சலுகைகளிலும் தன்னை சம்பந்தப்படுத்தாமல் ஒரு கொள்கைக்காக அவர்கள் வாழ்ந்தார்கள்.

# 16

*(அரசியல் சாசனத்தின் ஏழாவது திருத்த மசோதா ராஜ்ஜிய சபையில் சமர்ப்பிக்கப்பட்ட பொழுது 11-9-56 அன்று கீழ்க்கண்ட பிரேரணையை காயிதே மில்லத் தாக்கல் செய்தார்கள்.)*

திருத்தத்தின் சுருக்கம்:- உத்திரப் பிரதேசம், பீஹார், டெல்லி பிரதேசம் ஆகிய மாநிலங்களில் உர்தூ மொழியை பிராந்திய அல்லது ஆட்சி மொழியாக அங்கீகாரம் செய்ய வேண்டும். இம்மாநிலங்களில் உள்ள அனைத்து ஆரம்ப பாடசாலைகளிலும் தாய்மொழியிலே கல்வி கற்றுக்கொடுக்கப்பட வேண்டும். ஒரு உயர்நிலைப் பள்ளியில் 25 மாணவர்களோ அல்லது மொத்த மாணவர்களில் 15 சதவிகித பேரோ தங்களுடைய தாய் மொழியில் தான் பாடங்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டால் அதற்கான வசதிகளை அரசாங்கம் செய்து கொடுக்க வேண்டும். பல மொழிகள் பேசப்படும் நகரங்களில் 25 சதவிகித மக்கள் ஒரு சிறுபான்மை மொழியை தாய் மொழியாகக் கொண்டு இருந்தால் அரசாங்க அலுவலகங்களிலும், நீதி மன்றங்களிலும் அம்மொழியைப் பயன்படுத்த வசதிகள் உருவாக்கப்பட வேண்டும். ஒரு மாநிலத்தில் 10 சதவிகித மக்கள் ஒரு குறிப்பிட்ட மொழியை பேசி வந்தால் அம்மொழியிலும் அரசாங்க அறிக்கைகள், வாக்காளர் ஜாபிதாக்கள் மற்றும் அரசாங்க தஸ்தாவேஜுகள் வெளியிடப்பட வேண்டும்.

## உர்தூ மொழி

இத்திருத்தங்களின் மீது காயிதே மில்லத் பேசும் பொழுது கூறியதாவது:- உத்திரப் பிரதேசம், பீஹார் டெல்லி ஆகிய பகுதிகளில் உர்தூ மொழியை தாய் மொழியாக கொண்டவர்கள் லட்சக்கணக்கில் வாழ்ந்து வருகிறார்கள். 1951ம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பு பிரகாரம் உத்திரப் பிரதேச மாநிலத்தில் உர்தூ மொழி பேசுபவர்கள் 40 லட்சம் பேர் வாழ்கிறார்கள் என்று புள்ளி விவரங்கள் கூறுகின்றன. இந்த புள்ளி விவரங்களில் ஏதோ கோளாறு இருக்கிறது என்பதை எடுத்த எடுப்பிலே தெரிந்து கொள்ள முடிகிறது. அண்மையில் ராஷ்ட்ரபதியிடம் அம்மாநிலத்தில் உள்ளவர்களிடம் இருந்து 21 லட்சம் பேர் கையெழுத்திட்ட மகஜர் ஒன்று சமர்ப்பிக்கப்பட்டது. இவ்வளவு பேர் மகஜரில் கையெழுத்திட்டு இருந்தால் உர்தூ பேசுபவர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு இருக்க வேண்டும். சுமார் 80 லட்சத்திற்கும் அதிகமான முஸ்லிம்கள் அம்மாநிலத்தில் வாழ்ந்து வருகிறார்கள். அம்மாநிலத்தில் ஹிந்துக்கள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் மற்றும் பல பிரிவைச் சார்ந்தவர்களிலும் லட்சக்கணக்கானவர்கள் அன்றாட வாழ்க்கையில் உர்தூ மொழி பேசுபவர்களாக இருந்து வருகிறார்கள். 1947க்கு முன்பு அம்மாகாணத்தில் மொத்த மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பங்கினர் உர்தூ மொழியை பள்ளிக் கூடங்களில் முதல் மொழியாக எடுத்து படித்தவர்கள். உண்மை நிலவரம் இப்படி இருக்க இன்று கணக்கை குறைத்து காட்டுகிறார்கள். பீஹாரிலும், டெல்லியிலும் உர்தூ பேசும் மக்கள் கணிசமாகவே வாழ்ந்து வருகிறார்கள். இம்மக்களுக்கெல்லாம் நியாயம் வழங்கப்படவில்லை என்பதை நாட்டின் பிரதம மந்திரியே பகிரங்கமாகவே ஒத்துக் கொண்டிருக்கிறார். எனவே இம்மக்களுக்கு நீதி கிடைக்க ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## தென் மாநிலங்கள்

மொழிப் பிரச்சினையில் மதராஸ் மாநிலமும் மற்றும் தென் மாநிலங்களிலும் பரவாயில்லை என்று சொல்லக் கூடிய அளவுக்கு செயலாற்றி வருகின்றன. உர்தூ பேசும் மக்களுக்கும் மற்றும் சிறுபான்மை மொழி பேசும் மக்களுக்கும் தென் மாநிலங்களில் ஓரளவுக்கு வசதி வாய்ப்புக்கள் செய்து தரப்பட்டுள்ளன. பல ஆரம்ப பள்ளிகளிலும், உயர்நிலை பள்ளிகளிலும் உர்தூவிலும் மற்றும் சிறுபான்மை மொழிகளிலும் பாடங்கள் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. உர்தூ போதனை மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இந்த மாநிலங்களுக்கெல்லாம் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய திருத்தத்தின் பிரதான குறிக்கோள் பள்ளிக் கூடங்களில் தாய்மொழியில் பாடங்களை ஆரம்ப பள்ளிக்கூடங்களிலும், உயர்நிலைக் கல்விக் கூடங்களிலும் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதாகும். இதை கொள்கையளவில் எல்லோரும் ஒப்புக் கொண்டு உள்ளார்கள். அரசாங்கமும் ஏற்றுக் கொண்டு உள்ளது. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதை அமல் படுத்துங்கள் என்று தான் நான் கூறுகிறேன்.

## ஏன் இந்த பாரபட்சம்?

*[அதே தேதியில் ராஜ்ய சபையில் மற்றொரு பிரச்சினை மீது பேசும் போது காயிதே மில்லத் கூறியதாவது:-]*

யூனியன் பிரதேசங்களுக்கு லோக் சபையில் 20 இடங்களே ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இதுபோதுமானதாகயில்லை...

ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதிகள் தாங்கள் பணியாற்றிய மாநிலங்களைத் தவிர மற்ற மாநிலங்களிலோ அல்லது உச்ச நீதி மன்றத்திலோ வழக்கறிஞர்களாக பணிபுரியலாம் என்று கூறப்பட்டுள்ளது. புதிதாக ஆரம்பிக்கப்பட்ட கேரள மாநில உயர்நீதி மன்றம் சம்பந்தமாக இவ்விஷயம் குறித்து தெளிவாக இல்லை. இதர மாநிலங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள வாய்ப்புக்கள் கேரள மாநிலத்திற்கு தரப்பட வேண்டும். லட்சத் தீவுகளை யூனியன் பிரதேசங்களாக அரசு

அறிவித்துள்ளது. அந்தமான், நிக்கோபார் தீவுகளும் யூனியன் பிரதேச அந்தஸ்தை பெறுகின்றன. ஆனுல் அந்தமான் தீவுகளை நடத்தியது போல் லட்சத் தீவுகளை நடத்தப்படவில்லை. பாரபட்சம் காட்டப்பட்டுள்ளது. இரண்டும் தீவுகள் தானே, ஒன்றைவிட மற்றொன்றுக்கு அதிக சலுகைகளும், வாய்ப்புகளும் ஏற்றத் தாழ்வு களும் அளிக்கப்பட்டு இருப்பது ஏன் ?

சிறுபான்மையினர் பிரச்சினையில் நியாயம் வழங்கப் படவில்லை. இப்பிரச்சினைகளை கவனிப்பதற்கு ஸ்பெஷல் ஆபீஸர் ஒருவரை நியமிக்கலாமா? என்று அரசாங்கம் யோசித்துக் கொண்டு இருக்கிறது. பல மாநிலங்கள் சிறுபான்மையினர் மொழிகளை பாரபட்சமாக நடத்து கின்றன.

உர்தூ மொழி நிலைமை மிக மோசமாக உள்ளது. அரசியல் சாசனம் அங்கீகரித்த 14 தேசிய மொழிகளில் உர்தூவும் ஒன்று. ஆனுல் அந்த மொழிக்குப் பிராந்திய அந்தஸ்தை கூட எந்த மாநிலமும் கொடுக்கவில்லை. மாற்ருந்தாய் மனப்பான்மையுடனே அம்மொழி நடத்தப்படுகிறது. அம்மொழியினர்க்கு நியாயம் செய்யும் வகையில் சில திருத்தங்களை நான் கொடுத்துள் ளேன். அதை இந்த அவை ஏற்றுக்கொள்ளவேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

(இன்று பீஹார் மாநிலத்திலும் உத்திரப் பிரசேத் திலும் உர்தூ மொழி இரண்டாவது ஆட்சி மொழியாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது என்பது நினைவு கூரத்தக்கது.)

## 17

[கதர் மற்றும் கிராம தொழில்கள் கமிஷன் பற்றிய மசோதா 12-9-56 அன்று ராஜ்யசபையில் விவாதிக்கப் பட்ட பொழுது காயிதே மில்லத் தெரிவித்த கருத்தாவது:-]

### கிராமப்புற தொழில்கள்

இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன். கிராம தொழில்களை ஊக்குவிக்க வேண்டியது மிகவும் அவசிய மாகும். அப்பொழுது தான் நாட்டின் பொருளாதார வளர்ச்சி பரவலாக்கப்பட்டதாகும். கிராமங்களில் பல வகையான கைத்தொழில்கள் இருக்கின்றன. கதர் உற்பத்தியை ஊக்குவிக்கும் அதே சமயம், நாட்டு எண்ணெய்கள் உற்பத்தியிலும் கவனம் செலுத்த வேண்டும். தென்னிந்தியாவில் செக்கு மூலம் நல்லெண்ணெய் உற்பத்தி செய்யப்படுகிறது. இரண்டு காளை மாடுகளை வைத்து ஒரு நாளைக்கு 10அல்லது 12 மணி நேரம் என்று அதை வட்டமடிக்க செய்து எண்ணெய் உற்பத்தி செய்கிருர்கள். இது மிகவும் பழமையான முறை, இத் தொழிலை நவீனமயமாக்க வேண்டும். மின்சாரத்தை உபயோகப் படுத்தி உற் பத்தியை அதிகரிக்கச் செய்ய வேண்டும்.

அடுத்து தோல் பதனிடும் தொழில் இருக்கிறது. உரோமங்களை நீக்குவது, பதப்படுத்துவது, கெட்டிப் படுத்துவது, போன்ற பல அம்சங்கள் இத்தொழிலில் இருக்கின்றன. 1928ம் ஆண்டு தோல் விசாரணை கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டது. ஆண்டு ஒன்றுக்கு 40 கோடி ரூபாய் மதிப்புள்ள தோல்கள் இந்நாட்டில் உற்பத்தியாகின்றன என்று அந்த அறிக்கை கூறியது. ஆனுல் இன்று 100 கோடி ரூபாய்க்கு அதிகமான அளவிற்கு பதனிட்ட தோல் தயாராகின்றன. இவற்றில் கிட்டதட்ட பாதி அளவு கிராம புறங்களில் கை வினைஞர்களால் தயாரிக்கப் படுகின்றன. கிராமப் புறங்களில் தயாராகும் இத்தோல்களின் தரம் மிகவும் மோசமாக உள்ளது, கச்சா நிலையிலே உள்ளது. இத் தோலின் தரத்தை உயர்த்த அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமானுல் தோல் உற்பத்தியின் மொத்த மதிப்பளவு மென்மேலும் உயரும் என்பதில் சந்தேகமில்லை.

அடுத்து பனைமரம், மற்றும் அந்த ரகத்தைச் சார்ந்த மரங்களில் இருந்து கிடைக்கும் உற்பத்திப் பொருட்கள் உள்ளன; இவைகளும் கிராமப் புறங் களில் தயாரிக்கப்படுகின்றது. பனை நாரில் இருந்து ஏராளமான தட்டு முட்டு சாமான்கள் தயாராகின்றன. பனை வெல்லம் பனங்கற்கண்டு போன்ற பொருள்களும் தயாரிக்கப்படுகின்றன. நவீனமுறையில் இப்பொருளை தயாரிக்கவும், அதிக அளவில் உற்பத்தி செய்யவும், அரசாங்கம் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

விவசாயத்திற்கான கருவிகள், பாய் முடைதல், கூடை பின்னுதல், நூல் நூற்றல் போன்ற பல தொழில்களும் கிராமப்புறங்களில் இருக்கின்றன. கிராம மக்களுக்கு அதிக அளவில் வேலை வாய்ப்பு கிடைக்கும் வகையில் இத் தொழில்கள் அனைத்தும் ஊக்குவிக்கப்படவேண்டும்.

## 18

[அணு ஆராய்ச்சி சோதனைகளைக் கண்டிக்கும் வகை யில் உலக அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும் என்று பாராளுமன்றத்தில் பேச்சு வந்தது. அச்சமயம் 24-5-57 அன்று ராஜ்ய சபையில் காயிதே மில்லத் தெரி வித்த கருத்தாவது:]

### அணு மாசுபாடு அபாயம்

அணு சோதனைகள் மூலம் உண்டாகும் அபாயம் குறித்து விஞ்ஞானிகளும், அறிஞர்களும் எச்சரிக்கை விடுத்த வண்ணம் இருக்கிருர்கள். வானவெளியை இச் சோதனைகள் மாசுபடுத்துகின்றன என்றும் அதனுல் பூமியில் வாழும் மக்கள் அனைவருக்கும் சுகாதாரக் கேடுகள் உண்டாகும் என்றும் இந்த அறிஞர் பெரு மக்கள் எச்சரித்துள்ளார்கள். அணு ஆராய்ச்சி மூலம் வெளிப்படும் கதிர்கள் மனித இனத்திற்கே கேடு பயப்ப தாகும் என்றும் சொல்லப்படுகிறது. எனவே இம்மாதிரி பரிசோதனைகளை மேற்கொள்ள வேண்டாம் என்று சம் பந்தப்பட்ட நாடுகளைக் கேட்டுக் கொள்வது நமது கடமையாகும். இதற்கு சாதகமாக உலக அபிப்பிரா யத்தை நாம் உருவாக்க வேண்டும்,

ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் இத்துறையில் முயற்சி செய்த போதிலும் எதிர்பார்த்த பலன்கள் கிடைக்க வில்லை. எனவே நமது இந்திய அரசாங்கம் இத்துறையில் முன்னுக்கு வந்து உலக பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். வல்லரசு நாடுகளையும், ஏனைய நாடுகளையும் அழைத்து ஒரு மாநாடு நடத்தி இப் பிரச்சினை குறித்து விவாதிக்க, நமது மத்திய அரசு ஆவன செய்ய வேண்டும். அந்த பொறுப்பு நமது நாட்டிற்கு இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

இவ்வாறு மாநாடு நடத்தும் பொறுப்பை நமது அரசாங்கமே முன்னின்று செய்யலாம் அல்லது ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளையோ அல்லது பாண்டுங் மாநாட்டு நாடுகளையோ சேர்த்துக் கொண்டு இத்துறையில் முயற்சிக்கலாம். நமது முயற்சி உலக அரங்கில் வரவேற்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. எனவே அவையில் கொண்டு வரப்பட்டுள்ள இத்தீர்மானத்தை நான் முழுமனதோடு ஆதரிக்கிறேன்.

## 19

*[ரயில்வே பட்ஜெட் பற்றிய விவாதம் 28-5-57 அன்று ராஜ்ய சபையில் விவாதிக்கப்பட்டபொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-]*

### தெற்கு தேய்கிறது

நாட்டின் தென் பகுதியில் ரயில் வசதிகள் போதுமானதாக இல்லை என்று சென்ற ஆண்டும் நான் கூறினேன். இந்த ஆண்டும் கூறுகிறேன். கடந்த ஓராண்டாக எவ்வித முன்னேற்றத்தையும் நான் காண வில்லை. சென்ற ஆண்டே நிலாம்பூர்-பெர்ரோக் ரயில் பாதைப் பற்றியும், மானுமதுரை-மணியாச்சி ரயில் பாதைப் பற்றியும், கள்ளிக்கோட்டை ரயில் நிலையம் பற்றியும், திருச்சிராப்பள்ளி, மாயவரம் பகுதியில் இரட்டை ரயில் பாதை அமைப்பது பற்றியும் கூறினேன். இதில் ஒரு அயிட்டத்தைக்கூட ரயில்வே நிர்வாகம் எடுத்துக் கொண்டதாக தெரியவில்லை.

சென்னையிலிருந்து விழுப்புரம் வரையிலுள்ள ரயில் பாதையை மின்சார மயமாக்குவது குறித்து பல ஆண்டுகளாக பேச்சு நடைபெற்று வருகிறது. ரயில்வே நிர்வாகத்துக்கும் மாநில அரசுக்குமிடையில் மின்சார கட்டணம் சம்பந்தமாக உடன்பாடு ஏற்படுவதில் அதிக கால தாமதமாகி விட்டது. இப்பொழுது இரு தரப்பினரும் சுமுகமான முடிவுக்கு வந்துள்ளதாகத் தெரிகிறது. இருந்தபோதிலும் மின்சார மயமாக்கும் பணி இன்னும் ஆரம்பித்தபாடில்லை. இதற்கு காரணம் என்ன என்று விசாரித்தபோது எ.சி, **(A.C.)** மின்சாரத்தை உபயோகிக்கலாமா அல்லது டீ.சி **(D.C.)** மின்சாரத்தை உபபோகிக்கலாமா என்று வல்லுநர்களுக்குள் ஒரு முடிவு ஏற்படவில்லை என்று சொல்கிறார்கள். இதையெல்லாம் அவர்கள் முன்கூட்டியே பேசி முடிவு செய்திருக்க வேண்டும். எனவே முன்யோசனையுடன் நடந்து இருந்தால், கால தாமதத்தை தவிர்த்து இருக்கலாம். சென்னை நகரைச் சுற்றிலும் உள்ள புறநகர் ரயில்வே நிலையங்களில் பல இடங்களில் போதிய வசதிகள் செய்யப்படாமல் இருக்கின்றன. ஆயிரக்கணக்கான மக்கள் தினசரி இந்த ரயில் நிலையங்களை உபயோகப்படுத்துகிறார்கள். இந்த ரயில் நிலையங்களின் பிளாட் பாரங்களுக்கு போதிய அளவு மேற்கூரை இல்லாது இருக்கிறது. மழை காலங்களில் பிரயாணிகள் மிகவும் அவதிப்படுகிறார்கள். பிரயாணிகளுக்கு வசதி செய்து கொடுப்பதில் ரயில்வே நிர்வாகம் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

நாட்டின் தென்கோடியில் திருநெல்வேலி மாவட்டத்தில் பேட்டை என்ற ரயில் நிலையம் இருக்கிறது. அந்த ரயில் நிலையத்தில் குடிதண்ணீர் வசதி இல்லை, பிரயாணிகள் தங்க இடவசதி இல்லை. மற்றும் பல வசதி குறைவும் உள்ளன. நான் அந்த ஊருக்குபோகும் சமயங்களில் எல்லாம் இந்த குறைபாடுகளை என்னிடம் அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். ரயில்வே நிர்வாகம் இதை கவனத்தில் கொள்ள வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

## 20

*[கிரிமினல் சட்டதிருத்த மசோதா பற்றிய விவாதம் ராஜ்ய சபையில் 31-5-57 அன்று விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் அவர்கள் கூறியதாவது:-]*

### உள் நோக்கத்தை ஆராய வேண்டும்

குறிப்பிட்ட ஒரு மதத்தலைவரைப் பற்றி அவதூறாகவும், ஆபாசமாகவும் பத்திரிக்கையில் எழுதப்பட்டக் காரணத்தினால், பெரும் எதிர்ப்புகளும், ஆர்ப்பாட்டங்களும் உண்டாயின என்றும் அம்மாதிரி சூழ்நிலைகளைத் தவிர்ப்பதற்காகவே இச்சட்டம் கொண்டு வரப்படுகிறது என்றும், இந்த அவையில் தாக்கல் செய்யப்பட்ட மசோதாவின் குறிக்கோளில் சொல்லப்பட்டிருக்கிறது. அண்மை காலங்களில் நடந்த ஒரு சம்பவத்தின் அடிப்படையில் 1956ம் ஆண்டு செப்டம்பர் மாதத்திற்கு முன்னரே இந்த அவையில் ஒரு மசோதா தாக்கல் செய்ய நான் அனுமதி கோரியிருந்தேன். எனது மசோதாவை ஒத்த நிலையில் இப்பொழுது தாக்கல் செய்யப்படும் இம்மசோதா அமைந்துள்ளது.

இந்த நாட்டை ஆண்ட ஆங்கிலேயர்களால் இந்தியன் பீனல் கோடு சட்டம் உருவாக்கப்பட்டது. சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே அச்சட்டத்தில்

எந்த ஒரு மனிதனும் அவன் பின்பற்றும் மார்க்கத்திற்காக பிற மதத்தினர்களால் துன்பம் அனுபவிக்க அனுமதிக்கலாகாது என்றும், அவன் விரும்பும் மதத்தைப் பின்பற்றும் உரிமை அவனுக்கு இருக்கிறது என்றும் அன்றே விதியாக அமைத்துள்ளார்கள். இப்பொழுது சமர்ப்பிக்கப்பட்ட மசோதாவிலும் எந்த ஒரு மதத்தைச் சார்ந்த தலைவரையோ அல்லது தலைவர்களையோ எழுத்தாலோ, பேச்சாலோ அல்லது சமிக்ஞைகளாலோ அவமதிக்கக்கூடாது, இழிவுபடுத்தக்கூடாது என்றும் இம்மாதிரி குற்றங்களை இழைப்பவர்களுக்கு இரண்டாண்டு சிறை தண்டனையோ அல்லது அபராதமோ அல்லது இரண்டும் சேர்த்தோ விதிக்கப்படலாமென்றும் இந்த மசோதாவிலும் கூறப்பட்டுள்ளது. இந்தியன்-பினல் கோடு சொன்னதை வேறு ஒரு விதமாக இந்த மசோதா எடுத்து விளக்குகிறது. எந்த ஒரு மதஸ்தாபகர்களும் அவர்கள் உயிருடனிருந்தாலும் சரி அல்லது இறந்து விட்டாலும் சரி அவர்கள் மீது வசைமாரி பொழிவது குற்றமே என இந்த மசோதாவின் 15வது விதி தெளிவாகக் கூறுகிறது.

ஒரு மதத்தைப் பற்றியோ அதன் தலைவரைப் பற்றியோ இழிவாக சொல்லும் பொழுது அப்படி சொல்பவரின் உள்நோக்கம் என்ன என்பதையும் தெரிந்தே குற்றத்தைத் தீர்மானிக்கவேண்டும் என்று நான் கொடுத்திருக்கும் திருத்தம் கூறுகிறது. சில வழக்குகளில் நீதிமன்றங்களில் நீதிபதிகள் குற்றம் சாட்டப்பட்டவருடைய உள்நோக்கம் தவறாக இல்லை என்று கூறி வேறு விதமாகத் தீர்ப்புகளை வழங்கி விடுகிறார்கள். குற்றம் புரிந்தவர்கள் தப்பிவிடாமலிருக்கவும் நீதிபதிகள் மேற் போக்கானதொரு அபிப்ராயத்தைக் கொள்ளாமல் இருக்கவுமே எனது திருத்தம் வழி வகுக்குகிறது.

விமர்சனம் செய்யும் உரிமை ஒருவருக்கு உண்டு என்ற போதிலும் அது வசைமொழியா? இழிசொல்லா? என்பதை தீர்மானிக்கும் பொறுப்பு நீதிபதியிடமே உள்ளது. குற்றம் புரிபவரின் நோக்கத்தையும், மனப்பான்மையையும் கருத்தில் கொள்ள வேண்டுமென்றாலும், இவ்விஷயத்தில் இளக்காரமாக நடந்து கொண்டால் குற்றவாளி தப்பி விடுவதற்கு வழியிருக்கிறது. எனவே தான் எந்த ஒரு மதத்தையோ அல்லது அதன் தலைவரையோ குறித்து ஆபாசமாகவோ அல்லது அவதூறாகவோ சொன்னால் அவர்களுக்கு தண்டனை கிடைக்கும் நிலையில் சட்டம் தெளிவாக இருத்தல் அவசியம். எனவே எனது திருத்தத்தையும் இந்த மசோதாவுடன் சேர்த்துக் கொள்ளும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

## மத உணர்ச்சிகளை புண்படுத்தக் கூடாது

*[அதே தினத்தில் தங்களது திருத்தத்திற்குப் பதில் கூறும் வகையில் மீண்டும் பேசியபோது காயிதேமில்லத் கூறியதாவது:-]*

உயிருடனோ அல்லது மறைந்துவிட்ட நிலையிலோ வுள்ள மதத்தலைவர்கள் பற்றி ஆபாசமாக எதுவும் கூறக்கூடாது என்று நான் கூறினேன். உதாரணத்திற்கு, கத்தோலிக்க மதத்தலைவரான போப்பாண்டவரை எடுத்துக் கொள்ளுங்கள். அவரைப் பற்றி யாராவது வசைமாரி மொழிந்தால் அதுபற்றி அவர் கவலைப்படப் போவதில்லை, அதை அவர் சட்டை செய்யவும் மாட்டார். ஆனால் அவர் தலைமையை ஏற்றுநடக்கும் மக்கள் கூட்டம் சும்மாயிருக்காது. தங்களது மத உணர்ச்சிகள் புண்பட்டுவிட்டதாக அம்மக்கள் நினைக்கலாம். இம்மாதிரி சூழ்நிலைகளில் அரசாங்கம் என்ன செய்யப் போகிறது என்பதுதான் கேள்வி? எனவே மக்களின் மத உணர்ச்சிகளை புண்படுத்தாத வகையில் ஒருவரின் பேச்சும் எழுத்தும் அமைதல் அவசியம்.''

---

## உடலை புல்லரிக்க வைத்த சம்பவம

என்னுடன் பேசிக் கொண்டிருந்தபோது காயிதே மில்லத் அவர்கள் ஒரு விஷயத்தைக் கூறினார்கள்.

''பெருமானார் நாயகம் (ஸல்) அவர்கள் தனது வேலையை இன்னும் ஐரோப்பா போன்ற மேலை நாடுகளில் செய்து கொண்டிருக்கிறார்கள்!'' என்றார்கள்.

''அதை எப்படி அறிந்தீர்கள்?''என்றேன்.

''நான் ஒரு முறை டில்லியில் முஹம்மது மர்மடியூக் பிக்தால் அவர்களைக் கண்டேன். அவர் கிருஸ்துவ மார்க்கத்திலிருந்து இஸ்லாத்திற்கு வந்து அரிய சேவைகள் புரிந்த மேதை. ''நீங்கள் அந்த மார்க்கத்தில் பற்றுதல் கொண்டு வரக்காரணமாக இருந்த சம்பவமெது'' என்று பிக்தால் அவர்களைக் கேட்டேன். இதனை நான் கேட்டவுடன் அவர்களுடைய உடம்பெல்லாம் புல்லரித்தது-உடல் நடுங்கியது. நடுங்கிய குரலில் கூறினார்கள்.

''ஒரு நாள் எனது கனவில் நாயகம் (ஸல்) அவர்கள் தோன்றினார்கள். விளக்கம் தந்தார்கள்; பணித்தார்கள்'' என்றார். அதற்கு மேல் அவரால் எதுவும் சொல்ல முடியவில்லை. பெருமானாரின் தோற்றத்தை நினைத்து உருகிக் கொண்டிருந்தார்! இதைச் சொல்லும் போது காயிதே மில்லத் அவர்கள் கண்களில் நீர் கசிந்தது.

எனது மேலெல்லாம் புல்லரித்தது. அல்லாஹ் எத்தகைய பாக்கியத்தை முஹம்மது பிக்தாலுக்குத் தந்திருக்கின்றான்.

காயிதே மில்லத் அவர்கள் தைப்பிங்கில் தங்கியது இரண்டு நாட்கள்தான் என்ற போதிலும், அந்த இரண்டு நாட்களும் மறக்க முடியாத மாபெரும் நன்னாட்களாகும். மறக்க முடியாத மாபெரும் தலைவருக்கு பொன்மலர் காணும் செயல் கண்டு மிகவும் மகிழ்கின்றேன்.

புகழை விரும்பாத சேவையாளருக்கு இத்தகு வரலாற்று சிறப்பு மிக்க மலர் வெளியிட்டு பாராட்டுவது அவசியமான பணியாகும். வளர்க நற்பணி!

ஆ. இ. முஹம்மது இப்ராஹீம் தைப்பிங்- மலேஷியா

29-7-66 அன்று நடந்த நிகழ்ச்சி காயிதே மில்லத் மலர் 1979 [P.N.I. அபூத்தாலிப், M.A. அக்பர் பதிப்பித்தது]

## 21

*[3-9-57 அன்று ராஜ்ஜிய சபையில் நிதி மசோதா விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் கூறிய தாவது:-]*

### தன்கையே தனக்குதவி

புதிய வரிக்கொள்கை நடுத்தர வர்க்கத்தினரை மிகவும் பாதித்துள்ளது. நடுத்தரக் குடும்பங்கள் தங்களது வரவு-செலவுகளை சரிக்கட்ட முடியாது திணறிக்கொண்டிருக்கும் பொழுது அவர்கள் மீது மேலும் வரிச்சுமையை ஏற்றும்பொழுது என்ன நிலைமை ஏற்படும்?

அவர்களால் என்ன பணத்தைச் சேமிக்க முடியும்?

அதுமட்டுமல்லாமல் மறைமுகவரிகள் விலைவாசிகளை ஏற்றி விடுகின்றன. இதுவும் நடுத்தரவர்க்கத்தினரை மறைமுகமாகப் பாதிக்கிறது. எக்ஸைஸ் வரிகள் விலைவாசியை ஏறச் செய்யாது என நிதி அமைசசர் கூறுகிறார். ஆனால் உண்மை அப்படியல்ல, பொருளை வாங்குபவர்களுக்குதான் தங்கள் கையை விட்டு எவ்வளவு பணம் போகிறது என்பது தெரியும்; ஒன்று அப் பொருளை வாங்குவதை நிறுத்திக் கொள்வார்கள், அல்லது வாங்கும் அளவைக் குறைத்துக்கொள்வார்கள் உதாரணத்திற்கு ஜீனியை எடுத்து கொள்ளுங்கள். ஜீனிவிலை கூடினால் ஜீனி வாங்குவதை குறைத்துக் கொள்வார்கள் அல்லது ஜீனி வாங்குவதை நிறுத்தி விடுவார்கள்.

வெல்லம்-கருப்புக்கட்டி போன்ற பொருள்களை வாங்க முனைவார்கள். இதைத்தான் நாம் அன்றாட வாழ்க்கையில் காண்கிறோம்.

நாம் திட்டங்களை வகுக்கும்பொழுது உள்நாட்டில் திரட்டப்படும் மூலதனங்களைத்தான் பெரிதும் நம்பியிருக்க வேண்டும். வெளிநாட்டு உதவிகளும் அவசியம் தான். ஆனால் அதை மட்டும் நம்பி, திட்டத்தைத் தயாரிக்கக்கூடாது. ஒரு வேளை வெளிநாட்டு உதவி கிடைப்பது குறைந்துவிட்டாலோ அல்லது தடைப்பட்டு விட்டாலோ, நமது திட்டத்தின் கதி சீர்குலைந்து போகும். எனவே உள்நாட்டு மூலதனங்களை திரட்டு வதில்தான் திட்டக்குழுவினர் முனைப்புடன் செயல்பட வேண்டும்.

### வெள்ளாட்டுத் தோல்

அந்நியச் செலாவணி சம்பாதிப்பது நமது பிரதான குறிக்கோளாக இருக்கிறது, இந்த வகையில் வெள்ளாட்டுத் தோல் ஏற்றுமதி கணிசமாக உதவக்கூடும். உலகிலேயே வெள்ளாட்டுத் தோல் ஏற்றுமதியில் இந்தியாதான் முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. எனவே வெள்ளாட்டுத் தோலை நன்கு பதனிட்டு ஏற்றுமதி செய்தால் நமது அந்நியச் செலாவணி வருமானம் அதிகரிக்கவே செய்யும். அத்துடன் மட்டு நின்று விடாது, வெள்ளாட்டுத் தோல் மூலம் தயாரிக்கப்படும் சாமான்களையும் பொருள்களையும் நமது நாட்டிலேயேதயாரித்து விற்பனைக்குத் தயாராக உள்ள பொருள்களாக வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தால் நமது வருமானம் மென்மேலும் அதிகரிக்கும், செம்மறியாட்டுத் தோலுக்கும் மேற் கூறிய கருத்து பொருந்தும்.

கைத்தறி நெசவுத் தொழில் பற்றி ஒவ்வொரு ஆண்டும் நான் பேசிக் கொண்டுதான்வருகிறேன். சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம், அது குறித்து எடுத்துச் சொல்கிறேன். பாவப்பட்ட ஏழை எளிய கைத்தறி நெசவாளர் குறித்து இந்த அரசு அதிக கவனம் செலுத்த வேண்டும்.

## 22

*[9-9-57 அன்று ராஜ்ய சபையில் சர்வதேச நிலைமை குறித்து விவாதம் நடைபெற்றபொழுது காயிதே மில்லத் கூறியதாவது:-]*

### நமது அயல் நாட்டுக் கொள்கை

இந்திய மக்கள் பல்வேறுபட்ட கொள்கைகளை உடையவர்களாகவும், சமுதாயத்தினர்களாகவும் இருந்த போதிலும், இந்திய அரசு பின்பற்றிவரும் அயல் நாட்டுக்கொள்கை சம்பந்தமாக அவர்கள் அனைவரும் ஒருமித்த கருத்து உடையவர்களாகவே இருக்கிறார்கள். இந்திய அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையை நாங்கள் முழுமனதுடன் ஆதரிக்கிறோம். உலகம் சமாதானமாக வாழ வேண்டும் என்பது நமது அயல்நாட்டுக் கொள்கையின் அடிப்படையாகும். பாரதப் பிரதமர் பண்டித நேரு இத்துறையில் செம்மையாக செயல்பட்டு வருகிறார். நமது நாடு பல முன்னேற்ற திட்டங்களை மேற்கொண்டிருக்கிறது. அந்நிய உதவிகளையும், நாம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். உலகம் சமாதானமாக வாழ்ந்தால் தான் நமது நாடு முன்னேற முடியும்.

ஐக்கியநாடுகள் சபை போக, பல கூட்டமைப்புகளிலும் நமது நாடு அங்கம் வகித்து வருகிறது. பிரிட்டிஷ் காமன் வெல்த்தில் நாம் உறுப்பினராக இருக்கிறோம். சூயஸ்கால்வாய் விஷயமாக எகிப்து மீது பிரிட்டிஷ் ராணுவம் படையெடுத்துச் சென்ற பொழுது நாம் அதைக் கண்டிக்கத் தவறவில்லை. இந்தியாவில் பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்து வந்த பாண்டிச்சேரி, காரைக்கால் போன்ற இடங்களின் ஆட்சிமாற்றங்களை இன்னமும் பிரெஞ்சு அரசாங்கம் முறையாக மாற்றிக் கொடுக்கவில்லை. இதையும் நாம் கண்டித்துள்ளோம். அல்ஜீரியாவிலும், சூயஸ் கால்

வாய் விஷயத்திலும் பிரெஞ்சு அரசாங்கம் நடந்து வந்ததையும் நாம் கண்டித்துள்ளோம். உலகில் எங்கெங்கெல்லாம் குழப்பங்களும், போர்களும் தலைதூக்குகின்றனவோ அவற்றை எல்லாம் தட்டிக் கேட்பது நமது அயல்நாட்டுக் கொள்கையாக இருந்து வருகிறது.

நமது அயல் நாட்டுக் கொள்கை பஞ்ச சீலத்தின் அடிப்படையில் அமைந்துள்ளதாக நமது பிரதமர் கூறி வருகிறார். உலக நாடுகளிலெல்லாம் அமைதி நிலவ வேண்டுமென நாம் விரும்புகிறோம். ஆனால் நம்மைச் சுற்றியுள்ள சில அண்டை நாடுகள் நம்மிடம் வம்புக்கு வந்து கொண்டிருக்கின்றன. மேற்கு கரையிலுள்ள ''கோவா'' இந்தியாவின் ஒரு பகுதியேயாகும். அங்கு வாழும் மக்கள் இந்தியாவுடன் இணைவதையே விரும்புகிறார்கள். அந்நிய ஆதிக்கம் அங்கு நீடிப்பதை அந்த மக்களும் விரும்பவில்லை. ''கோவா'' விஷயத்தில் நமது அரசாங்கம் என்ன செய்ய வேண்டுமென்று நினைக்கிறதோ அதை துணிந்து செய்யட்டும். இந்நாட்டு மக்கள் அதற்கு ஆதரவாகவே இருக்கிறார்கள்.

## கஷ்மீர் விவகாரம்

அடுத்து கஷ்மீர் பிரச்சினை; இந்திய முஸ்லிம்கள் உட்பட இந்நாட்டு மக்கள் அனைவரும் கஷ்மீர் இந்தியாவின் ஒரு பகுதி என, சந்தேகத்திற்கு இடமில்லாத வாறு தெரிவித்து விட்டார்கள். சட்டபூர்வமாக கஷ்மீர் இந்தியாவுடன் இணைந்துவிட்டது.

கஷ்மீர் மகாராஜா இணைப்பு ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டுள்ளார். ஜம்மு கஷ்மீர் மக்களும் இந்த இணைப்பை அங்கீகரித்து விட்டனர். ஆனால், ஐக்கிய நாடுகள்சபையில் பாக்கிஸ்தானும் முறையிட்டுக் கொண்டுள்ளது. இந்தியப் பிரதேசத்திற்குள் நுழைந்து ஆக்கிரமிப்பு செய்தது மட்டுமல்லாமல் பாக்கிஸ்தான் புகாரும் கொடுத்துள்ளது. ஐக்கியநாடு சபை இந்தப் பிரச்சினையை இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது. பாக்கிஸ்தான் தனது ஆக்கிரமிப்பை அகற்றிக் கொள்ள வேண்டும். இப்படி ஒரு முடிவெடுக்க, கிட்டத்தட்ட பத்தாண்டுகள் சென்று விட்ட பின்னரும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தால் முடியவில்லை.

சில வல்லரசு நாடுகளிடமிருந்து நமது அண்டை நாட்டிற்கு ராணுவ உதவிகள் கிடைத்து வருகின்றன. அந்த தைரியத்தில் அது வீராப்புடன் பேசி வருகிறது. ஆனால் இந்தியா பொறுமையாகவும், சமாதானத்தில் நம்பிக்கை வைத்த வண்ணமும் செயலாற்றி வருகிறது. இந்தியாவின் நியாயமான முயற்சிகள் வீண் போகாதென நான் நம்புகிறேன்.

கஷ்மீர் ஒரு தேசிய பிரச்சினை. இதில் ஹிந்து, முஸ்லிம், சீக்கியர், கிறிஸ்தவர் என்ற பாகுபாடு இல்லை. இந்த அரசை இந்திய முஸ்லிம்கள் அனைவரும் முழு மனதுடனும், ஆணித்தரமாகவும் ஆதரிக்கிறார்கள். இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் தலைவர் என்ற முறையில் நான் இதைப் பல தடவைகளில் தெரிவித்துள்ளேன். இந்நாட்டு நலன்களைக் காப்பதிலும், இந்நாட்டின் எந்த ஒரு பகுதியிலும் தீங்கு நேராவண்ணம் காப்பதிலும், எப்பொழுதுமே முஸ்லிம்கள் முன்னணியில் இருப்பார்கள். நமது தாய் நாட்டு வெற்றியையும் சுபிட்சத்தையும், பலத்தையும் மகிழ்ச்சியையும், பெருமையையும் பெறவேண்டுமென எல்லாம் வல்ல இறைவனிடம் நான் பிரார்த்திக்கிறேன்.

## காமன்வெல்த் கூட்டு நன்மையே தரும்

*[12-12-57 அன்று ராஜ்ய சபையில் சர்வதேச நிலவரம் குறித்து விவாதம் நடந்தபொழுது காயிதே மில்லத் அதிலும் கலந்து கொண்டு உரையாற்றினார்கள்]*

வல்லரசு நாடுகள் இன்று அணு ஆயுதங்களைப் பரிசோதனை செய்து கொண்டிருக்கின்றன. உலக மக்களுக்கே இது ஒரு சாபக் கேடாக இருந்து வருகிறது. இன்று வாழும் மக்களை மட்டும் இது பாதிக்கவில்லை. இனி பிறக்கப்போகும் குழந்தைகளையும் இந்த பரிசோதனைகள் அதிகமாக பாதித்து விடலாம்; விண்வெளி அளவுக்கதிகமாக மாசுபட்டு வருகிறது. விஞ்ஞானிகளும், உலக அறிஞர்களும் இன்று இதைப் பற்றித்தான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

காமன் வெல்த்தில் நமது நாடு தொடர்ந்து அங்கம் வகிப்பதை ஒரு சிலர் குறைகூறி வருகிறார்கள். இந்த உறவினால் நமக்கு என்ன லாபம்? என சிலர் வினவுகிறார்கள். இதன் மூலமாக உண்மையிலேயே பல அனுகூலங்கள் நமக்கு இருக்கின்றன. சில வெளிக்கு தெரிந்ததாக இருக்கலாம். சில வெளியில் தெரியாமலும் இருக்கலாம். காமன் வெல்த் கூட்டில் நாம் அங்கம் வகித்து வருவது நமக்கு அனுகூலமானது. நன்மை பயக்கக் கூடியது, என்ற கருத்துடையவன் நான். கோவா குறித்து நமது அரசு மேற்கொண்டுவரும் நடவடிக்கைகளை நான் ஆதரிக்கிறேன். காலனி ஏகாதிபத்தியத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தே ஆக வேண்டும்.

## அடாத செயல்

கஷ்மீர் குறித்து சில வார்த்தைகள் : எங்களுடைய நிலைமையை இந்த மன்றத்தில் பல தடவைகள் தெளிவு படுத்தியுள்ளேன். 1947லேயே இந்தியாவுடன் கஷ்மீர் இணைந்து விட்டது. பத்தாண்டுகள் சென்றுவிட்ட பிறகு அங்கு வாக்கெடுப்பு நடத்த வேண்டுமெனக் கேட்பது விசித்திரமாக இருக்கிறது. இது ஒரு சர்வ தேசப் பிரச்சினை அல்ல. இது ஒரு உள்நாட்டுப் பிரச்சினை. கஷ்மீர் மக்களுக்கு நாம் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவோம். இதில் அந்நியர் தலையீடு தேவையில்லை. கஷ்மீர் பிரச்சினை விவாதிக்கப்படும் பொழுது பாக்கிஸ்தான் அபாண்டமானதொரு விஷயத்தை கூறி வருகிறது. இந்திய முஸ்லிம்களை அது வம்புக்கு இழுக்கிறது, விவகாரத்திற்கு உட்படுத்துகிறது. இது ஒரு அடாத செயலாகுமென நான் எச்சரிக்கிறேன். இந்த அரசியல் விளையாட்டில் இந்திய முஸ்லிம்களை இழுக்க வேண்டாமென அவர்களுக்கு சொல்லி வைக்கிறேன்.

நாட்டில் வாழும் ஏனைய மக்களைப் போல முஸ்லிம்களும் கஷ்மீர் விஷயத்தில் ஒருமித்தக் கருத்தை உடையவர்களாகவே இருக்கிறார்கள். அபிப்பிராய பேதமே இல்லை. கஷ்மீர் பிரச்சனை யாகட்டும், வேறு எந்த அயல்நாட்டு விஷயங்களாகட்டும், இந்திய அரசின் நடவடிக்கைகளை இங்கு வாழும் முஸ்லிம்கள் முழுமனதுடன் ஆதரிக்கிறார்கள், இங்கு வாழும் முஸ்லிம்களின் கடமையென்ன, பொறுப்பு என்ன என்பது அவர்களுக்குத் தெரியும். சமயம் வரும்பொழுது அதை அவர்கள் செய்து காட்டுவார்கள். இதை யாரும் எங்களுக்கு சொல்லிக் கொடுக்கத் தேவையில்லை. இந்நாட்டின் ஒற்றுமை, ஐக்கியம், பாதுகாப்பு, போன்ற விஷயங்கள் குறித்து தேவைப்படும் சமயங்களில் இந்திய அணியில் முன் வரிசையில் இருப்பவர்களாக இந்திய முஸ்லிம்கள் இருப்பார்கள் என்பது உறுதி.

# 23

*(செலவு வரி குறித்து 11-9-57 அன்று ராஜ்ய சபையில் விவாதம் நடந்த பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-)*

## அதிகாரிகளின் கெடுபிடி

செலவுகள் மீது வரி விதித்து விட்டால் மக்கள் செலவுகளை நிறுத்திக் கொள்வார்கள் என அரசாங்கம் நினைக்கிறது. சேமிப்பு மனப்பான்மையை மக்களிடம் ஊக்குவிக்க வேண்டுமென்பதற்காக இம்மாதிரி வரிகளை விதிக்கலாம் என பொருளாதார நிபுணர்கள் சிலர் அரசாங்கத்திற்கு யோசனை சொல்லியிருக்கிறார்கள். மக்களை செலவு செய்ய விடாது தடுத்து விட்டால் எல்லோரும் சேமிக்கவா செய்வார்கள்? மனித சுபாவம் என்ன என்பது நமக்குத் தெரியும். பெரும்பாலான மக்கள் தங்களிடம் சேரும் பணத்தை பதுக்கி வைத்துக் கொள்கிறார்கள். அவர்கள் அப்பணத்தை எந்த தொழிலிலும் முடக்குவதில்லை. பதுக்கி வைத்துள்ள பணத்தை சேமிப்பு என்று கூறமுடியுமா? அந்த பணத்தின் வாயிலாக பொருளாதார வளர்ச்சி உண்டாகிறது என்று கருத முடியாது.

முடக்கப்பட்ட பணம் தொழில்களில் முதலீடு செய்யப்பட்டு மக்களுக்குத் தேவையான பொருள்கள் உற்பத்தியானால் அல்லவா அதை சரியான நடவடிக்கை எனக் கூற முடியும். அத்துறையில் கவனம் செலுத்தாது செலவினங்களின் மேல் வரி விதித்து விட்டால் மட்டும் காரியம் கைகூடி விடுமா ?

இந்த மசோதாவின் வாயிலாக பணம் படைத்த பலருக்கும் அதிகாரிகளின் மூலமாக தொந்தரவுகள் அதிகரிக்கலாம். அதிகாரிகளின் சுபாவம் நாம் அறிந்ததே! அநாவசியமான கெடு பிடிகளுக்கு செல்வந்தர்கள் உள்ளாகும்பொழுது அவர்களின் உற்சாகம் குறைந்துவிடும். நான் பணக்காரர்களுக்காகப் பேசுகிறேன் என எண்ண வேண்டாம். நான் ஒரு பணக்காரனல்ல. வருங்காலத்தில் பணக்காரனாக வேண்டுமென்ற எண்ணத்திலுமில்லை. மனித சுபாவத்தைக் கணக்கில் கொண்டு இப்படிக் கூறுகிறேன். என்னுடைய ஒரே குறிக்கோள் வியாபாரிகளும், செல்வந்தர்களும் அநாவசியமான தொந்தரவுகளுக்கு ஆளாக்கப்படக் கூடாது என்பதுதான்.

செலவினங்களுக்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. உதாரணத்திற்கு மருத்துவச் செலவை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு மனிதன் ஓராண்டிற்கு ஐந்தாயிரம் ரூபாய்க்கு உட்பட்டுத்தான் மருத்துவ செலவு செய்ய செய்ய வேண்டுமென்றிருக்கிறது. பெரும்பாலான மக்கள் ரூபாய் செலவழிப்பது இல்லை, என்றாலும் ஒரு சிலருக்கு வைத்தியச் செலவு இந்த உச்ச வரம்பையும் தாண்டிவிடக் கூடும். இதை அவர்கள் வேண்டுமென்று செலவழிப்பதில்லை, சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாகவும், அத்தியாவசியத்தின் பேரிலும் இச்செலவுகள் அதிகரித்து விடலாம். எனவே இது வகையில் நீக்குப் போக்குத் தேவை.

# 24

*[மாநிலங்களின் மேலவை பற்றிய மசோதா 13-9-57 அன்று ராஜ்ய சபையில் விவாதிக்கப்பட்ட சமயம் காயிதே மில்லத் தெரிவித்த கருத்துகளாவன:-]*

## ஓய்வு பெற்ற அரசியல்வாதியின் திறமை

மாநிலங்களில் மக்கள் பிரதிநிதித்துவ சபை ஒன்றே போதுமென்றும், அதற்கு மேலவைத் தேவையில்லை என்றும் இங்குப் பேசியவர்களில் சிலர் கூறினார்கள். மேலவை என்பது அநாவசியமான செலவு என்பது அவர்களின் வாதம். அத்துடன் 1952ம் ஆண்டு தேர்தலின் போது மதராஸில் நிகழ்ந்த சம்பவம் குறித்துப் பேசினார்கள்.

1952ம் ஆண்டு தேர்தலுக்குப்பின் மதராஸில் என்ன நடந்தது என்பதை நான் நேரில் அறிவேன். அப்பகுதியிலிருந்து தான் நான் வருகிறேன்.

1952ம் ஆண்டு பொதுத் தேர்தலில் மதராஸ் மாகாணத்தில் காங்கிரஸ் கட்சி தோற்கடிக்கப்பட்டு விட்டது, மாகாண சட்டசபையில் அக்கட்சிக்கு பெரும்பான்மை பலம் இல்லை. அக்கட்சியின் தோல்விக்குக் காரணமாக அமைந்ததில் நான் சார்ந்திருக்கும் கட்சிக்கும் பங்கு உண்டு. சட்டசபையில் இதர கட்சிகளுக்கும் தனிப்பட்ட பெரும்பான்மை இல்லை. எதிர் கட்சியினரால் மந்திரி சபை அமைக்க முடியவில்லை. காங்கிரஸ் கட்சியும் மந்திரி சபை அமைக்க முயன்றது.

எதிர்க்கட்சிகளும் மந்திரி சபை அமைக்க முயன்றன. ஆனால் காங்கிரஸ் கட்சிதான் தனிப்பட்ட முறையில் அதிக உறுப்பினர்கள் அடங்கிய கட்சி என்பதை மறந்து விடக்கூடாது.

இந்த சந்தர்ப்பத்தில் தான் இங்கு பேசிய நண்பர் கூறிய விவகாரம் நடைபெற்றது. ஓய்வுபெற்ற அரசியல் வாதியொருவர் அரங்கத்திற்குக் கொண்டு வரப்பட்டார். காங்கிரஸ் கட்சியைக் காப்பாற்ற அவர் முயன்றார். அதில் அவர் வெற்றியும் பெற்றார். பெரும்பான்மை பலம் கொண்ட கட்சியாக காங்கிரஸ் மாறியது.

இதை அவர் எப்படி சமாளித்தார்? இதர கட்சிகள் தோல்வியுற்ற இடத்தில் அவரால் வெற்றிபெற முடிந்தது. இப்படி அவர் செய்திருக்காவிட்டால் அந்த சட்டசபையில் ஒருவருக்கும் பெரும்பான்மை பலம் கிடைத்திருக்காது. யாராலும் மந்திரிசபை அமைத்திருக்க முடியாது. மீண்டும் ஒரு பொதுத் தேர்தல் அந்த மாகாணத்தைப் பொறுத்தவரையில் நடைபெற்றிருக்கும். இந்த அவல நிலையை அகற்றியவர் அந்த ஓய்வு பெற்ற அரசியல் வாதியாகும். எனவே 1952ம் ஆண்டு சம்பவம் ஒரு நல்ல திருப்பத்தையே மதராஸ் மாகாணத்திற்கு அளித்தது என்று சொல்லலாம். இந்த நிலைமை எப்படி உருவானது? மதராஸ் மாகாணத்தில் சட்ட மேலவை ஒன்று இருக்கப்போய் தான் இது சாத்தியமானது. அந்த ஓய்வுபெற்ற அரசியல்வாதி மேலவை உறுப்பினராக நியமனம் பெற்றார், அவரால் மதராஸில் ஜனநாயகம் செயல்பட ஆரம்பித்தது.

**ஸ்ரீபூபேஷ்குப்தா :-** (குறுக்கிட்டு) ''சட்டசபைக்கு வெளியிலும் ஜனநாயகம் இருக்கிறது. தில்லுமுல்லுகள் மூலமே அவர் காரியம் சாதிக்க முடிந்தது'' என்று கூறினர்.

## மேலவை அவசியமே

**காயிதே மில்லத்:-** நாம் பாராளுமன்ற ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ளவர்கள். மேலவை என்று ஒன்று இருக்கப் போய்தான் அங்கு ஜனநாயகம் செயல்பட முடிந்தது. மீண்டும் பொதுத் தேர்தலை தவிர்த்த வகையில் கோடிக்கணக்கான ரூபாய் அரசாங்கத்திற்கு மிச்சப்பட்டன. அந்த ஓய்வுபெற்ற அரசியல்வாதி களத்தில் இறங்கவில்லையானல் இந்த கதிதான் ஏற்பட்டிருக்கும்.

நமது பாராளுமன்ற ஜனநாயகத்தைப் பற்றி சிலர் குறை கூறிப் பேசினர்கள். நாம் சுதந்திரம் பெற்று பத்து ஆண்டுகள் தான் ஆகின்றன, நமது அரசியல் சாசனம் செயல்படுத்தப்பட்டு ஏழு ஆண்டுகள் தான் ஆகின்றன. சில நாடுகளில் 500-600 ஆண்டுகளாக ஜனநாயகப் பாரம்பரியம் பின்பற்றப்பட்டு வருகின்றது. நாம் ஆரம்ப கட்டத்தில் தான் இருக்கிறோம். எனவே மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பேசுவது சரியல்ல. நாம் பெரும்பாலும் பிரிட்டிஷ் பாராளுமன்ற முறைகளைத்தான் பின்பற்றி வருகிறோம். இங்கிலாந்தில் இரண்டு களங்கள் இருக்கின்றன. மற்றும் பல நாடுகளிலும் பிரதிநிதித்துவ சபையும் உண்டு. மேலவையும் உண்டு. இதனல் பல நன்மைகள் விளைகின்றன. அரசியல் அமைப்புச் சாசனம் தயாரிக்கப்பட்டபொழுது ஒவ்வொரு மாநிலத்திலும், மேலவை அவசியம் இருக்க வேண்டுமென நான் அப்பொழுதே வலியுறுத்தினேன். ஆனல் ஒரு மாநிலத்திற்கு மேலவை தேவையா? இல்லையா? என்பதை அந்தந்த மாநிலங்களே தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று அரசியல் நிர்ணய சபை முடிவு செய்தது. நமது மத்திய அரசு ''பெடரல்', அமைப்பைப் போன்றது. அங்கு இரண்டு அவைகள் இருப்பது பொருத்தமே. ஐரோப்பாவில் உள்ள சில நாடுகளைவிட மக்கள் தொகையில் நமது மாநிலங்கள் பெரியவையாகும். ஆஸ்திரேலியா கண்டத்தின் மக்கள் தொகையைவிட அதிகமான ஜனத்தொகையுள்ள மாநிலமும் நமது நாட்டில் இருக்கிறது. ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் இரண்டு அவைகள் இருக்கின்றன. அப்படியிருக்கும் பொழுது நமது மாநிலங்களிலும் ஏன் மேலவை இருக்கக்கூடாது?

## அது ஒரு பிரேக்

செலவு கணக்கைதான் சிலர் பார்க்கிறார்கள். இரண்டாவது சபை ஒரு மாநிலத்தில் செயல்பட்டால், அம்மாநிலத்தில் இயற்றப்படும் சட்டங்கள் அவசர கோலத்தில் அமையாது. ஆரஅமர இரண்டு சபைகளுமே ஆலோசனை செய்வதால் கொஞ்சம் அதிக காலம் பிடிக்கத்தான் செய்யும். ஜனநாயக மரபுகளுக்கு இது ஒரு நல்ல அம்சமாகும். ஒரு சபை அவசரப்பட்டு ஒரு சட்டத்தை இயற்றிவிட்டாலும் கூட மற்றொரு சபை அதில் காணப்படும் குறைபாடுகளை சுட்டிக்காட்ட வாய்ப்பிருக்கிறது இரண்டாவது சபையின் குறிக்கோளே இதுதான், ஒரு மாநிலத்தில் மேலவையும் இருக்கிறது என்ற எண்ணம் கீழவை உறுப்பினர்களுக்கு ஏற்படும் பொழுது தவறுதலாக சட்டங்களை இயற்றிவிடக் கூடாது என்ற ஓர் உணர்வு அந்த உறுப்பினர்களுக்கு இருக்கும். இது ஒரு நல்ல அம்சமாகும். மேலவை இருப்பது 'பிரேக்' போட்டது மாதிரி இருக்கும்.

ஒன்பது பேர் கூடி ஆலோசிப்பதை விட பத்து தலைகள் கூடி ஆலோசிப்பது சிறந்தது, அதுதான் ஜனநாயகம். ஒரு சபை இருப்பதைவிட இருசபை இருப்பது மேலானது. மனித அனுபவம் அதைத்தான் சுட்டிக் காட்டுகிறது.

மேலவை தேவையே என்பது அரசாங்க தரப்பின் வாதம். எதிர்கட்சியினர் மேலவை தேவை இல்லை என்கிறார்கள். ஒரு சிலர் பல திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். அவை உறுப்பினர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டுமென்று ஒரு திருத்தம் கூறுகிறது. இதை நான் ஆதரிக்கிறேன். சட்டமன்ற உறுப்பினர் எண்ணிக்கை அதிகமாக இருப்பது வரவேற்கத் தக்கதே.

மாநிலங்களின் புனரமைப்பு மசோதா இந்த அவையில் விவாதிக்கப்பட்ட பொழுது மதருஸிலுள்ள மேலவை உறுப்பினர்கள் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டுமென நான் அப்பொழுதே சொல்லியிருக்கிறேன். கீழவை உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கு மேலவை உறுப்பினர்களின் எண்ணிக்கை இருக்கலாம் என அரசியல் சாசனம் கூறுகிறது. அப்படி இருக்கும் பொழுது மேலவை உறுப்பினர்களின் எண்ணிக்கையை ஏன் குறைக்கவேண்டும்? மதருஸ் மேலவை எண்ணிக்கைஇப்பொழுது அதிகரிக்கப்படுகிறது. இதை முழுமனதுடன் நான் ஆதரிக்கிறேன்.''

# 25

*[தடுப்புக் காவல் சட்ட மசோதா மீது ராஜ்ய சபையில் 20-12-57 அன்று காயிதே மில்லத் பேசியதாவது:-]*

## திராவிடர் கழகப் போராட்டங்களுக்கா தடுப்புக் காவல் சட்டம்?

தடுப்புக் காவல் சட்டம் முதன்முதலாகக் கொண்டு வரப்பட்ட பொழுது நான் அதை ஆதரித்துப் பேசியிருக்கிறேன். ஒரு சில நாசகார சக்திகளும், பயங்கர வாத இயக்கங்களும், நாட்டில் தலை தூக்கி நின்ற பொழுது அம்மாதிரி சக்திகளை அடக்கி ஒடுக்குவதற்கு இம்மாதிரியான சட்டம் தேவையே என்ற காரணத்தினுல் நான் ஆதரித்தேன்.

இயங்கிக் கொண்டிருக்கும் அரசாங்கத்தை பயங்கர வாதத்தின் மூலம் தூக்கியெறிந்து விட முயற்சிப்பதை யாரும் அனுமதிக்க முடியாது தான்; அதனுல் தான் ஆரம்பக் கட்டத்தில் நான் அதை வரவேற்றேன்.

இன்று அச்சட்டத்தை மீண்டும் புதுப்பிக்க வேண்டுமென அரசாங்க தரப்பில் இப்பொழுது கூறப்படுகிறது. அதற்கு அவர்கள் காட்டும் காரணங்களில் ஒன்று, திராவிடக்கழகத்தைப் பற்றியதாகும். அது போன்ற கட்சிகள் நாட்டில் இயங்கி வருவதால் தடுப்பு காவல் சட்டமும் நீடிக்கப்பட வேண்டுமென ஆட்சியாளர்கள் கூறுகின்றனர்.

திராவிடக் கழகத்தை காரணம் காட்டினுர்கள். ஆனுல் மதருஸ் மாநிலத்தில் நடந்ததென்ன? திராவிடக்கழகமும் அதன் தலைவரும் ஏதோ கிளர்ச்சிகளும், ஆர்ப்பாட்டங்களும் செய்தார்களென குற்றஞ்சாட்டப்பட்டு நீதி மன்றங்களின் முன்பு நிறுத்தப்பட்டார்கள். நீதி மன்ற விசாரணைக்கு பின்பு அக்கழகத்தவர்களுக்கு பல்வேறு வகையான தண்டனைகள் அளிக்கப்பட்டன.

இந்நாட்டில் இயங்கி வரும் சாதாரண சட்டங்களின் வாயிலாகவே அவர்கள், நீதிமன்றங்களின் முன்பு கொண்டுவரப்பட்டார்கள், தண்டனைகளுக்கும் ஆளானுர்கள். ஏற்கனவே இந்நாட்டில் அமலில் இருக்கும் சட்டங்களே இதற்குப் போதுமானதாக இருந்தன. தடுப்பு காவல் சட்டமோ அல்லது விசேஷ சட்டங்களோ இதற்குத் தேவையில்லை. இருக்கிற சட்டங்களைக்கொண்டே எந்தக் கிளர்ச்சியையும், அராஜகத்தையும் அடக்கி விடலாம்.

### டாக்டர் லோகியா

டாக்டர் ராம் மனேகர் லோஹியா விவகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் பற்றிய வழக்கு நீதி மன்றத்தில் இருப்பதால் அது குறித்து விளக்கமாக நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. அடுத்தபடியாக டில்லியைச் சேர்ந்த முஹம்மது முஸ்தபா பாரூக்கி என்பவர் விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ''ஆஸ்தானு,'' ''பயாமே மஷ்ரிக்'' ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியர் இவர். விசாரணை ஏதுமின்றி சில மாதங்கள் இவர் சிறையில் தள்ளப்பட்டார். அவர் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகளின் நகல்களிலிருந்து தெரிய வருவது என்னவென்றுல், ஏற்கனவே இவர் புரிந்துவிட்ட சில கிரிமினல் நடவடிக்கைகளுக்காக கைது செய்யப்பட்டிருக்கிறுர் என்பதாகும்.

ஏற்கனவே அவர் குற்றம் இழைத்திருந்தால் நீதி மன்றங்களின் முன்பு அவரை நிறுத்தியிருக்கவேண்டியது தானே? இந்நாட்டில் உள்ள சட்டங்களே அதற்கு போதுமானதாயிற்றே? இருக்கிற சட்டங்களே போதுமானதாக இருக்கும்பொழுது தடுப்புக் காவல் சட்டம் எதற்கு?

உத்திரபிரதேசத்தில் ''இஸ்ஹாக் இல்மி'' என்ற ஒரு பத்திரிகை ஆசிரியர் இருக்கிறுர். யாரோ ஒருவர் எழுதிய புத்தகத்தை குறித்து தாறுமாறுக விமர்சனம் செய்து இவரது பத்திரிக்கையில் எழுதினுராம், அதற்காக இவர் கைது செய்யப்பட்டு ஜெயிலில் அடைக்கப்பட்டிருக்கிறுர். உயர்நீதி மன்றத்தில் வழக்குதொடுத்த பொழுது இவர் விடுதலைசெய்யப்பட்டுள்ளார். தடுப்புக் காவல் சட்டத்தின் பிரகாரம் கைது செய்யப்பட்டதினுலேயே இவர் உயர்நீதிமன்றம் செல்ல வேண்டியதாயிற்று. சாதாரண சட்டங்களின் பிரகாரம் இவர் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்குமாயின் கீழ் கோர்ட்களிலேயே இவ்வழக்கு பைசலாகி இருக்கும். மதருஸில் திராவிடக் கழகத் தலைவர்கள் மீது இந்த மாதிரித்தானே நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. அநாவசியமாக ஒரு பத்திரிக்கை ஆசிரியரை உயர்நீதி மன்றத்திற்கு போகும்படி செய்தது வீண் தொந்தரவு தானே?

டில்லியில் 'அப்ஸல் பிஷாவரி' என்ற ஒரு கடைக்காரர் இருக்கிறுர். ஏதோ ''பாம்'' வெடித்தது என்று காரணம் காட்டி தடுப்பு காவல் சட்டத்தின் மூலம் அவர் கைது செய்யப்பட்டு நான்கு, ஐந்து மாதங்கள்

காவலில் வைக்கப்பட்டார். பின்னர் அவர் விடுதலை செய்யப்பட்டார். அவர் குற்றம் இழைத்திருந்தால் சாதாரண சட்டங்களின் வாயிலாகவே நடவடிக்கை எடுத்திருக்கலாம். எடுத்த எடுப்பிலே தடுப்புக் காவல் சட்டத்தை தானா பிரயோகம் செய்யவேண்டும்?

### ஷேக் அப்துல்லா

ஷேக் அப்துல்லாவைப் பற்றி ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கடந்த நான்காண்டுகளாக அவர் காவலில் வைக்கப்பட்டுள்ளார். அவருக்கு எதிராக பல சாட்சியங்கள் அரசாங்கத்திடம் இருக்கலாம். அது பற்றி எனக்கொன்றும் தெரியாது. அவரை விடுதலை செய்து விடுங்கள் என்றும் நான் சொல்லவில்லை. ஆனால் இது விஷயமாக தடுப்புக் காவல் சட்டம் பிரயோகம் செய்யப்பட்ட முறையைத்தான் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். கஷ்மீர் மாநிலத்தின் சட்ட ஒழுங்கு பிரச்சினையாக இது இருக்கலாம். கஷ்மீர் ஒரு தனி மாநிலம் என்றாலும் இந்தியாவின் ஒரு பகுதி யாகவே இருந்து வருகிறது.

**ஸ்ரீ. அபிமன்யு ரத்:-** (குறுக்கிட்டு) ''அது எப்படி இந்தியாவின் ஒரு பகுதியாகும்?'' என்று வினவினார்.

**காயிதே மில்லத்:-** ஆம்! அது இந்தியாவினுடைய ஒரு பகுதியே! மத்திய அரசாங்கத்தின் கட்டுப் பாட்டில் தான் அது இருந்து வருகிறது.

நான் இப்பொழுது கூற வருகிறது என்னவென்றால் ஷேக்அப்துல்லாவின் மீதான வழக்கை சாதாரணமாக நீதி மன்றங்களின் முன்பு கொண்டு வந்திருக்கலாமே என்பது தான். சாதாரண சட்டங்களே அதற்கு போதுமானதாக இருக்கின்றனவே! மதராஸில் திராவிடக் கழகத் தலைவர் மீது இம் முறையில்தானே வழக்கு தொடுக்கப்பட்டது. ஒரு முக்கியமான வழக்கை இந்த எளிய முறையிலே மதராஸ் அரசாங்கம் கையாண்டிருப்பது பாராட்டுக்குரியது.

ஒரு நல்ல அரசாங்கத்திற்கு அம் மாதிரியான கடுமையான சட்டங்கள் தேவையில்லை. ஏற்கனவே கைவசமுள்ள சட்டங்களே அதற்குப் போதுமானதாக இருக்கின்றது. எனவே தடுப்புக் காவல் சட்டத்தை நீடிப்பதற்கான இந்த மசோதாவை அரசு கைவிட்டு விட வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்''.

---

## (''தமிழ் முரசு'' சிங்கப்பூர் தமிழ் நாளிதழ் 15-4-1972)

சுதந்திர இந்தியாவில் மூன்றே தலைவர்களுக்கு ஒரு தனி சிறப்பு இருந்தது. நேரு, பசும்பொன் தேவர், இஸ்மாயீல் சாகிப். அது என்ன சிறப்பென்றால், தேர்தல் காலத்தில், தம் தொகுதிக்கு செல்லாமல் வெற்றி பெறுவது! தேர்தல் வந்தால்—வேட்பு பத்திரத்தை பதிவு செய்துவிட்டு வேறு தொகுதிகளில் சுற்றுப் பயணம் செய்வார்கள் இம்மூவரும்! ஆயினும், லட்சம் வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெறுவார்கள். இஸ்மாயீல் சாகிபைத் தேர்ந்தெடுத்த தொகுதி மஞ்சேரி தொகுதி—மலபாரைச் சேர்ந்தது. 1962 முதல் அவரின் இறுதி நாள்வரை அதன் முடிசூடா மன்னர்! பாண்டி நாட்டு இஸ்மாயீல் சாகிபின் பத்திரமான தளம் சேர நாட்டில் !

இந்துக்களுக்கும்—முஸ்லிம்களுக்குமிடையே தூபமிட்டு, கலகத்தை மூட்டிவிட வெறியர்கள் சிலர் முயன்ற போதெல்லாம் அது பலிக்காமல் போனதற்கு நேருவின் பெரிய தலைமை மட்டுமின்றி இஸ்மாயீல் சாகிபின் நிதான அரசியலும் முக்கிய காரணம். சுறுசுறுப்புள்ள நிதானம், அமரிக்கையான அழுத்தம், இங்கிதமான வைராக்கியம், எளிமையில் பலம்-இது இஸ்மாயீல் சாகிப் !

## ''தமிழ் முரசு'' 15-4-72

**''தளபதி'' ஆகாத தளபதி:-** 1967 பொதுத் தேர்தலில் தமிழகத்தில் விளைந்த அரசியல் புரட்சியின் கதாநாயகர்கள் மூவர். ராஜாஜி-அண்ணா-இஸ்மாயீல் சாகிப் ! அண்ணா நடுவில் நின்றார். இரு புறத்திலும் தளபதிகள்: 1966 டிசம்பர் இறுதியில் சென்னையில் நடந்த வரலாற்று சிறப்புள்ள விருகம்பாக்கம் தி.மு.க மாநாட்டில் மாநாட்டு மேடையில் எடுப்பாக—வரிசையாக வீற்றிருந்தவர்கள் அண்ணா-ராஜாஜி-இஸ்மாயீல் சாகிப் ஆகிய மூவரே !

இச்சேர்க்கையை அண்ணா அழகான உவமையில் புகழுடைய தாக்கினார். லீக்—தி.மு.க.—சுதந்திரா கூட்டு, ''வெற்றிலை பாக்கு-சுண்ணாம்பு போல'' என்பதே அந்த உவமை. வெற்றிலையும், கமுகும் வளத்தின் சின்னங்கள். பழைய இலக்கியங்களில் நாட்டுச் சிறப்புக்கு அடையாளமாக வெற்றிலையும் கமுகும் போற்றப்படுகின்றன. பச்சை வெற்றிலை இஸ்மாயீல் சாகிப், கறுப்புக் களிப்பாக்கு அண்ணா, காரமான கிளிஞ்சல் சுண்ணாம்பு ராஜாஜி. சுண்ணாம்பு ஆபத்தானது. அளவறிந்து தடவாவிட்டால் வாயே வெந்துவிடும். தாம்பூலம் போடுவதில் சமர்த்தரான அண்ணா, ராஜாஜியை அளவாகத் தடவிக்கொண்டு ஜீரணித்து விட்டார்!

# லோக்சபாவில் எழுப்பிய முழக்கங்கள் (1962-1972)

## 1

[ரயில்வே பட்ஜெட் பற்றிய விவாதம் 25-4-62 அன்று லோக் சபையில் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது:-]

பயணிகள் கட்டணங்களையும், சரக்கு கட்டணங் களையும் அதிகரித்திருக்கிறார்கள். இது மிக அதிகமாக இருக்கிறது. இது மக்களின் பொருளாதாரத்தை பாதிக்கும்.

பயண சீட்டு இல்லாமல் பிரயாணம் செய்வது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. இதை தடுத்து நிறுத்துவதில், ரயில்வே நிர்வாகம் போதிய அக்கறை செலுத்தவில்லை. பட்ஜெட்டில் தரப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களை பார்க்கும்போது பயணச்சீட்டு இல்லாமல் பிரயாணம் செய்பவர்களில் சுமார் அரை சதவிகித பேர்தான் பிடிக்கப்படுகிறார்கள், தண்டிக்கப்படுகிறார்கள் எனத் தெரிய வருகிறது. இத்துறையில் நிர்வாகம் போதிய கவனம் செலுத் தினால் ரயில்வேயின் வருமானம் கணிசமாக அதிகரிக்க லாம்.

ரயில்வே கேட்களை நீக்கிவிட்டு மேம்பாலங்களை அமைக்கும் பணி மிகவும் மந்தமாகவே நடைபெறு கிறது. இந்த நிர்வாகம் தந்த புள்ளி விவரங்களில் இருந்து நாடு முழுவதிலுமே சுமார் 30 மேம்பாலங் களே கட்டப்பட்டு வருகின்றன, என்று தெரிகிறது. இது ''கடலில் காயம் கரைத்த மாதிரி ஆகும்.'' பல பெரு நகரங்களில் முக்கியமான வீதிகளில் கூட ரயில்வே மேம்பாலம் அமைக்க இதுவரை யாதொரு முயற்சியும் எடுக்கப்படவில்லை.

கேரளாவில் திரூர் நகரில் ஒரு ரயில்வே மேம்பாலம் மிக அவசியமாகும். இந்த ரயில்வே கேட்டில் மக்கள் மணிக் கணக்காக காத்துக் கொண்டிருப்பதை நான் நேரில் பார்த்து இருக்கிறேன். எனது தொகுதியான மஞ்சேரியில் ரயில்வே பாதைகள் அபூர்வமாகவே உள்ளது. ஷோரனூருக்கும்-நிலாம்பூருக்கும் இடையில் புதிய ரயில் பாதை அமைக்க வேண்டும். மேலத்தூர் பெரோக் ரயில் பாதை குறித்து பல ஆண்டுகளாகவே நான் சொல்லி வருகிறேன். மலபார் பகுதியில் இருந்து பெங்களூருக்கு குடகு வழியாக ஒரு ரயில் பாதை அமைக்க வேண்டும். இது மிகவும் அவசியமான ஒன்று. அப்பகுதியில் பொருளாதார வளர்ச்சியை இது ஊக்குவிக்கும். பெரோக்—பொன்னானி பாதையும், ஆலப்புழை—காயங்குளம் இணைப்பும் அவசியமானது.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரை மானாமதுரை-விருது நகர் இருப்புப் பாதை குறித்து நான் சொல்லி வந்திருக்கிறேன். இப்பொழுது அத்திட்டத்தை நிறை வேற்ற நிர்வாகம் முன் வந்து உள்ளது. ஆண்டுக்கு மூன்று அல்லது நான்கு லட்ச ரூபாய்தான் இதற்கு ஒதுக்கப்படுகிறது. இந்த வேகத்தில் பணம் செலவழித் தால் அத்திட்டம் என்று நிறைவேறப் போகிறது?

நாகர் கோவில் வழியாக திருநெல்வேலி திருவனந்த புரம் ரயில்பாதை அமைக்க வேண்டும் என்றும் சொல்லி வருகிறேன். வாலாஜா ரோடு, இராணிப் பேட்டை, மேல் விஷாரம் ஆகிய மூன்றையும் இணைக்க வேண்டும் என்பதும் எனது கோரிக்கையாகும். மெயில் பட்டியை கோலாருடன் பேரணாம் பேட்டை வழியாக இணைக்க வேண்டும் என்பதும் நல்லதொரு திட்ட மாகும். இதை ரயில்வே நிர்வாகம் பரிசீலிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

# 2

*[மானியக் கோரிக்கை மீதான விவாதம் 5-6-62 அன்று லோக் சபையில் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது:-]*

இந்த மாமன்றத்தின் ஆலோசனைகளை பெறாமலேயே சில முக்கிய தீர்மானங்களை இந்த அரசு எடுத்து வருகிறது. தேசிய ஒருமைப்பாடு குறித்து கமிட்டி ஒன்று நியமிக்கப் பட்டுள்ளது. இந்த அவையில் அது குறித்து விவாதம் செய்யாமலேயே முடிவு எடுக்கப் பட்டுள்ளது.

சோஷலிஸ சமுதாயம் அமைக்கப் போகிறோம் என்று இந்த அரசு முழங்கிக் கொண்டு இருக்கிறது. இந்த முடிவும் பாராளுமன்றத்தினால் எடுக்கப்பட வில்லை. எங்கோ ஒரு ஊரில் ஒரு அரசியல் மேடையில் எடுக்கப்பட்டதுதான் சோஷலிஸ சமுதாயம் என்ற முழக்கம்.

அதுபோலவே இந்நாட்டிலுள்ள மொழிகள் அனைத் திற்கும் ஒரே லிபியையே பயன்படுத்த வேண்டும் என்ற கருத்து பரவலாக பரப்பப்பட்டு வருகிறது. இதற்கான விவாதமோ கலந்தாலோசனையோ, பாராளு மன்றத்தில் இதுவரை நடத்தப்படவில்லை. நாட்டை யும், நாட்டு மக்களையும் பாதிக்கக் கூடிய முக்கியமான முடிவுகள் இந்த அவைக்கு வெளியிலே எடுக்கப் படுகின்றன. இது துரதிருஷ்டவசமானது.

தேசிய ஒருமைப்பாடு மாநாட்டுக்கு எல்லா அரசியல் கட்சிகளும் அழைக்கப்படவில்லை. தேசிய ஒருமைப்பாடு குறித்து அதிக அக்கறை காட்டிவரும் கட்சிகளுக்குக் கூட அந்த அமைப்பில் இடம் அளிக்கப் படவில்லை. அம் மாநாடு தேர்ந்தெடுத்துள்ள கமிட்டி யின் முன்பாக யார் வேண்டுமானாலும் சென்று சாட்சியம் கூறலாம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அந்த மாநாட்டில் பங்கு பெறாத அரசியல் கட்சியின் பிரதி நிதிகள், சாட்சிகளாகவோ, அல்லது குற்றம் சாட்டப்பட்ட பிரதிநிதிகளாகவோ தான் போக வேண்டிய நிலை இருக்கிறது.

அந்த மாநாடு நிறைவேற்றிய தீர்மானத்தில் ''சில சிறுபான்மை குழுக்களுக்கு ஏற்பட்டுள்ள அச்சம் குறித்தும், அவநம்பிக்கை குறித்தும்'' இம் மாநாடு தெரிய வந்துள்ளது என்றும், அத்தகையோருடைய நியாயமான குறைகள் நீக்கப்படும்'' என்றும் அந்த தீர்மான வாசகம் கூறுகிறது.

சில ''சிறுபான்மை குழுக்களின் அச்சங்கள்'' என்று கூறியதில் பொருள் என்னவென்று தெரியவில்லை. அம் மாநாட்டினர் எந்த நோக்கத்தில் இப்பதப்பிர யோகம் செய்துள்ளனர் என்பதையும் புரிந்துகொள்ள முடியவில்லை.

இன்று நாட்டில் என்ன நடந்து கொண்டு இருக் கிறது? நாட்டின் தலைநகரிலேயே வெடிகுண்டுகள் வெடித்துக் கொண்டு இருக்கின்றன. 1955 ஆண்டில் இருந்து இதுவரை டில்லி பெருநகரில் மட்டும் 70 வெடிகுண்டு சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. இவை யெல்லாம் எங்கு நிகழ்கின்றன. பள்ளிவாசல்களுக் குள்ளேயும் அதை சுற்றிலும் வெடிகுண்டுகள் வெடிக்கப் படுகின்றன. டில்லியில் பதஹ்பூர் பள்ளிவாசல் வெடி குண்டு தாக்குதலுக்கு இலக்கானது. ஜும்ஆ மஸ்ஜிதிலும் அப்படி நிகழ்ந்துள்ளது. பல்லிமாரான், லால்குவான், ஆகிய பகுதிகளிலும் பள்ளிவாசலை சுற்றியே இத்தகைய சம்பவங்கள் நடைபெற்றுள்ளன. இத்தாக்குதலினால் பாதிக்கப்பட்டவர்கள் அனைவரும் முஸ்லிம்களே. அவர்களுடைய சொத்துகளுக்குத்தான் ஏராளமான நஷ்டங்கள். ஆனால் போலீஸாரால் கைது செய்யப்படுபவர்களில் பெரும்பாலோர் முஸ்லிம் களாக இருக்கிறார்கள். கொஞ்ச காலம் இவர்கள் சிறையில் வைக்கப்பட்டு பின்னர் விடுதலை செய்யப் பட்டு விடுகிறார்கள். யார் மீதும் இதுவரை ஒரு வழக்கும் தொடரப் படவில்லை. குற்றவாளி ஒருவர் கூட கண்டுபிடிக்கப்பட்டு தண்டனைக்கு ஆளாக்கப்பட வில்லை. நாட்டின் தலைநகரான டில்லிலேயே கடந்த 6 ஆண்டுகளாக இம்மாதிரி நிலைமை தொடர்ந்து நடந்து வருகிறது. ஆனால் உள்துறை அமைச்சர் ''வெளி நாட்டினரின் கரம்'' இச்சம்பவங்களில் இருப்பதாக சந்தேகப்படுகிறேன்'' என்கிறார். ஏழை எளிய முஸ்லிம் களை குண்டு வெடிப்பு சம்பவங்கள் மூலம் கொன்று குவிக்கும் அந்நியர்கள் யார் என்பதை கண்டு பிடித்து சொல்ல வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு அல்லவா ?

அமைச்சர் தத்தா குறுக்கிட்டு ''பள்ளிவாசலுக்கு அருகில் மட்டுமே குண்டு வெடிக்கவில்லை.

காங்கிரஸ் கட்சி அலுவலகத்திலும் கூட குண்டு வீசப்பட்டுள்ளது. முஸ்லிம்கள் மட்டும் இதனால் காயம் பெறவில்லை. இந்துக்களும் காயம் அடைந்து உள்ளார்கள்'' என்று கூறினார்.

**காயிதே மில்லத்:-** காங்கிரஸ் அலுவலகத்தின் அருகில் எத்தனை தடவைகள் குண்டு வீசப்பட்டன ?

**ஜனாப் பத்ருத்துஜா:-** பெரும்பாலும் முஸ்லிம் களே பாதிக்கப்பட்டுள்ளனர்.

**காயிதே மில்லத்:-** பெரும்பாலான வெடிகுண்டு நிகழ்ச்சிகளில் இருந்து குறிப்பிட்ட ஒரு சமுதாயத் தினரே பாதிக்கப்பட்டுள்ளனர் என்பது தெரிய வந்துள்ளது.

**திரு. D. C. சர்மா:-** நமது நாடு கூட ஒரு முஸ்லிம் நாட்டின் அண்டை நாடாகவே இருந்து வருகிறது.

**காயிதே மில்லத்:-** இதுவரை பாதிக்கப்பட்ட ஒரு வருக்குக்கூட நஷ்ட ஈடு கொடுக்கப்படவில்லை. மேற்கு வங்காளத்தில் உள்ள மால்டாவில் அண்மையில் நடந்த நிகழ்ச்சிகள் மிகக் கொடுமையானவை. பிரோஸாபாத்

சீத்தாமரி, முபாரக்பூர், ஜபல்பூர், சாகர், போப்பால் சந்தௌசி, அலிகர், மீரட், மால்டா, என துயரப் பட்டியல் நீண்டுக் கொண்டே போகிறது. இந்நகரங் களில் எல்லாம் பாதிக்கப்பட்டவர்கள் சிறுபான்மை சமுதாயத்தைச் சார்ந்தவர்களே. அவர்களது உயிர் களுக்கும், உடமைகளுக்கும் தான் பெருத்த நஷ்டங்கள் ஏற்பட்டுள்ளன.

இந்த வகுப்பு கலவரங்களில் ஏற்படும் முக்கிய கொடுமை என்னவென்ருல் யாதொரு பாவமும் அறியாத மக்கள் நெருப்பில் தூக்கி எறியப்பட்டு எரிக்கப்படுகிருர்கள். ஜபல்பூர் மாவட்டத்தில் உள்ள சரோபா என்ற கிராமத்தில் 17 பேர் உயிருடன் எரிக்கப்பட்டார்கள்.

மற்ருெரு முக்கிய விஷயத்தையும் அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆத்திர மூட்டும் எழுத்துக்களை சில பத்திரிக்கைகள் வேண்டு மென்றே பிரசுரிக்கின்றன. பாட புத்தகங்களில் கூட இத்தகைய கொடுமைகள் புகுத்தப்படுகின்றன. இம் மாதிரிச் சம்பவத்திற்காக அண்மையில் கல்கத்தா நகரில் ஒரு ஆர்ப்பாட்டமே நடைபெற்றது.

முஸ்லிம்களும் மற்ற சிறுபான்மையினரும் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு திறமை சாலிகளாக இருந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைத்து வந்தன. இப்பொழுது முஸ்லிம் களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைப்பதில்லை. கேட்டால் திறமை குறைவு என்கிருர்கள். ஒரு சமுதாயம் முழுமைக்குமே 15 ஆண்டுகளுக்குள்ளாக திறமை யில்லாது போனதற்கு காரணம் என்ன ? இது உண்மை தானு ? இது குறித்து அரசாங்கம் ஆராய வேண்டுமா இல்லையா ?

அண்மைக் காலத்தில் பதினெட்டு முஸ்லிம்கள் அரசாங்க வேலைகளில் இருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டு இருக்கிருர்கள். ஜமாஅத்தே-இஸ்லாமி என்ற அமைப் புடன் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தொடர்பு இருந்த காரணத்தினுல் இவர்கள் வேலையி லிருந்து நீக்கப்பட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. ஜமாஅத்தே-இஸ்லாமி ஒரு மதஸ்தாபனம் அது மறைமுகமான நடவடிக்கைகளில் ஈடுபடுகிறது என்று சொல்ல முடியாது.

**ஸ்ரீ ரெகுநாத் சிங்**:- அந்த அமைப்பின் குறிக் கோளே ஒரு வகையானது. இந்தியாவினுடைய மேலாதிபத்திய உரிமையை *(Sovereignty)* அவர்கள் அங்கீகரிக்கவில்லை.

**காயிதே மில்லத்**:- அந்த அமைப்பு என்ன ரகசிய வேலைகளில் இதுவரை ஈடுபட்டுள்ளது ? இதை அரசாங்கம் தெளிவாக்க வேண்டும். அப்படி ஏதாவது நடைபெற்று இருந்தால் நீதிமன்றங்களின் முன்பு அவர்களைக் கொண்டு போய் நிறுத்த வேண்டியது தானே. இதை ஏன் அரசாங்கம் செய்யவில்லை?

ஹுக்கூமத்தே இலாஹி (இறைவனின் ஆட்சி) இது அவர்களுடைய கோட்பாடு. இது ஒரு தத்துவம். அந்த அமைப்புக்கு எதிராக அரசாங்கத்திடம் போதிய ஆதாரங்கள் இருக்குமாளுல் அவர்களை நீதிமன்றங் களின் முன்பு நிறுத்துவதுதான் முறையான நடவடிக்கையாகும். சட்டம் அதன் நடவடிக்கையை தொடரட்டுமே !

தடுப்புக் காவல் சட்டத்தை இந்த அரசாங்கம் அளவுக்கு மீறி பிரயோகப் படுத்துகிறது என்று ஒரு குறையுள்ளது. அண்மையில் நூறு அகாலிகள் கைது செய்யப்பட்டுள்ளார்கள். ''பஞ்சாபி சூபா'' என்ற தனி மாநிலக் கோரிக்கைக்காக இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. இப்பொழுது தனி மாநில கோரிக்கை நிறுத்தப்பட்டு விட்டதே. அந்த சீக்கியர் களை ஏன் இன்னமும் காவலில் வைத்துள்ளீர்கள்?

இங்கு எனக்கு முன்பு பேசிய உறுப்பினர் ஒருவர் தென்னிந்தியாவில் வகுப்பு ஒற்றுமையும், சௌஜன்ய மும்நன்ருக இருப்பதாக கூறினர். இம்மாதிரியான நல்ல சூழ் நிலையும், ஐக்கியமும், அப்பகுதியில் நிலவுவதற்கு முஸ்லிம் லீக் கட்சி அங்கு செயல்படுவதினுலேயேதான் என்பதை உறுதியாகவும், தைரியமாகவும் நான் இங்கு கூறிக் கொள்கிறேன். சட்டம் ஒழுங்கை மீறியதாகவோ அல்லது தகாத காரியங்களில் ஈடுபட்டதாகவோ முஸ்லிம் லீக் பற்றி யாரும் குறை சொல்ல முடியாது. இதற்கு சாட்சியாக இருப்பவர் மதருஸ் மாநிலத்தின் முன்னுள் முதலமைச்சர் மறைந்த திரு. பிரகாசம் ஆகும். இதை அவர் பல பொதுக் கூட்டங்களில் மட்டுமல்ல, அரசியல் நிர்ணய சபையிலும், தற்காலிக பாராளுமன்றமாக செயல்பட்ட அவையிலும் அவர் இது குறித்து பேசியுள்ளார். இது குறித்து யாருக்காவது சந்தேகமிருந்தால் அந்தப் பாராளுமன்ற ரிக்கார்டுகளை புரட்டிப்பார்த்துக் கொள்ளலாம். பல சமுதாயங்கள் ஒற்றுமையாகவும், இணைந்தும் வாழ வேண்டும் என்பதற்கு இந்த நாட்டிற்கு மட்டுமல்ல, உலகத்திற்கே சிறந்த ஒரு எடுத்துக் காட்டாக தென்னிந்தியா விளங்குகிறது என திரு. பிரகாசம் கூறியுள்ளார். முஸ்லிம் லீக் சேவையை அவர் புகழ்ந்து பாராட்டியுள்ளார். சட்டம் ஒழுங்கை பராமரிப்பதில் அவருடைய சர்க்காருடன் முஸ்லிம் லீக் எப்படி ஒத்துழைத்தது என்பதை அவர் சுட்டிக் காட்டி யுள்ளார். இந்நாட்டின் விடுதலைக்குப் பின்னர் மதருஸ் மாகாணத்தின் கவர்னர்களாக வந்த பலரும் முஸ்லிம் லீகின் சேவை குறித்து புகழாரம் சூட்டியே சென்றுள்ளார்கள்.

வட இந்தியாவில் சில நாட்களுக்கு முன்பு ஒரு பெரும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. துப்பாக்கிச் சூடு கூட நடத்தப்பட்டது. ''மதத் தலைவர்களின்

வரலாறுகள்'' என்ற நூல் குறித்து தான் இந்த கிளர்ச்சி எழுந்தது. நாட்டின் தென் பகுதியில் மக்கள் பரபரப்பு அடையவில்லை. கொந்தளிப்புகளுக்கு இடம் கொடுக்கவில்லை. முஸ்லிம் லீகிடம் அந்த பணியை அவர்கள் விட்டுவிட்டார்கள். இது சம்பந்தமான காரியங்களை முஸ்லிம் லீக் பார்த்து கொள்ளும் என அவர்கள் கூறிவிட்டார்கள். இதற்கென அவர்கள் கூட்டமோ, ஊர்வலமோ நடத்தவில்லை. அவர்கள் எதிர் பார்த்தபடியே முஸ்லிம் லீக் நடந்து கொண்டது. பாரத பிரதமரின் கவனத்திற்கு, இந்த விஷயத்தை முஸ்லிம் லீக் கொண்டு வந்தது. இது குறித்து பாரதப் பிரதமரே ஒரு அறிக்கை வெளியிட்டார். அதன் பிறகுதான் கொந்தளிப்புகள் அடங்கின. இதை யெல்லாம் நான் ஏன் இங்கு குறிப்பிடுகிறேன் என்றால் முஸ்லிம் லீக் குறித்து சிலர் நியாயமற்ற குற்றச்சாட்டு களை சுமத்தி வருகிறார்கள் என்பதை மனதில் இருத்தியே தான்.

முஸ்லிம் லீக் ஒரு வகுப்பு வாத சபை அல்ல; அது ஒரு தேசிய ஸ்தாபனம் (குறுக்கீடுகள்) வாயால் மட்டும் அது சொல்லிக் கொள்வதுடன் அது நிறுத்திக் கொள்ளவில்லை. செயல் பூர்வமாக அது நிருபித்துக் காட்டப்பட்டுள்ளது. அரசியல் நிர்ணய சபையிலும் பல மாநில சட்டசபைகளிலும் முஸ்லிம் லீகின் செயல் களும் சாதனைகளும் ''ரிக்கார்டு'' செய்யப்பட்டு இருக் கின்றன. எனவே முஸ்லிம் லீக்கை யாரும் ஏளனமாக நினைக்க வேண்டாம். அதன் சொல்லும், செயலும் உண்மையானவை, புலன் விசாரித்து தெரிந்து கொள்ளக் கூடியவை. அதனுடைய புகழை யாராலும் அவர்கள் எவ்வளவுதான் முயற்சித்தாலும் அழித்துவிட முடியாது!

## 3

[சைனாவின் ஆக்கிரமிப்பு காரணமாக அவசர கால நிலைமையை பிரகடனப் படுத்தியது குறித்து லோக் சபையில் 9-11-62 அன்று விவாதங்கள் நடை பெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது]

நமது நாட்டின் மீது ஆக்கிரமிப்பு செய்த சைனா விற்கு பாரத பிரதமர் கொடுத்த சவாலை நான் வர வேற்கிறேன். யாதொரு நிபந்தனையும் இன்றி அதை நான் ஆதரிக்கிறேன்.

**ஸ்ரீ ராமேஸ்வர ஆனந்த்** :- ''உர்தூவில்பேசுங்கள்''

**காயிதே மில்லத்** :- சுவாமிஜி ஆகிய கனம் உறுப் பினர் ஆங்கிலத்தில் பேசுபவர்களுக்கெல்லாம் உர்தூ விலும், இந்தியிலும் பேசத் தெரியும் என நினைத்து கொள்கிறார்.

எனக்கு இந்தியும் அன்னியமொழி, உர்தூவும் அன்னியமொழியே; இந்த அவையில் உள்ள உறுப் பினர்களில் பலர் நிலைமையும் இதே போன்றதே. எனது தாய் மொழியான தமிழ் அல்லது ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளில் மட்டுமே என்னால் சரளமாக பேச முடியும்.

அப்பொழுது ஒரு உறுப்பினர் குறுக்கிட்டு ''தமிழில் பேசுங்களேன் என்றார்.

**காயிதே மில்லத்** :- நெடுங் காலத்திற்கு முன்ன தாகவே சீனாவிற்கு இந்த சவால் விடப்பட்டிருக்க வேண்டும். எதிரி எப்படிப்பட்டவர் என்பதை நாம் புரிந்து கொண்டுள்ளோம். ''பாய், பாய்'' என்று குரல் கொடுக்கும் பொழுதே, வஞ்சக எண்ணத்துடன் தான் அச்சொல் அவன் வாயில் இருந்து வெளி வந்தது என்பது இப்பொழுது புலனாகி விட்டது.

ஒரு வகையில் இந்த அவசரகால நிலைமை பல நன்மைகளையும் செய்து விட்டிருக்கிறது. மறைமுக மாகக் கிடைத்த லாபம் என இதைக்குறிப்பிடலாம். சீன ஆக்கிரமிப்பு மக்களை தட்டி எழுப்பி விட்டது. மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு விட்டார்கள். நாட்டின் மானத்தைக் காக்க வேண்டும் என்ற உணர்ச்சி அவர்களிடம் கொப்பளித்துக் கொண்டு இருக்கிறது. நான்கு அல்லது ஐந்து வயது சிறுவர்கள் கூட உண்டியல் களை ஏந்திய வண்ணம் பாதுகாப்பு நிதிக்கு தெருத் தெருவாகச் சென்று பணம் வசூலித்துக் கொண்டு இருக்கும் காட்சியை என் கண்ணாலே கண்டேன்.

நியாயம் நமது பக்கம் இருக்கிறது. நம் எல்லையை தாண்டி அந்நியன் ஊடுருவி இருக்கிறான். நடுநிலைமை அல்லது அணிசேரா நாடுகள் என்பதெல்லாம் ஒருபுறம் ஒதுக்கி வைத்து விட்டு நமக்கு உதவி செய்ய முன் வருபவர்களிடம் இருந்து தாராளமாக ஆயுதங்களையும், பொருட்களையும் நாம் பெற்று கொள்ள வேண்டும். யுத்தம் நம் மீது திணிக்கப்பட்டு விட்டது. இதை நாம் வெற்றிகரமாக முடிக்க எங்கிருந்து உதவிகள் கிடைத்த போதிலும் அவற்றைப் பெற்றுக் கொள்வதில் தயக்கம் காட்டக்கூடாது. ஏற்கனவே காலம் பிந்தி விட்டது. இனியும் தாமதிக்காமல் வெளி உதவிகளைப் பெற முயல வேண்டும்.

இச் சூழ்நிலையில் எனக்கு மனதிற்கு திருப்தியாக படுகிற விஷயம், மக்கள் அணி ஒன்று திரண்டு விட்டது தான். ஜாதி, மத பாகுபாடுகள், ஏனைய ஏற்ற தாழ்வுகள் ஒன்றையும் பாராது, ஆக்கிரமிப்பாளனை நமது மண்ணில் இருந்து வெளியேற்ற மக்கள் தயாராகி விட்டார்கள். நம் நாட்டின் வரலாற்றைப் புரட்டிப் பாருங்கள். ஆயிரம் ஆண்டு காலமாக இப்படித்தான் திரண்டு எழுந்திருக்கிறார்கள். கன்னியாகுமரியிலிருந்து இமயமலை வரை இப்படிப்பட்ட சம்பவங்களை வரலாற்றில் ஆங்காங்கே காணலாம்.

நாட்டில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் எல்லா மக்களும் சேர்ந்தே வாழ்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட

மதத்தினர் தான் ஒரு கிராமத்தில் வாழ்கிறார்கள் என்பது அல்ல. முஸ்லிம்கள், முஸ்லிம் அல்லாதார் என்ற பாகுபாட்டை மக்கள் கவனிப்பதில்லை. அரசியல் கட்சிக்காரர்கள் தான் இத்தகைய பேதங்களைக் கற்பிக்கிறார்கள். குழப்பங்களுக்கு வித்திடுகிறார்கள். இம்மாதிரி அவசர காலங்களில் மக்கள் மீண்டும் ஒன்றுபட்டு விடுகிறார்கள். சிறப்புமிக்க நமது பாரதப் பிரதமரின் தலைமையில் இந்த அணி வெற்றி நோக்கி பீடு நடை போடும் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. சுதந்திரம் கிடைத்த பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாக இப்படிப் பட்டதொரு அவமானகரமான நிலைமை நமக்கு ஏற்பட்டுவிட்டது. இக்களங்கத்தை நாம் துடைத்தாக வேண்டும்.

## 4

*[கஸ்டம்ஸ் மசோதா குறித்து லோக் சபையில் 21-11-62 அன்று காயிதே மில்லத் அவர்கள் கூறியதாவது :-]*

மலேயா, பர்மா, சிலோன் போன்ற நாடுகளில் லட்சக்கணக்கான இந்தியர்கள் பிழைப்பைத் தேடி வாழ்ந்து வருகிறார்கள். அவர்களெல்லாம் அந்நாடுகளில் கூலிகளாகவும் பெட்டிக்கடைக்காரர்களாகவும் தொழில் செய்து வருகிறார்கள். ஒரு சிலர் மட்டுமே நம்மவர்களில் பெரும் பணக்காரர்களாக இருக்கிறார்கள்.

வெளிநாடுகளில் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் பணி புரிந்து விட்டு அதன் மூலம் கிடைத்த சேமிப்புகளை பொருள்களாகவும், துணி மணிகளாகவும் தாய் நாடான இந்தியாவிற்குக் கொண்டு வருகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் நமது துறைமுகங்களில் இறங்கியதும் அவர்களுக்கு ஏற்படும் பரிதாபகரமான கதியை நினைக்கும்போது உண்மையிலே மனவேதனை அடையாமல் இருக்க முடியாது.

சுங்க அதிகாரிகள் நமது இந்திய குடிமக்களை படாத பாடுபடுத்துகிறார்கள், ஒரு நாள் என்ன? இரண்டு நாள் கூட காத்திருக்க வேண்டியதிருக்கிறது. பல சாமான்கள் அதிகாரிகளால் அபகரிக்கப்பட்டு வருகின்றன. பல பொருட்கள் மீது அபரிமிதமான அளவில் சுங்க வரி விதிக்கப்படுகிறது.

நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் வெளிநாடுகளில், நெற்றி வேர்வை நிலத்தில்விழ பணிபுரிந்து விட்டு தாய் நாட்டின் மண்ணில் காலடி எடுத்து வைத்ததும் இந்த கதிக்கு தானா இவர்கள் ஆளாக வேண்டும்? இவர்களில் பெரும்பாலோர் ஏழைகளே.

முன்பு எல்லாம் ஐந்து ஆயிரம் ரூபாய் வரை சாமான்களை வரி விதிப்பின்றி கொண்டு வரலாம் என விதி இருந்தது. அது படிப்படியாகக் குறைந்து நூறு ரூபாய் அளவிற்கு அதிகமாக சாமான்கள் வைத்து இருப்பவர்கள் வரி விதிப்புக்கு உள்ளாகிறார்கள். இதில் மிகவும் வேதனைக்குரியது என்னவென்றால் நமது நாட்டின் பிரஜைகள் கண்ணியமாகவும் மரியாதையாகவும் நடத்தப்படுவதில்லை.

எங்கிருந்தோ கொள்ளை அடித்து வந்து இருப்பதை போல, அவர்கள் பாவிக்கப்படுகிறார்கள். இவர்களில் ஒரு சிலர் கடத்தல்காரர்களாகவும் இருக்கலாம். அவர்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. சட்டம் அதன் வேலையை செய்ய வேண்டியதுதான். ஆனால் ஒரு பாவமும் அறியாத மக்களை அதிகாரிகள் மரியாதையாக நடத்த வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன். பல ஆண்டுகளுக்குப் பின்னர் தாயகம் திரும்பி, தங்களது உறவினர்களின் இன்முகங்களைப் பார்த்து விட்டுத் திரும்பலாம் என வருபவர்களுக்கு அவர்களுக்குரிய மதிப்பும் மரியாதையும் கொடுக்கப்பட வேண்டும்.

## 5

*[ஜனாதிபதி உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானம் 27-2-63 அன்று லோக் சபையில் விவாதிக்கப் பட்டபொழுது காயிதே மில்லத் கூறியதாவது]*

ஐந்தாண்டு திட்டங்கள் இரண்டை நிறைவேற்றிக் கொண்டு மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் காலடி எடுத்து வைத்துக் கொண்டு இருக்கிறோம். நாட்டின் பொருளாதார வளர்ச்சி எல்லா பகுதிகளிலும் ஒரே சீராக இருக்க வேண்டும். ஏற்கனவே தொழில் வளர்ச்சியில் முன்னணியில் நிற்கும் மாநிலத்தில் மேலும் அதிகப்படியான தொழிலை ஆரம்பிக்க திட்டங்கள் தீட்டாது, தொழில் வளர்ச்சி என்ற வாசனையேயில்லாத பின்தங்கிய மாநிலங்களை பற்றியும், அரசாங்கம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மத்திய அரசு மாநிலத்திற்கு மாநிலம் ஓரவஞ்சகமாக நடக்கிறது என்று நான் கூறவில்லை. ஆனால் இரண்டு ஐந்தாண்டு திட்டங்களுக்குப் பிறகும் பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகி இருக்கிறார்கள். ஏழைகள் வறுமைக் கோட்டிற்கு கீழே நின்று கொண்டு இருக்கிறார்கள் என்பதைக் காண முடிகிறது.

கேரளா மாநிலத்தில் தொழில் வளர்ச்சியில்லை. முதல் இரண்டு திட்டங்களிலும் எழுபத்தொன்பது லட்சம் ரூபாய் தான் தொழில்கள் வளர்ச்சிக்காக செலவிடப்பட்டிருக்கின்றது. கடந்த பத்து ஆண்டுகளில் *D.D.T.* [பூச்சி மருந்து தயாரிக்கும் தொழிற் கூடம்] ஒன்று தான் அம்மாநிலத்தில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

வருகிற மூன்ருவது ஐந்தாண்டு திட்டத்தில் கேரளத்தின் தொழில் வளர்ச்சிக்கே நாற்பத்தைந்து கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அந்த மாநிலம் விவசாயப் பொருள்கள் உற்பத்தியில் முன்னணியில் நிற்கிறது. அங்கு விவசாயம் ஓரளவு அபிவிருத்தி அடைந்துள்ளது. அந்த மாநிலத்தில் ஜனநெருக்கம் அதிகம். இந்நாட்டிலே அதிக ஜன நெருக்கம் உள்ளது கேரளாதான்.

வேலையில்லாத் திண்டாட்டமும் அங்கு தலைவிரித் தாடுகிறது. படித்தவர்களில் வேலையில்லாதோர் அங்கு தான் மிகுதி.

ஆண்டு ஒன்றுக்கு நூறு கோடி ரூபாய் அந்த மாநிலத்தில் முதலீடு செய்தால் தான் அதனுடைய தனி நபர் வருமானம் அகில இந்திய அளவை எட்டும் என ஒரு சர்வே அறிக்கை கூறுகிறது. ஆனல் மூன்ருவது ஐந்தாண்டு திட்டம் முழுவதற்குமே நாற்பத்தைந்து கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்நிலைமை யில் அம்மாநிலம் எப்படி முன்னேறும்:

மாநிலங்களுக்கு இடையில் பொருளாதார வளர்ச்சி யில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுமானல் அல்லது அந்த ஏற்றத்தாழ்வு விரிவுடையுமானல், காழ்ப்பு உணர்ச்சி தான் வளரும். ஐக்கிய மனேபாவம் சிதைந்துவிடும். தெற்கு தேய்கிறது என்ற வாதத்திற்கு வலு ஏற்பட்டு விடும். காலா காலத்தில் இதனை செப்பனிடவில்லை யானல் தேசிய ஒருமைப்பாடு எண்ணத்தையே அது தகர்க்க ஆரம்பித்து விடலாம். நாமும் இந்த நாட்டின் பிரஜைகள் தானே, இதர பகுதி மக்களைப் போல நாமும் முன்னேற முடிய வில்லையே, என்ற தாழ்வு மனப்பான்மை தென் பகுதிகளில் வளர வாய்ப்புக்கள் நிறைய இருக்கின்றன. இந்த குறைபாட்டை நீக்க அரசாங்கம் ஆவன செய்ய வேண்டும்.

## 6

[இரயில்வே பட்ஜெட் லோக்சபையில் 6-3-63 அன்று விவாதிக்கப் பட்டபோது காயிதே மில்லத் கூறியதாவது]

குறித்த நேரங்களில் ரயில்கள் புறப்படுவதும், தங்கள் இலக்கைப் போய் அடைவதும் இந்திய ரயில் வேக்களை பொறுத்தவரையில் ஒரு லட்சியக் கனவாகவே இருந்து வருகிறது. நேரப்படி ரயில்கள் செல்லுதல் என்ற செயல் திட்டத்தை ரயில்வே நிர்வாகம் பூணிப்பாக கடை பிடிக்க வேண்டும். அதில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

கடந்த பத்தாண்டுகளில் இத்துறையில் சிறிது முன்னேற்றம் காணப்பட்டு இருப்பதாக இந்த நிர்வாகம் கூறிக்கொள்கிறது. அகல ரயில்வேக்களைப் பொறுத்த வரையில் நாலரை சதவீத அபிவிருத்தியும், மீட்டர் கேஜ்யை பொறுத்த வரையில் பத்து சதவீத அபிவிருத்தியும் இருப்பதாக புள்ளி விபரங்கள் தெரிவிக் கின்றன. இந்த முன்னேற்றத்தை இன்னும் துரிதப் படுத்த வேண்டும்.

இருப்புப் பாதைகளை பொறுத்தவரை இந்நாட்டில் முன்னேற்றம் சீரானதாக இல்லை. சமநீதி வழங்குவதாக இல்லை. நாட்டின் சில பகுதிகள் புறக்கணிக்கப் படுகின்றன என்பது புள்ளி விபரங்களில் இருந்து தெரிய வருகிறது.

ஆயிரம் மக்களுக்கு நூற்றிமுப்பது கிலோ மீட்டர் அளவுக்கு இந்நாட்டில் இருப்புப் பாதைகள் இருப்பதை இந்த நிர்வாகம் ஒப்புக்கொள்கிறது. இது இந்தியா முழுவதற்குமான சராசரி கணக்கு. கேரளாவையும், தமிழ் நாட்டையும் சேர்த்து எடுத்துக் கொண்டால், மொத்தம் சுமார் ஆறு கோடிக்கு மேலான மக்கள் இந்த இரண்டு மாநிலங்களிலும் வாழ்ந்து வருகிருர்கள்.

இந்த மக்கள் தொகை கணக்குப்படி இரண்டு மாநிலங்களிலும், 6500 கிலோ மீட்டர் நீளமுள்ள இருப்புப் பாதைகள் இருந்தாக வேண்டும். ஆனல் இவ்விரு மாநிலங்களிலும் சுமார் 3000 கிலோ மீட்டர் இருப்புப் பாதைகளே தற்பொழுது உள்ளது. நாட்டின் ஒரு பகுதி புறக்கணிக்கப்படுகிறது, என்பது இதிலிருந்து புலனுகிறது.

கேரளாவில் ஷோரனூருக்கும் நிலாம்பூருக்கும் இடையேயான இருப்புப் பாதையையும், ஷோரனூர் கள்ளிக்கோட்டை இருப்புப்பாதையையும் இணைத்து, ஒரு துணை ரயில் பாதை அமைத்தல் அவசியம். இப் பகுதியில் மரத்தடிகள், காப்பி, தேங்காய், மிளகு போன்ற விவசாயப் பொருட்கள் ஏராளமாக விளை கின்றன. உலகிலேயே இரண்டாவது பெரிய மரத்தடி வளாகமான ''கல்லாயி'' என்ற இடம் இப்பகுதியில் தான் உள்ளது. இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த இடம் இருப்புப் பாதையுடன் இணைக்கப்படாதது துரதிருஷ்டமே.

ஆண்டு தோறும் நான் சுட்டிக் காட்டி வரும், திருநெல்வேலிதிருவனந்தபுரம் இருப்புபாதை வேலைகள் இன்னும் ஆரம்பித்தபாடில்லை. தாம்பரத்திலிருந்து விழுப்புரம் வரை மின்சார மயமாக்கும் பணி ஆமை வேகத்தில் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. இப் பணிகள் துரிதப் படுத்தப்பட வேண்டும்.

## 7

[மானிய கோரிக்கை மீதான விவாதம் 18-3-63 அன்று லோக் சபையில் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் தெரிவித்த கருத்துகளாவன]

### ஹஜ் பயணிகளின் அவதி

கடந்த ஆண்டு இந்தியாவிலிருந்து இருபத்தொன்று ஆயிரம் யாத்திரிகர்கள் ஹஜ் பயணத்தை மேற்கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். அந்த கோட்டா பதினைந்து ஆயிரமாக இந்த ஆண்டு குறைக்கப்பட்டுள்ளது. வெளி நாட்டு செலாவணி விஷயத்தில் சர்க்காருக்கு ஏற்பட்டி ருக்கும் சிக்கல்களையும், நெருக்கடிகளையும் நான் அறிவேன். என்றாலும் ஹஜ் பயணிகள் விஷயத்தில் சர்க்கார் தாராளமாக நடந்துகொள்ள வேண்டும் என கேட்டுக்கொள்கிறேன். வசதி உள்ளவர்களும், உடல் நலம் உள்ளவர்களும் தான் இப்பயணத்தை மேற் கொள்கிறார்கள். சாதகமான சூழ்நிலை இருக்கும் பொழுது அவர்களது பயணத்தை ஒத்தி போட சொன் னால், அடுத்த ஆண்டு நிலைமை எப்படி இருக்குமோ? யார் கண்டது? எனவே ஹஜ் கடமையை நிறைவேற்ற விரும்புபவர்களையெல்லாம் அந்தந்த ஆண்டிலேயே அனுமதிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இதுவரை ஹஜ் பயணிகளிடம் இருந்து ஹெல்த் [Health] சர்டிபிகேட்டுகள் தான் கோரப்பட்டன. இப்பொழுது ஒரு மாஜிஸ்டிரேட் முன்பு ''அபிடவிட்'' மனுவும் பெறவேண்டும் என சர்க்கார் அறிவித்துள்ளது. கிராமப்புறங்களில் உள்ள மக்கள் நீதிபதிகளிடமோ, வக்கீல்களிடமோ அலைய வேண்டிய சூழ்நிலை ஏற்படு கிறது. இதை அரசாங்கத்தின் கவனத்திற்கு நாங்கள் கொண்டு வந்த பொழுது இந்த விதியை சர்க்கார் தளர்த்தி இருக்கிறீர்கள். இதற்காக நன்றி.

மருத்துவச் சான்றிதழ் குறித்து ஒரு வார்த்தை எந்தெந்த நோய்கள் உள்ளவர்கள் புனித பயணத்தை மேற்கொள்ளக்கூடாது என்று அரசாங்கம் ஒரு பட்டியலை வெளியிட்டுள்ளது. இந்தப் பட்டியலில் நீரிழிவு நோயும் ஒன்றாக உள்ளது. இன்றைய நாளில் இளைஞர் முதல் வயோதிகர்வரை நீரிழிவு நோயினால் பாதிக்கப்படாதவர்கள் அற்ப சொற்பமாகவே உள்ளார்கள். மேலும் நீரிழிவு ஒரு தொற்றுநோயல்ல. அந்த பட்டியலில் இருந்து இந்த நோயை அகற்றிவிட கேட்டுக் கொள்கிறேன்.

சவூதி சர்க்காரின் கவனத்திற்கு நமது சர்க்கார் ஒரு விஷயத்தை கொண்டு வரவேண்டும். கேரளாவில் இருந்து ஏராளமான ஹஜ் பயணிகள் செல்லுகிறார்கள். தென்னிந்தியாவிலிருந்து செல்பவர்களில் கேரள மாநிலத்திலிருந்து செல்பவர்களே அதிகம். இவர் களுக்காக சவூதி அரேபியாவில் இரண்டு 'முஅல்லிம்'கள் இருக்கிறார்கள். இந்த எண்ணிக்கை போதாது. ஹஜ் பயணிகள் இந்த விஷயத்தில் மிகவும் கஷ்ட, நஷ்டத் திற்கு உள்ளாகிறார்கள். எனவே இவர்களுக்காகக் கூடுத லான முஅல்லிம்களை வருங்காலத்தில் நியமிக்கும்படி சவூதி அரசிடம் நமது அரசு கேட்டுக் கொள்ள வேண்டும். கேரளாவிலிருந்து அதிக அளவில் பயணிகள் ஹஜ்ஜுக்கு செல்வதால் மத்திய ஹஜ்கமிட்டியில் அம்மாநிலத்திற்கு பிரதிநிதித்துவம் வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

## 8

[மானிய கோரிக்கை மீது 25-3-63 அன்று லோக் சபையில் விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் தெரிவித்த கருத்துக்களாவது]

### இந்திய மருத்துவக் கல்லூரி

ஆயுர்வேத வைத்தியத்தை ஊக்குவிக்க வேண்டும் என்றும் அது வகைக்கான ஆராய்ச்சிகளுக்காக கோடிக் கணக்கான ரூபாய்களை செலவிட அரசாங்கம் முன்வர வேண்டும் என்றும், எனக்குமுன் பேசிய உறுப்பினர் ஒருவர் கூறினார். இந்திய வைத்திய முறைகள் என்ன பாடுபடுகின்றன என்ற விபரங்களை ஒரு உதாரணத்தின் மூலமாக இந்த அவையின் கவனத்திற்கு கொண்டு வருகிறேன்.

இந்திய வைத்திய முறைகளை ஊக்குவிக்க வேண்டும் என்ற பேச்சு மதராஸ் மாகாணத்தில் 1920 வாக்கிலே இருந்தது. பலரின் தூண்டுதலாலும் இடையறா உழைப் பாலும், 1925-ம் ஆண்டு மதராஸ் நகரில் இந்திய வைத்திய பள்ளிகூடம் ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. அந்த வகையில் அது இந்தியாவிலே முதல் பள்ளிக்கூடம் ஆகும்.

பல சோதனைகளுக்குப் பிறகே 1947-ம் ஆண்டில் இக் கல்விக்கூடம் ஒரு கல்லூரி அந்தஸ்துக்கு உயர்த்தப் பட்டது. ''அரசு ஒருங்கிணைக்கப்பட்ட மருத்துவ கல்லூரி'' என அதற்கு பெயர் சூட்டப்பட்டது. [Government College of Integrated Medicine]

இக் கல்லூரிக்கான பாடதிட்டங்கள் அனைத்தும் பல நிபுணர்களால் தயாரிக்கப்பட்டதாகும். மதராஸ் அரசு நியமித்த உஸ்மான் கமிட்டி, இந்திய அரசு நியமித்த சோப்ரா கமிட்டி, பண்டிட் கமிட்டி ஆகிய வற்றின் பரிந்துரைகளுக்கு ஏற்பவே, இக் கல்லூரி செயல்பட்டு வந்தது. மதராஸ் சர்வ கலாசாலையுடன் கல்லூரியை இணைக்க வேண்டும் என்ற பேச்சு எழுந்த பொழுது விவகாரம் முற்றி விட்டது. இக் கல்லூரியை அங்கீகரிக்க மதராஸ் சர்வகலாசாலை மறுத்துவிட்டது.

எனவே, இந்திய வைத்தியக் கல்லூரியை மூட வேண்டிய இக்கட்டான நிலை ஏற்பட்டது. மதராஸ் அரசாங்கம் அந்த முடிவுக்கு வந்துவிட்டது. இந்த மருத்துவக்கல்லூரியில் படிப்பவர்களை ''அலோபதி'' மருத்துவ முறையில் இயங்கிக் கொண்டிருந்த கல்லூரி களில் சேர்த்துவிட மாகாண அரசு முடிவு செய்தது.

உதாரணமாக G,C.I.M. கல்லூரியில் மூன்றும் ஆண்டு படித்த மாணவர் M.B.B.S. படிப்பு நடைபெறும் மருத்துவக் கல்லூரியில் இரண்டாவது ஆண்டு வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். G.C.I.M. கல்லூரியில் நான்காவது ஆண்டு தோல்வியுற்ற மாணவர் M.B.B.S. கல்லூரியில் நான்காவது ஆண்டு வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். ஆனால் G.C.I.M. கல்லூரியில் நான்காவது ஆண்டு தேறிய மாணவர் M.B B.S. மருத்துவ கல்லூரி நான்காம் ஆண்டு தேறிய மாணவர்க்கு சமமாக கருதப்படவில்லை. இப்படி சில கெடுபிடிகள்.

G.C.I.M. கல்லூரியில் படித்துத் தேறிய பட்டதாரி டாக்டர்கள், ஜெர்மனியிலும், அமெரிக்காவிலும், பட்ட மேல்படிப்பு வகுப்பில் சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள். ஆனால் சென்னை மாகாணத்தில் இம் மாணவர்களை M.B.B.S. வகுப்பு படித்த மாணவர் களுக்கு சமமானவர்கள் என்று ஏற்க மறுத்து விட்டார்கள்.

இந்திய மருத்துவ படிப்பினுடைய விஷயம் நமது நாட்டில் இவ்வாறு இருக்கிறது. மத்திய சுகாதார அமைச்சர் அண்மையில் மதராஸ் வந்திருந்த பொழுது G.C.I.M. மருத்துவ கல்லூரியில் படித்து தேறிய மாணவர்கள் அவரை சந்தித்து தங்களது கோரிக்கை களை சமர்ப்பித்தார்கள். அது என்ன நிலைமையில் இருக் கிறது என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

[இந்திய அரசு 1970 ஆண்டு இறுதியில் இந்திய மருத்துவம் குறித்து மத்திய அரசு மசோதா ஒன்றை புதிதாகக் கொண்டுவந்த பொழுது 10-12-70 அன்று லோக் சபையில் இம் மசோதாவை காயிதே மில்லத் அவர்கள் வரவேற்றுப் பேசினார்கள் ]

# 9

[மானிய கோரிக்கை மீது லோக்சபையில் 29-3-63 அன்று விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் கூறியதாவது.]

## அஸ்ஸாம் முஸ்லிம்களின் சொல்லொணுத் துயர்

அஸ்ஸாம் மாநிலத்திற்குள் பாக்கிஸ்தான் நாட்ட வர்களின் ஊடுருவல் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அந்நிய நாட்டினர், நமது எல்லைக்குள் பிரவேசிக்க முனைந்தால் அது தடுத்து நிறுத்தப்பட வேண்டியதே. அது குறித்து எந்தவித அபிப்பிராய பேதமும் இல்லை.

ஆனால் இன்று அஸ்ஸாம் மாநிலத்தில் பல கிராமங் களிலும் 15 ஆண்டுகள், இருபது ஆண்டுகள், முப்பது ஆண்டுகள் என்று வாழ்ந்து வரும் அப்பாவி முஸ்லிம்களை பாக்கிஸ்தான் ஊடுருவல்காரர்கள் என்றுகூறிதுன் புறுத் தும் காட்சியைத்தான் நாம் இன்று கண்டு வருகிறோம். அவர்களில் பலர் தாங்கள் இந்திய பிரஜை என்பதற் கான ஆதாரங்களை வைத்து இருக்கிறார்கள். நீதி மன்றங்கள் மூலம் கிடைக்கப்பட்ட தீர்ப்புகளாகும் அவை. அப்படிப்பட்டவர்களுக்கு கூட ''விலக்கல் நோட்டீஸ்கள்'' போலீஸாரால் கொடுக்கப்பட்டு இருக்கின்றன.

அரசியலில் காங்கிரஸ் கட்சிக்கு மிகவும் நெருக்க மான ஒரு ஸ்தாபனம், அஸ்ஸாம் நிலவரம் குறித்து அரசாங்கத்திற்கு ஒரு மகஜரை சமர்ப்பித்துள்ளது. உண்மையான இந்திய பிரஜைகள் எவ்வாறெல்லாம் துன்புறுத்தப்படுகிறார்கள் என்று அந்த மகஜர் பட்டியல் போட்டு காட்டியுள்ளது.

அஸ்ஸாமில் ஊடுருவிய அந்நியர்களின் எண்ணிக்கை இரண்டு லட்சம் என்கிறார்கள், மூன்று லட்சம் என்கிறார்கள், சமயங்களில் நான்கு லட்சம் என்கிறார்கள். நடந்து முடிந்த மக்கள் கணக்கெடுப்பின் போது ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கை வேண்டும் என்றே விடப்பட்டதினால்தான் இந்த குழப்பங்கள் எல்லாம் ஏற்படுகிறது. எனவேதான் அதிகாரபூர்வமான, உண்மையான, சரியான, மக்கள் தொகை கணக்கெடுப்பை நடத்துங்கள் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

உத்திரபிரதேச மாநிலத்தில் தேவ்பந்த் என்னும் இடத்தில் தாருல்உலூம் என்ற அரபி சர்வ கலாசாலை உள்ளது. காங்கிரஸ் முஸ்லிம்கள் தான் இந்த ஸ்தாப னத்தை நிர்வகித்து வருகிறார்கள். அரசாங்கத்திற்கு மிகவும் நெருக்கமானவர்களால் நிர்வகிக்கப்படும் இந்தக் கல்விக் கூடத்தை போலீஸார் சோதனையிட்டு உள்ளார்கள். அப்படி என்ன அங்கு தப்பு நடந்து விட்டது? போலீஸாருக்கு ஏதாவது தகவல்கள் கிடைத் திருந்தாலும், அந்த கல்விக் கூடத்தின் தலைவரை அணுகி, அவர் அனுமதி பெற்று போலீஸார் சோதனை களை நடத்தியிருக்கலாம். ஆனால் போலீஸார் ஏதோ ஒரு கொள்ளைக் கூட்டத்தை பிடிப்பதுபோல தேவ்பந்துக்குள் நுழைந்து சூறையாடி இருக்கிறார்கள். இது ஒரு பண்பாடான செயலல்ல.

முஸ்லிம்கள் தங்கள் சட்டத்தின் பிரகாரம் நடந்து கொள்ள விரும்புகிறார்கள். மதம் என்பது அவர்கள் வாழ்க்கையிலிருந்து பிரிக்கமுடியாத அம்சமாகும். இந்த உரிமையை நமது அரசியல் சாசனமே மக்களுக்கு வழங்கியுள்ளது.

அரசியல் நிர்ணய சபையில் இதுகுறித்து விவாதம் நடைபெற்றபொழுது, பாரதப்பிரதமர் பண்டிதநேரு எழுத்து மூலமாகவே, ஒரு உறுதிமொழியை வழங்கி உள்ளார். எந்த ஒரு பிரிவினரும் தாங்கள் பின்பற்றும் தனியார் சட்டத்தை மாற்றியமைக்க வேண்டும் என்று கோராத வரையில், அவர்களது தனியார் சட்டத்தில் அரசாங்கம் தலையிடாது. இப்படிப்பட்ட உறுதிமொழி அரசியல் நிர்ணய சபையிலே வழங்கப்பட்டுள்ளது. ஆனால் இப்பொழுது சில அமைச்சர்கள் தனியார் சட்டம் திருத்தப்படும் என்று அடிக்கடி சொல்லிவருகிறார்கள், இது என்னவென்றே தெரியவில்லை.

## முஸ்லிம்களின் எண்ணிக்கை என்ன?

இந்நாட்டில் வாழும் முஸ்லிம்களின் உண்மையான எண்ணிக்கை என்ன என்பது ஒரு புதிராகவே இருக்கிறது. மக்கள் தொகை கணக்கெடுப்பு நடத்தப்பட்ட பொழுது மதவாரியாக மக்கள் கணக்கெடுக்கப்படாததினுல் தான் இத்தகைய குழப்பங்கள் ஏற்படுகின்றன.

ஐக்கிய நாடுகள் சபைக்கு அண்மையில் இரண்டு அரசாங்க தூதுக்குழுக்கள் சென்றிருந்தன. இந்தியாவில் வாழும் முஸ்லிம்களின் எண்ணிக்கை ஐந்து கோடி என ஒரு தூதுக்குழு அறிவித்தது. அங்கு சில நாள் கழித்து ஐக்கிய நாடு சபைக்கு சென்ற மற்றொரு தூதுக்குழு, இந்திய முஸ்லிம்களின் எண்ணிக்கை ஆறு கோடி என பிரகடனப்படுத்தியது. சில காலங்களுக்கு பின்பு, ஐக்கிய நாடுகளுக்கு அனுப்பப்பட்ட மற்றொரு இந்தியக்குழு, இந்திய முஸ்லிம்களின் எண்ணிக்கை எட்டு கோடி என்பதை ஒத்துக்கொண்டது. ஒரு நாள் மூன்று கோடி என்கிருர்கள், மற்றொரு நாள் எட்டு கோடி என்கிருர்கள், அதிலும் அந்நிய பூமியில் போய் இருந்து கொண்டு அறிவிக்கிருர்கள். இது என்ன வேடிக்கையாக இருக்கிறது. அரசியல் சாசனம் கூறிய விதிகளின்படி நடந்து கொள்ளாததே இதற்கெல்லாம் காரணம்.

முஸ்லிம்களுக்கு அங்கொன்றும் இங்கொன்றுமாக சில உத்தியோகங்கள் தரப்படத்தான் செய்கின்றன. ஆனுல் நாம் சொல்ல விழைவதெல்லாம் அவர்கள் ஜனத்தொகைக்கு ஏற்ப உத்தியோகங்கள் வழங்கப்படவில்லை என்பதாகும்.

லட்சத்தீவுகளில் வாழும் பலருக்கு தொழுநோயும் இருக்கிறது. யானைக்கால் நோயும் இருக்கிறது. சில இடங்களில் இது அளவுக்கு அதிகமாக இருக்கிறது. இதற்கான காரணங்களை அறிய அரசாங்கம் முனைப்புடன் செயல்பட வேண்டும். அங்குள்ள தண்ணீர் காரணமாக இருக்கலாமா? அல்லது வேறு காரணங்கள் உண்டா? என்பதை ஆராய்தல் அவசியமாகும்.

# 10

[அரசாங்க முதலீடு பற்றி— 26-4-63 அன்று லோக்சபையில் விவாதிக்கப்பட்டபொழுது காயிதே மில்லத் கூறியதாவது]

## ஆட்சி மொழி குறித்து

பிராங்க் அந்தோணி கொண்டு வந்த திருத்தத்தை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். ''ஷால்'' *(shall)* அல்லது ''மே'' *(may)* என்ற ஆங்கில வார்த்தை குறித்து இங்கு பல உறுப்பினர்களும் தங்கள் கருத்துக்களை வெளியிட்டார்கள். வேறுவிதமாக சொல்வதானுல், தங்களது புலமையை பலரும் காட்டினுர்கள். பதப்பிரயோகம் எப்படி இருந்த போதிலும், ஆட்சி மொழியாக ஆங்கிலமும் தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்பதே பலருடைய அபிப்பிராயமாகும்.

மொழி என்பது உணர்ச்சிபூர்வமானது. ஒருவனுடைய வாழ்க்கை முழுவதிலும் அது பிரதிபலிக்கிறது; தொட்டு நிற்கிறது. எனவே இது குறித்து விளையாட்டாகவோ, மேற்போக்காகவோ பேசி விட்டு நிறுத்திவிட முடியாது.

பதினுன்கு தேசீய மொழிகளில் ஒன்றை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது என்ன நடக்கும்? குழப்பத்திற்குத்தான் இது வழி வகுக்கிறது. ஆங்கிலம் கூடாது என்றும், தேசீய மொழிகளில் ஒன்றுதான் ஆட்சி மொழியாக வரவேண்டும் என்றும், இந்தி பேசுபவர்கள் சொல்கிருர்கள். இதை அவர்கள் ஒப்புக்காகத் தான் சொல்கிருர்கள் என்பது எனது கருத்து. ஆனுல், இந்தி பேசாத உறுப்பினர்களோ, தங்களது தாய்மொழி மட்டுமே ஒரே ஆட்சி மொழியாக வரவேண்டும் என்று கேட்கவில்லை. கோரிக்கை வைக்கவில்லை. அவர்களுக்கு உண்மை நிலவரம் தெரியும். நடக்கக்கூடியதை அவர்கள் சொல்கிருர்கள்.

இந்தியோ அல்லது ஏதாவது ஒரு தேசீயமொழியோ ஆட்சி மொழியாக்கப்பட்டால் என்ன நடைபெறும்? அந்த ஒரு மொழி மட்டுமே வளரும்; ஆட்சியாளர்களால் அம்மொழி மட்டுமே ஊக்குவிக்கப்படும். அம்மொழியை தாய்மொழியாகக் கொள்ளாதவர்களின் பாடு பெரும் திண்டாட்டம் தான்.

அம் மொழியை தாய்மொழியாகக் கொண்டவர்களுடன் அதைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள் போட்டியிட்டு முன்னுக்கு வரமுடியாது. நாட்டில் அதிருப்திதான் வளரும். இந்தியாவின் ஐக்கியம் பாதிக்கப்படும். ஒற்றுமை சீர்குலைந்து போகும்.

நமது நாட்டினுடைய பிரத்தியேகமான நிலைமைகளை மனதில் கொண்டு, ஆங்கில மொழியை தக்க வைத்து கொள்வதே நல்லது, புத்திசாலித்தனமானது. மற்ற நாடுகளைப்பார்த்து நாமும் காப்பி அடிக்கத் தேவையில்லை.

நமது நாடு இன்று மொழிவாரியாக பல மாநிலங்களாக திருத்தி அமைக்கப்பட்டுள்ளது. எனவே பிராந்திய மொழிகள் பலவும், நிலைத்திருக்கத்தான் செய்யும், வளரத்தான் செய்யும். ஒரு மொழியை மட்டும் மத்திய அரசு ஆட்சி மொழியாக ஏற்றுக்கொண்டால், அந்த மொழியைப் பேசுகிறவர்கள் மட்டும் ஆட்சியாளர்களாவும், அம்மொழியை தாய்மொழியாக கொள்ளாதவர்கள் ஆளப்படுபவர்களாவும் ஆகி விடுவார்கள்.

ஒரு குறிப்பிட்ட மொழிதான் ஆட்சிமொழியாக வேண்டுமா? அல்லது இந்நாட்டின் ஒற்றுமையும், ஐக்கியமும் முக்கியமானதா? இது தான் இன்று கேள்வி. இதை தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு உங்களிடம் இருக்கிறது. எனவே நாட்டின் ஒற்றுமையை கருத்தில் கொண்டு, இந்தியைத் தாய்மொழியாக கொள்ளாதவர்களின் விருப்பங்களையும், அச்சங்களையும் மதித்து, சரியானதொரு முடிவை எடுக்க வேண்டிய நிலைமையில் இந்தியைத் தாய்மொழியாக கொண்டவர்கள் இருக்கிருர்கள்.

# 11

[22-8-63 அன்று லோக்சபையில் காயிதே மில்லத் கூறியவாவது]

## மொழிவாரி மாநிலங்கள்

நம்பிக்கையில்லா தீர்மானத்தை முஸ்லிம் லீக்கும் ஆதரிக்கிறது என்பது இங்கு பலருக்கு வியப்பாக இருக்கிறது பி. எஸ். பி. (P.S.P.) கட்சி, ஜனசங்கம், சுதந்திரா கட்சி, மற்றும் பல எதிர்க் கட்சிகளுடன் சேர்ந்து இன்று இத்தீர்மானத்தை முஸ்லிம் லீக் ஆதரிக்கிறது. மேலே கூறிய கட்சிகளுடன் முஸ்லிம் லீக் ஏன் கூட்டு சேரக் கூடாது!

இதுவரை காங்கிரஸ் கட்சிதான் கேரளாவிலும் சில சமயங்களில் மதராஸிலும் முஸ்லிம் லீக்குடன் உறவு வைத்துள்ளது. அவர்கள் இக்கட்டான நிலையில் இருக்கும் பொழுதும், பிற உதவிகள் இல்லாதிருக்கும் பொழுதும், முஸ்லிம் லீக்கை நோக்கி வருகிறார்கள். காரியம் கை கூடியதும் சில சமயங்களில் கழற்றிக் கொண்டு போய் விடுவார்கள்.

இந்த நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முஸ்லிம் லீக் ஆதரிக்கின்ற காரணத்தை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். காங்கிரஸ் கட்சியின் சொல்லும், செயலும் வேறுபட்டவை, மாறு பட்டவை. அக் கட்சியினர் ஒன்றை சொல்வார்கள் ஆனால் அதை நிறைவேற்ற மாட்டார்கள்.

சில ஆண்டுகளுக்கு முன்பு மத்திய அரசு நியமித்த ''தார் கமிஷன்'' இந்த நாட்டை குறைந்தது இருபத்தைந்து ஆண்டுகளுக்காவது மொழி அடிப்படையில் பிரிக்கக் கூடாது என்று அறிக்கை கொடுத்தது. அன்று காங்கிரஸ்காரர்கள் இதை ஏற்றுக் கொண்டு இருந்தார்கள். இன்று அவர்கள் மொழி அடிப்படையில் மாநிலங்களை அமைத்தே விட்டார்கள்.

கல்விக் கொள்கையிலும் அவர்கள் ஒரு நிலையில் இல்லை. ஒன்றைச் சொல்கிறார்கள், மற்றொன்றைச் செய்கிறார்கள். பள்ளிக் குழந்தைகளின் எதிர்காலத்துடன் அவர்கள் விளையாடுகிறார்கள், ஒவ்வொரு திட்டமாக புகுத்தி பரீட்சை பார்க்கிறார்கள். இப்பொழுதும் மும் மொழித் திட்டம் பரீட்சிக்கப் படுகிறது. எந்த திட்டத்தை அவர்கள் அமல் படுத்தினாலும் அல்லது கைவிட்டாலும், ''உர்தூ மொழி புறக்கணிப்பு'' என்பதை மட்டும் விடாப் பிடியாக வைத்து இருக்கிறார்கள்.

நமது நாடு மதசார்பற்ற நாடு என்பது தெரிந்த விஷயமே. நாட்டில் வாழும் சிறு பான்மையினர்களின் பிரச்சினைகள் உரிய முறையில் கவனிக்கப்பட வேண்டும், என்பது மதசார்பற்ற தன்மையின் ஆணி வேராகும். இதை அவர்கள் பின் பற்றுகிறார்களா என்பது வேறு விஷயம்.

அகதிகள் விஷயத்தை எடுத்துக் கொள்ளலாம். ஒரு பகுதியிலிருந்து வந்த அகதிகள் உரிய முறையில் கவனிக்கப்படுகிறார்கள். ஆனால் இலங்கை, பர்மா, மலாயா போன்ற நாடுகளிலிருந்து வந்த அகதிகள் நாதியற்றவர்களைப்போல தத்தளித்துக் கொண்டு இருக்கிறார்கள். மதராஸ், கேரளா, ஆந்திரா போன்ற தென் மாநிலங்களில் லட்சக் கணக்கான அகதிகள் சொல்லொணாத் துயரங்களை அனுபவித்து வருகிறார்கள். அவர்களது அவலக்குரல் டெல்லியில் கேட்பதே இல்லை.

அவசர கால நிலைமை இன்று நாட்டில் அமலில் இருக்கிறது. இச் சந்தர்ப்பத்தில் நாட்டு மக்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து ஒரே கட்டுக்கோப்பின் கீழ் வைத்துக் கொள்ள வேண்டிய தருணத்தில், இன்று இந்த அரசு ஆட்சி மொழி மசோதாவை கொண்டு வந்திருக்கிறது. இந்த மசோதா நாட்டு மக்களை ஒற்றுமைப் படுத்துமா? அல்லது பிளவு படுத்துமா? என்பதை நீங்களே சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ளுங்கள்.

# 12

[29-5-64 அன்று லோக்சபையில் காயிதே மில்லத் கூறியதாவது]

## பண்டிதநெஹ்ரூவின் சிறப்பு

சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமராகவும், வரலாற்றுச் சிறப்பு மிக்க பிரதமராகவும் பணியாற்றிய, பண்டித ஜவஹர்லால் நேரு இன்று நம்மிடையேயில்லை: மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் இந்நாட்டின் விடுதலைக்காக பாடுபட்ட முன்னணி வீரர்களில் அவர் முதன்மையானவர்·

பண்டித நேரு சிறந்த அறிவாளி, நல்ல ராஜ தந்திரி, திறமையுடன் செயல்படக் கூடியவர், அவர் ஒரு சிந்தனையாளர், உலகப் புகழ் பெற்ற எழுத்தாளர். அவருடைய வாழ் நாள் முழுவதையும் தாய் நாட்டின் சேவைக்காகவே அர்ப்பணித்து விட்டவர். நாட்டு விடுதலைக்காக ஆரம்பத்தில் பாடுபட்டார்; பின்னர் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காப்பதில் இறுதி மூச்சு வரை கண்ணும் கருத்துமாக இருந்தார்.

அவர் மிகவும் கண்ணியமானவர், நல்ல பல குணங்களை உடையவர். இளம் சிறுர்கள் என்றால் கொள்ளை அன்புடையவர். ஏழை எளியவர்களுக்காகவும், ஒடுக்கப்பட்ட மக்களுக்காகவும் தமது வாழ்நாள் முழுவதும் பாடுபட்டவர். மனித சுதந்திரத்திற்காகவும், உலக அமைதிக்காகவும் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பாராட்டாதவர்களே கிடையாது. உலக தலைவர்கள் பலரும் அவரை வாயாரப் புகழ்ந்துள்ளார்கள்.

இவ்வளவு சீரும் சிறப்பும் மிக்க நமது தலைவரை இன்று நாம் இழந்து நிற்கின்றோம். சொல்லொணா வேதனையாகத் தான் இருக்கிறது. ஈடு செய்ய முடியாத நஷ்டம்தான். இந்த இழப்பின் ஆழத்தை வருணிக்க முடியாது. இந்த அவை உறுப்பினர்கள் பலரும் மறைந்த தலைவருக்குச் சமர்ப்பித்த புகழாரத்துடன் நானும் எனது மரியாதைகளை சமர்ப்பித்துக் கொள்கிறேன். அன்னாருக்குப் புகழாரம் சூட்டுவதில் நானும் கலந்துகொள்கிறேன்.

# 13

*[3-9-65 அன்று லோக்சபையில் காயிதே மில்லத் தெரிவித்த கருத்தாவது]*

## அலிகர் முஸ்லிம் சர்வகலாசாலை

முகம்மது கோயாவும், நானும் கொடுத்த திருத்தங்கள் மீது சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த சர்வகலாசாலையின் கோர்ட்டுக்கு மேலும் சில அதிகாரங்கள் இருக்க வேண்டும். இங்கு பயிலும் முஸ்லிம் மாணவர்களுக்கு மதக் கல்வி போதிக்கப்படுவதை மேற்பார்க்கவும், அதை செயல்படுத்தவும் இந்த கோர்ட்டுக்கு முழு அதிகாரம் இருக்க வேண்டும். அத்துடன் இந்த கோர்ட்டுக்கு, இந்த சர்வகலாசாலைக்கு சொந்தமான சொத்துக்களையும், மூலதனங்களையும் கண்காணிக்கும் உரிமையும் இருத்தல் அவசியம். எங்களது திருத்தத்தின் நோக்கம் இதுதான்.

அலிகர் முஸ்லிம் சர்வகலாசாலை, இன்று மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்திலிருந்து வந்த போதிலும், இந்த ஸ்தாபனம் எதில் இருந்து தோன்றியது, அதன் வரலாறு என்ன? அதன் பின்னணி என்ன? என்பனவற்றை உற்று நோக்குதல் அவசியமாகும்.

1857 ம் ஆண்டு வாக்கில் முஸ்லிம்கள் மிகவும் பின் தங்கிய நிலையில் இருந்தனர். மேற்கத்திய கல்வியை கற்க அவர்கள் விரும்பவில்லை. மேற்கத்திய நாகரிகம், கலை, கலாச்சாரம், கல்வி முறை ஆகியவற்றை இந்திய முஸ்லிம்கள் அக் கால கட்டத்தில் அறவே ஒதுக்கித் தள்ளினார்கள், வெறுத்தார்கள். அதன் காரணமாக விஞ்ஞான அறிவும், புதிய கல்வி முறைகளும் அவர்களுக்கு கைக்கு எட்டாத தூரத்திற்குச் சென்று விட்டன.

இந்த அவல நிலையை முதன் முதலாக உணர்ந்தவர் சர். சையது அஹமது கான் ஆவார். தமது சமுதாயத்தினர் புதிய கல்வி முறைகளைக் கடை பிடிப்பதன் மூலம் தங்கள் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும் என அவர் திட்டமிடலானார்.

மதக் கல்வி இல்லாத முறையில் வகுக்கப்படும் எந்த கல்வி திட்டத்தையும் முஸ்லிம்கள் ஒத்துக் கொள்ள மாட்டார்கள் என்பதும் அவருக்குத் தெரியும். எனவே மதக் கல்வியுடன் கூடிய நவீன விஞ்ஞான அறிவை முஸ்லிம்களும் பெற வேண்டும் என்று சர். சையத் விரும்பினார். அது குறித்து பல தகவல்கள் சேகரிக்கலானார். இங்கிலாந்து சென்று ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகள் எவ்விதம் இயங்குகின்றன என்பதையும் தெரிந்து கொண்டார். பின்னர் பிரிட்டிஷ் அரசாங்கத்தை அணுகி தமது திட்டத்தை விளக்கினார். முஸ்லிம்கள் ஏற்கக் கூடிய அளவில் புதிய கல்வித் திட்டத்தை வகுக்க 1870-ம் ஆண்டில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

அக்கமிட்டியினர் வகுத்துக் கொடுத்த திட்டத்தின் பிரகாரம் 1875 ம் ஆண்டில் ஒரு கல்விக் கூடம் அமைக்கப்பட்டது. இந்த கல்விக் கூடம் 1877-ம் ஆண்டில் ஒரு கல்லூரியாக உயர்த்தப்பட்டது. இதுதான் ''முகமடன் ஆங்கிலோ ஓரியண்டல் கல்லூரி'' *M.A.O. College* என்று அழைக்கப்பட்டது.

இக் கல்லூரிக்கு அடிக்கல் நாட்டியவர் அன்றைய வைசிராயாக இருந்த 'லிட்டன் பிரபு' *(Lord Lytton)* ஆகும். *M.A.O.* கல்லூரி முழுக்க முழுக்க முஸ்லிம் சமுதாயத்தினரின் நன்கொடை மூலமாக எழுந்த கல்வி ஸ்தாபனமாகும். தனி ஒருவருடைய நன்கொடை மூலமாகவோ அல்லது ஒரு அரசரின் நன்கொடையாகவோ உருவானதல்ல இக்கல்லூரி. முஸ்லிம் சமுதாயத்தின் ஒட்டு மொத்தமான நன்கொடை மூலம் உதயமானது இது.

இக் கல்லூரியை ஒரு சர்வகலாசாலையாக உயர்த்த வேண்டும் என்ற எண்ணம் முஸ்லிம் சமுதாயத்திடம் உண்டானபோது, அதற்கும் அவர்கள் தாராளமாக நிதியை அள்ளி வழங்கினார்கள். 1870 முதல் இந்த சர்வகலாசாலை ஆரம்பமான 1920 ம் ஆண்டு வரையிலும் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள், இந்த முயற்சி தொடர்ந்து நீடித்தது. அன்றைய இந்திய அரசாங்கமும் சர்வகலாசாலை அமைப்பதற்கு என்று கல்வி கமிஷன் ஒன்றை நிறுவியது. சர். வில்லியம் ஹண்டர் என்பவர் இக்கமிஷனின் தலைவராக நியமிக்கப்பட்டார். அவர் கூறிய வாசகம் ஒன்றை இச் சமயத்தில் நினைவு கூர்வது பொருத்தமாக இருக்கும்.

மதக் கல்வியுடன் கூடியது அல்லாத கல்வி, ஒரு கல்வித்திட்டமே யல்ல, என்று வில்லியம் ஹண்டர் ஆணித்தரமாக கூறியுள்ளார். மேலும் அவர் தமது அறிக்கையில், கீழ்க்கண்ட விவரங்களையும் கொடுத்துள்ளார். ''இந்த முஸ்லிம் ஸ்தாபனத்தில் முஸ்லிம் அல்லாதவர்களும் சேர்ந்து கல்வி பயின்று வந்தார்கள். ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள் ஆகிய மாணவர்களும் இங்கு பயின்று இருக்கிறார்கள். ஒரு சமயம் 259 மாணவர்களில் 57 பேர் ஹிந்து மாணவர்களாக இருந்திருக்கிறார்கள். கிட்டத்தட்ட நான்கில் ஒரு பகுதி மாணவர்கள் முஸ்லிம் அல்லாதவராகவே இருந்திருக்கிறார்கள். பரந்த மனப்பான்மையுடன் கல்விக்கூடம் செயல் பட்டதற்கு இதுவே சிறந்த எடுத்துக் காட்டாகும்.

இக் கூற்று நான் கூறியதல்ல. கல்வி கமிஷன் தலைவர் வில்லியம் ஹண்டர் சமர்ப்பித்த ரிப்போர்ட்டில் கூறப்பட்டதாகும். நவீன விஞ்ஞான அறிவையும், மதக் கல்வியையும் ஒரு சேர இணைத்து தங்களது மாணவர்களுக்கு அளிக்க வேண்டும் என்ற தணியாத அவா முஸ்லிம் சமுதாய மக்களிடம் வளர ஆரம்பித்ததும் தங்களுக்கென ஒரு சர்வகலாசாலை அவசியம் என்ற உண்மை அவர்களிடம் பளிச்சிட்டது.

அத்துறையில் அவர்கள் தீவிரமாக முயற்சிக்கலானார்கள். அன்றைய இந்திய அரசும் இதை ஏற்றுக் கொண்டது. லண்டனிலுள்ள இந்திய காரியதரிசிக்கு

1911-ம் ஆண்டு டில்லியில் இருந்து அனுப்பப்பட்ட அரசாங்க மடலில் இவ்விதம் கூறப்பட்டிருந்தது. ''அலிகர் நகரில் உங்கள் அனுமதியுடன் ஆரம்பிக்க விருக்கும் சர்வகலாசாலை உண்மையிலேயே ஒரு பரீட் சார்த்தத் திட்டமாகும். முஸ்லிம் சமுதாயமும், இந்திய அரசும் இந்த புதிய திட்டத்தை பரிசோதித்துப் பார்க்க இருக்கின்றன. சர் சையத் அகமதுகானுடைய உன்னத லட்சியங்களுக்கு செயல் வடிவம் கொடுப்ப தாகும் இது.'' இவ்வாறு அந்த அரசாங்க மடல் தெரி வித்து உள்ளது. லண்டனிலுள்ள இந்திய காரியதரிசி இத்திட்டத்திற்கு உடனே அனுமதி வழங்கினர்.

சர்வ கலாசாலைக்கான வேலைகள் ஆரம்பமாகின. அதற்கென ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. முஸ்லிம் தலைவர்களுடன் அக் கமிட்டியினர் கலந்து ஆலோசித்த னர். மசோதா ஒன்று உருவானது. 1920 ஆண்டு டில்லி இம்பிரியல் கவுன்சிலில் இந்த மசோதா தாக்கல் செய் யப்பட்டது. அந்த அவையில் ஹிந்து, முஸ்லிம், கிறிஸ் துவ, ஐரோப்பிய உறுப்பினர்களும் இருந்தார்கள் என் ருலும் அனைவரும் ஏகமனதாக இந்த மசோதாவை நிறைவேற்றினர்கள்.

இங்கு நினைவு கூர வேண்டியது என்னவென்றல் M. A. O. கல்லூரிதான், அலிகர் முஸ்லிம் சர்வ கலா சாலையாக உயர்வு பெற்றது. M.A.O. கல்லூரிக்கு சொந்தமான லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துகளும் சர்வகலாசாலைக்கு மாற்றிக் கொடுக்கப் பட்டன. M A.O. கல்லூரிக்கான வக்ப் சொத்துக்கள் கூட கைமாற்றப்பட்டது. 1920 ஆண்டு சர்வ கலா சாலை சட்டப் பிரகாரம், வரும் காலத்திலும் M. A. O. கல்லூரிக்கு கிடைக்கக்கூடிய நன்கொடைகளும், சொத்துகளும் அலிகர் முஸ்லிம் சர்வகலாசாலைக்கு சொந்தமாகும். அக்கால கட்டத்தில் சர் சையத் அஹ மது கான் நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து முப் பது லட்சரூபாய் வசூலித்தார். முஸ்லிம் சர்வ கலா சாலைக்காக அந்த தொகையும் இந்திய சர்க்காரிடமே கொடுக்கப்பட்டுள்ளது. இந்திய அரசாங்கத்தின் மேற் பார்வையில் அலிகர் முஸ்லிம் சர்வ கலாசாலை ஆரம் பித்து நிர்வகிக்கப்பட்டு வந்த காலகட்டத்திலும், முஸ்லிம் சமுதாயம் லட்சகணக்கான ரூபாய்களை அந்த கல்விக்கூடத்திற்கு அன்பளிப்பாக வழங்கிய வண்ணம் இருந்தது. எனவே அந்த சர்வகலாசாலை சிறுபான்மை முஸ்லிம்களின் கல்விக்கூடம் என்பதில் கொஞ்சமும் சந் தேகமில்லை.

சர் சுரேந்திரநாத் பானர்ஜி என்ற பெரியவர் டில்லி இம்பீரியல் கவுன்சிலில் உறுப்பினராக இருந்தார். என் இளமைக் காலத்தில் அவரையே எனது ''ஹீரோ'' வாக நான் மதித்து வந்துள்ளேன். அலிகர் சர்வ கலா சாலை மசோதா, இம்பீரியல் கவுன்சிலில் விவாதிக்கப் பட்ட சமயம் அவர் அதில் ஒரு உறுப்பினராக இருந் தார். முஸ்லிம் சமுதாயத்தின் நன்மைக்காக துவக்கப் படும் இந்த சர்வ கலாசாலைக்கு ஹிந்து சமுதாயத்தின் சார்பாக நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன் என்று அந்த அவையில் அவர் கூறினர். எனவே சர்வ கலாசாலை குறித்து ஆரம்ப காலத்தில் இருந்தே அது ஒரு சிறுபான்மை ஸ்தாபனம் என்பதை எல்லோருமே தெளிவாகப் புரிந்து வைத்து இருந்தார்கள். எனவே யாருக்கும் இந்த விஷயத்தில் எந்தவித சந்தேகமும் எழ நியாயம் இல்லை. அதே நிலைமை இன்றும் நீடிக்க வேண்டும்; என்றும் நீடிக்க வேண்டும்.

இந்த ஆண்டு சென்ற ஏப்ரல் 25-ம் தேதியன்று அந்த சர்வ கலாசாலை வளாகத்தினுள் சில அசம்பா விதங்கள் நிகழ்ந்தன என்று காரணம் காட்டி கல்வி அமைச்சர் புதிய மசோதாவை சபை முன் கொண்டு வந்திருக்கிறர்.

விரும்பத்தகாத செயல்களோ, வன்முறைகளோ அந்த கல்வி கூட வளாகத்தில் நடைபெற்றிருந்தால், சாதாரண சட்டங்களின் வாயிலாகவே அதற்குப் பரிகாரம் கண்டு இருக்கலாமே என்று கனம் உறுப்பினர் பிராங்க் அந்தோணி இந்த அவையில் கேட்டார். அதைத்தான் நானும் கேட்கிறேன். இந்த நாட்டில் எத்தனையோ வன்முறைகள், சதித்திட்டங்கள் பல நிகழ்ந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் நமது சட்டங் கள் வாயிலாகவே சந்திக்கவில்லையா? இந்த சர்வ கலா சாலையில் ஏதோ அசம்பாவிதங்கள் நிகழ்ந்தன என்று கூறி இந்த கல்விக்கூடத்தின் அசல் தன்மையையே மாற்றிவிட முயற்சிப்பதா? மூல நோக்கத்தையே கிள்ளி எறிந்துவிடும் வகையில் அரசாங்கப் பிரகடனம் இருக் கிறது. இவ்வளவு தீவிர நடவடிக்கை தேவையில்லை என்பதே எனது கருத்தாகும்.

நான் ஒரு சொத்து வாங்குகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்க்கு சென்று கிரைய பத்திரத்தை தாக்கல் செய்து அதற்குரிய கட்டணத்தையும் செலுத்துகிறேன்; சப்ரிஜிஸ்ட்ரார் என்னிடம் சில கேள்விகளை கேட்கிறர். அதன் பிறகு கிரைய பத்திரம் ரிஜிஸ்டர் செய்யப்படுகிறது. குறிப் பிட்ட சொத்தின் சொந்தக்காரன் என்ற முறையில் நான் அந்த சார்பதிவாளர் அலுவலகத்தில் இருந்து வெளி வருகிறேன். என்னை பார்த்து, நீ எப்படி ஒரு சர்க்கார் இலாக்காவிற்கு போய் வரலாம் என்றும் சர்க்காருடன் தொடர்பு வைத்துக் கொண்டதினல், அந்த சொத்து உனக்குரியது அல்ல என்றும் சொன்னல் எவ்வளவு வேடிக்கையாக இருக்கும்? சர்க்கார் அலுவலகத்திற்கு போய் வந்ததினல் எனது சொத்துரிமை பறிபோய் விடுமா? அது போலத்தான் ஒரு சர்வகலாசாலையை ஆரம்பிக்க முற்பட்ட இஸ்லாமிய சமுதாயம், அதன் அங்கீகாரத்திற்காக அரசாங்கத்தை அணுகியது. ஒரு சட்டத்தின் மூலமாக இந்த அங்கீகாரத்தை இந்திய அரசு வழங்கியது. அப்பொழுது தான் அந்த கல்வி கூடத்தில் இருந்து வெளிவரும் மாணவர்களுடைய டிகிரிகளும், டிப்ளமாக்களும் அங்கீகாரம் பெறும். அரசாங்கத்திடம் அனுமதி கோரியதினல் இந்த சர்வ

கலாசாலே முஸ்லிம் சமுதாயத்திற்கு சொந்தமானது அல்ல என்று ஆகி விடுமா? அப்படிச் சொல்லி விடலாமா?

இது ஒரு சிறு பான்மை ஸ்தாபனம். இந்திய அரசியல் சாசனத்தின் பாதுகாப்பு அதற்குள்ளது. ஒரு விதி அல்ல, பல விதிகள் இதற்கு ஆதாரமாக உள்ளன. எனவே அந்த சர்வகலாசாலேயின் ''ஒரிஜினல்'' தன்மையை எக்காரணம் கொண்டும் மாற்றிவிடக் கூடாது என அழுத்தமாகக் கேட்டுக் கொள்கிறேன்.

## 14

### சக்ளாவின் விஷமம்

*[அலிகர் முஸ்லிம் சர்வ கலாசாலே திருத்த மசோதா 6-9-65 அன்று மீண்டும் தொடர்ந்து நடைபெற்ற பொழுது தங்களது திருத்தங்களின்மீது பேசிய காயிதே மில்லத் கூறியதாவது]*

1961 ஆண்டு நியமனம் செய்யப்பட்ட சாட்டர்ஜி கமிட்டியும், பாரத பிரதமர் நேரு அவர்களும் துணை வேந்தராகப் பணியாற்றிய தய்யப்ஜீ அவர்களும் அந்த சர்வ கலாசாலேயினுடைய கட்டுப்பாட்டைப் புகழ்ந்தே பேசியுள்ளனர். நாட்டிலுள்ள இதர சர்வ கலாசாலே களில் இருந்து, எந்த விதத்திலும் அது தரம் தாழ்ந்தது அல்ல என்று மேற்கூறியவர்களே நற்சான்றிதழ்கள் வழங்கி உள்ளனர்.

ஆனுல் கல்வி அமைச்சர் சக்ளா அந்த சர்வ கலா சாலேயில் சதித் திட்டங்கள் நடைபெற்றன என்கிருர்.

டாக்டர் செய்யது மஹ்மூத் அவர்களேக் குறை சொல்கிருர். கடந்த அறுபது ஆண்டுகளாக காங்கிரஸ் கட்சியில் இருக்கும் டாக்டர் சைய்யது மஹ்மூத் மகாத்மா காந்தியினுடைய சீடர்; அவர் ஒரு சுதந்திரப் போராட்ட வீரர்; இந்நாட்டிற்காக அவர் பல தியாகங்களே செய்திருக்கிருர்; அப்படிப்பட்டவர் மீது திரு சாக்ளா குற்றம் சாட்டி உள்ளார்.

அத்துடன் அமைச்சர் நிற்கவில்லே. ''முஷாவரத்'' அமைப்பையும் அதனுடன் இணேந்துள்ள கட்சிகளேயும் கல்வி அமைச்சர் தரக் குறைவாகப் பேசியுள்ளார். முஷாவரத்தை சார்ந்தவர்கள் நாடு டுழுவதும் சுற்றுப் பயணம் செய்து ஹிந்துக்களும். முஸ்லிம்களும் ஒற்றுமையாக வாழ வேண்டும் எனப் பிரச்சாரம் செய்தார்கள். இவர்களது கூட்டங்களில் பல ஹிந்துத் தலேவர்கள் கலந்து கொண்டு பேசினுர்கள். காங்கிரஸ் கட்சி உட்பட பல அரசியல் கட்சிகளேச் சார்ந்தவர்கள் அவர்கள். அக்கூட்டங்களில் பேசிய முஸ்லிம் லீக்காரர்களோ, ஜமாத்தே இஸ்லாமியைச் சேர்ந்தவர்களோ, ஏதாவது தப்பும் தவறுமாகப் பேசி இருக்கிருர்கள் என கனம் அமைச்சரால் சொல்ல முடியுமா? தமது சுண்டு விரலே நீட்ட முடியுமா? இந்நாட்டின் நலன்களுக்குப் பாதகமாக அவர்கள் என்றுமே எதுவுமே செய்ததில்லே.

கனம் கல்வி அமைச்சர் முஸ்லிம் லீக்கையும் விட்டு வைக்கவில்லே. அது பற்றியும் ஒரு பாட்டம், வசை பாடி தீர்த்துள்ளார். இவர் வெளிநாட்டு அமைச்சராக இருந்தபொழுது கஷ்மீர் பிரச்சினேயில் முஸ்லிம் லீக்கின் ஆதரவு தங்களுக்கு இருக்கிறது என்று ஐக்கிய நாடுகள் சபை மாமன்றத்தில் கூறியவர்தான். முஸ்லிம் லீக்கின் பெயரை சொல்லி அந்த அவையில் கைத் தட்டல்களேயும், பாராட்டுகளேயும் பெற்று இருக்கிருர். ஆனுல் அவர் இப்பொழுது அந்த கட்சியை குறித்து ஏதேதோ இங்கு சொல்கிருர். ஐக்கியநாடு சபையில் முஸ்லிம் லீக்கை புகழ்ந்த அவர் வாயில் இருந்து இப்படியும் வார்த்தைகள் வெளி வருகின்றன. ஆனுல் முஸ்லிம் லீக் வழக்கம்போல இந்த நாட்டின் பெருமையையும், மானமரியாதையையும், ஐக்கியத்தையும் பேணிக் காக்க என்றென்றும் முன்னணியில் நிற்கிறது, இனியும் நிற்கும் என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஜமாஅத்தே - இஸ்லாமியையும் அந்த கனவான் விட்டு வைக்கவில்லே. மத சார்பான ஒரு அமைப்பு அது. முஸ்லிம் இளேஞர்கள் தவருன வழியில் சென்று விடக் கூடாது என்பதற்காகவும், இறைவனின் பயத்தை அவர்களின் உள்ளங்களில் பாய்ச்ச வேண்டும் என்பதற்காகவும் பாடுபடும் ஒரு அமைப்பு ஆகும். இந்த சபைக்கு வந்து பதில் சொல்ல முடியாதவர்களே பற்றி, கல்வியமைச்சர் இவ்வளவு வசை மாரிகளே பொழிந்திருக்க வேண்டியதில்லே. சற்று பெருந்தன்மையாகவே அவர் நடந்து இருக்கலாம்.

எங்கள் தரப்பில் எடுத்து வைக்கப்படும் வாதங்களில் காணப்படும் குறைபாடுகளே வழக்கறிஞர் என்ற முறையிலும் அமைச்சர் என்ற முறையிலும் M. C. சக்ளா சுட்டிக்காட்டி இருக்கலாம். அதை விட்டு விட்டு நாட்டிற்காகப் பாடுபடுபவர்களேப் பற்றி ஒரே வசை மாரியில் அவர் இறங்கி விட்டிருப்பது பரிதாபத்திற்குரியது.

## 15

### விஷமப் பிரச்சாரம்

*[கேரள மானியக்கோரிக்கை குறித்து 13-9-65 அன்று லோக் சபையில் விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது]*

மலபாரிலுள்ள மாப்ளா முஸ்லிம்கள் குறித்து திரு. காமத் தகாத சில வார்த்தைகளேக்கூறியுள்ளார்.

**ஸ்ரீ விஷ்ணுகாமத் :-** இவ்விஷயங்கள் பத்திரிக்கையில் வந்துள்ளன.

**காயிதே மில்லத் :-** தவருகவும் விஷமத்தனமாகவும், சந்தேகத்தை உண்டாக்கும் பத்திரிக்கை செய்திகளே ஆதாரமாக கொள்வது நல்லதல்ல. சில ஆண்டுகளுக்கு முன் அம்மாவட்டத்தைச் சார்ந்த சிலர் பாக்கிஸ்தானுக்கு சென்றனர் என்பது உண்மையே. அவர்களில் பலர் தாய் நாடு திரும்பி விட்டார்கள். அப்படி திரும்பியவர்கள் அங்கு குழப்பத்தையும், கலகத்தையும் உண்டாக்கி வருகிருர்கள் என்பது சுத்தத் தவருகும். இது அநியாயமான குற்றசாட்டு.

தாய் நாட்டிற்கு அவர்கள் விசுவாசமாகவே இருக்கின்றனர். அவர்கள் திரும்பி வந்தது இன்று நேற்று அல்ல, பத்து, பதினைந்து ஆண்டுகளாகவே அவர்கள் இந்தியாவில் வாழ்ந்து வருகிறார்கள். மாப்பிளா முஸ்லிம்கள் தேசப்பற்று மிக்கவர்கள். தாய் நாட்டின் மீது அன்பு கொண்டவர்கள். நாட்டின் இதர பகுதிகளில் வாழும் முஸ்லிம் பிரஜைகளில் நின்றும் அவர்கள் கொஞ்சமும் சளைத்தவர்கள் அல்ல. இந்நாட்டு இராணுவத்தில் சேர்ந்து தங்கள் இன்னுயிரையும் அர்ப்பணிக்க தயாராக இருக்கிறார்கள். இந்தஅரசாங்கம் அவர்களிடமிருந்து தாய் நாட்டிற்காக எதை செய்ய வேண்டும் என்று எதிர் பார்க்கிறதோ அதை அவர்கள் நிச்சயம் செய்வார்கள்.

**ஸ்ரீஹரி விஷ்ணுகாமத்** :- ஸ்ரீராகவாச்சாரியினுடைய பேச்சை கனம் உறுப்பினர் படித்துப் பார்க்கவும்.

**காயிதே மில்லத்** :- அப்பேச்சு முற்றிலும் உண்மைக்கு புறம்பானது.

அதில் கொஞ்சம்கூட நியாயம் இல்லை. அந்த மக்களைப் பற்றி இவ்வளவு அவதூறான வார்த்தைகளை உதிர்த்திருப்பது துரதிருஷ்டமானது.

போலீஸார் கூட சில சமயங்களில், யாரோ சொன்னார்கள் என்பதற்காக அம்மக்கள் மீது கடும் நடவடிக்கைகள் எடுக்க முற்பட்டு வருகின்றனர் ''தேசிய முஸ்லிம் என்று தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளும் ஒருவனுக்கும் மற்ற முஸ்லிம்களுக்குமிடையில் ஏதாவது தகராறு என்றால் தேசீய போர்வையில் நுழைந்து கொண்டிருக்கும் அவன், உடனே போலீஸிடம் சென்று வேண்டாதவற்றை எல்லாம் சொல்கிறான். தனக்கு வேண்டாதவர்களை எல்லாம் தேசப்பற்று இல்லாதவர்கள் என்று குற்றம் சாட்டுவது அவருடைய வாடிக்கை. இதை ஆதாரமாக வைத்துக் கொண்டு காவல் துறையினரும் பல கெடுபிடிகள் செய்கிறார்கள்.

இந்நாட்டிற்கு விரோதமாக ஏதாவது ஒருசெயலில் ஈடுபட்டதாக அந்த மாப்ளா முஸ்லிம்களில் யாராவது ஒருவர் மீதாவது குற்றம் நிரூபிக்கப்பட்டுள்ளதா? அவ்வாறு நிரூபிக்கப்பட்டிருந்தால் நான் அதை வரவேற்பேன். காவல் துறையினர் நடவடிக்கையை நான் ஆதரித்திருப்பேன். ஆனால் உண்மை அப்படியல்ல.

**ஸ்ரீ ஹரி விஷ்னு காமத்:-** ஆறு நபர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாக பத்திரிக்கை செய்தி கூறுகின்றனவே.

**காயிதே மில்லத்**:- வதந்திகள் தான் நடமாடுகின்றன. நடக்காதவற்றை கூறி செய்திகளை வெளியிடுகிறார்கள். யுத்த முயற்சிகளுக்கு எல்லா விதமான தியாகங்களையும் செய்ய மாப்ளா முஸ்லிம்கள் தயாராகயிருக்கிறார்கள். நமது இடத்தின்மீது ஆக்கிரமிப்பு செய்ய முற்பட்ட பாகிஸ்தானை எதிர்த்து போராடி நம் நாட்டிற்கு வெற்றியை ஈட்டிக் கொடுக்க அவர்கள் எப்பொழுதும் தயாராக இருக்கிறார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

# 16

## முஸ்லிம்கள் மீது அநீதி

*[கேரளா மானியக் கோரிக்கை மீது 25-11-65 அன்று லோக் சபையில் விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது]*

ஜனாதிபதி ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும் கேரளா மாநிலத்தில் சிறுபான்மையினர் துன்புறுத்தப் படுவது நீடித்து நடைபெற்று வருகிறது. பாகிஸ்தானோடு நடைபெற்ற யுத்தத்தில் இந்திய அரசுக்கு முஸ்லிம் லீக் ஆதரவு நல்கியது. நாட்டின் பெருமையையும், ஐக்கியத்தையும், நிலைநாட்டுவதில் அது முன்னணியில் நின்றது. யுத்த முயற்சிகளுக்கு தம்மால் இயன்ற உதவிகளையும் ஒத்தாசைகளையும் இக்கட்சி கொடுத்து வந்தது.

இருப்பினும், முஸ்லிம் லீகின் ஊழியர்கள் பலர் காவல் துறையினரால் கைது செய்யப்படுகிறார்கள்; எதற்காக? ஒருவித ஆதாரமும் இல்லாமல் வதந்திகளின் பேரில் காவல் நிலையத்துக்கு அவர்கள் அழைத்துச் செல்லப் படுகிறார்கள். இவர்கள் மீது ஏதாவது ஒரு குற்றமாவது நிரூபிக்கப்பட்டால் அவர்கள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகளுக்காக போலீஸாரை நான் பாராட்டி இருப்பேன். அப்படி அங்கு ஒரு சம்பவம் கூட நிகழவில்லை.

இரண்டு மாப்ளா முஸ்லிம்களிடையே சொத்துத் தகராறு; நீதி மன்றத்தில் சிவில் வழக்கு அவர்களுக்குள் நடைபெற்று வருகிறது. அவர்களில் ஒருவன் போலீஸாரிடம் சென்று மற்றவனைப் பற்றி கோள் மூட்டுகின்றான். அவனை ஒரு தேசவிரோதி என்று வருணிக்கின்றான். உடனே போலீஸார் அவனைக் கைதுசெய்கிறார்கள். அதுவும் இந்தியப் பாதுகாப்புசட்டத்தின்கீழ் கைது செய்கிறார்கள். முஸ்லிம் அல்லாத ஒருவருக்கும் ஒரு முஸ்லிமுக்குமிடையில் ஏதோ மனஸ்தாபங்கள்; உடனே அந்த முஸ்லிமை பற்றி மற்றவன் தாறுமாறாக புகார் செய்கிறான். மாஜிஸ்ட்ரேட் முன்பு இவ்விஷயம் விசாரணைக்குச் செல்கிறது. ஆனால் தகவல் கொடுத்த ஆசாமி கோர்ட்டுக்கு வரவில்லை. தலைமறைவாகி விடுகிறான்; அந்த அப்பாவி முஸ்லிமை மாஜிஸ்ட்ரேட் விடுதலை செய்கிறார். இதில் வேதனையான விஷயம் என்னவென்றால் முதல் நாள் விடுதலை செய்யப்பட்ட அந்த முஸ்லிம் மறுநாள் போலீஸாரால் இந்தியப் பாதுகாப்பு சட்டத்தின் கீழ் மீண்டும் கைது செய்யப்படுகிறார். ஜனாதிபதி ஆட்சியின் கீழ் இம்மாதிரியான அநியாயங்கள் எல்லாம் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

## 17

**லால்பகதூர் சாஸ்திரி**
**இரங்கல் உரை:- 14-2-66**

மறைந்த பாரதப் பிரதமர் லால்-பகதூர் சாஸ்திரி குறித்து அவைத் தலைவர் கூறிய அனுதாப வார்த்தைகளுடன் நானும் இணைந்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். பதினெட்டு மாதங்கள் தான் அவர் இந்நாட்டின் பிரதம மந்திரியாக இருந்தார். அக்குறுகிய காலத்திற்குள் அவர் தமது திறமையை வெளிக்காட்டி விட்டார். தாம் ஒரு தலை சிறந்த ராஜ தந்திரி என்பதை இந்நாட்டில் மட்டுமல்ல, வெளி நாடுகளிலும் அவர் நிரூபித்து விட்டார்.

அவர் எளிய வாழ்க்கை நடத்தினர். அகம்பாவம் என்பதோ, கர்வம் என்பதோ அவரிடம் கொஞ்சம்கூட இல்லை. ஆனல் அவர் தமது கொள்கைகளில் உறுதியாக இருந்தார். பாக்கிஸ்தானுடன் நடந்தபோரில் இந்தியா வெற்றி பெற்றதில் அவருடைய பங்கு கணிசமானது. போருக்குப்பின் நடந்த சமாதான பேச்சு வார்த்தைகளிலும் அவர் ஆர்வம் காட்டவே செய்தார்.

டாஷ்கண்டு பிரகடனத்தில் அவர் பங்கை யாரும் குறைத்து மதிப்பிடமுடியாது. அதன் மூலமாக உலக சமாதானத்திற்கே அவர் வித்திட்டார் என்று கூறலாம். தமது நாட்டின் பெருமையை உலகுக்கு அறிமுகப் படுத்தினர்.

இந்திய மக்கள் மத்தியில் அவரது நினைவு என்றும் நீங்காது நிலைத்து நிற்கும். இந் நாட்டவர்க்கு ஒரு வழி காட்டியாகவே அவர் திகழ்வார் என்பது திண்ணம். அன்னருடைய குடும்பத்திற்கு என்னுடையவும், எனது கட்சியுடையவும் ஆழ்ந்த அனுதாபங்களை தங்கள் மூலமாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## 18

*(ஜனாதிபதி உரை மீது விவாதம் 24-2-66)*

கேரள மாநில சட்டசபை இயங்கவில்லை. ஜனதிபதி ஆட்சிதான் அங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. கடந்த ஆண்டு நடைபெற்ற தேர்தல்மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை, அது கூடுவதற்கு முன்னலே கலைக்கப்பட்டுவிட்டது. அம்மாநில மக்களுடைய குரலை எழுப்பவேண்டுமானல் டெல்லியில்தான் ராஜ்யசபையிலும், லோக்சபையிலும் எதிரொலிக்க வேண்டியுள்ளது.

கேரளாவில் பின்தங்கிய வகுப்பினருக்கு என சில இடங்கள் கல்வி நிலையங்களில் ஒதுக்கப்பட்டு இருந்தன. நீண்ட நாட்களாகவே இது அமலில் இருந்து வருகின்றது. பிற்பட்ட சமுதாயங்களை சார்ந்தவர்கள் ரிசர்வேசன் மூலமாக ஊக்குவிக்கப்பட்டால்தான் அவர்களால் உயர்கல்வி பெறமுடிகிறது. ஆனல் ஜனதிபதி ஆட்சி நடைபெறும் இன்று, அந்த முறையைச்சீர்குலைக்க முயற்சிகள் நடப்பதாக தெரிகிறது. ரிசர்வேஷன்களுக்கு என ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களை குறைத்து விடலாமா என அதிகாரிகள் யோசிப்பதாகத் தெரிகிறது. அப்படி நடைபெறுமானல் பின்தங்கிய வகுப்பு மாணவர்கள் பலருக்கு தொழில் கல்லூரிகளில், இடங்கள் மறுக்கப் படலாம். இது அப்பகுதி மக்களின் முன்னேற்றத்தை வெகுவாக பாதிக்கும்.

[கேரளா சம்பந்தப்பட்ட பல பிரச்சனைகள் பற்றியும், காயிதே மில்லத் தொடர்ந்து பேசிக்கொண்டே இருந்தார்கள். துணை சபாநாயகர் இரண்டு மூன்று முறை மணி அடித்தும் தங்களது பேச்சை அவர்கள் நிறுத்தவில்லை. இறுதியாக துணை சபாநாயகர் காயிதே மில்லத்தை பார்த்து ''உங்களுடைய கட்சிக்கு ஒதுக்கப்பட்ட நேரம் ஏழு நிமிடங்கள் தான். ஆனல் நீங்கள் பதினேழு நிமிடங்கள் பேசி விட்டீர்கள்'' என்று கூறி அடுத்த உறுப்பினரைப் பேச அழைத்தார்.]

## 19

**ரயில்வே பட்ஜெட் 23-3-66**

மலபார் மிகவும் பிற்பட்ட பகுதி, கடந்த இருபது ஆண்டுகளில் அப்பகுதியில் ஒரு மைல் நீளத்திற்குக்கூட இருப்புப் பாதைகள் விஸ்தரிக்கப் படவில்லை. பல இருப்பு பாதைகளைப் பற்றி இந்த அவையில் நான் பல தடவைகள் பேசிவிட்டேன். எல்லாம் ''செவிடன் காதில் ஊதிய சங்காகவே'' அமைந்துள்ளது. கொல்லத்துக்கும்—எர்னா குளத்திற்கும் இடையில் உள்ள மீட்டர் கேஜ் இருப்புப் பாதையை அகல இருப்புப் பாதையாக மாற்றும்படி கேட்டுக் கொள்கிறேன். மதுரை மாவட்டத்திலுள்ள போடி நாயக்கனூரையும் கொச்சியையும் இணைத்து புதிய ரயில் பாதை அமைக்க வேண்டும். இதன் மூலமாக இரண்டு மாநிலங்களிலும் ஓரளவு பொருளாதார வளர்ச்சி நடைபெறக் கூடும். தற்போது மதுரைக்கும் கொச்சிக்கும் இடையில் அனுப்பப்படும் சரக்குகள் இப்பாதை அமையுமானல், மூன்றில் ஒரு பங்கு தூரத்தை மிச்சப்படுத்திவிடும்.

மதராஸ் மாநிலத்தில் பெரும்பாலும் மீட்டர் கேஜ் இருப்புப் பாதைகள் தான் அதிகமாக உள்ளன. இந்தியாவின் இதர பகுதிகளுடன் இணையும் வகையில் அதை மாற்றியமைக்க வேண்டும். மதராஸை ஒட்டியுள்ள பெரம்பூரில் முக்கியமான ரயில்வே பயிற்சி நிலையங்கள் உள்ளன. இந்த ரயில் நிலையத்தை மதராஸ்—பெங்களூர் இருப்பு பாதையுடன் இணைக்க வேண்டும். வாணியம் பாடியில் ஒரு ரயில்வே மேம்பாலம் அவசியமாகும். ஆம்பூர் ரயிலவே ஸ்டேஷன் பழுதடைந்த நிலையில் உள்ளது. அதை பழுதுபார்ப்பதுடன் விஸ்தரிக்கவும் வேண்டும். மதராஸ்—பெங்களூர் இருப்புப் பாதையில் வளத்தூர் என்னுமிடத்தில் ரயில்வே கை காட்டிகள் சரியாக இயங்காததன் காரணமாக ஒருவர் ரயிலில் அடிபட்டு மரணம் அடைந்துள்ளார். அவருக்கு நஷ்டயீடு கொடுப்பதில் கால தாமதமாகிறது. இந்த நஷ்டயீட்டுத் தொகையை துரிதமாக அவருக்கு கொடுக்கும் படி கேட்டுக் கொள்கிறேன்.

மதருஸ்—தாம்பரம் புறநகர் பகுதியில் குரோம் பேட்டை ரயில் நிலையம் இருக்கிறது. அங்கு பிளாட் பாரத்திற்கு மேற்கூரை இல்லே. மழைகாலத்திலும், வெயிற் காலத்திலும், பயணிகள் மிகவும் கஷ்டப்படு கிருர்கள். இப்பகுதியில் மக்கள் வேகமாகக் குடியேறி வருகிருர்கள். இந்த ரயில் நிலையத்திலும் போக்குவரத்து அதிகரித்து உள்ளது. எனவே மேல் கூரை அமைக்கும் பணியை தாமதமில்லாமல் ஆரம்பிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்,

# 20

மக்கள் பிரதிநிதித்துவ திருத்த மசோதா 9-11-66:-

தற்போதைய தேர்தல் முறையில் பலகுறைபாடுகள் இருக்கின்றன என்றும் எனவே, இதை திருத்தியமைக்க வேண்டும் என்றும் கூறி காயிதே மில்லத் திருத்த மொன்றை அவையில் சமர்ப்பித்தார்கள். ஒற்றை உறுப்பினர் தொகுதிகளை அகற்றிவிட்டு பல உறுப்பினர் கள் கொண்ட தொகுதிகள் புதிதாக அமைக்கப்பட வேண்டும் என்றும், அப்படி அமைக்கப்படும் தொகுதி களில் குவியல் ஓட்டு முறையை அமல்படுத்தவேண்டும் என்றும் காயிதேமில்லத் அவர்களின் திருத்தம்கோரியது. ஆங்கிலத்தில் இதை (*Multi Member Constituency with Cumulative Voting*) என்று கூறுவார்கள். உதாரணமாக ஐந்து உறுப்பினர் கொண்ட தொகுதி ஒன்று அமைக்கப் படுகிறது என்று வைத்துக்கொள்வோம். போட்டியிடுப வர்களில் அதிக பட்சமான வாக்குகளைப் பெறும் ஐந்து வேட்பாளர்கள் அத்தொகுதியில் தேர்ந்தெடுக்கப்படு வார்கள். அத்தொகுதியில் ஒவ்வொரு வேட்பாளர்க்கும் ஐந்து வாக்குகள் வழங்கப்படும். ஒவ்வொரு வாக்காள ரும் தம்மிடம் அளிக்கப்படும் ஐந்து வாக்குகளையும், தனித்தனியாகப் பிரித்து ஐந்து நபர்களுக்கு பிரித்தும் கொடுக்கலாம், அல்லது ஐந்து வாக்குகளையும் ஒரே வேட்பாளருக்கும் கொடுத்துவிடலாம். இதுவே குவியல் ஓட்டுமுறை என்று அழைக்கப்படுகிறது.

மேற்கூறிய திருத்தத்தை அவையில் சமர்ப்பித்து காயிதே மில்லத் பேசும் பொழுது கூறியதாவது:-

மூன்று பொதுத்தேர்தல்கள் நடந்து முடிந்து விட்டன. ஜன நாயகம் செயல்படும் முறையை உற்று நோக்கும்பொழுது அதில் பல குறைகள் இருப்பது தெரிய வந்துள்ளன. பெரும்பாலான மக்களுக்கு நீதி கிடைக்க வில்லை. அவர்கள் குரல் பாராளுமன்றத்திலோ அல்லது சட்டமன்றங்களிலோ கேட்கவில்லை.

மூன்று பொதுத்தேர்தல்களின் புள்ளி விபரங்களை உற்று கவனித்தால் ஒரு உண்மை புலனுகும். மூன்று பொதுத் தேர்தல்களிலும் வெற்றி பெற்ற ஆளுங்கட்சி, பெரும்பான்மையான வாக்காளர்களின் ஆதரவைப் பெருத வண்ணமே ஆட்சிக்கு வந்திருக்கின்றது.

முதலாவது பொதுத் தேர்தலில் ஆளுங்கட்சிக்கு நாற்பத்தைந்து சதவிகித வாக்குகளே கிடைத்துள்ளன. காங்கிரஸ் கட்சிக்கு எதிராக ஐம்பந்தைந்து சதவிகித வாக்காளர்கள் வாக்களித்துள்ளார்கள். இரண்டாவது பொதுத் தேர்தலிலும், கிட்டத்தட்ட இதே நிலைதான் இருந்து வந்துள்ளது. மூன்ருவது பொதுத் தேர்தலின் போது ஆளுங்கட்சியான காங்கிரஸுக்கு கிடைத்த வாக்குகள் மேலும் குறைந்துள்ளன.

43 சதவிகித வாக்குகளைப் பெற்று அது ஆட்சியைத் தக்க வைத்துக்கொண்டது.

எல்லா பொதுத் தேர்தல்களிலுமே சுமார் எழுபது சதவிகித வாக்காளர்தான் வாக்களித்துள்ளார்கள். கிட்டதட்ட முப்பது சதவிகித வாக்காளர்கள் ஓட்டு எடுப்பில் கலந்து கொள்ளவேயில்லை. இதை வைத்துப் பார்க்கும்பொழுது மொத்த வாக்காளர்களில் சுமார் முப்பது சதவிகித வாக்காளர்களின் ஆதரவைப் பெற்ற காங்கிரஸ்கட்சி ஆட்சியைப் பிடித்துள்ளது என்ற உண்மை தெரியவரும். கடந்த இருபது ஆண்டுகளாக இப்படித்தான் நடந்துள்ளது. சிறுபான்மையான வாக்கு களைப் பெற்று ஆட்சியைப் பிடிக்கும் தேர்தல்முறையை மாற்றியமைக்கவேண்டும் என்பதைத்தான் எனது திருத்தம் கோருகிறது.

வாக்களிப்பவர்களில் நாற்பதைந்து சதவிகித வாக்குகளைப் பெற்ற காங்கிரஸ், வாக்குகள் எண்ணி முடிந்ததும் எழுபத்தைந்து சதவிகித இடங்களை கைப் பற்றிக் கொள்கிறது. அதாவது பாராளுமன்றத்திலும், சட்டமன்றத்திலும் உள்ள உறுப்பினர்களில் எழுபத் தைந்து சதவிகித பேர் காங்கிரஸ்காரர்களாக இருக்கி ருர்கள். இத்தகைய தேர்தல்முறை நியாயம்தானு?

ஒரு தொகுதியில் ஒரு வேட்பாளர்க்கு இரண்டு லட்ச வாக்குகள் கிடைக்கிறது என வைத்துக்கொள்வோம். மற்ருெரு வேட்பாளருக்கு இரண்டு லட்சத்திஒரு வாக்கு கள் கிடைக்கின்றது. ஒரே ஒரு வாக்குத்தான் கூடுதலா கப்பெற்றிருக்கிருர். ஆனுர் அவர் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்படுகிருர். இரண்டு லட்ச வாக்குகளை பெற்ற வேட்பாளர் தோற்றுவிடுகிருர். ஒற்றை உறுப்பினர் தொகுதியிலுள்ள மிகப்பெரிய குறைபாடு இதுதான்.

எனவே தான் பல உறுப்பினர் கொண்ட தொகுதி கள் வேண்டுமென நான் கூறுகிறேன். கணிசமான வாக்குகளைப்பெறும் பிரதிநிதிகளின் குரல்கள் பாராளு மன்றத்திலும், சட்டமன்றங்களிலும் கேட்கப்பட வேண் டும். அதற்கு வழிவகுத்துக் கொடுக்கப்படவேண்டும். கடந்த மூன்று பொதுத்தேர்தல்களிலும் பழைய முறையை பரீட்சித்துப் பார்த்து விட்டோம். அதில் குறைபாடுகள் நிறைய உள்ளன. எனவே புதிய தேர்தல் யுக்தியொன்றை கடைபிடிக்க வேண்டிய கட்டத்திற்கு நாம் வந்துள்ளோம்.

எல்லா தரப்பு மக்களுடைய குரல்களும், பாராளு மன்றத்தில் கேட்கப்படவேண்டும். குவியல் ஓட்டுமுறை கையாளப்படுமானுல், சிறுபான்மை சமூகத்தினரின் பிரதிநிதிகளும், மக்கள் மன்றங்களுக்கு தேர்ந்தெடுக்கப் படக்கூடிய வாய்ப்புகள் பிரகாசமாக உள்ளன.

இந்த தேர்தல்முறை குறித்து ஒரு குறை சொல்லக்கூடும். தொகுதி மிகப்பெரியதாக போய் விடுமே என்றும் சமாளிக்க முடியாது என்றும் சொல்லலாம். பணச்செலவு அதிகமாகும் என்றும் சொல்லலாம். முப்பது சதவிகித வாக்குகளை பெற்று எழுபது சதவிகித இடங்களை பிடித்துக்கொள்ளும், தேர்தல் முறைகளில் உள்ள குறைபாடுகளைப் போக்க வேண்டுமானால், இந்த சிறிய தியாகத்தை மேற்கொண்டு தான் ஆகவேண்டும். பலதரப்பட்ட மக்களுக்கும், மக்கள் மன்றங்களில் பிரதிநிதித்துவம் கிடைக்க வாய்ப்பு இருக்கும்பொழுது இப்புதிய தேர்தல் முறையை ஒரு முறை பரீட்சித்துப் பார்த்தால்தான் என்ன?

# 21

**மதராஸ் நகர குடிநீர் பிரச்சனை 10-11-66**

இங்கு பேசிய ஒரு உறுப்பினர் தமது பகுதியில் நிலவும் குடிநீர் பற்றாக்குறை குறித்து உருக்கமாகச் சொன்னார். குடிநீருக்குக்கூட தட்டுபாடு என்றால் அதற்காக யாருடைய உள்ளம் தான் உருகாது போய் விடும். ஆனால் அந்த உறுப்பினர் மதராஸ் நகர மக்களை யும் ஒப்பிட்டுப்பேசியதுதான் அவ்வளவு பொருத்தமாக இல்லை. மதராஸ் நகருக்கு ஏராளமாக தண்ணீர் கிடைக் கிறது என்றும், ராஜஸ்தான் பகுதியில் ஒரு குடம் நீருக்காக ஆலாய்ப் பறக்கவேண்டி இருக்கிறது என்றும் அவர் கூறினார்.

மதராஸ் நகரில் நிலவும் குடிநீர் தட்டுபாடு குறித்து அவருக்கு தெரிந்திருக்க நியாயம் இல்லைதான். மக்கள் மணிக்கணக்காக குழாயடியில் காத்திருக்கும் காட்சிகளை அவர் கண்டிருக்க மாட்டார்.

மதராஸைச் சுற்றிலும் தண்ணீர் நிறைய இருக் கிறது என்பது உண்மையே. மக்களின் தாகத்தை போக்கும் வகையில் திட்டங்கள் தீட்டி அமல் படுத்தினால் நல்லதுதான். ஆனால் பல திட்டங்கள் கிடப்பிலேயே கிடக்கின்றன.

பதினேழரை கோடி ரூபாயில் ஒரு திட்டம் தயாராக உள்ளது. அந்த ரூபாயை செலவழிக்க அரசாங்கம் இன்னமும் முன் வரவில்லை. இச்சிறிய தொகையை தாமதம் இல்லாமல் மதராஸ் நகர மக்களுக் காக ஈடுபடுத்தினால் அந்த நகரை வாட்டிவரும் குடிநீர் பிரச்சனை தீர்ந்து விடும். கல்கத்தா நகர மக்களுக்கு கிடைக்கும் அளவுநீர் மதராஸ்வாசிகளுக்கும் கிடைக்கும்.

இங்கு பேசிய நண்பர் டில்லி, பம்பாய் ஆகிய நகரங் களைவிட மதராஸ் இந்த வகையில் சிறப்பாக விளங்கு கிறது என்று கூறினார். சில புள்ளி விபரங்களை அவர் எங்கிருந்து திரட்டினார் என்பதை என்னால் அறியமுடிய வில்லை. ஆனால் உண்மை நிலவரம் என்னவென்றால் மதராஸில் கிடைப்பதை போன்று இரண்டு பங்கு நீர் கல்கத்தாவில் கிடைக்கிறது. மதராஸைவிட மூன்று மடங்கு நீர் பம்பாயில் கிடைக்கிறது. பெரும் நகரங்களை ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டால் மதராஸின் நிலைமை படுமோசமாகும். எனவே அந்நகருக்காக தயாரிக்கப் பட்ட திட்டத்தை உடனடியாக அமல் படுத்துமாறு அரசாங்கத்தை கேட்டுக் கொள்கிறேன்.

# 22

பொது பட்ஜெட் பற்றிய விவாதம் 14-6-67:

அண்மையில் நடந்த பொதுத் தேர்தலின் போது சில மாநிலங்களில் காங்கிரஸ் அல்லாத கட்சிகள் பத விக்கு வந்துள்ளன. மத்தியில் ஆட்சிபுரியும் காங்கிரஸ் சர்க்கார் ஜனநாயக மரபுகளை ஊக்குவிக்கும் வகையில் தங்களது கட்சியைச் சாராத மாநில அரசுகளிடம் தாராளமாக நடந்து கொள்ளவேண்டும். மக்களுக்கு சேவை செய்யும் வாய்ப்பை மற்ற கட்சியினர்க்கும் உரு வாக்கிக் கொடுக்க வேண்டும்.

மத்திய அரசு சட்டப் பிரகாரம் இன்று நாட்டில் ''வக்ப்'' சொத்துக்கள் நிர்வகிக்கப் படுகின்றன. ஏராளமான வக்ப் சொத்துக்களை இன்னமும் மற்றவர் கள் கைவசப்படுத்திக் கொண்டு அனுபவித்து வருகிறார் கள். அச்சொத்துக்களை மீட்கும் வேலை வக்ப் போர்டு களினால் மேற் கொள்ளப்பட்டு வருகிறது. என்றாலும் எல்லாச் சொத்துக்களையும் பற்றிய வழக்குகள் இன்ன மும் நீதி மன்றங்களில் தாக்கல் செய்யப்படவில்லை. இம்மாதிரி வழக்குகளை தாக்கல் செய்யும் கடைசி நாள் 1967ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 14ம்தேதி ஆகும். ஆனால் அத்தேதிக்கு உள்ளாக எல்லா வழக்குகளையும் தாக்கல் செய்ய இயலாது. வக்ப் சொத்துக்களை மீட்க வழக்குகள் தாக்கல் செய்யப்படும் கடைசி தேதி மேலும் நீடிக்கப்படவேண்டும். குறைந்தது பத்து ஆண்டுகளுக் காவது இத்தேதியை நீடிக்கும் சட்டத்திருத்தத்தை அரசாங்கம் கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

உர்தூ மொழி பற்றி ஒரு வார்த்தை: கடந்த பொதுத் தேர்தலின் போது உர்தூ மொழிக்கு நியாயம் வழங்கப்படும் என்று ஆளுங்கட்சியினர் பிரசாரம் செய்தனர். பல வாக்குறுதிகளை நல்கினார்கள். நாளது வரை ஒரு துரும்பு கூட அசைந்த பாடில்லை. உர்தூ ஒரு தேசிய மொழியாகும். அதை இரண்டாம்தர, மூன்றாம் தரமொழி போல அரசாங்கம் பாவிக்கிறது. இந்த அவல நிலை மாற வேண்டும் இது குறித்து அரசாங்கம் ஆவன செய்ய வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

# 23

## தேசீய மொழி மசோதா 13-12-67 :-

இந்த அவையில் ஆட்சிமொழி பற்றி பேசிய பலரும் மகாத்மா காந்தியை மேற்கோள் காட்டினார்கள். அவர் தமது கடைசி காலத்தில் என்ன கூறினார் தெரியுமா? இந்தியாவின் ஆட்சிமொழியாக ஹிந்தி மட்டும் இருக்கக்கூடாது என்றும், இரண்டு லிபிகளிலும் எழுதப்பட்டு வரக்கூடிய ஹிந்துஸ்தானியே இந்நாட்டின் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்று சொன்னார். இதுதான் அவர் சொன்னது. தமது வாழ்நாள் இறுதி வரை இதைத்தான் அவர் சொல்லி வந்தார். அரசியல் நிர்ணய சபையிலேயே காந்திஜியின் கூற்றை நான் மேற்கோள் காட்டி பேசியுள்ளேன். ஆனால், அன்று காந்திஜியின் கருத்தை ஆதரிக்க ஒருவரும் முன் வரவில்லை. அவரது வார்த்தைகளை நிராகரித்து விட்டார்கள்.

அன்றையத்தினம் பேசிய வேறு சில உறுப்பினர்கள் தங்களது தாய்மொழியை ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். அன்று பேசிய நானும் எனது தாய்மொழியாகிய தமிழை இந்நாட்டின் ஆட்சிமொழியாக ஏற்றுக்கொள்ளும்படி கூறினேன். தமிழ்மொழி ஒரு வளம் மிக்க மொழி; ஏராளமான இலக்கியங்கள் அதில் இருக்கின்றன. அது ஒரு தொன்மையான மொழியும் கூட; ஆட்சிமொழியாக இருக்கும் தகுதி தமிழுக்கு எல்லா அம்சங்களிலும் உண்டு என்று அன்று நான் கூறினேன். அன்றைய தினம் அரசியல் நிர்ணய சபையில் நடந்தது இதுதான்; ஆட்சிமொழி பற்றிய வரலாறும் இதுதான்.

அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ் கட்சிக்கு மிகப் பெரும்பான்மை பலம் இருந்தது. வேறு யார் சொல்லும் அங்கு எடுபடவில்லை. ஆனால் காங்கிரஸ் காரர்களுக்குள்ளேயாவது இப் பிரச்சனை குறித்து ஒத்த கருத்து உண்டா என்றால் அதுவும் இல்லை. அக்கட்சி யினரிலேயே பெரும்பான்மையினர் ஹிந்தியை மட்டும் ஆட்சிமொழியாக கொண்டு வருவதை விரும்பவில்லை. இது குறித்து காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. ஒரே ஒரு ஓட்டு மெஜாரிட்டியில் ஹிந்தியை ஆட்சிமொழியாக ஏற்றுக்கொள்வதென காங்கிரஸ் கட்சியினர் தீர்மானித்தனர்.

**ஸ்ரீ O. P. தியாகி:** கனம் உறுப்பினர் சொல்வது சரியில்லை. எந்த லிபியை பயன்படுத்துவது என்ற பிரச்சனை எழுந்தபோதுதான் ஒரு ஓட்டு வித்தியாசத் தில் அது தீர்மானிக்கப்பட்டது. ஆட்சிமொழி பற்றிய தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டதாகும்.

**ஸ்ரீ S. சேவியர்:** (திருநெல்வேலியிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்டவர்) இந்த அவையிலுள்ள முஸ்லிம் லீக் கட்சி தலைவராக அவர் இருக்கிறார். அவர் உரையாற் றும்பொழுது ஒருவரும் குறுக்கிடக் கூடாது.

**ஸ்ரீ கண்டன் நாயர் (கொல்லம்):** இந்த அவை யினால் பெரிதும் மதிக்கப்படுபவர் அவர், அவர் பேசு வதை கவனமாகவும், மரியாதையாகவும் கேட்க வேண்டும். எந்த குறுக்கீடும் இருக்கக் கூடாது.

**சபாநாயகர்:** கனம் உறுப்பினர் தமது பேச்சைத் தொடரலாம்.

**காயிதே மில்லத்:** அரசியல் நிர்ணய சபை உறுப் பினர்களில் பெரும்பான்மையினர் ஹிந்தியை ஆட்சி மொழியாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை என்ற எனது கூற்றை மீண்டும் நான் வலியுறுத்திக் கூறுகிறேன். மிக்க பொறுப்புடன்தான் இதைக் கூறுகிறேன். காங்கிரஸ் கட்சியின் கட்டளைக்கு (*Whip*) பணிந்து அக் கட்சியினர் பலரும் வாக்களித்ததினால் தான் அன்றையத் தினம் ஹிந்தி ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ளப் பட்டது. இதுதான் உண்மை நிலவரமாகும்.

தென்னிந்தியாவில் உள்ள மக்கள் வெகு காலத் திற்கு முன்பிருந்தே ஹிந்தி ஆட்சிமொழியாக வரக் கூடாது என்பதனை வலியுறுத்தி வந்திருக்கிறார்கள். மதராஸ் மாகாணத்தின் முதல்வராக 1937-ம் ஆண்டு இராஜாஜி இருந்தபொழுது பள்ளிக்கூடங்களில் ஹிந்தியை ஒரு கட்டாய பாடமாகப் புகுத்தினார். அப்பொழுதே தமிழ் நாட்டில் அதற்கு எதிர்ப்புக் கிளம்பி விட்டது. திராவிட கழகத் தலைவர் பெரியார் ஈ. வே. ராமசாமி நாயக்கர் இந்த ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தை தலைமை தாங்கி நடத்தினார். இன்று மதராஸ் மாநிலத்தின் முதலமைச்சராக இருக்கும் திரு. அண்ணாதுரை அவர்கள் அந்த போராட்டத்தில் பங்கு கொண்டவர் என்பது நினைவு கூரத்தக்கது. ஹிந்தி கிளர்ச்சியில் கலந்து கொண்டு 1938-ம் ஆண்டிலேயே இரண்டாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் அம் மாகாணத்தில் சிறைக்கு சென்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

1952-ம் ஆண்டு மதராஸ் மாகாணத்தின் முதலமைச்சராக மீண்டும் இராஜாஜி பொறுப்பேற்ற பொழுது, பழையபடியும் அவர் ஹிந்தியை புகுத்த முற்பட்டார். மக்கள் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. தங்களது எதிர்ப்புகளை தெரிவிக்க லானார்கள். இறுதியில் இராஜாஜி தமது திட்டத்தை கைவிட வேண்டியதாயிற்று.

மதராஸ் மாநில மக்கள் ஹிந்தியை விரும்பவில்லை என்பதை இராஜாஜி புரிந்து கொண்டார். இராஜாஜி ஒரு புத்திசாலி. நாடுதான் முக்கியமே தவிர மொழி அடுத்தபடியானதே என்பதை அவர் உணர்ந்து கொண் டார். எனவே இன்று அவர் தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டுள்ளார்.

எல்லா தரப்பு மக்களாலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய பொது மொழியே இந் நாட்டின் ஆட்சிமொழி யாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர் வந்து விட்டார். இது மிக முக்கியமானதொரு விஷயமாகும்.

தாய்மொழியை நேசிக்கும் உரிமை ஒருவருக்கும் கிடையாது என இந் நாட்டில் யாரும் வாதாடவில்லை. ஹிந்தியை தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள் தங்களுடைய சொந்த மொழியை, ஹிந்தியின் அளவுக்குச் சமமாக வைக்க முற்படும்பொழுது, அந்த

உரிமை அவர்களுக்கு கிடையாது என்று சொல்ல முடியுமா? அரசியல் சாசனத்தில் பதினன்கு மொழி களுக்கும் சம அந்தஸ்து வழங்கப்பட்டுள்ளது. அவற்றில் ஒன்றை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றவற்றை ஏன் தள்ளி விட வேண்டும்.

மத்திய அரசை எடுத்துக் கொள்ளுங்கள்? எல்லா மொழிகளிலும் இங்குள்ள ஆட்சியை நடத்த முடியுமா? மொழிபெயர்ப்பு செய்து கொள்ளலாம் என்றாலும் அது எந்த அளவுக்கு நடைமுறை சாத்தியமானது.

ஹிந்தி மட்டும் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என அம்மொழியைச் சார்ந்தவர்கள் ஏன் இவ்வளவு பிடிவாதமாக இருக்கிறார்கள்? அதற்கு காரணங்கள் இல்லாமல் இல்லை. அம்மொழி மட்டும் ஆட்சிமொழி யானால் அம்மொழி பேசுபவர்களுக்கு பல அநுகூலங்கள் கிடைக்கின்றன. அம்மொழியைப் பேசாதவர்களுக்கு பலவகையிலும் கஷ்டங்கள் ஏற்படுகின்றன. எல்லா மக்களும் சமமாக நடத்தப்படுவதில்லை. எல்லா மொழி களுக்கும் சம அந்தஸ்து கிடைக்கவில்லை.

ஹிந்தியை எடுத்துக் கொள்ளுங்கள், அம்மொழியை தாய்மொழியாக கொண்டவன் பிறப்பில் இருந்தே அதை பேசி வருகிறான். அவனுக்கு அம்மொழி தண்ணீர் பட்ட பாடு. தெலுங்கு, தமிழ், மலையாளம் ஆகியவற்றை தாய்மொழியாக கொண்டவனின் நிலைமை என்ன? இவன் ஒரு நாளைக்கு ஒரு மணி நேரமோ அல்லது இரண்டு மணி நேரமோ ஹிந்தியை படிக்கலாம். அம் மொழியில் பேசவும், எழுதவும் கற்றுக் கொள்ளலாம். ஆனால் ஹிந்திக்காரன் மாதிரி இவனால் அம்மொழியை சரளமாக உபயோகப்படுத்த முடியுமா? எனவே, ஹிந்தியை தாய்மொழியாகக் கொள்ளாதவன் எவ்வளவுதான் முயற்சித்தாலும் அவனால் அம்மொழியில் ஹிந்திக்காரனைப் போல பாண்டித்தியம் பெற முடியாது. எல்லா உத்தியோகங் களும் அம் மொழியில் தேர்ச்சி பெற்றவனுக்கே போய்ச் சேரும்.

**ஒரு உறுப்பினர்:** உர்தூ மொழி பேசுபவர்களும் அப்படித்தானே.

**காயிதே மில்லத்:** உர்தூ மொழியைத்தான் சக்களத்தியின் குழந்தையை போல நடத்துகிறீர்களே. அம் மொழியைப் பற்றி ஒருவரும் கவலைப்படவில்லை. ஹிந்தி பேசப்படும் மாநிலங்களில் கூட உர்தூவுக்கு நியாயம் வழங்கப்படவில்லை. அதை ஒரு பிரதேச மொழி என அங்கீகரிக்கக் கூட அவர்கள் தயாராக இல்லை. குதர்க்க வாதங்களில் அவர்கள் ஈடுபட்டுக் கொண்டு இருக்கிறார்கள். உர்தூ ஒரு மொழியே அல்ல என புதிதாக கண்டு பிடித்திருக்கிறார்கள். ஹிந்தி மொழியின் ஒரு பதிப்பே உர்தூ என கூறுகிற வர்களும் இருக்கிறார்கள். எனக்கு முன்னர் பேசிய உறுப்பினர் எல்லா மொழிகளும் சமமானவையே என வாய் கிழிய பேசினார். தமது பகுதியில் இரண்டாவது மொழியாக உர்தூவை எடுத்துக் கொள்ள அவர்கள் தயாரா என நான் கேட்கிறேன்.

அரசியல் நிர்ணய சபை ஹிந்தி பிரச்சனையில் ஒரு முடிவு எடுத்தபொழுது பொது மக்கள் அதை கவனிக்க வில்லை. அதன் விளைவுகளை அவர்கள் தெரிந்து கொள்ள வில்லை. அறிஞர்களாகப் பலர் கூடி இந்த முடிவை மேற்கொண்டு விட்டனர். ஆனால் இன்று மொழி அடிப்படையில் மாநிலங்கள் உருவான பின்னரே தாய் மொழியின் முக்கியத்துவத்தை மக்கள் விளங்கிக் கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். இன்னும் பதினைந்து ஆண்டுகள் போனால் நிலைமை மேலும் முற்றிவிடக் கூடும்.

ஹிந்தி மட்டுமே ஆட்சி மொழியாக இருந்தால் ஹிந்தி பேசுபவர்கள் மட்டுமே ஆட்சியாளர்களாக வருவார்கள். இந்த நிலைமையை இதர மொழிகளை தாய்மொழியாக கொண்டவர்கள் ஒருபொழுதும் சகித்துக் கொள்ளவும் போவதில்லை. எனவே நாட்டின் ஐக்கியத்தை உத்தேசித்து ஹிந்தி பேசுபவர்கள் தங்களது நிலைமையை தளர்த்திக்கொள்ள வேண்டும். கொஞ்சம் விட்டுக்கொடுக்க முன்வர வேண்டும். ஒரு ஜனநாயக நாட்டில் இப்படித்தான் நடக்க முடியும். ஒவ்வொரு மொழிக்கும், ஒவ்வொருவருக்கும் சம வாய்ப்பு இருக்க வேண்டுமானால் இது ஒன்றுதான் வழி.

துரதிருஷ்டவசமாக ஹிந்தி பேசுபவர்களின் மனப் பான்மை, நாம் எதிர்பார்த்தபடியில்லை. ஆட்சி மொழி குறித்து அவர்களது நிலைமை மிகவும் இறுக்க மாகவே உள்ளது. சில நாட்களுக்கு முன்னர் அவர்கள் ஒரு மாநாடு நடத்தினார்கள். அதில் அவர்கள் என்ன தீர்மானம் நிறைவேற்றி இருக்கிறார்கள் தெரியுமா? ஹிந்தியை மட்டும் தேவநாகரிலிபியில் எழுதி விட்டால் போதாது. இந்நாட்டிலுள்ள அனைத்து மொழிகளும் தேவநாகரிலிபியை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் இனி அந்த லிபியில்தான் தங்களது மொழிகளை எழுதிக் கொள்ள வேண்டும் என்றும் மாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றி உள்ளார்கள். முதலில் லிபியை ஏற்றுக் கொள்ளுங்கள் என்பார்கள். பின்னர் அம்மொழியி லுள்ள வார்த்தைகளை கடன் வாங்கிக் கொள்ளுங்கள் என்பார்கள். இறுதியில் நீங்கள்தான் ஹிந்தியை நன் றாக பேசுகிறீர்களே. மற்றொரு மொழி எதற்கு என்று சொல்வார்கள். அவர்கள் சிந்தனை எத்திசையில் சென்று கொண்டு இருக்கிறது என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருக்கலாம்.

அவர்களைப் பார்த்து நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நாட்டுக்கு நன்மையானவற்றை நீங்கள் செய்ய முற்படவில்லை என்பதைத்தான் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். உங்களது மொழியைவிட இந்த நாட்டை நீங்கள் அதிகமாக நேசிப்பீர்களானால், உங்களது நிலை மையை நீங்கள் மாற்றிக் கொள்ள வேண்டும். மொழி விஷயத்தில் எல்லோருக்கும் சம வாய்ப்பு இருக்க வேண்டும். ஒரு காலத்தில் இராஜாஜி கூட ஹிந்தி மொழியைத்தான் ஆதரித்தார். இன்று அவர் ஆங்கிலம் ஆட்சி மொழியாக இருப்பதை ஆதரிக்கிறார். ஏனைய மக்களும் ஆங்கிலத்தையே விரும்புகிறார்கள். ஆங்கில

மோகம் காரணமாக அம்மொழியை யாரும் விரும்ப வில்லை. இன்று நாட்டினுடைய பிரச்சனையை அது தீர்த்து வைக்கிறது என்பதற்காக அதை ஏற்றுக் கொள்ள வேண்டியதிருக்கிறது.

வியாதி வந்தால் மருந்து சாப்பிடுவதுபோல இன்று ஆங்கிலத்தை ஒரு மருந்தாக பயன்படுத்த வேண்டி யுள்ளது. எல்லோருக்கும் கஷ்டநஷ்டங்கள், சிரமங்கள் சமஅளவில் இருக்க வேண்டுமானுல் ஆங்கிலத்தை ஏற்றுக் கொள்ளுவதுதான் அதற்குரிய மருந்தாகும்.

இந்த மசோதாவில் ''மே'' (*May*) என்ற பதத்தை நீக்கி விட்டு ''ஷால்'' (*Shall*) என்ற வார்த்தையை போட்டுக் கொள்வது பொருத்தமானதாக இருக்கும்.

இந் நாட்டில் சில லட்சம் மக்களே ஆங்கிலத்தை தாய் மொழியாக கொண்டிருக்கிருர்கள். மிகப்பெரும் பாலான மக்களுக்கு ஆங்கிலம் ஒரு அந்நிய மொழியே. ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொண்டால் யாருடைய தாய்மொழியும் பாதிக்கப்படாது. ஆனுல் ஹிந்தி ஆட்சிமொழியானுல் இதர மொழிகளை அது விழுங்கிவிடக் கூடும், சாப்பிட்டு ஜீரணித்து விடக் கூடும்.

ஆங்கிலத்தை ஒரு அந்நிய மொழி என ஒதுக்கிவிட வேண்டாம். நம் நாட்டின் விடுதலை வீரர்களை உரு வாக்கியது ஆங்கிலமே. தேசப் பற்றையும், சுதந்திர தாகத்தையும் நமது தலைவர்களுக்கு ஊட்டியது அம் மொழியே. நம்மனைவரையும் நாட்டின் சுதந்திரத்திற் காக தூண்டியதும் அம்மொழிதான். அம்மொழியை ஏற்றுக் கொள்வதினுல் நம் சுதந்திரம் ஒன்றும் பறி போய் விடாது. கல்வி, விஞ்ஞானம், தொழில்நுட்பம், போன்ற துறைகளில் உலகின் தரத்திற்கு நாம் உயர வேண்டுமானுல் அம்மொழியைக் சுற்றுக்கொள்வது அவசியம். எனவே நமது நண்பர்கள் அனைவரையும் ஆட்சி மொழி விஷயத்தில் ஆர அமரவும், நிதானமாக வும், அமைதியுடனும், நீண்ட நோக்குடனும், கூடிய ஒரு முடிவுக்கு வரும்படி கேட்டுக்கொள்கிறேன்.

## 24

அறிஞர் அண்ணுவுக்கு இரங்கல் உரை (17-2-69)

மறைந்த உயர்திரு பேரறிஞர் C. N. அண்ணுதுரை அவர்கள் தமிழ் நாட்டு மக்களால் மட்டுமல்ல, நாட்டி லுள்ள இதர பகுதி மக்களாலும் அன்பொழுக 'அண்ணு' என்றழைக்கப்பட்டார். அவர் ஒரு கண்ணியமிக்க கன வான், அவர் மக்களின் தலைவர், அவருடைய குணுதி சயங்களில் சாலச்சிறந்தது: இலட்சக்கணக்கானவர்களை தம்பால் ஈர்க்கும் சக்தியாகும்.

அவர் காட்சிக்கு எளியவராக இருந்தார். தலை சிறந்த எழுத்தாளர், பெரிய பேச்சாளர், வாழ்நாள் முழுவதையும், எழுத்திலும், பேச்சிலும் அவர் கழித் தார். தம்மைப்பற்றி ''பிகு'' படுத்திக் கொள்வது கிடையாது. போலித்தோற்றங்களை உருவாக்கி கொள் வதில்லை. படாடோபங்களை அவர் வெறுத்தார். மக்க ளின் இதயங்களை தொடும் வல்லமை அவருக்கு இருந் தது. அவரை பின்பற்றுபவர்கள் அனைவரும், அவரிடம் ஒன்றிப் போனுர்கள்; அன்பால் பிணைக்கப் பட்டவர்க ளானுர்கள். அவருடைய புகழின் ரகசியமே இதில்தான் அடங்கியுள்ளது. ஒரு தலைவராக, ஒரு அறிஞராக, ஒரு எழுத்தாளராக, ஒரு பேச்சாளராக, ஒரு சமூக சீர்திருத்தவாதியாக அவரால் ஏக காலத்தில் தலை சிறந்து விளங்கமுடிந்தது என்றுல் அதற்குப் பின்னணி யாக அமைந்தது, அவரைப் பின்பற்றும் கூட்டத்தினரின் அசைக்க முடியாத வாஞ்சையே.

தமிழ் மொழியிலேயே அவர் தனக்கென ஒரு பாணியை வகுத்துக்கொண்டார். ஒரு நடையை உரு வாக்கிக்கொண்டார். அவர் சொல்லும் பேச்சும் லட்சக் கணக்கான உள்ளங்களில் உணர்ச்சியைக் கொப்பளிக்கச் செய்தது, தொன்மையான தமிழ்மொழிக்கும், அதன் இலக்கியங்களுக்கும் அவர் அழகூட்டினுர். மெருகு சேர்த்தார். அவருடைய சாதனைகளில் தலைசிறந்தது இதுவே. அரசியல் அரங்கில், பொருளாதார களத்தில், சமுதாய மேடைகளில், கலாச்சார நிகழ்ச்சிகளில், இலக்கியங்களில் அவர் தமது அழியாத முத்திரையைப் பதித்தார். எல்லாத் துறைகளிலுமே அவர் வெற்றிக் கொடி நாட்டினுர்.

அவருடைய இழப்பு தமிழ்நாட்டுக்கு மட்டும் உரிய ஒன்றல்ல. நாடு முழுவதுமே அவர் மறைவால் நஷ்டத் திற்கு உள்ளாகியுள்ளது. இந்த அவையில் உறுப்பினர் கள் பலரும் மறைந்த தலைவருக்கு புகழாரம் சூட்டினர். அன்னுரது குடும்பத்தினருக்கு அனுதாபங்களை தெரிவித் துக்கொண்டார்கள். அந்த அனுதாப வெள்ளத்தில் நானும், நான் சார்ந்திருக்கும் கட்சியான முஸ்லிம் லீக்கும் எங்களையும் இணைத்துக் கொள்கிறேம்.

## 25

(8-5-69) அன்று லோக்சபையில் கேள்வி நேரத்தில் ''முஸ்லிம் பத்திரிகையாளர்கள் சங்கம்'' குறித்து உறுப்பினர் ஒருவர் வினு ஒன்றை தொடுத்த சமயம் காயிதே மில்லத் அவர்கள் குறுக்கிட்டு கீழ்கண்டவாறு கூறினுர்கள்)

முஸ்லிம் பத்திரிகையாளர்கள் டில்லி தலைநகரில் ஒன் ருகக்கூடி தங்களுக்கு என ஒரு சம்மேளனத்தை அமைத் துக்கொண்டிருப்பது வாஸ்தவமே. அதற்கு போதிய காரணங்கள் இருக்கவும் செய்கின்றன. 1968ம் ஆண்டு ஜூன் மாதத்தில் கஷ்மீரின் தலைநகர் ஸ்ரீநகரில் தேசிய ஒருமைப்பாடு கவுன்சில் கூடி கலைந்த பிறகு ஏராளமான பத்திரிகைகள்மீது இந்த அரசு நடவடிக்கை எடுத்துள் ளது. 1967ம் ஆண்டு தங்கள் பத்திரிகைகளில் எழுதிய வற்றிற்காக அவற்றின்மீது வழக்குகள் தொடரப் பட்டுள்ளன. இவ்வாறு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ள பத்திரிக்கைகளில் எண்பது சதவிகித பத்திரிக்கைகள் முஸ்லிம் பத்திரிக்கைகளாகும் அதிலும் குறிப்பாக உர்தூ பத்திரிக்கைகளாகும்.

இந்த பத்திரிக்கைகள் எல்லாம் சாதாரணமானவர்களால் நடத்தப்படுவனவாகும், பணக்காரர்களால் அல்ல. இத்தகையோரின் உதவிக்கோ, ஒத்தாசைக்கோ அகில இந்திய பத்திரிக்கையாசிரியர்கள் சங்கம் முன்வரவில்லை. வேறு எந்த பத்திரிக்கையாளர் சங்கமும் இது குறித்து அக்கறை காட்டவில்லை. இந்த சாதாரண பத்திரிக்கையாசிரியர்கள், நடுத்தெருவில் நிற்கவிடப்பட்டனர். யாருடைய ஆதரவையோ ஒத்துழைப்பையோ, அவர்கள் பெறவில்லை.

என்றோ எது குறித்தோ எழுதியதற்காக அவர்கள் இப்பொழுது குற்றவாளி கூண்டில் நிறுத்தப்பட்டுள்ளார்கள். தேசிய ஒருமைப்பாடு கவுன்சில் கூடுவதற்கு முன்னால் நிகழ்ந்தவற்றிற்காக இன்று அவர்கள் பழி வாங்கப்படுகிறார்கள். இந்த அவலநிலையைப் போக்குவதற்காக அவர்களெல்லாம் ஒன்றுகூடி தங்களுக்கென ஒரு சங்கம் அமைத்துக்கொண்டால் இதில் என்ன தவறு இருக்கிறது.

**சபாநாயகர்:-** கேள்வி கேட்பதற்கு பதிலாக கனம் உறுப்பினர் உரையல்லவா நிகழ்த்திக்கொண்டிருக்கிறார்.

**காயிதே மில்லத்:-** இந்நாட்டில் பல பாகங்களிலும் முஸ்லிம் சமுதாயத்தின்மீது வகுப்புக் கலவரங்களை ஏவிவிட்டு அவர்களுக்கு சொல்லொணா கஷ்ட நஷ்டங்களை விளைவித்தபொழுது அதைத் தட்டிக் கேட்டது யார்? முஸ்லிம்லீக் கட்சியும், திராவிட முன்னேற்றக் கழகமும், சில சமயங்களில் கம்யூனிஸ்டுகளும், பாதிக்கப்பட்டவர்களுக்காக பேசமுன்வந்தனர். ஆனால் இதர கட்சிகளோ, இந்நாட்டிலுள்ள பத்திரிக்கைகளோ, இந்த வன்செயல்களைகண்டிக்கவில்லை. அதை எதிர்த்து எழுதத்துணியவும் இல்லை. இந்த சூழ்நிலையில்தான் முஸ்லிம் பத்திரிக்கையாளர் பலரும் ஒன்றுகூடி ஒரு அமைப்பை உருவாக்கி உள்ளார்கள். ஒரு நல்ல காரணத்திற்காவே ஒன்று சேர்ந்துள்ளார்கள்.

இன்று பேசிய மற்றொரு உறுப்பினர் இந்த பத்திரிக்கைகளுக்கெல்லாம் வெளிநாடுகளில் இருந்து பணங்கள் வருகின்றன என்றும் அதன் காரணமாகத் தான் இவர்கள் இப்படியெல்லாம் எழுதுகின்றார்கள் என்றும் சொன்னார். இந்த அநியாயமான குற்றச்சாட்டுகளில் இருந்து தங்களை தற்காத்து கொள்ள ஒரு சங்கம் அமைத்துக்கொண்டால் அதில் என்ன தவறு இருக்க முடியும்?

**சபாநாயகர் :** உறுப்பினர் பேசிக் கொண்டே இருக்கிறார். இதை நான் அனுமதிக்கவில்லை. அவர் ஒரு சமுதாயத்தின் பிரதிநிதியாக இங்கு அவர் இருக்கிறாரே என்பதற்காக தான் நான் இவ்வளவு தூரம் அனுமதித்தேன். இனி நான் அவ்வாறு செய்ய அனுமதிப்பதற்கில்லை. அவர் தமது கேள்வியை கேட்கட்டும்.

**காயிதேமில்லத் :-** நான் கேட்க வந்த கேள்வியின் பின்னணியை இது வரை கூறினேன். இப்பொழுது கேள்வியைக் கேட்கிறேன். ஒரு அமைப்பு சட்டபூர்வமாக இயங்குகின்றதா? அல்லது இல்லையா ? என்பதைப் பாராமலும், அந்த அமைப்பு கெடுதலை விளைவிக்கிறதா அல்லது நன்மையை விளைவிக்கிறதா? என்பதைப் பாராமலும் அந்த அமைப்பினுடைய பெயரை மட்டும் கவனத்தில் கொண்டு அதன் மீது இந்த அரசு நடவடிக்கை எடுக்குமா? அல்லது எடுக்காதிருக்குமா? பெயரை மட்டும் காரணமாக வைத்து அத்தகைய சங்கங்களை இந்த அரசு ஊக்குவிக்குமா அல்லது பழி வாங்குமா? ஒரு பத்திரிக்கையின்மீது நடவடிக்கை எடுக்கும் சமயம் அப்பத்திரிக்கையில் வெளிவந்த செய்திகளின் அடிப்படையில் அதன் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா? அல்லது குறிப்பிட்டதொரு சங்கத்தில் அது உறுப்பினராக இருக்கிறது என்பதற்காக அதன்மீது நடவடிக்கை எடுக்கப்படுமா? இவ்விபரங்களை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

# 26

*[கிரிமினல் மற்றும் தேர்தல் சட்டதிருத்த மசோதா 24-7-69]*

இந்த சட்டங்கள் பெரும்பாலும் முஸ்லிம் சமுதாயத்தினருக்கு எதிராகத்தான் பயன்படுத்தப்படுகின்றன. இருபது பத்திரிகைகள் மீது வழக்குகள் தொடரப்பட்டுள்ளன. அவற்றில் பதினைந்து பத்திரிகைகள் சிறுபான்மை சமூகத்தினரால் நடத்தப்படுபவை; பெரும்பாலும் உர்தூ பத்திரிக்கைகள். கலவரங்களில் பாதிக்கப்படுவது பெரும்பாலும் சிறுபான்மை சமூகத்தவரே. அரசாங்கம் நடவடிக்கை எடுப்பதும் சிறுபான்மை சமூகத்தினர் நடத்தும் பத்திரிக்கைகள் மீதுதான்; சட்டங்கள் பெரும்பாலும், சிறுபான்மையினருக்கு எதிராக பயன்படுத்தப்படுகின்றன.

இன்று நாட்டில் வகுப்புவாதம் தலைதூக்கி நிற்கிறது. ஒரு சிலர் வன்முறையை வேண்டுமென்றே தூண்டி விடுகிறார்கள். எல்லோரும் இதில் சம்பந்தப்பட்டு இருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. ஒரு சில விஷமிகளின் தூண்டுதலே இதற்கெல்லாம் காரணமாகும்.

இந்நாட்டில் ஆறு லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. எல்லா கிராமங்களிலும் ஹிந்துக்களும், முஸ்லிம்களும் கலந்தே வாழ்ந்து வருகிறார்கள். சில ஊர்களில் முஸ்லிம்கள் ஆயிரம் ஐயாயிரம் என வாழ்ந்து வருகிறார்கள். அதே கிராமங்களில் ஹிந்துக்களும் வாழ்ந்து தான் வருகிறார்கள். நாட்டில் உள்ள அனைத்து கிராமங்களிலும் ஒரே முஸ்லிம்கூட வாழாத கிராமம் கிடையாது எனச் சொல்லலாம். அந்த அளவுக்கு எல்லா சமுதாயத்தினருமே கலந்து வாழ்ந்து வருகிறார்கள்.

இருப்பினும் வகுப்புக் கலவரங்களை கடந்த இருபது ஆண்டுகளாக நாம் அடிக்கடி சந்தித்து வருகிறோம். இதற்குக் காரணம் என்ன? ஒரு சிறு கும்பல் இருந்து

கொண்டு இந்த விஷமங்களை எல்லாம் செய்து கொண்டு வருகிறது. பெரும்பான்மை சமுதாயத்தை சார்ந்த பாமர மக்களிடம் இல்லாததையும், பொல்லாததையும் கூறி இக்கும்பல் தூண்டி விடுகிறது. முஸ்லிம்களுக்கு எதிராக எந்த அளவுக்கு உணர்ச்சிகளைத் தூண்டிவிட முடியுமோ, அந்த அளவுக்கு இவர்கள் திட்டமிட்டு செயல்படுகிறார்கள்.

இந்நாட்டின் மீது அந்நியர்கள் படையெடுத்து வந்த பொழுது அச்சமயம் இங்கு வாழ்ந்த முஸ்லிம்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதை தெரிய வரலாற்றை புரட்டிப் பாருங்கள். அன்றே முஸ்லிம்கள் நாட்டுப்பற்றுடையவர்களாக வாழ்ந்தார்கள் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

மொகலாய அரசர் பாபர் இந்நாட்டின்மீது படையெடுத்து வந்த பொழுது டில்லிக்கு மேற்குப் பகுதியில் அச்சமயம் ஆட்சி செய்து கொண்டிருந்த ஹிந்து மன்னர் பாபரை எதிர்த்தார். அந்த ஹிந்து மன்னருடைய இராணுவத்தில் ''மேவ்'' (*meos*) வகுப்பைச் சார்ந்த முஸ்லிம் படை வீரர்கள் ஆயிரக்கணக்கில் இருந்தார்கள். பாபரை எதிர்த்து தீவிரமாகப் போரிட்டு தங்கள் இன்னுயிரை தாய் நாட்டுக்காக இவர்கள் அர்ப்பணித்தார்கள்.

கேரளாவை எடுத்துக் கொள்ளுங்கள். இஸ்லாமிய மார்க்கம் தோன்றிய காலத்தில் இருந்தே அப்பகுதியில் முஸ்லிம்கள் வாழ்ந்து வருகிறார்கள். மலையாளத்து ஹிந்து மன்னர்கள், கடல் வாணிபத்திற்காக வந்த முஸ்லிம் வியாபாரிகளை வரவேற்று உபசரித்தார்கள். தங்கள் மண்ணிலே தங்கும்படி அழைப்பு விடுத்தார்கள். முஸ்லிம்கள், வியாபாரிகளாக வந்தார்களே தவிர ஆக்கிரமிப்பாளர்களாக வந்து அப்பகுதியில் குடியேறவில்லை.

சில நூற்றாண்டுகளுக்கு பிறகு, போர்ச்சுகீசியர்கள் அப்பகுதிக்கு ஆக்கிரமிப்பாளர்களாக வந்தார்கள். அப்பொழுது ஹிந்து மன்னர்களுடைய கடற்படை தளபதியாக பணியாற்றியவர் ஒருமுஸ்லிம். அவர் தான் அந்த ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்துப் போரிட்டார்.

தமிழ் நாட்டை எடுத்துக்கொள்ளுங்கள். பாண்டிய மன்னர்கள் காலத்தில், டில்லியையாண்ட சுல்தான் அலாவுதீன் தமது படையை தெற்கு நோக்கி அனுப்பினார். அப்படை மதுரை வரை வந்து விட்டது. பாண்டியனுடைய ராணுவத்தில் இருபது ஆயிரம் முஸ்லிம் குதிரைப்படை வீரர்கள் பணி புரிந்தனர். டில்லி படைத்தளபதி முஸ்லிம் வீரர்களுக்கு தகவல் சொல்லியனுப்பினார். தங்களுக்குள் சண்டை வேண்டாம் என்றும் குதிரைப்படை வீரர்களை ஒதுங்கிக் கொள்ளும் படியும் அவர் கேட்டுக் கொண்டார். பாண்டிய மன்னனுடைய ராணுவத்தில் பணிபுரிந்த முஸ்லிம் குதிரைப்படை வீரர்கள் இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. தாய்நாட்டைப் பாதுகாப்பது தான் தங்களது குறிக்கோள் என்று பதில் சொல்லியனுப்பி விட்டார்கள். இதன் காரணமாக ஆக்கிரமிப்பாளர்கள் மதுரையைக் கைப்பற்றும் நோக்கத்தைக் கைவிட்டு விட்டு, வேறு திசை நோக்கிசென்று விட்டனர். இம் மாதிரி வரலாற்று நிகழ்ச்சிகளை நான் அடுக்கிக் கொண்டே போகலாம். இவற்றையெல்லாம் நான் சுட்டிக்காட்ட காரணம் இந்நாட்டில் வாழும் பலதரப்பட்ட மக்களுக்கிடையில் அந்தக்காலத்தில் குரோதமும் விரோதமும் நிலவியிருக்கவில்லை என்பதை தெளிவு படுத்துவதற்காகவே தான்.

எனக்கு முன் பேசிய உறுப்பினர் ஒருவர் முஸ்லிம் லீக்கை சாடிப்பேசினார். முஸ்லிம் லீக்குடன் கூட்டு சேர்ந்ததற்காக கம்யூனிஸ்டுகளையும் அவர் திட்டித்தீர்த்தார். உண்மை என்ன என்றால் பொதுவுடமைவாதிகள், பின்னர் தான் நமது தோழமை கட்சியினர் ஆனார்கள். முதன் முதலாக முஸ்லிம் லீக்குடன் தோழமை கொண்டது காங்கிரஸ் கட்சிதான். 1952 ஆண்டு பொதுத்தேர்தலின் போது, காங்கிரஸ்காரர்கள் எங்களுடன் கூட்டு வைத்து இருந்தார்கள். இது குறித்து நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமானால், இந்திய தேசிய காங்கிரஸின் முன்னாள் தலைவர் திரு. காமராஜ் நாடாரிடம் கேட்டுப்பாருங்கள். முஸ்லிம் லீகின் தோழமை காரணமாக அவரது கட்சி எவ்வளவு தூரம் ஆதாயம் பெற்றது என்பதற்கு அவரே சாட்சி பகர்வார்.

அது மட்டுமல்ல; கேரளாவில் 1960ல் மற்றொரு நிகழ்ச்சியும் நடைபெற்றது. கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக அம்மாநிலத்தில் ஒரு கூட்டணி அமைக்கப்பட்டது. முஸ்லிம் லீக், பி.எஸ்.பி கட்சி, (*P.S.P.*) காங்கிரஸ் ஆகிய கட்சிகள் இக்கூட்டணியில் அங்கம் வகித்தன.

பண்டித நேருவின் தலைமையிலேயே இக்கூட்டணியின் தேர்தல் பிரச்சாரம் நடைபெற்றது. எனவே முஸ்லிம் லீக்குடன் இன்று கூட்டணி சேர்ந்ததற்காக கம்யூனிஸ்டுகளை குறை சொல்பவர்கள், முந்திய வரலாறுகளைப் புரட்டிப் பார்க்கவும். திருப்பிப் பார்த்து கொள்ளவும்

மதஸ்தாபனங்களை சிலர் குறை சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். இந்நாட்டில் நடக்கும் அசம்பாவிதங்களுக்கெல்லாம் இந்த ஸ்தாபனங்களே காரணம் என்று சொல்கிறார்கள். இப்படி குறை சொல்லி விட்டால் மட்டும் போதாது. இந்நாட்டில் சிறு பான்மையினரும் பெரும் பான்மையினரும் வாழத்தான் செய்கிறார்கள். இவர்களுக்குள் சுமுக உறவு வைத்துக் கொள்வதற்கு என்ன செய்யவேண்டும் என்பதுதான் இன்றைய கேள்வி. ஒரு கூட்டத்தை அடக்கி ஒடுக்கிவிட்டு மற்றொரு கூட்டத்தை வாழச்செய்வதென்பதல்ல இன்றைய பிரச்சினை. சிலர் இப்படி தவறுதலாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். எந்த நாட்டில்தான் சிறு பான்மையினர் இல்லை? எந்த ஒரு ரூபத்திலும், எந்த ஒரு வழியிலும், சிறுபான்மையினர் என்று ஒரு கூட்டம் வாழாத நாடே கிடையாது! உலக வரலாற்றில் இருந்து இதை தெரிந்து கொள்ளலாம். எனவே சிறு பான்மையினரையும், பெரும்பான்மையினரையும் எப்

படி ஒற்றுமையாகவும், அமைதியாகவும் வாழச் செய்ய வேண்டும் என்பதே நமது குறிக்கோளாக இருக்க வேண்டும்.

இந்த மசோதாவின் பிரகாரம் தண்டனை வழங்கப் படுவதில் ஒரு முரண்பாடு காணப்படுகிறது. ஒரு இடத்தில் வைத்து குற்றம் செய்தால் ஒரு வகையான தண்டனையும், மற்றொரு இடத்தில் இருந்து அதே குற்றத்தை செய்தால் அதிகப்படியான தண்டனை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வணக்க ஸ்தலங் களில் குற்றம் புரிவது குறித்து இந்த மசோதாவில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. கிறிஸ்தவர்களையும், முஸ்லிம்களையும் பொறுத்த வரையில் அவர்களது வணக்க முறைகளை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும், கிறிஸ்தவர்கள் ஞாயிற்றுக்கிழமை அன்று ஆலயங் களுக்கு செல்கிறார்கள். முஸ்லிம்கள் வெள்ளிக்கிழமை களில் அதிக அளவில் பள்ளிவாசலுக்கு செல்கிறார்கள். ''குத்பா'' என்ற ஒரு பிரசங்கம் அன்று உண்டு. வணக்கமுறையில் அதுவும் சேர்ந்தது. வணக்க ஸ்தலங்களில் இருந்து பிரசங்கம் செய்யக் கூடா தென்று சட்டம் கட்டுப் படுத்த முற்படும் பொழுது, இந்த ''குத்பா''வையும் நீங்கள் சேர்த்துக் கொண் டால் என்னவாகும்? ஆயிரத்து நானூறு ஆண்டு காலம் இருந்து வரும் சம்பிரதாயத்தில் அது கை வைப்பது போலாகும். வணக்க ஸ்தலங்களில் இருந்து உணர்ச்சி யூட்டும் உரைகளை நிகழ்த்தக் கூடாது என்ற சட்டத் தில் இருந்து ''குத்பா''க்களுக்கு விதிவிலக்கு கொடுக்கப் படவேண்டும் என்ற நோக்கத்தில் நாங்கள் ஒரு திருத் தம் கொடுத்திருந்தோம். ஆனால் அது ஏற்கப்பட வில்லை.

# 27

*[ஜனாதிபதியின் உரையின்மீது விவாதம் 3-3-70]*

வங்கிகளை தேசியமயமாக்கியது, சரியான நடவடிக் கையாகும். அதன் பலாபலன்கள் சிறுகச் சிறுக தெரிய முற்பட்டுள்ளன. சாதாரணமானவர்களும், பெட்டிக் கடைகாரர்களும்கூட, இன்று வங்கிகளிலிருந்து கடன் பெற முடிகிறது. ஒரு சாராருக்கு மட்டுமே பயன்பட்டு வந்த பணம் இன்று நாடு முழுவதும் பரவலாக வினியோகிக்கப்படுகிறது.

விவசாயத்தின் முக்கியத்துவத்தை அரசாங்கம் உணர்ந்துள்ளது. நாட்டு மக்களில் எழுபத்தைந்து சத விகிதம் பேர் அத்தொழிலை நம்பி வாழ்கிறார்கள். வங்கி கடன்கள், விவசாயத்திற்கும், தடையின்றி கிடைக்க வழிசெய்யப்படவேண்டும். விவசாயத்தை ஆதாரமாகக் கொண்ட தொழில்கள் பல இருக்கின்றன.

அத்தொழில்கள் ஊக்குவிக்கப்பட வேண்டும். வங்கிகள் அதற்கு உதவவும் வேண்டும்.

கேரளாவில் மீன்பிடிதொழில் முக்கியமான ஒன்று. மீனவர்களின் நிலைமை மிகவும் பரிதாபகரமானது. அண்மையில் எடுக்கப்பட்ட ஒரு பொருளாதார சர்வே யின்படி, நாள் ஒன்றுக்கு ஒவ்வொரு மீனவருக்கும் தலைக்கட்டு வருமானம் சராசரி 25 பைசா என்று தெரியவந்துள்ளது. இவர்களின் வாழ்க்கைத்தரம் உயர்த்தப்படவேண்டும். அண்மையில் மாநில அரசு இதற்கென ஒரு திட்டத்தை தயாரித்து டில்லிக்கு அனுப்பியுள்ளது. மத்திய அரசு இதற்குரிய பணத்தை தாமதமில்லாமல் ஒதுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை பழைய பெண்ணாறு, காவேரிப்பாசனங்களின் மேம்பாட்டிற் கான திட்டம் ஒன்றை மாநில அரசு தயாரித்துள்ளது. ஐக்கியநாடு ஸ்தாபனத்தின் சார்பாக இங்கு வந்த தூதுக் குழுவினர் இத்திட்டத்தை வெகுவாகப் பாராட்டினர். இத்திட்டம் நிறைவேற்றப்படுமானால், தமிழ்நாட்டில் உணவு உற்பத்தி கணிசமாக அதிகரிக்கும் என்று சொல்லப்படுகிறது. எனவே இந்திய அரசு இத்திட்டத் திற்கு அங்கீகாரம் அளிப்பதுடன் தேவையான நிதி ஒதுக் கீடும் செய்யவேண்டும் என கேட்டுக்கொள்கிறேன்.

சமையல் எண்ணெய்கள், விவசாயத்திற்கான உரங்கள், இரும்புப்பொருட்கள் போன்றவற்றின் தட்டுப்பாடு நாட்டில் அதிகமாக இருக்கின்றன. இவற் றைப்போக்க அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும். சேலம் இரும்புஆலைத்திட்டம், இன்னும் பேச்சளவிலேயே இருந்து வருகிறது. தமிழ்நாட்டைப்பொறுத்தவரையில் இது ஒரு பெரிய திட்டமாகும். எனவே சேலம் இரும்பாலை திட்டத்தை தாமதமில்லாமல் ஆரம்பிக்க வேண்டும்.

தமிழ்நாட்டின் கடற்கரையோரங்களில் எண்ணெய் வளம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எந்த அளவு இந்த வளங்கள் கிடைக்கலாம் என்பது குறித்து தீவிரமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு இங்கு எண்ணெய் வளங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது ஒரு நல்ல அறிகுறி யாகும்.

நாட்டில் வகுப்பு ஒற்றுமை நிலவிவர வேண்டுமென ஜனாதிபதி தமது உரையில் குறிப்பிட்டுள்ளார். மக்களுக் கிடையில் அமைதியும், நேசபாவமும், நிலவி வந்தால் தான் நாடு முன்னேற்றப்பாதையில் செல்வதாக அர்த்தம்; ஆனால் அங்கங்கே வகுப்புக்கலவரங்கள் தலைதூக்கிக் கொண்டிருக்கின்றன. அண்மையில் அகமதாபாத் நகரில் பெரிய வகுப்புக் கலவரம் ஒன்று நிகழ்ந்துள்ளது. நமது நாட்டின் பெருமைக்கே இது இழுக்கைத் தேடித்தந்துள்ளது. நாட்டின் மானமரியா

தையை வெளிநாடுகளில் தரம் தாழ்த்தியுள்ளது. இவ் வகுப்புக்கலவரங்களினுல் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அரசாங்க உதவிகள் உடனடியாக தாராளமாகக் கிடைக்க வேண்டும். அவர்களது புனர் வாழ்வுக்கு உதவ அரசாங்கம் முன்வரவேண்டும். இக் கலவரத்தின் விளைவாக ஏராளமான பெண்கள் விதவைகளாகி விட்டிருக்கிருர்கள். அவர்களுக்கு வாழ்வளிக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்யப்படும் உதவிகள் பத்திரிக்கைகளில் பிரசுரிக்கப்படவேண்டும்.

உர்தூ மொழிக்கு இழைக்கப்பட்டுவரும் அநீதி இன்னும் தொடர்கிறது. அம்மொழிக்கு நீதி வழங்கப் படாத வரையில் சிறுபான்மை சமுதாயத்தை நீங்கள் போதிய அளவு கவனிக்கவில்லை என்றே அர்த்தமாகும். ஆட்சியாளர்கள் இதை மனதில் கொள்ளவேண்டும்.

## 28

[பாராளுமன்ற உறுப்பினர் ஒருவரை போலீஸார் அடித்து விட்டதைக் குறித்து 6-4-70 அன்று லோக் சபையில் பரபரப்பாக விவாதிக்கப்பட்டது: அப் பொழுது காயிதே மில்லத் கூறியதாவது.]

இன்று காலையில் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவருக்கு இழைக்கப்பட்ட கொடுமை, உண்மையில் வேதனைக்குரியது. உறுப்பினர் அனைவரும் ஆவேசத் துடன் பேசினுர்கள். உள்துறை அமைச்சர் கூறிய சமாதானங்கள் எடுபடவில்லை. பிரதம மந்திரி தலை யிட்டு பேச வேண்டி வந்து விட்டது. கண்ணியம்மிக்க உறுப்பினர் ஒருவர் தாக்கப்பட்டதற்காக சகாக்கள் பலரும் கோபாவேசம் கொண்டெழுந்த காட்சியை நான் இன்று கண்டேன். ஆனுல் அதே சமயம் எனது சிந்தனை எங்கோ பறந்து சென்றது.

இந்நாட்டில் எத்தனையோ கொடுமைகள் நடந் துள்ளன. இன்று காலை நடந்த நிகழ்ச்சியைவிட மிக மிகப் பயங்கரமானவை, கொடூரமானவை அவை. நாட்டின் ஒரு இடத்தில் மட்டுமல்ல பல இடங்களில் பல ஆண்டுகளாக இந்த அட்டூழியங்கள் நடைபெற்று வருகின்றன. சிறுபான்மை சமுதாயத்தை சார்ந்தவர் கள், ஆயிரக்கணக்கில் கொல்லப்பட்டு இருக்கிருர்கள். அவர்களில் பலர் உயிருடன் எரிக்கப்பட்டு இருக்கிருர் கள். அவர்களுடைய பச்சிளம் பாலகர்கள் துண்டு, துண்டாக வெட்டி வீதியில் வீசப்பட்டு உள்ளார்கள். குழந்தைகளை பெற்றெடுத்த தாய் தந்தையர் முன்னிலை யிலேயே இக்கொடுமைகள் இழைக்கப்பட்டுள்ளன.

மேற்கூறிய அட்டூழியங்கள் இந்நாட்டில் தொடர்ந்து ஆண்டுக்கணக்கில் நடைபெற்று வந்த போதிலும் இந்த அவையில் வேறு எந்த உறுப்பின ராவது அதைக் கண்டித்துப்பேசியதுண்டா? எதிர்த்துக் கூக்குரல் எழுப்பியதுண்டா? இன்று நடந்த நிகழ்ச்சி யைப் போல ஆயிரம் மடங்கு கொடுமையானவை அவை. இருப்பினும் இந்த அவை மௌனமே சாதித்து வந்தது. அநீதியையும், அக்கிரமத்தையும் அது கண்டு கொள்ளவே இல்லை.

இன்றைய சம்பவம் குறித்து நீதி விசாரணை நடத்தப்படுமென அரசாங்கம் வாக்குறுதி அளித்துள் ளது. பிரதம மந்திரியே இதைத் தெரிவித்துள்ளார். அதன் பின்னரும் உறுப்பினர்கள் ஏன் வீணாக கூக்குரல் எழுப்பிக் கொண்டிருக்க வேண்டும்?

அவை உறுப்பினர்களின் கண்ணியம் காப்பாற்றப் படும் என அரசாங்கம் வாக்குறுதி அளித்துள்ளது. அவர்களுக்கு போதிய பாதுகாப்பு அளிக்கப்படும் எனவும் உறுதியளிக்கப்பட்டுள்ளது. இந்த உரிமை நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக்கும் கிடைக்கவேண்டும். அவன் ஏழையாகயிருந்தாலும், பலவீனமானவனுக யிருந்தாலும் அவனுக்கும் துரிதமாக நீதி கிடைக்க வேண்டும், பாதுகாப்பு கிடைக்க வேண்டும்.

## 29

(வகுப்புக் கலவரங்கள் குறித்து விவாதம் 14-5-70 அன்று லோக்சபையில் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் பேசியதாவது)

இந்த அவையில் எங்கள் கட்சிக்குஒதுக்கப்பட்டுள்ள நேரம் மிகக் குறைவு, நிமிடக்கணக்கில்தான் நாங்கள் பேச வேண்டியிருக்கிறது. லோக்சபையிலுள்ள கட்சி களின் எண்ணிக்கைகளின் அடிப்படையில் ஒவ்வொரு கட்சிக்கும் நேரம் ஒதுக்கப்படுவதால் தான் இந்த நிலைமை எங்களுக்கு ஏற்பட்டுள்ளது.

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் கடைபிடிக்கப்பட்ட சம்பிரதாயங்களில் ஒன்றை இங்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஒரு சமயம் ஒரே ஒரு கம்யூனிஸ்ட் உறுப்பினர் தான் இருந் தார். அந்த அவையில் உள்ள மொத்த உறுப்பினர்கள் 625 பேரில் இவர் ஒருவர் மட்டுமே கம்யூனிஸ்ட். இருப் பினும், அங்குள்ள சபாநாயகர் கம்யூனிஸ்டு கட்சியின் எண்ணிக்கையை பாராது அவருக்கு அதிக நேரத்தை ஒதுக்கிக் கொடுத்தார். அந்த உறுப்பினருடைய கருத்து அவையில் கேட்கப்பட வேண்டிய ஒன்று என்றும் அதற்கு அக்கட்சியின் எண்ணிக்கை பலம் குறுக்கே நிற்கக் கூடாது என்றும் சபாநாயகர் காரணம் சொன்னுர். அந்த சம்பிரதாயம் நமது அவையில் பின் பற்றப்படுவதாகத் தெரியவில்லை.

நம் நாட்டில் ஆறு லட்சம் கிராமங்களும் நகரங்களும் இருக்கின்றன. எந்த ஒரு குக்கிராமமாக இருந்தாலும் அங்கும் ஐந்து அல்லது பத்து முஸ்லிம்கள் வாழ்ந்து வரத்தான் செய்வார்கள். சில கிராமங்களில் ஐந்நூறு, ஆயிரம் என்றும் முஸ்லிம்கள் வசிப்பதுண்டு. ஒரு முஸ்லிம் கூட வாழாத கிராமம் நம் நாட்டில் ஒன்றுகூட இல்லை என்பது தெளிவு. அந்த ஊர்களில் வாழும் ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒரே குடும்பத்தை சார்ந்தவர்கள் போல வாழ்ந்து வருகிறார்கள். உறவு முறைகளை செப்பிக் கொள்கிறார்கள். சாச்சா, மாமா, மாமி என உறவு சொல்லி அழைத்துக் கொள்கிறார்கள்.

இப்படி ஒற்றுமையாக வாழ்பவர்களுக்கிடையில் குரோதமும், விரோதமும் எப்படி வளர்கிறது ? இந்த துவேஷங்களுக்கு வித்திடுபவர்கள் யார்? பொது மக்களை குறை சொல்வதற்கில்லை. சில அரசியல்வாதிகளின் ஆவேச போக்குதான் இதற்கெல்லாம் அடிப்படைக்காரணமாகும்.

நமது நாட்டில் மட்டும்தானா சிறுபான்மையினர் வாழ்கிறார்கள்? இன்று உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் ஏதாவது ஒரு கூட்டத்தினர் ஏதாவது ஒரு அடிப்படையில் சிறுபான்மையினராக வாழ்ந்து வருகிறார்கள். சிறுபான்மை மக்களே வாழாத நாடு உலகில் கிடையாது.

நமது நாட்டில் சிறுபான்மையினர் இன்று மட்டும் தானா வாழ்ந்து வருகிறார்கள்? இந்தியாவிற்குள் ஆரியர்கள் படையெடுத்து வருவதற்கு முன்னதாகவே இங்கு சிறுபான்மையினர்கள் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

நாட்டிற்குள் ஆரியர்கள் காலடி எடுத்து வைப்பதற்கு முன்னர் இம்மண்ணில் வாழ்ந்த மக்களின் வழித்தோன்றல்களாய் வந்துள்ளவர்களில் நானும் ஒருவன். எனவே இந்த நாட்டின் மீது எனக்குள்ள பற்றுதலையும் பாசத்தையும் குறைத்து மதிப்பிட முடியாது. வரலாறு தெரிந்த காலம் தொட்டு இங்கு வாழ்ந்து வரும் மக்களின் பிரதிநிதி நான்.

இந்நாடு குறித்து முஸ்லிம்கள் என்ன நினைக்கிறார்கள் தெரியுமா? ''ஹுப்புல் வதன் மினல் ஈமான்'' என்பது நாயக வாக்கு ஆகும். அதாவது நாட்டுப்பற்று ஈமானில் (மத நம்பிக்கையில்) பாதி என்பதாகும். எனவே தேசப் பற்று என்பது எங்கள் ம க் கடமைகளில் ஒன்றாகி விடுகிறது.

வாழும் நாட்டிற்கு விசுவாசமாயிருக்கும்படி எங்களது மதம் கட்டளையிட்டுள்ளது. திரு வாஜ்பாய் இந்த அவையில் பேசும்பொழுது விநோதமான கூற்று ஒன்றை சொன்னார். இந்திய முஸ்லிம்களை, ஏதோ ஒருவித விரக்தி பிடித்திருக்கிறதாம். சண்டை பிடித்துக் கொண்டு சாவதைத்தான் அவர்கள் விரும்புகிறார்களாம். இந் நாட்டில் நடைபெறும் வகுப்புக் கலவரங்களையெல்லாம் முஸ்லிம்கள் தான் ஆரம்பிக்கிறார்களாம், இறுதியில் அவர்களே செத்து மடிந்து விடுகிறார்களாம். இப்படி ஒரு கண்டுபிடிப்பை அவர் சொல்லி இருக்கிறார். தங்களது உயிருக்கு ஆபத்து என்று தெரிந்த பின்னரும் அவர்கள் இந்த நாட்டை விட்டு ஓடி விடாமல், இங்கேயே செத்து மடிவதை அவர்கள் விரும்புகிறார்கள். நினைத்திருந்தால் வெளிநாடுகள் சிலவற்றில் சென்று அவர்கள் குடியேற முடியும். ஆனால் அவர்கள் அவ்வாறு செல்லவில்லை. செல்லவும் விரும்பவில்லை. ஏன் என்றால் இம் மண்ணின் மீது அவர்களுக்குள்ள பற்றும், பாசமும் அப்படிப் பட்டது. இங்கு வேறு சில மக்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய சிந்தனையோட்டம் வேறுவிதமானது. இந்திய முஸ்லிம்களின் உள்ளக் கிடக்கையை அவர்கள் அறிந்துகொள்ள மாட்டார்கள்.

நாட்டில் நடைபெறும் வகுப்புக் கலவரங்களையும், படுகொலைகளையும் கண்டித்து திரு. வாஜ்பாய் இதுவரை ஏதாவது கூறியிருக்கிறாரா? அவ்வாறு வன்முறைகளில் ஈடுபடக் கூடாது என தமது கட்சியினரை கேட்டுக் கொண்டுள்ளாரா?

திரு. வாஜ்பாய்: ஆம் நாங்கள் அவ்வாறு அறிக்கை வெளியிட்டுள்ளோம்.

**காயிதெ மில்லத்:** எப்பொழுது செய்தீர்கள்? எங்கு செய்தீர்கள்? நான் அவற்றைப் பார்த்ததேயில்லை. அப்படி அவர்கள் ஏதாவது செய்திருந்தால் நான் அதை வரவேற்கிறேன். நாட்டில் நடக்கும் வகுப்புக் கலவரங்களுக்கு எல்லாம் சில அரசியல்வாதிகள் தான் தூண்டுதலாக இருக்கிறார்கள். நாடு முழுவதையும் தங்களது வழிக்குக் கொண்டு வந்து விடலாமென அவர்கள் மனப்பால் குடிக்கிறார்கள். ஆனால் இது நடவாத காரியம். மனிதாபிமானமும், மனிதப் பண்பாடும் உள்ளவரையிலும் வன்முறைகளினால் மட்டுமே மக்களின் மனதைத் திருப்பி விட முடியாது. மனிதாபிமானமே இறுதியில் வெற்றி பெறும்.

மக்களுக்கிடையே காணப்படும் வேற்றுமைகளை இவர்கள் பெரிது படுத்துகிறார்கள். உடையை எடுத்துக் கொள்ளுங்கள், எல்லோரும் ஒரே மாதிரி உடை அணிகிறார்களா? ஒரே மாதிரி உடை அணிய வேண்டும் என எல்லோரையும் கட்டுப்படுத்த முடியுமா? ஒருவன் தொப்பி போடுகிறான்; ஒருவன் தலைப்பாகை கட்டுகிறான், ஒருவன் ''ஹாட்'' வைத்துக் கொள்கிறான். சிலர் வேஷ்டி கட்டுகிறார்கள், சிலர் பேண்ட் போட்டுக் கொள்கிறார்கள். காலணிகளை எடுத்துக் கொள்ளுங்கள், செருப்புகள் எல்லாம் ஒரே மாதிரியாக இருக்கின்றனவா? இதில்தான் எத்தனை ரகங்கள். எனவே மக்கள் கூட்டம் வாழும் வரை பலவகையான உடைகள் இருக்கத்தான் செய்யும்.

இது போல தான் நம்பிக்கையும்; எல்லோரும் ஒரே மாதிரி நம்ப வேண்டுமென வற்புறுத்த முடியாது. கடவுள் நம்பிக்கையும், மத நம்பிக்கையும் ஒரே மாதிரி

யானதாக இருக்க வேண்டுமென்று சொல்வதும் அதற்காக முயற்சிப்பதும் அடிமுட்டாள்தனமாகும். மக்களின் கொள்கைகளையும், எண்ணங்களையும் மாற்றிவிட முடியாது. இந்த சாதாரண உண்மையைப் புரிந்து கொள்வது அவசியமாகும்.

இங்குள்ள சிறு பான்மையினர் பிரச்சினை ஒரு தேசீய பிரச்சினையாகும். சிறுபான்மை யினருக்கு மட்டும் சம்பந்தமுள்ளதல்ல. இந்நாட்டின் வாழ்வும், அதன் எதிர்காலமும் அத்துடன் பிணைக்கப்பட்டுள்ளது. இந் நாட்டில் ஆறு கோடி முஸ்லிம்கள் வாழ்வதாக சிலர் கூறுகிறார்கள். இங்கு எட்டுகோடி முஸ்லிம்கள் வாழ்கிறார்கள் என நான் நினைக்கிறேன். ஐக்கிய நாடு சபைகளில் உள்ள நாடுகளில் எத்தனை நாடுகள் எட்டு கோடி மக்கள் தொகை கொண்டதாக இருக்கின்றன? எனவே எத்தனையோ நாடுகளைவிட இந்திய முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது.

இவர்களை யெல்லாம் வன்முறைகள் மூலம் அழித்து, ஒழித்து விடலாம் என திரு. வாஜ்பாய் கருதுகிறார். இது நடக்கக் கூடிய காரியமா? நாங்கள் சாவதாக இருந்தாலும் இந்நாட்டில்தான் சாவோம் என முஸ்லிம்கள் கூறி வருகிறார்கள். அப்படிப் பட்டவர்களை அழிப்பது, நடவாத காரியமாகும்.

இன்று மகாராஷ்ராவில் என்ன நடந்து கொண்டு இருக்கிறது? அங்கு நடக்கும் வகுப்புக் கலவரங்கள் எல்லாம் திட்டமிட்டு ஆரம்பிக்கப்பட்டவைகளே. பல வாரங்களாக அவர்கள் திட்டங்கள் தீட்டுகிறார்கள். ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தாக்க வேண்டுமென முன் கூட்டியே தீர்மானித்துக் கொள்கிறார்கள். அதற்கான நேரத்தை தேர்ந்து எடுத்துக் கொள்கிறார்கள். இன்ன இன்னாரை இப்படி, இப்படியெல்லாம் தாக்க வேண்டும் என பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன. இத்தகைய பூர்வாங்க வேலைகள் எல்லாம் சரிவர அமைத்துக் கொண்ட பின்னரே அவர்கள் வகுப்புக் கலவரங்களை ஆரம்பிக்கிறார்கள்.

பீவண்டி நகரில் நடந்ததென்ன? அங்கு முஸ்லிம்கள் தாம் பெரும்பான்மையினராக வாழ்கிறார்கள். விசைத் தறிகளும், சிறு தொழில்களும் அங்கு ஏராளமாக இயங்கி வருகின்றன. பொருளாதாரத்தில் அவர்கள் செழிப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவ்வூரில் உள்ளவர்கள் மட்டுமல்ல. வெளியூர்களிலிருந்து வந்தவர்களுக்கும் கூட பீவண்டி வாசிகள் வேலை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். முஸ்லிம் அல்லாதவர்களும் ஏராளமாக அங்கு வந்து வேலை செய்துகொண்டிருந்தார்கள். சுமார் முப்பது ஆயிரம் வெளியூர்க் காரர்கள், பீவண்டியில் பணிபுரிந்து கொண்டிருந்தார்கள். பீவண்டி மக்கள் செழிப்புடன் வாழ்ந்து கொண்டிருப்பது, சிலருக்கு பிடிக்கவில்லை. அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டுமென திட்டம் தீட்டினார்கள். அதற்கான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சிவாஜி ஜெயந்தி வந்தது. அந்த விழாவில் ஊர்வலம் செல்வதுண்டு, முஸ்லிம்கள் இந்த ஊர்வலத்தை ஆட்சேபிக்கவில்லை. எல்லோரும் முன் கூட்டியே பேசிக் கொண்டால் தாங்களும் இந்த ஊர்வலத்தில் கலந்து கொள்ள தயார் என முஸ்லிம்கள் அறிவித்தார்கள். இரு தரப்பினரும் கூடி ஊர்வலத்தை எப்படி நடத்துவது என்று பேசினார்கள். ஊர்வலத்தில் காவிக் கொடிகளை உபயோகிக்கக் கூடாது, என்றும் கலர் பொடிகளை பிறர் மீது தூவக் கூடாது என்றும் பேசப்பட்டது; ஒப்புக் கொள்ளப் பட்டது. ஊர்வலத்தில் இன்ன இன்ன கோஷங்கள் எழுப்ப வேண்டும் என்றும் பேசப்பட்டது. ஒரு நாள் அல்ல இரண்டு நாள் அல்ல பல வாரங்கள் கூடி பேசி எடுத்த முடிவாகும் இது.

ஊர்வலம் சென்று கொண்டிருந்தபொழுது, ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் வேறு விதமான கோஷங்கள் எழுப்பப்பட்டன. கலவரத்தை ஆரம்பிப்பதற்கு அதைத்தான் அவர்கள் அடையாளமாக வைத்திருந்தார்கள், அது தான் உண்மை. ஆனால் இன்று திரு. வாஜ்பாய் அதை மறுக்கலாம்.

ஒரு வேளை ஊர்வலத்தின் மீது கல் எறிவதன் மூலம் குழப்பத்தை விளைவிக்கலாம் என்றால், ஊர்வலத்தின் ஆரம்பத்திலேயே இதுநடை பெற்றிருக்க வேண்டும். அந்த யுக்தி இப்பொழுது கடைபிடிக்க படவில்லை. புதிதாக ஒரு சமிக்ஞையை *(Signal)* உருவாக்கியிருந்தார்கள். ஊர்வலம் நகரின் மைய பகுதியில் முக்கியமான ஒரு சந்திப்பை வந்தடைந்ததும் குறிப்பிட்ட கோஷங்கள் எழுப்பப்பட்டன. உடனே வன்முறைகள் தலைதூக்கின. கடைகள் சூறையாடப்பட்டன. இவையெல்லாம் முன்கூட்டியே திட்டமிடப்பட்டிருந்தால் தான் செயல் படுத்தியிருக்க முடியும். ஊர்வலம் சென்ற பகுதியில் மட்டும் குழப்பம் நடைபெற்றுக்கொண்டிருக்கவில்லை. அதே சமயம் வேறு பல 'முஹல்லா'க்களிலும் தெருக்களிலும் சூறையாடுதலும், கொலைகளும் ஆரம்பிக்கப்பட்டன. திராவக பல்புகளும், தீகுண்டுகளும், கவண் எறிதலும் போன்ற செயல்களும், இதே நேரத்தில் ஆரம்பிக்கப்பட்டன. நெருப்புக்குண்டுகள் கூறைகளின் மீது விழுந்ததும் வேகமாக தீ பிடித்துக் கொண்டது. கண்ணிமைக்கும் நேரத்திற்குள்ளாக எல்லாமே ஆரம்பிக்கப்பட்டன.

மகாராஷ்ட்ரா அரசாங்கத்திடம் இந்த கலவரம் நடப்பதற்கு இரண்டு தினங்களுக்கு முன்பாக சில எம்.எல்.ஏ.க்களும், எம்.எல்.சிகளும் எச்சரிக்கை விடுத்திருந்தனர். முஸ்லிம்கள் சார்பாக ஒரு தூதுக்குழு உள்துறை அமைச்சரிடம் நேரில் சென்று ஒரு மகஜரை சமர்ப்பித்தது. இவ்வளவு முன் எச்சரிக்கை எடுத்த பின்னர்தான், இந்த வகுப்புக்கலவரம் நடந்துள்ளது. பம்பாயில் இருந்து ஒரு போலீஸ் அதிகாரி பிவண்டி சென்றார். பாதிக்கப்பட்ட முஸ்லிம்களுக்கு ஆறுதல் சொல்வதற்கு பதிலாக கண்ட, கண்ட இடங்களில் சிறு பான்மை சமுதாயத்தினர் இவர் உத்தரவின் பேரில் தாக்கப்பட்டார்கள். போலீஸார் பாரபட்சமாகவே

நடந்து கொண்டனர். பீவண்டி கலவரம் முடிந்ததும் ஜால்காவுனில் கலவரம் ஆரம்பிக்கப்பட்டது. அதை அடுத்து தாணுவிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் கலவரங்கள் மூண்டன.

இப்பொழுது அகமதாபாத்தில் பெருமளவில் வகுப்புக் கலவரம் நடந்துள்ளது. அதில் முஸ்லிம்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளார்கள். பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவாரணம் அளிப்பதில் தாமதம் கூடாது. அகமதாபாத்தில் வீடுகளையும், தொழில்களையும் இழந்தவர்கள், தெருக்களில் பிச்சை எடுத்துக் கொண்டு திரிகிறார்கள். **அந்த மக்கள் மட்டும் மானத்தையும், மரியாதையையும் இழந்து நிற்கவில்லை. இந்நாடே மானத்தையும் மரியாதையையும் இழந்து நிற்கிறது. வெளிநாடுகளில் நம்முடைய கௌரவம் பறிபோய்விட்டது.** எனவே, பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டயீடு கொடுப்பதில் துரிதம் காட்டவேண்டும். இரண்டாவது நாள் கலவரத்தில் வீடு இழந்தவர்களின் எண்ணிக்கை முப்பது ஆயிரம் என்று சொல்லப்படுகிறது. சொத்து இழப்பு இரண்டு கோடி ரூபாய்க்கும் அதிகமாக இருக்குமென ஏஜென்ஸி செய்திகள் கூறுகின்றன. இந்த கலவரங்களில் இறந்தவர்கள் நூற்றி இருபத்தேழுபேர் என சர்க்கார் புள்ளிவிவரம் கூறுகிறது அது நூற்றிஇருபத்தேழு ஆகவும் இருக்கலாம் அல்லது ஐந்து நூறாகவும் இருக்கலாம். இறந்துபோனவர்கள் இறந்து போனவர்களே; இனி அவர்களை மீட்டுக் கொண்டு வரமுடியாது. இப்பொழுது உயிருடன் இருப்பவர்களுக்காவது உதவி செய்யுங்கள்.

இது ஒரு சட்டம் ஒழுங்கு பிரச்சினை மட்டுமல்ல, வகுப்பு கலவரங்கள் ஆரம்பமானதும், முதலில் பலியாவது சட்டமும், ஒழுங்கும்தான். இது நாட்டிற்கு நல்லதல்ல. போலீஸார் ஒரு தலைபட்சமாக நடந்து கொள்ளக்கூடாது. மேலும் கலவரம் வருவதற்கு முன்பே அதை தடுத்து நிறுத்த ஆவன செய்யவேண்டும் மத்திய அரசு இது விஷயத்தில் அதிக அளவு அக்கறை காட்டவேண்டும். மெத்தனப் போக்காக இருந்து விடக்கூடாது.

## 30

*[இரங்கல் உரை:-29-7-70]*

மறைந்த திரு. பட்டம் தாணுப்பிள்ளை ஒரு சிறந்த தலைவர்; மக்களை கவரக் கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தார். இந்நாட்டின் விடுதலைக்குப் பாடுபட்ட சுதந்திரப் போராட்ட வீரர்களில் அவரும் ஒருவர். அவர் ஒரு சிறந்த படிப்பாளி. மற்றவர்களின் கருத்துக்களை மதிக்கத் தெரிந்தவர்; அவருடைய மறைவு கேரளாவிற்கு மட்டும் இழப்பு அல்ல. நாடு முழுவதற்குமே பேரிழப்பாகும். எனது சார்பாகவும் எனது கட்சியான முஸ்லிம்லீகின் சார்பாகவும் அன்னாரது குடும்பத்திற்கு ஆழ்ந்த அனுதாபங்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

---

### முஸ்லிம் லீகின் பெயரை விடுவது இஸ்லாத்தை விடுவதற்குச் சமம்

மத்திய அரசு முன்னாள் மந்திரி டாக்டர் செய்யித் மஹ்மூத் கருத்து:

''முஸ்லிம் லீகோடு நீங்கள் ஏன் சேர்ந்தீர்கள் என்று என்னிடம் கேட்கிறார்கள். அதில் என்ன தவறு என்று நான் கேட்க விரும்புகிறேன்.

நாட்டு விடுதலைக்குப் பிறகு, முஸ்லிம் லீகை கலைக்கச் செய்ய வேண்டுமென்று, பண்டித நேரு என்னிடம் கேட்டுக் கொண்டார். நானும், தென் மாநிலங்களில் இதற்காகவே சுற்றுப் பிரயாணம் செய்தேன். முஸ்லிம் லீகின் பெயரை விட்டுவிடுவது என்பது இஸ்லாத்தையே விட்டுவிடுவதற்கு சமம் என்ற முறையில் முஸ்லிம்களில் பெரும்பாலோர், அந்தப் பெயரின் மீது பற்றுக் கொண்டிருப்பது எனக்குத் தெரிய வந்தது.

பிறகு பண்டித நேரு அவர்களும், அந்தப் பெயரின் மீது அவர்களுக்கு அந்த அளவுக்குப் பிரீதி உணர்ச்சி-பூர்வமான பிடிப்பு *[Sentimental attachment]* இருக்கிறபடியால், அப்படியே விட்டுவிடுங்கள் என்று சொல்லி விட்டார்.

ஜனாப் இஸ்மாயீல் சாகிப் அவர்களிடம் முன்னர் எனக்கு அவ்வளவு பரிச்சயமில்லை. ஆனால் இப்போது பார்க்கும் போது, ஒரு உண்மை முஸ்லிமாக, தேசீய வாதிகளைவிட, தேச சம்பந்தமான விஷயங்களில் முன்னிற்கும் தேசீய வாதியாக, அவர் விளங்குவதை அறிகிறேன். காஷ்மீர் பற்றியோ, பொதுவாக நாட்டின் பிரச்சினைகள் பற்றியோ அவர் சொன்ன கருத்துக்களும், எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளும், தேசீய வாதிகளைக்கூட தலை குனியச் செய்வதாக உள்ளன.

கேரள முஸ்லிம் லீகின் தலைவர் ஸய்யித் பாபக்கி தங்கள் அவர்களும் ஒரு சிறந்த முஸ்லிமாக இருக்கிறார்கள்.

ஜனாப் இஸ்மாயீல் சாகிபின் ஒரு பேச்சுகூட வகுப்பு வாதத்தை வளர்ப்பதாகவோ, நாட்டு அரசியல் அமைப்புக்கு முரண்பட்டதாகவோ இல்லை.

ஹக்கீம் அஜ்மல் கானின் முஸ்லிம் லீக் எதுவோ ஹஸ்ரத் மோஹானி வளர்த்த முஸ்லிம் லீக் எதுவோ மற்றும் முஸ்லிம் லீக் எதுவோ, அந்த முஸ்லிம் லீகைத்தான் ஜனாப் இஸ்மாயீல் சாகிப் அவர்கள் இன்று வழி நடத்தி வருகிறார்கள். ஆகவே அப்படிப்பட்டவர்களுடன் கூடி வேலை செய்வதில் என்ன தவறிருக்க முடியும்?''

போபால் பொதுக் கூட்டத்தில் டாக்டர் ஸய்யித் மஹ்மூத்
உரிமைக்குரல் 9—11—64.

# 31

*(நம்பிக்கையில்லாத் தீர்மானம் மீது விவாதம் 29-7-70)*

கேரள சட்டசபை இந்த ஆண்டு ஜூன் 26ம் தேதி யன்று கலைக்கப்பட்டது. இம் மாநிலத்தில் மீண்டும் பொதுத்தேர்தலை நடத்த தேர்தல் கமிஷன் ஆவன செய்து கொண்டிருக்கிறது. வாக்காளர் ஜாபிதா புதுப்பிக்கப்படுகிறது. புதிய தேர்தல் அட்டவணை கள் தயாராகிக் கொண்டிருக்கின்றன. பருவ மழை முடிந்த பின்பு தேர்தல் நடத்த தேர்தல் கமிஷன் நினைத்துள்ளது.

இதற்கிடையில் சில அரசியல் கட்சிகள் வன்முறை களில் இறங்கியுள்ளன. குறிப்பாக மார்க்சிஸ்ட் கம்னியூஸ்டுகள் தங்களுக்கு வாக்களிக்காத வாக்காளர் களை பழிவாங்கி வருவதாக தகவல்கள் கிடைத்துள்ளன. அண்மையில் 'மதாய்' என்ற தொகுதியில் ஒரு உபத் தேர்தல் நடந்தது. வழக்கமாக மார்க்சிஸ்ட்களே அந்த தொகுதியில் வெற்றி பெற்று வந்திருக்கிறார்கள். இந்த உபதேர்தலிலும் அவர்களே வெற்றிபெற்றபோதிலும், இந்த தடவை அவர்களுக்கு எதிராக போடப்பட்ட வாக்குகள் அதிகமாகயிருந்துவிட்டதாம்! தங்களுக்கு வாக்களிக்காதவர்கள் என சந்தேகப்படுபவர்களை மார்க் சிஸ்ட்கள் தாக்கி வருகிறார்கள். அவர்களது தென்னந் தோப்புக்களை வெட்டித் தள்ளுகிறார்கள். மற்றும் சொத்துக்களுக்கும் சேதங்கள் விளைவிக்கப்படுகின்றன. இன்று கூட எனக்கு ஒரு தந்தி இதுபற்றி அங்கிருந்து வந்துள்ளது.

**திரு. *P.* கோபாலன்:-** கனம் உறுப்பினர் சபைக்கு பொய்யான தகவல்களை தந்து கொண்டிருக்கிறார்.

**திரு. பிலு மோடி:-** அவருக்கு இந்த அவையில் பேச உரிமையிருக்கிறது.

**திரு. *A.* ஸ்ரீதரன்:-** இந்த அவைக்கு தவறான தக வல்களைத் தருவதாக கோபாலன் குற்றம் சாட்டுகிறார். இந்த அவையில் சொல்லப்படுவது சரிதானா இல்லையா என்பதை கவனித்துக் கொள்ள துணை சபாநாயகர் இருக்கிறார். கோபாலன் தமது கோணத்தில் இருந்து செய்திகளைப் பார்க்கிறார் (குறுக்கீடுகள்)

**துணைசபாநாயகர்:-** உறுப்பினர்களை அமைதி காக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**காயிதே மில்லத் :-** நடைபெற்ற சில சம்பவங் களைத்தான் இந்த அவையில் நான் எடுத்து வைத்தேன். உண்மைகளைக் கூறும்போது சில நண்பர்கள் ஏன் ஆத்திரப்படுகிறார்கள்? ஆவேசம் கொள்கிறார்கள்?

## பேணுதல்

ஒரு சமயம் டாக்ஸி டிரைவர், காயிதே மில்லத் திடமிருந்து வாடகை பெற்றுச்செல்லும் பொழுது, ஒரு ரூபாயை குறைவாக வாங்கிக்கொண்டு போய் விட்டார். அந்த ரூபாயை, தலைவரவர்கள் என்னிடம் கொடுத்து, இதை தர்மம் செய்து விடுங்கள் என்று சொன்னார்கள். அந்த ரூபாய்க்கு பேரீச்சம்பழம் வாங்கி பள்ளி வாசலில் நோன்பு திறப்பவர்களுக்குப் பகிர்ந்து அளித்து விட்டேன்.

*P.N.I.* அபூ தாலிப்

[செயல் வீரர் மணி விழா மலரில் இருந்து]

---

## அஞ்ச வேண்டியதில்லை

ஒரு தடவை நானும் சில நண்பர்களும் காயிதே மில்லத் அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்த பொழுது, ''நாம் ஏன் இந்த அரசாங்கத்தின் மிரட்டல் களுக்கெல்லாம் அஞ்சி நடுங்க வேண்டும்? மூஸா (அலை) என்ற முஸ்லிம், தானே இறைவன்என்று கூறியகொடுங் கோலன் ஃபிர்அவ்னையே எதிர்த்து நின்றார்கள். அவன் எத்த துவல்லபம் உள்ளவனென்றால் அவன் கண்சாடை காட்டினாலே போதும், மூஸா (அலை) அவர்களின் தலை அவர்களின் கண்டத்திலிருந்து புரண்டிருக்கும், எனினும் அவர்கள் அவனுக்கு அணுவத்தனையும் அஞ்சவில்லை.

அத்தகு வல்லபம் இந்நாட்டுப் பிரதமருக்கும் கிடையாது. ஒருவனுக்கு தண்டனை விதிப்பதாக இருந் தாலும், அவன்மீது குற்றம்சாட்டி அதன்பின் அதுபற்றி வழக்கு மன்றத்தில் விசாரணை நடத்தி, ஆண்டுக்கணக் காகப் பல்வேறு வழக்குமன்றங்களில் அதுபற்றி வாதாடி, பின்னர் அவன் குற்றம் செய்தது உண்மை என்று ருசுவானால்தான், அவன் தண்டிக்கப்படுவான். இல்லையெனில் இல்லை. நிலைமை இவ்வாறு இருக்கும் பொழுது, நம்முடைய வழி நேர்வழியாக இருக்கும் பொழுது, அல்லாஹ் நம்முடன் இருக்கும் பொழுது நாம் அல்லாஹ்வுடன் இருக்கும் பொழுது, நாம் ஏன் அஞ்ச வேண்டும்?'' என்று கூறியது இன்னும் என் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

— பன்னூலாசிரியர் அல்ஹாஜ் *M.R.M.* அப்துற்றஹீம்

[''வீரம் செறிந்த இஸ்லாம்'' என்ற நூலின் அணிந்துரையில் இருந்து]

**திரு. பி. கோபாலன்:** மதாயி தொகுதியில் ''மாட்டு'' என்று ஒரு தீவு இருக்கிறது. இங்கு முஸ்லிம் லீக்கர்களே அதிகமாக இருக்கிறார்கள். அத்தீவில் ஹிந்துக்கள் சிறுபான்மையினராக உள்ளனர்.

**துணை சபாநாயகர்:** இதில் என்ன பாயிண்ட் ஆப்-ஆர்டர் (*Point of Order*) இருக்கிறது?

**திரு. பி. கோபாலன்:** நூற்றி நாற்பது ஹிந்து குடும்பங்கள் அங்கிருந்து முஸ்லிம் லீக் குண்டர்களால் விரட்டி அடிக்கப்பட்டு விட்டார்கள். நாங்கள்தான் வன்முறையில் ஈடுபட்டோம் என கனம் உறுப்பினர் கூறுகிறார். ஆனால் உண்மை நிலவரம் அப்படி அல்ல. நூற்றி நாற்பது குடும்பங்கள் வெளியேறி விட்டது உண்மையாகும்.

**திரு. எ. ஸ்ரீதரன்:** இந்த அவைக்கு தவறான தகவல் களை கோபாலன் கொடுத்துக் கொண்டிருக்கிறார். மதாயி தொகுதிக்கு நான் போய் வந்தேன். அங்குள்ள உண்மை நிலவரம் என்ன என்பது எனக்குத் தெரியும்.

**காயிதே மில்லத்:** கேரளாவிலுள்ள நிலவரங்களை இது வரை எடுத்துக்கூறினேன். நான் கூறியவை அனைத்தும் உண்மையாகும். சிலர் வேண்டுமென்றே தங்களுடைய போக்கில் கூறிக்கொண்டிருக்கிறார்கள்.

நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தின் மீது பேசிய நண்பர்கள் சிலரின் பேச்சுக்களை நானும் கேட்டேன். விவாதத்தின் தரம் மிகவும் குறைந்து விட்டதைக் காண நான் உண்மையிலேயே வருத்தப்படுகிறேன். பிரதமரை தனிப்பட்ட முறையில் பலரும் தாக்கி பேசியுள்ளார்கள். அதிகாரங்கள் அனைத்தையும் அவர் தம் கையிலே வைத்து இருப்பதாகவும் எதேச்சாதிகாரமாக நடந்து கொள்வ தாயும் சிலர் குற்றம் சுமத்தினர். அமைச்சர்கள் விமர் சனம் செய்யலாம். ஆனால் ஒரு நிலைக்கு கீழாக பேச்சின் தரம் சென்று விடுவது அவை உறுப்பினர்களுக்கு அழகானதல்ல. கொள்கைகளை தாக்கலாம், அரசாங்க நடவடிக்கைகளை குறை கூறலாம். ஆனால் தனிப்பட்ட விமர்சனங்களை தவிர்ப்பது நல்லது.

நான் ஏதோ இந்த அரசாங்கத்திற்கு வக்காலத்து வாங்கிப் பேசுவதாக நினைத்துக் கொள்ள வேண்டாம். இந்த ஆட்சி குறித்து எங்களுக்கும் பல புகார்கள் உண்டு, கருத்து வேறுபாடுகள் உண்டு.

பால்ராஜ் மதோக் இந்த அவையில் பேசும் சந்தர்ப்பங்களில் எல்லாம் முஸ்லிம் லீக்கை சாடாது விடுவதில்லை. எங்கள் கட்சியைத் தாக்காமல் அவரால் பேச முடிவதில்லை. முஸ்லிம் லீக் மீண்டும் தனது அசிங்கமான தலையை அரசியல் அரங்கில் தூக்கிக் கொண்டிருக்கிறது என்று அவர் சொன்னார். முஸ்லிம் லீக் பற்றிய உண்மைகளை அவர் அறிய மாட்டார் என்பது எனக்குத் தெரியும். இந்தியாவின் இந்த பகுதிக்கு அவர் குடி வருவதற்கு முன்னதாகவே முஸ்லிம் லீக் இங்கு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அரசியல் நிர்ணய சபையிலும் முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் அமர்ந்திருந்தார்கள். இந்திய அரசியல் சாசனத்தை வகுப்பதிலும் அவர்களுக்கும் பங்கு உண்டு. அதுமட்டு மல்ல, அன்றைய நாள் தொட்டு இன்று வரை பாராளு மன்றத்திலும் முஸ்லிம் லீக்கின் பிரதிநிதிகள் தங்களது கடமைகளை செவ்வனே நிறைவேற்றி வருகிறார்கள். இந்த அவையில் அங்கம் வகிப்பதில் அக் கட்சிக்கு கொஞ்சம் கூட முறிவு ஏற்பட்டதில்லை. ஆனால் கனம் உறுப்பினரோ எங்களைப் பார்த்து நாங்கள் தலை தூக்க முயற்சிக்கிறோம் என்கிறார்.

முஸ்லிம் லீக் நடவடிக்கைகளில் அவர் எதை ஆட்சேபிக்கிறார்? எங்கள் கட்சியில் அவர் காணும் குறை என்ன?

முஸ்லிம் லீகின் சட்டதிட்டங்களை அவர் படித்துப் பார்த்ததுண்டா? அதன் நடவடிக்கைகளில் இதுவரை அவர் கண்ட தவறுகள் என்ன? முஸ்லிம் லீக் குறித்து அவர் தம் சுண்டு விரலை அசைக்க முடியுமா? மக்களுக் கிடையில் துவேசத்தையும், குரோதத்தையும் வளர்க்க அக்கட்சி காரணமாயிருந்தது என்பதை அவரால் நிரூபிக்க முடியுமா?

சிறுபான்மை சமுதாயம் வகுப்புவாதத்தை வளர்க் காது; அதனால் வளர்க்க முடியாது. ஏன் என்றால் அது அவர்களது நலன்களுக்கு உகந்ததல்ல. இது ஒரு பொது உண்மையாகும். இதனை முதலில் புரிந்து கொள்ளுங்கள். அவர்கள் எடுக்க நினைப்பது எல்லாம் தற்காப்பு நடவடிக்கைகளே; அரசியல் சாசனம் அவர் களுக்கு வழங்கி இருக்கும் உரிமைகளை அனுபவிக்க விரும்புகிறார்கள். சமமாக நடத்தப்பட வேண்டும் என்று கோருகிறார்கள்.

## 32

## வெளி விவகாரம் பற்றிய விவாதம் 20-7-71

வெளிநாடுகளுக்கு விமானம் மூலம் செல்லும் பிரயாணிகளின் கட்டணத்தை இருபது சதவிகிதம் உயர்த்துவதென அரசாங்கம் முடிவு செய்துள்ளது. அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்துவதற்காகவும், வெளிநாடுசெல்பவர்களின் எண்ணிக்கையைக் குறைப்ப தற்காகவும், இந்த நடவடிக்கையை அரசாங்கம் மேற் கொண்டிருக்கலாம் என நினைக்கிறேன்.

ஆனால் ஹஜ்பயணிகளை இந்த அரசு முடிவு வெகு வாக பாதிக்கும். ஹஜ் என்பது ஒரு மதக்கடமை. கண்டிப்பாக நிறைவேற்றப்படவேண்டிய ஒன்று. வெளி நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதற்காகவோ அல்லது பொழுதை இன்பமாகக் கழிக்கவேண்டும் என்பதற் காகவோ மேற்கொள்ளப்படுவதல்ல ஹஜ் பயணம். நடுத்தர வர்க்கத்தினரும், சாதாரணமானவர்களும்கூட, இன்றைய தினம் ஹஜ் பயணங்களை மேற்கொள்கிறார் கள். இப்படிப்பட்ட நடுத்தர வர்க்கத்தினரை விமான

கட்டண உயர்வு வெகுவாக பாதிக்கும். எனவே இந்த கட்டண உயர்வை நீக்கும்படி அரசாங்கத்தைக் கேட்டு கொள்கிறேன்; அல்லது இந்த கட்டண உயர்வில் இருந்து ஹஜ் பயணிகளுக்கு விதி விலக்கு அளிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

நமது அயல்நாட்டு கொள்கை குறித்து சில உறுப்பினர்கள் குறைபட்டுக் கொண்டார்கள். ஆனால், என்னுடைய அபிப்பிராயத்தில் இன்று இந்த அரசு கடைபிடித்துவரும் நடுநிலைக்கொள்கை சரியானதே. எந்த ஒரு வல்லரசுடனும் கூட்டுசேராதிருப்பது நமது நாட்டின் நலன்களுக்கு உகந்ததே. அணி சேராத நாடு என்ற முறையில், இந்த போக்கை பின்பற்றும் ஏனைய நாடுகளையும் ஒன்று சேர்த்துக் கொண்டு நாம் சுதந்திரமாக செயல்படுவதே சரியானதாகும்.

# 33

## அரசியல் சட்டம் 24வது திருத்த மசோதா 3-8-71

சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாப்பது, பெரும்பான்மை மக்களின் நல்லெண்ணத்தைப் பொறுத்து இருக்கிறது என்ற உண்மையை நாங்கள் அறிவோம். அதை நாங்கள் ஒத்துக் கொள்ளவும் செய்கிறோம். சட்டம் எவ்வளவு தான் உரிமைகளை வழங்கிய போதிலும், அதை அமல்படுத்தும் பொழுது, பெரும்பான்மை மக்களின் அன்பும், ஆதரவும் அதற்கு உறுதுணையாக இருக்க வேண்டும் என்பது முக்கியமானதே.

இத்தருணத்தில் நான் ஒன்றை கூறிக்கொள்கிறேன். விசேஷமான சலுகைகளையோ, அதிகப்படியான அனுகூலங்களையோ, சிறுபான்மை மக்களாகிய நாங்கள் கேட்கவில்லை. நமது தாய் நாட்டில் பெரும்பான்மை சமுதாயத்தினர் என்னென்ன உரிமைகளையும், சலுகைகளையும் அனுபவிக்கிறார்களோ, அத்தகைய சலுகைகளும், உரிமைகளும், எங்களது எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு, எங்களுக்கு கிடைக்கவேண்டும் என்றே நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

அடிப்படை உரிமைகள் பற்றிய விதியை மாற்றுவதற்கு முயற்சிகள் நடக்கின்றன. நமது அரசியல் சாசனத்தின் அடிப்படை உரிமைகள் பிரிவுதான் மிகவும் முக்கியமானது; ஜீவாதாரமானது; சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கும் அவ்விதிகளே ஆதாரமாக உள்ளன. எனவே அடிப்படை உரிமைகள் விதியை சர்க்கார் மாற்ற நினைக்கும் பொழுது சிறுபான்மையினருககு சில சந்தேகங்கள் எழுவது இயற்கையே. ஆனால் சிறுபான்மையினரின் உரிமைகளில் கைவைக்க மாட்டோம் என நமது பிரதமர் உறுதியளித்துள்ளார். இது வரவேற்கத் தக்கதே.

சிறுபான்மையினர் என்றுமே சிறுபான்மையினர் தான்! அவர்கள் பெரும்பான்மையினராக முடியாது. பாராளுமன்றத்திலும், சட்டமன்றங்களிலும் அவர்கள் சிறுபான்மையினராகவே இருப்பார்கள். எனவேதான் என்றென்றும் சிறுபான்மையினராக இருக்கும் மக்களின் உரிமைகளில் தலையிடக்கூடாது என்பதற்காகவே நமது அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்கள், '' அடிப்படை உரிமைகள் '' என்ற விதியை நமது அரசியல் சாசனத்தில் இணைத்துள்ளார்கள்.

அடிப்படை உரிமைகளை அரசாங்கத்தால் மாற்ற முடியாது என்ற நம்பிக்கை இதுவரை இருந்து வந்தது. ஆனால் அண்மையில் உச்சநீதி மன்றம் வழங்கிய ஒரு தீர்ப்பின் வாயிலாக, இந்தப்பிரிவிலும் கைவைக்கலாமோஎன்றஒரு சந்தேகம் எழுந்துள்ளது. இப்பொழுது நமது அரசு இந்த மசோதாவைக் கொண்டு வருவதன் வாயிலாக பாராளுமன்றம் அதிக அதிகாரங்களை குவித்து வைத்துக்கொள்ள நினைக்கிறது. அரசியல் சாசனத்தின் எந்த விதியையும் திருத்தும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு உண்டு என்று இந்த மசோதா கூறுகிறது. இது குறித்துதான் நாங்கள் அச்சம் கொள்கிறோம்.

எனவே தான் அந்த மசோதாவிற்கு சில திருத்தங்களைக் கொடுத்துள்ளோம். ஒருவருடைய மதநம்பிக்கை, கலாச்சாரம், தீண்டாமை ஒழிப்பு போன்ற அடிப்படை விஷயங்களில் இந்திய அரசியல் சாசனம் உத்தரவாதம் அளித்துள்ள இந்த உரிமைகளுக்கு பாதகம் ஏற்படுத்தும் வகையில் திருத்தங்களை செய்துகொள்ள பாராளுமன்றத்திற்கு அதிகாரம் இருக்கக்கூடாது என்பது எங்களது திருத்தங்களின் நோக்கமாகும். இத்திருத்தங்கள் நியாயமானவையே. இந்த அரசாங்கத்தின் சமூக பொருளாதார நடவடிக்கைளில் அது குறுக்கிடவில்லை. எனவே எங்களது திருத்தங்களை ஏற்றுக் கொள்ளும்படி அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

---

### ''இன்னாலில்லாஹி...''

வேலூர் *H. S. M.* ஷேக் மீரான்

20-6-67 அன்று குரோம்பேட்டையில் தயா மண்ஷிலில் வைத்து முஸ்லிம் லீக் இளைஞர்அணி கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. அந்த முகாமில் 75 வாலிபர்கள் கலந்து கொண்டார்கள். வேலூரிலிருந்து நானும் போயிருந்தேன். காலை பத்து மணியிலிருந்து மாலை நான்கு மணிவரை நீடித்தது. இளைஞர்கள் எழுப்பிய கேள்விகளுக்கெல்லாம் காயிதே மில்லத் அவர்கள் பொறுமையாகவும், அமைதியாகவும் பதில் சொன்னார்கள்.

இடையில் தேநீர் வழங்கப்பட்டது. கப், ஸாஸரில் டீயைக் கொடுத்தார்கள். என் கையில் வைத்திருந்த கப்பும், சாஸரும் கை நழுவி கீழே விழுந்து உடைந்து விட்டது. இதைக் கவனித்த காயிதே மில்லத் அவர்கள் ''இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி...'' என்ற சொற்றொடரைச் சொன்னார்கள். எனக்கு இது ஆச்சரியமாக இருந்தது. யாராவது இறந்த செய்தி கேட்கும் பொழுது தானே இப்பத பிரயோகம் இருக்கும். கை நழுவி கீழே விழுந்து உடைந்துவிட்ட கோப்பைக்குமா இப்படிக் கூறவேண்டும் என என் மனதில் எண்ணம் ஓடியது.

இதுகுறித்து தலைவர் அவர்களிடமே கேட்டுவிட்டேன். அதற்கு காயிதே மில்லத் ''அப்படியில்லை தம்பி எந்தப்பொருள் தவறினாலும், எந்த இழப்பு ஏற்பட்டாலும் இதை ஓதிக்கொள்வது ஒரு நல்ல பண்பாடாகும் என்று அழகாக விளக்கினார்கள். இவ் விளக்கம் மிகவும் என்னைக் கவர்ந்து விட்டது. அன்று முதல் இப்பண்பாட்டை என் வாழ்க்கையில் கடைப்பிடிக்க ஆரம்பித்து விட்டேன்.

எந்த அளவுக்கு என்றால் தெருவில் போகும்போது ஒரு கோடியில் ஒரு பொருள் கீழேவிழும் சப்தம் கேட்டாலும் நான் இச் சொற்றொடரை ஓதிக் கொள்வதுண்டு.

---

# சட்டசபையில் சங்கநாதம்! (1946-1951)



## 1

[மதராஸ் சட்டசபையில் 6-3-47 அன்று நிதிநிலை அறிக்கை மீது விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :

**தனித் தொகுதி :**

ஒவ்வொரு சமூகமும் அதன் பிரதிநிதிகளைப் பெற்றிருக்கவே விரும்புகிறது. சட்டமன்றத்தில் மட்டுமல்ல, ஸ்தல ஸ்தாபனங்களிலும் ஒவ்வொரு சமூகத்தினரும் தங்களது பிரதிநிதிகளைத்தான் விரும்புகிறார்கள். ஆகவேதான் தனித் தொகுதி பற்றி நாங்கள் ஓயாமல் குரல் எழுப்பி வருகின்றோம். ஆனால், எங்களது வாதங்களும், வேண்டுகோள்களும் அவை எவ்வளவுதான் நியாய பூர்வமானதாகயிருந்தாலும், அரசாங்கம் கேட்க மறுக்கின்றது. அரசு இந்த விவகாரத்தில் தனது பிடிவாதமான போக்கினை மாற்றிக் கொண்டு முஸ்லிம்களுக்கு அவர்கள் விரும்புவதைக் கொடுத்திட, வலியுறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். தனித் தொகுதி முறையால் இரு சமுதாயங்களுக்கிடையில் உறவு வலுப்படும் ; ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும், நல்லெண்ணம் வளரவும் வழி ஏற்படும் என்று உறுதியாக உணர்கிறேன். இரு சமுதாயங்களுக் கிடையில் கசப்புணர்ச்சியோ, அல்லது புரியாத தன்மையோ ஏற்படும் என்று பயப்படத் தேவையே இல்லை.

இந்த மன்றத்தில் தனித் தொகுதி முறையால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாகவே நாங்கள் அமர்ந்திருக்கிறோம். அதனால் எந்தவித மனக்கசப்பும் ஏற்பட்டதில்லை. உள்ளாட்சித் துறை அமைச்சர் அவர்கள் வேகமாகவும், பிடிவாதமாகவும் பொதுத்தொகுதி முறைதான் வேண்டுமென்றுபேசினார். ஆனால்,அவரும் தனித் தொகுதி முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர் தான்; தனித் தொகுதிமுறையைக் கண்டு ஏன் பயப்பட வேண்டும்? மக்கள் மத்தியில் சுமுகமான உறவுக்கு தனித் தொகுதி முறை எந்த விதத்திலும் பாதகமாக இருக்கப் போவதில்லை. ஆகவேதான் முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதி வேண்டும் என்று வலியுறுத்துகின்றோம்.

**முஸ்லிம் கல்வி :**

எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் முஸ்லிம் மாணவர்களுக்கு உர்தூ மொழியில் பாடபோதனை செய்வதற்கு அரசு வழி கண்டுள்ளது என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இத்தகைய உறுதி மொழியைத்தான் அரசாங்கத்திடமிருந்து நாங்

கள் கேட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால், இந்த அவைக்குத் தெரிவிக்காத இந்த உறுதி மொழி, தென்னிந்திய முஸ்லிம் கல்விச் சங்கத்திற்கு எப்படி அனுப்பப் பட்டது என்பதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை! நேற்று முழுவதும் ஓயாமல் இப்பிரச்சினையை எழுப்பியுள்ளோம். உர்தூவும் போதனா மொழியாக்கப் பட்டுள்ளது என்ற விபரம் எங்களுக்குத் தரப்படவில்லை. அப்படியானால், நாங்கள் இங்கே கூறுவதையெல்லாம் மிகஇலேசானதாகக் கருதப்படுகிறதா? உர்தூவை போதனா மொழியாக்கும்கொள்கையை நீங்கள் ஏற்றுக் கொண்டிருந்தால், அதை இந்த அவையில் தெரிவித்து முஸ்லிம்களுக்குத் திருப்தி அளித்திருக்க வேண்டும்.

முதலமைச்சர் T.பிரகாசம்; உர்தூ மொழியை முஸ்லிம்களுக்குச் சொல்லி தருவது பற்றி எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள்இந்த அவையில் தெரிவித்துள்ளதை நாம் ஏற்றுக்கொள்கிறோம்.

காயிதேமில்லத்: எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் முஸ்லிம் மாணவர்களுக்கு உர்தூ மொழியில் பாடபோதனை செய்யப்படுவதாக கூறுவதை என்னால் நம்ப முடியவில்லை.

திரு. T. பிரகாசம்: எங்கெங்கே உர்தூ போதிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் உர்தூ தான் போதனா மொழியாக இருக்கிறது; வேறு எதுவும் இல்லை.

காயிதேமில்லத் : உர்தூவைத் தாய்மொழியாகக் கொண்ட முஸ்லிம் மாணவர்கள் எங்கெல்லாம் இருக்கிறார்களோ, அங்கெல்லாம் உர்தூவில் பாட போதனை நடத்தப்படுகிறதா? உர்தூவைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கு உர்தூ மொழிபோதிக்கப்படுவதோடு மற்ற பாடங்களும் அந்த மொழியிலேயே போதிக்கப்பட வேண்டும் என்பதே எங்களது கோரிக்கையாகும். இது நியாயமான கோரிக்கைதான் என்பதை யாரும் மறுக்க முடியாது.

முஸ்லிம்களின் கல்வி சம்பந்தமான பல விவரங்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கிறோம். ஆனால் பொருத்தமான நடவடிக்கைகள் காலக்கிரமத்தில் மேற்கொள்ளப்படவில்லை. ஒரு உதாரணத்தை குறிப்பிட விரும்புகிறேன். இம் மாகாணத்தில் வாணியம்பாடியிலுள்ள இஸ்லாமியக் கல்லூரி ஒன்றுதான், முஸ்லிம்களின் நிர்வாகத்தில் உள்ள கல்வி நிறுவனமாகும். அந்த கல்லூரி தொடங்கப்பட்டு நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு அந்த கல்லூரிக்கான தளவாடங்களை பெறுவதற்கு ரூ. 17,000/- மானியமாக வேண்டுமென்ற ஒரு கோரிக்கையை அரசிடம் வைத்தது. ஆனால் அரசு என்ன பதில் கூறியது தெரியுமா? கல்லூரி தளவாடங்கள் பெறுவதற்கான மானியம் வழங்குவது இந்த ஆண்டு நிறுத்தப்பட்டு விட்டது என்று அரசு பதிலளித்து விட்டது. மாகாணத்தில் ஒரே முஸ்லிம் கல்லூரி;அதன் கோரிக்கையும்ஒன்றே ஒன்றுதான்; அதுவும் நாற்பது ஆண்டுகளுக்கு பின்பு வைக்கப்பட்ட கோரிக்கை. அதற்கு அரசின் பதில் இதுவானால் முஸ்லிம் கல்விக்கு ஊக்க மூட்டும் வழி இதுதானா? இதைப்பற்றி முஸ்லிம்கள் என்ன நினைப்பார்கள்?

கட்டிடங்கள் இல்லாமல் பல உயர்நிலைப்பள்ளிகள் நடத்தப்பட்டு வருகின்றன. வட ஆற்காட்டில் உள்ள ஆம்பூர் பள்ளிக்கூடத்திற்கு ஏதோ செய்யப்போவதாகக் கூறப்பட்டது. ஆனால், அரசு இதுவரை எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. திருச்சிராப்பள்ளியில் உள்ள இஸ்லாமிய உயர்நிலைப்பள்ளி ஒரு கட்டிடத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அந்த கட்டிடம் கார் செட்டாக இருப்பதற்குக் கூட லாயக்கற்றது. இந்த விவரத்தை கல்வியமைச்சரின் கவனத்திற்கு கொண்டு வந்திருக்கிறோம். மாண்புமிகு அமைச்சரை அப்பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் சென்று நேரடியாக உள்ள நிலைமையைக் காட்டியிருக்கிறோம். ஆனால், இதுவரையில் அப்பள்ளிக்கு எந்த விமோசனமும் ஏற்படவில்லை.

மேற்குக் கடற்கரை பகுதியில் திரூரில் உள்ள பெண்கள் உயர்நிலைப் பள்ளியை கல்லூரியாக்க வேண்டும் என்று கோரிக்கை வைக்கப்பட்டது. கல்வித்துறையில் மிகவும் பின்தங்கிய முஸ்லிம் வாழும் பகுதி அது. மலப்புரம் உயர்நிலைப்பள்ளியோடு இணைந்த மாணவர் விடுதிக்கு போதிய கட்டிட வசதி இல்லை. திரூர் உயர்நிலைப்பள்ளிக் கட்டிடமும் சரியானதாக இல்லை. இப் பள்ளிக் கட்டிடங்களை விஸ்தரிப்புடன் சுகாதாரமான இடத்தில் அக் கட்டிடங்கள் அமைந்திடவும் ஆவன செய்ய அரசைக் கேட்டுக் கொள்கிறேன்.

## காதி (கதர்):

"கதர் மானியம் பற்றி காயிதே மில்லத் அவர்கள் பேசிக் கொண்டிருந்த பொழுது திரு. ராடப்பா குறுக்கிட்டு, மதிப்பிற்குரிய எதிர்க்கட்

சித் தலைவர் நீண்ட காலமாக காதி ஆடையைத் தான் அணிந்திருந்தார். கதரை அவர் அணிந் திருந்த காலத்திலெல்லாம் இப்பொழுது அவர் கூறிய விஷயத்தைப் பற்றி சிந்திக்கவில்லையா என்று கேட்டார்!

காயிதே மில்லத்: அந்த காலத்தில் நான் கதராடை மட்டும் அணிந்திருக்கவில்லை. ஒத்து ழையாமை இயக்கத்தில் சேர்ந்திருந்தேன் (சிரிப்பு) ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டு படிப்பை யும் விட்டவன் நான். என்னுடைய நண்பர் அப்துல் மஜீத் இது பற்றி இங்கே முன்பு குறிப்பிட்டுள் ளார். கதர் ஆடை, ஓர் அடையாளச் சின்னம் என்று அவர் கூறினர். கொஞ்ச காலத்திற்கு அந்த அடையாள சின்னத்தை நாங்களும் ஏற்றி ருந்தோம்.

## ஜமீன்தாரி ஒழிப்பு:

ஜமீன்தாரி முறையை ஒழிக்கப் போவதாக அமைச்சர் கூறியுள்ளார். ஆளுங்கட்சியினர் விரும்பினுல் அதை செய்யலாம். ஜமீன்தாரி முறையில் பல துஷ்பிரயோகங்களும், பல இடைஞ்சல்களும் உள்ளன. ஜமீன்தாரி முறை யை ஒழித்த பிறகு அதற்குரிய நஷ்டஈடு கொடுக் கப் போவதில்லை என்று கூறியிருக்கிறீர்கள். இந்த சிந்தனை சரியானது தானு? என்பது எனக்குப் புலப்படவில்லை. ஜமீன்தார்களை வெளியேற்றுவ தில் அரசுக்கு பல சிக்கல்கள் இருக்கின்றன. ஜமீன்தார்களிடமிருந்து பல நபர்கள் அன்றைய நிலவர விலையில் நிலங்களை கிரையம் பெற்றிருக் கிருர்கள், பலர் ஒத்திக்கு நிலம் பெற்றிருக்கிருர் கள். இவர்கள் அனைவரும் தங்களது நலன்களை அரசாங்கம் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையில் தான் இருக்கிருர்கள். ஜமீன்தார்களுக்காக நான் பரிந்து பேசுகிறேன் என்று யாரும் நினைத்துவிட வேண்டாம். ஜமீன்தாரி முறை ஒழிப்பால் ஒரு பெரும் குழப்பமே ஏற்பட உள்ளது என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

## மது விலக்கு:

அமெரிக்காவிலும், ஐரோப்பிய நாடுகளிலும் மக்கள் அதிகமாக மது அருந்துகிருர்கள் என்றும், ஆனுல் அவர்களுக்கு எத்தகைய தீங்கும் ஏற்பட வில்லை என்றும் கூறப்பட்டது. அங்கெல்லாம் மது விலக்குக் கொள்கை தோற்று விட்டது என்றும் சொன்னுர்கள்.

அமெரிக்காவில் மது விலக்குக் கொள்கையை அரை மனதோடு கொண்டு வந்தார்கள். மது விலக்குக் கொள்கையை அமல்படுத்த அவர்கள் சீரிய முறையில் பாடுபடவில்லை. மது விலக்கு வெற்றி பெறுவதை அவர்கள் உள்ளூர விரும்ப வில்லை. மதுவிலக்குக் கொள்கை தோற்றதற்கு அதுதான் காரணமாகும்.

மற்ருெரு உண்மையை நாம் மனதில் பதிய வைக்க வேண்டும். மது அருந்துவதை மேலை நாடுகளில் ஒரு சமூகக் கேடு என்று யாரும் நினைப் பதில்லை, ஜீவாதார உரிமையாகவும், அடிப்படை வாழ்க்கை தேவையாகவும் மதுவை அவர்கள் கருதுகிருர்கள். மதுவிலக்கு என்பதை, தமது உரிமையைப் பறிப்பதாகவும், வாழ்க்கை வசதியை குறைப்பதாகவும் அவர்கள் நினைக் கிருர்கள். ஆகவேதான் மதுவிலக்கை அங்குள் ளோர் எதிர்க்கிருர்கள். ஆனுல், நமது நாட்டில் நிலை முற்றிலும் வேறுபட்டதாகும். இங்கு மது அருந்துபவர்கள் கூட தாங்கள் குடிப்பதை பெருமையாகக் கருதவில்லை. உடல்நலனுக்காக குடிப்பதாக நம்நாட்டு மக்கள் சொல்லிக் கொள் கிருர்கள், இதுதான் மிகவும் கவனிக்கப்பட வேண்டிய உண்மையாகும், ஆகவேதான், நமது நாட்டில் மதுவிலக்கு வெற்றி பெற வேண்டும், வெற்றி பெறுவதற்குரிய காரியங்களை செய்தாக வேண்டும் என்று வலியுறுத்துகிறேன்.

மதுவிலக்கால் அரசுக்கு பெரும் வருமான இழப்பு ஏற்படும் என்பது ஒரு சிலரின் வாதமா கும். வருமான இழப்பு ஏற்படும் என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன்; ஆனுல் எந்த ஒரு அரசராங்கமும் மக்களின் தீயபழக்கங்களையும், சமுதாயக் கேடுகளையும் தனது வருமானத்தைப் பெருக்குவதற்குப் பயன்படுத்தக்கூடாது என் பதை நினைவுபடுத்துகிறேன். எவ்வளவு வருமா னம்வந்தாலும் அல்லது எவ்வளவு வருமானத்தை இழந்தாலும் மக்களின் நல்வாழ்வுக்கு குறுக்கே நிற்கின்ற தீயபழக்கத்தை ஒழித்துக் கட்டுவ தற்கு, எந்த அரசாங்கமும் தயங்கக் கூடாது என் பதே எனது வாதமாகும்.

# 2

*[ஆலயப் பிரவேசம் குறித்து மதராஸ் சட்டசபையில் 1—4—1947 அன்று விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது:]*

ஆலயங்களின் உள்ளே செல்வதாலும், அங்கே பிரார்த்தனை புரிவதாலும் மனித ஆன்மா புனிதமடைகிறது என்று நான் நம்புகிறேன் என்றோ, அல்லது நம்ப வேண்டும் என்று கருதியோ இந்த மசோதாவை ஆதரிக்கவில்லை. இது விஷயத்தை எல்லாம் மக்கள் தீர்ப்புக்கு விட்டுவிட வேண்டும் என்ற அடிப்படையில் நான் ஆதரிக்கிறேன். ஆலயங்களுக்குள் நுழைந்து பிரார்த்தனை புரிவதால் தங்கள் ஆன்மா புனிதமடைகிறது என்று கருதுகிறார்கள் என்றால் அதற்கு தடை ஏன் இருக்க வேண்டும்?

இம் மாகாண மக்களில் ஒரு சாரார் யாதொரு தடையுமின்றி அவர்களது விருப்பப்படி ஆலயங்களுக்குள் அனுமதிக்கப்படும் போது, இந்த நாட்டில் உள்ள மற்ற இந்துக்களைப் போல் தாழ்த்தப்பட்டவர்களும் (ஜெர்மன் தேசத்து ஜனத்தொகை அளவுள்ள அவர்களும்) சம அந்தஸ்து பெறுவதற்கு இம் மசோதா வாய்ப்பு ஏற்படுத்துகின்றது. இந்த சுதந்திரம் அந்தத் தரப்பு மக்களுக்கும் கிடைக்கின்ற காரணத்தினால் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன்.

## உறுப்பினரின் அறியாமை

இந்த மசோதாவை முன்மொழிந்த கனம் உறுப்பினர் தனது பேச்சு வாக்கில், இஸ்லாமிய மார்க்கத்திலும் உருவ அடையாளங்கள் உண்டு என்று குறிப்பிட்டார். உண்மைக்குப் புறம்பான சில செய்திகளை அவர் இங்கே தெரிவித்தார்.

முஸ்லிம்கள் திருக்குர்ஆனை வணங்குகிறார்கள் என்றார். சில இடங்களில் முஸ்லிம்கள் பிரார்த்தனை செய்வதற்குக் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள் என்றார். இக் கூற்றுக்கள் உண்மை அல்ல.

ஒரு முஸ்லிம், தான் விரும்புகின்ற எந்த இடத்திலும் தொழுகை நடத்தலாம். முஸ்லிம்கள் திருக்குர்ஆனை வணங்குவதில்லை. திருக்குர்ஆன் வேத நூலாகும். இஸ்லாமிய மார்க்கத்தின் சட்ட நூலாகும். சீக்கியர்கள் அவர்களின் வேதநூலை, கிரந்தசாகிபை வணங்குவதைப் போல், முஸ்லிம்கள் திருக்குர்ஆனுக்கு வணக்கம் செலுத்துவதில்லை.

சீக்கியர்களின் பழக்க வழக்கத்தைப் போல் தான் முஸ்லிம்களின் பழக்க வழக்கமும் இருக்குமென்று கருதிக் கொண்டே கனம் உறுப்பினர் அவ்வாறு கூறியிருக்கிறார் என்று நினைக்கிறேன். முஸ்லிம்கள் மேற்கு நோக்கித் தொழுவதைத் தான் உருவ அடையாளம் என்று கனம் உறுப்பினர் கருதிக் கொண்டுள்ளார் என்று எண்ணுகிறேன்.

எதுவானாலும், இறைவனை வணங்க விரும்புவோர் மத்தியில் ஒற்றுமை ஓங்க வேண்டும்; ஒழுக்கம் தழைக்க வேண்டும்; உலகளாவிய மனப்பாங்கு வளர வேண்டும் என்பதே முக்கியமானதாகும்.

வைணவர்களில் சில பகுதியினரிடத்தில் சில பழக்கங்கள் உண்டு—எல்லா வைணவர்களும் அப்படிப்பட்டவர்கள் என்று நான் கூறவில்லை. பொதுவிருந்து நடக்கும் போது அவர்கள் அமர்கின்றமுறை விசித்திரமானது. ஒருவர்முகத்தை ஒருவர் பார்க்காத வகையில் பொது விருந்தில் அமர்கின்றனர். இத்தகைய முறையில் முஸ்லிம்களாகிய நாங்கள் தொழுகை நடத்துவதில்லை. ஒரே விதமாக - கூட்டாக - ஐக்கிய உணர்வோடு தொழுவதற்குத்தான் நாங்கள் எல்லோரும் மேற்கு நோக்குகிறோம். அப்படிச் செய்ய எங்கள் மார்க்கம் எங்களுக்குக் கட்டளை இட்டிருக்கிறது. இத்தகைய ஒருமைப் பாட்டிற்காக மேற்கு நோக்குவது உருவ அடையாளமாகாது.

இதுவே உருவ அடையாளம் என்றால் இந்த நாட்டில் உள்ள மக்களை ஆயிரக் கணக்கில் பிரித்து வைத்து, ஒருவருக்கொருவர் மோத விட்டுக் கொள்ளும் வகையில் ஆயிரக் கணக்கான உருவ அடையாளங்களை ஏற்படுத்துவதில் பொருள் ஏதுமிருக்கிறதா?

## சாதிக் கொடுமை

நண்பர்கள் கூறினார்கள். இந்து மதத்தில் சாதீய முறை இருக்கிறது; ஆனால் இந்துக்களிடம் உள்ள நடைமுறைகள் வேதிய முறையால் ஏற்பட்டவை அல்ல என்று சொன்னார்கள்.

சாதீயமுறை இருக்கிறதோ இல்லையோ சாதீய முறை என்பதே மனித சுபாவத்திற்கு முற்றிலும் எதிரானது. மனித சமுதாயத்திற்கு ஏற்பட்டுள்ள ஒரு களங்கம் என்று கூற விரும்புகிறேன். ஆகவே சாதீய முறையை எதிர்த்துப் போராடுகிறோம். இந்த மசோதாவில் அதற்குரிய சரத்துக்கள் இருக்கின்ற காரணத்தால், நான் ஆதரிக்கிறேன்.

சுவாமி சஹாஜானந்தா இந்த மசோதாவை ஆதரித்துப் பேசினார். அவர் பேசும் போது, இந்த நாட்டின் உண்மையான உரிமையாளர்கள் தாங்கள் தாம் என்றும் கூறினார்.

அவரது கூற்றுப்படி அவர்கள் தாம் இந்த தேசத்தின் மூல சொந்தக்காரர்கள் என்றால் சாதீய முறையைக் கொண்டு வந்தவர்கள் இடையில் வந்தவர்கள்தானே? 3500 அல்லது 4000 ஆண்டுகளுக்கு முன்னே இந்த நாட்டில் இடையில் நுழைந்தவர்கள் இந்த தேசத்தில் பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடுவதைப் பார்த்தார்கள். ஆகவே இப் பூமியில் தங்கி விட்டார்கள். இந்த நாட்டின் பூர்வீக மக்களின் உரிமைகளைப் பறித்தார்கள். இதுதான் வரலாற்று உண்மை.

சுவாமிஜி இத்தோடு நிறுத்தியிருந்தால் பரவாயில்லை. சாதிகள் என்றால் என்ன? தீண்டாமை என்பது யாது? பரிதாபத்திற்குரிய தீண்டத் தகாதவர்கள் என்போர் எவர்? என்றெல்லாம் வினா எழுப்பி, பல செய்திகளையும் சொல்லி இருக்கிறார்.

நான் ஒருகருத்தைக் கூறவிரும்புகிறேன், அது என் கருத்துதான். இந்து நண்பர்கள் அதை ஏற்க வேண்டுமென்று நான் வலியுறுத்தப் போவதில்லை. என் கருத்தை யார் மீதும் கட்டாயமாகத் திணிப்பதற்கு நான் முயலுவதில்லை தீண்டாமை என்பது ஒரு பெருங் கூட்டத்தினரை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. சாதீய முறையால் தான் இந்தக் கொடுமை வந்துள்ளது என்றால், சாதீய முறையையே களைந்துவிடுவது தானே நல்லது.

## பகவத்கீதை என்ன சொல்கிறது?

வேறு சில நண்பர்கள் பேசும் போது இந்து மதத்தில் சாதீய முறை கிடையாது என்று வாதம் புரிந்தார்கள். இந்து சாஸ்திரங்களில் சாதிகள் இல்லை என்றார்கள். சாஸ்திரங்களில் இல்லாத ஒன்று புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ளது; ஆகவே, கூடுமான வரையில் அது களையப்பட வேண்டும் என்றும் கூறினார்கள்.

இந்த நண்பர்களின் வாதங்கள் சரியானவை என்று ஏற்றுக் கொள்ள முடியாது. பகவத் கீதையிலிருந்து மேற்கோள்கள் காட்டுவதற்கு இந்தத் தருணம் சரியானதல்ல என்று நினைக்கிறேன். மற்றொரு சந்தர்ப்பத்தில் தெரிவிக்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி. சுப்பராயன்: "இப்பொழுதே கூறவேண்டும்"

காயிதேமில்லத் : சபாநாயகர் அவர்களே! பல சந்தர்ப்பங்களில் நான் எடுத்துக் கூறியிருக்கிறேன். சாதீய முறையை கீதை ஒப்புக் கொள்கிறது என்று உதாரணமாக சுலோகம் 41 கூறுகிறது : "ஏ கிருஷ்ணா! அநியாயம் மிகைத்து விட்டது, குடும்பப் பெண்கள் கெட்டுவிட்டார்கள். ஓ வர்ஷாநேய! பெண்கள் கெட்டதால் சாதிக் குழப்பம் தோன்றிவிட்டது" இவ்வாறு அர்ஜுனன் கூறுகிறான்.

அடுத்து 43-வது சுலோகம் கூறுகின்றது ;- "குடும்பங்களை அழிக்கக்கூடிய சாதியக் குழப்ப மூட்டும் தீமைகளினால் நிரந்தரமான சாதீய வழக்கங்களும், குடும்பப் பழக்கங்களும் அழிக்கப் பட்டுவிட்டன."

இதுவும் அர்ஜுனனின் வார்த்தைகள் தாம். கிருஷ்ண பரமாத்மா இந்த வார்த்தைக்கு உடன் பட்டாரா என்று நீங்கள் கேட்கலாம். ஆகவே கிருஷ்ணனுடைய வார்த்தைகளையும் எடுத்துக் கூற விரும்புகிறேன். பின்பு நீங்கள் முடிவு செய்து கொள்ளுங்கள்.

சபாநாயகர் : எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் தொடர்ந்து பேச வேண்டும் என கேட்டுக் கொள்கிறேன்.

காயிதேமில்லத்: 3வது பிரிவிலுள்ள 24வது சுலோகத்தில் கிருஷ்ண பரமாத்மா கூறுகிறார்.

''நான் செய்ல்படவில்லையானால் இந்த உலகங்கள் அழிந்துவிடும். சாதியக் குழப்பங்களுக்கு நானே காரணமாகிவிடுவேன். இந்தப் படைப்புகளை நான் அழிக்கவேண்டும்.''

4வது பிரிவில் 13வது சுலோகத்தில் கிருஷ்ணன் மேலும் கூறுகிறார்.

''நான்கு சாதிகளையும் நானே உருவாக்கினேன். வேறுபட்ட குணங்களையும் வேறுபட்ட தொழில்களையும் அவர்களுக்குப் பகிர்ந்தளித்தேன். இவையனைத்தையும் ஆக்கியோன் நானே என்பதை உணர்வீராக'',

சபாநாயகர் : யாரும் குறுக்கிடாதீர்கள், அதிக நேரமாகிவிடும்.

காயிதே மில்லத் ; நான் 5வது பிரிவுக்கு வருகிறேன்.

சபாநாயகர் ; கனம் எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் கீதையின் மற்ற சுலோகங்களை இன்னொரு சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூறலாம்.

காயிதே மில்லத் : தாங்கள் கூற விரும்பினாலும் நான் அதிகமாகக் கூறப்போவதில்லை, ஆனால் 5வது பிரிவிலுள்ள 18வது சுலோகத்தை மட்டும் கூறிவிடுகிறேன்.

''வேதாந்திகள் கல்வியறிவும் பணிவுடைமையும் உடைய பிராமணனையும் பசுவையும் யானையையும் ஒரு நாயையும், ஒரு தீண்டத்தகாதவனையும் சமமாகவே பார்க்கிறார்கள்''

## சாஸ்திரங்களின் சம்மதம்

இங்கே தீண்டாமையைப் பற்றி கூறப்படுவதைப் பார்க்கிறீர்கள். சாதிகளும் மற்ற செய்திகளும் 'தர்மம்' என்ற சொல்லுக்குத் தவறான அர்த்தம் கற்பித்ததால் வந்தவை என்று நண்பர்கள் கூறி எல்லாவற்றையும் குழப்புவதற்கு முயல்வார்கள்.

அவர்களின் கூற்றுப்படியே, மனிதர்களுக்கிடையில் உள்ள உறவு முறைகளுக்குரிய தர்மம் சாதிகளின் அடிப்படையில்தான் அமைக்கப்பட்டுள்ளது என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

நான் மேற்கோள் காட்டியது சமஸ்கிருதமும் இந்து சாஸ்திர ஞானமும் பெற்றுள்ளவர்கள் எழுதியுள்ள மொழிபெயர்ப்பிலிருந்துதான். ஆகவே இந்து சாஸ்திரத்தில் சாதீய முறை இருக்கிறது என்பது தெளிவாகிறது.

சாதீய முறை நிலை பெற்றிருக்குமானால் தீண்டாமையும் நிலைபெற்றே இருக்கும். வேறுபட்ட மக்கள் பிரிவுகளில் ஏதோ ஒரு ரூபத்தில் இந்தத் தீண்டாமை நுழைந்து விடுகின்றது. சாஸ்திரங்களில் சாதீய முறை இருக்கிறதா? இல்லையா? என்பதைப் பற்றி சர்ச்சை தேவையில்லை. சாதிகளை இல்லாமலாக்கவே முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

உறுப்பினர் ஒருவர் குறிப்பிட்டுள்ளது போல் சாதிகளை ஒழிப்பதற்குரிய ஒரேவழி மனமாற்றந்தான். அது கூட ஆரம்பகாரியமேயன்றி, முடிவான காரியம் அல்ல. மக்கள் மத்தியில் சமத்துவமும் சகோதரத்துவமும் போற்றி வளர்ப்பதற்கு இதய சுத்தியோடு முயற்சி செய்தால், நிச்சயமாக இக்கொடுமையை நீக்கிவிட முடியும்.

மேற்கோள் காட்டவேண்டாம் என்று கூறிவிட்டீர்கள். இந்த மசோதாவில் உள்ள சில பகுதிகளைப் பற்றிய கருத்துக்களைத் தெரிவித்துவிட்டு நான் முடித்துக் கொள்கிறேன்.

ஆலயம் என்பதற்கு மசோதாவில் விளக்கம் கூறப்பட்டுள்ளது. இந்துக்களின் நலத்திற்காக அவர்களின் உபயோகத்திற்காக சமர்ப்பணம் செய்யப்பட்ட எந்த ஒரு இடமும் ''ஆலயம்'' என்றுகருதப்படும் என்று விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது.

எனக்குள்ள அச்சமெல்லாம் இதுதான். ஆலயத்திற்கு இந்த விளக்கம் கூறி அதனால் பல வழக்குகளுக்கு வழியேற்பட்டு விடக் கூடாது என்பது தான். எனது அச்சவுணர்வை ஊர்ஜிதப்படுத்தும் வகையில் மசோதாவின் 6வது பிரிவு அமைந்துள்ளது, ஆலயம் சம்பந்தமாக ஏற்படும் எந்த இடைஞ்சலையும் அகற்றுவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரமும் உண்டு என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் அரசால் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்த இயலும் என்று நான் கருதவில்லை. உதாரணமாக இந்து ஆலயம் என்றால், வைணவ ஆலயம், சைவ ஆலயம் என்று தான் பொருளாகும். சைவ ஆலயத்தில் வைணவர்களுக்கோ வைணவர் ஆலயத்தில் சைவர்களுக்கோ இடமில்லை. இந்த நிலையில்

இந்துக்களுக்கு பொது ஆலயமாக இது இல்லை என்றும் யாரும் கூறிவிடமுடியும்.

ஆகவே, இந்துக்களில் ஒரு சாராருக்குரிய இடமாக இருந்தாலும், அதுவும் ஆலயமாகவே கருதப்படும் என்று சட்டத்தில் இருக்குமானால் அது வரவேற்கக் கூடியதாகும் என்று கூறி இந்த மசோதாவுக்கு எனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர் T. S. S. ராஜன்; ஒரு துரதிருஷ்டமான நிலை என்னவென்றால், இந்த மசோதாவின் உண்மை நிலையைப் புரிந்து, நல்ல விமர்சனங்களைத் தரக்கூடிய எதிர்கட்சி இல்லை என்பதுதான் சரியான விளக்கங்கள் தருவதற்குரிய விவாதங்கள் நடைபெறவில்லை. மசோதாவின் கொள்கையை அனைவரும் வரவேற்றுள்ளார்கள். மசோதாவின் பல்வேறு பிரிவுகளைப் பற்றிய விமர்சனங்கள் இல்லாமலாகி விட்டது. எதிர்க்கட்சி தலைவர் ஒன்றை மட்டும்-அதுவும் அவ்வளவு விளக்கம் இல்லாமல் குறிப்பிட்டார்.

காயிதேமில்லத் : ஒரு விளக்கம் தெரிய விரும்புகிறேன். நல்ல விமர்சனம் என்பதற்கு அமைச்சர் என்ன பொருள் கூறுகிறார்? இந்த அவையிலுள்ள இந்து உறுப்பினர்களின் கருத்துக்களை மட்டுமே விரும்புவதாக அமைச்சர் கூறுவது சரியானதா ?

இந்த அவையிலுள்ள இந்து உறுப்பினர்களின் ஆதரவை மட்டும் விரும்புவதாக அவர் கூறுகிறார். இப்படிக் கூறுவது சபையின் ஒழுங்குக்கு உட்பட்டதா?

டாக்டர் T.S.S. ராஜன்; இந்து ஆலயங்களில் இந்துக்களில் சில பிரிவினர் நுழைவதற்குத் தடை இருக்கிறது. இந்தத் தடையை நீக்குவதற்கு இந்தச் சட்டம் வழி செய்கிறது. இது தெளிவான விஷயம். கடவுள்கள், மதங்கள், மற்றதுகள் பற்றியெல்லாம் பேச வேண்டிய அவசியம் என்ன ? ராமன், கிருஷ்ணன் மற்றும் பல கடவுள்கள் பற்றியும், பிராமணன், பிராமணன் அல்லாதவன் பற்றியு யெல்லாம் பேச வேண்டிய அவசியம் என்ன ? முஸ்லிம் தெய்வங்கள் மற்றுமுள்ள விஷயங்களுக்குத் தேவை என்ன ? எங்களைக் கேவலப் படுத்துவதற்காகப் பேசுவதா ? இது எப்படி உண்மையான விமர்சனம் ஆகும் ? இந்த மாதிரியான விவாதங்களைத் தவிர்க்கவே விரும்பினேன். இத்தகைய விவாதங்கள் இந்த அவையின் சுமுகமான வேலைக்கு உதவப் போதில்லை.

## வேகம் வேண்டாம் ! விவேகம் இருக்கட்டும்.

1957 ஆம் ஆண்டில்தான் நான் முதன் முதலாக காயிதெமில்லத்தை சந்தித்தேன். பார்த்தவுடனேயே இவர்கள் ''தக்வா'' உடைய தலைவர் என்பதை என் உள்ளுணர்வு உணர்த்தியது. 1958-ம் ஆண்டு திருச்சியில் நடைபெற்ற ஊழியர் மாநாட்டில் என்னால் இயன்ற அளவு உழைத்தேன். அப்பொழுது நான் பி. யூ. சி. படித்துக் கொண்டிருக்கும் மாணவன்.

நான் அரசியலில் தீவிர ஈடுபாடு கொண்டிருப்பது குறித்து சி. ஐ. டி, போலீசார் ஜமால் முஹம்மது கல்லூரி பிரின்சிபாலிடம் சொல்லி இருக்கிறார்கள் போலும். ஒருநாள் பிரின்சிபால் என்னை அழைத்து ''நமது கல்லூரிக்கு கெட்ட பெயரை எற்படுத்திக் கொடுத்து விடாதே'' என்று எச்சரித்தார். 1961 முதல் 65 வரை சென்னையில் தங்கிப் படித்தேன். முஸ்லிம் லீக் கூட்டங்களில் அப்போதே பேசுவதுண்டு.

சென்னை புதுப்பேட்டையில் 1965-ம் ஆண்டு ஒரு பொதுக்கூட்டத்தில் நான் பேசிக் கொண்டிருந்த சமயம், காயிதேமில்லத் அவர்கள் மேடைக்கு வந்து விட்டார்கள். எனது வயதிற்கு ஒப்ப நான் சற்று காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தேன். அரசை மிகவும் கடுமையாகச் சாடிப் பேசினேன். பின்னர் பேசிய காயிதேமில்லத் அவர்கள் எனது உரையை சுட்டிக்காட்டி இவ்வளவு வேகமாக நமது மேடைகளில் பேச வேண்டியதில்லை என்பதை நளினமாகப் பேசினார்கள். பேச்சில் கருத்து இருக்க வேண்டும். கடுமை இருக்க வேண்டியதில்லை என்றார்கள். அன்றிலிருந்து எனது பேச்சின் பாணியையே மாற்றிக் கொண்டேன்.

**பேராசிரியர் K. M. காதர் முஹைதீன் M. A.**
ஆசிரியர் ''தாருல் குர்ஆன்''

# 3

## காந்திஜிக்குப் பாராட்டு

[1947-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15 தேதியன்று இந்தியத் திருநாடு பூரண சுதந்திரம் பெற்ற பின்னர் அன்றைய மதறாஸ் சட்டசபை செப்டம்பர் மாதம் 15-ம் தேதி அன்று கூடி, இந் நாட்டிற்கு விடுதலை பெற்றுத் தந்ததற்காக மகாத்மா காந்திக்குப் பாராட்டுத் தெரிவித்துத் தீர்மானம் ஒன்றை ஏகமனதாக நிறைவேற்றியது.

அத்தீர்மானத்தை வழிமொழிந்து பேசும்பொழுது காயிதே மில்லத் அவர்கள் கூறியதாவது :-]

இத்தீர்மானத்தை வழிமொழிந்து பேசுவதில் நான் பெருமைப் படுகிறேன். உண்மையிலேயே காந்திஜி ஒரு வரலாற்று நாயகர்தான். அவருடைய செயல்களும், சாதனைகளும் சரித்திரமாய் ஆகிவிட்டன.

இந்த நவநாகரீக கால அரசியல் களத்தில், அஹிம்சையையும், சத்தியாக்கிரகப் போராட்டத்தையும் மிகப் பெரிய அளவில், அவர் அறிமுகப் படுத்தினர். அவர் அறிமுகப்படுத்திய கொள்கை, நிராயுதபாணியான மக்களிடத்தில் தைரியத்தைப் புகுத்தியது. சரியான கால கட்டத்தில் சுய உணர்வையும் அவர்களிடம் ஏற்படுத்தியது.

சுதந்திரப் போராட்டத்தில் முஸ்லிம்கள் பெரும் பங்கு வகித்தார்கள். பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காத்திடவும், தேசிய அளவிலும், மாநில அளவிலும் தியாகங்கள் பல புரிந்து இந் நாட்டைப் பாதுகாப்பதிலும் அவர்கள் முன்னணியில் நிற்பார்கள் என்பது தெளிவு.

### கத்தியின்றி, ரத்தமின்றி

இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு மிகவும் பாடு பட்டவர் காந்திஜி. சமீபத்தில் கூட, கல்கத்தாவில் அப்படிப்பட்டதொரு ஐக்கியத்தை அவர் சாதித்துக் காட்டி இருக்கிறார். இப்பொழுதுங் கூட, எங்கெல்லாம் அவருடைய முயற்சியும், உழைப்பும் தேவைப்படுகிறதோ, அங்கெல்லாம் சென்று இந்து—முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடு பட்டு இருக்கின்றார். அவருடைய முயற்சிகள் வெற்றி பெற நமது வாழ்த்துக்கள். ஒற்றுமையைக் குலைக்கும் சக்திகளை நாம் வன்மையாகக் கண்டிப்பதுடனல்லாமல், அப்படிப்பட்ட செய்கைகளுக்கு விரைவில் முற்றுப் புள்ளி வைக்கவேண்டும் என்பதிலும் நாங்கள் நம்பிக்கையுடையவர்களாக இருக்கிறோம்.

சுதந்திரம் பெற்ற பின்பு, முதன் முதலாக இந்த அவை கூடியிருக்கிறது. இந்த நல்ல வேளையில், மனித இனத்தின் வரலாற்றில், கத்தியின்றி ரத்தமின்றி, போராடி இம்மாபெரும் சாதனையை செய்து காட்டியிருக்கும், மகாத்மா காந்திஜியையும், அவரோடு தோள் நின்று இச்சாதனையை நிகழ்த்தி காட்டியிருக்கும் அனைவரையும் பாராட்டுவது மிக்க பொருத்தமானதாகும்.

# 4

## எதிர்க்கட்சி தலைவராக இருக்கலாமா?

[23-9-47 அன்று மதறாஸ் சட்டசபையில் ஆளுங்கட்சியை சார்ந்த திரு N. S. வரதாச்சாரி என்பவர் ஒரு ஒழுங்கு பிரச்சனையை கிளப்பினர். தனித் தொகுதியில் நின்று தேர்தலில் வெற்றி பெற்ற ஒருவர், மொத்த எதிர்க் கட்சியின் தலைவராக இருக்க முடியுமா? என்ற பிரச்சனையை கிளப்பினர். அதாவது எதிர்க் கட்சியில் இருக்கும் உறுப்பினர்கள் எல்லாருமே தனித் தொகுதி மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அல்ல என்றும், பொதுத் தொகுதியில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் எதிர்க் கட்சி அளவில் இருக்கிறார்கள் என்றும், எனவே அவர்கள் எல்லோருக்குமாக சேர்ந்து தனித் தொகுதியில் நின்று வெற்றி பெற்ற ஒருவர் எதிர்க்கட்சி தலைவராக இருக்கலாமா? என்பதுதான் அந்த உறுப்பினரின் கேள்வி ஆகும்.

அப்போது காயிதே மில்லத் அவையில் கூறியதாவது :-

''எனக்கு முன்பு பேசியவர்கள், ஆளுங் கட்சிக்கு அடுத்த படியாக அதிகமான உறுப்பினர்களைக் கொண்ட கட்சியின் தலைவர்தான் எதிர்க் கட்சித் தலைவராக முடியும் என்பதை சந்தேகத்திற்கு இடமில்லாதவாறு விளக்கி விட்டனர்.

ஆனால் இப்பொழுது கேள்வி என்னவென்றால், தனித்தொகுதியில் நின்று வெற்றி பெற்றவர் அமைச்சர் பதவியில் அமர முடியுமா என்பதாகும். தற்போது நாட்டிலுள்ள சட்டத்தின் பிரகாரம் அவர் அமைச்சராகவும் ஆக முடியும், பேரவை உறுப்பினராகவும் ஆக முடியும். தற்போது நாட்டில் அமலில் இருக்கும் சட்டமே தனித் தொகுதி முறையை அங்கீகரித்துள்ளது. எதிர் காலத்தில் இது மாற்றப்பட்டால், அது வேறு விஷயம். இன்று வரை அது மாற்றப்படவில்லை.

## அமைச்சர்களாக இருக்கிறார்களே !

தனித் தொகுதி மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள் முந்திய அமைச்சரவைகளிலும் அங்கம் வகித்தனர். இன்றைய அமைச்சரவையிலும் அப்படிப்பட்டவர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள். தனித் தொகுதி மூலம் தேர்ந்து எடுக்கப்படும் ஒருவர் பிரதமராகவோ அல்லது மற்ற எதுவாகவோ இருக்க இன்றையச் சட்டங்கள் இடமளிக் கின்றன. அவ்வாறு பதவிகள் வகிக்கக் கூடாது என சட்டத்தில் எதுவும் கூறப்படவில்லை என்பது எனது கருத்தாகும்.

T. விஸ்வநாதன் :- தனித் தொகுதி மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் ஆளுங் கட்சியிலும் இருக்கிறார்கள் என எதிர்க்கட்சி தலைவர் கூறினார். அப்படி யார் இருக்கிறார் என்பதை அவரால் கூற முடியுமா?

காயிதே மில்லத் :- கனம் உறுப்பினர் மறந்து பேசுகிறார். ஆளுங்கட்சி வரிசையிலுள்ள திரு. டேனியல் தாமஸ், தனி தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர். முன்னாள் உறுப்பினரும் மர்ஹூமாகி விட்டவருமான மாண்புமிகு யாகூப் ஹசன் சாகிபும் தனித் தொகுதி மூலம் தேர்ந் தெடுக்கப்பட்டவரே. அவரும் ஆளுங்கட்சியைச் சேர்ந்தவர்தான். மேற்கூறிய இருவர்களும் அமைச்சர்களாக இருந்தவர்களும்கூட.

# 5

# வனத்துறை மானியம்

*[23–9–47 அன்று மதரூஸ் சட்டசபையில் வன இலாக்கா குறித்து காயிதே மில்லத் கூறியதாவது :-]*

வன இலாக்கா அபிவிருத்தி திட்டங்கள் குறித்து இங்கு பேசப்பட்டது. அடுத்த பத்து ஆண்டுகளுக்குள்ளாக ஒன்றரை லட்சம் ஏக்கரில் சவுக்கு மரங்களை நட்டு வளர்ப்பதும் அத்திட்டங் களில் ஒன்றாகும். இதற்காக இந்த ஆண்டு சுமார் 7 ஆயிரம் ஏக்கர் தான் பண்படுத்தப்பட்டுள்ளது. இந்த வேகத்தில் அபிவிருத்தி திட்டங்கள் செயல் படுத்தப்படுமானால், சவுக்கு மரங்களை நட்டு முடிப்பதற்கே இருபது ஆண்டுகளுக்கு மேலாகி விடும் போலிருக்கிறது!

இது சம்பந்தமாக நான் ஒன்றை கூற விரும்பு கிறேன். வாட்டில் (Wattle) மரம் உபயோகமான ஒன்று. காடுகளில் இதை வளர்க்கலாம். ஏற்கனவே வன இலாக்கா வாட்டில் மரவளர்ப் புக்கென பல இடங்களை ஒதுக்கியுள்ளது. தோல் பதனிடும் தொழிலுக்கு இம்மரத்தின் பட்டைகள் உபயோகப்படுத்தப்படுகிறது. நமது தேவைக் கேற்ப இப்பட்டை கிடைக்காததினால் தென் ஆப்பிரிக்காவில் இருந்து இந்த கச்சாப் பொருள் தருவிக்கப்படுகிறது. வாட்டில் மரவளர்ப்பு திட்டத்தை வன இலாக்கா ஊக்குவித்து அதிக மான நிலப்பரப்பில் அதை பயிரிட முற்பட்டால் மிகவும் லாபகரமானதாக இருக்கும். உள்நாட்டுத் தேவையை பூர்த்தி செய்த வகையிலும் அமையும்.

தோல் தொழிலுக்கு அம்மரத்தின் பட்டை பயன்படுத்தப்பட்டாலும் நன்கு வளர்ந்த மரங் களை விறகுக்காகவும் உபயோகப்படுத்திக் கொள்ள லாம். எனவே வன இலாக்கா வாட்டில் மர வளர்ப்பு குறித்து முனைப்புடன் செயல்பட வேண்டும்.

# 6

## காயிதே மில்லத்தின் முதலாவது தமிழ் பேச்சு

*[மதருஸ் மாகாண முதலமைச்சராக O. P. இராமசாமி ரெட்டியார் சில காலம் பணியாற்றினுர். ஆங்கில மொழியை அவரால் அவ்வளவு சரளமாய் பேச இயலாததால், சட்டசபை நடவடிக்கைகளில் அவர் அதிகம் பங்கு கொள்வதில்லை. இதர அமைச்சர்களே அவரது இலாக்கா பொறுப்புகளுக்கும் பதிலளித்து வந்தனர். என்ருலும் முதலமைச்சரே பதிலளிக்க வேண்டுமென உறுப்பினர் பலரும் வலியுறுத்த ஆரம்பித்த பொழுது 25-9-47 அன்று அவையில் அவர் இவ்வாறு கூறினுர்:]*

''நான் இங்கே பேசவில்லை என்று சில நண்பர்கள் அடிக்கடி புகார் செய்து கொண்டு வந்திருக்கிருர்கள். இங்கிலீஷ் தெரியாது, தெலுங்கு தெரியாது, தமிழில்தான் பேசுவேன். நான் உங்களுக்கு தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று நினைத்துத்தான், பேசவில்லை. ''மணிக் கணக்காக வேண்டுமானுலும் பேசுவேன்'' என்று அவர் கூறினுர்.

காயிதே மில்லத் :—*[அன்றைய தினம் தமிழிலேயே கிழ்க்கண்டவாறு கூறினுர்கள்.]* கனம் முதலமைச்சர் அவர்களை சில அங்கத்தினர்கள் பேசும்படி கேட்டதைக் குறித்து பேசினுர்கள். அதில்சிறிது தப்பு அபிப்பிராயங்கள் இருக்கின்றன. அதைக் குறிப்பிடுவதற்காகவே நான் இப்பொழுது எழுந்திருக்கிறேன். அவரை அங்கத்தினர் சிலர் பேச வேண்டும் என்று கேட்டுக் கொண்டது அவருக்கு தொந்தரவு கொடுக்க வேண்டுமென்றும் அதுவும் அனுவசியமாக தொந்தரவு கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் இல்லை என்பதை நான் அவருக்கு தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் முதலமைச்சராக இருப்பதால், அவருக்கு வேலைகள் அதிகமாக உண்டு என்பதும், அவகாசம் குறைவாக இருக்குமென்பதும் எல்லோருக்கும் தெரியும். இருந்தாலும் மிகவும் முக்கியமான விஷயத்திலும், விவகாரத்திலும் அவர் கலந்து கொண்டாலும் அவர் தன்னுடைய அபிப்பிராயத்தை சொன்னுலும் பொது ஜனங்களுக்கும் கொஞ்சம் தைரியமாக இருக்கும் என்பதற்காக அங்கத்தினர்கள் அவ்விதம் வேண்டிக் கொண்டார்கள் என்பதை குறிப்பிடுகிறேன்.

இரண்டாவதாக அவர்கள் இவ்விதம் இடையிடையே இந்த மகாசபை விவகாரத்தில் கலந்து கொண்டால் வாஸ்தவத்தில் இந்த மகா சபைக்கு கௌரவமாக இருக்கும் என்பதற்காகவும், உறுப்பினர் அப்படி வேண்டிக் கொண்டார்கள். அதற்கு முதலமைச்சர் வேறு விதமான அர்த்தம் கொள்ளக் கூடாதென வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.''

# 7

## கசாய் வர்த்தகர்களின் சிரமங்கள்

*[11-10-47 அன்று விற்பனை வரி சம்பந்தமான விவாதம் மதருஸ் சட்ட சபையில் நடைபெற்ற பொழுது கசாய் வர்த்தகர்கள் பிரச்சினை குறித்து காயிதே மில்லத் கூறியதாவது]*

கசாய் வர்த்தகர்களின் பரிதாப நிலை குறித்து நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அத்தொழில் குறித்து எனக்கு நேரடியான ஈடுபாடு கிடையாது என்ருலும், அத்தொழிலில் ஈடுபட்டவர்கள் நடத்தும் யூனியனில் எனக்கு பங்கு உண்டு. விற்பனை வரி காரணமாக அவர்கள் அனுபவிக்கும் இன்னல்கள் கொஞ்ச நஞ்சம் அல்ல. வருவாய்த் துறை அமைச்சரிடம் அத்தொழிலாளர் யூனியன் தலைவர்களை ஒரு சமயம் நான் அழைத்துச் சென்றேன்.

இதில் ஈடுபட்டு இருப்பவர்களில் பெரும்பாலோர் கல்வியறிவு இல்லாதவர்கள் என்றும், ஏழைகள் என்றும் எடுத்துச் சொன்னேன். வரவு செலவு கணக்குகளை தாங்களாகவே அவர்களால் தயாரிக்க முடியாதிருப்பதையும் சுட்டிக் காட்டினேன். ஆனுல் அமைச்சரோ, இவர்களால் கணக்கெழுத முடியாவிட்டால் அதற்காக கணக்குப் பிள்ளைகளை வைத்துக் கொள்ள வேண்டியது தானே என்று சொன்னுர். இது எப்படி இருக்கிறது என்ருல் ஜெர்மன் நாட்டு ராணியிடம் ஒரு

சமயம் அவரது பிரஜைகள் சென்று தாங்கள் உண்பதற்கு ரொட்டி கிடைக்கவில்லை என்று ஆவலாதி சொன்னார்களாம். அதற்கு அந்த ராணி ரொட்டி கிடைக்கவில்லை என்றால் பரவாயில்லை, நீங்கள் கேக்குகளை சாப்பிடுங்கள் என்றுபதிலளித்தாளாம். அது மாதிரி தான் அமைச்சரின் பதிலும் இருந்தது.

இந்த வியாபாரிகளினால் சம்பளம் கொடுத்து குமாஸ்தாக்களை வைத்துக் கொள்ள இயலாது. அதற்குரிய வருமானம் கிடைக்குமானால் ஏன் இவர்கள் இப்படி இருக்கிறார்கள். பல வியாபாரிகளுக்கு எழுதவே தெரியாது. சிலருக்கு எழுத தெரிந்தாலும் இத்தொழிலில் உள்ள தன்மை காரணமாக நோட்டையும், பென்சிலையும் கையில் வைத்துக் கொண்டிருக்க முடியாது. அவர்கள் விற்பனை செய்யும் பொருள் நீர்தன்மை உடையது. அதை கையில் வைத்து புழங்கிக் கொண்டிருக்கும் போது, அவ்வப்போது எப்படி எழுதிக் கொள்ள முடியும்?

மேலும் அவர்கள் விற்பனை செய்யும் பொருட்கள் சீக்கிரமே அழிந்து விடக் கூடியவை. அழுகும் பொருள்களை 'ஒரு நாளைக்கு மேலாக பத்திரப்படுத்த முடியாது. வேகமாக விற்பனை செய்து தீர்த்தால்தான் அவர்களுக்கு 'முதலாவது' கிடைக்கும். எனவே அழுகும் பொருள்வியாபாரிகள் விஷயத்தில் விற்பனை வரி சலுகைகள் மிகவும் அத்தியாவசியமானதாகும். நேரம் செல்ல, செல்ல விலை குறைந்தாலும் பரவாயில்லை என்ற எண்ணத்துடன் பொருள்களை விற்க வேண்டிய கட்டாய நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். வருவாய் துறை அமைச்சரிடம் பல தடவைகள் இந்த வியாபாரிகளுக்காக நான் வாதாடியுள்ளேன். எல்லாவற்றையும் கவனித்து ஆவன செய்வதாக மந்திரி பதிலளித்துக் கொண்டே வருகிறார். ஆனால் அதிகாரிகளோ, தங்களது இஷ்டம்போல் இவர்களுக்கு வரிவிதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஃ

# 8

# உர்தூவை தாய் மொழியாகக் கொண்டவர்களின் பரிதாப நிலை

*உர்தூ மொழி பாட போதனை பற்றி 30-10-47 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :*

உர்தூ மொழியை தாய்மொழியாகக் கொண்ட முஸ்லிம்கள் அதிக எண்ணிக்கையில் இருக்கிறார்களா என்ற வினாவை நண்பர்கள் எழுப்பினார்கள். எல்லோரும் அறிந்த சாதாரண உண்மையாகும் இது. இந்த உண்மையைப் பற்றி கூட மாதக் கணக்கில் தர்க்கங்கள் நடைபெறுகின்றன. வடக்கு மாவட்டங்களில் பெரும்பாலான பகுதிகளிலும் [ஆந்திர பிரதேசத்தில்] உர்தூவை தாய் மொழியாகக் கொண்ட முஸ்லிம்களே வாழ்கிறார்கள். சமீபத்தில் வெளியான சென்சஸ் அறிக்கையின் படி அவர்களின் தொகை பதினைந்து இலட்சத்திற்கும் மேலாகும்.

சென்னை நகரம், திருச்சிராப்பள்ளி நகரம், மதுரை நகரம், சேலம், வடஆற்காடு போன்ற மாவட்டங்களிலும் உர்தூவை தாய் மொழியாகக் கொண்டவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்களின் எண்ணிக்கை சுமார் இருபது இலட்சமாகும்.

இருபது லட்சம் என்பது குறைந்த எண்ணிக்கையல்ல. ஐரோப்பிய நாடான அல்பேனியாவின் ஜனத் தொகைபோல இரண்டு மடங்கு ஆகும். வேறு சில நாடுகளுடன் ஒப்பிட்டால் மும் மடங்கு ஜனத் தொகை எனக் கூறலாம். என் நண்பர்களுக்கு ஒன்றை சொல்லிக் கொள்கிறேன். விசாலமான உலகத்தை உற்று பாருங்கள். குறுகிய வட்டத்திற்குள்ளேயே கண்ணோட்டம் செலுத்தி, குவலயத்தை அளக்க நினைக்காதீர்கள். கனடாவின் ஜனத் தொகை நமது மக்கள் தொகையில் முப்பதில் ஒரு பங்குதான். அங்கே இருமொழி திட்டம் அமலில் இருக்கிறது. இரண்டு மொழிகளிலும் போதனை பயிற்சி அளிக்கப்படுகிறது. சுவிட்ஸர்லாந்து நாட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் ஜனத் தொகை இந்த மாகாணத்திலுள்ள முஸ்லிம்களின் எண்ணிக்கையைவிட அதிகமில்லை. அங்கே மூன்று மொழிகளில் கல்வி போதனை நடைபெறுகிறது. அந்நாட்டில் மூன்று மொழிகளும் சமமாக பாவிக்கப்படுகின்றன. வளர்க்கப்படுகின்றன. ரஷ்யாவிலும் பல மொழிகள் இருக்கின்றன.

ஆயிரத்து ஐந்நூறு பேர் பேசக் கூடிய மொழி கூட அந்நாட்டில் இருக்கிறது. அங்கே அந்த மொழிக்கும் எழுத்து வடிவமைத்து அந்த மொழியில் கல்வி போதிக்கப்படுகிறது என்று நண்பர் ராகவைய்யா குறிப்பிட்டார். இந்நாட்டில் அப்படி நடக்குமா?

## ஒரே லிபி சாத்தியமா?

சில ஆண்டுகளுக்கு முன்பு ஹிந்தி சாகித்திய சம்மேளனம் என்ற ஒரு மாநாடு நடைபெற்றது. அதில் மகாத்மா காந்திஜியும் கலந்து கொண்டார். அப்போது அவர் ஒரு கருத்தை சொன்னார். இந் நாட்டிலுள்ள எல்லா மொழிகளையும் தேவநாகரி லிபியில் எழுத வேண்டும் என்ற யோசனையை வெளியிட்டார். அது அவரின் ஆலோசனையாக மட்டுமின்றி அவரின் தீர்க்கமான முடிவாகக் கூட இருந்தது. அம்மாநாட்டு வரவேற்புக்குழு தலைவியாக இருந்த தமிழ் நாட்டைச் சேர்ந்த அம்மையார் ஒருவர் (சர் சதாசிவ அய்யரின் மனைவி லேடி சதாசிவ அய்யர்) அதற்கு எதிர்ப்பு தெரிவித்தார். எல்லா மொழிகளையும் ஒன்று படுத்துவதற்காகவும், ஒரே விதமான எழுத்துக்களை உருவாக்குவதற்காகவும், கூட்டப்பட்ட அம்மாநாட்டில் இந்த எதிர்ப்பு ஏன் எழுந்தது. எல்லா மொழிகளையும் ஒன்று படுத்தும் கருத்தை அனைவரும் பின்பற்றினார்களா?

உர்தூவில் கல்வி கற்பிக்க கோருகிற நான் இரண்டு அல்லது மூன்று முஸ்லிம்கள் மட்டும் உள்ள இடங்களிலும் உர்தூவை போதிக்க வேண்டும் என்று கேட்க மாட்டேன். உர்தூவை தாய்மொழியாகக் கொண்ட முஸ்லிம்களுக்கு உர்தூவில் கல்வி கற்பிக்க அரசாங்கம் மறுத்துக் கொண்டே இருக்கப் போகிறதா?

சிறுபான்மையினரின் உரிமைகளைக் குறித்து அக்கறையுடன் செயல்படுவது தான் ஒற்றுமைக்கு பாடுபடுகின்ற வழிமுறையாகும்.

## T. S. அவிநாசிலிங்கம் செட்டியார் :-

உர்தூ மொழியில் தான் இஸ்லாமிய கலாச்சாரத்தை பாதுகாக்க முடியும் என்றால், உர்தூ பேசாத மற்ற முஸ்லிம்களும் இருக்கின்றார்களே, உர்தூ பேசாத முஸ்லிம்களிடம் இஸ்லாமிய கலாச்சாரம் இல்லை என்று சொல்ல முடியுமா? முஸ்லிம்களின் கலாச்சாரம் உர்தூவினால் மட்டும் பாதுகாப்பு பெறவில்லை. உர்தூவை தவிர வேறு மொழிகளை தாய் மொழியாகக் கொண்ட முஸ்லிம்களும் இஸ்லாமிய கலாச்சாரத்தை பாதுகாக்கிறார்கள். பாதுகாக்க முடியும் என்பதை நிரூபித்துக் காட்ட விரும்புகிறேன். ஆகவே உர்தூதான் முஸ்லிம் கலாச்சாரத்தை காப்பாற்றும் என்பது தவறான வாதமாகும்.

உர்தூ இந்துக்களும், முஸ்லிம்களும் பேசுகின்ற மொழி என்று சொன்னார்கள். உண்மையும் அதுதான். பண்டித நேருவின் தாய் மொழி உர்தூ என்று கூறப்பட்டது. ஆகவே உர்தூ மொழிக்கு நாம் மிகுந்த மதிப்பளிக்கிறோம். அதற்காகவே அம்மொழி மீது நாம் துவேஷம் கொள்ளாமலும் இருக்கிறோம் என்றாலும் நடைமுறை படுத்த இயலாத பல முக்கியமான காரணங்களுக்காகவே இத்தீர்மானத்தை ஏற்க முடியாமல் இருக்கிறோம்.

# 9

# குதிரை பந்தய மசோதா

*[4-11-47 அன்று மதராஸ் சட்ட சபையில் குதிரை பந்தயம் குறித்து காயிதே மில்லத் கூறியதாவது]*

குதிரை சவாரியின் போது பந்தயம் கட்டுகிற பழக்கத்தை நாங்கள் எதிர்த்து வருகிறோம். ரேஸ் கோர்ஸ் மைதானத்திற்குள் எந்தவித பந்தயத்திற்கும் இடமளிக்கக் கூடாது என்றும் நாங்கள் வலியுறுத்துகிறோம்.

பந்தயத்தின் மூலம் அரசிற்கு வருவாய் பெறுவது என்பது தீமை மட்டுமல்ல, அதர்மமான செயலுமாகும். எவ்வளவு வருமானம் வரக் கூடியதாகயிருந்தாலும், இது இந்த மாகாணத்திற்கு நன்மை தராது. தீமையையே உண்டாக்கும். நான் சுற்றி வளைத்துக் கொண்டு பேச விரும்பவில்லை. பந்தயத்தின் மூலம் வருவாயை பெருக்குவதற்கு எங்களது வன்மையான ஆட்சேபணையை தெரிவித்துக் கொள்கிறோம். விரும்பத்தகாத வழிகள் மூலம் வருகின்ற வருமானம் சிறிய தானாலும், ஒரு பாவ [illegible]யமே.

குதிரைப் போட்டிகளின் போது, பந்தயங்கள் கட்டுவதும் அதன் மூலமாக வரி வருமானம் பெறுவதிலும் தவறு ஒன்றுமில்லை என்று கூறுகிறார்கள். குதிரை போட்டிகள் நடத்துவதன் அவசியம் பற்றி பல வாதங்களை எடுத்து வைத்தனர். குதிரைப் போட்டிகள் இருப்பதால் தான் தரமான குதிரைகளை வளர்க்க முடிகிறது என்றும் சொல்கிறார்கள். இவ்வளவு காலமாக இப்போட்டிகள் நடைபெறுகின்றன. இதுவரை நல்ல ரக குதிரைகள் வளர்க்கப்பட்டுள்ளனவா என கேட்க விரும்புகிறேன். இன்றைய இயந்திர யுகத்தில் குதிரைகளின் தேவைகள் குறைந்து கொண்டு வருகிறது.

தரமான குதிரை வளர்ப்பு என்பது வெறும் வாதம்தான். குதிரை சவாரி ஊக்குவிக்கப்படவில்லை. குதிரைப் பந்தயமே இங்கு ஊக்குவிக்கப்படுகிறது.

ஒவ்வொரு நாளும் குதிரைப் பந்தயத்திற்கு செல்வோரையும், பந்தயம் முடிந்து வருவோரையும் பார்த்தாலே, சமுதாயத்திற்கு எத்தகைய தீங்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதை உணரலாம். கண்களில் ஒளி இழந்து, சக்தியை இழந்து, வாடிய முகங்களோடு நாடி நரம்பு எல்லாம் தளர்ந்து போய், குடிகாரனை விட கேவலமாக நடமாடுகின்றவர்களை அங்கே பார்க்கின்றோம். சில நண்பர்களின் அனுபவங்களையும் கேட்டிருக்கிறேன். நான் எதையும் மிகைப் படுத்திக் கூறவில்லை.

ஒரு சில பேர் ஆனந்தம் பெறுவதற்காக ஒரு சமுதாயத்தின் மீது இப்பெரும் தீங்கை ஏன் சுமத்த வேண்டும். தாங்கள் விரும்புகின்ற கேளிக்கை களியாட்டத்தில் ஈடுபட தங்களுக்கு சுதந்திரம் இருக்கிறது என்று சில நண்பர்கள் பேசுகிறார்கள். எந்த சுதந்திரமானாலும், எந்தவித உரிமையானாலும் சமுதாயத்திலுள்ள மற்றவர்களின் சுதந்திரத்தையும், உரிமையையும் பாதிக்கிற வகையில் அது அமையக் கூடாது. சிலரின் கேளிக்கைக்காக பல பேர் தங்களது உயிர்களையே இழக்கிறார்கள். பலர் எல்லா வகையிலும் அழிந்து விடுகிறார்கள்.

சிலர் வெளிநாடுகளைக் காரணம் காட்டுகிறார்கள். ஆனால் அவர்களும் இது தீங்கு என்பதை ஒத்துக் கொள்கிறார்கள். ஆதிக்கம் புரிந்த அயல் நாட்டினர் பல நாடுகளிலும் இத்தகைய தீங்கை நுழைத்து விட்டனர். பாதிக்கப்பட்ட நாடுகளில் இதனை ஒழிப்பதற்கு முயற்சிகள் நடக்கின்றன. ஆகவே எல்லோராலும் ஒத்துக் கொள்ளப்பட்ட இத்தீய குதிரைப் பந்தயத்தை ஒழிப்பது தான் சிறப்பாகும்.

# 10

# காவல்துறையில் முஸ்லிம்கள்

*[1-12-47 அன்று காயிதே மில்லத் கூறியதாவது]*

மாகாணத்தின் சிறப்பு பாதுகாப்பு காவல் படை ஒன்றை அமைப்பதற்கு அரசாங்கம் உத்தேசித்துள்ளதா? என்றும் அப்படையில் சிறுபான்மை மக்களான முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஹரிஜனங்கள், ஆகியோருக்கு போதியளவு இட ஒதுக்கீடு செய்யப்படுமா என்றும், காயிதே மில்லத் வினா ஒன்றை எழுப்பினார்கள்.

அதற்கு பதிலளித்த டாக்டர் சுப்பராயன் கூறியதாவது: ''பாதுகாப்புப் படை அமைக்க அரசு ஆலோசித்துள்ளது. இப்படையை அமைப்பதில் வகுப்பு வாத பிரதி நிதித்துவ முறையை பின்பற்ற இயலாது. சிறப்பு காவல் படையில் முஸல்மான்களை சேர்க்கும் எண்ணம் அரசுக்கு இல்லை.

மகபூப் அலி பேக்:-இந்நாடு ஒரு மதச் சார்பற்ற நாடு என்று கனம் அமைச்சர் கூறுகிறாரா?

டாக்டர் சுப்பராயன்:-நிச்சயமாக இது மத சார்பற்ற நாடுதான்.

காயிதே மில்லத்:-அரசாங்கத்தின் இந்த முடிவு ஏதோ ஒரு அச்ச உணர்வாலோ அல்லது மக்களில் ஒரு சாராரின் வெறுப்பு உணர்வாலோ ஏற்பட்டிருக்குமானால், அவைகளை நீக்கும் பொருட்டு அரசாங்கம் நீதியாகவும், நேர்மையாகவும் நடந்து கொள்ள வேண்டாமா?

டாக்டர் சுப்பராயன்:-அரசு மிக நேர்மையாக நடக்கிறது என்பது அரசுக்கு தெரியும். மக்களின் மத்தியில் நம்பிக்கையை ஊட்டுவதற்காகவே அரசு இந்த முடிவை எடுத்துள்ளது.

காயிதே மில்லத்:-இந்த நடவடிக்கை மக்களிடம் நம்பிக்கை ஊட்டுவதற்கு பதிலாக, அரசாங்கம் நீக்க விரும்புவதாக கூறப்படுகின்ற வகுப்பு வெறியை தூண்டாதா?

டாக்டர் சுப்பராயன்:-சந்தேகங்களை போக்குவதற்கு இதே தான் வழி என அரசு நினைக்கிறது.

காயிதே மில்லத்:-ஒரு சமுதாயம் முழுவதும் அவர்களின் மதத்தின் காரணமாக இப்படிஒடுக்கப் படலாமா?

டாக்டர் சுப்பராயன்:-இது மதவிவகாரமல்ல, நாட்டு பிரிவினைக்கு பிறகு சில சூழ்நிலைகள் ஏற்பட்டுள்ளன. அதனால் இத்தகைய முடிவு தேவையாக்கப்பட்டுள்ளது.

காயிதேமில்லத்:-தேசப் பிரிவினைக்கு முன்னர் ஏற்பட்டுள்ள காரியங்களால் அரசாங்கம் இப்பொழுது இப்படி நடக்கிறது என்று அமைச்சர் கூறுகிறார். ஆகஸ்ட் பதினைந்துக்கு முன்னர் இந்த விவகாரங்களையெல்லாம்தீர்க்கப்படவில்லையா?என நான் கேட்க விரும்புகிறேன். ஆகஸ்ட் பதினைந்துக்குப்பின் ஏற்பட்ட விவகாரங்களின் அடிப்படையில் இப்பொழுது நாம் இயங்கிக் கொண்டிருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட தேதிக்கு முன்னர் ஏதோ ஒன்று நடப்பதற்கு இவர்கள் தான் காரணம் என்று கருதிக் கொண்டு ஒரு சமுதாயம் முழுவதையும் வஞ்சம் தீர்த்துக் கொள்வது போல செயல்படுவது நீதியா?

டாக்டர் சுப்பராயன்:-கனம் உறுப்பினர்க்கு ஒரு ஆங்கில பழமொழியை நினைவுபடுத்துகிறேன். அவரவர் செய்ததை அவரவர் அனுபவிக்கத் தானே வேண்டும்.

காயிதே மில்லத்:-மக்களின் எந்த ஒரு சாரார் மீதும் அரசாங்கத்திற்கு சந்தேகம் ஏற்படுமானால் அரசாங்கம் உடனே நீதி விசாரணை நடத்தி உண்மையை கண்டறிந்து சந்தேகம் உண்மையானால் நடவடிக்கை எடுக்கவேண்டியதுதானே.

டாக்டர் சுப்பராயன்:-இனிமேல் இந்த விஷயத்தை பற்றி நான் பேச முடியாது.

# 11

# மலபாரில் ஆர். எஸ். எஸ். விஷமங்கள்

*[2—12—1947 அன்று மதராஸ் சட்டசபையில் காயிதே மில்லத் கீழ்க்கண்ட கேள்வியை வினவினார்கள்]*

''மலபார் மாவட்டத்தில் R.S.S. நடவடிக்கைகளின் காரணமாக சட்ட ஒழுங்கு சீர்குலைவு ஏற்பட்டிருப்பது அரசாங்கத்திற்கு தெரியுமா? வகுப்பு ஒற்றுமையை பாதிக்கும் வகையில் அமைந்துள்ள இத்தகைய நடவடிக்கைகளை தடுப்பதற்கு அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கை என்ன?

டாக்டர் சுப்பராயன்: மலபார் மாவட்டத்தில் ராஷ்ட்ரீய ஸ்வயம் சேவக் சங்க நடவடிக்கைகளின் விளைவாக அம் மாவட்டத்தில் நிலவி வரும் சௌஜன்னியம் பாதிக்கப்படுகிறது, என்று அரசாங்கம் நம்பவில்லை. அந்த அமைப்பின் நடவடிக்கைகளின் காரணமாக வகுப்பு ஒற்றுமை பாதிக்கப் பட்டிருக்கிறது என்றும் சர்க்கார் கருதவில்லை.

K. பிரமானந்த ரெட்டி: முஸ்லிம் லீக்கைக் கலைத்துவிட்டு இந்திய யூனியனில் அதனுடைய செயல்பாட்டை நிறுத்திக் கொண்டால் விரும்பத்தகாத நடவடிக்கைகள் இந் நாட்டில் நிகழாது என்று நான் சொல்கிறேன். இக் கருத்தை அரசாங்கம் ஏற்றுக்கொள்கிறதா?

சபாநாயகர்: சர்க்காருக்கு சில தகவலை கொடுக்க கனம் உறுப்பினர் விரும்புகிறார்.

K. T. கோசல்ராம்: வகுப்புக்கலவரங்களை முஸ்லிம் லீக் நேஷனல் கார்டுகள் தூண்டி வருகிறார்கள் என்ற விஷயம் சர்க்காருக்கு தெரியுமா?

டாக்டர் சுப்பராயன்: தனி ஸ்தாபனங்களின் நடவடிக்கைகளை அரசாங்கம் உன்னிப்பாக கவனித்து கொண்டு தான் வருகிறது. சட்டம் ஒழுங்கை சீர்குலைக்கும் வகையில் எந்த ஒரு ஸ்தாபனத்தினுடைய நடவடிக்கைகளும் அமையுமானால் அதை இந்த அரசு உறுதியாக அடக்கியே தீரும். முஸ்லிம் சமுதாயத்தை சார்ந்த ஸ்தாபனமானாலும் சரி, இந்து சமுதாயத்தை சார்ந்த ஸ்தாபனமானாலும் சரி, எவ்வித பாரபட்சமுமின்றி சர்க்கார் இவ் விஷயத்தில் நடந்து கொள்ளும்.

ஐதுரூஸ் சாகிப்: 16—11—47 அன்று நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் R. S. S. நடவடிக்கைகளை கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப் பட்டிருக்கிறது என்பது உண்மையா? அதன் நடவடிக்கைகளை அடக்கி ஒடுக்க வேண்டுமென மத்திய, மாநில அரசுகளுக்கு அத் தீர்மானம் சிபாரிசு செய்துள்ளது என்பதும் உண்மையா?

டாக்டர் சுப்பராயன்: நான் சார்ந்துள்ள கட்சி நிறைவேற்றியுள்ள தீர்மானம் குறித்து கனம் உறுப்பினர் இவ்வளவு தூரம் அக்கறை கொள்வார் என்று நான் நினைக்கவில்லை.

மஹ்பூப் அலிபேக்: R. S. S. அமைப்பு ஒரு வகுப்புவாத ஸ்தாபனம் மட்டுமல்ல, ராணுவ ரீதியில் அமைக்கப்பட்ட ஒரு ஸ்தாபனமும் ஆகும். முஸ்லிம்களுக்கு எதிராக துவேஷத்தை பரப்புவது தான் அதன் பணி. அது ஒரு பயங்கரமான அமைப்பாகும். அது செயல்பட அனுமதிக்கப்பட்டால் நாட்டின் இதர பாகங்களிலும் அதனால் தகாத விளைவுகள் ஏற்படும்.

டாக்டர் சுப்பராயன்; முஸ்லிம் நேஷனல் கார்டு, ராஷ்ட்ரீய ஸ்வயம் சேவக் சங்கம் போன்ற வகுப்புவாத அமைப்புகளின் நடவடிக்கைகளை இந்த அரசாங்கம் உன்னிப்பாக கவனித்துக் கொண்டுதான் வருகிறது. இதற்கு அதிகமாக ஒன்றும் சொல்ல நான் தயாராகயில்லை.

காயிதே மில்லத்: இந்த மாகாணத்தில் முஸ்லிம் நேஷனல் கார்ட்ஸ் நடவடிக்கைகளின் விளைவாக சட்டம் ஒழுங்கு சீர் கெட்டு இருக்கிறது என்பதற்கான ஆதாரங்களும், தகவல்களும் அரசாங்கத்திடம் இருக்கின்றனவா?

டாக்டர் சுப்பராயன்; இத்தகைய தகவல்கள் ரகசியமானவை. அதை வெளியிட நான் தயாராகயில்லை.

காயிதே மில்லத்; மக்களின் ஒரு சாராரை பகிஷ்கரிக்க வேண்டுமென்று, மற்றொரு சாராரை R. S. S. அமைப்பு தூண்டி வருவது அரசாங்கத்திற்கு தெரியுமா? அப்படியானால் அதை தடுத்து நிறுத்த அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கை என்ன?

டாக்டர் சுப்பராயன்: ஒரு பிரிவினர் என்று கனம் உறுப்பினர் குறிப்பிடுவது யாரை என்பது

எனக்குத் தெரியும். முஸ்லிம் சமுதாயத்தை தான் அவர் மனதில் வைத்து பேசுகிறுர். சமூக பகிஷ்காரத்தை அரசாங்கம் ஆதரிக்கவில்லை. அப்படி ஏதாவது பகிஷ்காரங்கள் தூண்டி விடப் படுமாஞல், அதனுல் பாதிக்கப்பட்டவர்களை பாதுகாக்க அரசாங்கம் தகுந்த நடவடிக்கைகளை எடுக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

காயிதே மில்லத் : வாய் வழியாக மட்டும் பிரச்சாரம் செய்யாது, அச்சடித்த பிரசுரங்கள் வாயிலாகவும் இத்தகைய துவேசங்கள் வளர்க் கப்படுகின்றன என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா?

டாக்டர் சுப்பராயன் : வகுப்பு ஒற்றுமையை சிர்குலைக்கும் பிரசுரங்களை கனம் உறுப்பினர் அரசாங்கத்திடம் கொடுப்பாராஞல் நாங்கள் தக்க நடவடிக்கை எடுப்போம் என்று சொல்லிக் கொள்கிறேன்.

## 12

# ஆந்திர முஸ்லிம்கள் மீது கெடுபிடி

[1947 டிசம்பரில் சட்டமன்றத்தில் காயிதேமில்லத் கூறியதாவது]

காயிதேமில்லத் ; காவல் துறையில் மட்டுமல்ல பாதுகாப்பு துறையிலும் வகுப்புவாத போக்கு எதுவுமில்லை என்று அரசாங்கம் கூறியுள்ளது. அத்தகைய பண்பாட்டை இப்பொழுது மட்டுமல்ல வருங்காலத்திலும் பாதுகாத்துக் கொள்ளும்படி அரசாங்கத்தை கேட்டுக் கொள்கிறேன்.

இப்படி நான் கூறுவதற்கு காரணமுண்டு. வடக்கு மாவட்டங்களான குண்டூர், கிருஷ்ணா, கர்நூல், மற்றுமிடங்களிலும் முஸ்லிம்களின் வீடுகள் சோதனையிடப்பட்டு இருக்கின்றன பாது காவல் சட்டத்தின் கீழ் நூற்றுக்கணக்கான முஸ்லிம்கள் எந்த வித குற்றச்சாட்டுமின்றியே கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர். காவல்துறையில் உள்ள முஸ்லிம் அதிகாரிகள் மலபாரிலிருந்தும் மற்றும் பகுதிகளிலிருந்தும், திடீரென இடமாற்றம் செய்யப்பட்டுள்ளனர். காவல் துறையில் பணியாற்றிய பல முஸ்லிம்களிடமிருந்து துப்பாக்கிகளும் மற்றும் ஆயுதங்களும் பறித்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இத்தகைய சம்பவங்கள் நடந்துள்ள காரணத்திஞல் தான் காவல் துறை போன்ற துறைகளிலிருந்து வகுப்புவாதப் போக்கு நீக்கப்பட வேண்டுமென்று கூறுகிறேன்.

மாகாண பாதுகாப்பு படைகளில் எல்லா சமுகத்தைச் சார்ந்தவர்களும் கலந்திருக்கும் வகையில்ஆள் சேர்ப்பு நடைபெற வேண்டும். குறிப்பாகச் சிறுபான்மை மக்களுக்கு போதிய அளவு இத் துறைகளில் பங்களிக்க வேண்டும். வகுப்புவாத பிரதிநிதித்துவ விகிதாச் சாரத்திற்கும் மேலாகவே, சிறுபான்மை சமுதாய மக்களை இப் பாதுகாப்பு படைகளில் இடம் பெறச் செய்யவேண்டும்.

முஸ்லிம்கள் இந்த மாகாணத்தில் இருந்தாலும் இந்தியடொமினியனில் வேறு எங்கு இருந்தாலும், அவர்கள் இந்த தேசத்திற்கு விசுவாசமுள்ளபிரஜைகளாகவே இருக்கிறுர்கள். இங்குள்ள ஒவ்வொரு முஸ்லிமின் சார்பாக நான் இந்தபிரகடனத்தைச் செய்கிறேன். பல நேரங்களில் பல இடங்களில் இதை தெரிவித்தும் இருக்கிறேன். பொது மேடைகளிலும் பத்திரிக்கை வாயிலாக வந்த அறிக்கைகளிலும் இதை விளக்கி இருக்கிறேன். இன்னும் எத்தனையோ வழிகளில் எல்லாம் இதைக் கூறிவருகிறேன்.

ஜூன் மூன்றும் தேதி திட்டத்தின் அடிப் படையில், ஆகஸ்ட் பதினைந்தில், காங்கிரசும், முஸ்லிம் லீக்கும் உடன்பாடு கண்டது. அது முதல் இருகட்சிகளுக்கிடையிலான தகராறுகள் அனைத்தும் தீர்த்துக் கொள்ளப்பட்டன. ஒரு புதிய சூழ்நிலை உருவாக்கப்பட்டு விட்டது.

சுதந்திரதினத்தை முஸ்லிம்கள் ஒவ்வொரு வரும் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டாடிஞர்கள். முஸ்லிம்கள் வீடுதோறும் தேசீயக் கொடி பறந்தது. மஸ்ஜிதுகளிலும் தேசீயக் கொடி ஏற்றப்பட்டது. பெருமைக்குரிய இந்திய யூனியன் கொடியை ஏற்றியதன் மூலமாக தங்களின் மனப்பூர்வமான தேச விசுவாசத்தை இயல்பான முறையில் முஸ்லிம் ள் வெளிப்படுத்தி யுள்ளனர். யாருக்காவது முஸ்லிம்களின் தேசப் பற்றைப் பற்றி ஏதேனும் சந்தேகம் இருந்திருக்குமாஞல், தேசியக் கொடியை ஏற்றியதை பார்த்தாவது அந்த சந்தேகம் நீங்கி இருக்க வேண்டும்.

முஸ்லிம்கள் என்றென்றும் தேசப்பற்றுடைய வர்கள். முஸ்லிம்களின் இதயங்களிலிருந்து அவர்களின் தேசப்பற்றை யாரும் நீக்கிவிட முடியாது. முஸ்லிம்கள் கண்ணியமான இனத்தை சார்ந்த வர்கள். எப்பொழுதுமே அவர்கள் கண்ணிய மாகவே நடந்துள்ளனர். இன்றும் அவர்கள் கண்ணியத்துடனேதான் இருக்கிறார்கள். தேசத்திற்கு விசுவாசம் மிக்க பிரஜைகளாக முஸ்லிம்கள் இந்நாட்டில் வாழ்வதற்கு எல்லா உரிமைகளையும் பெற்றிருக்கிறார்கள்.

எனவே ஹைதராபாத்தில் எது நடைபெற்றாலும் அது எங்களை கட்டுப்படுத்தாது நாங்கள் இந்திய யூனியன் பிரஜைகள். ஆகவே, கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படுள்ள முஸ்லிம்களை உடனடியாக விடுதலை செய்ய கேட்டுக்கொள்கிறேன். இப்படிக் கேட்பதற்கு எங்களுக்கு உரிமை உண்டு. என்னுடைய வேண்டுகோளை அரசு ஏற்றுக் கொள்ளும் என நம்புகிறேன்.

## யார் பற்றியும் தப்புக் கணக்குப் போட வேண்டாம்

மதறாஸ் இராயப்பேட்டையிலுள்ள மதரஸா ஒன்றின் வளர்ச்சிக்காக நிதி திரட்ட ஒரு குழு புறப்பட்டது. காயிதே மில்லத் அவர்களும், அக்குழுவில் சேர்ந்து கொண்டு வசூலில் இறங்கினார்கள். சென்னை நகரில் பல இடங்களுக்கும் சென்று நிதி வசூலித்துக் கொண்டிருந்தோம்.

ஒரு தெருவில் சென்று கொண்டு இருக்கும் பொழுது, ஒரு வீட்டை சுட்டிக் காட்டி அந்த வீட்டிற்குப் போக வேண்டாம் என எங்களுடன் வந்தவர்கள் கூறினார்கள். ஏனென்று காயிதே மில்லத் அவர்கள் விளக்கம் கேட்டார்கள். சென்னை மரைக்காயர் லெப்பை தெருவிலுள்ள வீட்டை முஸ்லிம் லீகிற்காக — கோர்ட் ஏலம் எடுத்து அதை கட்சி கைப்பற்றிக் கொண்ட சமயம் அந்த வீட்டுக்காரர் காயிதே மில்லத்தை தாறுமாறாகத் திட்டியதாகவும், தரக்குறைவாகப் பேசியதாகவும் ஒரு சிலர் கூறினார்கள். அதன் காரணமாகவே அந்த வீட்டிற்குப் போகவேண்டாமெனத் தாங்கள் கூறுவதாக விளக்கமளித்தார்கள்.

ஒரு நொடிப்பொழுது தலைவரவர்கள் தெருவில் நின்றவண்ணம் யோசித்தார்கள். சட்டென ''ஹைர்...'' வாருங்கள் அவரையும் பார்த்து விடுவோம். அல்லாஹ் மீது தவக்கல் வைத்துச் சென்று பார்ப்போம்'' என்று கூறியவாறு அந்த வீட்டினுள் நுழைந்தார்கள். நாங்களும் பின் தொடர்ந்தோம். அந்த வீட்டுக்காரர் ஓடோடி வந்து தலைவரவர்களை வரவேற்றார், உபசரித்தார், மரியாதை செய்தார், எல்லோரும் எதிர் பார்த்ததை விட கணிசமான தொகையை நன்கொடையாகவும் கொடுத்தார். எங்களுக்கு இக்காட்சிகளை காண பெருத்த ஆச்சரியமாக இருந்தது.

வெளியே வந்ததும் காயிதேமில்லத் தங்களை சுற்றி நின்றவரிடம் கூறினார்கள். ''பார்த்தீர்களா அவருடைய பணம் மதரஸா நிதிக்குச் சேர வேண்டுமென்றிருக்கிறது. அதை தடுத்து விடப் பார்த்தீர்களே'' என்று சிரித்தவாறு கூறினார்கள். தம்மை ஒரு தரம் திட்டியவர் என்று தெரிந்தும் அதை ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல், பொது காரியத்திற்காக அவர் வீடு தேடிச் செல்ல தலைவரவர்கள் தயக்கம் காட்டவேயில்லை.

''சில நேரம் சில மனிதர்கள் வித்தியாசமாக இருப்பார்கள், நடந்து கொள்வார்கள்; எப்பொழுதும் அவர்கள் அம்மாதிரிதான் இருப்பார்கள் என தப்பு கணக்கு போட்டுவிடக் கூடாது. மேலும் நாம் சமுதாயக் காரியத்திற்காகச் செல்கிறோம். யார் மனதில் எப்படிப் பட்ட எண்ணத்தை அல்லாஹ் போட்டிருப்பான் என்பதை நாம் அறியமாட்டோம். முயற்சிப்பது நமது கடமை, கூலி கொடுப்பது அவனது உரிமை'' இவ்வாறு காயிதேமில்லத் மேலும் விளக்கம் தந்தார்கள்.

**மெக்கோ ஹாஜி M. பக்கீர் மைதீன் சாகிப்**

# 13

## காந்திஜீயின் உண்ணுவிரதம்

*[1948 ஜனவரி ஆரம்பத்தில் நாட்டில் நிலவியுள்ள அரசியல் கொந்தளிப்புகளின் காரணமாக மகாத்மா காந்தி உண்ணுவிரதம் இருந்தார். பின்னர் எல்லோருடைய வேண்டுகோளுக்கும் இணங்க தமது உண்ணுவிரதத்தை அவர் முடித்துக் கொண்டார். காந்திஜியின் உண்ணாவிரதம் வெற்றிகரமாக அமைந்ததை பாராட்டும் வகையில் மதறாஸ் மாகாண சட்டசபை 20-1-48 அன்று தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது. அச்சமயம் காயிதே மில்லத் கூறியதாவது.]*

மகாத்மா காந்திஜி தமது உண்ணா நோன்பை முடித்துக் கொண்டது உண்மையிலேயே பெரிய நிவாரணத்தையும், மகிழ்ச்சியையும் தருகிறது. அந்த உண்ணாவிரதம் வெற்றிகரமாக முடிந்தது பாராட்டுக்குரியது. தாய் நாட்டின் சேவையில் அவரது உழைப்பு மென்மேலும் தொடர்ந்து நீடிக்கவேண்டும். அதற்காக அவர் நீண்டகாலம் மகிழ்ச்சியுடனும் திடகாத்திரத்துடனும் வாழவேண்டும் என்று நாம் அனைவரும்விரும்புகிறோம். நாட்டில் வாழும் எல்லா சமுதாய மக்களுடையவும், எல்லா தரப்பினருடையவும், உள்ளங்களிலிருந்து கனமானதொரு பளு நீக்கப்பட்டது போன்று அவரது நோன்பின் முடிவு அமைந்திருந்தது. நாட்டு மக்களிடையே ஒற்றுமையும், சௌஜன்னியமும் நிலவ வேண்டும். என்பதற்காகத்தான் அவர் இந்த உண்ணா நோன்பை மேற்கொண்டார். அவரது குறிக்கோள் நிறைவேறிவிட்டதென்றே சொல்லலாம். அவர் நீண்ட நெடுங்காலம் வாழவேண்டும் என்று நான் மீண்டும் சொல்லிக் கொள்கிறேன். நமது தாய்நாடு சுபிட்சமாகவும், மகிழ்ச்சிகரமாகவும் வாழ வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

o

# 14

## ஊர்க்காவல் படையில் முஸ்லிம்கள்

*[23—1—48 ஊர்க்காவல் படை மசோதா சட்ட சபையில் விவாதிக்கப்பட்ட பொழுது காயிதே மில்லத் கூறியதாவது.]*

சட்டம் ஒழுங்கை பராமரிப்பதற்கு தற்போதுள்ள காவல் படையின் எண்ணிக்கை போதாது. ஆயிரத்து நானூறு பேர்களுக்கு ஒரு போலீஸ்காரர் வீதமே தற்போதைய எண்ணிக்கை அமைந்துள்ளது. அவசர காலங்களில் இப்படை போதாது. எனவே காவல் துறைகளில் பணிபுரிபவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டுமென்பதில் யாதொரு அபிப்பிராய வித்தியாசமுமில்லை.

இங்கு பேசிய சில உறுப்பினர்கள் முஸ்லிம் லீக்கைப் பற்றி குறிப்பிட்டார்கள். இந்நாட்டில் அமைதியும், சௌஜன்னியமும், நிலவுவதைதான் முஸ்லிம் லீக் விரும்புகிறது. சட்டம் ஒழுங்கை பராமரிப்பதில் அக் கட்சி என்றுமே முன்னணியில் நின்றுள்ளது. 1946 ஏப்ரலில் காங்கிரஸ் கட்சி மாகாண ஆட்சியை ஏற்றுக் கொண்டதிலிருந்து சட்டம் ஒழுங்கை நிலை நாட்டுவதில் அது ஒத்துழைத்துத்தான் வந்திருக்கிறது. இந்த மன்றத்திலேயே காங்கிரஸ் அரசை சார்ந்தவர்கள், முஸ்லிம் லீக்கை பாராட்டி பேசியுள்ளார்கள். இனியும் அதே மனப்பான்மையுடன் தான் முஸ்லிம் லீக் செயல்படும் என்று அந்த உறுப்பினர்களுக்கு சொல்லிக் கொள்கிறேன்.

ஊர்க்காவல் படை வகுப்பு வாதக் கண்ணோட்டத்துடன் அமைக்கப்பட மாட்டாது என இந்த அவையின் முன்னவர் வாக்குறுதி அளித்துள்ளார். ஏதாவது ஒரு சமுதாயம் இப்படையில் சேர்க்கப்படா விட்டாலும் கூட, அது வகுப்பு வாதமாகி விடுகிறது என்பது தெளிவு. இதை முதலமைச்சர் உணர்ந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும். ஜனநாயகம் அதன் உண்மையான வடிவில் செயல்பட வேண்டுமானால்; எல்லாத் தரப்பு மக்களுக்கிடையில் பந்தோபஸ்து உணர்ச்சி நிலவ வேண்டும். அது மிகவும் அவசியம், அந்த வகையில் ஊர்க் காவல் படை அமைப்பு அமைய வேண்டும், மாகாணத்தில் சட்டம் ஒழுங்கு பராமரிக்கப்படுவதில் முஸ்லிம் லீக் கட்சி முழுமனதுடன் ஒத்துழைக்கும் என்று மீண்டும் சொல்லிக் கொள்கிறேன்.

# 15

## காந்திஜியின் மரணம்

*[30—1—48 அன்று தலைநகர் டில்லியில் மகாத்மா காந்தி R.S.S. கட்சியைச் சார்ந்த ஒருவரால் சுட்டுக் கொல்லப்பட்ட பின், மதராஸ் மாகாண சட்ட சபையில் 2-2-48 அன்று அன்னாருக்காக ஒரு இரங்கல் தீர்மானம் நிறை வேற்றப்பட்டபொழுது காயிதே மில்லத் கூறியதாவது.]*

காந்திஜீ தாய் நாட்டினுடைய மிகப் பெரிய புதல்வராவார். மக்களால் பெரிதும் மதிக்கப் பட்ட மாபெரியத் தலைவர் இன்று நம்மிடையே யில்லை. நமது நாடு மட்டுமல்ல, உலகம் முழு வதுமே துக்க சாகரத்தில் மூழ்கிக் கிடக்கிறது. மறைந்த அந்த ஆத்மா இன்று நம்மிடையே மனிதக் கோலத்தில் இல்லையென்றாலும், அவர் விட்டுச் சென்ற வழிமுறைகளும், நடைமுறை களும் நம்முன் நிற்கின்றன. ஏழை எளியவர்கள் மீதும் அடக்கி ஒடுக்கப்பட்டவர்கள் மீதும் அவர் காட்டிய அன்பு, நீதி நிலை நிறுத்தப்பட வேண்டு மென்பதில் அவர் எடுத்துக் கொண்ட உறுதி, மனித சமுதாயத்தின் நல் வாழ்விற்காக அவர் காட்டிய அக்கறை போன்ற குணாதிசயங்கள் மக் களால் பெரிதும் மதிக்கப்பட்டன. மக்கள் அவரை ஒரு மன்னராகவே கருதினார்கள்; ஒரு மன்னரின் புத்திரராக அவர் பிறக்கவில்லை என் றாலும், முடிசூடாத மன்னராக அவர் இருந்தார். மக்களின் உள்ளங்களை ஆட்சி செய்யும் மன்ன ராக அவர் வாழ்ந்தார்.

அவரது மறைவு நமக்கு ஒரு நல்ல படிப்பினை யாக அமைய வேண்டும். வன்முறைகளின் மூல மாக பிரச்சினைகளை தீர்த்துக் கொள்ள நாம் முயலக்கூடாது. பலாத்காரத்தை பிரயோகிக்க வேண்டுமானால் அதை அரசாங்கம் தான் செய்ய வேண்டுமே ஒழிய, மக்கள் அந்த அதிகாரத்தை தங்களது கரங்களில் எடுத்துக் கொள்ளக் கூடாது.

இந்நாட்டின் விடுதலைக்காக அவர் தமது வாழ்நாள் முழுவதும் பாடுபட்டார். எத்தனையோ விதமான கஷ்ட, நஷ்டங்களை மேற்கொண்டார்; நாட்டிற்காக அடிகூட பட்டார், சிறை சென்றார், இந்நாட்டிற்கு விடுதலை வாங்கிக் கொடுத்த சிற்பி என அவரைக் குறிப்பிடலாம். இந்நாடு மகிழ்ச்சி கரமாகவும், சுபிட்சப் பாதையிலும், செல்ல வேண்டிய தருணத்தில் அவர் இல்லாதிருப்பது வேதனையளிக்கிறது. அவர் உயிருடன் இருந்த போது நம்மால் சாதிக்க முடியாத ஒற்றுமையை யும், ஐக்கியத்தையும் அவர் மறைவிற்கு பிறகா வது நம்மால் சாதிக்க முடிந்தால், அவர் ஆன் மா திருப்தியடையும் என்பதில் சந்தேகமில்லை. இந்நாட்டில் வகுப்பு ஒற்றுமையும், நல்லெண்ண மும், சுபிட்சமும், ஓங்கி வளர நாம் அனைவரும் பாடுபட வேண்டும்,

இதில் ஒவ்வொருவருக்கும் பொறுப்பு இருக் கிறது. ஒவ்வொருவரும் தனது மனசாட்சியை சோதித்து பார்த்துக் கொள்ள வேண்டும். எந்த நாட்டின் நல்வாழ்விற்காக காந்திஜீ தன் இன்னு யிரை அர்ப்பணித்தாரோ, அந்த நாடும், அதில் வாழும் மக்களும் எல்லா நலன்களும் பெற்று சுபிட்சமாக வாழ வல்ல இறைவன் அருள் புரிவானாக;

---

### மார்க்க அறிஞருக்குள்ள ஞானம் உண்டு

எனது பெரிய தந்தையான கடையநல்லூர் வெ. கா. உ. அப்துர் ரகுமான் சாஹிப் அவர்கள் வீட்டிற்கு காயிதே மில்லத் வந்திருந்தார்கள். அடுத்த வீடு எங்களுடையது. அச் சமயம் தான் தலைவரவர்களை முதன் முறையாகப் பார்த்தேன்.

நான் கூத்தாநல்லூர் மதரஸாவில் ஓதிக் கொண்டிருந்தபொழுது, அங்கும் அவர்கள் விஜயம் தந்திருந்தார்கள். சிறந்ததொரு மார்க்க உபன்னியாசத்தைச் செய்தார்கள். ''கவ்ம்'' என்ற பதத்திற்கும் ''ஜமாஅத்'' என்ற பதத்திற்கும் உள்ள வேறுபாடுகளை அவர்கள் நன்கு விளக்கினார்கள். ஒரு மார்க்க அறிஞர் கூட அவ்வளவு அழகாகவும் மனதில் பதியும்படியும் விளக்கிச் சொல்ல முடியாது. அரபிக் கல்லூரி மாணவர்களாக இருந்த எங்களுக்கு அவர்கள் கூறி யது, ஆழமாகப் பதிந்து விட்டது. ''கவ்ம்'' என்றால் பெருங்கூட்டம். ''ஜமாஅத்'' கொள்கை அடிப்படையில் ஒன்று சேரும் கூட்டம். இவ்விரண்டு அரபி வார்த்தைகளுக்குள் பொதிந்து கிடக் கும் உட்பொருளை வெகு அழகாக தலைவரவர்கள் விளக்கிச் சொன்னார்கள்.

(மௌலவி யூசுப் அன்ஸாரி, முதல்வர், ''பைஜுல் அன்வார்'
அரபிக் கல்லூரி, கடையநல்லூர்

---

# 16

# குதிரைப் பந்தயம்

*[24-2-48 அன்று மதராஸ் சட்டசபையில் காயிதேமில்லத் கூறியதாவது:]*

குதிரைப்பந்தயங்களின் மீது நடத்தப்படும் சூதாட்டத்தை ஒழிக்கும் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். அதே சமயம் ஆளுனரை பாராட்ட வேண்டுமா அல்லது வேண்டாமா என்ற ஒரு ஐயப்பாடும் என்னுள் எழுகிறது. மாகாணத்தில் நடத்தப்படும் குதிரைப் பந்தயங்களில் பணம் கட்டி சூதாடுவதைத் தடுக்க வேண்டுமென்று மக்கள் நீண்ட காலமாக பெரிய அளவில் கோரிவருவதை இப்பொழுதுதான் அரசாங்கம் கண்டுபிடித்திருக்கிறது. குதிரைப் பந்தயத்தில் பணம் கட்டிச் சூதாடுவது பரந்த அளவில் உள்ளது என்பதையும், அதன் காரணமாக பொருளாதாரப் பின் விளைவுகள் மிக மோசமாக உள்ளது என்பதையும் இப்பொழுது தான் அரசினர் கண்டுபிடித்துள்ளனர். இதைத்தான் கடந்த பல மாதங்களாக இந்த அவையின் எதிர்வரிசையில் இருக்கும் நாங்கள் வலியுறுத்திக் கொண்டிருந்தோம்.

சுயேச்சை உறுப்பினர் ஒருவர் மேலவையில் இதே மாதிரி ஒரு மசோதா கொண்டு வந்த போது, அதை அரசாங்கம் எதிர்த்தது, அது மட்டுமல்லாமல், அம் மசோதாவை தோற்கடிக்கவும் செய்தது. ஆனால் இப்போது அதே மாதிரியான மசோதா ஒன்றை அரசாங்கமே இந்தப் பேரவையில் கொண்டுவந்துள்ளது. இதற்காக நாங்கள் சர்க்காருக்கு நன்றி கூறுகிறோம். ஆனால் அவர்களுடைய நடவடிக்கைகளில் காணப்படும் முரண்பாடுகளை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

## மாமியார் - மருமகள் கதை

இது தொடர்பாக, எனக்கு ஒரு கதை ஞாபகத்திற்கு வருகிறது. இப்பொழுது அதை நான் சொல்கிறேன். ஒரு மாமியாரும், ஒரு மருமகளும் இருந்தனர். ஒருநாள் மருமகள் மட்டும் வீட்டில் இருந்தார். மாமியார் வெளியே போயிருந்தார் அந்த சமயத்தில் ஒரு பிச்சைக்காரன் வந்தான்.......

சபாநாயகர் ; கதையை மிகச் சுருக்கமாகச் சொல்லுங்கள்.

காயிதேமில்லத் அவர்கள் : நான் சுருக்கமாகவும் சொல்லுகிறேன், சம்பந்தமுள்ள விஷயத்தை மட்டும் சொல்கிறேன். மருமகளுக்கு அதிகாரம் ஒன்றும் இல்லாத காரணத்தினால், பிச்சைக்காரனிடம் என்ன சொல்வதென்று தெரியாது அவள் முழித்துக் கொண்டிருந்தாள். பிச்சைக்காரன் தானாகவே போய் விடுவான் என்றெண்ணினாள். பிச்சைக்காரன் போவதாகயில்லை. அங்கேயே அரைமணி நேரமாக அடம்பிடித்துக் கொண்டு நின்றான். அதற்குமேல் அந்த மருமகளால் பொறுக்க முடியவில்லை. நான் ஒன்றும் கொடுப்பதற்கில்லை. தயவு செய்து போய்விடு என்று அவள் கூறினாள். பிச்சைக்காரனுக்கு கோபம் வந்துவிட்டது. இல்லை என்று சொல்வதற்கு அரை மணி நேரமா ஆக வேண்டும். இதை முதலிலேயே சொல்லியிருந்தால் நான் அப்போதே போய் இருந்திருப்பேனே என்றான்.

திரும்புகின்ற வழியில் அவன் அந்த வீட்டு மாமியாரை எதிரில் சந்தித்தான். நடந்தவற்றை அவளிடம் கூறினான், அவனிடம் அந்த மாமியார், உன்னிடம் இல்லை என்று சொன்னது யார் என்று கேட்டாள். தன்னுடைய வீட்டில் தனக்கு பதிலாக யார் என்ன சொல்லி இருக்க முடியும் என்று எண்ணினாள் அத்துடன் அவள் நின்றாள் இல்லை. அந்த பிச்சைக்காரனை தனது வீட்டிற்கு மீண்டும் அழைத்துச் சென்றாள் தனது மருமகளைப்பார்த்து இவனிடம் இல்லை என்று சொன்னாயா என்று வினவினாள். தாங்கள் இல்லாத நேரத்தில் நான் அப்படித்தான் சொல்ல வேண்டியுள்ளது என்று கூறினாள். உடனே மாமியாருக்கு கோபம் வந்துவிட்டது.

நான் இல்லாத பொழுது எனக்குப் பதிலாக நீ எப்படி பதில் சொல்லலாம் என்று கடிந்து கொண்டாள். இதெல்லாம் உன் கணவன் கொடுத்த செல்லம்தான் காரணம். இங்கு வருபவர்களிடம் இல்லை என்றோ அல்லது உண்டு என்றோ சொல்வதற்கு உனக்கு அதிகாரம்கொடுத்தது யார்? பிச்சைக்காரனிடம் இல்லை என்று சொல்வதற்கு எனது மருமகளுக்கு எந்த ஒரு அதிகாரமும் இல்லை, எனக்குத்தான் முழுவதிகாரமும் உள்ளது. எனவே இப்பொழுது நான் சொல்லுகிறேன் அதைத் தெரிந்து கொள் என்று கூறியதுடன் பிச்சைக்காரனைப் பார்த்து ''உனக்கு பிச்சை இல்லை நீ போகலாம்'' என்று நான் இப்பொழுது கூறுகிறேன் என்று கூறினாள். இதைக் கண்டு அந்த பிச்சைக்காரன் அவர்களை திட்டிக் கொண்டே சென்றான். அதேபோல், இந்த அரசாங்கமும் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு சுயேச்சை உறுப்பினர் இதே மசோதாவை கொண்டுவந்த பொழுது அதை அரசாங்கம் தோற்கடித்துவிட்டது. இப்பொழுது இதே கருத்துடைய மற்றொரு மசோதாவை அரசாங்கம் கொண்டு வந்திருக்கிறது.

*சபாநாயகர் : அரசாங்கத்தை மாமியார் என்கிறீர்களா? அல்லது மருமகள் என்கிறீர்களா?*

*காயிதேமில்லத் அவர்கள் :* இதுபற்றி தீர்ப்பு கூறும் பொறுப்பை தங்களிடமே விட்டுவிடுகிறேன். அரசாங்கம் மாமியாராக இருக்கப் போகிறதா? அல்லது மருமகளாக இருக்கப் போகிறதா? என்பதை நீங்கள் தான் கூற வேண்டும். தற்போது அரசாங்கம் சரியான பாதையில்தான் செல்கிறது. இந்த மசோதாவினை அவர்கள் வெகு சீக்கிரமே அமலுக்குக் கொண்டு வருவார்கள் என்று நம்புகிறேன். எதிர் தரப்பிலிருந்து இப்பிரேரணை வந்து ஏற்கனவே இரண்டு குதிரைப் பந்தய சீசன்கள் கடந்து போய்விட்டன.

## மக்களின் இச்சைகளைத் தூண்டாதீர்

இது மக்களின் மன இச்சைகளை தூண்டிவிட்டுக் கொண்டிருக்கிறது. என்பதையும் மக்களின் பொருளாதாரத்தை சீர்குலைத்துக் கொண்டிருக்கிறது என்பதையும் குறைந்தபட்சம் அரசாங்கம் அறிந்திருக்க வேண்டும். மீண்டும் மீண்டும் இதுதான் வலியுறுத்தப்பட்டது. இந்த மசோதாவினால் பாதிக்கப்படுவோர் ஒரு சிலர் மட்டுமே என்றாலும் உறுப்பினர்கள் பலரும் சுட்டிக்காட்டியதுபோல, குறைந்த அளவிலான மக்களே படுமோசமாக இந்த கேளிக்கையினால் பாதிக்கப்படுகிறார்கள் என்ற போதிலும், அவர்கள் எல்லாம் ஒரே தரத்தினர் என்று கூறுவதற்கில்லை. ஒரு ஆண்டில் பாதிக்கப் படுகிறவர்கள் எண்ணிக்கையில் குறைவாயிருக்கலாம்; ஒரு சில ஆயிரம் பேர்களாக யிருக்கலாம். ஒரு ஆண்டு செல்பவர்கள் மறு ஆண்டிலும் செல்லுவார்கள் என்று சொல்வதற்கில்லை. புதிதாக பலரும் ஆண்டு தோறும் சென்று கொண்டிருப்பார்கள். எனவே குதிரைப் பந்தயத்திடலுக்கு போவது ஒரே மாதிரியான மக்களல்ல. வருடா வருடம் புதிது புதிதாக கூட்டங்கள் அங்கே செல்கின்றன, ஆகவே உண்மையிலேயே பெரிய எண்ணிக்கையிலான கூட்டம் அங்கு சென்று வருகிறது. இந்த எண்ணிக்கை உயர்ந்து கொண்டே போகிறது. அரசாங்கத்தைப் பாராட்டுவதா வேண்டாமா என்று நான் ஆரம்பத்தில் குறிப்பிட்ட போதிலும் அரசாங்கத்தை நான் மனதாரப் பாராட்டுகிறேன். ஒன்றும் செய்யாதிருப்பதைவிட குறைந்த பட்சம் தாமதமாகவாவது இதை கொண்டு வந்தார்களே என்பதற்காக நான் பாராட்ட வேண்டியவனாகயிருக்கிறேன்.

மற்றுமொரு விசயத்திலும் நான் அரசாங்கத்தைப் பாராட்ட வேண்டும். அவைத்தலைவரவர்களே! நான் இந்த மசோதாவைத் திரும்பத் திரும்ப படித்துப் பார்த்தேன். இதில் மிகப் பெரும் விடுதல் ஒன்று உள்ளது. இதுவரை அறிமுகப்படுத்தப்பட்ட அனைத்து மசோதாக்களிலும், அனைத்து விதிகளையும் அவர்கள், நினைக்கும் காலத்திலிருந்து அமல்படுத்தக் கூடும் என்ற வாசகம் இருப்பதுண்டு, சர்க்காருடைய எல்லா மசோதாக்களிலும் இத்தகைய வாசகங்கள் காணப்படுவதுண்டு. இந்த மசோதாவில் அத்தகைய விதி எதையும் அரசாங்கம் இடம் பெறச் செய்யவில்லை. இருந்த போதிலும் நான் இந்த சர்க்காரைப் பாராட்டுகிறேன்; இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

# 17

# நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி

*[22 - 3 - 48 அன்று மதருஸ் சட்டப் பேரவையில் காயிதே மில்லத் கூறியதாவது]*

மாண்புமிகு தொழில் அமைச்சர் அவர்கள் அவை முன்பு தமது இலாக்காவிற்கான கோரிக் கைகளை சமர்ப்பித்து பேசும் பொழுது,அரசாங்கம் எவ்வளவோ முயற்சிகள் எடுத்துக் கொண்ட போதிலும் இம் மாகாணத்தில் தொழில் மய மாக்கும் வேகம் மட்டுப்பட்டதாகவே இருக்கின் றது என்பதை ஒத்துக் கொண்டார். அரசாங் கத்திற்கு சில சிரமங்கள் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் வலி யுறுத்த விரும்புவது என்னவென்றால் அரசாங்கம் இன்னும் அதிகமான அளவில் ஆர்வமும் உற்சாக மும் இத்துறையில் காட்ட வேண்டும் என்பது தான்.

இந்த மாகாணத்தில் தொழில் மயமாக்கு வதை முடுக்கி விடக்கூடிய வழிகளில் மிகவும் எளி தான ஒருவழி, சுரங்கத் தொழிலில் அதிக கவனம் செலுத்துவதே, இம் மாகாணத்தை தொழில் மயமாக்குவதற்கு, சுரங்கத் தொழில் (கனிமவளங் களை அபிவிருத்தி செய்தல்) பற்றி அதிக கவனம் செலுத்த வேண்டும் என்பதை நான் மீண்டும் மீண் டும் சொல்லிக் கொண்டே வருகிறேன். தொழில் அமைச்சரைப் பார்த்து நான் வினவ விரும்புவது தற்போதைய புவியியல் ஆய்வு திருப்திகரமானது தானா? பலன் அளிக்கக் கூடியதுதானா? தற் போதைய ஆய்வுகள் மாகாணத்தை தொழில் மய மாக்குவதற்குப் போதுமானது தானா? தங்களது நடவடிக்கை குறித்து அரசாங்கம் திருப்தி அடை கிறதா, என்பனவையே. என்னுடைய கேள்வி கள் ஒன்றுக்குப் பதிலளிக்கும் போது, இந்திய புவி இயல் ஆராய்ச்சி கழகத்தின் அறிக்கையின்படி என்னென்ன நடவடிக்கைகளை எடுக்க வேண்டு மோ அவற்றையெல்லாம் இந்த அரசு எடுத்திருக் கிறது என்று அமைச்சர் கூறினார். அமைச்சரின் கூற்று உண்மையானதல்ல. அந்த ஆராய்ச்சிக் கழகம் அடிக்கடி அறிக்கைகளை வெளி யிட்டுக் கொண்டிருக்கிறது இந்த அறிக்கைளில் அற்ப சொற்ப விஷயங்களே காணப்படுகின்றன. முழுமையான அறிக்கைகளாக அவை இல்லை.

ஒருசமயம் கேள்வி நேரத்தின் போது இத் தகைய அறிக்கைகள் நமது சுரங்கத் தொழிலை முடுக்கிவிடும் வகையில் அமையுமா என்று கேட்ட போது, அந்த கேள்விக்கு பதிலளிக்க முடியாது என்று அமைச்சர் சொன்னார்.

ஆனால் துரதிஷ்டவசமாக ஒருதவறான கருத்து இங்கு நிலவி வருகிறது. சுரங்கத் தொழிலை ஊக்குவிப்பதற்கான சாத்தியக் கூறுகள் இங்கு இருக்கின்றன என்று பொதுவாக நம்பப்படு கிறது. ஆனால் ஏற்கனவே நான் சொன்னது போல் நிலைமை அப்படி அல்ல. புவிஇயல் ஆராய்ச் சியாளர்கள் ஒரு கருத்தை சொல்லிக் கொண் டிருக்கிறார்கள். அதாவது தென்னிந்தியா மிகவும் புராதானமான பூமி என்றும் அதிலுள்ள கனிமங் களான எண்ணெய், நிலக்கரி, மைக்கா போன் றவை தீர்ந்து போய் விட்டன என்றும் கூறிக் கொண்டிருக்கிறார்கள். இந்த கணிப்பு தவறானது என்று அண்மைக்கால ஆய்வுகள் நிரூபித்து வரு கின்றன. இம் மாகாணத்தில் நெடு நாட்களுக்கு முன்பே மைக்கா கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

சமீபத்தில் தென்னாற்காடு மாவட்டத்தில் லிக்னைட் (பழுப்பு நிலக்கரி) கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. புவிஇயல் ஆராய்ச்சியாளர்களின் கணிப்புகள் பழமையான வாதங்களை அடிப்படை யாகக்கொண்டிருக்கிறது. எனவே இந்த அறிக்கை களை வைத்துக் கொண்டு நாட்டின் இந்த பகுதியில் தீவிரமான, விரிவான ஆராய்ச்சிகளை செய்ய முடியாது. இந்த ஆராய்ச்சியாளர்கள் குறித்து அமைச்சர் கொண்டிருக்கும் கருத்துக்கள் தவறா னவை, அதை அவர் மாற்றிக் கொள்ள வேண் டும். உருப்படாத கணிப்புக்களை அவர்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். தற்போது புதிது புதிதான கணிப்புகள் உலகில் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

## அரசின் அலட்சியம்

எனவே சுரங்கத் தொழில் குறித்து அரசாங்கம் உண்மையிலேயே அதிகக் கவ னம் செலுத்த வேண்டும். அரசாங்கம் முறை யான கவனம் செலுத்தாமல் இருந்த போதிலும் கூட சந்தர்ப்பவசமாக தென்னாற்காடு மாவட்டத் தில் பெரும் அளவில் லிக்னைட் படிவங்கள் இருப் பது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. அது தற்செய

லாக, விபத்து போல் நடந்தது. ஆனுலும் அரசாங்கம் தேவையான துரிதமான அக்கறை யுள்ள நடவடிக்கைகளை எடுக்கவில்லை. மாகா ணத்தின் தொழில் வளத்தை மேம்பாடடையச் செய்யும் வகையில் கனிமத்தை எடுக்க முயற்சி களை மேற்கொள்ள வில்லை என்று நான் சொல் கிறேன். இது மிகவும் முக்கியமான விஷயமா கும். மாகாணத்தின் வளத்தைப் பெருக்கும் மூலகாரணமாகும்.

நெய்வேலியில் ஏறத்தாழ ஐம்பது கோடி டன் லிக்னைட் பூமிக்கடியில் உள்ளது என்று சொல்லப்படுகிறது. இது தோராயமான மதிப் பீடுதான். இதை நீங்கள் இன்னும் முறையாக ஆராய்ந்து பார்ப்பீர்களானுல் நடப்பில் மதிப் பிடப் பட்டுள்ளதை விட அதிகமாகவே கனிம வளம் கிடைக்கும் என்று நான் உறுதியாகக் கூறு கிறேன். ஐம்பது கோடி டன் என்றே வைத்துக் கொண்டாலும் இம் மாகாணத்திற்கு அதன் பெறுமதி என்னவென்பதை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஒரு டன் நிலக்கரியின் விலை ரூபாய் ஐம்பது ஆகும். பழுப்பு நிலக்கரியின் விலை அதில் பாதி அல்லது அதிலும் குறைவு என்று வைத்துக் கொண்டாலும், அதாவது ரூபாய் இருபது என்ருகிறது. எனவே நெய்வேலி யிலுள்ள பழுப்பு நிலக்கரியின் மதிப்பு ஆயிரம் கோடி ரூபாய்க்கு மேலாகிறது. இந்த ஒரு இனத்தின் வாயிலாகவே இவ்வளவு பெரிய தொகை கிடைக்கிறது. சுரங்கத் தொழிலில் ஒரே ஒரு அம்சம் தான் பழுப்பு நிலக்கரி, இது ஒன்றே நமது மாகாணத்திற்கு இவ்வளவு மூல தனத்தைச் சேர்க்கிறது.

இதை வேறு விதமாகச் சொல்வதானுல் நமது மாகாணத்தில் வாழும் மக்கள் ஒவ்வொரு வருக்கும் தலைக்கு இருநூறு ரூபாய் முதலாக அமை கிறது. ஆண், பெண், குழந்தைகள் உள்பட அனைவருக்கும் இந்த விகிதாச்சாரம் வருகிறது. இது நமது மாகாணத்தின் செல்வ வளத்தின் சரா சரியாகும். மாகாணத்திலுள்ள எல்லா மக்களை யும் கணக்கில் எடுத்துக் கொண்டால் இப்படி கணக்கு வருகிறது. சுரங்கத் தொழிலில் ஈடுபட் டவர்களை மட்டும் கணக்கில் கொண்டால், இந்த சராசரி தொகை ஆயிரக் கணக்கில் சென்றுவிடும். ஆகவே இத் தொழில் பற்றி அரசு சரியான கவனம் செலுத்தாமலிருப்பது மிகுந்த பரிதாபத் திற்குரியது ஆகும்.

இதன் தொடர்பாக அடுத்த ஆண்டு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அறியநான் விரும்புகிறேன். இவ்வருடம்இந்தஆய் வுக்காக அரசாங்கம் ரூபாய் ஐந்து லட்சத்தி முப்பத்தெட்டு ஆயிரம் ரூபாயை மட்டும் ஒதுக்கி யிருப்பதாக அறிகிறேன். இவர்கள் என்ன ஆராய்ச்சி செய்யப் போகிறுர்கள் என்று எனக் குத் தெரியவில்லை. இப்படிப்பட்ட முக்கியமான வளம் தரும் மூலப் பொருளை வெளியே எடுக்க தேவையான, போதுமான, நடவடிக்கைகள் எடுக் கப்படுகிறதா என்று மக்கள் ஆவலாக எதிர் பார்க்கிறுர்கள். அதைத்தான் அரசுக்கு எடுத்து வைக்க நான் விரும்புகிறேன். மாகாணத்திலுள்ள சுரங்கத் தொழிலை அரசு உதாசீனம் செய்து கொண்டே இருக்கிறது.

## சுரங்கப் பயிற்சிப் பள்ளி

பீஹார் மாநிலத்தில் ''தன்பாத்'' என்னு மிடத்தில் நடைபெறும் சுரங்கப் பயிற்சி பள்ளிக்கு சென்று பயிலும் மாணவர்களுக்காக ரூபாய் ஆயிரம் உதவித் தொகை அளிக்கப்படும் என இந்த ஆண்டு வரவு—செலவு திட்டத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த தொழில் பள்ளி பற்றி நான் ஏற்கனவே பலமுறை இம் மன்றத்தில் குறிப்பிட்டிருக்கிறேன், சூயஸ் கால்வாய்க்கு கிழக்கில் இதற்கென உள்ள ஒரே பள்ளியாகும் இது. இதே மாதிரியான பயிற்சி காசி ஹிந்து பல்கலைக் கழகத்தில் ஒன்று இயங்கி வருகிறது. இந்தக் கல்வி நிலையங்கள் தவிர சுரங்கப் பொறி யாளர்களையும் புவியியலாளர்களையும் பயிற்றுவிக் கும் ஆராய்ச்சிக் கூடங்கள் வேறு எங்கும் இல்லை.

இருப்பினும் நமது அரசாங்கம் தன்பாத் பள்ளியில் பயிலுவோருக்கு ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் ஆயிரம் உதவித் தொகையும், காசி ஹிந்து சர்வகலாசாலையில் பயிலுவோருக்கு ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் ஆறு நூறு உதவித் தொகையும் மட்டுமே அனுமதித்துள்ளது. இத்துறையில் இந்த அளவு தான் நமது அரசு அக்கறை கொண்டிருக் கிறது. இதிலிருந்து அதைத் தெரிந்து கொள்ள லாம். கடந்த ஆண்டு மைக்காவை தரம் பிரிப்ப தற்காக ஒரு தொகை ஒதுக்கப்பட்டிருந்தது. இந்த ஆண்டு இவ்வாறு செய்யப்படவில்லை. கடந்த வருடம் இதற்காக ஒதுக்கீடு செய்தவர் கள் இதை ஒரு கண் துடைப்பு நடவடிக்கை யாகவே செய்துள்ளார்களா என்று என்னுல் சொல்ல முடியவில்லை. அப்படி அவர்கள் எண்ணு வார்களேயானுல், அவர்கள் தவறு செய்து இருக் கிறுர்கள் என்று சொல்கிறேன். ஏனென்ருல் மைக்கா தொழிலில் தரம் பிரிப்பதில் ஏற்படும்

சுணக்கமும், தேக்கமும் உலகச் சந்தைகளில் நமது மைக்காவின் மதிப்பை பெரிதும் பாதித்து விடுகிறது.

நமது மாகாணத்தில் இருந்து அனுப்பப்படும் மைக்காவின் தரத்தைப் பேணி பாதுகாப்பதில் நமது அரசு ஒத்துழைக்க வேண்டும், பேணிப் பாதுகாக்க வேண்டும். விலை மதிக்க முடியாததொரு பொருளாகும் மைக்கா. நாட்டின் பாதுகாப்பிற்குப் பயன்படும் மிகவும் முக்கியமான ஒன்றாகும் இது. நவீனமான முறையில் இத் தொழில் செயல்படுவதற்கு நமது அரசாங்கம் எல்லா ஒத்துழைப்புகளையும் நல்க வேண்டும். இது மிகவும் அவசியமான ஒன்று. அதற்குத் தேவையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## தேசிய மயமாக்குதல் :

தேசிய மயமாக்கும் கொள்கை குறித்து மாண்புமிகு அமைச்சர் பேசும் பொழுது பாதுகாப்புத் துறை தொழிலையும், சில கனரகத் தொழிலையுமே தேசிய மயமாக்கப் போவதாகக் கூறினார். சமுதாய மேம்பாட்டிற்காகவே தொழில்களை நடத்த வேண்டும் என்று தொழில் அதிபர்களிடம் அரசாங்கம் வலியுறுத்த விரும்புவதாக அமைச்சர் குறிப்பிட்டார். லாபம் என்பது பொதுவானது. உற்பத்தியில் பங்கு பெறும் அனைவருக்கும் லாபத்தில் பங்கு உண்டு. முதலீடு செய்பவர்களும் தொழிலாளர்களும் பாதிக்கப் படாதவாறு லாபப் பங்கீடு இருக்க வேண்டும் என்றும் இது குறித்து சீக்கிரமே சில திட்டங்களை அமல் படுத்த சர்க்காரே உத்தேசித்துள்ளது என்றும் அமைச்சர் கூறினார். இது மிக முக்கியமான விஷயம். அதைப்பற்றி விபரங்கள் தரப்படவில்லை. இது என்ன அவ்வளவு பெரிய ரகசியமா? இந்தத் திட்டங்கள் என்ன என்பதை கோடிட்டோ அல்லது சூசகமாகவோ அரசாங்கம் தெரியப்படுத்தியிருக்கலாம். அந்தத் திட்டங்கள் பற்றி நாட்டு மக்கள் உண்மையிலேயே அக்கறையுள்ளவர்களாய் இருக்கிறார்கள். இது விஷயமாக அரசாங்கம் அதிகப்படியான தகவல்களைத் தந்திருக்க வேண்டும் என்பது இந்த அவையின் விருப்பமாகும்.

வேதியியல் தொழிலையும் கனரக தொழிலையும் ஏகபோக உரிமையாளர்களிடமிருந்து காப்பாற்ற போவதாக அமைச்சர் கூறினார். நான் இன்னும் சற்று அதிகமாகவே சொல்ல விரும்புகிறேன். ஏகபோகமாக ஒருசிலரிடம் தொழில்கள் சிக்கிக்கொள்ளாதபடி அரசாங்கம் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏகபோக உரிமைகள் தகர்த்தெறியப் பட வேண்டும். எந்த ஒரு தொழில் ஆனாலும் சரி, ஏகபோக தொழில் அதிபர்களிடம் சிக்காது பார்த்துக் கொள்ள வேண்டும். புதிதாக ஏகபோக தொழில் அதிபர்கள் உருவாகாமலும் தடுக்கப்பட வேண்டும். மனிதனை மனிதன் தொழில் துறையில் அடிமையாக்கக் கூடாது. தொழில்துறையில் ஏற்படும் சகலவிதமான லாபங்களும் அதில் ஈடுபட்டுள்ள அனைவராலும் நேர்மையான விகிதாச்சாரத்தில் பங்கிட்டுக் கொள்ளப்பட வேண்டும். அரசாங்கமும் இதைத் தான் வலியுறுத்திக் கொண்டிருக்கிறது. ஆகவே இது விஷயமாக அரசாங்கம் என்ன திட்டங்களை வைத்துள்ளது என்பதை அறிய முடிந்தால் இந்த அவை மகிழ்ச்சியடையும் என்று நான் சொல்கிறேன்.

## நிர்வாகச் செயல்பாடு:

நமது நிர்வாகச் செயல்பாடு பற்றி ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். மீன் எண்ணெய் துறையில் உபகரணங்களுக்கும் மற்றும் சாதனங்களுக்காகவும், ஒரு லட்சத்தி பத்தாயிரம் ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. இத் துறைக்கான மொத்தச் செலவே ரூபாய் இரண்டு லட்சத்தி தொண்ணூற்று இரண்டாயிரத்து தொள்ளாயிரம் ஒரு வியாபார மேலாளரையும் இதற்காக நியமித்திருக்கிறார்கள். ஆனால் கேரளா சோப் தயாரிப்பு நிலையத்திற்கு யாதொரு வியாபார மேலாளரும் நியமிக்கப்படவில்லை. ஏன் இந்தப் பாகுபாடு? இதிலுள்ள தர்க்க வாதத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இவ்வருடம் அந்த வியாபார மேலாளர் நீக்கப்பட்டு விடுவாரோ என்னமோ தெரியவில்லை. இந்த ஆண்டு இந்த அமைப்புக்கு பதிநான்கு லட்சத்தி எண் பத்தெட்டாயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. மீன் எண்ணெய் துறைக்கு மூன்று லட்சம் ரூபாய் மட்டும் ஒதுக்கப்பட்டுள்ளது என்றாலும் சோப் தொழிலுக்கு ஒரு வியாபார மேலாளரை நியமிப்பதின் அவசியத்தை அரசாங்கம் உணர்ந்திருக்கவில்லை. சோப்பு தொழில் ஒரு நல்ல எதிர்காலத்தைக் கொண்டது. இதை அரசாங்கம் உணர வேண்டும். அதை அபிவிருத்தி செய்வதற்கு முயல வேண்டும்.

எந்த வழியிலும் இத்தொழிலுக்கு தேக்க மேற் படுத்தக்கூடாது.

தொழிற் திட்டக்குழு உறுப்பினராக நான் இருக்கிறேன். அந்தக் குழு ஒரு அறிக்கையை சமர்ப்பித்துள்ளது. அந்த அறிக்கை இன்னும் வெளியிடப்படவில்லை. இதற்கிடையில் அவ்வறிக்கை பற்றி சில விமர்சனங்கள் வெளிவந்துள்ளன. அந்த அறிக்கை வெளியிடப்படும் வரை தயவு செய்து காத்திருக்குமாறு எனது நண்பர்களை நான் வேண்டிக் கொள்கிறேன். அறிக்கையில் என்ன கூறி இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளும் வரை நண்பர்கள் தங்களது விமர்சனங்களை நிறுத்தி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். நான் அந்தக் குழுவில் உறுப்பினராயிருந்தேன். அந்தக்குழு ஒரு அறிக்கையைத் தயாரித்துள்ள போதிலும், நானும் வேறு சில உறுப்பினர்களும் எங்களது கருத்துக்களைத் தனியாகத் தெரிவித்துள்ளோம். அதன் சிபாரிசுகளை அரசு பரிசீலனை செய்து அவற்றை அமல்படுத்த, வேண்டிய நடவடிக்கைகளை துரிதமாக எடுக்குமென்று நான் நம்புகிறேன். நமது மாகாணம் பின்தங்கிய மாகாணமாக இதுவரை அறிவிக்கப்பட்டுள்ள இழிநிலையை மாற்றி தொழில்துறையில் முன்னேறிய ஒன்றாக ஆவதற்கு இந்த அரசு ஆவன செய்யும் என நம்புகிறேன். இம் மாநிலம் தொழில் துறையில் பின் தங்கிய மாகாணமாக இருப்பதற்கு கொஞ்சங்கூட நியாயமே இல்லை. அதற்கான அவசியமேயில்லை. அதாவது நமது அமைச்சர்கள் பரந்த மனதுடன் இம் மாகாணத்தை தொழில் மயமாக்க முயற்சித்தல் வேண்டும்; அப்பொழுதுதான் நாம் முதன்மை ஸ்தானத்தில் இருக்காவிட்டாலும், இதர மாகாணங்களைப் போலாவது ஓரளவு தொழில் துறையில் முன்னேறிய மாகாணமாக ஆகிவிடலாம். இவ்வார்த்தைகளுடன் இந்த வெட்டுப் பிரேரணையை நான் ஆதரிக்கிறேன்.



## தமிழ்நாடு சிறுதொழில் சங்கத் தலைவர் திரு. எம். எஸ். ஜெயராமன், மதுரை

எனக்கும் மதுரை ஷரீப் எம். பிக்கும் பழக்கம். தொழில் சம்பந்தமாக டில்லி சென்ற சமயங்களில் ஷரீப் சாகிபுடன் அவரது அறையில் தங்கிக் கொள்வேன். பக்கத்து அறையில்தான் காயிதே மில்லத் தங்கியிருந்தார்கள். என்னை யார் என்று தெரிந்து கொண்டதும், என்னிடம் மிகவும் அன்பாக பழகினார்கள். நாயுடு வகுப்பைச் சேர்ந்தவன் என்று அறிந்ததும் மாமா முறை வந்து விட்டது. என்னை அன்பாக ''சமஸ்தானம்'' என்றுதான் அழைப்பார்கள்; சாப்பிடச் செல்லும் பொழுதெல்லாம் என்னைக் கூட்டிக் கொண்டுதான் செல்வார்கள். எல்லோரும் ஒன்றாகத்தான் சாப்பிடச் செல்வதுண்டு.

ஒருநாள் நான் வெளியிலிருந்து திரும்பி வர கால தாமதமாகி விட்டது. எனது வருகைக்காக காயிதே மில்லத் அவர்கள் காத்திருந்து நான் வந்த பிறகே எல்லோருமாகச் சாப்பிடச் சென்றோம். அவர்களது விருந்தோம்பலை என்னால் மறக்கவே இயலவில்லை. நான் அவர்கள் மதத்தைச் சேர்ந்தவனுமல்ல. அவர்களது கட்சியைச் சேர்ந்தவனுமல்ல. மூன்றாவது நபர் மூலமாக அவர்களுக்குப் பழக்கமான தற்காலிக விருந்தாளி. என்றாலும் டில்லியில் அவர்கள் என்னை நடத்திய விதம் என் உள்ளத்தை வெகுவாகத் தொட்டு விட்டது. ஒரு அரசியல்வாதியிடம் இப் பண்புகளை நான் எதிர்பார்க்கவேயில்லை.

அவர்களது மரணச் செய்தி கிடைத்ததும் மதுரை சேகப்பாவுடனும் இஞ்சினியர் ஹனிபாவுடனும் சென்னை சென்றேன். அவர்களது சடலத்தைப் பார்த்தபடியே மூன்று மணி நேரம் மெய் மறந்து அங்கேயே நின்றேன். இதற்கு மேல் என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை, அவர்கள் ஒரு மகான்.

# 18

## மங்குஸ்தானும் பாக்கிஸ்தானும்!

[21—4—48 அன்று மதராஸ் சட்டசபையில் இம்மாகாணத்தில் புதிதாக பழப்பண்ணைகளை ஆரம்பிப்பது குறித்து கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு அமைச்சர் K. மாதவமேனன் பதிலளிக்கையில், மாகாணத்தில் மங்களூர், கொடைக்கானல், இராஜமந்திரி ஆகிய மூன்று இடங்களில் ஆராய்ச்சிப் பண்ணைகள் ஆரம்பிக்கலாம் என அதற்காக நியமிக்கப்பட்ட துணைக்குழு சிபாரிசு செய்திருப்பதாகவும், இதை இந்திய அரசாங்கமும் ஆதரிப்பதாகவும் கூறினர். அத்துடன் அமைச்சர் மேலும் விளக்குகையில் ஏற்கனவே உள்ள பழ ஆராய்ச்சி பண்ணைகள் போதுமானவை என்றும் நெல்லை மாவட்டத்தில் உள்ள குற்ருலத்தில் மற்ருெரு ஆராய்ச்சிப் பண்ணை ஆரம்பிக்க அவசியமில்லை என்றும் சொன்னுர்.

அப்பொழுது தென்காசி தொகுதி சட்டமன்ற உறுப்பினரான திரு. D. துரைராஜ் பாண்டியன் ''குற்ருலமலைகளில் மங்குஸ்தான் என்ற ஒரு ரக பழம் விளைவது அரசுக்குத் தெரியுமா? அப்பழம் மிகவும் சுவையுள்ளது என்றும் இம்மாநிலத்தில் வேறு எங்கும் அது உற்பத்தியாகவில்லை என்பதும் அரசுக்குத் தெரியுமா?'' என்று வினவினுர்.

அமைச்சர் K. மாதவமேனன்: மங்குஸ்தான் பழம் மிகவும் ருசியுள்ளதுதான். நமது மாகாணத்தை சார்ந்த பரலியாறு மலை பகுதியிலும் அது பயிரிடப்படுகிறது. அப்பழமரத்தின் நாற்றுக்களும் அங்கு உற்பத்தி செய்யப் படுகின்றன.

காயிதேமில்லத்: குற்ருலத்தில் பழப்பண்ணை ஆரம்பிக்கத் தேவையில்லை என ஏன் அமைச்சர் கருதுகிருர்? மற்ற இடங்களில் சில ஆராய்ச்சிப் பண்ணைகள் இருந்த போதிலும், குற்ருலத்திலும் கூடுதலாக ஒரு பழப் பண்ணை ஏன் ஆரம்பிக்க கூடாது. அந்த இடம் குறித்து பாதகமாக யாதொன்றையும் அமைச்சர் கூருதிருப்பதினுல், குற்ருலம் பற்றி அவர் அனுதாபத்துடன் கவனிப்பாரா?

அமைச்சர் K. மாதவமேனன்: பழப்பண்ணை ஆரம்பிப்பது பற்றியதல்ல விஷயம். பழ ஆராய்ச்சி நிலையம் ஒன்றை ஆரம்பிப்பது தான் பிரச்சினையாகும். ஏற்கனவே பழ ஆராய்ச்சிப் பண்ணை ஒன்று இம்மாநிலத்தில் இயங்கிவருகிறது. எனவே கூடுதலாக மற்ருெரு ஆராய்ச்சிப் பண்ணை தேவையில்லை என அரசாங்கம் கருதுகிறது.

K. பிரமானந்த ரெட்டி: கனம் உறுப்பினர் மங்குஸ்தானைப்பற்றி கேட்டார். பாக்கிஸ்தானுக்கும் மங்குஸ்தானுக்கும் உள்ள வித்தியாசம் என்ன? (சிரிப்பு) (பதில் ஒன்றும் கூறப்படவில்லை)

T. துரைராஜ் பாண்டியன்: மிகவும் உயர்ந்த ரக பழமான மங்குஸ்தான் குற்ருலத்தில் மட்டும் தான் கிடைக்கிறது. உலகில் வேறு எங்கும் அது கிடைப்பதில்லை என்பதையும் அமைச்சர் அறிவாரா?

அமைச்சர் K. மாதவமேனன்: பரலியாற்றில் விளையும் மங்குஸ்தானை நான் சாப்பிட்டு பார்த்திருக்கிறேன். அந்த ரக மங்குஸ்தான் மிகவும் ருசியுள்ளது தான். மற்ற நாடுகளில் மங்குஸ்தான் இருக்கிறதா? இல்லையா என்பது எனக்குத் தெரியாது,

காயிதே மில்லத்: குற்ருலத்தில் ஏற்கனவே ஓரிடம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதாக அமைச்சரின் பதிலில் இருந்து தெரியவருகிறது. குறைந்த பட்சம் ஒரு பழப் பண்ணையாவது அங்கு ஆரம்பிக்கப்படலாம் என நான் எடுத்துக்கொள்ளலாமா!

அமைச்சர் K. மாதவமேனன்: அப்படி ஒரு பழப்பண்ணையை ஆரம்பிப்பது மாவட்ட உணவுக் கமிட்டியைப் பொறுத்த விஷயமாகும்.

# 19

# அரசியல் சட்டங்கள் குறித்து சட்டசபையில் விவாதம்

*[மதருஸ் மாகாண சட்டசபையில் இந்திய அரசியல் அமைப்பின் புதிய நகல் குறித்து விவாதங்கள் நடைபெற்றபொழுது 26—4—48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது]*

மாகாண சுயாட்சி குறித்து, நகல் அரசியலமைப்பை உற்று நோக்கும்பொழுது ஏமாற்றமே ஏற்படுகிறது. நமது நாட்டின் நிலவரங்களையும், விசேஷ தன்மைகளையும் கவனத்தில் கொண்டு புதிய அரசியலமைப்பை உருவாக்க வேண்டும். ஆதி காலம் தொட்டே நமது கிராமங்கள் சுய தேவைகளை பூர்த்தி செய்யும் வகையிலேயே அமைந்துள்ளன. கிராம சுயாட்சி அக்காலத்தில் அமலில் இருந்துள்ளது. ஆனல் நகல் அரசியலமைப்பைப் பார்க்கும்போது மாகாண சுயாட்சியே ஒரு கேள்விக்குறியாக எழுந்துள்ளது. மாகாண அரசின் அதிகாரங்கள் மிகவும் குறைக்கப்பட்டிருக்கின்றன. அதிகாரங்கள் அனைத்தும் மத்தியில் குவிக்கப்பட்டுள்ளன. நமதுநாடு பரந்துவிரிந்தது; நீண்ட நெடுந்தூரம் வியாபித்து இருக்கின்றது; ஏராளமான மக்கள் தொகையுடையது. எனவே இது போன்ற ஒரு நாட்டின் மாகாணங்களுக்கு போதுமான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்க வேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலுள்ள நிலைமை குறித்தும், அங்குள்ள மக்களைப் பற்றியும், மாநில அரசுக்குத்தான் நன்கு தெரிந்திருக்கமுடியும். எனவே அவைகளுக்கு அதிக அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

எல்லா மாநிலங்களையும் ஒன்றிணைத்துக் கொண்டு செல்லும் அதிகாரம் மட்டும் மத்திய அரசிடம் இருந்தால் போதுமானது. நாட்டின் பாதுகாப்பும் மத்திய அரசிடம் தான் இருக்க வேண்டும். உலகிலுள்ள ஏனைய நாடுகளில் அமல் படுத்தப்படும் அரசியலமைப்புகளிலிருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாக ஷரத்துகளை தேர்ந்தெடுத்து நமது அரசியலமைப்பை உருவாக்காமல், நமது நாட்டிலுள்ள விசேஷ நிலைமைகளை மனதில் கொண்டு அவற்றை உருவாக்கியிருக்க வேண்டும். முப்பது கோடி மக்களை கொண்ட ஒரு நாட்டில் எல்லா அதிகாரங்களையும் மத்தியில் குவித்து வைத்துக் கொள்வது நல்லதல்ல; உசிதமானதல்ல.

## மாநில சுயாட்சி

மாகாண சுயாட்சி வழங்கினல், நாடு பிளவுபட்டு விடலாமென அஞ்சப்படுகிறது. அதிகாரங்களை அளவுக்கு அதிகமாக மாகாணங்களுக்கு பகிர்ந்தளித்து விடக் கூடாதென்று நினைக்கிருர்கள். இதன் விளைவு என்னவாகும் தெரியுமா? மாகாண நிர்வாகத்தில் மத்திய அரசு அடிக்கடி குறுக்கிட்டுக் கொண்டிருந்தால் அந்த மாகாணத்தில் அதிருப்தியும், குழப்பமும் தான் உண்டாகும். அப்படி குழப்பங்கள் ஏற்படுவது நாட்டின் ஒற்றுமையை பாதிக்கும். இந்நாட்டின் வரலாற்றை மனதில் வைத்துக்கொண்டு நான் இதைக் கூறுகிறேன். உண்மையை சொல்கிறேன். அதிகாரம் ஒரு இடத்தில் குவியும் பொழுது ''பாஸிஸம்'' (சர்வாதிகாரம்) ஏற்படும்; பாஸிஸம் எதில் கொண்டுபோய் முடியும் தெரியுமா?

## அரிசி விலை

ஒரு உதாரணத்தை சொல்ல விரும்புகிறேன். அரிசி விலை இந்த மாகாணத்தில் உயர்ந்து கொண்டே செல்கிறது. இது குறித்து மாகாண பிரதமர் மத்திய அரசுக்கு கடிதம் எழுதினர். அத்துடன் அவரும் மற்ற அமைச்சர்களும் டில்லி சென்று இது விஷயம் குறித்து விவாதித்தனர். அரிசி விலையை குறைக்க நடவடிக்கை எடுக்கும்படி மத்திய அரசைக் கேட்டுக் கொண்டனர்: ஆனல் பலன் என்ன? ஒன்றும் நடக்கவில்லை. மாகாண அமைச்சர்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அமைச்சர்கள் பலர் அடிக்கடி டில்லிக்கு சென்று பின்னர் வெறும் கையுடன் திரும்பியது தான் மிச்சம். ஒவ்வொரு சிறு விஷயத்திற்கும், மாகாணத்தின் முதல் அமைச்சர் டில்லிக்கு போய் கொண்டே இருப்பாரானல் நிர்வாகம் எப்படி நடைபெறும்? எனவேதான் லட்சக்கணக்கான மக்களின் உயிர்களுடன் விளையாட வேண்டாம் என கேட்டுக் கொள்கிறேன். மாகாணங்களுக்கு போதிய அதிகாரங்கள் வழங்குவதன் மூலம் இம் மாதிரி நிலைமைகளை தவிர்க்கலாம்.

மத்திய அரசிற்கும், மாகாண அரசுகளுக்குமுள்ள அதிகாரங்கள் நமது நகல் அரசியலமைப்பில் தனித்தனியாகப் பட்டியல் போட்டுக் காட்டப் பட்டுள்ளன. மூன்றாவது பட்டியலில் மத்திய

என்ன? தங்களது கருத்துக்களை சுயமாகத் தெரிவிக்க விரும்புகிறார்கள் என்றுதான் பொருள். எல்லா மக்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க நீங்கள் விரும்புகிறீர்கள். அப்படியானல் மக்கள் கூட்டத்தைச் சார்ந்த ஒவ்வொரு சாராருக்கும், அந்த உரிமை கிட்டவேண்டும். ஒரு கூட்டத்தினுடைய உண்மையான குரலை அவர்களது பிரதிநிதிகள் வாயிலாக தெரிந்து கொள்ளும் முறைதான் தனித் தொகுதியாகும். 1916ம் ஆண்டே தனித் தொகுதி தேர்தல் முறை வழங்கப்பட்டுள்ளது. நெடுங்காலமாக பழக்கத்தில் இருந்துவரும் இந்த உண்மையை பறித்துக்கொள்வது நீதி ஆகாது. தனித்தொகுதி பற்றி சொல்லும்பொழுது அரசியலில் மதம் புகுத்தப்படுகிறதென குற்றம் சாட்டப்படுகிறது. மதம் என்பது ஏற்கனவே இருக்கிறது. எல்லோரும் ஏதாவது ஒரு மதத்தில் தான் பிறக்கிருர்கள். முஸ்லிம்கள் தான் மதவாதிகள் என்பதல்ல. பெரும்பான்மை சமுதாயத்தை சார்ந்தவர்களும் மத அடிப்படையில் தான் ஒன்று திரட்டப்பட்டு இருக்கிருர்கள். நாம் பெரும்பான்மை சமுதாயம் என்று கூறுகிறோமே அது எந்த அடிப்படையில்? மொழி அடிப்படையிலா? இல்லை, இமயத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலுள்ள மக்கள் பதினைந்து மொழிகளை பேசி வருகிருர்கள். எனவே இவர்கள் மொழியடிப்படையில் பெரும்பான்மை சமுதாயத்தை சார்ந்தவர்களாகயில்லை.

இன அடிப்படையில் இவர்கள் பெரும்பான்மையினரா? அப்படியும் இல்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக பல இனத்தை சார்ந்தவர்களாக அவர்கள் வாழ்ந்து வருகிருர்கள். பின் எப்படி இவர்கள் பெரும்பான்மையினர் என்று கருதப்படுகிருர்கள்? ஒருசில மதநம்பிக்கைகளை அவர்கள் அனைவரும் ஒத்துக்கொண்டுள்ளார்கள். கர்மா, மறுபிறப்பு, வேதாந்தங்கள் போன்ற பல கொள்கைகளை அவர்கள் ஏற்றுக் கொண்டுள்ளார்கள். முஸ்லிம் அல்லாதவர்களும் கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களும், பெரும்பான்மை சமுதாயத்தை சார்ந்தவர்களே, என்ற சம்பிரதாயம் இந்நாட்டில் கடைப்பிடிக்கப் பட்டு வருகிறது. எனவே மதக் கோட்பாட்டின் காரணமாகத்தான் அவர்கள் பெரும்பான்மை சமுதாயமாகக் கருதப்படுகிருர்கள். இந்நிலைமையில் முஸ்லிம்களை மட்டும் மத அடிப்படையில் செயல்படுகிருர்கள் என்று குற்றம் சாட்டுவது சரியல்ல.

## ஹாஜி R. சிலார்மியான் சாகிப்

முன்னாள் துணைமேயர், மதருஸ் மாநகராட்சி

காயிதேமில்லத் அவர்கள் 1968 ஜனவரி மாதத்தில் வடநாட்டுச் சுற்றுப் பயணத்தில் இருந்து திரும்பிய பொழுது மாநில முஸ்லிம் லீக்கின் தலைமையகமான 8, மரைக்காயர் லெப்பை தெரு கட்டிடத்திற்கு வந்தார்கள். பலரும் வந்து அவர்களை சந்தித்துக் கொண்டிருந்ததால் நேரம் போனதே தெரியவில்லை. சென்ட்ரல் ரயில் நிலையத்தில் வந்து இறங்கியவர்கள் பல மணி நேரம் ஆகிவிட்ட பின்னரும் குரோம்பேட்டைக்கு புறப்பட முடியவில்லை. இருட்டியும்விட்டது.

எனது காரில் காயிதேமில்லத்தை அழைத்துக் கொண்டு அவர்களது வீட்டில் விட்டுவிடுவதற்காகப் புறப்பட்டேன். அவர்களும் நானும் மட்டுமே காரில் இருந்தோம். நான் காரை ஓட்டிச் சென்றேன். அன்று குடியரசு தினம். மவுண்ட் ரோட்டில் மின்விளக்கு அலங்காரம் பிரமாதமாக இருந்தது. தலைவரவர்கள் இதை பார்த்து ரசித்தபடியும் என்னுடன் பேசிக் கொண்டும் இருந்தார்கள்.

எதிர்பாராத விதமாக ஒரு சந்திலிருந்து வெளிவந்த இராணுவ லாரி ஒன்று எங்களது காரில் வந்து மோதியது. கனமான இராணுவ லாரி மோதிய அதிர்ச்சியில் காரின் இரண்டு பக்கக் கதவுகளும் தானாகவே திறந்து கொண்டன. நாங்களிருவரும் தெருவில் தூக்கி எறியப்பட்டு விட்டோம். லாரியின் அடிப்பகுதியில் எங்களது கார் சிக்கிக் கொண்டது. நாங்கள் வெளியே தூக்கி எறியப்படாமல் இருந்திருந்தால் உயிருடன் தப்பி இருக்க முடியாது. விபத்து நடந்த பின் அந்த இடத்திற்கு வந்து பார்த்தவர்கள், கார் மாட்டி நிற்கும் நிலைமையைப் பார்த்து ஆச்சரியப்பட்டு போனார்கள். நாங்களாகக் கூட காரிலிருந்து வெளியே குதிக்கவில்லை. எங்களையும் அறியாமல் இருவரும் வெளியே தள்ளப்பட்டு விட்டோம். இறைவன்தான் எங்களை காப்பாற்றினன். காயிதேமில்லத் அவர்கள் புண்ணியத்தில் நானும் உயிர் தப்பினேன்.

தெருவில் மயங்கிய நிலையில் கிடந்த காயிதேமில்லத்தையும், என்னையும் இராயப்பேட்டை சர்க்கார் ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் சேர்த்திருந்தார்கள். சுமார் 20 நாட்கள் சிகிச்சைக்குப் பிறகு தலைவரவர்கள் நன்கு குணமடைந்து வீடு திரும்பினர்கள்.

# 20

# காயிதே ஆஜமும் கூட்டுத் தொகுதியும்

*[நகல் அரசியலமைப்பு குறித்து மதருஸ் சட்டசபையில் விவாதிக்கப் பட்ட பொழுது 28-4-48 அன்று அமைச்சர் கோபால் ரெட்டி இவ் விவாதங்களுக்கு பதிலளித்து பேசினுர். தனித் தொகுதி தேர்தல் முறைப்பற்றி அவர் குறிப்பிடும் பொழுது கீழ்க்கண்டவாறு கூறினுர்.]*

''எதிர்க்கட்சித்தலைவர் தனித் தொகுதி குறித்து இந்த அவையில் விரிவாகப் பேசினுர். அகில இந்திய முஸ்லிம் லீக்கின் தலைவர் காயிதே ஆஜம் முகம்மதலி ஜின்னு வகித்த பதவி பொருப்பில் அதிர்ஷ்டவசமாகவோ அல்லது துரதிஷ்டவசமாகவோ இன்று எதிர்க் கட்சித் தலைவராக இருப்பவர் அமர்ந்துள்ளார். எனவே அவர் இப்பிரச்சினையை தொட்டுவிட்டிருப்பதனுல் நான் அதற்கு பதில் சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன்.

''1916ம் ஆண்டில் செய்து கொள்ளப்பட்ட லக்னே ஒப்பந்தத்தின் பிரகாரம் தனித் தொகுதி தேர்தல் முறை அமலில் இருந்து வருகிறது. சடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக இந்த தேர்தல் முறையை நாம் நடைமுறையில் பரீட்சித்துப் பார்த்து விட்டோம். நமது நாட்டின் அரசியலமைப்பு விவாதங்களில் தனித் தொகுதி பற்றிய சர்ச்சையே அதிக இடத்தை பிடித்துக் கொண்டுள்ளது. பெரும் பாலான அரசியல் விவாதங்கள் இதற்கு மாற்று வழிகண்டு பிடிப்பதிலே செலவழிக்கப்பட்டன. மௌலானு முஹம்மதலி யோசனை, நேரு ரிப்போர்ட் யோசனை போன்ற பல திட்டங்கள் எடுத்து வைக்கப்பட்டன. ஆனுல், ஒவ்வொரு கட்டத்திலும் பேச்சு வார்த்தைகள் தோல்வியிலேயே முடிந்தன, கூட்டுத்தொகுதி யோசனையை முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்ள மறுத்ததே இதற்கெல்லாம் காரணமாகும்.''

ஜனுப் அப்துல் ஹமீதுகான்: சபாநாயகர் அவர்களே! ஒரு திருத்தம்; காயிதே ஆஜம் முகம்மதலி ஜின்னு பல யோசனைகளை முன் வைத்தது தனித் தொகுதி அடிப்படையில் அல்ல என்பதையும் கூட்டுத் தொகுதி அடிப்படையிலேயே தான் என்பதையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்; இது வரலாறு ஆகும்.

அமைச்சர் கோபால் ரெட்டி; 1926ம் ஆண்டிலிருந்து இந்திய அரசியலை நான் உன்னிப்பாக கவனித்து வருகிறேன். கூட்டுத் தொகுதியை காயிதே ஆஜம் முகம்மதலி ஜின்னு, ஒரு பொழுதும் ஏற்றுக்கொள்ளவில்லை என்பது எனது கணிப்பாகும்.

காயிதே மில்லத்: இந்த அவைத் தலைவரின் கவனத்திற்கு ஒரு விஷயத்தை கொண்டு வர நான் விரும்புகிறேன். 1936ம் ஆண்டிலேயே காயிதே ஆஜம் முகம்மதலி ஜின்னுவுக்கும் டாக்டர் ராஜேந்திர பிரசாத்திற்குமிடையில் இந்து - முஸ்லிம் பிரச்சினை குறித்து கூட்டுத் தொகுதி அடிப்படையில் ஒரு உடன்பாடு ஏற்பட்டது. 1936ம் ஆண்டிலேயே இந்த ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்ட போதிலும் அது நடைமுறைப்படுத்தப் படவில்லை. இதற்கான காரணம் என்ன என்பதை மக்கள் அறியவில்லை. 1937ம் ஆண்டில்தான் இந்த ஒப்பந்தம் பற்றியே பிரஸ்தாபிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தை முஸ்லிம்களோ, அல்லது முஸ்லிம் லீக்கோ அல்லது முஸ்லிம் தலைவர்களோ முறிக்கவில்லை. ஆனுல் வேறு ஒரு கட்சியினர் இந்த ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டார்கள். 1936ம் ஆண்டில் இந்த ஒப்பந்தத்திற்கு உடன்பட்ட கட்சியை விட்டு விட்டு, வேறு சில கட்சிகளை நோக்கி ஒரு சாரார் சென்றதினுல் தான் இந்த ஒப்பந்தம் முறிந்தது.

அமைச்சர் கோபால் ரெட்டி: அதெல்லாம் திரை மறைவில் நடந்த ரகசிய பேச்சுகளாகும். அது குறித்து இப்பொழுது நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.

காயிதே மில்லத்: பல ஆண்டுகளாக ஏற்பட்ட விளைவுகளின் காரணமாக ஓர் உண்மை

வெளியானது. இந்நாட்டின் அரசியல் சிக்கல் களைப் போக்கவல்லது, தனித் தொகுதி முறை மட்டுமே என்பதுதான், 1936-க்கு பிறகு வேறு எந்த மாற்று திட்டங்கள் பற்றியும், விவாதிக்கப் படவில்லை. எனவே தான் சகோதர நல்வாழ் விற்கும், நட்புறவிற்கும் ஏற்றது தனித்தொகுதி முறையே என்று இன்றும் நாங்கள் கூறி வருகிறோம்.

*அமைச்சர் கோபால் ரெட்டி:* தனித் தொகுதி மூலம் பல தேர்தல்கள் நடத்தப்பட்டு விட்டன. 1946ம் ஆண்டு தேர்தலிலும் முஸ்லிம்களுக்கு ஒதுக்கப்பட்ட இடம் முழுவதிலும் முஸ்லிம் லீக் கட்சியே நூற்றுக்கு நூறு வெற்றி பெற்றுவிட்டது. சட்டசபையில் இருபத்தி ஒன்பது ஸ்தானங்களையும், மேலவையில் ஏழு ஸ்தானங்களையும் அக்கட்சிதான் கைப்பற்றியது. ஆனால் விளைவு என்ன? இந்த நாட்டை, பொறுத்த வரை, அது இனிப்பான விஷயமாக இல்லை. வேண்டுமானால் இங்கு வந்திருக்கும் பிரதிநிதி களுக்கு அது இனிப்பானதாகயிருக்கலாம். நாட்டு மக்களுக்கு ஒரு நன்மையும் அது தரவில்லை,

P. போக்கர் சாஹிப்; சபாநாயகர் அவர் களே, நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்.

*அமைச்சர் கோபால் ரெட்டி:* இக் கேள்விக்கு இடமளிக்காதவாறும் தமது பேச்சை நிறுத்தாத வாறும் தொடர்ந்து பேசலானார்.



## 21

## ஏன் இந்த சந்தேகம்?

*[வால்யம் 74 பக்கங்கள் 180 முதல் 187 வரை]*

இந்த அவையில் பேசிய உள்துறை அமைச்சர் முஸ்லிம் லீக்கைப்பற்றி குறிப்பிட்டார். மற்றும் இரண்டு உறுப்பினர்களும் முஸ்லிம் லீக்கைக் குறித்து தகாத வார்த்தைகளை உபயோகித்தார் கள். இவையெல்லாம் அவசியமில்லாதவை, வேண்டத்தகாதவை. முஸ்லிம்களையும், முஸ்லிம் லீக்கைப்பற்றியும் மக்கள் மத்தியில் ஒருவித சந்தே கம் நிலவுகிறது என்று சொன்னார்கள். முஸ்லிம் பொது மக்களுக்கும், முஸ்லிம் அல்லாத பொது மக்களுக்குமிடையில் சந்தேகங்களை கிளப்புவது அரசியல்வாதிகள் தான். இந் நாட்டு அரசியலில் காங்கிரஸ் கட்சிக்கும், முஸ்லிம் லீக் கட்சிக்கு மிடையில் தகராறு, வழக்கு இருந்தது. ஆனால், அந்த வழக்கு தீர்க்கப்பட்டு விட்டது. காங்கிர ஸாரும், முஸ்லிம் லீக்கர்களும் ஏற்றுக்கொண்ட கௌரவமான உடன்படிக்கையின்படி அந்த விவ காரங்கள் எல்லாம் தீர்ந்துவிட்டன. அப்பொழுது நமக்குள் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி நாம் நடந்து வருகிறோமா என்பது கவனிக்கத் தக்கது. ஆனால் உலகம் இதை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருக்கிறது.

இந்த நாட்டிற்கு சுதந்திரம் வந்ததே அந்த உடன்படிக்கையின் மூலமாகத்தான். பின்பு ஏன் சந்தேகப்பட வேண்டும்? அந்த சந்தேகம் எங் கிருந்து வந்தது? நமது மாகாணத்தைப் பொறுத் தவரையில் இரு தரப்பினரும் நல்ல முறையில் தான் செயல்பட்டு வருகிறார்கள். இந்த நாட் டிற்கு மட்டுமல்ல, உலகம் முழுவதற்குமே இந்த மாநிலம் ஒரு முன் மாதிரியாக திகழுமென அனைவரும் எதிர்பார்க்கிறார்கள். அனால் ஒரு சிலர் சந்தேகங் கண்கொண்டு பார்ப்பதினால் எதிர் பார்த்த விளைவுகள், பலன்கள் கிடைக்குமா என்று சொல்வதற்கில்லை.

முஸ்லிம் லீக்கின் வரலாற்றையும், அதன் பாரம்பரியத்தையும் இங்கு சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். 1906-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது இந்த ஸ்தாபனம். 1940-ம் ஆண்டில் அல்ல; அந்த காலத்திலிருந்து இதுவரை அக்கட்சி மேடைகளிலிருந்து பேசப்பட்ட வார்த்தைகளை நீங்கள் கவனித்திருப்பீர்களானால் உண்மையைத் தெரிந்திருப்பீர்கள். இந்நாட்டின் கௌரவமான பிரஜைகளாக வாழவே அவர்கள் என்றும் விரும் புகிறார்கள். நாங்கள் கூறியவற்றை அமைச்சர்கள் தெரிந்து கொள்ளவில்லையானால் அது எங்கள் குற்றமல்ல, அரசாங்க ரிக்கார்டுகளைப் புரட்டிப் பார்த்தால் உண்மை விளங்கும். நான் பேசிய ஒவ்வொரு வார்த்தையும், உளவுத் துறையின ரால் பதிவு செய்யப்பட்டுள்ளன. முஸ்லிம் லீக் அன்று செய்ததென்ன, முஸ்லிம் லீக் இன்று செய்து கொண்டிருப்பதென்ன. அன்று என்ன

சொன்னது, இன்று என்ன சொல்கிறது, என்ன தவற்றை கண்டுபிடித்துள்ளீர்கள். அதில் எவை ஆட்சேபகரமானவை.

முஸ்லிம் லீகினுடைய சட்ட திட்டங்களில் முதலாவது குறிக்கோள் என்ன தெரியுமா?'' இந்திய யூனியனுடைய சுதந்திரத்தையும், மானத்தையும், மரியாதையையும். பேணிக்காப்பது, நிலை நிறுத்துவது, அதற்காக அரும்பாடுபடுவது: இந்நாட்டு மக்களுடைய வளத்துக்காகவும், சுபிட்சத்துக்காகவும் மகிழ்ச்சிக்காகவும், பாடுபடுவதும், முயற்சித்தலுமாகும் '' இந்த வாசகத்தில் தாங்கள் எதை ஆட்சேபித்திருக்கிறீர்கள்? எதைப்பற்றி சந்தேகப்படுகிறீர்கள்? அதை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

எங்களுடைய இரண்டாவது குறிக்கோள் ''மார்க்க, கலாச்சார, சமூக, கல்வி, பொருளாதாரம், அரசியல், ஆட்சி நிர்வாகம் ஆகியவைகளில் இந்திய யூனியனில் உள்ள முஸ்லிம்களுடையவும், இதர சிறுபான்மை மக்களுடையவும் உரிமைகளுக்காக பாடுபடுவதுடன், மற்றும் சட்டபூர்வமான உரிமைகளுக்காக பாடுபடுவதும், அவற்றை பேணிப் பாதுகாத்து நிலை நிறுத்த முயலுவதுமாகும்.'' இதில் என்ன தவற்றை கண்டுபிடித்துள்ளீர்கள்? சிறுபான்மையினரின் நலன்களைப்பற்றி நாட்டில் பேசக் கூடாதா?

சபாநாயகர் : எதிர்க்கட்சித் தலைவரின் பேச்சில் குறுக்காக நிற்க நான் விரும்பவில்லை. ஏற்கனவே கால தாமதமாகி விட்டபடியால் சுருக்கமாகப் பேசும்படி கேட்டுக் கொள்கிறேன்.

காயிதே மில்லத் : உள்துறை அமைச்சர் முஸ்லிம்களைப் பற்றி சந்தேகப்படுவதாகக் கூறியது ஆதாரமற்றது. அப்படி சந்தேகம் உண்டாகுமானால், இந்த மசோதா குறித்தும் அதன் விதிகள் குறித்தும் இங்கே விவாதிப்பதில் அர்த்தமே இல்லை. அதை விளக்கித்தான் நான் பேசிக் கொண்டிருக்கிறேன், முஸ்லிம் லீக்குடைய மூன்றாவது குறிக்கோளையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ''இந்திய யூனியனில் வாழும் முஸ்லிம்களுக்கும் இதர சமுதாயத்தவர்களுக்குமிடையில் பரஸ்பர நட்பை வளர்ப்பது, நல்லெண்ணத்தை உருவாக்குவது, சௌஜன்னியத்தையும், ஒற்றுமையையும் ஓங்க செய்வதுமாகும்;'' இப்படி சொல்வது தவறா? அல்லது பாவமா? இதில் என்ன சந்தேகம் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. மக்களை ஒற்றுமையாக இருக்க சொல்வது ஒரு தவறா? இங்குள்ள அமைச்சர்களைப் பார்த்து நான் கேட்கிறேன். உங்களுக்குள் வகுப்புவாதம் இருக்கிறதா இல்லையா? ரெட்டி மந்திரி என்று இருக்கிறார், முதலியார் மந்திரி என்று இருக்கிறார்.

அமைச்சர் கோபால் ரெட்டி : ஆனால், நாங்களெல்லாம் தனித்தனி தேசிய இனத்தவர் என்று கூறவில்லையே.

காயிதே மில்லத் : இந்த நாட்டில் பலதரப்பட்ட சமுதாயத்தவர் வாழ்கிறார்கள். அவர்களுக்குள் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது. உங்களுக்குள் வெவ்வேறு ஜாதியினர் என்று பேசும் பொழுது இது வகுப்புவாதமில்லையா? இதை முஸ்லிம்கள் சொன்னால் மட்டும் வகுப்புவாதம் என்று சொல்கிறீர்கள். வகுப்புவாதம் என்றால் என்ன?

சபாநாயகர் : எதிர்கட்சித் தலைவர் சட்ட விதியைப் பற்றி பேசுவதை விட்டு விட்டு வேறு எங்கோ சென்று கொண்டிருக்கிறார்.

காயிதே மில்லத் : நான் அந்த விதியின் மீது தான் பேசிக் கொண்டிருக்கிறேன். நாட்டில் நிலவும் விரோதங்களுக்கும், குரோதங்களுக்கும், இந்த விதிகளுக்குமிடையில் சம்பந்தம் இருக்கிறது. இந்த சூழ்நிலை நீடிக்க அனுமதிக்கப்படுமானால் பெரும் குழப்பங்கள் தான் உண்டாகும். அது குறித்து எச்சரிப்பதற்காகவே நான் இவ்வளவு விரிவாக பேசிக் கொண்டிருக்கிறேன்.

இது சம்பந்தமாக, அண்மையில் முஸ்லிம் லீக் நிறைவேற்றிய தீர்மானத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். தீர்மானத்தின் வாசகம் வருமாறு: ''நாட்டிலுள்ள பல்வேறு சமுதாயங்களுக்கிடையில் அமைதியையும் நல்லெண்ணத்தையும் உருவாக்கும் பொருட்டு இந்நாட்டிலுள்ள இதர கட்சிகளுடன் எல்லா சாத்தியமான வழிகளிலும் ஒத்துழைக்கும்படி முஸ்லிம்களை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.'' இதுதான் முஸ்லிம் லீக்கினுடைய லட்சியமாகும். இதில் எது குறித்து நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள்?



# 22

# நாங்கள் வரலாறு சமைக்கப் போகிறோம்

*[18-8-48 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் சட்டம் ஒழுங்கு பற்றி விவாதம் எழுந்த பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-]*

கலவரங்கள் நடைபெற்ற சமயங்களில் போலீஸார் முனைப்புடன் செயல்படவில்லை. துரிதமாக நடவடிக்கைகள் எடுக்கவில்லை. திருவண்ணாமலை, சேலம், மாவட்டத்தில் உள்ள இடப்பாடி, ஈரோடு, ராஜபாளையம் ஆகிய இடங்களில் வகுப்பு கலவரங்கள் ஆரம்பமான பொழுது போலீஸார் உடனடியாக செயலில் இறங்கவில்லை. நான்கு அல்லது ஐந்து மணி நேரம் கழித்து வீடுகளெல்லாம் தீப்பற்றி எரிந்து சாம்பலான பிறகே, இந்த இடங்களுக்கு போலீஸார் வந்து சேர்ந்திருக்கிறார்கள். எனவே துரித நடவடிக்கை எடுக்காததினால் தான் பொருட் சேதங்களும், உயிர்ச் சேதங்களும், ஏற்பட்டுள்ளன.

முஸ்லிம்களை வகுப்பு வாதிகளென பலரும் குற்றம் சாட்டுகிறார்கள். வகுப்பு வாதம் என்று எதை நீங்கள் குறிப்பிடுகிறீர்கள் என்பதை நான் அறிய விரும்புகிறேன். உங்கள் கூற்றை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு சமுதாயத்தில் பிறந்து விட்டிருப்பது ஒரு குற்றமா? அல்லது பாவமான காரியமா? எங்களை சிறுபான்மை சமுதாயத்தினர் என நீங்கள் அழைக்கிறீர்கள். அந்த சமுதாயத்தை சார்ந்தவன் நான் என சொல்லிக் கொள்வது தவறா?

இந்நாட்டில் பல சமுதாயங்கள் இருக்கின்றன. பல சமுதாயங்கள் இங்கே இருப்பது பாவமான காரியமானால், அந்த பாவத்தை முஸ்லிம்கள் செய்யவில்லை என்பது தெளிவு. வரலாற்றின் ஆரம்பத்தை சிறிது பின்நோக்கி பாருங்கள்.

ஆரியர்கள் இந்நாட்டிற்குள் வந்த பிறகுதான் பல சமுதாயங்கள் தோன்றின; பல ஜாதிகள் தோன்றின. சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்நாட்டில் புகுத்தப்பட்ட பிளவு சக்திகளுக்கு உதாரணமாக இன்று நம் முன்பு ஷெட்யூல்டு வகுப்பினர் இருந்து வருகிறார்கள். இந்த கீழ் ஜாதியினரை நாங்கள் உருவாக்கவில்லை. இந்த அவல நிலை இன்று இந்நாட்டில் நிலவுவதற்காக எங்களை குற்றம் சொல்வி யாதொரு பயனுமில்லை. பல சமுதாயங்களுக்குமிடையில் நல்லெண்ணமும், சுபிட்சமும் நிலவ வேண்டும் என்றுதான் நாங்கள் விரும்புகிறோம். அதற்காக நாங்கள் பாடுபட்டு வருகிறோம். முஸ்லிம் லீக்கின் லட்சியமே அதுதான்.

சென்ற ஆண்டு நாடு முழுவதும் கொந்தளிப்பான நிலைமை நிலவியபோது மதராஸ் மாகாணத்தில் அமைதி நிலவி வந்தது நீங்கள் அறிந்ததே. சந்தேகமும், பதட்டமும், வன்முறைகளும் நாடு முழுவதும் தலைவிரித்தாடியபோது மதராஸ் மாகாணத்தில் வாழ்ந்தவர்கள் நிதானமாகவே நடந்து கொண்டார்கள். உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டு விடவில்லை. நாட்டின் இதர பகுதிகளில் உள்ளவர்களுக்கு இம்மாகாணத்தில் வாழ்ந்தவர்கள் ஒரு முன் மாதிரியாக அமைந்தார்கள். நாட்டின் மற்ற இடங்களுக்கு நாம் சென்ற பொழுது அங்குள்ளவர்கள் எப்படி உங்கள் மாநிலத்தில் மட்டும் அமைதியாக வாழ்கிறீர்கள் என்று ஆச்சரியத்துடன் கேட்டார்கள். அப்பொழுது, நேரில் வந்து பார்த்துக் கற்றுக் கொள்ளுங்கள் என பெருமையோடு கூறினோம்.

## ஓநாய் ஆட்டுக்குட்டி கதை

ஆனால் இன்று நிலைமை மாறிக் கொண்டு இருக்கிறது. இது ஏன் மாறியது? எப்படி மாறியது? காங்கிரஸ், முஸ்லிம் லீக் ஆகிய இரு அரசியல் கட்சிகளும் தங்களுக்குள் ஒரு உடன்பாடு செய்து கொண்ட பிறகு இது எப்படி மாற முடியும். இந்த ஒற்றுமையுணர்வு எங்கே சென்றது. உடன்பாட்டின்படி நாம் நடந்து கொண்டால், இந்த குழப்ப நிலை உருவாகுமா? அந்தரங்க சுத்தியுடன் அந்த உடன்பாட்டை நாம் செயல்படுத்தவில்லை என்று தானே ஆகிறது.

இன்று எங்களைப் பார்த்து நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள். முன்பு நீங்கள் எப்படி இருந்தீர்கள். நீங்கள் இல்லாவிட்டாலும், உங்களுடைய முன்னோர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்று நீங்கள் இப்பொழுது கேள்வி கேட்கிறீர்கள். ஓநாய் ஆட்டுக்குட்டி கதைதான் ஞாபகத்திற்கு வருகிறது.

முஸ்லிம் லீக்கர்கள் வன்முறையை தூண்டி விட்டார்கள் என உங்களால் ஒரு சுண்டு விரலை அசைக்க முடியுமா? ஒரு உதாரணத்தை காட்டுங்கள் என்று கேட்டால், அதற்கு அவர்கள் கூறும் பதில் விநோதமானதாக இருக்கிறது. இன்று நீங்கள் அப்படியில்லை; நேற்று நீங்கள் அப்படித்தான் இருந்தீர்கள் என்று பதில் சொல்லப் படுகிறது. ஆட்டுக் குட்டியைப் பார்த்து, ஓநாய் சொன்ன பதில் போல இது இருக்கிறது.

ஒற்றுமைக்கு வழி வகுக்கும் முறை இதுதானா! நமக்குள் செய்து கொண்ட உடன்படிக்கை வரலாற்று முக்கியம் வாய்ந்தது. உலகத்திற் கெல்லாம் ஒரு முன் மாதிரியாக அமைந்தது. தங்களுக்குள் உள்ள பிரச்சனைகளை எப்படித் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதற்கு இது உலக மக்களுக்கு ஒரு முன் மாதிரியாகும். நல்லெண்ணத்துடன் அந்த உடன்பாட்டை அமல் படுத்த முன் வரவேண்டும். மகாத்மா காந்தி எதற்காக தனது உயிரை நீத்தாரோ அந்த கனவை நனவாக்க பாடுபடவேண்டுமா—இல்லையா? ஆனால் இன்று குற்றத்தை ஒருவர் மீது சுமத்தி தான் தப்பித்துக் கொள்ள வழி பார்க்கப்படுகிறது. இது மிகவும் துரதிர்ஷ்டமானது.

ஆண்டவனை முன் வைத்து ஒவ்வொரு வரும் தங்களது இதயங்களை சோதனை செய்து பார்க்க வேண்டும். இந்த அவல நிலைக்கு யார் காரணம் என்பதை வினவிக் கொள்ள வேண்டும்; பொறுப்பை தட்டிக் கழித்து விட்டு ஓடிவிட நினைக்காதீர்கள்.

இங்கு நான் ஒன்றை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எங்களைப் பற்றி நீங்கள் எவ்வளவு தான் சந்தேகப்பட்டாலும் சரி நாங்கள் எங்களுடைய பொறுப்புகளை நிறைவேற்றப் போகிறோம். உங்களுடைய விமர்சனங்களைப் பற்றி எங்களுக்கு கவலையில்லை. நாங்கள் ஒரு கௌரவமான இனத்தைச் சார்ந்தவர்கள். பண்பாடுடையவர்கள், நாங்கள் எதை சொல்கிறோமோ அதை செய்யக் கூடியவர்கள். வரலாற்றில் அதை நிரூபித்துக் காட்டியுள்ளோம். மீண்டும் அந்த பாடத்தை வரலாற்றில் நிரூபித்துக் காட்டப் போகிறோம்.

எனவே பழைய சம்பவங்களை நாங்கள் நினைத்துக் கொண்டிருக்கப்போவதில்லை, நாட்டின் இதர பகுதிகளில் வாழும் மக்களுக்கு மட்டுமல்ல, உலகம் முழுவதற்குமே நாங்கள் ஒரு முன் மாதிரியாக இருந்து செயலாற்றிக் காட்டுவோம்.

# 23

# ஹைதராபாத் போலீஸ் நடவடிக்கை

*[1948-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் ஹைதராபாத் சமஸ்தானத்தின் மீது மத்திய அரசு போலீஸ் நடவடிக்கை எடுத்து அது வெற்றிகரமாக முடிந்தபொழுது அச்செயலைப் பாராட்டி மதராஸ் சட்டசபையில் மத்திய அரசுக்கு வாழ்த்து தெரிவிக்கப்பட்டது. அது குறித்து 18-9-48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :-]*

இவ்வாழ்த்துத் தீர்மானத்தை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். நமது அரசு மேற்கொண்ட போலீஸ் நடவடிக்கை இவ்வளவு துரிதமாகவும், இவ்வளவு எளிதாகவும் முடிந்தது உண்மையிலேயே மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். இதற்காக மத்திய அரசுக்கு நான் பாராட்டு தெரிவித்துக் கொள்கிறேன். பிரதம மந்திரியும், துணைப் பிரதம மந்திரியும் கண்ணிமைக்கும் நேரத்திற்குள்ளாக காரியத்தை சாதித்துள்ளார்கள். குறைந்த அளவு பொருட்சேதத்துடனும், ஆட்சேதத்துடனும் மிகப் பெரிய வெற்றியை ஈட்டியுள்ளார்கள். சர்க்கார் மேற் கொண்ட நிலை நியாயமானதே என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது. ஹைதராபாத்திற்குள்ளாக வெற்றி நடைபோட்டது மக்களுக்கு மிகுந்த நிவாரணத்தையளித்துள்ளது. கன்னியாகுமரியிலிருந்து இமயமலை வரை அனைவரும் ஒரு நாட்டினரே என்ற கோஷம் நிலைநிறுத்தப்பட்டுள்ளது. இதைப் போல காஷ்மீர் பிரச்சனையும் நமது மக்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் வகையில் தீர்க்கப்படும் என நம்புகிறேன்.

ஹைதராபாத்தில் நமது ஏஜெண்ட் ஜெனரலாகயிருந்த திரு. K. M. முன்ஷி பாராட்டுக்குரியவர். இந்த மாபெரும் வெற்றியில் அவருக்கும் பங்கு உண்டு. நமது ராணுவமும், போலீஸ் படையும், தங்களது பணியை திறம்பட நிறைவேற்றியுள்ளனர். அவர்களும் பாராட்டுக்குரியவர்களே. வருங்காலத்தில் நமது நாடு சுபிட்சமாகவும், மகிழ்ச்சியுடனும் வாழ வேண்டுமென நான் ஆசைப்படுகிறேன். நம் நாட்டை சுபிட்சப் பாதையில் அழைத்துச் செல்ல நாம் அனைவரும் ஒன்றுகப் பாடுபட வேண்டும். உயிருள்ள சமுதாயமாக இந்திய சமுதாயம் இருக்க வேண்டுமானல், நாம் எப்பொழுதும் உஷாராகவும், கண்காணிப்புடனும் செயலாற்ற வேண்டும் என்பதை நினைவுபடுத்திக் கொள்கிறேன்.

°°

## 24

## அளவை—நிறுவை மசோதா

*மதருஸ் சட்டசபையில் அளவை-நிறுவை சம்பந்தமான மசோதா ஒன்றை அரசாங்கம் கொண்டு வந்த பொழுது 23-10-48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :-]*

இந்த மசோதாவை முழுமனதுடன் வரவேற்கிறேன். அதற்காக அரசாங்கத்திற்கு பாராட்டு தெரிவித்துக் கொள்கிறேன். நமது மாகாணத்தில் அமலில் உள்ள அளவை முறைகளையும், நிறுவை முறைகளையும் ஒன்று படுத்தும் வகையில் இந்த மசோதா அமைக்கப்பட்டுள்ளது. மாநிலத்தின் ஒவ்வொரு பகுதியிலும், ஒவ்வொரு விதமான நிறுவை முறைகள் நடைமுறையில் இருந்து வருகின்றன. எல்லோருக்கும் ஒரே மாதிரியான அளவை முறைகளை புகுத்தும் பொழுது ஆரம்பத்தில் வியாபாரிகளுக்கு சிறிது கஷ்டமாகத்தான் இருக்கும். நாட்டினுடைய மொத்த நன்மையை உத்தேசித்து எல்லோரும் பின்பற்றக் கூடிய ஒரு முறையைக் கடைபிடிப்பதுதான் நல்லது.

நமது மாகாணத்தில் மணங்கு (Madras Maund) என்ற ஒரு நிறுவை முறையை பின்பற்றுகிறோம். வங்காளத்தில் வழக்கத்திலுள்ள மணங்கு (Bengal Maund) இதிலிருந்து சிறிது வித்தியாசப்பட்டது. ஒரு பொருளை ரயில் மூலமாக வங்காளத்திற்கு அனுப்பும் பொழுது பல சிக்கல்கள் எழுகின்றன. இதை போக்கும் வகையில் இந்த மசோதா அமைந்துள்ளது. எனவே இது வரவேற்கத்தக்கது.

## 25

## நூலகங்கள் மசோதா

*மதருஸ் பொது நூலகங்கள் சம்பந்தமான மசோதா மதருஸ் சட்டசபையில் விவாதிக்கப்பட்ட பொழுது 25-10-48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :-]*

ஸ்தல நூலகங்கள் அமைப்பது குறித்து இந்த மசோதாவில் விளக்கப்பட்டுள்ளது. இவற்றை கண்காணிக்கும் பொருட்டு மாகாண நூலகக் குழு ஒன்று அமைக்கப்பட உள்ளது. இக்குழுவில் யாரெல்லாம் இடம் பெறுவார்கள் என்பதை அறிந்து கொள்ள இந்த அவைக்கு உரிமையுள்ளது. நூலக இயக்கத்தில் சம்பந்தப்பட்டவர்கள் அக்குழுவில் இடம் பெறுவதுடன், எல்லாத் தரப்பினருக்கும் உரிய பிரதி நிதித்துவம் அதில் கிடைக்கும் படியாக பார்த்துக் கொள்ள வேண்டும். இக்குழுவிற்கு அரசுக்கு ஆலோசனை கூறும் அதிகாரம் உள்பட போதிய அதிகாரமும், வழங்கப்பட வேண்டும். மதருஸ் நகரம் இக்குழுவின் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டதாக அமைக்கப்பட்டுள்ளது. மதருஸ் நகரை பொறுத்தவரை அதற்கென விசேஷமாக தொகைகள் ஒதுக்கப்படுமா? என்று தெரியவில்லை. அது விளக்கப்பட்டிருந்தால் நலமாக இருந்திருக்கும்.

## 26

## ஜூனியர், சீனியர் இஸ்மாயில்கள்

*[மதருஸ் சட்டசபையில் 1946-ம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் மதருஸ் சட்டசபைக்கு மொத்தம் இருபத்தொன்பது முஸ்லிம்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் முஸ்லிம் லீக் கட்சியைச் சார்ந்தவர்களே. முகம்மது இஸ்மாயில் என்ற பெயரில் இரு உறுப்பினர்கள் அந்த அவையில் இருந்தார்கள். ஒருவர் காயிதே மில்லத் அவர்கள்; மற்றொருவர் ஆந்திராவிலுள்ள சாமல்கோட் நகரைச் சேர்ந்த முகம்மது இஸ்மாயில் என்பவர். சபையில் கேள்விகள் எழுப்பும்போதும் நிருபர்கள் குறிப்பெடுக்கும் பொழுதும் முகம்மது இஸ்மாயில் என்ற பெயர் உபயோகப் படுத்தும்போது ஆள் மாருட்டம் பல சமயங்களில் தவிர்க்க முடியாததாகி விடுகிறது. இது விஷயத்தை காயிதே மில்லத் அவர்கள் 25-10-1948 அன்று அவையின் கவனத்திற்கு கொண்டு வந்தார்கள். அப்பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :-]*

''சபாநாயகர் அவர்களே, என் சொந்த விஷயம் பற்றி ஒன்றை உங்கள் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். முகம்மது இஸ்மாயில் என்ற பெயரில் ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்பினர்கள் இந்த அவையில் இருக்கிறார்கள். இதன் காரணமாக நிருபர்கள் குறிப்பு எழுதுவதிலும் மற்றும் ஒன்றிரண்டு அம்சங்களிலும் கூட குளறுபடிகள் நடைபெற்றுள்ளன. உதாரணமாக முகம்மது இஸ்மாயில் என்ற மற்றொரு உறுப்பினர் தமது சார்பாக கேள்விகளை எழுதி அனுப்பும் பொழுது, சம்பந்தப்பட்டவர்கள் நான் தான் கேள்வி கேட்கிறேன் என்று நினைத்துக் கொண்டு அவையில் பேச என்னை அழைத்து வருகிறார்கள். இதே போல நான் கேள்வி எழுதி அனுப்பும் சமயங்களில் என் பெயரை தாங்கிய மற்றொரு உறுப்பினர் அழைக்கப்பட்டு விடுகிறார். நான் யாரையும் குற்றம் சொல்ல விரும்பவில்லை. சகஜமாக எழக்கூடிய அசம்பாவிதங்கள் தான் இவை. மேலும் இம்மாதிரி குழப்பங்கள் எழக் கூடாது என எண்ணி நான் தங்களின் உதவியை நாடுகிறேன். நான் எழுதியனுப்பாத கேள்விகளுக்கு நான்தான் ''தகப்பன்'' என்ற சூழ்நிலை இனி உருவாகாதவாறு பார்த்துக் கொள்ளும்படி உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

சபாநாயகர் :- சாமல் கோட் இஸ்மாயில் என்ற உறுப்பினரை குறிப்பிடும்பொழுது, ''மிஸ்டர் இஸ்மாயில்'' என்றும், அது பெயர் உள்ள மற்றொரு உறுப்பினரை குறிப்பிடும் பொழுது, ''எதிர்க்கட்சித் தலைவர்'' என்று மட்டும் குறிப்பிட்டால் போதும் எனநினைக்கிறேன். பிரச்சினையை இந்த விதமாக தீர்த்து விடலாம்.

காயிதே மில்லத் :- ஆம், இப்புதிய யோசனை இப்பிரச்சினையை தீர்த்துவிடும்.

அமைச்சர் கோபால் ரெட்டி :- எதிர்க்கட்சித் தலைவரை ''சீனியர் இஸ்மாயில்'' என்றும், மற்றொரு உறுப்பினரை ''ஜூனியர் இஸ்மாயில்'' என்றும் அழைத்தால் என்ன? எதிர்க்கட்சித் தலைவருக்கு பொருத்தமான பதப்பிரயோகம் சீனியர் இஸ்மாயில் என்று நான் நினைக்கிறேன்.

சபாநாயகர் :- ''எதிர்க்கட்சித் தலைவர்'' என்று அழைத்தால் போதுமானது.

# 27
# இலங்கை - இந்தியர் பிரச்சினை

*[இலங்கை வாழ் இந்தியர்களுக்கு அந்நாட்டில் குடியுரிமை வழங்குவது சம்பந்தமான விஷயம் மதராஸ் மாகாண சட்டசபையில் விவாதிக்கப்பட்ட பொழுது 25-10-48 அன்று காயிதே மில்லத் கூறியதாவது :-*

இப்பிரச்சினை மத்திய அரசை சார்ந்துள்ளது என்ற போதிலும் இலங்கையில் வாழக்கூடிய இந்தியர்களில் மிகப் பெரும் பான்மையினர் இந்த மாகாணத்திலிருந்து சென்றவர்கள் என்பதை மறந்து விடுவதற்கில்லை. சிலோன் இந்திய காங்கிரஸ் இது குறித்து ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளது. அந்த அறிக்கையையும் இந்த அவையில் பொதுப்பணித்துறை அமைச்சர் நிகழ்த்திய உரையையும், ஆதாரமாக கொண்டு நாம் நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது.

இந்தியாவிலிருந்து இலங்கைக்குச் சென்ற தொழிலாளர்கள் தான் அந்நாட்டை வளப்படுத்தினார்கள், செழிப்புள்ளதாக்கினார்கள். நமது மக்கள் செய்த உழைப்பின் பலனாகவே இலங்கை வளம் மிக்கதானது. நமது தொழிலாளர்கள் அந்நாட்டிலேயே தங்க வேண்டுமானாலும் தங்கிக் கொள்ளலாம் அல்லது தாய்நாட்டுக்கு திரும்ப வேண்டுமானாலும் திரும்பி விடலாம், என்ற ஏற்பாட்டின் படியே அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு தங்குவோருக்கு இலங்கை குடியுரிமை வழங்கப் படும் என்று உறுதியளிக்கப்பட்டது. நாலைந்து தலைமுறையாக நமது நாட்டைச் சேர்ந்தவர்கள் அத்தீவில் நிரந்தரமாக வாழ்ந்து வருகிறார்கள். 1947ம் ஆண்டில் கூட அன்று இலங்கையின் பிரதமராகயிருந்த D. S. சேனநாயக்கா இலங்கை வாழ் இந்தியர்களுக்கு குடியுரிமை அளிக்கப்படும் என்று தெரிவித்தார். ஆனால் இன்று இந்திய தொழிலாளர்கள் மீது பலநிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன. இலகுவில் அவர்கள் குடியுரிமை பெறமுடியாதவாறு பல தடங்கல்கள் ஏற்படுத்தப் படுகின்றன.

சில ரக தொழிலாளர்களுக்கு குடியுரிமை வழங்க வேண்டுமானால், அவர்களது பாட்டனார், அல்லது முப்பாட்டனார் இலங்கையில் பிறந்திருக்க வேண்டுமென அண்மையில் இலங்கை பாராளு மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட புதிய மசோதா கூறுகிறது. அவ்வளவு காலத்திற்கு முந்திய பிறந்த நாள் சான்றிதழ்கள் எத்தனை பேரிடம் இருக்க முடியும்? நமது அவையில் இன்று நிறைவேற்றப் படும் தீர்மானத்தில் கண்டுள்ளபடி குடியுரிமை பெற விரும்புவோர் மீது அனாவசியமான நிபந்தனைகளை விதிக்காமல் இருக்கவும் தகுதி படைத்த அனைவருக்கும் தாராளமாக குடியுரிமை வழங்க வேண்டும் என்றும் வலியுறுத்தும் தீர்மானத்தை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

# 28

## 1949 திருமதி. சரோஜினி நாயுடு

*[இரங்கல் உரை 2—3—49]*

கவிக்குயில் திருமதி. சரோஜினி நாயுடு இன்று நம்மிடையே இல்லை. அவர் ஒரு சிறந்த மேதை. உயர்தரமான கவிதைகளை யாப்பதில் தலைசிறந்து விளங்கினார். அது மட்டுமல்ல, அவர் ஒரு நல்ல நிர்வாகியும் கூட. இந்நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் அவர் பிரதான பங்கு வகித்தார். தாய் நாட்டிற்கு ஆற்றவேண்டிய கடமைகளுக்கு குறிப்பாக பெண்களுக்கு அவர் ஒரு முன்மாதிரியாகத் திகழ்ந்தார். நாடு விடுதலை பெற்ற பிறகு வாளாவிருக்க அவர் விரும்பவில்லை. நாட்டைப்பேணிப் பாதுகாக்கும் பணியிலும் அவர் தீவிரமாக ஈடுபடலானார். பல நிர்வாகப் பொறுப்புகளை ஏற்று வெற்றிகரமாக செய்து காட்டினார்.

தாய் நாட்டின் ''புல்-புல்'' அவர். இந் நாட்டின் ''நைட்டிங் கேல்'' அவர். அவரது இனிய குரல் மக்களனைவரையும் வசீகரித்து விட்டது. அப்படி பட்டவருடைய இழப்பு உண்மையிலே மக்களுக்கு பெருத்த நஷ்டமாகும். அவருக்கொன்றும் அப்படி வயதாகிவிடவில்லை என்றாலும், எல்லாம் வல்ல இறைவனின் நாட்டம் அப்படி அமைந்துவிட்டது. அது தவிர்க்க முடியாதுதான். எனது ஆழ்ந்த அனுதாபங்களை அன்னார் குடும்பத்திற்கு உங்கள் மூலமாக தெரிவித்துக் கொள்கிறேன்.



# 29

## கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்துவிட்டது !

*4-3-49 அன்று காயிதே மில்லத், மதராஸ் மாகாண சட்டசபையில் உரை நிகழ்த்தும் போது கூறியதாவது:*

நமது மாகாணத்தில் கனிம வளங்கள் குறித்து தீவிரமான சர்வேக்கள் மேற்கொள்ளப் படவில்லை. புவியியல் நிபுணர்களிடம் பழைமையானதொரு கருத்து உண்டு. அதாவது இப் பூமி உருவான போது தென்னிந்திய பகுதி ஆரம்பத்திலேயே அமைந்து விட்டதென்றும், எனவே இப்பகுதியில் கனிமங்கள் பூமிக்கடியில் அவ்வளவாக இருக்காது என்றும் ஒரு கருத்து இந்தியப் புவியியல் நிபுணர்களிடம் ஏற்பட்டு விட்டது. எனவே அவர்கள் தென்னிந்தியாவில் ஆழமான ஆராய்ச்சிகளை மேற் கொள்ளவில்லை.

அந்த கருத்து சரியானதல்ல என இன்று வேறு பல நிபுணர்கள் தெரிவித்துள்ளார்கள். டில்லியிலுள்ள அரசாங்கத்தை நாட்டின் தென் பகுதியில் முனைப்புடன் சர்வேக்களை மேற்கொள்ளும்படி எவ்வளவோ எடுத்துச் சொல்லியாகி விட்டது. ஆனால் மத்திய அரசு அசைந்து கொடுப்பதாகயில்லை. குறைந்தபட்சம் தென் பகுதியில் புவியியல் இலாக்காவின் ஒருகிளையாவது அமைத்து பூர்வாங்க வேலைகளை மேற் கொள்ளுங்கள் என்றும் கெஞ்சிப்பார்த்தாகி விட்டது. ஆனால் ஒன்றும் நடக்கவில்லை.

இன்று என்ன நடந்து கொண்டிருக்கிறது? கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்த மாதிரி என தமிழில் ஒரு பழமொழி உண்டு. அந்த மாதிரித்தான் இன்று நடந்து கொண்டிருக்கிறது. தமிழ் நாட்டில் பழுப்பு நிலக்கரி இருப்பது இன்று அகஸ்மாத்தாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. தென் ஆற்காடு மாவட்டத்தில் மட்டும் நானூற்றுத் தொன்னூற்றெட்டு மில்லியன் டன் பழுப்பு நிலக்கரி பூமிக்கடியில் புதையுண்டு கிடப்ப

தாக பூர்வாங்க தகவல்கள் தெரிவிக்கின்றன. இது ஒரு தோராயமான மதிப்பீடுதான். அரசு வெளியிட்ட மதிப்பீட்டை விட இரண்டு மடங்கு அதிகமாக இக் கனிமவளம் இருக்கலாமென நான் நினைக்கிறேன்.

அமைச்சர் கோபால் ரெட்டி : கனம் உறுப்பினர்க்கு இது எப்படித் தெரியும்?

காயிதே மில்லத் : எனக்கு இத்துறையில் அனுபவம் உண்டு. அந்த இலாக்காவுடன் நீண்ட நாள் தொடர்புண்டு. எனது கருத்து தவறென இந்த அரசு நிரூபிக்க முன்வருமா? என நான் சவால் விடுகிறேன். (சிரிப்பு) ஐநூறு மில்லியன் டன் என்பது ஒரு உத்தேச மதிப்பீடுதான். அதைவிட இரண்டு மடங்கு பூமிக்கடியில் இருக்கிறது.

முன்னூறு மில்லியன் டன்கள் என்றே வைத்துக் கொள்வோம். இன்று நிலக்கரி டன் ஒன்றுக்கு சுமார் முப்பது முதல் முப்பத்தைந்து ரூபாய் வரை விற்கப்படுகிறது. பழுப்பு நிலக்கரி டன்னுக்கு இருபது ரூபாய் என்று வைத்துக்கொள்வோம். ஐநூறு மில்லியன் டன்னுக்கு ஆயிரம் கோடி ரூபாய் வருகிறது. நமது மாகாணத்தின் வளம் எவ்வளவு பெருகிவிட்டது என்று கணக்குப் போட்டு பாருங்கள். இம்மாகாணத்தில் வாழும் ஆண், பெண் குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் தலைக்கு இருநூறு ரூபாய் வீதம் மூலதனம் வருகிறது. நெய்வேலியிலும் அதை சுற்றிலுமுள்ள கனிம வளத்திலிருந்து இவ்வளவு ஆதாயம் வருகிறது, அங்கு பழுப்பு நிலக்கரி கிடைப்பது தெரியவந்து பல ஆண்டுகளாகின்றன, இதுவரை இந்த அரசு என்ன செய்து கொண்டிருக்கிறது?

---

## கனவு நனவாகிறது

### நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தைப் பற்றி 1989 ஜனவரி 27ம் தேதி முத்தாரம் இதழில் வந்த செய்தி

நெய்வேலி நிலக்கரி நிறுவனம் ஆரம்பிக்கப்பட்டது முதல் கடந்த ஜூலை வரை 110 மில்லியன் டன் நிலக்கரி வெட்டி எடுக்கப்பட்டுள்ளது.

இதற்கென நீக்கப்பட்ட மேல் மண்ணின் அளவு 1250 மில்லியன் டன்கள். வேறு விதமாக சொல்வதென்றால் இந்த மண்ணை தமிழகம் முழுவதும் சமமாகப் பரப்பினால் தமிழகம் நான்கு மீட்டர் உயரமாகிவிடும்.

இதுவரை வெளியேற்றப்பட்டுள்ள நிலத்தடி நீரின் அளவு 1720 மில்லியன் டன்கள். அதாவது (12 வருடங்களுக்கு சென்னை நகருக்கு தேவைப்படுகிற அளவு)

மின் உற்பத்தி இதுவரை 70.285 மில்லியன் யூனிட்கள்.

**பாலநிவாஸ்**

நன்றி : முத்தாரம் 1989 ஜனவரி 27

---

தமிழ் நாட்டில் பழுப்பு நிலக்கரி அபரிமிதமான அளவில் கிடைக்கிறது என்ற தகவலை முதன் முதலில் தமிழக மக்களுக்குத் தெரிவித்த அரசியல் தலைவர் காயிதே மில்லத் அவர்களே. 1948ம் ஆண்டில் மதராஸ் சட்டசபையில் இது குறித்து அவர்கள் பேசியுள்ளார்கள். அத்துடன் நின்றுவிடாது ஆண்டு தோறும் இப்பிரச்னையை சட்டமன்றத்தில் எழுப்பி தமிழக அரசை முடுக்கிவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அன்றைய மாகாண அரசும் மத்திய அரசும் மிகவும் காலம் தாழ்த்தியே நெய்வேலி பழுப்பு நிலக்கரி குறித்து கவனம் செலுத்த முற்பட்டன. பூர்வாங்கப் பணிகள் அனைத்தும் முடிந்து நெய்வேலியில் மின்சார உற்பத்தி 1961-62ம் ஆண்டுவாக்கில்தான் ஆரம்பமானது. கடந்த இருபத்தைந்து ஆண்டு காலத்தில் நெய்வேலி அனல் மின்சார நிலையம் விசுவ ரூபத்தில் வளர்ந்து

விட்டது என்பதை அதனை உற்று கவனித்து வந்திருப்பவர்கள் புரிந்து கொள்ளலாம்.

ஆரம்பத்தில் தமிழ்நாட்டிற்கு மட்டுமே மின்சாரம் வழங்கிக் கொண்டிருந்த நெய்வேலி கார்ப்பரேஷன், இன்று தென்னிந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களுக்கும் (ஆந்திரா, கர்நாடகா, கேரளா. பாண்டிச்சேரி) கணிசமான அளவு மின்சப்ளை செய்து வருகிறது. நிபுணர்கள் கணக்குப்படி கி, பி. 2000ம் ஆண்டுவாக்கில் நெய்வேலியில் 4200 மெகவாட் மின்சாரம் உற்பத்தி செய்யப்படலாம்.

முதலாவது சுரங்கம் 1960ம் ஆண்டு வாக்கில் வெட்டப்பட்டது. இரண்டாவது சுரங்கம் இப்பொழுது வெட்டப்பட்டு வருகிறது. மூன்றுவது சுரங்க வேலைகள் இன்னும் சில ஆண்டுகளில் துவங்கப்படலாம்; நான்காவது ஐந்தாவது சுரங்கம் வெட்டுவதற்கும் கூட வாய்ப்புகள் இருக்கின்றன.

இப்பொழுது ஆண்டு ஒன்றுக்கு சுமார் 100 கோடி ரூபாய் லாபம் ஈட்டி வருகிறது நெய்வேலி கார்ப்பரேஷன். அதனுடைய மூலதனம் இன்று 1024 கோடி ரூபாயாகும். மின் உற்பத்தி போக, ரசாயன உரத்தொழிற்சாலையும் அங்கு ஆரம்பிக்கப்பட்டு வருகிறது. மின்சாரம் தயாரிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட பின்பு அந்த நிலக்கரி, அடுப்புக் கரியாகத் தயாரிக்கப்பட்டு மாநிலம் பூராவும் எரி பொருளாக (லீக்கோ) விற்கப்படுகிறது என்பதனையும் அனைவரும் அறிவர்.

மத்திய அரசாங்கத்தினுல் நடத்தப்படும் இந்த கார்ப்பரேஷன் தமிழ்நாடு அரசுக்கு ஆண்டு ஒன்றுக்கு 17 1/2 கோடி ரூபாயை மானியமாக (Royalty)க் கொடுக்க முன்வந்துள்ளது. 1940-45 வாக்கிலேயே தமிழ்நாட்டிலுள்ள நிலக்கரி வளம் குறித்து காயிதே மில்லத் அவர்கள் கண்ட கனவு இன்று நனவாகி வருகிறது என்பது நம்மனைவருக்கும் பெருமை தரும் விஷயமாகும்.

# 30

# 1949-ம் ஆண்டு பட்ஜெட் பேச்சு

[மதருஸ் மாகாண சட்ட சபையில் 1949ம் ஆண்டுக்கான வரவு-செலவு திட்டம் பற்றி விவாதிக்கப்பட்ட பொழுது 4-3-49 அன்று காயிதே மில்லத் கூறியதாவது]

இக் கல்வி திட்டத்திலிருந்து மதத்தை பிரிக்கும் முயற்சியில் அரசாங்கம் ஈடுபட்டுள்ளது. லோகாயத கோட்பாடுகளில் மூழ்கிக் கிடந்த மேற் மத்திய மக்களே இன்று மார்க்கக் கல்வியின் அவசியத்தை உணர்ந்து வரும் கால கட்டத்தில் கடவுள் பற்றிய சிந்தனைக்கு நாம் தடை விதித்துக் கொண்டிருக்கிறோம். இளமைப் பருவத்தில்தான் மதத்தைப் பற்றி மாணவர்களுக்கு கற்றுக் கொடுக்க வேண்டும். அப்பொழுது தான் அது அவர்கள் மனதில் நன்கு பதியும். அரசு பள்ளிக் கூடங்களில் மாணவர்களுக்கு அவரவர் மார்க்கங்களைக் கற்றுக் கொடுப்பது தவறில்லை.

நீதித்துறையையும், நிர்வாகத்துறையையும் பிரிப்பது பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கடந்த சில காலமாக சிவில் கோர்ட்களுக்கும் அரசாங்கத்திற்குமிடையில் ஒருவகையான பனிப் போராட்டமே நடந்து கொண்டிருக்கிறது. நீதித்துறை சுதந்திரமாக செயல்பட வேண்டும், அதில் அரசாங்க குறுக்கீடு இருக்கக் கூடாது. இந்த சீர்திருத்தத்தை துரிதமாக செயல்படுத்த போவதாக மாகாண முதலமைச்சர் சில தினங்களுக்கு முன்பு கூறினர். அவ் வாக்குறுதி இன்னும் அமல் படுத்தப் படவில்லை. நீதித்துறை சுதந்திரமாக இயங்குவதற்கான தேதியை சீக்கிரமே குறிப்பிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

## அசோக சக்கரவர்த்தி

சமுதாய சீர்திருத்த நடவடிக்கைகளிலும் இந்த அரசு முனைப்புடன் செயல்பட வேண்டும். மதுவிலக்கு, சூதாட்டங்களை தடை செய்தல், குதிரைப் பந்தயத்தை தடை செய்தல் போன்ற சமூக சீர்திருத்தங்கள் குறித்து இந்த அரசு சட்டங்களை இயற்றியிருப்பது வரவேற்கத் தக்கது. ஆனுல் சமுதாய சீர்திருத்தங்கள் என்ற பெயரால் தனி மனிதனின் சுதந்திரத்திலும், அவனுடைய அந்தரங்க வாழ்க்கையிலும், ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு அதிகமாக தலையிடுவது நல்லதல்ல. தனி மனித சுதந்திரத்தை கட்டுப்படுத்த ஒரு

வரம்பு இருக்க வேண்டும்; தனி மனிதனின் உரிமைகளில் அளவுக்கு அதிகமான அரசாங்க தலையீடு இருப்பது ஆபத்தானதாகும்.

வரலாற்றிலிருந்து ஒரு நிகழ்ச்சியை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அசோக சக்கரவர்த்தி இந்திய வரலாற்றில் மிகவும் பிரபலமானவர். வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் மிகவும் பாராட்டி புகழாரம் சூட்டியுள்ளார்கள். அவர் நீதிவானாகத்தான் ஆட்சி புரிந்தார். மக்களிடம் அன்பாகத்தான் நடந்து கொண்டார். ஆனால் மக்களின் அன்றாட வாழ்க்கையில் அவரது ஆட்சியின் குறுக்கீடுகள் அளவுக்கு அதிகமாக போய் விட்டன. தாங்கள் அடக்கி ஒடுக்கப் படுவதாக மக்கள் உணர ஆரம்பித்தனர். மக்களுக்கிடையில் அதிருப்தி வளர ஆரம்பித்தது அசோக சக்கரவர்த்தியின் கடைசி காலத்தில் அவரது பிரஜைகளிடத்தில் ஒருவகையான கொந்தளிப்பு ஆரம்பமாகி விட்டது. அவர் இறந்த பொழுது அதை அவரது பிரஜைகள் தங்களுக்கு கிடைத்த நிவாரணமாகவே கருதினார்கள். அசோகரின் வாரிசுகளால் நிம்மதியாக ஆட்சி நடத்த முடியவில்லை. காலத்திற்கு ஒவ்வாத குறுக்கிடுகள் ''சீர்திருத்தம்'' என்ற பெயரால் மக்கள் மத்தியில் கட்டாயமாக அமல் படுத்த அந்த சக்கரவர்த்தி முற்பட்டதே காரணமாகும். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சி இது.

ஆனால் இன்று மக்கள் விஷயம் புரிந்தவர்களாய் இருக்கிறார்கள். தங்களுக்குள்ள உரிமைகளை தெரிந்து வைத்திருக்கிறார்கள். தனி மனித சுதந்திரம். ஜனநாயகம், குடியரசு போன்ற கோஷங்கள் முழங்கிக் கொண்டிருக்கும் காலமிது. இக் கால கட்டத்தில் சமுதாய நடவடிக்கைகளில் அரசாங்கத்தின் தலையீடுகள் ஓரளவுக்குத்தான் இருக்க வேண்டும்.

நஞ்சை நிலங்களில் கட்டிடங்கள் கட்டகூடாது என சட்டம் செய்யப்படுகிறது. இளம் வயதினர் புகை பிடித்தால் அதற்காக அவர்களது பெற்றோர்களை அல்லது பெட்டிக் கடைக்காரர்களை தண்டிக்க வேண்டும் என அரசாங்கம் பயமுறுத்துவது அவ்வளவு நல்லதல்ல. உணவு பொருட்கள் உற்பத்தியாகும் நிலங்களில், யாரும் பைத்தியக்காரத்தனமாக போய் வீடுகள் கட்டிக் கொண்டிருக்க மாட்டார்கள். அப்படி யாராவது நஞ்சை நிலத்தை கட்டிடங்களுக்காகப் பயன் படுத்த முற்பட்டால் அதற்கு நியாயமான காரணங்கள் இருக்கலாம்; வேண்டுமென்றே யாரும் நஞ்சை நிலங்களை பாழடிக்க மாட்டார்கள். இம் மாதிரி சில்லறை விஷயங்களில் எல்லாம் அரசாங்கம் தலையிட்டு கொண்டிருக்கக் கூடாது.

ஒரு சிறு கட்டடத்திற்கு அருகில் கூட, ஒரு ஏழை விவசாயி கிணறு தோண்ட வேண்டுமென்றால் அதற்காக அவன் மாவட்ட ஆட்சியாளரிடமிருந்து அனுமதி பெற வேண்டுமென விதி செய்யப்பட்டுள்ளது. ஒரு பாமர விவசாயி இதற்கெல்லாம் மாவட்ட ஆட்சியாளரையோ அல்லது தாசில்தாரையோ போய் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? அதற்கான வசதிகள் அவனுக்கு இருக்கின்றனவா? எனவே நடைமுறை சாத்தியமான காரியங்களில் அரசாங்கம் ஈடுபட வெண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

## 31

# கல்விக் கொள்கை

*[மதராஸ் சட்ட சபையில் கல்வி மானியக் கோரிக்கையில் கலந்து கொண்டு 14-3-49 அன்று பேசும் பொழுது காயிதே மில்லத் கூறியதாவது]*

முதலாவது வகுப்பிலிருந்தே ஆங்கில மொழியும் மாணவர்களுக்கு கற்றுக் கொடுக்கப்படுவது வரவேற்கத்தக்கதே. தாய்மொழியுடன் சேர்த்து இதையும் கற்றுக் கொடுக்கலாம். பிஞ்சு உள்ளங்கள் பல மொழிகளை ஏக காலத்தில் கற்றுக் கொள்வதென்பது சிறிது கஷ்டமானதே; என்றாலும் ஆங்கில மொழியின் அவசியத்தை உத்தேசித்து அதையும் ஆரம்பத்திலிருந்தே கற்றுக் கொடுக்க வேண்டியதுதான்.

பல மொழிகளைக் கொண்ட பரந்து விரிந்த பெரிய நாடான இந்தியா, ஒன்றுபட்டு இருப்பதற்கும் வெளிஉலக விவகாரங்களையும், விஞ்ஞான ஆராய்ச்சிகளையும் தெரிந்துகொள்வதற்கும் ஆங்

கில மொழி மிகவும் அவசியமானதாகும். இந்நாட்டில் வாழும் மக்களுடைய தாய்மொழியல்ல ஆங்கிலம். இருப்பினும், அம் மொழியின் இன்றியமையாதத் தன்மை நாட்டில் உணரப்பட்டுள்ளது. எனவே முதல் வகுப்பிலிருந்தே மாணவர்களுக்கு ஆங்கில மொழியையும் கற்றுக் கொடுக்கலாம் என்பது எனது கருத்தாகும்.

ஏக காலத்தில் பல மொழிகளை மாணவர்கள் மீது திணிப்பது சிரமமானதே என்ற போதிலும் நம்முடைய நாட்டை பொறுத்தவரையில் அது தவிர்க்க முடியாததாக உள்ளது. ஹிந்துஸ்தானி மொழியை நாம் கற்க வேண்டியவர்களாய் இருக்கிறோம். சர்வதேச மொழி என்பதற்காக நாம் அதை கற்கவில்லை. இது நமது தேசிய மொழியாகயிருப்பதினுல், அதற்கான அவசியம் எழுந்துள்ளது. என் அபிப்பிராயத்தில் ஹிந்துஸ்தானி மொழியை நான்காவது வகுப்பு வரை அந்தந்த பிராந்தியத்திலுள்ள மொழிவாயிலாகவே கற்றுக் கொடுக்கலாம் என்பதாகும், உதாரணமாக இப் பகுதிகளில் தமிழ் தாய் மொழியாகவுள்ளது. முதலாம் வகுப்பிலிருந்து நாம் தமிழை சொல்லிக் கொடுக்கிறோம். தமிழ் எழுத்துக்கள் வாயிலாகவே ஹிந்துஸ்தானி வார்த்தைகளை நான்காவது வகுப்புவரை மாணவர்களுக்கு சொல்லிக் கொடுக்கலாம். ஐந்தாவது வகுப்பிலும் அதற்கு பின்னரும் அம்மாணவர்களுக்கு ஹிந்துஸ்தானி மொழியை அதனுடைய லிபியிலேயே சொல்லிக் கொடுத்துவிடலாம். ஹிந்துஸ்தானியை தேவநாகரி லிபியிலும், உர்தூ லிபியிலும் கற்றுக் கொள்ள வேண்டியிருப்பதினுல் மாணவர்களுக்கு நான்காவது வகுப்பு வரை இதை தவிர்த்து விடலாம்.

முஸ்லிம்கள் கல்வியைப் பொறுத்தவரை, நாங்களும் கல்வியமைச்சரும் நேரில் பேசிக் கொண்டுள்ளபடி தற்போதைய நிலவரமேவருகிற மேலும் ஐந்து ஆண்டுகளுக்கு நீடிக்கவேண்டும் என முடிவாகியுள்ளது. அதன் பின்னர் அன்றைய சூழ்நிலைகளுக்கேற்ப இப்பிரச்சனையை மாற்றிக் கொள்ளலாம் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. எங்களுக்குள் பேசப்படும் விஷயங்களில் ஒன்று. கட்டாய ஆரம்பக்கல்வி போதிக்கப் படும் மாணவர்களுக்கு அவர்களது தாய் மொழியிலேயே அக் கல்வி கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் என்பதாகும். இங்கு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையில் ஒரு சில பள்ளிக்கூடங்களில் பிராந்திய மொழியில் தான் கல்வி கற்றுக் கொடுக்கப்படும் என்றும் சில மாணவர்களுடைய தாய்மொழி வேறாக அமைந்திருந்தால் அவர்கள் பிராந்திய மொழிக்கு மாற்றிக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சிறிது நேரத்திற்கு முன்பு என்னிடம் பேசிய கல்வியமைச்சர் தாய் மொழியிலேயே அந்த மாணவர்கள் தங்கள் கல்வியை தொடரலாம் என தெரிவித்துள்ளார். அதற்காக அவருக்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

பெண்கள் பள்ளிக் கூடங்களுக்கு பெண் ஆய்வாளர்களைத்தான் நியமிக்க வேண்டும் என்பது எங்கள் கோரிக்கையாகும். நெடுங் காலமாக இந்த நடைமுறை தான் நமது மாகாணத்தில் பின்பற்றப்பட்டுள்ளது. இதை மாற்ற இந்த அரசு நினைக்கிறது. அதை தவிர்க்கு மாறு கேட்டுக் கொள்கிறேன். முஸ்லிம் பெண்கள் கல்வியில் மிகவும் பின் தங்கியிருக்கிறார்கள். எனவே அவர்களுக்காக பெண்கள் கல்லூரி ஆரம்பிப்பது குறித்து அரசாங்கம் சிந்திக்க வேண்டும். வாணியம்பாடியிலுள்ள இஸ்லாமியக் கல்லூரிக்கு கடந்த நான்கு ஆண்டுகளாக அரசாங்க மானியம் கொடுக்கப்படவில்லை. அக் கல்லூரிக்கு ஒரு மாணவர் விடுதி அவசியம் என சர்வகலாசாலை பரிந்துரை செய்துள்ளது. அதற்காகவும் சர்க்கார் மானியம் வழங்கப்பட வேண்டும்.

மதராஸில் முஸ்லிம் அனாதை நிலையம் ஒன்று உள்ளது. இந்த மாகாணத்திலேயே அது ஒன்று தான் முஸ்லிம்களுக்கான அனாதைகள் விடுதியாகும். அதற்கு மானியம் கொடுக்க வேண்டுமென அரசாங்கத்தை கேட்டு இருந்தோம். மாண்புமிகு அமைச்சர் இதற்காக இப் பொழுது ரூபாய் முப்பத்தைந்து ஆயிரம் தருவதாக வாக்களித்துள்ளார்கள்; மிக்க நன்றி. அந்த அனாதை நிலையத்திற்கு கட்டிடம் மிகவும் தேவையாகயுள்ளது. மூன்று அல்லது நான்கு லட்ச ரூபாய் பிடிக்கும். அத்தொகையையும் தந்து உதவுமாறு அரசாங்கத்தை கேட்டுக் கொள் கிறேன்.



# 32

## காந்திஜீயின் உண்மையான வாரிசு யார்?

*[மதராஸ் மாகாண சட்ட சபையில் 16—3—49 அன்று காயிதே மில்லத் பேசும் பொழுது கூறியதாவது.]*

இந்த அவையில் எதிர்க்கட்சியாக செயல்பட்டுக் கொண்டிருக்கும் எங்களிடம் முஸ்லிம்கள் மட்டும் வந்து தங்களது குறைகளை கூறவில்லை. முஸ்லிம் அல்லாதவர்களும் தினசரி நூற்றுக் கணக்கில் வந்து எங்களை சந்திக்கிறார்கள்; மனு கொடுக்கிறார்கள், குறைகளை சொல்கிறார்கள், நியாயம் கேட்டு தரும்படி கோருகிறார்கள். ஏன், காங்கிரஸ்காரர்கள் கூட தங்களது குறைகளை நிவர்த்திப்பதற்காக எங்களைத் தான் அணுகுகிறார்கள், இந்த அவையிலுள்ள காங்கிரஸ் உறுப்பினர்களிடம் அவர்களது கட்சிக்காரர்கள் செல்வதில்லை. அவர்கள் உதவி கோரி எங்களிடம் தான் வருகிறார்கள். சிறுபான்மை சமுதாயங்களுக்கு மட்டும் நாங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கவில்லை. இந்த மாகாணம் முழுவதற்குமாகவே நாங்கள் பாடுபட்டு வருகிறோம்.

மகாத்மா காந்தியை பின்பற்றுவதாக காங்கிரஸ்காரர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். காந்திஜீயின் பெயரைத்தான் அவர்கள் உபயோகிக்கிறார்களே தவிர அவரது நடைமுறையை இவர்கள் பின்பற்றவில்லை. அப் பெயரை துஷ் பிரயோகம் செய்கிறார்கள். காந்திஜிக்கு உண்மையிலேயே மதிப்பும், மரியாதையும் காட்டுவது நாங்கள்தான்.

உங்களுடைய அன்றாட வாழ்க்கையில் மகாத்மா காந்தியை நீங்கள் எந்த வகையில் பின்பற்றுகிறீர்கள்? இன்று நீங்கள் வாங்கும் சம்பளம் என்ன? 1936ம் ஆண்டில் நீங்கள் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்ட பொழுது உங்களுக்கு காந்திஜி என்ன உபதேசம் செய்தார்? அதை நீங்கள் இன்று பின்பற்றுகிறீர்களா? தீண்டப்படாத மக்களுடன் பங்கி காலனியில் காந்திஜி வாழ்ந்தார். இன்று நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்? வார்தா கல்வித் திட்டத்தை அவர் சிபாரிசு செய்தார். கல்வி கற்கும் பொழுதே சம்பாத்தியமும் செய்ய வேண்டும் என்பது அந்தத் திட்டத்தின் நோக்கம்.

இன்று நீங்கள் அத்திட்டத்தை அமல்படுத்துகிறீர்களா? அஹிம்சை அவரது உயிர் மூச்சு. இன்று உங்களுக்கும் அஹிம்சைக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கிறதா? தற்கால சூழ்நிலையில் அஹிம்சை நடைமுறை சாத்தியமானதல்ல என்று நீங்கள் சொல்ல ஆரம்பித்து விட்டீர்கள். ஆனால், மகாத்மா காந்தியை பின்பற்றுவதாக ஒவ்வொரு நிமிஷமும் பிதற்றிக்கொண்டு இருக்கிறீர்கள். அவர் சொன்னது ஒன்று; நீங்கள் செய்வது ஒன்று. உங்கள் இஷ்டத்திற்கு எதையும் மாற்றிக் கொள்கிறீர்கள். ஆனால். காந்திஜியின் பெயரை பயன்படுத்தி வருகிறீர்கள்.

இந்த அரசு வகுப்புவாத கண்ணோட்டத்துடன் நடந்துகொள்கிறது. வகுப்புவாத பிரதிநிதித்துவம் என்பது ஏற்கனவே இம் மாகாணத்தில் அமலில் இருந்தது. இந்தியர்களால் நடத்தப்பட்ட அரசாங்கம்தான் அந்த கம்யூனல் ''ஜி. ஒ.''வை பிறப்பித்தது. பதிநான்கு இடங்களுக்கு இரண்டு பேர் என்ற விகிதத்தில் முஸ்லிம்களுக்கு அரசாங்க வேலை வாய்ப்புகள் கொடுக்கப்பட்டன. ஆனால் இன்று நீங்கள் பதிநான்கிற்கு ஒன்று என்று அந்த விகிதாச்சாரத்தை குறைத்து விட்டீர்கள், முஸ்லிம்களுக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டு விட்டதென்று காரணம் காட்டுகிறீர்கள். போலீஸ் இலாக்காவிற்கு ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்ட முஸ்லிம்களுக்கு கூட நியாயமான உத்திரவுகள் கொடுக்கப்பட வில்லை. சப் ரிஜிஸ்ட்ரார்கள் பதவிக்குக்கூட முஸ்லிம்கள் சம்பந்தப்பட்டவரை இந்த கதிதான். ஜில்லா முன்சீப்கள் கதையும் இதே மாதிரிதான். முஸ்லிம்களுக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவம் இருப்பதால் புதிய நியமனங்கள் நிறுத்தி வைக்கப் பட்டிருக்கின்றன என்று கூறுகிறீர்கள். இதர சமுதாயங்கள் சம்பந்தமாகவும், இதே போக்கு அனுஷ்டிக்கப்படுமா? அதிகப்படி பிரதிநிதித்துவம் பெற்ற ஜாதிகள் விஷயத்திலும் அரசாங்கத்தின் இப்புதிய உத்திரவு அனுஷ்டிக்கப்படுமா? ஒரு சாராரை மட்டும் பழிவாங்குவது சரிதானா? ஒரு நாகரிகமான அரசாங்கம் மேற்கொள்ளக் கூடிய காரியமல்ல இது.

# 33

## முன்மாதிரியாக இருங்கள்

*[மதராஸ் மாகாண சட்டசபையில் 16—3—49 அன்று காயிதே மில்லத் கூறியதாவது:]*

பள்ளி வாசல்கள் முன்பும் மற்றும் வணக்க ஸ்தலங்களின் முன்பும் மேள தாளங்கள் வாசிப்பதை சட்டத்தின் மூலம் தடை செய்ய வேண்டும் என அரசாங்கத்தின் முன்பு ஒரு யோசனை மூன்று ஆண்டுகளுக்கு முன் வைக்கப்பட்டது. இம்மாநிலத்தில் மட்டுமல்ல நாடு முழுவதிலும் ஆயிரக் கணக்கான மக்களின் அன்றாட வாழ்க்கையில் பாதிப்புகளை ஏற்படுத்தும் விஷயம் இது. மற்ற மாகாணங்களுக்கு நாம் ஒரு முன் மாதிரியாக நடந்து கொள்ள வேண்டும். இம் மாதிரி ஒரு நடவடிக்கை எடுப்பதன் மூலமாக வகுப்பு ஒற்றுமையையும் சௌஜன்னியத்தையும் நாம் நிலைநிறுத்த முடியும். இந்த அரசு இத்துறையில் ஒரு முன்மாதிரியாக நடந்து கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன்.

# 34

## சுருக்கெழுத்துக்காரர்களின் அவல நிலை

*[17-3-49 அன்று மதராஸ் சட்ட சபையில் காயிதே மில்லத் கூறியதாவது.]*

இந்த அவை நிகழ்ச்சிகளை குறிப்பெடுக்கும் ரிப்போர்ட்டர்கள் பற்றி ஒரு வார்த்தை. இந்த ரிபோர்ட்டர்கள் உண்மையிலேயே மிகுந்த பிரயாசையுடன் பணிபுரிகிறார்கள், நானும் பல மாகாணங்களுக்கு போயிருக்கிறேன். அங்கெல்லாம் கூட மதராஸ் ரிப்போர்ட்டர்களின் திறமை பாராட்டிப் பேசப்பட்டது. அவர்களின் பணி முக்கியமானது, இன்றியமையாதது, அவர்கள் திறமையாகவும் பணிபுரிகிறார்கள். அவர்களுக்கு மாதச் சம்பளம் நூற்றி இருபதிலிருந்து இருநூறு ரூபாய் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இது மிக குறைவு, இது ஒரு கஞ்சத்தனமான ஏற்பாடு அவர்களது பணியை உத்தேசித்து அவர்களுக்கு சம்பள உயர்வு அளிக்கப்பட வேண்டும், இதர மாகாணங்களில் அவர்களுக்கு கூடுதலான சம்பளம் கொடுக்கப்படுகிறது. டில்லியில் மத்திய அரசு இவர்களுக்கு இருநூற்று ஐம்பது ரூபாய் வரை சம்பளம் கொடுக்கிறது. பம்பாயில் இவர்களது சம்பளம் இருநூறு முதல் நானூறுவரை உள்ளது. வங்காளத்தில் இருநூற்று ஐம்பது முதல் நானூறு வரை உள்ளது. பஞ்சாபில் இது முன்னூறு முதல் நானூறு வரை. ஆனால் மதராஸில் மட்டும்தான் இத்தகையோருக்கு ரூபாய் நூற்றி இருபதிலிருந்து நாம் ஆரம்பிக்கிறோம். எனவே தான் நமது மாகாணத்தை சேர்ந்த பலரும் வேலை தேடி இதர மாகாணங்களுக்கு போய்விடுகிறார்கள்.

சபாநாயகர்: மத்திய சட்ட சபையில் பெரும்பாலான ரிப்போர்ட்டர்கள் மதராஸ்காரர்களாய் இருக்கிறார்கள்.

காயிதே மில்லத்: ஆம். அது தான் உண்மை நமது மாகாணத்தை சார்ந்தவர்களின் திறமையை நாமே உபயோகப்படுத்திக் கொண்டால் என்ன?



# 35

## பழுப்பு நிலக்கரி

*[23-3-49 அன்று மதராஸ் சட்டசபையில் காயிதே மில்லத் பேசும் பொழுது நெய்வேலி பழுப்பு நிலக்கரி குறித்து குறிப்பிட்டார்கள்,]*

நமது மாகாணத்தில் மின்சாரம் பற்றாக் குறை இருப்பதை அரசாங்கமே ஒத்துக் கொண்டுள்ளது. அதன் காரணமாகத்தான் தொழில் துறையில் நாம் முன்னேற முடியாதிருக்கிறோம். ஏராளமான தொழிற்சாலைகளை அமைத்திருக்கும் நாடுகளில் மக்கள் எந்த அளவுக்கு மின்சாரத்தை

பயன்படுத்துகிறுர்கள் என்பதற்கு சில புள்ளி விபரங்களை உங்கள் முன் வைக்கிறேன், 1936 ஆண்டு கணக்குப்படி கனடாவில் ஒரு நபர் சராசரி ஆயிரத்தி நூற்றி ஐம்பது யூனிட் மின் சாரத்தை உபயோகப் படுத்தியுள்ளார். அதே ஆண்டில் சுவிட்சர்லாந்து நாட்டில் ஆயிரத்தி நூற்று பதினெட்டு யூனிட் உபயோகப்பட் டுள்ளது. பிரான்ஸ் நாட்டில் முன்னூற்றி ஒன்று யுனிட் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. இந்தியா வில் மின்சாரம் உபயோகப்படுத்தப்பட்டுள்ள விவரத்தை சற்று ஒப்பிட்டுப் பாருங்கள். பம்பாயில் நாற்பது யூனிட் சராசரி உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. ஆனுல் மதராஸ் மாகாணத்தில் தலைக்கு நாலரை யூனிட் மின்சாரம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நீர் மின்சாரங்களை நாம் முழு அளவில் பயன் படுத்தவில்லை என்பதை ஒத்துக் கொள்கிறேன். நீர் மூலம் உற்பத்தியாகும் மின்சாரம் குறித்து நாம் தீவிர நடவடிக்கைகள் எடுக்க வேண்டியது தான். ஆனுல் தென் ஆற்காடு மாவட்டத்தில் பூமிக்கடியில் மறைந்து கிடக்கும் பழுப்பு நிலக்கரி குறித்து இந்த அரசாங்கம் ஏன் வாளாவிருக்கிறது என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. இது குறித்து நான் அடிக்கடி இச்சபையில் குறிப் பிடும் பொழுது சில உறுப்பினர்கள் சலிப் படைந்து போகிறுர்கள், தொழில் திட்ட கமிட்டி என ஒன்று இங்கு செயல்பட்டுவருகிறது. இப்பகுதியில் நிலக்கரி கிடைக்காததால் இந்த பழுப்பு நிற ''லிக்னைட்'' டை பயன்படுத்தலாம்என அக்கமிட்டியும் சொல்லி வருகிறது. இந்த பழுப்பு நிற நிலக்கரியை வெளிநாடுகளுக்கு அனுப்பி பரி சோதனைகள் செய்து பார்க்கலாம் என அரசாங் கத்தை நாங்கள் வற்புறுத்தி வருகிறேம். இந்த விஷயத்தில் கூட அரசாங்கம் சுறுசுறுப்பாக நடந்து கொள்ளவில்லை. நெய்வேலியில் கிடைக் கும் பழுப்பு நிலக்கரியை 1949 ஆண்டில் தான் சில வெளி நாடுகளுக்கு அனுப்பி வைத்துள் ளோம் என நிதியமைச்சர் இப்பொழுது சொல்லி யிருக்கிறுர்.

இந்த லிக்னைட், மின்சாரம் தயாரிப்பதற்கு மட்டும் பயன்படும் என்பதல்ல. அதை எரி பொருளாகவும் உபயோகப்படுத்தலாம். நமது நாட்டில் விறகு தட்டுப்பாடு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. நாட்டுப் புறங்களில் சில கிராமங்களில் மாட்டு சாணத்தை எரி பொருளாக உபயோகப்படுத்துகிறுர்கள். விவசாயத்திற்கு உரமாக பயன்பட வேண்டிய சாணம் இப்படி வீணுக்கப்படுகிறது. லிக்னைட்டை எரி பொருளாக பயன்படுத்தும் வழி முறைகளை பொது மக்களுக்கே சொல்லிக் கொடுத்து விட்டால், நம் மாகாணத்தில் இப்பிரச்சினையை ஓரளவு தீர்த்து விடலாம்.

இந்த ஆண்டு வரவு-செலவு திட்டத்தில் தென் ஆற்காடு பழுப்பு நிலக்கரி வகைக்காக ஐந்துலட்சத்தி முப்பத்தெட்டு ஆயிரத்தி ஐநூறு ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருப்பதாக நான் படித் தேன். ஆனுல் திருத்தியமைக்கப்பட்ட பட்ஜெட் டில் இரண்டுலட்சத்தி பதிநான்கு ஆயிரத்தி ஆறு நூறு ரூபாய் தான் இதற்கென ஒதுக்கப் பட்டுள்ளது, இத்தொகை மிகவும் குறைவு.

கனிம வளங்களை கண்டு பிடிக்கும் வகைக்கு சென்ற ஆண்டு இருபத்தொன்று ஆயிரம் ரூபாய்தான் ஒதுக்கப்பட்டது. பின்னர் அத் தொகை பதினெட்டு ஆயிரத்தி தொள்ளாயிர மாக குறைக்கப்பட்டது,ஆனுல்இந்தஆண்டிற்கோ இது வகைக்கு நாலாயிரம் ரூபாய் தான் ஒதுக்கப் பட்டிருக்கிறது. தொகைகளை ஏன் இப்படி குறைத்துக் கொண்டே போகிறுர்கள் என்று தெரியவில்லை. நமது மாகாணத்தில் புதிதாக கனிம வளங்களை கண்டு பிடிப்பதில் இந்த அரசு ஏன் அக்கறை காட்ட மறுக்கிறது? நமது மாகாணத்தை தொழில் வளமுள்ளதாக்க வேண்டுமானுல் இம்மாதிரி அடிப்படை விஷயங் களில் முதலில் நாம் கவனம் செலுத்தியாக வேண்டும்.

## 36

## நந்தி போல குறுக்கீடு

*[28-3-49 அன்று காயிதேமில்லத் மதருஸ் சட்டசபையில் கூறியதாவது:]*

''ரெவின்யூ போர்டு'' என ஒரு அமைப்பு வருவாய் துறையில் இருக்கிறது. சர்க்காருக்கு வரவேண்டிய நில வரிகளை ஒழுங்குபடுத்துவதற் காகவும், மற்றும் மாவட்ட கலெக்டர்களின் ரெ வின்யூ பணிகளை மேற்பார்ப்பதற்காகவும் இந்த போர்டு இருந்து வருகிறது. ஆனுல் பல சந்தர்ப்பங்

களில் இந்த ரெவின்யூ போர்டு ஒரு தடங்க லாகவே அமைந்து வருகிறது. கோவில்களில் ''நந்தி'' மாதிரி அது குறுக்கே நிற்கிறது. சிலர் இதை சர்க்கார் இயந்திரத்தின் ''5வது சக்கரம்'' எனவும் வர்ணித்துள்ளார்கள். மக்க ளுக்கும், அரசாங்கத்திற்கும் மத்தியில் ரெவின்யூ போர்டு இருப்பதால் துரிதமாக நடக்க வேண்டிய காரியங்கள் பல தடைபட்டுப் போகின்றன, மக்களின் பிரச்சனைகள் துரிதமாக பைசலாக அரசாங்கம் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பர்மா அகதிகள்பற்றி அரசாங்கத்தின்கவனத் திற்கு சில விஷயங்களை கொண்டு வருகிறேன். பர்மாவிலிருந்து வந்த தமிழ்அகதிகளுக்குமாதாந் திர அலவன்ஸ் என்று ஒன்று கொடுக்கப்பட்டது. பர்மாவிலுள்ள சொத்துகளையும், வியாபாரங் களையும் இழந்துவிட்டு தாயகத்திற்கு நாடோடி களைப் போல வந்தவர்கள். அவர்கள் மீது அரசாங்கம் இரக்கம் காட்ட வேண்டியது மிக அவசியமாகும். பர்மா அகதிகளுக்கு கொடுக்கப் பட்ட அலவன்ஸ்களையும், கடன்களையும் இப் பொழுது நமது அரசாங்கம் திரும்ப கேட்டுக் கொண்டிருக்கிறது. அந்த அகதிகளை அதிகாரி கள் கெடுபிடி செய்கிறார்கள். அனுதாபத்துடன் கவனிக்க வேண்டிய விஷயமாகும் இது. மாகாண அரசும் கெடுபிடி செய்கிறது, மத்திய அரசும் கெடுபிடி செய்கிறது. இவ்விரு அரசுகளும் அகதி கள் விஷயத்தில் நீக்குப் போக்குடன் நடந்து கொள்ள வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.



# 37

## மதராஸில் உருக்காலை

*[19-4-49 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கீழ்க்கண்ட கேள்விகளை கேட்டார்கள்.]*

இந்த மாகாணத்தில் இரும்பு உருக்காலை ஆரம்பிக்கும் உத்தேசம் இந்த அரசாங்கத்திற்கு உண்டா? அப்படியானால் இதுவரை என்ன நட வடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன? அமெ ரிக்க கம்பெனி ஒன்றின் அறிக்கையைப் பார்த்த பிறகு அரசாங்கம் இந்த விஷயத்தில் அதிக அக் கறை காட்டவில்லை என்பது உண்மையா? இக் கேள்விக்கு தொழில் அமைச்சர் சீத்தாராம ரெட்டி பதில் கூறும்பொழுது ''இரும்பு தொழிற்சாலை ஆரம்பிப்பது குறித்து நிபுணர் களின் கருத்தை தெரிந்து கொள்வதற்காக இந்திய அரசு தக்க நடவடிக்கைகள் எடுத்து வருகின்றது. ஒன்றல்ல, மூன்று நிபுணர் கமிட்டிகள் அமைக்கப் பட்டுள்ளன; மூன்று கம்பெனிகளிடம் இருந்து கருத் துக்கள் கேட்கப் பட்டிருக்கின்றன. பத்திரிக்கை களில் நான் பார்த்த செய்திப்படி ஒரிஸா மாகா ணத்தில் ஒன்றும், மத்திய மாகாணத்தில் ஒன்றும் ஆக இரண்டு இரும்புத் தொழிற்சாலைகள் அமைச் கப்படலாம் என்று தெரிகிறது என்று கூறினர்.

காயிதே மில்லத்: நமது மாகாணத்திலும் இரும்பு தொழிற்சாலை ஒன்று அமைக்க வேண்டி யதின் அவசியத்தை மத்திய அரசிடம் இந்த மாகாண அரசு வற்புறுத்துமா?

அமைச்சர் சீத்தாராம ரெட்டி: நாமே அப் படி ஒரு தொழிற்சாலையை அமைப்பதில் தடை ஏதும் இல்லை. ஆனால் இது வகைக்கு முதலீடு செய்ய வேண்டி வரும். பெரும் தொகையை மாகாண அரசினால் மட்டும் திரட்ட முடியாத தினால், இந்திய அரசிடம் இது குறித்து அது பேசி வருகிறது. மத்திய அரசு ஆரம்பிக்கவிருக்கும் உருக்கு தொழிற்சாலை ஒன்றை மதராஸ் மாகா ணத்தில் நிறுவ வேண்டுமென நாம் கேட்டு வரு கிறோம்.

# 38

## மண்ணுக்குரியவர்கள் நாங்கள்

*[10-11-49 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதேமில்லத் கூறியதாவது.]*

நாட்டில் கம்யூனிஸ்டுகள் சட்டம் ஒழுங்கிற்கு பங்கம் ஏற்படுத்தி வருகிறார்கள் என இந்த அரசு குற்றம் சாட்டியுள்ளது. பெரும்கும்பலாக சென்று குழப்பங்களை விளைவிக்கிறார்கள் என அவர்கள்

மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளது. முஸ்லிம் களைப் பொறுத்த வரையில் எங்களது நிலைமையை மிகவும் தெளிவாகக் கூறியுள்ளோம். வன்முறை களில் நம்பிக்கையுள்ளவர்கள் அல்ல நாங்கள். அதிலும் குறிப்பாக கம்யூனிஸ்டுகளுடன் எங்களுக்கு உடன்பாடு கிடையாது என்பதும் அரசுக்குத் தெரியும். சட்டம் ஒழுங்கை குலைத்ததாக கம்யூனிஸ்டுகள் மீது நீதி மன்றங்களில் வழக்கு கள் தொடரப்பட்டுள்ளன. சில இடங்களில் கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக சாட்சி சொல்ல பயப்படுகிறார்கள். ஆனால் முஸ்லிம்கள்தான் தைரியமாக நீதிமன்றங்களுக்கு சென்று உண்மை யாக நடந்தவற்றை சொல்லியிருக்கிறார்கள். இந்த அவையின் முன்னவரே அதைப் பாராட்டி யும் பேசியிருக்கிறார்.

ஆளுங்கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் இங்கு பேசும்பொழுது, ஒருவித விரக்தி மனப் பான்மையுடன் முஸ்லிம் லீக் உறுப்பினர்கள் இருக்கிறார்கள் எனக் கூறினார்கள். என்ன அர்த்தத்தில் அவர்கள் இப்படிக் கூறினார்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை அமைச்சரவையில் இடம் கிடைக்க வில்லை என்றும் அதனால்தான் நாங்கள் விரக்தி மனப்பான்மையுடன் இருக்கிறோம் என்றும் அவர் கள் எண்ணிக் கொண்டார்களோ என்னவோ? அமைச்சரவையில் நாங்கள் இடம் கேட்டு அலைய வில்லையே; அப்படிப்பட்ட எண்ணமும் எங்களுக்கு கிடையாது. இது இந்த அரசாங்கத்திற்கே நன்கு தெரியும்.

முஸ்லிம் லீக்கர்களால் இம் மாகாணத்தில் அரசு அமைக்க முடியுமா? என சில உறுப்பினர் கள் கேட்டார்கள். ஒரு மேனனும் ஒரு ரெட்டி யும் மேலும் ஒரு முதலியாரும் சேர்ந்து கொண்டு இம் மாகாணத்தில் ஒரு மந்திரி சபை அமைக்க முடியுமானால் ஏன் ஒரு இஸ்மாயிலும், ஒரு ஹமீத் கானும், ஒரு அன்வரும் சேர்ந்து கொண்டு இங்கு ஒரு அமைச்சரவை அமைக்க முடியாது? ஏன் கூடாது? நேரம் வரும்பொழுது அப்படியொரு அமைச்சரவை அமையத்தான் செய்யும். அதை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. அப்படி அமையும் அரசு மக்களின் பாராட்டுதலைப் பெற்ற தாக இருக்கும். இன்று செயல்படும் அமைச் சரவையைப் போல் அது இருக்காது.

ஒரு உறுப்பினர் : முஸ்லிம் லீக்கின் பெயரால் அது இயங்க முடியாது.

காயிதேமில்லத் : முஸ்லிம் லீக் மட்டும் தான் அந்த அரசில் இடம் பெற்று இருக்கும் என்று சொல்லவில்லையே. ஒரு புதிய அமைச் சரவை ஒன்று கொண்டுவருவதற்கு முஸ்லிம் லீக்கும் ஒரு பொறுப்பாளியாக இருக்கக்கூடும். எனவே முஸ்லிம்கள் விரக்தி மனப்பான்மையுடன் இருக்கிறார்கள் என்று ஒரு சிலர் ஏன் சதா பல்லவி பாடிக்கொண்டே இருக்கிறார்கள் என்பது எனக்குப் புலப்படவில்லை. ஒருவேளை அது அவர் களது ஆசையாகயிருக்கலாம்.

''ஜனுப் சீதி சாஹிப் இந்த அவையில் பேசும் பொழுது மலபார் மாவட்டத்தில் வன்முறை யாளர்களின் பிடியிலிருந்து காங்கிரஸ் தலைவர் ஒருவரை அப்பகுதி மக்கள் எப்படி காப்பாற்றி னார்கள் என்பதைக் கூறினார். சட்டம் ஒழுங்கை கம்யூனிஸ்டுகள் கெடுக்காமல் பார்த்துக் கொள் வதுடன் அதனால் பாதிக்கப்பட்டவர்கள் யாராக யிருந்தாலும் அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற துணிவும் முஸ்லிம்களுக்கு உண்டு என்பதை இச்சம்பவம் சுட்டிக் காட்டுகிறது. இந்த அவை யிலும், மேலவையிலும் முஸ்லிம்களின் கடமை யுணர்ச்சியையும், தியாகத்தையும் அரசு தரப்பி லிருந்தே பாராட்டப்பட்டுள்ளது. ஆனால், இங்கு பேசிய மாண்புமிகு அமைச்சர் முஸ்லிம்களுக்கு நான் நன்றி கடன் பெற்றிருக்கவில்லை என பேசி யுள்ளார். ஒரு வேளை அவர் காங்கிரஸ்காரர் என்ற முறையில் பேசியிருக்கலாம்; நாட்டில் சட்டம், ஒழுங்கை பராமரிக்கக் கூடிய அரசின் ஒரு உறுப்பினர் என்ற முறையில் அவர் பேசியிருக்க மாட்டார் என்று நாங்கள் பெரிதும் நம்புகிறோம்.

சர்க்காருக்கு சில கஷ்டங்கள் அல்லது சிரமங் கள் ஏற்பட்டால், அதற்கு அவர்கள் எங்களைத் தான் குற்றம் சொல்லுகிறார்கள். அவர்களது இயலாமையை ஒத்துக் கொள்ளுவதற்குப் பதிலாக, எதிர்க்கட்சியினரை குறைசொல்வதைத் தான் அவர்கள் வழக்கமாகக் கொண்டிருக் கிறார்கள். ஆனால் உண்மை என்ன என்று மக்களுக் கும் தெரியும், உலகுக்கும் தெரியும். குறிப்பாக எங்கள் கட்சியினர் மீது வீண் பழிசுமத்துவ தையே இந்த அரசு வாடிக்கையாகக் கொண்டுள் ளது. எவ்வளவுதான் எங்களைஎரிச்சல்உண்டாகும் படி செய்தாலும் அல்லது ஆத்திரமடையும்படி செய்தாலும் நாங்கள் எங்களால் இயன்ற அளவு இந்த அரசுக்கு ஒத்துழைப்பு நல்கித்தான் வருகிறோம். இந்நாட்டின் பிரஜைகள் என்பு தையும், இம்மண்ணுக்கு உரியவர்கள் என்பதை யும் முஸ்லிம்கள் உணர்ந்து தான் இருக்கிறார்கள்.

எனவே, அவர்கள் தமது கடமையை செவ்வனே செய்து வருகிறார்கள். நாட்டுப்பற்று என்பது ஏதோ ஒரு சிலருக்கு ஏக போக குத்தகை என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அத்தகையோர் கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த போதிலும். முஸ்லிம்கள் பொறுமையாகவும், கடமையுணர்வுடனும் நடந்து வருகிறார்கள்.

1950

# 39

# தென்னைமரத்தில் தேள் கொட்டினால்

*[9—1—50 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது:-]*

இங்கு பேசிய ஒரு உறுப்பினர், தனித் தொகுதி முறை தேச விரோதமானது என்று கூறினார். தேசியம் குறித்து அந்த உறுப்பினர் என்ன கருத்துக் கொண்டிருக்கிறார் என்று தெரியவில்லை. எந்த அடிப்படையில் இத் தேர்தல்முறை தேசிய நலன்களுக்கு உகந்ததல்ல என்பதை அவர் விளக்கியிருக்க வேண்டும். சாதாரணமாக மற்றவர்கள் கிளிப்பிள்ளை மாதிரி இங்கு கூறி வந்ததைத்தான் இவரும் திருப்பி சொல்லியுள்ளார். தனித் தொகுதிமுறை தேச விரோதமானதல்ல என்று நான் அழுத்தந் திருத்தமாகச் சொல்லிக் கொள்கிறேன். தேசியத்திற்கு அது எந்த முறையில் பாதகமாயிருந்தது? உண்மையை சொல்வதானால் மக்கள் மத்தியில் தேசிய உணர்வுகளை வளர்க்கும் வகையில் தனித் தொகுதி இருந்தது என்று சொல்ல வேண்டும். தனித் தொகுதி மூலம் மக்கள் எதை விரும்பினார்களோ அதைப் பெற்றார்கள். சட்ட மன்றங்களுக்கும் மற்றும் அவைகளுக்கும் அவர்களுடைய உண்மையான பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். சம்பந்தப்பட்ட சமுதாயங்களை திருப்திப்படுத்துவதாகயிருந்தது தனித் தொகுதி முறை.

இத்தகைய வாய்ப்பு மறுக்கப்படும் பொழுது, அதாவது அந்த சமுதாயத்தின் எண்ணங்களை பிரதிபலிக்கும் நபர்கள் தேர்ந்தெடுக்கப் படாத பொழுது, அந்த மக்கள் மத்தியில் அதிருப்தியும், மனக் குறையும் தான் உண்டாகும். ஜனநாயகத்தின் மீதுள்ள நம்பிக்கையிலேயே சந்தேகம் ஏற்பட்டுவிடும். மனக் குறைதான் நிகர பலனாகயிருக்கும். நாட்டின் நலனுக்கு இது உகந்ததல்ல. ஒரு சமுதாயத்தை நிரந்தரமாக மனச்சோர்வுள்ளவர்களாக வைத்திருப்பது அவர்களுடைய அடிப்படையான உரிமைகள் மீது விதிக்கப்பட்ட தடையாக அமையும்.

மாறாக, அம் மக்களுக்கு தனித் தொகுதியை வழங்கி அவர்களது குரல் சட்ட மன்றங்களில் கேட்க வழி வகை செய்யப்படுமானால் அவர்கள் திருப்தியடைவார்கள்; நிம்மதி பெறுவார்கள் மற்ற சமுதாயத்தவர்களுடனும் அரசுடனும் ஒன்றிணைந்து செயல்பட அப்பொழுதுதான் அவர்களுக்கு வாய்ப்பு கிட்டும். இப்படி நடப்பது தேசிய நலன்களுக்கு நல்லதா இல்லையா? முன் காலத்தில் தனித் தொகுதி பல குழப்பங்களை உண்டாக்கின என சிலர் கூறினார்கள். என்ன நிகழ்ந்தன என்பதைப் பற்றி யாரும் விளக்கி சொல்லவில்லை. தமிழ் மொழியில் ஒரு பழமொழி உண்டு "தென்னை மரத்தில் தேள் கொட்டியதற்கு பனை மரத்தில் நெறி கட்டியதாம்." என்று சொல்வார்கள். (சிரிப்பு) தேள் கொட்டியதினால் தென்னை மரம் பாதிக்கப்படவில்லை என்பது தெளிவு. ஏதாவது பாதிப்பு ஏற்பட்டிருந்தால் அது பனை மரத்திற்குத்தான் ஏற்பட்டிருக்க முடியும். தென்னை மரத்தில் ஏற்பட்ட கோளாறுக்கு பனை மரத்தை குற்றம் சொல்லி என்ன செய்ய? அது போலவே தான் நாட்டில் ஏற்பட்ட கோளாறுகளுக்கு தனித் தொகுதி முறைதான் காரணம் என்று சொல்வதாகும்.

இந்நாட்டிலுள்ள கோளாறுகளுக்கு உண்மையான காரணம் என்ன தெரியுமா? பல சமுதாயங்களுக்கிடையிலும் சௌஜன்யத்தையும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கக் கூடிய தனித் தொகுதி முறையை அகற்றியது தான். முஸ்லிம் சமுதாயம் ஏதாவது ஒரு கோரிக்கை வைத்தால் அல்லது ஏதாவது உரிமை கொண்டாடினால், இதைப் பொறுக்க மாட்டாது பலர் கோபாவேசம் அடைகிறார்கள், ஆத்திரப்படுகிறார்கள். கோரிக்கையை சொல்வதற்கு முன்னதாகவே அதை எதிர்க்கிறார்கள். இத்தகைய மனப்பான்மைதான் நாட்டில் உள்ள கோளாறுகளுக்கெல்லாம் உண்மையான காரணமாகும்.

வேறு சில நாடுகளில் தனித் தொகுதி முறையில்லையே என்று சுட்டிக் காட்டுகிறார்கள். ஆம். வாஸ்தவம்தான். தனித் தொகுதி தேர்தல் முறை அங்கு இல்லை தான். ஆனால், தனித் தொகுதி

யைவிட அதிகமான உரிமைகளும். சலுகைகளும் சிறுபான்மை மக்களுக்கு அந்த நாடுகளில் வழங்கப்பட்டுள்ளன. கல்வித்துறை முழுவதும் சிறுபான்மையினரிடம் அந் நாடுகளில் முழுமையாக ஒப்படைக்கப்பட்டுள்ளன. சிறுபான்மையினர் நடத்தும் கல்விக்கூடங்களுக்கு பொது வருவாயிலிருந்து நிதி ஒதுக்க வேண்டுமென அங்கு சட்டங்கள் உள்ளன. சிறுபான்மையினர் நடத்தும் பள்ளிக்கூடங்களில் எல்லாம் அரசாங்கம் தலையிடுவதே கிடையாது. அப் பள்ளிக்கூடங்களில் எல்லாம் மதக் கல்வி கட்டாய பாடமாக உள்ளது. ஒவ்வொருவருக்கும் அவரவருடைய மார்க்கத்தைப் பற்றியஅறிவு புகட்டப்படுகிறது. அது மட்டுமல்ல, இன்னும் ஏராளமான சலுகைகளும் சிறுபான்மை மக்களுக்கு அந்நாடுகளில் வழங்கப்பட்டுள்ளன.

யூகோஸ்லேவியா என்ற ஐரோப்பிய நாட்டில் ''ருத்தேனியன்ஸ்'' (Ruthenians) என்ற ஒரு சமுதாயம் உள்ளது. இம் மக்களுக்கு பிராந்திய சுயாட்சிக்கூட வழங்கப்பட்டுள்ளது. அல்பேனியா என்ற மற்றொரு சிறு நாட்டில் சிறுபான்மையினருக்கு பிரத்தியேகமான முறையில் தேர்தல்கள் நடத்தப்படுகின்றன. நமது நாட்டில் இரண்டு அல்லது மூன்று தாலுகாக்களை ஒன்று சேர்த்தால் எவ்வளவு பரப்பளவு இருக்குமோ அந்த அளவு தான் அல்பேனியாவின் விஸ்தீரணமாகும். இந்த விசேஷ உரிமைகளையெல்லாம் அம் மக்கள் கேட்டு அதன் பிறகு அந்த அரசாங்கங்கள் வழங்கியவை அல்ல. முதலாவது உலக யுத்தம் முடிந்ததும் உலகிலுள்ள அரசியல்வாதிகளும், அறிஞர்களும் சிறுபான்மையினரை எப்படி நடத்த வேண்டுமென சில விளக்கங்கள் கொடுத்தார்கள், அதை அந்த நாடுகள் அப்படியே பின்பற்றிக் கொண்டன.

சபாநாயகர்: இங்கு கூறியவற்றை அரசியல் நிர்ணய சபையில் கூறியிருந்தால் மிகவும் நலமாகயிருக்கும். இதைவிட அதுதான் பொருத்தமான இடமும் கூட.

காயிதே மில்லத்: அங்கேயும் இவற்றையெல்லாம் நான் சொல்லித்தான் இருக்கிறேன். இங்கு ஒரு உறுப்பினர் இப் பிரச்சினையை எழுப்பினார். அதற்கு பதில் சொல்ல வேண்டியது வந்ததினால் அரசியல் நிர்ணய சபையில் கூறியவற்றை இங்கு திருப்பிக் கூறுகிறேன். மீண்டும் சொல்கிறேன் தனித் தொகுதி முறை இந்நாட்டிற்கு பாதகமானதல்ல. தனித் தொகுதி முறையும், ரிசர்வேஷனும் இங்கு நன்குதான் செயல்பட்டுக் கொண்டிருந்தன, இதற்குத் தான் தேசீயம் என்று பெயர். பழைய குரோதங்களையே நினைத்துக் கொண்டிருக்காதீர்கள். அதை மறந்து விடுங்கள். எதிர்காலத்தை நாம் ஒற்றுமையுடனும். நல்லெண்ணத்துடனும், சகிப்புத் தன்மையுடனும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடனும் எதிர் நோக்குவோமாக. இந் நாட்டின் மொத்த நல்வாழ்விற்கு அது ஒன்றுதான் வழி. அந்த குறிக்கோளை அடைய வேண்டும் என்பது தான் எனது லட்சியமாகும். ஒவ்வொரு சமுதாயமும் மன நிறைவுடன் வாழ வேண்டும். அவரவர்க்குரியது அவரவர்களுக்கு கிடைக்க வேண்டும். இதைத் தான் நான் வலியுறுத்துகிறேன்.



# 40

## பிணங்கு வழக்கறிஞரின் விவாதம்!

*[4—3—50 அன்று பட்ஜெட் பொது விவாதத்தின் போது காயிதே மில்லத் கூறியதாவது.]*

இம்மாகாணத்தில் சட்டம் ஒழுங்கு பிரச்சினை குறித்து ஆளுங்கட்சி உறுப்பினர்கள் வெகுவாகப் பாராட்டிப் பேசினார்கள். சிற்சில இடங்களில் ஆள் சேத, பொருட்சேத நடவடிக்கைகள் நடைபெறுகின்றனவென்றால் அதற்கு அப்பகுதி மக்களின் ஒத்துழைப்பு ஓரளவு இருக்கிறது என்றுதான் அர்த்தம். பொது மக்களுக்குத் தெரியாமலும், அவர்களது ஒத்துழைப்பின்றியும் எந்தப் பகுதியிலும் சட்ட ஒழுங்கைக் கெடுத்துவிட முடியாது, எனவே, எங்காவது பிரச்சினை எழுந்தால் அப்பகுதி மக்கள் நிம்மதியாகவும், திருப்தியாகவும் வாழ்கிறார்களா என அரசாங்கம் உன்னிப்பாக ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

முஸ்லிம்கள் குறித்தும் இதர சிறுப்பான்மையினர் குறித்தும் ஏதாவது பிரச்சனைகள் எழுப்பப்பட்டால் அதை அரசாங்கம் தட்டிக் கழித்து விடுகிறது, முஸ்லிம்கள் மீதுதான் குற்றம் இருப்பது போல அரசாங்கத் தரப்பிலிருந்து பதில்கள் அளிக்கப்படுகின்றன. இந்த அரசாங்கமே அவர்களது கட்சியை சார்ந்த உறுப்பினர்களை முஸ்லிம்களுக்கு எதிரான கேள்வியை

எழுப்பும்படி திரைமறைவிலிருந்து சொல்லிக் கொடுக்கிறார்களோ என சந்தேகப்பட வேண்டியுள்ளது. எங்களது கட்சியினர் ஏதாவது சொன்னால் அது எப்படி சரியாக இருக்க முடியும் என திருப்பி கேட்கப்படுகிறது.

ஒரு உதாரணத்தின்மூலம் இதை விளக்க விரும்புகிறேன். அமைச்சர் கோபால் ரெட்டியை போன்ற ஒரு கணவான் மரச்சாமான்கள் விற்பனை செய்யும் கடைக்குப் போகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவருக்கு ஒரு மேஜை வேண்டும். அங்குள்ள எல்லா மேஜைகளையும் புரட்டிப் பார்த்து விட்ட பின்னரும் அவருக்கு திருப்தியான மேஜை அங்கு இல்லை என்ற முடிவுக்கு வருகிறார். அச்சமயம் கடைக்காரர் இவரைப் பார்த்து இந்த மேஜை சரியில்லை என நினைக்கிறீரே இதைவிட அழகான மேஜையை உம்மால் செய்ய முடியுமா என்று கேட்டால் அது எப்படி இருக்கும். (சிரிப்பு) இது என்ன வாதமோ நமக்குத் தெரியவில்லை. இதைப் போலத் தான் அரசாங்கத்தின் பதில்களும் இருக்கின்றன.

பினங்கு வழக்கறிஞரின் வாதம் என்று ஒரு சொல் வழக்கு உண்டு. சில பாடநூல்களில் கூட, இச் சொல் வழக்கு கையாளப்பட்டுள்ளது. ஒரு வழக்கறிஞர் நீதிமன்றத்தில் வழக்காடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு வாதத்தையும் எதிர்தரப்பு வழக்கறிஞர் தவிடுபொடியாக்கி விடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். தமக்கு சாதகமாக சொல்வதற்கு வேறு ''பாயிண்ட்''கள் இல்லை என்றதும், அந்த முதலாவது வழக்கறிஞர் வசை மாரியில் இறங்கிவிடுவதுண்டு. எதிர்தரப்பினரை திட்டித் தீர்ப்பதில் அவர் மும்முரமாகி விடுவார். எப்பொழுது அவர் ஏசிப்பேசுவதில் ஆரம்பித்து விடுகிறாரோ அப்பொழுது அவரிடம் முறையான வாதங்கள் இல்லை என்று அர்த்தமாகும். இதைத் தான் பினங்கு வழக்கறிஞர் வாதம் என்று சொல்வதுண்டு, அமைச்சர் கோபால் ரெட்டியும் இந்த பாணியைத் தான் பின்பற்றுகிறார். நாம் கேள்வி கேட்டால் அமைச்சர் வசைமாரியிலே இறங்கிவிடுகிறார். அவரது கட்சிக்காரர்களை வேண்டுமானால் அது திருப்திபடுத்தலாம். மக்களை ஏமாற்ற முடியாது.

சிறுபான்மை சமுதாயத்தினரின் ஸ்தாபனங்கள் குறித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். புதிய அரசியலமைப்பில் சங்கம் அமைக்கும் உரிமை அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. தங்களுடைய எண்ணங்களையும், வெளிப்பாடுகளையும் வெளித்தோற்றத்தில் காட்டுவதற்காகத்தான் ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்படுகின்றன, அரசியல் நடவடிக்கைகளுடன், பாராளுமன்ற நடவடிக்கைகளும் கலக்குமிடத்தில் மக்கள் மத்தியில் ஒருவித குழப்பம் ஏற்படுகிறது. கூட்டுத் தொகுதி மூலம் தேர்தல் நடைபெறும் பொழுது சிறுபான்மை சமுதாயத்தினர் பாராளுமன்ற நடவடிக்கைகளில் ஈடுபட முடியவில்லை. அவர்களுக்கு போதுமான வாய்ப்புக்கள் கிடைப்பதில்லை. குறிப்பாக முஸ்லிம்களின் நிலைமை அப்படித்தான் உள்ளது. பாராளுமன்ற நடவடிக்கைகளில் போதிய அளவு பங்கு கொள்ள முடியாததினால் முஸ்லிம்களின் அரசியல் நடவடிக்கைகளில் ஒருவித தாழ்வு மனப்பான்மையுடன் மதிப்பிடப் படுகின்றன.

அரசாங்க உத்தியோகங்கள் முஸ்லிம்களுக்கு போதிய அளவு கிடைப்பதில்லை. கல்வி வசதி செய்து கொடுக்கப்படுவதில்லை, இருக்கின்ற ஒரு சில சலுகைகளையும் தட்டிப் பறிக்கப் பார்க்கிறார்கள். பொருளாதாரத் துறையில் அவர்கள்மீது பல திசைகளிலிருந்தும் தாக்குதல்கள் கொடுக்கப்படும் பொழுது, அவர்களுக்கென ஒரு ஸ்தாபனம் இருப்பது அவசியமா இல்லையா? அவர்களுடைய குறைகளை ஆட்சியாளர்களிடம் யார் போய்ச் சொல்வது? இப்படி நாம் சொல்லும் பொழுது அரசியல் குறுக்கிடுகிறது என குற்றம் சாட்டுகிறார்கள். வகுப்புவாத ஸ்தாபனம் என பட்டம் சூட்டி விடுகிறார்கள். தனித் தொகுதி வேண்டுமெனக் கேட்டால் உடனே கோபம் வந்து விடுகிறது. அவைத் தலைவரும் மற்றவர்களும் சிறுபான்மையினரை வகுப்பு வாதிகள் என்கிறார்கள்.

நானும் ஒருவர் பாக்கி விடாமல் எல்லோரிடமும் கேட்டு விட்டேன். இந்நாட்டில் உள்ள மிகப் பெரிய மனிதரிடமும் நேரில் வினவினேன். அவரால் பதில் ஒன்றும் சொல்ல முடியவில்லை. வகுப்பு வாதம் என்ற பதத்திற்கு உண்மையான விளக்கத்தை அவரால் கொடுக்க முடியவில்லை.

தங்களுக்கென ஒரு ஸ்தாபனத்தை அமைத்துக் கொள்வது சிறுபான்மையினருடைய பிறப்புரிமை, அதை விட்டால் அவர்களுக்கு வேறு வழியில்லை. ஆனால், சிறுபான்மையினரைச் சுட்டிக் காட்டி இதர மக்கள் தூண்டி விடப்படுகிறார்கள். விரோதமும், குரோதமும் வளர்க்கப்படுகிறது.

தேசப்பற்று என்பது எல்லோருக்கும் பொதுவானது, ஒருவனைப் பார்த்து, இவனுக்கு தேசப் பற்று இல்லை என்று கூறுவது தவறாகும். இந்நாட்டில் யாரையும் அப்படி அழைக்கக் கூடாது.

பெரும்பான்மை சமுதாயத்தினரைக் கூட உங்களால் ஒன்றுபடுத்தி வைக்க முடியவில்லை. வன்னிய குல சத்திரியர்கள் என்ற சாதாரண அமைப்பு 24 இடங்களில் வெற்றி பெற்றுள்ளது. 29 இடங்களில் போட்டியிட்டு 24 இடங்களை பெற்றுள்ளது. இதை எண்ணிப் பார்க்க வேண்டும். கூட்டுத் தேர்தல் முறைகளில் கூட சிறுபான்மையினர் தங்களது செல்வாக்கை, நிலைநாட்டிக் காட்ட முடியும். ஜில்லா போர்டுகளுக்கும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் கூட்டுத் தொகுதி தேர்தல் முறைதான் இருக்கிறது. இத் தேர்தல்களில் முஸ்லிம்களால் ஆதரிக்கப் படுகிறவர்களே வெற்றி பெறுகிறார்கள், பல காங்கிரஸ்காரர்கள் முஸ்லிம் லீக் உதவியுடன் வெற்றிவாகைசூடியிருக்கிறார்கள். 1946ம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தல் புள்ளி விவரங்களையும், அண்மையில் நடைபெற்ற ஜில்லா போர்டு தேர்தல் புள்ளி விவரங்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள். உங்களுக்கு (அன்றைய ஆளுங் கட்சிக்கு) கிடைத்த வாக்குகள் குறைந்திருப்பதை நீங்கள் அறிவீர்கள்.

K. T. கோசல்ராம் : திருநெல்வேலி உப தேர்தலை எடுத்துக்கொள்ளுங்கள். காங்கிரஸை எதிர்த்தவர்கள் தங்களது ஜாமீன் தொகையை இழந்துள்ளார்கள், அத் தேர்தலுடன் ஜில்லா போர்டு தேர்தலையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

காயிதே மில்லத் : அச்சமயம் உங்களுக்கு முஸ்லிம் லீக் ஆதரவு இருந்தது. முஸ்லிம் லீக்கின் ஆதரவு என்றால் முஸ்லிம் சமுதாயத்தினுடைய முழு ஒத்துழைப்பும் உங்களுக்குக் கிடைத்தது என்றுபொருள். எனவே, காங்கிரஸின் சொந்த நலனைக் கருதியாவது முஸ்லிம்கள் அனைவரும் ஒற்றுமையாகவும் கட்டுக் கோப்பாகவும் இருக்க வேண்டியது அவசியமாகிறதல்லவா? இந்த உண்மை காங்கிரஸ்காரர்களுக்கு ஏன் புரியவில்லை? கடந்த ஜில்லா போர்டு தேர்தல்களின் முடிவு அவர்களுக்கு ஒரு பாடம் கற்றுக் கொடுத்திருக்க வேண்டும். அவர்கள் பிடிதளர்ந்து வருகிறது. அடுத்து, வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் பொதுத் தேர்தல்கள் நடக்கயிருக்கும் பொழுது அவர்களது பாடு மிகவும் திண்டாட்டமாகப் போய் விடலாம். மக்களிடம் அதிருப்தி நிலவுவது உங்களுக்கு நல்லதல்ல. எனவே, உங்கள் சொந்த நலனை உத்தேசித்தாவது மக்களை நிம்மதியாக வாழச் செய்யுங்கள், திருப்தியுடன் அவர்கள் வாழ வழி வகுத்துக் கொடுங்கள்.



# 41

## பழுப்பு நிலக்கரியும் சிகப்பு நாடாவும்

*[28—3—50 அன்று மதராஸ் மாகாண சட்ட சபையில் காயிதே மில்லத் கூறியதாவது :]*

பழுப்பு நிலக்கரி விஷயம் குறித்து இந்த அவையில் நான் பல தடவைகள் பேசியுள்ளேன். சில ஆண்டுகளாகவே இது குறித்து இங்கு வாதங்கள் நடைபெற்று வருகின்றன. எந்தெந்த இடங்களில் பழுப்பு நிலக்கரி இருக்கின்றது, அதன் அளவு என்ன, அவற்றின் தரம் என்ன, அவற்றை வியாபாரப் பொருளாக மாற்ற என்ன செலவு பிடிக்கும் போன்ற விவரங்கள் எல்லாம் இங்கு சர்க்காரிடம் கைவசம் உள்ளது. 98 மில்லியன் டன்கள் நிலக்கரி கிடைக்கலாமென சர்க்காரே கூறுகிறது, இதைவிட அதிகமாகவும் இருக்கலாமென்றும் சர்க்கார் ஒப்புக் கொள்கிறது. என்றாலும் சர்க்கார் மெத்தனமாகவே நடந்து கொள்கிறது ''சிகப்பு நாடா'' முறை காரணமாக, காரியங்கள் சுறுசுறுப்பாக நடைபெறவில்லை.

இப்பொழுது அது குறித்து வினவும் பொழுது திட்டக் கமிஷனிடமிருந்து அறிக்கை எதிர்பார்க்கப்படுகிறது என்று சொல்கிறார்கள். இப்படி சில மாதங்கள் சென்று விட்டன. இப்பொழுது திட்டக் கமிஷன் அறிக்கை கிடைத்து விட்டது, பின்னும் ஏன் காலதாமதம் என்று கேட்கும் பொழுது வெளி நாடுகளுக்கு மாதிரிகள் (சாம்பிள்கள்) அனுப்பப்பட்டு இருக்கின்றன என்று பதில்

சொன்னார்கள். இப்படியும் சில மாதங்கள் ஓடின. சாம்பிள் அனுப்பிய விஷயம் என்ன வாயிற்று என வினவியபொழுது முதலில் அனுப்பிய சாம்பிள் போதுமானதாகயில்லை என்றும் கூடுதலான அளவில் கனிம முன் மாதிரிகள் வேண்டுமென்றும் அந் நாடுகள் கேட்டதினால் அவை அனுப்பப்பட்டுள்ளன என சொல்கிறார்கள்.

அடுத்து மொத்த சாம்பிள் அனுப்பிய விஷயம் என்னவாயிற்று என்று கேட்ட பொழுது, அவைத் தலைவரே இங்கு பழுப்பு நிலக்கரி தோண்டி எடுப்பதில் பல சிரமங்கள் இருக்கின்றன என்றும் நிலத்தடி நீரை வற்ற வைப்பது பெரும் பிரச்சினையாக உள்ளது என்றும் கூறினார். பழுப்பு நிலக்கரிக்கு மேலாகவும் அதற்குக் கீழாகவும் தேங்கி நிற்கும் நீரை வெளியே கொண்டு வந்து இப் பிரச்சினையை தீர்ப்பது இந்த 20ம் நூற்றாண்டில் சாத்தியப்படவில்லை என்று முதலமைச்சரே கூறுகிறார்! இது ஆச்சரியமாகவுள்ளது. 1950ம் ஆண்டில் இன்றைய விஞ்ஞான அறிவு இதற்குக் கை கொடுப்பதாகயில்லை என இந்த அவை நம்ப வேண்டுமென முதலமைச்சர் கோருகிறார். இந்த முடிவுக்கு வர இந்த அரசுக்கு இத்தனை ஆண்டுகள் பிடித்து விட்டன! இந்த அவல நிலையை என்ன என்பது? சிகப்பு நாடா முறைக்கு பழுப்பு நிலக்கரி விவகாரம் ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்.

# 42

## "சிகப்பு நாடா"வுக்கு ஒரு குட்டிக் கதை

*[28-3-50 அன்று மதராஸ் மாகாண சட்ட சபையில் காயிதே மில்லத் அவர்கள் கீழ்க்கண்ட குட்டிக் கதையைச் சொன்னார்கள்]:*

அந்தக் காலத்தில் மடாதிபதிகளெல்லாம் பல்லக்கில்தான் செல்வார்கள். பல்லக்கை தூக்க பலபேர் நியமிக்கப்பட்டிருப்பார்கள், அவர்கள் இரண்டு குழுவினராகயிருப்பார்கள், ஒரு குழுவினர் பல்லக்கை சுமந்து செல்லும்பொழுது, மற்றொரு குழுவினர் கூடவே செல்வார்கள். குறிப்பிட்ட தூரம் சென்ற பிறகு சுமையை ஒரு குழுவினரிடமிருந்து மற்றொரு குழுவினர் மாற்றிக் கொள்வார்கள். அதுவரை பல்லக்கை சுமந்து சென்றவர்கள் ஓய்வெடுத்தவண்ணம் பின் தொடர்ந்து செல்வார்கள். இது அந்தக் காலத்து வழக்கம்.

ஒரு தடவை ஒரு மடாதிபதி ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு பல்லக்கில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது மடாதிபதிக்கு சொந்தமான பொருள் ஒன்று பல்லக்கிலிருந்து நழுவி கீழே விழுந்து விட்டது. பல்லக்கைச் சுற்றிலும் பல பேர் நடந்து சென்று கொண்டிருந்த போதிலும் அப்பொருளை ஒருவரும் எடுக்கவில்லை. குறிப்பிட்ட இலக்கை அடைந்த பின்னர், மடாதிபதி ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் பொழுது தான் ஒரு பொருள் தவறிவிட்ட விபரம் தெரிய வந்தது. அது குறித்து தமது வேலையாட்களிடம் வினவினார். வரும் வழியில் அது தவறி விழுந்த விபரத்தை வேலையாட்கள் சொன்னார்கள். ஏன் அதை எடுக்கவில்லை என மடாதிபதி கேட்டார், அதற்கு வேலைக்காரர்கள் கீழே விழுந்தவற்றை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று தங்களுக்குக் கட்டளை இடப்படவில்லையே என்று பதில் சொன்னார்கள். நீங்கள் சொல்லாததை நாங்கள் எப்படி செய்ய முடியும என்று பயபக்தியுடன் சொன்னார்கள்.

இதற்குப் பிறகு, மடாதிபதி தமது வேலையாட்களுக்கு விபரமான உத்திரவு ஒன்றை பிறப்பித்தார். என்ன, என்ன சாமான்கள் எல்லாம் கீழே விழுந்தால் பொறுக்கி எடுத்துக்கொள்ள வேண்டுமென ஒரு பட்டியலே தயாரிக்கப்பட்டது. இனி இதன் பிரகாரம் நடந்து கொள்ள வேண்டும் என்றும் உத்திரவிடப்பட்டது.

சபாநாயகர்: கனம் உறுப்பினர் இப்படி கதை சொல்லிக் கொண்டு போனால், அவருக்கு ஒதுக்கப்பட்ட நேரத்தில் பெரும் பகுதி இதிலேயே கழிந்துவிடும் போல் இருக்கிறது.

அமைச்சர் கோபால் ரெட்டி: இது ரொம்ப சுவாரஸ்யமாகயிருக்கிறது. கனம் உறுப்பினர் தொடரட்டுமே.

காயிதேமில்லத் : ஒருநாள் மடாதிபதி தனது பரிவாரங்களுடன் போய்க் கொண்டிருந்தார். குறுக்கே ஒரு ஆறு வந்தது. பல்லக்கை சுமந்து சென்றவர்கள் ஆற்றைக் கடக்கலானுர்கள். அப்பொழுது எதிர்பாராத விதமாக பல்லக்கை சுமந்து சென்றவர்களில் ஒருவன் கீழே விழுந்து விட்டான். பல்லக்கு சாய்ந்து விட்டது. அந்த களேபரத்தில் வேலையாட்கள் பல்லக்கை ஆற்றிலேயே போட்டு விட்டார்கள். ஆற்று நீர் பல்லக்கை அடித்துச் சென்று கொண்டிருந்தது. அதில் அமர்ந்திருந்த மடாதிபதியோ கூக்குரலிடலானுர். ''என்னைக் காப்பாற்றுங்கள், என்னைக் காப்பாற்றுங்கள்'' என அவர் சப்தமிட்டார். சுற்றி நின்ற வேலையாட்களை உதவிக்கு அழைத்தார்.

அப்பொழுது அந்த வேலையாட்கள், முன்னுல் மடாதிபதி பிறப்பித்த உத்தரவுப்படி நடக்க வேண்டுமே என்ற அக்கறையுடன் தங்களிடம் உள்ள பழையப் பட்டியலை புரட்டிப்பார்க்கலானுர்கள். பல்லக்கிலிருந்து கீழே விழும் பொருட்களில் என்ன என்னவற்றையெல்லாம் பொறுக்கி எடுக்க வேண்டும் என்ற பட்டியலில் மடாதிபதியின் பெயர் இல்லை. மடாதிபதியின் உத்திரவுப்படி தான் நடக்க வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாகயிருந்த வேலையாட்கள் தண்ணீரில் அடித்துச் செல்லப்படும் மடாதிபதியின் உதவிக்குச் செல்லாது கையைக் கட்டிக்கொண்டு நின்றுர்கள். மடாதிபதியின் உத்தரவை எப்படி மீறுவது என்று அவர்கள் பயப்பட்டார்கள். தங்களுடைய எஜமானரை தண்ணீர் இழுத்துச் செல்வதைக் கண்டு வாயிலும், வயிற்றிலும் அடித்துக் கொண்டு ''ஓ''வெனக் கதறி அழுதார்களே தவிர அவரைக் காப்பாற்ற அவர்கள் முன்வரவில்லை. மடாதிபதியின் உத்தரவிற்கு கொஞ்சமும் மாற்றம் செய்யக் கூடாது என்பதற்காக அவர்கள் இவ்வாறு நடந்து கொண்டார்கள்.

இன்று அரசாங்கத்தினுல் கடைபிடிக்கப்படும் ''சிகப்பு நாடா'' முறைக்கும் இந்த குட்டி கதைக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது. அரசாங்க காரியங்களெல்லாம் இப்படித்தான் நடக்கின்றன.



# 43

## தெ. இ. முஸ்லிம் கல்விச் சங்கம்

*[5-8-50 அன்று மதருஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது.]*

சென்னை நகரிலிருந்து செயல்பட்டுவரும் தென்னிந்திய முஸ்லிம் கல்விச் சங்கம் என்ற அமைப்பிற்கு ஆந்திரா சர்வகலாச்சாலையில் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். இந்த கோரிக்கை வெகு நாட்களாக இருந்து வருகிறது. இம் மாகாணத்தில் பின்தங்கிய சமுதாய மக்களின் கல்வி வளர்ச்சிக்காக கடந்த 15 ஆண்டுகளுக்கு மேலாக இது செயல்பட்டு வருகிறது. எனவே பின்தங்கிய வகுப்பினரின் கல்வி வளர்ச்சியை முன்னிட்டு அந்த சர்வகலாச்சாலையில் இச்சங்கத்திற்கு இடமளிக்க வேண்டுமென நான் கேட்டுக் கொள்கிறேன்.



# 44

## தொகுதிகள் எப்படி அமைதல் வேண்டும்?

*[8-8-50 அன்று மதருஸ் மாகாண சட்டசபையில் சட்டசபைக்கான தொகுதிகளை திருத்தியமைக்கும் மசோதாப் பற்றி பேசும் பொழுது காயிதேமில்லத் கூறியதாவது:]*

புதிய அரசியலமைப்பின் பிரகார்ரம் நமது மாகாண சட்டசபைக்கான தொகுதிகளை நிர்ணயிக்கும் பணி தற்பொழுது நடைபெற்று வருகிறது. மாகாண சட்டசபைக்கான தொகுதிகளின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டுமென ஏன் நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரிய

வில்லே. அரசியலமைப்பின் பிரகாரம் நமது சட்டசபையின் எண்ணிக்கை 500 ஆகயிருக்க முடியும்; 75,000 மக்களுக்கு ஒரு எம். எல். ஏ வீதம் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என விதி இருக்கிறது. நமது சட்ட சபைக்கும் 500 உறுப் பினர்களே தேர்ந்தெடுத்தால் என்ன? இந்த ரீதியில் இந்திய அரசுடன் நமது மாகாண அரசு பேச்சு நடத்த வேண்டும்.

தனித்தொகுதி முறையை நீக்கிவிட்டது குறித்து அவைத்தலைவர் பிரமாதப்படுத்திப் பேசினுர், வகுப்புவாதம் என்ற கோஷத் தைத்தான் எடுத்து வைக்கிருர்களே தவிர வேருென்றையும், அத்தேர்தல் முறைக்கு எதிராக அவர்களால் கூற முடியவில்லே.

அமைச்சர் கோபால் ரெட்டி : வேறு எந்த நாடுகளிலாவது வகுப்புவாதம் இருப்பதை நீங்கள் பார்த்துள்ளீர்களா?

காயிதே மில்லத்: மற்ற நாடுகளேப் பற்றி நமக்கு அக்கறை இல்லே, நமக்குள்ள கவலே நமது நாட்டைப் பற்றிதான். இங்கிலாந்து நாட்டில் கட்சியடிப்படையில் அரசியல் செயல்படுவதைப் பற்றி பேசப்பட்டது. அந்நாட்டு சூழ்நிலேக்கு அது ஏற்றதுதான். இங்கிலாந்தை சுட்டிக் காட்டுபவர்கள், அங்குள்ள ஆட்சி முறைகளே யெல்லாம் இந்நாட்டிலும் ஏற்றுக்கொள்ளத் தயாராகயிருக்கிருர்களா?

பல உறுப்பினர் தொகுதிபற்றி இங்கு பேசப் பட்டது, அத்தொகுதிகளில் வாக்களிக்கும் முறை எப்படி இருக்கும் என்பது விளக்கப்படவில்லே. ஒரு வாக்கு சீட்டுதான் வழங்கப்படுமா? அல்லது பல வாக்கு சீட்டுக்கள் வழங்கப்படுமா? ஒரு வாக்காளருக்கு அளிக்கப்படும் பல வாக்கு சீட்டுகளே ஒரே வேட்பாளருக்கு அளிக்கலாமா? என்பன போன்ற விபரங்கள் சொல்லப்பட வில்லே. இவற்றைத் தெளிவுபடுத்தினுல் நல்லது.

''ஒரு-உறுப்பினர்'' தொகுதிதான் நல்லது என்று பலரும் சொன்னுர்கள். ஆனுல் இத் தேர்தல் முறையில் மொத்த வாக்காளர்களில் பாதிக்கும் குறைவான வாக்குகளேப் பெற்றவர் களும் கூட இத் தேர்தல் முறையில் வெற்றி பெற முடியும் என்பதை மறந்து விடுவதற்கில்லே.

குவியல் ஒட்டு முறையுடன் கூடிய பல - உறுப்பினர்கள் கொண்ட தொகுதிதான் மேலா னது என்பது எனது அபிப்பிராயமாகும். இந் நாட்டு சூழ்நிலேகளுக்கு அதுதான் ஏற்றது. உதா ரணமாக ஒரு தொகுதியிலிருந்து 5 உறுப்பினர் களே தேர்ந்தெடுக்க வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். ஒவ்வொரு வாக்காளரிடமும் 5 வாக்கு சீட்டு கொடுக்கப்படும். அவ்வாக்காளர் கள் அச்சீட்டுகளே 5 வேட்பாளர்களுக்கு ஆளுக்கு ஒன்ருகக்கூட அளிக்கலாம் அல்லது அந்த 5 வாக்குகளேயும் ஒரே வேட்பாளருக்கும் கொடுத்து விடலாம். இம்மாதிரி முறையை பின் பற்றினுல் எல்லா சமுதாய மக்களுக்கும் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் தேர்தல் முறை அமையுமென்று நான் கருதுகிறேன்.

அமைச்சர் கோபால் ரெட்டி: இதில் ஊழல் நடப்பதற்கு வழி உண்டு.

காயிதேமில்லத் : இதில் மட்டுமல்ல, எல்லா முறைகளிலுமே ஊழல் இருக்க முடியும். எவ் வளவு குறைந்த அளவு ஊழல் இருக்குமோ அதைத்தான் நாம் இப்பொழுது தேடிக் கொண் டிருக்கிருேம். பம்பாய் மாகாணத்தில் பல - உறுப்பினர் தொகுதி அமலில் இருப்பது தெரிந்ததே. அது ஓரளவு சுமுகமாக செயல் படுவதும் அறிந்ததுதான்.

மத்தியப் பிரசேத முதலமைச்சர் கூறியுள்ள கருத்து எல்லோருடைய கவனத்திற்குமுரியது. ஒரு உறுப்பினர் தொகுதியில் ஒரு முஸ்லிம் வேட் பாளரும் ஒரு ஹிந்து வேட்பாளரும் போட்டி யிட்டால் முஸ்லிம் வேட்பாளர் வெற்றி பெறு வதற்கான வாய்ப்பு மிகவும் குறைவு என அவர் கூறியுள்ளார். எனவே இரட்டை உறுப்பினர் தொகுதிகளேத்தான் உருவாக்க வேண்டு மென்றும், அதில் ஒன்றை முஸ்லிம்களுக்கு ஒதுக்க வேண்டுமென்றும் அந்த மாகாண முதலமைச்சர் கூறியுள்ளார். முஸ்லிம்களுக்கு உரிய அளவு பிரதிநிதித்துவம் கிடைக்க வேண்டு மாளுல் இம்முறையே சாலச்சிறந்தது என அவர் தெரிவித்துள்ளார். இந்த உண்மையை உத்திரப் பிரதேச முதலமைச்சரும் கூறியுள்ளது வரவேற்கத்தக்கது, நமது அவையின் முன்னவர் மாண்புமிகு கோபால் ரெட்டியும் நேற்று இங்கு அக்கருத்தையொட்டி பேசியிருக்கிருர்.

அமைச்சர் கோபால் ரெட்டி ; அவர்களுக்கு நான் வேண்டுகோள் தான் விடுத்தேன்.

காயிதே மில்லத் : அவர் வேண்டுகோள் தான் விட்டார் என்றாலும், சிறுபான்மை யினருக்கு போதிய பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்ற கருத்தும் அதில் தொக்கி நிற்கிறது.

பல - உறுப்பினர் தொகுதிகள் இருக்க வேண்டுமென சிறுபான்மையினர் கேட்கிறார்கள். எல்லா இடங்களையும் கைப்பற்றி ஆட்சியைப் பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அப்படி அவர்கள் கேட்கவில்லை, பெரும்பான்மையான ஸ்தானங்களில் வெற்றி பெற முடியாது என்பது அவர்களுக்குத் தெரியும். இந்தத் தேர்தல் முறை மூலம் தாங்களும் சில தொகுதிகளில் வெற்றி பெறக்கூடும் என அவர்கள் நினைக்கிறார் கள். தங்களுடைய சொந்த பிரதிநிதிகளை இதன் மூலமாக சட்ட சபைக்கு அனுப்பலாமென அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். பல உறுப்பினர் தொகுதி இருப்பது முஸ்லிம்களுக்கு மட்டுந்தான் அனுகூலம் என்பதல்ல. எல்லா சிறுபான்மை யினருக்கும் அது நன்மை பயக்கக்கூடியது. மொழியடிப்படையிலான சிறுபான்மை யினருக்கும் இதனால் லாபம்தான். மற்றும் பல சிறுபான்மை சமுதாயத்தினரும் பலன் பெற லாம்.

வாக்காளர் ஜாபிதா தயாரிக்கும் பொழுது கணிசமான அளவு உர்தூ மொழியை தாய் மொழியாகக்கொண்டவர்கள் வாழும் பகுதிகளில் உர்தூ மொழியிலேயே வாக்காளர் ஜாபிதா தயாரிக்கப்பட வேண்டும்.

அமைச்சர் கோபால் ரெட்டி: மதராஸ் நகரில் குஜராத்தி மொழி பேசுபவர்கள் வசிக்கிறார்கள். அப்படியானால் குஜராத்தி மொழியில் வாக்காளர் ஜாபிதா தயாரிக்க முடியுமா ?

காயிதேமில்லத்; அவர்களை முஸ்லிம்களுடன் ஒப்பிடக்கூடாது. உர்தூவை தாய்மொழியாகக் கொண்டவர்கள், நமது மாகாணத்தில் 20 லட்சம் பேர் இருக்கிறார்கள். சென்னை நகரில் குஜராத்தி மொழி பேசுபவர்கள் 20 ஆயிரம் கூட இல்லை.



# 45

# இதற்குப் பெயரென்ன?

*[10-8-50 அன்று மதராஸ் மாகாண சட்ட சபையில் உணவுப் பொருள்கள் குறித்து விவாதம் நடைபெற்ற பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :]*

பங்கீட்டுக் கடைகளில் விநியோகிக்கப்படும் உணவுப் பொருளை பார்த்தால் அது அரிசி மாதி ரியே தெரியவில்லை. உமி, தூசி, கல் மற்றும் ஏதேதோ பொருட்கள் எல்லாம் அந்த அரிசியில் கலந்திருக்கின்றன. அது அரிசியே அல்ல. கலப் படமான அரிசி என்று கூட சொல்வதற்கில்லை. அதற்கு என்ன பெயர் சொல்வதென்றே எனக் குத் தெரியவில்லை.

இதை மக்கள் சமைத்துச் சாப்பிட்டால் அவர் கள் உடம்புக்கு என்னவாகும்? வயிற்றில் அது ஜீரணிக்காது வயிற்று வலிதான் ஏற்படும். பங் கீட்டுக் கடைகளில் வழங்கப்படும் அரிசிதான் மிகவும் குறைவு என்றாலும் கொடுக்கப்படுகிற உணவுப் பொருட்கள் கூட மக்களின் உடம்பை கெடுத்துவிடும் போல் இருக்கிறது.

இராமநாதபுரம் மாவட்டம் எமனேஸ்வரத் திலிருந்து கைத்தறி நெசவாளர்கள் சங்கத் தலை வர் எனக்கு ஒரு பார்சலை அனுப்பியுள்ளார். அது அரிசி பார்சல், அந்த பாக்கெட்டின் மீது கீழ்க் கண்டவாறு எழுதப்பட்டுள்ளது. ''நபர் ஒன் றுக்கு நாள் ஒன்றுக்கு கொடுக்கப்பட்ட அரிசியின் அளவு அதில் அடங்கியிருக்கிறது'' இந்த வாசகம் அடங்கிய பாக்கெட்டில் உள்ள அரிசியை நான் நிறுத்துப் பார்த்தேன். மூன்றரை தோலா (ரூபாய்) எடை உள்ளது. மதராஸ் பட்டணம் படிக்கு முப்பதில் ஒருபங்கு அது ஆகும். இதிலிருந்து இந்த மாகாணத்தில் நிலவும் மோச மான அரிசி நிலைமையை நாம் புரிந்து கொள்ள லாம்.



## 46

# தொகுதிப் பிரிவினையில் தில்லு முல்லுகள் !

*[6-10-50 அன்று மதருஸ் மாகாண சட்ட சபையில் மாகாண சட்ட சபைக்கான தொகுதிகளின் எல்லைகளை மாற்றியமைப்பதைப் பற்றிய விவாதம் நடந்தபொழுது காயிதே மில்லத் கூறியதாவது:]*

மதருஸ் நகரில் ராயப்பேட்டை பகுதியில் நான் குடியிருந்து வருகிறேன். இப் பேட்டை ஆயிரம் விளக்கு தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. ராயப்பேட்டையை திருவல்லிக்கேணி சட்ட சபை தொகுதியுடன் இணைத்திருந்தால் நலமாக இருக்கும். திருவல்லிக்கேணி தொகுதியில் நேப்பியர் பூங்கா, திருவேட்டீசுவரன் பேட்டை, சேப்பாக்கம், ஜாம்பஜார், மீர்சாகிப் பேட்டை ஆகிய இடங்கள் அடங்கியிருக்கின்றன. எனவே, இதையும் திருவல்லிக்கேணி தொகுதியுடன் சேர்த்திருக்கலாம். அதை விடுத்து இதை ஏன் ஆயிரம் விளக்கு தொகுதியில் சேர்த்தார்கள் என்று எனக்கு விளங்கவில்லை. ஆயிரம் விளக்கு தொகுதி இரட்டை உறுப்பினர் தொகுதி. அதில் 2,70,000 வாக்காளர்கள் உள்ளனர். சாதாரணமாக ஒரு உறுப்பினர் தொகுதியில் 1,25,00 அல்லது 1,30,000 வாக்காளர்கள் இருப்பதுண்டு. ஆயிரம் விளக்கு தொகுதியில் இரண்டே முக்கால் லட்சம் வாக்காளர்கள் இருக்கிறார்கள். ராயப்பேட்டை பகுதியை சேர்க்காமலேயே ஆயிரம் விளக்கு தொகுதி இரட்டை உறுப்பினர் தொகுதியாக இருக்க முடியும். ராயப்பேட்டை பகுதியில் 15,000 வாக்காளர்கள்தான் உள்ளார்கள். இதை திருவல்லிக்கேணி தொகுதியில் சேர்ப்பதினால் ஒன்றும் கெட்டுப் போவதில்லை.

மலபார் மாவட்டம், பாலக்காடு தொகுதியில் அத் தொகுதியின் வடகிழக்கு மூலையில் உள்ள பரலி பிர்க்காவும் சேர்க்கப்பட்டுள்ளது. அதில் 10,000 வாக்காளர்கள் உள்ளார்கள். பாலக்காடு தொகுதியில் 1,50,000 வாக்காளர்கள் இருக்கிறார்கள். பரலிபிர்க்காவை சேர்க்காமலேயே அந்த தொகுதியை அமைத்திருக்க முடியும். போதுமான அளவு வாக்காளர்கள் அதில் இருக்கிறார்கள். இருப்பினும், வேண்டுமென்றே அந்தபிர்க்காவை பாலக்காடு தொகுதியில் சேர்த்துள்ளார்கள்.

மலபார் மாவட்டத்தில் வண்டூர் சட்ட சபை தொகுதி உள்ளது. அதில் கொண்டோட்டி பிர்காவை இரண்டாகப் பிரித்து பாதியை வண்டூரில் சேர்த்துள்ளார்கள். அந்த பிர்காவில் 64,000 வாக்காளர்கள் உண்டு. அதில் 41,000 வாக்காளர்களை கோட்டக்கல் சட்ட சபை தொகுதியில் சேர்த்துவிட்டு மீதியை வண்டூர் தொகுதியில் இணைத்து விட்டிருக்கிறார்கள். கொண்டோட்டி பிர்கா முழுவதையும் வண்டூர் தொகுதியிலேயே வைத்திருந்தால் என்ன? வண்டூர் தொகுதி இரட்டை உறுப்பினர் தொகுதியாகும். அதில் 2,96,000 வாக்காளர்கள் இருக்கிறார்கள். வேண்டுமென்றே ஒரு சமுதாயத்தினரை ஒரே தொகுதியில் இருக்க விடாமல் பிரிப்பதற்காக இம்மாதிரி சூழ்ச்சிகள் எல்லாம் மேற்கொள்ளப்படுகின்றன.

லட்சத் தீவுகளை கோழிக்கோடு ரூரல் தொகுதியில் சேர்த்துள்ளார்கள். செவ்வாயூர் பகுதியைத்தான் கள்ளிக்கோட்டை ரூரல் என்றழைக்கிறார்கள். கள்ளிக் கோட்டை நகர் ஒரு தொகுதியாக உள்ளது, லட்சத் தீவுகளைச் சார்ந்தவர்கள் தங்களது அத்தியவாசியத் தேவைகளை வாங்குவதற்கு கள்ளிக் கோட்டை நகருக்குத்தான் வருகிறார்கள். எனவே, அத் தீவு மக்களை கள்ளிக்கோட்டை நகர சட்டமன்ற தொகுதியில் சேர்ப்பதே முறையானதாகும். அதைவிடுத்து கள்ளிக்கோட்டை ரூரல் என ஒரு தொகுதியை சிருஷ்டித்து அதில் கொண்டு போய் லட்சத்தீவு வாக்காளர்களை சேர்த்துள்ளார்கள்.

திருநெல்வேலி மாவட்டத்திலும் பல தொகுதிகளில் குளறுபடிகள் நடந்துள்ளன. அது சம்பந்தமான புள்ளி விபரங்கள் எனக்கு இன்னும் வந்து சேரவில்லை, இருந்தாலும் எனக்குத் தோராயமாகத் தெரியவந்துள்ள விபரங்களை சொல்லி வைக்கிறேன். தென்காசி தொகுதியில் தென்காசி நகர், பண்பொழி, வடகரை போன்ற இடங்கள் உள்ளன. ஆனால், தென்காசி தாலு

காவைச் சார்ந்த கடையநல்லூரை, சங்கரன் கோவில் தொகுதியில் கொண்டு போய் இணைத் திருக்கிறார்கள். தொகுதிகளை எவ்வளவு தாறு மாறான முறையில் பிரித்துள்ளார்கள் என்பதை சுட்டிக் காட்டியும் அதை கண்டித்தும் ''மெயில்'' (Mail) என்ற ஆங்கிலப் பத்திரிக்கையில் கட்டுரை ஒன்று வெளியாகியுள்ளது. ஆளுங்கட்சிக்கு வாக்களிக்காதவர்கள் எப்படியெல்லாம் தண்டிக்கப்படுகிறார்கள் என்பதை அப்பத்திரிக்கை சுட்டிக் காட்டியுள்ளது. தென்காசியிலிருந்து கடையநல்லூரை ஏன் பிரிக்க வேண்டும்? ஒரு தாலுகாவை இரண்டாக உடைத்து அதில் ஒரு பகுதியை சங்கரன் கோவில் தாலுகாவில் கொண்டு போய் ஏன் சேர்க்க வேண்டும்? நான் இங்கு குறிப்பிடுவதெல்லாம் சில உதாரணங்கள் தான்.

மதராஸ் திருநெல்வேலி மலபார் ஆகிய சில மாவட்டங்களைக் குறிப்பிட்டேன். இதுபோன்று மேலும் சில மாவட்டங்கள் இருக்கின்றன. தஞ்சை மாவட்டம் வடஆற்காடு மாவட்டம் போன்றவை உள்ளன. அங்கெல்லாம் முஸ்லிம்கள் ஒரு சில இடங்களில் சேர்ந்தாற் போல் கணிசமான அளவு வாழ்ந்து வருகிறார்கள். அம் மாதிரி பிரதேசங்களை இரண்டு மூன்றாக பிரித்து பல சட்டமன்றத் தொகுதிகளிலும் துண்டு துண்டாகச் சேர்த்து விடுவது நல்லதல்ல.

## 1951

## 47

# பாதிக்கிணறு தாண்டும் யோசனை

*[13-2-51 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதேமில்லத் கூறியதாவது:]*

மாநிலத்தில் உணவு நிலைமை இன்னும் சீர் படவில்லை. ஆனால், கிராமப்புறங்களிலுள்ள ரேஷன் கடைகளை மூடிவிட அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. அதாவது தமது பொறுப்புகளை தட்டிக் கழிக்க இந்த அரசு முன்வந்துள்ளது. உணவுக்கட்டுப்பாடு சட்டங்கள் இன்னும் நீடிக்கின்றன. உணவுப் பொருள்களின் போக்குவரத்திற்கும் கட்டுப்பாடு விதிக்கப்பட்டுள்ளன. நெல் கொள்முதல் தொடர்கிறது. ஆனால் கிராமப் புறமக்களுக்கு வழங்கப்பட்டு வந்த ரேஷன் கடைகள் மூடப்படுகின்றன.

இந்த அரசின் முடிவைப் பார்க்கும் பொழுது எனக்கு ஒரு கதைதான் ஞாபகத்திற்கு வருகிறது. கிணறு ஒன்றில் தூர் எடுக்க ஒரு மனிதன் முடிவு செய்தான். கிணற்றின் ஒரு பக்க சுவரிலிருந்து தூர் எடுத்துக்கொண்டே எதிர்ப்புற சுவர் வரை செல்லவேண்டும் என்பது அவனுடையநோக்கம். ஒரே நாளில் இதை முடிக்க முடியுமா? என்ற சந்தேகம் அவனுக்கு வந்து விட்டது. எனவே, கிணற்றின் மத்தியிலிருந்து தனது வேலையை ஆரம்பித்தால் ஒரு பகுதியாவது முடித்து விடலாம் என அவன் எண்ணினான். பாதி கிணற்றை சுத்தம்செய்யும் நோக்கத்துடன் அவன் கிணற்றின் மத்தியப் பகுதியில் குதித்தானும். அது போலவே இருக்கிறது நமது மாநில அரசின் உணவுக்கொள்கை.

## 48

# மாற்றாந்தாய் மனப்பான்மை

*[14-2-51 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதேமில்லத் கூறியதாவது:]*

கைத்தொழில் குறித்து இப்பொழுதாவது சிறிது கவனம் செலுத்த இந்த அரசு முன் வந்துள்ளது நல்ல அறிகுறியாகும். இதுவரை மாற்றாந்தாய் மனப்பான்மையுடனேயே அத் தொழில் பாவிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நமது நாட்டில் நிலைத்திருப்பது கைத்தறித் தொழிலாகும். குடிசைத் தொழில்களை ஊக்குவிக்க வேண்டுமென இந்த அரசாங்கம் சொல்லிக் கொண்டிருக்கிறது. ஆனால், நீண்ட நெடுங்காலமாக நிலைத்திருக்கும் கைத்தறித் தொழிலை சிறப்பாக வாழ வைப்பதற்கு உருப்படியான முயற்சிகள் ஒன்றும் எடுக்கப்படவில்லை.

நெசவாளர்களுக்கு வேலையில்லாத சமயங்களில் மாற்றுத்தொழில் ஒன்றைச் செய்ய அவர்கள் முன்வர வேண்டுமென தொழில் துறை அமைச்சர் புத்திமதி கூறியுள்ளார்.

வேறு தொழில்களுக்கு சென்றுவிட்டவர்கள், பின் எப்படி மீண்டும் கைத்தறி நெசவை மேற் கொள்வார்கள். எனவே, இது அவ்வளவு உருப்படியான புத்திமதியல்ல என நான் நினைக்கிறேன். முழு நேர வேலை கிடைக்கும் அளவுக்கு நெசவாளர்களுக்கு நாம் நூல் விநியோகம் செய்யவேண்டும். அவர்கள் உற்பத்தி செய்யும் பொருட்களை விற்றுக் கொடுக்க வேண்டும். இந்நாட்டில் முப்பது லட்சம் பேர் இத் தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள். 5,00,000 தறிகள் இருப்பதாக மதிப்பிடப்படுகிறது. நூல் சப்ளை தட்டுப்பாடில்லாதவாறு நெசவாளர்களுக்குக் கிடைக்க வழி செய்ய வேண்டும். இது அரசாங்கத்தின் பொறுப்பாகும். மக்களின் உணவுத் தட்டுப்பாட்டை போக்க உணவுப் பொருட்களை அரசாங்கமே வாங்கி எவ்வாறு விநியோகம் செய்கிறதோ அது போல, பருத்தியையும் அரசாங்கமே கொள்முதல் செய்து நெசவாளர்களுக்கு நூல் கிடைக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். நூல் விலையும் நியாயமான முறையில் இருக்கும்படி கண்காணிக்க வேண்டும்.

இத்தொழில் உள்நாட்டுத் தேவைகளை மட்டும் பூர்த்தி செய்து கொண்டிருக்கவில்லை. இங்கு தயாராகும் சில ரகங்கள் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன. ஏற்றுமதியை ஊக்குவிக்க வேண்டுமென பிரச்சாரம் செய்யும் மத்திய அரசு, கைத்தறித் தொழிலுக்கு கை கொடுக்க இதுவரை என்ன செய்துள்ளது? மத்திய கிழக்கு நாடுகளிலும் கீழ்த்திசை நாடுகளிலும் நமது கைத்தறித் துணிகளுக்கு நல்ல ''மவுசு'' இருக்கிறது. நமது பொருட்களின் தரம் குறைந்து விடாது பார்த்துக் கொள்வதற்கு இந்த அரசு ஆவன செய்ய வேண்டும். நமது வெளிநாட்டு மார்க்கட்டுகளை நாம் இழந்து விடக்கூடாது. இதில் அரசாங்கத்தின் பங்கு முக்கியமானதாகும்.

# 49

# குறளுக்கு மெருகூட்டுதல்

*2-3-51 அன்று மதருஸ் மாகாண சட்டசபையில் காயிதேமில்லத் கூறியதாவது;-*

நிதியமைச்சர் இந்த அவையில் பேசும் பொழுது திருக்குறளிலிருந்து ஒரு மேற்கோள் காட்டினர்.

ஒரு லட்சிய அரசாங்கத்திற்கு முக்கியமான தேவைகள் என்ன என்பது அக்குறளில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அந்த குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து இங்கு அவர் சொன்னது சரியில்லை என நான் நினைக்கிறேன். ஒரு லட்சிய நாட்டிற்கு அத்தியவாசியமான தேவை என்ற அர்த்தத்தில் அக்குறள் உள்ளது. எனவே, பிணியிலிருந்தும், தேவைகளிலிருந்தும் மக்களை விடுவிப்பது ஒரு அரசாங்கத்தின் பணியாக இருக்க வேண்டும். குறிக்கோள் மட்டுமல்ல; அது சாதனையாகவும் அமைய வேண்டும். மகிழ்ச்சி, மனநிறைவு, செல்வச்செழிப்பு ஆகியவற்றை ஒரு அரசாங்கம் செய்து காட்ட வேண்டும் அது தான் அரசாங்கத்தினுடைய முக்கியமான வேலை. சாதனை செய்து காட்டாமல் குறிக்கோளாக மட்டும் இருக்கிறது என்று சொல்வது பொருத்தமல்ல. நாட்டு நல அரசு ஒன்று எவ்வாறு செயல்பட வேண்டுமென இன்றைய ஆராய்ச்சியாளர்கள் எதிர்பார்க்கிருர்களோ அதைத்தான் திருவள்ளுவரும் சொல்லியிருக்கிருர். எனவே, உங்கள் சாதனையைப் பற்றி பேசுங்கள், எங்களது குறிக்கோள் அது என்று மட்டும் சொல்லி நிறுத்தி விடாதீர்கள்.



## 50

# கம்யூனல் ஜி. ஓ.

*[28-3-51 அன்று மதருஸ் மாகாண சட்ட சபையில் காயிதே மில்லத் கூறியதாவது]*

வகுப்பு வாரி பிரதிநிதித்துவ உத்திரவு குறித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கம்யூனல் ஜி. ஓ. (G. O.) என அழைக்கப்படும் இந்த உத்திரவு நீக்கப்பட மாட்டாது என அரசாங்கம் வாக்குறுதி அளித்துள்ளது. இப்படி ஒரு உத்திரவு பிறப்பிக்கப்படவில்லையானுல் சில சமுதாயங்களைச் சார்ந்த இளைஞர்களுக்கு பள்ளிக் கூடங்களிலும், கல்லூரிகளிலும் இடமே கிடைத் திருக்காது. அண்மையில் சில மாணவர்களின் மதிப் பெண் பட்டியல்களை நான் காண நேர்ந்தது. வகுப்பு வாரி பிரதிநிதித்துவ முறை இல்லையென் ருல் இவர்கள் எல்லாம் கல்லூரிப் பக்கமே போயி ருக்க முடியாது. எனவே இந்த ஜி. ஓ. (G. O.) மிகவும் அவசியமாகும். அப்பொழுதுதான் பின் தங்கிய சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் உயர்கல்வி பெறமுடியும். தகுதி, திறமை என்பன போன்ற வற்றை மட்டும் அடிப்படையாக வைத்துக் கொண்டு கல்விக் கூடங்களில் ஆள் எடுக்கக் கூடாது. பின் தங்கிய வகுப்பைச் சார்ந்தவர் களுக்கும் வாய்ப்புகள் கிடைக்கும் வண்ணம் அரசாங்கத் தேர்வு முறை அமைய வேண்டும்.

## 51

# திருச்சி கல்விக்கூடம்

*28—3—51 அன்று மதருஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது:-*

திருச்சிராப்பள்ளியில் செய்யது முர்த்தஸா சாஹிப் கல்விக்கூடம் என ஒன்று இருக்கிறது, அந்த பள்ளிக்கட்டிடம் மாட்டுக் கொட்டகைக்குக் கூட லாயக்கானதல்ல. அவ்வளவு படுமோச மாக உள்ளது. சில மாதங்களுக்கு முன்பு நமது மாகாண முதலமைச்சர் அந்த பள்ளிக்கூடத்திற்கு விஜயம் செய்தார். அவருடன் செல்லும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. திருச்சிராப் பள்ளியிலுள்ள பழைய ஆஸ்பத்திரி கட்டிடத்தின் ஒரு பகுதியை இப்பள்ளிக்கூடத்திற்குக் கொடுக்க லாமென அரசாங்கம் தீவிரமாக சிந்தித்துக் கொண்டிருந்தது. அது எப்பொழுது நிறை வேற்றப்படும்?



## 52

# சினிமா கொட்டகைகளில் புகைப் பிடித்தல்

*2-4-51* அன்று சினிமா கொட்டகைகளில் புகைபிடிப்பதை தடுக்கும் மசோதா குறித்து பேசும் பொழுது காயிதே மில்லத் கூறியதாவது :

புகைபிடித்தல் கெடுதலா அல்லது அதில் ஏதாவது பலாபலன்கள் இருக்கின்றனவா? என்ற விவகாரத்தில் நான் இறங்கவில்லை. மக்கள் புகைபிடிக்காமல் இருக்கும்படி பார்த்துக் கொள்வது சமூக ஊழியருடைய கடமையாகும். புகைபிடித்தல் கெடுதல் என்ற எண்ணத்தை மக்கள் மத்தியில் உருவாக்க வேண்டும். இக் காரியத்தைக் காங்கிரஸ் கட்சி செய்ய முன் வருமானுல் அது ஒரு நல்ல பணிதான். குறிப் பிட்ட இடங்களில் புகை பிடிக்கக் கூடாது என சட்டம் கொண்டு வருவது விநோதமாகத்தான் இருக்கிறது. புகைபிடிக்கும் பழக்கம் நல்லதா அல்லது கெட்டதா என்பது ஒரு புறம் இருக் கட்டும். சினிமா கொட்டகைகளில் புகைபிடிப்ப

தினுல் நெருப்பு அபாயம் எழக்கூடும். இந்த மாதிரியான 'தீ' விபத்துக்கள் எழுந்துள்ளனவா என்பது குறித்தும் அது சம்பந்தமான புள்ளி விபரங்களையும் அமைச்சர் அவையில் வைத்திருந் தால் நலமாகயிருந்திருக்கும். ஆனுல், உலகம் முழுவதும் பொது இடங்களில் புகைபிடிப்பது சர்வ சாதாரணமான பழக்கமாயிருந்து வரு கிறது. அதிலும் பொழுது போக்குக்காக செல்லும் பொழுது அவர்களை புகைப்பிடிக்கக்கூடாதென சட்டமூலம் தடுப்பது சரியில்லை. சமூக ஊழியர் களும் மிஷனரிகளும் மக்கள் மத்தியில் புகைப் பிடிப்பதின் கெடுதலை எடுத்துச் சொல்லி பிரச் சாரங்கள் செய்து மக்கள் அப்பழக்கத்தைக் கைவிட வேண்டுமென தூண்ட வேண்டும், இது தான் சரியான வழிமுறை. என்ருலும், சினிமாக் கொட்டகைகளுக்குள் புகைபிடிப்பதின் காரண மாக நெருப்பு அபாயம் எழும் என அரசாங்கம் கருதுமானுல், அதற்கென சட்டம் செய்வது சரிதான், ஆனுல், அரசாங்கத்தரப்பிலிருந்து போதுமான வாதங்கள் எடுத்து வைக்கப்பட வில்லை என்றே நான் கருதுகிறேன், எனவே இந்த மசோதாவை தள்ளி வைக்கலாமென நான் கருதுகிறேன்.



## 53

# அன்றே சொன்னுர்கள்

*[30—8—51 அன்று மதருஸ் மாகாண சட்ட சபையில் காயிதேமில்லத் கூறியதாவது]*

ஹரிஜனங்களுக்கு சட்ட மன்றங்களில் இட ஒதுக்கீடு செய்யப்பட்டிருப்பது தவறு என்று எப் பொழுதுமே நாங்கள் கூறியதில்லை. அடக்கி ஒடுக் கப்பட்டமக்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பது தான் எங்களுடைய லட்சியமாகும். ஆனுல், இங்கு பேசிய சிலருடைய உரைகளிலிருந்து நாங்கள் அத்தகைய ரிசர்வேஷன்களுக்கு எதிராக உள்ளோம் என்ற கருத்து தொனிப்பது போலத் தெரிகிறது. இங்கு பேசிய எனது கட்சியைச் சார்ந்தவர்கள் ஹரிஜனங்களுக்கு இருப்பதைப் போன்ற ரிசர்வேஷன் எங்களுக்கும் கொடுக்கப்பட வில்லையே என்றுதான் குறைப்பட்டிருப்பார்கள். உண்மையில் எனது கட்சியைச் சார்ந்தவர்கள் கூறியது என்னவென்ருல் சட்ட சபைகளில் மட்டு மல்ல, ஸ்தல ஸ்தாபனங்களிலும் ஹரிஜனங் களுக்கு இட ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்ப தாகும். இக் கருத்தை நானும் ஆதரிக்கிறேன். சிறுபான்மையினர் உள்பட எல்லா சமுதாயத்தி னருக்கும் ஸ்தல ஸ்தாபனங்களில் இட ஒதுக்கீடு செய்யப்படுமானுல், அது வரவேற்கத் தக்கதாக அமையும், உண்மையிலேயே எல்லாமக்களும் இதனுல்பயன் பெறுவார்கள்.

---

## காஞ்சியில தோற்றது இந்தியாவுக்கு லாபமாயிற்று !

சென்னை நேதாஜி நகர், **K, K. S. அப்துர் ரகுமான்**

முதன் முதலாக நான் காயிதேமில்லத்தை 1948ம் ஆண்டு இளையான்குடியில் சந்தித்தேன். நான் அப்பொழுது ஐந்தாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன்.

மதருஸ் நியூ காலேஜ் வகைக்கு காயிதேமில்லத் ரங்கூன் வந்தபொழுது நான் ''தொண் டன்'' தினசரியில் பணிபுரிந்து கொண்டு இருந்தேன். தலைவரவர்கள் சுமார் இரண்டு மாதங்கள் பர்மாவில் தங்கினுர்கள். அப்பொழுது அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. 1959ல் ரங்கூன் நகரில்''காயிதேமில்லத் மன்றம்'' ஒன்றை நாங்கள் ஆரம்பித்துநடத்தி வந்தோம்.

பர்மாவிலிருந்து நாங்கள் வெளியேற்றப்பட்ட பிறகு தமிழ்நாட்டில் பிழைப்பு தேடி அலைந்த பொழுது, சென்னை நகரில் துறைமுகப் பகுதியில் ''பர்மா பஜார்'' அமைப்பதற்கும் வடசென்னை யில் ''நேதாஜி நகர்'' உருவாவதற்கும் அடிப்படை வகுத்து கொடுத்தவர்களே காயிதேமில்லத் தான். அப்பொழுது மதருஸ் கார்ப்பரேஷன் கவுன்ஸிலராக இருந்த ஹாஜி சிலார் மியான் காயிதே மில்லத்தின் அன்பு கட்டளைகளை உடனுக்கு உடன் நிறைவேற்றினுர்.

1964ம் ஆண்டு காஞ்சிபுரம் நகர சபையில் காயிதேமில்லத்திற்கு வரவேற்பு அளிக்கப் பட்டது. தலைவரவர்களுடன் நானும் போயிருந்தேன். நகர சபை வரவேற்பில் கலந்துகொண்ட காயிதேமில்லத் பின்னர் அறிஞர் அண்ணு வீட்டிற்கும் சென்ருர்கள். அப்பொழுது அண்ணு வீட் டில் இல்லை, அவரது துணைவியாரையும் தாயாரையும் காயிதேமில்லத் கண்டு பேசினுர்கள். அண்ணு வின் தாயாரிடம் ''சட்ட சபைக்கு உங்கள் மகன் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்று கவலைப்பட வேண்டாம். பண பலம் கொஞ்ச காலம்தான் வேலை செய்யும். உங்களது மகனின் பேச்சுத்திறன் தமிழகத்திற்கு மட்டும் பயன்படக் கூடாது. இந்தியா முழுவதற்குமே பயன்பட வேண்டும் என ஆண்டவன் நாடிவிட்டான். அதனுல் தான் பார்லிமெண்ட் மேல் சபைக்கு அண்ணு தேர்ந்தெடுக் கப்பட்டு இருக்கிருர்.'' என்று காயிதேமில்லத் ஆறுதல் மொழி கூறினுர்கள்.

---

# 54

## முதலாவது ஐந்தாண்டு திட்டத்திலும் நெய்வேலி இல்லை

*[27-10-51 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது:-]*

தென்னிந்தியாவில் கனிம வளங்கள் அவ்வளவாகயில்லை என்ற கருத்து பூமி சாஸ்திர நிபுணர்களிடமிருந்து வருகிறது. அதனால்தான் இந்திய அரசு நாட்டின் தென் பகுதியில் அவ்வளவாக அக்கறை செலுத்தவில்லை. மாகாண அரசாங்கமாவது இதற்கென சில நிபுணர்களை நியமித்து சர்வே பணிகளை மேற்கொண்டிருக்கலாம். ஆண்டிற்கு 5 லட்சம் அல்லது 10 லட்சம் செலவாகியிருக்கும். அதன் மூலம் கிடைக்கும் பிரதிபலன் 10 அல்லது 15 கோடிகளை விட அதிகமாகவேயிருக்கும் என்பதை மறந்துவிடக் கூடாது.

தென்னாற்காடு மாவட்டத்தில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரி நீங்கள் எதிர்பார்ப்பதைவிட அதிக அளவில் இருக்கிறது. நமது மாநிலத்திலிருந்து கிடைக்கக் கூடிய 50 ஆண்டு ரெவின்யூ வருமானத்திற்கு இது சமமாகும். துரதிருஷ்டவசமாக நமது முதலாவது ஐந்தாண்டு திட்டத்தில் கூட இப்பழுப்பு நிலக்கரி குறித்து ஒன்றும் சொல்லப்படவில்லை. நாம் கூறிய யோசனைகளை ஏற்று காலா காலத்தில் செயல்பட்டிருந்தால், நமது மாகாணம் சுபிட்சப் பாதையை நோக்கி எவ்வளவோ முன்னேறியிருக்கும்.

# 55

## புளியங்கொட்டை கதை

*[27-10-51 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது:-]*

கடந்த ஐந்தாண்டுகளாக நமது மாகாணத்தை இந்த அரசு ஆட்சி புரிந்து வந்துள்ளது. ஐந்தாண்டு கால ஆட்சிக்குப் பின்னரும் உணவு, உடை, உறைவிடம் ஆகிய இனங்களிலுள்ள பற்றுக்குறை தீர்ந்தபாடில்லை. உணவு கேட்டு மக்கள் ஆலாய்ப் பறந்து கொண்டிருக்கிறார்கள். இந்த ஐந்தாண்டு கால ஆட்சியைப் பற்றி நினைக்கும் பொழுது எனக்கு ஒரு கதைதான் நினைவிற்கு வருகிறது.

கடன்காரன் ஒருவன் இருந்தான், கடன் தொகையை திருப்பிக் கேட்க அதற்குரியவன் வரும் சமயங்களிலெல்லாம் நாளை வாருங்கள், உங்கள் கடனைத் தீர்த்து விடுகிறேன் என்று பதில் சொல்லியனுப்பி விடுவான். கடன் கொடுத்தவனும் விடவில்லை, தினசரி கடன்காரனிடம் வந்து நிற்பான். ஆனால், கடன்காரனோ, நாளை, நாளை என்று கூறி வந்த பல்லவியை நிறுத்துவதாக இல்லை; இப்படியே சில நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

ஒரு நாள் கடன்காரன் கடன் கொடுத்தவனைப் பார்த்து நாளை மாலை ஐந்து மணிக்கு வாருங்கள் என்று வாய்தா வைத்தான்.

அமைச்சர் கோபால்ரெட்டி :—இந்த கதையை நாங்கள் ஏற்கனவே கேட்டிருக்கிறோம். புளியங்கொட்டை விதையை நட்டி வைத்த கதை தானே?

காயிதே மில்லத் :-புளிய மரம் வளர்ந்து காய்த்து அதன் முதல் அறுவடை நடந்ததும், உமது கடனை திருப்பித் தந்துவிடுகிறேன் என்று கடன்காரனைப் பார்த்து கடன் வாங்கியவன் கூறினானாம். அது போல நமது அரசாங்கமும் மக்கள் உணவு கேட்டு பஞ்சரிக்கும் பொழுது, ஐந்தாண்டு திட்டம் தயாராய் விட்டது, ஐம்பது கோடி டன் உணவுத் தானியம் கிடைக்கும், திட்ட இறுதியில் தலைக்கு பதினான்கரை அவுன்சு அரிசி தரப்படும் என்று சமாதானம் சொல்லிக் கொண்டிருக்கிறது.

# 56

## என்னால் ஏன முடியாது?

*[27-10-51 அன்று மதராஸ் மாகாண சட்டசபையில் காயிதே மில்லத் கூறியதாவது:-]*

அவைத்தலைவர் இங்கு பேசும்பொழுது, மாற்று அரசாங்கம் ஒன்றை எதிர்க்கட்சித் தலைவரினால் அமைக்க முடியுமா என்று வினவினார். எனது தலைமையில் இந்த மாநிலத்தில் ஒரு அரசாங்கத்தை அமைப்பதற்கு நமது அரசியல் சாசனம் எந்தத் தடையும் விதிக்கவில்லை. முஸ்லிம்லீக் கட்சியின் தலைவனாக இருப்பதினாலோ, அல்லது நான் ஒரு முஸ்லிம் என்ற காரணத்தி

ஞலோ, எதிர்க்கட்சித்தலைவராக செயல்படும் என்ருல் மாற்று அரசாங்கத்தை அமைக்க முடியாது என அவர்கள் நினைக்கிறார்கள்.

மதச்சார்பற்ற கொள்கையை பின்பற்றும் ஐரோப்பிய நாடுகளில் கூட மதத்தின் பெயரால் கட்சி வைத்திருப்பவர்கள் ஆட்சி நடத்துகிருர்கள் என்பதை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். பெல்ஜியம் நாட்டில் ரோமன் கத்தோலிக்க கட்சி அந்நாட்டின் ஆட்சியை நடத்தி வருகிறது. இத்தாலி நாட்டில் கிறிஸ்துவ ஜனநாயக கட்சி ஆளுங் கட்சியாகயிருந்து வருகிறது. பிரான்ஸ் நாட்டில் கூட மதத்தின் பெயரால் கட்சிகள் இருக்கின்றன. எனவே மாற்று அரசாங்கம் ஒன்றை என்ருல் அமைக்க முடியாது என்ற எண்ணத்தை இந்த அவைத் தலைவரும், அவரது நண்பர்களும் உதறித் தள்ளி விடும்படி கேட்டுக் கொள்கிறேன். சூழ்நிலைகள் சாதகமாக அமையுமானால் ஒரு கூட்டு அமைச்சரவையோ அல்லது கலப்பு அமைச்சரவையோ அல்லது முஸ்லிம் கட்சி என தொடர்ந்து அழைக்கப்படும் எனது கட்சியின் சார்பாக ஒரு கட்சி அமைச்சரவையோ அமைக்கப்படலாம் என்பதையும் அதற்கான சாத்தியக்கூறுகள் இல்லாமல் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறிப்பு: (பல ஆண்டுகளுக்குப் பின் (1977-ல்) கேரள மாநிலத்தில் முஸ்லிம் லீகிஞல் அமைக்கப் பட்ட கூட்டு மந்திரி சபை முஸ்லிம் லீகரான C. H. முஹம்மது கோயாவை முதலமைச்சராகக் கொண்டு வெற்றிகரமாக இயங்கியது காயிதே மில்லத் அவர்களின் இந்த தீர்க்கதரிசனத்தை மெய்ப்பிக்கிறது. அந்த கூட்டு மந்திரி சபையில் காங்கிரஸ், கேரளா காங்கிரஸ், பி. எஸ். பி., ஆர். எஸ். பி. போன்ற கட்சிகள் இடம் பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது)—பதிப்பாசிரியர்



## ஷேர்வானிகள் எத்தனை உண்டு?

**செங்கம் சர்தார் அகமதுல்லா,** *மாவட்ட இளைஞர் அணி*

செங்கம் தாலுகா முஸ்லிம் லீக் மாநாடு ஒன்றை 1961-ம் ஆண்டு நடத்தினோம். அதற்கு காயிதே மில்லத் அவர்கள் வந்திருந்தார்கள். அச்சமயம் ஜபல்பூர் வகுப்புக் கலவரம் நடந்த நேரம். அம்மாநாட்டில் அக்கலவரங்களைப் பற்றியெல்லாம் விரிவாக எடுத்துச் சொன்னார்கள். மறுநாளே டில்லி புறப்பட வேண்டும் என்று கூறி உடனடியாகவே மதராஸ் திரும்பி விட்டார்கள்.

இளைஞர்களாகிய எங்களில் ஒரு சிலருக்கு ஒரு ஆசை. தலைவர் அவர்களுக்கு ஒரு ஷேர்வானி தைத்துக் கொடுக்க வேண்டும் என்று தணியாத ஆவல். செங்கத்திலிருந்து அந்த நோக்கத்துடனேயே மதராஸ் வரை தலைவர் அவர்களுடன் நாங்களும் பிரயாணம் செய்தோம். விஷயத்தை மெதுவாக பிரஸ்தாபித்தோம். அதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை. தட்டிக் கழித்து விட்டார்கள். நாங்களும் விடாப் பிடியாக சந்தர்ப்பங்கள் கிடைக்கும் பொழுதெல்லாம் ஷெர்வானிக்கு அவர்களிடமிருந்து அளவு எடுத்துவிட வேண்டுமென்று முயற்சித்துக் கொண்டேயிருந்தோம். அதற்கென தையற்காரர் ஒருவரும் எங்களுடனேயே வந்திருந்தார்.

காயிதே மில்லத் அவர்கள் டில்லிக்குப் போவதற்கு மீனம்பாக்கம் விமான நிலையம் சென்ற பொழுதும்கூட நாங்களும் பின் தொடர்ந்தோம். எங்களது கோரிக்கையை வற்புறுத்தியவண்ணம் இருந்தோம். எங்களது நச்சரிப்பு பொறுக்கமாட்டாமல் கடைசியாக விமான நிலையத்தில் வைத்து காயிதே மில்லத் அவர்கள், வீட்டிற்கு போய் ஷெர்வானி அளவு எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டு விமானம் ஏறி டில்லிக்குச் சென்று விட்டார்கள்.

எங்களுக்கு ஒரே குஷி. காயிதே மில்லத்தின் அனுமதியை எப்படியும் பெற்று விட்டோம் என்ற மனநிறைவுடன் குரோம்பேட்டைக்குச் சென்று விஷயத்தைச் சொன்னோம். அவர்களது பழைய ஷெர்வானி ஒன்றை அளவு எடுப்பதற்காகக் கொடுக்கும்படியும் கேட்டோம். வீட்டில் உள்ளவர்களுக்கு இப்படிச் சொன்னது அதிசயமாகவிருந்தது. ஆச்சரியமாக இருந்தது. இருப்பினும் எங்களது வற்புறுத்தலுக்கு ஏற்ப, வீடு முழுவதும் அங்குள்ளவர்களும் தேடிப் பார்த்தார்கள். ஒன்றும் அகப்படவில்லை.

அப்பொழுதுதான் தலைவர் அவர்களுடைய இல்லத்தரசி ''தலைவர் அவர்களிடம் இரண்டு ஷெர்வானிகள்தான் உண்டு. ஒன்றை அவர்கள் அணிந்திருக்கிறார்கள். மற்றொன்று அவர்களது பெட்டியில் வைக்கப்பட்டு டில்லி சென்று கொண்டிருக்கிறது'' என்ற விபரத்தைச் சொன்னார்கள். வீட்டில் போய் அளவு எடுத்துக் கொள்ளுங்கள் என தலைவர் அவர்கள் ஏன் சொன்னார்கள் என்பது எங்களுக்கு அப்பொழுதான் புரிந்தது!





# மறக்க முடியாத 'தயா மன்ஜில்' விருந்து

டில்லி பாராளுமன்றக் கூட்டத் தொடர் முடிந்து வீடு திரும்பும் சமயங்களில், காயிதே மில்லத் அவர்கள் பாசுமதி அரிசி கொஞ்சம் வாங்கி வருவது வழக்கம். நல்ல, தரமான சன்னரக அரிசி, பாராளுமன்ற உறுப்பினர்களுக்காக பாராளுமன்ற வளாகத்திலுள்ள நியாய விலைக் கடையில் விற்பனைக்குக் கிடைக்கும். வழக்கமாக ஐந்து கிலோ பாக்கெட்டுகளில் ஒன்றை காயிதே மில்லத் அவர்கள் வாங்கி வருவதுண்டு. தலைவரவர்கள் ஊரில் தங்கி இருக்கும் ஏதாவது ஒரு நாளில் அந்த அரிசியை சமைத்து குடும்பத்தினர் உண்டு மகிழ்வதுண்டு.

ஒரு சமயம், அப்படி வாங்கி வரப்பட்ட பாசுமதி அரிசி உபயோகப்படுத்தாமல் அதிக நாட்களாகத் தேங்கி விட்டது. 1957ம் ஆண்டில் ஒரு நாள் காயிதே மில்லத் அவர்களும் அவர்களது துணைவியாரும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, பாசுமதி அரிசி பற்றிய பிரஸ்தாபம் எழுந்தது. அந்த அரிசி பயன்படுத்தப்படாமலேயே இருக்கிறதே என அவ்விருவரும் உரையாடிக் கொண்டார்கள். இது அகஸ் மாத்தாக நடந்த பேச்சு தான்.

அன்று வந்த தபாலில், கள்ளிக் கோட்டையிலிருந்து, கேரள மாநிலத் தலைவர் பாபக்கி தங்களிடமிருந்து ஒரு கடிதமும் இருந்தது. அதைப் படித்துப் பார்த்த பொழுது, தங்கள் அவர்களும், C. H. முஹம்மது கோயா அவர்களும் ஏதோ காரியமாக மதராஸ் வர இருப்பதாகவும், அச் சமயம் தலைவரவர்கள் ஊரில் இருந்தால், அவர்களை சந்திப்பதற்கு தயா மன்ஸிலுக்கு வர இருப்பதாகவும் எழுதப்பட்டிருந்தது.

சட்டென தலைவரவர்களுக்கு தங்களது துணைவியார் சற்று முன்னர்தான் பாசுமதி அரிசி பற்றி பிரஸ்தாபித்தது நினைவிற்கு வந்தது. உடனே துணைவியாரைக் கூப்பிட்டு, தங்ஙளும், கோயாவும் மதராஸ் வர இருப்பதாகவும் அச் சமயம் இந்த அரிசியை பயன்படுத்திக் கொள்ளலாமே என்றும் சொன்னார்கள். உடனே அதற்கான ஏற்பாட்டில் துணைவியார் அவர்கள் இறங்கினார்கள்.

பாபக்கி தங்கள் அவர்கள் மதராஸில் தங்குவதாகக் கூறிப்பிட்டிருந்த தேதிகளில் ஒரு ஞாயிற்றுக் கிழமையும் இருந்தது. அந்த ஞாயிற்றுக் கிழமையில் தயாமன்ஸிலுக்கு சாப்பிட வருமாறு கேரளத் தலைவர்கள் இருவரையும் அழைப்பது என தலைவரவர்களும் அவர்களது துணைவியாரும் பேசி முடித்துக் கொண்டார்கள்.

கேரளத் தலைவர்கள் இருவர்தானே வருகிறார்கள், வீட்டில்தான் ஐந்து கிலோ அரிசி இருக்கிறதே; மற்றும் சிலரையும் விருந்துக்கு அழைத்துக் கொள்ளலாமே என தலைவரவர்களும் எண்ணினார்கள்; அவர்களது துணைவியாரும் எண்ணினார்கள். குறிப்பிட்ட ஞாயிற்றுக்கிழமை நெருங்கியது, காயிதே மில்லத் அவர்கள் ஓரிருவருக்குப் போன் செய்து ஞாயிற்றுக்கிழமை பகல் 12 மணிக்கு குரோம்பேட்டைக்கு வரும்படிக் கூறினார்கள். என்ன விசேஷம் என்றோ விருந்து என்றோ! சொல்லவில்லை. தலைவரவர்கள் கூப்பிட்டவர்களில் காயல்பட்டணம் பி. ஏ. காக்காவும் ஒருவர். தலைவரவர்கள் சிலருக்கு அழைப்புக் கொடுத்திருக்கும் விபரம் வீட்டில் மற்றவர்களுக்கு தெரியாது. ஏதோ ஞாபக மறதியில் இருந்து விட்டார்கள்.

விருந்துக்கு தங்ஙளையும், கோயாவையும் தானே அழைத்திருக்கிறோம், மேலும் ஒரு சிலரை



நாம் கூப்பிட்டுக் கொண்டால் என்ன என்று துணைவியார் அவர்களும், தங்கள் பங்கிற்கு மேலும் சிலரை போனில் கூப்பிட்டு ஞாயிற்றுக் கிழமையன்று தயா மன்ஸிலுக்கு வரும்படி சொன்னார்கள். இது விபரம் தலைவரவர்களுக்குத் தெரியாது.

மியாக்கானும் சும்மா இருக்கவில்லை. தனது பங்கிற்கு அவருக்கு வியாபாரத்தில் தொடர்புள்ள பெரியமேட் நண்பர்கள் ஒரு சிலரை, குறிப்பிட்ட ஞாயிற்றுக்கிழமைக்கு வரவேண்டும் என்று சொல்லி விட்டார். தாம் இப்படி சில நண்பர் களுக்கு அழைப்பு விட்டிருப்பது குறித்து அவரும் அவரது பெற்றோர்களிடம் பிரஸ்தாபிக்கவில்லை. மியாக்கான் அழைப்பு விடுத்தவர்களில் அப் பொழுது ''உரிமைக் குரல்'' பத்திரிக்கையைக் கவனித்துக் கொண்டிருந்த ரிபாயி சாகிபும், ஒருவர். அவரையும் அழைத்திருந்தார். அத் துடன் அவர் நின்றுவிடவில்லை. ரிபாயி சாகிப் வரும் பொழுது என்னையும் அவசியம் கூட்டி வரவேண்டும் என்று அவரது அண்ணனுக்கு போனில் தகவல் கொடுத்து விட்டார்.

காயிதே மில்லத் அவர்கள், வீட்டில், சின்ன விருந்தாக இருந்தாலும், பெரிய விருந்தாக இருந்தாலும், அப்பொறுப்பை மேற்பார்ப்பது தலைவரின் சம்பந்தி ஹக்கீம் இஸ்மாயில் சாகிபு தான். விருந்து சமைப்பதற்கு ராயப்பேட்டை பக்க மிருந்துதான் ஆள் வரும். அதை ஹக்கீம் சாகிப் தான் கூட்டி வருவார். தங்களும், கோயாவும் குரோம்பேட்டைக்கு வருகிறார்கள் என்றதும், சமையல் ஏற்பாடுகள் ஹக்கீம் சாகிபிடம் விடப் பட்டது. சம்பந்தியும் அவர் பங்கிற்கு சும்மா இருக்கவில்லை. காயிதே மில்லத்திற்கு மிகவும் பரிச்சயமான ராயப்பேட்டைகாரர் ஒருவரையும் கூடுதலாகக் கூட்டி வந்து விட்டார்.

இரண்டு பேருக்குத்தானே விருந்து என்று எண்ணி, தயா மன்ஸிலுள்ளவர்கள் அவரவர் களுக்கு வேண்டியவர்களையும் அழைத்துக் கொண் டார்கள். ஒவ்வொருவரும் இன்னின்னாரைத் தாங்கள் அழைத்து இருக்கிறோம் என்று முன் கூட்டிக் கலந்து பேசி இருந்தால், இதில் சிக்கல் ஒன்றும் எழுந்திருக்காது. ஐந்து கிலோ அரிசி இருக்கிறதே என்று கணக்குப் போட்டுக் கொண்டு பத்துப் பதினைந்து கிலோ அரிசிக்கு விருந்தினர் களைத் திரட்டி விட்டதை வீட்டிலுள்ளவர்கள் அறிய மாட்டார்கள்.

குறிப்பிட்ட ஞாயிற்றுக் கிழமையும் வந்தது. சமையல்காரர் சகிதம் ஹக்கீம் இஸ்மாயில் சாகிபு வந்து சேர்ந்தார். ஐந்து கிலோ அரிசியும் அதற் கேற்ற அளவு சாமான்களும் தயாராக வைக்கப் பட்டிருந்தன. பிரியாணி தயாரிக்கும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. காயிதே மில்லத் அவர்கள் விருந்தினரை எதிர்பார்த்து வீட்டின் முகப்பிலுள்ள கூரை ஷெட்டில் தயாராக இருந்தார்கள். மணி பன்னிரெண்டை நெருங்கிக் கொண்டிருந்த சமயம் பாபக்கி, தங்களும், C. H. கோயாவும் காரில் வந்து இறங்கினார்கள்.

நானும், ரிபாயி சாகிபும் குறித்த நேரத்தில் போய்ச் சேர்ந்தோம். கொஞ்ச நேரத்தில் முகையத்தீன் காக்கா (பி. ஏ.) வந்து சேர்ந் தார்கள். அதாவது பகல் ஒரு மணிக்குள், அழைத்த விருந்தினர் எல்லாம் தவறாது வந்து சேர்ந்து விட்டார்கள்! வீட்டிற்குள்ளும் ஒரு சில பெண் விருந்தினர்கள் போய்க் கொண்டிருந்தனர்.

காயிதே மில்லத் அவர்கள் மியாக்கானைப் பார்த்தார்கள். தாம் இன்னின்னாரையெல்லாம் அழைத்திருந்தேன், என்றார்கள். வீட்டினுள் சென்று துணைவியாரைக் கேட்டார்கள் அவர்கள் அழைத்த விருந்தினர் பட்டியல் தெரிய வந்தது. முன்கூட்டியே ஒவ்வொருவரும் கலந்துகொள்ளாது போனதின் விளைவு இது என்பதை மூவரும் புரிந்து கொண்டனர்.

நடந்தது நடந்து விட்டது, அடுத்து என்ன செய்வது என்பதைக் கவனிப்பதில் மூவரும் ஈடுபட்டனர். வீட்டில் இருந்த கோதுமை மாவு, மைதா மாவு ஆகியவை சேகரிககப்பட்டு ரொட்டி களாக தயாராகிக் கொண்டிருந்தன. மியாக்கான் தெருப் பக்கம் ஓடோடிச் சென்று ''பன்''களையும், ''பிரட்களையும்'' வடை போன்ற பண்டங்களையும் வாங்கிக் கொண்டு வந்தார். வந்திருந்த விருந் தாளிகளை சமாளித்து விடும் பணியில் வீட்டிலுள்ள வர்கள் பல வழிகளிலும் ஈடுபட்டார்கள்.



காயிதே மில்லத் அவர்கள் கூரை ஷெட்டில் அமர்ந்தவாறு விருந்தாளிகளை சுற்றிலும் உட்கார வைத்துக் கொண்டு வழக்கமான பேச்சுகளில் அனைவரது கவனத்தையும் திருப்பிக் கொண்டிருந் தார்கள். நேரம் போய்க் கொண்டிருந்தது, அழைக்காமல் வந்திருந்தால் பலரும் விடை பெற்றுக் கொண்டு போயிருந்திருப்பார்கள். எல்லோரும் அழைப்பின் பேரில்தான் அங்கு வந்திருந்தார்கள். சாப்பாடு வைப்பதற்கான ஏற்பாடுகள் ஒன்றையும் காணோம். தலைவரவர் களோ, சுவராஸ்யமாகப் பேசிக்கொண்டேயிருந் தார்கள். மியாக்கானோ அங்குமிங்கும் ஓடி எதை எதையோ சேகரித்துக் கொண்டிருந்தார். ஹக்கீம் இஸ்மாயில் சாகிப் சமையல்காரர்களை விரட்டிக் கொண்டு இருந்தார். துரிதமாக சப்பாத்திகளைச் சுட்டுத் தள்ளும்படி பணித்துக் கொண்டு இருந் தார். வீட்டினுள் உள்ள நிலைமை என்னவோ நான் அறியேன். துணைவியார் அவர்கள் என்ன பாடுபட்டுக் கொண்டிருந்தார்களோ, வெளியில் உட்கார்ந்திருந்த நாங்கள் அறிய மாட்டோம்.

பாபக்கி தங்களின் முகத்தை கோயா பார்க் கிறார், பி. ஏ. காக்கா முகத்தை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இப்படியாக ஒவ்வொருவரும் என்ன செய்வது என்று தெரியாது விழித்துக் கொண்டிருந்தோம். மணியோ ஒன்று, இரண்டு என்று கடந்து மூன்றை எட்டிக் கொண்டிருந்தது!

அப்பாடா! வீட்டினுள் இருந்து மியாக்கான் ஓடோடி வந்து ''வாங்க எல்லோரும் சாப்பிடலாம் ரொம்ப நேரம் காக்க வைத்து விட்டோம்'' என்று அசட்டுப் புன்னகை ஒன்றை உதிர்த்த வண்ணம் அனைவரையும் கை கழுவ கூப்பிட்டார்.

காயிதே மில்லத் அவர்களும் தங்களது ''ஹதீது'' உபதேசங்களை முடித்துக்கொண்டு எழுந்து, தங்களைப் பார்த்து ''போகட்டே'' என்று கொச்சை மலையாளத்தில் சிரித்த வண்ணம் சொன்னார்கள். எல்லோரும் வீட்டினுள் சென் றோம். மியாக்கான் எல்லோரையும் எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். இடமும் சரியாக இருந்தது; தட்டுகளும் கணக்காக வைக்கப் பட்டிருந்தன. பிரியாணி மணம் கம கமவென வந்து கொண்டிருந்தது. வழக்கமாக ''காப்'' களில் (பெரிய பீங்கான் பாத்திரங்களில்) பிரி யாணியை ஆங்காங்கே வைத்து விடுவார்கள். விருந்தினர்கள் அவரவர்களாக தங்களுக்கு வேண்டிய அளவு எடுத்து வைத்துக் கொள்வார் கள் அது தான் சம்பிரதாயம்.

ஆனால் அன்று மியாக்கான் புத்திசாலித்தன மாக பிரியாணி வைக்கப்பட்டிருந்த பாத்திரத்தை கையில் பிடித்த வண்ணம் அவராகவே ஒவ்வொரு வருக்கும் தட்டையில் ஓரளவு எடுத்து வைத்துக் கொண்டே சென்றார். எல்லோருக்கும் சமமாகப் பங்கிட்டு முடிந்ததும், ரொட்டிகளையும் எடுத்து தட்டைகளில் வைத்துக் கொண்டே சென்றார். பின்னர் ''பன்'' வந்தது; வடை வந்தது, பிரட்டை வெட்டி வைத்திருந்தார்கள். ஆம் லெட் இருந்தது. பலப்பல தின்பண்டங்கள் வந்து கொண்டேயிருந்தன. கத்தரிக்காய் தால் சாவுக்கு ''பன்னை'' தொட்டு சாப்பிட்ட பொழுது ''சிக்கன் 65 '' யை சுவைப்பது மாதிரி இருந்தது. எல்லோரும் நன்றாகச் சாப்பிட்டோம்; அனை வருக்கும் ஒரு குறையும் இல்லை. பிரியாணி கூடக் கொஞ்சம் கிடைத்திருந்தால் நன்றாக இருக்குமே என்ற ஒரு ''ஏக்கத்தை'' தவிர; மற்றப்படி அனைவரும் வயிறார உணவருந்தினோம்.

எல்லோரும் சாப்பிட்டு முடியும் பொழுது மாலை மணி நான்கு கை கழுவியதும் அனைவரையும் அமரச் சொன்னார்கள் காயிதே மில்லத். சில பழ வகைகள் கொண்டு வந்து வைக்கப்பட்டன. அப்பொழுது தலைவரவர்கள் விருந்து பற்றிய விபரங்களைக் கூறலானார்கள். வீட்டில் துணைவி யார் ஐந்து கிலோ பாசுமதி அரிசி இருப்பதை நினைவு படுத்தியதில் இருந்து தங்கள் கடிதம் வந்தது. ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டத்திற்கு மற்றவருக்குத் தகவல் கொடுக்காது விருந்தாளி களை அழைத்துக் கொண்டது வரை, எல்லா வற்றையும் சவிஸ்தாரமாக அவர்களது பாணியில் சொல்லி முடித்தார்கள். கோயாவுக்கு சிரிப்புத் தாங்க முடியவில்லை. நன்றாக வாய் விட்டுச் சிரித்தார். மற்றவர்களும், அச்சிரிப்பில் கலந்து கொண்டனர்.

ஆம்! உண்மையில் அன்றைய விருந்து மறக்க முடியாத ஒன்றாக அமைந்து விட்டது என்பதில் சந்தேகமே இல்லை.

**எம். முஹம்மது ஹஸன் சாகிப்**
*செங்கோட்டை, விஸ்வநாதபுரம்.*



# மக்கள் மன்றங்களில் 'கவ்மின் காவலருக்கு' சூட்டப்பட்ட புகழாரங்கள்

## 1

### ராஜ்ய சபையில்

[டில்லி ராஜ்ய சபையில் 5-4-72 அன்று காயிதே மில்லத் அவர்களது மரணம் குறித்து அவைத் தலைவர் பிரஸ்தாபித்த பொழுது கூறியதாவது;]

#### இரங்கல் குறிப்பு

அவைத் தலைவர்; மாநிலங்களவையின் முன்னாள் உறுப்பினரான ஸ்ரீ. முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய மறைவு குறித்து குறிப்பிட்டாக வேண்டும். 1896ல் பிறந்த ஸ்ரீ. இஸ்மாயில் அவர்கள் திருச்சியிலும், திருநெல்வேலியிலும், சென்னையிலும் கல்வி பயின்றார். 1946 முதல் 1952 வரையில் சென்னை சட்ட சபையிலும் 1952 முதல் 1958 வரை ராஜ்ய சபையிலும் 1962 விருந்து லோக் சபையிலும் உறுப்பினராக இருந்தார். மேலும் ஸ்ரீ. இஸ்மாயில் அவர்கள் மாகாண முஸ்லிம் லீக் உறுப்பினராகவும், 1948 முதல் இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் தலைவராகவும் இருந்து வந்துள்ளார்.

மக்களுடைய அன்பையும் ஆதரவையும் பெற்ற அன்னாருடைய மறைவு குறித்து நாம் ஆழ்ந்த அனுதாபப் படுகிறோம்.

அன்னாரின் மறைவிற்கு அஞ்சலி செலுத்தும் பொருட்டு மாண்புமிகு உறுப்பினர்கள் எழுந்து நின்று, ஒரு நிமிடம் மௌனம் அனுஷ்டிக்குமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

(அதன் பின் உறுப்பினர்கள் எழுந்து ஒரு நிமிடம் மௌனமாக நின்றனர்.)

தலைவர்: பிரிவால் வாடும் குடும்பத்தினருக்கு நம்முடைய துயரத்தையும், ஆழ்ந்த அனுதாபத்தையும் செயலர் அவர்கள் தெரிவிப்பார்.

## 2

### லோக் சபையில்

[டில்லி லோக் சபையில் 5-4-72 அன்றுகாயிதே மில்லத் அவர்களது மரணம் குறித்து நடைபெற்ற இரங்கல் பேச்சுக்களின் முழு விவரம் வருமாறு:]

அவைத்தலைவர்: நேற்று இரவு தன்னுடைய 76வது வயதில் சென்னையில் காலமான ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய துயரமிக்க மறைவு பற்றி இந்த அவைக்கு அறிவிக்க கடமைப் பட்டுள்ளேன்.

அகில இந்திய முஸ்லிம் லீக் கட்சியினுடைய தலைவரான ஸ்ரீ. முகமது இஸ்மாயில் அவர்கள் இந்த அவைக்கு கேரளா, மஞ்சேரித் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராவார்.

1962-70 ஆம் வருடங்களில் மூன்றாவது நான்காவது லோக் சபா உறுப்பினராகவும் இருந்தார். அவர், முன்னதாக, 1946-52 ஆம் ஆண்டுகளில் சென்னை சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்திருக்கிறார். 1952-58ல் ராஜ்ய சபை உறுப்னராகவும் இருந்தார்.

அவர் ஒரு அனுபவமிக்க பார்லிமெண்டேரியன், அவை நிகழ்ச்சிகளில் அவர் பங்கேற்ற பொழுதெல்லாம் மிகவும் ஆர்வமுடன் பங்கேற்றதுண்டு. பண்பட்ட இயல்புக்குச் சொந்தக்காரராகவும், நட்புக்கு உகந்தவராகவும், மென்மையாகப் பேசக்கூடியவராகவும் இருந்த அவர் மக்கள் நல நடவடிக்கைகளில் பெரிதும் ஆர்வம் கொண்டவராகவும் விளங்கினார். மேலும், அவர் பல கல்வி நிறுவனங்களோடு தொடர்புடையவராகவும் இருந்தார்.

இத்தகைய நண்பருடைய மறைவிற்காக நாம் ஆழ்ந்த அனுதாபப்படுகிறோம். மேலும், பிரிவால் வாடும் குடும்பத்திற்கு நமது அனுதாபங்களைத் தெரிவிப்பதில் இந்த அவையும் தன்னை இணைத்துக் கொள்ளும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திராகாந்தி :

சபாநாயகர் அவர்களே! ஸ்ரீ. முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய மறைவுச் செய்தி அறிந்து நாம் மிகுந்த வேதனை அடைந்தோம். நீங்கள் குறிப்பிட்டதைப் போல ஸ்ரீ. முகம்மது இஸ்மாயில் அவர்கள் மாகாணசபை உறுப்பின ராக இருந்தார். பின்பு, ராஜ்ய சபையில் 1952 லிருந்து 1958 வரை உறுப்பினராகப் பணி யாற்றிய பின், 1962 லிருந்து இந்த அவைக்கு வந்தார். மீண்டும், சென்ற ஆண்டு, இந்த அவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் பழுத்த, பிரசித்திப் பெற்ற ஓர் அரசியல்வாதி. ஆறாண்டு காலம், தமிழ்நாட்டின் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தவர். வயதான போதிலுங் கூட, சமூக கல்வி நடவடிக்கைகளில் தொடர்ந்து ஆர்வம் காட்டி வந்தவர். எண்ணற்ற தொழில் வர்த்தக நிறுவனங்களோடும் தொடர்பு கொண் டவர்.

வங்காள தேசத்தின் மீதான, நமது தேசியக் கொள்கைக்கு ஆதரவு அளித்து கடந்த ஆண்டு அவர் பேசிய பேச்சுக்கள் நம்மில் பலருக்கு நினை விருக்கும். பல்வேறுபட்ட பிரச்சினைகள் குறித்து விவாதிக்க அடிக்கடி பிரதிநிதிகளின் குழுக்களோடு அவர் என்னைக் காண வந்திருக்கிறார். அதிலிருந்து, அவர் எத்தனை வகையான பரந்துபட்ட விஷயங் களை அறிந்தவராயிருந்தார் என என்னால் அறிய முடிந்தது.

அவருடைய பிரிவால் துயருறும் குடும்பத்தின ருக்கு நம்முடைய அனுதாபத்தைத் தெரிவிக்கு மாறு கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீ. சாமர் முகர்ஜி (இ. கம்யூனிஸ்ட், மே. வங்காளம்): என்னுடைய கட்சியின் சார்பாக. ஸ்ரீ. முகம்மது இஸ்மாயில் இவர்கள் மறைவிற் காக இங்கு தெரிவிக்கப்பட்ட அனுதாபங்களோடு, நானும் என்னை இணைத்துக் கொள்கிறேன். அவ ரோடு எனக்குத் தனிப்பட்ட முறையில் தொடர்பு இல்லையென்றாலும் கூட, சிறு வயதிலிருந்தே நீண்டதொரு பொதுச் சேவையை அவர் கொண் டிருந்தார் என்பது அவருடைய சேவைப் பதிவேடு களிலிருந்து தெரிய வருகிறது.

எனவே, அன்னாருடைய மறைவிற்காக என் னுடைய துக்கத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு, அவருடைய பிரிவால் வாடும் குடும்பத்தினருக்கு என்னுடைய அனுதாபத்தைத் தெரிவிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

ஸ்ரீ. இந்திர்ஜித் குப்தா (வ. கம்யூனிஸ்ட், அலிப்பூர் மே. வங்கம்) ஸ்ரீ. முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய மறைவு குறித்து எங்களுடைய ஆழ்ந்த இரங்கலை, எங்கள் கட்சியின் சார்பாக, நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த அவைக்கு மிகவும் பரிச்சயமானவராக அவர் இருந்தார். தந்தைக்குரிய அந்த பெரிய மனித ரின் தோற்றத்தையும், அவருடைய மரியாதை யையும், எளிதில் பழகிடும் பண்புகளையும் இனி நாமெல்லாம் காண முடியாது. இங்கு, டெல்லி யிலே நாங்கள் இருவரும் ஒரே இடத்தில் (Western Court) தங்கியிருந்த காரணத்தால், சில வருடங் களாக அவரைத் தனிப்பட்ட முறையில் தெரிகிற வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அதோடு, அவ்வப் போது, அவரைச்சந்தித்தும்இருக்கிறேன். அவர் மரியாதையும், பணிவும் உருவானவராக இருந் தார். சத்தத்தை உயர்த்திப் பேசியோ, உணர்ச்சி வசப்பட்ட நிலையிலோ அவரை நாம் பாராளு மன்றத்தில் கண்டதில்லை. இந்த நாட்டினுடைய வும், குறிப்பாக அவர் சார்ந்திருக்கிற சமூகத்தி னுடைய சேவையிலும் நீண்டதொரு பெருமை தரத்தக்க சாதனையை அவர் தன்னகத்தே கொண்டிருந்தார்.குறிப்பாக, அவருடைய சமூகத் திற்கு அவருடைய மறைவு பேரிழப்பாகும்.

சபாநாயகர் அவர்களே! நம் பிரதமர் சரி யாகச் சுட்டிக் காட்டியதைப் போல தேசத் திற்கு நெருக்கடி ஏற்பட்ட நேரங்களிலெல்லாம், ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்கள், சந்தேகத் திற்கு இடமில்லாமல். மற்றெல்லாவற்றிற்கும் மேலாக, தேச நலனையே முன்வைத்துப் பேசி யுள்ளார். அதற்காக அனைத்து உறுப்பினர் களும் அவரை மதித்ததுண்டு.

அவருடைய குடும்பத்திற்கு எங்களுடைய அனுதாபங்களைத் தெரிவிக்குமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும், அவருடைய பிரிவால் பேரிழப்பை அடைந்துள்ள சிறுபான்மை சமூகம் முழுவதற்கும் என்னுடைய இரங்கலைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். நான் அறிந்த வரையில், 1948 லிருந்தே இந்திய யூனியன் முஸ்லிம் லீக்குடைய தலைவராக அவர்

இருந்து வந்தார் என்ற ஒன்றே அவர் எந்த அளவிற்குச் சிறுபான்மைச் சமூகத்தின் நன்மதிப் பையும், மரியாதையையும் பெற்றிருந்தார் என் பதைக் காட்டும்.

எங்களுடைய இதயம் நெகிழ்ந்த அனுதாபங் களை பிரிவால் வாடும் குடும்பத்திற்கு நீங்கள் தெரிவிப்பீர்கள் என நம்புகிறேன்.

ஸ்ரீ G. விஸ்வநாதன் (தி. மு. க. வந்தவாசி, தமிழ்நாடு:)

இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய மறைவுச் செய்தியை பெரும் அதிர்ச்சியோடு நாங்கள் பெற்றோம். அவர் இந்தியா முழுவதும் குறிப் பாக, தமிழ்நாட்டிலும், கேரளாவிலும் பெருமள விற்கு மதிக்கப்பட்டவராவார். அவருடைய எளிய வாழ்வையும், உயரிய சிந்தனையையும் அனை வரும் அறிவர். கண்ணியத்திற்கும், மரியாதைக் கும் அடையாளமாக அவர் திகழ்ந்தார். கேரளா விலுள்ள, மஞ்சேரித் தொகுதியிலிருந்து மூன்று முறை தேர்ந்தெடுக்கப்பட்டார். சென்னையில் அவர் வாழ்ந்து கொண்டிருந்தாலும், அவ ருடைய தேர்தல் மனுவை மஞ்சேரியில், தாக்கல் செய்துவிட்டு சென்னைக்குத் திரும்பி வந்து விடு வார். ஆனால், அவர் மஞ்சேரித் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பதே தேர்தல் முடி வாக இருக்கும். அந்த அளவிற்கு, கேரள, தமிழ் நாட்டு மக்களிடையே அவருடைய செல்வாக்கு இருந்தது.

அன்னாரின் மறைவு, நமது நாடாளுமன்றத் திற்கும், நமது நாட்டின் அரசியலுக்கும் பேரிழப் பாகும்.

அவருடைய பிரிவால் வாடும் குடும்பத் தினருக்கு எங்களுடைய அனுதாப உணர்வுகளைத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன் பாண்டே (மாண்ட் சார்) : இந்தியில் பேசினார்.

டாக்டர். கர்னிசிங் (சுயேச்சை, பிக்கானிர் இராஜஸ்தான்) :

ஐக்கிய விடுதலை நாடாளுமன்ற கட்சி சார் பாக, நம்முடைய நீண்டகால நண்பர் ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய மறைவு குறித்து இன்று இந்த அவையிலே தெரிவிக்கப் பட்ட இழப்பு உணர்வோடு எங்களையும் நாங்கள் இணைத்துக் கொள்கிறோம். எல்லோராலும் மதிக்கப்பட்ட, நேசிக்கப்பட்ட, அவர் மிகவும் அன்பானவர். பாராளுமன்றத்தின் மென் பேச் சாளர். அவருடைய இழப்பு பேரிழப்பாகும்.

எங்கள் கட்சியின் சார்பாக, எங்கள் இதயம் நெகிழ்ந்த அனுதாபங்களை அவருடைய குடும்பத் தினருக்கு தெரிவிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

ஸ்ரீ சாமர் குகா (புரட்சி சோசலிஸ்ட், கண்ட் டெய்ல், மே. வங்காளம்)

ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்களுடைய துயர மறைவு குறித்து இந்த அவையிலே தெரி விக்கப்பட்ட உணர்வோடு நானும் என்னுடைய அனுதாபத்தை இணைத்துக் கொள்கிறேன். இந்த அவையினுடைய முதுபெரும் உறுப்பினரான அவருடைய இழப்பு பேரிழப்பாகும். முதலில் மாகாண சபையிலும், பின்பு ராஜ்ய சபையிலும், 1962 முதல் இந்த அவையிலும் இருந்திருக் கிறார். எங்களுக்கிடையே அரசியல் வேறுபாடு அதுவும் முரண்பட்ட அரசியல் கருத்து வேறு பாடு இருந்த போதிலுங் கூட, அவருடைய கண்ணியமிக்க பண்பும், அவருடைய மனிதாபி மான உணர்வும், வாழ்வைப் பற்றி அவருடைய சிந்தனையும் இந்த அவையின் பெரும் பாலான உறுப்பினர்களைக் கவர்ந்தது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அவர் ஒரு பார்லிமெண்ட்டேரியன் என்ற அளவில் அவருடைய அரிய பங்கினை நாம் அறிவோம். சிறுபான்மைச் சமூகத்தினருக்கு அவருடைய இழப்பு, ஐயமின்றி, பேரிழப்பாகும். நம்முடைய ஆழ்ந்த அனுதாபங்களை மீண்டும் தெரிவித்துக் கொள்வதோடு எங்களுடைய கட்சி யின் சார்பாக, எங்களுடைய ஆழ்ந்த துக்கத்தை யும் அனுதாபத்தையும் பிரிவால் வாடும் குடும்பத்திற்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள் கிறேன்.

ஸ்ரீ R. V. சுவாமிநாதன் (காங்கிரஸ், மதுரை, தமிழ்நாடு) :

இந்த அவையிலே நீங்களும், பிரதமரும், ஏனைய உறுப்பினர்களும்; தெரிவித்த உணர்வு களோடு என்னுடைய குரலையும் நான் இணைத்துக் கொள்கிறேன். ஸ்ரீ முகம்மது இஸ்மாயில் அவர்

களை நான் நீண்டகாலமாக அறிவேன். 1946ல் சென்னை சட்டசபைக்கு முஸ்லிம் லீக் கட்சித் தலைவராக வந்த போது நானும் காங்கிரஸ் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். இரு வரும் அந்த அவையிலே ஒன்ருகப் பணியாற்றி யிருக்கிருேம். நாங்கள் இருவரும் வெவ்வேறு கட்சியிலிருந்தாலும், அவர் மிகுந்த கண்ணியத் திற்குரியவராகத் திகழ்ந்தார். மற்றவர்களு டைய கருத்தையும் மதிக்கக் கூடியவராக இருந் தார். அவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒரு மதிப்பு மிக்க குடும்பத்தைச் சார்ந் தவர். மேலும், தமிழ்நாட்டில் நன்கு மதிக்கப் பட்டவர். எனவே, இந்த அவையிலே தெரிவிக்கப் பட்ட இரங்கல் உணர்வோடு, என்னையும் இணைத்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஸ்ரீ P. வெங்கடசுப்பையா (காங்கிரஸ் நந்தி யால், ஆந்திர பிரதேசம்) :

ஸ்ரீ சுவாமி நாதனேடும், ஸ்ரீ இஸ்மாயி லோடும் சென்னை கூட்டு சட்ட சபையிலே உறுப்பினராக இருக்கின்ற வாய்ப்பு எனக்கும் கிடைத்தது. அந்தக் காலங்களில் நாம் விடுதலை அடையவில்லை. அரசியல் ரீதியாக நாங்கள் மாறு பட்டிருந்தோம், எனினும், ஸ்ரீ இஸ்மாயில் அவர் கள் அரசியலில் இருந்தது ஒரு அமைதியான விளைவை தமிழ்நாட்டு மாநில அரசியலில்தந்தது. இந்தியாவில் முஸ்லீம் லீக்கை அமைப்பு ரீதியாக உருவாக்க அவருக்கு மிகுந்த தைரியம் தேவைப் பட்டது. பல வருடங்களாக அந்த அமைப்பினு டைய தலைவராக அவர் இருந்து வந்திருக்கிருர். மாகாண சபையிலும், லோக் சபையிலும் முக்கிய பதவிகளை வகித்த அவர் ஒரு சிறந்த பார்லி மெண்ட்டேரியன். என்னதான் அரசியல் வேறு பாடு இருந்தாலும், தனிப்பட்ட முறையில் இனிய குணங்களும், குற்றங் காண முடியாத நேர்மையும் கொண்டவராக அவர் இருந்தார். ஒரு பெரிய மாமனிதரை இந்த நாடு இழந்திருக் கிறது. என்னுடைய ஆழ்ந்த இரங்கலை பிரிவால் வாடும் குடும்பத்திற்குத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சபாநாயகர். சிறிது நேரம் இந்த அவை யோர் எழுந்து மௌனமாக நிற்பார்கள்.

அதன்பின் உறுப்பினர்கள் சிறிது நேரம் அமைதியாக நின்றனர்.



## ராமநாதபுரம், எம். எஸ். அப்துர் ரகீம், M. C.

1962ம் ஆண்டு சென்னை சட்ட சபைத் தேர்தலில் முஸ்லிம் லீக் சார்பாக நான் போட்டி யிட்டேன். காங்கிரஸ் கட்சி சார்பாக என்னை எதிர்த்து நின்றவர் ''ராமநாதபுரம் ராஜாவாகும்'' எனக்காகப் பிரச்சாரம் செய்ய காயிதே மில்லத் வந்திருந்தார்கள்.

1965ம் ஆண்டு ராமநாதபுரத்தில் நடைபெற்ற மீலாது மாநாட்டிலும் காயிதேமில்லத் கலந்து கொண்டார்கள். ஏராளமானவர்கள் மேடை மீது முண்டியடித்துக் கொண்டு ஏறிய தால் மேடை சரிய வாரம்பித்தது. மேடையிலிருந்த பலரும் கீழே விழுந்து காயமடைந்தார்கள். ஆனுல் காயிதேமில்லத் அமர்ந்திருந்த நாற்காலி பூவிழுந்த மாதிரி அப்படியே தரையில் வந்துநழுவி நின்று கொண்டது. அவர்களுக்கு ஒரு காயமும் இல்லை. எங்கள் எல்லோருக்கும் ஒரே ஆச்சரியம்; மிகுந்த மகிழ்ச்சியும் கூட.

கட்சிப் பிரச்சாரத்திற்காக முகவை மாவட்டச் சுற்றுப் பயணத்திற்கு ஏற்பாடு செய்திருந் தோம். காயிதேமில்லத் அவர்களும் கலந்து கொண்டார்கள். மண்டபத்தில் கூட்டத்தில் பேசி விட்டு பாம்பனுக்குப் படகில் சென்ருேம். பாம்பன் நிகழ்ச்சியை நிறைவு செய்து கொண்டு மண்ட பம் திரும்ப நடுநிசியாகி விட்டது. சற்று காற்றும் அதிகமாக இருந்தது. நாங்கள் பயணம் செய்த படகு கவிழவாரம்பித்தது. எங்களுக்கெல்லாம் ஒரே பயம்; அழுகை வந்து விட்டது. நம் முடிவு எப்படியிருந்தாலும் பரவாயில்லை. காயிதேமில்லத்தையல்லவா, இப் படகில் ஏற்றிக்கொண்டு செல்கிருேம். இதை பத்திரமாக கரை சேர்க்க வேண்டுமே, என்ற அச்சம் எங்களை வாட்டியது. ஆனுல் காயிதேமில்லத் அவர்களோ தைரியமாக இருந்தார்கள், எங்களுக்கெல்லாம் நம்பிக்கை யூட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்களது மனே தைரியத்தைப் பார்த்து நாங்கள் ஆச்சரியப்பட்டு போனேம்.

ஆம் ஆண்டு வரையிலும் எதிர்க்கட்சித் தலைவ ராகவும் விளங்கினார்கள். ஆகவே **எதிர்க்கட்சித் தலைவருக்கு வேண்டிய எல்லாச் சிறப்புக்களையும் பண்பு களையும் ஒருங்கே பெற்று மாமன்றமே பாராட்டத்தக்க அளவுக்கு தம்முடைய பணியினை ஆற்றியவர்கள் ஆவார்கள என்பதைச் சட்டமன்ற நடவடிக்கைக் குறிப்புக்களைப் புரட்டிப் பார்க்கும்போது. அவ்வப்போது எழுந்த பிரச்சனைகளை அவர்கள் எப்படி அணுகியிருக் கிறார்கள் என்பதையும் அந்தக் கருத்துக்களை எல்லாம் எப்படி அவர்கள் எடுத்துச் சொல்வதில் தம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்தி வந்திருக்கிறார்கள் என்பதையும் காணலாம்.**

அறிவாற்றல், அன்பு, உறுதி, அடக்கம், அமைதி ஆகிய சிறந்த பண்புகளுக்கு எடுத்துக் காட்டாக விளங்கி ஒரு அரசியல் கட்சியை நடத்திச் செல்லும் தலைவருக்கு எப்படிப்பட்ட சிறப்புக்குரிய பண்புகள் எல்லாம் இருக்கவேண்டும் என்று உலகத்திலேயிருக்கும் அரசியல் அறிஞர்கள் எல்லாம் எதிர்பார்ப்பார்களோ, அப்படிப்பட்ட சிறப்புக்குரிய பண்புக்கெல்லாம் ஒருங்கிணைந்த ஒரு பெரும் தலைவராவார்கள்.

அதற்குப் பிறகு 1962-ஆம் ஆண்டிலிருந்து அவர்கள் கேரளத்தில் ஒரு தொகுதியில் போட்டி யிட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 1967-ஆம் ஆண்டிலிருந்து 1971-ம் ஆண்டு வரையிலும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். அவர்களுடைய மக்களிடத்தில் சிறுபான்மை யோர் மக்களிடத்தில் காட்டிய அன்பும் மதிப்பும் மிக உயர்ந்ததாகும். அவர்களுடைய நலனில் எத்தகைய ஆர்வம் கொண்டிருந்தார் என்பதும் அவர்களிடத்தில் எத்தகைய தொடர்பும் நம்பிக் கையும் கொண்டிருந்தார் என்பதும், தேர்தல் நடக்கும் போது ஒரு தடவை கூட தொகுதிக்குப் போகாமல் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள், என்பதிலிருந்து விளங்கும். தேர்தலில் வெற்றி பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர்தான் அவர்கள் தொகுதியை எட்டிப் பார்த்திருக்கிறார் கள். தேர்தல் நடக்கின்ற போது ஒருநாள் கூட தொகுதிக்குப் போகாமல் தேர்தல் முடிந்து அவர் வெற்றி பெற்றார் என்ற செய்தி கிடைத்த பிறகு தான் நன்றி தெரிவிப்பதற்காகத் தன்னுடைய தொகுதிக்குச் செல்லும் அளவுக்கு தொகுதி மக் களின் நன்மதிப்பையும் அன்பையும் நம்பிக்கையை யும் பெற்றிருக்கிறார்கள். அவர் பிறந்தது தமிழகம் என்றாலும், அவர்கள் தேர்தலுக்குக் கேரளத் தின் ஒரு பகுதியில் நின்றார்கள் என்றாலும், வேறு மாநிலத்தில் தேர்தலுக்கு நின்ற நிலையில் அந்தத் தொகுதிக்கு இவர் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலை ஆகியவற்றை எண்ணிப்பார்க்கும்பொழுது அவர் எந்த அளவுக்கு மக்களுடைய அன்பையும் நன் மதிப்பையும் பெற்றிருந்தார்கள் என்பது நன்கு விளங்கும்.

பேரறிஞர் அண்ணா அவர்களிடத்தில் நீங்காப் பற்றும் அன்பும் கொண்டு சிறந்த தோழமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்கள் ஆவார்கள். பேரறிஞர் அண்ணா அவர்களுடைய சீரிய தலைமையில் இயங்கி வந்த திராவிட முன்னேற்றக் கழகத்தினிடத்திலே தணியாப் பற்றும் ஆர்வமும் கொண்டு அவருடைய திட்டங்களை எல்லாம் நிறைவேற்றி வைப்பதிலே அவரோடு கை கோர்த்து நின்று, எந்தப் பணியினை ஆற்றினாலும் அதிலே தம்முடைய உறுதியான திட்டவட்ட மான அழுத்தந்திருத்தமான அத்தகைய ஆதர வையும் அத்தகைய தன்மையையும் அவர்கள் செலுத்தி வந்தார்கள். அரசியலில் ஆரவாரத் திற்கு இடம் அளிக்காமல் ஆவேசத்திற்கு இடம் அளிக்காமல் ஆத்திரத்திற்கு இடம் அளிக்காமல் எந்த வகையிலும் உணர்ச்சி வசப்பட்டு விடாமல் எதையும் சிந்தித்துப் பார்த்து, ஆழ்ந்த தனிமை யில் சிந்தித்துப் பார்த்து, எந்தக் கருத்துக்களையும் சூடான சொற்களில் இல்லாமல் ஆனால் ஒலி பொருந்திய சொற்களைக் கையாண்டு நிதான மாக, ஆனால் அழுத்தந்திருத்தமாக கருத்துக்களை எடுத்து வைப்பதில் அவர்கள் மிகச் சிறந்து விளங்கினார்கள் என்பதையும் நாம் நன்றாகக் கவனித்திருக்கலாம். இந்தக் காலத்தினுடைய அரசியலுக்கு அப்படிப்பட்ட தலைவருடைய அறிவுரைக்கும், பரிந்துரைக்கும் தலைமைத் தன்மையும் வழிகாட்டுகின்ற தன்மையும் எவ் வளவு இன்றியமையாதனவாகத் தேவைப்படு கின்றன என்பதை நாம் நன்றாக உணரலாம். அது மாத்திரமல்லாமல் எத்தகைய மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும் கொண்டவராக விளங்கி எடுத்துக்காட்டாக இருந்தார் என்பதற்கு பல் வேறு உதாரணங்கள் எடுத்துக்காட்டலாம்.

அரசியல் நிர்ணயச் சட்டம் உருவாகும்போது இந்தியாவின் பொதுமொழி எதுவாக இருக்க வேண்டும் என்று பெரும் சர்ச்சை ஏற்பட்டது. பல சமயம் நாடாளுமன்றத்தில் அது பற்றிய பிரச்சனை வந்து, வோட்டளிக்கவேண்டிய அவ சியம் வந்து, அதிலே கருத்துக்களையெல்லாம் பரிமாறப்படுகிற சூழ்நிலை ஏற்பட்டு, சமமான அளவுக்கு வாக்கு வந்து, தலைவராக இருந்த டாக்டர். இராஜேந்திர பிரசாத் அவர்கள் ஒரு வோட்டுக் கொடுத்து இந்தியை ஆட்சி மொழி யாகவும் பொது மொழியாகவும் கொண்டு வரப் படவேண்டும் என்று பல நாட்கள் தொடர்ந்து

விவாதம் நடந்த போது கூட, காயிதே மில்லத் முகம்மது இஸ்மாயில் அவர்கள் அரசியல் நிர்ணய அவையில் உறுப்பினராக இருந்து **இந்தி, இந்தியாவின் பொதுமொழியாகவும் ஆட்சிமொழியாகவும் இருப்பதற்கு வேண்டிய தகுதியும் திறமையும் பெற்றது அல்ல என்பதைத் திருத்தமாக எடுத்துச் சொல்லி விவாதித்து, அப்படி இந்தி இல்லையென்றால் வேறு எந்த மொழி தான் இருக்கவேண்டும் என்று ஒரு குரல் எழும்பியபோது அவர்கள் ''எழுத்து வளமை மிகுந்த மொழியும் தொன்மை வாய்ந்த மொழியும், ஆண்டு படிக்கப்பட்ட மொழியும் என்னுடைய தாய்மொழியாகிய தமிழ்தான்'' என்று யாரும் எதிர்ப்புச் சொல்லாத வகையில் அரசியல் நிர்ணய அவையிலேயே இந்தக் கருத்தை அழுத்தந் திருத்தமாக எடுத்துச் சொன்னார்கள்.** தங்களுடைய மார்க்க மொழி அரபு மொழியாக இருந்தாலும் தன்னுடைய தாய்மொழி தமிழ்தான் என்று சொல்லி அந்தத் தாய்மொழி எல்லா வளமும் கொண்டது. செழுமை கொண்டது, ஆண்டுப்படிக்கப்பட்டது, சிறப்பானது என்று சொல்லி அதுதான் பொது மொழியாக இருக்க வேண்டும் என்று சொல்லித் திறம்பட வாதாடிய பெருமை அவருக்கு உண்டு.

பாகிஸ்தான் வேறாகப் பிரிந்து இந்தியா தனியாக ஆனதற்கு பிறகு இந்திய யூனியன் முஸ்லிம்லீக்கின் முக்கிய குறிக்கோளும், திட்டமும் நோக்கமும் இந்தியாவின், இந்திய மக்களின் உரிமையைக் காப்பாற்றுவதுதான் என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லியது மட்டுமல்லாமல் ஏதாவது மாச்சர்யங்கள் இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்குமிடையே ஏற்பட்டாலும், இந்திய முஸ்லீம்கள் இந்தியாவின் பக்கம்தான் இருப்பார்கள் என்று பலமுறை அழுத்தந்திருத்தமாக சொல்லி வந்தார்கள்.

1965-ம் ஆண்டு நடந்த பாகிஸ்தான்-இந்தியா பெரும்போரின் பொழுது அழுத்தந்திருத்தமாக இந்தியாவின் பக்கமிருந்து பாகிஸ்தானுடைய எதிர்ப்பை முழுமூச்சோடு இந்தியாவிலுள்ள முஸ்லிம் சமுதாயம் முஸ்லிம் லீக் கட்சியும் எதிர்ப்பதற்கு பாடுபடும் என்று சொல்லியும் வந்தவர், வீட்டிற்கு ஒருவர் தரவேண்டுமென்றாலும் என்னுடைய ஒரே மகனை இருப்பவரைக் கூடத் தருவதற்காக தயாராக இருக்கிறேன் என்று அழுத்தந்திருத்தமாகப் பாராளுமன்றத்தில் சொல்லிய பெருமை அவருக்கு உண்டு.

அண்மையிலே வங்காளதேஷ் பிரச்சனையின் போது, இந்தியாவிற்கும், பாகிஸ்தானுக்கும் இடையில் மாச்சர்யங்கள் ஏற்பட்ட நேரத்தில் காயிதே மில்லத் அவர்கள் பாராளுமன்றத்திலும் சரி, நாட்டு மக்களுக்கு அறிவிப்பு தருவதிலேயும் சரி, தன்னுடைய கட்சிக்கும் முஸ்லீம் சமுதாய மக்களுககும் மிகத் தெளிவாக அழுத்தந்திருத்தமாக எடுத்துத் தெரிவித்து தன்னுடைய நாட்டுப் பற்றுக்கு மிக சிறப்பாக விளங்கி பாராளுமன்றத்திலே பலரும் பாராட்டத்தக்க அளவில் அத்தகைய முயற்சிக்கு முழுமூச்சாக ஆதரவு தந்திருக்கிறார்கள், மிகச் சிறந்த பண்புகளுக்கு உறைவிடமாக இருந்தவர்கள் அடக்கத்திற்கு எடுத்துக்காட்டாகவும், கண்ணியத்திற்கு எடுத்துக்காட்டாகவும், இருந்தவர்கள். அரசியல் நாகரீகம், அரசியல் பண்பு, அரசியல் கண்ணியம் நாட்டில் நிலை நாட்டப்பட வேண்டுமென்பதிலே மிகச் சிறந்து விளங்கினார்கள்.

பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இந்தியாவின் தலைமை அமைச்சராக இருந்த பொழுது காயிதே மில்லத் அவர்களிடம் சிறந்த அன்பும் மதிப்பும் கொண்டிருந்தார்கள். பாகிஸ்தான் இந்திய போர் ஏற்பட்ட நேரத்தில் லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் இவர்களிடம் சிறந்த மதிப்பையும் பேரன்பையும் கொண்டிருந்தார்கள். இப்போது இந்தியாவின் பிரதமராக இருக்கின்ற இந்திராகாந்தி அம்மையார் அவர்களும் இவர்களிடத்திலே பேரன்பையும் பெருமதிப்பும் கொண்டிருந்தார்கள், என்பதை அவர்களுடைய பேச்சுக்கள் மற்றவைகளிலிருந்து தெளிவாக அறியலாம்.

இப்படிப் பல்வேறு பணிகளைப் புரிந்து அவர்கள் தம்முடைய 76-வது ஆண்டில் இயற்கை எய்தியிருக்கிறார். அவருடைய இழப்பு இந்த நாட்டிற்கே ஈடு செய்ய முடியாத இழப்பு என்று கருத வேண்டும்.

அந்த வகையிலே அவரைப் பிரிந்து வருந்தும் அவருடைய குடும்பத்தினருக்கும் அவருடைய ஒரே மகனுக்கும் அவருடைய உற்றார் உறவினர்களுக்கும், அவருடைய கட்சியினருக்கும் அவரைச் சார்ந்த மக்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக்கொண்டு இந்த தீர்மானத்தை நான் முன்மொழிகிறேன்.

திரு. ஆர். பொன்னப்ப நாடார் ; தலைவர வர்களே, சபையின் முன்னவர் அவர்களால் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த இரங்கல் தீர்மானத்தை ஆதரித்து ஒரிரு வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.

மறைந்த தலைவர் காயிதே மில்லத் அவர்கள் எவ்வளவு சிறப்பாக தன்னுடைய வாழ்க்கையை நடத்தி இன்று வாழ்க்கையை முடித்து இறைவனை சேர்ந்திருக்கிறார்கள் என்பது நாமெல்லோரும் அறிந்த ஓர் உண்மையாகும். தேசிய இயக்கத்திலே அயராது உழைத்து தனக்கென்று ஒரு பாரம்பரியத்தை சிருஷ்டித்த பெருமை காயிதே மில்லத் அவர்களை சேர்ந்தது என்று சொன்னால் அது மிகையல்ல. அன்னார் நல்ல ஒழுக்கமும், பண்பும் அன்பும் நிறைந்த பெரிய மாமேதையாக விளங்கினார்கள் என்று நாம் சொல்ல வேண்டிய தேவையில்லை. அவர்கள் இந்தத் தேசத்திற்கு எவ்வளவு நல்ல காரியங்களை நல்ல பணிகள் ஆற்றினார்கள் என்பதையும், அதன் காரணமாக இன்றைக்கு நாம் சுதந்திரமாக இருக்கிறோம் என்பதையும் நாம் உணர்வோம். அவர்களுடைய வாழ்க்கை ஒரு முன் மாதிரியாக இருக்கிறது. அவர்கள் எளிய வாழ்க்கை நடத்தி அன்போடு எல்லோராலும் மதிக்கப்பட்ட ஒரு உத்தமத் தலைவர், அந்தத் தலைவர் இன்றைய தினம் நம்மைவிட்டுப் பிரிந்திருக்கிறார்கள்.

அவை முன்னவர் அவர்கள் கொண்டு வந்த இந்த தீர்மானத்தோடு நானும் எங்கள் காங்கிரஸ் கட்சியின் சார்பாக இந்த கருத்துகளைத் தெரிவித்துக் கொண்டு, அவர்களுடைய ஆத்மா சாந்தியடைய வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை மன்றாடி முடித்துக்கொள்கிறேன்.

திரு. கே. டி. கே. தங்கமணி: கல்வி அமைச்சரவர்கள் முன்மொழிந்த தீர்மானத்தை என்னுடைய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலே முழுமனதாக ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவராக 1948 முதற்கொண்டு இருந்து வந்த மறைந்த காயிதே மில்லத் அவர்கள் இந்தியாவில் இருக்கும் முஸ்லிம் மக்களை ஒன்று படுத்தியது மட்டுமல்லாமல் இந்திய முஸ்லிம்களைப் பற்றி வெளி நாட்டிலே இருக்கும் முஸ்லிம்கள் கவலைப்பட வேண்டியதில்லை. அதில் தலையிடுவது தவறாகும் என்ற முறையிலே கராச்சியில் நடந்த முஸ்லிம் லீக் மாநாட்டில் தெளிவாக எடுத்துச் சொன்னார்கள். அந்த நிலையில் அவர் கடைசி வரையிலே உறுதியாக இருந்தார் என்பது பாராட்டத்தக்கதாகும்.

அண்மையில் நடந்த பங்களாதேஷ் விடுதலைப் போராட்டத்தின் பொழுது முஸ்லிம் மக்கள் மத்தியில் குழப்பம் இருந்தாலும் கூட நாம் இந்தியாவின் பக்கம் உறுதியாக நிற்க வேண்டும். பங்களாதேஷ் மக்களின் விடுதலைப் போராட்டம் சிறந்த ஒரு போராட்டம் என்று வெளியிலேயும் நாடாளுமன்றத்திலேயும் தயக்கமில்லாமல் தெளிவாகச் சொன்னவர் காயிதே மில்லத் அவர்கள்.

அதுமட்டுமல்லாமல் நம் நாட்டிலே வந்த பல அரசியல் தலைவர்கள் மகாத்மா காந்தியின் இயக்கத்திலே ஈடுபட்டு வழிகாட்டி வந்த பெரியோர்கள் இதே சட்டமன்றத்தில் பலமுறை அவரைப்பற்றியெல்லாம் பேசியிருக்கிறார்கள். நாடாளுமன்றத்திலே எங்களைப் போன்றவர்களெல்லாம் என். சீனிவாச ஐயங்கார் அவர்களுடைய பிரசங்கத்தை ஆழ்ந்து படிப்பது உண்டு.

தமிழ்நாட்டில் தேசிய இயக்கம் வளர்ந்த காலத்தில் எஸ். சீனிவாச ஐயங்கார் அவர்களுக்கு உறுதுணையாக காயிதே மில்லத் அவர்கள் இருந்திருக்கிறார்கள். தமிழ்நாட்டிலே நடந்த அரசியல் மாநாட்டிலே சீனிவாச ஐயங்கார் அவர்களுக்கு வலதுகரமாக இருந்து தமிழ்மக்களை ஒன்று சேர்த்த பெருமை அக்காலத்தில் தமிழ் நாட்டிலிருந்த அரசியல் தலைவர்கள் பெரியார் அவர்களையும் திரு. வி. க. அவர்களையும் நாயுடு அவர்களையும் தன்னோடு இணைத்த பெருமை காயிதே மில்லத் அவர்களுக்கு உண்டு.

இன்றைக்கு அவருடைய மறைவானது முஸ்லிம் மக்களுக்கு மட்டுமே அல்லாமல் நாட்டில் முன்னேற்றம் ஏற்பட வேண்டும், நாடு ஒற்றுமையாக இருக்க வேண்டுமென்ற கருத்து உள்ளவர்களுக்கு உண்மையிலேயே பெரிய இழப்பாகும் என்றுசொல்லிக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

டாக்டர் எச். வி. ஹண்டே: நம்முடைய காயிதே மில்லத் அவர்களை பல்லாண்டுகளாக நான் நேரடியாக அறிவேன். நான் அரசியலில் முதன் முதலில் ஈடுபட்ட நேரத்தில் பலதடவைகள் அவர்கள் என்னைத் தட்டிக்கொடுத்து சரியான வகையில் தைரியமாக உன் பணியை செய் என்று 1964-லிருந்து எனக்குச் சொல்லி வந்திருக்கிறார்கள். பழகுவதில் ஒரு தகப்பன் மகனோடு பழகுவது மாதிரி நல்ல வகையில் பழகக் கூடிய நல்ல சுபாவத்தினை படைத்தவராக இருந்தார்கள். அதே நேரத்தில் யார் மீதும் கசப்புணர்ச்சியும் இல்லாமல் எதிரி

என்று அரசியலில் சொல்லக் கூடிய நிலையிலிருந்தாலும் கூட அவரைப் பார்த்ததும் கூட அவரோடு அன்புடன் பேசுவாரே தவிர வேறு எந்த வார்த்தையும் அவர் வாயிலிருந்து வராது.

அவருடைய வாழ்க்கையிலே ஒரு அதிசயக் காட்சி என்னவென்றால் சாதாரணமாக நாம் சட்ட சபை தேர்தலுக்கு நிற்கும் போது வாக்காளர்களை நேரில் பார்த்து வோட்டு போடுங்கள் என்று கேட்போம். ஜனநாயகம் என்றால் சரியான வகையில் பார்த்ததால் பொது மக்கள் விரும்பி ஒருவரை வேட்பாளராக நிறுத்தி வைப்பார்கள். அந்த வகையில் நம் மதிப்பிற்குரிய காயிதேமில்லத் அவர்கள் மஞ்சேரி தொகுதியில் உள்ள வாக்காளப் பெரு மக்கள் விரும்பி நீங்கள் தான் எங்கள் வேட்பாளராக நிற்க வேண்டும் என்று வற்புறுத்தி நிற்க வைத்து மில்லத் அவர்கள் வோட்டுக் கூட கேட்கப் போகாமல் வெற்றி பெற்று, அதன் பிறகு நன்றி செலுத்தும் ஒரு காட்சியைத்தான் நாம் பார்க்கிறோம். நம் நாட்டிலே இது ஒரு அதிசயக் காட்சியாகும். அதைப் பார்க்கும் போது பொது மக்களின் உள்ளங்களில் அவர்கள் எந்த அளவிற்கு இடம் பெற்றுள்ளார்கள் என்பது தெரியவரும்.

அண்ணல் காந்தி அவர்கள் சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டிருந்த காலத்தில் நீண்ட நாட்களாக அவர்களோடு சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டு அருமை நண்பர் தங்கமணி அவர்கள் எடுத்துச் சொன்னது போல திருநெல்வேலி போன்ற இடங்களில் ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்களால் அவர்களைப் போன்றவர்களோடு பழகி சுதந்திர இயக்கத்தை நம் நாட்டில் வளர்த்து வந்தார்கள். இன்னொரு விஷயம் காந்தி அடிகளின் நெருங்கிய நண்பர் என்பது மட்டுமல்லாமல் பல விஷயங்களில் காந்தியடிகளின் வாழ்க்கையை அவர்கள் ஒற்றுக் கொண்டிருந்தார்கள். குரோம் பேட்டையில் உள்ள அவரது இல்லம் ஒரு ஆசிரமம் போல் இருக்கும். அங்கு செல்லும்போது காந்தி அடிகளின் நினைவுதான் வரும்.

எந்த எதிர்க் கட்சியாக இருந்தாலும் அவர் தாக்கும்போது நல்ல வகையில் தாக்கி எந்த எதிர்க் கட்சியினாலும் தன்னைத் தாக்க முடியாமல் ஆக்கிக்கொண்டு இருக்கிறார்கள். பத்துப் பதினைந்தாண்டு அரசியல் வரலாற்றைப் பார்க்கும் போது எந்த ஒரு எதிர்க் கட்சித் தலைவரும் அவர்களைத் தாக்கிப் பார்த்ததுமில்லை. காதால் கேட்டதுமில்லை. சமஸ்கிருதத்தில் சொல்வார்கள் அஜாத்சத்ரு என்று, தனக்கு எதிரி இல்லாத வகையில் அவர்கள் தம்மை ஆக்கிக்கொண்டிருக்கிறார்கள் ஒழுக்கத்திற்கு அவர்கள் ஒரு சிகரமாக விளங்கினார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது.

தமிழ்நாட்டிலுள்ள எல்லோரையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது கட்சியை மறந்து பேச வேண்டுமென்றால் அவர்கள் ஒழுக்கத்தின் சிகரமாக இருந்தார்கள் அவர்களிடம் ஒழுக்கத்தைக் கற்றுக்கொள்ளும் அளவிற்கு அதை நிலை நிறுத்திக் காட்டியிருக்கிறார்கள். அரசியல்வாதிகளுக்கு ஒரு எடுத்துக் காட்டாக விளங்கி வந்த காயிதேமில்லத் அவர்கள் இன்று நம்மிடையே இல்லை. அவரது மறைவு முஸ்லிம் சமுதாய மக்களுக்கு ஒரு பேரிழப்பு மட்டுமல்ல. அவரது குடும்பத்திற்கு என்று மட்டுமல்ல தமிழகத்திற்கு என்று மட்டுமல்ல நம் நாட்டிற்கே ஒரு பேரிழப்பு என்பது மட்டுமல்ல அரசியல் வாழ்க்கைக்கே அவர்களது இழப்பு ஒரு பேரிழப்பாகும். இந்த பேரிழப்பை எந்த விதத்திலும் சரிகட்ட முடியாத ஒரு நிலை.

His death has created a void in the political arena, in the Political Firmant.

என்று

சொல்லக் கூடிய அளவிற்கு பெரியதொரு சூன்யம் உருவாகியிருக்கிறது. அந்த சூன்யத்தை எப்படி சரிகட்டுவது என்று சொல்லக் கூடாத, முடியாத அளவிற்கு நாம் வேதனையோடு இருக்கிறோம் என்று சொல்லிக் கொண்டு சுதந்திரா கட்சி சார்பில் மதிப்பிற்குரிய கல்வி அமைச்சர் அவர்கள் முன்மொழிந்துள்ள தீர்மானத்தை வழிமொழிந்து என் வார்த்தைகளை முடித்துக் கொண்டு விடை பெறுகிறேன். வணக்கம்.

திரு. கே. கந்தசாமி ;- இன்று சட்ட சபைக் கூட்டம் இறுதி நாளாக முடிவுறும், என்றிருந்த நேரத்தில் இந்தியாவிலேயே மாபெரும் தலைவராக இருந்து வந்த பெரு மதிப்பிற்குரிய காயிதேமில்லத் சாகிப் அவர்கள் மரணம் எய்தி இருக்கிறார்கள், அவர்களது மறைவு இன்று இந்தியாவிலுள்ள அத்தனை தேசபக்தர்கள் உள்ளங்களிலும் பெரியதொரு வேதனையை ஏற்படுத்தியிருக்கிறது என்பதை அனைவரும் அறிவோம். சுதந்திரப் போராட்டத்தில் முன்னின்று தேசபக்தியோடும் தியாக உணர்வோடும் காந்தி அடிகளோடு சேர்ந்து போராடிய மாபெரும் தலைவராவார். இந்து முஸ்லிம் பிரிவினை ஒரு புறத்தில் பிரச்சாரம் செய்யப்பட்ட போது இந்துக்கள் வேறு, முஸ்லிம்கள் வேறு,இவர்கள் மதத்தாலும் பழக்க வழக்கங்களாலும் கலாச்சாரத்தினால், பண்பாட்டினாலும் வேறுபட்டவர்கள் என்று பிரசாரம் செய்யப்பட்டு

தேசத்தைத் துண்டாட பல தேச விரோத சக்திகள் இயங்கி வந்த காலத்தில் நாம் தேச பக்தியால் ஒன்றுபட்டவர்கள், நாம் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் என்ற உணர்வை, ஒற்றுமை உணர்ச்சியை மக்களிடையே ஏற்படுத்தி, தியாகச் சின்னமாக விளங்கிய காயிதே மில்லத் சாகிப் அவர்கள் இன்று நம்மிடையே இல்லை. அவர்களது தியாகத்திற்கும் தன்னலமற்ற ஒழுக்க நிலைக்கும், தேச பக்திக்கும் தெய்வத்தோடு உயர்ந்த நிலைக்கும் அவர்கள் நம் உள்ளங்களில் என்றென்றும் நிலைத்து நிற்பார்கள்.

தேசத்தின் ஒற்றுமையின்மை நிலையை மாற்றுவதற்காக அவர்கள் பாடுபட்டார்கள். வேறு மதத்தவன்தான், தனக்கென்று தனிக் கலாச்சாரம் உண்டு, தனிப் பண்பாடு உண்டு என்றாலும் தேச பக்தர் என்ற முறையில் வாழ்க்கையிலும் பேச்சின் மூலமும், நடத்தை மூலமும் எடுத்துக் காட்டி நம் உள்ளங்களில் மறையா விளக்காக இருக்கக் கூடிய மாபெரும் மனிதர் காயிதே மில்லத் சாகிப் அவர்கள். தேச ஒற்றுமைக்காகப் பாடுபட்டு வந்த அவர்கள் ஒரு சிறந்த சோஷலிச வாதியாகவும் வாழ்க்கையில் நடந்து காட்டியவர், ஒரு லட்சாதிபதி குடும்பத்தில் பிறந்தாலும் ஒரு சாதாரண ஏழை மகன், இந்தியாவிலுள்ள சாதாரண ஏழை மகன் என்ன நிலையில் வாழ்வானோ அதே நிலையில் அவர்கள் தமது வாழ்க்கையை நடத்திக் காட்டி ஒரு சிறந்த சோஷலிச வாதியாக இயங்கி வந்தார்கள். அப்படி வாழ்ந்து நம்முடைய வாழ்க்கையோடு ஒளிகாட்டியாக விளங்கியவர் காயிதே மில்லத் சாகிப் அவர்கள்.

ஆகவே பார்வேட் பிளாக் கட்சியின் சார்பாக அந்தப் பெரிய மகானின் இழப்பிற்கு என் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

சட்ட சபை முஸ்லிம் லீக் கட்சித் தலைவர் தளபதி திருப்பூர் ஏ. எம். மொய்தீன் அவர்கள் கூறியதாவது :

பேரவைத் தலைவர் அவர்களே, சுமார் நாற்பது ஆண்டுகளாக என்னுடைய அரசியல் குருவாக நான் ஏற்று மதித்து வந்த மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரிய தலைவர், கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் அவர்கள் நம்மை எல்லாம் விட்டு பிரிந்து விட்டார்கள். ஒரு சம்பவம் என் நெஞ்சின் அடித்தளத்திலிருந்து என்னை மகிழ்விக்கிறது. என்சமூகம் பெருமைப்படுகிறது, பெருமைப்படுத்துகிறது. நான்கு தினங்கள் இருக்கும் என்று நான் கருதுகிறேன். நம்முடைய டாக்டர் கலைஞர் அவர்கள் கடைசியாக அவர்களைப் பார்க்க வந்தபோது அவருக்கு திடீரென்று உணர்வு வந்தது. அந்தப் பெருந்தகை கலைஞரைப் பார்த்து ''ஐயா எங்களோடு நீங்கள் ஒத்துழைத்ததற்கும். எங்கள் சமூகத்தினரிடத்தில் நீங்கள் காட்டிய பரிவிற்கும் உங்களுக்கும் உங்களுடைய கட்சிக்கும் கடைசியாக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்,'' என்று குறிப்பிட்டது அவர்களுக்கு இருந்த நன்றி உள்ளத்தைக் கடைசி நேரத்தில் நாங்கள் வெளிப்படுத்துவதற்கு பதிலாக மரணத்தோடு போராடிக் கொண்டிருந்த நேரத்தில் யாரிடத்தில் வெளிப்படுத்த வேண்டுமோ அவர்களிடத்தில் வெளிப்படுத்தி இந்த இனத்திற்கு பெருமையளிப்பதாக, ஏற்றம் நிறைந்த நன்றி உள்ளம் படைத்ததாக நாணயமுடையதாக அந்தத் தலைவர் ஆக்கிச் சென்று இருக்கிறார்கள் என்பதில் நான் பெருமைப்படுகிறேன்.

ஒரு சம்பவத்தை இது சமயம் நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ஒரு சமயம் பாராளு மன்றத்தில் ஒரு விவாதம் நடந்தது. அப்போது சர்தார் வல்லபாய் படேல் அவர்கள் சொன்னார்கள். ''பாகிஸ்தான் போராட்டத்தில் பங்குபெற்ற நீங்கள் இன்னும் அந்த உணர்ச்சியோடு பேசினால் பாக்கிஸ்தான் போக வேண்டி வரும்'' என்று சொன்னபோது மிக அமைதியாக பதட்டப்படாமல் ''சர்தார்ஜி அவர்களே, தாங்கள் நன்றாக அரசியல் சட்டத்தைப் படித்து உணர்ந்தவர்கள் என்பதையும் நான் அறிவேன். எங்களை அல்ல எங்கள் சமூகத்தை அல்ல இந்த மண்ணில் பிறந்த ஒரு கொசுவைக்கூட இந்த நாட்டு மண்ணிலிருந்து அப்புறப்படுத்த உங்களுக்கு அதிகாரம் இல்லை'' என்று சொன்ன இரும்பு நெஞ்சம் கொண்ட ஒரு தலைவரை இன்று உலகம் இழந்து இருக்கிறது.

எத்தனையோ தமிழர்கள் அன்று மத்திய சட்ட மன்றத்தில் இருந்தார்கள். ஆனால் மொழிப் பிரச்சனை வந்தபோது மிகநெஞ்சத்தின்அழுத்தத்தோடு இந்தியாவுக்கு ஒரு பொதுமொழி, எல்லாச் சிறப்போடு கூடியதாக அமைய வேண்டுமானால் அது தமிழ் மொழியாகத் தான் இருக்க வேண்டுமென்று குறிப்பிட்ட, தாய்மொழிப்பற்று மிக்கத் தலைவனை இன்று நாடு இழந்து இருக்கிறது.

பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள், இந்தியாவின் மீது சீனா படையெடுத்த போது, எல்லா உதவிகளையும் பாராளு மன்ற மெம்பர்களிடத்திலும் மக்களிடத்திலும் கோரினார்கள். அப்போது

சொன்னார்கள் ''நான் சிறந்த வசதியோடு ஒரு காலத்தில் இருந்தவன். அந்த வசதியெல்லாம் நான் இப்போது இழந்து சாதாரணமாக இருக்கிறேன். நான் பெற்றது ஒரே குழந்தை. நேருஜி அவர்களே இப்போது போராடுவதற்கு என் மகனை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளுங் கள்'' என்று பாராளுமன்றத்தில் மிகத் துணி வோடு சொன்ன தேசபக்தி படைத்த ஒரு இரும்பு நெஞ்சம் படைத்த மனிதரை இன்று சமூகமும் நாடும் இழந்து இருக்கிறது.

நான் ஒன்றை மறைக்காமல் சொல்கிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தோடு, முதல் தொடர்பாக முஸ்லிம் லீக் கட்சி கூட்டு ஆரம்ப மாக இருந்த நேரம். முதன் முதலாக நான் காஞ்சீபுரம் சென்று பேரறிஞர் அண்ணா அவர் களை காயிதே மில்லத் அவர்களின் சார்பில் காணச் சென்றேன். அவர்கள் சொன்ன விஷயத்தைப் போய் அண்ணா அவர்களிடம் சொன்னேன். அதுதான் ஒற்றுமைக்கு முதன் முதலில் வித்திட்ட நிகழ்ச்சி என்பது உங் களில் பலருக்கு தெரியாது. அதுதான் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் முஸ்லிம் லீக்கிற்கும் தொடர்பு ஏற்படுத்த போடப்பட்ட அஸ்திவார மாகும். அங்கிருந்து அந்தப் பேச்சு முடிந்து நான் சென்னை வந்து இப்படி அண்ணா அவர் கள் சொல்கிறார்கள் என்று சொன்னபோது ''அவர்களிடம் நம்பிக்கை எனக்குண்டு. அவர் நாணயமான தலைவர். அவர் சொன்னதை நாம் இப்போது ஒப்புக்கொள்வோம். பிரச்சனை கள் வளர்க்க வேண்டாம். நாம் அவர்களோடு கூடுவோம்'' என்று சொன்னார்கள்.

எப்பொழுதுமே பிறருக்கு விட்டுக்கொடுக்கும் சுபாவம் அவர்களுக்கு அதிகம் உண்டு. அரசியல் வாதிகளிடத்தில் இல்லாத ஒருகுணம் அது. முஸ்லிம் லீகிற்கும் திராவிட முன்னேற்றக் கழகத் திற்கும் அல்ல, அதிலே சிலருக்கும் இதிலே சிலருக் கும் இடையே ஒரு சிற்சில மாச்சர்யங்கள் வந்த போது, கார்ப்பரேஷன் தேர்தல் வந்தது. அவர் களிடம் சென்று இந்த மாதிரி இருக்கிறது என்று சொன்னவுடனே அபிப்பிராயம் வேறு, கொள்கை வேறு இப்போதே சென்று 19-வது வார்டில் திரா விட முன்னேற்றக்கழகத்தால் நிறுத்திவைக்கப்பட் டிருக்கும் வேட்பாளரை நீங்கள் சென்று ஆதரவு தாருங்கள், மற்ற விஷயங்களைப் பற்றிப் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று சொன்ன அந்த பெருந்தகையை நாங்கள் இழந்து இருக்கிறோம் என்று சொல்வதில் நான் மிகுந்த வேதனைப் படுகிறேன்.

தலைவரவர்களே, நான் கட்சியின் தலைவர் என்ற முறையில், ஸ்டான்லி ஹாஸ்பத்திரியில் டாக்டர்களும் அங்கே இருக்கக்கூடிய நாங்களும் அவர்கள் அங்கே படுத்திருந்த 10 நாட்களில் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி இருக் கிறதே, அது எல்லையற்றது. கொஞ்சமும் சோர்வு இல்லாது மிகவும் தன்னம்பிக்கையோடு அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி பாராட்டத் தக்கதாகும். அவர்களை இந்தப் பேரவையின் மூலம் பாராட்டுகிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவரும், நம்முடைய அன்புக்குரிய முதல்வருமான டாக்டர் கலைஞர் அவர்கள் அந்த தலைவரை நேரில் காண அடிக்கடி வந்தபோது மாத்திரமல்லாமல் எல்லா வகையான ஒத்துழைப்பையும் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் அதிகாரப்பூர்வமாக உத்தரவிட்டது என்றென்றும் அந்தச் சமூகம் மறக்க இயலாததாகும். மற்ற அமைச்சர் பெரு மக்கள் அத்தனை பேரும் மற்றும் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களும் என் னுடைய அன்புக்குரிய சகோதரர் பெரும் தலைவர் காமராஜ் அவர்கள் என் அருமைத் தலைவர் பெரியார் ஈ. வெ. ரா, அவர்கள் முதலானோர் கட்சிப் பாகுபாடு இல்லாமல் வந்தது அவர்களுடைய சேவையின் உண்மையைப் பிரதிபலிக்கும் முறையில் வெளிப்படுகிறது. என்பதில் எங்களுக்கு பெருமை அளிக்கிறது.

தலைவர் அவர்களே, ஒன்றை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். முஸ்லிம் லீக் தங்களுடைய நாணயமான தலைவரை, நம்பிக்கையுள்ள தலைவரை 10 கோடி மக்களின் ஒப்பற்ற தலைவரை, இந்திய முஸ்லிம் லீக் கட்சியின் ஒப்பற்ற தலைவரை இந்த நாட்டில் தேசபக்திமிகுந்த தேசிய தலைவரை அரசியல் பண்பாடு மிக்க ஒருபெரும் தலைவரை இந்த நாடு இன்றைக்கு இழந்து இருக்கிறது என்பது மட்டுமல்ல அது ஈடுசெய்வது எப்படி என்று எங்களுக்கு விளங்கவில்லை. எப்படி ஈடு செய்வது என்று எங்களுக்கு மீண்டும் செப்பனிடுவோம் என்று எனக்குப் புரியவில்லை. நீங்களெல்லாம் அந்த ஒப்பற்ற தலைவரிடத்தில் கொண்டுள்ள அன்பின் காரணமாக காட்டிய அனுதாபத்திற்கு கட்சியின் சார்பில் எனது நன்றியைத் கூறி அவை முன்னவர் கொண்டு வந்து இருக்கின்ற இந்த இரங்கல் தீர்மானத்தை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன் என் கட்சி யின் சார்பில் என்று கூறி விடைபெறுகிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :- பேரவைத் தலைவர் அவர்களே, புதுக்கல்லூரியில் மூச்சற்றுக் கிடக்கின்ற காயிதே மில்லத் அவர்களுடைய உடலை நாம் இப்போது கண்ணீரால் உடலை குளிப்பாட்டிக் கொண்டிருக்கிறோம்.

நம்முடைய பேரவையின் முன்னவர் டாக்டர் நாவலர் அவர்கள் முன்மொழிந்த இரங்கல் தீர்மானத்தை அனைத்துக் கட்சியின் தலைவர்களும் வழி மொழிந்து, தமிழ்நாட்டு மக்கள் அனைவருடைய இரங்கலையும் ஆழ்ந்த துயரத்தையும், அவர்களுடைய உரைகளின் மூலம் வெளிப்படுத்தி இருக்கிறார்கள்.

கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் அவர்கள் இந்தியப் பெருநாட்டினுடைய சரித்திரத்திலும், தமிழ்நாட்டின் வரலாறுகளிலும் நீங்காத இடத்தைப் பெற்றுக் கொண்டவர்களாவார்கள். இந்த சட்டமன்றத்திலும் சரி, நாடாளுமன்றத்திலும் சரி அவர்கள் வாய்மை எள்ளளவும் குறையாமல் வடித்து வைத்த கருத்துக்களுக்கு இந்த நாடு என்றென்றும் மதிப்பளிக்க கடமைப்பட்டிருக்கிறது.

பேரறிஞர் அண்ணா அவர்களுடைய உற்ற துணைவராக அவர்கள் விளங்கியது மாத்திரமல்ல எங்களுக்கெல்லாம் கூட அவர்கள் மற்றொரு அண்ணனாக விளங்கிய பல்வேறு நேரங்களில் எங்களுக்கு வாழ்த்துக்கள் தந்து ஊக்கத்தையும், உற்சாகத்தையும் ஊட்டிய உத்தமப் பெரியார் அவர் ஆவார்கள்.

முஸ்லிம்லீக் கட்சியின் தலைவர் திருப்பூர் மொய்தீன் அவர்கள் மிகுந்த வருத்தத்தோடும் உருக்கத்தோடும் எடுத்துக் காட்டியதைப்போல மரணத்தோடு அவர்கள் போராடிக் கொண்டிருந்த நேரத்திலும் எவ்வளவு எளிமையோடு, எவ்வளவு அடக்க உணர்ச்சியோடு, எவ்வளவு நன்றி மனப்பான்மையோடு நடந்து கொண்டார்கள் என்பதை நேரிலேயே காணுகின்ற வாய்ப்பு எனக்கெல்லாம் ஏற்பட்டது. அசைவற்றுக்கிடந்த உடல் அருகே சென்று ''ஐயா'' என்ற அழைத்ததும் திடீரென்று அசைந்தது.

கண்ணை விழித்து என்னைப் பார்த்ததும் நீங்கள் காட்டிய அன்புக்கெல்லாம் நன்றி என்று கூறியதும் என்றென்றும் மறக்க முடியாத நிகழ்ச்சி மாத்திரமல்ல அசைக்க முடியாமல் இருந்த கை எங்களைக் கண்டதும் திடீரென்று அசைந்து வழக்கமாக மரியாதை சொல்லுகின்ற வகையில் 'சலாம்' இட்ட அந்த காட்சி இருக்கிறதே இதெல்லாம் மிகுந்த பெருந்தன்மை வாய்ந்தவர்களுக்கும், மிகப்பெரும் உள்ளம் படைத்தவர்களுக்கும் மாத்திரமே உரிய பண்பாடுகள் ஆகும். அப்படிப்பட்ட மாமனிதரை இன்றைக்கு நாம் இழந்து தவித்துக் கொண்டிருக்கிறோம்.

நாவலர் அவர்களும் மற்ற கட்சித் தலைவர்களும் எடுத்துக்காட்டியது போல, இந்தியாவுக்கு எது தேசிய மொழியாக இருக்க வேண்டுமென்ற வினா எழுந்த நேரத்தில் கம்பீரமாக எழுந்து நின்று எல்லா வளமும் பொருந்திய என் தாய்த் தமிழ் தான் இந்தியாவின் தேசிய மொழியாக இருக்கட்டுமே என்று கூறிய அந்த வீறு மிகுந்த உரையைத் தமிழகம் என்றென்றும் மறவாது.

அவர்கள் நிதானத்துக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர்கள். நட்புக்கு எடுத்துக் காட்டாக விளங்கினார்கள். பெருந்தன்மைக்கு உதாரணமாக வாழ்ந்து காட்டினார்கள். அடக்கம் என்றால் இது தான் என்று அவரைப் பார்த்து நாம் புரிந்து கொள்ளலாம். அப்படிப்பட்ட ஒரு பெரிய மனிதரைத்தான் இன்றைக்கு நாம் இழந்து தவிக்கிறோம்.

அகில இந்தியாவின் இஸ்லாமிய சமூகத்தினுடைய மாபெரும் கட்சியான இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கட்சித் தலைவராக அவர்கள் இருந்தாலும் பாராளு மன்றத்தில் அவர்கள் வீற்றிருந்தாலும், ஏறத்தாழ 40 ஆண்டு காலம் பொது வாழ்க்கையிலே அவர்கள் ஈடுபட்டிருந்தாலும், எவ்வளவு எளிய வாழ்க்கையை அவர்கள் மேற்கொண்டிருந்தார்கள் என்பதை குரோம்பேட்டையில் அவர்கள் வாழ்ந்த இல்லத்தைப் பார்த்தாலே அனைவரும் நன்றாகப் புரிந்து கொள்ளலாம். அரசியல் வாதியாக இருந்தாலும் சரி, அல்லது அவர்களோடு பழகுகின்ற யாராக இருந்தாலும் சரி அவர்களைச் சந்திக்க அவர்களுடைய வீட்டுக்குச் சென்று திரும்பினால் வீட்டிலிருந்து நாம் வெளியே நிறுத்தி வைத்திருக்கும் கார்வரை வந்து காரில் ஏறி உட்கார்ந்து கார் நகருகின்ற வரையில் நின்று வணக்கம் தெரிவித்த பிறகு திரும்புகின்ற அந்தப் பெருந்தன்மையை, தள்ளாத வயதிலும் அதிகமாக நடமாட முடியாத பலகீனமான நிலைமையிலும் அவர்கள் பெற்றிருந்தார்கள். இவை எல்லாம் அரசியல் வாதிகளுக்கும் பெருந்தன்மையை எப்படிக் கடைபிடிக்க வேண்டுமென்பதற்கு உதாரணமாக விளங்கி அவர்கள் எடுத்துக் காட்டிய வழிமுறைகள் ஆகும்.

முன்னேற்றக் கழகத்தோடு அவர்கள் கொண்டிருந்த நட்பையும், முஸ்லிம் லீக் கட்சிக்கும் முன்னேற்றக் கழகத்திற்கும் இருந்த உறவையும் மாண்புமிகு முஸ்லிம் லீக் கட்சித் தலைவர் அவர்கள் இங்கே விளக்கிக் காட்டினார்கள். அவர்கள் கொண்டிருந்த உறவு

'அற்ற குளத்தில் அறுநீர்
பறவைபோல்
உற்றுழித்தீர்வார் உறவல்ல
அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும்
நெய்தலும் போலவே
ஒட்டி உறவார் உறவு
என்பதற்கேற்ப ஒட்டிய உறவு

x x x

'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு'

என்கிற அந்த நட்புக்கு அவர்கள் இலக்கணமாகத் திகழ்ந்தார்கள்.

ஒரு பெரியவரை இன்றைக்கு நாம் இழந்து தவிக்கிறோம். இஸ்லாமிய சமுதாயத்தின் ஏற்றமிக்க தலைவரை அந்தச் சமுதாயம் இழந்து தவிக்கிறதுஎன்றுகூறுவதோடு, இந்தியாவில்மிகச்சிறந்த ஒருவரை இழந்திருக்கிறோம் என்று கூறுவதோடு தமிழ் நாட்டு மக்களுடைய மன உணர்வு, தமிழ் நாட்டு மக்களுடைய சுதந்திரப் பற்றிலும் இவை அனைத்திற்கும் எடுத்துக் காட்டாக, அவற்றுக்காக வாதாடுகின்ற மிகச் சிறந்த ஏந்தலாக விளங்கிய ஒருவரை இன்றைக்கு நாம் இழந்திருக்கிறோம் என்று கூறுவது மிகப் பொருத்தமுடைய ஒன்றாகும்.

அவர்கள் இன்றைக்கு நம்மிடையே இல்லையென்றாலும் நம்மிடம் அவருடைய உணர்வுகள், அவர் வடித்து அளித்த கொள்கைகள் அவர் வாழ்ந்துக் காட்டிய நல் வழிப்பாதை இவையெல்லாம் நாம் நடந்து செல்ல வழிகாட்டக் கூடியவைகளாக அமைந்திருக்கின்றன.

நாம் ஆளுகின்ற கட்சியின் சார்பாக, இந்த அரசின் சார்பாக அவரால் பரிபாலிக்கப்பட்ட முஸ்லிம் சமுதாய சகோதரசகோதரிகளுக்கு உறுதி அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். அவர்கள் மறைந்து விட்டார்கள். ஆனால் அந்தப் பெரியவர் மீது ஆணையாகச் சொல்கிறேன். முஸ்லிம் சமுதாயப் பெருமக்களுக்கு இந்த அரசு என்றென்றும் தன்னுடைய கடமைகளைச் செய்யும் என்ற உறுதியினை நான் அளிப்பதுதான் மறைந்த அந்த மாபெரும் மனிதருக்கு இந்த அரசின் சார்பில் செலுத்தும் மரியாதை என்று கருதுகிறேன்.

மிகப் பெரிய மனிதரை ஒப்பற்ற ஒரு தலைவரை தமிழ்நாட்டிலுள்ள ஒரு மாமணியை இழந்திருக்கும் இந்த நேரத்தில் இந்த அவையின் அலுவல்களை எல்லாம் ஒத்திவைத்து நாளைய தினம் தொடருவது நலமாக இருக்குமென்ற எண்ணத்தை, பேரவைத் தலைவர் அவர்களே தாங்கள் கொண்டிருப்பீர்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். ஆகவே அந்த எண்ணத்தை என்னுடைய வேண்டுகோளாக இணைத்து இந்த அவையின் சார்பில் மறைந்த பெரியவருக்கு இறுதி வணக்கத்தை தெரிவிப்பதோடு அவரை இழந்து தவிக்கின்ற உற்றார், உறவினர், குடும்பத்தினர், நாட்டு மக்கள் அனைவருக்கும் என்னுடைய ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்து அமர்கிறேன்.

வணக்கம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்:-

உண்மையிலேயே தமிழ்நாட்டிற்கு மட்டுமல்லாமல் இந்திய பூமியிலேயே ஒரு பெரிய தலைவரை இன்றைக்கு நாம் இழந்திருக்கிறோம். அது ஈடு செய்ய முடியாத நஷ்டம் என்பதைக் குறித்து யாவரும் உருக்கத்தோடு வருத்தப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

மாண்புமிகு முதல்வர் அவர்கள் ஒரு உறுதி அளித்தார்கள். இஸ்லாமிய சமுதாயம், 20 ஆண்டுகாலமாக அவர்கள் இந்த நாட்டின் இரண்டாம் பிரஜைகளாக ஆகிவிடுவார்களோ என்று கருதப்பட்ட நிலையில் 5 கோடி மக்களுக்கும், மற்றவர்களுக்கும் உரிமையை ஏற்படுத்திக் கொடுத்ததன் மூலமாகவும், தம்முடைய தாய் மொழிப்பற்றின் மூலமாகவும் காயிதே மில்லத் அவர்கள் நாட்டு மக்களுக்கு அரும்பெரும் சேவை செய்துள்ளார்.

மாண்புமிகு முதல் அமைச்சர் எடுத்துக் காட்டியதைப் போல மிகப் பெரிய உள்ளம், மிகப் பெருந்தன்மை மிகுந்த அடக்கம் இவைகளுக்கு எடுத்துக்காட்டாக மொத்ததிருவுருவமாக இருந்த காயிதே மில்லத் அவர்களின் மறைவு உண்மையிலேயே மிகப் பெரிய இழப்பு என்ற வகையிலே அவர்களுடைய குடும்பத்தினருக்கும், உற்றார் உறவினர்களுக்கும், தமிழ்ப் பெருமக்களுக்கும், நாட்டிலே இருக்கிற எல்லோருக்கும் இந்தப் பேரவையினுடைய ஆழ்ந்த அனுதாபத்தையும் இரங்கலையும் தெரிவித்துக் கொள்கிறேன். அதனுடைய அறிகுறியாக எல்லோரும் ஒரு நிமிட நேரம் மவுனமாக எழுந்து நிற்குமாறு நான் கேட்டுக்கொள்கிறேன்.

[உறுப்பினர்கள் அனைவரும் ஒரு நிமிடம் மௌனமாக தங்களுடைய இருக்கையில் எழுந்து நின்றார்கள்.]

# 4

# தமிழக மேலவையில்

## அப்துல் வகாப் ஜானி சாகிப்

*[5-4-72 இரங்கல் உரை மேலவையில்]*

அவர் பேசியதாவது :-

எங்களுடைய தலைவர் எங்களையெல்லாம் விட்டுப் பிரிந்து விட்டார்.

இந்திய தேசத்தின் ஒரு தலைவரை இழந்து விட்டோம்.

ஆழ்ந்த கவலையில் நம்மையெல்லாம் ஆழ்த்தி விட்டுப் பிரிந்து விட்டார்.

முதல்வர் மீது பெரும் மதிப்பு வைத்திருந்த தலைவர் அவர். முதல்வர் அவரைச் சந்தித்த போது தாங்கள் காட்டிய எல்லா அன்புக்கும் நன்றி என்று கூறினார்கள். அப்படி அன்போடு வாழ்ந்தவர் இந்தியச் சமுதாயத்தை ஒற்றுமைப் படுத்திட அரும்பாடு பட்டுவந்தார்கள்.

முஸ்லிம் சமுதாயத்திற்கு வளமான வாழ்வை உருவாக்கிட வேண்டுமென்று தான் காயிதே மில்லத் அவர்கள் சாகும் வரையிலும் நினைத்து வந்தார்கள்.

வாழ்க்கையில் தூய்மையாக இருக்கவேண்டும்; பொது வாழ்விலும் தனிப்பட்ட வாழ்விலும் தூய்மை தான் நமக்குத் துணை என்று அடிக்கடி சொல்வார்கள்.

எப்போதும் இந்த நெறியைக் கடைபிடியுங்கள் என்று கூறுவார்கள்.

போலீஸ் நிற்கும் போது ஒரு இடத்தைச் சுற்றிப் போவதைப் போலவே போலீஸ் இல்லாத போதும் அந்தப்படி தான் செல்ல வேண்டும் என்பார்கள்.

ஏதாவது ஒரு பிரச்சினையில் குழப்பம் ஏற்பட்டால் மிகவும் யோசித்துத் தான் முடிவுக்கு வருவார்கள். குழப்பம் விடுபடவில்லை என்றால் நபிகள் நாயகம் அவர்களின் வாழ்க்கையில் எப்படி இது போன்ற பிரச்சினைத் தீர்த்துக்கொண்டார்கள் என்று முன் மாதிரி உதாரணங்களைத் தேடுவார்கள்.

அந்த உதாரணங்களைத் தூய்மையோடு கடைப்பிடித்தவர்கள் அவர்கள்.

ஆயிரமாயிரம் ஆண்டுகள் நர்கிஸ் என்ற பூ தனக்கு நறுமண மில்லையே என்று ஏங்கி மிகக் கஷ்டத்துடன் நறுமணப் பூவாக மலர்ந்தது என்று ஒரு உருதுக் கவிஞர் கூறுவார்.

அந்தக் கவிச் சொற்படி ஒரு நர்கிஸ் மலராக, நறுமண மலராகப் பூத்தார் காயிதே மில்லத் அவர்கள்.

—முரசொலி 06-04-72

---

## நாற்காலி; ஜாக்கிரதை

1957-ம் ஆண்டு அக்டோபர் மாதம் நான்காம் தேதியன்று மேலப்பாளையத்திற்கு காயிதே மில்லத் அவர்கள் வருகை தந்திருந்தார்கள். அச்சமயம் என் வீட்டில்தான் தங்கியிருந்தார்கள் ''பிரைமரி முஸ்லிம் லீக் அமைப்பை இவ்வூரில் எப்பொழுது ஏற்படுத்தப் போகிறீர்கள்?'' என்று தலைவர் அவர்கள் சற்று கோபமாகக் கேட்டார்கள். ஒரு மாதத்திற்குள்ளாக பிரைமரி லீக் அமைக்கப்பட்டது. கன்வீனரும் நியமிக்கப்பட்டார்.

அடுத்து நான் மதராஸ் சென்றிருந்தபோது தலைவரவர்களைப் பார்ப்பதற்காக குரோம் பேட்டை சென்றேன். என்னை வரவேற்ற காயிதே மில்லத் இருக்கையில் அமரும்படி பணித்தார்கள். நான் ஒரு நாற்காலியில் உட்காரப் போகும் சமயம் தலைவர் அவர்கள் ''பீ கேர்புல்.'' (ஜாக்கிரதை) என்றார்கள். எனக்கு தூக்கி வாரிப் போட்டு விட்டது. ஒன்றும் ஓடவில்லை என்னை எதற்காக எச்சரிக்கிறார்கள் என்று விளங்காமல் நான் தலைவர் அவர்களைப் பார்த்தபடி நின்றேன்.

அப்பொழுது அவர்கள் ''வேறொன்றுமில்லை. ஜாக்கிரதையாக அந்த நாற்காலியில் அமரவும் என்று கூறினேன்; அவ்வளவுதான்'' என்றார்கள் எனக்கு அப்பொழுதுதான் நிம்மதி ஏற்பட்டது.

அவர்கள் வீட்டிற்கு வருகிறவர்களுக்குக் கூட அமர்வதற்கு சரியான நாற்காலிகள் இல்லை. எவ்வளவு எளிய வாழ்க்கை வாழ்ந்து காட்டி விட்டார்கள்!

திருச்சியில் 1958-ம் ஆண்டு நடைபெற்ற ஊழியர் மாநாட்டிற்குப் போயிருந்தேன். பின்னர் நடைபெற்ற முஸ்லீம் லீக் மாநாடுகள் ஒன்றைக் கூட நான் விட்டு வைக்கவில்லை. நண்பர்களுடன் மாநாடுகளில் கலந்து கொள்வதில் எனக்கு மிகுந்த ஆர்வம் உண்டு.

**எம். எல். எம். முஹம்மது லெப்பை**

*(தாளாளர் முஸ்லிம் பெண்கள் உயர்நிலைப் பள்ளி, மேலப்பாளையம்)*

# மாநில முஸ்லிம் லீக் தீர்மானம்

[தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் 6-4-72 அன்று கூடி காயிதே மில்லத் மறைவு குறித்து கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது.]

''முஸ்லிம் சமுதாயத்திற்கு மானமும் கவுரவமும் மிக்க ஒரு நல்வாழ்வு கிடைப்பதற்காக கடந்த கால் நூற்றுண்டு காலமாக ஓயாது பாடுபட்டு தம்முடைய நேரிய லட்சியத்தில் முழு வெற்றி கண்ட இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் சீரிய தலைவரும், மனிதப் புனிதரும், உண்மை 'முஃமினும்' ஒப்பற்ற தியாகியும்,

சமுதாயத்தின் ஆதுரமிக்கத் தந்தையும், இஸ்லாமிய பண்பாட்டின் உன்னதமான எடுத்துக் காட்டாக விளங்கியவரும், பாராளுமன்ற ஜனநாயகத்தின் உண்மைக் காவலரும், குடியாட்சித் தத்துவத்தைக் காக்க இந்திய அரசியலில் வலிமை சேர்த்தவர்களும்—

சென்னை சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவராகவும், அரசியல் நிர்ணய சபை உறுப்பின ராகவும், டில்லி நாடாளுமன்ற ராஜ்ய சபை உறுப்பினராகவும், மக்கள் சபை உறுப்பினராகவும் தொண்டாற்றியவர்களும், மார்க்கக் கல்விக்கும், விஞ்ஞானக் கல்விக்கும் அளப்பரிய சேவை யாற்றியவர்களும்—

இந்திய சமுதாய வாழ்வின் பல்வேறு துறைகளிலும் பாராட்டுக்குரிய சேவையாற்றியவர் களும் ஆன, கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத், சமுதாயத்தின் ஒப்பற்ற தந்தை, 'கவ்மி'ன் காவலர், அல்ஹாஜ்ஜுல் ஹரமைனிஷ் ஷரீபைன் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப், எம்.பி. அவர்கள் இறைவனின் நாட்டப்படி நிலையற்ற 'தாருல் ஃபனு'விலிருந்து நிலைபெற்ற 'தாருல் பகா' அளவில் சேர்ந்தது பற்றி தமிழ்நாடு ராஜ்ஜிய முஸ்லிம் லீக் செயற் குழுவின் இந்தக் கூட்டம் ஆற்றொணுத் துயர் அடைவதோடு—

இந்த மகத்தான பிரிவைத் தாங்கிக் கொள்ளக்கூடிய 'ஸப்ரெஜமீலே' அவர்களுடைய பிரிவால் வாடும் அனைவருக்கும், குறிப்பாக அவர்களுடைய ஒரே அருமை மைந்தர் ஜனுப் மியாக்கான் சாஹிப் அவர்களுக்கும், அருமை மருமகள் ஜனுபா ஸாபிரா பீவிக்கும், பேரக் குழந்தைகளான தாவூத் மியாக்கான், ஹிப்பத்துல் கரீம் பாத்திமா, நுஸ்ரத் முகையதீன் ஹபீபா—உற்றுர் உறவின ருக்கும், நமக்கும் அருள வேண்டுமென 'துஆச்' செய்வதுடன்—

நம் அருமைத் தலைவர் அவர்களுடைய புனித சேவைகளையும், தியாகத்தையும் பொருந்திக் கொண்டு நல்லடியார்கள் கூட்டத்தில் சேர்த்து அழகிய நிலையான சன்மானத்தை அளித்தருளுமாறு கருணைமிக்க, அருள் மேவிய அல்லாஹ்வின் திருச் சந்நிதானத்திலே கதறிக் கண்ணீர் விட்டுக் கையேந்திப் பிரார்த்திக்கிறது.''

நன்றி ''அறமுரசு'' நாளிதழ் 8-4-72

# லோக் சபையில் K. T. M. அனுதாபத் தீர்மானம்

*[தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக்கின் பொதுச் செயலாளராகத் தங்களது வாழ்நாள் முழுவதும் பணிபுரிந்த K. T. M. அஹமது இப்ருஹீம் சாகிப் அவர்கள் 30-1-70 அன்று திருநெல்வேலி பேட்டையிலுள்ள தங்களது இல்லத்தில் வைத்து காலமானார்கள். அரசியல் நிர்ணய சபையிலும் தற்காலிகப் பார்லிமெண்டிலும் உறுப்பினராகச் சேவை புரிந்த அன்னாருக்கு 25-2-70 அன்று லோக் சபை அஞ்சலி செலுத்தியது. அதன் விபரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.]*

### திரு. சபாநாயகர்:-

தமிழ்நாட்டிலுள்ள திருநெல்வேலி பேட்டையிலிருக்கும் K. T. M. அஹமது இப்ருகீம் என்ற முன்னாள் உறுப்பினர், 1970-ம் ஆண்டு ஜனவரி 30ம் தேதியன்று தம்முடைய 72 வது வயதில் மரணமடைந்த செய்தியை மிக்க வருத்தத்துடன் இந்த அவைக்கு தெரியப்படுத்துகிறேன்.

நண்பரின் மறைவு குறித்து எனது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக இந்த அவையின் உறுப்பினரும், அன்னாரது சகோதரருமாகிய திரு. M. முகம்மது இஸ்மாயீல் அவர்களுக்கு என்னுடைய தனிப்பட்ட ஆழ்ந்த அனுதாபத்தையும் மற்றும் வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

### பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி

அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்களின் திருக்கூட்டம் கொஞ்சங், கொஞ்சமாகக் கரைந்து கொண்டே செல்கிறது. ஸ்ரீ அகமது இப்ருகீமுடைய மறைவு இந்த வேதனையான உண்மையைத்தான் நமக்கு நினைவூட்டுகிறது. அரசியல் சாசனத்தை தயாரித்தவர்களை ஞாபகப்படுத்தும் பொழுது, நமது நினைவுக்கு பிரபலமான பெயர்கள் பல பளிச்சிடுகின்றன என்றாலும், அதிகம் பிரபல்யம் அடையாதவர்களும் கூட, அந்த சாசனத்தை உருவாக்குவதில் தங்களது கடமையைச் செய்துதான் இருப்பார்கள். திரு. அஹமது இப்ருகீம் அரசியல் நிர்ணய சபையில் இறுதி வரை உறுப்பினராக அங்கம் வகித்துள்ளார்.

திரு. அஹமது இப்ருகீமை எனக்கு நேரடியாகத் தெரியாது; பரிச்சயமில்லை. ஆனால் சென்னை மாகாண சட்ட மன்றங்களில் அவர் மிகவும் சுறுசுறுப்பாக இயங்கினார் என்று நான் கேள்விப்பட்டுள்ளேன்; முஸ்லீம் லீக் இயக்கத்திலும் அவர் தீவிர பங்கு கொண்டிருந்தார் என்றும் அறிய முடிகிறது. மேலும் பல கல்வி நிறுவனங்களிலும் அவர் ஈடுபாடு கொண்டிருந்தார். தமிழ்நாட்டிலுள்ள கலாச்சார ஸ்தாபனங்களுடனும் அவருக்குத் தொடர்பு இருந்துள்ளது.

இந்த அவையினுடைய ஆழ்ந்த அனுதாபத்தையும், வருத்தத்தையும் அன்னாருடைய குடும்பத்திற்கு தெரிவிக்க வேண்டும் என்று நான் இந்த அவையைக் கேட்டுக் கொள்கிறேன்.

### டாக்டர் ராம்சுபாக்சிங் (எதிர்க்கட்சித்தலைவர்)

அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்களில் ஒருவரான திரு. அஹமது இப்ருகீம் இறந்து விட்ட செய்தியைக் கேட்டு நாம் மிகுந்த அதிர்ச்சியில் உள்ளோம். அரசியல் சாசனம் என்பது நம் நாட்டினுடைய உயிர்நாடி போன்றது; அதைச் சுற்றித்தான் நமது நடவடிக்கைகள் அனைத்தும் இயங்கி வருகின்றன. அப்படிப்பட்ட சட்டத் தொகுப்பை உருவாக்கிக் கொடுப்பதில் பங்கு பெற்றவர் என்ற ரீதியில் பார்க்கும்பொழுது இந்த நாட்டிற்கு அவர் சிறந்த தொண்டாற்றியுள்ளார் என்றே சொல்லலாம். அது ஒரு பெரிய சமுதாய சேவை என்பதில் ஐயமில்லை.

இச்சந்தர்ப்பத்திலே என்னுடைய ஆழ்ந்த வருத்தத்தையும், துக்கத்தையும் அன்னாரது குடும்பத்திற்கு மட்டுமின்றி நம்மோடு இங்கே அமர்ந்திருக்கின்ற அன்னாருடைய சகோதரர் திரு. முகம்மது இஸ்மாயிலுக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். அக்குடும்பம் மிகவும் பிரபலமானது. அரசியல் நிர்ணய சபையில் அஹமது இப்ருகீம் இருந்தார். அவருடைய சகோதரர் இங்கே நம்மோடு உறுப்பினராக இருக்கிறார்.

### ஜனாப் இப்ருகீம் சுலைமான் சேட்

பிரதம மந்திரியும், எதிர்க்கட்சித் தலைவரும் தெரிவித்த அனுதாப எண்ணங்களுடன் எனது குரலையும் நான் இணைத்துக் கொள்கிறேன். ஜனாப் K. T. M. அஹமது இப்ருகீம் சாகிப் கடந்த மாதம் 30 ம் தேதி தனது சொந்த ஊரான திருநெல்வேலி பேட்டையில் வைத்து அகால மரணம் அடைந்துள்ளார்கள்.

ஜனாப் K. T. M. அஹமது இப்ருகீம் மிக்க திறமை சாலி; அரிய பண்புகளையுடையவர். இந் நாட்டிற்கும், சமுதாயத்திற்கும் கடந்த 50

ஆண்டுகளாக அவர் சேவை செய்துள்ளார். தனிப் பட்ட முறையில் அவர்களை நீண்ட நாட்களாக நான் அறிவேன். மாணவப் பருவத்திலிருந்தே இந் நாட்டின் விடுதலைப்போராட்டத்தில் அவர்ஈடுபாடு கொண்டுள்ளார். கிலாபத் இயக்கத்தில் பங்கு கொண்டுள்ளார். காந்திஜீயினல் பரப்பப்பட்ட செய்தியை நாடு முழுவதும் எடுத்துச் செல்வதில் அவர் முன்னணியில் நின்ருர். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையிலும் நாட்டின் சுதந்திரத்திலும் அவர் திடமான நம்பிக்கை வைத்திருந்தார். அதற்காக அரும்பாடுபடவும் செய்தார்.

1946 முதல் 1950 வரை இந்திய அரசியல் நிர்ணயசபையில் உறுப்பினராகவும் 1946 முதல் 1952 வரை சென்னை மாகாண சட்ட மேலவை யின் உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார். அரசியலமைப்பு தயாரிக்கப்படும் பொழுது அவர் தீவிர ஈடுபாடு எடுத்துக் கொண்டுள்ளார். அடிப் படை உரிமைகள், நீதிமன்றங்களின் சுதந்திரம், சிறுபான்மையினருடையவும், பிற்படுத்தப்பட்டோ ருடையவும் உரிமைகள் பற்றிய விஷயங்கள் அந்த அவையில் விவாதிக்கப்பட்ட சமயம் அவர் தமது கருத்துக்களை ஆணித்தரமாகத் தெரிவித்துள்ளார். தமிழ்நாடு முஸ்லிம்லீக்கின் பொதுச் செயலாளராக 40 ஆண்டுகள் அவர் பணியாற்றியுள்ளார். மக்கள் மத்தியில் அவர் மிக்க நெருக்கமாகத் தொடர்பு வைத்திருந்தார் அண்ணமலை பல்கலைக்கழக செனட் உறுப்பினராகவும் அவர் செயலாற்றியுள்ளார். மதருஸ் மாகாண பாட புத்தகக் கமிட்டி உறுப்பினராகவும் இருந்து அரிய சேவைகளையும் புரிந்துள்ளார். இவையெல்லாம் அஹமது இப்ருகீம் சாகிபுடைய அரிய பெரிய சேவைகளாகும். அவருடைய இழப்பால் வாடும் அன்ஞரது குடும்பத்திற்கும் அன்ஞரது சகோதரரும் இந்த அவை முஸ்லிம்லீக் கட்சி தலைவருமான ஜனப் முகம்மது இஸ்மாயில் சாகிப் அவர்களுக்கும், முஸ்லிம் லீக் கட்சி சார்பாக எங்களுடைய ஆழ்ந்த அனுதாபங்களையும், சொல் லொணு வருத்தத்தையும் தெரிவித்துக் கொள் கிறேன். அன்ஞரது ஆன்மா சாந்தி அடைவதாக!

## திரு. P. ராமமூர்த்தி (மதுரை) :

திரு. அஹமது இப்ருகீமை சென்னையில் வைத்து பல வருடங்களாகவே நான் அறிவேன். சமுதாய காரியங்களில் அவருக்கு ஈடுபாடு அதிகம். பழகுவதற்கு இனிமையான மனிதர். அரசியல் ஒரு புறம் இருந்தாலும், சமுதாயப் பிரச்சனை களிலும், மக்களை வாட்டும் பிரச்சனைகளிலும் அவர் அதிக கவனம் செலுத்தினர். தம்மாலான உதவிகளை அவர் புரிந்தார்; மக்கள் துயரப்படு வதை கண்டால் ஓடோடிச் சென்று அவர்களுக்கு வேண்டிய உதவிகளை அவர் செய்வார். எனவே, அவரது மறைவு தனிப்பட்ட முறையில் எனக்கு ஏற்பட்ட பேரிழப்பாகும். நானும், நான் சார்ந் திருக்கும் கட்சியின் சார்பாகவும் ஆழ்ந்த அனு தாபத்தை அன்ஞரது குடும்பத்திற்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

## திரு. ஹேம் பருவா (அஸ்ஸாம்) :

நான் சார்ந்திருக்கும் P.S.P. கட்சியின் சார்பில் அஹமது இப்ருஹிமின் மறைவுக்கு அனு தாபங்களை தெரிவித்துக் கொள்கிறேன். அன்ஞரது குடும்பத்தினருக்கு எங்களது அனுதாபச் செய்தி யையும் எத்திவைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

## திரு. S. கந்தப்பன் (தமிழ்நாடு)

மறைந்த உறுப்பினருடைய குடும்பத்திற்கும் குறிப்பாக திரு. முகம்மது இஸ்மாயில் அவர் களுக்கும் திராவிட முன்னேற்ற கழகத்தின் சார் பாக ஆழ்ந்த அனுதாபத்தையும், வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

## திரு. ரங்கா (ஆந்திரபிரதேசம்) :

திரு. அஹமது இப்ருஹீம் மறைவிற்காக இந்த அவையில் தெரிவிக்கப்பட்ட அனுதா பத்தில் என்னையும் நான்இணைத்துக் கொள்கிறேன்.

திரு. வாஜ்பாயி தமது பேச்சில், அரசியல் நிர்ணயசபைஉறுப்பினர் என்றமுறையில் என்றென் றும் நினைவுகூரப்படுவார் என்ருர். அத்துடன்,இந்த அவையில் உறுப்பினராக இருக்கும் ஸ்ரீ இஸ்மாயி லுடைய உடன் பிறந்த சகோதரராக இருப்பதால் நமது அனுதாபங்கள் அவருக்கு இயற்கையாகவே செல்கின்றன. அக்குடும்பத்தினருக்குத் தெரிவிக்கப்படும் இரங்கலில் நான் என்னையும் இணைத்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ ரபிராய் (ஒரிஸா) ஸ்ரீ அடல் பீஹாரி வாஜ்பாயி (உத்தரபிரதேசம்) ஸ்ரீ ரகுவீர் சிங் சாஸ்திரி ஆகிய உறுப்பினர்களும் தங்களது அனு தாபங்களை ஹிந்திமொழியில் தெரிவித்துக் கொண்டனர்.

பின்னர் ஒரு நிமிட நேரம் அவையில் மௌனம் அனுஷ்டிக்கப்பட்டது.

மர்ஹூம் K. T. M. அவர்களுக்கு லோக் சபையில் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்படும் சமயம்தான், திருமதி இந்திராகாந்திக்கு, இறந்து போனவர் காயிதே மில்லத் அவர்களுடைய உடன் பிறந்த சகோதரர் என்ற விஷயம் தெரிய வந்திருக்கிறது. உடனேயே தமது அனுதாபங்களை ஒரு துண்டுச் சீட்டில் வடித்து அதை தலைவரவர்களிடம் சேர்ப்பிக்கும்படி லோக்சபை சிப்பந்தி மூலம் கொடுத்து விட்டார். அக்கடிதம் இங்கு பிரசுரிக்கப்பட்டுள்ளது. அக்கடித வாசகம் வருமாறு:-

25-2-70

LOK SABEA 25.2.70

Dear Shri Ismail,

I did not know that Janab Ibrahim Sahib was your brother. I can well imagine the shock and sorrow which his passing away must have caused you.

May I convey my deep & sincere

2 LOK SABEA

Sympathy & condolences to you and your family

Yours sincerely

Indira Gandhi

''அன்புள்ள ஸ்ரீ இஸ்மாயிலுக்கு, ஜனாப் இப்ராகீம் சாகிப் தங்களுடைய சகோதரர் என்பதை நான் அறிந்திருக்கவில்லை. அவருடைய மறைவு காரணமாகத் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் அதிர்ச்சியையும் வருத்தத்தையும் என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. உங்களுக்கும் உங்களது குடும்பத்தினருக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்களையும் துக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள

இந்திரா காந்தி

## பொன் மொழி

'' ஒன்று பட்டால் அற்புதங்களை சாதிக்கலாம். ஒற்றுமை என்பது ஆண்டவனின் சட்டம். நமக்கிடையில் ஒற்றுமையை குலைப்பவர்கள் கொலை செய்பவர்களை விடக் கேடு கெட்டவர்கள்''

**காயிதே மில்லத்**

# அன்னையின் மறைவிற்கு நமது அனுதாபங்கள்

காயிதே மில்லத் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் அன்னை ஜமால் ஹமீதா பீவி அவர்கள் 27-8-62 வெள்ளிக்கிழமை மாலை [சனி இரவு] 11-30 மணிக்கு ஸ்டான்லி அரசாங்க ஆஸ்பத்திரியில் வைத்து இறைவனின் நாட்டப்படி உயிர் நீத்தார்கள். இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன். அவ்வமயம் காயிதே மில்லத் அவர்களும் மற்றும் அன்னாரது உற்றார் உறவினர்களும் உடனிருந்தார்கள். சிறிது நாட்களாக நோய் வாய்ப்பட்டிருந்த அன்னை அவர்கள் 8-7-62 அன்று ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டார்கள்.

28-8-62 அன்று மாலை 5-மணிக்குப் பல்லாவரம் ஜும்மா மஸ்ஜிதில் ஜனாஸாதொழுகை நடைபெற்ற பின், ஈத்கா பள்ளி அடக்கஸ்தலத்தில் அவர்களது சடலம் நல்லடக்கம் செய்யப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் இந்த இறுதி மரியாதையில் பங்கு பெற்று தங்களுடைய அனுதாபத்தை தெரிவித்துக் கொண்டார்கள். மர்ஹூமா அவர்களுடைய ஆன்ம சாந்திக்காகவும் மறு உலகில் அவர்களுக்கு நற்பதவி கிடைக்க வேண்டுமென்பதற்காகவும் கூட்டத்தினரனைவரும் உளமாரப் பிரார்த்தனை புரிந்தது மனதை உருக்கும் காட்சியாக இருந்தது.

## வாழ்க்கை வரலாறு :

அன்னை ஜமால் ஹமீதா பீவி அவர்கள் 1910-ம் ஆண்டு வாக்கில் சென்னையில் பிறந்தார்கள். முன்னாள் சென்னை முஸ்லீம் லீக் தலைவரும் பிரபல வர்த்தகருமான ஹாஜி எம். ஜமால் முஹம்மது சாஹிபு அவர்களுடைய உடன்பிறந்த சகோதரர் ஜனாப் முஹம்மது அப்துல்லாஹ் சாஹிப் அவர்களின் புத்திரிதான் அன்னை ஹமீதா பீவி.

தாய்மொழியான தமிழில் அன்னை அவர்களுக்கு நல்ல பாண்டித்தியம் உண்டு. சீறாப் புராணம், மஸ்தான் சாஹிபு பாடல், மெஞ்ஞானப் பாக்கள் மற்றும் இஸ்லாமிய தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் இவர்களுக்கு நல்ல பரிச்சியம் உண்டு. சிறந்த தமிழ் பழமொழிகள் ஏராளமானவை அன்னாருக்குத் தளபாடம். சாதாரணமாக சுமார் முப்பதுநாற்பது பழமொழிகளுக்குக் குறையாமல் தங்களுடைய அன்றாட வாழ்க்கையில் தங்களையும் அறியாமலேயே அவர்கள் உபயோகப்படுத்தி வந்ததை சுவைமிக்கதொரு அம்சம் எனலாம்.

ஏதாவது ஒரு விஷயம் குறித்து வீட்டினுள் ''சீரியஸாக''ப் பேச்சு நடந்து கொண்டிருக்கும். அச்சமயம் அப்பிரச்சினைக்கு ஏற்றவாறு ஒரு தமிழ் பழமொழியை அன்னை அவர்கள் தூக்கிப் போடுவார்கள்! அங்குள்ளவர்களுக்கு அப்பொழுது அவசியம் தேவைப்படும் நிதானமும் தெம்பும் பிறந்து விடும்! தயா மன்ஸிலில் இத்தகைய நிகழ்ச்சிகள் சர்வ சாதாரணம். உர்தூ மொழியில் சரளமாகப் பேசும் திறமையும் அன்னை அவர்களுக்கு உண்டு.

## திருமணம் :

1923-ம் ஆண்டில் தஞ்சை மாவட்டம் ஆடுதுறையில் வைத்து அன்னை ஹமீதா பீவி அவர்களுக்கும் காயிதே மில்லத் அவர்களுக்கும் திருமணம் நடந்தேறியது. அப்போது காயிதே மில்லத் அவர்களுக்கு வயது முப்பது பூர்த்தியாகி இருந்தது. அவர்கள் இருவரும் லட்சியத் தம்பதிகளாக வாழ்ந்து காட்டிய வரலாறு முஸ்லிம் லீக் முன்னணி வீரர்கள் அனைவருக்கும் நன்கு தெரிந்ததே. அடிக்கடி உடல் நலமின்மையால் அவதிப்படும் அன்னை அவர்கள், காயிதே மில்லத் அவர்களின் உடல் நலனைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார்கள். தலைவர் அவர்களை அவர்களது உடம்பைக் கவனிக்கும்படிச் செய்வதே ஒரு தனிக்கலை. அக்கலையில் அன்னைஅவர்கள்கை தேர்ந்தவர்களே. இத்துறையில் அவர்கள் தலைவர் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் நஷ்டம் ஈடுசெய்ய முடியாததாகும்.

அன்னை ஹமீதா பீவி அவர்கள் ஈன்றெடுத்த ஒரே புத்திரர் ஜனாப் ஜே. எம். மியாக்கான் பி. ஏ. ஆவார். இவர் 1925-ம் ஆண்டில் ஆடுதுறையில் பிறந்தார். இவருக்கு ஒரு மகனும் இரு குமாரத்திகளும் இருக்கிறார்கள்.

அன்னை ஹமீதா பீவி அவர்களது பிரிவின் காரணமாக அளவிட முடியாத துயரத்தில் ஆழ்ந்திருக்கும் உற்றார் உறவினர் அனைவருக்கும் ''உரிமைக்குரல்'' பணிமனையினர் தங்களுடைய இதயத் தாமரையிலிருந்து எழும் ஆழ்ந்த அனுதாபத்தை சமர்ப்பித்துக் கொள்கின்றனர்.

எல்லாம் வல்ல இறைவன், எந்த நஷ்டத்தையும் தாங்கும் மனோ வலிமையையும், லட்சியத்தை நோக்கிச் செல்லும் உறுதியையும் திறமையையும் நம்மனைவருக்கும் தந்தருள்வானாக!

—6-8-62 உரிமைக்குரல்

# எந்தாயே.........!

அன்னை தாயே ஹமீதாம்மா !
ஆருயிர் பிரிந்தே இன்று சேர்ந்தீர் !
நின்னை நினைத்தே ஏங்குகின்றோம்
நீண்ட துயிலில் ஆழ்ந்தீரே !
கண்ணை இமையே காப்பதுபோல்
கௌமின் ஒளியைக் காத்தீரே !
அன்னை உம்மைப் போலவொரு
அன்பின் உருவைக் காண்போமோ !

எங்கள் தலைவர் ஏந்தலவர்
எழுச்சிக்குரலின் தந்தையவர் ;
தங்குல் அகற்றிட ஊடுருவி ,
கௌமின் ஒளியை ஏற்றிவைத்தார் !
சிங்கக்குரலோர் இளையோரின்
சிந்தை கவர்ந்த தலைவோரும்
எங்கள் காயிதே மில்லத்தின்
எண்ணம் ஈர்த்த எந்தாயே !

சமூக உயர்வே நும் நினைவு
சமய வாழ்வே உமதுணர்வு
அமுத மொழியே பேசிநிதம்
அன்பைப் பொழிந்தீர் மாந்தரிடம்
குமுத வாயைத் திறந்திட்டால்
குவியும் பழமொழிக் கோவைகளும்
நமுனு வாகத் திகழ்ந்திட்டீர் ;
நாயகர் பேணி வாழ்ந்திட்டீர் !

செல்வர் வீட்டில் பிறந்தாலும்
சீமான் மகளாய் வளர்ந்தாலும்
கல்வி கேள்வி ஞானங்களில்
கவிதை சீறாப் புராணங்களில்
செல்வி உமக்கோர் பிடிப்பதிலே
செப்பிச் செப்பி வருவோர்க்கே
அள்ளி யள்ளி வழங்கிடுவீர்
அறிவாம் உரைகள் தந்திடுவீர் !

எண்ணி யெண்ணி உம்முறையை
இதயம் ஏங்கி வாடுதம்மா !
பின்னிப் பின்னி உம் நினைவே
பிரியா திருக்கப் பிரிந்தீரே !
பண்பிற் கனியாய்ச் சிறந்தீரே
பாசத் துணையாய் வாழ்ந்தீரே
பெண்ணின் பெருமை சிறந்திடவே
பேசிடும் தாயே மறைந்தீரே !

குடும்பப் பாசம் மிக்கோராய்
குலத்தில் நேசம் வைத்தோராய்
கொடுப்பீர் உதவி வருவோர்க்கு
குறையே உற்ற உறவோர்க்கு
எடுத்தே தருவீர் பொருளெல்லாம்
ஈகைத் தாயே மறைந்தீரே !
கொடுப்போர் எமக்கினி யாரம்மா
கொடையின் தாயே மறைந்தீரே !

தொழுகைப்பாயே இருப்பாக
துவளும் மணியே கையாக
பொழுதே கழித்தீர் சிறப்பாக
பொன்று இறையின் நினைவாக
தழுவும் துன்பைக் களைந்தீரே
தாயின் அன்பைப் பெய்தீரே
துளிர்க்கும் எங்கள் கண்ணீரைத்
துடைக்கும் தாயே மறைந்தீரே !

பொதிகை ஹமீது
—20-8-1962 உரிமைக்குரல்

ஃ

## பம்பாய் மாநகராட்சியின் இரங்கல் தீர்மானம்

காயிதே மில்லத் அவர்கள் மரணமடைந்ததற்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்று பம்பாய் மாநகராட்சி கூட்டத்தில் 1972 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 10 ம் தேதியன்று ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. சிறந்த பாராளுமன்ற வாதியாகவும் இந்நாட்டு விடுதலைப் போராட்டத்தில் தீவிரப் பங்கு கொண்டவருமான காயிதே மில்லத்திற்கு மரியாதை செலுத்தும் வகையில் இந்த இரங்கல் தீர்மானம் நிறைவேற்றப்படுவதாக தீர்மான வாசகம் அறிவித்துள்ளது. அன்னாருக்கு மரியாதை செலுத்தும் வகையில், மாநகராட்சியின் அன்றையக் கூட்டம் அத்துடன் ஒத்தி வைக்கப்பட்டது.

மேற்கூறிய இரங்கல் செய்தியை, பம்பாய் மாநகராட்சியின் செயலாளர் திரு P. C. பாண்டே 7-8-72 அன்று காயிதே மில்லத் குடும்பத்தினருக்கு எழுதிய கடிதத்தில் விவரித்துள்ளார்.

**...had rendered very valuable services to the country & in whose death the country has lost an eminent parliamentarian & a staunch freedom fighter.**

## எம். ஜி. ஆர். நடந்தே சென்றார்

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்கள் 5-4-1972 ம் ஆண்டு அதிகாலையில் இறைவனின் நாட்டப்படி இன்னுயிர் நீத்தார்கள். அவர்களது பூத உடல் ஏப்ரல் ஐந்தாம் தேதி காலையில் இருந்து ராயப்பேட்டையிலுள்ள புதுக் கல்லூரியில் பொதுமக்கள் பார்வைக்காக வைக்கப்பட்டது.

மாலையில் தலைவரவர்களது சடலம் திருவல்லிக்கேணி பெரிய மஸ்ஜிதுக்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு நல்லடக்கம் செய்யப்பட்டது. இறுதி ஊர்வலத்தில் லட்சம் பேர் கலந்து கொண்டார்கள் என அன்றைய ''தினத்தந்தி'' பத்திரிகை செய்தி வெளியிட்டிருந்தது. அன்றையத் தினம் திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொருளாளராகப் பணியாற்றிய எம். ஜி. ஆர். அவர்கள் இறுதி ஊர்வலத்தில் நடந்தே சென்றார் என்ற தகவலையும் அப்பத்திரிக்கை வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

முன்னாள் நீர்ப்பாசன அமைச்சராகப் பணியாற்றிய யா. சை. மு. யூசப் அவர்கள் வெளியிட்டுள்ள ''இஸ்லாமிய வாக்காளர்கள் சிந்தனைக்கு'' என்ற பிரசுரத்திலும் அதே தகவல் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது.

''நாடு போற்றும் காயிதே மில்லத் அவர்களின் இறுதி ஊர்வலத்தில், துவக்கம் முதல் இறுதி வரை நடந்து சென்று பங்கேற்ற ஒரே திராவிடர் தலைவர், புரட்சித் தலைவர் அவர்கள், அவருக்குக் காட்டியுள்ள நன்றி மரியாதையாகும்'' (பக்கம்-3)

1967, 1971 ம் ஆண்டுகளில் தமிழ்நாடு சட்டமன்றத்திற்கு நடைபெற்ற பொதுத் தேர்தல்களில், பல்லாவரம் சட்டமன்றத் தொகுதியில் இருந்து தி. மு. க. சார்பாக எம். ஜி. ஆர். அவர்கள் போட்டியிட்டார் என்பதும், குரோம்பேட்டை நகர், பல்லாவரம் தொகுதிக்குள் அடங்கியது என்பதும் அனைவரும் அறிந்ததே. மேற்கூறிய இரு பொதுத் தேர்தல்களிலும் தோழமைக் கட்சியான தி. மு. க. வையே முஸ்லிம் லீக் ஆதரித்தது. புரட்சித்தலைவர் அவர்களே தமது நண்பர்களிடம் காயிதே மில்லத் அவர்கள் தமக்குத்தான் வாக்களித்தார்கள் என பெருமையோடு சொல்லிக் கொள்வதுண்டு!

இந்திய அரசியலமைப்பு மூலம் தாங்கள் பெற்ற வாக்குரிமையை ஒவ்வொரு பொதுத் தேர்தலிலும் காயிதே மில்லத் பயன்படுத்தத் தவறவில்லை என்பது நினைவு கூரத்தக்கது.

தினத் தந்தி
DAILY THANTHI

நெல்லை (6—4—72) வியாழக்கிழமை || விரோதிகிருது ஸு பங்குனி மீ 24வ ஹிஜ்ரி 1392 ஸபர் 21 || ஞாயிறு 20 காசு மற்ற நாட்கள் 18 காசு  தபால் பெட்டி

# "காயிதேமில்லத்" இஸ்மாயில் சாகிப்

# உடல் அடக்கம்

# சென்னையில் நடந்தது

முஸ்லிம் லீக் தலைவர் 'காயிதே மில்லத்' இஸ்மாயில் சாகிப் உடல், நேற்று சென்னையில் அடக்கம் செய்யப்பட்டது. இறுதி ஊர்வலத்தில், லட்சக்கணக்கான மக்கள் கலந்து கொண்டார்கள்.

சென்னை, ஏப். 6— உடல் நலம் இல்லாமல் சென்னை ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் சிகிச்சைபெற்று வந்த "காயிதே மில்லத்" இஸ்மாயில் சாகிப், நேற்றுஅதிகாலை 1-15 மணிக்கு மரணம் அடைந்தார்.

உயிர் பிரியும்போது, அவருடைய ஒரே மகன் மியாகான், மருமகள் மற்றும் உறவினர்கள் அருகே இருந்தனர்.

## இறுதி மரியாதை

இஸ்மாயில் சாகிப்பின் உடல் சென்னை குரோம்பேட்டையில் உள்ள அவர் வீட்டுக்கு கொண்டு போகப்பட்டது

பிறகு, காலை 7 மணிக்கு பொது மக்கள் இறுதிமரியாதை செலுத்துவதற்கு செலுத்தினர்.

## தொழுகை

மாலை 4 மணிக்கு, புதுக் கல்லூரியில் உள்ள மசூதிக்கு இஸ்மாயில் சாகிப் உடல் எடுத்துச் செல்லப்பட்டது.

அங்கு தொழுகை நடைபெற்றது.

## ஊர்வலம்

பிறகு, இறுதி ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலம் புறப்படுவதற்கு முன், முதல்-அமைச்சர் கருணாநிதியும், மற்ற அமைச்சர்களும் வந்து இறுதிமரியாதை செலுத்தினார்கள்.

இஸ்மாயில்சாகிப் உடல் ஒரு பெட்டியில் வைக்கப்பட்டு, மோட்டாரில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. லீக் பிரமுகர்கள் நடந்து சென்றனர்.

தி.மு.க. பொருளாளர் எம்.ஜி. ஆரும் நடந்து போனார்.

ஊர்வலத்தில் போனவர்கள் எண்ணிக்கை லட்சத்துக்குமேல் இருக்கும்என்று மதிப்பிடப்படுகிறது.

ரோட்டின் இருபுறமும் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் திரளாக கூடிநின்றனர். பலர், கட்டிடங்கள் மீதும், மரங்கள் மீதும் ஏறிநின்றனர்.

## கேரள மந்திரிகள்

இறுதி ஊர்வலத்தில் கலந்து கொள்வதற்கு என்றே கேரள கல்வி மந்திரி முகமதுகோயா, ஊராட்சி மந்திரி அவுக்கர்குட்டிநகா, பொதுப் பணி மந்திரி திவாகரன், ரெவின்யூ மந்திரி பேபி ஜான், சபாநாயகர் மொகிதின்குட்டி ஆகியோர விமானம் மூலம் நேற்று சென்னைக்கு விரைந்தனர்.

அவர்களும இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். பாண்டிச்சேரி மந்திரி ராமசாமியும் இரவு 7-15 மணிக்கு அடைந்தது.

அங்கு இஸ்மாயில்சாகிப் உடல், முஸ்லிம் மத சம்பிரதாயப்படி அடக்கம் செய்யப்பட்டது.

அடக்கம் நடந்தபோது, கூடி இருந்தவர்கள், "அல்லாகூ-அக்பர்" என்று குரல் எழுப்பினர்கள்.

(அனுதாப கூட்டத்தில் தலைவர்கள் பேச்சு 2-ம் பக்கம்.)

# அரசியல் தலைவர்களின் மதிப்பீட்டில் காயிதே மில்லத்

நெருக்கடியான நேரங்களில் தமது தார்மீக ஆதரவைத் தந்து மத்திய ஆட்சியைப் பலப் படுத்தத் தவறவேயில்லை இஸ்மாயில் சாஹிபு''

(முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி)

''இந்த நாடும் நாமும் வாழ, காயிதே மில்லத்தின் எளிமையையும் ஒழுக்கத்தையும் அரசியல் வாதிகள் கடைப்பிடிக்க வேண்டும்''

(சீதக்காதி நகர் கூட்டத்தில் பெருந்தலைவர் காமராஜர்)

''மது விலக்கு தளர்த்தப்பட்ட பொழுது அதனை எதிர்த்து தமது உடல் நலம், வயது ஆகிய வைகளைக் கூடப் பொருட் படுத்தாது பிரச் சாரம் செய்த ஒன்றே போதும், காயிதே மில்லத் இந்த நாட்டு மக்கள் மீது கொண்டுள்ள பாசத்தை அறிய''

(முன்னாள் தமிழக முதல்வர் திரு எம். பக்தவத்சலம், பிறந்தநாள் செய்திக் குறிப்பில்)

''இந்த நாட்டிற்கு ஜனாதிபதியாக யாரை நியமிக்கலாம் என்ற கேள்வி எழும் பொழுது, என் மனம் காயிதே மில்லத்தையே நினைக்கும்''

(சென்னை S. I. A. A. மைதானத்தில் நடைபெற்ற முஸ்லீம் லீக் பொதுக் கூட்டத்தில் டாக்டர் கலைஞர் கருணாநிதி கூறியது.)

''காயிதே மில்லத்தின் தேசப் பற்றினை யார் குறை கூறினாலும் சரி அப்படிக் கூறுபவர்களை, மன நோய் மருத்துவ மனைக்குத்தான் அனுப்ப வேண்டும்''

தொழிலாளர் தலைவர்.
A. S. K. அய்யங்கார்.

''கேரள முஸ்லிம்களின் வெற்றியின் ரகசியம், குரோம்பேட்டை சன்யாசி காயிதே மில்லத் தான்''

(கோவை முஸ்லிம் லீக் மாநாட்டில் பாபக்கி தங்ஙள்)

''நமக்கெல்லாம் பெருமை மிக்க பேறு ஒன்று உண்டு என்றால், அப்பேறு காயிதே மில்லத் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்தோம் என்பது தான்''

(தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் தலைவர் சிராஜுல் மில்லத் A. K. A. அப்துல்ஸமது சாகிப் M.P. அவர்கள்.)

ஜனாதிபதி வி.வி. கிரி கூறியது:

''என்னுடைய நல்ல நண்பர் முகமது இஸ்மாயில் மரணம் அடைந்த செய்தி கேட்டு வருத்தம் அடைந்தேன்.

கடந்த 40 ஆண்டுகளாக அவரை எனக்கு தெரியும். நாட்டின் ஒற்றுமைக்காக பாடுபட்டார். எல்லோருடைய அன்பையும் பெற்றார்.

அவருடைய மரணம் நாட்டுக்குபெரிய இழப் பாகும். அவருடைய குடும்பத்தினருக்கு என்னுடைய ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.''

(''தினத்தந்தி'' 6-4-72 வியாழன் நெல்லை பதிப்பு)

கேரள முதல்-மந்திரி அச்சுத மேனன் கூறியது;

''அரசியல், சமுதாய, தொண்டர் ஒருவரை இந்த நாடு இழந்து விட்டது. தன் வாழ்நாளின் கடைசி வரை தன் மக்களின் முன்னேற்றத்திற்காக பாடுபட்டார்.''

(''தினத்தந்தி'' நெல்லை 6-4-72 வியாழன்)

திராவிடக் கழக ஸ்தாபகர் தந்தை ஈ. வே. ராமசுவாமி பெரியார் கூறியது;

''பெரியோர்களே, நமக்கு இன்று கஷ்டமான, ஆபத்தான இந்த இழப்பு யார் என்ன செய் தாலும், அரசியலுக்கும், சமுதாயத்துக்கும் ஒரு ஈடு செய்ய முடியாத நஷ்டம்.

இவ்வளவு பெரிய முஸ்லிம் சமுதாயத்திற்கு இம்மாதிரி ஒரு தலைவர் மீண்டும் கிடைப்பது அரிது.''

(''தினத்தந்தி'' 6-4-72 வியாழன் நெல்லை.)

சுதந்திரா கட்சித்தலைவர். ராஜாஜி கூறியது;

''ஒரு சிறந்த அரசியல் தலைவரை இந்தியா இழந்து விட்டது. நல்ல மனிதர்களை எல்லாம் மரணம் நம்மிடம் இருந்து பிரித்துவிடுகிறது. என்னுடைய ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை கொள் கைக்கு முழு ஆதரவு கொடுத்த சிறந்த நண்பரை இழந்து விட்டேன். இஸ்மாயில் சாகிப்பை நான் அதிகம் சந்தித்தது கிடையாது. ஆனால் கொள்கை அளவில் இருவரும் சந்தித்துள்ளோம்.''

(''தினத்தந்தி'' நெல்லை 6-4-72.'' வியாழன்)

ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் காமராஜ் கூறியது;

''என்னுடைய நண்பரை இழந்து விட்டேன். அரசியல் கருத்து வேறுபாடுகள் இருந்தாலும், எல்லோருடனும் அன்பாக பேசிப்பழகுவார்.

(''தினத் தந்தி'' நெல்லை 6-4-72 வியாழன்)

தமிழ் நாடு கவர்னர் கே. கே. ஷா கூறியது.

''இஸ்மாயில் சாகிப் மரணச் செய்தி கேட்டு அதிர்ச்சி அடைந்தேன். நண்பர்களுடன் பழகும் போது அரசியலை கலக்க மாட்டார். நண்பர்களுக்காக எதையும் செய்வார். பொது வாழ்க்கையில் உயர்ந்த இடம் வகித்தார்.''

(''தினத் தந்தி'' நெல்லை 6-4-72 வியாழன்)

# தலைவரைப் பற்றிச் சில நினைவுகள்

கல்கி 9—7—65

## அதிசய வேட்பாளர்!

நம் பொதுத் தேர்தல்கள் கட்சிகளின் கொள்கை அடிப்படையில் நடைபெறுவதில்லை. சாதி, மதம், பணம், மொழி, ராஜ்யம் ஆகிய குறுகிய அடிப்படையிலேயேதான் பெரும்பாலும் வேட்பாளர்களின் தகுதி எடை போடப்படுகிறது.

ஆனால் இதற்கு விதி விலக்காக 1962 ல் ஒரு தேர்தல் நடைபெற்றது.

தமிழ் மாநிலத்தைச் சார்ந்த - தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட - காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் ஸாஹிப் கேரள மாநிலத்தில் மஞ்சேரி பாராளுமன்றத் தொகுதியில் மலையாளம் பேசும் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

இவ்வளவுக்கும் அத்தேர்தல் முடிவடையும் வரை காயிதே மில்லத் அந்தத் தொகுதிக்குச் சென்றதுமில்லை; எந்தக் கூட்டத்திலும் சொற்பொழிவு நிகழ்த்தியதுமில்லை!

## பட்டுமில்லை; பகட்டுமில்லை!

இளம் வயதிலேயே ஆடம்பர வாழ்க்கையை வெறுத்தவர் காயிதே மில்லத் முகம்மது இஸ்மாயில் ஸாஹிப். பகட்டான துணிகளை அவர் அணிவதேயில்லை. திருமணத்தின்போது கண்ணைப் பறிக்கும் வண்ண உடையில் மாப்பிள்ளை காட்சி தருவது வழக்கம். ஆனால் அக்காலத்தில் தீவிர காங்கிரஸ்வாதியாக இருந்த அவர் தம் திருமணத்தின்போது கூடக் கரடு முரடான, எளிய கதராடையே அணிந்திருந்தாராம்.

## பெனிஸிலினும் நாமும்!

ஆங்கிலத்துக்கு எதிராகக் கிளம்பும் கோஷத்தை வன்மையாகக் கண்டிப்பவர் காயிதே மில்லத்.

''ஆங்கிலம் அடிமைத்தனத்தின் அடையாளம் என்கிறார்கள். எடுத்ததற்கெல்லாம் இப்படிச் சொல்வது தாழ்வு மனப்பான்மையாகும். (Inferiority Complex) நாம் சுதந்திர மக்களாக இருக்கும்பொழுது யுக்தப்படி ஓர் அந்நிய நாட்டிலுள்ள நல்லதை எடுத்துக்கொள்வது அடிமைத்தனத்தின் அடையாளமாகாது. அப்படியென்றால் இது எல்லாத் துறைகளிலும் கவனிக்கப்பட வேண்டும். பெனிஸிலின் அந்நியர் கண்டுபிடித்தது தான். அதை நாம் ஏற்றுக் கொள்ள வில்லையா? இது மட்டும் அடிமைப் புத்தி இல்லையா? அப்படிப் பார்த்தால் இன்றுள்ள நவீன விஞ்ஞான சாதனங்கள் எதையும் பயன்படுத்த முடியாது'' என்று தர்க்கரீதியாக எடுத்துக் கூறுகிறார் இஸ்மாயில் ஸாஹிப்.

—''உபைத்''

அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் இஸ்மாயில் ஸாஹிப் அவர்களின் எழுபதாவது பிறந்த தின விழாவில் அறிஞர் அண்ணாதுரை அவருக்குப் பொன்னாடை போர்த்துகிறார்.



கண்ணியத்தின் காவலர் அல்ஹாஜ் காயிதே மில்லத்(ரஹ்) அவர்கள் காலமான பின், 14-5-72 அன்று சென்னையில் நடைபெற்ற யூனியன் லீக் செயற்குழுக் கூட்டத்தில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவராக சங்கைக்குரிய தங்ஙள் அவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அன்றிலிருந்து, இறுதி வரை அப் பதவிப் பொறுப்பிற்குரிய கடமைகளை செவ்வனே நிறைவேற்றி, சமுதாயத்தின் இதயத்திலும், எண்ணத்திலும் ஏற்றம் பெற்று வந்தார்கள்.

அல்ஹாஜ் பாபகி தங்ஙள் அவர்களின் குடும்பம் மிகப் பெரியக் குடும்பமாகும். அவர்களுக்கு மூன்று மனைவிகளும் இருபது மக்களும் உள்ளனர்.

மூத்த மனைவியாரின் பெயர் கதீஜா பீவி இரண்டாவது மனைவியாரின் பெயர் ஆயிஷா பீவி மூன்றுவது மனைவியாரின் பெயர் பாத்திமா பீவி.

கொயிலாண்டியிலுள்ள முதல் மனைவியார் கதீஜா பீவிக்கு இரு பெண் மக்களும் ஐந்து ஆண் மக்களும் உள்ளனர். சாலியத்திலுள்ள இரண்டாம் மனைவியார் ஆயிஷா பீவிக்கு நான்கு பெண் மக்களும் ஆறு ஆண் மக்களும்; புதியங்ஙாடியிலுள்ள மூன்றும் மனைவியாரான பாத்திமா பீவிக்கு ஒரு பெண் குழந்தையும் இரு ஆண் மக்களும் உள்ளனர்.

ஹாமித், அப்துல் காதர், ஹுஸைன், ஸலாஹுத்தீன், அபூபக்கர், முகமது, அப்துல்லா, இப்ராஹீம் ஸையிதலவி, ஹஸன், அஹமது, ஹம்ஸக் கோயா, ஸையதுமர், ஆகிய 13 ஆண் மக்களும் ஸைனப், உம்மு குல்ஸூம், ருக்கியா, பாத்திமா, மரியம், கதீஜா, நபீஸா ஆகிய ஏழு பெண் மக்களும் மர்ஹூம் தங்ஙள் அவர்களுக்கு உள்ளனர்.

பாபகி தங்ஙள் அவர்களின் மூத்த மகள் ஸைனப் அவர்களின் கணவர் தான் கேரள மாநில சட்டமன்ற முஸ்லிம் லீக் கட்சித் தலைவரான ஜனுப் சையது உமர் பாபகி தங்ஙள் அவர்களாவார்.

மற்றவர்களில் கதீஜா நபீஸா ஆகியோர் திருமணம் ஆனவர்கள் மற்ற நான்கு பெண் மக்களுக்கு இன்னும் திருமணமாகவில்லை.

ஆண் மக்களில் ஸையதுமர் கல்லூரியில் உயர் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறுர். ஸையதலவி, ஹஸன் ஆகிய இருவரும் பட்டிக்காடு ஜாமி ஆ நூரியா அரபி கல்லூரியில் படிக்கிறுர்கள். அப்துல் காதர் என்பவர் தொழில் துறையில் ஈடுபட்டுள்ளார்.

நன்றி : உரிமைக்குரல்

29-1-73

---

துக்ளக் 15-4-72

## இதோ ஒரு சிறந்த மனிதர்



**காயிதேமில்லத் முஹமது இஸ்மாயில் சாகிப்**

**தோற்றம் : 1896** மறைவு : **1972**

***அதிகாரத்திற்கும் ஆதிக்கத்திற்கும் ஆசைப்படாதவரே மனிதரில் சிறந்தவர்.***

—நபிகள் நாயகம்.

# கண்ணியத்திற்குரிய பெருந்தகையாளர் காயிதேமில்லத் முஹம்மது இஸ்மாயில்

''சோலை''

காட்சிக்கு எளியவர்! கடுஞ் சொல் இல்லாத வர்! ஏழைக்கு இரங்கும் ஏந்தல், ஆயிரம் வாசல் இதயம் படைத்த அண்ணல்!

இவர்தான் நாம் அறிந்த கண்ணியத்திற்குரிய பெருந்தகையாளர் காயிதே மில்லத் முகமது இஸ் மாயில் அவர்கள். சலனமற்றுச் செல்லும் கங் கைக்கும் காவிரிக்கும் தான் ஆழம் உண்டு. ஆம்! அரசியலுக்கு வந்த நாள் முதலாய் காயிதேமில் லத் ஆர்ப்பாட்டமில்லாத, அடக்கமே உருவான அரசியல் தலைவராக விளங்கினர். காரணம், அவர் ஆழ்ந்த அரசியல் நுண்ணறிவு படைத்தவர். எதிர்காலத்தையும் ஊடுருவிப் பார்க்கும் வல்லமை பெற்றவர்.

## திருப்புமுனை :

1936-ம் ஆண்டுவரை காயிதேமில்லத் தேசிய விடுதலை ஓட்டத்தோடு ஓடிக் கொண்டிருந்தார். சென்னையில் பிரபல வணிகராகவும், தேசியத் தலை வராகவும், காந்தியடிகளின் நம்பிக்கைக்குரியவ ராகவும் விளங்கிய ஜமால் முகமது 1936-ம் ஆண்டு சென்னையில் நடந்த தேர்தலில் போட்டி யிட்டார். அவரை எதிர்த்து டி.டி. கிருஷ்ணமாச் சாரியார் போட்டியிட்டார், இந்த தேர்தலில் அரசியலுக்குப் பதிலாக வகுப்புவாதம் விளையாடி யது. ஜமால் முகமது வெற்றி வாய்ப்பை இழந் தார். அதன் பின்னர் காயிதேமில்லத்தின் அரசி யல் வாழ்வு புதிய திருப்புமுனை கண்டது. ஜமால் முகமதோடு அவரும் முஸ்லிம் லீக் இயக்கத்தில் இணைந்தார். என்னதான் தேசீய இயக்கத்தோடு இணைந்தும் பிணைந்தும் நின்றாலும் இஸ்லாமிய சோதரர்களை சந்தேகக் கண்கொண்டு சிலர் பார்த் துக் கொண்டே இருந்தாலும், அரசியலில் நெருக் கடியான நேரம் வந்த போதெல்லாம் இஸ்லாமிய சோதரர்களை இக்கட்டான நிலைக்கு சிலர் உள்ளாக் கியதாலுமே தமிழகத்தில் முஸ்லிம் லீக் பிறைக் கொடியோடு முழு நிலவாக வளர்ந்தது. இஸ் லாமிய சமுதாயத்திற்கு இறைவன் அளித்த அருட் கொடையாக காயிதே மில்லத் வளர்ந்தார்.

''நீங்கள் ஏன் முஸ்லிம் லீகில் சேர்ந்தீர்கள்?'' என்று பலர் காயிதே மில்லத்தைக் கேட்டதுண்டு.

''நல்ல கேள்வி. ஏன் நீங்கள் அழகான மனை வியை மணந்தீர்கள் என்று கேட்பது போல் இருக் கிறது'' என்று காயிதே மில்லத் நகைச்சுவையாக பதில் அளிப்பார்.

## போனிக்ஸ் பறவை:

''அரசியல் உலகில் காயிதே மில்லத் ஒரு ''போனிக்ஸ்'' பறவை. மேலை நாட்டு இலக்கியங் கள் கூறும் போனிக்ஸ் பறவை அக்கினிப் பிரவே சம் செய்து தனது தூய்மையை வெளிப்படுத்தும். காயிதே மில்லத் அக்கினிப் பிரவேசம் பல கண்ட வர்.

இந்தியா மீது பாகிஸ்தான் படைகொண்டு வந்த போதெல்லாம் நமது இஸ்லாமிய சோதரர் களுக்கு சோதனையாகவே இருந்தது. ஆனல் இந்தச் சோதனைகளிலெல்லாம் காயிதே மில்லத் இஸ்லாமிய சமுதாயத்தோடு அக்கினிப் பிரவேசம் கண்டு களங்கமற்ற தூய்மையான ஒரு போனிக்ஸ் பறவையாகவே வெளி வந்தார். படை கொண்டு வந்தோர் மதத்தால் ஒன்றுபட்டவராயினும் நாட் டால் வேறு பட்டவர்—தாயகம் காப்பதில் எந்தச் சமுதாயத்திற்கும் இஸ்லாமிய சமுதாயம் இளைத்த தல்ல என்பதை காயிதே மில்லத் மெய்ப்பித்தார்.

வங்க தேச விடுதலைப் போரின் போதும் இந்தி யப் பூங்காவில் சேர்ந்து ஆடிக் குலுங்கிய மலர் களோடு மலர்களாக — வேறுபட்டு நிற்காத மலராக இஸ்லாமிய சமுதாயம் இருந்ததென்றல் அதற்கு காயிதே மில்லத் காட்டிய ஒளிமயமான பாதையே காரணமாகும்.

## இந்திய இஸ்லாமியன்

நமக்குத் தொல்லை தந்த பாகிஸ்தான் இஸ்லாமிய நாடுதான். ஆனால் அந்தத் தொல்லைகள் வந்த போதெல்லாம் காயிதே மில்லத் ஒரு இஸ்லாமியராக நின்றதில்லை. இந்த மண்ணின் புதல்வராக இந்தியராகவே நின்றார். இஸ்லாமிய சமுதாயத்தின் உரிமைகளுக்காகப் போராடும் போது அவர் இஸ்லாமியராகவும் இந்தியனாகவும் நின்றார்.

''இதோ பாருங்கள் இஸ்மாயில் தனது பாத்தியில் வகுப்பு வாதக் களைகளை வளர்க்கப் பார்க்கிறார். வந்து பாருங்கள்'' என்று ஓல மிட்டவர்கள் பலர். ஆனால் ஓலமிட்டவர்களே சோர்ந்து உட்காரும்படியாக காயிதே மில்லத் நல்ல பயிர் களையே வளர்த்தார். காரணம் அவர் உலக அரசியல் ஓட்டம் அறிந்தவர். இந்தியன் என்ற உணர்வில் அவரது பாதங்கள் அழுந்தி நின்றன. எனவே புழுதிக் காற்றால் அவரை அசைக்க முடியவில்லை.

இந்த நாட்டில் தேர்தலுக்குத் தேர்தல் தொகுதிக்குப் போகாமலே வெற்றி பெற்ற இரண்டு தலைவர்கள் உண்டு. ஒருவர் பசும் பொன் முத்து ராமலிங்கத் தேவர். இன்னொருவர் காயிதே மில்லத் முகமது இஸ்மாயில் அவர்கள். சென்னை குரோம் பேட்டையில் குடியிருந்த காயிதே மில்லத் சேர நாட்டில் மஞ்சேரி நாடாளு மன்றத் தொகுதிக்கு வேட்பு மனு மட்டும் தாக்கல் செய்யச் செல்வார். மக்கள் அவரை நாடாளு மன்றத்திற்கு வெற்றி மாலை சூட்டி அனுப்பி வைப்பார்கள்.

## அண்டை வீட்டுக்காரன்

தெய்வ பக்தி நிறைந்து நிற்கும் நெஞ்சம் கொண்ட மனிதர்கள் கோடானு கோடியில் ஒருவர். தொழுகைக்குத் துணை நின்ற அந்த மனிதரினால் அதிகப் பலன் பெற்றவர்கள் இஸ்லாமிய சோதரர்களை விட இதர சமுதாயச் சோதரர்களே என்பதை அறிவேன்; காரணம் பத்து ஆண்டுகள் குரோம்பேட்டையில் அவரது பக்கத்து வீட்டுக்காரனாக வாழ்ந்தேன்.

சரியாக ஒரு மாதத்திற்கு முன்பு நடந்த ஒரு சம்பவம். குரோம்பேட்டையை உள்ளடக்கிய பல்லவபுரம் நகராட்சித் தனி அதிகாரி டி. எஸ். சிவசாமியை மாறுதல் செய்ய ''காண்ட்ராக்ட் புரோக்கர்கள்'' சிலர் முயன்றனர். ஆனால் செங்கல்பட்டு மாவட்டத்திலேயே வேறு எந்த நகர சபையும் செய்யாத பல சாதனைகளை இந்தத் தனி அதிகாரி செயல்படுத்தி வருகிறார். அதனால் அவர் சகல பகுதி மக்களின் மதிப்பையும் மரியாதையையும் பெற்றிருக்கிறார். தமிழகத்திலேயே லஞ்சம், ஊழல், கொள்ளை என்ற குற்றச்சாட்டுக்கு உள்ளாகாத ஒரே நகரசபை பல்லவபுரம் நகரசபை தான். எனவே இந்த நகராட்சித் தனி அதிகாரியான சிவசாமியை மாறுதல் செய்யக் கூடாது என்று சர்வ கட்சியினரும் காயிதே மில்லத்தைச் சந்தித்து முறையிட்டனர், காயிதே மில்லத்தும் அந்த அதிகாரியை அறிவார். தமது மைந்தன் ஜமால் முகம்மது மியாகான் மூலம் சிவசாமியை அழைத்தார்.

''உங்கள் கண்டிப்பும், நேர்மையும் சிலருக்குப் பிடிக்கவில்லை. என்ன செய்யலாம்? என்றார்.

''சட்ட விதிகளுக்கே புறம்பாக சிலருக்கு சில சலுகைகள் செய்ய வேண்டும் என்கிறார்கள்!'' என்று சிவசாமி கூறினார்.

''எனக்கும் தெரியும் என்ன செய்வது''?

''பல்லவபுரம் நகர சபை பரங்கிமலைத் தொகுதியில் இருக்கிறது. இங்கு ஏதாவது ஒரு சிறு தவறு நடந்தாலும் அது தமிழகம் முழுமையும் எதிரொலிக்கும், என்னால் இந்த நிலைமை ஏற்படக் கூடாது. வேண்டுமானால் நான் வேறு ஊருக்கு மாறுதலாகிச் செல்லத் தயாராக இருக்கிறேன்.'' என்று சிவசாமி கூறினார்.

''சரி நீங்கள் போங்கள் நான் பார்த்துக் கொள்கிறேன்.'' என்று படுக்கையில் நோய் வாய்ப் பட்டிருந்த காயிதே மில்லத் கூறினார்.

அன்றே அவர் சட்டமன்ற உறுப்பினர் எம்.ஜி. ராமச்சந்திரனுடன் தொலைபேசி மூலம் தொடர்புகொண்டார். ''சில்லறையே குறியான'' சிலர் செய்த முயற்சியை காயிதே மில்லத் முறியடித்தார். இப்படி ''காண்ட்ராக்ட் காளைகளால்'' அநியாயமாக பழிவாங்கப்பட இருந்த பலப்பல அரசு ஊழியர்களை காயிதேமில்லத் கரம் கொடுத்து காத்திருக்கிறார். நமக்கு நாதியில்லை என்று கண் கலங்கித் தவித்த எத்தனையோ ஏழைகளுக்கு நம்பிக்கை நாயகனாக விளங்கி இருக்கிறார்.

ஏறத்தாழ 24 ஆண்டுகள் அகில இந்திய முஸ்லிம் லீகின் தனிப் பெரும் தலைவராக காயிதே மில்லத் பவனி வந்திருக்கிறார். அவர் விரும்பி இருந்தால் மாட மாளிகையிலே வாழ்ந்திருக்க முடியும். அவருக்கு, வசதிகளைத் தேடித் தர எத்தனையோ பேர் தவம் இருந்தனர். என்றாலும் காயிதே மில்லத் அவைகளையெல்லாம் ஏற்றுக் கொள்ளவில்லை; ஏறிட்டுப் பார்க்கவில்லை. சென்னை நகரின் புறநகர் பகுதியில் குரோம்பேட்டையில் கூரை வேய்ந்த சிறிய வீட்டிலேயே வாழ்ந்தார்.

## பழுத்த கனி:

அவர் கண்களை மூடிக்கொண்டிருக்கிறார். ஆனால் நமது கண்களிலே ஒளியாகத் திகழ்கிறார்!

அவரது வாழ்க்கை முடிந்தா விட்டது? இல்லை அவர் நம்மோடு வாழ்கிறார்!

பந்தத்தின் இழைகள் அறுந்தா விட்டன! இல்லை. அந்த இழைகள் நமது இதயத்தோடு இதயமாக பதிந்து நிற்கின்றன.

பழுத்துக் கனிந்த கனி உதிர்ந்தா விட்டது? இல்லை. நமது இதயச் சிம்மாசனத்திலே அமர்ந்து இருக்கிறது.

நன்றி : ''அலை ஓசை'' 5-4.72

# துப்பாக்கி கண்டு மருளும் மந்திரிகளும் குறி தவறாது சுட்ட காயிதேமில்லத்தும்

**M. A. அக்பர்**

''நீங்கள் தீமை என நினைப்பதிலே நன்மையும் இருக்கலாம்'' என்ற கருத்தைத் தித்திக்கும் திருமறை ஓர் இடத்தில் வலியுறுத்திக் கூறுகிறது. மாமறை கூறும் அக் கருத்திற்கான விளக்கம் தேடி வேறு எங்கும் அலைய வேண்டாம். இதோ நம் கண்முன் நடக்கும் சீனக் கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்பே போதிய விளக்கமாகும்.

மாபெரும் தீமையாக படர்ந்து வந்த சீனக் கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்புத்தான் எவ்வளவு நன்மைகளை விளைவித்து விட்டது! எவ்வளவு மாறுதல்களைச் செய்து விட்டது! எவ்வளவு உண்மைகளை வெட்ட வெளிச்சமாக்கி விட்டது! எவ்வளவு வேஷங்களை வெளுக்க வைத்து விட்டது! அடேயப்பா!

## சாயம் வெளுத்தது

நாட்டின் வடக்கெல்லையில் கம்யூனிஸ்ட் சீன அபாயம் அடியெடுத்து வைக்குமுன்—காங்கிரஸ் தன்னை மட்டும் தான் தேச பக்த கட்சி என்று புறையடித்துக் கொண்டிருந்தது!

தான் மட்டுமே சுதந்திரத்தைப் பெற்றதாகவும், எனவே சுதந்திரத்தைக் காக்கும் பொறுப்பு தனக்குத்தான் உண்டென்றும் கூறி, ''சுதந்திரம் காக்கும் படை'' என்ற பெயரில் ஒரு சோற்றுப் பட்டாளத்தையும் மறைமுகமாகத் தோற்றுவித்தது!

முஸ்லிம் லீகை நாட்டைத் துண்டாடியவர்கள் என்றும், நாட்டுப்பற்றே இல்லாதவர்கள் என்றும், வகுப்புவாதிகள் என்றும் வசை பாடியது; வாய் கூசாது புளுகியது!

முஸ்லிம் லீகைத் திட்ட வேண்டும் என்பதற்காக கம்யூனிஸ்ட் கட்சியுடன் காங்கிரஸ் கரம் கோத்துக் கொண்டது. தேச பக்த கட்சி லிஸ்டில் தன்னுடன் கம்யூனிஸ்ட் கட்சியையும் சேர்த்துக் கொண்டது. அதன் தலைவர்களுக்கு மேடை போட்டுக் கொடுத்து அவர்களுக்கும் தேச பக்த சாயம் பூசிக் காண்பித்தது!

தங்கள் கட்சிக்காரர்கள் சுத்தவீரர்கள் என்றும், இந்த நாட்டிற்காக எதையும் தியாகம் செய்யத் தயார் என்றும் உயிரைக்கூட விடத் தயார் என்றும் வாய்ப் பறை சாற்றியது.

## வெத்து வேட்டு

காங்கிரஸின் இந்த வெத்து வேட்டு முழக்கம் நாட்டைக் கலக்கிக் கொண்டிருந்த நேரத்தில் வஞ்சகச் சீனனின் பீரங்கி முழக்கம் வடக்கெல்லையில் கேட்கத் துவங்கியது. அவ்வளவு தான், இந்நாட்டை எதிர் நோக்கிய அபாயத்தைக் கண்ட இந்நாட்டு மக்கள் அனைவரும் வீறுகொண்டு எழுந்தனர். ஜாதி, மத, கட்சி பேதங்களின்றித் தாய் நாட்டைக் காக்க முன் வந்தனர். இந்திய யூனியன் முஸ்லிம்லீக் கட்சியும் அதன் ஒப்பற்ற தலைவர் காயிதேமில்லத் அவர்களும் யாதொரு நிபந்தனையுமின்றியும் மிகத் தாராளமாகவும் உவப்புடனும் தங்களால் இயன்றவை யனைத்தையும் நாட்டிற்காக அர்ப்பணிக்க முன் வந்ததை அறியாதவர் யாரே உளர்? முஸ்லிம்கள் மட்டுமின்றி, இதர வகுப்பினர்களும் கட்சிகளும் நாட்டின் நலனையே முன்னிறுத்தித் தங்களுடைய கோரிக்கைகளை ஒத்தி வைத்தனர்.

தேசப்பற்று என்பதும், நாட்டைக் காக்கும் பணி என்பதும் காங்கிரஸ் கட்சிக்கே சொந்தம் என இதுவரை கற்பனை செய்து கொண்டிருந்த காங்கிரஸ் கட்சி நாடே திரண்டெழுந்ததைக் கண்டு பிரமித்து நின்றது; தம்மைப் போல் மற்றவர்களுக்கும் இந் நாட்டின் மீது அக்கறை, பாத்தியதை, உரிமை, கடமை ஆகியவை உண்டு என்பதை உணரத் தொடங்கியது. தான் மட்டும்

தான் போராடி சுதந்திரத்தைப் பெற்றதாக முன்பு கூறிய காங்கிரஸ் ''நாமெல்லாம் சேர்ந்து சுதந்திரத்தைப் பெற்றோம். இப்போது அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாக்க நாமெல்லாம் அன்று போல் ஒன்றுபட வேண்டும்'' என மூலைக்கு மூலை முழங்க ஆரம்பித்துள்ளது.

## பச்சைப் புளுகு :

இப்படிக் கூறுவதன் மூலம்தான் மட்டும் சுதந்திற்காகப் போராடியதாக முன்பு கூறியது பச்சைப் புளுகு; இந்த நாட்டிலுள்ள கட்சிகள் அனைத்துமே சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டன என்பது தான் உண்மையெனக் காங்கிரஸ் ஒத்துக் கொண்டுள்ளது.

சீன ஆக்கிரமிப்பு நிகழாமல் இருந்திருந்தால் காங்கிரஸ் இப்படி உண்மையை ஒப்புக் கொண்டிருக்குமா ?

முஸ்லிம் லீகை வசை மாரி பொழிய வேண்டுமென்பதற்காக கம்யூனிஸ்ட் கட்சிக்கு தேச பக்த வர்ணம் பூசி அதன் தலைவர்களுக்கு ஜிந்தாபாத் போட்ட தல்லவா காங்கிரஸ், அந்தக் கம்யூனிஸ்ட் தேசபக்தர்கள் அனைவரும் இன்று சிறைச்சாலைகளில் உள்ளனர் ! கம்யூனிஸ்ட் கட்சியோ சீன ஆக்கிரமிப்பைப்பற்றி ஈரர்த்தத் தீர்மானம் போட்டுக் காங்கிரஸின் முகத்தில் கரிபூசியது; தன் பிறவிக் குணத்தை வெளிக் காட்டியது.

சீன ஆக்கிரமிப்பு நடந்திரா விட்டால் இந்த அற்புதங்கள் நிகழ்ந்திருக்குமா ?

இவ்வாறு காங்கிரஸின் சாயமும், அதன் நண்பர்களின் சாயமும் வெளுத்து விட்டதோடு கதை முடியவில்லை. அக் கட்சி முஷ்டியை முறுக்கி முழங்கிய அதன் சொந்த வீரமும் அதன் காலை வாரிவிட்டு விட்டது!

தேசத்திற்காக உயிரைக் கொடுப்போம் என்று முழங்கிய அக் கட்சியின் மந்திரிகளே கேவலம், வட எல்லைக்கு நூற்றுக் கணக்கான மைல்களுக்கு இப்புறம் துப்பாக்கியைக் கண்டு மருளும் செய்தி கிடைத்துள்ளது! அதே நேரத்தில் துப்பாக்கியைத் தூக்கி, காட்டிய குறியை முஸ்லிம் லீக்கு தூள் பரத்திய செய்தியும் வந்துள்ளது!

நாடு அபாயத்திலுள்ளதால் அனைவரும் துப்பாக்கிச் சுடத் தெரிந்து கொள்ள வேண்டும். குறிப்பாக ஆளும் அமைச்சர்களும். அதிகாரிகளும் பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களும் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற கருத்து தலைநகரில் செயலாகப் பரிணமித்தது.

## நமது பாரம்பரியம்:

பாராளுமன்ற உறுப்பினர்கள் முதன் முதலில் பயிற்சி பெற விரைந்தனர். முதற் குழுவை உற்சாக மூட்டி அழைத்துச் சென்றது யார் தெரியுமா? காங்கிரஸ், ஆகாத கட்சி என அலட்டிக் கொண்ட முஸ்லிம் லீகின் ஒப்பற்றத் தலைவர் காயிதே மில்லத் அவர்கள் தாம்!

அது மட்டுமன்று, பயிற்சிக் கூட்டத்தில் துப்பாக்கியைப் பெற்று, காட்டிய திசையில் குறிப்பிட்ட இலக்கைக் குறி பார்த்து முதல் வேட்டிலேயே சுட்டுத் தூள் பரத்திய முதல் பாராளுமன்ற உறுப்பினரும் நமது காயிதே மில்லத் அவர்கள் தாம்!

ஆம் நாட்டுப் பற்று நாடி நரம்புகளிலெல்லாம் பொங்கிப் புரளுகையில் வைத்த குறி தப்புமா ? எதிர்படும் சீனன் தான் பிழைப்பானா ? நாம் வாய்ப்பறை சாற்றவில்லை. நம் பரம்பரை வீரம் பேசியது அங்கே!

ஆனால் வீரம் பேசிய காங்கிரஸின் கதை... இதோ செய்தி படியுங்கள்:

## இதோ படியுங்கள்:

மத்திய பிரதேசத்தில் உள்ள பிர்லாகிராம் என்ற இடந்தில் துப்பாக்கி சுடும் பயிற்சியை மத்திய நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய் ஆரம்பித்து வைத்து, துப்பாக்கி பிடித்து இரு குண்டுகளைச் சுட்டார். முதலில் குண்டு எங்கோ போனது. இரண்டாவது குண்டு குறிக்குப் பக்கத்தில் பாய்ந்தது.

மத்திய பிரதேச முதன் மந்திரி மாண்டோலாய், நிதி மந்திரி கங்குவால், கல்வி மந்திரி சர்மா ஆகியோர் துப்பாக்கியேந்தி சுட மறுத்து விட்டனர். மாண்டோலாய் மறுப்புக்குக் காரணம் காட்டவில்லை. ஆனால் மற்ற இரு மந்திரிகளும் ''நான் என் வாழ்க்கையில் ஒரு குச்சியைத் தூக்கியதில்லை. அப்படியிருக்க, துப்பாக்கி பிடித்து சுடுவது எப்படி ?'' என்றார்கள்.

[நவமணி 28-12-1962]

இதுதான் செய்தி, தாயக எல்லையில் அன்னியனின் ஆக்கிரமிப்பு அழுத்திக் கொண்டிருக்கும்

போது, காங்கிரஸார்—அதிலும் அமைச்சர்கள் காட்டும் வீரத்தைப் பார்த்தீர்களா? இவர்கள் தாம் சுதந்திரம் காக்கும் படையின் சிருஷ்டி கர்த்தாக்கள்! இவர்கள்தான் உயிரையும் விடுவோம் என முழங்கியவர்கள்! இவர்கள் தான் மற்றவர்களின் தேச பக்திக்கும் வீரத்திற்கும் மாசு கற்பித்தவர்கள்!

மந்திரிகளின் மறுப்பிலே அவர்களின் வீரம் பொங்கி வழிவது ஒருபுறம் கிடக்கட்டும், அதிலே அவர்களின் கடந்த கால வரலாறுமல்லவா தெரிகிறது!

''நான் என் வாழ்க்கையில் ஒரு குச்சியைக் கூடத் தூக்கியதில்லை'' எனக் கூறுவதிலிருந்து அவர்களின் கடந்த கால 'தியாக' வாழ்க்கையை தெரிந்து கொள்ள முடிகிறதல்லவா?

இத்தனைக்கும் அஹிம்ஸையை வாழ் நாளெல்லாம் போதித்த காந்தியாரே ''தீமைக்கும் பலாத்காரத்திற்கும் பணிவதா? எதை தேர்ந்தெடுக்க வேண்டியது நேர்ந்தால் வாளை உருவி உபயோகிக்க வேண்டும்'' எனக் கூறியுள்ளார். இந்தப் பொன் மொழியை நினைவுபடுத்தி மக்களுக்கு ஆவேச மூட்டுகிறார் பிரதமர் நேருஜி. ஆனால் காந்தீயத்தையே கை கழுவி விட்ட காங்கிரசார் காதில் இதெல்லாம் எப்படி ஏறும்? நெருக்கடி ஏற்பட்ட போது வீரர்கள் தாம் துப்பாக்கி தூக்குகிறார்கள். காங்கிரசாரோ வாய்ச் சொல்லில் வீரரடி கிளியே'' என்ற பாரதியாரின் பாட்டிற்கு அபிநயம் பிடிக்கிறார்கள் என்பது தெளிவாகிறதல்லவா?

சீன யுத்தம் வந்திருக்காவிட்டால் காங்கிரஸ் பற்றிய இந்த உண்மைகளெல்லாம் வெளிப்பட்டிருக்குமா? வேஷம் தான் கலைந்திருக்குமா?

''தீமை என நினைப்பதில் நன்மை உண்டு'' என்பது எவ்வளவு உண்மை என இப்போது தெரிகிறது அல்லவா? ஒரு ஆக்கிரமிப்புத் தீமை ஏற்பட்டதன் மூலம் நாட்டு மக்கள் காங்கிரஸ் கட்சியின் உண்மை உருவைப்புரிந்து கொண்டு விட்டார்கள். இது ஒரு நன்மைதான்.

உரிமைக்குரல் 7-1-63

## நமது பெயரையும் கொஞ்ச காலம் மாற்றி வைத்துக்கொள்ளலாமே!

**ஹாஜி டி. இ. அப்துல் கரீம் சாகிபு**
*கடையநல்லூர்:.*

தமிழ்நாட்டில் முஸ்லீம் லீக் உறுப்பினர் சேர்க்கப்பட்ட காலத்திலிருந்து, அதாவது 1937ம் ஆண்டு முதல், நான் அக்கட்சியில்தான் இருந்து வருகிறேன். கடையநல்லூரில் எங்கள் அமைப்பான கமாலியா முஸ்லிம் சங்கத்தில் உறுப்பினராகச் சேர வேண்டுமானால், முதலில் அவர் முஸ்லிம் லீக் உறுப்பினராக இருத்தல் வேண்டும். முஸ்லிம் லீக் அல்லாதவர் யாரும் கமாலியா சங்கத்தில் உறுப்பினராக முடியாது.

ஆரம்ப காலத்தில் கடையநல்லூருக்கு வருகை தந்த காயிதே மில்லத் அவர்கள் வெ. கா. உ. அ. அவர்கள் வீட்டில் தங்கி இருந்தார்கள். அச்சமயம் உள்ளூர் பிரமுகர்கள் சிலர் அங்கு வந்து தலைவரவர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது ''நாட்டில் நிலவரம் சரியில்லையே, கொஞ்ச காலத்திற்கு முஸ்லீம் லீக் என்ற பெயரில் இயங்கிக் கொண்டிராது, பின் காலங்களில் பழைய பெயரையே வைத்துக் கொள்ளலாமே'' என்று ஆலோசனை சொன்னார்கள்.

அதற்கு காயிதேமில்லத் அவர்கள் ''அப்படியானால் கொஞ்சகாலத்திற்கு நாமும் முஸ்லிம் பெயர்களை மாற்றிவிட்டு பெரும்பான்மை சமுதாயத்தவர்களின் பெயர்களை சூடிக் கொள்ளலாமே......அதற்கெல்லாம் நீங்கள் தயார் தானா?'' என்று சுடச்சுடத் திருப்பிக் கேட்டார்கள். பணக்காரர்கள் யாரும் மூச்சு விடவில்லை. வாயைத் திறக்கவில்லை.

அத்துடன் தலைவரவர்கள் நிறுத்திக் கொள்ளவில்லை. மேலும் தொடர்ந்தார்கள்:—

''உங்களுக்குப் பயமாக இருந்தால் தயவு செய்து ஒதுங்கிக் கொள்ளுங்கள். முள் கிரீடத்தை என் தலைமீது நான் சுமந்து கொள்கிறேன்.'' என்னிடம் ஒப்புவிக்கப்பட்ட அமானிதத்தை நான் ஒரு பொழுதும் விட்டுவிடுவதாயில்லை. என் உயிருள்ள வரை முஸ்லிம் லீக் என்ற அமைப்பு இருந்தே தீரும்'' ''என் வீட்டில் மட்டுமாவது அந்த போர்டு மாட்டப்பட்டிருக்கும் உங்கள் பயமெல்லாம் தீர்ந்து இந்த ஸ்தாபனத்தினால் நன்மை பெறலாம் என்ற நம்பிக்கை வந்த பிறகு நீங்களெல்லாம் இதில் வந்து சேர்ந்து கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.



# ''முஸ்லிம் லீக்கில் நான் மட்டுமாவது இருந்தே தீருவேன்''

திருநெல்வேலி மாவட்ட முஸ்லிம் லீக், 1939ம் ஆண்டு ஜனவரி முதல், முறையாகச்செயல் படத் துவங்கியது. மாவட்ட முஸ்லிம் லீக்கின் தலைமையகம் திருநெல்வேலி பேட்டையில் சன்னதித் தெருவிலுள்ள மாடி ஒன்றில் செயல் பட்டுக் கொண்டிருந்தது. 1946-ம் ஆண்டு வரை, நெல்லை மாவட்ட லீக்கின் தலைமை நிலையம் பேட்டையில்தான் இருந்தது.

மாவட்ட நிர்வாகிகளில் நான் துணைச் செய லாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். மாவட்ட லீக் அலுவலகத்தின் மானேஜர் பொறுப்பையும் 1939 முதல் 1946 வரை நானே வகித்து வந்தேன். அச்சமயம் நான் பேட்டையிலேயே குடியிருக்கவும் செய்தேன். கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் பேட்டைக்குவந்து தங்கிய சமயம் எல்லாம், அவர் களுடனேயே எனது பொழுதைக் கழிப்பது வழக்கம். நாட்டு நடப்புகளை விளக்கிக் கூறுவார் கள்; கட்சியை வலுப்படுத்துவதன் அவசியத்தை எடுத்துச் சொல்லுவார்கள். பழைய வரலாறுகளை சொல்லிக் காட்டுவார்கள். இளைஞர்களை உற்சாகப் படுத்துவதில் அவர்களுக்கு நிகர் வேறு யாரும் கிடையாது. அக்கால கட்டத்தை நினைக்கும் பொழுது எவ்வளவு பெருமிதமாகவும் மனநிறை வாகவும் இருக்கிறது தெரியுமா!

நெல்லை மாவட்ட முஸ்லிம் லீக் சார்பாக ''முன்னேற்றம்'' என்ற பெயரில் 1942-ஆம் ஆண்டில் மாதப் பத்திரிகை ஒன்று துவக்கப் பட்டது. அதற்கு நான் தான் ஆசிரியராக நிய மிக்கப்பட்டேன். 1948 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் வரை ''முன்னேற்றம்'' இயங்கியது. சிறிது காலம் மாத இதழாகவும் சிறிது காலம் வார இதழாகவும் அது வெளிவந்து கொண்டிருந்தது.

காந்திஜீயின் படுகொலையை அடுத்து ஆர். எஸ். எஸ். இயக்கம் தடை செய்யப்பட்ட தும், 1948 ம் ஆண்டு பிப்ரவரியில் ''முஸ்லிம் நேஷனல் கார்டு'' என்ற தொண்டர் படையும் தடை செய்யப்பட்டது. அச்சமயம் நான் கைது செய்யப்பட்டேன். மாகாணம் முழுவதும் என்னை யும் சேர்த்து சுமார் 15 முஸ்லிம் லீக்கர்கள் கைது செய்யப்பட்டார்கள். அவர்களில் அதிக காலம் சிறையில் இருந்தவன் நானே. மூன்றரை மாதம் நான் சென்னை மத்தியசிறையில் வைக்கப்பட்டேன், எனக்காக சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கறி ஞர் B. போக்கர் சாகிப் ''ஹபீயஸ் கார்பஸ்'' மனு தாக்கல் செய்து வாதாடினார்கள். 1948 ம் ஆண்டு மே மாதம் இறுதியில் நான் சென்னை மத்திய ஜெயிலில் இருந்து விடுதலை செய்யப் பட்டேன்.

சிறையிலிருந்து நேராக தம்புச் செட்டித் தெருவிலுள்ள ஜமால் மொகிதீன் கம்பெனிக்குச் சென்றேன். காயிதே மில்லத்தைச் சந்தித்தேன். ஆறுதல் மொழி கூறினார்கள்; தைரியமூட்டி னார்கள். அன்று அவர்கள் உதிர்த்த வார்த்தை கள் இன்றும் எனது செவிகளில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது.

அவர்கள் சொன்னார்கள் :-

''ஸ்தாபனம் நமக்கு முக்கியம். அது பிழைத்து நிற்கணும். யார் வெளியே போனாலும் போகட்டும். அது பற்றிக் கவலைப்படத் தேவை யில்லை. தனி மனிதர் யாரையும் நம்பி இந்த தாய்ச்சபை செயல்பட்டுக்கொண்டிருக்கவில்லை. நீங்கள் தைரியத்தை இழக்கத் தேவையில்லை. உங்களுக்கெல்லாம் சிறிது அச்சமாக இருந்தால், செயல்படாமல் இருந்து கொள்ளுங்கள்; பேசாமல் இருந்து கொள்ளுங்கள். நான் மட்டும் முஸ்லிம் லீக் என்று சொல்லிக் கொள்கிறேன். ஆனால் ஒன்று உறுதி. முஸ்லிம் லீக் என்ற கட்சியை நான் மட்டு மாவது கடைசி வரை வைத்துக்கொண்டே இருப் பேன். அக்கட்சி இருந்தே தீரும்'' அந்த வீர வார்த்தைகளை என்னால் மறக்கவே முடியவில்லை.

காயிதே மில்லத்தை சந்தித்த பின்னர், ''சைபுல் இஸ்லாம்'' பத்திரிகையின் ஆசிரியர் மௌலவி அஹமது சயீத் அவர்களைக் காணச் சென்றேன். அவர்களும் என்னைப் பாராட்டினார் கள். ''உன்னைப் போன்றவர்களைக் கைது செய் யாமல் வேறு யாரைக் கைது செய்வார்கள்? நீ ஜெயிலுக்குப் போனது பெருமைக்குரியது'' என்று சைபுல் இஸ்லாம் ஆசிரியர் என்னைத் தட்டிக் கொடுத்தார்கள்.

திருக்குர்ஆனை இனிய தமிழில் மொழியாக்கம் செய்த அல்லாமா ஆ. கா. அ. அப்துல் ஹமீது பாகவி அவர்களையும் போய்ப் பார்த்தேன். அவர் களும் எனக்கு ஆறுதல் மொழி கூறினார்கள்.

எனது தந்தையும் முஸல்மான் பத்திரிகை ஆசிரியருமான ஹாஜி அப்துல் காதர் ஆலிம் அவர்கள் எனது சிறைவாசம் குறித்து உதிர்த்த வார்த்தைகளையும் நான் மறப்பதற்கில்லை ''யூசுப் நபியின் சுன்னத்தை உனக்கு இறைவன் ஹயாத் தாக்கிக் கொடுத்து விட்டான்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

சிறைவாசம் முடிந்து மதராஸிலிருந்து புறப்பட்டு நான் நெல்லை ஜங்ஷன் ரயில் நிலையம் வந்ததும், காயிதே மில்லத் அவர்களது மூத்த சகோதரர் அப்துல் லத்தீப் சாகிப் அவர்களும் மற்றவர்களும் என்னை வரவேற்றார்கள். நேராக பள்ளிவாசலுக்கு அழைத்துச் சென்று பாராட்டுரைகள் வழங்கப் பட்டன. எனதுசிறை அனுபவங்களையும் காயிதே மில்லத் கூறியவார்த்தைகளையும் அக் கூட்டத்தில் நான் சொல்லிக் காட்டினேன்.

**மௌலவி ஹாஜி அபுல் ஹஸன் ஷாதலி சாகிப்**
(நூரிய்யி பாஜில் பாக்கவி)
ஆசிரியர் ''ஜமா அத்துல் உலமா''

## வங்கப் புலியை அதன் குகையிலேயே சந்தித்த தலைவர்

1947 ம் ஆண்டு டிசம்பர் மாதம் 3 ம் தேதியன்று கல்கத்தா நகரில் இந்தியாவில் தங்கி இருந்த முஸ்லீம் லீக் தலைவர்களின் கூட்டத்தை ஹஸன் ஷஹீத் சுஹ்ரவர்த்தி கூட்டியிருந்தார்; 1947 க்கு முன்பு ஐக்கிய வங்காளத்தில் முதலமைச்சராக இருந்தவர் இவர். சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியாவில் முஸ்லிம் லீக் இயங்கத் தேவையில்லை என்று கருத்துக் கொண்டிருந்தார்; தமது கருத்துக்கு எஞ்சியுள்ள முஸ்லிம் லீக் தலைவர்களையும், கொண்டுவருவதற்காகத்தான் கல்கத்தாவில் ஆலோசனைக் கூட்டத்தைக் கூட்டியிருந்தார். உத்தரபிரதேசத்தில் இருந்து ஹஸரத் மோகானி வந்திருந்தார். பம்பாயிலிருந்து ஹஸன் இப்ருஹீம் வந்திருந்தார். பீஹாரில் இருந்து ஜாபர் இமாம் வந்திருந்தார் மற்றும் பல தலைவர்களும் கலந்து கொண்டனர். மதராஸில் இருந்து காயிதே மில்லத்தும் சீதி சாகிபும் வந்திருந்தார்கள்.

ஒவ்வொரு மாகாணத்தில் இருந்தும் 5 உறுப்பினர்கள் கலந்து கொள்ளலாம் என தீர்மானிக்கப்பட்டிருந்தது. மதராஸ் சார்பாக மேலே கூறிய இரு தலைவர்களுடன் அச்சமயம் கல்கத்தாவில் தங்கி வியாபாரம் செய்து வந்தவர்களும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களுமான K. S. சாகுல்கமீது ஹாஜியார், S. A. M. கமீது சுல்கான் ஆகியோருடன் நானும் கலந்துகொண்டேன். கூட்ட நடவடிக்கைகளுக்கு பத்திரிகை நிருபர்கள் அனுமதிக்கப்படவில்லை.

சுஹ்ரவர்த்தி நீண்டதொரு பிரசங்கம் செய்தார். இனி இந்தியாவில் முஸ்லிம் லீக் இயங்கத் தேவையில்லை என்றும் அகில இந்திய கவுன்ஸில் உறுப்பினர்களில் இந்தியாவில் தங்கி இருப்பவர்களின் கூட்டத்தைக் கூட்டி அக் கட்சியை முறையாக கலைத்து விடவேண்டும் என்றும் அவர் கூறினார். அதற்குப் பல காரணங்களையும் அவர் காட்டினார். ஏதாவது ஒரு மாற்று ஏற்பாடு செய்யலாமே தவிர முஸ்லிம் லீக்கை வைத்துக் கொண்டிருப்பது சாத்தியமேயில்லை என அழுத்தமாக வாதாடினார்.

அங்கு குழுமியிருந்த தலைவர்கள் பலருக்கு இக் கருத்து சரியாகவே பட்டது. சுஹ்ரவர்த்தியை ஆதரித்து சிலர் பேசினார்கள். அப்பொழுது காயிதே மில்லத் எழுந்து ஆங்கிலத்தில் சிறந்ததொரு சொற்பெருக்காற்றினார்கள். இந்நாட்டில் முஸ்லிம் லீக் ஏன் செயல்பட்டாக வேண்டும்.என்பதற்கு ஆணித்தரமான பல காரணங்களை எடுத்து வைத்தார்கள். சரித்திரச் சான்றுகளைக் கூறினார்கள். சுஹ்ரவர்த்தியின் ஒவ்வொரு பாயிண்டிற்கும் பதில்கொடுத்தார்கள். தலைவரவர்களுடைய கருத்தை ஆதரித்து சீதிசாகிபும் பேசினார். கூட்டத்தில் இருந்தவர்களுக்கு ''இஸ்மாயில் சாகிப் சொல்வதும் சரியாகத்தானே இருக்கிறது'' என்ற கருத்து ஆழமாகப் பதியவாரம்பித்தது.

வந்திருந்த தலைவர்கள் பலரும் மதராஸ் பிரதிநிதியின் அபிப்பிராயத்தை உதாசீனம் செய்து விட முடியாது எனக் கூறிவிட்டனர். தாம் சொன்னவுடன் அனைவரும் தலையை ஆட்டி விடுவார்கள் என கனவு கண்டு கொண்டிருந்த சுஹ்ரவர்த்திக்கு இது பெருத்த ஏமாற்றமாகப் போய்விட்டது. காயிதே மில்லத் அவர்களின் கருத்துக்கும் அக்கூட்டத்தில் ஆதரவு திரண்டு விட்டதால், ஒரு தீர்மானமும் நிறைவேற்றாது அக் கூட்டம் காலவரையின்றி ஒத்தி வைக்கப்பட்டது.

வங்கத்தின் முதலமைச்சராக இருந்த சுஹ்ரவர்த்தி தமக்கு செல்வாக்கு மிகுந்த கல்கத்தா நகரில் கூட்டத்தைக் கூட்டினால் தமது கருத்தை பிறர் மத்தியில் ஏற்க செய்து விடலாம் என்று திட்டமிட்டதை, மதராஸில் இருந்து வந்த இரு தலைவர்களும் தகர்த்தெறிந்து விட்டது, மற்ற தலைவர்களுக்கு ஆச்சரியமாகவே இருந்தது. இரண்டு திராவிடர்கள் கல்கத்தாவிற்கு வந்து தமது திட்டத்தை பாழடித்து விட்டார்களேயென சுஹ்ரவர்த்தி கைசேதப்பட்டுக் கொண்டாராம்!

1947-ம் ஆண்டிலேயே தமிழ்நாட்டிற்கும் வெளியிலும் கூட நடந்த கூட்டத்தில் முஸ்லிம் லீகிற்காக காயிதே மில்லத் எவ்வளவு துணிச்சலுடனும் தைரியமாகவும் வாதாடினார்கள் என்பதை நான் நேரில் கண்ணுற்ற பொழுது நான் ஆச்சரியப்பட்டுப் போனேன்.

**கீழக்கரை A. K. N. கபீர்**



# வேலூர் முஸ்லிம் லீக் மாநாட்டில் மூதறிஞர் ராஜாஜி ஆற்றிய உரை

[வடஆற்காடு மாவட்ட முஸ்லிம் லீக் மாநாடு 3-1-65 அன்று வேலூர் நகரில் சிறப்பாக நடைபெற்றது. காயிதே மில்லத் அவர்கள் தலைமையில் நடைபெற்ற அம்மாநாட்டில், அறிஞர் அண்ணாவும் மூதறிஞர் ராஜாஜியும் கலந்துகொண்டு உரையாற்றினார்கள். தமிழ்நாட்டில் தலை சிறந்து விளங்கிய முப்பெரும் தலைவர்களும் ஒரே மேடையில் காட்சியளிப்பதைக் கண்டு மனம் பொறுக்காத காங்கிரஸ்காரர்கள் அன்றையத் தினம் வேலூர் நகரின் பல பகுதிகளிலும் இம்மாநாட்டிற்கு எதிரான விளம்பரத் தட்டிகளை எழுதிவைத்துத் தங்களது ஆற்றாமையைத் தணித்துக் கொண்டார்கள். அம்மாதிரித் தட்டி வாசகங்களில் ஒன்று **''மௌலானா ராஜாஜியும் ஜனாப் அண்ணாதுரையும் வேலூர் முஸ்லிம் லீக் மாநாட்டில் பேசுகிறார்கள்!''** என்பதாகும், இதை மனதில் வைத்துக் கொண்டு வேலூர் மாநாட்டில் ராஜாஜி அவர்கள் பேசும் பொழுது கூறியதாவது :]

''என்னுடைய நீண்ட கால அரசியல் வரலாற்றில், முதன் முதலாக ஒரு முஸ்லிம் லீக் மேடையில் நின்று நான் பேசுவது இங்குதான்; இது குறித்தும் என்னைப் பற்றியும் ஒரு சிலர் இந் நகரில் விளம்பரத் தட்டி எழுதி வைத்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் எனக்கு அளித் திருக்கும் ''பட்டம்'' சாதாரணமானதல்ல ; அறிஞர் பெருமக்களுக்கு அளிக்கக் கூடிய பட்டத்தைத் தான் (மௌலானா) எனக்கு அவர்கள் சூட்டியிருக்கிறார்கள்.

ஆம்! வாஸ்தவம்தான். பல மௌலானாக்களுடன் அரசியல் அரங்கத்தில் பல காலம் உழைத்தவன் நான். மௌலானா முஹம்மதலி, மௌலானா ஷவுக்கத்தலி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத் போன்ற தலைவர்களுடன் சேர்ந்து பாடுபட்ட எனக்கும் மௌலானா பட்டத்தைச் சூட்டி யிருக்கிறார்கள். அதில் தவறு ஒன்றுமில்லைதான்.

ஆனால் ஒன்று; அந்தப்பட்டத்தை எனக்கு யார் வழங்க வேண்டும்? ஒரு வித கொள்கையும் இல்லாத காங்கிரஸ்காரர்களா அந்தப் பட்டத்தை எனக்கு அளிப்பது? அதற்கான யோக்கியதை அவர்களுக்கு இருக்கிறதா? மரியாதைக்குரிய அப்பட்டத்தை இம்மாநாட்டினர் எனக்கு வழங்கி இருந்தால், அதை நான் பெருமையுடன் ஏற்றுக்கொண்டிருப்பேன். அப்படிப்பட்டவர்கள் அதைக் கொடுத்தால் அதில் அர்த்தம் உண்டு; ஒரு நியாயம் உண்டு. ஒன்றுக்கும் உதவாக்கரைகளான காங்கிரஸ்காரர்களா, குறும்புத்தனமாக, இப்பட்டத்தை என் பெயருடன் இணைத்து விளம்பரப் படுத்துவது?

முஸ்லிம்களுடைய மாநாட்டிற்கு நான் வந்திருப்பது குறுகிய புத்தி படைத்த காங்கிரஸ் காரர்களுக்குப் பொறுக்கவில்லை. தங்களது அசல் தன்மையை அவர்கள் வெளிக்காட்டிக் கொண் டிருக்கிறார்கள். நான் ஒரு ஹிந்து; அவ்வாறு சொல்லிக்கொள்வதில் பெருமைப்படுகிறவன். உண்மையான ஹிந்து பரந்த மனப்பான்மையுடையவனாகவே இருப்பான். மற்றவர்களை மதிப்பவன் தான் உண்மையான ஹிந்து. அப்படிப்பட்ட ஹிந்துக்கள் மற்றவர்களுக்குத் தொந்தரவுகள் கொடுக்கமாட்டார்கள்: முஸ்லிம்களுக்கு கஷ்ட நஷ்டங்களை விளைவிப்பவர்கள் உண்மையான ஹிந்துக்களாக இருக்க முடியாது. நான் முஸ்லிம்களை நேசிக்கிறேன் என்றால், நான் ஒரு உண்மை யான ஹிந்துவாக இருக்கிறேன் என்று அர்த்தம். இதெல்லாம் காங்கிரஸ்காரர்களுக்குப் புரியாது; விளங்காது. குறுகிய எல்லைக் கோட்டிற்குள் நின்று செயல்பட்டுத்தான் அவர்களுக்குப் பழக்கம்.

முஸ்லிம்களுக்கு பல பிரச்சனைகள் இருக்கின்றன; சிரமங்கள் இருக்கின்றன. இவற்றை யெல்லாம் கவனிப்பதற்கு அவர்களுக்கென ஒரு ஸ்தாபனம் அவசியமானதே. அந்த வேலையைத் தான் முஸ்லிம் லீக் செய்து கொண்டிருக்கிறது. இன்று முஸ்லிம் லீக் பலமான தொரு கட்சியாக விளங்குகிறது. அதனுடைய தலைவரை நான் நீண்ட காலமாக அறிவேன். அவர் ஒரு தேசீயவாதி; தைரிய சாலி; புத்திசாலி. இன்று இவரது தலைமையில் முஸ்லிம் லீக் பலமிக்க கட்சியாக இந்நாட்டில் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. முஸ்லிம்களின் உரிமைகளை இந்த ஸ்தாபனத்தின் மூலமாகத்தான் நீங்கள் பெறவேண்டும்; பெற முடியும். இது உங்களுடைய நாடு. இதிலிருந்து உங்களை யாரும், எந்த சக்தியாலும், வெளியேற்றிவிட முடியாது.

இப்பொழுது நான் இங்கு வந்து உங்கள் முன்பு நிற்பதெல்லாம், கொள்கையற்ற காங்கிரஸ் கட்சியின் ஆட்சிக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்பதற்காகத்தான். திராவிட முன்னேற்றக் கழகம், முஸ்லிம் லீக், சுதந்திரக்கட்சி ஆகியவை ஒன்றாக செயல்பட்டு, வருகிற பொதுத் தேர்தலில் காங்கிரஸ் காரர்களைத் தோற்கடிக்க வேண்டும். இது நீங்கள் இந்நாட்டிற்குச் செய்யும் தொண்டாகும். கடமையாகும். நான் உங்களிடம் கேட்டுக் கொள்வதெல்லாம், நீங்கள் ஒற்றுமையாக இருங்கள்; காங்கிரசை தோற்கடியுங்கள் என்பதுதான். இதை உங்களிடம் நேரில் சொல்லிவிட்டுப் போகத்தான் நான் இங்கு வந்துள்ளேன்.''

ஆதாரம்; ''நுஸ்ரத்'' உர்தூ வார இதழ்
18-1-65



# துருக்கி நாட்டின் தந்தை கமால் பாட்சாவின் உதாரணம்

1962-ம் ஆண்டு நடை பெற்ற பொதுத் தேர்தலின்போது, காஞ்சிபுரம் சட்டமன்றத் தொகுதியிலிருந்து போட்டியிட்ட அறிஞர் அண்ணு அவர்கள் தோற்று விட்டார். ஆனுல் தி.மு.கவைச் சேர்ந்த 50 பேர் இத்தேர்தலில் சட்டமன்ற உறுப்பினர்களாகிவிட்டனர். திராவிட முன்னேற்றக் கழகமும் முஸ்லிம் லீகும் முதன் முதலாக இத்தேர்தலில்தான் கூட்டுச் சேர்ந்தது என்பது நினைவு கூரத்தக்கது.

1957-ம் ஆண்டு பொதுத் தேர்தலின் போது 15 இடங்களை சட்ட மன்றத்தில் பெற்ற தி.மு.க, 1962-ம் ஆண்டுத் தேர்தலில் 50 இடங்களைக் கைப்பற்றியது. இதைக் கொண்டாடும் வகையில் மதருஸ் மெரீனு கடற்கரையில் 4-3-62 அன்று பாராட்டுக் கூட்டம் ஒன்று தி.மு.க. வினரால் நடத்தப்பட்டது. அப்பாராட்டுக் கூட்டத்தில் காயிதே மில்லத் அவர்களும் கலந்து உரை யாற்றினுர்கள். அச்சமயம் அவர்கள் கூறியதாவது :

இந்த வெற்றி விழாவில் கலந்து கொள்வதில் நான் மன நிறைவு கொள்கிறேன். ஐம்பது சட்டமன்ற உறுப்பினர்களை நமது தோழமைக் கட்சி தமிழ்நாடு சட்டப் பேரவையில் பெற்றிருந்த போதிலும், இவ்வெற்றி முழுமையானதாக அமையவில்லை என்ற ஏக்கம் இங்கு ஒரு சிலரிடம் இருப்பதை நான் காண்கிறேன்; உணருகிறேன். அறிஞர் அண்ணு அவர்கள் இத்தேர்தலில் வெற்றி வாய்ப்பினைப் பெறவில்லை என்பது உண்மையே என்ருலும், அதைக் கண்டு நாம் தைரியத்தை இழந்துவிட வேண்டியதில்லை. மனச்சோர்வு அடைந்து விடக் கூடாது.

வரலாற்றில் இம்மாதிரி எல்லாம் நடப்பது சகஜம். அதைக் கண்டு துவண்டுவிடக்கூடாது. மாருக முன்னைவிட முனைப்புடன் நமது லட்சியத்தை நோக்கி நாம் வெற்றி நடை போடவேண்டும். வரலாறு கற்பித்துத் தரும் பாடம் இது. உலக வரலாற்றில் மாபெரும் தலைவர்கள் பலரும் ஆரம் பத்தில் தோல்வியைத் தழுவி விட்ட பின்னர், இறுதியில்தான் வெற்றிக்கனியை தட்டிப் பறித்துச் சென்றிருக்கிருர்கள். துருக்கிய வரலாற்றிலிருந்து ஒரு நிகழ்ச்சியை இங்கு நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

முதலாவது உலக யுத்தத்தில் (1914-1918) துருக்கி தோற்றுப் போனது, ஆங்கிலேயர் களும் பிரஞ்சுக்காரர்களும் அப்போரில் வெற்றி பெற்று விட்டார்கள். துருக்கி சாம்ராஜ்ஜியத்தைச் சேர்ந்த பிரதேசங்களையெல்லாம் அந்த வல்லரசுகள் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டன. அத்துடன் அவர்கள் நிற்கவில்லை. துருக்கி நாட்டையே பல கூறுகளாகப் போட்டு பிரித்து விடுவ தெனவும் அவர்கள் முயற்சிக்கலானுர்கள். கிரேக்கர்கள், இத்தாலியர்கள், பால்கன் பகுதியைச் சேர்ந்த ஐரோப்பிய இனமக்கள் ஆகியோரை துருக்கிக்கு எதிராக பிரிட்டனும் பிரான்சும் தூண்டி விட்டு சண்டை போடச் செய்தன. அந்நாட்டின் இக்கட்டான இத்தருணத்தில்தான் துருக்கியில் கமால் பாட்சா என்ற மாவீரன் தலை தூக்கினுர்.

எஞ்சி இருந்த துருக்கிய ராணுவ வீரர்களை ஒன்று திரட்டி, அவர்களுக்கு உணர்ச்சியையும் உற்சாகத் தையும் ஊட்டி, போர்க்களம் நோக்கிப் புறப்படச் செய்தார் மாவீரன் கமால் பாட்சா. கிரேக்கப் படைகளை எதிர்த்து இவரின் தலைமையில் 1922ம் ஆண்டில் ஒரு முனையில் கடுமையாகச் சண்டை நடந்து கொண்டிருந்தது. குதிரைமீது அமர்ந்த வண்ணம் கமால் பாட்சா யுத்த களத்தில் அங்குமிங்கும் சென்று உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டிருந்தார்.

எதிர் பாராத விதமாக எதிரியின் குண்டு ஒன்று, கமால் பாட்சா சவாரி செய்த குதிரையின் மீது பாய்ந்துவிட்டது. அது சுருண்டு கீழே விழுந்து மடிந்துவிட்டது. அக்குதிரை மீது அமர்ந் திருந்த கமால் பாட்சாவும் கீழே விழுந்து விட்டதனுல் பலத்த அடிதான். உயிருக்கு ஆபத்தில்லை என்ருலும் ஊமை காயங்கள் இருக்கத்தான் செய்தன.

படை தளபதி கீழே விழுந்து காயமடைந்து விட்டார் என்ற செய்தி யுத்தகளத்தில் பரவியதும் அவரது உதவி தளபதிகள் பலரும் கமால் பாட்சாவைச் சுற்றிலும் கூட்டி விட்டனர். அடுத்து என்ன செய்வது எனத் தெரியாது அலமலந்து நின்றனர். அப்பொழுது கமால் பாட்சா தமது சகாக்களைப் பார்த்துக் கூறினர். ''யுத்த களத்தில் எதிரிகளுடன் தாய்நாட்டிற்காக நாம் போராடிக் கொண்டிருக்கிறோம். என்னைப்பற்றி கவலைப் பட்டு என்னைச் சுற்றிலும் நின்று கொண்டிருப்பதில் ஒரு பிரயோசனமும் இல்லை. எனக்கு அதிகக் காயம் ஒன்றும் இல்லை; என்னை நான் சமாளித்துக் கொள்வேன். நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு இடப்பட்ட கட்டளைகளை நிறைவேற்றுங்கள். உங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு விரைந்து சென்று உங்கள் கடமையை செய்து முடியுங்கள் தைரியத்தை இழந்து விடாதீர்கள்''.

இவ்வார்த்தைகளை செவிமடுத்ததும் பல தளகர்த்தர்களும் அவரவர் இடங்களுக்குச் சென்று போரைத் தொடர்ந்து நடத்தினர்கள். அப்போரில் கிரேக்கப் படைகள் தோற்கடிக்கப் பட்டு பின்வாங்க நேரிட்டது. இது வரலாற்றில் நிகழ்ந்த ஒரு காட்சி.

இன்று அறிஞர் அண்ணு வெற்றிபெருமல் இருக்கலாம். அவரது தம்பிமார்களாகிய நீங்கள் உங்கள் கடமையை தொடர்ந்து செய்யுங்கள். தைரியத்தை இழந்து விடாதீர்கள். சட்ட மன்றத்தில் இடம் பெற்ற கழக உறுப்பினர்கள் தங்களது பணியைச் சரிவரச் செய்தால் உங்கள் தலைவர் தாமாகவே அவருக்குரிய பதவிக்கு உயர்ந்து விடுவார்! இதில் யாதொரு சந்தேகமும் இல்லை.''

*[19-3-62 ம் தேதி ''நுஸ்ரத்'' உர்தூ வார இதழில் இருந்து எடுக்கப்பட்டது]*

## குருக்களைக் கடித்த நரி நரகத்துக்குத்தான் செல்லும் !

மதருஸ் தம்பு செட்டி தெரு ஜமால் மொகிதீன் தோல் கம்பெனியில் 1928 முதல் 1959 வரை நான் டைப்பிஸ்டாகப் பணி புரிந்தேன். ஆரம்பத்தில் இக் கம்பெனியில் மானேஜர் பொறுப்பில் இஸ்மாயில் சாகிப் இருந்தார்; பின்னர் இக்கம்பெனியில் பங்காளிகளில் ஒருவரானர். ஜமால் குடும்பத்தில் திருமணம் செய்து கொண்டார். இஸ்மாயில் சாகிபு தீவிர காங்கிரஸ்காரர்; காந்திஜீ ஆரம்பித்த ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டார். எப்பொழுதும் கதர் துணிதான் அணிவார். ஆங்கில ஆட்சியாளர்கள் யுத்த நிவாரண நிதி கேட்டு ஜமால் மொகிதீன் கம்பெனிக்கு அடிக்கடி வருவார்கள். கம்பெனி சார்பாக சர்காருக்கு நிதி அளிப்பதும் உண்டு, ஆனல் அந்த 'செக்'களில் இஸ்மாயில் சாகிபு கையெழுத்திடமாட்டார்; பிற பங்காளிகளைக் கொண்டே நிதி வழங்க செய்வார். அவ்வளவு தூரம் அவர் தேசீயப் பற்றுடையவர். மௌலான முஹம்மதலி, மௌலான ஷௌக்கத் அலி, டாக்டர் அன்ஸாரி, ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் ஜாகிர் ஹுசைன் போன்ற தலைவர்கள் மதருஸ் வரும் சமயங்களில் அவர்களை வரவேற்க இஸ்மாயில் சாகிப் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச் செல்வார். அப்பொழுது நானும் கூடச் செல்வதுண்டு. வட இந்தியத் தலைவர்கள் பலரும் இவரின் மீது எவ்வளவு பற்றும் மதிப்பும் வைத்திருந்தார்கள் என்பதை நான் நேரில் பார்த்திருக்கிறேன். அவர் சொன்ன குட்டிக் கதை ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது.

ஒரு ஊரில் ஒரு குருக்கள் இருந்தார். ஒரு நாள் அவரை நரி ஒன்று கடித்து விட்டது. வலி பொறுக்க முடியாது குருக்கள் துடிதுடித்துக் கொண்டிருந்தார் இதை கண்ணுற்ற பாமர மக்கள் ''இது பெரிய அநியாயம்'' என்றுதான் அனுதாபம் தெரிவித்தனரே தவிர, குருக்களுக்கு வைத்தியம் செய்ய ஒரு நடவடிக்கையும் மேற்கொள்ள ஒருவரும் முன்வந்தார்கள் இல்லை. குருக்களைக் கடித்த நரி நரகத்திற்கு தான் செல்லும் என பலரும் சாபமிட்ட வண்ணம் இருந்தனர் என்றாலும் உருப்படியான நடவடிக்கைகளில் இறங்க வேண்டும் என்ற எண்ணம் ஒருவர் மனதிலும் உதிக்கவில்லை. மக்களுடைய சுபாவமே அப்படித்தான். அடுத்தவன் துன்பத்தைப் பார்த்து அனுதாபப்படுவார்களே தவிர அதை போக்க உருப்படியாக ஒன்றையும் செய்ய மாட்டார்கள். இதுவே உலகப் பழக்கமாக இருக்கிறது.

**மதருஸ்:- கே. டி. சடகோபன் அய்யங்கார்**

# உலகில் அமைதியின்மையைப் போக்க சன்மார்க்கமே சரியானவழி

[10—10—1968 குமுதம் இதழில் ''தலைவரரங்கம்'' பகுதியில் தலைவர் அல்ஹாஜ் காயிதே மில்லத் அவர்கள் தெரிவித்த அரிய கருத்துக்கள்]

அமைதியின்மையும், குழப்பமும், நாளுக்கு நாள் பெருகி வாழ்வை யொட்டிய எல்லாப் பிரச்சனைகளிலும் தலையிட்டு நம்மைத் திணற அடித்துக் கொண்டிருக்கும் வேளையில் இதிலிருந்து மீண்டு புத்துணர்வு பெற என்ன வழி?

இப்போதுள்ள இளைஞர்களுக்கு நான் சொல்ல விரும்புவது:—

சன்மார்க்கம் என்றால் என்ன?

எந்தக் காரியத்தைச் செய்தாலும் எது சரி எது தவறு; நல்லது எது கெட்டது எது என்று தீர ஆராய்ந்து செயல்படும் முறைதான் சன்மார்க்கம்.

செய்கிற ஒவ்வொரு செயலிலும் கடைப் பிடிக்கப்படுகிற இந்த உயர்ந்த கொள்கை நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து சமூகக் கேடுகளையெல்லாம் களைந்து நாம் பெரிதும் விரும்புகிற ஏற்றத் தாழ்வுகள் அற்ற சோஷலிசத்தை அமைத்துக் கொடுக்கும்.

எல்லாம் கெட்டுப் போய்விட்டது என்று கூக்குரல் எழுப்ப எனக்குப் பிடிக்காது. சுபிட்சமும், வளமான வாழ்க்கையும் பெற்று நம்முடைய தேசம், வரப்போகிற இளையதலைமுறையினரால் புதுப் பொலிவு அடையப் போகிறது என்று ஒவ்வொரு கணமும் நம்புகின்றவன் நான்.

செய்வன திருந்தச் செய்வதும் நல்லது எது, கெட்டது எது என்று தெளிந்த பின் கடைப் பிடிக்கும் கொள்கையும் அரசியல்வாதிக்கு அப் பாற்பட்டது என்ற கருத்து தவறானது.

வாழ்வுச் சங்கிலியில் ஒவ்வொரு கரணையும் அரசியலோடு சம்பந்தப்பட்டதாக இருக்கிறது. ஆகவே அரசியல்வாதிக்குத்தான் பொறுப்பும் கடமை உணர்வும் அதிகம் இருக்க வேண்டும்.

மந்திரி பதவி கிடைத்தவுடன் தாம் ஒரு 'தனிவர்க்கம்' என்ற எண்ணம் ஏற்பட்டுவிடுமே யானால் அதைவிட சமுதாயத்திற்குத் தீங்கு பயப்பது வேறு எதுவும் இருக்க முடியாது.

எந்தப் பிரச்சினையிலும், தான் மக்களின் நிலையில் இருந்தால் என்ன செய்வோம் என்று சீர் தூக்கிப் பார்க்க வேண்டும்.

1947ல் நான் எதிர்க்கட்சித் தலைவனாக இருந்த போது, என் ஜீ ஓக்களின் அடிப் படைச் சம்பளம் 100 ரூபாயாகவது இருக்க வேண்டும் என்று சொன்னேன்.

வாழ்க்கையின் அத்தியாயவசியத் தேவை களுக்காக அவர்கள் போராடிக் கொண்டிருக்கும் போது முழுக்கவனத்துடன் வேலை செய்ய முடியாது. எத்தனையோ என். ஜி. ஓக்களின் வறுமை நிலைகளை நேரில் பார்த்து நெகிழ்ந்திருக் கிறேன். வேலையில் முழுக்கவனமும் செலுத்த முடியாத நிலையில் அவர்களால் இயக்கப்படும் நிருவாக யந்திரம் பழுதடைந்ததாகவே போய் விடும், லஞ்சம் முதலிய நியாய மற்ற வழிகளில் அவர்கள் பணம் ஈட்டும் முயற்சிகளைத் தவிர்க்க முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

அரசு ஊழியர்களுக்கும் ஓர் உன்னதமான கடமை உண்டு. எக்காரணம் கொண்டும் ஸ்டிரைக் முதலிய தேச விரோதமான பணிகளில் அவர்கள் ஈடுபடக்கூடாது. அதை அவர்கள் அடிப்படை கொள்கையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸ்டிரைக் மூலம் ஏற்படும் நாச வேலைகளின் தீய விளைவுகளைச் சிந்திக்க வேண்டும்.

சம்பள விகிதம் மத்திய அரசு ஊழியர் களுக்கும் மாநில அரசு ஊழியர்களுக்கும் முன்னைப் போல் அல்லாமல் பல மடங்கு உயர்ந்திருக் கிறது. புதிய வரிகளைப் போடாமல் அரசாங்கம் அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை ஏற்கும் வழிவகைகளை மனம் திறந்து பேச்சு வார்த்தைகளை நடத்திப் பரிகாரம் காண முயல வேண்டும்.

லஞ்ச ஒழிப்புக் கமிட்டியில் ஓர் உறுப்பினனாக இருந்தபோது முன்னாள் மந்திரி திரு. நந்தாவிடம் ஒரு முறை சொன்னேன் :

'நாட்டிலுள்ள எல்லா மந்திரிகளையும் கூட்டி, பிற்கால சந்ததியினரின் நல்வாழ்வுக்காக, தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காக அவர்கள் எப்போதும் உயர்ந்த நெறிமுறைகளையும், கண்டிப்பையும் பின்பற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுங்கள். மக்களின் பிரதிநிதி களாக விளங்கும் அவர்களின் உயர்ந்த கண்ணிய மான நேர்மையான, சத்திய நடவடிக்கை களினால் கீழே இருப்பவர்கள் கட்டுப்பாடும் ஒழுக்க மும் உள்ளவர்களாக விளங்குவார்கள். 25 ரூபாய் லஞ்சம் வாங்கிவிட்டதற்காக ஓர் ஏழை குமாஸ் தாவைத் தண்டிப்பதால் பெரிய பலன் ஒன்றும் ஏற்பட்டுவிட முடியாது.''

ஆரம்ப நாட்களிலிருந்தே விவசாயத்துறை அபிவிருத்திக்கு நாம் அதிக அளவு மதிப்புக் கொடுத்திருந்தால் இப்போது நிலைமை வேறு விதமாக இருந்திருக்கும். இப்போதும் நிலைமை மோசமாகிவிடவில்லை,

ஏழை விவசாயிக்கு அதிக சிரமமில்லாமல் உர வினியோகமும் கெடு தவறாத நீர்ப்பாசன வசதியும் செய்து கொடுத்தால் நம்முடைய விளை நிலங் கள் பொன்னாகக் கொழித்து சுபிட்சத்தைக் கொண்டு வந்து சேர்க்கும்.

இரண்டு மகா யுத்தங்களுக்குப் பிறகு வெகு வாக வளர்ச்சி பெற்றுவிட்ட ஐரோப்பிய நாடு களை விட மக்கள் சக்தியில் நாம் குறைந்து போய்விடவில்லையே!

இந்தியாவில் தமிழகப் பகுதிதான் பூகோள ரீதியில் மிக்கப்பழமை வாய்ந்த பூமி. தகுந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் அதன் கனிவளங் களைக் கண்டுபிடித்துப் பயனடையலாம்.

எதிர்காலத் தமிழகம் ஒளியுள்ளதாக விளங் கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

*[நன்றி : உரிமைக்குரல் 14—10—1968]*



## விளம்பரத்தை விரும்பாதவர்

வாணியம்பாடி நகர சபையின் சேர்மனாக 1971-ம் ஆண்டு நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். நகர் மன்ற அலுவலகத்தில் தலைவர் அவர்களுடைய போட்டோவை வைக்க வேண்டும் என்று எனக்கு ஒரு தணியாத ஆசை. காயிதே மில்லத் அவர்களின் அனுமதி பெற்றே இக்காரியத்தில் இறங்க வேண்டும என தீர்மானித்து சென்னை சென்று அவர்களது அனுமதியைக் கோரினேன். அதற்கு அவர்கள் இசைவு தரவில்லை. என் உருவப் படத்தைப் பார்த்துத்தானா எனது நினைவு வரவேண்டும்? அது தேவையில்லை. என்னுடன் பழகியதை நினைவில் வைத்தே என்னை நீங்கள் ஞாபகப் படுத்திக் கொண்டால் போதுமானது. அதுவே சரியான 'முஹப்பத்' ஆகும், என சமா தானப் படுத்தி என்னை ஊருக்கு அனுப்பி விட்டார்கள்.

அவர்கள் உயிருடன் இருந்தவரை அம் முயற்சியில் நான் ஈடுபடவில்லை. தலைவர் அவர் களது மறைவுக்குப் பின்னர் காயிதே மில்லத் போட்டோவை வாணியம்பாடி நகர் மன்றத்தில் அன்றைய தமிழக முதலமைச்சர் கலைஞர் அவர்களைக் கொண்டு திறந்து வைத்த பிறகுதான் எனக்கு ஒரு மனத்திருப்தி, ஆறுதல், எனது நகரசபைத் தலைவர் பதவி அன்றுதான் முழுமை பெற்றதாக ஓர் உணர்வு.

**A. P. அப்துல் மஜீது, வாணியம்பாடி.**

# கிலாபத் இயக்கம் பற்றிய சில தகவல்கள்

மதருஸ் நகரில் கிலாபத் இயக்கம் சம்பந்தமாக பெரிய தொரு மாநாடு 1920ம் ஆண்டு மே மாதம் 17ம் தேதியன்று நடை பெற்றது. அம்மா நாட்டில் மௌலானா ஷவுக்கத்தலி கலந்து கொண்டு உரையாற்றினார்கள்.

மதருஸ் நகரில் 1919ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20ம் தேதியன்று கிலாபத் குறித்து பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கிலாபத் பதவியை துருக்கிசுல்தான்கள்தொடர்ந்து வகித்து வர வேண்டும் என்ற தீர்மானத்தை அக்கூட்டத்தில் சர் முஹம்மது உஸ்மான் முன்மொழிந்தார். திவான்பகதூர் பி. தியாகராஜ செட்டியார் அதை வழிமொழிந்தார். அத்தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

கிலாபத் கமிட்டி சார்பில், 13-10-1920 அன்று திருவல்லிக்கேணி சௌக்கில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஜனுப் யாகூப் ஹஸன் சேட் இக் கூட்டத்தில் உரையாற்றினர். கிலாபத் இயக்கத்திற்கு தொண்டர்களைத் திரட்டுவதென்றும் அவர்களுக்கு முறையான பயிற்சிகள் அளிப்பதென்றும் இக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

திருநெல்வேலி மாவட்டத்தில் 1922ம் ஆண்டு ஜூலை மாதம் அலி சகோதரர்களின் தாயார் ''பீ அம்மாள்'' சுற்றுப்பயணம் செய்தார்கள். தென்காசி, பேட்டை, ஆகிய ஊர்களில் கிலாபத் குறித்து நடைபெற்ற பொதுக்கூட்டங்களில் அவர்கள் உரையாற்றினார்கள்.

மதருஸ் கடற்கரையில் 7-11-1920 அன்று கிலாபத் சம்பந்தமான பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. மௌளவி பஸ்லுல்லா என்பவர் தலைமை வகித்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் கண்டித்தும் கிலாபத் இயக்கத்தை ஆதரித்தும் பலர் காரசாரமாக சொற்பொழிவாற்றினார்கள்.

காந்திஜீயும் அலி சகோதரர்களும் 1920ம் ஆண்டு இறுதி வாக்கில் மதருசுக்கு விஜயம் செய்வதாக இருந்தது. அச்சமயம் கிலாபத் நடவடிக்கைகள் சூடு பிடிக்கின்றன. முஹமடன் காலேஜில் பயிலும் மாணவர்களை படிப்பை நிறுத்திவிட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபடும்படி பலரும் தூண்டி விட்டனர். மாணவர்களில் அமீர் அலி என்பவரும் நுஹாஜிர் (Nuhajir) என்பவரும் சக மாணவர்களை ஊக்குவித்தனர். அலிகர் முஸ்லிம் சர்வகலாசாலையில் பயிலும் மாணவர்கள் படிப்பை நிறுத்திவிட்டு வெளியேறுவது போல இக்கல்லூரியிலும் செய்யவேண்டும் என மாணவர்கள் துடிக்கின்றனர். அச்சமயம் அக்கல்லூரியின் பிரின்சிபாலாக இருந்த W. C. டக்லஸ் (Douglas) என்ற என்ற ஆங்கிலேயர் மாகாண அரசாங்கத்திற்கு மாணவர்கள் மனோபாவம் குறித்து 25-10-1920 அன்று ஒரு கடிதம் எழுதினர். அரசாங்கம் உஷாராகி தடுப்பு நடவடிக்கைகளில் இறங்கிற்று.

முஹம்மது நதீருல்லா, முஹம்மது ஐஹூர் அஹமது, முஹம்மது அப்துல் ரஹீம் மூவரும் ஒன்று சேர்ந்து தங்களை கிலாபத் சேவகர்கள் (Servants of Khilafat) என அழைத்துக்கொண்டு, அந்த இயக்கத்தை ஆதரித்து துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டனர். மக்களைத் தட்டி எழுப்பினார்கள்.

மாணவர்களை வகுப்புகளுக்குச் செல்லவேண்டாம் என கீழ்க் கண்டவர்கள் பிரச்சாரம் செய்வதாக போலீஸ் ரிப்போர்ட்கள் தெரிவிக்கின்றன. அவர்கள் வருமாறு :- அப்துல் மஜீது ஷரர், பாஷா கம்பெனியைச் சேர்ந்த முஹம்மது வலியுல்லாஹ் பாஷா. கிடங்குத் தெருவைச் சேர்ந்த வியாபாரி ஹாஜி அப்துல்ரகீம், முஹம்மது நத்தர் சாகிப். 1920-ம் ஆண்டு நவம்பர் மாதம் 12-ம் தேதி போலீஸ் அறிக்கையில் இவ்விபரங்கள் காணப்படுகின்றன.

மதருஸ் ஜாம்பஜாரில் 1920-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 20ம் தேதியன்று சாகுல் ஹமீது என்பவர் தலைமையில் பெரிய தொரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி மற்றும் தலைவர்கள் அதில் சொற்பொழிவாற்றினார்கள். சட்டசபை பகிஷ்கரிப்பை ஆதரித்து தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

கிலாபத் இயக்கத்தை ஆதரித்தும் ஆங்கில அரசுக்கு எதிர்ப்புத் தெரிவித்தும் கீழ்க்கண்டவர்கள் தங்களது பட்டங்களைத் துறந்தார்கள்.

(1) T. அமிருத்தீன் சாகிபு 'கான் பகதூர்' என்ற பட்டத்தைத் துறந்தார்.

(2) கௌரவ மாஜிஸ்ட்ரேட்டாக இருந்த செய்யது அப்துல் காதர் ஜிலானி என்பவரும் ''கான் பகதூர்'' பட்டத்தைத் துறந்தார்.

(3) பிரபல தோல் வியாபாரி ஜமால் மொகிதீன் ''கான் சாகிப்'' என்ற பட்டத்தைத் துறந்தார்.

(4) அப்பாஸ் ஹுசைன் சாகிப் என்பவரும் ''கான் சாகிப்'' பட்டத்தைத் துறந்தார்.

(5) ஹாஜி ஜமால் முஹம்மது சாகிபின் சகோதரர் ஜமால் இப்ருஹீம் சாகிபு 1920 ம் ஆண்டு செப்டம்பரில் கௌரவ மாஜிஸ்ட்ரேட் பதவியைத் துறந்தார்.

(6) மௌலவி ஜஹீத் ஹுசைன் சாகிப் என்பவர், ஆங்கில அரசால் தமக்கு அளிக்கப்பட்ட ''ஷம்சுல் உலமா'' என்ற பட்டத்தைத் துறந்தார்.

[1-12-1920 ம் தேதியிட்ட ஜி. ஓ. எண் 307]

சென்னை பிரஸிடென்ஸி கல்லூரியில் கல்வி கற்றுக் கொண்டிருந்த மாணவன் அப்துர் ரகுமான் என்பவரும் மதரஸே ஆஜம் கல்விக் கூடத்தில் பயின்று கொண்டிருந்த முஹ்யித்தீன் என்ற மாணவனும் 1920 ம் ஆண்டு நவம்பர் மாதம் 6 ம் தேதியன்று கிலாபத் இயக்கம் காரணமாகப் படிப்பை நிறுத்திவிட்டு கல்லூரிகளை விட்டு வெளியேறினார்கள்.

[போலீஸாரால் மாதம் இருமுறை அரசாங்கத்திற்கு சமர்ப்பிக்கப்படும் "Fortnighty Report" ல் இருந்தும் Under Secretary (Public) வுடைய ரகசிய பைல்களில் இருந்தும் மேற்கூறிய தகவல்களைத் திரட்டித் தந்தவர் பேராசிரியர் K. P. பீர் முஹம்மது சாகிப்.]

## மனிதாபிமானம் மிக்கவர் !

1962-ம் ஆண்டு பொதுத் தேர்தலின்போது திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் முஸ்லிம் லீக்கிற்கும் உடன்பாடு ஏற்பட்டது; நெருக்கம் உண்டானது. அறிஞர் அண்ணாவும், காயிதே மில்லத்தும் அடிக்கடி சந்தித்து கருத்துகளை பரிமாறி கொண்டார்கள். தேசிய நெடுஞ்சாலை வழியாக குரோம் பேட்டையைத் தாண்டிச் செல்லும் பொழுது சில சமயங்கள் தனது காரை தயா மன்ஸிலுக்கு திருப்பு என திடீரென அண்ணா கூறி விடுவார். எதிர் பாராத விதமாகத் தானாகவே முஸ்லிம் லீக் தலைவரைப் பார்க்க அண்ணா போவதுண்டு.

ஒரு சமயம் அண்ணா அப்படி குரோம்பேட்டை காயிதே மில்லத் இல்லத்திற்குச் சென்ற சமயம் நானும் கூடச் சென்றிருந்தேன். அண்ணாவைக் கண்டதும் லீக் தலைவர் நேரில் வந்து எதிர்கொண்டழைத்துச் சென்றார்கள். காயிதே மில்லத் முகத்தில் மகிழ்ச்சி களை தெரிந்தது. இரு தலைவர்களும் வீட்டினுள் சென்று 25 நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் வெளியில் வராந்தாவில் அமர்ந்திருந்தோம். எங்களுக்கெல்லாம் தேனீர் கொடுக்கப்பட்டது.

அண்ணா அவர்கள் மிகவும் சுகமில்லாமல் அடையாறு ஆஸ்பத்திரியில் இருந்தபொழுது காயிதே மில்லத் அடிக்கடி ஆஸ்பத்திரிக்கு வந்து விசாரித்து விட்டுச் செல்வார்கள். அண்ணாவுக்கு ரொம்பவும் சீரியஸாக இருக்கிறது என்று தெரிந்ததும் காயிதே மில்லத் இரவு ஒரு மணிக்கு ஆஸ்பத்திரிக்கு வந்தார்கள். அச்சமயம் காவலர்கள் அவர்களை உள்ளே விட மறுத்தார்கள். வெளியில் கவலையோடு அமர்ந்திருந்த எங்களுக்கு கோபம் வந்து விட்டது. காயிதே மில்லத்தை இன்னார் என்று நாங்கள் அடையாளம் சொல்லி உள்ளே அனுப்பி வைக்கும்படி எவ்வளவோ சொன்னோம். எங்களது மேலிட உத்தரவு அப்படி என்று காவலர்கள் பிடிவாதம் செய்தனர். தி. மு. க. தொண்டர்களுக்குக் கோபம் வந்து விட்டது. காவலர்களை கன்னா பின்னா என்று திட்டி விட்டோம். அப்பொழுது காயிதே மில்லத் எங்களைப் பார்த்து "அப்படியெல்லாம் பேசக்கூடாது; போலீஸார் அவர்களது கடமையைச் செய்கிறார்கள்" என சமாதானப் படுத்தினார்கள்.

நாங்கள் போட்ட கூச்சலைக் கேட்டு உயர் அதிகாரிகள் பலர் ஆஸ்பத்திரிக்குள் இருந்து வெளியே வந்தனர். லீக் தலைவரைப் பார்த்ததும் அவர்களை உள்ளே அழைத்துச் சென்றனர். அண்ணாவை பார்த்து விட்டுத் திரும்பிய காயிதே மில்லத் வெளியே வந்ததும் எங்கள் பக்கம் வந்து அண்ணாவின் நிலைமையை எடுத்துச் சொன்னார்கள்; இது எங்களுக்கு மிகுந்த ஆறுதலாக இருந்தது. மணிக்கணக்கில் அல்ல நாட்கணக்கில் ஆஸ்பத்திரி வாசலில் உயிரைக் கையில் பிடித்துக் காத்துக் கொண்டிருந்த கழக கண்மணிகளான எங்களுக்கு, காயிதே மில்லத் எங்களிடம் வந்து ஒரு சில ஆறுதல் மொழி சொல்லிச் சென்றது என்னவோ போலிருந்தது. அவர்களிடம் காணப்பட்ட மனித நேயம் எல்லாவற்றையும் விட மிஞ்சி நின்றது.

திருவண்ணாமலை **எஸ். முருகையன்,** நகர் மன்ற தலைவர்

# பிற தலைவர்களுடன் தலைவர்

மலேஷியாவில்



இலங்கை முஸ்லிம் தலைவர்களுடன்



சர் முகம்மது உஸ்மானுடன்




பட்டம் தாணுப்பிள்ளையும காயிதே மில்லத்தும்



அல்ஜீரியத் தூதுவருடன்



சீதி சாகிபும் தலைவரும்



நூர் முஹம்மது அஹமது சேட்டுடன்



தளபதியும் கோயாவும்



1969 தமிழக முதல்வராக கலைஞர் பொறுப்பேற்றவுடன்
காயிதே மில்லத் இல்லம் சென்று ஆசி பெற்றார்.



ஜனாதிபதி ஜாகிர் ஹுசைனுடன்



மெரினா கடற்கரை கூட்டம்



மேற்கு வங்கத் தலைவர்களுடன்



ஹஸனுஸ்ஸமானும் சிக்கந்தர் முல்லாவும்



முஸ்லிம் லீக் எம். பி. களும் அரபு தூதுவரும்



விருகம்பாக்கம் தி. மு. க. மாநாடு (1966)



காயிதே மில்லத், அறிஞர் அண்ணா, ம. பொ. சி,

விழாத் தலைவர் அல்ஹாஜ் மு. ந. அப்துர் ரஹ்மான் சாகிப்



நாஞ்சில் மனோகரனுடன்



ஹைதராபாத் மௌலானாவுடன்



நூர் முஹம்மது அஹமது சேட்டுடன் பம்பாயில் ஊர்வலம்



கேரளா முஸ்லிம லீக் தலைவர்களுடன்



மதருஸ மாநகராட்சி வரவேற்பு (1970)



மதருஸ் மாநகராட்சி வரவேற்பு (1960)



1960 மதருஸ் மாநாடு






கோட்டைக் குப்பம் கூட்டம்



பம்பாய் ஊர்வலம் (1960)

# அண்ணாவும் காயிதே மில்லத்தும்


நெருக்கமான இரு தலைவர்கள்


ஹஜ்ஜுக்கு வழி அனுப்புகிறார் அண்ணா


முஸ்லிம் லீக் தலைமை நிலையத்தில்




திருச்சி அரிஸ்டோ ஹோட்டல் அதிபருடன்


காஞ்சிபுரத்தில்



கீழக்கரை முஸ்லிம் லீக் மாநாட்டில்



ஒலி முஹம்மது பேட்டை கூட்டம்



திருச்சி விழா (1965)



காஞ்சிபுரம் ஒலி முஹம்மது பேட்டை
தேர்தல் கூட்டம் (1962,





திருச்சி தேவர் ஹால் கூட்டம்

# பலகோணங்களில் காயிதே மில்லத்





தமிழக சட்டப்பேரவையை அலங்கரிக்கும் படம்





# காயிதே மில்லத் - குடும்பத்தினர்



சகோதரர்கள் நால்வர்



தந்தையும் தனயனும்



தம்பியுடையான் படைக்கஞ்சான்



தலைவரும் தர்ம பத்தினியாரும்



மியாகானும் மனைவியும்



ஹக்கீம் முஹம்மது இஸ்மாயில் சாகிப்



தலைவரின் தாயார்



இளைய சகோதரர் ஹாமீத் மியாக்கான்



தலைவரும் தர்ம பத்தினியாரும்



தாயாருடனும் மனைவியுடனும் மியாக்கான்



கோயாவின் மகளும் காயிதே மில்லத்தின் பேரன் பேத்திமார்களும்



பேத்தி யுடன்



தென்காசி சகோதரர்களுடன்





பேத்தி திருமணக் காட்சி



ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பும்போது



பேத்தி திருமண விழா (1971)



பேத்தி திருமண விழாவில் கலைஞரின் வாழ்த்து



பேத்தி திருமண விழாக் காட்சி



பேத்தி திருமண விழாக் காட்சி



பேத்தி திருமண விழாக் காட்சி



மல்லிமால் தெரு பூர்வீக வீடு

# இறுதிப் பயணம்



புதுக்கல்லூரி வளாகத்தில்



ஜனஸா தொழுகை



இரங்கல் கூட்டத்தில் கலைஞரும்,



இறுதி ஊர்வலம்



எம். ஜி. ஆரும்



புதுக்கல் லூரியில்



இரங்கல் கூட்டத்தில் பாபக்கி தங்கள் துஆ



அடக்கத்தலம் பழய தோற்றம் (வாலாஜா மஸ்ஜித்)



புதுப்பிக்கப்பட்ட அடக்கத்தலம்



வாலாஜா பள்ளியில் இரங்கல் கூட்டம்



பெரியாரின் ஆறுதல் (புதுக்கல்லூரி)



பால்ய முஸ்லிம் சங்கம், பேட்டை



மியான் பள்ளி முகப்பு

அளப்பரிய ஆர்வத்தையும் பிரத்தியட்சமாக உணர்ந்து கொண்ட நமது பிரதமர் கனம் ஜவ ஹர்லால் நேரு அவர்கள், நமக்கெல்லாம் ஒருவாக் குறுதியளித்தார்கள். ''நீங்கள் விரும்பும்வரை இந்தியை ஆட்சிப் பொதுமொழியாகக் கொண்டு வர மாட்டோம். அதுவரை, ஆங்கிலத்தையே நீடிக்கச் செய்வோம்'' என்று உறுதிமொழி யளிக்கப்பட்டது. அரசாங்கத்தின் பொறுப்பு மிக்க ஒரு தலைவர், அதிலும் பிரதம அமைச்சர் இப்படி உறுதி கூறிவிட்டு, பத்திரிக்கை வாயிலாக வும், பாராளுமன்றத்திலும் பகிரங்கமாக அந்த உறுதியை ஊர்ஜிதம் செய்துவிட்டு, மக்களை நம்பும்படியாகச் செய்து, திடீரென்று ஒருநாள் அது உறுதிமொழியல்ல, எனது சொந்தக் கருத்து என்று கூறினால் உலகம் என்ன நினைக்கும்?

இந்தி வெறியர்கள், நேருவை வசியப்படுத்தி உறுதியை மீறச் செய்து, பார்லிமெண்டில் மெஜா ரிட்டி பலத்தால் சட்டமாக்கி விட்டார்கள், இது தேசத்திற்கு இழைக்கப்பட்ட பெரிய ஹானி. நாளைய சரித்திரக்காரர்கள் இச் சம்பவத்தை நிச்சயம் வரலாற்றுச் சுவடிகளிலே பதிய வைக்கத் தான் போகிறார்கள். இது ஒரு குடியரசு நாடு, மக்களாட்சி நடைபெறுவதாகக் கூறப்படும் நாடு. ஆகவே, மக்கள் யாவரின் சம்மதத்தைப் பெற்ற ஆட்சிதான் நீடித்து நிரந்தரமாக நிலைத்திருக்கும்.

சமீபத்தில்தான் ஆங்கிலேய ஆதிக்கம் நம் நாட்டை விட்டு வெளியேறியது. அதற்குள், இனியொரு புது சுமையைச் சுமக்க மக்கள் நிச் சயமாக விரும்பமாட்டார்கள்.

ஒரு மனிதனின் இதய ஆழத்தின்கீழ் பதிந் துள்ள சக்திதான் மொழி. அந்த அருமை மொழியைக் காப்பாற்றித் தீர, யாரும் எதையும் தியாகம் செய்ய முன்வருவது இயற்கையேயாகும். மொழியானது மக்கள் உணர்ச்சிகளைக் கவரக் கூடி யது. எத்தகு சட்டமும், ஆட்சி பலமும் இந்த தாய்மொழி உணர்ச்சியை மாற்றிவிட முடியாது என்பது வரலாறு கண்ட உண்மை.

## நேற்று முளைத்தது:

இந்தி பாஷை ஆட்சிமொழியாவதற்குரிய யோக்கியதையைப் பெற்றிருக்கிறதா? அந்த பாஷை எப்பொழுது எந்த நிலையில், என்ன முறை யில் மொழி உருவம் பெற்றது என்பதை நாவலர் நெடுஞ்செழியன் உங்களுக்குத் தெளிவாக எடுத் துக் கூறியிருக்கிறார். இந்தி நேற்று வந்த பாஷை, இலக்கண, இலக்கிய நயமற்ற பாஷை.

நூற்றுக்கு நாற்பத்திரெண்டு பேர் இந்த நாட்டில் இந்திப் பேசுவதாக ஒரு பேச்சாள நண்பர் இங்கு சுட்டிக் காட்டினார். 'சமீபத்தில் அரசாங்க பிரசுரம் ஒன்று வெளியாகியிருக்கிறது. அதிலே ராஜஸ்தானி, பஞ்சாபி, உர்து, ஹிந்தி ஆகிய நான்கு மொழிகளைப் பேசுகின்றவர்களின் மொத்த எண்ணிக்கை நாற்பத்திரெண்டு சதவிகித மென தெள்ளத்தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது.

அன்று மகாத்மா காந்தி கூறியபோது இதே காங்கிரஸார் உர்தூ வேறு, ஹிந்தி வேறு என்று ஆர்ப்பரித்தார்கள். ஆனால் இன்றோ, உர்துவை யும், இந்தியோடு இணைத்து கணக்குக்காட்டுகிறார் கள்!

இந்தியைத் தனியாக எடுத்துக் கொண்டா லும், அது ஒரு மொழியாகுமா என்றால் இல்லை என்றே கூற வேண்டும். ஏனெனில் மீரட்டில் பேசுகின்ற இந்தியை காசியில் இருப்பவன் புரிந்து கொள்ள முடியாது. சிதைவுற்ற இந்த இந்தி மொழி மற்றவர் மீது பலவந்தமாகத் திணிக்கப் படுவதில் என்ன நியாயம் இருக்க முடியும்? தமிழ்ப் பெருமக்களே! நீங்களே தீர்ப்புக் கூறுங் கள்.

## அரசியல் நிர்ணய சபையில்:

மொழிவாரியாக மாகாணங்களை இந்த அரசு பிரித்ததின் விளைவாக, தாய் மொழிக்கு முக்கியத் துவம் பெருமளவில் ஏற்பட்டு விட்டது. இந்த உணர்ச்சியை காங்கிரஸ்காரர்களே தெரிந் தோ, தெரியாமலோ உருவாக்கி வைத்து விட் டார்கள். 'பக்குவமடையாத பூரணத்துவமில் லாத இந்தி பாஷையை ஆட்சி மொழியாக ஆக்கு வதைவிட, எல்லா வகையிலும் சிறப்பு மிக்க தமிழ் மொழியை ஆட்சி மொழியாக்கு வது முற்றிலும் நியாயம், சாலவும் பொருத்தமா னது என்பதாக நான் அன்றைக்கே அரசியல் நிர் ணய சபையில் எடுத்துக் கூறியிருக்கிறேன்.' இன்று அகில உலகமெல்லாம் ஆங்கிலம் பேசப் பட்டு வருகின்றது. ஆங்கில மொழியை தாய் மொழியாகக் கொண்டவர்கள் மூன்று கோடி மக்கள்தான். ஆக, எண்ணிக்கை பலத்தை

வைத்து, பொது மொழிப் பிரச்சினையை தீர்ப்பது என்பது புத்திசாலித் தனமான செயல் அல்ல.

## லீக் முடிவு

இந்தி எதிர்ப்பிலே முஸ்லிம் லீகும் சேர்ந்திருக்கிறது. இந்தியை வலுக்கட்டாயமாக ஆட்சி மொழியாக்குவது, தேச மக்களுக்குச் செய்யும் அநீதி என்று, முஸ்லிம் லீக் பிரதிநிதிகள் பார்லிமெண்டிலும் மற்ற சட்டமன்றங்களிலும் கூறி இருக்கிறார்கள். எந்த வகையில் இந்தி எதிர்ப்பு பிரச்சினையில், முஸ்லிம் லீக் பங்கு கொள்ளும் என்பதை முஸ்லிம் லீகின் கவுன்ஸில் கூட்டத்தின் வாயிலாக முடிவெடுத்துச் செயல் படுத்தப்படும் என்பதையும் இங்கு கூறி விட அவாவுறுகிறேன்.

மாணவர்களைப் பொறுத்த வரையில் ஒன்று சொல்வேன், படிப்பு பாதிக்கப்படும் வகையில் மாணவர்கள் அரசியல் நடவடிக்கைகளில் நேரடியாக ஈடுபடக் கூடாது. நீங்களெல்லாம் அறிவுத் துறையின் அங்கத்தினர்கள், அறிவுச்சேனைகள், உலகம் எப்படிச் செல்கிறது என்பதைப் பார்ப்பதைக் கொண்டே உங்களை நீங்கள் பக்குவப் படுத்திக் கொள்ள வேண்டும். பொங்கியெழும் உணர்ச்சியை அடக்கி வைத்து, நாட்டுக்காக பொது நலத்திற்காக, வேண்டி மாணவர்கள் பொறுமையுடன் செயலாற்ற முன்வர வேண்டும். உங்களுடைய ஆர்வத்தைக் குறைக்க அண்ணாவும், நானும் சொல்லவில்லை.

ஒரு விஷயத்தின் உண்மையும் அதன் வெற்றியும் அந்த உண்மையை பின்பற்றுகிறவர்களின் எண்ணிக்கை பலத்தைப் பொறுத்து அமைவதில்லை. உண்மை அல்லது சத்தியம் துன்புறுத்தப் படும் போது அது பலம்பெறும், நீதியின்பாலுள்ள இந்த இந்தி எதிர்ப்பு இயக்கம் நிச்சயம் வெற்றி பெற்றே தீரும். வருங்கால சந்ததிகளின் வெற்றிக்குப் பாடுபடும் உங்களுக்கு எனது மெய்யன்புள்ள வாழ்த்துக்களை தெரிவித்துக்கொண்டு விடை பெறுகிறேன்.''

*[14-10-1963 உரிமைக்குரல்]*

## முஸ்லிம் லீக் பொதுக் கூட்டத்தில் பேசியது;

''இந்தி, இந் நாட்டின் ஆட்சி மொழியாக இடம் பெற்று விட்டால் இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் ஆதிக்கக் காரர்களாகவும் நம்மை அடக்கி ஆளுபவர்களாகவும், சகல அனுகூலங்களையும் பெறுபவர்களாகவும் ஆகிவிடுவார்கள். இந்தி பேசாதவர்கள் இரண்டாந்தர மக்களாகப் போய்விடுவார்கள். தேசத்திலே, இதனால் குழப்பமும், கொந்தளிப்பும், பிரிவினை உணர்ச்சியும் ஏற்பட்டே தீரும்'' என்பதாக, கடந்த **17-11-1963-ஆம்** தேதியன்று திருச்சி தேவர் ஹாலில் முஸ்லிம் வாலிபர் முன்னேற்றச் சங்க ஆதரவில் நடைபெற்ற முஸ்லிம் லீக் கூட்டத்தில் கண்ணியமிக்க காயிதேமில்லத் அவர்கள் குறிப்பிட்டார்கள்:

''இந்த நாட்டில், இந்தியை ஆட்சிமொழியாகக் கொண்டு வர ஆளவந்தார்கள் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் போது, அந்த முயற்சியை தடுக்கவும், சட்டதிட்டத்திற்குட்பட்டு எதிர்க்கவும் நாட்டின் இதர கட்சிகள் முற்பட்டிருக்கின்றன. அக் கட்சிகளை யொட்டி, முஸ்லிம் லீகும் அதன் பாரம்பரியத்திற்கும் அந்தஸ்திற்கும் ஏற்றவகையில் இந்திப் பிரச்சினை பற்றிய தன் கருத்தைச் சொல்லி வருகிறது. இவ்வாறு முஸ்லிம் லீக், தனது அபிப்பிராயத்தை சுதந்திரமாகச் சொல்லக் கூடிய நேரத்திலே, முஸ்லிம் லீக் எப்படிச் சொல்லலாம்? இந்தி குறித்து அபிப்பிராயம் கூற இந்த முஸ்லிம் லீகர்களுக்கு என்ன உரிமையிருக்கிறது? என்ற கருத்துப்பட காங்கிரஸ்காரர்கள் பேசிக் கொள்கிறார்களாம். இந்த நாட்டில் மற்ற கட்சிகள் தங்களின் ஆட்சேபங்களைத் தெரிவிக்கும் போது, முஸ்லிம் லீக் மட்டும் அவ்வாறு ஆட்சேபம் தெரிவிக்கக் கூடாது என்றால் இதில் என்ன நியாயம், என்ன நேர்மையிருக்க முடியும் என்பதை பொதுமக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

ஒரு பிரச்சினை தேசத்தை முழுவதும் பாதித்துக் கொண்டிருக்கும் வேளையில், அது குறித்துப் பேச, அபிப்பிராயம் கூற முஸ்லிம்களுக்கும் பூரண உரிமை உண்டு. இது எப்படி இருக்கிறதென்றால் வீட்டில் பிச்சை இல்லை என்று சொல்ல மாமியாருக்குத்தான் அதிகாரம் உண்டு மருமகளுக்குஇல்லை என்ற கதைபோல இருக்கிறது.

இந்தக் கதைக்கும், இன்று நம்மை ஆளுகின்ற கட்சியார் நிலைக்கும் வித்தியாசமே இல்லை, இல்லை என்றால் நாம் மட்டும் ஒருபிரச்சினை குறித்து அதுவும் பொதுப்படையான இந்தி பேசாத மக்கள் வெகுவாகப் பாதிக்கக் கூடிய பிரச்சினை குறித்துபேசக்கூடாது அபிப்பிராயம் கூறக்கூடாது என்று காங்கிரஸ்காரர்கள் கூற முற்படுவார்களா ?

காங்கிரஸ்காரர்களிடத்தில் இன்றளவும் வகுப்புவாதத் தன்மை, ஜாதி வெறி இன்னும் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. சுதந்திர இந்தியாவில் சமத்துவ உரிமையுடன் பேசவும், நாட்டின் சுக துக்கங்களிலே பங்குகொள்ளவும், நமக்கு முழுக்க முழுக்க உரிமையுண்டு. இந்த ஆட்சி காங்கிரஸ்காரர்களுக்கு மட்டுமே சொந்தமெனக் கரு

தப்பட்டு வருகிறது. இது போன்ற விநோதம் உலகில் வேறெங்கிலும் காண முடியாது. காங்கிரஸ்காரர்கள் கேட்டாலும், கேட்காவிட்டாலும் விரும்பினுலும், விரும்பாவிட்டாலும் இந்நாட்டின் கதிவிமோசனத்திற்கும், சுபிட்சத்திற்கும் முஸ்லிம்கள் கொஞ்சமும் மனம் தளராமல் உழைத்துக் கொண்டே இருப்பார்கள். கட்சிவாதத்தையே பேசிப் பேசி காலத்தை விரயமாக்கி வரும் காங்கிரஸை நாம் பொருட்படுத்தாமல் இந்து—முஸ்லிம் என்ற பாகுபாடில்லாமல் நாம் இருதய சுத்தியோடு பணியாற்றி வருவோம்.

திராவிட முன்னேற்றக்கழகம் தனது பிரிவினைக் கொள்கையைகைவிட்டுவிட்டதாகஅறிவித்துவிட்ட பிறகு, அந்த நல்ல முடிவை பாராட்டிப் பெருமைப் படுவதற்குப் பதிலாக தி.மு.க.வினரை கோழைகள் என்றும் கையால் ஆகாதவர்கள் என்றும் காங்கிரஸ்தலைவர்கள் சிலர் கேலி பேசுகின்றனர். இதுகாங்கிரஸின் ராஜதந்திரமற்ற நிலையை எடுத்துக்காட்டுகிறது. மொழிவாரியாக நாட்டை உருவாக்க வேண்டும் என்று கூறினவர்களே இந்தக் காங்கிரஸ்காரர்கள்தான்! சுதந்திரம் கிட்டிய பிறகு மொழி வழி மாகாணக் கிளர்ச்சி நாட்டில் ஆங்காங்கே நடைபெற ஆரம்பித்தது. மூன்று பேர்கள் கொண்ட கமிட்டி ஒன்று நிறுவப்பட்டது. அந்தக் கமிஷனில் சர்தார் படேலும் அங்கம் வகித்திருந்தார். பட்டேலுக்கு அன்று இருந்த செல்வாக்கின் காரணத்தால், மொழி வாரி மாகாணப் பேச்சை இப்போது எடுக்கவே கூடாது என்று அடித்துப் பேசி பிரச்சினையை ஒத்திப் போட்டு விட்டார்.

ஆனல், படேலின் மறைவுக்குப் பின் பண்டித நெஹ்ரு ஆட்சியில் மீண்டும் மொழிவாரி மாகாணப் பிரச்சினை எழுப்பப்பட்டது. இந்தத் தைரியசாலிகள் ஆந்திராவை பிரித்துக் கொடுத்தார்கள். மொழிவாரி மாகாணங்கள் என்பது இத் தேசத்தைப் பல துண்டாக்குவதினுல் பிற்காலங்களில் என்னவாகும்? இது தேசத்திற்குச் செய்யும் பெரும் ஹானி அல்லவா? என்று நான் முறையிட்டேன். முப்பது வருஷப் பிரசாரத்திற்குப் பிறகு இப்போது வேண்டாமென்ருல் மக்கள் ஏற்றுக் கொள்வார்களா என்று ஏதேதோ கூறி மழுப்புகின்றனர்.

திராவிட முன்னேற்றக் கழகம் நல்லது என்று நினைத்ததை பகிரங்கமாகக் கூறி, தனது கட்சியினரின் ஏகோபித்த அனுமதியைப் பூர்ணமாகப் பெற்ருர்கள்; அவர்கள் புத்திசாலிகள்; தேச நன்மையை நாடுகிறவர்கள் தி. மு. க. வை பாராட்டுகிருர்கள். இது போன்ற செயலை காங்கிரஸ்காரர்கள் செய்யத் தவறி விட்டதின் காரணமாகவே நாட்டில் இன்று மொழிவெறி தலைவிரித்தாடிக் கொண்டிருக்கிறது.

இந்தி ஆதிக்கக்காரர்களிடத்தில் தான் தேசத்தின் பொருளாதாரம் சிக்கிவிடும், மற்ற மொழிகளெல்லாம் இந்தி மொழிமுன் நசிந்து செத்துவிடும். இந்தி ஆட்சிமொழியாக வந்துவிட்டால், திறமையுள்ளவர்கள் யாராயிருப்பார்கள்! இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே தேர்ச்சி பெற்றவர்களாயிருப்பார்கள். எனவே சகல அனுகூலங்களும் அவர்களுக்கே கிடைக்கும். உத்தியோகங்களிலும் கோட்டா முறையை (ரிசர்வேஷன்) கையாளலாம் என்கிருர்கள். எங்கே கோட்டா கொடுப்பார்கள், நேரடி உத்தியோக நியமனங்களில் வேண்டுமானுல் தரப்படலாம். உத்தியோக உயர்வு சம்பந்தப்பட்ட பிரச்சினை வரும் போது இந்தியில் தேர்ச்சி பெற்றவர்களுக்கே பூரண சலுகை கிடைக்கமுடியும். அப்போது கோட்டா முறை பயன் தராது.

இந்தி மொழி ஆட்சி மொழி ஆவதற்கு முன்பாகவே, இன்று இந்தி பேசுகிறவர்களின் ஆர்ப்பாட்டமும், மொழி வெறியும் தலைகால் தெரியாமல் பெருகிக் கிடக்கிறது. நாளை இந்தியை மட்டும் ஆட்சி மொழியாகப் பிரகடனப் படுத்திவிட்டால், இந்த நாட்டில் அமைதி நிலவ முடியுமா? என்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். ஆகவே தான், யாருக்குமே தாய் பாஷையில்லாத, ஆங்கில பாஷையை இந்த நாட்டின் ஆட்சி மொழியாக வைக்க வேண்டும் என்று நாம் வற்புறுத்துகின்ருேம். அப்படி வைப்பதால் எல்லோருக்குமே எல்லாத் துறைகளிலும் சம வாய்ப்பு கிடைக்க முடியும் என்று உறுதியாக நம்புகிருேம். ஆங்கிலம், இந்த நாட்டிலே ஒருமைப்பாட்டை உண்டாக்கியிருக்கிறது. எல்லோருக்கும் ஒரு நிறையாக பாரபட்சமற்ற முறையில் நாட்டு மக்களின் கல்வித் திறன் ஓங்கி வளருவதற்கு உதவியாயிருக்கும். அதே சமயத்தில் இந்நாட்டின் மற்ற மொழிகளும் பாதிக்கப் படாது. அன்னிய மொழியை ஆட்சி மொழியாக்குவது அபவாதம் என்று இந்தக் காங்கிரஸ் காரர்கள் பிடிவாதம் செய்கிருர்கள். அப்படிச்

சொல்கிறவர்கள் அன்னிய ஆதிக்கப் பொறுப்பி லுள்ள, காமன்வெல்த் ஸ்தாபனத்தில் இந்தியா அங்கம் வகிக்க எப்படி அனுமதிக்கலாம்.

நம்முடன் சேர்ந்து இன்றும் இந்நாட்டில் எத்தனையோ பேர்கள் ஆங்கிலம் ஆட்சி மொழி யாகயிருக்க வேண்டுமென்கிறார்கள். அரசியல் நிர்ணய சபையில் ஆட்சி மொழிப் பற்றி பேச்சு கிளம்பிய போது, உர்துவை இந்நாட்டின் பொது மொழியாக வையுங்கள் என்று காரண காரியங் களோடு எடுத்துரைத்தேன். மகாத்மா காந்தி யார் கூட ஹிந்துஸ்தானியை பொது மொழியாக்க எவ்வளவோ வற்புறுத்திப் பார்த்தார். அந்தக் கோரிக்கை மறுக்கப்பட்டது. ஒரு நாட்டின் ஆட்சி மொழியாக ஒரு மொழி இருக்க வேண்டு மென்றால் அந்த மொழி பழமையான புராதீன மான மொழியாகவும் இருக்க வேண்டும், வழக்கில் இருந்துவரும் மொழியாகவும் இருக்கவேண்டும், இலக்கிய, இலக்கண நயம் பொருந்தியதாகவும் இருக்க வேண்டும். உயிருள்ள மொழியாக, மக்களின் அபிலாஷைகளை வரி வடிவில் அமைத்துக் காட்டக்கூடியதாக இருக்க வேண்டும். அந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் போது, திராவிட பாஷைகளின் மூலமான தமிழ் மொழியையே இந்நாட்டின் பொது மொழியாக வைப்பது முற்றிலும் நியாயம் என்று நான் கூறினேன். யாருமே லட்சியம் செய்யவில்லை.

ஆகவே, இன்றைய சூழ்நிலையில், இந்தியை. இந்தி பேசாத மக்களின் மீது வலுக்கட்டாய மாகத் திணிப்பதை நாம் எதிர்த்தே யாக வேண்டும். சட்டத்திற்குட்பட்டு நமது எதிர்ப்பை அரசாங்கத்திற்கு எடுத்துக்காட்ட நாம் யாவரும் ஒரு அணியின் கீழ் திரண்டு நமது ஏகோபித்த குரலை எழுப்பி வெற்றி பெறுவோமாக'' என்று கூறி தமது உரையை நிறைவுபடுத்தினார்கள்.

*(25-11-1963 உரிமைக்குரல்)*

---

1943ல் இருந்து எனக்கு காயிதே மில்லத் அவர்களை அறிமுகம் உண்டு. சுதந்திரத் திற்கு முன்பு தஞ்சை மாவட்ட முஸ்லிம் லீக் மாநாட்டிற்குச் சென்றிருந்த கொடிக்கால் பாளையம் தொண்டர் படைக்கு நான்தான் தளபதி. 1958-ல் திருச்சியில் நடைபெற்ற ஊழியர் கூட்டத்திற்குப் பிறகு எங்களூரில் நமது தாய்ச் சபை சுறு சுறுப்பாக செயல்பட்டு வருகிறது.

1959-ம் ஆண்டில் எனது வாழ்வில் மறக்க முடியாத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. எனது மனைவிக்கு பிரசவ சமயம். அவ்வலியால் அவள் துடித்துக் கொண்டிருக்கிறாள். அச்சமயம் ஒரு தகவல் வந்தது. காயிதே மில்லத் அவர்கள் எங்களூருக்கு வந்து கொண்டிருப்பதாகவும் அவர் களை வரவேற்க ஆவன செய்ய வேண்டும் என்றும் இயக்கத் தோழர் ஒருவர் ஓடோடி வந்து சொன்னார். எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை? ஒன்றும் ஓடவில்லை. பிரசவ வேதனையால் துடித்துக் கொண்டிருக்கும் மனைவியை கவனிப்பதா அல்லது சமுதாயத் தலைவரை எதிர்கொண்டு அழைப்பதில் முந்திக் கொண்டு நிற்பதா என்ற கேள்வி எழுந்தது.

ஒரு கணம் யோசித்தேன். ஒரு திடமான முடிவுக்கு வந்து விட்டேன். வீட்டில் கூட தகவல் கொடுக்கவில்லை. எனது சொந்தக்காரர்கள் கவனித்துக் கொள்வார்கள் என்று விட்டு விட்டு, வரவேற்பிற்கு வேண்டிய காரியங்களை கவனிக்கச் சென்று விட்டேன். அப்பொழுது நான் ஊர் நாட்டாண்மையுங் கூட. நான் கட்சிப் பணிகளை கவனித்துக் கொண்டிருந்த இடத்திற்கு சிறிது நேரத்தில் நல்ல தகவலே வந்தது. எனது மனைவி ஆண் குழந்தையைப் பெற்றெடுத்து விட்டாள் என்றும் சுகப் பிரசவம் என்றும் தெரிந்தது. அல்லாஹ்வுக்கு நன்றி கூறிவிட்டு ஆக வேண்டிய காரியத்தில் முழு மூச்சுடன் ஈடுபடலானேன்.

விஜயபுரத்தில் முஸ்லிம் லீக் மாநாடு நடைபெற்றது. அதில் எங்கள் ஊரிலிருந்து 500 தொண் டர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். மிகப் பிரமாண்டமான ஊர்வலம் நடைபெற்றது. அந்த ஊர்வலத்தில்தான் உணர்ச்சி கரமாகக் கோஷமிட்டுக் கொண்டு சென்ற ஜக்கரியா என்ற வாலிபன் ரத்தம் கக்கி உயிர் நீத்தான். இச் செய்தியைக் கேட்டு காயிதே மில்லத் அவர்கள் மிகவும் துக்கப்பட்டார்கள். அவனது மஃபிரத்துக்காக துஆச் செய்தார்கள்.

காயிதே மில்லத் சொன்ன கருத்துக்களில் ஒன்றை சமுதாயத்திற்கு இன்று நினைவு படுத்துவது அவசியமாகும். கட்சிக்காக பெரும் தொகையை நிதியாகத் திரட்ட வேண்டும் என பலரும்காயிதே மில்லத்திடம் யோசனை தெரிவிப்பார்கள். அப்பொழுதெல்லாம் அவர்கள் கூறும் பதில் இதுதான்;-நமது சமுதாயம் தாராள மனப்பான்மையுடையது. கேட்கிற பொழுதெல்லாம் வாரி வழங்கக் கூடிய தன்மை படைத்தது. தேவைக் கேற்ற நிதியைத் திரட்டினால் போதுமானது. அளவுக் கதிகமான நிதி குவிந்து விட்டால் தகராறுதான் வளரும். மனஸ்தாபங்கள் ஏற்படும். போட்டியும் பொறாமையும்தான் மிச்சமாக அமையும். இதைத் தீர்க்கவே கட்சிக்கு போதும் போதுமென்றாகி விடும். எனவே நமது சமுதாயத்தின் மீது நம்பிக்கை வைத்து தேவைக்கேற்ற நிதியைத் திரட்டிக் கொண்டால் அதுவே சாலச் சிறந்தது. தமிழக முதலமைச்சர் கலைஞரும் நானும் பள்ளித்தோழர்கள். இன்றும் அதை கலைஞர் மறக்கவில்லை. நேரில் காணும்பொழுதெல் லாம் பள்ளித் தோழமையை மறக்காமல் நடந்துகொள்கிறார்.

கொடிக்கால் பாளையம், **ஹாஜி. கா. மெ. மு. முஹம்மது அபூபக்கர்**

---

# இந்தியன் நேஷனில் முஸ்லிம்களும் ஓர் அங்கமே!

[டில்லியில் இருந்து வெளிவந்து கொண்டிருக்கும் ''லிங்க்'' (Link) என்ற ஆங்கில வார ஏட்டிற்கு காயிதே மில்லத் அவர்கள் 1964-65 ஆண்டுவாக்கில் பேட்டி அளித்தார்கள். ரவீந்திர மேனன், அய்யூப் செய்யத் ஆகிய இருவர் இப்பேட்டியினை ரிக்கார்டு செய்து தங்களது பத்திரிகையில் வெளியிட்டிருந்தனர். இப்பேட்டி முழுவதும் ''உரிமைக் குரல்'' வார ஏட்டில் அப்பொழுதே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு பிரசுரமாகியுள்ளது. ''காயிதே மில்லத் பிறந்த நாள் விழாப் பெருமலரிலும் (1974) இப்பேட்டி மீண்டும் பிரசுரமாகி இருந்தது. அப்பேட்டியிலிருந்து சில பகுதிகள் இங்கு மீண்டும் எடுத்துக் கையாளப்பட்டுள்ளன.]

கேள்வி :- இரு இனக் கொள்கையில் இன்னமும் நீங்கள் நம்பிக்கை வைக்கிறீர்களா? இந்நாட்டிலுள்ள பிரதான சமுதாயங்கள் தங்களது கட்டுக் கோப்பை அப்படியே பேணிப் பாதுகாப்பது என்றால் தேசிய ஒருமைப்பாடு சாத்தியமாகுமா?

பதில் :- இனம் (நேஷன்) என்றால் என்ன அர்த்தம் கொள்கிறீர்கள்? இது பற்றி காங்கிரஸ் தலைவர்கள் பேசியபொழுது அவர்களிடமே இக் கேள்வியைக் கேட்டேன். இனம் (நேஷன்) வகுப்புவாதம் (கம்யூனலிஸம்) அரசியல் (பாலிடிக்ஸ்) இவ்வார்த்தைகளை மக்கள் தாராளமாக உபயோகிக்கிறார்கள். ஒவ்வொருவரும் தனித்தனி அர்த்தம் கற்பித்துக் கொள்கிறார்கள்.

**அரசியல் ஆய்வாளர்களின் கருத்துப்படி ஒரு இனம் (நேஷன்) என்பது ஆட்சி புரிவதற்காக ஒரு மக்கள் கூட்டம் ஒன்று சேர்ந்து இருப்பதேயாகும்.** இந்த அம்சத்தை நான் கடந்த 20 ஆண்டுகளாக வலியுறுத்தி வருகிறேன். பொது கூட்டங்களில் நாங்கள் பகிரங்கமாக அறிவித்த பின்பும், எங்களது செயல்கள் மூலம் அதை நிருபித்த பின்பும், இக் கேள்வி மீண்டும், மீண்டும் கேட்கப் படுகிறது. இச்சந்தர்ப்பத்தில் நான் கடுமையாகப் பேசுவதை உங்கள் மீது நான் கோபப்படுகிறேன் என்று எடுத்துக் கொள்ளாதீர்கள். இவ்வளவு காலம் சொல்லியும் விளங்கவில்லையே என்று எண்ணும்போது சற்று கோபம் வரத்தான் செய்கிறது.

இனம் என்பதற்கு நான் மேலே கூறின விளக்கத்தைப் பற்றி விரிவுபடுத்துவோம் என்று நீங்கள் ஆரம்பித்தால் நீங்கள் சங்கடத்தில் மாட்டிக் கொள்வீர்கள் இந்த ஒரு விளக்கத்தை மட்டும் எல்லா அரசியல் ஆய்வாளர்களும் ஒப்புக் கொள்வார்கள். ஒரே மதத்தைப் பின் பற்றும் ஒரு கூட்டத்தினர் ஒரு இனம் ஆகுமா என்று ஆரம்பித்தால் பலர் ஆட்சேபிப்பார்கள். ஒரே மொழி பேசும் மக்கள் கூட்டத்தினர் ஒரு இனம் ஆகுமா? என்றாலும் அறிஞர்களின் ஏகோபித்த ஒப்புதல் கிடைக்காது.

இன்றைய உலகில் எந்த ஒரு நாட்டிலும் கட்டுக் கோப்பான ஒரே ஒரு மக்கள் கூட்டம் இல்லை. இயற்கை நியதிப்படி இது சாத்தியமும் இல்லைதான்.

மாயாஜாலம் மூலமாகவோ அல்லது அதிர்ஷ்டவசமாகவோ இந்த நாட்டில் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்களே—அதாவது ஒரே கொள்கை, ஒரே நிறம், ஒரே மொழி, ஒரே மதம் எல்லாவற்றிலும் ஒரே மாதிரி—வசிக்கிறார்கள் என்று வாதத்திற்கு வைத்துக் கொள்வோம்.

இப்படியே எத்தனை நாட்களுக்கு இந்நிலைமை நீடிக்கும் என்கிறீர்கள்? ஒருவன் நாளைக்கு கிறிஸ்துவனாக விரும்பலாம் அல்லது உங்களுக் குள்ளேயே வைஷ்ணவம் நல்லதல்ல, சைவம்தான் சிறந்தது என்ற பேச்சு ஆரம்பிக்கலாம்.

2000 ஆண்டுகளுக்கு முன்பு இந்த நாட்டில் ஒரே சமுதாயம் தான் இருந்ததா? கிருஸ்துவமும், இஸ்லாமும் இங்கு வருவதற்கு முன் இந்நாட்டில் ஒரே ஒரு மக்கள் தொகுப்புத்தான் இருந்ததா? இஸ்லாமும், கிருஸ்துவமும் இந்நாட்டிற்கு வருவதற்கு முன்னால் இங்கு மதச்சண்டைகளே நடக்கவில்லையா? நமது இலக்கியங்களை புரட்டிப் பார்த்தால் நீங்கள் புரிந்துகொள்வீர்கள். குறிப்பாக தமிழ் இலக்கிய நூல்களில் மதவேறுபாடு காரணமாக மக்கள் கொடுமைப்படுத்தப்பட்ட விபரங்களைக் காணலாம்.

எனவே, ஒரு மக்கள் கூட்டத்திற்கும் மற்றொரு மக்கள் கூட்டத்திற்கும் இடையிலுள்ள வேற்றுமைகள் முக்கியமானதல்ல. இவ்விரு

கூட்டத்தாருக்குமிடையில் ஆயிரக்கணக்கான விஷயங்களில் ஒற்றுமை இருக்கிறது. இது தான் முக்கியம். மதத்தில் வேறுபடலாம்; மொழியில் வேறுபடலாம்; நிறத்தில் வேறுபடலாம்; என்றாலும் எத்தனையோ பிற விஷயங்களில் இவர்கள் ஒத்து வாழ வேண்டியதிருக்கிறது; இணங்கிப் போக வேண்டியதிருக்கிறது. இந்த அம்சங்களில் நாம் கவனம் செலுத்தவேண்டும்; சௌஜன்யம் வேண்டும்; ஆனால் அதற்காக ஒன்றுடன் ஒன்றை ஒட்டவைக்கவேண்டுவதல்ல.

எத்தனையோ வேறுபாடுகள் இருப்பினும் மக்கள் சௌஜன்யமாக வாழ்கிறார்கள். நமக்கு வேண்டியது இதுதான். எனவே நீங்கள் இரு இனக் கொள்கை பற்றிப் பேசும்பொழுது 'இனம்' என்ற வார்த்தைக்கு கொள்ளப்படும் அர்த்தத்தையும் அரசியல் வல்லுநர்கள் அளித்திருக்கும் விளக்கத்தையும் நாம் மனதில் கொள்ளவேண்டும்.

கேள்வி :- இப்போது சுதந்திரம் வந்து விட்டதால், மிஸ்டர் ஜின்னா பிரச்சாரம் செய்துவந்தது போல இரு இனக் கொள்கை பொருந்தாது எனக் கூறுகிறீர்களா?

பதில் :- இல்லை; ஜின்னா சாகிபே இப்படிக் கூறியிருக்கிறார்கள். பாகிஸ்தானுக்கு போகிறவர்கள் எல்லாம் ஒரு நேஷன்; அந்த நாட்டிற்கு அவர்கள் விசுவாசமாக இருக்கவேண்டும். இந்தியாவில் இருக்கும் மற்றவர்கள் ஒரு நேஷன்; அவர்கள் எந்த மதத்தினராக இருந்தாலும் சரியே, மற்ற எந்த வேறுபாடுகள் இருந்த போதிலும் சரியே, இவ்வாறு இந்த மண்ணில் வைத்தே ஜின்னா சாஹிப் தெளிவுபடுத்திவிட்டுத் தான் சென்றார்கள்.

இப்பிரச்சனையை நாங்கள் விவாதித்தோம்; பாகிஸ்தானில் வாழ்பவர்கள் அந்நாட்டிற்கு விசுவாசமாக நடக்கவேண்டுமென நான் எப்படி எதிர்பார்ப்பேனோ அப்படியே இங்கு வாழும் நீங்கள் ஒவ்வொருவரும் இத்தேசத்திற்கு விசுவாசமாக நடந்து கொள்ளவேண்டும் என்று ஜின்னா சாஹிப் கூறினார்கள். இம்மாதிரி விஷயங்களில் அவர்கள் ஒன்றையும் மறைத்துக் கூறவும் இல்லை; திரித்துக் கூறவும் இல்லை. இருந்தாலும் நாங்கள் அவர்களை அறிவோம். இம்மாதிரி காரியங்களை அவர்கள் ஒரு போதும் சகித்துக் கொண்டதில்லை.

முதலாவது சுதந்திர தினத்தன்று கொடி ஏற்றும் பிரச்சனை எழுந்தது. இந்நாட்டிலுள்ள மக்களுக்கு இதற்கு முன் சுதந்திர தினம் என்றால் என்ன என்பது தெரியாதல்லவா? எனவே எந்தக் கொடியை அன்றைய தினம் ஏற்றி வைப்பது என விழித்தார்கள். ஒவ்வொரு கட்சிக்கும் தனித் தனிக் கொடி இருந்தது. அந்தந்த கட்சிக் காரர்கள் தங்களது கொடிகளை ஏற்றி வைப்பதா? என்ற வினா எழுந்தது.

அச்சமயம் இது பற்றி முதன் முதலாக தனது முடிவை வெளியிட்ட ஒரே அரசியல் கட்சித் தலைவர் காயிதே ஆஜம் ஜின்னா அவர்கள்தான். சுதந்திர தினத்தன்று ஒரே ஒரு கொடிதான்—தேசியக் கொடிதான் ஏற்றிவைக்கப்பட வேண்டும் என அவர்கள் சொன்னார்கள். அப்பொழுது ஜின்னா சாஹிப் அவர்கள் சொன்ன வார்த்தைகளை அப்படியே கூறுகிறேன். ''ஒரே ஒரு கொடிதான்; பல கொடிகள் இல்லை; அன்று முஸ்லிம் லீக் கொடியை ஏற்ற வேண்டியதில்லை. சுதந்திர தினத்தன்று தேசியக்கொடி ஒன்று மட்டுமே கட்டாயம் ஏற்றப்பட வேண்டும்.'' தாய்நாட்டின் விசுவாசம் பற்றிய விஷயத்தில் அவர்கள் கொள்கை மிக தெளிவானது; உறுதியானது.

**எனவே, இந்த நேஷனில் நாங்களும் ஒரு பகுதியே என்பதை திரும்பத் திரும்ப நாங்கள் காட்டியிருக்கிறோம். வார்த்தைகளால் மட்டும் அல்ல; செயல்கள் மூலம். சமீபமாக நமது இரு அண்டை நாடுகளுடன் நாம் சண்டை செய்ய வேண்டி நேர்ந்தது. எங்களை விட அதிகமாக தேசப்பற்றுள்ளவர்கள் என்று வேறு யாரையும் ஒருவராலும் சுட்டிக்காட்ட முடியாது.**

கேள்வி :- ஆகவே, இந்திய சமுதாயத்தின் ஒரு பாகமாக முஸ்லிம்கள் ஆகிவிட்டார்கள் என்று நீங்கள் சொல்கிறீர்களா?

பதில் :- அந்த விஷயத்திற்குத்தான் வந்து கொண்டிருக்கிறேன். அதற்குள் ஏன் அவசரப் படுகிறீர்கள்?

இந்திய சமுதாயத்தின் ஒரு அங்கமாகவே முஸ்லிம்கள் இருக்கிறார்கள் என நாங்கள் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்திருக்கிறோம்.

முன்னர் நான் கூறிய மாதிரி, முதலில் இனம் (நேஷன்) என்ற வார்த்தையை சரியாக புரிந்து கொள்ளவேண்டும்.

**நாங்களும் ஒரு அங்கமாக இருக்கும் ''இந்திய இனம்'' இருக்கிறதே அது நாட்டின் விடுதலைக்குப் பிறகே ஏற்பட்டது என்பது எங்களது வாதம்** ஒரு நாடு விடுதலை பெற்ற பிறகே அதை ஒரு நேஷன் என நீங்கள் அழைக்கிறீர்கள்.

உதாரணமாக, இந்தியாவின் ஒரு பாகமாக பர்மா ஒரு சமயம் இருந்தது. பின்னர் இந்தியாவிலிருந்து பர்மா பிரிந்து சென்றது. இதை ஒரு பிரிவினை என்று நீங்கள் கூறினீர்களா? இந்தியாவின் மத்திய சட்ட சபையில் உறுப்பினராக இருந்த பர்மா தலைவர் ஒருவர் நாங்கள் ஏன் இந்தியாவில் இருக்கவேண்டும்? மதராஸிலுள்ள புத்திசாலிகளும், பம்பாயிலுள்ள பணக்காரர்களும் அரசியல் ரீதியில் ஆங்கிலேயர்களும், இந்தியாவை பரிபாலனம் செய்கிறார்கள். பர்மியர்களான எங்களுக்கு இந்நாட்டின் ஆட்சியில் ஒரு பங்கும் இல்லை என்று வாதிட்டு தமது பகுதி தனி நாடாக வேண்டுமென்றார்.

இது போலவே இந்தியாவின் ஒரு பாகமாக ஏடன் இருந்தது. அப்புறம் என்ன நடந்தது என்பதை அறிவோமல்லவா?

**எனவே சுதந்திரத்திற்குப் பிறகு தான் இந்தியா ஒரு ''நேஷன்'' ஆயிற்று; முஸ்லிம்களாகிய நாங்களும், அந்த நேஷனில் ஒரு பகுதியே. எந்த ஒரு காரணம் சொல்லியும் அந்த நேஷனில் இருந்து எங்களை யாரும் பிரிக்க முடியாது.**

# ராஜாஜி கொடுத்த நற்சான்று

காயிதே மில்லத்தினுடைய மூத்த பேத்தியான ஹிப்பத்துல் கரீம் பாத்திமா **1969** ம் ஆண்டில் பி. யூ. ஸி. வகுப்பில் முதல் வகுப்பில் தேறியதும், மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து கல்வியைத் தொடர விரும்பினார். அரசு மருத்துவக் கல்லூரிகளில் சேருவதற்கான விண்ணப் படிவங்களில், நற்சான்றிதழ்கள் இரண்டு சேர்த்து அனுப்பப்படவேண்டும் என்பது விதியாகும்.

C. RAJAGOPALACHARI

NAOROJI ROAD
CHETPUT
MADRAS - 31

Miss H. K. Fatima
who has passed the PUC
Examination in the First
class seeks admission
in one of the medical
colleges for pursuing a
course in medicine
She is the great grand daughter of
Janab Jamal Mohamed
well-known patriot and
colleague of mine. She
is the grand daughter of

Janab Ismail Saheb
leader of the Moslem
League. I shall be
very glad if she gets
admission and becomes
a doctor. She has my
blessings belonging as she
does to a very illustrious
family.

C Rajagopalachari

4 June 69.

பேத்திக்கு நற்சான்றிதழ் பெறுவதற்காக மூதறிஞர் ராஜாஜியிடமே அவரை அழைத்துச் சென்றார்கள் காயிதே மில்லத். ராஜாஜி அவர்களும் உடனடியாக நல்லொழுக்கச் சான்றிதழை வழங்கியதுடன் அவரை ஆசீர்வதிக்கவும் செய்தார்.

ஜமால் முகம்மது சாகிப் அவர்களைப் பற்றி குறிப்பிடும்பொழுது, ''பிரக்கியாதி பெற்ற தேசபக்தர்'' (Well Known Patriot) என்றும் ''என்னுடைய சகாவும் ஆவார்'' (Colleague of mine) என்றும் பெருமைபடக் கூறியுள்ளார்.

கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரியில் தமது படிப்பைத் தொடர்ந்த H. K. பாத்திமா இன்று மகப்பேறு மருத்துவ சர்ஜனாகச் சிறந்து விளங்குகின்றார் என்பது நினைவு கூரத் தக்கது.

# தலைசிறந்த தேசபக்தர் காயிதே மில்லத்

## சட்டப்பேரவையில் டாக்டர் கலைஞர் புகழாரம்

திண்டுக்கல்லைத் தலைநகராகக் கொண்ட காயிதே மில்லத் மாவட்டத்தின் பெயரை மாற்ற வேண்டும் என இந்து முன்னணியினர் சில மாதங்களாகவே கோரிவருவது அறிந்ததே. அதற்காக அவர்கள் 1990 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 24ம் தேதியன்று திண்டுக்கல் நகரில் ஊர்வலம் ஒன்றை நடத்த முற்பட்டனர். காவல்துறையினர் எவ்வளவுதான் முன் ஜாக்கிரதையாக இருந்த போதிலும், இந்து முன்னணியினர் ஆட்சேபகர மான கோஷங்களையும் உணர்ச்சிகளைத் தூண்டும் சுலோகங்களையும் எழுப்பி, அந்நகரில் குழப்பத்தை உண்டாக்கிவிட்டனர். அடிதடிகளும் மோதல் களும் நடைபெற்றுள்ளன. இதன் காரணமாக இருவர் உயிர் நீத்தனர். சுமார் 50 பேர்கள் காயமடைந்துள்ளனர். இரு தரப்பினரிலும் 100 பேர் வரை கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

இறந்தவர்களில் அம்ஜத் இப்ராஹீம் என்ற 18 வயது இளைஞனும் ஒருவன். காயிதே மில்லத் மாவட்டம் என்ற பெயரைத் தக்க வைப்பதற்காக முதன் முதலாக உயிர்த் தியாகம் செய்த ஷஹீத் அம்ஜத் இப்ராஹீமின் பெயர் தமிழகமுஸ்லிம்கள் வரலாற்றில் நீங்கா இடத்தைப் பெற்று விட்டது என்பது திண்ணம்.

திண்டுக்கல் கலவரம் குறித்து தமிழக சட்ட சபையில் ஒத்தி வைப்புத் தீர்மானம் 29-3-90 அன்று கொண்டுவரப்பட்டது. விவாதங்களுக்குப் பதில் அளித்துப் பேசும்பொழுது தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கூறியதாவது:

''திண்டுக்கல் காயிதே மில்லத்'' மாவட்டத்தில் தொடர்ந்து கலவரங்களை இந்து முன்னணியினர் தூண்டி விடுகிறார்கள் என்பதை யாரும் மறுப்பதற்கு இல்லை.

''திண்டுக்கல்லை தலைநகரமாகக் கொண்ட பகுதிக்கு காயிதே மில்லத் பெயரை வைக்காமல் வேறு மாவட்டத்திற்கு வைத்தால் இந்து முன்னணியினர் ஏற்றுக்கொள்வார்களா?'' என்று இங்கே ஒரு உறுப்பினர் கேட்டார்.

இந்து முன்னணி அமைப்பாளர் ராம. கோபாலன் அளித்துள்ள ஒரு பேட்டியில். ''திண்டுக்கல்லுக்கு முஸ்லிம் சமுதாயத்தைச் சேர்ந்த வேறு யாருடைய பெயரையும் வைப்பதை இந்து முன்னணி எதிர்க்கவில்லை. தேசப் பிரிவினைக்கு காரணமாக இருந்தவரின் பெயரை சூட்டுவதை எதிர்க்கிறோம். உமறுப் புலவர், சீதக்காதி ஆகியோர் பெயர் வைப்பதை இந்த அமைப்பு ஆதரிக்கும்'' என்று கூறியுள்ளார்.

### யார் தேசத் துரோகி?

வேறு எந்த மாவட்டத்திற்கும் காயிதேமில்லத் பெயரை வைத்திருந்தால் சும்மா இருப்பார்கள் என்ற வாதம் உண்மையல்ல—சரியல்ல.

''காயிதே மில்லத் ஒரு தேசத்துரோகி என்று அடையாளம் காட்டி அந்த பெயரை வைக்கக் கூடாது'' என்று சொல்வதை எண்ணிப் பார்க்க வேண்டும். இதில் உள்நோக்கம் இருக்கிறது.

இதுவரையில் தந்தை பெரியாரால், பேரறிஞர் அண்ணாவால், பெருந்தலைவர் காமராஜரால், கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களால்—தொடர்ந்து அவர்கள் வழி வந்தவர்களால் கட்டிக் காப்பாற்றப்பட்டு வருகிற, இந்த மதவாத சண்டையிலிருந்து விடுபட்ட மாநிலம் என்ற ஒரு நிலையை மாற்றுவதற்காக இந்து முன்னணியினர் இன்றைக்கு தீவிர முயற்சியில் ஈடுபட்டு வருகின்றனர் என்பதை நாம் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அவர்களுடைய கூற்றுப்படி காயிதே மில்லத் தேசத் துரோகியா என்றால் இல்லை. பாக்கிஸ்தான் பிரிக்கப்படவேண்டும் என்று கருத்தைச் சொன்னவர்கள் எல்லாம் தேசத் துரோகிகள் என்றால் பாக்கிஸ்தானை பிரித்துக் கொடுத்து விடுங்கள்

நிம்மதியாக இருக்கலாம் என்று சொன்னவர் மூதறிஞர் ராஜாஜி அவர்கள். இவைகளை எல்லாம் நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். பாக்கிஸ்தானை பிரித்து கொடுத்து விட வேண்டு மென்று கடைசியாக ஒப்புக்கொண்ட இந்திய நாட்டுத் தலைவர்களில் யார் யார் இருந்தார்கள், எப்படிப்பட்டவர்களெல்லாம் இருந்தார்கள் என்பதை எண்ணிப் பார்த்தால் நாம் அந்த வரலாற்றை புரிந்து கொள்ள முடியும். நான் அந்த விளக்கங்களுக்கு எல்லாம் செல்ல விரும்ப வில்லை. ஒரு நிம்மதியான சூழ்நிலை ஏற்பட வேண்டும் என்பதற்காக எடுக்கப்பட்ட ஒரு முடிவு அந்த முடிவு. பாக்கிஸ்தான் ஏற்பட்டதற்குப் பிறகு கராய்ச்சியிலே நடைபெற்ற இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கினுடைய பொதுக்குழு விற்கு காயிதே மில்லத் அழைக்கப்பட்டிருந் தார்கள்—இஸ்மாயில் அவர்கள் அழைக்கப்பட் டிருந்தார்கள். அவர்கள் அந்தக் கூட்டத்திலே கலந்து கொண்ட நேரத்தில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கினுடைய பணத்தை — காயிதே மில்லத் அவர்கள் இந்தியாவிலேயே எஞ்சியிருக் கின்றமுஸ்லிம்களுக்கு எல்லாம் தலைவராகஇருக்கக் கூடிய, முஸ்லிம் லீக்கினுடைய தலைவராக பொறுப்பேற்று இருக்கிறார்கள். எனவே அந்தப் பணத்தை நீங்கள் எடுத்துக் செல்லுங்கள் என்று அந்த பணத்தைக் கொடுத்தபோது ''அது பாகிஸ்தான் பணம், அதை நான் எடுத்துச் செல்லமாட்டேன்'' என்று அதை வாங்க மறுத்த வர்தாம் காயிதே மில்லத் இஸ்மாயில் சாஹிப் அவர்கள் என்பதை யாரும் மறந்து விடக்கூடாது.

அது மாத்திரமல்ல சீன ஆக்கிரமிப்பு நடை பெற்ற நேரத்தில் பாராளுமன்றத்தில் தேசத் திற்கு எதிராக நடைபெறுகிற போராட்டத்திற்கு என்னுடைய மகனை ஒரு போர்வீரனாக அனுப்பு கிறேன், என்னுடைய மகன் மியாகானை ஒருபோர் வீரனாக அனுப்புகிறேன் என்று சொன்னவர் காயிதே மில்லத் அவர்கள்.

## தாய்மொழிப் பற்று மிக்கவர்

அது மாத்திரமல்ல; அடிக்கடி அண்ணா சொல்லக் கேட்டு இருக்கிறோம். நானே கூட படித்து இருக்கிறேன் இந்தியாவினுடைய பொது மொழியாக இருக்க எல்லா வகையிலும், தொன்மை அடிப்படையிலும், இலக்கண அடிப் படையிலும், கலை அடிப்படையிலும், கலாச்சார அடிப்படையிலும் தகுதி வாய்ந்த ஒரே மொழி தமிழ் மொழிதான் என்று சொன்னவர் காயிதே மில்லத் இஸ்மாயில் சாஹிப் அவர்கள்.

அவர்களுடைய பெயரை வைக்கக் கூடாது என்பதற்கு வேறு காரணங்கள் எதுவும் சொல் லாமல் அவர் ஒரு தேசத் துரோகி என்று சொல்லி அந்தப் பெயரை வைக்கக்கூடாது என்று சொல்லு கிறவர்கள் திண்டுக்கல்லுக்கு மாத்திரமல்ல, நாகைக்கு வைத்திருந்தாலும் இதே கதை தான். அல்லது அவர் பிறந்த பேட்டைப் பகுதி இருக்கிற நெல்லை மாவட்டத்தின் ஒரு பகுதிக்கு வைத்திருந் தாலும் அதே கதைதான். எனவே காயிதே மில்லத் அவர்களுடைய பெயரை வைப்பதே தவறு என்று அதற்காக ஒரு கிளர்ச்சி என்றால், நான் இன்றைக்குச் சொல்கிறேன், இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தின் மூலமாக அதை இந்த அரசு அனுமதிக்காது. இப்படி சொல்கின்றவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கும். அதன் மூலம் தமிழகத்தில் ஒரு வகுப்புவாத கிளர்ச்சியை மதக் கிளர்ச்சியை அவர்கள் இன்றைக்கு உரு வாக்க முற்படுவார்களானால் அத்தகையவர்கள் மீது தேசிய பாதுகாப்புச் சட்டம் பாயும், தயங் காது என்பதை இந்த நேரத்தில் நான் தெரிவித்து, அமைதியான முறையிலே தமிழகம் வாழ்வதற்கு எல்லோரும் துணை நிற்கவேண்டும் என்கிற வேண்டுகோளையும் விடுத்து, இந்த வேண்டுகோள் இந்து முன்னணியைப் பொறுத்தவரையில் என்னு டைய இறுதி வேண்டுகோளாக அவர்கள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றுக் கேட்டுக்கொண்டு,

பெரியவர்களை இப்படி மாசுபடுத்துகின்ற விவகாரங்களில் அவர்கள் ஈடுபடக் கூடாது என்ப தையும், ஒரு மதத்தையும் புண்படுத்துகிற அளவிற்கு எந்த மதத்தினரும் நடந்து கொள்ளக் கூடாது என்ற வேண்டுகோளையும் இந்த மாமன் றத்திலே இந்த ஒத்தி வைப்புத் தீர்மானம் கொண்டு வரப்பட்ட நிலையிலே எடுத்து வைத்து இனி அவையை ஒத்தி வைத்துப் பேசத் தேவை யில்லை என்ற கருத்தை அவைத் தலைவர் அவர்களே தங்களுக்குத் தெரிவித்து அமைகிறேன்.''

# காயிதே மில்லத்திடம் எனக்கு நேரடியாக ஏற்பட்ட அனுபவங்கள்

பேராசிரியர், S. பீர் முஹம்மது
*(டைரக்டர், S. K. கிரசன்ட் பொறியியற் கல்லூரி, வண்டலூர்.)*

கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் அல் ஹாஜ் முஹம்மது இஸ்மாயீல் சாஹிப் (ரஹ்) அவர்களை அடிக்கடி சந்தித்துப் பழகக் கூடிய வாய்ப்பு 1947 க்கு முன்னதாக எனக்கு இல்லை. அவர்கள் எப்பொழுதாவது திருநெல்வேலி வரும் சமயங்களில் தான் நான் அவர்களை சந்தித்திருக் கிறேன். அப்பொழுது M. D. T. ஹிந்து கல்லூரியில் படித்து வந்தேன்.

1947ம் ஆண்டு எல்லாம் வல்ல இறைவ னருளால் எனக்குப் பொறியியற் பட்டப் படிப்பு படிப்பதற்கு தேர்வாகி கிண்டி அரசினர் பொறி இயற் கல்லூரியில் இடம் ஒதுக்கி இருந்தார்கள். அச்சமயம் கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் அவர்கள் சாந்தோம் கடற்கரைக்கு அருகில் உள்ள ஒரு பங்களாவில் குடியிருந்தார்கள். முதன் முதலாக அப்பொழுதுதான் சென்னை வந்துள் ளேன். நேராக காயிதே மில்லத் அவர்கள் வீட்டிற்குத்தான் சென்று அவர்களைக் கண்டு அவர்களது நல்லாசி பெற்று கிண்டி பொறி இயற் கல்லூரி (ஹாஸ்டல்) மாணவர் விடுதியில் சேர்ந்து முதல் வருடக் கல்வி கற்று வந்தேன்.

அப்பொழுது கனம் மதிப்பிற்குரிய அண்ணன் A. K. ரிபாய் அவர்களும் அங்கு சென்னையில்தான் இருந்தார்கள். மரியாதைக்குரிய அண்ணன் கனம் ஜமால் முஹம்மது மியாகான் அவர்கள் B.A. முடித்து விட்டு அண்ணாமலைப் பல்கலைக் கழக பொறி இயற் கல்லூரியில் பொறி இயற் படிப் புக்குத் தேர்வாகி இருந்தது. ஒரு சில நாட் களுக்குப் பிறகு அவர்களுக்கு கிண்டி பொறி இயற் கல்லூரிக்கும் தேர்வாகி முதலாண்டு கல்வியை என்னுடன் சேர்ந்து படித்து வந்தார்கள். 1948ம் வருடம் ஜனவரி மாதம் முதல் வாரம் பல்கலைக் கழக முதல் வருடத்தேர்வுக்கு கட்டணம் கட்ட வேண்டிய கடைசி நாள். நான் அவர் களிடம் ஞாபகப்படுத்த அன்று கட்டணத்தைக் கட்டி விட்டார்கள்.

அடுத்த நாள் காலையில் வந்ததும் நான் இன்றுடன் பொறி இயற் கல்வியை விட்டு விடப் போகிறேன். நாளை முதல் கல்லூரிக்கு வரமாட் டேன் என்று சொன்னார்கள். நான் அவர்களிடம் ஏன் திடீரென்று நின்று விடப் போகிறீர்கள் என்று வினவியபோது, ''வாப்பா அவர்கள் உத்தரவு'' என்று கூறினார்கள். பின்னர் அதன் காரணம் என்ன என்பதையும் என்னிடம் விளக்கிக் கூறினார்கள்.

கனம் காயிதே மில்லத் அவர்கள் அன்றைய கல்வி அமைச்சர் திரு. அவினாசி லிங்கம் செட்டி யார் அவர்களை அதற்கு முந்தைய தினம் சந்தித்த பொழுது அமைச்சர், அவர்களிடம் ''தங்கள் மைந்தர் மியாகான் கிண்டி பொறி இயற் கல்லூரியில் நல்ல விதமாகப்படித்து வருகிறாரா?'' என்று வினவினாராம். காயிதே மில்லத் அவரிடம் தங்கள் மகன் கிண்டி பொறி இயற் கல்லூரியில் படிப்பது அமைச்சருக்கு எப்படித் தெரியும் என்று கேட்டார்களாம். அவர் தாம் தான் அவர்க ளுடைய சகோதரர் மர்ஹூம் ஜனாப் K. T. M. அஹமது இப்ருகீம் சாஹிப் அவர்கள் வேண்டு கோளுக்கிணங்கி கிண்டி பொறி இயற் கல்லூரியில் இடம் அளித்ததாகக் கூறியுள்ளார்.

அன்று இரவே தனது ஒரே மைந்தர் மியா கானைக் கூப்பிட்டு ''வாப்பா, நீநாளைமுதல் உன்னு டைய பொறி இயல் கல்விக்கு முற்றுப் புள்ளி வைத்து விடு. என்னுடைய மகன் என்ற முறையில் கல்வி அமைச்சர் சிறப்புத் தகுதி

கொடுத்து உனக்கு இடம் அளித்துள்ளார். அது நீதிக்கு அப்பாற்பட்டது. ஆகவே நான் அதை விரும்பவில்லை'' என்று சொன்னார்கள். வாப்பா அவர்களின் அன்புக்கட்டளையை சிரமேற்கொண்டு வேறு எந்த விதமான கேள்விகளையும் எழுப்பாது, தனது வருங்காலத்தைப் பற்றியும், பொறி இயல் கல்வியை விடவேண்டி உள்ளதே என்ற வருத்தம் கிஞ்சிற்றும் இல்லாது அன்று மாலையிலேயே எங்களுக்கெல்லாம் ''டாட்டா'' சொல்லிவிட்டு பிரிந்து சென்றார்கள்.

இந்த நிகழ்ச்சி எனக்கு இஸ்லாமிய வரலாற்றில் நடந்த இரண்டு சம்பவங்களை நினைவூட்டியது. தகப்பன் மகன் என்ற பாசத்தையும் மீறி அல்லாஹ்வின் ஆணைக்கு அடிபணிந்த இரு தந்தையர் இரு மகனார் அவர்களின் வரலாறே அது.

அருமை நபி இபுறாகிம் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் ஆணைக்கு அடிபணிந்து தங்களது மகனைக் குர்பானி கொடுப்பதற்காக அழைத்துச் சென்றபொழுது அவர்கள் அருமை மகனார் நபி இஸ்மாயீல் (அலை) அவர்கள் எவ்வாறு தங்களது வாழ்க்கையை தியாகம் செய்யத்தயாராக இருந்தார்களோ அது போன்று கனம் காயிதே மில்லத் அவர்கள் அல்லாஹ்வின் நீதி, நியாயத்தை கருத்திற்கொண்டு தங்களது மகனார் பொறி இயல் கல்வி மூலம் வளமான வாழ்வு பெறுவதைத் துச்சமாகக் கருதி மகனாரின் வருங்கால வாழ்க்கையைத் தியாகம் செய்யத் துணிந்தார்கள். நபி இஸ்மாயீல் (அலை) எவ்வாறு தந்தையார் ஆணைக்கு அடிபணிந்து தங்கள் உயிரையும் தியாகம் செய்யத் தயாராக இருந்தார்களோ அது போன்று மியாகான் என்ற மகனும் தங்களது பொன்னான வருங்காலத்தைத் தியாகம் செய்ய சிறிதும் தயங்கவில்லை.

மற்றொரு சம்பவம் அருமை நாயகம் (ஸல்) அவர்களின் உற்ற தோழர்களில் இரண்டாவது கலீபாவாக அரசோச்சிய உமர் (ரலி) அவர்களையும் அவர்களது மகனார் அபூ ஷஹ்மா அவர்களையும் பற்றியதாகும். உமர் (ரலி) அவர்களது மகனார் அபூ ஷஹ்மா அவர்களை ஒரு யூதன் நயவஞ்சகமாகக் கூட்டிச் சென்று மதுவை அருந்த வைத்து விட்டான். இந்த விபரம் கலீபா உமர் (ரலி) அவர்களது கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டு நீதி விசாரணை நடத்தி அபூ ஷஹ்மா குற்றவாளி என்று தீர்ப்பளித்து அதற்கு தண்டனையாக அவருக்கு 80 கசையடி கொடுக்க வேண்டும் என உத்தரவிட்டார்கள். வேறு யாரையாவது இந்த தண்டனையை நிறைவேற்ற ஆணையிட்டால் அவர்கள் கலீபாவின் மகனாயிற்றே என்று கசையடியை இலேசாக்கி விடுவார்கள் என்ற எண்ணத்தில் தாங்களே சசையடித் தண்டனையைக் கொடுக்க முன் வருகிறார்கள். 60 கசையடி வரும்போதே மகன் உயிர் பிரியக் கூடிய நிலைக்கு வந்து விட்டது. அப்பொழுது கலீபா உமர் (ரலி) அவர்கள் தனது மகனாரிடம் ''மகனே நீ மறு உலகம் சென்று அண்ணல் எம்பெருமானார் (ஸல்) அவர்களைச் சந்திக்கும் பொழுது என்னுடைய ஸலாமை அவர்களுக்குக் கூறுவதோடு அவர்கள் விட்டுச் சென்ற ஷரீஅத்தை நிலை நாட்டும் முயற்சியில் உன்னைப் பெற்றெடுத்த பாசமும்கூட குறுக்கிட நான் அனுமதிக்கவில்லை என்பதை தெரிவித்து விடு'' என்று சொல்ல அவர்களது உயிர் பிரிந்தது.

இத்தகைய வழியில் வந்த தியாகச் செம்மல் தான் ''நான் கண்ட காயிதே மில்லத்.''

மற்றும் எனது வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தையும் நான் இங்கு நினைவு கூர விரும்புகிறேன். எனக்கு 1970ம் வருடம் பொறி இயற் துறையில் பேராசிரியராக பதவி உயர்வு பெறஅரசு உத்தரவுக்காக கோப்புகள் தலைமைச் செயலகத்திற்குப் போயிருந்த சமயம். கல்லூரி முதல்வர் பொறி இயற் கல்வி இயக்குநர் ஆகியவர்களுடைய பரிந்துரைகளுடன் கோப்புகள் போய்க் கொஞ்ச கால தாமதமாகிக் கொண்டிருந்தது, அவ்வமயம் ஆணைகள் சீக்கிரமாக கிடைக்கப் பெற அன்னாள் முதல்வர்மாண்புமிகு கலைஞர் அவர்களிடம் தலைவரவர்கள் ஒரு வார்த்தை சொன்னால் அல்லாஹ்வின் உதவியால் சீக்கிரம் ஆணை பிறந்துவிடும் என்ற நோக்கத்தில் சகோதரர் மியாக்கான் அவர்களிடமும் முன்னாள் M.P. சகோதரர் காஜா முகைதீன் அவர்களிடமும் சொன்னேன். காயிதே மில்லத் அவர்களையும் நேரில் கண்டு வேண்டிக் கொண்டேன்.

அப்பொழுது அவர்கள் கூறினார்கள் :-தனிப்பட்ட ஒருவருடைய பதவி உயர்வுக்கு சிபாரிசு செய்வதற்காக மட்டும் நான் முதல்வரைப் பார்ப்பது நல்லது அல்ல. மற்றும் சில சமுதாயக் கோரிக்கைகளுக்காக நான் செல்லும் பொழுது இதையும் அத்துடன் சேர்த்து இன்ஷா அல்லாஹ் செய்கிறேன்'' என்று கூறினார்கள். அதுபோல் சில நாட்களுக்குப் பிறகு முதல்வரைச் சந்திக்க நாள் குறிப்பிட்டு விட்டதாக ஜனுப் மியாக்கான் அவர்களும் கனம் காஜா முகைதீன் M.P. அவர்களும் எனக்கு செய்தி சொல்லி அனுப்ப நான் எனது காரில் கனம் காஜா முகைதீன் அவர்களை வீட்டில் சென்று அழைத்துக் கொண்டு குரோம்பேட்டை போய்ச் சேர்ந்தோம். கனம் காயிதே மில்லத் அவர்களும் தயாராக இருந்தார்கள்.

சகோதரர் மியாகான் அவர்கள் தான் ஒரு காரில் அழைத்துப் போவதாக இருந்தார்கள். ஆனல் தவிர்க்க முடியாத ஒரு அவசர வேலை நிமித்தமாக அவர்கள் என்னிடம் ''நீ வாப்பாவை உனது காரில் கூட்டிக் கொண்டு போய்விடு'' என்று சொல்லி விட்டு போய் விட்டார்கள். காயிதே மில்லத் வெளியில் வந்ததும். ''மியாகான் எங்கே? காரில் கூட்டிப் போவதாகச் சொன்னனே'' என்று கேட்டார்கள் நான் அவர்களிடம், ''அவசர மாக ஏதோ வேலையாகப் போயிருக்கிருர்கள். என்னைக் கூட்டிக் கொண்டு போகச் சொன் ஞர்கள் என்று கூறினேன். அவர்கள் வேண்டா வெறுப்பாக எனது காரில் ஏறிக் கொண்டார்கள். சகோதரர் காஜா முகைதீன் அவர்களும் ஏறிக் கொண்ட பின் நாங்கள் காரில் செல்லும்பொழுது எப்பொழுதும் மிகவும் சுமுகமாகவும் சாந்த மாகவும் பேசக்கூடியவர்கள் ''மியாகான் எங்கே போனன்? ஏன் என்னிடம் சொல்லாமல் போய் விட்டான்?'' என்று சற்று கோபத்துடன் கேட் டார்கள். அப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது; எனக்காக பரிந்துரை செய்ய எனது காரில் அவர்கள் வருவதை விரும்பவில்லை. அவர்க ளுடைய சொந்தச் செலவிலேயே செல்லவேண்டும் என்ற எண்ணத்தில்தான் ''விர், விர்'' என்று கோபமாக இருக்கிருர்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

இன்று பரிந்துரை செய்வதற்காக வரு பவர்கள் என்னென்ன நிபந்தனைகளையெல்லாம் விதிக்கிருர்கள் என்பதையெல்லாம் நான் விரிவாக எழுதத் தேவையில்லை. அந்த சீரிய தலை முறையின் வழிமுறை அது. இப்பொழுது உள்ள நவீன தலைமுறையின் பரிந்துரைத் தத்துவங்கள் வேறு.

தலைமைச் செயலகத்தில் அவர்கள் இறங்கிய வுடன் என்னிடம் இன்று கல்லூரி நடக்கிற நாளா என்று கேட்டார்கள். நான் ''ஆம்'' என்றேன். கல்லூரி நடக்கிற நாட்களில் வேலைக்குச் செல் லாது இப்படி வருவது நல்லதல்லவே என்று அவர்கள் கூறவும் நான் இன்று ஒரு நாள் விடு முறை போட்டுள்ளேன் என்று கூறியதும்தான் சற்று சாந்தமடைந்தார்கள்.

கடமையில் தவறக்கூடாது என்பதில் அவர்கள் எவ்வளவு குறிப்பாக இருக்கிருர்கள் என்பதை அவர்கள் சூசகமாகச் சுட்டிக்காட்டியதை நான் என்றும் மறக்க முடியாது. நம்முடைய இளைய சமுதாயத்தினர் இந்த பண்புகளை கவனத்துடன் கையாளவேண்டும்.

''அல்லாஹ் நமக்கு எதை எழுதியிருக்கிருனே அதைத் தவிர வேறு எதுவும் நம்மைத் தொடாது. அவன் நமது எஜமானன்'' என்ற அல்லாஹ்வின் அருள்வாக்கில் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவர்கள். அதுபோலவே ''என்னுடைய சக்திக்குட்பட்ட எல்லாவற்றையும் உபயோகித்து முஸ்லிம் லீக்கை அழித்தே தீருவேன்'' என்று சூளுரைத்த அன் றைய பாரத பிரதமர் பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள் கூட முஸ்லிம் லீக்கின் பிறைகொடியின் கீழ் நின்று பேசக்கூடிய ஒரு சூழ்நிலையை எல்லாம் வல்ல அல்லாஹ் காயிதே மில்லத் (ரஹ்) அவர்கள் மூலமாக உருவாக்கினன்.

இத்தகைய பண்புகளைக் கொண்டவர்களே ''நான் கண்ட காயிதே மில்லத்.'' அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றில் நமக்கு மிகுந்த படிப்பினை கள் இருக்கின்றன. வருங்கால சமுதாய மக்கள் அவர்களுடைய வாழ்க்கையைப் பின்பற்றி பெரும் வெற்றிகளைப் பெற எல்லாம் வல்ல அல்லாஹ் நல்லருள் புரிவாஞக! ஆமீன்!!

## அதிகமாக பேசுவது ஏன் ?

திருச்சி நகரில் வாலிபர்களாகச் சேர்ந்து 1956ல் முஸ்லிம் வாலிபர் முன்னேற்றச் சங்கம் ஒன்றை ஆரம்பித்தோம். ஒவ்வொரு ஆண்டும் விழா நடத்துவோம். ஒவ்வொரு ஆண்டும் காயிதே மில்லத் இல்லாமல் விழா இல்லை. 'காயிதே மில்லத் பிறந்த நாள் விழா' என்ற நடைமுறையை தமிழ்நாட்டிற்கும் கேரளாவுக்கும் அறிமுகப் படுத்தியதே எங்கள் சங்கம்தான். எங்களைப் போன்ற இளைஞர்களைக் கண்டால் தலைவர் அவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள். நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். நிறைய விஷயங்களை நாங்கள் கேட்காமலேயே சொல்வார்கள். இளைஞர்களாகிய நாங்கள் நமது சமுதாய வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அடிப் படை நோக்கத்தில்தான் அவர்கள் சற்று அதிகமாகவே பேச்சு கொடுக்கிறார்கள் என்பதை நாங்கள் விளங்கிக் கொள்ள கொஞ்ச காலம் பிடித்தது.

திருச்சி A. M. ஹனீப்

# "இஸ்லாமிய சமுதாயம் பெற்ற பரிசு காயிதே மில்லத்"

## அறிஞர் அண்ணா

''தமிழகத்தின் அரசியல் வானில் கப்பியிருக்கிற காரிருளை அகற்ற வந்த ஒளிக்கதிராக, காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் காஞ்சிக்கு வந்துள்ள இந்த நாள் அரசியலில் ஒரு புனிதநாள்'' என்று தி. மு. க பொதுச் செயலாளர் அறிஞர் அண்ணாதுரை அவர்கள் 30-1-62 அன்று காஞ்சிபுரம் ஒலிமுஹம்மது பேட்டையில் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசும் போது குறிப்பிட்டார்.

அவர் மேலும் பேசியதாவது .—

''நான் நெடுநாட்களாக விரும்பிய கூட்டுறவு, இப்போது முஸ்லிம் லீகுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் ஏற்பட்டிருக்கிறது.

''இன்று முஸ்லிம் லீக்குக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் ஏற்பட்டுள்ள உடன்பாடு. பெரும்பாலான மக்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது; அதே சமயத்தில் சில சுயநல வாதிகளுக்கு அதிர்ச்சியையும் கொடுத்திருக்கிறது.

''அரசியலிலே் நேர்மையும் நாணயமும் நிலவ வேண்டுமென்ற அடிப்படையில் பாடுபடும் போற்றுதற்குரிய ஒரு தலைவராக முஹம்மது இஸ்மாயில் அவர்கள் விளங்குகிறார்கள்.

''உங்களிலே பலருக்கும் தெரியாமலிருக்கலாம்- அரசியல் நிர்ணய சபையிலே ஆட்சி மொழி பற்றிய விவாதம் நடந்தபோது, ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவேண்டும் என்றும் ஒரு சந்தர்ப்பத்தில் கூறிய ஒரே தலைவர், காயிதே மில்லத் அவர்கள் தாம். இதை நான் சட்டசபையில் குறிப்பிட்ட போது, நிதியமைச்சர் சுப்ரமண்யம் 'அப்படியா?' என்று ஆச்சரியப்பட்டார். அதற்கான ஆதாரத்தைக் காட்டிய போது, இருக்கலாம் அப்போதெல்லாம் நான் (பேக்பெஞ்சர்) கடைசி பெஞ்சு ஆசாமியாக இருந்தேன்' எனக் கூறினார். அப்படிப்பட்ட அரும்பெரும் அரசியல் தலைவராக காயிதே மில்லத் அவர்கள் விளங்குகிறார்கள். என்னைப் பொறுத்த வரையிலே இந்தத் தேர்தல் உடன்பாட்டை, இன்பக் கனவுகளை நனவாக்கும் ஒரு அச்சாரமாகவே நான் கருதுகிறேன். ஏனென்றால் தேர்தலே நம் பயணத்தின் முடிவல்ல; என் பயணம் நீண்டது. அதில் தேர்தல் ஒரு மைல் கல். இந்த உடன்பாட்டின் மூலம் அரசியல் காரிருளை நீக்கும் ஒளிக்கதிர்கள் சுடரிட ஆரம்பித்துவிட்டன.

''இஸ்லாமியருக்கும் நமக்கும் உள்ள தொடர்பு இதயபூர்வமானது. காயிதே மில்லத் அவர்களே! நான் பெருமையோடு சொல்லிக் கொள்வேன். இந்த ஒலிமுகம்மது பேட்டையிலே ஒவ்வொரு முஸ்லிம் வீட்டுக்கும் நான் வீட்டுப்பிள்ளை. நாங்கள் ஒருவருக்கொருவர் கொண்டிருக்கும் நேசம் அளவிடற்கரியது. என்றுமே இந்தக் காஞ்சிபுரத்திலே இந்த நட்பைப் பேணி வருகிறோம்.

''இருமாதங்களுக்கு முன்னர் குரோம் பேட்டையிலே காயிதே மில்லத் அவர்களைச் சந்தித்த போது, ஜனநாயகத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பது பற்றியும், அரசியலில், லாபத்தைக் காட்டியும், அச்சத்தைக் காட்டியும் செய்யப்படும் அநீதியைப் பற்றியும் அவர்கள் சொன்னார்கள். அப்போது அவர்கள் கண்களில் நீர் கசிந்ததை நான் கண்டேன். அந்த அளவுக்கு அரசியலை செம்மைப்படுத்த வேண்டுமென்ற ஆர்வமுடையவர்கள் அவர்கள். இதற்குக்காரணம் அவர்கள் சார்ந்துள்ள இஸ்லாம் ஜனநாயகத்தைப் போதித்த அளவுக்கு எந்த நெறியும் போதிக்கவில்லை.

''ஒன்றே தெய்வம் ஒன்றே குலம் என்ற இஸ்லாமிய நெறி, பண்டைய தமிழருடைய நெறிக்கு மிகவும் இயைந்ததாகும். இடைக் காலத்திலே நாம் எங்கெங்கோ அலைந்தோம்! எதை எதையோ தேடினோம். மறுபடியும் அந்த அறநெறியை தேடிக்கடைப்பிடிக்கும் வாய்ப்பைப் பெற்றுள்ளோம்.

''இதை அடக்கி ஒடுக்க, சர்வாதிகாரத்தை அவிழ்த்துவிட ஆளும் பீடத்தில் உள்ள சிலர் முயற்சிக்கிறார்கள். மக்கள் ஆமைகள் என, ஒடுங்கி ஊமைகளைப் போல் வாய் பொத்தி யிருக்க வேண்டும் என எண்ணுகிறார்கள். அவர்கள் காட்டிய வழியில் நடக்க வேண்டும். நீட்டிய இடத்திலே கையெழுத்திட வேண்டும் என விரும்புகிறார்கள். எடுத்தேன் கவிழ்த்தேன் எனப் பேசுகிறார்கள். இந்த நிலை ஜனநாயகத் திற்கு ஏற்றதல்ல. இதற்கு நாம் ஒரு முடிவு கண்டாக வேண்டும்.

''இந்த நாட்டு முஸ்லிம்களுக்குப் போதிய பிரதிநிதித்துவத்தை, காங்கிரஸார் அளிக்க வில்லை, தாழ்த்தப்பட்டோருக்கு ஒரு அமைச் சரும், முக்குலத்தாருக்கு ஒரு அமைச்சரும் நாடா ருக்கு ஒரு அமைச்சரும் என்றிருக்கும் இந்த அமைச்சரவையில் முஸ்லிம் சமுதாயத்திற்கு ஒரு அமைச்சர் இல்லை. இதுபற்றி ஒருமுறை நான் சட்டசபையில் பேசிய பொது, நிதியமைச்சர் வைத்துக் கொண்டிருக்கும் பல பொறுப்புகளிலே ஒன்றை முஸ்லிம் அமைச்சருக்கு அளிக்கலாம் என்று சொன்னேன். லீகைச் சார்ந்த—எங்களைச் சார்ந்த—முஸ்லிம்களுக்கு வேண்டாம், உங்களைச் சார்ந்த யாராவது ஒருவருக்கு அந்தப் பதவியைய் அளிக்கக் கூடாதா? என்று நான் கேட்டேன். அப்போது அங்கே அமர்ந்திருந்த ஒரு காங்கிரஸ் முஸ்லிம் அங்கத்தினர் புதுப் பெண்ணைப் போல் வெட்கப்பட்டு நாணிக் கோணி ''வேண்டாம், வேண்டாம்'' என்று சொல்வது போல் வளைந் தார். மந்திரிப் பதவி கேட்கப் போய் எம்.எல்.ஏ. பதவி கூடப் பறிபோய் விடுமோ என்ற அச்சமாய் இருக்கலாம் அவருக்கு.

''இப்படி அரசியலிலே ஒதுக்கப்பட்டவராக ஆக்கப்பட்டிருக்கும் இஸ்லாமிய சமுதாயத்தவ ருக்குக் காயிதே மில்லத் அவர்களின் சேவை அளப் பரியதாகும்.

முஸ்லிம் லீக் ஒரு வகுப்புவாத ஸ்தாபனம் என்று குற்றம் சாட்டப் பட்டபோது, முஸ்லிம் லீக் என்றால், முஸ்லீம் பெருமக்களின் நலன்களை யும், உரிமைகளையும், பாதுகாக்கும் ஒரு தேசீய அரசியல் சபை என்று நிலை நாட்டியவர் காயிதே மில்லத் அவர்கள்:

''கேரளாவிலே முஸ்லிம் லீகைக் கட்டித் தழு வியவர்கள், அதனுடைய வளர்ச்சியைக் கண்டு பொறுமைப்பட்டு, அதை விட்டுத் தொலைந்தால் போதும் என்ற முடிவுக்கு வந்து இப்போது, முஸ்லிம் லீக் என்ற பெயரைகேட்டாலே தீமிதித்த சிறுபிள்ளையைப் போலத் துடிக்கிறார்கள்.

காயிதே மில்லத் அவர்கள் கையில் காசில் லாதவர்கள் தாம்; ஆனால் உள்ளத்தில் மாசில்லா தவர்கள். கோட்டீஸ்வரர்களும், பெரும் வணிகர்களும் அஞ்சி காங்கிரஸுக்கு ஓடி விட்ட போது இந்த சமுதாயத்திற்காகக் குரல் கொடுத்து பாடுபட்டவர்கள் காயிதே மில்லத் அவர்கள். ''துறவிக்கு வேந்தன் துரும்பு'' என்பார் கள், அப்படித்தான் காயிதே மில்லத் அவர்கள் சொந்த நலத்தை கொஞ்சமும் கருதாத அரசியல் வாதியாக, அச்சம், தயை, தாட்சண்யமின்றி, உண்மையை எடுத்துரைக்கக் கூடிய நெஞ்சுரம் பெற்றவர்களாக விளங்குகிறார்கள்.

''ஆண்டவனின் வழியைக் காட்டிய நபிகள் நாயகத்திற்கு ஏற்பட்ட ஆபத்துக்களை அவர்களு டைய நெஞ்சுக்கு நேரே நீட்டப்பட்ட ஈட்டிகளை, அவர்கள் பாதையில் ஏற்பட்ட தடைகளையெல் லாம் எண்ணி, எதையும் தாங்கும் இதயம் பெற் றவர்களாக வாழ்கிறார்கள். எனவே தான் அந்த நல்லவர்கள், நாடாண்டவர்கள், நன்னெறி தந்த வர்கள், தலைவரான காயிதே மில்லத் அவர்கள் காஞ்சீபுரத்திற்கு வந்தது அரசியலில் ஒரு புனித நாள் என்றேன்.''

[ 5-6-62 உரிமைக்குரல் ]

## ''நான் என்றென்றும் எண்ணி மதிக்கத்தக்கவர் காயிதே மில்லத்''

அறிஞர் அண்ணா

[திராவிட முன்னேற்றக் கழக சார்பில் சென்னை நகரில் 13-10-1963 ஞாயிற்றுக்கிழமை மாலை நடந்த மாபெரும் ஹிந்தி எதிர்ப்பு மாநாட் டில் அறிஞர் அண்ணா அவர்கள் உரை நிகழ்த்தும் போது, இந் நாட்டின் அரசியலமைப்பு தீட்டப் பட்ட காலத்தில் காயிதே மில்லத் அவர்கள் தமி ழுக்காக வாதாடிய நிகழ்ச்சியைவிரிவாக எடுத்துச் சொன்னார். லட்சம் மக்களடங்கிய அக் கூட்டத் தில் தி. மு. க. பொதுச் செயலாளர் அறிஞர் அண்ணா அவர்கள் கூறியதாவது :-]

''ஹிந்தி ஆட்சிமொழி என்பது ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டது. இந்திய அரசியல் சட்டத்தில் அது இடம் பெற்றிருப்பதைத்தான் பதினேழாவது விதி எடுத்துக் காட்டுகின்றது. இந்திய அரசியல் சட்டத்தைப் படித்துப் பார். அதிலே இருக்கின்ற மொழிப் பிரிவின்படி-17வது பிரிவின் படி ஹிந்திதான் ஆட்சிமொழியாகித் தீர வேண்டும். அதிலே மறுப்பில்லை. அதை மாற்ற முடியாது என்று சொல்கிறார்கள்.

## அறிவாளர் பேசுகிறார்கள் :

நான் உங்களிடத்தில் கேட்டேன், ஹிந்தி ஆட்சிமொழியாக வேண்டும் என்ற நேரத்தில், அரசியல் நிர்ணய சபையிலே தீர்மானித்து விட்டதாக இன்று காங்கிரஸ்காரர்கள் பேசுகிறார்களே தவிர, அரசியல் நிர்ணய சபையில், இதை ஏற்றுக்கொள்ள மறுத்துப் பல அறிவாளர்கள் பேசியிருக்கிறார்கள்.

அதிலே ஒருவருடையதை மட்டும் நான் உங்களுடைய கவனத்திற்கு இன்றைய தினம் படித்துக் காட்ட விரும்புகிறேன்.

அது ஆங்கிலத்திலே இருப்பதால், ஆங்கிலத்திலேயே படிக்கிறேன்.

சிவஞான கிராமணியார் கோபித்துக்கொள்ளாதிருக்க வேண்டும். ஆங்கிலத்தைத் தமிழிலே படிக்க முடியாது. ஆகையினால்தான் அதை ஆங்கிலத்திலேயே படிக்கிறேன்.

அரசியல் நிர்ணய சபையிலே இருந்த உறுப்பினர்-இன்றைய தினம் இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தலைவராக இருக்கும் காயிதே மில்லத் முஹம்மது இஸ்மாயில் அவர்கள், ''எந்த மொழி ஆட்சி மொழியாகலாம்'' என்ற விவாதம் நடந்த நேரத்தில் அரசியல் நிர்ணய சபையிலே உறுப்பினராக இருந்தார்.

## காயிதே மில்லத் பேச்சு :

அவர் சொன்னது இது :-

[காயிதே மில்லத் அவர்களின் பேச்சைப் படித்துக் காட்டினார் அண்ணா.]

அங்கே பேசியவர்கள் சிலர் சொல்லியிருக்கிறார்கள் ! ஆங்கிலமொழி இப்பொழுது வந்த மொழி; நம்முடைய புராதன மொழி வேண்டாமா ? என்று கேட்டிருக்கிறார்கள்.

அதற்கு முஹம்மது இஸ்மாயில் கேட்டிருக்கிறார். ''நீங்கள் பழங்கால மொழிக்குப் போக வேண்டும் என்றால், முறைப்படி பழங்கால மொழிக்குப் போக வேண்டும். ஏன் புராதனத்திற்குப் போக வேண்டுமென்கிறோம்? தொன்மையான ஒரு மொழி வேண்டுமென்று நம்முடைய நண்பர்களிலே சிலர் எண்ணிக் கொள்கிறார்கள்.

அது இந்தியாவிலே உள்ள மொழியா ? அல்லவா ?—என்று கூட கவலைக் கொள்ள வில்லை. புராதன மொழியைத் தேடுகிறார்கள். அதிலே அவர்கள் மனதிலே எண்ணிக் கொண்டிருப்பது சமஸ்கிருத மொழியை.

அவர் பேசிக் கொண்டிருந்த நாட்களில் ஹிந்திக்கும் சமஸ்கிருதத்திற்கும் அதிக வித்தியாசமில்லை, என்று ஹிந்தி ஆதரவாளர்களும் நம்பினார்கள். எங்களைப் போன்றிருந்த ஹிந்தி எதிர்ப்பாளர்களும் நம்பிக்கை கொண்டிருந்தோம். அதனாலேதான், அவர் அப்படிச் சொல்கிறார். அப்படிப்பட்ட ஹிந்தி மொழியை ஏற்றுக்கொள்வது சரியில்லை என்கிறார்.

புராதன மொழியைத்தான் வைத்துக்கொள்வது என்பதை ஒப்புக் கொள்வதானால்—

## ஏன் தமிழை ஆட்சி மொழி ஆக்கக் கூடாது

''புராதன மொழியிலே ஒன்றை எடுத்துத்தான் ஆட்சி மொழியாக்க வேண்டு மென்றால் நான் தைரியமாகச் சொல்கிறேன். தமிழ்மொழி (இன்னமும் விரிவாகச் சொல்ல வேண்டுமானால்) திராவிட மொழிகள்தான் இந்த மண்ணிலே முதன் முதலாகப் பேசப்பட்ட மொழிகள். எந்த வரலாற்றாசிரியனும் இதை மறுக்க மாட்டார் என்று நம்புகிறேன். எந்தப் புதைப் பொருள் ஆராய்ச்சியாளனும் என்னை மறுத்துக் கூற மாட்டான் என்று நம்புகிறேன். இந்த நாட்டிலே முதன் முதலில் பேசப்பட்ட மொழிகள் திராவிட மொழி தான்.

மிக உயர்தரமான இலக்கியச் செறிவுகொண்டது தமிழ் மொழி, மிகப் புராதன மொழி'' என்றும் கூட அவர் கூறினார்.

இவைகளெல்லாம் எனக்கு அவரிடத்திலே மதிப்பு ஏற்படுத்த உதவவில்லை.

அவரை நான் என்றென்றும் எண்ணி மதிக்கத்தக்க விதத்திலே அவர் கடைசியாக சொன்னார், இது என்னுடைய தாய்மொழி,

என்று. இவ்வாறு முஹம்மது இஸ்மாயில் அவர்கள் அரசியல் நிர்ணய சபையிலே, பேசி, 'ஏன் தமிழை ஆட்சி மொழியாக்கக் கூடாது? என்று கேட்டிருக்கின்றார்.

என்னமோ அரசியல், நிர்ணய சபை கூடிய நேரத்தில், எல்லோருமே அதற்கு ஒத்துக் கொண்டது போல் இவர்கள் இன்று பேசிக் கொள்கிறார்கள்!

உங்களுக்கு தைரியமிருந்தால், மொழி விஷயத்துக்கு மட்டும் ஒரு புதிய அரசியல் நிர்ணய சபையை நீங்கள் கூட்டித் தப்பித்துக் கொண்டு வாருங்கள், பார்க்கலாம்! உங்களை அறை கூவி நான் அழைக்கிறேன்!

(21—10—63 உரிமைக்குரல்)

## சேலம் பொதுக்கூட்டத்தில்...

''முஸ்லிம் லீகுக்கும் எங்களுக்கும் உள்ள உறவு ஏதோ பதவிக்காக ஏற்பட்டதல்ல! நாங்கள் அமைச்சர்கள் என்பதற்காக எங்களிடம் அவர்கள் உறவு கொண்டாடவில்லை.

எங்களுக்குள் ஏற்பட்ட உறவு கொள்கை அடிப்படையில் ஏற்பட்ட உறவாகும். அந்த உறவு நெருங்கிய உறவு; நெடுங்காலமாக இருந்து வரும் உறவு; நெடுங்காலத்திற்குப் பிறகும் நிலைத்திருக்கும் உறவாகும்!

முஸ்லிம் லீகைச் சார்ந்த நண்பர் ஒருவரை இங்கே பாராட்டிப் பேசினார்கள். அவர் ஒருவர் மட்டுமல்ல முஸ்லிம் லீகர்கள் ஒவ்வொருவருமே அரும்பணியாற்றும் திறமை பெற்றவர்கள்.

அதிலும் குறிப்பாக காயிதேமில்லத் அவர்கள் இஸ்லாமிய சமுதாயம் நெடுங்காலத்திற்குப் பிறகு பெற்ற பெரும் பரிசு ஆவார்கள்.

தி. மு. கழகத்திற்கு உற்ற துணைவனாக ஜனநாயகத்திற்கு கிடைத்த அறப்போர் வாளாக அவர் இருந்துவந்திருக்கிறார் தொடர்ந்து இருந்து வருவார் என்ற நம்பிக்கையில் நாங்கள் நல்லாட்சி நடத்த துணிந்திருக்கிறோம்'' இவ்வாறு முதலமைச்சர் அறிஞர் அண்ணா குறிப்பிட்டார்:

(19—5—67) அன்று சேலம் நகரில் முஸ்லிம் லீக் சார்பாக நடைபெற்ற வெற்றி விழாக் கூட்டத்தில் அறிஞர் அண்ணா கூறியது.

(29-5-67 உரிமைக்குரல்)

## கனிந்த இதயமுடையோரின் கூட்டுறவு

''முஸ்லிம் லீக்குக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் ஏற்பட்ட தேர்தல் உறவால் நல்ல பயன் ஏற்பட்டது. அவர்களுடன் கொண்ட உறவு பற்றி நான் மெத்த மகிழ்ச்சியடைகிறேன்.

''ஐநூற்றுக்கு மேற்பட்டவர்கள் உள்ள டெல்லி பாராளுமன்றத்திலே முஸ்லிம் லீக் பிரதிநிதிகளாக இரண்டே இரண்டு பேர்தான் இருக்கிறார்கள், ஆரம்பத்தில் அவர்களைப் பற்றி அலட்சியமாகத்தான் எண்ணினர். ஆனால் காயிதே மில்லத் அவர்கள் பேசிய பிறகு மற்றவர்களுடைய கவனம் இவர்கள் பக்கம் திரும்பியிருக்கிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு முஸ்லிம் லீக் ''ஆதரவு'' தந்தது பற்றி அவர்களுக்குக் கடுமையான ஆத்திரம் இந்திய அரசின் உள்துறை அமைச்சர் திரு. லால்பஹதூர் சாஸ்திரி பேசுகையில் ''என் நண்பர் இஸ்மாயில் ஸாஹிப் தி. மு. க. வுக்காக ஊர் ஊராகச் சென்று பிரச்சாரம் செய்தார் என்று கேள்விப்பட்டு வருந்தினேன் என்று கூறினார்.

''அப்போது காயிதே மில்லத் அவர்கள் எழுந்து தமக்கே உரிய புன்சிரிப்புடன், ''ஆதரவு தருவது என்று முடிவு செய்த பிறகு, பிரச்சாரத்திற்குப் போகாமல் இருக்க முடியுமா?'' என்று கேட்டார்கள்.

''இப்படிப்பட்ட கனிந்த இதய முடையோரின் கூட்டுறவைப் பெற்றோம் என்பதில் நான் மெத்த மகிழ்ச்சியடைகிறேன்.''

[1962ம் ஆண்டு மத்திவாக்கில் பெங்களூர் நகரில் சி. பி. சிற்றரசு தலைமையிலும் சிராஜுல் மில்லத் அப்துஸ் சமது சாகிப் முன்னிலையிலும் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் ]

(23-7-62 உரிமைக்குரல்)

## நேசத்தின் அடிப்படையில் ஏற்பட்ட கூட்டு

நாம் வெற்றி பெறக்கூடும் என்ற இடத்தில் முஸ்லிம் லீக் நமக்கு துணை நிற்கிறது. அதைப் போலவே முஸ்லிம் லீக் வெற்றி பெறக்கூடிய இடத்தில் நான் அவர்களுக்குத் துணை நிற்கிறேன். அதற்குப் பெயர் கூட்டுறவு.

நமக்கும் முஸ்லிம் லீக்கிற்கும் ஏற்பட்டிருக்கும் கூட்டுறவு திருவண்ணாமலையில் ஏற்பட்டதல்ல, எனக்கும் லீகிற்கும் ஏற்பட்டிருக்கும் கூட்டுறவு தேர்தலுக்காக ஏற்பட்டதல்ல!

எங்களுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் இருக்கின்ற கூட்டுறவு நாங்கள் தேர்தலுக்கு நிற்காத காலத்தில் நிற்போமா என்ற எண்ணமே ஏற்படாத காலத்தில் ஏற்பட்ட கூட்டுறவாகும்.

அது நேசத்தின் அடிப்படையில் பாசத்தின் அடிப்படையில் ஏற்பட்ட கூட்டுறவாகும்.

சென்னையில் நடைபெற்ற வெற்றி விழாக் கூட்டத்தில் அறிஞர் அண்ணா

(15-7-63 உரிமைக்குரல்)

# அரசு பாட நூலில் "காயிதே மில்லத்" பாடம்

*[1983ம் ஆண்டு ஜுன் முதல், ஐந்தாவது வகுப்பிற்கான தமிழ் பாட நூலில் காயிதே மில்லத் பற்றிய பாடம் ஒன்று தமிழ்நாடு அரசினால் சேர்க்கப்பட்டுள்ளதை அனைவரும் அறிவர். அன்று முதல் இப்பாடம் ஆண்டுதோறும் தமிழக அரசு தயாரிக்கும் பாட நூலில் இணைக்கப்பட்டே வருகிறது. 1989 ம் ஆண்டிற்கான ஐந்தாவது வகுப்பு (தமிழ்) நூலின் 17 வது பாடமாக ''காயிதே மில்லத்'' வாழ்க்கை வரலாறு அச்சிடப்பட்டுள்ளது. (பக்கங்கள் 79, 80, 81) அப்பாட வாசகம் கீழே தரப்பட்டுள்ளது]*

காயிதே மில்லத் நமது நாட்டின் சிறந்த தலைவர்களுள் ஒருவர். 'காயிதே மில்லத்' என்பது மக்கள் இவருக்குச்சூட்டிய சிறப்புப் பெயர் ஆகும். 'காயிதே மில்லத்' என்னும் அரபுச் சொல்லுக்கு 'மக்களின் வழிகாட்டி' என்பது பொருள். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் முகம்மது இஸ்மாயில் என்பதாகும். மக்களை நேரிய பாதையில் வழி நடத்திச் சென்றதால் இவரை மக்கள் இந்தச் சிறப்புப் பெயரால் வழங்கினர்.

காயிதே மில்லத் நெல்லை மாவட்டத்திலுள்ள பேட்டை என்னும் ஊரில் 1896 ஆம் ஆண்டு ஜுன் திங்கள் 5 ஆம் நாள் பிறந்தார். இவர் தந்தையாரின் பெயர் மியாக்கான் இராவுத்தர்: தாயாரின் பெயர் முகைதீன் பாத்திமா. துணைவியாரின் பெயர் ஜமால் ஹமீதா பீவி. இவருடைய ஒரே மகனின் பெயர் ஜமால்முகம்மது மியாக்கான்.

இவர் ஏழு வயதுச் சிறுவராக இருந்தபோதே தந்தையார் காலமானார். பின்னர், அன்னையாரின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார்; முதலில் நெல்லையிலும் பின்னர் சென்னையிலும் கல்வி கற்றார். இவர் சிறந்த மாணவராகத் திகழ்ந்தார்; பல பரிசுகளையும் பெற்றார்.

கல்லூரிக் கல்வி முடிந்த பின்னர் வாணிக நிறுவனம் ஒன்றில் பணியாற்றினார்; நேர்மை, கடும் உழைப்பு காரணமாக அந்நிறுவனத்தின் பங்குதாரராக உயர்ந்தார். வணிகராக இருந்த போதும், பின்னரும் ஏழை எளியவர்க்குத் தாராளமாக பொருளுதவி செய்தார்.

இளம் வயதிலேயே காயிதே மில்லத் நாட்டு விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டார்: 1921 ஆம் ஆண்டில் பி. ஏ. இறுதித் தேர்வு எழுதாமல் காந்தியடிகள், மௌலானா முகமது அலி முதலியோர் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். நம் நாடு இந்தியா, பாக்கிஸ்தான் என்று பிரிந்து சுதந்திரம் அடைந்த பொழுது முகமது அலி ஜின்னா இவரையே இந்திய முஸ்லிம் லீகிற்கு அமைப்பாளராகத் தேர்ந்தெடுத்தார்.

1948-ஆம் ஆண்டில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவரானார். இவர் சிறுபான்மை மக்கள் உரிமைக்கும், நாட்டு மக்களின் நலனுக்கும் அயராது பாடுபட்டார். இவர் சட்டமன்ற உறுப்பினராகவும், அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். மாநிலங்களவை உறுப்பினராகவும் ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் மூன்று முறை பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மூன்று முறையும் தேர்தலின்போது தம் தொகுதிக்குப் போகாமலே வெற்றி பெற்றார். இவர் தமிழ்நாட்டைச் சார்ந்தவர். ஆனால், இவர் வெற்றி பெற்ற தொகுதி கேரளத்தைச் சார்ந்த மஞ்சேரி. இந்தியாவில் இத்தகைய சிறப்புப் பெற்றவர் காயிதே மில்லத் ஒருவர் மட்டுமே.

இந்திய நாட்டுக்குப் பொது மொழியாக எம்மொழியைத் தேர்ந்தெடுப்பது என்று அரசியல் நிர்ணய சபையில் விவாதம் நடந்தது. 'தொன்மை, எளிமை, இனிமை, இலக்கிய இலக்கண வளம் நிறைந்த ஒரு மொழியே பொது மொழி ஆக்கப்பட வேண்டும்,'' என்று காயிதே மில்லத் வலியுறுத்தினர். காயிதே மில்லத்தின் மொழிப் பற்றினை இது விளக்குகிறது.

கல்வி வளர்ச்சியில் காயிதே மில்லத் மிகவும் அக்கறை காட்டினார். இவரின் பெரு முயற்சியால் பல பள்ளிகள், கல்லூரிகள் நிறுவப்பட்டுள்ளன.

இவர் தம் தாயாரின் மீது அளவற்ற பாசமும் பணிவும் கொண்டிருந்தார். ஒரு நாள் இரவு 9 மணி அளவில் சற்றுக் கால் அமுக்கி விடும்படி இவரின் அன்னையார் இவரைக் கேட்டுக் கொண்டார். அவ்வாறே இவரும் அன்னையாருக்குப் பணிவிடை செய்தார். அன்னையார் அப்படியே உறங்கி விட்டார். அதிகாலை 3 மணி தொழுகைக்காக அன்னையார் கண் விழித்தார். தம் மகன் இன்னமும் கால்அமுக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்: திகைத்துப் போனார்: மனம் உருகினார். இவ்வாறு அன்னையாருக்குப் பணிவிடை செய்தபோது காயிதே மில்லத்துக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும்.

காயிதே மில்லத் தம் பிள்ளைக்கோ குடும்பத்தினர்க்கோ வேலை வேண்டும் என்றோ, பதவி வேண்டும் என்றோ, பரிந்துரை நாடாதவர்: நெறிமுறை பிறழாது வாழ்க்கை நடத்தியவர். அவர் அரிசி, சர்க்கரை போன்ற பொருள்களைப் பங்கீட்டுக் கடையில் பெறுவதில் கூட முறைப்படியே நடந்துகொண்டார்.

காயிதே மில்லத் 4-4-1972 ல் மறைந்தார். அவரது நினைவைப் போற்றும் வகையில் சென்னை அரசினர் கலைக் கல்லூரிக்குக் காயிதே மில்லத்தின் பெயர் சூட்டப்பட்டுள்ளது. சென்னை, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலைக்குக் 'காயிதே மில்லத் நெடுஞ்சாலை' எனப் பெயரிடப்பட்டுள்ளது. புனித ஜார்ஜ் கோட்டைக்கு அருகில் உள்ள ஒரு பாலத்திற்கும் அவர் பெயர் வைக்கப்பட்டுள்ளது.

**(எழுதியவர் திரு. மியாகான் எம். எல். சி)**

# மதருஸ் மாகாண முஸ்லிம் லீக் நிர்வாகிகள் பட்டியல் (1944-ம் ஆண்டு)

சென்னை மாகாண முஸ்லிம் லீக்கின் (ஆந்திரா, மலபார் உள்ளிட்டது) மாநில நிர்வாகிகளின் தேர்தல் கூட்டம், மாகாண முஸ்லிம் லீக் அலுவலமான ஜார்ஜ் டவுன் எர்ரபாலு செட்டி தெருவி லுள்ள 33 நம்பர் கட்டிடத்தில் வைத்து 19-3-44 அன்று நடைபெற்றது. ஆரம்பத்தில் 29-10-41 முதல் 16-3-44 வரையிலான வரவு செலவு கணக்குகள் பொதுக் குழுவினால் அங்கீகாரம் செய்யப் பட்டன. பின்னர் மாகாணத்திற்கான புதிய நிர்வாகிகள் தேர்தல் ஆரம்பமானது.

பல ஜில்லாக்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். மாகாண லீக் தலைவர் ஆனரபின் மிஸ்டர் ஸெய்யது மஹ்மூது பாஷா ஸாஹிப் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்கள். பின் கண்டவர்கள் முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**தலைவர் :**

ஹானரபிள் மிஸ்டர் ஸெய்யது மஹ்மூது பாஷா சாஹிப்

**உபதலைவர்கள் :**

1. ஜனாப் B. போக்கர் சாஹிப், B.A.B.L.
2. ஜனாப் M. முஹம்மது இஸ்மாயில் ஸாஹிப்
3. ஜனாப் ஹாஜி அப்துஸ் ஸத்தார், ஹாஜி இஸ்ஹாக் சேட் ஸாஹிப், M.L.A. (Central)
4. ஜனாப் கான் பஹதூர் மஹ்மூது ஷம்னாத் சாஹிப், M.L.A.
5. ஜனாப் மஹ்பூப் அலி பேக் ஸாஹிப், B.A.B.L., M.L.A.
6. ஜனாப் M. N. அப்துர் ரஹ்மான் ஸாஹிப், தென்காசி

**கௌரவ காரியதரிசிகள் :**

1. ஜனாப் K. T. M. அஹ்மது இப்ராஹீம் ஸாஹிப், B.A.B.L.
2. ஜனாப் மௌலானா அப்துல் லதீப் பாரூக்கி ஸாஹிப்
3. ஜனாப் M. J. ஜமால் மொஹிதீன் ஸாஹிப்

**பொக்கிஷதார்**

கான் பகதூர் A. அப்துல் கரீம் ஸாஹிப் பஹதூர்.

நிர்வாகக் குழுவின் உறுப்பினர்கள்

1. ஜனாப் கான் ஸாஹிப் N. M. காஜாமிய்யான் ராவுத்தர்
2. ,, O. S. சதக்தம்பி மரைக்காயர்
3. ,, K. உப்பிஸாஹிப்
4. ,, K. M. சீதி ஸாஹிப் B.A B.L.
5. ,, S. K. சேக் ராவுத்தர் M.L A.
6. ,, மலங்கு அஹ்மத்பாக்ஷா ஸாஹிப் B.A. M.L.A.,
7. ,, ஸெய்யத் அஸீஸுத் தீன் ஸாஹிப் M.A.B.L.
8. ,, முஹமத் மஹ்மூத் ஸாஹிப் B.A.B.L.
9. ,, டாக்டர் செய்யத் நியமத்துல்லா ஸாஹிப்
10. ,, H. நஸீர் அஹமது ஸாஹிப்
11. ,, M. J. ஜமாலுத்தீன் ஸாஹிப்
12. ,, முஹம்மது ரஜாகான் ஸாஹிப்
13. ,, அப்துல் ஹமீத்கான் ஸாகிப் M.L.A.
14. ,, K. T. ஷெரீப் ஸாஹிப்
15. ,, அஹ்மத் மொஹிதீன் ஸாஹிப் பீஜபுரி

16. ,, G. A. அப்துல் காதர் ஸாஹிப்
17. ,, M. A. ஹபீஸ் ஸாஹிப் B.A. B.L.
18. ,, P. N. I. அபூதாலிப் ஸாஹிப்
19. ,, V. S. முஹமது இப்ராஹீம் ஸாஹிப்
20. ,, செய்யது அப்துல் அஸீஸ் ஸாஹிப்
21. ,, M. A. முஹம்மது இபுருஹீம் B.A B. L.
22. ,, மௌலவி S. A. முஹம்மத் அலிஸாஹிப்
23. ,, கான்ஸாஹிப் மாஹின் ஷம்னுத் ஸாஹிப்
24. ,, T. அப்துஸ் ஸயீது ஸாஹிப்
25. ,, சின்ன காஜியார் S. A. F. இப்ராஹீம் ஸாஹிப்
26. ,, N. முஹம்மத் இப்ராஹீம் ஸாஹிப்
27. ,, நவாப் தவ்லத்துல்லாகான் ஸாஹிப்
28. ,, Dr. அப்துஸ்ஸலாம் ஸாஹிப் M.L.A.
29. ,, K. S. K. முஹம்மது ஹுஸைன் ஸாஹிப் B.A B.L.
நெல்லை டவுன்

[1945 ம் ஆண்டு நடைபெற்ற மாகாண முஸ்லிம் லீக் தேர்தலில் காயிதே மில்லத் அவர்கள் மாநிலத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.]

## தலைவரின் மாந்தலே விஜயம்

அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவரும், இந்திய பார்லிமெண்ட் மெம்பருமான ஜனுப் முஹம்மது இஸ்மாயீல் சாஹிப் அவர்களும், தென்னிந்திய முஸ்லிம் கல்விச் சங்கம், அதன் சார்பில் நடைபெறும் மதருஸ் நியூ காலேஜ் இவைகளின் காரியதரிசி ஜனுப் எம். எஸ். அப்துல் மஜீது சாஹிப், பி. ஏ., அவர்களும், திருச்சி ''ஜமால் முஹம்மது காலேஜ்'' காரியதரிசி ஜனுப் ஜமால் முஹையதீன் சாஹிப் அவர்களும், இரங்கூன் பிரபல கத்திக்கடை வியாபாரி ஜனுப் கே. இ. எம். ஷரீப்அவர்களும் 21-5-53ல காலை விமானத்தில் இரங்கூனிலிருந்து மாந்தலை வந்து சேர்ந்தார்கள். மாந்தலை தோல் வியாபாரி ஜனுப் எஸ். மதார் அவர்களைத் தலைவராகவும், மேற்படி வியாபாரம் ஜனுப் கே. கே. எஸ். முஹம்மது ஈசுப் அவர்களைக் காரியதரிசியாகவும், மற்றும் பதின்மர்களை அங்கத்தினர்களாகவும் கொண்ட ஓர் உபசாரக் கமிட்டி அமைக்கப்பட்டது.

தலைவர்கள் மாந்தலேயில் பல முக்கிய இடங்களுக்குச் சென்று பார்வையிட்டதுடன் 24-5-53ல இவ்விடம் நடைபெற்ற அகில பர்மா விவசாயிகள் மாநாட்டுக்கும் 29-5-53ல மேமியோவுக்கும் விஜயம் செய்தது குறிப்பிடத்தக்கது.

31-5-53ல இரவு மாந்தலே பி. ரோடிலுள்ள யூனிவர்சல் பேக்கரியில் நடைபெற்ற விருந்து வைபவத்தில், தலைவர்களுக்கு மாந்தலே முஸ்லிம் சமூகத்தினர் சார்பாக ஓர் உபசாரப்பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. மேற்படி வைபவத்தில் மாந்தலேயின் பிரபல உத்தியோகஸ்தர்களும், டாக்டர்களும், லாயர்களும், சமூகப் பிரபலஸ்தர்களும் கலந்து கொண்டனர்.

தலைவர்கள் பர்மியர்களின் விருந்தோம்பல் குணதிசயத்தை சிலாகித்துப் பேசியதுடன், பர்மா வாழ் சகல சமூகத்தினரும், தேசத்தினரும் பர்மாவின் முன்னேற்றத்தைக் குறிக்கோளாகக் கொண்டு, பர்மாவில் வாழ்ந்துவர வேண்டுமென்றும், பர்மியரும், இந்தியரும், இதர சமுதாயத்தினரும் ஒருவருக்கொருவர் அன்பாகப் பழகுவது கொண்டு நாட்டின் சமாதானத்துக்கும் சுபிட்சத்துக்கும் வழிகோலவேண்டுமெனவும் இந்தியப் பிரதமரும் பர்மியப் பிரதமரும் இரு தேசங்களின் நல்லுறவுக்கு மட்டுமின்றி ஆசியாவினுடையவும், உலகத்தினுடையவும் சமாதானம் சுபிட்சத்துக்காக அடிக்கடி கலந்துறவாடுவதும், பாடுபடுவதுமே நமக்கு ஓர் முன் மாதிரி யாகுமென்றும் வெகு அழகாகப் பேசினர்கள்.

மதருஸ் ''நியூ காலேஜ்,'' திருச்சி ''ஜமால் முஹம்மது'' காலேஜ்களுக்காக, மாந்தலேயிலுள்ள முக்கியஸ்தர்களிடம் சிறிது நிதி வசூலித்துக் கொடுக்கப்பட்டது.

1-6-53ல அன்பர்களும், பிரபலஸ்தர்களும் விமானத்திடலுக்குச் சென்று இனிது பயணமனுப்பி வைக்க, தலைவர்கள் இரங்கூன் பிரயாணமானார்கள்.

பன்னூலாசிரியர் P. M. ஜமால் (இளையாங்குடி புதூர்)

# மாங்கி ஷரீபுக்குக் கொடுத்த பதிலடி!

சென்னை கோகலே ஹாலில் 7-10-66 ம் தேதியன்று நடைபெற்ற கூட்டத்தில் காயிதே மில்லத் பேசும் பொழுது கூறியதாவது:.

''அகில இந்திய முஸ்லிம் லீக்கின் பொதுக் குழு கூட்டத்திற்காக நாங்கள் கராச்சி சென்றிருந்தோம். ஸ்தாபனத்தை இரண்டாகப் பிரிக்கும் பணி முடிந்து நாங்கள் தாயகம் திரும்ப இருந்தோம்; ஒரு நண்பர் எங்களுக்கு விருந்து கொடுத்தார். அன்றைய பாக்கிஸ்தானின் முக்கிய தலைவர்களும் அவ்விருந்திற்கு வந்திருந்தனர். பீர் சாகிப் மாங்கிஷரீப் என்பவரும் வந்திருந்தார். அன்றைய வடமேற்கு எல்லை மாகாணத்தில் அவர் பெரிய தலைவர்.

விருந்தில் கலந்துகொண்ட நண்பர்கள் பலரும் 'நீங்கள் இங்கேயே இருந்து விடுங்கள். இந் நாட்டை உங்களுக்கு சுற்றிக் காட்டுகிறோம். உங்கள் வசம் விமானம் ஒன்றை ஒப்படைக்கிறோம். அதில் ஏறி நாட்டை சுற்றிப் பாருங்கள்; உங்களுக்கு எந்த இடம் பிடித்தமாக இருக்கிறதோ அதை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொன்னார்கள். பீர்சாகிப் மங்கிஷரீப் என்பவர் என்னைப் பார்த்து ''உன்னை உனது சென்னையிலேயே வந்து நான் சந்திக்கிறேன். என்னிடம் மட்டும் இரண்டு லட்சம் வீரர்கள் இருக்கிறார்கள். அவர்களுடன் வருவேன்'' என்று கூறினார்.

''உடனேயே நான் பதில் சொன்னேன். பீர் சாஹிப்! உங்கள் பேச்சை அளந்து பேசுங்கள், நிறுத்துங்கள், நீங்கள் இருப்பது ஒரு நாடு, நான் இருப்பது வேறொரு நாடு. எங்கள் நாட்டு எல்லையைத் தாண்டி ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் உங்களை தடுத்து நிறுத்தும் கரங்களில் எனது கரம் முதலாவதாக இருக்கும். சென்னை வரும் வரை நாங்கள் காத்திருக்கப்போவதில்லை'' என்று சற்று கடுமையாகவே கூறினேன்.

அடுத்து அங்கிருந்த மற்ற தலைவர்களைப் பார்த்து காயிதேமில்லத் அவர்கள் கூறியதாவது:-

'நாம் முன்னர் ஒரே தேசமாக இருந்தோம், ஆனால் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டு இரு நாடுகளாகப் பிரிந்து விட்டோம். ஒப்பந்தத்தை மதித்து நடப்பது முஸ்லிமின் கடமையாகும். இந்த அறிவுரையை நம்மனைவருக்கும் இஸ்லாம் போதிக்கிறது.''

நாடு விடுதலை பெற்ற பின் காயிதே மில்லத் அவர்கள் பாக்கிஸ்தான் சென்றது அந்த ஒரே தடவைதான். அப்போது அவர்கள் சுமார் பத்து நாட்கள் கராச்சியில் இருந்தார்கள்.

[உரிமைக் குரல் 17-10-66]

## இலக்கை அடைந்தே தீரும்!

1967 ம் ஆண்டு ஏழு கட்சி கூட்டணி அமைத்து ஆளுங்கட்சியான காங்கிரசை எதிர்த்துப் போட்டியிட்டது. அக்கூட்டணியில் முஸ்லிம் லீக்கும் உண்டு. அப்பொழுது ஆனந்த விகடன் வார இதழ், ஒரு கழுதை மீது ஏழு கட்சித் தலைவர்களும் அமர்ந்திருந்து செயின்ட் ஜார்ஜ் கோட்டையை நோக்கிப் பயணம் போவதாக ஒரு கேலிச்சித்திரத்தைப் பிரசுரித்திருந்தது. இதைப் பார்த்து ஏனைய தலைவர்கள் பலரும் கண்டனம் செய்து அறிக்கை விட்டனர். ஆனால் காயிதே மில்லத் அவர்கள் மட்டும் இவ்வாறு கூறினார்கள்:-

''அந்த கார்ட்டூன் ஒரு உண்மையை உணர்த்துவதாக இருக்கிறது. கழுதை ஒரு வலுவான பிராணி, எவ்வளவு பாரத்தை வைத்தாலும் அது தாங்கிக் கொண்டு தூக்கிச் செல்லும். ஏழு கட்சித் தலைவர்களையும் தாங்கக் கூடியது, கழுதைதான். எனவே அது நிச்சயமாக தனது இலக்கைப் போய் அடையும்.'' என்று கூறினார்.

அக் கூற்றுப் படியே திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி, அண்ணா தலைமையில், அப்பொழுதுத் தேர்தல் முடிவில் ஏற்பட்டது.

ஹாஜி W. P. K. மீரா சாகிப், காலன் குடியிருப்பு

# ரஷ்ய அறிஞர் சரியாகச் சொன்னார்!

*[சென்னை கோகலே ஹாலில் 7-10-66- அன்று நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் காயிதே மில்லத் உரையாற்றியபொழுது கூறியதாவது:-]*

ஒரு பாரசீக அறிஞர் சொன்ன கருத்து எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது.

''என்னுடைய முகம் ஒரு கண்ணாடி; அதில் ஒவ்வொருவரும் அவரவர் முகத்தைப் பார்க்கலாம்'' என்று அப்பெரியவர் சொன்னார். இதிலிருந்து மூஞ்சியை தரம் போடுபவர்களை நீங்கள் மதிப்பிட்டுக் கொள்ளலாம்.

நாங்கள் எதைச் சொல்கிறோமோ அதையே செய்பவர்கள். எதையும் ஸ்பஷ்டமாகக் கூறிவிடுவோம். ஒளிவு மறைவு எங்களிடம் கிடையாது. அரசியலில் நன்மை தீமை தெரிந்து ஏவல் விலக்கல் பார்த்து நடக்க வேண்டும் என்ற கொள்கையுடையவர்கள் நாங்கள். அரசியலுக்கு தர்ம நீதி தேவை இல்லை என்ற சித்தாந்தத்தை நாங்கள் ஒப்புக்கொள்வதில்லை. ''மாக்கிய வல்லி'' சித்தாந்தம் சரியானதல்ல.

அரசியலிலும் தார்மீக நீதி தேவை என்பதை பண்டித நெஹ்ருவிடமே நேரில் சொல்லி இருக்கிறோம். அரசியல் உள்பட எல்லாவற்றிலுமே ஆண்டவனை சாட்சியாக வைத்து நடக்க வேண்டும்; உலக மக்களை சாட்சியாக வைத்து நடக்க வேண்டும்; அதுவே எங்கள் அரசியல்; எங்கள் கொள்கை கட்சி.

முஸ்லிம்களுக்காக ஒரு கட்சியா? இது வகுப்பு வாத மல்லவா? என்று பெரிய தலைவரிலிருந்து சாதாரண தொண்டன் வரை ஏதோ பெரிய விஷயத்தை கண்டு பிடித்து விட்ட மாதிரி கேள்வி போடுகிறார்கள். அண்மையில் ரஷ்ய அறிஞர் ஒருவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவர் மாஸ்கோ சர்வ கலாசாலை சரித்திரப் பிரிவுகள் ஒன்றில் தலைவர் நூல் ஒன்று எழுத விஷயம் சேகரம் செய்து வருகிறார்; வெகு நேரம் பேசிய அவர் ''லீக் ஒரு வகுப்பு வாத சபை அல்லவா'' என்ற கேள்வியை கேட்காமலேயே பேசிக் கொண்டிருந்தார். நானாகவே அவரிடம் சொன்னேன். என்னைப் பார்க்க வருபவர்கள் அனைவரும் இப்படி ஒரு கேள்வி கேட்பதுண்டு, நீங்கள் கேட்கவில்லையே என்றேன். அவர் சிரித்துக் கொண்டே சொன்னார். ''இது ஒரு முட்டாள் தனமான கேள்வி''

நமது ஆட்சியாளர்கள் இந்த முட்டாள் தனத்தை இன்னும் விடவில்லை.

[உரிமைக்குரல் 17-10-66]

## அமைச்சரை அச்சுறுத்தியப் பெயர் பலகை!

பரமக்குடி எமனேஸ்வரத்தில் ''ஜின்னா ரமணியச் சோலை'' என்ற பூங்கா இருக்கிறது. இந்தப் பக்கம் சுற்றுப்பயணம் வரும் பொழுதெல்லாம் காயிதே மில்லத் அவர்கள் இரவு தங்குவதற்கு இச்சோலையின் மத்தியில் அமைந்திருக்கும் கட்டிடத்திற்குத்தான் வந்து விடுவார்கள். நிறைய மரங்களை வைத்து வளர்த்திருந்தோம்; நன்கு குளிர்ச்சியாகவும் பார்ப்பதற்கு ரம்மியமாகவும் இருக்கும். இப்பூங்காவின் முகப்பில் ''முஸ்லிம் லீக்'' என்ற பெயர் பலகை 1947 க்கு முன்பு இருந்தே இருந்து வருகிறது. அதை நாங்கள் அகற்றவேயில்லை.

மதராஸ் அமைச்சரவையில் ரோச் விக்டோரியா அமைச்சராக இருந்த பொழுது, இந்த சோலையில் ஒரு மரத்தை நடுவதற்காக அவரை நாங்கள் அழைத்து இருந்தோம். அப்பொழுது இந்தத் தொகுதி சட்டமன்ற காங்கிரஸ் கட்சி உறுப்பினர் கோவிந்தனும் கூட வந்திருந்தார். 'முஸ்லிம் லீக்' என்ற பெயர் பலகையைப் பார்த்துவிட்டு'' இது இன்னமுமா இருக்கிறது'' என்று கூறி சோலைக்குள் வர அவர் மறுத்து விட்டார். ஆனால் அமைச்சர் ரோச் விக்டோரியா பூங்காவிற்குள் வந்து மர கன்று ஒன்றை நட்டு எங்களை சிறப்பித்துச் சென்றார்.

எம். முஹம்மது ஜுனைத்தீன், எமனேஸ்வரம்

## மினாவில் நடந்த அதிசயம்!

1965-ம் ஆண்டு காயிதே மில்லத் ஹஜ் கடமையை நிறைவேற்றச் சென்ற சமயம் அவர் களது குழுவில் நானும் சேர்ந்திருந்தேன்.

ஹஜ் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டிருக் கும்பொழுது நடந்த அதிசயம் ஒன்றை என்னால் கூருமல் இருக்க முடியவில்லை, ஷைத்தானுக்கு கல் எறிவதற்காக நாங்கள் ஏழு பேரும் கூட்டாகச் சென்ருேம். வழி நெடுக கடுங் கூட்டம்; ஒரே நெரிசல், நாங்களும் முண்டியடித்துக் கொண்டு உள்ளே புகுந்து சென்று கொண்டிருந்தோம். எங் களது அருகில் வந்து கொண்டிருந்த ''நீக்ரோ'' பெண் ஒருத்தி தனது முழங்கையால் காயிதேமில் லத்தை பலமாக தள்ளிவிட்டு விட்டாள். வாட்ட சாட்டமான நீக்ரோவின் தோள் வலிமையை காயிதே மில்லத்தினுல் தாக்குபிடிக்க இயலவில்லை. தூரப் போய் கீழே விழுந்தார்கள்.

நல்ல வேளையாக அது ஒரு சுவராகவும், இருந் தது. அச் சுவரில் யாரோ படுக்கை ஒன்றை சாய்த்து வைத்திருக்கிருர்கள். அப் படுக்கையின் மீது போய் தலைவரவர்கள் ''தொப்'' என்று சாய்ந்தார்கள். நல்ல காலமாக காயம் ஒன்றும் ஏற்படவில்லை. அத்துடன் பின்னல் வந்து கொண் டிருந்தவர்களின் காலடிக்குள் அகப்பட்டுக்கொள்ள வும் இல்லை. இதைக் கண்டு ஒரு கணம் நாங்கள் அதிர்ந்து விட்டோம். ஓடோடிச் சென்று காயிதே மில்லத்தைத் தூக்கி விட்டோம். எனக்கொன்றும் காயமில்லை என்று கூறி எங்களுக்கு அவர்கள் ஆறு தல் சொன்னுர்கள். அந்த படுக்கை மட்டும் அந்த இடத்தில் அகஸ்மாத்தாக இல்லாதிருந்தால் விப ரீத விளைவுகள் ஏற்பட்டிருக்கக் கூடும். அல்லாஹ் காப்பாற்றி விட்டான்.

எங்கள் குழுவில் ஒருவராக வந்த காயிதே மில்லத் எங்களுடன் சேர்ந்து சமையல் வேலையை யும் பார்த்துக் கொள்வார்கள். காய்கறி நறுக்கிக் கொடுப்பார்கள். மற்றும் சில்லறை வேலைகளையும் தாமாகக் கவனிக்கத் தொடங்கி விடுவார்கள். நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என நாங்கள் வற்புறுத்திக் கூறினுலும் அதை சட்டை செய்ய மாட்டார்கள்.

மதருஸ், **A. K. அப்துல் ஹலீம் சாஹிபு**

## மைய்யாஸின் மகிமை

ஈரோடு மைதீன் பாட்சா என்ற ''மைய்யாஸ்'' பழம்பெரும் முஸ்லிம் லீக்கர் 1947 க்கு முன்பிருந்தே காயிதே மில்லத்துடன் அவருக்கு நெருங்கிய பழக்கம். தமிழ்நாடு கலாய் வர்த்தகர் சங்கச் செயலாளராக மைய்யாஸ் வெகுகாலம் பணியாற்றினுர். அவரின் வற்புறுத்துதல் காரண மாகவே தமிழ்நாடு கலாய் வர்த்தக சங்கத் தலைவராக காயிதே மில்லத் அவர்கள் தங்களது ஆயுட் காலம் வரை இருந்து பணிபுரிந்தார்கள்.

மைய்யாஸ் மகன் திருமணத்திற்காக காயிதேமில்லத் ஈரோடு வந்திருந்தார்கள். திருமண நிகழ்ச்சிக்கு குறிப்பிட்ட நேரத்தில் வந்து விட்டார்கள். ஆனல் மைய்யாசை மண்டபத்தில் காணோம். திருமண ஏற்பாடாக எங்கோ சென்றவர் சற்று நேரம் கழித்துத்தான் வந்தார். அப்பொழுது காயிதே அவர்கள் ''என்ன மைய்யாஸ்! என்னை எதிர்பார்த்து பலரும் காத்திருக்க நான் கண்டிருக்கிறேன். இப்போ உம்மை எதிர்பார்த்து நான் காத்திருக்கிறேன்'' என்ருர்கள். கூடி இருந்தவர்கள் சிரித்து விட்டார்கள்.

**ஈரோடு ஹாஜி K. K. அப்துஸ் ஸமது B. Sc**

# நெய்வேலி பழுப்பு நிலக்கரி; தற்போதைய நிலவரம்

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்கள் 1948ம் ஆண்டில் இருந்தே நெய்வேலி லிக்னைட் பற்றி சட்டப் பேரவையில் பிரஸ்தாபித்து வந்ததை அனைவரும் அறிவர். ஆனால் 1956ம் ஆண்டில் தான் நெய்வேலி சுரங்க வேலைகள் முறையாக ஆரம்பிக்கப்பட்டன. 1962ம் ஆண்டில் இருந்து, தமிழ் நாட்டிற்கும் மற்றும் தென் மாநிலங்களுக்கும் நெய்வேலி மின்சாரம் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

மத்திய அரசு தான் இதற்கென தனிவாரியம் அமைத்து காரியமாற்றி வருகிறது. தமிழ்நாடு அரசு தனக்கு ''ராயல்டி'' (உரிமைப் பணம்) வேண்டும் என பல ஆண்டுகளாகக் கேட்டு வந்தும் அது கை கூடாதிருந்தது. இப்பொழுது தான் மத்திய அரசு இதுவரையுள்ள ராயல்டிகளுக்கெல்லாம் மொத்தமாகச் சேர்த்து முப்பது கோடி ரூபாய் அளிக்க இசைந்துள்ளது. இனிமேல் நெய்வேலியில் வெட்டி எடுக்கப்படும் பழுப்பு நிலக்கரிக்கு டன் ஒன்றுக்கு இரண்டரை ரூபாய் ''ராயல்டி'' அளிக்கவும் மத்திய அரசு முன் வந்துள்ளது.

இது குறித்து தமிழக முதல்வரின் சட்டமன்ற அறிக்கையும், உற்பத்தித் திறன் குறித்து வாரியத் தலைவர் பத்திரிக்கைகளுக்கு அளித்த பேட்டியும் கீழே தரப்பட்டுள்ளன.

## முதல்வரின் அறிவிப்பு

தமிழக சட்டசபையில் 6-4-90 அன்று முதலமைச்சர் டாக்டர் கலைஞர் கருணாநிதி ஒரு அறிவிப்பை வெளியிட்டு பேசினார். அது வருமாறு:

நெய்வேலி பழுப்பு நிலக்கரி வாரியம் 1956-ம் ஆண்டிலிருந்து பழுப்பு நிலக்கரி எடுத்துக் கொண்டிருந்தாலும் அதற்காக கொடுக்க வேண்டிய 'ராயல்டி' (உரிமைப் பணம்) மாநில அரசுக்கு கொடுக்கப் படாமல் இருந்தது. 'ராயல்டி'க்குப் பதிலாக லாபத்தில் ஒரு பங்கு கொடுப்பதாக தமிழக அரசுடன் ஒரு ஒப்பந்தத்தை செய்திருந்தது.

இந்த ஒப்பந்தம் 1976-ல் காலாவதியாகும் வரையில் இந்த வாரியம் லாபம் சம்பாதிக்கவில்லை. அதன் பிறகு லாபம் கிடைக்கும் கட்டம் வந்தபோது அந்த ஒப்பந்தத்தைப் புதுப்பிக்கவில்லை. அதே நேரத்தில் எடுத்த பழுப்பு நிலக்கரிக்கு 'ராயல்டி' யும் கொடுக்கவில்லை.

இந்த அரசு இப்போது பொறுப்பேற்ற பிறகு மத்திய அரசுடன் தொடர்பு கொண்டு 1956 முதல் ராயல்டி கொடுக்க வேண்டுமென்று வலியுறுத்தியதின் பேரில் மத்திய அரசு நம்முடைய கோரிக்கையை பரிசீலிக்க ஏற்றுக் கொண்டிருந்தது.

நான் 5-4-90 அன்று டெல்லி சென்றிருந்த போது மத்திய அமைச்சர் ஆரிப்முகமது கானுடன் இது குறித்து பேச்சுவார்த்தை நடத்தி, ராயல்டி தொகைக்காக பழைய பாக்கியைக் கொடுப்பதுடன், பாக்கித் தொகைக்கு வட்டியும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டேன்.

நம்முடைய கணக்கின்படி 1956 முதல் 1989-ஆம் ஆண்டு வரை நமக்கு கொடுக்க வேண்டிய ராயல்டி தொகை ரூ 23.36 கோடி. இதில் 7.09 கோடி தமிழ்நாடு மின் வாரியம் நெய்வேலி லிக்னைட் வாரியத்திற்குத் தர வேண்டிய தொகை என்று அவர்கள் கணக்கிட்டிருந்தார்கள்.

எனவே பாக்கித் தொகை 16.27 கோடி ரூபாய்தான் என்று முதலில் மத்திய அரசு சொல்லியிருந்தாலுங்கூட இந்தத் தொகைக்கு வட்டி கொடுக்க வேண்டும் என்ற நம் கோரிக்கையில் நியாயம் இருப்பதை ஏற்று நிகர மொத்தமாக ரூ 30 கோடி கொடுப்பதற்கு மத்திய அமைச்சர் இசைவு தெரிவித்துள்ளார் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

**இனி நடப்பு ஆண்டிலிருந்து டன் ஒன்றுக்கு ரூ 2.50 'ராயல்டி' (உரிமைப்பணம்) கொடுப்பதற்கும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.''**

இவ்வாறு முதலமைச்சர் கூறியதும் உடனே பேரவை உறுப்பினர்கள் மேசையை தட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

## வாரியத் தலைவரின் பேட்டி

நெய்வேலியில் கடந்த ஆண்டு உற்பத்தி சாதனை குறித்து நெய்வேலி பழுப்பு நிலக்கரி வாரியத்தின் தலைவர் மகிப்சிங் பத்திக்ரிகை நிருபர்களுக்களித்த பேட்டியின்போது கூறியதாவது:-

நெய்வேலி என். எல். சி. 89-90ம் ஆண்டில் நிர்ணயிக்கப்பட்ட குறியளவை விட கூடுதலான உற்பத்தி செய்து சாதனை படைத்து உள்ளது.

நெய்வேலியில் உள்ள இரண்டு சுரங்கங்களிலும் 1 கோடி 4லட்சத்து 60 ஆயிரம் டன் பழுப்பு நிலக்கரி வெட்டி எடுக்க திட்டமிடப்பட்டது. ஆனால் 1 கோடி 12 லட்சத்து 33 ஆயிரம் டன் எடுக்கப்பட்டது. முதலாம் சுரங்கத்தில் மட்டும் 74 லட்சத்து 3 ஆயிரம் டன் எடுக்கப்பட்டுள்ளது. இது சுரங்க வெட்டு தொடங்கிய நாள் முதல் இது வரை செய்யாத சாதனையாகும்.

அது போல மின் உற்பத்தி, இரண்டு அனல் மின் நிலையங்களிலும் 691 கோடி 80 லட்சம் யூனிட் திட்டமிடப்பட்டு, 738 கோடி 55 லட்சம் யூனிட் உற்பத்தி செய்யப்பட்டது. மின்சார ஏற்றுமதி (விற்பனை) 522 கோடி 80 லட்சம் யூனிட் நிர்ணயம் செய்யப்பட்டது. ஆனால், 588 கோடி 93 லட்சம் யூனிட் ஏற்றுமதி ஆனது.

யூரியா உரம் உற்பத்தி குறியளவு 1 லட்சத்து 29 ஆயிரத்து 200 டன்கள். ஆனால் உற்பத்தி செய்தது 1 லட்சத்து 43 ஆயிரத்து 155 டன்கள் ஆகும்.

ஆனால் கரிக்கட்டி (கோக்) உற்பத்தி மட்டுமே குறியளவை விட குறைவாக உற்பத்தியானது. இலக்கு 2 லட்சத்து 62 ஆயிரம் டன்கள் என்ற போதிலும் உற்பத்தி 2 லட்சத்து 53 ஆயிரத்து 724 டன்கள்தான் இருந்தது. இந்த யூரியா உரம் கோக் கரிக்கட்டி உற்பத்தி இதுவரை செய்யாத சாதனைகளாகும்.

கரிக்கட்டி ஆலையை நவீனப் படுத்தும் முயற்சிகள் எடுக்கப்படுகின்றன.

தினமலர் (சென்னை பதிப்பு) 7-4-90

## ரயில் அட்டவணையைப் பார்த்து ஏமாற வேண்டியதில்லை

சேலம் நகரில் பொதுக் கூட்டத்தில் காயிதே மில்லத் அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அன்றிரவு அவர்கள் மதராஸ் திரும்பவேண்டும். இரவு 12-50 க்கு ரயிலில் ரிசர்வேஷன் செய்யப்பட்டிருந்தது. பதினொன்றே கால் மணி வரை பொதுக்கூட்டத்தில் பேசிக்கொண்டேயிருந்தார்கள். பேச்சு முடியும் தோரணையில் இல்லை. ரயில் நேரம் பற்றி இலேசாக பிரஸ்தாபிக்கப்பட்டது. ''ரயில் போனால் போகட்டும்; அல்லாஹ் நாடினால் நான் மதராஸ் போய்க் கொள்வேன்'' என்று சொல்லி விட்டுப் பேச்சைத் தொடர்ந்தார்கள். மேலும் அரை மணி நேரம் பேசிவிட்டுத்தான் தங்களது உரையை நிறைவு செய்தார்கள். அதற்குப் பிறகு இரவு உணவருந்தி விட்டு ரயில் நிலையத்திற்குச் சென்றால் தலைவர் அவர்கள் செல்லவேண்டிய ரயில் ஒரு மணி நேரம் தாமதமாக வந்து கொண்டிருப்பது தெரிய வந்தது. இந்த ரயிலைப் பிடிப்பதற்கு தலைவர் அவர்கள் வந்த நேரமே சரியான நேரம் என்பது எங்களுக்கு அப்பொழுதுதான் புரிந்தது. அவர்களது ''தவக்கலை'' என்ன வென்பது!

**A. அப்துர் ரகீம், சேலம்.**

---

## ஓரியண்டல் கல்வித் திட்டத்தை ஊக்குவித்தவர்

**டாக்டர் S. K. காதிரி,** *முர்தஜவியா கல்வி ஸ்தாபனம், மதராஸ்*

தமிழ்நாட்டில் முதன் முதலாக அரபியை முதல் மொழியாகக் கொண்டு ஓரியண்டல் கல்வி பாட திட்டத்தை ஆரம்பித்தது நாங்கள்தான். காயிதே மில்லத் அவர்கள், ஓரியண்டல் கல்வி திட்டத்தை வெற்றிபெறச் செய்ய ஆவன செய்தார்கள். எங்களை ஊக்குவித்தார்கள். ஆரம்பத்தில் நாலைந்து மாணவர்களுக்கு மேல் ஒவ்வொரு வகுப்பிலும் சேர முன் வரவில்லை, என்றாலும் காயிதே மில்லத் போன்றவர்களின் உற்சாகத்தின் காரணமாக இத் திட்டத்தை நாங்களும், விடாப்பிடியாக அமல்படுத்தினோம். இன்று நூற்றுக்கணக்கான மாணவர்கள் எங்கள் கல்வி நிலையத்தில் ஓரியண்டல் பாடத் திட்டத்தின் பிரகாரம் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

# காயிதே மில்லத் அவர்களின் ரேடியோ பிரசங்கம்

*[இந்தியன் யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் காயிதே மில்லத் அவர்கள் 12-1-63ஆம் தேதி இரவு 9 மணிக்குச் சீன ஆக்கிரமிப்பு பற்றி சென்னை வானொலி நிலையத்திலிருந்து பேசியபோது கூறியதாவது :]*

எனது நாட்டவரே!

சகோதரர்களே! சகோதரிகளே! சீனாவை ஆளும் கம்யூனிஸ்ட் ஆட்சியாளர்கள் மிகவும் கீழ்த்தர மான வகையிலும் நயவஞ்சகமான முறையிலும் செய்த மோசடிக்கு நாம் எதிர்பாராத வகையில் இலக்கானவர்களாகி விட்டதை நீங்கள் இதுவரை அறிந்திருப்பீர்கள். இது ஒரு சாதாரண எல்லைத் தகராறு என அவர்கள் கூறுவதெல்லாம் முழுக்க முழுக்க ஹம்பக்காகும்; அது ஓர் ஏமாற்று வித்தையே.

நமது எல்லை சம்பந்தமாகத் தங்களுக்கு ஏதாவது பாத்தியதை உண்டு என அவர்கள் உண்மையிலேயே நினைப்பார்களானால், யோக்கிய மானதும் வழக்கமானதுமான வழி என்ன வென்றால், நம்மிடம் நேரடியாகவே தங்களுடைய கோரிக்கைகளை அவர்கள் சமர்ப்பிப்பதாகும். அவர்களுக்குத் திருப்தி அளிக்கக்கூடிய வகையில் நாம் நடந்து கொள்ளத் தவறினால், அப்பொழுது அவர்கள் நமக்கு ஓர் இறுதி எச்சரிக்கை விடுக்க வேண்டியது அவசியமாகும். இம்மாதிரி ஒன்றையும் அவர்கள் செய்யவில்லை.

## செஞ்சீனாவுக்கு நாம் செய்த உதவி :-

நம்மைப் பொறுத்தவரை 1947-ம் ஆண்டில் நாம் சுதந்திரம் அடைந்ததிலிருந்து, உலக நாடு களுக்கிடையில் ஒற்றுமை ஓங்கவேண்டு மென் பதற்காகவும் நாம்முழுமனத்துடனும், விடாமலும் பாடுபட்டு வந்திருக்கிறோம். 1946-ம் ஆண்டில் சீனாவினுடைய ஆட்சியைக் கம்யூனிஸ்டுகள் கைப் பற்றிய சமயம், நம்முடைய நெருங்கிய அண்டை வீட்டுக்காரர் என்ற முறையில், அவர்களுடன் நாம் நட்புறவு கொள்ள நாம் ஆவன செய்தோம். ஐக்கிய நாடுகள் சபையிலும் மற்ற இடங்களிலும் அவர்களை நாம் ஆதரித்து வந்தோம். ஒருவரோ டொருவர் சினேகமாக வாழ்வது எனவும் அவர் களுடன் நாம் ஓர் ஒப்பந்தம் செய்து கொண் டோம்.

## துரோக ஆக்கிரமிப்பு:-

கம்யூனிஸ்டு சீனர்களுடைய நட்புறவு வேண்டு மென அதற்காக நாம் பாடுபட்டுக் கொண் டிருக்கும் பொழுது, நமது எல்லைக்குள் கள்ளத் தனமாக அவர்கள் ஊடுருவி வந்து கொண்டிருந் திருக்கிறார்கள். இது கண்டு பிடிக்கப்பட்ட சமயம், அதனை அவர்கள் வஞ்சகமாய் மழுப்பலானார்கள். அத்துடன் இதை மிகச் சாதாரண விஷயமாகக் கருதினார்கள். இது ஒன்றும் அவ்வளவு பிரமாத மான விஷயமன்று என்பது போல அவர்கள் நடந்து கொண்டார்கள். தக்க தருணத்தில் எல்லாம் நேர் செய்யப்பட்டு ஒழுங்கு செய்யப் பட்டு விடும் என அவர்கள் நமக்கு உறுதி அளித் தார்கள். ஆனால், இறுதியாக தக்க தருணம் வந்த சமயத்தில் நமது நாட்டின் மீது நயவஞ்சக மான முறையிலும், மூர்க்கத்தனமாகவும் பெரிய அளவில் தாக்குதலை அவர்கள் துவக்கினார்கள்.

## தீமையில் நன்மை

தூண்டப்படாத முறையிலும் யாதொரு கொள்கையின் பேரிலுமின்றியும் நம்மீது ஆக்கிரமிப்புச் செய்யப்பட்டதைக் கண்டதும் இந்நாட்டிலுள்ள எல்லாக் கட்சிகளும், எல்லாத் தரப்பினரும் மக்கள்பிரிவுகளும் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறு மெச்சத் தகுந்த வகையில் நடந்து கொண்டார்கள். அவர்கள் எல்லாம் ஒன்று கூடி பெருமைக்குரிய இந்தியப் பிரதம மந்திரியின் பின்னால் கட்டுக்கோப்புடன் இணைந்து நின்றார்கள்.

நமது தாய்நாட்டின் புனித பூமியிலிருந்து இந்த ஆக்கிரமிப்பை - வேண்டுமென்றும் வஞ்சக மாகவும் தொடுக்கப்பட்ட ஆக்கிரமிப்பை களைந் தெறிவது என்ற உறுதிப்பாட்டுடன் அவர்கள் எல்லாம் ஒன்று இணைந்து நின்றனர்.

அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நமது நேச நாடுகள் நமக்கு வரவேற்கத்தக்க உதவிகளைத் துரிதமாகக் கொண்டு வந்து சேர்த்தன. உரிய காலத்தில் செய்த உதவிக்காக நமது இதயங் கனிந்த நன்றியறிதல்களையும் அவை பெற்றன.

மற்றும் பல நாடுகளும் இந்தியாவுக்கு ஆதரவாக எழுந்தன. அவற்றின் அனுதாபங்கள் நம் பக்கம் இருந்தன. பொருளையும், நல்லாசி களையும் அவர்கள் நல்கினார்கள். நமது பக்கம் நியாயம் இருக்கிறதென்பதை இந்த நாடுகள் எல்லாம் ஒத்துக் கொண்டன. இந்தியாவுக்கு ஏற்படக் கூடாத இந்த அபாயம் உலக சமா தானத்திற்கே ஒரு பேரபாயமாகும் என அவைகள் கருதின.

## நயவஞ்சக வலை வீச்சு :-

இத் தருணத்தில் சீனுவிலுள்ள கம்யூனிஸ்ட் ஆட்சியாளர்கள் மற்றொரு தந்திரத்தையும் காட்டி நடித்தனர். அவர்களுடைய வழக்கமான நய வஞ்சக வலைகளுள் இதுவும் ஒன்று என்பது நிரு பணமாகிவிட்டது. கடந்த நவம்பர் 21-ம் தேதி யன்று அவர்கள் ஒருதலைப் பட்சமாகவே போர் நிறுத்தம் செய்தார்கள். அவர்கள் விதிக்கும் ஒரு சில நிபந்தனைகளுக்குட்பட்டு நம்முடன் பேச்சு வார்த்தை நடத்தவும் தாங்கள் தயாராக விருப்ப தாகவும் அவர்கள் அறிவித்தார்கள். அப்பொழுதும் கூட, ஒரு சுமுக சூழ்நிலை உருவாக வேண்டுமென் பதற்காகச் சீனுவுடன் பேச்சு வார்த்தை நடத்த இந்திய அரசாங்கம் முன் வந்தது. அதாவது குறைந்த பட்சமாகச் சீனுவினுடைய கடைசி ஆக்கிரமிப்புக் காரணமாக அது கைப்பற்றிய பகுதிகளை விட்டு விட அந்நாடு இசைந்தால் அத் துடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கலாம் என இந்திய சர்க்கார் கூறியது.

ஆனுல் கடுமையில்லாததும் மிகத் தாராள மானதுமான இக் கோரிக்கைகளைக் கூட ஏற்றுக் கொள்ளச் சினத்தலைவர்கள் தயாராக இல்லை.

சீனர்கள் தாங்களாகவே அழைத்துக்கொள்ளும் ''சமாதான முயற்சி'' களின் உள்நோக்கம் என்ன வென்ருல், நாம் உஷாராகிக் கொள்வதினின்றும் நம்மைத் தடுப்பதும், வெளி நாடுகளிலுள்ள நமது நண்பர்களின் உற்சாகத்தையும், தாராளத்தையும் குன்ற வைக்க வேண்டுமென்பதுமாகவே தெரி கிறது. இவ்வாறு செய்வதன் மூலம் வருங்காலத் தில் தாங்கள் நினைத்ததைச் சாதிக்கலாம் என அவர்கள் கருதுகிருர்கள்.

## விஷமப் பிரச்சாரம் :-

இந்த லட்சியத்தை மனத்தில் வைத்தே, சீனத் தலைவர்கள் இப்பொழுது விஷமத்தனமான பிரச்சாரத்தில் இறங்கி இருக்கிருர்கள். தங்க ளுடைய நய வஞ்சகமான சமாதான முயற்சியை இவ்வாறு அவர்கள் பயன்படுத்துகிருர்கள்.

இந்தப் பிரச்சாரம் எல்லாம் நம்முடைய நண்பர்களிடத்திலும், ஆதரவாளர்களிடத்திலும் பலிக்காது தான். ஆனுல், ஒரு சில நாடுகள் இப்பிரச்சாரம் உருவாக்கிவிட்ட குழப்பத்திற்குப் பலியாகி விடத்தான் செய்தன. சீனுவினுடைய நிலையும், நமது நிலையும் ஒன்று போலுள்ளதே என இந்நாடுகள் நம்பும்படியாகப் பிரச்சாரம் செய்யப்பட்டுள்ளது. அது மட்டுமல்லாமல் மற்றுஞ்சில நாடுகள் நமது எதிரியின் ''அளவைக்'' (Size) கண்டு ஒரு வகைப் பயத்திற்குள்ளாகி இருக்கிருர்கள். ஆக்கிரமிப்புச் செய்தவரின் பக்கம் சார்ந்து நின்ருல் தான் நமது காரியம் பழுதுபடாது என இவர்கள் கற்பனை செய்து கொள்கிருர்கள்.

## ஆசியாவை எதிர் நோக்கி நிற்கும் அபாயம்

நம்மை ஒட்டிய பக்கத்து நாடுகள் சம்பந்தப் பட்டவரை, இந்தப் பிரச்சாரத்தின் எதிரொலி என்னவாக இருந்தபோதிலும், அவர்களுடைய நலன்கள் எப்பக்கம் இருக்கின்றன என்பதையாரும் தெளிவாகத் தெரிந்து கொள்ளமுடியத்தான் செய் யும். இன்று நம்மை எதிர் நோக்கியுள்ள அபாயம் அவர்களை எதிர் நோக்க அதிக நாட்களா பிடிக் கும்? விஸ்தரிப்பு ஆதிபத்திய வெறி ஒரு பக்கம் ஏற்பட்டு விட்டது. நண்பனையும் பகைவனையும் பாகுபடுத்துவதென்பது அதனிடம் கிடையாது.

சீனுவுக்கு ஒருவிதமான கெடுதலையும் இந்தியா செய்ததில்லை. அந்நாட்டுடன் நட்புறவு கொள் ளவே இந்தியா ஆதிமுதல் பாடுபட்டது; ஒவ் வொரு சந்தர்ப்பத்திலும் சீனுவை அது ஆதரிக் கவே செய்தது. என்ருலும் இன்று நமக்கு என்ன கைமாறு கிடைத்துள்ளது. எதிர் காலம் எப்படி இருக்கும் என்பது தெளிவாக இருக்கிறது. நன்ருகத் தெரியும்படியாகச் சுவரின் மீது எழுதப் பட்டுள்ளது. தக்க தருணத்தில் இந்த எச்சரிக் கையின் படி காரியமாற்ற விட்டால், இன்று நம் மீது விழுந்திருக்கும் ''விஷப் பார்வை'' மற்ற வர்கள் மீது விழத்தான் செய்யும். எதிர்பார்ப் பதற்கும் முன்னதாகவே இவ்வாறு நிகழவும் செய்யலாம்.

## பாக்கிஸ்தானின் கடமை :-

குறிப்பாக, பாக்கிஸ்தானை பொறுத்தவரை இதுதான் உண்மை நிலவரமாகும். இந்தக் கட்டத்தில் அந்நாடு நம்முடன் சேர்ந்து ஒரு முகமாக நிற்பதில் தான் அதனுடைய உண்மை யான நன்மை இருக்கிறது. நல்ல அண்டை நாடு என்ற முறையிலும் அது செய்யக்கூடியது இது தான். மேலும் அந்நாடு தனது நலன்களைச் சீரான முறையில் கவனித்துக் கொள்வதாக இருந்தால், இந்தியாவுடன் அதற்குள்ள தாவாக்களை எல்லாம் அது ஒத்தி வைத்திருக்கவேண்டும். இருவருக்கு முள்ள பொதுவான ஆபத்து நீங்கும் வரை இந்தத் தாவாக்களைத் தள்ளி வைத்திருக்க வேண்டும். இது உண்மையிலேயே மிகப் பிரமாதமான முன் மாதிரியாக இருந்திருக்கும். அதன் மூலம் பிரமாத

மான சாதனைகளுக்கும் கொஞ்சங் கூடத் தவருத முறையில் அது லாயக்குள்ளதாக அமைந்திருக்கும். ஆனால் இதற்கு மிகுந்த தைரியமும் மனத்திடமும் வேண்டும். சரியான காரியத்தைச் சரியான தருணத்தில் செய்கிறோம் என்ற உன்னத உணர்ச்சியாலும் தன்னம்பிக்கையாலும் தூண்டப் பட்ட மனத்திடம் இதற்குத் தேவை. அத்தகைய தொரு தைரியம் பாக்கிஸ்தானுடைய நலன்களை இன்று நிச்சயமாகவும், நிரந்தரமாகவும் வாழ வைக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்த உலகில் வேறெதுவும் சாதிக்கமுடியாததை இது சாதிக்கும். இந்த உண்மையை உணர்ந்து அதன்படி நடக்கும் பொறுப்பு பாக்கிஸ்தானுக்குரியதாகும்.

## தாய்நாட்டைக் காக்க தொடர்ந்து பணி செய்வீர்

எனது நாட்டினரே, இப்போது நமது அண்டை நாட்டினர்கள் என்ன செய்தாலும்சரி, என்ன செய்யாவிட்டாலும் சரி, இந்திய மக்க ளாகிய நாமனைவரும் நமது உயிரினும் இனிய தாய் நாட்டிற்கு நமது கடமையை இம்மியும் தவருத முறையில் செய்ய நாம் உறுதி பூண்டு விட்டோம். நமது நாட்டிற்கு நாம் ஆற்றும் கடமை, மனித சமுதாயத்திற்கும் உலக அமைதிக்கும் உண்மை யான முறையில் செய்த கடமையாகும்.

நயவஞ்சக சீன ஆக்கிரமிப்பு எதிர்பாராத விதத்தில் பெரிய அளவிலும் மூர்க்கமாகவும் நம் மீது தொடுக்கப்பட்ட போதிலும் அதைக் கண்டு நாம் மனம் தளர்ந்து விடவில்லை. மெச்சத் தகுந்த வகையில் நீங்கள் அப்பொழுது நடந்து கொண்டீர்கள். அதைக் கண்டு உலகமே உங்க ளைப் போற்றிப் புகழ்ந்தது. நெஹ்ருஜி சர்க் காரின் தலைமையின் கீழ் இந்நாட்டிலுள்ள மக்க ளாகிய நீங்கள் ஒரே மனிதனைப் போன்று, ஒற்றுமையாகவும், கட்டுக் கோப்பாகவும் நின் றீர்கள், இந்தத் துஷ்ட ஆபத்தை எதிர்க்கவும் அதைத் தகர்த்தெறியவும் உறுதிபூண்டீர்கள். நாம் செல்லவேண்டிய வழி கரடுமுரடானதாகவும் தூரமுள்ளதாகவும் இருக்கும் என நமக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. இருந்தபோதிலும் அவ் வழியை நாம் விடா முயற்சியுடனும் சலன புத்திக்கு இடங்கொடாத முறையிலும் நாம் கடந்தாக வேண்டும்.

ஏனெனில், அதன் மூலம் நாம் அடையக்கூடிய பலன்கள் சாமானியமானவை அல்ல; ஜீவ னுள்ளவைகளாகும் அவை. தாய் நாட்டின் சுதந்திரம், ஐக்கியம், கௌரவம் ஆகியவை சம்பந்தப்பட்டதாகும் இது. ''இந்தியா சரிந்து போனால் இங்கு வாழ்வது யார்?'' என்பது மிக்க கருத்தானதொரு கேள்வியாகும்.

## மானம் போகும்போது வேறு எது தங்கும்?

எனது சகோதர சகோதரிகளே! மானம் போகும்போது வேறென்றும் தங்காது என்பது ஓர் அப்பட்டமான உண்மையாகும். இது ஒரு நீதி வாக்காகும். ஆனால், மானத்தைக் காப்பாற்றிக் கொண்டால் நிச்சயமாக எல்லாவற்றையும் காப்பாற்றிக் கொண்டவர்களாவோம். எனவே நமது கடமை என்னும் பாதை எவ்வளவுதான் தூரமானதாகவும், கஷ்ட சாத்தியமானதாகவும் இருந்தபோதிலும் நாம் அவ்வழியில் செல்ல வேண்டியதுதான்.

ஏற்கனவே, தேசீயப் பாதுகாப்பு நிதிக்கும் இதர யுத்த முயற்சிகளுக்கும் மக்கள் பிரமாதமாக ஆக்கமும் ஊக்கமும் அளித்துள்ளார்கள். இந்த முயற்சிகள் கொஞ்சங் கூடக் குறையாத வகையில் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். தேச பாது காப்பு வகைக்குப் பணமும், தங்கமும் மென் மேலும் வந்து சேர்ந்து கொண்டிருக்கும் வண்ணம் இருக்கவேண்டும். பாதுகாப்புப் படைகளின் எல்லா வகை பிரிவுகளிலும் ஆயிரக்கணக்கில் ஆட்கள் சேர்ந்த வண்ணம் இருக்கவேண்டும்.

## எந்தத் தியாகமும் செய்யத் தயங்காதீர்

மேலும் எந்தப் பகுதியிலிருந்தும் சரி, எந்தக் கட்சியும் சரி சர்ச்சைக்குரிய பிரச்சினைகளை ஆரம் பிக்காதிருக்க வேண்டும். இந்நாட்டில் வதந்திகள் உலவுவதற்கு இடங் கொடுக்கக் கூடாது. அதை அனுமதிக்கக் கூடாது. மக்களுடைய கவனத் தையும் சக்தியையும் சிதறடிக்கும்படி அவை செய்து விடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்த விதமாக நாம் நமது வழியில் உறுதி யுடன் முன்னேறி அணி வகுத்துச் செல்லவேண்டும் உறுதியான வெற்றி என்ற லட்சியத்தை அடையும் வரை நாம் இவ்வாறே செய்ய வேண்டும். நிச்சயமாக நமதுலட்சியம் உறுதியான வெற்றியே! ஏனெனில் நமது பக்கம் நியாயம் இருக்கிறது. தாய் நாட்டின் சுதந்திரம், ஐக்கியம், மானம் ஆகியவை சம்பந்தப்பட்டிருக்கும் பொழுது எந்த ஒரு தியாகமும் பெரிதன்று. ஒரு பொருட்டன்று.

எல்லாம் வல்ல இறைவன் தாய்நாட்டின் பிரகாசமான வெற்றியின் பக்கம் நம்மை நடத்திச் செல்வானாக!

*[21-1-1963 உரிமைக்குரல்]*

# ஒற்றுமைதான் ஆணிவேர்

[தென்காசி ஹமீதியா அரிசி ஆலை வளாகத்தில் 23-10-70 அன்று முஸ்லிம் லீக் ஊழியர்கள் முன்பு காயிதே மில்லத் ஆற்றிய பேருரையின் ஒரு பகுதி இது. இப்பேச்சு ''சரவிளக்கு'' பத்திரிக்கையில் வெளிவந்தது. அவ்வுரையை ''மணிச்சுடர்'' தினசரி 4-6-87 ம் தேதி மீண்டும் பிரசுரித்திருந்தது. அதை எடுத்து இங்கு மீண்டும் கையாளப்பட்டுள்ளது]

''முன்பெல்லாம் இந்தச் சமுதாயத்தில் ஒற்றுமை என்ற வார்த்தை, பழம் பேச்சாகக் கருதப்பட்டு வந்தது!

இது ஏதோ மேடை அலங்காரத்துக்காகவும் எழுத்துக் கோர்வைக்காகவும் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல்லாகவே மதிக்கப்பட்டு வந்தது!

இன்று அப்படியல்ல.

நாம் பெற நினைக்கின்ற நியாயமான உரிமைகளைப் பெறுவ தற்கும்—அதற்குரிய பிரதிநிதித்துவத்தை அடைவதற்கும் — நாம் மட்டுமல்லாமல் நமது வருங்காலச் சந்ததியினர்களும் உரிமையுள்ள பிரஜைகளாக வாழ்வதற்கும் இந்த ஒற்றுமைதான் மூலகாரணம் என்பதை நம்மில் ஒவ்வொருவர்களும் உணரத் தலைப்பட்டவர்களாகிவிட்டோம்.

இந்த ஒற்றுமையின் சக்தி கொண்டு—ஓரளவு, இன்றைக்கு நாட்டு நடவடிக்கைகளில் நம்மை மதிக்கின்ற சூழ்நிலை உருவாகி வருவதையும் கண்கூடாகக் கண்டு வருகின்றோம்!

மேலும், இந்த ஒற்றுமை வலுவுடையதாக அமையுமானால், நம்மையும் இந்த நாட்டையும் சூழ்ந்துள்ள பேராபத்துக்களை அகற்றுவது என்பது மிகமிகச் சுலபமானதே!

இதற்கு ஒற்றுமையை உதாசீனப் படுத்தி விட்டு எந்த நடவடிக்கைகளை எவர்கள் எடுத்தாலும் அந்தந்த நடவடிக்கைகள் அத்தனையுமே அழித்தொழிக்கப்பட்டு வந்திருக்கின்றன என்பதை நாம் ஒவ்வொருவரும் நன்றாக நினைவில் பதியவைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த ஒற்றுமையின் சக்திதான் உலகத்தின் பார்வைக்கு மிகச் சாமான்யமானவர்கள் என்று கருதப்பட்டவர்களையெல்லாம் உயர்ந்த அந்தஸ்துள்ளவர்களாகவும், வெற்றிக்குரியவர்களாகவும் ஆக்கியிருக்கிறது என்பதை ஒவ்வொரு சரித்திரமும் ஸ்பஷ்டமாக நமக்குக் கூறிக் கொண்டிருக்கின்றன!

இறைவன் தன்னுடைய இறுதித் திருமறையாம் அல்குர் ஆனில், இந்த ஒற்றுமையைப் பற்றி மிகத் தெளிவாகவும்-விளக்கமாகவும்-மிக சுருக்கமாகவும் கட்டளையிட்டிருக்கிறான்.

ஒற்றுமை என்னும் கயிற்றைப் பலமாக பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள், என்பதாகக் கட்டளையிடுகின்ற இறைவன், அத்துடன் நிறுத்தி விடாமல், அப்படி ஒற்றுமைப்படாமல் இருந்தால், என்ன நேருமென்பதையும் சுட்டிக்காட்டி, அச்சுறுத்தி எச்சரிக்கின்றான்.

''உங்களுக்குள் தர்க்கித்துக்கொண்டு அழிந்து விடாதீர்கள்!''

என்பது தான் அந்த அச்சுறுத்தலும் எச்சரிக்கையும்!

இப்படியாக, செய்ய வேண்டியதையும் செய்யக் கூடாததையும் இறைவன் கூறியிருக்கின்றபோது, செயல்படுத்தியாக வேண்டிய ஒற்றுமையைச் சிதைத்து விட்டு, செய்யக் கூடாத தர்க்கங்களைச் செய்து கொண்டிருப்பது, எந்த நியாயத்தின் பாற்பட்டதென்பதை ஒவ்வொருவரும் உணரத் தலைப்பட்டால், இறைவனின் கட்டளைப்படி கடமையாற்றவேண்டிய ஒற்றுமையின் அவசியம் தானாகவே விளங்கி விடும்; அதன் மூலம் இறைவன் நம்மை வெற்றியாளர்களாக்கி விடுகின்ற சிறப்பும் கிடைக்கும்!

இறைவன் கட்டளையிடுகின்ற இந்த 'ஒற்றுமை' என்பது மிகச் சாமான்யமான ஒன்றென்பதாக யாரும் கருதி விட வேண்டாம்!

இந்த ஒற்றுமைதான் பாறைகளைத் தூள் தூளாக்கிச் சிதறடிக்கும் ''டைனமைட்'' போன்றதாகும்! இதை அலட்சியமாகக் கருதுவது, ஆபத்துக்களைத் துணைக்கழைப்பதற்கு ஒப்பாகும்!

இறைவன் கட்டளையிடுகின்ற இந்த ஒற்றுமை, எந்தக் காலங்களில் எந்த நாட்டில் - எந்தச் சமுதாயத்தில் - எந்த நேரத்தில் கைக் கொள்ளப் பட்டதோ, அந்தக் காலங்களில் - அந்த நாட்டில் அந்தச் சமுதாயத்தில் அந்த நேரத்தில் மகத்தான வெற்றிகளை ஈட்டியதை, எழுதப்பட்ட வரலாறுகள் வெள்ளிடை மலையென விளக்கிக் கூறுகின்றன.

ஒற்றுமைக்குரிய சமுதாயம் ஒரு போதும் வீழ்ச்சியுற்றதில்லை. வெற்றியைச் சந்திக்காமல் இருந்ததுமில்லை! கண்ணிய மிக்க வெற்றிகள் அனைத்தையும் கையகப்படுத்துவதில் இந்த ஒற்றுமை தான் முதலிடம் வகிக்கின்றது.

நம்மைப் பொறுத்தவரை இந்த தேசத்தின் நிர்மாணங்களில் நிகழ்ச்சி நிரலில் இன்றியமையாத பூமிப்புத்திரர்களாகவே திகழ்ந்துவந்திருகின்றோம் திகழ்ந்தும் வருகின்றோம்!

வாடும் பயிருக்கு வான் மழை தேவைப் படுவது போல், இன்றைய இந்திய முஸ்லிம் களாகிய நமக்கு உடனடித் தேவை என்பது ஒற்றுமைதான்! மற்றவைகளென்பது அடுத் தடுத்துத்தான்!

இந்தச் சமுதாயத்தில் எப்போது ஒற்றுமை உருக்குலைய ஆரம்பித்ததோ, அன்றைக்குத்தான் வீழ்ச்சிக்கும் வேதனைக்கும் உரியதாக இந்தச் சமுதாயம் மாறியது!

இறைவனின் கட்டளையைப் புறக்கணித்து விட்டு, இறைவன் நம்மைப் புறக்கணித்து விட்ட தாகப் புலம்புவதும், சலம்புவதும் எந்த வகையில் அர்த்தமுடையதாகும்!

மறையளித்த மாபெரியோனைக் குறைபட்டுக் கொள்ளும் குறுமதியைத் தவிர்த்தவர்களாக, கரைகாணாக் கருணையாளனான அந்த ஏக நாயகன் இடுகின்ற கட்டளைப்படி கடமையாற்ற வேண்டிய கடப்பாடு நமக்கு இருந்தாக வேண்டாமா?

ஒற்றுமை எனும் கயிற்றைப் பலமாகப் பற்றிப் பிடித்துக் கொண்டவர்களாக ஸ்தாபன ரீதியில் செயல்படுவோமானால், எல்லாம் வல்ல அல்லாஹ்வின் அருளைப் பெற்றவர்களாக இனிமேல் வெற்றியாளர்களாக நாமிங்கே திகழ முடியுமல்லவா!

இந்தச் சமுதாயத்தில் எப்போதெல்லாம் ஒற்றுமை உருக்குலைய ஆரம்பித்ததோ தன்னலங் களும், தர்க்க வாதங்களும் தலைதூக்க ஆரம்பித்த தோ, அன்றைக்குத்தான் வீழ்ச்சிக்கும் வேதனைக் கும் உரிய சமுதாயமாக இந்தச் சமுதாயம் மாறிய தென்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்றதே!

மன்னிப்பவர்களிலெல்லாம் மாபெரும் மன்னிப்பாளன் என்று தன்னைத் தானே பிரகடனப் படுத்திக் கொள்ளும் இறைவனின் மன்னிப்பைப் பெற வேண்டுமானால் — மீண்டும் நாம் வெற்றி யாளர்களாகத் திகழ வேண்டுமானால், அந்த இறைவன் அல்குர்ஆன் மூலம் இடுகின்ற ஒற்று மைக்கு உடன் பட்டவர்களாக கட்டளைக்குக் கட்டுப் பட்டவர்களாக இந்திய முஸ்லிம்களின் ஏகோபித்த ஸ்தாபனமான இந்திய யூனியன் முஸ்லிம்லீக்கை கட்டிக் காத்துப் பலப்படுத்த வேண்டியதென்பது இந்திய முஸ்லிம்களின் சொந்தக் கடமைகளில் ஒன்றல்லவா?''

## நாசுக்காக சொன்னதிலும் ஒரு நகைச்சுவை!

புது ஆயக்குடிக்கு காயிதே மில்லத் அவர்கள் வந்தால் சர்க்கரை முஹம்மது ராவுத்தர் வீட்டில்தான் தங்குவார்கள். சாப்பாடும் அங்குதான். அந்த ஊரில் குடிப்பதற்கு நல்ல தண்ணீரும் கை கழுவுவதற்கு உப்புத் தண்ணீரும் வைப்பதுண்டு. அவ்வூர் நிலவரம் அப்படி.

ஒரு சமயம் தலைவரவர்கள் குடிப்பதற்கு வெந்நீரை ஆறவைத்துத் தரும்படி கேட்டார்கள். கவனக் குறைவால் நல்ல தண்ணீருக்குப் பதிலாக உப்பு நீர் கொடுக்கப்பட்டு விட்டது. வாயில் நீரை வைத்ததும் நிலைமையைப் புரிந்து கொண்ட தலைவரவர்கள் ''இந்த ஊரில் கராமாத்துகளும் நடக்கும் போலிருக்கிறதே'' என்று சொன்னார்கள். பக்கத்திலுள்ளவர்களுக்கு ஒன்றும் புரிய வில்லை. சர்க்கரை முஹம்மது ராவுத்தர் பேந்த பேந்த விழித்தார்.

உடனே தலைவரவர்கள் ''இந்த ஊரில் நல்ல தண்ணீர் கூட சுட வைத்தால் உப்புத் தண்ணீ ராகிவிடும் போலிருக்கிறது'' என்று புன்னகை பூத்த வண்ணம் சொன்னார்கள். அப்பொழுதுதான் நடந்த தவறு உணரப்பட்டது. ஒரு சாதாரண பிசகைக் கூட எவ்வளவு நாசுக்காகவும் நகைச் சுவையாகவும் தலைவர் சுட்டிக்காட்டி விட்டார்கள்!

**வேலூர் ஷேக் மீரான்**



# அமெரிக்க நீக்ரோவும் முஸ்லிம் லீக்கும்



1967 ம் ஆண்டு பொதுத் தேர்தலின்போது மஞ்சேரி தொகுதியிலிருந்து இரண்டாவது தடவையாக லோக்சபைக்கு காயிதே மில்லத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், அந்த ஆண்டு ஏப்ரல் மாதம் தங்களது தொகுதியில் நடைபெற்ற நன்றியறிவிப்புக் கூட்டங்களில் கலந்து கொண்டார்கள். 16-4-67 ம் தேதியன்று ஏர நாட்டிலுள்ள ஒரு ஊரில் அவர்கள் பேசும்பொழுது கூறியதாவது-:

'தேவைப்பட்ட போது முஸ்லிம் லீக்கைப் பயன் படுத்திக் கொண்டு, தேவை தீர்ந்ததும் அதனைக் குப்பையில் வீசுவது போன்று தள்ளி வைத்த காங்கிரசின் தேர்தல் தில்லுமுல்லு களையும், வஞ்சனையையும், துரோகத்தையும், அந்த வஞ்சகர்களுக்கு முஸ்லிம் லீக் கற்பித்துக் கொடுத்த சரியான பாடத்தையும் குறித்து கேரளத்தில் மட்டுமல்ல, இந்தியாவில் மாத்திர மல்ல, உலகம் முழுவதிலும் உள்ள மக்கள் தெரிந்து வைத்துள்ளனர். நான் புனித ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்று வதற்காக திரு மக்கா, மதீனு போன்ற புண்ணிய நகரங்களுக்குச் சென்றிருந்த போது அங்கு கூட கேரளம் பற்றி என்னிடம் மக்கள் கேட்டனர்.

அவ்விதம் கேட்டவர்களில் அப்துல் அஜீஸ் ஹாபிஸ் என்பவரும் ஒருவர். அவர் ஒரு அமெரிக்க நீக்ரோ! மனித உரிமைகள் மறுக்கப் பட்டு ஒன்றுபடவோ ஒரு அமைப்பை உருவாக்கிக் கொள்ளவோ வழிவகையின்றி கொத்தடிமை களாக அமெரிக்காவிலும், நியூ யார்க்கிலும் அடக்கு முறைக்கும், அநீதிக்கும் பலியாகிவரும் பல்லாயிரக்கணக்கான முஸ்லிம்களில் அவரும் ஒருவர்.

அவர் என்னிடம் வந்து''நான் கேரள முஸ்லிம் கள் பற்றியும், அவர்களுடைய ஏக ஸ்தாபனமான முஸ்லிம் லீக்கைப் பற்றியும் அதன் வீரமும்,விவேக மும் மிக்க நடவடிக்கைகள் பற்றியும் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். அந்தப் பேரியக்கத்தின் பெருந்தலைவராகிய தங்களைக் காண்பதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். முஸ்லிம் லீக்கைப் போன்ற ஒரு அமைப்பை அமெரிக்காவிலும் நிறுவ விரும்புகிறேன். அத்தகைய அமைப்பின் மூல மாகத்தான் முஸ்லிம்கள் மானத்தோடும், மரியாதையோடும் வாழ முடியும்'' என்று அந்த நீக்ரோ முஸ்லிம் அன்பர் குறிப்பிட்டார்!

இவ்வாறு பேசிய காயிதே மில்லத் அவர்கள் தம்மைத் தங்களின் பிரதிநிதியாகத் தேர்ந்து எடுத்ததற்காக ஏர நாட்டிலுள்ள எல்லா வாக் காளப் பெருமக்களுக்கும் மீண்டும் நன்றி தெரி வித்துக் கொண்டார்கள்.

உரிமைக்குரல் 24-04-69

---

# கம்யூனிஸத்திலுள்ள ஓட்டை

ஒரு நேரத்தில் காயிதே மில்லத்துடன் உரையாடிக் கொண்டிருந்த சமயம் கம்யூனிஸ்டுகள் பற்றிய பேச்சு வந்தது. அப்பொழுது தலைவரவர்கள் கூறியதாவது:— உலகாயதப் பிரச்சனைகள் தான் மனிதனுக்கு தேவையானது, ஆத்மா, பாவ புண்ணியம் பற்றியெல்லாம் கவலைப்பட மனிதனுக்கு நேரமில்லை என பொதுவுடைமைவாதிகள் கூறுகிறார்கள். வயிற்றுப் பசிதான் முதல் பிரச்சினை மற்றவை பின்னல் என்கிறார்கள்.

ஒருவனுக்கு நல்ல பசி: அவனுக்கு வயிறார உணவு தர மற்றொருவன் முன் வருகிறான். ஆனால் ஒரு நிபந்தனை விதிக்கிறான். என் காலில் கிடக்கும் செருப்பால் உன் தலையில் மூன்று தடவைகள் அடிப்பேன். அதற்கு நீ சம்மதிக்க வேண்டும். இதற்கு ஒத்துக் கொண்டால் உனக்கு வயிறார சாப்பாடு என்கிறான். இந்த நிபந்தனையை மானம் மரியாதையுள்ள மனிதன் எவனும் ஒப்புக் கொள்வானா? அப்படி ஒருவன் ஒத்துக் கொண்டால் அவனை மனித இனத்தில் சேர்த்து நாம் கணக்குப் பார்ப்போமா? எனவே உணவு மட்டும் பிரச்சினை என்பது சரியான வாதம் அல்ல. மானம், மரியாதை, ஆன்மா என்றெல்லாம் ஒன்றும் இல்லையா? அவற்றைப் புறக்கணித்து விட முடியுமா? பொதுவுடைமைவாதிகள் இந்த அம்சங்களை கணக்கில் எடுத்துக் கொள்வதேயில்லை; இதன் காரண மாகவே அவர்களுடைய கொள்கைகள் முழு வெற்றிபெற முடியாதிருக்கிறது.

J. M. ஜக்கரியா, லால்பேட்டை

# அசோக் மேத்தா கமிட்டியினரின் கேள்விகளுக்கு காயிதேமில்லத்தின்

# ஆணித்தரமான பதில்கள்

இந்திய யூனியன் முஸ்லிம்லீக் தலைவர் காயிதே மில்லத் எம். முஹம்மது இஸ்மாயில் சாஹிப் அவர்கள் 22-8-62 அன்று இந்தியப் பிரதமரின் இல்லத்தில் வைத்து திரு. அசோக்மேத்தா அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்டிருந்த ''தேசிய ஒருமைப்பாடு, வகுப்பு வாதம்'' பற்றிய கமிட்டியை சந்தித்தார்கள். ராஜ்ய சபையிலுள்ள முஸ்லிம் லீக் கட்சி உறுப்பினர் ஜனுப் இப்ருஹீம் சுலைமான் சேட் அவர்களும் காயிதே மில்லத் துடன் சென்றிருந்தார்.

தேசிய ஒருமைப்பாடு குறித்தும் வகுப்புவாதம் குறித்தும் அச்சமயம் விவாதிக்கப்பட்டது. கமிட்டியி னர் எழுப்பிய கேள்விகளும் அதற்கு காயிதே மில்லத் அவர்கள் அளித்த மறுமொழிகளும் கீழே தரப்படு கின்றன.

விவாத ஆரம்பத்தில் காயிதே மில்லத் அவர்கள் ''தேசிய ஒருமைப்பாடு என்பது ஒரு புனிதமான விஷய மாகும்; நம்மனைவர்க்கும்—முஸ்லிம் லீகர்களுக்கும் இக் கமிட்டியைச் சேர்ந்த உங்களுக்கும்—பொதுவான தாகும்; உவப்பானதாகும். எனவே, இப்பிரச்சினையை கட்சிநோக்கத்துடனே, சிக்கல் தரக்கூடிய வகையிலோ நாம் விவாதிக்கலாகாது. நம் முன்னுள்ள பிரச்சினை களுக்கு தீர்வு காண வேண்டும் என்ற அந்தரங்க சுத்தி யுடனும், மனம்விட்டும், முழுமனதுடனும் சுமுகமான சூழ்நிலையிலும் நாம் இதை அணுக வேண்டும்'' என் பதை அனைவருக்கும் நினைவு படுத்திக் கொண்டார்கள்.

கேள்வி: சுதந்திரத்துக்கு முன்னுலுள்ள முஸ்லிம் லீகுடன் எந்த வழியில் இந்திய யூனியன் முஸ்லிம்லீக் தொடர்புடையது?

பதில்: சுதந்திரஇந்தியாவில், முன்னுள் முஸ்லிம் லீகின் தொடர்ச்சியாகவே தற்போதைய இந்திய யூனி யன் முஸ்லிம் லீக் இயங்கிவருகிறது. தற்போதைய சுதந் திர ஜனநாயக இந்தியாவின் தேசியத் தேவைகளுக்குத் தக்கமுறையில் தனது நோக்கங்களை இந்திய யூனியன் முஸ்லிம்லீக் மாற்றி அமைத்துள்ளது. இந்நாட்டின் சுதந்திரம், கௌரவம், சுபிட்சம், சந்தோஷம் ஆகிய வற்றை நிலை நிறுத்துவதும் உறுதிபடுத்துவதும், முஸ்லிம்களுடையவும் இதர சிறுபான்மையினருடைய வும், இந்நாட்டிலுள்ள இதர வகுப்பாருக்கும் முஸ்லிம் களுக்கு மிடையில் பரஸ்பர நல்லெண்ணத்தையும் ஒற்றுமையையும் வளர்ப்பது தான் இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் நோக்கங்களாகவும் லட்சியங்களாக வும் இருக்கின்றன.

கேள்வி: இந்நாட்டுப் பிரிவினையை முஸ்லிம்லீக் தான் ஏற்படுத்தியது! எனவே, அதைத் தொடர்ந்து செயல்படவிடக்கூடாது என்ற எண்ணம் இருக்கிறது; அது குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

பதில்: பிரிவினைக்கு முஸ்லிம் லீக் பொறுப்பானது அல்ல என்று நான் கூறுகிறேன். ஐக்கிய இந்தியாவிற் காகவும் அதன் சுதந்திரத்திற்காகவுமே முஸ்லிம் லீக் அனேக மனேக ஆண்டுகள் பாடுபட்டுவந்தது. 1928-ம் ஆண்டு வாக்கில், முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதிகள் அடங்கிய முஸ்லிம் ராஜ்யம் ஏற்பட வேண்டும் என்ற கருத்து உருவான போது, முஸ்லிம் லீகும் அதன் தலைவர்களும் இக்கருத்தை உதறித் தள்ளி விட்டனர். இத்தகைய கற்பனைகளும் தோற்றங்களும் நடைமுறை அரசியலுக்கு உகந்ததல்ல என்று தள்ளி விட்டனர்.

இந்நாட்டில் ஒற்றுமையை ஏற்படுத்தவே முஸ்லிம் லீக் நெடுகிலும் பாடுபட்டு வந்தது, ஆனால், இந் நாட்டிலுள்ள இதர சக்திகள் இத்தகைய ஐக்கியம் ஏற் படுவதை ஆகவிடாமல் செய்ததுமல்லாமல் அவர்கள் தங்களுடைய பிடிவாதமான முட்டுக்கட்டையின் காரணமாகவே பிரிவினை எண்ணத்திற்கு ஒரு உருவான தோற்றத்தையும் கொடுத்து அதை ஒரு முக்கிய பிரச் சினையாகவும் ஆக்கினர். இந்தியா சுதந்திரமடையா மலும் அதற்கென சொந்தமாக ஒரு அரசியலமைப்பு

இல்லாத போதும் தான், இவையெல்லாம் நிகழ்ந்தன. ஆனல் இன்று இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்டது. இந்நாட்டின் ஒருமைப் பாட்டையும், ஐக்கியத்தையும் வலியுறுத்தும் அரசியலமைப்பு இப்பொழுது இருக்கிறது இந்த ஐக்கிய லட்சியத்திற்கு ஒத்ததுதான் இந்திய யூனியன் முஸ்லிம்லீக். இந்நாட்டின் ஐக்கியத்தைக் குலைக்கும் முயற்சியை அது அனுமதிக்காது.

கேள்வி : முஸ்லிம் லீக் பிரிவினைக்கு முன்பு ''இரு சமுதாயக் கொள்கையில்'' நம்பிக்கை வைத்திருந்தது. இப்பொழுதும் அதில் அது நம்பிக்கை வைக்கிறதா?

பதில் : சுதந்திரத்திற்குப் பிறகு, தன்னுடைய அரசியலமைப்பின் பலகை, பிரிக்க முடியாத ஒன்ருக இந்தியா ஆகிவிட்டது. இப்போது இந்நாட்டில் ஒரே ஒரு சமுதாயம் *[NATION]* இருப்பதாகவே முஸ்லிம் லீக் கருதுகிறது.

அரசியலமைப்பின் பிரகாரம், இந்நாட்டிலுள்ள எல்லா வகுப்பாரும் பகுதியினரும் பிணைக்கப்பட்டு ஒரே சமுதாயமாக ஆக்கப்பட்டிருக்கிருர்கள்; இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து தங்களுக்குத் தாங்களே ஒரு அரசியலமைப்பை வழங்கிக் கொண்டார்கள். இந்திய தேசிய ஒருமைப் பாட்டைப் பாதுகாப்பதும் பலப்படுத்துவதும் இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் சட்டதிட்டங்களின் படி அதன் லட்சியங்களாக இருக்கின்றன. தன்னுடைய நடவடிக்கைகளை இதன் பிரகாரமே அது நடத்தி வருகிறது.

கேள்வி : ''ஒரே சமுதாயம்'' என்ற பிறகு, முஸ்லிம்களுக்காக மட்டும் பிரத்தியேகமாக அரசியல் கட்சி ஒன்று ஏன் இருக்க வேண்டும்?

பதில் : இந்தியா பலமதங்களைக் கொண்டது. பல மொழிகளையுடைய வெவ்வேறு வகுப்பாரைக் கொண்ட நாடு இது. இதை நமது அரசியலமைப்பு கூறுகிறது. இந்நாட்டில் சிறுபான்மை மக்கள் வாழ்ந்து வருகிருர்கள் என்பதை அது ஒப்புக்கொண்டிருக்கிறது. முக்கியமாக, இந்நாட்டில் மதஅடிப்படையிலும் மொழி அடிப்படையிலுள்ள சிறு பான்மையினரைப் பற்றி நமது அரசியலமைப்பு விரிவாகக் கூறுகின்றது. இந்த சிறுபான்மையினர் தங்களுடைய கலாச்சாரத்தையும் தங்களுக்கே உரிய வாழ்க்கை முறையையும் பேணிப்பாதுகாத்து நடந்து வருவதற்குரிய உரிமையை இந்த அரசியலமைப்பு உத்தரவாதத்துடன் வழங்கி இருக்கிறது.

எனவே தங்களுக்கென ஒரு அமைப்பு அல்லது கட்சியை வைத்துக் கொள்ள, அரசியல் சாஸனப் பூர்வமான உரிமையை சிறுபான்மையினர் பெற்றிருக்கிருர்கள். இத்தகைய ஸ்தாபனங்கள், அரசியல் துறையில் புகாமலும் அல்லது அரசியல் கட்சிகளாக இராமலும், எங்ஙனம் சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாக்க முடியும்?

## ''நான் ஒரு முரட்டுப் பிள்ளை''

### (சேலம் ஹன்னான் சாகிப்)

சேலம் மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர்

*1936*-ம் ஆண்டில் இருந்தே எனக்கு அரசியலில் ஆர்வம் உண்டு. 'இக்பால் வாலிபர் சங்கம்' என்ற பெயரில் இயங்கிக் கொண்டிருந்தோம். *1941*-ம் ஆண்டு ஜின்னா சாகிப் மதராஸ் மாநாட்டிற்கு வந்த பொழுது சேலத்திலிருந்து ஸ்பெஷல் ரயில் ஏற்பாடு செய்து அங்குசென்று மாநாட்டில் கலந்துகொண்டோம். காந்திஜீ சுடப்பட்டபொழுது நான் கைது செய்யப்பட்டேன். *1952* முதல் முஸ்லிம் லீகில் தீவிரமாகப் பணியாற்றி வருகிறேன்.

காட்டூரில் நடைபெற்ற மாநிலத் தேர்தலில் இருந்து காயிதெ மில்லத்துடன் நெருக்கம் அதிகமாயிற்று. மாநில செயற்குழு மற்றும் கலந்தாலோசனைக் கூட்டங்களில் நான் பல கேள்விகளையும் போடுவதுண்டு. நான் ஒரு முரட்டுப் பிள்ளை. ஆம்! காயிதெ மில்லத்தின் அபிமானத்தைப் பெற்ற முரட்டுப்பிள்ளை. என்னுடைய கேள்விகளுக்கு எனக்குப் புரியும்படியாக தலைவர் அவர்கள் பதில் சொல்லுவார்கள். ஏற்றுக் கொள்வேன். கட்சிக் கூட்டங்களில்தான் கேள்வி கேட்டுக் கொண்டிருப்பேனே யொழிய, கட்சி ஒரு முடிவு எடுத்துவிட்ட பின்பு, அத்தீர்மானங்களை ஆதரிப்பதில் நான் முதல் ஆளாக நிற்பேன். இதை நான் சொல்லவேண்டியதில்லை. கட்சிப் பிரமுகர்கள் அனைவருக்கும் இந்த உண்மை தெரியும்.

சேலம் டவுனில் முஸ்லிம் லீக் பணி செய்வது ஆரம்ப கட்டத்தில் மிகவும் சிரமமாக இருந்தது. தேசிய முஸ்லிம்கள் சேலத்தில் சற்று அதிகம். மாற்றுக் கட்சிகளிலும் நமது தோழர்கள் பலரும் இருந்தனர். மக்கள் மத்தியில் முஸ்லிம் லீகின் செய்தியை எப்படிப் பரப்புவது எனத்தெரியாமல் நாங்கள் விழித்துக் கொண்டிருந்தோம். தலைவரவர்களிடம் இதுபற்றிச் சொன்னபோது முஸ்லிம் லீகர்களாகிய நீங்கள் வேளை தவறாமல் தொழச் செல்லுங்கள். தொழுது முடிந்ததும் உங்களுக்கு அறிமுகமான நாலைந்து பேரை கூட்டி வைத்துக் கொண்டு சமுதாயப் பிரச்னைகள் குறித்து விவாதியுங்கள். அரை மணி நேரம் அல்லது ஒரு மணி நேரத்திற்கு அதிகமாக எடுத்துக் கொள்ளுங்கள். ஒரே மஸ்ஜிதுக்குச் சென்று கொண்டிருக்காதீர்கள். டவுனில் உள்ள பல பள்ளிவாசல்களுக்கும், பல வக்துகளுக்கும் மாறி மாறிச் செல்லுங்கள். நண்பர்களுடனும், அறிமுகமானவர்களுடனும் சமுதாய பிரச்னைகள் குறித்தும், அரசியல் நிலவரங்கள் குறித்தும் பொதுவாகப் பேசுங்கள். மற்றவர்கள் வாயிலிருந்தே முஸ்லிம் லீக் அவசியம் என்ற சொல் தானாகவே வந்துவிடும் என்றார்கள். ''முஸ்லிம் லீகின் அவசியத்தை அவர்கள் தானாகவே உணர்ந்து கொள்வார்கள்'' என்றார்கள், சேலத்தில் இந்த நடைமுறையை நாங்கள் பின்பற்றி வெற்றி பெற்றோம்.

காங்கிரஸ் பி.எஸ் பி. கம்யூனிஸ்ட் மற்றும் இவை போன்று பற்பல லட்சியங்களை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு கட்சிகள் இயங்கி வரும் பொழுது, தங்களுக்கென ஒரு கலாச்சாரத்தையும் வாழ்க்கை முறையையும் அதாவது லட்சியத்தையும் கொண்ட ஒரு சிறுபான்மையினர், தங்களுக்கென ஒரு தனியான ஸ்தாபனத்தை வைத்துக் கொள்வது நியாய வாதமாக ஒத்துக் கொள்ளக் கூடியதே அல்லவா?

கேள்வி : அரசியலில் மார்க்கத்தை நீங்கள் ஏன் திணிக்கிறீர்கள்?

பதில் : நாங்கள் திணிக்கவில்லை. உண்மையைக் கூறுவதானால், வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் ஏற்கனவே மார்க்கம் பின்னிப்பிணைந்து கொண்டுதான் இருக்கிறது. ஒரு மார்க்கத்தைப் பின்பற்றக் கூடியவர் களாக நீங்கள் இருந்தால், உங்களுடைய வாழ்க்கையின் எந்த ஒரு அம்சத்திலிருந்தும் அதை பிரிக்க முடியாது என்பதை உணர்வீர்கள்.

இஸ்லாத்தின் பிரகாரம், முழுமையான வாழ்க்கை முறையே மார்க்கம் என்பதாகும்; அது ஒரு கலாச்சாரம்; வாழ்க்கையின் எந்த ஒரு பகுதியிலிருந்தும் அதை பிரித்து ஒதுக்க முடியாது; குறிப்பாக அரசியல் வாழ்க்கையிலிருந்து அதை பாகுபடுத்தவே முடியாது. அதிலும், சுதந்திரமடைந்த ஜனநாயக நாட்டில், வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் அரசியல் புகுந்து விளையாடும்பொழுது, மார்க்கத்தை ஒதுக்கி வைப்பது இயலாத காரியமே.

இந்திய அரசியலமைப்பு இந்த உண்மையை ஒத்துக் கொள்கிறது. மார்க்க அனுஷ்டானங்களுடன் கூடிய மத சார்பற்ற நடவடிக்கைகள் குறித்து அரசியலமைப்பு விவரிப்பதிலிருந்து இது தெளிவாகிறது.

மஹாத்மா காந்தி தமது சுயசரித்திரத்தில் என்ன கூறி இருக்கிறார் என்பதை தயவு செய்து கவனியுங்கள்.

''சத்தியத்தின் மீது எனக்குள்ள பக்திதான், என்னை அரசியல் துறையில் கொண்டு வந்து நிறுத்தி இருக்கிறது. கொஞ்சங்கூட சந்தேகத்திற்கு இடமில்லாமலும், மிகவும் பணிவான முறையிலும் நான் ஒன்றைக்கூற முடியும்; அதாவது, அரசியலில் மதத்திற்குச் சம்பந்தமில்லை என்று கூறுகிறவர்கள், மார்க்கம் என்றால் என்ன என்பதைத் தெரியாதவர்களே'' இவ்வாறு காந்திஜி தமது சுய சரிதையில் கூறி இருக்கிறார்.

கேள்வி : முஸ்லிம் சிறு பான்மையினரின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமென்பது உங்களுடைய குறிக்கோளாகும், சட்டமன்றங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பு உங்களுக்கு கஷ்டமானதாக விருக்கும் பொழுது—அதாவது வகுப்புவாத அரசியலில் இருந்து கொண்டிருக்கும் பொழுது—நீங்கள் எப்படி சிறுபான்மையினரின் உரிமைகளைப் பாதுகாக்க முடியும்? உங்களால் எப்படி ஒரு சர்க்காரை அமைக்க முடியும்?

## இந்திய முஸ்லிம்களின் மக்கள் தொகை

இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் ஜனத் தொகை எட்டுக் கோடி [எண்பது மில்லியன்] என உத்தியோக பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. 1961 ஆண்டு இந்தியாவில் எடுக்கப்பட்ட மக்கள் கணக்கெடுப்பு பற்றி அண்மையில் சர்க்கார் வெளியிட்டுள்ள அறிக்கையில் மதவாரியாக ஜனத்தொகை விவரங்கள் தனியே காட்டப்பட வில்லை. எனினும் 15—10—62 அன்று ஐக்கிய நாடுகள் சபையில் பாக்கிஸ்தான் வெளி நாட்டு மந்திரி ஜனாப் முஹம்மதலியின் ''இந்திய முஸ்லிம்கள் பாரபட்சமாக நடத்தப்படுகிறார்கள் என்றும் பல இந்திய முஸ்லிம்களை பாக்கிஸ்தானிகள் என்று கூறி நாடு கடத்துகிறார்கள்'' என்றும் குற்றஞ் சாட்டிய தற்குப் பதில் கூறும்பொழுது ஐக்கிய நாடுகள் சபையில் நம் நாட்டின் நிரந்தரப் பிரதிநிதியாக விளங்கும் திரு. பி. என். சக்கரவர்த்தி அவர்கள் இத்தகவலை வெளியிட்டார்.

44 கோடி கொண்ட இந்திய ஜனத்தொகையில் இது 18.2 சதவிகிதமாகும். (1961-ம் ஆண்டு நிலவரம்)

22-10-1962 உரிமைக் குரல்

[1989-ம் ஆண்டு இறுதி வாக்கில், அமெரிக்காவுக்கான இந்தியத் தூதராகப் பணிபுரிந்த டாக்டர் கரண் சிங், வாஷிங்டன் நகரில் வைத்து அளித்த ஒரு பேட்டியின்போது, இந்திய முஸ்லிம்களின் எண்ணிக்கை இருபது கோடியாகும் என்ற தகவலை வெளியிட்டார்.]

பதில் : இந்நாட்டிலுள்ள சிறுபான்மையினர்களின் உரிமைகளைப் பாதுகாப்பதுதான் உண்மையிலேயே எங்களுடைய ஜீவாதாரமான லட்சியமாகும். மாற்று சர்க்கார் ஒன்றை அமைக்க வேண்டுமென்பது எங்களுடைய லட்சியம் அல்ல, எங்களுடைய குரல் ஒலிக்க வேண்டுமென்றும் எங்களுடைய உண்மையான பிரதிநிதிகளின் மூலமாக எங்கள் பிரச்சினைகள் எடுத்து விளக்கப்படவேண்டுமென்றும்தான் நாங்கள் விரும்புகிறோம். இக்காரணத்திற்காகவே, சிறுபான்மையினரின் நன் மதிப்பை பெற்ற எங்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென நாங்கள் வலியுறுத்துகிறோம்.

இச்சந்தர்ப்பத்தில் நான் ஒன்றை குறிப்பிடவிரும்புகிறேன். ஒருபிரச்சினை, தகுதிவாய்ந்த பிரதிநிதிகளின் மூலமாக, பெரும்பான்மை சமூகத்தின் முன்னர், அல்லது அதிகாரிகளின் முன்னர், அல்லது பாராளுமன்றத்தின் முன்னர் எடுத்து வைக்கப்படும் பொழுது அதற்குரிய மரியாதையையும் பலனையும் அது பெறுகிறது, சம்பந்தப்பட்டவர்களின் மூளையிலும், உள்ளத்திலும் அது வேலை செய்கிறது என்பதில் சந்தேகமில்லை.

இந்த மனித சுபாவத்தின் அடிப்படையில்தான் எங்களின் ஆதாரக் கொள்கை அமைந்திருக்கிறது. சிறுபான்மையினருக்கு பிரதிநிதித்துவம் வேண்டுமென்ற எங்கள் கோரிக்கை இந்த நம்பிக்கையின் மீது எழுந்ததாகும். எனவே, சட்டமன்றத்தில் நாங்கள் பெரும்பான்மையினராக இருக்கிறோமா அல்லது சிறுபான்மையினராக இருக்கிறோமா என்ற கேள்வி இங்கு பிரதானமாக எழவில்லை.

தற்போதைய வாக்களிப்புமுறை எங்களுடைய சொந்தப் பிரதிநிதிகளை நாங்கள் தேர்ந்தெடுப்பதற்கு வகை செய்வதாகயில்லை. இதுதான் உண்மை; ஆனால் இது நீதியாகாது. தங்களுக்கு அரசியல் சாசனம் வழங்கியுள்ள உரிமைகளை தங்களுடைய சொந்தப் பிரதிநிதிகளின் மூலமாக, சிறு பான்மையினர்கள் பாதுகாக்க முடியாத அளவுக்குத் தற்போதைய வோட்டளிப்பு முறை அமைந்திருக்கிறது.

கூட்டுத்தொகுதி மூலமாகவும் சிறுபான்மை சமூகத்தினருக்கு கணிசமான அளவு நீதி வழங்கமுடியும் என்பது சாத்தியமானது மட்டுமல்ல; நடைமுறைக்கு ஒத்ததும் கூட. உதாரணமாக, குவியல் வோட்டு முறையுடன் கூடிய பல உறுப்பினர்கள் அடங்கிய தொகுதிகளை எடுத்துக் கொள்ளுங்கள். மதம் சம்பந்தமான மொழி சம்பந்தமான சிறுபான்மையினருக்கு மட்டுமல்லாது, அரசியல் சம்பந்தமானதும் இதர அடிப்படையிலுள்ளதுமான சிறுபான்மையினர்களுக்கும் இந்த வோட்டு முறை நீதி வழங்கக் கூடியதாகும். இந்த வோட்டுமுறை அமல் செய்யப்படுமானால், இந்நாட்டிலுள்ள பல்வேறு கட்சிகளும் பிரிவுகளும் இந்நாட்டிலுள்ள பற்பல சட்டமன்றங்களிலும் அதனதன் தகுதிக்கேற்ப அதிக அளவில்—இப்போதுள்ளதைவிட நல்ல நல்லமுறையில்—பிரதிநிதித்துவம் பெற்று விளங்கும் என்பதற்கு ஐயமில்லை.

நாங்கள் விரும்புவது என்னவென்றால், தங்களுடைய குரலை எழுப்பும் உரிமை சிறுபான்மையினருக்கு வேண்டுமென்பதாகும். அவசியப்படும் பொழுதெல்லாம், தங்களுடைய பிரத்தியேக நலனைப் பாதுகாக்க வேண்டிய பொழுதும் சரி, பொதுவாக இந்நாட்டினுடைய நலனைப் பற்றியதாயினும் சரி, எங்களுடைய குரலை ஒலிக்கும் உரிமை எங்களுக்கு வேண்டும்.

யார் ஒரு சர்க்காரை அமைக்க முடியுமோ அவர்கள் தான் ஒரு அரசியல் கட்சியாக ஒன்று சேர முடியும் என்ற விதியை எந்த ஒரு அரசியல் தர்மத்தின் பெயராலும் கொண்டுவர முடியாது. நீதியின் பெயரைச் சொல்லிக் கொண்டு இவ்விதம் செய்யமுடியாது.

இச்சந்தர்ப்பத்தில் நான் ஒன்றை தெளிவுபடுத்த விரும்புகிறேன். தங்களுடைய சர்க்காரை அமைக்க வேண்டுமென்ற எண்ணம் சிறுபான்மையினருக்கு எழவில்லை என்றாலும், எழமுடியாதென்றாலும் அரசாங்கங்கள் அமைவதற்கு அவர்களால் உருப்படியான வகையிலும் வெற்றிகரமான முறையிலும் ஒத்துழைக்க முடியுமென்பதை குறிப்பிடாமலிருக்க முடியாது. சமீப காலத்தில் கேரளாவிலும் தமிழ் நாட்டிலும் காங்கிரஸ் கட்சி சம்பந்தமாக சிறுபான்மையினர் செய்து காட்டியதே இதற்குப் போதிய சான்றுகளாகும்.

கேள்வி: முன்னர் செய்ததைப் போல, முஸ்லிம்களுக்கென மற்றொரு தாயகத்தை உருவாக்கிக் கொடுக்க முஸ்லிம் லீக் இன்னமும் விரும்புகிறதா?

பதில்: இக் கேள்வி நியாய மற்றதாகும். கற்பனையானதும் ஆதாரமில்லாததுமான நோக்கங்களை மக்கள் மீது திணிப்பது போன்றும், ஒருவிதமான கெட்ட அபிப்பிராயத்தை உண்டாக்கும் வகையிலும் இக்கேள்வி அமைந்திருக்கிறது. இவ்வுலகத்தின் முன்னிலையில் முஸ்லிம் லீகின் சட்டதிட்டங்கள் தெளிவாக இருக்கின்றன. சந்தேகத்திற்கு இடமில்லாதவாறு ஸ்பஷ்டமாக இருக்கின்றன. முஸ்லிம் லீக் சம்பந்தப்பட்டவரை, எல்லாம் தெளிவானதே; ஒன்றும் ஒளிவு மறைவு கிடையாது; ''அண்டர் கிரவுண்ட்'' வேலை கிடையாது. தன்னுடைய சட்டதிட்டத்தில் எதைக் கூறுகிறதோ அதையே விடாப்பிடியாக அது நம்புகிறது.

தாய் நாடான இந்தியா, இறுக்கமான பிணைப்புடையது என்பதில் முஸ்லிம் லீக் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கிறது. அது குறித்து இரண்டு விதமான கருத்துக்கள் அதற்கு இல்லை.

கேள்வி: சில இடங்களில் சிலர் ''பாக்கிஸ்தான் ஜிந்தாபாத்'' என கோஷம் எழுப்பியுள்ளனர். இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

பதில்; ''பாக்கிஸ்தான் ஜிந்தாபாத்'' என்ற கோஷம் எழுப்பப்படாத சந்தர்ப்பங்களில்கூட, அம்மாதிரி சப்தமிடப்பட்டதாக சில குற்றச்சாட்டுகளும் செய்திப் புரட்டுக்களும் எழுந்துள்ள விஷயம் தெரிந்ததே. ஆனால், நீங்கள் குறிப்பிடும் சம்பவம் சம்பந்தப்பட்டவரை, அம்மாதிரி கோஷங்கள் எழுப்பட்டது வாஸ்தவமானால் இத்தகைய மிக மிக ஆட்சேபகரமான செய்கையை நாம் அதிக வன்மையாகக் கண்டிக்கிறோம்.

கேள்வி: முஸ்லிம்களுக்குள்ள ஸ்பஷ்டமான ஆவலாதிகள் என்னென்ன?

பதில்: இந்தக்குறைபாடுகள் எல்லாம் ஏற்கனவே நன்கு தெரிந்தவைகளே என்று தான் நான் நினைத்தேன். இருந்தாலும் இக்கேள்வி கேட்கப்பட்டு விட்டதால், இந்தியாவின் பிரதம மந்திரி அவர்களின் வாய்மொழியாகவே இதற்குப் பதில் சொல்வதை விட சிறந்தது வேறொன்றுமிருக்க முடியாது என நான் நினைக்கிறேன்.

சுதந்திரத்திற்குப் பிறகு, அரசாங்க உத்தியோகங்களில் முஸ்லிம்களின் விகிதாச்சாரம் ஆண்டிற்கு ஆண்டு படுமோசமாகிக் கொண்டு போகிறதென்றும் இதை

நிரூபிக்கும் வகையில் தன்னிடம் புள்ளி விபரங்கள் இருந்து வருகின்றனவென்றும் பண்டித நெஹ்ரு ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளில் கூறி இருக்கிறார். இந்நாட்டில் உர்து மொழிக்கு நியாயம் வழங்கப்பட வில்லை என்றும் அவர் பகிரங்கமாகக் கூறியுள்ளார். மேலும் அவர் சட்ட மன்றங்களில் முஸ்லிம்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்திவருகிறார். தற்போது அவர்கள் பெற்றுள்ள ஸ்தானங்கள் போதுமானதல்ல என்பது தெரிந்ததே.

கல்வித்துறையிலும் பொருளாதாரத் துறையிலும் முஸ்லிம்கள் மிகவும் பின் தங்கிய நிலையில் விடப்பட்டி ருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்நாட்டில் வெளி யிடப்படும் புத்தகங்களில் இஸ்லாத்தைப் பற்றியும் இஸ்லாமியப் பெரியார்களைப் பற்றியும் ஆட்சேபகர மானதும் தகாத முறையில் அமைந்ததுமான வாசகங் கள் காணப்படுவதை குறிப்பிடாமல் தீராது. மனத் திற்கு சஞ்சலத்தைத் தரக்கூடிய இத்தகைய சம்பவங்கள் ஏராளம் உண்டு.

---

## "நானா, ஒரு பாட்டுப் பாடுங்கள்!"

### லால் பேட்டை யஹ்யா நானா

என்னை "பச்சை மஸ்தான்" என்று காயிதெ மில்லத் அழைப்பார்கள். மனதிலுள்ளதை ஒளிவு மறைவின்றி தலைவரிடம் பேசி விடுவேன். சில சமயங் களில் கோபமாகக் கூட அவர்களிடம் பேசி விடுவேன். ஒரு நாள் தயா மன்ஸில் வீட்டில் உட்கார்ந்திருந்த பொழுது திருவண்ணாமலை சம்சுதீனுக்கும் எனக்கும் சண்டையே வந்து விட்டது. தலைவர் முன்னிலையில் இப்படியெல்லாம்பேசக்கூடாது என அவர் கண்டித்தார். நான் அவரிடமும் எதிர்த்துப் பேசினேன். எங்களுக்குள் கைகலப்பு ஏற்பட்டு விடலாம் என்ற நிலைமை. காயிதெ மில்லத் தலையிட்டு எங்களை அமரச் செய்தார்கள்.

ஒரு தடவை தலைவர் அவர்களை சந்தித்து விட்டு திரும்பும்பொழுது ஒரு கவரை என்னிடம் கொடுத்து, வைத்துக் கொள் என்றார்கள். வெளியே வந்து கவரைத் திறந்து பார்த்தேன். அதில் ரூ. 150 இருந் தது, மீண்டும் தலைவரிடம் சென்று இதை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். நான் ஏதேனும் எதிர்பார்த்து வரவில்லை என்று சொன்னேன் 'நான் பிரியப் பட்டு கொடுக்கும்போது வாங்கிக் கொள்ள வேண்டும்' எனக் கூறி என்னை அனுப்பி வைத்து விட்டார்கள்.

விழுப்புரத்தில் காயிதெமில்லத்திற்கு மகத்தான வரவேற்பு கொடுக்கப்பட்டது. அச்சமயம் அவர்களுக்கு விலையுயர்ந்த சால்வை ஒன்று போர்த்தப் பட்டது. சிலர் பணம் அடங்கிய கவர்களையும் தலைவர் அவர் களிடம் கொடுத்தார்கள். எல்லாவற்றையும் ஒருவருக் கும் தெரியாதவண்ணம் காயிதெ மில்லத் என்னிடம் கொடுத்து "வைத்துக் கொள்" என்று சொல்லிவிட் டார்கள்.

ஒரு நாள் இரவு நீண்ட நேரம் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். நடுநிசியைத் தாண்டி விட்டது. "நானா ஒரு பாட்டுப் பாடுங்கள்" என்று சொன் னார்கள். எனக்கு பெரிய அதிர்ச்சியாகப் போய் விட்டது. இதை நான் எதிர்பார்க்கவில்லை. ஒருவாறு சமாளித்துக்கொண்டு குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல்கள் சிலவற்றைப் பாடினேன். அதைக் கேட்டு தலைவரவர்கள் ரசித்தார்கள். எனக்கு உற்சாகம் பிறந்து விட்டது. மேற்கொண்டு பாடவா? என்று நானே கேட்டேன். "வேண்டாம், வேண்டாம் இனி நீங்கள் பாடினால் தூங்கிக் கொண்டிருப்பவர்கள் விழித் துக் கொள்வார்கள்" என்று சிரித்துக் கொண்டே சொல்லி விட்டார்கள்.

ஒரு சமயம் முஸ்லிம் லீக் பொதுக் கூட்டத்திற்காக காயிதெ மில்லத் வந்திருந்தார்கள். சாப்பாடு ஏற் பாடுகள் பிரமாதமாகச் செய்யப்பட்டிருந்தன. பிரியாணி ரெடியாக இருந்தது. கறி குருமா, சிக்கன், இனிப்பு என பல வகைகளும் தயாரிக்கப்பட்டிருந்தன. கூட்டம் ஆரம்பமாவதற்கு முன்பு காயிதெ மில்லத் என்னைத் தனியாகக் கூப்பிட்டு உப்புமா தயாரித்து வைக்கும்படி சொன்னார்கள். உங்களுக்காக ஸ்பெஷ லாக பிரியாணி, குருமா கோழியெல்லாம் தயாரிக்கப் பட்டிருக்கிறது. நீங்கள் இப்போது போய் உப்புமா கேட்கிறீர்களே என்றேன். 'ஆம். எல்லாம் தயாரிக்க வேண்டியதுதான். என் பெயரைச் சொல்லி அவற்றை யெல்லாம் ரசித்துச் சாப்பிட நமது பேச்சாளர்கள் இருக்கிறார்கள், ஊழியர்கள் இருக்கிறார்கள். ஒன்றும் மிஞ்சி விடாது, வீணாகப் போய் விடாது. எல்லோ ருக்கும்தானே அவை தயாரிக்கப் பட்டிருக்கின்றன. ஆனால் எனக்கு மட்டும் கொஞ்சம் உப்புமா கொண்டு வைத்து தயாராக வைத்திரு. மற்றவற்றை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொன்னார்கள்.

கட்சி ஊழியர்களின் திருப்தியிலேயே இன்பம் காணும் தலைவர் அவர்கள் ஒருவர்தான்.

---

### ஆறில் ஒரு பகுதியினர் முஸ்லிம்கள் —ஆனால் வேலை வாய்ப்புகளில் விசித்திரம்;!

இந்தியாவில் எழுபது இலட்சம் பேர் சர்க்கார் வேலைகளில் உள்ளனர். இவர்களில் இரண்டு இலட்சம் பேர்தான் முஸ்லிம்கள்.

ஆனால்,

இந்தியாவில் மொத்த மக்கள் தொகையில் முஸ்லிம்கள் ஆறில் ஒரு பகுதி இருக்கின்றனர். இருந் தும்—வேலை வாய்ப்புகளில் இத்தகைய ஏற்றத்தாழ்வு இருப்பது விசித்திரம் இல்லையா?

காயிதெ மில்லத் (மீரட் நகரில் பேசியது)

உரிமைக் குரல் 21-12-70

#### உருவான யோசனைகள்

இச்சந்தர்ப்பத்தில் காயிதே மில்லத் அவர்கள் சில உருவான யோசனைகளையும் வெளியிட்டார்கள்.

தேசிய ஒருமைப்பாடு கவுன்ஸில் உடனடியாக அமைவதற்குக் காரணம், இந்நாட்டின் சில பாகங்களில் ஏற்பட்ட வகுப்புக்கலவரங்களே. எனவே, தேசிய ஒருமைப்பாடு குறித்து ஐந்தாண்டு அல்லதுஆறு ஆண்டு திட்டம் ஒன்றை வகுப்பது நல்லதாகும். மத்திய கமிட்டி ஒன்று இதற்காக ஏற்படுத்தவேண்டும். இந்திய அரசாங்கத்தின் உள்துறை அமைச்சர் இதன் தலைவராக இருக்கவேண்டும் பாராளுமன்றத்திலுள்ள அரசியல் கட்சிகள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒவ்வொருவர் இக் கமிட்டிக்கு நியமிக்கப்படவேண்டும் அத்துடன் இந் நாட்டிலுள்ள ஒவ்வொரு வகுப்பாரிலிருந்தும் ஒவ் வொருவர் இக்கமிட்டிக்கு நியமிக்கப்பட வேண்டும்.

அதே போன்ற கமிட்டிகள் மாநில அளவில் ஒவ் வொரு மாநிலத்திலும் நிறுவப்பட வேண்டும். ஸ்தல கட்சிகளும் வகுப்பினர்களும் அக்கமிட்டிகளில் அங்கம் பெறவேண்டும். மாவட்ட அளவிலும் இத்தகைய கமிட்டிகள் தேவை. முனிஸிபாலிடி, பஞ்சாயத்து யூனியன் உறுப்பினர்களில் இருந்து அதற்கு அங்கத் தினர்களை பொறுக்கிக் கொள்ளலாம்.

இத்தகைய கமிட்டிகளில் வேலை, பொதுக்கூட்டங் களின் மூலமும் இதரவழிகளின் மூலமும் மக்களுடன் நேரடித் தொடர்பு கொள்வதாகும். பரஸ்பர நல் லெண்ணத்தையும் நேசப்பான்மையையும் இந்நாட்டி லுள்ளஎல்லாபிரிவினரிடத்தும்ஊட்டுவதும் வளர்ப்பதும் இவர்களுடைய பிரதான வேலையாக இருக்க வேண்டும். மக்களுடைய குறைகளை, ஆவலாதிகளை, இக்கமிட்டிகள் நேரில் கேட்க வேண்டும். ஆதாரமுள்ள ''கேஸ்'' களை, அவைகளுக்கு நியாயம் கிடைக்கச் செய்வதற்காக, அதிகாரிகளின் கவனத்திற்கு இக்கமிட்டிகள் கொண்டு வர வேண்டும்.

#### கலவரங்களின் போது

மற்றுமொரு யோசனை என்னவென்றால், வகுப்புக் கலவரம்ஏற்பட்டதும், உடனடியாகவே ஒரு விசாரணைக் கமிட்டி அமைக்க வேண்டும். கலவரத்தில் சம்பந்தப் பட்ட வகுப்பாரைத் தவிர்த்து ஏனைய வகுப்பினர் அனைவர்களின் பிரதிநிதிகளும் அக்கமிட்டியில் அங்கம் பெற வேண்டும். கலவரம் நடைபெற்ற மாநிலத்தை தவிர்த்து இதர மாநிலங்களில் இருந்தே இவ்விசாரணைக் கமிட்டிக்கு ஆட்கள் பொறுக்கப்பட வேண்டும்.

இம்மாதிரி விசாரணையின் பலனாக, பாதிக்கப்பட்ட வர்களுக்கு நிவாரணம் அளிக்கப்பட வேண்டியது அவசியமானது என்பது தெளிவானதுடன், தாமத மில்லாமல் அந்த நிவாரணங்களை அரசாங்கம் வழங்கி விட வேண்டும்.

#### அபராதம் கூடாது

இது குறித்து ஒரு முக்கிய விஷயத்தை மறந்து விடலாகாது. கலவரங்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு அளிக்கப்படும் நிவாரணம் குறித்து விரிவான முறையில் பிரசாரம் செய்ய வேண்டும். அப்பொழுது தான் மக்கள் மத்தியில் பாதுகாப்பு உணர்ச்சி மீண்டும் ஏற் படும். மற்றுமொரு முக்கியமான விஷயம் என்ன வென்றால், இது சம்பந்தமாக மக்களின் எந்த ஒரு பிரிவினரிடமிருந்தும் யாதொரு விதமான அபராதமும் வசூலிக்கக் கூடாது என்பதாகும். ஏனெனில், விரும்பத் தகாத, சங்கிலித் தொடர் போன்ற விளைவுகளை மக்களின் உள்ளத்தில் இது ஏற்படுத்தலாம் என்ப தாலேயே இதை வேண்டாமென்கிறேன்.



## பினாங்கு பேஷ் இமாமின் பாசம்

### திருவண்ணாமலை டாக்டர் ஷம்சுதீன்

காயிதெ மில்லத் அவர்கள் மரணமடைந்த செய்தி மலேஷியா நாட்டிலுள்ள பினாங்கு நகரில் நான் தங்கியிருந்த பொழுது எட்டியது, அந்நகரில் வியா பாரம் செய்யும் முஸ்லிம் வணிகர்கள் அனைவரும் தங்க ளது அனுதாபங்களைத் தெரிவிக்கும் வகையில் கடை களை அடைத்து விட்டனர். கப்பித்தான் பள்ளிவாச லில் தலைவரவர்களுக்காக காயிப் ஜனாஸா தொழுகை நடந்தது.

ராஜ வீதியிலுள்ள பள்ளி வாசலிலும் ஜனாஸா தொழுகை நடத்தப் பட்டது.

இப்பள்ளியில் ஒரு வாரம் ஷாபி இமாம் தொழ வைப்பார். அடுத்த வாரம் ஹனபி இமாம் தொழ வைப்பார். இச் சம்பிரதாயமே அப்பள்ளியில் கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது. காயிதெ மில்லத் இறந்த செய்தி அந்நகரை எட்டிய வாரத்தில் ஹனபி இமாம் அப்பள்ளியில் இமாமத் பொறுப்பில் இருந்தார். தலைவரவர்களுடைய ஜனாஸாத் தொழுகையைத் தாம்தான் முன்னின்று நடத்த வேண்டும் என ஹனபி இமாம் மிக்க ஆர்வம் உள்ளவராக இருந்தார். அந்த பாக்கியம் தமக்குத்தான் கிட்ட வேண்டும் என இராமநாதபுரத்தைச் சேர்ந்த அவர் ஆசைப்பட்டார். காயிப் ஜனாஸா தொழுகை முறை ஹனபி மத்ஹபில் இல்லை என்பதால், தம்மை ஷாபி மத்ஹபைச் சேர்ந்த வராக நிய்யத் வைத்துக்கொண்டு ஜனாஸா தொழு கையை அவரே முன்னின்று நடத்தினார். சுமார் ஒரு லட்சம் மக்கள் அத்தொழுகையில் கலந்து கொண்ட னர். கடல் கடந்த பிரதேசங்களிலும் கூட தலைவர் அவர்களைப் பற்றிய மதிப்பும் மரியாதையும் அந்த அளவுக்கு உயர்ந்திருந்ததை நான் கண்ணால் பார்த் தேன்.



கேள்வி : இதர அரசியல் கட்சிகளின் மூலமாக சட்ட மன்றங்களுக்கு முஸ்லிம்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்களே, அவர்கள் முஸ்லிம சமுதாயத்திற்காகப் பேச மாட்டார்களா என்ன?

பதில் : அத்தகைய பிரதிநிதிகள் முஸ்லிமல்லாத பெரும்பான்மையினரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். பெருப்பான்மை சமூகத்தின் பிரதிநிதிகளாகவே அவர்கள் இருக்கிறார்கள். அது தான் உண்மை. சிறு பான்மையினர் சம்பந்தமான பிரச்னை எழும் பொழுது—குறிப்பாக பெரும்பான்மையினருக்கும் சிறுபான்மையினருக்குமிடையிலுள்ளதொரு தாவாக்குறித்து பிரச்னை எழும்பொழுது-அப்பிரதிநிதிகள் சிறு பான்மையினருக்காக அந்தரங்க சுத்தியுடன் வாதாட முடியாது என்பது தெளிவு, இதுதான் உண்மை.

கேள்வி : உங்களுக்கென ஒரு தனிகட்சியை நீங்கள் ஏற்படுத்திக் கொள்ளும் பொழுது, ஹிந்துக்களும் அவர்களுக்கென ஒரு கட்சியை ஏற்படுத்ததான் செய்வார்கள். அப்பொழுது காங்கிரஸின் பலம் குறையலாம். அவ்வாறு ஏற்பட்டு ஹிந்து வகுப்புவாத ஸ்தாபனங்கள் பதவிக்கு வருவதாக வைத்துக் கொள்ளுங்கள். இந்நிலையை நீங்கள் விரும்புகிறீர்களா?.

பதில்: இப்பொழுதும் கூட இந்நாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட ஹிந்து கட்சிகள் இருக்கின்றன. அவைகளில் ஒன்று அதிகாரத்திற்கு வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுதும் கூட அவர்களால் நிறுவப்படும் அரசாங்கத்திடமும் நாங்கள் எங்களது கோரிக்கைகளையும் குறைபாடுகளையும் எடுத்துச் சொல்லத்தான் செய்வோம். எங்களுடைய அடிப்படை லட்சியம் இந்நாட்டிலுள்ள பெரும்பான்மைச் சமூகத்திடமும் அரசாங்கத்திடமும் எங்களுடைய கருத்துக்களை எடுத்துச் சொல்வதாகும். மனித வர்க்கத்தைச் சேர்ந்த எல்லாருக்கும் ஒரே மாதிரியான நீதி வழங்குவதைத்தான் எங்கள் மதம் கூறுகிறது என்று சொல்லி ஒவ்வொரு மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்களும் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள்.

அவர்கள் பதவிக்கு வரும்பொழுது இக்கூற்றின் பிரகாரம் தங்கள் சொல்லை அவர்கள் மெய்ப்பிப்பார்கள் என நாங்கள் நம்புகிறோம். அவ்வாறு அவர்கள் நடந்து கொள்ளாத பட்சத்தில், அவர்களது கூற்று பொய்யாக்கப்பட்டு விடுகிறது என்பது தெளிவு. ஒரு வேளை அவர்கள் இந்நாட்டில் மதச் சார்புள்ள அரசாங்கத்தை நிறுவுவதாக வைத்துக்கொண்டாலும், மனித கோடிகள் அனைத்தும் சமமானவர்கள், அவர்களுக்கு சமநீதி செலுத்தியாக வேண்டும் என்ற அவர்களது பேச்சை அவர்கள் மெய்ப்பித்துத்தானே யாக வேண்டும்! எனவே அவர்களுக்கும் ஒரு நியாயமான சந்தர்ப்பம் அளிப்பதை நாங்கள் மறுக்க வேண்டும் என நீங்கள் ஏன் விரும்புகிறீர்கள் ?

இறுதியில், காயிதே மில்லத் அவர்கள், தேசிய ஒருமைப்பாடு கமிட்டியினர் வகுப்பு வாதம் என்பதற்கு தயாரித்த நகல் வியாக்கியானம் குறித்து விவாதித்தார்கள். இந்த வியாக்கியானம் குறைபாடுடையது எனவும் இது எந்தவித நன்மையையும் பயக்காது எனவும் அவர்கள் கூறினார்கள். மேலும் அவர்கள் கூறியதாவது.

''இந்நாட்டிலுள்ள மக்களில் ஒரு சிலர், ஒன்று பட்ட கருத்துக்களும் நலன்களும் தங்களை ஒன்று சேர்த்து இணைப்பதாகக் கருதுகிறார்கள். இம்மாதிரி பற்பல கூட்டங்கள் இந்நாட்டில் உள்ளது எனவும்

---

# இருமுறை நிரூபித்துள்ளோம்!

இந்தியாவின்மீது பாக்கிஸ்தான் படையெடுத்தால் இந்திய முஸ்லிம்கள் எவ்வாறு நடந்து கொள்வார்கள் என்று பேசிக் கொண்டார்கள். 1965-ல் பாகிஸ்தான் தாக்குதலும் ஏற்பட்டது. முஸ்லிம்கள் என்ன செய்தார்கள்? லால் பகதூர் சாஸ்திரி ஒரு மாநாடு கூட்டினார். அப்போது செய்ய வேண்டிய வேலைத் திட்டத்தைப் பற்றி ஆலோசிக்க டில்லியில் உள்ள எந்த முஸ்லிம்களுக்கும் அழைப்பு அனுப்பப்படவில்லை. ஆனால் எனக்கு அழைப்பு அனுப்பப்பட்டது. அப்படிப்பட்ட மாநாடு கூட்டப்பட்டதற்கு 15 தினங்களுக்கு முன்னதாகத்தான், நாம் ஒன்றுபட்டு நிற்க வேண்டுமென்று அறிக்கை விடுத்திருக்கிறோம். என்னை அவர்கள் அம்மாநாட்டில் பேசும்படி சொன்னபோது, நாங்கள் ஏற்கனவே எங்கள் வேலையை முடித்துவிட்டோம் என்று கூறினேன். ஒரு வகுப்புவாதி என்று கூறப்பட்ட என்னுடைய பேச்சு, வார்த்தைக்கு வார்த்தை எடுத்துக் கொள்ளப்பட்டு அது ஐக்கிய நாடுகள் சபையில் அறிவிக்கப்பட்டது.

தற்போது முஸ்லிம்கள் இரண்டு சோதனைகளில் தேறி இருக்கிறார்கள். முதல் சோதனை முஸ்லிம் அல்லாத நாடு இந்தியாவை ஆக்கிரமிக்கும்போது இந்திய முஸ்லிம்கள் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதும், இரண்டாவது, ஒரு முஸ்லிம் நாடு இந்தியாவை ஆக்கிரமிக்கும்போது அவர்கள் எவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்பதும் அந்தச் சோதனைகளாகும். முஸ்லிம்களின் நாட்டுப்பற்றை நிரூபிக்க இவை தவிர வேறு என்ன நிரூபணத்தை நம்மை எதிர்ப்பவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

*[மஜ்லிஸே முஷாவரத் சார்பாக உத்திரப் பிரதேசத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் 12-11-67 அன்று காயிதெ மில்லத் கூறியது.]*

நன்றி பி. என். ஐ. அபுதாலிபும் எம். ஏ. அக்பரும் கூட்டாக வெளியிட்ட ''காயிதெ மில்லத் பிறந்த நாள் பெரு விழாமலர்'' *(1974)*

---

அவைகளிலிருந்தும் மற்றும் சாதாரணப் பொது மக்களிலிருந்தும் தாங்கள் வேறுபட்டவர்கள் எனவும் கருதுகிறார்கள், இவ்வாறு வகுப்பு வாதத்திற்குப் பொருள் கூறப்படுகிறது.

இவ்வார்த்தைகளிலிருந்து இந்நாட்டிலுள்ள மத, மொழி வாரி சிறுபான்மையினர் தான் குறிப்பிடப்படுகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒரு சிலர் தங்களுடைய சுயநலனை உத்தேசித்துத் தான் தங்களை புதிதாக ஒரு கூட்டமாகச் சருதுவது போலவும், மற்றவர்களுக்கும் தங்களுக்குமிடையில் மாறுபட்ட உணர்ச்சிகளும் நலன்களும் இருக்கின்றன என கற்பனையாகக் கற்பித்துக் கொள்கிறார்கள் என்றும் எண்ணும் படியாக அந்த நகல் வியாக்கியானம் அமைந்திருக்கிறது. தாங்களாகவே கற்பனை செய்தோ அல்லது மெய் வருந்தி சூழ்ச்சி செய்தோ ஒரு சிலர் சதி செய்து ஏற்பட்டதல்ல இங்குள்ள வகுப்புக்களும், பிரிவுகளும், கூட்டங்களும்; அதற்கு மாறாக, சிறுபான்மையினரைப் பொறுத்தவரை அவர்களுக்கு ஒரு தனி கலாச்சாரம் இருக்கிறது என்பதும் அவர்களுக்கு ஒரு வாழ்க்கை முறை இருக்கிறதென்பதும், அவர்கள் ஒரு தனித் தன்மை வாய்ந்த கூட்டமாக ஏற்கனவே இருந்து வருகிறார்கள் என்பதும் தான் முற்றிலும் உண்மை, இதை மறைப்பதற்கில்லை.

ஏதோ சுய லாபத்திற்காக, ஒரு சில காரியங்களை சாதிப்பதற்காக அகஸ்மாத்தாகவோ அல்லது வேண்டுமென்றோ ஒரு சிலர் ஒன்று சேர்ந்து அமைத்துக் கொண்டதல்ல இங்குள்ள சிறுபான்மையினர்.

இங்குள்ள சிறுபான்மையினர் ஏன் சிறுபான்மையினராக இருக்கிறார்கள் என்ற உண்மை இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் தெளிவாகவும், அழுத்தந் திருத்தமாகவும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. உலகம் முழுவதிலும் இத்தகைய சிறுபான்மையினர் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் அங்கீகரிக்கப் பட்டுமிருக்கிறார்கள்.

இங்குள்ள சிறுபான்மையினர் இந்நாட்டிற்கு விசுவாசமாக இல்லை என்று பொருள் படும்படியாகவும், அரசியல், பொருளாதாரத் துறைகளில் சம்பந்தமில்லாமல் மத, மொழி விவகாரங்களைப் புகுத்தி இருக்கிறார்கள் என்றும் மற்ற வகுப்பினர் மீது பகைமையையும் மனக் கசப்பையும் வளர்க்கிறார்கள் என்று எண்ணும்படியாகவும் புது அர்த்தங்கள் கொடுக்கப்படுகின்றன.

கமிட்டியினரின் நகல் வியாக்கியானம், இங்குள்ள சிறுபான்மையினரின் பரிதாப நிலையையும், இக்கட்டான நிலையில் அவர்கள் இதுவரை இருந்து வருவதையும் கணக்கில் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை.

அந்த நகல் அர்த்தத்தில் வரிசைப் படுத்தப் பட்டிருக்கும் முறை தவறிய நடவடிக்கைகளை, தற்போது அமலில் இருக்கும் சட்டத்தின் பிரகாரமே, சிவில் விவகாரமானாலும் சரி, கிரிமினல் விவகாரமானாலும் சரி, அவ்வப்போது சமாளித்து விட முடியும் என்பது தெளிவு. இதற்கென விசேஷ புதிய சட்டம் ஒன்றும் தேவையில்லை. தற்போதைய சட்டத்தை உண்மையாக அமல் செய்து வருவது ஒன்றுதான் தற்போதைய அவசியத் தேவையாகும்.

மறைந்த மாமேதை, பண்டித மோதிலால் நெஹ்ரு அவர்கள் முப்பது வருடங்களுக்கு முன்பு, வகுப்புவாதம் என்றால் என்ன என்பது குறித்து கூறியவற்றை காயிதெ மில்லத் அவர்கள் வாசித்துக் காட்டினார்கள். **''வகுப்பு வாதம் என்பது அதனுடைய நல்ல அம்சங்களைக் கொண்டு பார்க்கும்போது, கலாச்சாரம் என்பதாகும்''** என பண்டித மோதிலால் நெஹ்ரு அவர்கள் விளக்கி இருப்பது மல்லாமல் இத்தகைய கலாச்சார சுதந்திரம் வழங்கப் பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்திச் சென்றிருப்பதையும் கமிட்டியினரின் கவனத்திற்கு காயிதெமில்லத் அவர்கள் கொண்டு வந்தார்கள்.

*நன்றி ;— 3-9-1962 உரிமைக் குரல்*

## எந்தப் பாதியை விட்டுவிடுவது?

காயிதே மில்லத் கூறியது:- சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சியின் தலைவர் **டாக்டர் ராம் மனோஹர் லோகியா** மிஸ்டர் முஹம்மது கோயாவை அணுகினார். என்னை அவர் அணுகவில்லை; மிகவும் வயதாகிவிட்டவர் என்பது நினைப்பும் போலும்!

கோயாவிடம் லோகியா, ''நீங்களெல்லாம் வாலிபப் பிள்ளைகள்: நாமனைவரும் ஒன்றாகிவிட வேண்டும். உங்கள் மார்க்கத்தில் பாதியை நீங்கள் விட்டுவிடுங்கள்; எங்கள் மார்க்கத்தில் பாதியை நாங்கள் விட்டு விடுகிறோம்; நாமனைவரும் ஒன்றாகி விடலாம்'' என்று சொன்னார். இதை என்னிடம் மிஸ்டர் கோயா கூறினார். ''எந்தப் பாதியை நாம் விட்டுவிட வேண்டும். என அவர் விரும்புகிறார்; மேல் பாதியையா அல்லது கீழ்ப் பாதியையா? அவரிடம் இதைத் தெளிவு படுத்தச் சொல்லுங்கள்'' என நான் கோயாவிடம் சொன்னேன்.

டாக்டர் லோகியாவினுடைய பிரரேபணை இதுதான்; முஸ்லிம்கள் அனைவரும் தாடியை சிரைத்துவிட வேண்டுமாம்; ஹிந்துக்கள் எல்லாம் குடுமியை எடுத்து விடுவார்களாம். தனி நபர் தீர்மானம் ஒன்றுக்குத் திருத்தம் ஒன்றைப் பிரேரேபித்து மிஸ்டர் மது லிமயே இவ்விஷயத்தைக் கூறினார்.

அதிக அளவில் முஸ்லிம்கள் இன்று தாடி இல்லாமல் தான் காணப்படுகிறார்கள். இந்துக்களிலும் அதிகமானவர்கள் குடுமி இல்லாமல் தான் இருக்கிறார்கள்.

இதிலிருந்து தெரிந்து கொள்வது, அவர்களுடைய புத்தி எப்படி வேலை செய்கிறது என்பதாகும். இன்று நாம் பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். உலக ஒற்றுமை: உலக கவர்ன்மெண்ட் என்று கவனம் இருக்கிறது ஆனால், அவர்கள் தாடி, குடுமி [மயிர்] விவாதங்களில் மூழ்கிக்கிடக்கிறார்கள். சில அரசியல் வாதிகளின் புத்தியும் இம்மாதிரித்தான் வேலை செய்து கொண்டிருக்கிறது. இதே மொழியில்—பாணியில தான் அவர்களும் பேசுகிறார்கள்.

**காயிதே மில்லத் பிறந்த நாள் மலர் 1974.**
*(ஆசிரியர்கள் : P.N.I. அபூதாலிப்*
**எம். ஏ. அக்பர்)**

# லக்னோ ஒப்பந்த 1916 விவரம்

1916-ம் வருடம் லக்னோவில் காங்கிரஸுக்கும்' முஸ்லிம் லீக்குக்குமிடையே ஏற்பட்ட எழுத்து மூலமான ஒப்பந்தத்தின் ஷரத்துகள் வருமாறு ;-

## I மாகாண சட்டசபைகள்

(1) மாகாண சட்டசபை மெம்பர்களில் 100க்கு 80 பேர் பொதுஜன சமூகத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாக இருக்க வேண்டும். 100க்கு 20 பேர் நாமினேஷன் (கவர்னரால்) நியமனம் செய்யப்பட்டவர் களாக இருக்கலாம்.

(2) மேஜர் (பெரிய) மாகாணங்களில் மாகாண சட்டசபை மெம்பர்களின் மெம்பர் தொகை 125 பேர் களுக்குக் குறையாததாக இருக்க வேண்டும். சிறிய மாகாணங்களில் சட்டசபை மெம்பர்கள் 50 முதல் 75 வரை இருக்கலாம்.

(3) ஜனப் பிரதிநிதிகள் பொது ஜனங்களால் நேர்முக தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வாக்காளர் தொகையை எவ்வளவு அதிகமாக விசாலப்படுத்திக் கொடுக்க முடியுமோ, அவ்வளவு அதிகமாக விசாலப் படுத்திக் கொடுக்க வேண்டும்.

(4) முக்கிய சிறுபான்மையினர்களுக்கு பிரதிநிதித் துவம் சட்டசபைகளில் கிடைக்கும்படியாக போதுமான அளவு ஏற்பாடு செய்யப்பட வேண்டும். மாகாண சட்டசபைகளில் முஸ்லிம்களுக்கு பிரதிநிதித்துவம் தனித் தொகுதிகள் மூலம் கீழே காணப்படும் விகிதப்படி கொடுக்கப்பட வேண்டும்.

| மாநிலம் | ஜனப்பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் | |
|---|---|---|
| பஞ்சாப் | 100-க்கு | 50 |
| ஐக்கிய மாகாணம் | 100-க்கு | 30 |
| வங்காளம் | 100-க்கு | 40 |
| பீகார் | 100-க்கு | 25 |
| மத்திய மாகாணம் | 100-க்கு | 15 |
| சென்னை | 100-க்கு | 15 |
| பம்பாய் | மூன்றிலொரு பாகம் | |

முஸ்லிம்கள் பொதுத் தொகுதிகளில் மாகாண சட்டசபைகளுக்கோ அல்லது இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கோ வேறெந்த தேர்தலுக்கும் அபேட்ச கராக இருத்தல் கூடாது. ஆனால், விசேஷத் தனித் தொகுதிகளில் அபேட்சகர்களாக நிற்கலாம்.

---

## குரோம்பேட்டை பக்கீர் !

**எஸ், எம், இமாம் கஸ்ஸாலி (நூரிய்யி)**

என் தந்தையும் தாயும் கிலாபத் இயக்கத்தில் பங்கு கொண்டு செயலாற்றியவர்கள். அலி சகோ தரர்கள் நாகூர் வந்திருந்த சமயம் எங்கள் வீட்டில் தான் தங்கினார்கள். என் தந்தை நான் மிகவும் சிறுவ னாக இருந்தபொழுதே காயிதெ மில்லத்திடம் கூட்டிச் சென்று அறிமுகம் செய்து வைத்தார்கள். அன்றிலிருந்து அவர்களிடம் எனக்கு நேரடியான தொடர்பு உண்டு.

நாங்கள் இருவரும் தனித்திருக்கும்போது ஆன்மீகம் சம்பந்தமாகவும் ஷரீஅத் சம்பந்தமாகவும் நீண்ட நேரம் உரையாடியுள்ளோம். கதவைச் சாத்தி விட்டு உள் தாழ்ப்பாள் இட்டு அறையினுள் அமர்ந்து கொண்டு நாங்கள் இருவரும் மணிக்கணக்கில் பேசி இருக்கிறோம். அச்சமயங்களில் வெளியில் இருந்து பலரும் கதவைத் தட்டுவார்கள்; சுண்டுவார்கள். கதவைத் தட்டும் முறையிலிருந்தும் சப்தத்தில் இருந்தும் ''இது இன்னார் தட்டுவது'' என்று காயிதெ மில்லத் அவர்கள் அறையி னுள் இருந்தபடியே என்னிடம் கூறுவார்கள். அதைப் பல முறை சோதித்துப் பார்த்திருக்கிறேன். அவர்கள் கூற்று மிகவும் சரியாக அமைந்திருப்பதைக் கண்ணுற்று ஆச்சரியப் பட்டுப் போனேன். அவர்கள் விலாயத்து உடையவர்கள் என்பது எனது திடமான நம்பிக்கை. உண்மையில் அவர்கள் ஒரு ஆரிபுபில்லாஹ். எனக்கு அதில் சந்தேகமே கிடையாது.

கேரள மாநில முஸ்லிம் லீக் தலைவர் அப்துர் ரகுமான் பாபக்கி தங்ஙள் அவர்கள் 'குரோம்பேட்டை பக்கீர்' என காயிதெ மில்லத்தை அழைத்திருக்கிறார்கள். இதுவே அவர்களுக்குப் பொருத்தமான பெயர் என்பது எனது அபிப்பிராயம் ஆகும்.

---

உத்தியோகப் பற்றில்லாத மெம்பர் எவரேனும் ஏதேனுமொரு மசோதா, பிரேரணை, அல்லது ஒரு மசோதாவில் ஒரு பிரிவு கொண்டுவரின், சட்டசபை சமூக மெம்பர்களில் நான்கில் மூன்று பாகத்தினர் இப் பிரேரணை மசோதா, மசோதாவின் பிரிவு இவைகளை எதிர்ப்பார்களாயின் மாகாண சட்டசபைகளோ அல்லது இம்பீரியல் (இந்தியா) லெஜிஸ்லேடிவ் கௌன்சிலோ இப் பிரேரணை, மசோதா, மசோதாவின் உட்பிரிவு இவைகளை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது.

(5) மாகாண கவர்ன்மெண்டின் தலைவர் (கவர்னர்) மாகாண சட்டசபைகளுக்கு பிரசிடெண்டுகளாக இருத்தல் கூடாது. மாகாண சட்டசபைகள் தங்கள், தங்கள் பிரசிடெண்டுகளை தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும்.

(6) கேள்விகள் மீது உப கேள்விகள் கேட்கும் உரிமை முதல் கேள்வி கொடுத்த மெம்பருக்கு மட்டுமென்றிருக்காமல், எந்தக் கேள்வியைக் குறித்தும் உப கேள்வி கேட்க எந்த மெம்பருக்கும் உரிமை கொடுக்கப்பட வேண்டும்.

(7) (அ) சுங்க வரிகள், தபால், தந்தி, நாணயச் சாலை, உப்பு, அபின், ரெயில்வே, இராணுவம், கடற்படை, சுதேச சமஸ்தானங்கள் செலுத்தும் கப்பம் இவைகள் தவிர இதர வருமானங்களெல்லாம் மாகாண கவர்ன்மெண்டுகளைச் சார்ந்ததாக இருக்க வேண்டும்.

(ஆ) எந்த வருமானமும், மாகாண கவர்ன்மெண்டுக்கும், இந்திய கவர்ன்மெண்டுக்கும் சேர்ந்ததென்பதாக பொதுவாக இருத்தல் கூடாது - மாகாண கவர்ன்மெண்டுகள், இந்திய கவர்ன்மெண்டு, இந்திய கவர்ன்மெண்டுக்கு இவ்வளவு என்று நிர்ணயித்த தொகையை பிரதி வருஷமும் கொடுத்து வர வேண்டும். மாகாண கவர்ன்மெண்டுகள், இந்திய கவர்ன்மெண்டுக்கு செலுத்த வேண்டிய நிர்ணயிக்கப்பட்ட இத் தொகையை எதிர்பாராத சம்பவங்கள் ஏற்படின் காலா காலத்திற்கேற்ப மாற்றியமைக்க உரிமையுண்டு.

(இ) மாகாண நிர்வாக சம்பந்தமாக மாகாண கௌன்சில்களுக்கு முழு உரிமையும் பாத்தியதையும் இருக்க வேண்டும். மாகாண கௌன்சில்களுக்கு கடன் வாங்க முழு உரிமை இருக்க வேண்டும். வரிகள் விதிக்கவும், வரிகள் திட்டத்தை மாற்றவும் மாகாண கௌன்சிலுக்கு உரிமையுண்டு.

வரவு-செலவு திட்டங்கள் மீது விவாதிக்கவும், ஓட்டுக் கொடுக்கவும், மாகாண சட்டசபைகளுக்கு முழு உரிமையும், பாத்தியதையும் உண்டு.

செலவினங்கள் பூராவும், மாகாண சட்டசபைகளின் அங்கீகாரத்திற்கு சமர்ப்பிக்கப்பட வேண்டும். புது வரிகள் விதிப்பதோ அல்லது வரிகள் விகிதம் மாற்றுவதோ அல்லது..வருமானங்களுக்கு புது வழிகள்

# முஸ்லிம் லீக் கட்சியினால் நமக்கென்ன பலன்?

**எஸ். எம். கனி சிஷ்தி**
**(ஆசிரியர், முஸ்லிம் குரல்)**

நமது தாய்ச்சபை ஏனைய அரசியல் கட்சிகளை விட எப்போதும் தனித்தன்மை வாய்ந்ததாக உள்ளது! ஏன் தெரியுமா?

நமது தாயகமாம் பாரத நாட்டில் சுமார் முப்பத்தியாறு ஆண்டுகளுக்கிடையில் அகில இந்திய ரீதியில் பல அரசியல் கட்சிகள் தோன்றி மறைந்து விட்டன. அந்தக் கட்சிகளை உருவாக்கிய தலைவர்கள் சாமான்யர்கள் என்று சொல்லி விட முடியாது!

உதாரணத்திற்கு சொல்ல வேண்டுமானால் அகில உலகப் புகழ் பெற்ற மூதறிஞர் ராஜாஜி அவர்கள் உருவாக்கிய சுதந்திரக் கட்சி அவர் உயிருடன் இருக்கும் போதே இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது.

சர்வோதய இயக்கம் கண்ட திரு, ஜெயப் பிரகாஷ் நாராயண் உருவாக்கிய சோஷலிஸ்ட் கட்சி அல்லது பிரஜா சோஷலிஸ்ட் கட்சி எங்கே இருக்கிறது இப்போது?

ஏன் இவ்வளவு தூரம் போவானேன்? திரு. ராஜ் நாராயணன், திரு. சரண்சிங் ஆகியோர் கூடி கட்டிய ஜனதா கட்சி இரண்டு மூன்று துண்டுகளாக உடைக்கப்பட்டு உருக்குலைந்த நிலையில் இருக்கின்றது.

அது சரி! மாபெரிய தியாகிகளினால் உருவாக்கிய காங்கிரஸ் மகாசபை எத்தனை துண்டுகளாகிப் பழைய காங்கிரஸ், ஸ்தாபன காங்கிரஸ், இந்திரா காங்கிரஸ், காந்தி காமராஜ் காங்கிரஸ், அந்தோணி காங்கிரஸ், அர்ஸ் காங்கிரஸ், பவார் காங்கிரஸ், ஜகஜீவன் ராம் காங்கிரஸ் என பல குட்டி காங்கிரஸ்களாக உடைந்த மாச்சரியத்தைக் காணத்தானே செய்கிறோம்.

மேலே சொன்ன அத்தனை கட்சிகளை பெற்றெடுத்தவர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல! ஒருவருக்கு அமெரிக்க பணம் என்றால் மற்றவருக்கு ரஷியப் பணம் என்றுதானே நிதிகள் வந்து குவிந்தன.

ஏன் நமது மாநிலத்திலும் கூட திரு ஆதித்தனார் கட்டிய ''நாம் தமிழர்'' இயக்கம் என்ன ஆனது? ஆகவே அவர்கள் செல்வாக்கும் பண பலமும்தான் கட்சி வளர, வாழக் காரணம் என நாமும் நம்பியாக வேண்டுமா?

அத்தனைக்கும் மத்தியில் எண்பது ஆண்டுகளுக்கு முன்பே துவங்கிய முஸ்லிம் லீக் எத்தனை பெரிய சோதனைகளையும் கடந்து கட்டுக்குலையாமல், வாடி வதங்காமல், அரசியல் சூறாவளியில் அடித்துச் சென்று விடாமல் இமயமலையாய் நின்று நமது நமது தாய்ச் சபை செயல் பட்டுக்கொண்டு வருகிறது.

*PHM அப்துல் காதர் (1982ல் டிசம்பர்) வெளியிட்ட 'முஸ்லிம் லீக் மலரில்' இருந்து.*

தேடுவதோ சகல இனங்களும் மாகாண சட்டசபை களின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட வேண்டும்.

(ஈ) மாகாண கவர்ன்மெண்டிற்குட்பட்ட சகல விஷயங்கள் மீதும் மாகாண சட்டசபைகளில், தீர்மா னங்கள் மூலம் விவாதத்திற்கு வர அனுமதிக்கப்பட வேண்டும். இவ்வாறு விவாதத்திற்கு வருவது சம்பந்த மாக விதிகள் மாகாண சட்டசபைகளில் செய்யப்பட வேண்டும்.

(உ) மாகாண சட்டசபை நிறைவேற்றும் எல்லா தீர்மானங்களும், மாகாண நிர்வாக சபையைக் கட்டுப் படுத்தும். ஆனல், மாகாண சட்டசபை நிறைவேற்றும் எந்தத் தீர்மானத்தையும் சபையோடு கூடிய கவர்னர் (கவர்னர்-இன்-கௌன்சில்) நிராகரித்து விடுவாரானல், நிர்வாக சபை மாகாண சட்டசபை தீர்மானத்தின் மீது அமுல் நடத்த வேண்டியதில்லை.

ஆனல் கவர்னர்-இன்-கௌன்சிலால் நிராகரிக்கப் பட்ட ஒரு தீர்மானம், ஒரு வருஷத்திற்குக் குறையாத தவணைக்குப் பின் மீண்டும் சட்டசபையால் நிறைவேற் றப்படுமாயின் இதை நிராகரிக்க அதிகாரம் கிடையாது. இத் தீர்மானத்தை மாகாண கவர்ன்மெண்டு நிர்வாக சபை அமுலுக்குக் கொண்டு வந்துதானக வேண்டும்.

(ஊ) சட்டசபைக்கு வந்துள்ள மெம்பர்களில் எட்டிலொரு பாகத்திற்குக் குறையாத மெம்பர்கள் அனுமதித்தால் குறிப்பிட்ட அவசரப் பிரச்சினை சம்பந்த மாக அவசரப் பிரேரணை கொண்டுவர ஒரு மெம்பருக்கு உரிமையுண்டு. அதாவது சட்டசபை நடவடிக்கைகள் எல்லாவற்றையும் ஒதுக்கி வைத்து விட்டு, இவ் அவசரப் பிரேரணையைக் கவனிக்கும்படியாக ஒரு மெம்பர் கேட்க லாம், இவ்வுரிமைக்குத்தான் அவசரப் பிரேரணை என்று பெயர்.

---

## செய்தியாளர்களிடையே தலைவர் ''காயிதெ மில்லத்''

1958 ல் சென்னையில் உள்ள செயின்ட் மேரீஸ் ஹாலில் முஸ்லிம் லீக்கின் பொதுக் கூட்டம் நடந்தது. கூட்ட இறுதியில் கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்கள் பத்திரிகையாளர்களுக்குப் பேட்டியளித் தார்கள்!

நாடு பிரிந்தவுடன் அகில இந்திய முஸ்லிம் லீக்கினர் 'பாக்கிஸ்தான்' என்ற ஒரு நாட்டை அமைத்து விட்ட பின்னர், இந்தியாவில் ''முஸ்லிம் லீக்'' என்ற பெயரில் கட்சி நடத்தலாமா என்ற பிரச்சினை எழுந்தகாலமது! அது மட்டுமல்ல! இந்தியாவில் உள்ள முஸ்லிம் லீக் கட்சியின் பல மாநிலங்களில் உள்ள பிரபல தலைவர்கள் முஸ்லிம் லீக்கை விட்டு ராஜினாமா செய்தனர். பலர் கதர் குல்லாயும் கதர் ஷேர்வானியும் அணிந்து நிறம் மாறிய காலம்.

அந்த சூழ்நிலையில்தான் சென்னை பத்திரிக்கை யாளர்களைச் சந்தித்தார்கள். நானும் மறுமலர்ச்சி வார ஏட்டின் சார்பில் சென்னையின் கௌரவ நிருப ராக கலந்து கொண்டேன்.

அப்போது இந்துப் பத்திரிகை நிருபர் தலைவர் அவர்களைப் பார்த்து ஒரு கேள்வியை எழுப்பினார். ''ஸார்! பாக்கிஸ்தானின் ஆளுங் கட்சி முஸ்லிம் லீக் என்று இருக்கும்போது, இந்தியாவில் அதே பெயரில் நீங்கள் கட்சியை நடத்துகிறீர்களே? வேறு பெயரில் இயங்கக் கூடாதா?''

அந்த நிருபர் இக்கேள்வியைக் கேட்டவுடன் தலைவர் அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு—அதனை அடக்கியவர்களாக ஒரு முறை மூக்குப் பொடியை உறிஞ்சிய பிறகு இப்படி பதிலளித்தார்கள். ''ஒரே பெயரில் பல நாடுகளில் கட்சியை நடத்துவது குற்ற மல்லவே! மேலும் இந்தியாவில் உள்ள முஸ்லிம்களி டையே முஸ்லிம் லீக் என்ற பெயரைக் கொண்டேதான் அரசியல் எழுச்சி உண்டானது! அந்த பெயரை நீக்கி விட்டு மறு பெயர் வைத்து நாங்கள் கட்சி நடத்துவது தலையை வெட்டிவிட்டு முண்டத்தைத் தூக்கி நிறுத்து வதற்குச் சமம்! முஸ்லிம்கள் ''முஸ்லிம் லீக்'' என்ற பெயரில் நமது நாட்டில் கட்சி நடத்துவது இந்திய அரசியல் சாசனப்படி சட்டதிட்டங்களுக்கு உட்பட் டதே என்று சட்டெனக் கூறினார்கள்.

1962 ல் தமிழ் நாட்டில் நடந்த பொதுத்தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகத்துடன் முஸ்லிம் லீக் கூட்டு சேர்ந்து தேர்தலில் போட்டியிட்டது.

இது குறித்து தலைவர் அவர்களிடம் ஒரு சமயம் நிருபர் ஒருவர் கேட்டார். ''நாத்திக வாதம் பேசக் கூடிய திராவிட இயக்கப் பாரம்பரியமுள்ள தி. மு. கழகத்துடன் இறை நம்பிக்கையுள்ள முஸ்லிம் லீக் கூட்டுச் சேரலாமா?:'

அதற்கு தலைவர் அளித்த பதில் இதுதான். ''அரசியல் கட்சிகளின் அவரவர் கொள்கையை தேர்தல் கூட்டுகளில் இணைத்துக் கொள்வதில்லை. தேர்தல் என்பது தொகுதி உடன்பாடு கொண்டு போட்டியிடு வதுதான்! எங்களுடன் கூட்டு வைத்துள்ள தி. மு. கழகத்தினரை எங்களுடைய தெய்வீக நம்பிக்கையை நாங்கள் அவர்கள் மீது திணிப்பதோ அல்லது நாத்திகக் கொள்கையுள்ள அவர்கள் எங்களின் ஏகதெய்வக் கொள்கையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதோ இல்லை! மேலும் அறிஞர் அண்ணாத்துரை அவர்கள் திராவிடக் கொள்கையிலிருந்து கொஞ்சம் முன்னேறி ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்கிருர்! எனவே அவர்களை முற்றிலும் நாத்திகர்கள் என்று சொல்வ தற்கில்லை!'' ''லக்கும் தீனுக்கும் வலியதீன்''— அதாவது அவர்கள் மார்க்கம் அவர்களுக்கு—எங்களது மார்க்கம் எங்களுக்கு!'' இதுவே எங்களது கொள்கை எங்களது வேதமும் அதைத்தான் போதிக்கிறது?

—கனி சிஷ்தி

(8) சட்டசபை மெம்பர்களில் எட்டிலொரு பாகத்திற்குக் குறையாத மெம்பர்கள் விண்ணப்பம் செய்து கொண்டால், சட்டசபையின் விசேஷக் கூட்டமொன்று கூட்டப்படலாம்.

(9) வரி விதிப்பு மசோதா, தவிர இதர மசோதாக்கள் சட்டசபை செய்யும், சட்டதிட்டங்களுக் குட்பட்டு கவர்ன்மெண்டின் அனுமதியில்லாமலேயே சட்டசபையில் கொண்டு வரப்படலாம்.

(10) மாகாண சட்டசபைகளில் அங்கீகாரமாகும் மசோதாக்கள் எல்லா மாகாண கவர்னரின் அங்கீகாரம் பெற்ற பின்னர்தான் சட்டமாக அமுலுக்கு வரும். ஆனல் மாகாண சட்டசபைகள் அங்கீகாரம் செய்யும் மசோதாக்கள் கவர்னர் ஜெனரலால் நிராகரிக்கப்படலாம்.

(11) சட்டசபை மெம்பர்களின் காலம் ஐந்து வருஷம் இருக்க வேண்டும்.

---

# வரவேற்பில் பெற்ற வஸீலா!

(நாகை சுல்தான்)

நான் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில் பெற்ற பயிற்சியின் அடிப்படையில் பேச்சுப் போட்டி, பட்டி மன்றம், பாரதி விழா, திருவள்ளுவர் விழா, கருத்தரங்கம், கவியரங்கம் என்றெல்லாம் பேசித் திரிந்தேன். 1962 சட்டப் பேரவை, பாராளுமன்றம் இவைகளுக்கான தேர்தல் நிகழ்வுற்றது. நாகைத் தொகுதியில் நாடாளுமன்றத்திற்கு தளபதி திருப்பூர் மொஹிதீன் அவர்களும், *T. M. M.* அஹமது என்கிற சாரண பாஸ்கரன் அவர்கள் சட்டப் பேரவைக்கும் போட்டியிட்டுக் களத்திலிருந்த நேரம். அண்ணல் காயிதெ மில்லத் (ரஹ்) அவர்கள் தேர்தல் பிரச்சாரத்திற்காக தமிழகமெங்கும் சூறாவளி சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தார்கள்.

மஞ்சக்கொல்லை என்னும் எங்கள் சிற்றூருக்கும் வருகை தந்தார்கள். எங்கள் ஊர் ஜமாஅத் சார்பில் வரவேற்பு! அந்த வரவேற்புரையை வாசித்தளிக்க நான் வாய்ப்பளிக்கப்பட்டேன். எங்களூர் பூங்காளம்மன் கோவில் திடலில் வரவேற்பு.

காரை விட்டிறங்கி கால் நடையாகவே, எங்களூரில் அடக்கம் பெற்றிருக்கும் செய்யது அஹமது ஒலியுல்லாஹ் (மாதிஹுர் ரசூல் ஷெய்கு சதகத்துல்லாஹ் அப்பா அவர்களின் தமையனார்) அவர்களின் மிஜாருக்குச் சென்று ''ஜியாரத்'' செய்துவிட்டு, எங்களூர் பள்ளியில் ''தஹிய்யத்துல் மஸ்ஜித்'' தொழுகை இரண்டு ரக்அத் நஃபில் தொழுது விட்டு, ஜமாஅத்தின் முக்கியஸ்தர்களோடு அளவளாவினார்கள். அதன்பிறகு அனைவரின் முஸாபஹாவை ஏற்றார்கள்.

நானும் ஓடிப்போய் முஸாபஹா செய்ய முன் கையைத் தொட்டவுடன் என் கையில் ''ஜில்'' என்ற-ஐஸில் வைத்த மாதிரி ஓர் உணர்வு; அது என் உள்ளத்திலும் பிரதிபலித்தது.

ஜமாஅத்தின் வரவேற்புரையை நான் வாசித்தேன். ஆரம்பத்தில் சிறிது நடுக்கம் இருந்தாலும் அதில் நளினம் இருந்ததாக ஓர் உணர்வு எனக்குள்! வரவேற்புரையை வாசித்து தலைவர் அவர்களிடம் கொடுத்தவுடன், அதைப் பெற்றுக் கொண்டு என்னை தனது முபாரக்கான வலக்கரத்தால் முதுகில் தட்டிக் கொடுத்தார்கள். என் காதில் இவ்வார்த்தைகளைக் கூறினார்கள், ''தம்பீ நீ எனக்கு வரவேற்புரை வாசித்தாய்! உன் உரைக்கு நாட்டில் நல்ல வரவேற்பு இருக்கும்'' என்று கூறினார்கள்.

சூறாவளி சுற்றுப் பயணம் தொடர்ந்தது; சிக்கல், ஆழியூர், கூத்தூர், அடியக்க மங்கலம், விஜயபுரம் வழியாக இலட்சுமாங்குடி கூத்தாநல்லூர் என்று நுழைந்தது கார். போகும் வழியில் விருந்து கொடுக்கும் பணக்காரர் வீட்டின் முன்னால் நிறுத்தி அவர் மாலை அணிவித்தார். வீட்டை அண்ணாந்து பார்த்தார்கள். பின்னர் கார் பள்ளிவாசலுக்குச் சென்றது. அங்குள்ள பணிகள் முடிந்ததும், மதிய உணவுக்கு ஏற்பாடு செய்த வீட்டுக்காரர் வந்து அழைத்தார். காயிதெ மில்லத் அவர்கள் ''எனக்கு வயிற்றுக் கடுப்பாக இருக்கிறது. நான் பள்ளியிலேயே இருக்கிறேன். எனக்கு இங்கேயே உணவு அனுப்புங்கள்'' என்று சொல்லி விட்டார்கள்! தனது வீட்டில் தலைவர் அவர்களின் புனித பாதம் படட்டும் என்றுதான் இந்த தடபுடலான ஏற்பாட்டை அவர் செய்திருந்தார். இது அவருக்கும் ஏமாற்றம். காரணம் புரியாமல் திகைத்தார்.

ஒரு வழியாக காரணம் புரிந்தது. தளபதி திருப்பூர் மொஹிதீன் அவர்கள் ''தலைவர் உங்கள் வீட்டுக்கு வர மாட்டார்கள். காரணம் உங்கள் வீட்டுக்கு முன்னால் ''ஜன்னத்துல் பிர்தௌஸ்'' என்று சிமெண்ட் கட்டவுட்டில் எழுதி இருக்கிறீர்கள். லீடர் சாஹிப் அல்லாஹ்வின் ஜன்னத்துல் பிர்தௌஸில்தான் நுழைவார்கள். சத்தாது போன்றவர்கள் கட்டிய சுவர்க்கத்தில் நுழைய மாட்டார்கள்'' என்று விளக்கம் கூறினார்கள். காயிதெ மில்லத்தின் (ரஹ்) எண்ணம் லீடர் தளபதி மொஹிதீன் அண்ணனின் இதயத்தில் எதிரொலித்துவிட்டது போலும்! எல்லோர் கவனமும் விருந்துக்கழைத்த வீட்டுக்காரரின் வீட்டை நோக்கி திரும்பியது. வீட்டுக்காரரோ வீட்டை நோக்கி ஓடி, ஏணியை வரவழைத்து தானே ஏறி அந்த பெயர் கட் அவுட்டை உடைத்தெறிந்தார், பிறகு வந்து அழைத்தார். இச் செய்தி தலைவர் அவர்களுக்கும் தெரிந்து விடுகிறது! ''தளபதி முந்திக் கொண்டாரா? அல்ஹம்துலில்லாஹ்'' என்றார்கள். அதன் பிறகு அவ்வீடு சென்று உணவருந்தினார்கள்! என்னே தலைவரின் இறைப் பொருத்தம்!

## II மாகாண கவர்ன்மெண்டுகள்

(1) மாகாண கவர்ன்மெண்டின் தலைவர் கவர்னராக இருப்பார். கவர்னர் சாதாரணமாக ஐ.ஸி.எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவராக இருத்தல் கூடாது; அல்லது கவர்ன்மெண்டு நிரந்தர உத்தியோக வர்க்கத்தை சேர்ந்தவராகவும் இருத்தல் கூடாது.

(2) ஒவ்வொரு மாகாணத்திலும் நிர்வாக கௌன்சில் (நிர்வாக சபை) இருக்கும். இக் கௌன்சிலும், கவர்னருமாகச் சேர்ந்து மாகாணத்தின் நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பும், பாத்தியதையும் பெற்றவர்களாவார்கள்.

(3) இந்திய ஸிவில் சர்வீஸ் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களை சாதாரணமாக நிர்வாக சபைக்கு நியமனம் செய்யக் கூடாது.

(4) நிர்வாக சபை மெம்பர்களில் 100க்கு 50 விகிதத்துக்குக் குறையாமல் இந்தியர்களாக இருக்க இருக்க வேண்டும். இந்த இந்தியர்கள் மாகாண சட்ட சபை மெம்பர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

(5) நிர்வாக சபை மெம்பர்களின் பதவிக் காலம் ஐந்து வருஷம்.

## III இம்பீரியல் சட்டசபை

(1) இம்பீரியல் (இந்தியா) லெஜிஸ்லேடிவ் கௌன்சில் 150 மெம்பர்கள் கொண்டதாக இருக்க வேண்டும்.

(2) இந்த மெம்பர்களில் 5-ல் நான்கு பாக மெம்பர்கள் ஜனப் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டும்.

(3) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் வாக்காளர் தொகை அதிக விரிவாக்கப்பட வேண்டும். மாகாண சட்டசபைகளுக்கு பிரதிநிதிகளை தெரிந்தெடுக்க முஸ்லிம் வாக்காளர் தொகை விசாலப்படுத்தப்பட்டுள்ள முறையில் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் வாக்காளர் தொகை விரிவாக்பட வேண்டும். இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்து அனுப்புவதில், மாகாண சட்டசபைகளின் தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்களும் சேர்ந்து பிரதிநிதிகளைத் தெரிந்தெடுத்தனுப்ப உரிமை அளிக்கப்பட வேண்டும்.

(4) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு தெரிந்தெடுக்கப்படும் இந்திய பிரதிநிதிகளில் மூன்றிலொரு பாகத்தினர் முஸ்லிம்களாக இருக்க வேண்டும். முஸ்லிம்கள் பற்பல மாகாணங்களிலிருந்தும் முஸ்லிம் தனித் தொகுதியால் தெரிந்தெடுக்கப்பட வேண்டும். மாகாண கௌன்சிலுக்கு முஸ்லிம் பிரதிநிதிகள் எந்த அளவில் தெரிந்தெடுக்கப்படுகிறார்களோ அந்த அளவின் விகிதாச்சாரப்படி பிரதி மாகாணமும் இம்பீரியல் கௌன்சிலுக்கு முஸ்லிம் பிரதிநிதிகளை முஸ்லிம்கள் தெரிந்தெடுக்க வேண்டும்.



## காயிதே ஆஜம் அன்றே ஜாடை காட்டினார்!

1946 ஆண்டில் காயிதே மில்லத் அவர்கள் மதராஸ் சட்ட சபையில் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தார்கள் அப்பொழுது அச்சபையில் முஸ்லிம் லீக் கட்சியைச் சர்ர்ந்த சட்டசபை உறுப்பினர்கள் 29 பேர் இருந்தார்கள். 1946ம் ஆண்டு மார்ச் மாதத்தில் டில்லியில் காயிதே ஆஜம் ஜின்னாசாகிப் எல்லா சட்டசபைகளிலுமுள்ள முஸ்லீம் லீக் சட்டசபை உறுப்பினர்களின் கன்வென்ஷனைக் கூட்டியிருந்தார். டில்லி இம்பீரியல் ஹோட்டலில் அக்கூட்டம் நடைபெற்றது.

எனது மச்சானுடன் நானும் டில்லி சென்றிருந்தேன். இந்தியாவின் எல்லா மாகாணங்களில் இருந்தும் முஸ்லிம் லீக் தலைவர்கள் வந்திருந்தார்கள். மாகாண சட்டசபை, மத்திய சட்டசபை உறுப்பினர்களும் வந்திருந்தார்கள், என்றாலும் காயிதே மில்லத்திற்கு மிகுந்த மரியாதை கொடுத்தார் ஜின்னா சாகிப். மேடையில் தமது அருகிலேயே உட்கார வைத்துக் கொண்டார். ''மிஸ்டர் முஹம்மது இஸ்மாயில் ஆப் மெட்ராஸ்'' என்று தான் மச்சானை ஜின்னா சாகிப் அழைப்பார். ஏனென்றால் நவாப் முஹம்மது இஸ்மாயில் கான் என்ற பெயரில் பெருந்தலைவர் ஒருவர் உ.பி. மாகாணத்தில் இருந்து வந்திருந்தார். இருவரையும் வித்தியாசப் படுத்துவதற்காக ஜின்னா சாகிப் இப்படி அழைப்பது வழக்கம்.

முஸ்லிம் லீக் கன்வென்ஷன் நடந்து கொண்டிருந்த சமயம், ஜின்னா சாகிப், வெளியே செல்ல வேண்டியிருந்தது. வைஸ்ராயை சந்திப்பதற்காகப் போயிருந்தார் என்று எண்ணுகிறேன். அவர் நாற்காலியை விட்டு எழுந்திருக்கும்பொழுது பக்கத்திலிருந்த லியாகத் அலிகானிடம் காதில் ஏதோ சொல்லி விட்டுச் சென்றார். உடனே பொதுச் செயலாளர் லியாகத் அலிகான் எழுந்து ''இக்கூட்டத்திற்கு மதராஸ் முஹம்மது இஸ்மாயில் சாகிப், காயிதே ஆஜம் திரும்பி வரும்வரை தலைமை வகித்துநடத்துவார்'' எனஅறிவித்தார். இதை யாரும் எதிர்பார்க்கவில்லை. எங்களுக்குக்கூட இந்த அறிவிப்பு ஆச்சரியமாக இருந்தது. காயிதே மில்லத் அந்த டில்லி கன்வென்ஷனுக்குத் தலைமை தாங்கி நடத்தியதை நான் கண்ணாரக் கண்டேன்.

—ஹாஜி *M. J.* ஜமால் ஹுசைன் சாகிப்
ஒய்வு பெற்ற முன்னாள் மாவட்டநீதிபதி



(5) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் பிரசிடெண்டு இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலாலேயே தெரிந்தெடுக்கப்பட வேண்டும்.

(6) உப கேள்விகள் கேட்கும் உரிமை முதல் கேள்வி கேட்கும் மெம்பருக்கு மட்டுமின்றில்லாதபடி எந்த மெம்பர் வேண்டுமானாலும் உப கேள்வி கேட்க உரிமை இருக்க வேண்டும்.

(7) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் மெம்பர்களில் எட்டிலொரு பாக மெம்பர்கள் கையெழுத்துச் செய்து மனு செய்து கொண்டால், இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலின் விசேஷக் கூட்டம் கூட்டப்பட வேண்டும்.

(8) வரி மசோதா தவிர வேறெவ்வித மசோதாவும் சட்டசபை விதிகளுக்கேற்ப எந்த மெம்பராலும் கொண்டு வரப்படலாம். இப்படிக் கொண்டு வர நிர்வாக கவர்ன்மெண்டின் அனுமதியைக் கோரவேண்டிய அவசியம் கிடையாது.

(9) லெஜிஸ்லேடிவ் கௌன்சில் நிறைவேற்றும் மசோதாக்களெல்லாம் சட்டமாக அமுலுக்கு வருமுன் கவர்னர் ஜெனரலின் அங்கீகாரம் பெற வேண்டும்.

(10) வரவு-செலவு திட்டங்களெல்லாம் மசோதாவாக லெஜிஸ்லேடிவ் கௌன்சிலின் அங்கீகாரத்திற்கு அனுப்ப வேண்டும். இந்த வரி மசோதாக்களும், வரவு-செலவு திட்டங்களும் (பட்ஜெட்கள்) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலின் ஓட்டுக்கு விடப்பட வேண்டும்.

(11) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் மெம்பர்கள் பதவிக் காலம் ஐந்து வருஷம் இருக்க வேண்டும்.

(12) கீழே குறிப்பிடப்படும் விஷயங்கள் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் மட்டுமே கவனிக்க அதிகாரம் பெற்றிருக்க வேண்டும்.

(அ) இந்தியா முழுவதற்குமாக செய்யப்பட வேண்டிய சட்டதிட்டங்கள்.

(ஆ) மாகாணங்களுக்கிடையே ஒன்றுக்கொன்று பண சம்பந்தமாக கொடுக்கல் வாங்கல் சம்பந்தப்பட்ட மசோதாக்கள்.

(இ) இந்திய சமஸ்தானங்கள் செலுத்தும் கப்பங்கள்போக இதர இந்தியா கவர்ன்மெண்டு வருமானங்கள் எல்லாவற்றும் சம்பந்தப்பட்ட மசோதாக்கள்.

(ஈ) இராணுவச் செலவு சம்பந்தமாக இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் செய்யும் தீர்மானங்கள் கவர்னர் ஜெனரல்-இன்-கௌன்சிலைக் கட்டுப்படுத்தாது. இச் செலவு போக இதர செலவுகள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலால் பைசல் செய்யப்பட வேண்டும்.

(உ) இந்திய வரிகள் விதிப்பு, சுங்க வரி நிர்ணயம், வரிகளைக் குறைத்தல், அதிகப்படுத்தல், நாணயச் செலாவணி மதிப்பை நிர்ணயித்தல், இந்தியக் கைத்

## "நான் செய்த தர்மத்திற்குரிய பலன் என்ன?"

ஒரு சமயம், மாயவரத்தில் இருந்து சங்கரன்பந்தலுக்கு, காயிதே மில்லத் அவர்கள் காரில் போய்க் கொண்டிருந்தார்கள். அக்காரில் மௌலவி அப்துல் வஹாப் சாகிப், மௌலவி நிஜாமுத்தீன் சாகிப், ஆகியோருடன் நானும் பயணம் செய்தேன். பட்டமளிப்பு விழாவிற்காகத் தலைவரவர்களை சங்கரன்பந்தலுக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தோம். மார்க்க அறிஞர் பலரும் அக்காரில் பிரயாணம் செய்ததால், மார்க்க சம்பந்தமான பேச்சுக்களே பெரும்பாலும் உரையாடலில் இடம் பெற்றுக் கொண்டிருந்தது.

போகும் வழியில் ஓரிடத்தில் கார் நின்றது. அச்சமயம் ஒருவர் தலைவரவர்களிடம் தர்மம் கேட்டார். ஷெர்வானி பாக்கெட்டிற்குள் கையை விட்டார்கள். எட்டணு நாணயம் ஒன்று கையில் வந்தது. அதை அவரிடம் கொடுத்தார்கள். பின்னர் எங்கள் பயணம் தொடர்ந்தது. அப்பொழுது காயிதே மில்லத் கூறினர்கள்:-

''தர்மம் கேட்டவருக்கு ஒரு நான்கு அணு கொடுக்கலாம் என எனக்கு மனதில் பட்டது. பையில் கையை விட்டு காசை எடுத்தபொழுது எட்டணு நாணயம் வந்தது. அதைக் கொடுத்துவிட்டேன். நான் கொடுக்க நினைத்ததோ நான்கணு, ஆனல் கொடுத்ததோ எட்டணு. எனக்கு இதில் எதற்குரிய ''சவாபு'' கிடைக்கும்?''

''நீங்கள் கொடுத்த அதிகமான அளவு தொகைக்குரிய ''சவாபு'' கிடைக்கும்'' என்று நாங்கள் பதிலளித்தோம்.

அடுத்து தலைவரவர்கள் ''நான் கொடுத்த காசில் அவர் நன்மையான காரியம் செய்தால் அந்த நன்மையிலும், அப்பணம் தீய காரியங்களுக்குப் பயன்பட்டால் அப்பாவங்களிலும் எனக்கு பங்குண்டுமா?'' என்ருர்கள்.

''அப்படியில்லை, உங்கள் ''நிய்யத்'' 'ஸதக்கா' கொடுப்பது என்பதே. அதை நிறைவேற்றும்பொழுது அதற்குரிய நன்மைகள் கிட்டும். நீங்கள் கொடுக்கும் தொகையை யார் எப்படிப் பயன் படுத்தினுலும் அதற்குரிய பலா பலன்கள் உங்களுக்கு இல்லை'' என்று நாங்கள் கூறினேம். இவ்வாறு உலமாக்களிடம் பல விஷயங்கள் குறித்தும் காயிதே மில்லத் அவர்கள் விவாதிப்பதுண்டு; தர்க்கிப்பதுண்டு.

—மௌலவி *S. M.* காஜா முகைதீன் ஆலிம்
கடையநல்லூர்

தொழில்களுக்கு உதவியளித்தல் முதலியவையாவும் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் பைசலின் மேல்தான் செய்யப்பட வேண்டும்.

(ஊ) நாட்டின் நிர்வாகத்தை பொருத்த எல்லா விஷயங்களும் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலின் அபிப்பிராயத்தின் பிரகாரமே முடிவு செய்யப்பட வேண்டும்.

(13) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் நிறைவேற்றும் எல்லா தீர்மானங்களும், இந்தியா நிர்வாகக் கௌன்சிலைக் கட்டுப்படுத்தும். ஆனால், இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் செய்யும் தீர்மானத்தை சபையோடு கூடிய கவர்னர் ஜெனரல் நிராகரித்து விட்டால் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் தீர்மானம் நிர்வாக சபையைக் கட்டுப்படுத்தாது. கவர்னர்-ஜெனரல்-இன்-கௌன்சிலால் ரத்து செய்யப்பட்ட விஷயம் மீண்டும் ஒரு வருஷத்திற்குக் குறையாத தவணைக்குப் பின் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் நிறைவேற்றுமாயின் நிர்வாக சபை தடை கூறாமல் அமுல் நடத்தி வைக்க வேண்டும்:

(14) இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலில் ஆஜராக இருக்கும் மெம்பர்களில் எட்டிலொரு பாகத்திற்கு குறையாத மெம்பர்கள் அனுமதித்தால் அவசரப் பிரேரணைகள் கொண்டு வர மெம்பர்களுக்கு உரிமையுண்டு.

(15) மாகாண சட்டசபையோ இம்பீரியில் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலோ நிறைவேற்றும் ஒரு மசோதாவை அரசர் பெருமான் (கிரௌன்) நிராகரிப்பதாக இருந்தால், மசோதா நிறைவேற்றப்பட்ட ஒரு வருஷத்திற்குள் நிராகரிக்கப்பட வேண்டும். எந்த சட்டசபை இதை நிறைவேற்றிற்றோ, அதற்கு மசோதா நிராகரிக்கப்பட்ட தகவல் தெரிவிக்கப்பட்ட தேதி முதல் மசோதா அமுலுக்கு வருவது நின்று விடும்.

(16) இராணுவம், அன்னிய நாடுகள் சம்பந்தம், உள்நாட்டில் சுதேச சமஸ்தானங்களுடன் சம்பந்தம், இவைகள் யுத்தம் தொடங்கல், சமாதானம் செய்து கொள்ளல், உடன்படிக்கைகள் செய்து கொள்ளல் முதலிய விஷயங்கள் சம்பந்தமாக இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு கொஞ்சமும், அதிகாரமும் உரிமையும் கிடையாது.

---

# தெளிவு கிடைக்கும் வரை தீர்மானிப்பதில்லை!

எங்கள் ஊரில் உள்ளவர்களுக்கும் பக்கத்து கிராமமான மாணியம் ஆடூரில் உள்ள ஹரிஜனத் தோழர்களுக்குமிடையே விவசாய காரியங்கள் நிமித்தம் அடிக்கடி பிரச்சினைகள் ஏற்படுவதுண்டு. பல கிரிமினல் வழக்குகள் தடைபெற்றிருக்கின்றன. பரங்கிப்பேட்டை கோர்ட், கடலூர் கோர்ட் என்று அலைவதுதான் எங்களுக்கு ஒரே வேலையாகப் போய் விட்டது. அப்பொழுது ஒரு கொலையும்கூட நிகழ்ந்து விட்டது.

அந்தக் காலக் கட்டத்தில் ஒரு இடைத்தேர்தல் வந்தது. அத்தொகுதி ஹரிஜன் எம். எல். ஏ. இறந்து விட்டார். இத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளரை ஆதரித்தால் வழக்குகளை வாபஸ் வாங்கிக் கொள்வதாகவும் மேற்கொண்டு இரு சமுதாயங்களுக்கிடையில் தகராறுகள் எழாதபடி தீர்த்து வைப்பதாகவும் அன்றைய முதலமைச்சர் காமராஜர் தகவல் சொல்லி அனுப்பினார்.

லால்பேட்டை முஸ்லிம்கள் எப்பொழுதுமே தாய்ச்சபைசொற்படிதான் தேர்தலில் வாக்களிப்பது வழக்கம். ஊரிலுள்ள குழப்ப நிலைமையை சரிக் கட்டுவதற்காக இத்தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளரையே ஆதரித்தால் என்ன என்ற சிந்தனை ஒரு சிலருக்கு ஏற்பட்டது. காயிதே மில்லத் அவர்களிடமும் கலந்து ஆலோசித்து அதன் பிறகுதான் முடிவு சொல்ல வேண்டும் என ஊரார் தீர்மானித்து எல்லோரும் மதராஸ் புறப்பட்டோம். தலைவர் அவர்களிடமும் நிலைமையை விளக்கிச் சொன்னோம். தலைவர் அவர்கள் எந்த முடிவும் சொல்லவில்லை. மூன்று நாட்களாக இழுத்தடித்தார்கள்.

காயிதே மில்லத்திற்கே ஒரு முடிவுக்கு வர இயலவில்லை. லால் பேட்டை நிலவரத்தைப் பார்த்தால் இந்தத் தேர்தலில் காங்கிரஸை ஆதரித்து விட்டுப் போகலாம் என்று தோன்றுகிறது. ஆனால் நாட்டில் இதுவரை முஸ்லிம் லீக் கடைப்பிடித்து வரும் கொள்கைக்கு இது மாற்றமாகவும் உளளது. எனவே தலைவர் அவர்கள் சீக்கிரத்தில் ஒரு முடிவுக்கு வரவில்லை.

நாளைக் காலையில் வாருங்கள் எனக் கூறி எங்களை அனுப்பி விட்டார்கள். நாங்கள் அதிகாலையிலேயே குரோம்பேட்டைக்குப் போய் விட்டோம். காலையில் சுபுஹ் தொழ அமர்ந்தவர்கள் இன்னும் முஸல்லாவை விட்டு எழுந்திருக்கவில்லை என்ற தகவல் வீட்டினுள் இருந்து வந்தது. வெகுநேரம் காத்திருந்தோம். முஸல்லாவில் இருந்தவாறே யோசனையில் ஆழ்ந்திருந்தவர்கள் திடீரென எழுந்து எங்களை நோக்கி வந்தார்கள். காங்கிரசை இத்தேர்தலில் ஆதரியுங்கள் என சொல்லியதுடன் எங்களிடம் கடிதமும் எழுதித் தந்தார்கள். எனக்கு இப்போதுதான் இப்பிரச்சினையில் தெளிவு கிடைத்தது.'' எனக் கூறினார்கள்.

அந்த முடிவு நல்லதாகவே அமைந்து விட்டது. அதன் பிறகு எங்களுக்கும் ஹரிஜனத் தோழர்களுக்கும் இடையில் சண்டை சச்சரவுகள் அதிகம் எழவில்லை.

[லால்பேட்டை மௌலவி இக்லீல் சாகிப்]

## IV இந்திய கவர்ன்மெண்டு

(1) இந்தியா ஆட்சியின் தலைவர் கவர்னர் ஜெனரல்.

(2) கவர்னர் ஜெனரல் நிர்வாக கௌன்சில் மெம்பர்களில் பாதி பேர் இந்தியர்களாக இருக்க வேண்டும்.

(3) நிர்வாக கௌன்சிலின் இந்திய மெம்பர்கள் இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சிலுக்கு தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்களால் தெரிந்தெடுக்கப்பட வேண்டும்.

(4) இந்திய ஸிவில் சர்வீஸ் மெம்பர்களை சாதாரணமாக கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபைக்கு மெம்பர்களாக நியமனம் செய்யக் கூடாது.

(5) இம்பீரியல் ஸிவில் சர்வீஸ் உத்தியோகங்களெல்லாம் இந்தியா கவர்ன்மெண்டால் செய்யப்பட வேண்டும். இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கௌன்சில் சட்டதிட்டங்களுக்கேற்ப உத்தியோகங்கள் நியமனம் செய்யப்பட வேண்டும்.

(6) மாகாண நிர்வாக விஷயங்களில் இந்தியா கவர்ன்மெண்டு சாதாரணமாக தலையிடக் கூடாது. மாகாண கவர்ன்மெண்டின் அதிகாரத்திற்குட்பட்ட விஷயமென விவரித்துக் கூறப்படாத விஷயம் இந்தியா கவர்ன்மெண்டின் எல்லைக்குட்பட்டதென பாவிக்கப்பட வேண்டும். மாகாண கவர்ன்மெண்டுகள் மீது இந்தியா கவர்ன்மெண்டு சாதாரணமாக மேற்பார்வை அதிகாரம் மட்டுமே வகிக்க முடியும்.

(7) சட்டசபை, நிர்வாக விஷயம் முதலிய விஷயங்களில் கூடுமான வரை இந்தியா மந்திரி இந்திய கவர்ன்மெண்டு விஷயங்களில் தலையிடக் கூடாது.

(8) இந்தியா கவர்ன்மெண்டு கணக்குகள் தனியே தணிக்கை செய்யப்பட ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

## V கௌன்ஸிலோடு கூடிய இந்தியா மந்திரி

(1) இந்தியா மந்திரிக்கு இருந்து வரும் கௌன்சில் ஒழிக்கப்பட வேண்டும்.

(2) இந்திய மந்திரியின் சம்பளம் பிரிட்டிஷ் சம்பள திட்டங்கள் மீது நிர்ணயிக்கப்பட வேண்டும்.

(3) குடியாட்சி கொண்ட நாடுகளின் செக்ரடரி (மந்திரிகளுக்கு) களுக்கு எவ்வித உரிமையும் பாத்தியதையும் இருக்கிறதோ, அதே விதமாக உரிமையும், பாத்தியதையுந்தான் இந்தியா சம்பந்தப்பட்ட வரை வரை இந்தியா மந்திரிக்கும் இருக்க வேண்டும்.

(4) இந்தியா மந்திரிக்கு உதவியாக இரு அண்டர் செகரடரிகள் இருக்க வேண்டும். இவ்விருவர்களில் ஒருவர் இந்தியராக இருக்க வேண்டும்.

## VI இந்தியாவும் சாம்ராஜ்ஜியமும்

(1) சாம்ராஜ்ய சம்பந்தப்பட்ட விஷயங்களை நிர்ணயிக்க கூட்டப்படும் எந்த சபையிலும், ஸ்தாபனத்திலும் இதர குடியேற்ற நாடுகளுக்குக் கொடுக்கப்படுவது போன்ற சம அந்தஸ்து, சமஸ்தானம், இந்தியாவுக்கும் கொடுக்கப்பட வேண்டும்.

(2) சாம்ராஜ்யம் பூராவிலும் இந்திய மக்களுக்கும் இதர நாட்டு மக்களுக்கும் கொடுக்கப்படுவது போன்ற சம உரிமை, சம அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டும்.

## VII ராணுவ விஷயங்களும் இதர விஷயங்களும்

(1) இராணுவ உத்தியோகங்களும், கடற்படை உத்தியோகங்களும், இதர உத்தியோகங்களும்-கமிஷன் ஆபீஸர்களும், நான்-கமிஷன் ஆபீஸர்களும் - இந்தியர்களுக்கும் கொடுக்கப்பட வேண்டும். இந்தியர்களுக்கு அவசியப் பயிற்சி கொடுக்க தக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

(2) வாலண்டியர்களாகச் சேர இந்தியர்கள் அனுமதிக்கப்பட வேண்டும்.

(3) நிர்வாக உத்தியோகஸ்தர்களுக்கு நீதி பரிபாலன அதிகாரம் இருத்தல் கூடாது. பிரதி மாகாணத்திலும் நீதி பரிபாலனம் மாகாணத்தின் உயர்ந்த கோர்ட்டின் அதிகாரத்திற்குள் வைக்கப்பட வேண்டும்.

மேற்கண்ட ஒப்பந்தத்தில் காங்கிரஸ் முஸ்லிம் லீக் ஒத்துழைப்புக்குரிய ஷர்த்துகள் கூறப்பட்டிருப்பதுடன், இந்தியாவிற்கு வழங்கப்படக் கூடியதாயிருந்த மாண்டேகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தில் என்னென்ன அம்சங்கள் சேர்க்கப்பட வேண்டுமென்பதையும், கூறப்பட்டுள்ளது.

மேற்கண்ட லீக்—காங்கிரஸ் ஒப்பந்தம் முஸ்லிம் லீக் தலைவர்களும், காங்கிரஸ் தலைவர்களும் கூடி கலந்தாலோசித்து, பரஸ்பரம் ஒருமனப்பட்டுச் செய்து கொண்டதாகும்.

இவ் உடன்படிக்கை 1916ம் ஆண்டு டிஸம்பர் மாதம் 29ம் தேதி லக்னோவில் கூடிய 31-வது காங்கிரஸ் மகாசபையில் அங்கீகரிக்கப்பட்டது. அதே டிஸம்பர் 31ம் தேதி லக்னோவில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாட்டிலும் இது அங்கீகரிக்கப்பட்டது.

இதிலிருந்து ஹிந்து முஸ்லிம் இரு சமூகத்தினரும் அரசியல் துறையில் ஒற்றுமையாக இந்தியாவின் தேச விடுதலைக்கும் பாத்தியதைக்கும் தீவிரமாக உழைக்க ஆரம்பித்தனர். இந்தியாவிற்கு வழங்கப்படும் அரசியல் சீர்திருத்தத்தில், இவ்வொப்பந்தத்தில் கண்டுள்ளபடி சட்டம் அமைக்க வேண்டுமென்றும் கோரிக் கொண்டனர். லீக்—காங்கிரஸ் ஒத்துழைப்பான தீவிர போராட்டத்தின் பயனாகவே, இவ்வொப்பந்த விதிகளில் அநேகம் ஒப்புக் கொள்ளப்பட்டு, மாண்டேகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தம் 1919ம் ஆண்டு இந்தியாவிற்கு வழங்கப்பட்டது. அந்த அரசியல் சீர்திருத்தத் திட்டப்படியே 1919 முதல் 1937ம் ஆண்டு மார்ச் வரை நடைபெற்று வந்தது.

ஆதாரம்:-

''முஸ்லிம் லீக் சரிதை''—1938

ஆக்கியோன்:- மௌலவி அஹ்மத் ஸயீத்சாஹிப்.

ஆசிரியர்,- ''னஸபுல் இஸ்லாம்''

சென்னை ''ஸைபுல் இஸ்லாம்'' பதிப்பகத்தாரால் வெளியிடப்பெற்றது.

# 500 வருடம் பாடுபட்டாலும் முஸ்லிம்லீக்கைப்போன்று ஒரு ஸ்தாபனத்தை உருவாக்க முடியாது!

[1958ம் ஆண்டு ஜனவரி மாதம் 11, 12ம் தேதிகளில் நடைபெற்ற முஸ்லிம் லீக் ஊழியர்கள் மாநாட்டில் காயிதே மில்லத் ஆற்றிய தலைமையுரை வருமாறு]

## முஸ்லிம் லீக் நமது மூச்சு

முஸ்லிம் லீக் என்ற பதத்துக்குள்ளே நம் அபிலாஷைகள் அடங்கிக் கிடக்கின்றன. இந்த ஸ்தாபனம் தேசத்திற்கு மிக இன்றியமையாதது. நமது கோரிக்கை நியாயமானது. நியாயத்திற்கு எப்பொழுதுமே அல்லாஹ்வின் உதவியுண்டு. முஸ்லிம் லீக் வருங்கால ஆசையின் சொரூபம். நமது பெருஞ் செல்வம், சமுதாயத்தின் சின்னம். 50 வருட சேவை லீக்குக்கு உண்டு. அதன் சாதனைகள் நீங்கள் அறியாததல்ல. அதைக் கட்டிக் காக்கவேண்டும், காத்துதான் தீரவேண்டும். இனி 500 வருடங்கள் பாடுபட்டாலும் கூட ஒரு வேளை, இப்படி ஒரு ஸ்தாபனத்தை உருவாக்க முடியாது. இதர சங்கங்களுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் நிறைய வேறுபாடுகளுண்டு. நமது எதிரிகளுக்கும்கூட லீக்கின் முக்கியத்துவம் தெரியும். அதனுல்தான் இந்த ஸ்தாபனத்தை நசுக்கிவிட வேண்டும் என்று அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிருர்கள்.

முஸ்லிம் லீக் வேண்டாமென்று பிற சமுதாயத்தவர் எல்லோரும் கூறுவதாக நீங்கள் நினைக்கவேண்டாம். குறிப்பிட்ட சில அரசியல்வாதிகள் தாம் இப்படிக் கூறுகிருர்கள். குறிப்பிட்ட சிலரைத் திருப்தி படுத்துவதற்காக, அவர்கள் எவ்வளவு செல்வாக்கு படைத்தவர்களாக இருந்த போதிலும் சரியே, நாம் நமது ஸ்தாபனத்தைக் கலைத்துவிட முடியாது.

நம்முடைய அரசியல், ஆண்டவனை நம்பும் அரசியல்; சத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல். நியாயத்தைக் கோரும் அரசியல். ஆனுல் பிறருடைய அரசியல் இன்று எப்படி இருக்கிறது? சத்தியம், ஆண்டவன் ஆகிய எதுவுமே நுழையாத அரசியலாக அவர்களுடைய அரசியல் இருக்கிறது.

## யார் வகுப்புவாதி?

ஜனநாயக ஆட்சிமுறை என்முல் பெரும்பான்மையினரின் ஆட்சி என்று அர்த்தம். எனவே ஜனநாயக ஆட்சியில் சிறுபான்மையினருக்குக் குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. முஸ்லிம்கள் ஒரு சிறுபான்மை சமு

## தலைவரின் வருகையும் மீன்படுதலும்

இராமநாதபுரம் பாராளுமன்றத் தொகுதியில் மதுரை எஸ். எம். ஷரீப் முஸ்லிம் லீக் சார்பாகபோட்டியிட்டபொழுது, திடீரென ஒரு நாள் வாலி நோக்கத்திற்கு காயிதே மில்லத் வந்து விட்டார்கள். பகல் பொழுதாக இருந்ததால் ஆண்களில் பெரும்பாலோர் கடலில் மீன் பிடிக்கச் சென்று விட்டிருந்தார்கள். நேராக பள்ளிவாசலில் வந்து இறங்கிய தலைவரவர்களை முதியவர்களும் சிறுவர்களும் வரவேற்றனர். பெண்களும் பெருமளவில் அங்கு கூடிவிட்டனர். அப்பொழுது அங்குள்ள மக்களைப் பார்த்து காயிதே மில்லத் அவர்கள் ''நீங்கள் எல்லாம் உடல் உழைப்புச் செய்து கடலில் மீன் பிடித்து சம்பாத்தியம் செய்கிறீர்கள். இது ஒரு ஹலாலான சம்பாத்தியம், அதே சமயம் நீங்கள் மார்க்க விஷயங்களையும் பேணி நடப்பீர்களானுல் சிறந்த மகான்களாகி விடுவீர்கள். இப்படிப்பட்டவர்களுடைய இபாதத்திற்கு விசேஷ பலன்கள் உடனடியாகக் கிட்டும்'' என கூறினுர்கள்.

காயிதே மில்லத் அவர்கள் வந்திருக்கும் செய்தி கடலில் மீன் பிடித்துக் கொண்டிருந்தவர்களுக்கு எட்டியதும் அவர்கள் உடனடியாகக் கரைக்கு திரும்பி விட்டார்கள். தலைவரவர்களை நேரில் கண்டு அவர்களிடம் கைகொடுத்து மனம் பூரித்துப் போனுர்கள். சாதாரணமாக கிடைக்கும் மீனின் அளவை விட நாலைந்து மடங்கு அதிகமாக மீன்கள் அன்றையத்தினம் வலையில் பட்டு விட்டது. அவ்வூர் மக்களுக்கு ஒரே மகிழ்ச்சி கொண்டாட்டம். காயிதே மில்லத் ஒரு அவுலியாதான் என வாலி நோக்கத்துக்காரர்கள் கூற வாரம்பித்து விட்டனர். அப்படியெல்லாம் சொல்லக் கூடாது; ''ரிஸ்கை'' தருபவன் அல்லாஹ் என்ற நம்பிக்கையில் மிகவும் உறுதியாக இருக்கவேண்டும்'' என தலைவர் அறவுரை பகர்ந்தார்கள். வாலி நோக்கத்துக்காரர்கள் எப்பொழுதுமே சமுதாயப்பற்று மிக்கவர்கள்.

சே. மு. முஹம்மது மீரா சாகிப்
வாலி நோக்கம்

கத்தவராக இருக்கின்றனர். அவர்களுடைய குறைகளை நிவர்த்திப்பதாகத்தான் லீக்கின் கோரிக்கைகள் இருக்கின்றன. இதற்காகத்தான் நமக்கு வகுப்புவாதிப் பட்டம் கிடைக்கிறது.

யார் வகுப்பு வாதி? வகுப்பு வாதி என்ற பதத்திற்குரிய அர்த்தம் என்ன? இப்பதத்தை வரையறுத்துக் கூறுவது சாத்யமில்லை என்று சர்தார் பட்டேலே கூறியிருக்கிறார். இன்று அரசியல் துறையில் இருப்பவர்கள் யார் தான் வகுப்புவாதியில்லை? வகுப்பு வாதத்தை விளக்குவது கஷ்டம் என்று சொல்லிக் கொண்டே எங்களுக்கு மட்டும் வகுப்புவாதி என்று பட்டம் சூட்டி ஒதுக்கி விட்டு, விஷயத்தை தட்டிவிட முடியாது.

1953ம் ஆண்டு ஆந்திரப் பிரதேசத்தில் முதலாவது பொதுத் தேர்தல் நடந்த சமயத்தில் பண்டித நேரு வகுப்பு வாதத்திற்கு ஒரு பொருள் சொன்னார். வகுப்பு வாதத்திற்கு ஆட்சியாளர்கள் விளக்கம் சொல்ல வந்தது, இந்த ஒரு தடவையில் தான். அதற்கு முன்னரும் அவர்கள் அப்படிச் செய்ததில்லை; அதற்குப் பின்னரும் இதுவரை அவர்கள் வேறு விளக்கம் கொடுக்கவில்லை. பண்டித நேரு சொன்ன விளக்கம் என்ன தெரியுமா? ''ஒரு மதத்தைச் சார்ந்தவர்கள் மற்றொரு மதத்தைச் சார்ந்தவர்களை அடக்கி ஆளப் பிரயத்தனப் படுவதை வகுப்புவாதம் என்று கூறலாம்''

இந்த வியாக்கியானத்தின்படி பார்த்தாலும் இது லீகுக்குப் பொருந்துமா? பிற சமுதாயத்தவரை நாம் அடக்கிஆள விரும்புகிறோமா? யார் அடக்கி ஆளப்படுகிறார்கள் என்பதை நான் சொல்லத் தேவையில்லை; அதை உலகம் கண்டு கொள்ள முடியும்!

இந்த நாட்டில் முஸ்லிம்கள் சிறுபான்மையோராக இருக்கையில், பிற சமுகத்தவர்மீது ஆதிக்கம் செலுத்த நினைப்பார்களா? இப்படி நினைக்கிறார்கள் என்பது எவ்வளவு பைத்தியக்காரத்தனமான சங்கதி? அவ்வளவு தூரத்திற்கு நாங்கள் என்ன மதியீனர்களா? கடந்த 10 வருட காலத்தில் லீக்கின் நடவடிக்கைகளை அவர்கள் ஆராய்ந்து பார்க்கட்டும் அதன் சட்ட சபைநடவடிக்கைகளை உன்னிப்பாக பார்க்கட்டும் ''லீக் அங்கத்தினர்களின் பேச்சுக்களில் 80 சதவிகிதம் நாட்டிற்குப் பொதுவான விஷயங்களைப் பற்றித்தான் இருக்கின்றன. சமுதாயத்திற்குரிய குறைகளைச் சொல்ல வேண்டிய கட்டங்களில் அதை அவர்கள் எடுத்துச் சொல்ல கொஞ்சமும் தயங்கியதில்லை. அது அவர்களுடைய நடவடிக்கைகளில் சொற்பபாகமாகத்தான் இருந்து வந்திருக்கிறது. அதிகமான பாகம் நாட்டின் பொது நலனைப் பற்றியதாகவே இருக்கின்றது.

நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் எப்படிச் செய்கிறோம் தெரியுமா? நாம் செய்யும் இந்தக்காரியம் நியாயமானதா, என்று மனசாட்சியிடம் கேட்டுவிட்டு, அதற்கு மனப் பூர்வமான சம்மதம் கிடைத்த பின்னரே நாம் அதைத் துவங்குகிறோம். நியாயம் என்று நமக்குத் தெரிந்தபின் அதை நாம் விடாப் பிடியாகப் பிடித்துக்

## "இதுவரை என்னுடன் விளையாடினார்; இப்பொழுது அல்லாஹ்வுடன் விளையாடுகிறார்!"

1962 தேர்தலில் முஸ்லீம் லீக் சார்பில் M.S. அப்துர் ரகீம் போட்டியிட்டார். இராமநாதபுரம் தொகுதியில் பனைக்குளம் என்ற ஊரில் தான் முஸ்லிம்கள் மத்தியில் முஸ்லிம் லீகிற்கு சற்று எதிர்ப்பு இருந்து வந்தது. அவ்வூரில் பெரிய செல்வந்தராக இருந்த பகருதீன் என்பவர் முஸ்லிம் லீக்கிற்கு முற்றிலும் விரோதமாக இருந்தார்; அவ்வூர் மக்களையும் அவர் வழியிலேயே இட்டுச் சென்றார். காங்கிரஸ் வேட்பாளரான ராமநாதபுரம் ஜமீன்தாருக்கே ஒட்டுப் போட வேண்டும், என மக்களை வற்புறுத்தினார். தேர்தல் பிரச்சாரத்திற்காக காயிதே மில்லத் தலைமையில் நாங்கள் பனைக்குளம் சென்றோம். எங்களை கூட்டம் நடத்த அவர் விடவில்லை பள்ளிவாசலில் வரவேற்பளிப்பதை அவர் தடுத்து விட்டார். தலைவரவர்கள் பக்கத்தில் சென்று பேசக் கூட பலரும் பயப்பட்டார்கள். மக்களை ஊர் கட்டுப்பாடு செய்து வைத்திருந்தார்.

காயிதே மில்லத் அவர்கள் இதையெல்லாம் பொருட்படுத்தவில்லை சட்டை செய்யவில்லை. பள்ளி வாசலுக்குப் பக்கத்திலுள்ள ஒரு மண் சுவர் மீது ஏறி நின்று கொண்டு அவர்கள் பேசினார்கள். தலைவரவர்களுடன் 45 கார்களில் நாங்கள் சென்றிருந்தோம் அப்படியிருந்தும் அந்த ஆசாமியின் அட்டகாசம் அப்படியிருந்தது, தூரத்தில் நின்றவாறே அவ்வூர் மக்கள் தலைவரது பேச்சைக் கேட்டார்கள்.

அப்பொழுது நோன்பு காலம். தலைவரவர்களும் நாங்களும் நோன்பு பிடித்துக் கொண்டுதான் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்தோம். அப்பொழுது ஒருவர் தலைவரவர்கள் அருகில் சென்று ''தேனீர் விருந்து அருந்த தங்களை பகருதீன் அழைத்து வரச் சொன்னார்'' என்று கூறினார். நையாண்டி செய்யும் நோக்கத்தில் தான் அப்பணக்காரர் இப்படிச் சொல்லி விட்டிருந்தார். தலைவரவர்கள் அதையும் சகித்துக் கொண்டார்கள். அப்பொழுது அவர்கள் ''இதுவரை அவர் என்னுடன் விளையாடினார்; இப்பொழுது அவர் அல்லாஹ்வுடன் விளையாட ஆரம்பித்திருக்கிறார்'' என்று மட்டும் சொன்னார்கள்.

1962ம் ஆண்டு காயிதே மில்லத்திற்கு வரவேற்புக் கொடுக்க அஞ்சிய பனைக்குளம். 1967ம் ஆண்டில் அதே தலைவருக்கு மகத்தான வரவேற்பு நல்கியது. சிறப்பான முறையில் முஸ்லிம் லீக் கூட்டம் அவ்வூரின் மத்தியில் நடத்தப்பட்டது. ஊர் மக்கள் அனைவரும் அதில் பங்கு கொண்டார்கள், அன்றிலிருந்து அவ்வூர் முஸ்லிம் லீக் கோட்டையாக இருந்து வருகிறது.

*S.* ஹைத்ரூஸ் சாகிப்
கீழக்கரை

கொள்கிறோம். இதில் என்ன தவறு? நான் உங்களுக்கு ஒன்றைச் சொல்கிறேன்! இது வெற்றிக்கு அஸ்திவாரம் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

### நாமும் இந்த நாடும்

மற்ற மக்களுக்கிருப்பதைப் போன்றே, எங்களுக்கும் இந்தநாட்டில் சம உரிமை உண்டு. நாங்கள் இந் நாட்டுப் பிரஜைகள். நாட்டின் நலனில் எங்களுக்கும் பங்குண்டு. நம் சரித்திரம் இதற்குச் சான்று. உண்மையான முஸ்லிம் என்ருல் உண்மையான தேசத் தொண்டன் என்று பொருள். உண்மையான முஸ்லிமின் வாக்கை நம்பலாம். நாட்டுப்பற்று, அவன் ஈமானில் ஒரு பாகம். இந்த நாட்டிலே அந்நிய படை எடுப்புக்கள் நிகழ்ந்த போதெல்லாம், முஸ்லிம்கள் எப்படி நடந்திருக்கிருர்கள் என்பதைச் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால், நன்கு விளங்கும்.

### முஸ்லிம்களின் ஒரே குரல்

முஸ்லிம்களுக்குரிய குறைகளை லீக் எடுத்துச் சொல்லாவிட்டால் பிறகு யார் தான் சொல்வார்கள்? பிறகட்சிகள் எடுத்துச் சொல்கின்றனவா? பிறகட்சிகளில் முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக இருக்க முடியுமா? முஸ்லிம்களின் செல்வாக்கைப் பிற கட்சிகளில் புகுத்த முடியுமா? இப்படி இருக்கும் போது பிற கட்சிகளின் குரல் முஸ்லிம்களின் குரலாகுமா? முஸ்லிம்களுக்கென்று ஒருகுரல் கேட்க வேண்டாமா? அது முஸ்லிம் லீக்கைத் தவிர வேறு எதுவாக இருக்க முடியும்?

முஸ்லிம்களுக்குள்ள எத்தனையோ குறைகளில் ஒன்றைமட்டும் எடுத்துக் கொள்வோம். முஸ்லிம்களுக்குச் சர்க்கார் உத்தியோகங்கள் சரிவரக் கிடைப்பதில்லை. இதைக் கேட்டால், சர்க்கார் மழுப்புகிருர்கள். பல பரீட்சை செய்தே ஆட்களைத் தேர்ந்தெடுக்கிருர்கள் என்றும் தகுதிக்கே முதலிடம் கொடுக்கப்படுகிறதென்றும் சர்க்கார் தரப்பில் கூறப்படுகிறது. நான் ஒன்று கேட்கிறேன். இத்தகைய பரீட்சைகள் இன்று மட்டும் புதிதாக வந்தவையல்ல. பத்து வருடங்களுக்கு முன்னுல்தான் ஆரம்பமானது என்பதுமல்ல. எத்தனையோ ஆண்டுகளாக இருந்து வருகின்றன. இத்தகைய பரீட்சைகள் எழுதி முஸ்லிம்களில் பலர் முன்னணியில் பாஸ் செய்து உத்தியோகத்திற்கு வந்திருக்கிருர்கள். ஆனுல் கடந்த சில வருடங்களாக முஸ்லிம்கள் இத்தகைய பரீட்சையில் தேறவில்லை என்று சொன்னுல், முஸ்லிம்கள் திடுமென முட்டாள்களாகப் போய் விட்டார்களா? பத்து வருடங்களுக்கு முன்பு புத்திசாலிகளாக இருந்தவர்கள் இப்பொழுது முட்டாள்களாகப் போய்விட்டார்கள் என்ற கூற்றை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? நாள் ஆக ஆக அறிவு அபிவிருத்தி அடைந்துவரும் இக்காலத்தில், இக்கூற்று ஒப்புக் கொள்ளக்கூடியது தானு? அப்படியானுல் முஸ்லிம்கள் பரீட்சைகளில் தேருததன் உள் அர்த்தம்தான் என்ன? இதிலுள்ள மர்மத்தை நான் சொல்லித்தான் நீங்களோ



## இங்கிதம் தெரிந்து நடந்து கொள்ள வேண்டும்

காயிதே மில்லத் அவர்களுடன் என் சிறுவயது முதல் எனக்குப் பழக்கம் உண்டு. அவர்களது குடும்ப நண்பன் நான். நாகூருக்கு விஜயம் செய்யும் பொழுதெல்லாம் முதன் முதலாக அவர்களது ஆன்மீக குருவான அப்துல்லாஹ் மௌலானா அவர்களை சந்தித்து விட்டு அடுத்து என் வீட்டிற்குத்தான் வருவார்கள். அங்கு தான் தங்குவார்கள். அவர்களைப் பார்த்து நாம் கற்றுக் கொள்ள வேண்டிய நல்ல பழக்க வழக்கங்கள் ஏராளம் உள்ளன. அப்படிச் செய், இப்படிச் செய் என்று யாருக்கும் உபதேசிக்க மாட்டார்கள். தாம் கடைப் பிடிக்கும் நடவடிக்கைகளைப் பார்த்து மற்றவர்கள் தங்களுக்குப் பிரியமானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும் என்ற கொள்கை யுடையவர்கள் அவர்கள். சொல்லாமல் செய்து காட்டுவதுதான் அவர்களது நடைமுறை; மரபு

சாப்பாட்டு விஷயத்தில் அவர்கள் கடைப்பிடிக்கும் முறை அலாதியானது. அவர்கள் மீது கொண்டிருந்த மதிப்பின் காரணமாகவும், பற்றின் காரணமாகவும் தங்களது வீட்டில் தயாரித்திருக்கும் தின்பண்டங்களையெல்லாம் தலைவரவர்கள் சாப்பிட வேண்டும் என்று விருந்தளிப்பவர்கள் பலரும் ஆசைப் படுவதுண்டு. அவர்களது சாப்பாட்டுத் தட்டில் எல்லாவகை உணவுப் பதார்த்தங்களையும் பலரும் எடுத்து வைப்பதுண்டு.

அப்பொழுது காயிதே மில்லத் அவர்கள் கூறுவார்கள் ''நீங்கள் பிரியப் பட்டதையெல்லாம் எனது தட்டில் தாராளமாக எடுத்து வைக்கலாம். அது உங்கள் இஷ்டம். அதை தடுக்க நான் விரும்பவில்லை. ஆனால் எதையெதை சாப்பிடுவது, எவ்வளவு சாப்பிடுவது என்பது எனது இஷ்டம். அதில் நீங்கள் தலையிடக் கூடாது. எனக்கு உடம்பிற்கு ஏற்ற அளவுக்கு நான் சாப்பிட்டுக் கொள்வேன்'' என்று கூறி விடுவார்கள். அது மட்டுமல்ல தங்களது தட்டில் வைக்கப் பட்டிருக்கும் இதர பண்டங்களை வீணாகாத படி சர்வ ஜாக்கிரதையாக தங்களுக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொள்வார்கள். பல ஊர்களில் பலரது இல்லங்களிலும் விருந்துபசாரங்களின் போது தலைவரவர்கள் இவ்வாறு செய்ய நான் பார்த்திருக்கிறேன்.

**—நாகூர் ஹாஜி *J.S.* செய்யது முஹையத்தீன் சாகிபு**



அல்லது பிறரோ தெரிந்து கொள்ளவேண்டு மென்பதல்ல. இதற்குத் தகுதிக் குறைவுதான் காரண மென்றால், ஒரு பெரிய சமூகம் இங்ஙனம் திடீரென தகுதியில் வீழ்ச்சி பெற்றதற்கு என்ன காரணமென்று, நியாயமான ஜனநாயக சர்க்கார் கண்டு பிடித்து அதற்குப் பரிகாரம் செய்ய வேண்டாமா? ஆனால் அப்படிச் செய்திருக்கிறார்களா?

## முஸ்லிம் லீக்கின் அரிய தொண்டு

ஆனால் ஒன்றை மட்டும் தெளிவாக்கி விடுகிறேன். மைனாரிட்டியை மெஜாரிட்டியாக்க முஸ்லிம் லீக் இல்லை. அப்படி நினைப்பதே சுத்த பைத்தியக்காரத்தனம். தங்க ளுக்கென ஒரு சபையில்லாமல் மைனாரிட்டிகள் வேறு எப்படித்தான் இயங்குவது? இதுவும் நாட்டின் நல னுக்கு மிகவும் தேவையானதே. இந்நாட்டின் பொது வான பல திட்டங்களுக்கும் முஸ்லிம் லீக் ஆதரவு தந்தி ருக்கிறது. அதற்கு உங்கள்கவர்னர்களுடையவும், மந்திரி களுடையவும் வாக்கு மூலங்களே சான்றுகளாக இருக் கின்றன. குறிப்பாக நாட்டு நல திட்டங்களில் சில வற்றிற்கு அடிப்படையிட்டதே முஸ்லிம் லீக் தான். தென் ஆற்காட்டில், நெய்வேலியில் உள்ள பழுப்பு நிலக்கரி பற்றி இன்று அதிகமாகப் பேசப்படுகிறது. இக் கனிம செல்வத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று, விடாப்பிடியாக வற்புறுத்தியது யார்? சட்டசபை நட வடிக்கை புத்தகங்களை நீங்கள் புரட்டிப் பார்த்தால், கிடைத்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் லீக் இதை வற் புறுத்தி வந்திருப்பது தெரிய வரும். இவ்வாறே மது விலக்கு போன்ற காரியங்களிலும். சர்க்கார் அடிக்கடி மாறுவது நாட்டு நலனுக்கு உகந்ததல்ல என்றகாரணத் திற்காக ராஜாஜி மந்திரிசபையை நாம் ஆதரிக்க வில்லையா? ஒரே ஓட்டு பலத்தில் ராஜாஜி மந்திரி சபை அமைத்தபோது முஸ்லிம் லீக் ஓட்டுகள் அவர் பக்கத் தில் இருந்தன என்பது தெரியாதா?

மார்க்கக் கல்வி இல்லாத கல்வி ஒரு கல்வி ஆகாது. அடுத்த தலை முறையினர் முஸ்லிம்களாகவாழக் கூடாது என்பதற்காக இவர்கள் மதக்கல்வி வேண்டாம் என் கின்றனர். இக் கொடுமையை எதிர்த்து, அன்று நாம் தான் தன்னந் தனியாக வாதாடினோம். இன்று அவர் களிலேயே பலர் மதக் கல்வியை வற்புறுத்த முன் வந் திருக்கின்றனர்,

## ஷரீயத்தில் கை வைக்காதீர்

மதச் சார்பற்ற சர்க்கார் என்று பிரகடனப் படுத் தியவர்கள் மத சுதந்திரத்தில் குறுக்கிடுகிறார்கள். நமது ஷரீயத் சட்டத்தில் கைவைத்திருக்கிறார்கள், நமது ஷரீயத் சட்டம் ஆண்டவனால் அருளப் பட்டது. ஆண்ட வனின் வாயிலாக திருமறையின் மூலமாகப் பெற்றது, இந்த ''அசல்'' மூலம் கிடைத்த ஷரீயத் சட்டத்தை மாற்ற முற்படுகின்றனர். முஸ்லிம்களாகிய நாம் ஒன்று போல் இஷ்டப்பட்டால் கூட, குர்ஆனின் சட்டங்களைத் திருத்த முடியாது. திருத்துவதற்கு இணங்கவும் முடி யாது. அப்படியிருக்க அரசாங்கத்தார் இதை மாற்ற முற்படுவது பெருத்த அநீதியல்லவா? அந்த அநீதியை ஒப்புக்கொண்டு முஸ்லிம்கள் வாளாயிருக்கமுடியுமா? அது விஷயமாக முஸ்லிம் லீக் பாடுபட்டே தீரும். லீக்கைத்தவிர வேறு எந்த ஸ்தாபனம் அல்லது தனி நபர் இம் முயற்சியை எதிர்த்தார்கள் ?

## சட்டரீதியான ஸ்தாபனம் முஸ்லிம் லீக்

''அரசியல் அமைப்பு படியும் சட்டப்படியும் இந்த ஸ்தாபனம் சரியாக இருப்பினும் இதை ஒழித்துக் கட்டவே நான் முயலுவேன்'' என்று சொல்கிறார் பண்டித நெஹ்ரு. சட்டத்தின் காவலர் இப்படிச் சொல்லியிருக்கிறார். சட்டத்தை எவ்வளவு தூரம் காப்பாற்றுகிறார் என்பது இதன் மூலம் தெரிய

---

# படிகளில் காலணி கழன்று விட்ட பொழுது...

சென்னை மரைக்காயர் லெப்பை தெரு முஸ்லிம் லீக் ஆபீஸில் நான் ஒரு நாள் இருந்து கொண்டிருந் தேன். அப்பொழுது காயிதே மில்லத் வந்து கொண் டிருக்கிறார்கள் என ஒருவர் கூறியதும் நாங்கள் எல் லாம் கீழே இறங்கி தெருவுக்கு ஓடி வந்தோம். ரிக்ஷா வில் இருந்து மெதுவாக தலைவரவர்கள் இறங்கினார் கள். அவர்கள் கையில் ஒரு சிறிய பெட்டி இருந்தது. அதை ஆபீஸ் ஊழியர் மீராசா கையில் எடுத்துக் கொண்டு வேகமாக மாடிப்படிகளில் ஏறினார். அவருக்குப் பின்னால் காயிதே மில்லத் அவர்கள் மெது வாகப் படிகளில் ஏறிக் கொண்டிருந்தார்கள். தலைவர் அவர்களுக்குப் பின்பாக நாங்கள் தொடர்ந்து கொண் டிருந்தோம்.

வேகமாகப் படியேறிய ஊழியரின் செருப்பு ஒன்று கழன்று கீழே நழுவி விட்டது. மூன்று படிகளுக்கு மேலே நின்ற அவர் அதை எடுக்கத் திரும்பினார். நழுவி வந்த செருப்பு தலைவரவர்களின் பக்கத்தில் விழுந்ததும் அதை அவர்களே கையில் எடுத்துக் கொண் டார்கள். ஆபீஸ் ஊழியர் பதைபதைத்துப் போனார். அவருக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. தனது செருப்பை எடுக்க ஓரிரு படிகள் இறங்க அவர் முயற்சித்தார். அப்பொழுது காயிதே மில்லத் ''என் பெட்டியை நீ தூக்கிச் செல்கிறாய். உனது பொருளை நான் எடுத்து வருகிறேன். அவ்வளவுதான்'' என்று கூறி இரண்டுபடிகள் ஏறி அச்செருப்பைக் கீழே போட் டார்கள். அவர் அதை மாட்டிக் கொண்டு மீண்டும் ஏறலானார். இதை நான் என் கண்களால் பார்த் தேன். எந்தவிதப் பெருமையும் படாடோபமும் இல் லாமல் அவர்கள் வாழ்ந்தார்கள் என்பதற்கு இதைவிட வேறு என்ன சாட்சி வேண்டியதிருக்கிறது?

*M. K.* **செய்யது அபூ தாஹிர்**
காயல் பட்டணம்

வில்லையா? சட்டப்படி—அவ்விதம் செய்ய முடியா தென்று அவர் உணருவதே நம் பக்கத்திலுள்ள நியா யத்தை வெளிக்காட்டி விட்டது, ஒரு தனி நபருக்காக நம் அபிப்பிராய சுதந்திரத்தை நாம் விட்டுக் கொடுத்து விடமுடியுமா? சங்கம் சேரும் உரிமையும் கருத்துச் சுதந் திரமும் மற்றவர்களுக்குப் போலவே நமக்கும் ஜீவாதார உரிமைகள். அந்த உரிமைகளின் உருவமே முஸ்லிம் லீக் ஆகும். சமுகத்தின் உயிர்போன்ற இவ்வித உரிமை களை ஒருவரின் தப்பபிப்பிராயத்திற்காக பலியிட்டு விட யாருக்கும் உரிமையுண்டா?

முஸ்லிம் லீக்கைக் கலைப்பதாக, ஒரு பேச்சுக்காக வைத்துக் கொள்வோம். அதனுல் வரும் பலாபலன் களைச் சிந்தித்தீர்களா? இன்று லீக்கைக் கலைக்கச்சொல் வார்கள், நாளை முஸ்லிம் இலக்கியத்தைக் கைவிடு என் பார்கள். முஸ்லிம் கலாச்சாரம் வேண்டாம், ஒரே கலாச் சாரம் போதும் என்பார்கள். சொத்துப் பிரிவினை, விவா கம் மற்றும் இவை போன்ற காரியங்களில் அவர்கள் விருப்பப்படி நடக்கச் சொல்வார்கள். இதற்கெல்லாம் நீங்கள் தயார்தானு? இன்று ஒன்றில் ஆரம்பிப்பார்கள், ஆனுல் அது ஒன்றுடன் நிற்காது. அவர்கள் தயாள மாக, தர்மமாகக் கொடுக்க நினைப்பதை மட்டும் நீங்கள் பெற்று வாழவேண்டும். வேறொன்றையும் கேட்கக் கூடாது என்பது அவர்களுடைய கூற்றின் தாத்பரியம், இது உங்களுக்குச் சம்மதமா? முஸ்லிம்கள் கஷ்டத்தை அறிந்தவர்கள், அதையெல்லாம் பட்டுத் தெளிந்தவர் கள் கஷ்டத்தையே உரமாகவைத்து வளர்க்கப்பட்டது இந்தசமுதாயம். மிரட்டல்களுக்கு இது தலைசாய்க்காது, நீதி, நியாயம், சமத்துவ சகோதரத்துவம் என்ற உயர் கொள்கைகளை வைத்து நிர்மாணிக்கப் பெற்ற நமது பிர காசமான பாரம்பரியத்தை இந்தத் தலைமுறையினரா கிய நாம், கஷ்டத்திற்காக மாற்றிக்கொள்ளப் போவ தில்லை.

## நமது பாரம்பரியம்

காரசாரமாக எனக்குப் பேசவராது *Fantastic Nonsensc* அடிமுட்டாள்தனம் என்ற தோரணையில் பழித்துச் சொல்ல எனக்குத் தெரியாது. ஆனுல் அதே சமயத்தில் *Fantastic Nonsense* அடிமுட்டாள் தனத்துக் குத் தலைசாய்க்கவும் நம்மால் முடியாது. எந்தவித பய முறுத்தலுக்கும் நாம் பணியமாட்டோம். முஸ்லிம் லீக் குக்கு ஒரு சரித்திர பாரம்பரியம் உண்டு. அது பழைய சரித்திரம், நேர்மையின் அடிப்படையில் வரையப்பட்ட சரித்திரம். அந்த சரித்திர பாரம்பரியத்தின் வழியில் அது என்றும் நடக்கும். நியாயத்தையே நாம் கேட் கிறோம். ஆகவே அதை அடைந்தே திருவோம். நாணயமாக மானமாக வாழ முடிந்தால் நாம் வாழ்வோம் இன்றேல் வாழவேண்டியதில்லை. நபிகள் நாயகம் அவர் களுடைய புனிதவாழ்க்கையில் இதற்கு நமக்கு முன் மாதிரி இருக்கிறது.

உங்களுக்கு பத்து சட்டசபை ஸ்தானங்கள், மந்திரி ஸ்தானம் தருகிறோம் என்ற பேரம் பேச முன் வருகிறர் கள், இந்த பத்து ஸ்தானங்களுக்காக, நமது சமூகத்

## ''கூரை மீது ஏறி கொள்ளி வைத்துக் கொண்டிருக்கிறனே...',

1961-ம் ஆண்டு செங்கம் தாலுகா அரசியல் மாநாட்டில் பேசும் பொழுது காயிதே மில்லத் அவர்கள் அழகாகவும் உவமை நயத்துடனும் ஒரு கருத்தைச் சுட்டி காட்டினார்கள்.

அச்சமயம், நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் கட்சியை முஸ்லிம் லீக் ஆதரித்தது. நாளெல்லாம் அக் கட்சியை எதிர்த்து விட்டு இச்சந்தர்ப்பத்தில் அதைப் போய் எப்படி ஆதரிக்கலாம் என ஓர் ஐயப்பாடு முஸ்லிம் லீகர்களிடமே இருந்தது. இதை மனதில் வைத்துக் கொண்டு தான் காயிதே மில்லத் அவர்கள் இவ்வாறு சொன்னார்கள்.

''ஒருவருக்கு நான்கு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் மிகவும் சேட்டைக் காரர்களாகப் போய் விட்டார்கள். ஒருவன் கூட உருப்படியாகப் படிக்கவில்லை. அக்கம் பக்கத்திலுள்ளவர்களை வம்புக்கு இழுப்பது, தெருச் சண்டைகளில் பங்கெடுத்துக் கொள்வது, வயோதிகர்களைக் கேலி பண்ணுவது என ஏதாவது ஒரு விவகாரம் இவர்களைப் பற்றி தினமும் இல்லாமல் இருக்காது. பிள்ளைகளின் ஆவலாதி கேட்டு முடியவில்லை. தந்தைக்கு இது மிகப் பெரிய வருத்தமாக இருந்தது. பையன்களெல்லாம் படுசுட்டிகளாகவும், உதவாக்கரைகளாகவும் தலை யெடுத்து விட்டார்களே என்று நண்பர் ஒருவரிடம் தமது மனக் குறையைக் கொட்டிக் கொண்டிருந்தார், பெற்றெடுத்தவர்.

அப்பொழுது அந்த நண்பர், அப்படியானால் உங்கள் பிள்ளைகளில் ஒருவன் கூட உருப்படியான வனாக இல்லையா? என்று கேட்டார். அதற்கு அந்தத் தந்தை அதோ கூரை மேலே ஏறி கொள்ளி வைத்துக் கொண்டிருக்கிறானே அவன் தான் இருக்கிற வர்களுக்குள் பரவாயில்லை; நல்ல பையன் என்று சுட்டிக் காட்டினார்.

அது மாதிரிதான் இன்று நாட்டில் அரசியல் கட்சிகள் இருக்கின்றன. எந்த அளவுக்கு ஒவ்வொரு அரசியல் கட்சியும் பரவாயில்லை என்றுதான் அளவு கோல் வைத்து அளக்க வேண்டியதிருக்கிறதே தவிர நல்லவர்களுடன் மட்டும்தான் சகவாசம் வைத்துக் கொள்ள வேண்டுமென்றால் அது நடக்காத காரியம்; வீண் வேலை; தேடி அலைந்ததுதான் மிச்சம். அந்த ரீதியில்தான் இன்று நாம் அரசியல் கூட்டுக்களை வைத்துக் கொள்ள வேண்டியவர்களாக உள்ளோம்.''

—சர்தார் அஹமதுல்லா
செங்கம்

தின் கண்ணியமான இருக்கையின் சின்னமாகிய ஸ்தாபனத்தை விலையாகக் கொடுக்க எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? இறைவனின் சத்திய நெறியை நாயகம் (ஸல்) அவர்கள் போதித்தபோது அதைக் கைவிடும்படி பலரும் சொன்னார்கள்: நாயகத்தின் மதிப்புக்குரிய பெரிய தகப்பனார் அபூதாலிப் அவர்கள்கூட, குறைஷிகளின் வற்புறுத்தலை அவர்களிடம் சொன்னார்கள். மண், பெண் பொன், ஆகியவற்றை நாயகத்தின் காலடியில் குவிக்கிறோம் என்றனர் குறைஷிகள். நாயகம் என்ன செய்தார்கள்? சத்தியத்தை எடுத்தோதுவதைக் கைவிட்டார்களா? ஒரு கையில் சூரியனையும் மற்றொரு கையில் சந்திரனையும் கொடுத்தாலும் என்னிடம் ஒப்படைக்கப்பட்ட வேலையை விடமாட்டேன் என்று கூறவில்லையா? இத்தகைய முன்மாதிரிகளிலிருந்து நாம் பெறும் பாடம் என்ன?

நாம் கேட்பது யாருக்கும் தீங்கு செய்யாது. இது ஆக்கிரமிப்புக் கொள்கையல்ல, ஒரு சமுதாயத்தின் ஜீவ மரணக் கோரிக்கை. ஒரு சமுதாயம் தேசத்தில் சுகமாக வாழவில்லையானால் நிச்சயமாக ஜன நாயகம் தோற்றுவிடும். ஜனநாயகத்தைக் காப்பாற்றுவது முஸ்லிம்களின் கடமையாக இருக்கிறது. அந்தப் பணியைத்தான் இன்று முஸ்லிம் லீக் செய்து வருகிறது. இந்திய முஸ்லிம்களின் நடவடிக்கைகளை மூடி மறைக்க முடியாது. அவை உலகத்தில் எதிரொலித்தே தீரும். எங்கள் மன எண்ணங்களை வெளியிட விரும்புகிறோம் நாம் எதை நினைக்கிறோமோ அதைத்தான் சொல்கிறோம். எதைச் சொல்கிறோமோ அதைத்தான் நினைக்கிறோம். மனதில் ஒன்றை நினைத்துக்கொண்டு பிரிதொன்றைச் சொல்வது நம் வழக்கமல்ல. இக்கால மந்திரி மார்களே நாம் கேட்காமலே நமக்கு சர்டிபிகேட் அளித்திருக்கிறார்கள். அந்த சர்டிபிகேட் எங்களுக்குத் தேவையில்லை. உங்கள் மனக்குழப்பம் தெளிய அது பயன்பட்டால் போதும்.

### மானத்தை காத்த முஸ்லிம் லீக்

சில வருஷங்களுக்கு முன் நான் மலாயா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குப் போயிருந்தேன். அப்பொழுது இங்குள்ள சிலருக்கு ஒரு சந்தேகம் நான் ஒரு வேளை அவர்களுடைய குட்டையெல்லாம் உடைத்து அவமானத்திற்குள்ளாக்கி விடுவேனோ என்று சர்க்காரும் பயந்தது ஆனால் நடந்ததென்ன? இந்தியாவின் மதிப்பை இஸ்மாயில் ஸாஹிப் உயர்த்தி விட்டார்'' என்று ஆங்காங்கே உள்ள இந்தியத் தூதுவர்கள், இந்திய அரசாங்கத்திடம் கூறினார்களாம். அந்நாடுகளில் வாழும் இந்தியர்களுக்குள் தங்கள் தாய் நாட்டின் கண்ணியத்திற்கு இழுக்கு வராமல் நடந்து கொள்ள வேண்டும் என்று கூறி அவ்வாறே நடக்கச் செய்தது பற்றி இங்கு அதிகாரத்தில் உள்ளவர்களுக்குத் திருப்திதான். அவ்வாறே மற்றொரு விஷயத்தையும் அவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். ஒரு மந்திரியே இதை என்னிடம் சொன்னார். அதாவது அவர்கள் தொடர்ந்து கவனித்துங்கூட, நான் யாருக்காவது கொடுத்த சிபாரிசு கடிதங்கூட இந்திய எல்லையைத் தாண்டி பாக்கிஸ்தானுக்குச் சென்றதில்லை என்று பெருமையுடன் என்னிடம் சொல்லப்பட்டது. யாரையும் திருப்திபடுத்துவதற்காக நாம் எதையும் செய்யவில்லை. நம் கடமையைத் தான் நாம் செய்கிறோம். எதிரிகளுக்குகூட நம் நியாயம் தெரியும்.

முஸ்லிம் லீக்கோ அதனுடன் சம்பந்தப்பட்டவர்களோ தேச நலனுக்கு விரோதமான ஏதாவது ஒரு செயலிலாவது ஈடுபட்டார்கள் என்று யாராவது விரலை மடக்க முடியுமா? நாம் தேசத்தை நேசிப்பவர்கள். அதன் நன்மையில் அக்கறை கொண்டவர்கள். அதற்காகத்தான் இப்படியெல்லாம் பாடுபடுகிறோம்.

### அரசியல் மேடையில் அல்லாஹு அக்பரா?

அல்லாஹு அக்பர் என்ற சொல்லுக்கு கட்டுப்பட்டவர்கள் நாம். அப்படியென்றால் நியாயத்திற்கு கட்டுப்பட்டவர்கள் என்று அர்த்தம். ''அல்லாஹு அக்பர்'' அரசியல் மேடைக்கு ஏன் வருகிறது என அவர்கள் கேட்கிறார்கள். இது அவர்களுக்குப் புரியவில்லை. நம்முடைய நடத்தைக்கு போலிஸ் ரிகார்டுகளே போதுமான சாட்சியாக இருக்கின்றன, ''நம் இதயத்தை சட்டைப் பையில் வைத்திருப்பது'' என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி சொல்வார்கள். அது போல நம்முடைய நடவடிக்கைகளெல்லாம் நேர்மையின் அடிப்படையில் திறந்த முறையில் இருக்கும்போது நமக்கென்ன பயம்? *(Underground Work)* நம்மிடம் ஒன்றும் கிடையாது. அதுமட்டுமல்ல, அராஜகத்தை வளர்த்தவர்களைப் பிடித்து நாம் போலீஸில் ஒப்படைத்திருக்கிறோம். இதற்கும் சர்க்கார் ரிகார்டு இருக்கிறது.

### பொறுத்திருந்தோம், செயல்படுவோம்.

இவ்வளவு நாட்களாக லீக்கின் நிலைமையை விளக்குவதில் கழித்தோம். இனி தீவிரமாக செயல்பட ஆரம்பிக்க வேண்டும். லீகைத் திருத்தியமைக்கும் வேலை ஆரம்பிக்கப் போகிறது. புது அங்கத்தினர்களை ஏராளமாகச் சேர்த்து ஆக்க வேலைகளில் ஈடுபட ஏற்பாடாகியிருக்கிறது. அதற்கு பீடிகை இந்த மாநாடு. இக்கூட்டம் அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்தது. இதை அரசாங்கத்தார் உணருகிறார்களோ இல்லையோ அது வேறு விஷயம். பிறர் கவனிக்கவில்லை யென்பதனால் இதன் முக்கியத்துவம் குறைந்து விடாது.

சிப்பாய் கலகம் என்று வருணிக்கப்படும் ஆங்கிலேயர்களுக்கு எதிரான சுதந்திரப் போரில் அதிகமாகப் பங்கு பெற்று அதனால் அதிகமாக இன்னல் பட்டவர்கள் முஸ்லிம்கள், நாட்டிற்காக இந்தத் தியாகத்தை அவர்கள் செய்தார்கள். ஆங்கிலத்தைப் படிப்பதைக் கூட வெறுத்தார்கள். ஆக்கிரமிப்பாளர் மீது இருந்த வெறுப்பின் காரணமாக அம்மொழியை வெறுப்பது கூட தங்கள் மார்க்கக் கடமையென்ற

அளவுக்குக் கருதினர்கள். இதற்கெல்லாம் காரணம் தேசப் பற்றல்லவா? இப்படி தேசத்திற்காக எத்தனை எத்தனையோ தியாகங்கள். இதையெல்லாம் காங்கிர ஸோ அல்லது வேறு எந்த கட்சியுமோ கவனத்தில் வைத்து செயலாற்றுகிறதா? முஸ்லிம்கள் சம்பந்தப் பட்ட எந்த ஒரு விஷயத்திற்காகவாவது காங்கிரஸின் எந்த ஒரு கிளை ஸதாபனமாவது தீர்மானம் போட்டு மேலிடத்திற்கு அனுப்பியதுண்டா?

### கஷ்மீர் பற்றி நமது கொள்கை

கஷ்மீர் குறித்து முஸ்லிம் லீக்கின் கொள்கை மிக்க தெளிவானது. அது குறித்து முஸ்லிம் லீக் பல தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது. அண்மை யில் பார்லிமெண்டிலும் ரேடியோவிலும் முஸ்லிம்களின் ஆதரவை நான் எடுத்துக் கூறியிருக்கிறேன். கஷ்மீர் விஷயத்தில் நமக்கும் பிற சமுதாயத்தினருக்கும் வித்தியாசமில்லை. என்றாலும் அது விஷயத்தில் இங்குள்ள முஸ்லிம்களைத் தனியாகப் பிரித்து கஷ்மீர் முஸ்லிம் முன்னணி என்று ஒரு அணி ஏற்படுத்த முயற்சி நடக்கிறது. இதற்கு அரசாங்க ஆதரவு இருப்ப தாகவும் காண்கிறது. இப்படி முஸ்லிம்களைத் தனி யாகப் பிரித்து தனியாக நிற்கச் செய்வது வகுப்புவாத மில்லையாம். ஆனால் முஸ்லிம் சமுதாயத்தைக் குறித்த குறைகளை மற்றவர்கள் எடுத்துக் கூறக் கவலைப் படாததை முஸ்லிம்கள் எடுத்துக் கூற முற்பட்டால் அது வகுப்புவாதமாகி விடுகிறது.

### இந்தியும் ஆங்கிலமும்

ஹிந்தியை ஆட்சி மொழியாக ஆக்க இருக்கிறார் கள். ஆட்சி மொழியாவதற்குரிய யோக்கியதை இப்போது அதற்குண்டா என்பது கவனிக்கப்பட வில்லை. சுதந்திரம் பெற்றிருக்கும் இந்த ஆரம்ப காலத்தில் மக்கள் தங்கள் தாய்மொழிகளை வளர்க்க ஆத்திரப்பட்டு செயல்புரியப் புறப்படுகிற சமயத்தில் ஹிந்தியை-வளர்ச்சி பெறாத ஒரு மொழியை மக்களின் மீது திணிப்பது நல்லதல்ல. 150 வருடங்களாக இருந்து வரும் ஆங்கிலத்தை ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது. ஆங்கிலத்திற்கு எதிராக ஒரு கோஷம் கிளம்புகிறது, இது அடிமைத் தனத்தின் அடையாள மென்கிறார்கள். ஆனால் எடுத்ததற்கெல்லாம் இப்படிக் கூறுவது (*Inferiority Complex*) சிறுமை மனப்பான்மையாகும். நாம் சுதந்திர மக்களாக இருக்கும்போது நமது யுக்தா யுக்தப்படி ஒரு அந்நிய நாட்டிலுள்ள நல்லதை எடுத்துக் கொள்வது அடிமைத் தனத்தின் அடையாளமாகாது. அடையாளம் என்றால் எல்லாத் துறைகளிலும் இது கவனிக்கப்பட வேண்டும். பெனிஸிலின் அந்நியர் கண்டுபிடித்ததுதான். அதை நாம் எடுத்துக் கொள்ளவில்லையா? இது மட்டும் அடிமைப் புத்தியில்லையா? அப்படிப் பார்த்தால் இன்றுள்ள நவீன விஞ்ஞான சாதனங்களில் எதையும் பயன்படுத்த முடியாது. நமது சௌகரியத்திற்காகத் தான் மொழி. இதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆங்கிலம் உலகத்திற்குப் பொது வான மொழி. நம்முடைய நாட்டிலும் பல காலமாக ஆட்சி மொழியாக இருந்துவரும் மொழி, எனவேதான் ஆங்கிலமே இருக்கட்டும் என்கிறோம். மொழி விஷயத்தில் மக்களுடைய மனப் புண்ணைக் கிளறும் விதத்தில் காரியங்கள் செய்ய வேண்டாம் என்று கூறுகிறேன்.

### மக்கள் உணர்ச்சியும் கருப்புக் கொடியும்

தம்முடைய எதிர்ப்பைத் தெரிவிக்க யாருக்குமே உரிமையுண்டு. சட்ட பூர்வமான முறையில் எதிர்ப்பைத் தெரிவிப்பது குற்றமாகாது. அந்த வகையில் ஒன்று தான் கருப்புக் கொடி பிடிப்பது. இந்த உரிமை மறுக்கப் படக்கூடாது. ஆட்சி செலுத்துபவர்களிடம் ஒரு கட்சி யினரின் மனத்தாங்கலை வெளியிடுவதுகூட குற்ற மாகாது? அது கூடாதா? இதைத் தடுக்க முற்படுகிறார் கள். அதற்காக சட்டமும் இயற்றி விடுகிறார்கள். (*Preventive Detention Act*) தடுப்புக்காவல் சட் டத்தைப் புதுப்பித்துக் கொண்டார்கள். இச் சட் டத்தைக் குறுக்கு வழியாக உபயோகிக்கிறார்கள். டாக்டர் லோஹியா வழக்கு குறிப்பிடத்தக்க விஷயம். அவ்வழக்கை விசாரித்த நீதிபதி குறிப்பிட்டுள்ள விஷ யங்கள் அரசாங்கத்தாரின் கவனத்தைக் கவர வேண்டும். மக்கள் சட்ட ரீதியாக நடக்கும்போது ஏன் இந்தத் தடுப்புக் காவல் சட்டம்? இருக்கிற சட்டங்களைச் கொண்டே அமைதியையும் சௌஜன்யத்தையும் நிலவச் செய்யலாமே தவிர மக்களுடைய மனத்தைப் புண் படுத்தக் கூடாது. மக்கள் உணர்ச்சியை மதித்துத்தான் நடக்க வேண்டும். அதை அவமதிக்கும்படியான ஒரு நிலை ஏற்பட்டது மிகவும் வருந்தத்தக்கது.

---

## ஜனஸா ஊர்வலத்தில் நடந்தே வந்தார்கள்

கிருஷ்ணகிரி நகரசபைத் தேர்தலில் முஸ்லிக் லீக் வேட்பாளர்கள் போட்டியிட்டு வெற்றி பெற்றனர். திப்பையா என்ற ஹரிஜனத் தோழரும் முஸ்லிம் லீக் டிக்கெட்டில் நின்று வெற்றி பெற்றார். இத்தேர்தல் தகராறில் ஷபீர் என்ற நமது கட்சி வாலிபர் உயிரிழக்க நேரிட்டது. ஷபீர் மரணமடைந்த செய்தியைத் தந்தி மூலம் காயிதே மில்லத்திற்குத் தெரிவித்தோம். உடனே அவர்கள் கிருஷ்ணகிரிக்குப் புறப்பட்டு வந்து விட்டார் கள். ஜனாஸா ஊர்வலத்தில் தலைவர் அவர்கள் நடந்தே வந்தார்கள். இதைக் கண்டு எல்லா சமுதாய மக்களும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். அறிமுகமில் லாத, எளிய ஊழியன் என்று காயிதே மில்லத் வாளா விருந்து விடவில்லை. கட்சிக்காக அவன் செய்த தியாகத்தை மதித்து அதை சிறப்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் கிருஷ்ணகிரிக்கு வந்தது ஊழியர்கள் இதயங்களையெல்லாம் தொட்டு விட்டது.

—தர்மபுரி *A. M.* அப்துல் காதர்

---

## முஸ்லிம் லீக்கும் மார்க்க சேவையும்

அல்லாஹ்வின் நினைவுறுத்தலை வற்புறுத்தவும், தொழச் சொல்லவும் ஒரு கூட்டத்தார் முன்வந்திருக்கிறார்கள். அதில் தீவிரமாக முனைந்திருக்கிறார்கள். அது மிகவும் நல்லது, வரவேற்கக் கூடியது. 1949ஆம் வருடம் முஸ்லிம் லீக் விடுத்த சுற்றறிக்கையிலும் இதை வற்புறுத்தியிருக்கிறோம். அதாவது முஸ்லிம்கள் யாவரும் நல்ல முஸ்லிம்களாக இருக்க வேண்டுமென்று அதில் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. தொழவேண்டாமென்று கூறுவோர் யாரிருக்கிறார்கள். ஆனால் ஒரு விஷயம் கேள்விப்படுகிறேன். தொழச் சொல்வதில் முனைந்திருக்கும் கூட்டத்தார் ''அரசியல் வேண்டாம் அதை அல்லாஹ் கவனித்துக் கொள்வான்'' என்று பிரஸ்தாபிப்பதாகத் தெரிகிறது. அரசியலை விட வேண்டும் என்று சொல்வது உண்மையானால் எதை எதை விட வேண்டும் என்று சொல்ல வேண்டும்? எது அரசியல், எது மார்க்கம் என்று பிரித்துச் சொல்வார்களா? ஒரு முஸ்லிமின் அன்றாட வாழ்க்கையில் அரசியல் புகாதிருக்கிறதா? அரசியல் வேண்டாமென்றால், நாயகம் (ஸல்) அவர்களல்லவா அரசியலை ஒதுக்கியிருக்க வேண்டும். மாறாக அவர்கள் அரசியலை நடத்திக் காட்டியிருக்கும் போது நம்மைப் பார்த்து அரசியலை விட்டுவிடுங்கள் என்றால் அதன் அர்த்தம் புரியவில்லை.

''அல்லாஹ் பார்த்துக் கொள்வான்'' என்ற பேச்சு அடிபடுகிறது ஆம் உண்மைதான். அல்லாஹ் நினைத்தால் அன்றி ஓர் அணுவும் அசையாது. ஆனால், ''எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் சும்மா இருங்கள்.'' என ஆண்டவன் எங்காவது சொல்லியிருக்கின்றானா? நீங்கள் சாப்பிடாமல் பிழைப்பதற்கு எந்தவித முயற்சியும் செய்யாமல் கொஞ்சம் சும்மா இருங்களேன் பார்க்கலாம். அல்லாஹ் பார்த்துக் கொள்வான் என்றால் இதை அந்த அல்லாஹ், ரஸூலுல்லாஹ் அவர்கள் அடிபட்டார்களே, பல் உடைபட்டதே, நடையாக அலைந்து திரிந்தார்களே, கட்டடங்கள் கட்டி மக்களை வருந்தியழைத்து வேதத்தை போதித்தார்களே, இவையெல்லாம் ஏன் செய்தார்கள்? யுத்தங்களும் செய்தார்களே, இவை அனைத்தையும் அல்லாஹ் பார்த்துக் கொள்வான் என்றிருப்பது பெருமானார் காட்டிய வழியல்லவே.

அல்லாஹ் பார்த்துக் கொள்வான் என்பதுடன், நம் குறைகளை நிவர்த்திக்க நம் முயற்சியும் இருக்க வேண்டும் என்பது இஸ்லாத்தின் போதனையல்லவா? முஸ்லிம்லீக் ஒரு அரசியல் ஸ்தாபனம், ஆனால் அரசியல் துறையில் அது ''தீனின்'' வேலையைச் செய்து வருகிறது அது செய்து வரும் சேவை அப்பட்டமான ''தீன்'' சேவையாகும். உதாரணமாக நமது குழந்தைகளுக்குப் போதிய அளவு மத அறிவு கொடுப்பதற்குத் தடையாக சட்டம் இயற்றப்பட்டிருக்கிறது. ஆரம்பத்திலிருந்து இன்றுவரை அதை முஸ்லிம் லீக் எதிர்த்து வருகிறது. குழந்தைகளுக்கு இங்ஙனம் இஸ்லாம் மார்க்க போதனை வேண்டுமென்று முயற்சிப்பது மார்க்க சேவை யல்லவா?

நூற்றுக்கு எண்பது பேர் அனுஷ்டிக்கும் வாழ்க்கை முறையே மற்றவர்களும் பின்பற்ற வேண்டும் என்கிறார்கள். அதாவது எல்லோருக்கும் ஒரே விதமான சமுதாயக் சட்டம் (Civil law) இருக்கவேண்டும். முஸ்லிம் ஷரீயத் சட்டம் என்றும், ஹிந்து மதச் சட்டம் என்றும் இருக்கக்கூடாது என்று கூறுகின்றனர். முஸ்லிம் ஷரீயத் சட்டத்தில் தலையிடக் கூடாதென்று முஸ்லிம் லீக் வாதாடுகிறது. இது அப்பட்டமான மார்க்கப் பணி யல்லவா?

இந்திய நாட்டில் இறந்து போகிறவர்களை மண்ணில் அடக்கம் செய்யக்கூடாது என்றும் இறந்தவர்களை யெல்லாம் எரித்துவிட வேண்டியதுதான் என்றும் பார்லிமெண்டில் ஒருவர் மசோதா கொண்டு வந்தார். மார்க்கப் பிரச்சாரம் செய்வதற்கு கலெக்டர் லைசன்ஸ் பெற வேண்டும் என்று மற்றொரு அங்கத்தினர் கூறினார். அதாவது யாராவது இஷாஅத் பண்ண விரும்பினால் அவர்முன் கூட்டியே ஜில்லா கலெக்டருக்கு மனுச்செய்து அவரிடம் ஒரு லைசன்ஸ் பெற்ற பின்னர் தான் மதப் பிரச்சாரம் செய்யலாம். இவ்விதச் சட்டங்களை எதிர்ப்பது அரசியல் வேலையென்றாலும் சுத்தமான ''தீன்'' சேவை மார்க்க ஊழியமும் கூட அல்லவா? சர்க்கார் வேலையில் இருப்பவர்கள். ''இரண்டாந்தாரம்'' திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்ற சட்டம் அமலுக்கு வந்துவிட்டது. அதுவும் நேரடியான சட்டம் போட்டுச் செய்யவில்லை. சட்டத்தின் கீழ் செய்யப்பட்ட விதிகளை வைத்து இதை அமலுக்குக் கொண்டுவந்து விட்டார்கள். இதை எதிர்த்துச் சொல்வது தீனா, இல்லையா ?

இதுவெல்லாம் அரசியல் என்று விட்டு விடுவோமானால், பின்னர் தீன் என்னும் வாழ்க்கை நெறியில் எது மிச்சப்படும்? அரசியல் என்று சொல்லப்படும் முறையில் நடக்கிற இக்காரியங்களைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து வேண்டியன செய்வது மார்க்கத்தை மதிக்கும் முஸ்லிம்களுடைய பிரதான கடமையல்லவா? அந்தக் கடமையையே முஸ்லிம் லீக் செய்து வருகிறது. அதனாலேயே லீக் அப்பட்டமான தீனின் (மார்க்கத்தின்) சேவை செய்து வருகிறது என்று சொல்கிறேன். அதனால் முஸ்லிம்கள் ஒவ்வொரும் லீக்கில் சேர்ந்து அதைப் பலப்படுத்துவது கடமையாகும்.

## ஒன்றுபடுவீர், வெற்றி நமதே

சகோதரர்களே, நீங்கள் அல்லாஹ்வுக்கு மட்டுமே தலைசாய்ப்பவர்கள், பயப்படுகிறவர்கள். அவனை நம்பி அவன் காட்டிய வழியில் நின்று உங்களுக்குள் ஒற்றுமையைக் கடைப்பிடித்து முயற்சியில் ஈடுபடுவீர்களானால் வெற்றி உங்களுடையதே. நமது மற்ற சகோதரர்கள், நமது உண்மை நிலையை நிச்சயமாக உணர்ந்து நீட்டிய நமது நட்புக் கரங்களை ஏற்றுக் கொள்ள வெகு சீக்கிரமே முன் வருவார்கள்.

**அல்லாஹு த்தஆலாவின் மீது நம்பிக்கை, நமக்குள் ஒற்றுமை, தளரா முயற்சி ஆகியவையே நமது சாதனைக்குரிய நெறியாகும்.**

நன்றி: மறுமலர்ச்சி
24-1-1958

# முஸ்லிம் லீகின் அவசியம் பற்றி காயிதே மில்லத்

(திருச்சியிலும் கடைய நல்லூரிலும் காயிதே மில்லத் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளை மறுமலர்ச்சி ஆசிரியர் A. M. யூசுப் சாகிப் ஒரு நூலாகத் தொகுத்து 1957ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் வெளியிட்டார். திருச்சி மறுமலர்ச்சி பிரிண்டிங், பப்ளிஷிங் அண்டு புக் செல்லர்களால் வெளியிடப்பட்ட அந்நூலின் விலை 25 காசுகள் தான். அப்பிரசுரம் இங்கு மீண்டும் தரப் பட்டுள்ளது.)

(1956 நவம்பர் 4ம் தேதியன்று திருச்சியில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் ஆற்றிய சொற்பொழிவு)

## வகுப்பு வாதம் :-

முஸ்லிம் லீகை யார் எதிர்க்க முன் வந்தாலும் சுலபமான வார்த்தை ஒன்றைப் பிரயோகித்து, அர்த்தமற்ற தங்களின் பல வார்த்தைகளையும், பிறருள்ளத்தில் துவேஷம் ஏற்படத்தக்கக் கருத்துக்களையும் சேர்த்து சர்வ சாதாரணமாகக் கூறி விடுகின்றனர். அந்த சுலபமான வார்த்தைதான் ''வகுப்பு வாதம்'' என்ற சொல். இந்த வகுப்பு வாதம் என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தமென்று பல்லாயிரம் தடவைகள் நாம் கேட்டிருக்கிறோம். அதற்கு சரியான பதிலை ஒருவருமே சொன்னதில்லை. ஆனல் மீண்டும் மீண்டும் ''முஸ்லிம் லீக் வகுப்பு வாத அடிப்படையில் உள்ளது; அது கெட்டது'' என்றே பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனல் அந்த 'வகுப்பு வாதம்' என்ற வார்த்தைக்கும், நம் நாட்டின் பிரதமர் மிஸ்டர் ஜவஹர்லால் நேரு அவர்கள் ஒரு தடவை மாத்திரம் அர்த்தம் சொல்லியிருக்கிறார். ஆந்திரா தேர்தலின் போது அவர் விடுத்த அறிக்கையொன்றில் **''ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தின் மீது ஆதிக்கம் வகிக்க முற்படுவதே வகுப்புவாதமாகும்''** எனக் குறிப்பிட்டிருக்கிறார். வகுப்பு வாதம் என்ற வார்த்தைக்கு இது ஏறக்குறைய சரியான பொருளாகும். இந்த அடிப்படையில் பார்க்கும் போது யார் வகுப்புவாதிகள் என்பது அப்பட்டமாக விளங்கி விடும்.

நம்மைப் பொறுத்தவரையில் நாம் யார் மீதும் ஆதிக்கம் கொள்ள வேண்டுமென்று நினைக்கிறோமா? அப்படி நினைப்பதற்கு நாம் என்ன முட்டாள்களா! அரசியல் அறிவற்ற கூட்டத்தினரா? ''நாம் விரும்புவதெல்லாம் மற்றவர்களுக்கு அளிக்கும் உரிமைபோன்று எங்களுக்கும் சம உரிமைகள் அளியுங்கள்'' என்பது தானே! எங்களுக்கும் சம கவுரவங்களைக் கொடுங்கள் என்பதுதானே! பிறருக்கில்லாத தனிச்சலுகைகளைக் கேட்கிறோமா? மற்றவர்கள் எங்களுக்கு கீழ்பட்டு இருக்க வேண்டுமென்று விரும்புகிறோமா? இந்த நாட்டின் அரசியல் நிர்ணய சாஸனங்களுக்கு மாறுபட்டு நின்று ஏதேனும் கேட்கிறோமா? நாம் விரும்புவதெல்லாம் சட்ட பூர்வமானதாயும் நியாய பூர்வமானதாயும் உள்ள நேர்மையான விஷயங்கள்தான் என்பதை உலகம் நன்குணர்ந்தே இருக்கிறது.

## கலாச்சாரம் :-

ஆனல், இங்கு என்ன நடக்கிறது? ஒரே கலாச்சாரம் என்ற பெயரால், நமக்குள்ள நியாயப்பூர்வமான உரிமைகளைப் பிடுங்கத் தலைப்படுகிறார்கள். இந்திய கலாச்சாரம் என்ற பெயரைக் கூறிக்கொண்டு சிறுபான்மை மக்களின் கலாச்சாரங்களை ஒழித்துக்கட்ட முற்படுகிறார்கள். கலாச்சாரம் என்றால் என்ன? இதை பற்றி சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களே **தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். ''கலாச்சாரம் என்பது மார்க்கத்தை—மதத்தை ஒட்டிய கொள்கைகளும், பண்பாடுகளும்தான்''** என்று பட்டவர்த்தனமாக **உண்மையை ஒப்புக் கொண்டிருக்கிறார்**. இவ்விதம் பார்க்கும் போது ஒரே கலாச்சாரம் இந்திய கலாச்சாரம் தான் என்ற பெயரை வைத்துக் கொண்டு நமது கலாச்சாரங்களை அழிக்க முற்படுவதற்கு என்ன நியாயம் இருக்கிறதென்று கேட்கிறேன்.

இதைக் கேட்கும் போதுதான் அவர்களுக்கு நம் மீது ஆத்திரம் வருகிறது. கண்ணை மூடிக்கொண்டு வகுப்புவாதி என்று கத்தி விடுகிறார்கள். இப்படிச் சொல்லிவிடுவதன் மூலம், பிரச்சினைக்கு சரியான பதில் சொல்லி விட்டதாக நினைக்கிறார்கள் போலும்!

## பாக்கிஸ்தான் :-

நம்மைப்பற்றி பேசும் போது, பாக்கிஸ்தானோடு நம்மை இணைத்துப் பேசாவிட்டால், அவர்களால் மக்களின் கண்களில் மண்ணைத்தூவ முடியாது. அதையும் தான் எடுத்துக் கொள்வோமே! அதிலாவது அவர்களிடம் நியாயம் இருக்கிறதா என்று பார்ப்போமே! பழைய சரித்திரங்களைப் புரட்டட்டும் !

பாக்கிஸ்தான் பிரச்சினை தான் ஏன் வந்தது? பாக்கிஸ்தான் பிரச்சினைக்குப் போவதற்கு முன், அதற்குக் காரணமாக இருந்த அகில இந்திய முஸ்லிம் லீக் மகாசபை தான் ஏன் வந்தது என்ற கேள்விகளுக்குப் பதில் சொல்லட்டுமே பார்ப்போம்!

ஒரே ஐக்கிய சமுதாயமாக மக்கள் மனப்பான்மை வளர்ந்து வந்த காலத்தில், காங்கிரஸின் தனது வகுப்பு வாத தன்மைதான் அன்று முஸ்லிம்லீகை உற்பத்தி செய்தது என்பது சரித்திரம் உணர்ந்த அனைவரும் அறிந்த உண்மையாகும். முஸ்லிம்லீகை இயக்கத் தொடங்கியவர்கள் யார்? பிரத்தியேகமாக எங்கிருந்தேனும் வந்தவர்களா? காங்கிரஸின் பிரதான தூண்களாக இருந்தவர்கள் தானே முஸ்லிம் லீகை உண்டாக்கினர்!

காங்கிரஸ் இந்நாட்டிலுள்ள மக்களிடையே வேறுபாட்டுணர்ச்சியையும், குரோதத்தையும் அன்று வளர்க்கத் தொடங்கியது. அதை நீக்கி மக்களிடையே சுமுகமான உறவை வளர்க்கவும், பரஸ்பரம் ஒருவரையொருவர் புரிந்து சௌஜன்யத்தோடு வாழவுமே முஸ்லிம் லீக் பாடுபட்டது. 1906-ம் ஆண்டில் முஸ்லிம் லீக் ஸ்தாபனம் தொடங்கப்பட்டதிலிருந்து 1940-வது ஆண்டு வரை அது காங்கிரஸுக்கு எல்லா வகையிலும் பக்கபலமாகவே இருந்து வந்திருக்கிறது. காங்கிரஸ் தலைவர்களின் சர்வாதிகார எண்ணமும் நடவடிக்கைகளும் தான் 1940-ம் ஆண்டில் பாக்கிஸ்தான் தீர்மானத்தை வெளிப்படுத்தவும் மெஜாரிட்டியுள்ள பிரதேசங்களை அவர்கள் பிடிப்பிலிருந்து அகற்றவும் ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. 1940ம் ஆண்டில் ஏற்பட்ட இந்த நடவடிக்கை, 1947ம் ஆண்டில் பாக்கிஸ்தானைப் பிரிந்தது. **இதற்கு முக்கியக் காரணஸ்தர்கள் 'முஸ்லிம் லீக்'காரர்கள் என்று கூறுவதை விட, 'காங்கிரஸ்' காரர்கள் தான் என்று அறுதியிட்டுக் கூற முடியும்.** இதைப் பலமுறை காந்திஜீ கூட தம் ''ஹரிஜன்'' பத்திரிக்கையில் பகிரங்கமாக எழுதியும், பல கூட்டங்களில் பேசியும் ஒப்புக் கொண்டிருக்கிறார். **இந்தப் பிரச்சினை 1947ம் ஆண்டு, ஆகஸ்ட் 15ம் தேதியோடு தீர்ந்து விட்ட பிரச்சினையாகும்.**

## வேறு வழி என்ன? :-

இந்நாட்டிலுள்ள சிறுபான்மை மக்கள் ஐக்யமாக ஒன்று கூடி ஸ்தாபன ரீதியாக இல்லாவிட்டால், இந்த நாட்டில் ஜனநாயகம் எப்படி நிலை நிற்க முடியும்? இந்நாட்டின் ஜனநாயக ஆட்சி அமைப்புப்படி, சிறுபான்மையினருக்கு எதிராகப் பெரும்பான்மையினர் ஒரு நடவடிக்கையைச் செய்தால், அல்லது சட்ட சபைகளிலோ, பார்லிமென்டிலோ ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தால், அதைப்பற்றி சிறுபான்மை மக்கள் தங்கள் அபிப்பிராயங்களை எப்படி வெளிப்படுத்துவது? நாலரை கோடி மக்களிடை ஒவ்வொருவரிடமாக அபிப்பிராயம் கேட்பதா? அப்படி சிறுபான்மை மக்களின் மதம், கலாச்சாரம் ஆகியவற்றிற்கு எதிராக ஒரு தீர்மானம் வராது என்று தான் சொல்வதற்கு இடமுண்டா? கடந்த ஒன்பது ஆண்டுகளில், நல்லவர்கள் ஆட்சி பீடங்களிலே இருப்பதாகச் சொல்லப்படும், இக்காலத்தில் அத்தகைய தீர்மானங்கள் பல மெஜாரிட்டி பேரால் நிறைவேற்றப் பட்டிருக்கின்றனவே! நாம் பல ஆயிரம் விஷயங்களில் மற்றவர்களுடன் ஒத்துப்போவோம். மற்றவர்களும் நம் விஷயங்களில் ஒத்துப்போகலாம். **ஆனால் மத சம்பந்தமான விஷயங்கள் வரும்போது எப்படித்தான் எங்கள் கருத்தை வெளிப்படுத்துவது? தர்ம நீதியான ஒரு ஜனநாயக நாட்டில் அப்படி மக்களின் கருத்தை உணர்த்துவது அத்தியாவசியமான காரியமல்லவா?**

## ஸ்தாபனத்தின் அவசியம் :-

இதன்முன் இருந்த அவசியத்தைவிட இன்று மைனாரிட்டி மக்களுக்குத் தனி ஸ்தாபனத்தின் தேவை பல ஆயிரம் மடங்கு அதிகமாகும். இதை யாராலும் மறுக்க முடியாது என்பதற்கு இப்போது ஆங்காங்கே தலை காட்டிக்கொண்டிருக்கும் ''புது சமூக''த்தினரே போதிய சான்றாகும். தங்களைக் காங்கிரஸ்காரர்கள் என்று சொல்லிக்கொள்ளும் அவர்கள் மதத்தின் பேரால் ''தேசிய முஸ்லிம்கள்'' என்று ஏன் தங்களைப் பிரித்துக் கூறிக்கொள்கின்றனர். ''மதச் சார்பற்ற காங்கிரஸ்'' என்று கூறிக் கொண்டு அதற்குள்ளேயே ஏன் ''ஒரு மதக் கூட்டமாக'' தனியே பிரிந்து கொள்கிறார்கள். இதற்கு முன் ஜனாப் அபுல்கலாம் ஆஸாத் சாஹிப் தலைமையில் ஒரு கன்வென்ஷன் நடந்தது எல்லோருக்கும் நினைவிருக்கும் என்று நம்புகிறேன். இத்தகைய கன்வென்ஷன்களுக்கு அர்த்தமென்ன? ஏன் இப்படி ஒரு கன்வென்ஷன் கூட வேண்டும்? ஒரு ''மதச் சார்பற்ற''. கட்சிக்குள் உள்ள ஒரு மதக் கூட்டத்தினர் அவ்விதம் தங்களைப் பிரித்துக் காட்டிக் கொள்வதன் பொருளென்ன?

காங்கிரஸ் ஹிந்து கூட முஸ்லிம்களின் பத்திரத்திற்கும் நன்மைக்கும், அவர்களை (தேசிய முஸ்லிம்களை) பின்பற்றச் சொல்கிறார்களே ஏன்? அவர்களுக்கு ஆதரவு கொடுக்கும்படியாக வேண்டுகோள்களை விடுக்கிறார்களே ஏன்? இதையெல்லாம் சிறிதளவு ஆழ்ந்து சிந்தித்தால், எந்த வேடத்தில் நடித்தாலும், சிறுபான்மை மக்களுக்குத் தனித்ததொரு ஸ்தாபனம் எவ்வகையிலும் தேவையே என்பது நன்கு விளங்கும். அத்தகைய ஸ்தாபனத்தை, காங்கிரஸ்காரர்களும் ஒப்புக்கொள்ளவே செய்கிறார்கள். ஆனால் அவர்கள் விரும்புவது அந்தக்கூட்டம் சுதந்திரமான கூட்டமாக இருக்கக் கூடாது, தங்களுக்கு சகல வகையிலும் அடிமைப்பட்டு தங்களின் ''தாஸர்'' கூட்டமாய் இருக்கவேண்டுமென்றே விரும்புகிறார்கள் என்பதுதான் உண்மையான நிலை. இதற்காகவே ''புதிய சமூகத்''தினரை அவர்கள் கொண்டாடுகிறார்கள். அவர்களும் தாங்கள் அடிவருடி நிற்கும் சக்தியைப் போல் தங்கள் சமூகத்தையும் ஆக்கிக் கொள்ளலாம் என்று முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

முஸ்லிம் லீக் :-

இந்த பிரத்தியட்சமான உண்மைகளையெல்லாம் கண்டு சிந்திப்போருக்குத்தான், முஸ்லிம்லீக்கைத் தவிர வேறு எந்த ஸ்தாபனத்தாலும், சமுதாயத்தின் உண்மைக் குரலைப் பிரதிபலிக்க முடியாது என்பது நன்கு விளங்கும். இந்த நாட்டு சர்க்காரும், மக்களும், உலகமும் நன்கு தெரிந்து வைத்திருக்கும் முஸ்லிம்லீக் என்ற பெயரைக் கொண்டுதான் நமது பிரச்சினைகளை நாம் தீர்த்துக்கொள்ள முடியும். நமது குறைகளையும் சங்கடங்களையும் ஆளும் வர்க்கத்தாரிடம் விண்ணப் பிக்கவும், கேட்டுக் கொள்ளவும், வாதாடவும், இந்த ஒரு சபையினுல்தான் முடியும். ஒரு ஜனநாயக நாட்டில் எந்த பிரச்சினையையும் பகிரங்கமாக வெளிப்படுத்திச் சொன்னுலன்றி யாருக்கும் உரிமைகள் கிடைக்காது. தக்க பலத்துடன் குரலை வெளிப்படுத்தினுலன்றி, நியாயமும், உண்மையும் கூட மறுக்கப்பட்டு போய் விடும். அதற்காகப் போராட உரிமையுள்ள ஒரே பெயர் முஸ்லிம்லீக்தான் என்பதை உணரவேண்டும்.

**முஸ்லிம் லீக்கர்களாகிய நாம் எதையும் நேர்மையாக பரிசீலித்து நேர்மையுடனேயே செயல்படுகின்ருேம். நமக்கு உள்ளொன்றும் புறமொன்றும் கிடையாது. ஆதலால் நம்மை பலாத்காரத்தால் அழிக்க யாருக்கும் உரிமை கிடையாது. நம் பெயரை நீக்கச் சொல்ல யாருக்கும் அதிகாரம் கிடையாது.** இந்த ஜனநாயக நாட்டில் இது ஒரு தேசிய ஸ்தாபனம். இத்தகைய ஒரு ஸ்தாபனத்தால் மக்களுக்கும் நன்மை ஏற்படும். தேசத்தின் வளர்ச்சிக்கும் பலன் ஏற்படும். இதை 'வகுப்பு வாதம்' என்ற வார்த்தையின் கீழே கணிப்பது, மிகப் பெரிய துரதிருஷ்டமாகும். ஆனுல், நாம் கடமையில் உறுதியோடிருப்போமாயின் நம்மை எதிர்ப்போர் காலப்போக்கில் உண்மையை உணர்ந்து திருந்திக் கொள்வார்கள்.

**எவ்வித சந்தேகத்துக்கும் இடமின்றி முஸ்லிம் லீக் ஒரு தேசீய ஸ்தாபனமேயாகும். இது இந்த நாட்டில் தோன்றிய ஒரு கட்சி; இந்த நாட்டில் தனிப்பட்ட மதம், கலாச்சாரம், பழக்க வழக்கங்களுடைய சிறுபான்மை வகுப்பாருடைய குரலை வெளிப்படுத்தும் இயக்கம்; அரசியல் நிர்ணய சாஸனங்களுக்கு உட்பட்டு, சட்ட பூர்வமாக அங்கீகரிக்கப்பட்ட சிறுபான்மை மக்கள், தங்களுக்குரிய உரிமைகளைப் பெற்று வாழ, சர்க்காரிடம் வாதாடும் ஒரு ஜனநாயகப் பூர்வமான இயக்கம். இது வெளி நாட்டிலிருந்து சிந்தனைகளை இரவல் வாங்கிக் கொண்டு, இந்நாட்டு மக்களை அந்த நாட்டுக் கொள்கைக்குத் திருப்பும், தேசீய கொள்கை லட்சிய மற்ற கூட்டமல்ல.**

சிறுபான்மை மக்களுக்கு உரிமையளிக்கிருேம், அவர்களை தங்கள் மத, கலாச்சார, பண்பாடுகளுடன் பூரண சுதந்திரத்தோடு வாழவிடுகிருேம் என்றெல்லாம் உலக முழுவதும் பறை சாற்றும் காங்கிரஸ்காரர்கள், அவர்கள் சொல்வதில் நேர்மையிருக்குமானுல், அவர் கள் கூறுவது சரிதான் என்று ஒப்புக்கொள்ளவும்,



# லட்சத்தில் ஒருவன் நான்!

ஒரு சமயம் நான் காயிதே மில்லத் அவர்களைப் பார்ப்பதற்காக குரோம்பேட்டைக்குச் சென்றேன். அவர்களது வீட்டினுள் நுழைய முற்படும் சமயம், வீட்டினுள் இருந்து சில முக்கியஸ்தர்கள் வெளியே வந்துகொண்டிருந்தார்கள். தலைவரவர்கள் வீட்டில் அவர்களைப் பார்ப்பது மிகவும் அபூர்வமான காட்சியாக இருந்தது. வசதி படைத்தவர்களாக அவர்கள் இருந்த போதிலும் கட்சி விஷயங்களில் அம்மாதிரியானவர் களுக்கு ஈடுபாடு அதிகம் கிடையாது. அப்படிப்பட்ட வர்களை தலைவர் வீட்டில் பார்த்ததும் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆச்சரியமாகவிருந்தது. யோசித்துக் கொண்டே தயா மன்ஸிலுக்குள் நுழைந்தேன்.

தலைவரவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபொழுது இன்னின்னாரெல்லாம் வந்துவிட்டுப் போகிறார்களே, என்று எனது பேச்சை ஆரம்பித்து நிறுத்திக் கொண் டேன். அதற்கு தலைவர் அவர்கள் ''அதுவா! நான் மின்சார ரயிலில் பயணம் செய்வது அவர்களுக்குப் பிடிக்கவில்லையாம்! மாநில லீக் தலைமை நிலையத் திற்கு மின்சார ரயிலை எதிர்பார்த்துதானா நீங்கள் குரோம்பேட்டையிலிருந்து புறப்படவேண்டும்? மற்ற அரசியல் கட்சித் தலைவர்களெல்லாம் எப்படி இருக் கிறார்கள், சாதாரணமான தலைவர்கள் கூட காரில் தான் பிரயாணம் செய்கிறார்கள். நீங்களும் காரில் தான் போய்வர வேண்டும். அதற்கு நாங்கள் ஏற்பாடு செய்கிறோம் என்று கூறுவதற்காக வந்திருந்தார்கள் என்று நிறுத்திவிட்டு ஒரு சில நிமிடங்கள் கழித்து அவர்களே பேச்சைத் தொடர்ந்தார்கள். ''மற்றவர் களெல்லாம் போகிறார்கள் என்பதற்காக நானும் அப்படித்தான் போகவேண்டுமா? இந்நாட்டில் எத்தனை லட்சம் மக்கள், சொந்தக் காரில் செல்ல வசதியில்லாமல் பொது ஊர்திகளில் பிரயாணம்செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருவனாக நானும் இருந்து விட்டுப் போகிறேன். இதில் என்ன மரியாதை குறைச்சல்; கௌரவம் பார்ப்பது? நடந்து செல்வதற்கு கூட சாலை வசதிகள் போதாத அளவு உள்ள இடத் தில் நாம் மட்டும் சதா ஏரோபிளேனில் பறந்து கொண்டே திரிய வேண்டும் என ஆசைப்படுவது சரி தானா? ஹாஜியாரே நீங்களே சொல்லுங்கள்'' என்றார்கள்.

வந்து போனவர்கள் எதற்காக வந்திருந்தார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

ஹாஜி *T. M.* அப்துல் ஹலீம் சாகிபு
லால்பேட்டை



அல்லது சரியில்லை என்று மறுக்கவும் ஜனநாயகப் பூர்வமான சிறுபான்மை மக்களின் ஒரு பிரதிநிதித்துவக் கட்சி இந்நாட்டிலிருப்பதை அவர்கள் மகிழ்வுடன் வரவேற்ருக வேண்டும். அப்படி ஒரு கட்சி இல்லாவிட்டால் கூட, அவர்கள் சிறுபான்மை மக்களுக்கு ஆலோசனைகள் கூறி ஒரு கட்சியை உண்டாக்கிக் கொள்ள தூண்ட வேண்டும். அப்போதுதான் அவர்கள் நேர்மையானவர்கள் என்று அர்த்தமேற்படும்.

இத்தகைய ஒரு கட்சியினுல்தான், அவர்கள் சொல்லிக்கொள்வதற்கும் ஒரு பெருமை ஏற்படும். அவர்கள் சொல்வதைவிட அதை நாம் சொன்னுல் தான் உலகம் ஒப்புக்கொள்ளும். யார் யாரோ விருந்தாளியாக வந்து ஊருக்கு ஒரு மணி நேரம் அரசாங்க விருந்தாளியாக இருந்துவிட்டு, இந்நாட்டின் சிறுபான்மையோர் சொர்க்கபோகமாக வாழ்கிருர்கள் என்று கூறிவிட்டால் கூறுபவரைக் கண்டு உலகம் சிரிக்கத்தான் செய்யும், கூறத்தூண்டுகிருர்கள் என்று நினைத்து ஆட்சி பீடத்திலிருப்போரை உலகம் கிண்டல் தான் செய்யும். இந்த ஒரு சாதாரண உண்மையைக் கூட காங்கிரஸ்காரர்கள் இதுவரைப் புரியாமலிருக்கிருர்கள் என்று நான் நம்பவில்லை. அவர்கள் புரிந்துக் கொண்டுதான் இருக்கிருர்கள்; ஆனுல், அவர்கள் உள்ளத்தில் ஏதோ ஒரு இருள் கவ்விக்கிடக்கிறது. அதில் வெளிச்சம் பாய்ந்துவிடாத வகைக்கு மீண்டும் இருட்டாக்கியே வைத்துக்கொண்டிருக்கிருர்கள்.

அவர்கள் நன்ருக உணர வேண்டும், முஸ்லிம்லீக் போன்ற ஒரு தேசிய ஸ்தாபனத்தினுல் தான், அவர்களுக்கும் நல்லது, தேசத்துக்கும் நல்லது. வகுப்புவாதமென்ருே, ஐந்தாம் படையென்ருே, அர்த்தமற்ற வார்த்தைகளைப் பிரயோகித்துக் கொண்டிருப்பது அனர்த்தத்தையும், துவேஷத்தையுமே வளர்க்கும். நாட்டின் நன்மைக்கும் அவைகளெல்லாம் பலன் தராது.

தீய நோக்குடைய ஸ்தாபனங்களைக்காட்டி, உங்களால்தான் அவர்கள் இருக்கிருர்கள் என்று பொறுப்புடையவர்களே பேசுவது, தீய சக்திகளுக்கு உரமூட்டுவதே யாகும். நியாயமற்ற பேச்சுக்களினுல் உண்மையை எதிர்த்து அழித்துவிட முடியாது. எங்களுடைய **கொள்கை கோட்பாடுகளெல்லாம் ஒன்றுதான். நாங்கள் எங்களுக்காகவே கூடுகிரேும்; எங்களுக்காகவே பேசுகிரேும்; யார்மீதும் ஆதிக்கம் செலுத்தும் ஆசை எங்களுக்கில்லை. ''லகும் தீனுக்கும் வலியதீன்'' என்ற எங்கள் வேத வசனப்படி ''அவரவர் மார்க்கம் அவரவருக்கே'' என்பதுதான் எங்கள் லட்சியம்.** ''நீங்கள் உங்கள் மார்க்கப்படி வாழுங்கள், நாங்கள் எங்கள் மார்க்கப்படி வாழுகிரேும்; வாழவிடுங்கள்'' என்பதுதான் எங்கள் வேண்டுகோள். சிறுபான்மை மக்களை எதிர்ப்பதும், கண்டிப்பதும் எவ்விதத்திலும் நீதியாகாது-நீதியற்ற எந்த ஒரு பேச்சுக்கும், உடன்படிக்கைக்கும் அவர்கள் தலை வணங்கியதில்லை; தலை வணங்கவும் மாட்டார்கள். அவர்கள் இந்நாட்டில் மானம், மரியாதையுடன் வாழ வேண்டும். கவுரவமான பிரஜைகளாகத் திகழ வேண்டும். மற்றவர்களுக்கில்லாத எந்த உரிமையும் அவர்களுக்குத் தேவையில்லை. மற்றவர்களுக்குத் தாழ்ந்து வாழவும் அவர்கள் விரும்பவில்லை. தொடர்ந்த தப்பு பிரச்சாரத்தினுல் அவர்கள் தங்கள் மார்க்கத்தை விட்டுவிடுவார்களென்று எதிர்ப்பார்ப்பது மிகப் பெரிய பேதமையாகும். அவர்கள் தங்களுடைய மார்க்கத்தை எது நேரிடினும் விட்டுவிட மாட்டார்கள்.

### நம்மில் சிலர் :-

நம்மில் சிலர் இருக்கிருர்கள். அவர்களுக்கு நாம் ஒரு சமுதாயம் என்பதையும், இந்நாட்டின் கவுரமிக்க குடிமக்களாக வாழ உரிமையுடையவர்கள் என்பதையெல்லாம் பற்றிக் கவலையில்லை. தங்களைப்பற்றி மாத்திரம் உள்ள தனிப்பட்ட பிரச்சினைகள் ஆங்காங்கே கொஞ்சம் சவுகரியமாக நடந்து கொண்டால் போதும், சமுதாயத்தின் எல்லா பிரச்சினைகளும் தீர்ந்து விட்டதைப் போன்று பேசுவார்கள். அந்த நண்பர்கள் முஸ்லிம் லீக் இது வரை என்ன செய்து விட்டது? இதெல்லாம் எதற்கு! என்று நம்மிடமே வெகுசாதாரணமாகக் கேட்கிருர்கள். **ஒரு தேசத்தில் ஒரு கட்சி இயங்குவதென்ருல் ஜவுளிக்கடை வைப்பது போன்ற பிரச்சினையல்ல-இன்று என்ன வியாபாரம்? அசல் எவ்வளவு? லாபம் எவ்வளவு? இந்தத் துணியில் நாலணு சேர்த்து விற்கலாமா? என்றெல்லாம் கேட்டுக் கொள்வது போன்ற சாதாரண வியாபார விஷயமல்ல.** அன்றன்றைக்குக் கூட்டிக் கணக்குப் பார்த்துக் கொள்ளும் வரவு-செலவு விஷயமுமல்ல.

முஸ்லிம் லீக் என்ருல் யார்? நீங்கள் தான். நீங்களெல்லாம் கூடினுல்தான் முஸ்லிம் லீக்; **நீங்களெல்லாம் வேலை செய்யும் போது தான் முஸ்லிம் லீக் வேலை செய்கிறது;** உங்களில் சிலர் உங்களை மாத்திரம் நினைத்துக் கொண்டிருந்தாலும், உங்களில் பலர் உங்களுக்காகவும் வேலை செய்கிருர்கள்; அவ்விதம் வேலை செய்தாக வேண்டும். அப்போதுதான் நீங்கள் நீங்களாகவே இருந்து பேச முடியும். 100க்கு 5 பேர்தானே இந்த பகுதியில் இருக்கிரேுமென்ருல் இந்த ஐந்து பேரும், மானம் மரியாதைகளெல்லாம் இழந்துவிட வேண்டும் என்பது போல பேசுவது நம்மை நாமே அவமானப்படுத்திக் கொள்வதேயாகும். நாம் ஒரு கோடிக்கு ஒருவராக இருந்தாலும் நமக்கென ஒரு ''உசூல்'' இருந்கிறது. அந்த பாதையில்தான் நமது ஒவ்வொரு அடியும் எடுத்து வைத்தாக வேண்டும். அந்த ''உசூலை'' அசட்டை செய்பவர்களைப் பற்றி நமக்குப் பேச்சில்லை. அவர்களுக்கு நாம் எவ்வித சமாதானமும் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

### சரித்திரம் :-

இந்த உலகத்தின் சரித்திரத்துக்கு எல்லைக்கோடு வகுத்துக் கொண்டவரை மனித சமுதாயத்தின் வாழ்வை ஆராய்ந்து பார்த்தீர்களானுல் குழப்பம்,

நாஸ்திகம், பலாத்காரம், அக்ரமம், அநீதி ஆகியவை களைக் கடைபிடித்த எந்த சமுதாயமும் வாழ்ந்ததில்லை. அவைகளெல்லாம்? அந்தக் காலங்களில் கொட்டமடித் துக் கொண்டிருந்தாலும், திடீர் திடீரென சாய்ந்தே போயிருக்கின்றன. அவ்விதமே பலாத்காரத்துக்கும், அக்கிரமத்திற்கும் அநீதிக்கும் உள்ளான சமுதாயங்கள் அழிந்து ஒழிந்து போய்விடவில்லை. அவர்கள் எவ்வளவு மிகச் சிறிய கூட்டமாக இருந்தாலும் அவர்களிடம், சத்தியமும், ஒழுங்கும், ஒற்றுமையும், கட்டுப்பாடும் இருக்கும்வரை, அவர்களை யாராலும் அழித்துவிட முடி யாது. இந்தத் தத்துவத்தை நன்கு உணர வேண்டும். **நம்பிக்கையில்தான்** அதிலுள்ள உறுதியில்தான், தனி மனிதனதும், சமுதாயத்தினுடையவும் வெற்றி அடங்கி யிருக்கிறது. அத்தகைய நம்பிக்கை ஒவ்வொரு முஸ்லி மின் இதயத்திலிருந்தும் அழிந்து போய்விடவில்லை.

நமது ஒத்துழைப்பு :-

நாம் காங்கிரஸுடன் இப்போதும் ஒத்துழைக்க முனைந்திருக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் கடந்த கால நமது கொள்கைகளை சிந்திக்க வேண்டும். தேசப் பிரிவினைக்குப் பிறகிருந்து இன்றுவரை நாம் எந்த வகை யில் அவர்களுடன் ஒத்துழைக்கவில்லை? ஸ்திரமான ஆட்சி இந்தநாட்டில் நிலவவும், அவர்களின் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கும், அனுவசியமான சந்தேகங்கள் அகல வும், நாம் ஒவ்வொரு வகையிலும் ஆட்சியின் கரங் களுக்கு வலுவாகவே இருந்திருக்கிறோம்.

சென்ற பொதுத் தேர்தல் முடிந்தவுடனேயே, இந்த ராஜ்யத்தில் ஆட்சி செய்ய முடியாத அவல நிலைக்கு காங்கிரஸ்காரர்கள் உள்ளானார்கள். ராஜ்யமே குழம்பி நின்றது. எதிர்த்தவர்கள் தங்களுக்கு ஆதர வாக வருவோருக்கு எல்லா சலுகைகளையும் முன் வைத்து பேசினார்கள். இந்த நிலையில், நம்மை எட்டி உதைப்பவர்களுக்கே நாம் ஆதரவளித்தோம் ஏன்? நமக்கு கிடைக்கும் சில சலுகைகள் பெரிதல்ல. **நாட்டின் நிலையான ஆட்சியே பிரதானம்என்பதால் தான். மீண்டும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்தது. அதில் ஒரே ஓட்டில்தான் காங்கிரஸ் ஜெயித்தது என்பது நினைவிருக் கும். நாம் ஐந்து ஓட்டுகளை அளித்து, அவர்கள் கரங்களை வலுப்படுத்தி இருக்கிறோம். அவர்களுக்கு எதிராக எல்லா சக்திகளும் ஒன்று கூடிக்கொண்ட நேரத்திலும் கூட நாம் தனித்து நின்று அவர் களுக்கு ஆதரவளித்திருக்கிறோம்.** சாத்தான் குளம், குடியாத்தம் தேர்தல்களின் போதும், அவர்களுக்கு சோதனை ஏற்பட்டது. அந்த சமயங்களிலும் கூட நாம் பக்கபலமாக இருந்தது எல்லோருக்கும் தெரிந்த விஷயம் தான். இது அஸ்திவாரத்துக்கே நம் கைகளை அளித்த **விஷயம்.** இதைப் போன்ற அவர்களின் ஒவ்வொரு பொது நடவடிக்கைகளுக்கும் நாம் ஆதரவாகவே இருந்திருக்கிறோம். அதன் பலன் என்ன? நல்லெண்ணங் களோடு நாம் நீட்டிய கரங்களையே, அவர்கள் ஆட்சி பீடமேறியபின் வெட்டத் தொடங்கினார்கள், **அந்த நடவடிக்கைகளுக்கெல்லாம் அவர்களிடம் நாம் பிரதி பலன்களை பேசியதுமில்லை; எதிர் பார்த்ததுமில்லை.** இவ் விதமெல்லாம் நாம் நடந்தும் அவர்களுக்கு நம்மை பிடிக்கவில்லை. ஏனெனில் நாம் வகுப்புவாதிகளாம். நம் ஸ்தாபனத்தை அடியோடு அழித்துக் கொண்டு, அவர்களிடம் சரணாக இருந்து இவ்வளவும் செய்ய வேண்டுமென்று எதிர் பார்க்கிறார்கள். நாம் அவர் களுடன் ஒத்துழைக்கவில்லை என்ற பேச்சுக்கு இடம் ஏற் படக் கூடாது என்றே கடந்த ஒன்பது வருடங்களாக, நாம் பலவகையிலும் நல்லுறவு கரங்களை நீட்டினோம். எந்த கரங்கள் உதவிசெய்தனவோ, அந்த கரங்களை வெட்டுவதிலேயே கண்ணுங்கருத்துமாகஇருக்கின்றனர். நாம் காங்கிரஸுடன் இனியும் ஒத்துழைத்துக் கொண்டே இருக்கவேண்டும் என்பவர்கள் இப்போது சொல்லட்டும்! அந்த எண்ணம் சரிதானா என்று சிந்திக் கட்டும்!

---

# உங்கள் காவல் எனக்குத் தேவையில்லை.

*1952*ல் இராமநாதபுரத்தில் மாவட்ட மாநாடு நடைபெற்றது. ஹிதாயத்துல் அத்பால் மதரஸா வில் காயிதே மில்லத் அவர்கள் தங்குவதற்கு ஏற்பாடாகி இருந்தது. தலைவரவர்களுக்கு இரவு நேரங்களில் காவலுக்கு ஆள் தயாராக இருக்கவேண் டும் என்று நாங்கள் முடிவு செய்து அதன்படி காவல் காத்து வந்தோம்.

இரவு சுமார் ஒரு மணி இருக்கும். காயிதே மில்லத் எழுந்து எதற்கோ வெளியே வந்தவர்கள் நான் அங்கு நிற்பதைப் பார்த்து ''ஏன் இன்னும் தூங்கப் போக வில்லை, முழித்துக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள். ''காவலுக்காக நிற்கிறேன்'' என்று நான் பதில் சொன்னேன், ''உங்களை யார் காவலுக்கு நிற்கச் சொன்னார்கள்.'' என்று திருப்பிக் கேட்டார் கள். ''மாநாட்டு அமைப்பாளர்கள் உத்தரவு இது'' என்று சொன்னேன். ''அதெல்லாம் தேவையில்லை நீங்கள் போய் நன்றாகத் தூங்குங்கள்'' என்று அழுத்த மாகக் கூறினார்கள் ''மாநாட்டு அமைப்பாளர்களின் உத்தரவை நான் மீற முடியாது'' என்று சொன்னேன்.

''தம்பி நீங்கள் தூங்கப் போனால் தான் நானும் தூங்கச் செல்வேன், இல்லாவிட்டால் நானும் உங்கள் பக்கத்திலேயே இருப்பேன்'' என்று கோபமாகக் கூறினார்கள்.

''காவல் காப்பதற்கு அல்லாஹ் போதுமானவன், உங்கள் காவல் எனக்குத் தேவையில்லை'' என்றார் கள். நான் அங்கிருந்து நகர்ந்த பிறகு தான் அவர்கள் அறைக்குள் சென்றார்கள்.

**—ந. க. இப்ராஹீம் கனி**
இராமநாதபுரம்

---

## குறைவாக இருந்தால் :-

நாம் எண்ணிக்கையில் மிகக் குறைவானவர்கள் என்ற ஒரே காரணத்தினுல், பயமுறுத்தலும், மிரட்டலு மான பேச்சுகளின் மூலம் எங்கள் உரிமைக்குரலை அடைத்து விடலாம் என்று நம்பிக்கையோடு வேலை செய்வது போன்ற தோரணையில் காங்கிரஸ்காரர்கள் நடந்து கொள்வது மிகவும் வருந்துவதற்குரிய விஷய மாகும். சிறுபான்மையினர் எண்ணிக்கையில் குறைவான வர்களாக இருந்தாலும், அவர்கள் கோழைகளல்லர். ஆதலால், காங்கிரஸ்காரர்கள் பேசிக் கொள்வதைப் பற்றிக்கவலையில்லை. எங்கள் கடமையில் நாங்கள் உறுதி யுடனேயே செல்வோம். நாங்கள் ஜனநாயகப் பூர்வ மாக, சட்டபூர்வமாக, எங்கள் உரிமைகளை வற்புறுத்து கிறோம்; உத்தியோகத்திலே, பொருளாதாரத் துறை யிலே மற்ற ஒவ்வொரு பொதுவான தேசிய பிரச்சினை களிலும் அந்த உரிமைகளைப் பெற உழைக்கிறோம். அதையும் சட்டபூர்வமாகவே பெற்றுக் கொள்ள விரும்பு கிறோமே தவிர , யார்தரும் பிச்சையாகவும் அவை இருக்க விரும்பவில்லை அந்த ஈவிரக்கத்தை நாங்கள் யாரிடமிருந் தும் எதிர்பார்க்கக் கூடியவர்களல்ல. முஸ்லிம்கள் அத்தகைய தயாளங்களைப் பெற ஒருக்காலும் யாரிடமும் இணங்க மாட்டார்கள்.

## வெற்றி நிச்சயம்!

இந்த நாட்டில் ஆட்சி பீடம் தங்களுக்கிருந்த காரணத்தினுல் பிரிட்டிஷ்காரர்கள் எவ்வளவோ அட்ட காசங்களைச் செய்தார்கள்; எத்தனையோ கொடுமை களைப் புரிந்தார்கள். அந்த அநீதியை எதிர்த்து காந்திஜீ போராடத் தொடங்கினுர். அவருடைய போராட்டங்களுக்கு ஆயுதங்கள் தேவைப்பட்டனவா? இல்லை வலுவுள்ள கைகள் தேவைப்பட்டனவா? இல்லை! உறுதியுடைய இதயங்கள்தான் தேவைப் பட்டன. சத்தியத்தை வைத்து யுத்தம் செய்வோர்க்கு ஆயுதங்கள் தேவையில்லை என்பதுதான் இஸ்லாத்தின் கோட்பாடு. அந்த வகையில்தான் நியாயத்தையும் தர் மத்தையும் வைத்து நாம் போராடுகிறோம். இன்றில்லா விட்டாலும் என்றுகிலும் ஒரு நாள் சத்தியம் வெற்றி பெற்றே தீரும். **சத்தியமும், உறுதியுமிக்கவர்கள் என்றைக்கும் தோல்வியடைய மாட்டார்கள்**-அவ்வகை யில் நாம் தொடர்ந்து போராடுவோம். அதற்காக நாம் யாரையும் இழிவுபடுத்த வேண்டியதில்லை; கண்ணி யத்துடனும், பெருந்தன்மையுடனும் நமது போராட் டத்தை நடத்திக்கொண்டே இருப்போம். எவ்வளவு காலத்துக்குத்தான் அவர்கள் நியாயத்தின் பக்கம் முகத்தைத் திருப்பாமல் பிடிவாதமாக இருப்பார்கள்? நிச்சயமாக அவர்கள் மனம் மாறுவார்கள்; மாறியே தீர்வார்கள். நாம் யாருக்கும் தீங்கு விளைவிப்பதில்லை என்பது சத்தியமானுல், வெற்றியும் சத்தியமாகும்.

## ஒன்பது வருட லீலைகள் :-

இந்த ஒன்பதாண்டுகளில் அவர்களுடன் ஐக்கியத் தோடு இருக்க எல்லா வழிகளையும் கடைபிடித்து விட்டோம். இதை எல்லோரும் உணராமலிருக்கிறுர் கள் என்று சொல்வதற்கில்லை. நமது ராஜ்யத்தில் பல காங்கிரஸ் தலைவர்கள் நம்மை நன்முக உணர்ந்திருக் கிறுர்கள். நமது கொள்கையின் மீதும் போக்கின் மீதும் நல்ல மதிப்பும் வைத்திருக்கிறுர்கள். நம் உறவின் மூலம் நாட்டின் நன்மைக்கு நல்ல பாதையே ஏற்படும் என்பதையும் அறிந்திருக்கிறுர்கள். அத்தகையோருடைய அன்பையும் அனுதாபத்தையும் நாம் மதிக்கிறோம். ஆயினும், அவர்கள் மற்றோருக்குக் கட்டுப்பட்டவர்களாகையால் வாய் உறவோடு நிற்க வேண்டியவர்களாகிறுர்கள்.

அவர்களுடைய மேலிடமோ, கண்ணை ஒரேயடியாக மூடிக்கொண்டு, இதுதான் சரியான பாதை என்று வேகமாக நடந்து கொண்டிருக்கிறுர்கள். நேற்று வரை, ஹிந்து-முஸ்லிம் ஒன்று என்றும், சமம் என்றும் கோஷமிட்டுக் கொண்டிருந்தவர்கள், ஆட்சி பீடமேறிய வுடன், முஸ்லிம்களின் நிலையை திடுமெனக் கீழே சரித்து விட்டார்கள். நேற்றுவரை சகோதர வேடிக்கை காட்டிக் கொண்டு வந்தவர்கள், இன்று தாங்கள் மிகவும் உயர்ந்து விட்டதாகக் காட்டிக் கொள்கிறுர் கள். பொதுவாக வளரும் இந்த சூழ்நிலையை அறிவு மிக்க மக்கள் சிந்திக்க வேண்டும். சுதந்திரத்துக்குப் பிறகு இந்த நாட்டின் இஸ்லாமிய மக்களின் நிலை கொஞ்சங் கொஞ்சமாகத் தாழ்ந்து கொண்டே வந்திருக்கிறது என்பது ஒன்பது வருடங்களில் ஓரளவு தெரிய ஆரம்பித்து விட்டது. **இதே நிலை நீடித்துக் கொண்டே போகும் பட்சத்தில் இன்னும் சில ஆண்டு களில், இந்த சமுதாயம் மிகவும் பரிதாபத்துக்குரியதாகி விடுமென்பதில் சந்தேகமில்லை.**

முஸ்லிம்களுடைய உண்மையான பிரதிநிதிகள் ஆட்சியின் நடவடிக்கைகளில் கலந்து கொள்ள முடியாதபடி வகை செய்து விட்டார்கள். தனித் தொகுதியைத்தான் ரத்து செய்து விட்டார்களென்று லும் முஸ்லிம்களின் சரியான பிரதிநிதிகள் தங்கள் கருத்துக்களை வெளியிட என்ன வழி செய்தார்கள்? இந்த நாட்டின் சிறுபான்மை மக்களின் கருத்துக்கள் என்ன என்பதை அறிந்து கொள்ள தேவையில்லையா? அதற்காக ஒரு வழி வகுக்கக் கூடாதா? மேனுடுகளில் இத்தகைய பிரச்சினைகளைத் தீர்க்க, பெருக்க ஒட்டு (*MULTIPLE VOTES*) முறை அமுலில் உள்ளதை அவர்களுக்கு பன்முறை எடுத்துக் காட்டியிருக்கிறோம். அவர்கள் உள்ளத்திலே உண்மையான ஜனநாயக முறையின் நாட்டமிருந்தாலல்லவா அந்த நியதியை யெல்லாம் கவனிக்கப் போகிறுர்கள்? இப்போதுள்ள பொதுத் தொகுதியிலே முஸ்லிம்கள் எப்படி வர முடியும்? அப்படியானுல் இந்த சமூகம் ராஜ்ய நடவடிக்கைகளில் குரல் காட்ட முடியாமல் போக வேண்டுமென்பது தானே அவர்கள் கருத்தாகும்? அல்லது அவர்கள் சொல்வது போல ஆடிக்கொண்டு மானம் மரியாதையை இழந்து ஸ்தானம் பெற வேண்டும் என்பதுதான் கருத்தா? ஆம்! இத்தகைய வழி ஒன்றுதான் இருக்கிறது ஆனுல் அவ்வழியில் முஸ்லிம்கள் ஒருக்காலும் தங்களைக் கீழோராக்கிக் கொள்ள மாட்டார்கள்.

நமது மதிப்பிற்குரிய காங்கிரஸ் நண்பர்கள், ஆட்சி பீடமேறிய அன்றிலிருந்து இன்று வரை, கண்ணை மூடிக்கொண்டு ஒரே வழியாகத்தான் சென்று கொண்டிருக்கிறார்கள். நியாயம் அநியாயம் என்பதைப் பற்றியெல்லாம்அவர்களுக்கு யோசிக்க நேரமில்லை. அவர்கள் எது எதை நினைக்கிறார்களோ அவற்றையெல்லாம் அவசர அவசரமாக செய்து கொண்டு போகிறார்கள். தங்களுக்கு மெஜாரிட்டி பலம் இருக்கும் காரணத்தினால் தாங்கள் செய்வதெல்லாம் சரி என்ற மனப்பான்மை தான் அவர்களுக்கு இருக்கிறதே தவிர தர்மத்தின் அடிப்படையில் அவர்களின் நடவடிக்கைகள் இல்லை.

## மதத்தில் தலையீடு :-

மத விஷயங்களில் தலையிட்டு அநீதி புரிவது என்பது காங்கிரஸ்காரர்களுக்கே சர்வ சாதாரணமான விளையாட்டாக இருந்து வருகிறது. ஒரு சமயம் முஸ்லிம் களுக்கு பாதகம் விளைவிக்கும் சட்டமொன்று ராஜ்ய சபையில் நிறைவேற்றிய போது, அதை எதிர்த்துப் பேசினேன். சட்டமந்திரி ஒருவருக்கு ஏகப்பட்ட ஆத்திரம் வந்து விட்டது. அவர் கூறுகிறார் ''மிஸ்டர் இஸ்மாயீல்! இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதற்கே நீங்கள் துடிக்கிறீர்களே! நாங்கள் நினைத்தால் உங்கள் மார்க்கத்தையே இந்நாட்டில் நிறுத்திவிட முடியும் என்பதை நினைவில் வையுங்கள்'' என்று வெறிபிடித்தவர் போல பேசினார். நானும் அவருக்குச் சுடச்சுட பதில் கூறினேன். ''அத்தகைய துணிவு உங்கள் நெஞ்சிலிருந்தால் நேரடியாக செய்துதான் பாருங்களேன்'' என்றேன். இங்கும் உங்களை சிந்திக்கத்தான் சொல்கிறேன். காங்கிரஸ்காரர்களின் இதய ஆழத்துக்குள் என்ன படிந்திருக்கிறது என்பதை ஆழ்ந்து சிந்தியுங்கள்.

## யார் பேசுகிறார்கள் :-

மதச்சார்பற்ற சர்க்கார் என்று ஒரு புறம் கூறிக் கொண்டே ஹிந்துலாவையும், சொத்துரிமை சட்டங்களையும் மற்ற மதங்களில் தலையிட்டு அநீதியையும் செய்து கொண்டு வருவதைக் காண்கிறோம். இதை எதிர்த்து யார் பேசுகிறார்கள்? இந்த அநீதிகளை எதிர்க்க யாருக்குத் துணிவு வருகிறது? ஜமீயத்துல் உலமாயே ஹிந்த் என்ற பெயரை வைத்துக் கொண்டிருக்கும் தேசிய உலமாக்களின் கூட்டத்தார், பார்லிமெண்டில் பலர் இருக்கிறார்களே யாராவது தங்கள் மார்க்கத்துக்கு விரோதமாக உருவாகும் சட்டங்களை எதிர்த்து ஒரு வார்த்தை பேசினார்களா? பார்லிமெண்டில் என்ன, வெளியேதான் வாய் திறந்திருக்கிறார்களா? தேசிய முஸ்லிம்கள் என்று தங்களைக் கூறிக் கொள்ளும் திருக் கூட்டத்தார் இருக்கிறார்களே, அவர்களாவது எங்கேனும் இந்த அநீதிகளை எதிர்த்து மூச்சுவிட்டிருக்கிறார்களா? ஒரு ஹிந்துவும், முஸ்லிமும் கல்யாணம் செய்து கொள்ள சட்டபூர்வமாக வழி அமைக்கப்பட்டுள்ள கொடுமையை எதிர்த்து வாய் திறக்க அஞ்சக் கூடியவர்கள், சமுதாயத்துக்கு எந்த விஷயத்தில் தான் உதவியாக இருக்கப் போகிறார்கள்? இந்த அநீதியை எதிர்க்கவும், உண்மையை பகிரங்கப் படுத்தவும் முஸ்லிம் லீக் காரர்கள்தானே முன்வருகின்றனர்!

# நாம் முன்மாதிரியாக இருக்கவேண்டும்

எங்கள் ஊரில் ஒரு நிகழ்ச்சிக்காக காயிதே மில்லத் அவர்கள் வருவதாக இருந்தது. திரளான மக்கள் ரயில் நிலையத்தில் கூடி இருந்தோம். குறித்த நேரத்தில் ரயில் வரவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் விசாரித்ததில் மூன்று மணி நேரம் தாமதமாக ரயில் வந்து கொண்டிருக்கிறது எனக் கூறினர். ஏன் வீணாக மூன்று மணி நேரம் நிலையத்திலேயே காத்திருக்க வேண்டும் என எண்ணி கூட்டம் கலைந்து விட்டது. தலைவரவர்களை ஏற்றிச் செல்ல வந்திருந்த கார்களும் ஊருக்குள் திரும்பிப் போய் விட்டன. குறித்த நேரத்தையொட்டி பின்னர் வந்து விடலாம் எனப் பலரும் அங்குமிங்கும் சென்று விட்டார்கள்.

என்றாலும் நானும் ஓரிரு நண்பர்களும் ரயில் நிலையத்திலேயே தங்கி விட்டோம். என்ன ஆச்சரியம்? திடீரென ரயில் வந்து விட்டது. அதிலிருந்து காயிதே மில்லத் அவர்கள் இறங்கினார்கள். நானும் மற்றொரு நண்பருமே பிளாட்பாரத்தில் நின்றோம். ஓடிச் சென்று தலைவரை வரவேற்றோம். பெரிய கூட்டத்தை கூட்டி வைத்துக் கொண்டிருந்த போது ரயில் வரவில்லை. ஒருவரும் எதிர்பாராத சமயத்தில் ரயில் வந்து விட்டதே! என்று எங்களுக்குப் பெரிய ஏமாற்றம். உடனே அழைத்துச் செல்ல கார் கூட இல்லை. ஊருக்குத் தகவல் சொல்லி கார் வந்த பிறகு தான் போகலாம் என்ற நிலைமை. ''இந்த ரயில் நிலையத்தில் வெயிட்டிங் ரூம் இருக்கிறதா?'' என்று காயிதே மில்லத் வினவினார்கள், இல்லை என்றோம். அப்படியானால் பிளாட்பாரத்தில் நின்ற படியே கார் வரும்வரை பேசிக் கொண்டிருப்போமே என்று சர்வ சாதாரணமாகச் சொல்லி விட்டார்கள்.

வந்திருக்கும் தலைவர் யார் என்று தெரிந்ததும் ஸ்டேஷன் மாஸ்டர் அருகில் வந்து, ''வேண்டுமானால் எனது அறையிலேயே அமர்ந்து கொள்ளலாம்; கார் வரும் வரை இங்கேயே நிற்பானேன்'' என்று சொன்னார். அவருக்கு நன்றி கூறிவிட்டு ''நண்பர்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன் இதுவே போதும்'' என்று அதிகாரியை அனுப்பி விட்டார்கள்.

ஸ்டேஷன் மாஸ்டர் சென்ற பிறகு தலைவரவர்கள் எங்களிடம் வெயிட்டிங் ரூம் இல்லாத போது ஸ்டேஷன் மாஸ்டர் அறையில் போய் அமர்ந்து கொள்வது சரியான மரபல்ல. சட்டத்தை கடைப் பிடிக்க வேண்டிய நாமே சட்டத்தை மீறினால் எப்படி? நமக்கு சில சௌகரியக் குறைவுகள் ஏற்பட்டது என்பதற்காக தவறான வழிகாட்டலுக்கு நாமும் ஆளாகி விடக்கூடாது'' என்று விளக்கிக் கூறினார்கள். எவ்வளவு முன் ஜாக்கிரதையாகவும், எச்சரிக்கையாகவும் முன் யோசனையுடனும் எந்த ஒரு சிறு காரியத்தையும் காயிதே மில்லத் செய்து வருகிறார்கள் என்பதை எங்களால் அப்போது புரிந்து கொள்ள முடிந்தது.

ஹாஜி *M. A.* குலாம் மைதீன் சாகிபு
அய்யம் பேட்டை

### கல்வியில் அநீதி :-

கல்வியை எதற்காகக் கற்கிறோம்? வெறும் வயிற்றுப் பிழைப்புக்கு மாத்திரம்தானா? சத்தியம், நேர்மை, நியாய உணர்ச்சி இவைகளெல்லாம் மனிதனுக்குத் தேவையில்லையா? இவைகளை எங்கிருந்து பெற முடியும்? விஞ்ஞானத்திலிருந்து பெற்று விட முடியுமா? உடற்கூறு சாஸ்திரத்திலிருந்து பெற்றுவிட முடியுமா? கணிதம், பூகோளத்திலிருந்து கற்றுவிட முடியுமா? மனிதப் பண்பாடுகளை வளர்க்க மார்க்கக் கல்வி ஒன்றினால் மட்டுந்தான் முடியும் என்பதில் என்ன சந்தேகம் இருக்கிறது? **மார்க்கப் படிப்பு இல்லாதது நிச்சயமாக கல்வியே அல்லவென்பேன்;** மார்க்கப் படிப்பின்றி கல்வி கற்றவன் மனிதப் பண்பையே இழந்தவனாகத்தான் உருவாக முடியும். இவ்விதம்தான் மேல் நாடுகள் மார்க்கத்தை புறக்கணித்தன. இரண்டாவது உலக யுத்தம் அவர்களுக்கு ஓரளவு நல்லறிவை உண்டாக்கியது. இன்று மார்க்கக் கல்விகளுக்கு நல்ல முக்கியத்துவம் அளிக்கத் தொடங்கி விட்டார்கள். நமது மாகாணத்தைப் பொறுத்தவரையில் மார்க்கக் கல்வியைப்பற்றி அப்போதைய மாகாணப் ''பிரதமர்'' ஆக இருந்த ராஜகோபாலாச்சாரியாரிடம் ஒரு சமயம் விவாதித்தேன். அவர் நியாயத்தை ஒப்புக் கொண்டார். நமது மாகாணத்தைப் பொறுத்த வரையிலேனும் அதற்கு ஏற்பாடு செய்ய இணங்கினார்; ஆனால், அதன்பின் ஒன்றும் செய்ய அவரால் இயலாமல் போய் விட்டது.

### ஆதரிக்க முடியுமா :-

இவ்விதம் சகல துறைகளிலும் அநீதியை மூலதனமாகக் கொண்டு, அதிக வேகமாகப் பிரயாணம் செய்யும் காங்கிரஸ் காரர்களை நாம் எந்த வகையில் ஆதரிப்பது? ஆதரிப்பதற்கு என்ன நியாயமிருக்கிறது? நம் ஜீவாதார உரிமைகளைக் கூட அளிக்க மறுக்கும் இவர்களின் வேகமான பிரயாணத்துக்குக் கொஞ்சமேனும் தடை ஏற்படத்தான் வேண்டும்; அந்த வகையில் நாம் காங்கிரஸ் காரர்களை ஆதரிக்காமலிருக்க வேண்டியது ஒன்று தான் நமது பாதையாக இப்போது இருக்கிறது.

### எல்லாம் போய் விடும் :-

மார்க்கம் என்று ஒன்றிருக்கிறது; அது பரிசுத்தமானது; அதைப் பாதுகாப்பது, சந்தர்ப்பம் நேர்ந்தால் அதற்காக தியாகம் செய்வது தங்களின் கடமை என்று யார் நினைக்கிறார்களோ அவர்களுக்குத்தான் நான் பேசுகிறேன். பொறுமை, நீதி, சகிப்புத்தன்மை இவைகளை அடிப்படையாகக் கொண்டு, எந்த கஷ்டங்களிலும் மற்றவர்களுடைய அன்பைப் பெறுவதுதான் நமது செயல்முறையாக இருந்து வருகிறது, நாம் இதைப் பலமுறை நிரூபித்திருக்கிறோம்.

**ஆனால் அநீதிக்கும் அக்ரமத்துக்கும் என்றென்றும் தலை வணங்கியே போய்க்கொண்டே இருக்க வேண்டும் என்று நினைப்போமானால் மேல்தோல் மாத்திரம் போகாது எலும்பும், நரம்பும் சதையும் மாத்திரம் போகாது. எல்லாமே ஒரேயடியாகப் போய்விடும்**-அநீதியையும், அக்ரமத்தையும் சகித்து சகித்து சமாதானம்பேசிக் கொண்டிருந்த வர்க்கமும் உலகத்தில் இல்லை; நேர்மைக்காகவும் தர்மத்துக்காகவும் தியாகம் செய்த கூட்டங்கள் தான் உலக வரலாற்றில் உயிரோடு இருக்கின்றன. முஸ்லிம்கள் கோழைகள் அல்ல; எண்ணிக்கையில் குறைவானவர்களாக இருந்தாலும் சத்தியப் பாதையிலே உறுதியுடன் நிற்கக் கூடியவர்கள்.

இப்படி நாம் தீர்மானம் செய்வதற்கு பைத்தியக்காரர்களல்ல; அரசியல் சூழ்நிலைகளையும், நாட்டின் நிலைமைகளையும் புரியாதவர்களல்ல. அது நமக்கு பால பாடமாகும். ஆதலால் உறுதியுடலும், பொறுமையுடனும் இருந்து, உங்கள் ஐக்யத்தையும், கட்டுப்பாட்டையும் நிரூபிப்பீர்களானால், வெற்றி நிச்சயம். எல்லாம் வல்ல இறைவன் நமக்கு திடசித்தத்தையும், வல்லமையையும் அளிப்பானாக என்னும் பிரார்த்தனையுடன் எனது சொற்பொழிவை முடித்துக் கொள்கிறேன்.

# மாற்றுக் கட்சிக்காரரையும் கவர்ந்தவர்

எங்கள் ஊரைச் சேர்ந்த ஒருவர் ரயிலில் சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றிருக்கிறார். அதே பெட்டியில் ஆடுதுறை ரயில் நிலையத்தில் காயிதே மில்லத் அவர்களும் மதராஸ் செல்வதற்காக ஏறி இருக்கிறார்கள், பேச்சுவாக்கில் அவர் இன்ன ஊர்க்காரர் என்று தெரிந்தவுடன், அய்யம் பேட்டையிலுள்ள முஸ்லிம் லீக் ஊழியர்கள் ஒவ்வொருவராகப் பெயரைச் சொல்லி, அவர் சௌக்கியமா? இவர் சௌக்கியமா? என்று ஒருவர் விடாமல் காயிதே மில்லத் குசலம் விசாரித்தார்களாம்.

மாயவரம் ரயில் நிலையத்தில் வண்டி வந்து நின்றது. அய்யம் பேட்டைக்காரர் இரவு சாப்பாட்டிற்காக தயிர்சாதம் பொட்டல விற்பனையாளரை தேடிக் கொண்டிருந்திருக்கிறார். இதைக் கவனித்த காயிதே மில்லத்—அவரிடம் சாப்பாடு ஒன்றும் வாங்க வேண்டாம் என்று தடுத்து விட்டார்களாம், பின்னர் தாங்கள் ஆடுதுறையிலிருந்து கொண்டு வந்திருந்த கோதுமை ரொட்டியையும், பொரித்த மீனையும் எடுத்து வைத்து இருவருமாக சாப்பிட்டிருக்கிறார்கள்.

இந்த லட்சணத்தில் அம்மனிதர் நமது கட்சியைச் சேர்ந்தவரல்ல. மாற்றுக் கட்சிக்காரர். சதா முஸ்லிம் லீகை குறை சொல்லிக் கொண்டேயிருப்பவர். அவர் மதராஸில் இருந்து திரும்பி வந்ததும் எங்களிடம் வந்து நடந்த விபரங்களைக் கூறினார். முஸ்லிம் லீக் தலைவரைப் பற்றி நான் என்னவென்றோ எண்ணிக் கொண்டிருந்தேன். இவ்வளவு அருமையாக பண்புடன் நடந்து கொண்ட தலைவரை நான் பார்த்ததே கிடையாது. இவ்வளவு நாளும் அவர்களது அருமை பெருமைகளைத் தெரியாது இருந்து விட்டேன். இன்றிலிருந்து நான் முஸ்லிம் லீகில் சேர்ந்து விட்டேன். உங்களில் ஒருவனாகி விட்டேன் என்று கூறி மகிழ்ந்தார்.

ராஜ் முஹம்மது
அய்யம் பேட்டை

# II

[1957 மே மாதம் ஆரம்பத்தில் திருநெல்வேலி ஜில்லா கடையநல்லூரில் நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் காயிதே மில்லத் ஆற்றிய சொற் பொழிவின் சாரம்.

## கண்ணும் காதும்:-

எனக்கு முன் பேசிய நண்பரவர்கள் ''கண்ணிருந் தால் காணுங்கள்; காதிருந்தால் கேளுங்கள்'' என்று ஒரு வசனத்தைச் சொன்னார்கள். அது யாவரும் உணர்வதற்குரிய கருத்துடைய வசனமாகும்.

இந்த நாட்டில் சிறுபான்மை மக்களாகிய நமக்கு சாதகமாகவும், பாதகமாகவும் நடந்த, நடக்கின்ற, நடக்க போகின்ற நிகழ்ச்சிகள் என்னென்ன? இந்த புண்ணிய பூமியில் நம் சமுதாயத்தின் வாழ்வில் எவ் வளவு தூரம் வேதனை நிறைந்திருக்கின்ற தென்பதை கண்ணுடையோர் கண்டறிவார்கள். நலிவுற்ற சமு தாயமாக நம்மை ஏளனம் பேசி ''காட்சிப்பொருள்'' என்று கிண்டல் செய்யும் பஞ்சசீல அறிஞர் பண்டித நேரு போன்ற புண்ணியவான்களும், அவர் சகாக்க ளான மேதாவிகளும் பேசுகிற பேச்சுகளை பத்திரிகை மூலமாக வாசித்தும், நேரடியாகவும் வானொலி மூலமா கவும் கேட்டும் காதுடையோர் கருத்தைக் கிரகித்திருப் பார்கள்.

## நேருவின் சேவை:

இந்த நாட்டில் சிறுபான்மை மக்கள் ஐக்கியத் தோடு இருந்து நாட்டுக்கும், சமுதாயத்துக்கும், பணி புரிய இடமளிக்காமல் அவர்கள் சிதறி சின்னாபின்னமாய் உழல தன்னுணர்வு அற்றவர்களாகத் திகழ பண்டித நேரு அரும் பெரும் பணியாற்றுகிறார்.

ஜனநாயகமென்பது சிறுபான்மை மக்களுக்கும் நீதி யும், உரிமையும் சமத்துவமும் உடையது என்று தான் கேள்விப்பட்டிருக்கிறோம். இங்கோ அது விசித்திர ரூபத் தில் உலவுகிறது. ஜனநாயகத்தை காக்க, வளர்க்க கடமையேற்றவர்களே, ஜனநாயக ரீதிக்கு முரணாகப் பேசுகின்றனர்; செயல் புரிகின்றனர். சிறுபான்மை மக்களின் ஐக்கியத்துக்கு எதிராக; உலக ஐக்கியமும், சமாதானமும் பஞ்ச சீலமும் பேசும் கனம் நேருவே பேசுகிறார்.

''ஜனநாயக ரீதியில், இந்நாட்டின் எண்ணிக்கைக் கேற்ப முஸ்லிம்களுக்கு சம அந்தஸ்து கொடுக்கப்பட் டுள்ளது'' என்று துணிந்து கூறுவோர் இந்நாட்டில் இருக்கிறார்கள். சிறுபான்மையினருக்கு அவர்களின் எண்ணிக்கைக் கேற்ப நியாயம் வேண்டுமென்றால், ''மதச் சார்பற்ற நாடு'' என்கின்றனர். ஆனால் அவர் கள் தங்களிஷ்டத்துக்கு வாய் திறக்கும் போது சிறு பான்மை மக்களுக்குப் பூரண சம உரிமையையும், அந் தஸ்தும் கொடுக்கப்பட்டிருப்பதாகப் பேசுகின்றனர். உலகுக்கு உபதேசம் செய்யும் நம் பாரத பிரதமரிடம், நியாயத்தையும், நேர்மையையும் எடுத்துச் சொன்னால் நம்மை ''பொருட்காட்சி சாலையில் வைக்கப்படும் விநோதப் பொருள்'' என்கிறார். ''வகுப்பு வாதம்'' பட்டம் சூட்டி நம்மை ஒழிக்க சங்கநாதம் செய்கிறார்.

## தலை எங்கே?

இந்த விந்தையான கேள்விகளைப் பற்றிக் காதில் விழும்போது ஒரு நண்பர் கூறிய கதை ஒன்று ஞாபகத் துக்கு வந்துவிடுவதுண்டு.

தென்காசிக்கு மேற்கே மூன்று மைல் தொலைவி லுள்ள திருக் குற்றாலத்தில் ஒரு சாமியார் ஞான நிஷ்டையில் இருந்தாராம் அவருக்குப் பணிவிடை புரிய சீடன் ஒருவன் இருந்தானும். ஒரு நாள் சாமியார் தம் ஞான நிஷ்டையை முடித்துக் கொண்டு வெளியே வந்தவர் தம் சீடனை நோக்கி, ''சிஷ்யா என் தலை எங்கே?'' என்று கேட்டாராம். இதைக் கேட்டு திடுக்கிட்ட சிஷ்யன், ''பரமார்த்த குருவே! உங்கள் தலை எங்கே இருக்கிறதென நீங்கள் கேட்கும் வினா எனக்கு விந்தையாக இருக்கிறது. நீங்கள் பேசுகின்ற வாய் உங்கள் தலையில் தானே உள்ளது!'' என்று கூறினான். இருந்தாலும் குருவின் கேள்விக்கு தான் அளித்த பதில் அவனுக்கே திருப்தியை அளிக்கவில்லை. தன் குருநாதரின் அறிவாற்றலை, அவர் கேள்வியிலிருந்து தெரிந்து கொண்ட, புரிந்து கொண்ட சிஷ்யன், உடனே அவர் கையிலிருந்த தண்டத்தைப் பிடுங்கி, நச்சென்று அவர் தலையிலடித்து ''குரு ஜி! உங்கள் கழுத்தின் மேல் தான் தலையிருக்கிறது என்பது இப்போ தாவது உணர முடிகிறதா?'' என்று கேட்டானும். முஸ்லிம் லீக் எங்கே இருக்கிறது என்று கேட்கும் வேடிக்கையாளர்களை நினைக்கும் போது, இந்த குற்றாலத்துக் குருநாதருடைய நினைவுதான் எனக்கு ஏற்படுகிறது. அத்தகைய குருநாதர்களுக்கு இந்த கூட்டமே ''தலை எங்கே இருக்கிறது'' என்பதை உணர்த்தும் என நிச்சயமாக கூறுகிறேன்.

## தன் கையும் பிறர் கையும்!

அரசியல் ஆட்டக்காய்களாகப் பயன்பட்டு வரும் புதிய கவும்களே! நீங்கள் எங்களை நோக்கி ''ஏன் பெரும் பாரத்தை வீணாகச் சுமந்து கஷ்டப்படுகிறீர்கள்? உங்களுக்கு வேலை இல்லையா?'' என்று கேட்காதீர்கள்?

''தன் கையே தனக்குதவி'' என்ற நம்பிக்கையில் வாழ்பவர்கள் முஸ்லிம் லீகர்கள். பிறர் கையை நம்பி வாழக் கூடியவர்கள் நீங்கள். உலகந்தோன்றிய காலத்திலிருந்து இன்று வரையுள்ள சரித்திரத்தில் பிறர் கையை நம்பி வாழ்ந்த எந்த சமுதாயமும் நீடித்தி ருந்ததில்லை. அவர்கள் எந்தக் கையை நம்பி நிற்கிறார் களோ, அந்தக் கைகள், அவர்களை கழுவி விடும்போது, அடியற்ற நெடுமரமாக சாய்ந்து மக்கி மண்ணோடு, மண்ணாகப் போவதைத் தவிர வேறு வழியில்லை. தனக்கென ஒரு கொள்கையற்ற சமுதாயம் உயிர் வாழ

முடியாது என்பது உலகம் கற்றுக் கொடுத்த, கொடுத்து வரும் சாதாரண பாடமாகும்.

எங்களை ''வகுப்பு வாதிகள்'' என்று கூறுவதில் இந்நாட்டின் பிரதமரான கனம் நேரு அவர்களுக்கும். அவர்களை சார்ந்தோருக்கும், தனி மகிழ்ச்சி இருக்கிறது. அவர்களுடைய கடைக்கண் கிருபையை நோக்கியிருப்பவர்களும் அவ்விதம் எங்களை ''வகுப்பு வாதி''கள் என்று கூறுவதை ஒரு ''ஃபாஷனுக''க் கொண்டிருக்கிறார்கள். இவர்களெல்லாம் இப்படி கூறுவதன் காரணம் தங்களிடமுள்ள வகுப்புவாதத் தன்மையைப் பிறர் புரிந்து கொள்ளாமலிருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் என்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை. நியாயமான அரசியல் நிர்ணய சாஸனம் ஒப்புக் கொண்ட மைனாரிட்டிகளுக்குரிய உரிமையை ''வகுப்பு வாதம்'' திரையிட்டு மறுக்கும் இவர்கள், மிகவும் வருந்தத் தக்க ஜாதீய வாதத்தில் நீச்சலடிப்பதைக் காண்கிறோம். இந்த ஜாதீய வாதத்திலிருந்து, விலக்குப் பெற்றிருப்பவர்கள் யாரென்று கேட்கிறேன்.

தேர்தல் நடந்து இன்னும் மாதங்கள் பல ஓடிவிடவில்லை. ஒவ்வொரு தொகுதியிலும் ஜாதீய வாதமே தலை தூக்கி நின்று வெற்றி பெற்றிருப்பதை, சாதாரண அறிவுடையவன் கூட நன்கு உணர்வான்.

சட்ட சபையில், மேல் சபையில். மக்கள் சபையில், மந்திரிகள் சபையில் எல்லாம் ஜாதிய பிரதிநிதிகளே நிறைந்திருப்பதும், ஜாதீய வாதத்தின் அடிப்படையிலேயே பதவிகள் பிரிக்கப்பட்டிருப்பதும் தெள்ளத் தெளிவாகத் தெரியும் உண்மையாகும். இந்த உண்மையை மறைக்கவே, மிகப்பெரும் கவுரவத்தோடு ''வகுப்பு வாதிகள்'' என்று எங்களைக் கூறுகிறார்கள். இப்படிக் கூற இந்த ஜாதீய வாதிகள் வெட்கப்படுவது கூட இல்லை என்றால் விந்தையாக இருக்கிறதல்லவா?

## அஞ்சாதீர்கள்!

சகோதர இஸ்லாமிய பெருமக்களே! நீங்கள் இன்று முதற்கொண்டு என்றும் வழக்கம் போல, ஒற்றுமையெனும் கயிற்றை இறுகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். அதையே மூச்சும், உடலுமாகக் கொண்டு நீங்கள் வாழ முனைந்தால் உங்களுக்கு ஒப்பாரும் மிக்காரும் யாருமிருக்க மாட்டார்கள். எந்த சக்தியாலும், உங்களை அழித்துவிட முடியாது. உங்கள் இஸ்லாம், உங்கள் இயக்கம், நாளுக்கு நாள் சிறந்தோங்கும் என்பதில் சந்தேகமில்லை.

இன்று. நீங்கள் உங்கள் கொள்கையால்—உங்கள் எதிரிகளால் நேரடியாகவும், மறைமுகமாகவும் உங்களுக்கு சொல்லொணா துயர்கள் பல சூழலாம்—வறுமையும், வாட்டமும்—தேட்டமும் மிகும். ஆகவே, நீங்கள் நெஞ்சுதளர வேண்டாம். அஞ்சாத நெஞ்சுடையோர்—பொறுமையின் பிறப்பிடம் தீனோர்கள் என்று உலகோர் வாழ்த்த இனிது வாழ்வீர்களாக! துன்பத்திற்குப்பின் தான் இன்பம். இன்னலின்றி புகழ் பெற்ற மாந்தர்கள் மாநிலத்திலுண்டோ? இல்லை. இன்று நீங்கள் அரும்பாடுபட்டு வாங்குகின்ற சிறுபான்மைச் சுதந்திரம் உங்கள் குலத் தனி மக்களுக்கு நேர் வழியையும், சுகவாழ்வையும் காட்டும்—நாட்டும்—திசைக்கருவியாக மாறும் என்பதில் ஐயமில்லை. நீங்கள் தன்மான உணர்வற்று மண்மீது சுரண்டலுக்கும்—ஆணவத்திற்கும் அடிமைப்பட்டீர்களேயானல் நாளை உங்கள் மக்கள் ரத்தக்கண்ணீர் சிந்தி அழுவர். அவர்களுக்கு கிடைக்கும் சன்மானம் மாறாத அவமானம். இத்தகைய நிலைகளை எண்ணி எண்ணித் தேம்பித் தேம்பி அழுது நைந்து நலிவடைந்து செத்து மடிவதோடு உங்களையும் ஏசுவர் என்பது உறுதி. ஆகவே, இன்றே எழுங்கள்! உணர்வு பெறுங்கள்.

உலகில் நீங்கள் எந்தப் பாகத்தில் வாழ்ந்தாலும் சரியே, எந்த இடையூறுகளுக்கு மத்தியில் வாழ்ந்தாலும் சரியே நீங்கள் யாருக்கும் பயப்பட வேண்டாம், அல்லாஹ்வுக்கு அஞ்சி வழிபடுங்கள். அவன் பாதையிலே நீங்கள் உங்கள் மனசாட்சிக்கு ஒப்ப உண்மையுடனும், கண்ணியமுடனும், ஞால ஞான பெருங்கடல்சங்கையிரசூல் முஹம்மத் (ஸல்) அவர்களின் வாழ்க்கை முறையைப் பின் பற்றி தூய மனதுடன் வாழ்வீர்களேயானல் எந்த நம்ரூதோ, பிர்அவுனோ, எந்த மாபெரும் அணுசக்தியோ நம்மை அணுவளவும், அசைக்க முடியாது. அல்லாஹ்வின் சக்தி அவன் பாதையில் அணுகியோரைக் காப்பாற்றும். ஆகவே, நாம் அந்த மாபெரும் சக்திக்கு மிகவும் அஞ்சவேண்டும். உறுதிபூணுங்கள். உங்கள் ஒற்றுமை தான் உலக முஸ்லிம்களின் ஒற்றுமை. ஏன் என்றால் மற்றைய பாகத்தில் வாழும் முஸ்லிம்களை விட நாம் இந்நாட்டில் பெருக்கமாக வாழ்கின்றோம். நம் வாழ்முறையைக் கணித்துத்தான் மற்றைய நாட்டில் வாழும் முஸ்லிம்களின் இஸ்லாமிய வாழ்க்கை முறையைக் கணிக்கின்றனர். அந்த நாட்டு முஸ்லிம்களுக்கு வேண்டிய சுக வாழ்வுச் சட்டத்தை நம் நாட்டில் நமக்குத் தரும் சலுகைத் திட்டங்களை வைத்துத்தான் திட்டமிட்டு ஆவன செய்யப்படுகின்றன. ஆகவே, நல்ல முறையில் நம் தீனுல் இஸ்லாத்தின் போதனைக்கொப்ப வாழ்ந்து பிற நாட்டவர்க்கு முன் பொருளாயும், உவமேயமாகவும் விளங்க வேண்டுமென்ற எண்ணத்தைக் கருத்தில் கொண்டு திருமறைக்கொப்ப வாழ்வீராக! நீங்கள் சோம்பித் திரிந்து பிளவுபட்டு வாழ்ந்தால் உலக முஸ்லிம்களும் அவ்வாறு தான் வாழ்வார்கள். நீங்கள் நிலையற்ற வாழ்முறைகளை கையாளுவீர்களேயானல் உலக முஸ்லிம் சமுதாயத்திற்கு தீங்கு விளைத்தவர்களாவீர்கள் என்பதை மறவாது என்றென்றும் செயல்பட வேண்டுகிறேன்.

நம்மிடையே பாசிகளாகவும்—தூசிகளாகவும், காளான்களாகவும் சில முளைக்கின்றன. அவைகளை புறக்கணிக்க வேண்டாம், ஆதரிக்கவும் வேண்டாம். களைந்து எறிந்து விடாது அவைகளை மூலையில் குவித்து ''தீன்'' என்ற நெல்பயிருக்கு உரமளிக்கலாம். அவர்களிடம்

நீங்கள் கவனமாகப் பழக வேண்டும். அவர்கள் உங்களுக்கு ஒருக்கால் நன்மையும் செய்வர்; அதே நேரத்தில் தீமையும் செய்வர்-புதுசாக இத்தேர்தலில் மானத்தை விலை கூறும் சந்தையாக முஸ்லிம் லீக் இல்லையே! என வருந்தி சிலர் ''லீக்'' என்னும் ''தீன்'' நெறியை விட்டு வெளியே புறப்பட்டுள்ளார்கள். அவர்களுக்கும் ஆண்டவன் நற்புத்தி கொடுத்தருள்வானாக! ஆமீன்.

**கண்ணியம் பொருந்திய கனவான்களே,**

இன்றைய பத்திரிகை உலகில் இஸ்லாமியர்களின் நிலைகளை எண்ணும்போது நமக்கு அழுகையும், ஆவேசமும், கவலையும்; கண்ணீரும், கம்பலையும்தான் இந்த நாட்டில் நாம் பெற்றெடுத்த பெருஞ் செல்வமாகவுள்ளது? காரணம் நம் நிலையை எடுத்துரைக்க நம்மிடையே தினசரியில்லை. நம்மைப்பற்றி எடுத்துரைக்க எந்த தினசரியும் ஆசைக்குகூட முன் வெளிவருவதில்லை. முஸ்லிம்கள் ஏதாவது சிறுபிழை செய்து விட்டால் முதற்பக்கத்தில் பெரிய கொட்டை எழுத்துகளில் எழுதப்படுகிறது. ஓர் பெரிய தீங்காகக் கருதியே! நாம் எங்காவது காரியங்கள் செய்தால் அவைகளை கண் ஒளி நிரம்பப்பெற்ற குமரன் கூட கண்ணால் பார்த்துப்படிக்க கஷ்டப்படும் அளவுக்கு ஓர் மூலையில் சிறு அச்செழுத்தால் ஏதோ என்ற முறைக்கு எழுதப்பட்டு பிரசுரமாம். வதோ அன்றி அறவே ஒதுக்கப்படுவதோ சாதாரணம் இத்தகு இன்னல்கள் நம்மை விட்டு பறந்து போக—பத்திரிகை உலகில் நாம் பூரணத்துவம் பெற வேண்டுமானால் நம்மிடையே வேற்றுமை அறுத்து எறியப்பட்டு ஒற்றுமை செழித்து ஓங்க வேண்டும். உங்கள் ஒற்றுமைதான் அல்லாஹ்வின் ஒற்றுமை. ஆகவே நீங்கள் ஒன்றுபட்டு கூடி தன்மானமுள்ள முஸ்லிம்களாக வாழுங்கள்.

அல்லாஹ்வின் அடியார்களே, நீங்கள் மிக்க ஆர்வமுடன் இங்கு கூடுவதற்கு காரணம் என்ன? நாம் நேர்மையுடனும், ஒற்றுமையுடனும், நாடாளுவோரிடம் நம் நிலைமையை குறையைக் குறி நீதியையும், நேர்மையையும், பிரிக்கமுடியாத சமயத்தையும், அரசியலையும், நேர்மைமிக்க பூரணத்துவ சுதந்திரத்தையும் பெற்று சுக வாழ்வு வாழவேதான் நாம் இங்கு பொங்கும் கடல் வெள்ளம் போல் திரண்டு குழுமியிருக்கிறோம். மனிதன் இவ்வுலகிலும் அவ்வுலகிலும் ஆசிப்பது சீர் பட்ட வாழ்வேயன்றி உடல் அல்ல; உயிரல்ல; உணவல்ல; உடையல்ல; போக போக்கியமல்ல. இன்னும் பிரிதொன்றுமில்லை. நாம் உண்மையுடன் ஹக்கனுக்கு பயந்து வாழ்ந்தால் வெற்றி நிச்சயம் கிடைத்தே தீரும். நமது விரோதிகளையும், சமுதாயத்தை புறமுதுகில் நின்று தாக்குவோரையும், நல்லவர்களாகப் பாவித்து வாழ்வோமானால் அதுவே தீன் தந்த லீக் வெற்றி.



## நீண்டதூர நோக்கு தலைவரின் சிறப்பு அம்சம்

1937-ம் ஆண்டிலிருந்து நான் முஸ்லிம் லீகன். 1941-ம் ஆண்டு சென்னையில் காயிதே ஆஜம் தலைமையில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீக் மாநாட்டிற்கு நான் போயிருந்த சமயம் எனக்கு காயிதே மில்லத் அவர்களது அறிமுகம் ஏற்பட்டது.

மாநில செயற்குழு உறுப்பினராக நீண்ட காலம் இருந்து வருகிறேன். சில சமயங்களில் பெரும்பாலான உறுப்பினர்களுக்கு ஒரு கருத்து சரியானதாகத் தோன்றும். இந்தச் சூழ்நிலையில் இப்படிச் செயல்பட்டால் தான் கட்சிக்கு நல்லது என்று நாங்கள் நினைப்போம். அப்படியே செயற்குழுவிலும் சொல்வோம். ஆனால் காயிதே மில்லத்தின் கருத்து இப் பிரச்னையில் வேறு விதமாக இருக்கும். அவர்கள் என்னதான் விளக்கிச் சொன்னாலும் சிலரது மண்டையில் ஏறாது. தலைவரவர்கள் சொன்னார்களே என்பதற்காக அக்கருத்தை செயற்குழு ஏற்றுக் கொள்ளும். அதன்படி செயல்படும்.

ஆனால் ஒரு சில மாதங்கள் சென்ற பிறகு பார்த்தால் தலைவரவர்கள் தெரிவித்த அபிப்ராயம் தான் சரியானதாக இருக்கும். பெரும்பாலான உறுப்பினர்கள் கொண்டிருந்த கருத்து விபரீதமான ஒன்று என்பது அப்பொழுதுதான் புலப்படும். இந்த உண்மையை அனுபவபூர்வமாக பல சந்தர்ப்பங்களில் நான் நேரிலேயே அனுபவித்திருக்கிறேன். உளத்தூய்மையுடனும், அல்லாஹ்வின் புறத்திலிருந்து தமக்கு தோன்றியவற்றையும் அவர்கள் சொல்வதினாலேயே அவர்களது கணிப்பு சரியாக அமைந்து விடுகிறது என்பது எனது கருத்தாகும். தலைமைக்கு அழகு இதுவே.

ராஜகிரி *N. P.* முஹம்மது ஹுசைன்

## சமுதாயத்தின் தந்தை அவர்

நான் எப்பொழுது பார்த்தாலும் காயிதே மில்லத் அவர்களைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பதை பார்த்து எனது தாய் ஒருநாள் ''என்னப்பா! எப்பொழுது பார்த்தாலும் காயிதே மில்லத், காயிதே மில்லத் என்று கூறிக் கொண்டிருக்கிறாயே! அப்படி என்னப்பா அவரைப் பற்றி விசேஷம் இருக்கிறது?'' என்று கேட்டார். அதற்கு நான் ''அன்னையே நீ எனக்கு மட்டும்தான் தாய்; ஆனால் காயிதே மில்லத் அவர்கள் பத்துகோடி முஸ்லிம்களுக்கும் தாய் போன்றவர்கள்'' என்றேன். அதற்குப் பிறகு எனது தாய் எனது ''காயிதேமில்லத் பைத்தியம்'' குறித்து பிரஸ்தாபித்ததே இல்லை.

*H. S M.* ஷேக் மீரான்
வேலூர்

# மதுராஸ் (1960) மாநாட்டு தலைமையுரை

[காயிதே மில்லத் அவர்கள் சென்னை S.I.A.A. திடலில் 1960-ம் ஆண்டு செப்டம்பர் 17, 18 தேதிகளில் நடைபெற்ற தமிழ்நாடு மாநில முஸ்லிம் லீக் மாநாட்டில் ஆற்றிய தலைமையுரை.]

முஸ்லிம் லீக் மிக்க உயிர்த்துடிப்பு உள்ளதென்பதையும் சமுதாயத்தினரின் இதயங்களில் நீங்காத இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதையும் இன்று நாம் கண் முன்பாகக் காண்கிறோம். இதுவே போதிய சாட்சி.

இன்று நாம் கண்கூடாகக் காணும் ஆரவாரம் அனைத்தும் முஸ்லிம் லீகிற்காகவும் அதன் கோட்பாடுகளுக்காகவுமே உள்ளது. இந்தியாவில் வதியும் முஸ்லிம்களுடையவும், இதர சிறுபான்மையினருடையவும் தேசிய ஸ்தாபனம் முஸ்லிம் லீக். அது ஒரு வகுப்புவாத சபை அல்ல. ஆனால் அது வகுப்புவாதிகளுடைய வைரியாகும். உண்மையில் இது வகுப்பு வாதத்தை அது எங்கெல்லாம் உருவாகிறதோ அங்கெல்லாம்—எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கிறது. இந்தியாவில் எல்லா சமுதாயத்தைச் சேர்ந்தவர்களும் சமமாகவும் கண்ணியமாகவும் வாழவேண்டும் என்பதே அதனுடைய லட்சியம். முஸ்லிம் லீகின் குறிக்கோளைப் பற்றி ஆயிரக் கணக்கான தடவைகள் விளக்கப் பட்டிருக்கிறது.

1. நாட்டின் கண்ணியத்தைக் காப்பாற்றவும் பாதுகாப்பைப் பேணிக் கொள்ளவும், சுபிட்சத்தையும், பலத்தையும் உண்டாக்கவும், உழைப்பது முஸ்லிம்லீகின் லட்சியம்.

2. இந்நாட்டிலுள்ள முஸ்லிம்களுடையவும், இதர சிறுபான்மையினருடையவும், நியாயமான உரிமைகளையும், நலன்களையும் பாதுகாப்பது முஸ்லிம் லீகின் லட்சியம்.

3. இந்தியாவில் முஸ்லிம்களுடையவும் மற்ற சமூகத்தினர்களிடையும் சௌஜன்யத்தையும், நல்லெண்ணத்தையும் ஐக்கியத்தையும் உண்டாக்குவது, அதை ஓங்கி வளரச் செய்வது முஸ்லிம் லீகின் லட்சியம்.

மேலும் முஸ்லிம் லீக் ஒரு சக்திவாய்ந்த ஸ்தாபனமாகவும், ஜீவனுள்ளதாகவும் இருந்த காரணத்தால் தான் நாட்டில் அமைதியையும், ஒற்றுமையையும் பரப்புவதில் அரசாங்கத்துடன் ஆக்ககரமாக ஒத்துழைக்க முடிந்தது. கவர்னர்களுடையவும் மற்ற நிர்வாகிகளுடையவும் அன்புக்கும் புகழுக்கும் உரியதாக முடிந்தது. தொழில் அபிவிருத்திக்காகவும் உணவு உற்பத்தியை பெருக்குவது உள்பட ஆக்ககரமான விவசாய முன்னேற்றத்திற்காகவும் முஸ்லிம்லீக் நெடுகிலும் பாடுபட்டு வந்திருக்கிறது என்பதை மக்கள் மறந்து விடுவதற்கில்லை. கூட்டுத் தொகுதியின் அடிப்படையில் ஏராளமான அபேட்சகர்களை அது தேர்தலுக்கு நிறுத்த முடியாது போயினும் 1952, 1957 ஆம் வருடங்களில் நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் அது நேரான பங்கு கொள்ளவே செய்தது, தேர்தலைக் குறித்து சரியான புள்ளி விவரங்களைத் தெரிந்தவர்களும், விஷய ஞானமுள்ளவர்களும், நாட்டில் பல பாகங்களிலுமுள்ளவர்கள் முஸ்லிம்லீகின் கட்டளைக்கு இணங்கவே முற்ற முற்ற நடந்திருக்கின்றனர் என்பதை மனந் துணிந்து மறுக்கமாட்டார்கள். 1952 லும், 1954லும் சென்னையில் நிலையானதொரு மந்திரி சபை அமைக்க காங்கிரஸுக்கு ஒத்தாசையாக முஸ்லிம் லீக் இருந்தது. மிக சமீபமாகத்தான் இக் கட்சி இதர கட்சிகளுடன் கூட்டுச் சேர்ந்தது. கம்யூனிஸ்ட் ஆட்சியாளர்களின் கொடுமைகளிலிருந்து கேரளாவைக் காப்பாற்றி சுதந்திரமடையச் செய்ததில் நமக்கும் பங்குண்டு! முஸ்லிம்களுக்கு மட்டுமல்லாது நாட்டின் நன்மைக்காக நாட்டு விவகாரங்களில் முஸ்லிம் லீக் பிரதான பங்கு எடுத்து வந்துள்ளது என்பதற்கு நாம் எண்ணற்ற உதாரணங்களை எடுத்துக் காட்ட முடியும். முஸ்லிம் லீக் தீவிரமாக இந்நாட்டில் செயல்பட்டு வருகிறது என்பதை மேற்குறிப்பிட்டவைகளின் மூலமாக நாம் நிரூபிக்கும் பொழுது உடனே நம்மைத் தாக்குகின்றவர்கள் இது ஒரு வகுப்பு வாத ஸ்தாபனம் எனக் கூறத் தொடங்கி விடுகிறார்கள். அதே சமயம் வகுப்பு வாதம் என்றால் என்ன என்பதை அவர்கள் நமக்கு விளக்கமாட்டார்கள்.

ஆனால், முஸ்லிம்களைப் பொறுத்தவரை அரசியல் துறை - அரசியல் அல்லாத துறை என இரு பிரிவுகளாக மார்க்கம் வகுத்துக் காட்டவில்லை. அரசியலிலோ அல்லது வேறு எந்தத் துறையிலோ ஒரு முஸ்லிம் பங்கு கொள்ளும்போது அவன் தன் மார்க்கத்தைப் பின்னால் நிறுத்திவிட்டுச் செல்வதில்லை, எந்த விஷயமானாலும் சரி, நியாயம், அநியாயம் என்ற கட்டுத்திட்டத்திற்குள்பட்டே அவன் தன் கடமையை ஆற்ற வேண்டியதிருக்கிறது; இறைவன் மீது நம்பிக்கை வைக்கவேண்

டியதிருக்கிறது. இறைவனுக்குப் பயப்பட வேண்டி இருக்கிறது. சுருக்கமாகச் சொல்லப்போனால் அவனது மார்க்கத்தின் படி அவன் ஒழுக வேண்டியதிருக்கிறது. இச் செயல்கள் மற்ற சமுதாய மக்களுக்கு தீங்கிழைத்து விடாது; நாட்டிற்கு குந்தகத்தை ஏற்படுத்திவிடாது. ஏனெனில், தன் நாட்டின் மீது பற்றும் விசுவாசமும் கொள்வது ஒரு முஸ்லிமின் உறுதிப் பாட்டில் (ஈமானில்) இரண்டறக் கலந்ததாகும் என இஸ்லாம் விதித்துள்ளது.

நம் மீது சுமத்தப்படும் மற்றொரு குற்றச்சாட்டு, எடுத்ததற்கெல்லாம் நாம் மார்க்கத்தை இழுக்கிறோம் என்பது. ''இஸ்லாத்திற்கு ஆபத்து'' என நாம் இட்டுக் கட்டிக்கொண்டு ஓலமிடுகிறோமாம். இதற்குப் பல தடவைகள் சவிஸ்தாரமாக நாம் பதில் கொடுத்திருக்கிறோம். நமது அரசியல் தோழர்கள் நமது வாதங்களைத் தொட்டுக்கூடப் பார்ப்பதில்லை. மன ஐயங்களைக் களைந்து பிரச்சினையைப் புரிந்துகொள்ள வேண்டுமே என்ற ஆர்வம் அவர்களுக்கு கிடையாது. சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதில் அவர்களுக்கு ஏனோ ஒரு அலாதிப் பிரியம்.

''தவறுதலான வழியிலோ அல்லது தவறான அர்த்தத்திலோ'' நாம் மார்க்கத்தைப் பின்பற்ற விரும்பவில்லை. அதற்கு யாதொரு தடங்கலும் இருக்கக் கூடாது என்றுதான் நாம் வலியுறுத்துகிறோம். மார்க்கக் கட்டளைகளை அனுஷ்டிப்பதில் குறுக்கீடு கூடாது.

''இஸ்லாத்திற்கு ஆபத்து'' எனக் கூறும்பொழுது அது ஒரு கற்பனையான கூற்றுத்தானா? இது வரை நான் எத்தனையோ எடுத்துக் காட்டுகளை உங்கள் முன் சமர்ப்பித்தேன். மார்க்கத் துறையில் அரசியலார் செய்திருக்கும் ஊடுருவல்களை விளக்கிக் கூறினேன். இக் குற்றச் சாட்டுகள் அனைத்தும் கற்பனைகள்தானா? மார்க்க அனுஷ்டானங்களுக்கு இவை ஆபத்தாக இல்லையென்றால் பின்னர் எதைத்தான் ஆபத்தானது எனப் பட்டம் சூட்ட நினைக்கிறீர்கள்? தயவு செய்து கூறுங்கள் பார்க்கலாம்!

பல மசூதிகள், மதரஸாக்கள், ஆஷுர்கானாக்கள், இமாம் பாராக்கள் மற்றும் முஸ்லிம் சமுதாயத்திற்குச் சொந்தமான சொத்துக்கள் முஸ்லிம் அல்லாதவர்களிடம் இன்னும் இருந்து வருகின்றன. இவைகள் எல்லாம் கற்பனையா? கடந்த பத்து வருடங்களாக இதற்காக முஸ்லிம்கள் எடுக்காத முயற்சி இல்லை; இருந்தும் அவை அவர்களிடம் சேர்ப்பிக்கப்பட்டபாடில்லை.

சுதந்திரத்திற்கு பிறகு, முஸ்லிம் வாலிபர்களைக் கேடு சூழ்ந்து கொண்டது போலும்! நாடு விடுதலை அடையுமட்டும் தகுதி வாய்ந்தவர்களாகவும் திறமைசாலிகளாகவும் திகழ்ந்தவர்கள் திடீரென்று தங்கள் யோக்கியதாம்சங்களை இழந்து விட்டார்கள்! பொது அலுவல்களுக்கு லாயக்கற்றவர்களாகி விட்டார்கள்!!

அரசாங்க அலுவல்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் பட்டியலைப் பார்த்தால் முஸ்லிம் பெயர்களைக் காணுவது அரிதினும், அரிதாக இருப்பதைக் காணுவீர்கள். இவ் விஷயத்திலும் கூட, முஸ்லிம்களின் குற்றச்சாட்டு சரி என்றே நமது பிரதம மந்திரி ஒப்புக் கொண்டுள்ளார். முழுக்க முழுக்க அரசாங்க அலுவலகங்களில்தான் இக் கதி என்பதில்லை. அரசாங்க சார்புடைய நிறுவனங்களிலும், தனியார் நிறுவனங்களிலும் முஸ்லிம் வாலிபர்களுக்கு வேலை கிடைப்பது மிகக் கஷ்டமாக இருக்கிறது. வர்த்தகத்திலும் வியாபாரத்திலும் ஈடுபட்டிருக்கும் முஸ்லிம்களுக்கு அத்துறையில் பல வருஷ அனுபவங்கள் இருந்த போதிலும் லைசன்ஸ்களும், கோட்டாக்களும் கிடைப்பது அரிதாக இருக்கிறது.

அவர்கள் கூறுவது இதுதான்; ''நாங்கள் இஸ்லாத்திற்கு ஆபத்தை விளைவிக்கலாம்; ஆனால் நீங்கள் ''இஸ்லாத்திற்கு அபாயம்'' என்று மட்டும் சொல்லக் கூடாது'' என்கிறார்கள். இந்நிலவரம் சகித்துக் கொண்டிருக்கக் கூடியதுதானா?

தற்கால சூழ்நிலையில் நீங்கள் வேறொரு ஸ்தாபனத்தை உருவாக்கிக்கொள்ள முடியாது; அது அனுபவ சாத்தியமில்லை; வருடக்கணக்கில் முயன்றாலும் ஆகாதது. எனவே, முஸ்லிம்கள் இந்நாட்டில் வாழும்வரை முஸ்லிம்லீக் இயங்கத்தான் செய்யும்; அது செயல்படாதிருக்க வேண்டுமானால், முஸ்லிம் சமுதாயம் இல்லாதிருக்க வேண்டும். உங்கள் சார்பாக இயங்கி வரும் முஸ்லிம் லீக் இந்தச் சமுதாயத்தினருக்குப் பிரத்யேக உரிமைகள் எதையும் கேட்கவில்லை. இந் நாட்டில் எல்லா மக்களுக்குமிடையில் கௌரவமான சமத்துவம் இருக்கவேண்டுமென்றுதான் கேட்கிறது. அதுதானே ஜனநாயகத்தின் ஆணிவேர்.

நமது கஷ்டங்களும், உரிமைகளும் ஒரு புறம் இருக்கட்டும். நம்மிடம் ஒரு அடிப்படை உண்மையும் உண்டு. அதாவது நாட்டின் கௌரவம், நமது கௌரவம் என்றே நாம் கொண்டு வந்திருக்கிறோம். நாடு சந்தோஷமாக இல்லாதபோது நாம் சந்தோஷமாக வாழ முடியாது. இவ்விஷயம் முஸ்லிம் லீகின் முதலாவது குறிக்கோளுடன் சம்பந்தப்பட்டது என்பதை, மறந்து விடுவதற்கில்லை. நமது நாட்டிற்கு ஏதாகிலும் குந்தகம் விளையும் பொழுது அது குறித்து அதிக அக்கறை காட்டுகிறவர்கள் நாம். அத்தகையதொரு சம்பவம் அண்மையில் நாட்டின் வட எல்லையில் நிகழ்ந்தது. சீனாவின் ஆக்கிரமிப்பைத்தான் நான் குறிப்பிடுகிறேன். சில வருடங்களுக்கு முன்னால் சீனப் பிரதமர் நமது பிரதம மந்திரியுடன் சேர்ந்து சினேக உடன்படிக்கை ஒன்றில் கையெழுத்திட்டார். நமது தேசத்தின் நட்பை விரும்புவதாக உலகிற்கு பகிரங்கப் படுத்தினர்; ஆனால் அதே சமயம் சீன அரசாங்கம் மறைமுகமாக மோசடி வேலைகளிலும் ஈடுபட்டு வந்துள்ளது. பாரம்பரியமாகவும், இயற்கையாகவும் இருந்து வரும் ஹிமாலய எல்லையைக் கடந்து நம் பிரதேசத்திற்

குள் ஊடுருவி வடகிழக்கிலும், வடமேற்கிலும் கணிசமான இடத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். வட எல்லை ஓரங்களில் நமது பாதுகாப்பு ஏற்பாடுகள் செம்மை செய்யப்பட்டிருப்பதாக சமீபமாக நமது பிரதம மந்திரி அறிவித்தார். இவ்விதம் அறிவித்துச் சில நாட்கள் கூட கழியவில்லை. மற்றொரு இடத்தில் காடுகள் வழியாக சீனர்கள் ஊடுருவி விட்டதாகத் தெரிவிக்கப்பட்டது. இவை அனைத்தும் சீன அரசாங்கத்துடைய நயவஞ்சக எண்ணத்தைத்தான் பிரதிபலிக்கிறது. இப்பொழுது நமது தேசத்திலிருந்து அவர்களை வெளியேற்றுவதற்கு நாம் உறுதியான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியதிருக்கிறது, அல்லாத பட்சத்தில் நமக்குத்தான் நஷ்டம்.

முஸ்லிம் லீக் தன்னைப் பொறுத்தவரை தனது நிலையை மிகவும் தெளிவாக விளக்கியுள்ளது. அரசாங்கத்திற்குப் பக்கபலமாக இருக்கவும் நாட்டின் கௌரவத்தையும், பாதுகாப்பையும் பேணிக்கொள்ளவும் முஸ்லிம்கள் என்றும் தயாராக இருக்கிறார்கள்.

இன்று நாட்டில் எங்கு திரும்பினாலும், வறுமையும், வேலையில்லாத் திண்டாட்டமும் தலைவிரித்தாடுவதைத்தான் காண முடிகிறது. ஒரு கவளம் அன்னத்திற்காக மக்கள் ஆலாய் பறக்கும் காட்சிதான் கண்முன் நிற்கிறது.

ஐக்கியத்தின் அவசியத்தையும் இங்கு நான் வலியுறுத்த வேண்டியவனாக இருக்கிறேன். ஒற்றுமை என்னும்போது, அங்குமிங்குமாக கொஞ்சம் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும்; மற்றவர்களுடைய கருத்துக்கு மதிப்பளிக்கத்தான் வேண்டும்; இது இல்லாது ஐக்கியமில்லை. ஐக்கியமில்லாவிட்டால் சமுதாயத்தால் ஒன்றுமே சாதிக்க முடியாது. ஒற்றுமைதான் நமது மூலதனம்; மற்றவர்கள் இதை நம்மிடமிருந்து பறிக்க முடியாது. மேலும் அது இல்லாது நாம் எவ்வித உரிமையையும் கேட்டுப் பெறவும் முடியாது, ''ஒன்று சேர்ந்தால் வாழ்வு, பிரிந்து விட்டால் தாழ்வே'' என்பது பழமையான சொல்தான். ஆனால் அதற்குள்ள மதிப்பையும், வலிமையையும் அது எப்பொழுதும் இழந்து விடுவதில்லை.

முடிவாக, ஒன்று சொல்ல விரும்புகிறேன். இதை அடிக்கடி சொல்ல வேண்டியதற்காக நான் எப்பொழுதும் பின் வாங்கியதேயில்லை. நீங்கள் பற்றி பிடித்திருக்கும் கொள்கை சரியானது, நேர்மையானது; உங்களுக்கும நல்லது; நாட்டிற்கும் நல்லது. அல்லாஹ்மீது நம்பிக்கை வைத்து நீங்கள் செயலாற்றுங்கள். சர்வ வல்லமையுள்ள அல்லாஹ்வின் அருளாலும் உங்களுக்கிடையிலிருக்கும் ஒற்றுமை காரணமாகவும் உங்கள் ஒவ்வொருவரிடம் காணப்படும் பொறுமையின் பலனாகவும் உங்களுக்கு வெற்றி நிச்சயம் கிடைக்கும்; அது அழகான வெற்றியாக இருக்கும். போதுமான பரிசாகவும் இருக்கும் உங்களுடைய விரோதிகளைக் கூட உங்களின் உற்ற தோழர்களாகவும் ஆதரவாளர்களாகவும் மாற்றும் அளவுக்கு அது அமைந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.



# மகன் திருமணத்திற்கு அழைக்காததன் காரணம்

எனக்கு காயிதே மில்லத்தை 1948ல் இருந்தே தெரியும். சென்னை செல்லும் சமயங்களில் தலைவரவர்களைச் சென்று பார்ப்பேன். அப்பொழுது அவர்கள் இராயப்பேட்டை புதுப்பேட்டை கார்டன் தெருவில் குடியிருந்தார்கள். அவர்களது ஒரே மகன் மியாகானுக்கு அங்கு வைத்துதான் திருமணம் நடைபெற்றது. அத் திருமணத்திற்கு எனக்கு அழைப்பு இல்லை. மிகவும் சொற்ப நபர்களையே அத் திருமணத்திற்கு காயிதே மில்லத் அழைத்திருந்தார்கள்.

சில நாட்கள் கழித்து அவர்களை நான் சந்தித்த பொழுது எங்களையெல்லாம் தங்கள் வீட்டுக் கல்யாணத்திற்கு அழைக்கவில்லையே என்று குறைப்பட்டுக் கொண்டேன்.

அதற்கு தலைவரவர்கள் எனக்கு இன்று இருக்கிற வசதிக்கு சாதாரண முறையில்தான் திருமணம் நடத்த முடியும். ஒரே மகன் என்பதற்காகவும் அரசியலில் இருக்கிறேன் என்பதற்காகவும் நான் ஆடம்பரமாகத் திருமணத்தை நடத்தினால் பின்னர் என்ன சொல்வார்கள் தெரியுமா? லீக் என்று வைத்துக்கொண்டு மக்களிடம் பணத்தை வசூல் செய்து மகன் கல்யாணத்தை அமர்க்களமாக நடத்தி விட்டார் என்று ஊரில் பேசவும் செய்வார்கள். அதனால்தான் நமது கட்சிக்காரர்களுக்குக்கூட போதிய அளவில் அழைப்பு கொடுக்கவில்லை'' என்று விளக்கிக்கூறினார்கள்.

ஒரே மகன் திருமணம் என்பதைவிட சமுதாயம் தம்மை எப்படி எடை போடும் என்று எவ்வளவு தூரம் எட்டி யோசித்து அவர்கள் செயல்பட்டிருக்கிறார்கள் என்பதை அப்பொழுதுதான் என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

செஞ்சி *V.M.* அபூபக்கர்.



[தமிழ்நாடு முஸ்லிம் லீக் பொதுச் செயலாளர் ஜனுப் K.T.M. அஹ்மது இப்ராஹீம் ஸாஹிப் B A,. B.L. அவர்கள் சென்னை எஸ். ஐ. ஏ. ஏ.திடலில் 1960 செப்டம்பர் 17,18 தேதிகளில் நடைபெற்ற தமிழ் நாடு முஸ்லிம் லீக் மாநாட்டில் சமர்ப்பித்த அறிக்கை]

தமிழ்நாடு முஸ்லிம் லீக் பொதுக் காரியதரிசி ஜனுப் K . T. M. அஹமது இப்ருஹீம் சாஹிபு, பி.ஏ., பி.எல். அவர்களால் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை.

1947 முதல் 1960-ம் ஆண்டுகளுக்கான இவ்வறிக்கையை சமர்ப்பிப்பதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். நீண்டகால நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டியிருப்பதால், விரிவான முறையில் எடுத்துச் சொல்ல இயலாது நான் இருக்கிறேன். இருப்பினும், இந்திய யூனியனில் வதியும் முஸ்லிம்களின் வரலாற்றில் மிக முக்கிய கட்டத்தில் நிகழ்ந்த சம்பவங்களை கூடுமான வரை மிகச் சுருக்கமாகவே விவரிக்க நான் முயற்சிக்கிறேன்.

இச்சந்தர்ப்பத்தில், நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் முஸ்லிம்கள் ஆற்றிய மிகப் பெரும் பங்கும் அதற்காக அவர்கள் செய்த கிஞ்சிற்றும் மறக்க முடியாத தியாகங்களும் என் நினைவிற்கு வருகின்றன. இந்திய அரசியல் வானில், நாட்டின் தந்தையான மகாத்மா காந்தியின் பிரவேசம் ஒரு புதுமையையே உண்டாக்கி விட்டது என்பது நாடறிந்த உண்மை. அவர் உருவாக்கிய ஒத்துழையாமை இயக்கமும் அஹிம்ஸா அடிப்படையிலான சத்தியாகிரஹமும் ஆரம்ப கட்டத்தில் பெரும்பான்மை சமுதாயத்திலுள்ள அரசியல் தலைவர்களின் ஆதரவைப் பெறவில்லை. ஆனல் மாவீரர் மௌலானு முஹம்மது அலீயினுடையவும் அவர்களுடைய அண்ணன் மௌலானு ஷவ்கத் அலீயினுடையவும் தனிப் பெரும் தலைமையின் கீழ் முஸ்லிம் சமுதாயம் காந்திஜீ எழுப்பிய தியாகத் தீயில் முழு மனதுடன் குதித்தது. 1920-ம் ஆண்டு ஜூன் மாதம் திருநெல்வேலியில் 26-வது மாகாண அரசியல் மாநாடு, காலஞ்சென்ற திரு.எஸ். சீனிவாச அய்யங்கார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அப்பொழுது தான் காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கம் அகில இந்தியாவிலும் முதன் முதலாக ஒப்புக் கொள்ளப் பட்டது. காலஞ்சென்ற ரைட்ஆனரபிள் வி. எஸ். சீனிவாச சாஸ்திரி போன்றவர்கள் இதை மிகக் கடுமையான எதிர்த்த போதிலும் இம்மாகாணத்திலுள்ள முஸ்லிம்களின் ஏகோபித்த ஆதரவு அது செயல்பட உறுதுணையாக இருந்தது என்பதை மறந்து விடுவதற்கில்லை. மேற்குறிப்பிட்ட அம்மாநாட்டில் நமது தலைவரும் நானும் எடுத்துக்கொண்ட பங்கை இங்கு குறிப்பிடுவது அவசியம். ஒத்துழையாமை இயக்க காலத்தில் முஸ்லிம்கள் ஆற்றிய தியாகம் மகத்தானது. அளவிலும் தரத்திலும் அவர்களது எண்ணிக்கையையும் அது மிகைத்து நின்றது. அலீ சகோதரர்களின் தலைமையின் கீழ் முஸ்லிம் சமுதாயம் ஒன்று திரண்டு எழுந்ததன் பலனுகவே விடுதலைப் போராட்டத்தில் புது உத்வேகம் எழுந்தது என்பதையும், அதன் விளைவாகவே இன்று நாம் சுதந்திர இந்தியாவின் பிரஜைகளாகக் கூடி இருக்க முடிகிறது என்பதையும் நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆனல் இன்று மிக விசனிக்கத் தக்கதொரு நிலை நிலவுகிறது. முஸ்லிம்கள் ஆற்றிய பெரும் பங்கை மட்டுமல்லாது மௌலானு முஹம்மது அலீ அவர்களின் பெயரையும் கூட பெரும்பான்மை சமுதாயம் மறந்து விட்டது மிகவும் துரதிருஷ்டமே.

## இந்திய யூனியன் முஸ்லிம் லீக் அமைப்பு

கராச்சியில் 1947 டிசம்பர் 14,15-ம் தேதிகளில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் லீகின் இறுதிக் கூட்டத்தில், இந்திய உபகண்டமானது இந்திய தேசிய காங்கிரஸுக்கும் அகில இந்திய முஸ்லிம் லீகிற்குமிடையில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி இரு தனித்தனி சுதந்திர நாடுகளாக உருவாக்கப்பட்டு விட்டதால், இந்திய யூனியனில் வதியும் முஸ்லிம்களுக்குத் தனியான தொரு சபை இந்திய யூனியன் முஸ்லிம் லீக் என்ற பெயரால் இருக்க வேண்டுமென்றும், நமது தலைவர் காயிதே மில்லத் ஜனுப் முஹம்மது இஸ்மாயீல் சாஹிப் அவர்கள் அதன் கன்வீனராக இருக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. அத்துடன் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கவுன்சிலின் முதல் கூட்டம் சென்னையில் நடைபெற வேண்டுமென்றும் முடிவு செய்யப் பட்டது.

அப்பொழுது இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்த மவுண்ட் பேட்டன் பிரபு 1948-ம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னை வந்திருந்த சமயம் நமது தலைவர் அவர்களை டில்லி சென்று பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் நெஹ்ருவுடன் முஸ்லிம் லீக் சம்பந்தமாகப் பேச வேண்டுமென வற்புறுத்தினர். அதன் பிரகாரம் அவ்வாண்டு பிப்ரவரி மாதம் நமது தலைவர் அவர்கள் டில்லி சென்று பிரதம மந்திரியை சந்தித்தார்கல். அப்போது யூனியன் மந்திரியாக இருந்த ஜனுப் ரபீஅஹ்மத் கித்வாயும் பேட்டியின்போது பிரசன்னமாக இருந்தார். அச்சமயம், இந்திய யூனியன் முஸ்லிம் லீக் என்ற பெயரால் ஒரு அரசியல் சபை முஸ்லிம்களுக்கு இருக்க வேண்டியதன் அவசியமும் அதனுல் சிறுபான்மை மக்களுக்கும் நாட்டிற்கும் ஏற்படும் அனுகூலங்களையும் எடுத்து விரிக்கப்பட்டன.

இந்திய யூனியன் முஸ்லிம் லீக் கவுன்ஸில் கூட்டம் 1948-ம் ஆண்டு மார்ச் மாதம் 10-ம் தேதி சென்னை ராஜாஜி ஹாலில் கூடியது. அக் கூட்டத்தில் இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் நோக்கங்களும் சட்ட திட்டங்களும் ஒப்புக் கொள்ளப்பட்டன.

முஸ்லிம் லீகின் இவ் ஒத்துழைப்பை ஆந்திரகேசரி திரு பிரகாசம் பிரதம மந்திரியாக இருந்த சமயம் சென்னை அரசாங்கம் பூரணமாகப் பயன்படுத்தியதை மன நிறைவுடன் நினைவு கூராமல் இருக்க முடியாது. பிரகாசமும் எதிர்கட்சித் தலைவர் என்ற முறையில்

நமது தலைவர் அவர்களும் கூட்டாக அறிக்கை வெளியிட்டது. குழம்பிய சூழ்நிலையை மாற்றத்தான் செய்தது. இக் கூட்டு அறிக்கை இந்த நாட்டிலேயே ஒரு முன் மாதிரியாகும். சென்னையின் உதாரணத்தை இதர மாகாணங்கள் பின்பற்றின.

இத்துறையில் முஸ்லிம் லீக் ஆற்றிய பணியையும் அளித்த ஒத்துழைப்பையும் நமது மாகாணத்தின் கவர்னர்களும் பிரதம மந்திரிகளும் வெகுவாகப் பாராட்டி இருக்கிறார்கள். உதாரணமாக, 23-7-48 அன்று அரசியல் நிர்ணய சபையில் திரு பிரகாசம் பேசும் பொழுது சொன்னதாவது:

''வட இந்தியாவிலும், இந்தியாவின் இதர பாகங்களிலும் ஏற்பட்ட குழப்பங்கள் நாட்டின் தென்பகுதியில் எழவில்லை என்றால் அதற்குத் தென் இந்தியாவில் அத்தகை சூழ்நிலை இல்லை போலும் என்பது அர்த்தமல்ல. குழப்பம் எப்பொழுது தலைதூக்கியதோ அதை உடனடியாக அடக்குவதற்கு மிகவும் கண்காணிப்பாக இருந்ததாலேயே அவை எழவில்லை எனலாம். தென் இந்தியாவில் ஒரு வகுப்புக் கலவரம் ஏற்படும் போல இருந்தது. அது எப்படி சமாளிக்கப்பட்டது? மிகப் பயங்கரமானதாக இருந்த போதிலும் ஒருவர் கூட மரணமடையவில்லை. அது எப்படி சாத்தியமானது? நமது முஸ்லிம் லீக் நண்பர்களும் இதர தலைவர்களும் மிகவும் நல்லவர்கள்: அதிக முன்னெச்சரிக்கையுடனேயே இருந்தனர். நடுநிசியாக இருந்த போதிலும் அசம்பாவிதம் நிகழலாம் என்றதும், அவர்கள் நமது இல்லங்களுக்கு வந்து கதவைத் தட்டி ஆபத்து எழவிருப்பதை சுட்டிக் காட்டினார்கள். நாங்கள் உடனடியாக ஸ்தலத்திற்குச் சென்றோம். இறைவனின் சித்தத்தால் இரத்தம் சிந்துவது தவிர்க்கப்பட்டது.''

சென்னை மாகாணத்தின் கவர்னராக இருந்த சர் ஆர்ச்சி பால்டு நை ஓய்வு பெற்றுச் செல்லும் போது நமது தலைவர் அவர்களுக்கு அனுப்பிய செய்தியில், நாட்டின் அமைதியை பராமரிப்பது அரசாங்கத்தின் முழுப்பொறுப்பாக இருந்த போதிலும் அத்துறையில் நமது கட்சி அளித்த ஒத்துழைப்பை அவர் பெரிதும் பாராட்டி இருந்தார். அவருக்குப்பின் கவர்னர் ஆக வந்த பவ நகர் மகாராஜாவும் நமது பணியை சிலாகித்துப் பேசியுள்ளார். 25-9-48 அன்று சென்னை கார்ப்பரேஷன் அவருக்களித்த வரவேற்பின் போது ''இங்கு ஒரு வகுப்புக் கலவரம் கூட நிகழவில்லை என நான் நினைக்கிறேன். இந்திய யூனியனுக்கே தங்களின் முதலாவது விசுவாசம் என்பதை நம் மாகாணத்திலுள்ள சிறுபான்மை மக்கள் மற்றவர்களுக்கு ஒரு முன்னோடியாக அமையும் வகையில் நிரூபித்து விட்டதற்காக நான் அவர்களுக்கு பகிரங்கமாகவே பாராட்டுதலை தெரிவித்துக் கொள்கிறேன். எல்லாச் சமூகத்தவர்களின் ஒற்றுமைக்காகவும் இந்திய அரசாங்கத்திற்கு ஆதரவாகவும் சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் விடுத்த வேண்டுகோளை இச்சந்தர்ப்பத்தில் நினைவு கூர விரும்புகிறேன்.

## முஸ்லிம்களின் குறைகள்

தங்கள் தாய் நாட்டின் உண்மையான, விஸ்வாசமுள்ள பிரஜைகளாக இந்தியாவிலிருக்கும் முஸ்லிம்கள் வாழ்ந்து வருவது அவர்களிடம் தொன்று தொட்டு இருந்துவரும் பழக்கத்திற்கிணைந்தாகும். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர்கள். இதை மிகத்தெளிவாக வெளிக்காட்டியுள்ளார்கள். உதாரணமாக, காஷ்மீர் சம்பந்தமாகவும், ஹைதராபாத் சம்பந்தமாகவும் இந்திய அரசாங்கத்தின் கொள்கையை அவர்கள் உறுதியுடன் ஆதரித்து வந்துள்ளனர். பிரத்தியேகமாக முஸ்லிம் இன்ஸ்பெக்டர்கள் நியமிப்பதன் மூலம் காட்டப்பட்ட சலுகையும் ரத்தானது. இப்பிரச்னைகளை சென்னை சட்டமன்றங்களில் கிளப்பியபோது, ''முஸ்லிம்கள் தங்களுடைய பழைய தவறுகளுக்காக அனுபவித்துத்தான் ஆகவேண்டும்'' என்று சொல்லப்பட்டது. அதற்கு நமது தலைவர் அவர்கள் முஸ்லிம்களின் முந்திய சரித்திரம் புகழ் மிக்கது என்றும் அது குறித்து அவமானப்படத் தேவையில்லை என்றும் சுடச்சுடப் பதில் அளித்தார்கள். இச்சந்தர்ப்பத்தில் சென்னை முன்னாள் கவர்னர் ஸர் ஆர்ச்சிபால்டு நை அவர்கள் 4-9-48 அன்று சென்னை சட்டசபைகளின் கூட்டுக் கூட்டத்தில் சிறுபான்மையினர் குறித்து பேசியதை நினைவு கூர விரும்புகிறேன். ஒரு வேளை இம்மாகாணத்தில் வதியும் முஸ்லிம்களின் அவல நிலையை மனதில் வைத்துத்தான் கவர்னர் பேசியும் இருக்கலாம்.

''சிறுபான்மை சமூகத்தினரை மிக நேர்மையாகவும் பெருந்தன்மையுடனும் நடத்த வேண்டியது மிக மிக அவசியம் என்பது எனது சொந்தக் கருத்து, மேலும் இதற்குப் பல காரணங்களும் உண்டு. சிறுபான்மை சமூகத்தைச் சேர்ந்தவனாகப் பிறப்பது ஒருவனின் குற்றமல்ல. பொது நீதி இதை வலியுறுத்துகிறது. ஒருவன் மீது சுமத்தப்படும் குற்றம் அகற்றப்படும் வரை அவன் குற்றவாளியே என்ற கருத்தை நீங்கள் எடுத்துக் கொள்வதற்கில்லை. எந்த நியாயத்திற்கும் புறம்பானது இது. பொது நீதி, பொது நேர்மை, பொது சமத்துவம் ஆகியவை நமது சிறுபான்மை மக்களை நல்லவிதமாக நடத்த வேண்டுமென நம்மீது விதிக்கின்றன. இரண்டாவதாக, ஒரு மனிதனை பெருந்தன்மையுடன் நடத்தினால், அல்லது ஒரு சமுதாயத்தை பெருந்தன்மையுடன் நடத்தினால் அதற்கான பலனை நாம் கண் கூடாகப் பார்க்க முடிகிறது என்பதை மறுப்பதற்கில்லை. மானிடர்களுடன் பழகுகிறவர்கள் இவ்வுண்மையை புறக்கணிக்க முடியாது. அழைப்பு வரும்போது மனிதன் அதை நிராகரிக்க மாட்டான். அவனிடமுள்ள நல்லது அனைத்தையும் நம்மால் வெளிக் கொணரச் செய்ய முடியும். இப்படிச் செய்யும்போது நீங்காத நன்றி உணர்ச்சியும் ஏற்பட இடமிருக்கிறது. நமது முயற்சியின் மூலமாக அவர்களுடைய ஒத்துழைப்பையும் நல்லெண்ணத்தையும் பெறக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. மூன்றாவதாக, ஐரோப்பாவிலுள்ள சிறுபான்மையினரின் வரலாறுகளை நீங்கள் படித்திருந்தால் இவ்வுண்மையை நன்கு புரிந்து கொள்வீர்கள். எங்கெல்லாம் சிறுபான்மையினர் அநீதமாக நடத்தப்படுகிறார்களோ அங்கெல்லாம் கொந்தளிப்புகள் ஏற்பட்டதையே நாம் பார்க்கிறோம்''

[1960ம் ஆண்டு மதருஸ் மாநில முஸ்லிம் லீக் மாநாட்டு வரவேற்புக்குழுத்தலைவராக ஹக்கீம் முகம்மது இஸ்மாயில் சாகிபும் அதன் செயலாளராக P.N.I. அபூதாலிப் அவர்களும் செயலாற்றினர்கள். வரவேற்புக்குழுத்தலைவரின் உரையிலிருந்து சில பகுதிகள்]

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்......)

நாம் மாபெரும் கேந்திரஸ்தானத்திலே பரஸ்பர ஒற்றுமையுடன் ஒன்று கூடி நமது நியாயமான உரிமைகளை அடைவதற்கான வழி வகைகளை ஆராய்ந்து அதற்கான முயற்சிகளில் ஈடுபடும் பேரருளைத் தந்தருளிய வல்ல அல்லாஹ்வுக்கே லட்சோபலட்ச நன்றியும் துதியும் உரித்தானது! கடந்த 13 ஆண்டுகள் நமக்கோ பெரும் சோதனைக்குரிய காலமாக கழிந்தன. இந்தக் காலங்களில் நாம் மூன்று புறத்தின் எதிர்ப்புகளை சமாளிக்க வேண்டி ஏற்பட்டது. ஒன்று ஆதிக்க வர்க்கத்தினராகிய காங்கிரஸ். இது நமது சீரமைப்பை பெரும் துர் எண்ணத்தின் அடிப்படையில் சந்தேகக்கண் கொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறது.

இந்தியாவில் முஸ்லிம்கள் கண்ணியத்துடன் வாழ-அரசியல் பலம் பெற ஆட்சியாளர்கள் விரும்பவில்லை. ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவர்கள் முஸ்லிம்களின் ஒற்றுமையை, ஒரே மேடையில் கூடுவதை பார்க்க சகிக்கவில்லை. மறுபுறம் குரோத மனம் படைத்த மதப் பற்றுள்ள இந்துக்கள். இவர்கள் சமஸ்கிருத கலாச்சாரம் ஓங்கி நிற்பதைக்காண விரும்புகின்றனர். நம்மை அந்நியர்களாகக் கருதி நம்மிடம் பகைமை பாராட்டி வருகின்றனர். அவர்கள் விரும்புவது ஒன்றே; அகில இந்தியாவிலும் சமஸ்கிருத ஆட்சி நிறுவ வேண்டும். முஸ்லிம்கள் ஹிந்து சமுதாயத்துடன் ஒன்றறக்கலந்து விடவேண்டும் அல்லது தாழ்த்தப்பட்டவர்களைப் போன்று கேவல நிலையில் வாழ வேண்டும். இன்னொரு புறமோ பட்டம் பதவிகளை யாசிக்கும் நமது சில முஸ்லிம் சோதரர்கள். இவர்களோ காங்கிரஸ் ஆட்சிக்கு பயந்து நம்மை நிந்தித்துக் கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு அடியிலும் நமது வழியில் குறுக்கிட்டு தடைக்கல்லாக அமைந்து கொண்டிருக்கின்றனர் பல்வேறு கூச்சல்களைக் கிளப்பி முஸ்லிம்களை பயந்தவர்களாகவும் கலங்குபவர்களாகவும் அமைத்து வருகின்றனர். இஸ்லாமிய ஸ்தாபனமாகிய முஸ்லிம் லீகில் சேர விடாது தடுத்து வருகின்றனர்.

இத்தனை தடைகளிருந்தும் முஸ்லிம் லீகின் இந்த மாபெரும் மாநாடு பல்லாயிரம் இல்லை பல லட்சம் முஸ்லிம்களை கொண்ட இந்த திருக்கூட்டம் சர்வ காரியங்களையும் சீரமைத்துத் தரும் வல்ல அல்லாஹ்வின் ஒரு சிறு அத்தாட்சியேயாகும். ''அல்லாஹ், தான் நாடுபவர்களுக்கு அதிகாரத்தைக் கொடுக்கிறான். தான் நாடுபவர்களிடமிருந்து அதிகாரத்தை நீக்கிவிடுகின்றான்'' (அல் குர்ஆன், 3:26) என்ற தத்துவம் உண்மையே என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்கிறோம். அல்லாஹ்வின் அருளாலும் அவன் கருணையாலும் பேருதவியாலும் அவன் திருத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் அனுக்கிரகத்தாலும், இயலாத பலஹீனர்களான அடியவர்களாகிய நாம், போதிய வசதிகள் இல்லாத நிலையிலே சென்னை மாநகரின் இத்திடலிலே லட்சோப லட்சம் முஸ்லிம்களின் ஒரு மாபெரும் மகாநாட்டைக் கூட்டும் தகுதியுடையவர்களாக அமைய முடிந்தது. இம்மகாநாடு சரித்திரத்திலே பலகாலம் அழியா இடம் பெறும் என்பதில் சந்தேகமில்லை.

மதிப்பிற்குரிய சமுதாயத் தலைவர் அவர்களே, எங்களுக்குத் தங்களைப் போன்ற உளத் தூய்மையும் கலப்பற்ற தன்மையும் ஒருங்கே அமையப் பெற்ற ஒரு தலைவர் கிடைத்திருப்பதில் நாம் பெருமை கொள்வதற்கு நியாயமுண்டு. நீங்கள் சமயம், சமுதாயம், நாடு அனைத்திற்காகவும் புரிந்துவரும் கலப்பற்ற பணிகளும், முயற்சிகளும் பகலின் வெளிச்சத்தைப் போன்று பிரகாசிக்கின்றன. ''ஒத்துழையாமை இயக்க'' காலத்

# இருவரிடம் மாட்டிக்கொண்டால் இப்படித்தான்

கோலாலம்பூருக்கு காயிதே மில்லத் அவர்கள் வந்திருந்தபொழுது நான் அங்கிருந்தேன். அவர்களுடன் சேர்ந்து ஒரு போட்டோ எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எனக்கு ரொம்ப ஆசை. ஒரு போட்டோ கிராபரைக் கூட்டிக் கொண்டு அவர்கள் தங்கி இருந்த இடத்திற்குச் சென்றேன்.

அச்சமயம்தான் அவர்கள் பாத்ரூமிலிருந்து வெளியே வந்தார்கள். எனது எண்ணத்தை நாசூக்காக வெளியிட்டேன். சட்டையை மாட்டிக்கொண்டு போட்டோ கிராபர் முன்பு அவர்கள் வந்து நிற்கும் பொழுது அவர்கள் சிரித்துக்கொண்டே கூறினார்கள்:-

''இறைவன் ஒருவனுக்குத்தான் நாம் தலை வணங்குவோம். வேறு யாருக்கும் நாம் தலை சாய்ப்பதில்லை. ஆனால் உலகத்தில் இரண்டு கூட்டத்தினர் இருக்கிறார்கள். அவர்கள் சொற்படியும் நாம் தலையசைத்துதான் ஆகவேண்டும். ஒன்று நாவிதர், மற்றொருவர் போட்டோ கிராபர்'' என்றார்கள். அங்குள்ள அனைவரும் ஒரே சிரிப்பில் மூழ்கி விட்டார்கள்.

கே. அப்துல் ஜப்பார்
*R. S.* மங்கலம்

திலிருந்து இந்தியா விடுதலை அடைந்த காலம் வரை நாடு சுதந்திரம் பெற்ற பின்னிருந்து இன்று வரை சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் நீங்கள் புரிந்துள்ள தியாகங்கள் யாருக்குத்தான் தெரியாது. நாங்கள் நன்கு உணர்ந்திருக்கின்றோம். 5 கோடி முஸ்லிம்களுக்கு வழி காட்டும் பொறுப்பு தங்களைப் போன்ற முற்றும் அருகதையுடைய ஒருவரின் மீது சுமத்தப்பட்டிருக்கிறது.

அன்றிலிருந்து இன்றுவரை உங்கள் வழிகளில் எத்தனையோ இடையூறுகள் உண்டு பண்ணப்பட்டன. காயிதே மில்லத் அவர்கள் எத்தனை முறை எச்சரிக்கப்பட்டார்கள். முஸ்லிம் லீக்கை கலைத்து விடவேண்டுமென்பதற்காக ஒரு புறம் கவர்னர் ஜெனரல் லார்டு மவுண்ட் பேட்டனுடைய அடக்குமுறை, இந்திய பிரதம மந்திரி பண்டிட் ஜவஹர்லால் நேருவின் பயமுறுத்தல், ராஜ்ய சபையிலே கனம் ஸர்தார் படேலின் இடி என முழங்கிய எச்சரிக்கை. இவை அனைத்தும் எந்த இந்தியனுக்குத்தான் தெரியாது. ஆனால் இத்தனைக்கும் மதிப்பிற்குரிய காயிதே மில்லத் அவர்களின் உறுதியிலும், ஸ்திரத் தன்மையிலும் கொஞ்சமேனும் ஆட்டம் காணவில்லை. அரசாங்க பலம் பொருந்திய அங்கத்தினர்கள், காயிதே மில்லத் அவர்களின் தலைமையின் கீழ் செல்லக் கூடாதெனவும் முஸ்லிம்கள் தனித்திருக்க வேண்டுமெனவும் பலமுறை ஆர்வமூட்டினர். அவர்கள் முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போயின.

தலைவர் அவர்களே! இந்த எச்சரிக்கைகளும் சதி ஆலோசனைகளும் பயனற்று போய்விட்டதும், நீங்கள் சுய நலத்திற்காக சமுதாயத்தையே விட்டு ஆட்சியாளரின் நீண்ட நாள் அவாவை நிறைவேற்றும் சந்தர்ப்பம் வாய்க்கச் செய்வீர்கள் என்பதற்காக உங்களுக்கு பெரும் பெரும் உத்தியோகங்கள், உயர்வுகள் தருவதாக ஆசை வார்த்தைகள் கூறப்பட்டன என்பதை நாம் அறிவோம் எனினும் எந்த விலைக்கும் உங்களை வாங்க முடியாது என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் உங்களைப்பற்றி நன்கே அறிந்திருக்கிறான். நீங்கள் எதிர்கட்சியினரின் கடுமையான ஆட்சேபனை எழுந்தபோதும் எச்சரிக்கை செய்யப்பட்டபோதும் விமர்சிக்கப்பட்டபோதும் சத்தியத்தை எடுத்தியம்புவதை நிறுத்திக்கொள்ளவில்லை. தங்களின் உள்ளமை உரைத்தலும் நம்பிக்கையும் சமுதாய மத பாகுபாடு இல்லாத அனுதாபமும் நியாயமும் ஊக்கமும் உறுதியும் அஞ்சா நெஞ்சமும் என்றென்றும் அல்லாஹ்வின் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் தான் உங்களின் மூல ஆயுதங்களாக திகழுகின்றன. இவற்றின் உதவியால் மாற்றுக் கட்சியினரிடம் வெற்றி பெற்று விடுகிறீர்கள். சுயநல நோக்கமும் சட்டசபை அங்கத்தினராக வேண்டுமென்ற ஆசையும் கொண்ட உங்களின் தோழர்கள் ஒவ்வொருவராக உங்களைவிட்டு பிரிந்து சென்று விட்டனர். மாற்றுக் கட்சியிலிருந்து கொண்டு உங்கள் மீது அம்பெய்து கொண்டே இருந்தனர். இத்தனைக்கும் தாங்கள் தமிழ்நாடு, கேரளா, இந்தியாவின் வேறு பகுதியிலிருக்கக் கூடிய கலப்பற்ற எண்ணமுடைய தோழர்களை இணைத்துக் கொண்டு உங்களின் உரிமைக் குரலை உயர்த்திக் கொண்டே இருந்தீர்கள். முஸ்லிம்களுக்கு தனிப்பெரும் அத்தஸ்து உண்டு என்பதையும் அவர்களின் மத, கலாசார பொருளாதார அரசியல் கூட்டுறவு சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை தீர்க்க ஒரு கட்சி வேண்டியது அவசியம் என்பதையும் எண்பித்துக் காட்டிக்கொண்டே இருந்தீர்கள். இந்த முயற்சி 1906 லிருந்தே சமுதாய, தேச தலைவர்களின் மனங்களில் தமது கலப்பற்ற பணிகளின் வடிவை அமைத்து விட்டது. புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! காயிதே மில்லத்தின் இந்தகுரல் வீண் போகவில்லை. ஐந்து கோடி

## பக்ருத்தீன் சாஸ்திரி!

காயிதே மில்லத் அவர்களை சந்திப்பதற்காக சில நண்பர்களுடன் நான் சென்றேன். தமிழ்நாடு சட்ட மன்ற விடுதியில் இருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கு சென்றோம். மஹாராஷ்டிரத் தலைவர் பனாத்வாலாவுடன் காயிதே மில்லத் அவர்கள் அறைக்குள் இருந்து பேசிக் கொண்டிருந்தார்கள். எங்களைக் கண்டதும் வாருங்கள் என்றார்கள். நாங்களும் சமய சந்தர்ப்பம் தெரியாமல் அறைக்குள் சென்று படுக்கையில் அமர்ந்து கொண்டோம். காயிதே மில்லத் அவர்களும் பனாத்வாலாவும் மெதுவாக எழுந்து வெளி வராந்தாவுக்கு வந்து நின்றுகொண்டே தங்களது பேச்சைத் தொடர்ந்தார்கள். ஏதோ முக்கிய விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள் போலிருக்கிறது. நாங்கள் குறுக்கிட்டதும் எங்களை அறையில் உட்காரச் சொல்லி விட்டு வெளியில் நின்று கொண்டு இரு தலைவர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

நிலவரத்தைப் புரிந்து கொள்வதற்கு எங்களுக்கு சில நிமிடங்கள் பிடித்துக் கொண்டன. எங்களுக்கு மிகவும் மனதுக்கு கஷ்டமாகப் போய் விட்டது "முக்கிய விஷயமாகப் பேசிக் கொண்டிருக்கிறோம். சில நிமிடங்கள் பொறுத்திருங்கள்" என்று சொன்னால் மணிக்கணக்காகக் காத்திருக்க நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால் அப்படிக் கூறாமல் எங்களை உட்கார வைத்து விட்டு அவர்கள் வெளியில் நின்று கொண்டு பேசியது எங்கள் மனதைச் சுட்டு விட்டது. தலைவரவர்களின் பெருந் தன்மையை என்னவென்பது!

உருவத்தில் நான் சிறிது குட்டையாக இருப்பேன். ஒரு தடவை என்னிடம் காயிதே மில்லத் அவர்கள் 'இந்தியாவின் பிரதம மந்திரியாக லால் பகதூர் சாஸ்திரி தேர்ந்தெடுக்கப் பட்டதும் எனக்கு உமது ஞாபகம் தான் வந்தது என்று சொல்லி விட்டார்கள். அன்றிலிருந்து எங்களூரில் எனது நண்பர்கள் பலரும் என்னை 'சாஸ்திரி' என்றே கூப்பிடத் தொடங்கி விட்டார்கள்.

என். எம். பக்ருத்தீன் சாகிபு
அய்யம்பேட்டை சக்கராப்பள்ளி

இந்திய முஸ்லிம்கள் மிக நிதானத்தோடு உங்களின் கூப்பாட்டை செவிமடுத்துக் கொண்டே இருந்தனர். உங்களின் அழைப்பொலியால் தானே இந்த மகாநாட்டிலே காஷ்மீரத்திலிருந்து குஜராத்வரையிலுள்ள பகுதிகளிலிருந்தும் பிரதி நிதிகள் கலந்து கொண்டிருக்கின்றனர். ஐந்து கோடி முஸ்லிம்களுக்கும் நீங்கள்தான் தலைவர் என்பதற்கு முஸ்லிம்களின் இந்த பெரும் மகாநாடே சாட்சியாக திகழ்ந்து கொண்டிருக்கிறது! ஒவ்வொருவனும் காயிதே மில்லத் முஹம்மத் இஸ்மாயீல் சாஹிப் அவர்களின், கலப்பற்ற பணிகளை வாயார புகழ்ந்து கூறுவதோடு நன்றியுடையவனுகவும் இருக்கிறுன். அன்றியும் காயிதே மில்லத் அவர்களின் நற்சுகத்திற்காகவும் நீண்ட ஆயுளுக்காகவும் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் சன்னதியிலே சிரம் பணிந்து இறைஞ்சிக் கொண்டிருக்கிறுன்...காயிதே மில்லத் ஜிந்தாபாத்!

சகோதர சகோதரிகளே! ஒரு நூற்றுண்டு கால பெரும் முயற்சிக்குப் பின்னர் அளப்பரிய தியாகங்களுக்குப் பின்னர் இறைவன் அருளால் நமக்கு சுதந்திரம் போன்ற மிகப்பெரும் செல்வம் கிடைத்தது. அதற்காக நாம் இறைவனுக்கு எவ்வளவு நன்றி செலுத்தினுலும் அது குறைவே. ஆட்சி புரியும் உரிமை நம் கரங்களிலே வந்து விட்டது. ஆட்சி நடத்துவதற்காக சிறந்த சட்டங்களை நாமே வகுத்துக் கொண்டோம். இந்த ஜனநாயக ஆட்சியின் சட்டங்களைபொறுத்தவரை அவை சரியானவைகளே: தகுந்தவைகளேயாகும். அதன் அடிப்படையிலே இங்கு வசிக்கும் அனைவர்களுக்கும் சமமான முறையில் பிரஜா உரிமைகள் கிடைத்திருக்கின்றன. தவிர இந்த சட்டங்களிலே சிறுபான்மையோர்களின் மதம், அவர்களின் தனிப்பட்ட பழக்க வழக்கங்கள் காப்பாற்றப்பட்டிருப்பதற்கு சட்டத்திலே வாக்களிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இது சம்பந்தமான எழுத்தும் வாக்குறுதிகளும் அர்த்தமற்றவைகளாகவே இருக்கின்றன. எதுவரை அவற்றின்படி பூரணமாக அனுஷ்டிக்கப் படமாட்டாதோ அதுவரை சட்டத்திலே சமத்துவம் மத சுதந்திரம் சிறுபான்மையினருக்கு நீதி வழங்குதல் அனைத்துமே எழுதப்பட்டிருக்கின்றன. ஆனுல் 13 ஆண்டுகள் நடந்த நிகழ்ச்சிகளிலிருந்து அவற்றை எதுவரை செயலாற்ற முடிந்தது? இதற்கு பதிலை இந்தியாவின் சிறுபான்மையினரின் கவலைக்கிடமான நிலையைக் கொண்டு சுலபமாக தெரிந்து கொள்ளலாம்.

எனினும் இத்தனை பிரச்சினைகள் பற்றியும் மிக ஆழ்ந்து சிந்தித்து தொடர்ந்து முயற்சித்தாக வேண்டியிருக்கிறது இந்நோக்கங்களை பெறுவதற்காக தொடர்ந்து முயற்சியில் ஈடுபடுவது இன்றியமையாததாக இருக்கிறது. தியாகங்கள் பல புரிய வேண்டியிருக்கிறது. இதன் பின்னர் நிச்சயமாக இறை உதவி கிடைத்தே தீரும். இறைவனின் பேரருளால் இந்த இன்னல்களெனும் மேகக் கூட்டங்கள் கலைந்து விடும்-கண்ணியம், மரியாதை, உயர்நிலை வெற்றி எனும் காலை உதயமாகும்-ஆனுல் இவ்வளவு பெரிய மகத்தான பணி ஒருவராலோ அல்லது பலராலோ செய்துவிட முடியாது. இதற்காக முஸ்லிம்களின் ஐக்கியம் அவசியமாகிறது. 1906லிருந்து எந்த இயக்கம் முஸ்லிம்களின் பிரதிநிதித்துவ கடமையை ஆற்றி வந்து கொண்டிருக்கிறதோ, அந்த இயக்கக் கொடியின் கீழ் ஒன்று கூட வேண்டும். இந்தியாவின் 5 கோடி முஸ்லிம்களின் பிரதிநிதித்துவ ஸ்தாபனம் முஸ்லிம் லீக்தான் என்பதில் சந்தேகமில்லை. முஸ்லிம்கள் ஒரு பெரும் சிறுபான்மையினர் என்ற வகையில் கண்ணியத்துடன் தன்மானத்துடன் வாழ வகை ஏற்படுவதற்காக முஸ்லிம்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தி ஐக்கிய முன்னணியில் நிறுத்த வேண்டியிருக்கிறது. இதுவே முஸ்லிம் லீகின் லட்சியம், இந்தியா அரசியல் ரீதியிலே இன்று ஒரு சோதனை மிக்க கட்டத்தை கடந்து கொண்டிருக்கிறது. இந்நெருக்கடியான கட்டத்தில்தான் முஸ்லிம்கள் முஸ்லிம் லீகை ஓர் சக்தி வாய்ந்த ஸ்தாபனமாக அமைத்தால்தான் அரசியலில் ஒரு தனி இடத்தை உண்டு பண்ணிக் கொள்ள முடியும்; முஸ்லிம்களின் மத கலாச்சார, பொருளாதார, நிலை உயர முடியும். இங்கு ஒரு விஷயத்தை கவனத்திலிருத்திக் கொள்ளுங்கள். இஸ்லாத்தில் மதமும், அரசியலும் தனிப்பட்ட இரு வஸ்துகளல்ல, அரசியலை மதத்திலிருந்து பிரிக்கவே முடியாது. இன்றைய உலகில் பொருளாதார கூட்டுறவு கொள்கை, அரசியலுக்கு கீழ்படிந்து இருக்கிறது. இந்த வகையிலே தற்காலிக அனுகூலத்திற்காகவோ தனிப்பட்டவர் நன்மைக்காகவோ அரசியலை புறக்கணித்து விட முடியாது. இந்திய முஸ்லிம்கள் நல்வாழ்வு பெறுவதற்காக முஸ்லிம்களுக்கென்றே தனிகட்சி இருப்பது இன்றியமையாதது. அமர கவி அல்லாமா இக்பால் கூறுவது போல்:-

> ''சமுதாயத்தொடர்பினுல்தான் தனிமனிதன்
> நிலைத்திருக்க முடியும், தனித்திருப்பதில்
> யாது பயனுமில்லை.
> கடலில்தான் அலைகள் இருக்கின்றன
> கடலுக்கு வெளியே ஒன்றுமில்லை''

மத அடிப்படையிலேயும் முஸ்லிம்கள் ஒன்றுபட்டு இருப்பது மதக்கடமையாக இருந்து கொண்டிருக்கிறது. இஸ்லாம் தன்னை பின்பற்றுபவர்களை ஐக்கியமாகவும் ஒற்றுமையாகவும் இருக்கவே வலியுறுத்துகிறது. சர்வ சாதாரண பிரச்னைகளிலும் இஸ்லாமிய சமுதாயம் ஒன்றுபட்டிருப்பதுதான் இன்றியமையாததாகும். அவ்வாருயின் அரசியலைப் போன்ற மிக முக்கியமான வாழ்க்கையை மாற்றக்கூடிய பிரச்னையில் நாம் ஒன்றுபட்டு ஐக்கியமாக இருப்பது அவசியமல்லவா? மிக அவசியம் தான்; என்றுமே அவசியமானதாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது.

ஆனுல் அறிவு சூன்யர்களான சிலர், முஸ்லிம்களுக்காக ஒரு தனி அரசியல் கட்சி இந்தியாவில் நிலைபெற்றிருப்பது அவசியம் இல்லை எனக் கருதுகிறுர்களே! இது எந்த அடிப்படையிலே என்பது நமக்குபுரியவில்லை. இவர்கள் முஸ்லிம்களின் தனி இயக்கமாகிய முஸ்லிம் லீக்கை என்றும் கடுமையாக எதிர்த்து வருகின்றனர். ''முஸ்லிம் லீகை கலைத்து விடுங்கள்'' எனவலியுறுத்தி வருகின்றனர். ''அதில் இணைந்

திருக்கக் கூடாதென'' பயமுறுத்தி வருகின்றனர். நிபந்தனையின்றி முஸ்லிம்களை காங்கிரஸில் சேர்ந்து விடத் தூண்டுகின்றனர். காங்கிரஸ் ஆதிக்கத்துக்கு பயந்து ஐக்கிய சக்தியை சிதறடித்துவிட வேண்டுமென்பதே அவர்களின் குறிக்கோளாக இருந்து கொண்டிருக்கிறது. காங்கிரஸில் சேர்ந்து விட்ட பின்னர் முஸ்லிம்களுக்கு இருக்கும் ஒரு தனி அரசியல் பலம் அழிந்துபட்டுவிடும். பெயரளவே உள்ள சமூகாபிமானிகளின் முயற்சிகள் வெற்றி பெற்றுவிடின் அதன் விளைவுகள் காங்கிரஸாரின் நோக்கத்திற்கேற்பவே அமைந்துவிடும். முஸ்லிம்கள் சின்னாபின்னப்பட்டு போய் விடுவர். அவர்களின் ஐக்கியம் குலைந்துவிடும். முஸ்லிம்களின் நியாயமான உரிமைகள், சட்ட ரீதியான பாதுகாப்புகள் அனைத்தும் கோருவதற்காகவும், முஸ்லிம்களிடத்தில் ஒற்றுமையான ஒருமித்த குரல் இருக்காது. அவர்கள் ஒன்று கூடுவதற்கான மேடைகள் எதுவும் இருக்காது. முஸ்லிம்கள் ஒரு இனமாகவும் கருதப்பட மாட்டார்கள். அவர்களின் கலாச்சாரம், சமுதாயம் முடிவில் பெரும்பான்மையரின் குடலில் விழுந்து செரிமானமாகிவிடும். காங்கிரஸின் அதிகார வர்க்கத்தினரின் நோக்கமென்ன? காங்கிரஸினுள் அவர்கள் எந்த கண்கொண்டு பார்க்கப்படுகின்றனர் என்ற உண்மை சமூகாபிமானிகளுக்கு நன்கு புரியத்தான் செய்கின்றது. இன்று ஆட்சியாளர்களிடம் சமுதாயப் பற்றுள்ள முஸ்லிம்கள் எவ்வாறு தங்களின் தன்மானத்தை, கவுரவத்தை விற்று உலக வாழ்க்கையை வாங்கி வருகின்றார்களோ அவ்வாறே 5 கோடி முஸ்லிம்களும், காங்கிரஸுக்கு அடிமைகளாக அமைந்திருப்பதை விரும்புகின்றனர்.

இன்று விடுதலைக்குப் பிறகு சுதந்திர ஆட்சியிலே முஸ்லிம்களின் அந்தஸ்து என்ன என்பதை கண்கொண்டு கண்டு கொள்ளலாம். ஆட்சியாளர்களிடத்தில் முஸ்லிம்களின் அபயக் குரல் செவிமடுக்க அருகதையற்றதாகவும் கருதப்படுகிறது.

சகோதர சகோதரிகளே! நீங்கள் நன்கறிவீர்கள்: சென்ற 13 ஆண்டுகளிலே இந்தியாவின் பழைய நிர்வாகம் மிக துரிதமாக மாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறது; பெரும்பான்மையினரின் திருப்திக்கேற்பவே புதுப்புது சட்டங்களும், அம்சங்களும் அங்கீகரிக்கப்படுகின்றன, அவற்றில் முஸ்லிம்கள் கொஞ்சங்கூட அனுசரிக்கப்படுவது கிடையாது. அத்தகைய சட்டங்களோ பெரும்பான்மையினர்களின் சுபாவத்திற்கேற்றதாக இருக்கலாம். ஆனால் முஸ்லிம்கள் விஷயத்திலே இது மிக தெளிவாக மார்க்கத்தில் தலையிடுவதாகவே இருக்கிறது. பெரும்பான்மையினர் தங்கள் பிணங்களை பூமியில் அடக்குவதற்கு பதிலாக தீயில் கொளுத்திவிட துணிந்துவிடின் அதை ஆட்சேபிக்க நமக்கு எவ்வித உரிமையும் கிடையாது. ஆனால் இதே சட்டம் முஸ்லிம்களுக்காகவும் அமுலாக்கப்படுமாயின் நிச்சயமாக இந்தியாவென்ன உலகிலுள்ள எந்த முஸ்லிமும் இதை சகித்துக் கொண்டிருக்க முடியாது. விடுதலை பெற்ற ஜனநாயக இந்தியாவிலே முஸ்லிம்கள் தொழுமிடமாகிய பள்ளி வாசல்களுக்கு ஒவ்வொரு நேரமும் அபாயம் சூழ்ந்துக் கொண்டே இருக்கிறது, அவற்றை பெரும்பான்மையினர்கள் அபகரித்துக் கொள்வார்களோ என்று.

இஸ்லாமிய சகோதரர்களே!

உர்தூ மொழி இந்தியாவில் தோன்றிய ஒரு மொழி இது கோடானுகோடி இந்துக்களின் முஸ்லிம்களின் தாய் மொழியாக திகழ்கின்றது. ஆனால், அங்கீகரிக்கப்பட்ட இப்பொது மொழி விஷயத்தில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது, என்பதை நீங்கள் அறிவீர்கள். கண்ணியமிக்க இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்கள் கவனத்திற்கு நீதியைக் கோரி உத்திர பிரதேச உர்தூ மொழி பேசும் லட்சோப லட்ச மக்களின் கையொப்பமிட்டு உர்தூ மொழியைக் காப்பாற்ற வேண்டுமென விண்ணப்பம் ஒன்று சமர்ப்பிக்கப்பட்டது. ஆனால் உயர்வுமிக்க ஜனாதிபதி அவர்கள் இன்றுவரை அதில் கவனம் செலுத்தவே இல்லை. உர்தூ சம்பந்தமாக மாநிலங்களின் செயல்முறை அநீதமானதென்றும் குறுகிய மனப்பான்மை உடையதென்றும் பண்டிட் ஜவஹர்லால் நேருவே ஒரு முறைக்கு பல முறையாக கூறியும் இருக்கிறார். யாது பயன்? பிரதம மந்திரி அவர்கள் வாயளவே சொல்லி விட்டார். அது பற்றி இன்று வரை அனுஷ்டான ரீதியில் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. ஆட்சியாளர்கள் உர்தூ மொழிக்கு இழைத்துவரும் அநீதியைப் பற்றியும் அம்மொழியுடன் கொண்டுள்ள குறுகிய எண்ணத்தைப் பற்றியும் பேசத்தான் படுகின்றன. உலகில் நிதான புத்தியுள்ள எந்த நாடும் பிரதேச மொழி விஷயத்தில் இம்முறையில் நடந்திருக்கவே முடியாது. முஸ்லிம் மாணவர்கள் மேற்படிப்புக்குச் செல்வது மிக சிரம சாத்தியமான காரியமாகி விட்டது. குறிப்பாக இன்ஜினியரிங் காலேஜ், மெடிக்கல் காலேஜ்களில் அவர்களை சேர்த்துக் கொள்வது மிகவும் வரையறுக்கப்பட்டு விட்டது. சர்க்கார் உத்தியோகங்களின் வாயற்படிகளும் முஸ்லிம்களுக்கு அடைபட்டுக்கிடக்கின்றன. வியாபார அனுமதிச் சீட்டு பெறுவது கூட முஸ்லிம் வியாபாரிகளுக்கு முடியாத ஒன்றாக அமைந்து விட்டது. நமது நாட்டிலே வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் முஸ்லிம்களுக்கு இழைக்கப்பட்டுவரும் அநீதங்களை எவ்வளவுதான் எண்ணுவது?

முஸ்லிம்களே, ஞாபகத்தில் இருத்திக் கொள்ளுங்கள்! நமது சர்வ சக்தியும் நமது சமுதாய ஒற்றுமையை பொறுத்திருக்கிறது. நமது இயக்கமும் கூட்டுறவும் பலம் பெற்று அசைக்க முடியாததாக அமைந்துவிடின் நாம் பகிரங்கமாகக் கோரும் நமது நியாயமான உரிமைகளை நிச்சயமாக மிக இலகுவில் அடையப் பெறலாம். உலகில் ஆட்சிகள் மாறிவிடும். ஆனால் உண்மையும் வாழ்க்கையின் சட்டதிட்டங்களும் என்றும் மாறாது. இது என்றென்றும் நிலைபெற்றிருக்கும். முஸ்லிம்களின் வாழ்க்கை அந்த சட்டங்களை பின்பற்றியதாய் திகழ்கிறது. இப்போதோ இந்தியாவெங்கிலும் உள்ள பிரதிநிதிகள் இந்த இடத்திலே ஒன்று கூடி விட்டோம். முஸ்லிம் லீகின் சீரமைப்பைப் பற்றி அடியேன் சில அவசியமான விஷயங்களைக் கூற விரும்புகிறேன். முதன் முதலாக முஸ்லிம் லீகின் ஊழியர்கள் மிக நிதானத்துடன் அறிவுக்கேற்ற முறையில் முஸ்லிம் பொது

மக்களின் மனங்களில் அமைக்க வேண்டிய விஷயங்கள் யாதெனில் மேற்கூறப்பட்ட அந்த சிக்கல்கள் அனைத்தையும் ஒரு கூட்டுறவு இயக்கத்தால்தான் தீர்க்க முடியும். அவர்களின் நலனுக்காக பாடுபடும் ஓர் இயக்கம் இருக்கிறதென்றால் அது முஸ்லிம் லீகாகவே இருக்க முடியும். இதுவே முஸ்லிம்களின் பழம்பெரும் இயக்கமாக திகழ்ந்து கொண்டு இருக்கிறது. சென்ற ஆண்டுகளிலே பயனுள்ள வேலைகளை செய்திருக்கிறது. இனி வருங்காலத்திலும் பயனுள்ள வேலைகளை செய்ய முடியும். இரண்டாவது விஷயம் யாதெனில் எங்கெல்லாம் சில நூறு முஸ்லிம்கள் வாழ்கின்றனரோ அங்கெல்லாம் சமூகாபிமானமுள்ள முஸ்லிம்கள் பிரைமரி முஸ்லிம் லீக்கை ஏற்படுத்த வேண்டும். வயது வந்த ஒவ்வொரு முஸ்லிம் ஆண் பெண்களையும் அதன் அங்கத்தினர்களாக அமைக்க வேண்டும். ஏகோபித்த முறையில் அந்த பகுதியில் வதியும் முஸ்லிம்களின் கல்வி நிலையும், பொருளாதார நிலையும் சீரமைத்துக் கொண்டிருக்க வேண்டும். தாய் நாட்டுக்கு பணி புரிவதில் முயல வேண்டும். குறிப்பாக முஸ்லிம் சிறுர்களுக்கு மதக்கல்விக்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். இவ்வாறே சமுதாயக் கவலையுள்ள நண்பர்கள் தத்தம் இடங்களிலுள்ள முஸ்லிம் பொது மக்களின் பொருளாதார சமூக கல்வி நிலைகளை ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டும். அவற்றை மேலும், மேலும் சிறந்ததாக அமைப்பதற்கான வழிகளையும், முறைகளையும் சிந்திக்க வேண்டும். பின்னர் அதற்கான செயல் முறையில் ஈடு படத் துவங்கிவிட வேண்டும். இது சம்பந்தமாக ராஜ்ஜிய, மத்திய முஸ்லிம் லீகிடம் ஏதோ உதவியோ, யோசனையோ, ஆதரவோ, அனைத்தும் பெறலாம்.

மூன்றாவது விஷயம் யாதெனில் முஸ்லிம் லீகின் ஒவ்வொரு அங்கத்தினர்களும் நன்கு மனதில் இருத்திக் கொள்ள வேண்டும். நல்லெண்ணம் கலப்பற்ற தன்மை நிதானம் ஆகியவற்றின் மீதே செயலின் அடிப்படை எழும்புகிறது. வெறும் உணர்ச்சியால் இதுவரை உலகில் எந்த காரியமும் நடந்தேறி விடவில்லை. இனியும் எந்த காரியமும் நடக்கப் போவதில்லை. எதிர்க் கட்சியினருடன் சடுமையாக நடந்து கொள்வது வேகமாக பேசுவது முஸ்லிம் லீகரின் தன்மையாக இருக்கக்கூடாது.

சகோதர சகோதரிகளே! இப்போது நேரம் நெருங்கிவிட்டது. நாம் சமுதாயத்திற்காக, மார்க்கத்திற்காக, நாட்டிற்காக உண்மையான பணிபுரிய முன் நிற்க வேண்டும். முழு பலத்துடன் அவற்றை முன்னுக்கு கொண்டு வர முயற்சிக்க வேண்டும். ஒரு நாடும் சமூகமும் முன்னேறுவது இரண்டு அம்சத்தைப் பொறுத்திருக்கிறது (1) நாட்டில் வதியும் அனைவரையும் கல்வி ஒழுக்கமென்னும் அணிகலனால் அலங்கரிக்க வேண்டும். (2) நாட்டின் இயற்கை மூலமாகவும் செயற்கை மூலமாகவும் உள்ள வருமானங்களை அதிகரிக்க முயற்சிக்க வேண்டும். முஸ்லிம் லீக் இந்த இருநோக்கங்களை அடையும் முயற்சியில் யாருக்கும் பின் தங்கியிருக்கக் கூடாது. ''காயிதேமில்லத்'' ஜனாப் எம். முஹம்மத் இஸ்மாயில் ஸாஹிப் அவர்களின் தலைமையில், அவர்களின் வழிகாட்டலில் நமது சமுதாயக் கப்பல் இன்னல்கள் துன்பங்கள் எனும் ஆழிய கடலைக் கடந்து அடைய வேண்டிய இடத்தை அடைந்து விடும் என்பதில் நமக்கு பூர்ண நம்பிக்கை உண்டு.

முடிவில் ஒன்றும் அறியா என்னை வரவேற்புக் குழுவின் மகத்தான பொறுப்புள்ள பணிக்கு அருகதையுள்ளவனாகக் கருதி தலைவனாக அமைத்த பெரியோர்கள் நண்பர்கள், தோழர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக இந்த ஞானத்தோடு நான் ஒரு பெரும்அறிஞனோ, அரசியல் ஞானியோ, ஒரு பிரசங்கியோ அல்ல. எனினும் நாட்டின் கல்வி, அரசியல் கலாச்சார முயற்சிகளில் சிறு பிராயத்திலிருந்தே எனக்கு தொடர்பு இருந்து வந்திருக்கிறது அவ்வளவுதான். வரவேற்புக் குழு உத்தியோகஸ்தர்கள் அங்கத்தினர்கள் அனைவரும் பெரும் முயற்சியுடன் மிகப் பாடு பட்டு மகாநாட்டை வெற்றியுடைய தாக அமைத்திருக்கின்றனர் என்பதை நான் கூறாமல் இருக்கமுடியாது. அவர்கள் அனைவருக்கும் இதய பூர்வமான நன்றியை செலுத்திக் கொள்கிறேன்.

இறைவன் நமக்கு மார்க்க சமூக, நாடு அனைத்திற்கும் உண்மையான சேவை புரியும் ஆற்றலையும், ஆர்வத்தையும், உறுதியையும், பலத்தையும், தந்தருளுமாறு இறைவனை பிரார்த்திக்கின்றேன். ஆமீன்- வஸ்ஸலாம்.

# தம்மை எதிர்ப்பவர்களையும் மரியாதையாக நடத்தும் பண்பு

1947க்கு முன்பிருந்தே நான் முஸ்லிம் லீகன். ஆனால் மாகாண லீகில் ஜமால் குடும்பத்தினருக்கு எதிர்தரப்புக் கோஷ்டியைச் சேர்ந்தவன் நான். அப்துல் ஹமீத்கானை எப்பொழுதும் ஆதரிப்பவன். மாகாணத் தலைவர் பதவிக்கு காயிதே மில்லத்திற்கும் ஹமீத் கானுக்கு மிடையில் கடும்போட்டி இருந்தது. நான் ஹமீத் கானுக்காக அயராது உழைத்தேன் ஆனால் பெரும் மெஜாரிட்டியுடன் காயிதே மில்லத் வெற்றி பெற்றார்கள்.

அப்படியிருந்தும் கூட என்னைக் காணும் பொழுதெல்லாம் தலைவர் அவர்கள் அன்பாகவே பேசுவார்கள், மதிப்புடன்தான் நடத்துவார்கள். அவர்களுக்கு எதிரானவன் என்பதைத் துளி கூட அவர்கள் காட்டிக் கொள்ள மாட்டார்கள். வித்தியாசம் பாராட்ட மாட்டார்கள்.

நாடு விடுதலை பெற்ற பிறகு நான் ஆதரித்து வந்த முஸ்லிம் லீக் தலைவர்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டார்கள்; மறைந்து விட்டார்கள். காயிதே மில்லத் மட்டுமே எஞ்சி நின்றார்கள். அவர்களது தலைமையில் தமிழ் நாட்டில் முஸ்லிம் லீக் பீடு நடை போட்டு செயல்படத் தொடங்கியது. நானும் அவர்களது தலைமையை ஏற்று முஸ்லிம் லீக் இயக்கத்தில் என்னையும் இணைத்துக் கொண்டேன்.

கோவை *M. A.* ரஹ்மான்

# காங்கிரஸ் ஒரு மத யானை

கா. மு. ஆதம் (ஆசிரியர், 'காயிதே மில்லத்' மாத இதழ்)

''நம்முடைய வேலைகளைச் செய்து வருவதற்காக வளர்க்கப்பட்ட யானை திடீர் என்று மதம் கொண்டு நகருக்குள் புகுந்து மக்களையும் நாட்டையும் அழிக்கப் பார்த்தால் நாம் என்ன செய்வோம்? அப்போது அதை எப்படியும் அடக்கப் பார்ப்போம். அதுபோல மதம் பிடித்துத் திரியும் காங்கிரஸை அடக்க இம்மாநிலத்தி லுள்ள பிரதான கட்சிகளான முஸ்லிம் லீக், தி. மு. க., சுதந்திரா ஆகியவை கூட்டுச் சேரவேண்டும். அதுதான் நடந்துள்ளது'' என்று கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் அவர்கள் அறைகூவல் விட்டார்கள்.

67-பொதுத் தேர்தல் முடிந்து முடிவுகள் வெளியா யின. தமிழக சட்டமன்றத்திற்கான முடிவு இந்தியத் துணைக் கண்டத்தையே உலுக்கக்கூடிய முடிவாக அமைந்தது.

நெல்லை மாவட்டம் மேலப்பாளையத்தில் இருந்து ரவணசமுத்திரம் ஹாஜி எம். எம். பீர் முஹம்மது அத்தேர்தலில் வெற்றி பெற்றார். மேலும் இருவரும் முஸ்லிம் லீக் டிக்கட்டில் ஜெயித்தார்கள்.

வெற்றியைக் கொண்டாடும் வகையில் தென்காசி விழாக் கோலம் பூண்டது. தென்காசி நகர முஸ்லிம் லீக் மற்றும் அனைத்து முஸ்லிம் சங்கங்களும் இணைந்து ஒரு மாபெரும் வரவேற்பை கண்ணியத்திற்குரிய காயிதெ மில்லத் (ரஹ்) அவர்களுக்கும், வெற்றிபெற்ற முஸ்லிம் லீக் சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் வழங் கியது.

கடைய நல்லூர் வரவேற்பில் கலந்து கொண்ட பின் தென்காசிக்கு வருவதாக ஏற்பாடு என எண்ணு கிறேன். தென்காசி நகர எல்லையில் காயிதெ மில்லத் அவர்களை வரவேற்று ஊர்வலமாக அழைத்து வருவதற் காக சமுதாய மக்கள் பெருந்திரளாகக் கூடியுள் ளார்கள்.

ஊர்வலத்தை ஒழுங்குபடுத்தி அணிவகுப்பதற்காக முஸ்லிம் லீக் தொண்டர் படை ஒன்றும் ஏற்பாடாகி யிருந்தது. அந்த தொண்டர் படையில் நானும் ஒருவ னாகச் சேர்ந்து கொண்டேன்.

ஊர்வலம் புறப்பட்டு பிரதான சாலைகளைக் கடந்து தென்காசியின் நடு நாயகமாகத் திகழும் சுவாமி சன்னதி பஜார் வழியாக வந்துகொண்டிருக்கிறது. ஒரு திறந்த ஜீப்பில் கண்ணியத்திற்குரிய காயிதெமில்லத் அவர்கள் கம்பீரமாக நின்றுகொண்டு வீதியின் இரு பக்கமும் குவிந்துள்ள மக்களுக்கு தமது வலது கையை உயர்த்தி 'ஸலாம்' செய்தவர்களாக வந்துகொண்டிருந் தார்கள். ஜீப்புக்கு முன்னும் பின்னும் சமுதாயப் பெருமக்கள் உயர்த்திப் பிடித்த பச்சிளம் பிறைக் கொடியோடு ஜிந்தாபாத் கோஷம் முழங்கியவர்களாக அணிவகுக்க - வண்ணச் சேலைக்கு பார்டர் கட்டியது போன்று தொண்டர் படையினர் இராணுவ நடை போட்டு வந்தனர். நான் சென்ற அணி, தலைவரின் ஜீப்பைத் தொட்டபடி அவர்களின் கண்பார்வையி லேயே சென்றுகொண்டிருந்தது.

இப்போதுகூட எனக்கு நன்றாக நினைவுக்கு வரு கிறது. சுவாமி சன்னதி பஜாரின் மத்தியில் ஒப்பனை பிள்ளையார் கோவிலைக் கடந்து கிழக்கு நோக்கிச் செல்லும் ஊர்வலத்தில் - பொன்னிபாறை ஏற்றத்தைத் தாண்டும்போது நான் ஜீப்புக்கு முன் பகுதியில் சென்று விட்டேன். அதற்கும் சற்று தூரத்தில் தவளபுரம் பள்ளிக்கும் அஹமதுஷா தைக்காப் பள்ளிக்கும் இடைப் பட்ட மைதானத்தில் மேடை போடப்பட்டிருந்தது.

மேடை முன் ஜீப் நின்றதும் தலைவர் அவர்கள் இறங்குவதற்கு முந்திக் கொண்டு கைகொடுத்தேன். சுற்றி நின்ற அனைவரும் கைகொடுக்க - அதனையும் பற்றிக்கொண்டார்கள் என்றாலும் எனது கையைப் பலமாகப் பற்றியிருந்தார்கள். எனக்கோ கூச்சம் கலந்த மகிழ்ச்சி.

இறுதியாக மேடைக்கு ஏறும் முன்பாக,

தம்பி! உங்கள் பெயரென்ன என்று கேட்க, நான் 'முஹம்மது ஆதம்-செங்கோட்டை முஸ்லிம் லீக் செய லாளர் காஜா முகைதீன் தம்பி'' என்றேன்.

ஓ அப்படியா! ''ஹைர்'' என்று கூறி ஏதோ முணுமுணுத்தவர்களாக என் தோள்களிலே தட்டிக் கொடுத்த காட்சியை இன்றும் எண்ணிப் பார்க்கிறேன்.

1977-ல் அவர்களின் திருப்பெயரைத் தாங்கிய 'காயிதெ மில்லத்' எனும் பத்திரிகைக்கு ஆசிரியர் ஆவேன் என்று 1967-ல் அவர்கள் தோளைத் தட்டி 'துஆ' செய்தபோது உணரவில்லை. ஆனால் இன்று வரைத் தொடர்ந்து பனிரெண்டு ஆண்டுகளாக வந்து கொண்டிருக்கும் 'காயிதெ மில்லத்' பத்திரிகையின் ஆசிரியராகத் திகழுகிறேன். அதனைச் சமுதாயமும் ஆதரித்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் அன்று அவர்கள் செய்த 'துஆ' வாகத்தான் இருக்க முடியும்!

---

மனிதர்களால் இயற்றப்படும் சட்டங்கள் ஒரு குறிப்பிட்ட எல்லைக் கோட்டிற்குள்தான் செயல் பட முடியும். இறைவனால் அருளப்பட்ட சட்டங் கள் கால எல்லையைக் கடந்து நிற்கக் கூடியவை.

—கயிதே மில்லத்

---

# கடல் கடந்து வாழும் மக்களின் அளவு கடந்த பாச உணர்வுகள்!

[மெக்கோ ஹாஜி *M*. பக்கீர் மைதீன் சாகிபு]

சென்னை மேடவாக்கத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் காயிதே மில்லத் ஆண்கள் கல்லூரியின் வளர்ச்சிக்காக, 1976-ம் ஆண்டு ஆரம்பத்தில் நல்லெண்ணத் தூதுக் குழு ஒன்று, சிங்கப்பூர், மலேஷியா ஹாங்காங் ஆகிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தது. அக்குழுவில் *A. K.* ரிபாயி சாகிப், *J. M.* மியாக்கான் சாகிப், அப்துல் லத்தீப் சாகிப் *M.L.A.* ஆகியோருடன் நானும் சென்றிருந்தேன்.

தலைவரவர்கள் பெயரில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் கல்லூரிக்காக நாங்கள் செல்வதற்கு சுமார் இருபத்தி இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக (அதாவது 1953-54-ம் ஆண்டு வாக்கில்) தூரக் கிழக்கு நாடுகளில் காயிதே மில்லத் அவர்களும், தமிழக முஸ்லிம்களின் கல்வி வளர்ச்சிக்காக ஒரு சுற்றுப் பயணத்தை மேற்கொண்டிருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. சென்னை நியூ காலேஜுக்காகவும் திருச்சி ஜமால் முஹம்மது கல்லூரிக்காகவும் காயிதே மில்லத் அவர்களது தலைமையில் தூதுக் குழு ஒன்று சுமார் ஆறு மாத காலம் மேற்கூறிய நாடுகளில் சுற்றுப் பயணம் மேற்கொண்டது.

அந்நாடுகளில் காயிதே மில்லத் சுற்றுப் பயணத்தை முடித்து 22 ஆண்டுகள் ஓடி விட்டன என்றாலும், இன்றும்கூட அங்குள்ள மக்கள், அந்தச் சுற்றுப் பயணம் குறித்து பெருமையாகப் பேசிக் கொள்கிறார்கள்; கதை கதையாக நிகழ்ச்சிகளைச் சொல்லி பூரிப்படைகிறார்கள். காயிதே மில்லத்தை நினைவு கூருவதிலே அங்குள்ள மக்களுக்குஏற்படும் பெருமிதத்திற்கு ஓர் அளவேயில்லை.

கால் நூற்றாண்டு ஓடி விட்டது என்றாலும், தலைவரவர்களது நினைவை, கடல் கடந்து வாழும் மக்கள் எவ்வளவு பசுமையாக வைத்துப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள் என்பதை 1976-ம் ஆண்டு அதே குறிக்கோளுக்காக அப்பகுதிகளில் சுற்றி வந்த நாங்கள் நேரில் அனுபவித்தோம். காதுகளால் கேட்டோம்; கண்களால் பார்த்தோம். அதாவது, அம்மக்கள் காயிதே மில்லத்தின் நடவடிக்கைகளை வருணித்ததை நாங்கள் நேரில் காண்பது போல உணர்வு பெற்றோம். மக்களின் உள்ளங்களில் எவ்வளவு தூரம் அவர்களைப் பற்றிய உணர்வுகள் ஒன்றிப் போய் நிற்கின்றன என்பதை நேரில் பார்த்தபொழுது எங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கும் வியப்பிற்கும் ஓர் எல்லையேயில்லை.

மாதக் கணக்கில் காயிதே மில்லத் அவர்கள் தூரக் கிழக்கு நாடுகளில் தங்கி இருந்ததைப் பார்த்ததும் இந்திய அரசுக்கும் தமிழக அரசுக்கும் ஒரு சந்தேகம் எழுந்து விட்டது! அந்நாடுகளில் வாழும் இந்நாட்டுப் பிரஜைகளிடம், முஸ்லிம்லீக் தலைவர் என்ன பிரச்சாரம் செய்து கொண்டிருக்கிறார் என்பதை நேரில் சென்று பார்த்து வரும்படி, அச்சமயம் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவராகப் பணிபுரிந்து வந்த திரு காமராஜ் அவர்களை மத்திய, மாநில அரசுகள் அப்பகுதிகளுக்கு அனுப்பி வைத்தன. சிங்கப்பூரிலும் மலேஷியாவிலும் இந்தியப் பிரஜைகளிடமும், மற்றும் பலதரப்பட்டவர்களிடமும் காமராஜ் அவர்கள் காயிதே மில்லத்தைக் குறித்து விசாரித்தார்; பல கூட்டங்களிலும் பேசப்பட்ட காயிதே மில்லத் பேச்சுக்களின் டேப்பைப் போட்டுக் கேட்டார். அங்குள்ள இந்நாட்டுத் தூதர்களின் அலுவலகங்களிலும் புலன் விசாரணை நடத்தினார். வெளிநாடுகளில் இந்திய அரசைப் பெருமைப்படுத்தித் தான் காயிதே மில்லத் பேசி இருந்தார்களே தவிர, ஒரு வார்த்தைகூட, இந்திய அரசாங்கத்திற்கு எதிராக வெளிநாட்டில் வைத்து அவர்களது வாயிலிருந்து வெளிவரவில்லை என்பதை தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் சந்தேகத்திற்கிடமில்லாதவாறு தெரிந்து கொண்டார். இந்தியா திரும்பியதும் மத்திய மாநில அரசுகளிடம் முஸ்லிம்லீக் தலைவரைக் குறித்து காமராஜர் சிலாகித்தே கூறியிருக்கிறார். அறிக்கை சமர்ப்பித்தார். ஆம்! உண்மையைச் சொல்வதானால் அப்படித்தானே சொல்லியாக வேண்டும்.

சிங்கப்பூர் நகரில் எங்களது பிரயாண ஏற்பாடுகளை ஜுப்ளி கபே அண்டு ரெஸ்டாரண்டு அதிபர் ஹாஜி *A. K. S.* உஸ்மான் கனி அவர்கள் சிறந்த முறையில் கவனித்துக் கொண்டார். சிங்கப்பூர் சர்வகலாசாலையில் பேராசிரியராகப் பணிபுரிந்த அப்துல்காதர், முஸ்லிம் மிஷினரி சொசைட்டித் தலைவர் ஜனாப் அபூபக்கர் மெய்தீன், ஜனாப் இஸ்ஹாக்நானா, ஒலிம்பிக் அப்துல்காதர் ஆகியோரும் பக்கபலமாக இருந்தார்கள். அச்சமயம் சிங்கையில் தங்கி இருந்த அல்ஹாஜ் *K. T. M. S.* அப்துல்காதர் சாகிபு (தைக்காவாப்பா) அவர்களும் *B. S. A.* அப்துர்ரகுமான் அவர்களும், ஹாஜி மஹ்மூது காக்கா அவர்களும் எங்களது குழுவின் நோக்கங்கள் வெற்றிபெற மனமுவந்து ஒத்துழைத்தார்கள்.

மலேஷியாவிலும் எங்கள் குழுவிற்கு பலரும் ஆதரவு நல்கினார்கள். கோலாலம்பூரில் ராஜிக் பரீத் இன்டர் நேஷனல் அதிபர் *A. V. M.* முஹம்மது இபுராஹீம் சாகிபு, பினாங்கில் அத்தீவில் வாழும் கடையநல்லூர், தென்காசி ஜமாஅத்தார்கள், ஹாங்காங்கில வாவுசன்ஸ் பாகஸ்தர் மக்தூம் ஹாஜியார் ஆகியோர் அளித்த ஆதரவும் ஒத்துழைப்பும் சொல்லுந்தரமன்று.

தூரக்கிழக்கு நாடுகளில் இருந்து வெற்றியுடன் திரும்பிய தூதுக் குழுவினர். அடுத்து அதே ஆண்டில் கல்லூரிக்குழு தலைவர் ஜானி சாகிப் தலைமையில் தமிழ்நாட்டிலும் காயிதே மில்லத் கல்லூரி வளர்ச்சிக்காக சுற்றுப் பயணம் செய்தார்கள். அப்பொழுது, திண்டுக்கல் ம.மு. கம்பெனியைச் சேர்ந்த கனிசாகிப், கல்லூரி குழு பொருளாளர் செய்யது முஹம்மது சாகிப் ஈரோடு முதலாளி குடும்பத்தைச் சார்ந்தவர்கள், முஸ்லிம் அனாதைநிலையத்தலைவர் ஹாஜிஜமால்முஹம்மது சாகிப், தென்காசி ஹாஜி *A.* சாகுல் கமீது சாகிபு *Ex MLA* ஆகியோரும் இக் கல்லூரிக்காக அரும்பாடு பட்டனர்.

அப்பொழுது அமைச்சராக பணிபுரிந்த மாண்புமிகு சாதிக்பாட்சா அவர்களும் இக் கல்லூரி வகைக்கு விசேஷ கவனம் செலுத்தினார். முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் இக்கல்லூரிக்காக அரசுக்குச் சொந்தமான நிலத்தில் இருந்து 40 ஏக்கர் நிலத்தை பெருந்தன்மையுடன் வழங்கி இக்கல்லூரி நிலைபெற பெரிதும் காரணமாக இருந்தார்.

ஃ ஃ ஃ

XXXXXXXXXXXXXXXXXX:XXXXXXXXXXXX:XXXXXXXXXXXXXXXXX

# கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் நினைவு மலர்க்குழு

## தலைவரின் அறிவிப்பு

XXXXXXXXXXXXXXXXXX:XXXXXXXXXXXX:XXXXXXXXXXXXXXXXX

அல்லாஹ்வின் கிருபையால் 6-8-85 அன்று சென்னை-1, 34, நாராயண சிராங் கார்டன் தெருவிலுள்ள M/s. மரைக்கா இன்டஸ்டிரீஸ் கட்டிடத்தில், அல்ஹாஜ் K.T.M.S. அப்துல் காதிர் ஜமாலி (தைக்காப்பா) அவர்கள் தலைமையில் சமுதாயத்தின் முக்கியஸ்தர்கள் கலந்து கொண்ட ஆலோசனைக் கூட்டத்தில், கண்ணியத் திற்குரிய காயிதே மில்லத் அவர்கள் நினைவாக வரலாற்றுச் சிறப்புமிக்க மலர் ஒன்று வெளியிட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு, அதற்காக ஒரு குழுவும் அமைக்கப்பட்டது. அதன் தலை வராகச் சென்னை பெரம்பூர் ஜமாலியா அரபிக் கல்லூரியின் முத்தவல்லியாக இருந்த ஜனாப் ஹாஜி M. J. அஹமது ஜமால் சாஹிப் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அதன் செயலாள ராகத் திருநெல்வேலி முஸ்லிம் அனாதை நிலையத் தின் தலைவர் ஜனாப் அல்ஹாஜ் M. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்களும், பொருளாளராக சென்னை M/s. மரைக்கா இன்டஸ்டிரீஸ் உரிமை யாளர் ஜனாப் M.B.A. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

1987ம் வருடம் மலர்க்குழுவின் தலைவர் ஜனாப் ஹாஜி. M. J. அஹமது ஜமால் சாஹிப் அவர்கள் ''வபாத்'' ஆனதைத் தொடர்ந்து அந்தப் பதவிக்கு 12-7-87 ல் நடைபெற்ற மலர்க் குழு கூட்டத்தில் நான் ஏகமனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டு, இதுவரை செயலாற்றி வரு கிறேன்.

மலர்க்குழுவின் உறுப்பினர்களான :

ஜனாப் A. K. ரிபாயி சாஹிப் B.A. Ex. M. P. அவர்கள்

,, Prof. கா. அப்துல் கபூர் சாஹிப் M. A. அவர்கள்

,, ஹாஜி J. M. மியாகான் சாஹிப் B. A. Ex. M. L. C. அவர்கள்.

,, ,, Prof. S. பீர்முஹம்மது சாஹிப் B. E. அவர்கள்

,, ,, S. M. முஸ்தபா சாஹிப் B. A. அவர்கள்

,, மௌலவி M. அப்துல் வஹாப் சாஹிப் M. A. B. Th.. அவர்கள்

,, ஹாஜி M.S.M. பாதுல் அஸ்ஹப் சாஹிப்

,, ,, A. S. M. ஷேக்மைதீன் சாஹிப் அவர்கள்

,, ,, 'மெக்கோ' M. பக்கீர்மைதீன் சாஹிப் அவர்கள்

,, ,, கேப்டன் N. A. அமீர்அலி சாஹிப் அவர்கள்

,, ,, சிக்கந்தர் சாஹிப் அவர்கள்

ஆகியவர்களின் ஒத்துழைப்பும் ஆலோசனை களும் பெரிதும் பயன்பட்டன. இறைவனருளால் இப்பொழுது இம்மலர் வெளிவந்துள்ளது.

இம்மலருக்காக வெளிநாடுகளில் வாழும் இந்தியப் பிரஜைகளான தமிழ் முஸ்லிம்கள் நமக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித் துள்ளனர். அவர்களில் சிலரை இச்சந்தர்ப் பத்தில் நினைவு கூருவது சாலப் பொருத்தமாகும்.

ஐக்கிய அரபு எமிரேட்டைச் சேர்ந்த துபாயிலும் அபுதாபியிலும் பணிபுரிந்து கொண் டிருக்கும் இந்தியக் குடிமக்கள் பலரும் இம்மலர் குறித்து அதிக ஆர்வம் காட்டினார்கள். குறிப் பாகத் துபாயிலுள்ள ''ஈமானே (IMAN)ச் சேர்ந்த

தவர்களும், அபுதாபியிலுள்ள ('AIMAN') ''ஐமானை''ச் சேர்ந்தவர்களும் மலர் தயாரிப்புப் பணிகளுக்கும் அவற்றை விற்பனை செய்வதிலும் இன்று முன்னணியில் இருந்து வருகிறார்கள். அவர்களில் கீழ்க்கண்டவர்களை நினைவு கூருகிறேன்.

அல்ஹாஜ் S. M. சலாஹுத்தீன் சாஹிப் (கீழக்கரை)

மௌலவி முஹம்மது மதனி அவர்கள் (பெரிய குளம்)

ஹாஜி S. M தஸ்தகீர் சாஹிப் (கீழக்கரை)

,, P. S. M. ஹபீபுல்லா சாஹிப் (கீழக்கரை)

,, S. M. ஷாகுல் ஹமீது சாஹிப் (நாகூர்)

,, M. அப்துல்காதர் சாஹிப் (அரங்கக் குடி)

,, F. அன்வர் பாஷா சாஹிப் (லெப்பைக்குடி காடு)

,, பசிபிக் முகைதீன் மரைக்காயர் (நாகூர்) ஆகியோர் துபாயிலும்,

ஹாஜி அப்துல் வஹாப் சாஹிப்

ஜனுப் ஷேக் அப்துல் காதர் சாஹிப் (காயல்பட்டணம்)

இன்ஜினீயர் ஜவாஹிர் சாஹிப் (கோட்டாறு)

பசிபிக் ஹசன் மரைக்காயர்

ஜனாப் காதர் பக்ஷ்

ஜனுப் ஹுஸைன் (கீழக்கரை)

ஜனாப் காசிம் ஃபக்கீர்

ஆகியோர் அபூதாபியிலும் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவார்கள். மேலும் அல்ஹாஜ் S. M. ஷேக் நூருத்தீன் சாஹிப் அவர்களும், ஜனாப் ஹுஸைன் சாஹிப் அவர்களும் ஜனாப் ஷம்சுத்தீன் சாஹிப் அவர்களும் மலர்ப்பணிக்காகப் பாடுபட்டிருக்கிறார்கள். இவர்கள் அனைவருக்கும் மலர்க்குழுவின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் அவர்களின் நினைவை என்றென்றும் பசுமையாக நிலைத்திருக்கச் செய்யும் வகையிலும், அவர்களது நடைமுறைகளையும் உபதேசங்களையும் மக்களுக்கு எத்தி வைக்கும் பொருட்டும் கடந்த ஆண்டு 22-12-89 அன்று, சங்கங்களின் பதிவுச் சட்டங்களின் கீழ் ''காயிதே மில்லத் அகாடமி'' என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது.

இதன் தலைவராக நானும், செயலாளராக ஜனாப் அல்ஹாஜ் M. ஜமால் முஹம்மது சாஹிப் அவர்களும், பொருளாளராக ஜனாப் ஹாஜி 'மெக்கோ' M. பக்கீர் மைதீன் சாஹிப் அவர்களும் இருந்து வருகிறோம். சென்னை-3, ஈவினிங் பஜாரிலுள்ள 13-14 இலக்கக் கட்டிடத்தில் (முதல் மாடியில்) அதன் ரிஜிஸ்டர் அலுவலகமும் பாளையங்கோட்டையிலுள்ள முஸ்லிம் அனாதை நிலையத்தில் அதன் நிர்வாக அலுவலகமும் இருந்து வருகிறது.

இந்த அகாடமியின் பிரதான குறிக்கோள்களில், காயிதே மில்லத் குறித்து பிரசுரங்கள், நூல்கள் வெளியிடுவதும், முஸ்லிம் மாணவ-மாணவிகளிடம் கல்வியின் ஆர்வத்தைத் தூண்டுவதும், வரலாறு, விஞ்ஞானம், அரசியல், மார்க்க சம்பந்தமான நூல்களை காயிதே மில்லத்தின் கொள்கைகளுக்கேற்றவாறு வெளியிடுவதும், பத்திரிகைகள் நடத்துவதும் கலையரங்குகளை ஏற்படுத்தி, இளைய தலைமுறையினரின் ஆற்றலை மேம்படுத்துவதும், கல்விக்காக நிதியுதவிகள் (Scholarship) அளிப்பதும் அடங்கும்.

மலர் வெளியிட்டபின், மலர்க்குழு கலைக்கப்பட்டு, அதன் பொறுப்புக்கள் அனைத்தும் காயிதே மில்லத் அகாடமியைச் சென்றடையும். மலர் விற்று அதன் மூலம் வரும் தொகை முழுவதும் அகாடமியின் நோக்கங்களுக்காகச் செலவிடப்பட வேண்டுமென்றும், மேற்கொண்டு மலர் சம்பந்தமான அனைத்து உரிமைகளையும் அகாடமிக்கே வழங்குவது என்றும் சம்பந்தப்பட்ட குழுவினால் ஏற்கனவே முடிவு செய்யப்பட்டுள்ளது.

இந்த நினைவு மலரும், காயிதே மில்லத் அகாடமியும் அல்லாஹ்வின் கிருபையால் நல்ல பலனைக் கொடுக்குமென்று நம்புகிறேன்.

வஸ்ஸலாம்

தங்களன்புள்ள,

ஹாஜி P.S.M. செய்யிது அப்துல் காதிர் M.A.B.L.,
நிர்வாக இயக்குநர்
எலக்ட்ரோ மெக்கானிகல் என்ஜினீயர்ஸ்
சென்னை-6.

நாள் : 23-4-'90

# காயிதே மில்லத் நினைவு மலர்க்குழு நிர்வாகிகள்

1. ஜனாப். ஹாஜி P. S. M. செய்யிது அப்துல் காதர் சாஹிப், M.A.B.L. தலைவர்

துணைத்தலைவர்கள் :-

2. ‘‘ A. K. ரிபாயி சாஹிப் B. A. Ex. M. P.
3. ,, பேராசிரியர் K. அப்துல் கபூர் சாஹிப் M. A.
4. ,, ஹாஜி J. M. மியாகான் சாஹிப் B. A. Ex. M. L. C.
5. ,, பேராசிரியர் S. பீர்முஹம்மது சாஹிப், B.E.
6. ,, ஹாஜி. M. S. M. பாதுல் அஸ்ஹப் சாஹிப்
7. ,, மௌலவி. M. அப்துல் வஹாப் சாஹிப், M.A.B.Th.
8. ,, ஹாஜி. S. M. முஸ்தபா சாஹிப், B.A.
9. ,, கேப்டன் N. A. அமீர் அலி சாஹிப்
10. ஜனாப் அல்ஹாஜ் M. ஜமால் முஹம்மது சாஹிப் - செயலாளர்.
11. ஜனாப் ஹாஜி M. பக்கீர் முகையதீன் சாஹிப் } கூட்டுச் செயலாளர்கள்.
12. ஜனாப் ஹாஜி A. S. M. ஷேக்மைதீன் சாஹிப் } கூட்டுச் செயலாளர்கள்.
13. ஜனாப் ஹாஜி M. B. A. ஜமால் முஹம்மது சாஹிப் - பொருளாளர்.

# காயிதே மில்லத் அகாடமி அமைப்பாளர்கள்

1. ஹாஜி P. S. M. செய்யது அப்துல் காதர் சாகிப் (தலைவர்)
2. ,, M. ஜமால் முஹம்மது சாகிப் (செயலாளர்)
3. ,, M. மெக்கோ பக்கீர்மைதீன்சாகிப் (பொருளாளர்)
4. ,, S. பீர்முஹம்மது சாகிப்
5. ,, H. அப்துஸ் ஸமது சாகிப்
6. ,, A. J. அப்துர் ரஜாக் சாகிப் B. A. B. L.
7. ,, M. B. A. ஜமால் முஹம்மது சாகிப்

# காயிதேமில்லத்

# பொன்மொழிகள்

பல பொதுக் கூட்டங்களிலும் பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள அறிக்கைகளிலும் காயிதே மில்லத் மேற்கோள் காட்டியுள்ள சில அரிய கருத்துக்கள் இங்கே திரட்டித்தரப் பட்டுள்ளன.

ஐந்தாண்டு திட்டங்கள் பற்றி நாம் விவாதித்துக் கொண்டிருக்கிறோம். பொதுவாழ்க்கையில் இருந்து லஞ்ச ஊழலை ஒழிப்பது திட்டங்களில் எல்லாம் தலைசிறந்தது. லஞ்ச ஒழிப்பே ஒரு திட்டமாகும்.

ஃ ஃ ஃ

ஷெட்யூல்ட் வகுப்பினர் என ஹரிஜனங்கள் குறிப்பிடப்படுகிறார்கள். இவ்வாறு பிரிக்கப்பட்டிருப்பதும் மத அடிப்படையில்தான் என்பதை அரசியல்வாதிகள் உணர மறுக்கிறார்கள்; அல்லது ஒப்புக் கொள்ளத் தயங்குகிறார்கள்.

ஃ ஃ ஃ

பாராளுமன்றத்திற்குள் சென்றுதான் எதிர்க் கட்சியாக இயங்கவேண்டும் என்பதல்ல; பாராளுமன்றங்களுக்கு வெளியிலும் இருந்து கொண்டு மக்களின் அபிப்ராயங்களை உருவாக்குவது அரசியல் கட்சிகளின் பணியாகும். பிரச்சினைகளையும் விஷயங்களையும் பொதுமக்கள் சரியானபடி புரிந்துக் கொள்ளச் செய்வதே அரசியல்வாதிகளின் பிரதான குறிக்கோளாகும்.

ஃ ஃ ஃ

மாற்றுக் கட்சிகளை மதிக்கவேண்டும்; அப்பொழுதுதான் உங்கள் கட்சிக்கு மதிப்புக் கிடைக்கும்; அல்லது மதிக்கப்படும். நீங்கள் கொடுப்பதைத் தான் திரும்பப் பெறுவீர்கள்.

ஃ ஃ ஃ

முஸ்லிம்களுக்கான இஸ்லாமியச் சட்டத்தை கியாம நாள் வரை மாற்ற முடியாது.

ஃ ஃ ஃ

ஈமான் தான் உண்மையில் மகத்தான சக்தியாகும். ஈமான் இல்லாமல் பௌதீகமாக எவ்வளவு சக்திகளை திரட்டினாலும் அவற்றால் எந்தவித பயனும் இல்லை. உறுதியான ஈமானை பெற்றிருந்தால் எல்லா விதமான பௌதீக சக்திகள் மீதும் வெற்றி கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

தாயகம் மீது படையெடுத்து வருவோர் முஸ்லிம்களாயினும், முறியடித்து துரத்தும் பரம்பரை நாங்கள்.

ஃ ஃ ஃ

அரசியல் சாசனத்தின் கட்டுக் கோப்புக்குள் இயங்கி வருவதே முஸ்லிம் லீக்.

ஃ ஃ ஃ

சிறுபான்மையினர் தனித்து இயங்குவதன் மூலமே உரிமைக்காக உரத்தகுரல் எழுப்பமுடியும்.

ஃ ஃ ஃ

முஸ்லிம் சமுதாயம் காட்டிக் கொடுத்ததால் எந்த நாடும் வீழ்ச்சியுற்றதாக வரலாறே கிடையாது.

ஃ ஃ ஃ

முஸ்லிம்களின் தேசப்பற்றை யாராலும் களங்கப்படுத்த முடியாது. ஒற்றுமையை எந்தப் பிரச்சாரத்தாலும் குலைக்க முடியாது.

ஃ ஃ ஃ

இந்தியாவின் பகைவர்கள் எங்களின் பகைவர்கள். இந்தியாவை தாக்கும் நாட்டை எதிரியாகவே கருதுவோம்.

ஃ ஃ ஃ

ஒற்றுமைக்காக பாடுபடும் இயக்கமே முஸ்லிம் லீக். நாட்டின் ஏற்றத்தாழ்வில் அது இரண்டறக் கலந்துவிட்ட கட்சி.

[வெளிநாடுகளில் வாழும் முஸ்லிம்களுக்கு கூறிய அறவுரை]

நீங்கள் வாழும் நாட்டை முன்னேற்ச் செய்யுங்கள். எல்லோருடனும் சமாதானமாக வாழுங்கள்.

ஃ ஃ ஃ

29. சென்னை, M/s பீமா பேங்கிள்ஸ்
30. சென்னை, M/s எலெட் ரேடியோ
31. சென்னை, M/s ரதி கோல்டு கவரிங்
32. சென்னை, ஜனப் ஹாஜி M. செய்யது அஹமது சாஹிப்
33. சென்னை ஜனப் ஹாஜி A. K. அப்துல் ஹலீம் சாஹிப்
34. சென்னை M/s L. K. S. ஜுவல்லர்ஸ்
35. சென்னை M/s A. M. பாரூக் & Co
36. சென்னை M/s சதக் ஸ்டீல் கார்ப்பரேஷன்
37. சென்னை ஜனப் S. அக்பர் ஷா சாஹிப்
38. சென்னை ஜனப் நயினு முஹம்மது சாஹிப்
39. மதுரை ஜனப் Dr. அமானுல்லா சாஹிப்
40. கழுகுமலை, M/s ஜோதி மேட்ச் பேக்டரி ஒர்க்ஸ்
41. கயத்தார், P. M. H. பாய் கம்பெனி
42. திண்டுக்கல் M/s தாய்நாடு பத்தி கம்பெனி
43. ஈரோடு M/s அப்துல் காதர் & சன்ஸ்
44. ஈரோடு ஜனப் K. A. ஷேக் தாவூத் சாஹிப்
45. ஈரோடு M/s E. K. H. M. & சன்ஸ்
46. ஈரோடு ஜனப் G. முஹம்மது தாஜ் சாஹிப்
47. ஈரோடு ஜனப் K. K. S. காதர் முஹைதீன் சாஹிப்
48. சென்னை ஜனப் S. M. அஹமது சாஹிப்
49. புதுக்கோட்டை ஜனப் S. M. முஹம்மது இப்ராஹீம் சாஹிப்
50. புதுக்கோட்டை M/s S. A. ஷபீயுல்லாஹ் & Co
51. புதுக்கோட்டை M/s சிங்கப்பூர் எலக்ட்ரிகல்ஸ்
52. புதுக்கோட்டை M/s பாத்திமா ஜுவல்லர்ஸ்
53. சென்னை, ஜனப் ஹாஜி T. A. அப்துல் குத்தூஸ் சாஹிப்
54. சென்னை M/s A. S. M. அப்துல் காதர் & Co
55. சென்னை-1, M/s யுனிவர்சல் ஸ்டீல் டிரேடர்ஸ்
56. சென்னை-1, M/s ஹைதுரூஸ் ஹார்டுவேர்ஸ்
57. சென்னை-1, ஜனப் M/s பக்கீர் மைதீன் சாஹிப்
58. சென்னை-93 ஜனப் Er. M. D. கனி சாஹிப்
59. சென்னை-40 ஜனப் ஹாஜி இபுராஹீம் சாஹிப்
60. சென்னை-30 ஜனப் Er மீரான் அப்துஸ்ஸமது சாஹிப்
61. சென்னை-5, M/s விக்டரி ஸ்டோர்ஸ்
62. சென்னை-2 M/s நாகூர் ஆண்டவர் ஸ்டோர்ஸ்
63. சென்னை-1, ஜனப் M. M. முஹைதீன் தம்பி சாஹிப்
64. சென்னை-1 M. S. F. முஹைதீன் & Co
65. சென்னை-12 ஜனப் N. K. ஜின்னு சாஹிப்

وَلَا تَهِنُوا وَلَا تَحْزَنُوا وَأَنتُمُ الْأَعْلَوْنَ إِن كُنتُم مُّؤْمِنِينَ

(விசுவாசிகளே!) நீங்கள் தைரியத்தை இழந்து விடவேண்டாம்; துக்கப்படவும் வேண்டாம். (உண்மையாகவே) நீங்கள் விசுவாசம் கொண்டவர்களாக இருந்தால், நீங்கள் தாம் மேன்மையடைவீர்கள்.

(3 : 139)

قُلْ إِنَّ صَلَاتِي وَنُسُكِي وَمَحْيَايَ وَمَمَاتِي لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ

(அன்றி) நீர் கூறும்: ''நிச்சயமாக என்னுடைய தொழுகையும், என்னுடைய தியாகமும், என் வாழ்வும், என்மரணமும் உலகத்தாரைப் படைத்துப் போஷித்துப் பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ்வுக்கே உரித்தானவை. (6:162)

وَاعْتَصِمُوا بِحَبْلِ اللَّهِ جَمِيعًا وَلَا تَفَرَّقُوا ۚ وَاذْكُرُوا نِعْمَتَ اللَّهِ عَلَيْكُمْ إِذْ كُنتُمْ أَعْدَاءً فَأَلَّفَ بَيْنَ قُلُوبِكُمْ فَأَصْبَحْتُم بِنِعْمَتِهِ إِخْوَانًا وَكُنتُمْ عَلَىٰ شَفَا حُفْرَةٍ مِّنَ النَّارِ فَأَنقَذَكُم مِّنْهَا ۗ كَذَٰلِكَ يُبَيِّنُ اللَّهُ لَكُمْ آيَاتِهِ لَعَلَّكُمْ تَهْتَدُونَ

''மேலும் நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் கயிற்றை வலுவாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்; (மாறுபாடுகள் கொண்டோராய்) நீங்கள் பிரிந்து விடாதீர்கள்; உங்கள் மீதிலான அல்லாஹ்வின் நிஃமத்களை—அருள் கொடைகளை நினைவு கூர்வீர்களாக. நீங்கள் பகைவர்களாக இருந்தீர்கள்—உங்கள் இதயங்களை அவன் அன்பினால் இணைத்து, தன்னுடைய நிஃமத்தைக் கொண்டு உங்களைச் சகோதரர் களாக்கினான்; (அன்றியும்) நீங்கள் நெருப்புக் கிடங்கின் விளிம்பில் இருந்தீர்கள்; (அதில் நீங்கள் விழுந்து விடாதவாறு) அதனின்றும் உங்களை அவன் காப்பாற்றினான்; நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு இவ்வாறு அல்லாஹ் தன் திருவசனங்களை உங்களுக்கு விவரித்துக் காண்பிக்கின்றான்.'' (3:103)

---

*மேலே கொடுக்கப்பட்டுள்ள மூன்று திருக்குர்ஆன் வசனங்களையும் காயிதே மில்லத் அவர்கள் தக்க சந்தர்ப்பங்களில் தங்களது பிரசங்கங்களின் போது எடுத்துக் கூறி அவற்றை விளக்குவதை வழக்கமாகக் கொண்டிருந் தார்கள் என்பது இங்கு குறிப்பிடத் தகுந்தது.*

